श्रीः

उभयवेदान्तग्रन्थमाला

श्रीमन्निगमान्त महादेशिक विरचितः

# ॥श्रीमद्रहस्यत्रयसारः॥

श्रीमद्रङ्गरामानुजमुनीन्द्रमहादेशिक दिव्यकटाक्षलम्भितसर्वार्थ

उत्तमूर् तिरुमलै नल्लान् चक्रवर्ति वात्स्य

श्रीमदभिनव देशिक श्रीवीरराघवाचार्यविरचित

सारविस्तराख्य द्रमिडभाषाव्याख्यासमेतः

प्रथमो भागः

உபயவேதாந்த க்ரந்தமாலை

ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன்

அருளிய

# ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம்

ஸ்ரீமதபிநவதேசிக உத்தமூர்

திருமலை நல்லான் சக்ரவர்த்தி வாத்ஸ்ய

*வீரராகவார்ய மஹாதேசிகனின்*

ஸாரவிஸ்தரம் என்னும் உரையுடன்

(முதல் பாகம்)

ஸ்வாமி தேசிகனின் 750வது அப்தபூர்த்தி மஹோத்ஸவாங்க வெளியீடு

விளம்பி - மார்கழி - ச்ரவணம் (08.01.2019)

Sri Uttamur Viraraghavachariar Centenary Trust, Chennai

Rs. 500/-

ஸ்ரீ:

உபயவேதாந்த க்ரந்தமாலே

ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன்
அருளிச் செய்த

# ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம்

[முதல் பாகம்]

ஸ்ரீமதபிநவதேசிக உத்தமூர் திருமலை நல்லான்
சக்ரவர்த்தி வாத்ஸ்ய
*வீரராகவார்ய மஹாதேசிகனின்*
'ஸாரவிஸ்தரம்' என்னும் உரையுடன்

* * * * *

UBHAYA VEDANTA GRANTHAMALA

## SRIMAD VEDANTA DESIKA'S

# SRIMAD RAHASYATRAYA SARA

**(Volume 1)**

with

Srimad Abhinava Desika
**Uttamur Tirumalai Nallan Chakravarthi**
**Vatsya Viraraghavacharya's**
**"Sara vistara"** commentary

* * * * *

ஸ்வாமி தேசிகனின் 750வது அப்தபூர்த்தி மஹோத்ஸவாங்க வெளியீடு
விளம்பி மார்கழி ச்ரவணம் (08.01.2019)

ஸ்ரீஉத்தமூர் வீரராகவாசார்யர் ஸென்டினரி ட்ரஸ்ட், சென்னை [ரூ: 500/-

ஸ்ரீ:
ஸ்ரீமதே அபிநவ தேசிக வாத்ஸ்ய ஸ்ரீ வீரராகவார்ய மஹாதேசிகாய நம :
ஸ்ரீமதே நிகமாந்த குரவே நம :

# விஜ்ஞாபனம்

*(ஸ்ரீமத் அபிநவதேசிகனின் அனுஜனும் அந்தேவாசியுமான)*
*ஸ்ரீ உவே பையம்பாடி வேங்கடவரதாசார்யன்*

ஸ்ரீ தேசிகன் தாம் அருளிய க்ரந்தங்களை 'ஸம்க்ஷிப்தம் விஸ்த்ருதம் வா ஸரளஸமுசிதம் ஸாவதாநப்ரியம் வா | ப்ராதாந்யேந ப்ரணீதம் பரபணிதி பரிஷ்கார வ்ருத்யா ஸ்திதம் வா ||' என்று அருளினார். சுருக்கமாகவும் விஸ்தாரமாகவும் மிக சுலபமாக புரியும்படியும் தாமே ஸ்வதந்த்ரமாக சில க்ரந்தங்களும் பூர்வாசார்ய க்ரந்தங்களுக்கு வ்யாக்யானமாகவும் அருளப்பட்டது. அவைகளுள் ஒரொன்று தானே அமையாதோ என்கிற கணக்கில் அமைந்தது ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார க்ரந்தம். வடமொழியும் தென்மொழியும் கலந்து மணிப்ரவாளமாக அருளப்பட்டது. ச்ருதி வாக்யத்தை அப்படியே எடுக்காமல் அதன் பொருளை எடுத்து விளக்கப்பட்டது. ஸ்த்ரீகளும் ஆசார்ய முகமாகக் கேழ்க்கலாம். ஸ்ரீபாஷ்யம் முதலான க்ரந்தங்களை விட இந்த க்ரந்தத்தில் மிக அபூர்வமான விஷயங்கள் உள்ளன.

1. அர்த்தாநுசாஸநபாகம் – தத்வஹித புருஷார்த்தங்களை நன்கு விளக்குகிறது.
2. ஸ்த்திரீகரணபாகம் – அவற்றில் உள்ள ஸந்தேஹங்களைப் போக்கி நிர்ணயம் செய்வது.
3. பதவாக்ய யோஜநாபாகம் – மூல மந்த்ரம் த்வய மந்த்ரம் சரமச்லோக மந்த்ரம் இவைகளை பதம் பதமாக எடுத்து பொருள் கூறப்படுகிறது.
4. ஸம்ப்ரதாய ப்ரக்ரியாபாகம் – ஆசார்ய சிஷ்ய லக்ஷணங்களை விளக்குகிறது.

ஆக நான்கு பாகங்கள் கொண்டது. இந்த க்ரந்தத்தை மட்டும் காலக்ஷேபம் செய்தாலே அறியவேண்டியதை அறியலாம். "உபயுக்தேஷு வைசத்யம் த்ரிவர்கநிரபேக்ஷதா | கரணத்ரய ஸாருப்யம் இதி ஸௌக்யரஸாயநம் ||" என்று தேசிகனே அருளினார்.

ஸ்ரீ தேசிகன் தமது வ்ருத்த தசையில் (வயதானகாலத்தில்) ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம் அருளியதுபோல் அபிநவதேசிகனும் இந்த க்ரந்தத்துக்கு ஸாரவிஸ்தரம் என்று அத்புத்தமாயும், ஆச்சர்யமாய் ஸம்ப்ரதாயப் பொருள்கள் நிறைந்ததாயும், அதிஸரளமாயும் வ்யாக்யானம் அருளினார்.

1980ல் முதற்பதிப்பிற்கு அபிநவதேசிகன் க்ருபையுடன் எழுதும் இந்த வ்யாக்யானத்தை அடியேனை எழுதும்படி அனுக்ரஹம் செய்தார். தினந்தோறும் இரவு 8 மணிக்கு ஆரம்பித்து 11 மணி வரையில் எழுதும் பாக்யம் கிடைத்தது. அடியேனுக்கு அஸௌகர்யத்தால் இரண்டு தடவை 20 நாள் வர முடியாமல் போனது. அப்போது அபிநவதேசிகன் வேறு க்ரந்தத்தை அச்சிடக் கொடுத்து முத்ரணம் செய்தபடி. அடியேனிடம் உள்ள க்ருபையினால் அடியேனை பூர்ணமாக வ்யாக்யானம் எழுத வேண்டுமென்று அனுக்ரஹத்தாயிற்று. ப்ருப் பார்க்கும் பாக்யமும் கிடைத்தது. ஸ்ரீ அபிநவ பாஷ்யகாரரான ஸ்ரீ கோழியாலம் ஸ்வாமி எல்லா க்ரந்தங்களையும் எழுந்தருள பண்ணி அதற்கு மேல் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார க்ரந்தத்தை எழுந்தருள பண்ண வேண்டும் என்று ஸாதித்தாகும்.

இந்த க்ரந்தத்தில் ஸ்ருதியின் பொருள், ஸ்ம்ருதி, இதிஹாஸ புராணங்கள், ஆழ்வார்கள், பூர்வாசார்யர்கள் அருளிச் செயல்கள் ப்ரமாணங்களாக அருளப் பெற்றது. அதனால் மிகச் சிறந்தது. இரண்டாவது பதிப்பாக வெளியிடப்படும் இந்த க்ரந்தத்தை வாங்கி க்ருஹத்தில் எழுந்தருளப்பண்ணி ஆசார்ய முகமாக உபதேசம் பெற்று தினந்தோறும் முடிந்தவரையில் ஸேவித்து வந்தால் ஸ்ரீ தேசிகன், ஆசார்யர்கள் அனுக்ரஹம் பெற்று ஸுகமே வாழ திருவேங்கடமுடையான் திருவடிகளை ப்ரார்த்தித்து தன்யனாகிறேன் .

***30.12.2018***

## முதல்பாகத்தின் விஷயஸூசி

.· गुरुपरम्परासार—17 ஆசார்ய ஸம்பந்தமும் 19. ஆசார்யபரம்பராநுஸந்தானமும் அவச்ய மென்கை. 20...ப்ரதமாசார்யன் தானாகவும் பிறரைக் கொண்டும் செய்த பல நன்மைகள் 24. ஆழ்வார்களாக அபிநவதசாவதாரம் 26. அதற்கும் மேலாக ஆசார்யகளாக அவதரித்தல் 28 எம்பெருமானார்வரையிலான நம் ஆசார்யர்களால் ஏற்பட்ட நன்மைகள். 32–38 பக்திபூர்வக ஆசார்யத்யானம் நித்யமும் காம்யமும் நைமித்திகமுமாகை

श्रीमद्रहस्यत्रयसार—51 ஜீவாத்மாக்களின் இயற்கைநிலை 56. அநாதியாக அதைப் பெறாமல் வேடருக்கு வசமான ராஜகுமாரனுக்குப் போல் உரு மாற்றம் 60. நல்லோரின் சேர்க்கையால் தன் வேறுபாடு அறிகை. 63. ஆசார்யனின் கருணையால் ராஜாதிராஜனிடம் சேர்க்கைக்குப் பாத்ரமாகும் வாய்ப்பு 74. ஆசார்யமூலம் ஸாரநிஷ்கர்ஷத்தைப் பெறுகை. 85. வேதாந்த ப்ரமேயங்களில் ப்ரதான ப்ரதிதந்த்ரமான சரீராத்மபாவத்தின் விளக்கம். 86 ஆதாரத்வ நியந்த்ருத்வ சேஷித்வவிசேஷங்களும் அவற்றின் பலனும் 94 திருமந்த்ர அர்த்தாநுஸந்தானத்திற்கு ஆசார்ய அப்புள்ளார் அருளிச்செய்த விரகு. 104. அர்த்தபஞ்சகத்தில் ப்ராப்யமான ப்ரஹ்மம் எது எத்தகையதென்பது 117. ஜீவர்களின் மூன்று உட்பிரிவுகள் 118. ப்ரஹ்மப்ராப்தியென்ற பலனும் உபாயமும் 119. அதற்குள்ள விரோதிகளை வெகுவிரிவாகத் தெரிவித்தல் 132. தத்துவத்ரய மென்று பிரித்து நிரூபிப்பதற்குக் கருத்து 140 எல்லாம் ஈச்வராதீன மென்பது அசேதநத்துவமும் சேதநத்துவமும் மும்மூன்றாகை 141 ஒவ்வொன்றின் ஸ்வரூபம் ஸ்திதி ப்ரவ்ருத்தி இவற்றின் விவரம் 142. ஜீவனுடைய ஸ்வரூப நிரூபகதர்மங்களும் லக்ஷணங்களும் ப்ரவ்ருத்தி பேதங்களும் 152. முக்தனுக்கு ஸர்வவிதகைங்கர்ய ஸித்தி யென்பதற்குக் கருத்து 155. சேதநர்களுக்குள்ள சைதந்ய மாகிற தர்மபூதஜ்ஞானம் த்ரவ்யமாகையும் அதன் ஸ்வரூபாதிகளும் 159 ज्ञानस्य स्वयंप्रकाशत्व प्रत्यक्त्व पराक्त्वங்களின் விவேகம் 173. மூன்று அசேதநங்களில் நித்யவிபூதிக்கு स्वयंप्रकाशत्वம் प्रमाणसिद्धமென்றதின் விரிவு 174. प्रकृतितत्त्वத்தின பிரிவுகள் 181. எல்லாம் எம்பெருமானுக்கு அஸ்த்ர பூஷணங்களென்பதின் விவரம். 187. காலம் தனித்ரவ்யமாகையும் அதன் பரிணாமமும் 192. ईश्वरात्मस्वरूप.गुण. विग्रहविवेचनம். 194. வ்யூஹாவதாரத்தின் உட்பிரிவிலுள்ள பல விசேஷங்கள் 200 விபவவிபவ அர்ச்சா ஹார்த்தரூபங்களின் நிருபணம் 205 அவதாரரஹஸ்யமும் அதனறிவின் பலனும் 207. ச்ரீதேவியோடு சேர்ந்தே இவன் ஈச்வரனாகை. 213. தத்துவங்களைப் பிரிக்கையில் பலவகையுண்டாகிலும் சொன்ன அளவு போது மென்கை. 218. ஸ்ரீமந்நாராயணன் பரதேவதை யென்று ஸ்தாபநம் 222. எல்லா த்ரவ்யமும். எல்லா ஆத்மாவும் எல்லா தேவதையுமொன்றே யென்ற மதங்களுக்குப் போல் त्रिमूर्तिसाम्य ऐक्य त्रिमूर्त्युत्तीर्ण पक्षங்களுக்கும் நிரஸநம் 224...ब्रह्मादिகளுக்கும்

कार्यत्व कर्मवश्यत्व मायाधीनत्व भगवद्दास्याधिकारत्व अनुभाव्यत्व भगवदेकाश्रयकत्व तद्विमू-
क्तित्व तच्छरीरत्व सद्(?)त्वங்கள் 232. விஷ்ணுவுக்கே पारम्य सर्वप्रवर्तकत्व मोक्षप्रदत्वா-
திகள் 242 தேவதாந்தரமூலமான பலனுக்கும் விஷ்ணுமூலமான பலனு
க்கும் உள்ள வாசி 251. परदेवताविषयத்திலே ஆழ்வார்களின் நிஷ்கர்ஷம்.
264. முமுக்ஷுத்வம்—இப்படித் தத்துவங்களைத் தெளிந்தவனுக்குப் பலவித
அஹங்கார மமகாரங்கள் கழிகை 270. ஐச்வர்ய கைவல்யங்களில் தோஷங்
களைக் காண்கை 274 மோக்ஷத்திலே ருசியால் நிவ்ருத்திதர்மத்திலே நோக்கு.

279. முமுக்ஷுக்களுள் அதிகாரிகளின் பிரிவு. 280. ஸத்வாரக
ப்ரபத்தி அத்வாரகப்ரபத்தி யென்ற பிரிவுடன் ப்ரபத்தியில் விசதப்ரபத்தி
உக்தி நிஷ்டை ஆசார்ய நிஷ்டையென்ற பிரிவுகள் 284. அவற்றின் விவ
ரணம். 294. वैष्णवसंबन्ध-க்ஷேத்ரவாஸாதிகள் பரம்பரயா உபாயமாகை.
301 ஸத்வாரக-அத்வாரக ப்ரபத்திகளில் फलத்தில் ऐक्य वैषम्यங்கள். 314 உபா
யங்களின் உட்பிரிவு. 318 कर्मयोग ज्ञानयोग भक्तियोगங்கள். 325 परभक्तिपरज्ञानपरम-
भक्तिஸ்வரூபங்கள் 334. प्रपत्ति व्याजமாயிருக்க वाचिकादिभेदம் சொல்வதன்
கருத்து 340. अधिकारசப்தத்தின் பொருள்விரிவு 344 आकिञ्चन्यानन्य-
गतित्वங்கள் முமுக்ஷுப்ரபத்திக்கு அதிகாரமென்கை. 353 परिकरங்களின் विभा-
கம் 355. முமுக்ஷுப்ரபத்திக்கு [illegible]மும் வேண்டுமாகை. 357. எல்லா
ப்ரபத்திக்குமான அங்கங்கள் ஐந்து, அவற்றின் விரிவு 360. ஸ்ரீமத்
ராமாயணத்தில் பிராட்டிவிஷயமான ப்ரபத்தியிலும் பெருமாள்விஷயமான
ப்ரபத்தியிலும் அவ்வங்கங்கள் நன்கு வ்யக்தமாகை. 371. இவ்வங்கங்கள்
பரந்யாஸத்திற்கு உலகரீதியிலும் அவச்யமாகை. 373. மஹாவிச்வாஸம்
பிறப்பதற்கான புருஷகாராதிகள் ஐந்தையும் தெளிவித்தல் 381. இதன்
அருமை விஷயமான எம்பார்ஸூக்தி 383. த்வயமந்த்ரத்தில் அங்கங்கள்
கிடைக்கும் படி. 387. இவ்வங்கங்களின் பலன்விஷயமான पक्षம் 390. ப்ர
பத்தி சப்தத்தின் பொருள். 393 அங்கியான ஆத்ம நிக்ஷேபத்திலுள்ள
பிரிவுகளின் விளக்கம். 407. ஆளவந்தார் ஆத்மஸமர்ப்பணம் செய்த
பிறகு அநுசயத்தைக் காட்டியதற்குக் கருத்து 415. ஸாத்த்விகத்யாக
விவரணமும் பரந்யாஸப்ரயோகமும் 417. நடாதூரம்மாளின் சுருக்கு
424 कृतकृत्यன் நிர்பரனாய் ஐயமற்று நிர்ப்பயனாய் ஹ்ருஷ்டமநாவாகை.
427 நித்யகர்மங்களை ஸர்வாந்தர்யாமியாராதனமாகக் கைங்கர்யமாக
விடாமற் செய்கை. 437 ஸ்வரூபத்தில் நிஷ்டையுடையனுக்கு
அறிகுறிகள் 440. உபாயத்தில் நிஷ்டைக்கு அறிகுறிகள் 443. புருஷா
ர்த்தத்தில் நிஷ்டைக்கு அறிகுறிகள் 446 இந்நிஷ்டையுண்டாகில்
வேறொன்றால் ப்ரீதியும் பீதியும் வாராமை. 450 உத்தரக்ருத்யம்—
வாசித்தும் கேட்டும் வணங்கு வழிபட்டும் போதுபோக்குகைக்கு விவரணம்
462. இதில் ஒன்பது அம்சங்கள் வேண்டுமென்கை. 474. மநோ
வாக்காயங்களால் பரிஹரிக்க வேண்டிய மூன்றும் பரிக்ரஹிக்க வேண்டும்

மூன்றும் 478 பாகவதகைங்கர்யம் புருஷார்த்தகாஷ்ட்டையென்பதற்கு ப்ரமாணோபந்யாஸம் 485. அடிமை ஸ்வருபப்ரயுக்தமும் குண ப்ரயுக்த முமாகை. 491 பாகவதரைப் பற்ற சேஷத்வ சேஷித்வங்களின் சேர்க்கை. 498. போது போக்குவது சாஸ்த்ரவிதிக்கு உட்பட்டேயாகவேண்டு மென்கை 500. அந்திமதசையில் எம்பெருமானாரின் உபதேசமாகிற நல்வார்த்தை. 4·0. :04 516 சாஸ்த்ரத்தை மீறில் அபராதங்கள் புகுகை 519. ப்ராயச் சித்தம் செய்யாவிடில் வரும் பலனின் விளக்கம். 524. புத்தி பூர்வ [illegible] மும் லேபியாதென்றும் முன்செய்த ப்ரபத்தியே இதற்கும் ப்ராயச்சித்த மென்றும் சொல்லவுதகாதென்கை. 534. அபராதகாரணமான அவிவேகத்திருட்பிரிவு 5[illegible]. பாகவதாபசாரத்தின் கொடுமை 54[illegible]. वासस्थलं भागवताधिष्ठित मगवत्क्षेत्रम् भागवत स्थलं भगवत्क्षेत्रम्. 554 கதியில்லையாகில் எல்லா இடமுமென்கை 564 நிர்யாணத்திற்குமுன் வரையில் ஒழுங்காயிருக்க வேண்டுமாகிலும் [illegible] அபரா தமோ, ப்ரயோஜநாந்தரருசியால் தேவதாந்தரஸ்பர்சமோ. புத்தி தௌர்பல்யத்தால் உபாயாந்தர ப்ரத்யாசையோ நேரில் ப்ரபத்திக்கு அழிவிராமையும், சிலவிடத்தில் मोक्षार्थं புநஃப்ரபத்தி வேண்டுமென்கையும். பிறகு நிர்யாணகாலத்தில் 574 ஸர்வபுண்யபாபக்ஷயம் 57[illegible] அமு முக்ஷுவுக்குப்போல் முமுக்ஷுவுக்கும் பொதுவான நிஷ்க்ரமணரீதிக்குப்பிறகு ப்ரஹ்மநாடியில் ப்ரவேசம். 57[illegible] அந்திமதசையில் ஆழ்வாருக்கு எம்பெரு மானுர்த்வயோபதேசம். 580 அந்திமஸ்ம்ருதி வேண்டுமா வேண்டாமா என்ற விசாரம். 590 அர்ச்சிராதிமார்க்கரீதி 593 விரஜையைக் கடந்த பிறகுத் திருமாலின் திருவடியைப் பெறுமளவிலுள்ள விசேஷங்கள் 59[illegible] சாஸ்த்ரங்களில் மற்ற மோக்ஷாசர்யங்களும் அவற்றின் விவேகம் தமக்கு வேண்டா என்பதும் 607 பூர்ண ப்ரஹ்மாநுபவத்தில் எல்லாம் ஆனந்தமாகையின் விளக்கம் 612 [illegible] ஆசார வைகல்யத்தால் ஆநந்தக்குறைவென்பது மோக்ஷத்திற்கு முன்பேயாகை. [illegible] ०.0 புனராவ்ருத்திக்குக் காரணமொன்று மிராமை. 615 [illegible]. 623 கடந்த 22 அதிகாரங்களின் பொருட்சுருக்கம்.

— o— o—

முதல்பாகம் (பிழை பூ) திருத்தம்

20 1. तमिमम् भा. ष. 41.: ममापि வி-பு :-1- 4 [illegible] காந்தாரீ गुरुसि. ஆள.
21 7 कृष्णाद्रे வி-பு-3-4 5 22 महर्षिः भा—भादि—107-2[illegible]
23 1 पद्म...भा. शा. 3[illegible]-68 28 2 ब्राह्मणी: भा. मी. 61.40-41
24 3 पूर्वो [illegible] 108—50 16 3 [illegible] 1-63
27 1 பீதக பெரியா 2-:-3 33 1 [illegible] भा. 11.5.[illegible]
32 7 गुरुं शेषसंहि 14-5[illegible] 53 1 वैकुण्ठे. [illegible] 4 [illegible]
54 3 निवास ஆள ஸ்தோ, 55. 1 अनेक...வி-பு-6-7-19: 64 37 நாச் 1.-7
76 1 [illegible] भा उद्यो 63-5 [illegible] गी 16-24. 2 [illegible] 216-2

श्रीः

श्रीमान् वेङ्कटनाथार्यः कवितार्किककेसरी ।
वेदान्ताचार्यवर्यो मे संनिधत्तां सदा हृदि ॥

*சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான்*
*பாரொன்றச் சொன்ன பழமொழியில்—ஓரொன்று*
*தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு*
*வானேறப் போமளவும் வாழ்வு.*

ஸ்ரீ:

ஸ்ரீ குருபரம்பராயை நம:

## श्रीगुरुपरम्परासारः

ஸ்ரீ குருபரம்பராஸாரம்.

गुरुभ्यस्तद्गुरुभ्यश्च नमोवाकमधीमहे ।
वृणीमहे च तत्राऽऽद्यौ दम्पती जगतां पती ॥

---

श्रीः

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

## सारविस्तरः

ஸாரவிஸ்தரம்

श्रीमान् वेङ्कटनायकोऽखिलजगन्नाथोऽवतारोऽस्य चाऽऽ-
चार्यस्तत्पदभक्तिभूर्यतिवरो वेदान्तरामानुजः ।
तत्सेवी प्रथितो गुरुर्मम यतिः श्रीरङ्गरामानुजः
सर्वेऽन्ये गुरवोऽप्यशेषपरविद्दासे दयन्तां मयि ॥

सत्सम्प्रदायपरिरक्षणजागरूकौ
श्रीभाष्यकारनिगमान्तगुरू क्षभूताम् ।
वेदान्तलक्ष्मणमुनिर्गुरुशिष्यभूतौ
गोपालदेशिकमणिश्च वयं नुमस्तौ ॥ २ ॥

श्रीमद्रहस्यत्रयसारमाप्तैर्व्याख्यातमेवाद्भुतबोधविस्तैः ।
गीर्वाणवाग्ग्रहणानुतप्तलोकानुकूलं विवृणोम्यशेषम् ॥ ३ ॥

ஸ்ரீபகவத் ராமானுஜ ஸித்தாந்தத்தை வடமொழிதென்மொழிநூல்களை யருளி நிஷ்கர்ஷித்து ஸ்தாபித்தருளிய ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் முமுக்ஷுக்கள் முக்கியமாக அறியவேண்டிய மூன்று ரஹஸ்யங்களின் பொருள்களைத் தெளிவாகவும் விரிவாகவும் உபதேசிப்பதற்காக ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரமென்கிற பெரிய ரஹஸ்யக்ரந்தரத்னத்தை அருளிச்செய்தார். श्रीभाष्यगीताभाष्यादिகள் மோக்ஷோபாயங்களில் முக்கியமான பக்தியோகங்களுடன் தத்துவஹித புருஷார்த்தங்களை யுபதேசிக்கும் ப்ரமாணக்ரந்தங்களுக்கு விபரீதார்த்தங்களை விலக்கி வாஸ்தவமான பொருளை ப்ரதிஷ்டாபனம் செய்ய வந்தவையாம். பர தத்துவாதி நிர்ணயம் பிறந்தவர்கள் மற்றவற்றை யுபேக்ஷித்து भगवदनुभवத்திலே ஆழ்ந்து தெளிந்து இனியராகைக்கு ஆழ்வார்களின் அருளிச்செயல்கள் அமைந்தவை. ப்ரபத்தியென்கிற உபாயத்தி லிழிந்து மோக்ஷம் பெறவேண்டியவர்கள் முக்கியமாக மூன்று ரஹஸ்யங்களைப் பெற்று அவற்றிலே அத்யாத்மசாஸ்த்ரார்த்தங்களெல்லாம் அடங்கியிருப்பதை யறிதல் அவசியமாகும். வேதலோகங்களில் மிகவும் ப்ரஸித்தமாய், பக்தி ப்ரபத்தியதிகாரிகள் எல்லோருக்கும் பொதுவானதும் ஸந்த்யாகாலங்களில் ஜபிக்க வேண்டியதும் திருவாராதநாதிகளிலே ப்ரதானமந்த்ரமுமான திருவஷ்டாக்ஷரத்திற்கு ப்ரபத்தியதிகாரிக்குத் தக்கவாறு பொருள் அறிவதும், ப்ரபத்திக்கேயான த்வயத்தின் பொருளைத் தெளிவதும், விதிவாக்யமின்றி ப்ரபத்தியின் அனுஷ்டானத்தில் ப்ரவ்ருத்தி வாராதாகையால் விதிவாக்யமான சரம ரஹஸ்யத்திற்கும் பொருள் தெரிந்து கொள்வதும் முக்கியமல்லவா? எனவே தத்துவ விஷயமாகவும் ரஹஸ்ய விஷயமாகவும் சேர்த்துச் சேர்த்துப் பல சிறிய ரஹஸ்யக்ரந்தங்களை அதிகாரிகளுக்குத் தக்கவாறு அருளிச்செய்து रहस्यत्रयचुलकக்ரந்தத்தின் முடிவிலே, **विभिन्नेष्वधिकार्थं संगृहीतं रहस्यैर्विपुलतरमतीनां व्यासतः यथापथिष्यन्। स्वमनुः रमणीयं वेंकटेशो वदान्यः समुचितरसिकानां सारसंक्षेपमेतम्॥** என்று திருமந்த்ரம் முதலான மூன்று ரஹஸ்யங்களில் அடங்கியுள்ள பொருள்களை விரிவாக அருளப் போவதாக ப்ரதிஜ்ஞை செய்தபடி பெரிய ரஹஸ்யமென்னும் இந்த ஸாரசாஸ்த்ரத்தை யருளினர். இது பதினெட்டாவது ரஹஸ்யமென்பர். நடுநாயகமென்னலாம்படியான இதற்கு முன்னுள்ள பதினேழு ரஹஸ்யங்களின் உபஸம்ஹாரத்தைக் கருதி सारसंग्रहமென்று சேர்த்தெடுத்து இந்த ச்லோகம் அருளிச்செய்ததென்னலுமாம். இதனால் [illegible] என்ற பாகப்பிரிவும் ஏற்பட்டது போலும். இது அதற்கு அடுத்த ரஹஸ்யமா என்பதில் விவாதமுண்டு, நிற்க. மொத்தம் 32 ரஹஸ்ய க்ரந்தங்களில் மற்றவை போலன்றி 32 அதிகாரங்கள் கொண்டு மிகப் பெரிதாம் இது.

இதனைத் தொடங்கும்போது गुरुपरम्परासारமென்ற பெயருடன் ஒரு முன்னுரையும் சேர்ந்தருளினார். எல்லா ரஹஸ்யங்களுக்கும் முன்னாக सम्प्रदायपरिशुद्धि என்றருளிச் செய்த ரஹஸ்யத்திலே நம்மாழ்வார் ப்ரவர்த்தகராக நின்ற நமது பகவத்ராமானுஜ ஸம்ப்ரதாயத்தில் ஆசார்யர்களும் அருளிய பொருள்களும் சுத்தமாயிருப்பதும், ஸம்ப்ரதாயசுத்தியில்லையாகில் மோக்ஷபலன் பெறப் படமாட்டாதென்பதும், பாஷ்யகார ஸம்ப்ரதாயத்திலே பின்னுள்ளாரான ஆப்தர்களின் ஸூக்திகளிலே வாக்யராசி வேறாயினும் ஒரே அபிப்ராயமென்பதும், யோஜநா பேதத்தால் ஸம்ப்ரதாயபேதம் வாராதென்பதும் அறிவிக்கப்பட்டிருப்பதால் இப்போது இந்த குருபரம்பராஸாரமெதற்கென்னலாம். ஆனாலும் ஆசார்யர்களுக்குள்ள ஏற்றமும், குருபரம்பரையை விடாமல் அனுஸந்திக்க வேண்டுமென்பதும் அதுஎதற்காக எனபதும், அவர்கள் இன்னாரின்னாரென்பதும் அவர்கள் செய்த உபகாரமும் ஶேஷ தெளிவாகாமலிருப்பதால் பெரிய ரஹஸ்யமான இதற்கு முன் ப்ரதானமாக இதைச் சேர்ப்பது நலமென்று திருவுள்ளமாம். தனி ரஹஸ்யமாக்கப்பட்ட தஇதற்கு முன்னாக அருளிச்செய்த மங்கள ச்லோகமாகும் गुरुभ्यस्तद्गुरुभ्यश्च என்கிறது. குருபரம்பராஸாரமென்னும் பாகத்திற்கும் சேர்த்தே ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரமென்ற பெயரா, அல்லது இதை விட்டா என்று விசாரித்து இது தனி க்ரந்தமாகவே எழுதப்பட்டு அத்துடன் சேர்க்கப்பட்டதென்றே வ்யாக்யானங்கள் கொண்ட முடிவு. மேலே தனியாக மங்கள ச்லோகத்தோடு ரஹஸ்யத்ரயஸாரம் தொடங்கி, **वसति रहस्यत्रयस्य सारोऽयम्** என்று குறித்துக் கொண்டு, அதற்கு **उपोद्घाताधिकार**-மென்ற முதல் அதிகாரமென்று பெயர் வைத்து அதனின்று முப்பத்திரண்டு அதிகாரங்களையருளி, முன்னும் பின்னும் இடையிலும் பல பாட்டுக்கள் இருந்தாலும் அதிகார முடிவு பாட்டுக்களைமட்டும் அந்தாதியாக அமைத்து முப்பத்து மூன்றாவது பாசுரத்தில் "முப்பத்திரண்டிவை முத்தமிழ் சேர்ந்த மொழித் திருவே" என்றருளிச்செய்தார் ஆசார்யன் சிஷ்யனுக்கு ரஹஸ்யத்ரயார்த்தம் உபதேசிக்கும் வகையை யறிவிக்கப் பிறந்த இப் பிரபந்தத்தில் ஆசார்யனுக்கும் சிஷ்யனுக்கும் சேர்த்தி வரும் க்ரமம் உபோத்காதாதிகாரத்திலேயே கூறப்படுகிறது பிறகு 2-ஆவது அதிகாரத்தில் உபதேசாரம்பம் மூன்று மந்த்ரங்களே ஸாரதமங்களென அங்கே நிரூபித்து அவற்றில் அடக்கிக் காட்ட வேண்டியவையான வேதாந்தார்த்தங்களில் முக்கியமாகத் தெளிய வேண்டிய தத்துவஹித புருஷார்த்தங்களைப் பல அதிகாரங்களாலே முதலில் விவரித்து, முழு க்ரந்தமும் ரஹஸ்யத்தின் ஸார விஷயமாகைக்காக அந்தந்த அதிகாரத்திலேயே அங்கு உபதேசித்த அர்த்தங்கள் ரஹஸ்யத்ரயத்தில் எந்தெந்த சொல்லில் அடங்கியிருக்கின்றனவென்பதையும் தெரிவித்துக் கொண்டே 22 அதிகாரங்களான **अर्थानुशासनभाग**மென்ற முதற் பாகத்தை

முடித்துக் கொண்டு. மேற் கூறியவற்றில் வரும் சிற்சில ஆக்ஷேபங்களுக்குப் பரிஹாரமாக மேல் நான்கு அதிகாரங்களான ஸ்தாநப்ரகரணத்தை யருளிச் செய்த பிறகு, க்ரந்தப்ரதானவிஷயமான மூன்று ரஹஸ்யங்களின் பதார்த்த வாக்யார்த்த யோஜனைகளை விரித்துரைத்து. இப்படி உபதேசிக்கும் ஆசார்யன், உபதேசம் பெறும் சிஷ்யன் இவர்களிருக்க வேண்டும் படிகளை உபதேசித்தருளினர் ஆக உபோத்காததிகாரத்திலிருந்தே ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரயஸாரம் என்பது உசிதமும் ஸர்வஸம்மதமுமாகும்

இந்த க்ரந்தத்திலேயே குருபரம்பராஸாரமும் சேர்வதென்று முதலதிகாரத்தினுள் சேர்த்தால் குருபரம்பராஸாரமென்று தனிப்பெயரும் அதன் முடிவில் इति कवितार्किकसिंहस्य... गुरुपरम्परासार: संपूर्ण: என்கிற வாக்யமும் சேராது. இதைத் தனியதிகாரமாக்கினால் மொத்தம் முப்பத்திமூன்று அதிகாரமாகும் அப்போது 32 என்றது முரண்படும் குருபரம்பராஸார முடிவில் रहस्यत्रयसारे प्रथमो विभाग: என்று வரையப்பட்டிருக்க வேண்டும். இனி, தனி ப்ரபந்தமென்னில, மற்ற ரஹஸ்யங்களைப் போலே இதைத் தனியாக இதுவரையில் யாரும் எண்ணுமலிருப்பது தகாது இத்துடன் சேர்த்தே எழுதுவதும் ப்ரவசனம் செய்வதும் ஸம்ப்ரதாயத்திலுள்ளது; அதனால் தனிப்பட்டதாய் இருந்து முன்னுரையாகக் கூடவே சேர்த்தருளியதென்று இசைந்தவர் இது ரஹஸ்யத்ரயஸாரத்தினுட் சேராததாலும் முன்னுரை தொடங்கியே முழுமையும் அருளியதால் இதன் ச்லோகமும் பாட்டும் மேலே யருளும் க்ரந்தத்தின் விஷயத்தைப் பற்றியவையாக உரையாளர்களால் கருதப்பட்டுள்ளன गुरुभ्य: என்கிற ச்லோகத்தின் உத்தரார்த்தம் மேல் க்ரந்தத்தின் அர்த்த ஸங்க்ரஹமென்று கூறினார்களே, மேல் க்ரந்தத்திற்கான மங்கள ச்லோகம் இது என்றும் சிலர் சொன்னார்கள்

இதனையும் சேர்த்தே ஒரே க்ரந்தமாக ஏன் அருளிச் செய்யவில்லை யென்னில்—குருபரம்பராநுஸந்தானம் ரஹஸ்யத்ரயார்த்தங்களுக்கு மட்டுமென்று அப்போது நினைப்பார்கள் முமுக்ஷுவாய், வேதாந்தார்த்தங்களை க்ரஹிப்பதற்காக ஸ்ரீபாஷ்ய பகவத் விஷயாதிகளை குருமுகமாக க்ரஹிக்கும் போதும் குருபரம்பராஸாராநுஸந்தானம் முக்யமென்று அறிவிப்பதற்க்காகத் தனியாகப் பிரித்தது வேதாத்யயநத்திற்கு விடாமல் குருபரம்பராநுஸந்தாந நியமம் இராவிடினும், முமுக்ஷுவாகி மந்த்ரம் க்ரஹித்து மந்த்ரார்த்தமெல்லாம் க்ரஹிப்பவர்க்கு இந்த ரஹஸ்யத்ரயஸார க்ரந்தத்தில் ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களின் ஸாரமும் சேர்வதால் எல்லா ஆசார்யர்களுடைய அநுஸந்தானமும் இங்கு யுக்தமாகும் ஒவ்வொரு குருபரம்பரையிலும் சிற்சில ஆசார்யர்கள் வேறுபடுகிறபடியால் பேதமுண்டு ஸ்ரீதேசிகனுக்கு அப்புள்ளாரே எல்லாவற்றிற்கும் ஆசார்யரானாலும் ரஹஸ்யத்ரயார்த்தங்கள்விஷயத்திலே ப்ரா

சார்யர் மாதாமஹராவர். மடப்பள்ளியாச்சான் முதல் அங்கு பரம்பரை பிரிகிறது மற்ற ஸ்ரீபாஷ்யாதிகளுக்கு ப்ராசார்யர் நடாதூரம்மாள். மேலே எம்பெருமானர்க்குத் திருமந்த்ரார்த்த விஷயத்திலும் வேறு விஷயத்திலும் வெவ்வேறு ஆசார்ய ஸம்பந்தத்தை இங்கேயும் கூறுவர். இப்படி இது ஸர்வ விஷயம்

इति कवितार्किकसिंहस्य என்ற வாக்யம் இதன் முடிவிலில்லாமலிருக்கலாமே யென்னில், இது பொதுவாக வந்ததாகையால் இந்த முன்னுரை பிறகு யாரோ எழுதியதென்று ஸந்தேஹப்படாமைக்காக வரைந்ததென்க. இதனை எழுதி முடித்துக் கொண்டே மேலே தொடங்கினர். இத்துடன் சேர்க்காமல் இதைத் தனியாகப் பிரித்துவிட்டால் ரஹஸ்யத்ரயஸாரம் ஸேவிப்பவர்கள் குருப்பரம்பரானுஸந்தானம் முக்கியமென்பதை யறியாமல் விட்டு விட நேரும் பொதுவாயினும் முன்னோர் அருளிய ஸ்ரீபாஷ்யாதிகளில் தாம் எழுதியதைச்சேர்ப்பதைவிட தாமே யருளும் முக்கியமான மணிப்ரவாள க்ரந்தத்திற்கு முன்னுரையாக்குவதே தகுமென்று இவ்வாறு இணைத்தது. இந்த ச்லோகத்தின் உத்தரார்த்தத்தின் பொருளாகிறது-பிராட்டியும் பெருமாளும் உபாயமும் உபேயமுமாகிறார்களென்பது இதுவும் स्वगतैः स्वयमेव साधनतया जोघुष्यमाणः श्रुतौ என்றபடி எல்லா மறைகளுக்கும் பொருளாகையாலே முமுக்ஷு குருமுகமாக க்ரஹிக்கும் க்ரந்தங்களுக்கெல்லாம் பொதுவாகும் எல்லா ஆசார்யர்களைச் சொல்லுமிது ப்ரக்ருத ஆசார்ய பரம்பரையையும் முக்கியமாகக் கொள்வதும் இதுவும் தோற்ற இதனை இங்குச் சேர்ந்த ரஹஸ்யத்ரயஸாரத்தின் முதன் மங்கள ச்லோகமாகவும் கொள்வரென்று முன்பே சொன்னோம்.

गुरुभ्यः:— அஜ்ஞானமாகிற இருளைப் போக்குகிறவன் என்பது गुरुசப்தத்தின் பொருள். गुशब्द(स्)त्वन्धकारः स्यात् रुशब्द(स्)तन्निरोधकः தனக்கு நேர் ஆசார்யனே தன் அஜ்ஞானத்தை நேராகப் போக்குபவனாகையாலே அவ்வாசார்யனை மட்டும் ஸ்வரஸமாக இது சொல்லும் அவ்வளவே இங்கும் பொருள். முன் ஆசார்யர்களும் இவ் வாசார்யன் வாயிலாக அஜ்ஞானம் போக்கினவர்களென்று எல்லோரையும் கொள்வது கூடுமாகிலும், तद्गुरुभ्यश्च என்று தனியே அவருடைய குருக்களென்று மேலாசார்யர்களைச் சொல்வதால் இங்கே இவ்வளவே கொள்வது ஏன் இப்படிப் பிரித்துக் கூற வேண்டுமென்னில், முதலில் தம் ஆசார்யனுக்கும் மேலே க்ரமமாக அந்தந்த ஆசார்யர்களுக்கும் தனித்தனியே ப்ரணமம் பண்ணவேண்டுமென்று தெரிவிப்பதற்காகவாம். நேராசார்யன் ஒருவனாயிருக்க गुरुभ्यः என்ற பன்மை (बहुवचनம்) பூஜையை = மதிப்பைக் காட்டுவதற்காக, பலரென்ற எண்ணிக்கையைக் காட்டவன்று குருபரம்பராஸாரம் பொதுவாகையாலே ஸ்ரீபாஷ்யாதிகளுக்கு வெவ்வேறு ஆசார்யர் சிலருக்கு உண்டாகில் பன்மையும் கூடும். அப்போது எல்லா பரம்பரைகளையும் तद्गुरुभ्यः என்று குறிப்பதாம். எல்லா க்ரந்தங்களுக்கும் பொதுவான பொருளே உத்தரார்தத்தில் கூறப்பெற்றது.

ரஹஸ்யம் மந்த்ரம் என்ற சொல் இங்கில்லையே 'தத்குருப்யச்ச' என்பது ப்ராசார்யனை மட்டும் சொல்வதன்று गुरून् सर्वान् सद्गुरूंश्च ततो हरिम्, आचार्या-नाचार्याचार्यान्भगवतः இத்யாதி ப்ரமாணங்களால் எல்லோரையும் ப்ரணாமம் செய்ய விதியுளதே ஆக. तद्गुरु சப்தத்தாலே பரம்பராசார்யரெல்லோரையும் கொண்டு तद्गुरुं तद्गुरुं तद्गुरुम् என்றவாறு பகவான் வரையில் சொன்னதாகக் கொள்க இத்தனை तद्गुरुபதங்களின் பொருளை இப் பதம் சொல்வதற்கு இணங்க तद्गुरुभ्यश्च तद्गुरुभ्यश्च तद्गुरुभ्यश्च என்று, வேண்டும் எண்ணிக்கைக்குத் தக்கபடி கூட்டி அவற்றின் ஏகசேஷமாகவும் तद्गुरून् என்பதைக் கூறுவர். रामश्च रामश्च रामश्च रामाः என்பதுமுண்டே. अक्षादिசப்தங்களிற் போலே பொருள் (ப்ரவ்ருத்தி நிமித்தம்) வேறானாலும் ஏகசேஷம் கூடும் வியாகரண விரோதம் காணவில்லையாகையாலும் பொருந்துவதாலும் இதை இசையலாம். ஆக அடைவாக எல்லோருக்கும் ப்ரணாமம் சொன்னதாகிறது.

गुरुभ्यस्तद्गुरुभ्यश्च नमः என்பதே போதுமே; மேலே नमोवाकमधीमहे என்றதால் நம: என்ற சொல் மட்டும் போதும் நமஸ்காரம் வேண்டாமென்று விபரீதமாகவும் தோற்றுமே யென்னில்—ப்ரமாண விருத்தமாகக் கருத்து எங்கும் கொள்ளலாகாது नमोवाकम् = நமஸ்கார வார்த்தையை ஓதுகின்றோமென்பது பொருள் இங்கே நம: என்பதற்கு நமஸ்காரம்—ப்ரணாமமென்ற பொருள் கொண்டு, அங்கே அந்வயத்தினால் गुरुभ्यस्तद्गुरुभ्यः என்று சதுர்த்தீவிபக்தியென்றால், அப்போது षष्ठीतत्पुरुषமான नमोवाकமென்பதற்கு ப்ரணாமவிஷயமான சொல் என்பது பொருளாம், இப்போது குரு நமஸ்காரத்தையும் தத்குரு நமஸ்காரத்தையும் சொல்லும் சொல்லை என்று சொன்னதாம். ஆக अस्मद्गुरुभ्यो नमः, अस्मत्परमगुरुभ्यो नमः என்றோ. அந்தந்த ஆசார்யன் திருநாமத்தை நான்காம் வேற்றுமையோடு சேர்த்து நம: என்பதையும் சேர்த்து ப்ரயோகிக்கும் வாக்ய வரிசையையோ சொன்னதாகிறது, இதை விட்டு नम इत्युक्तिः नमोवाकः என்று விக்ரஹம் செய்தால் नमः என்பது பொருளைச் சொல்லாமல் சப்தத்தைச் சொல்லும். அப்போது गुरुभ्यः என்ற சதுர்த்திகளுக்கு अधीमहे என்றவிடத்தில் அந்வயம் नमச்சப்தத்தை அவர்களுக்காக ஓதுகிறோமென்றதாம். அப்போதும் அவர்களைக் குறித்து நமஸ்காரத்திற்கான சொல்லை ஓதுகிறோம் என்றே கருத்தாகும். நம: என்றிவ்வளவே யிருந்தால், நம்ச்சப்தத்திற்குப் பலவிதமான ப்ரணாமங்கள் பொதுவாக அர்த்தமாயிருந்தாலும், ஒரு தரம் சொன்ன சொல் ஒரு பொருளையே சொல்லும் என்கிற நியாயத்தாலே ஒருவிதமான ப்ரணாமத்தையே கொள்வதாகும். எந்த ப்ரணாமத்தைக் கொள்வது என்பதற்கு விசேஷ காரணமில்லாமையால் எல்லாவற்றையும் கொள்ளலாமே யென்னில், எல்லாவற்றையும் ஒரு சமயத்தில் ஒருவன் செய்யமுடியாது. அதனால் சொல்லைச் சொல்லுகிறோம், அத்துடன் எந்த ப்ரணாமம் எப்போது கொள்ளலாகுமோ அதைக் கொள்வோம். ஒன்றுமே கொள்ள முடியாவிட்டால்

சொல்மட்டுங்கூட மங்களமாய் எதையும் அளிக்குமென்ற கருத்தால் அதிகம் கூறியது. மேலும் எந்தக் கார்யமும் மந்த்ரமுண்டாகில் மந்த்ரத்தைச் சொல்லியே செய்வதாம் குருபரம்பரா நமஸ்காரத்திற்கு இவை மந்த்ரங்கள் இவை அவசியமானவை என்றும் இப்போது குறித்ததாம். [illegible] என்னுமல் [illegible] என்பதால் சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்டது இது, பெரியோர்கள் உபதேசித்தபடி சொல்லுகிறோம் என்று ஸ்த்தாபித்ததாம். குரு வந்தனத்தைச் சொல்லும் . சாஸ்த்ரத்தை வேதத்தில் ஓதுகிறோம் என்றும் பூர்வார்தத்திற்கு அர்த்த மாகிறது. அதனால் மேலே குறிக்கப்படும் வேதம். ப்ருஹதாரண்யகாதி உபநிஷத்து. என்றவற்றில் தன் ஆசார்யனைத் தொடங்கி எம்பெருமான் வரையில் வரிசையாகக் குருபரம்பரையைப் படித்து முடிவிலே நம: என்று ஓதும் வாக்கியங்கள் எல்லாவற்றையும் காட்டினதாம் மேலே திவ்ய தம்பதிகளை வரிக்கப் போகிறார் அதற்கு முன் இவ்வாறு கூறியதால், ப்ரபத்தி யனுஷ்ட்டான காலத்தில் குருபரம்பரையின் ப்ரணமம் வேண்டுமென்றதுமாயிற்று. ஆசார்யர்களை. ஸேவித்து அஜ்ஞானத்தை விலக்கிக் கொண்டதற்குப் பலன் என்னவென்ன, திவ்ய தம்பதிகளை வரிப்பதே யென்கிறார் உத்தரார்த்தத்தில் [illegible]-உபாயமாகவும் உபேயமாகவும் வரிக்கிறோமென்றதாயிற்று. வரிக்கப்படும் திவ்ய தம்பதிகள் பலனும் உபாயமுமாக நின்றது மட்டுமல்லாமல் உபாயமாக வரிப்பதற்கு முன் ஞானம் பெறுதற்கும் உபாயமாக குருபரம்பரையில் சேர்த்து நின்றார்கள் நமக்கென்று மகிழ்ச்சியுடன் [illegible] என்றது அந்த குருக்களிலே முதல்வரான என்றது பொருள்—அக்கரைக்கு அணைபோல் வேறொன்றை அடைவதற்கு இப் பரம்பரை உபாயம் மட்டுமல்ல இதில் முதலிருப்பவரே முழுஉபேயமும் உபாயமுமென்றதாயிற்று இந்த [illegible] என்ற சொல்லாலேயே [illegible] என்ற சொல் எல்லா ஆசார்யர்களையும் சொல்வது என்று தெளியலாம் ஆகையால் ஆசார்ய ப்ராசார்ய வந்தனம் மட்டும் போது மென்னலாகாது. ஓ பரம்பரையில் ஒருவர் தானே முதலாயிருக்கமுடியு மென்னில், ஆம், பகவானே முதல், அடுத்தபடி பிராட்டி பிறகே மற்றவர். ஆகையால் மற்றவருக்கு முன்னே இருவரும் என்றதாம். உலகில் குரு பரம்பரைகள் எத்தனையோ யிருக்கின்றன எங்கும் பெரும்பான்மையாக பகவான் முதலாசார்.ஞகலாம் பிராட்டியும் சேர்ந்திருப்பது இங்கே சிறப்பாம். பகவானும் பிராட்டியும் நித்யரும் முக்தமானவர்கள் குரு பரம்பரையிற் கூடியிருக்கிறார்களென்றால் இதற்கு ஈடு வேறாகாது இரண்டு பேரும் உபாயோபேயரென்பது எப்படி பகவான் ஒருவன் தானே உபேயம் பிராட்டி அப்ரதானமாக உபேமென்னில், எல்லா ஆசார்யர்களையும் உபேயமென்னலாம் மேலும் இவரையுமுபேயமாகக் கொண்டால் கைங்கர்யம் செய்கிறவன் யாருடைய ஆஜ்ஞைக்கு உட்படுவதென்று சில ஸமயம் திண்டாட்டமாமென்ன வேண்டா. [illegible]. இருவரும் இணைந்து

பத்னியும் பதியுமாயிருப்பதால், ஆஜ்ஞை ஒரேவிதமாக இருக்கும். எனிப்படி? ஒருவரை மட்டும் கொண்டாலென்னவெனில், ज्ञाताज्ञौ. அவர்களிருவரும் ஸமப்ரதானமாய் நமக்கு சேஷிகளாயிருக்க ஒருவரை விட்டு ஒருவரை மட்டும் ஆச்ரயிப்பதோ ஆராதிப்பதோ தகாதே ஆக, இருவரையும் வரிக்கிறோம்

இங்கே ब्रह्मविदाप्नोति परम्. परात्परं पुरुषमुपैति दिव्यम्. पतिं विश्वस्यात्मेश्वरम् இத்யாதி வேதவாக்யங்களில் ஒருவனையே ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் சேஷியாகவும் ஓதியிருந்தாலும், अस्येशाना जगतो विष्णुपत्नी இத்யாதி வாக்யங்களையும் விஷ்ணுபுராணம் ஸ்ரீபஞ்சராத்ரம் மற்றுமான பல ப்ரமாணங்களையும் கொண்டு இவ்வாறு ஸித்தாந்தம் கொள்ளவேண்டுமென்பதும் அவை மூலமாக அர்த்தோபதேசம் செய்பவரே அஜ்ஞானத்தைப் போக்கும் ஆசார்யகளென்பதும் சொல்லாமலே விளங்கும். அவ்வாக்யங்களுக்கு அப்படிதான் அர்த்தம் கூற வேண்டுமென்பது பண்டை நாளாக ஸம்ப்ரதாயமாக வந்ததேயாம் இதற்கு எல்லாவற்றையும் தெளிவாகக் காட்டும் தமிழ் மறைகளே ஸாக்ஷிகள் அவற்றின் மூலம் தம்பதிகளையே சேஷியாகவும் உபேயமாகவும் உபாயமாகவும் தெளியலாம் ஆகவே இதை மணிப்ரவாள க்ரந்தமாக எழுதத் தொடங்கி அருளிச்செயல்களையும் ஆதாரமாக் காட்டுவோம். அதனால் நம் ஆசார்யர்களுக்கு உபதேசத்திற்குத் துணையான ஆழ்வார்களையும் பராசராதிகளுக்கு மேல ஆதரிக்க வேண்டும் நம் ஆசார்யபரம்பரையில் ப்ரபந்நஜநஸந்தான கூடஸ்தரென முதலாக விளங்கும் நம்மாழ்வார் நாதமுனிகளுக்குத் தம் திருவாய்மொழி முதலான க்ரந்தங்களைக் கொண்டும் இத் தெளிவை உண்டுபண்ணபடியால் இவைகளும் இவ் வாழ்வார்களும் இங்கே வெகுமதிக்கப்படுவது ப்ராப்தம்—என்றறிவிப்பதற்காகப் போய்கை இத்ய தி ப சுரம் இப்படி இப் பாசுரத்திற்கு இங்கே ஸங்கதியிருப்பதால், 'குருபரம்பராஸாரத்தில் குருபரம்பரையைப் பற்றி தனே கூறவேண்டும். ஆகையால் பராசரவ்யாஸாதிகளை விட்டது போல் மற்ற ஆழ்வார்களையும விடவேண்டியிருக்க இங்கே இவர்களைச் சேர்ப்பதென்' என்று கேட்கலாகாது வேதங்கள் போல் மஹர்ஷி க்ரந்தங்கள் ப்ரமாணங்களென்பது ஸர்வஸம்மதம் திவ்ய ப்ரபந்தத்தை ப்ரமாணமாக வேறு ஸித்தாந்திகள் கொள்ளாமையால் அவற்றைக் கொள்வது தகுமென்பதை ஆதியில் கூறவேண்டுவது அவசியமாயிற்று. தெளிவான ஞானமளிப்பவர் குருக்கள் என்ற பிறகு ஞானத்திற்கு உபாயங்களில் தமிழ் முக்கியமென்றால் இது தகுமே, மேலும் அடுத்த பாசுரத்திலே குருபரம்பராஸாரத்திற்கு முக்கிய விஷயமான ஆசார்ய ஸம்பந்தத்திற்கு மதுரகவிகளை மார்க்க தர்சியாகக் கூறப் போகிறார். அது அவசியம். திவ்ய ப்ரபந்தங்களுக்குள்ள பெருமையை முன்னே சொன்னால்தான் அதையும் செவி சாய்த்துக் கேட்டு இசைவார்களென்று அதற்கு சேஷமாகவும் இப் பாசுரமாகிறது. இதனாலும் இந்த குருபரம்பராஸாரத்திலே இது சேரும், உபோத்காதாதிகாரத்தில் தான் சேர்க்க வேண்டுமென்பதில்லை.

**பொய்கைமுனி பூதத்தார் பேயாழ்வார்**
**தண் பொருநல் வரும் குருகேசன் விட்டுசித்தன்.**
**துய்ய குலசேகரன் நம் பாணநாதன்**
**தொண்டரடிப்பொடி மழிசை வந்த சோதி**
**வையமெலாம் மறை விளங்க வாள்வேலேந்தும்**
**மங்கையர்கோ னென்றிவர்கள் மகிழ்ந்து பாடுஞ்**
**செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளியவோதித்**
**தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே. 1**

---

*ஆக ச்லோகத்திறகுப் பின்னும் மேற்பாட்டுக்கு முன்னும் இது இணைந்தது பொருந்திற்று. இங்குள்ள ஆழ்வார்களின் க்ரமம் இவர்களின் அவதார க்ரமத்தைக் கொண்டல்ல பாட்டமைப்புக்குத் தக்கவாறு கொண்டதாம் பொய்கையில் அவதரித்ததாலே ஸரோமுநி* **பொய்கையாழ்வார்** *என்றே பெயர் வழங்கலாயிற்று.* **பூதத்தார்** *பூதத்தாழ்வார் பூதம் என்று திருநாம மாகையால் பூதாழ்வாரென்பதே போதும்* **भूत** *என்பதற்கு ஸத்தையைப் பெற்றவர் ப்ரஹ்ம ஞானம் நிறைந்தவரென்ற பொருள் இங்கே தகும். பொது வாகவே* **भूत** *சப்தம் ஸதேஹ—ஆத்மாக்களைச் சொல்லும் 'கடல்வண்ணன் பூதங்கள் மண்மேல்' என்று நித்யஸூரிவிஷயத்திலும் ப்ரயோகம் உண்டு எம்பெருமானோடு ''முன்னமே இருந்தவர்கள் என்றும் · பொருளாகலாம் எம்பெருமானையும்* **तस्यै ह्य महतो भूतस्य** *என்று பூத பதத்தாலே உபநிஷத்துக் கூறுகிறது இத்தகைய பூதங்களிலே யார் இவர் என்ற சிந்தனையின் பேரில் பூதத்து ஆர் என்று வினவப்பட்டதனுலேயே இப்படி பூதத்தார் என்ற திருநாமம் வாய்த்தது போலும் பொருள் இப்படியானுலும் இவருக்கு இது திருநாமமாகவும் கொள்ளப் பெற்றது ஆழ்வான் என்ற ப்ரஸித்தி வேறிடத் திலேயே அதனுல் ஆழ்வார் என்றதென்க.* **பேயாழ்வார்.** *மஹாந் என்று பெயராம் பேய் என்ற சொல்லுக்கு, பெரிய என்பது பொருள்.* **भूतसरोवेताळन्** *என்று வேதாளபதத்தாலே ஸ்ரீதேசிகன் கூறியதால் பேய் என்ற சொல் பேயைப் போன்றவரென்கிற பொருளதுமாம். திருக்கண்டேன் பொன்மேனி கண்டேனென்று ' கண்டபோதே கூத்தாடினுரென்று இத் திருநாமமாம். பூதத்தாழ்வாரென்ற ப்ரசித்திக்கிணங்க ஆழ்வாரென்ற சொல்லைக் கீழிலும் கூட்டுக எல்லா ப்ரபந்தங்களையும் உபதேசித்தவரும் நேராக பூர்ணுசார்யரு மான நம்மாழ்வாரை அவர்தேசப் பெருமையுடனீடுபட்டு மேலே கூறுகிறுர் தண்பொருநல்வரும் குருகேசன்—தண்—குளிர்ந்த. பொருநல்என்றும்பொருநை என்றும் தாம்ரபர்ணியாறு வழங்கப்பெறும். அங்கே வரும்—அவதரித்த, குரு கேசன் திருக்குருகைநகர்முனிவர் அல்லது பொருநல் வரும்—ப்ரவஹிக்குமிட மான குருகா நகரிக்கு ஈசனுன நம்மாழ்வாரென்றுரைக்க இவ்வாழ்வார் ப்ர பன்ன ஜநஸந்தாந கூடஸ்த்தரென்று இவர் பெருமையைக் கருதியே ஸ்ரீபாக*

வதத்தில் ஸ்ரீவைஷ்ணவர்கள் அவதரிக்கப் போகும் இடங்களைக் குறிக்கும் போது தாம்ரபர்ணீ நதீ யத்ர என்று தாம்ரபர்ணியை முதலிற் கூறியதாம். தெளிந்தும் குளிர்ந்துமுள்ள தீர்த்தமான இதைச் சொன்னதால் ஆழ்வாரின் அதிசயம் குறித்ததாகும். விட்டுசித்தன் = பெரியாழ்வார். சித்தத்தில் விஷ்ணுவையே உடையவர். வேறொரு விஷயத்தை எப்போதும் நினையாதவர். ஆண்டாளிடத்தில் ப்ரேமையும். தம் பெண் என்பதற்காக வல்ல; அயோனிஜையாய்ப் பிறந்து எம்பெருமானிடம் காதல் மிக்களான கன்னிகை என்பதாலேயே

துய்யகுலசேகரன். பரிசுத்தரான குலசேகராழ்வார். தினந்தோறும் ஸ்ரீரங்க யாத்ரைக்கு ஸந்நாஹம் செய்து கொண்டே நித்ய கர்மாநுஷ்டானபகவத் பாகவதாராதனங்களுக்கே அவகாசம் போதாமல் ரங்கயாத்ரை செய்ய முடியாமலிருந்தபடியால் அந்த ஆசார ஆராதனாதிகள் மூலமான மனச்சுத்தியை தூய என்கிறது, அன்றி, 'ஆரங்கெடப் பரனன்பர் கொள்ளாரென்று குடப்பாம்பிற் கையிட்ட' என்றபடி வைஷ்ணவர்களின் கோஷ்டியைக் கூட்டுகிறாரென்ற அசூயையாலே ஆராத்ய மூர்த்தியின் ஹாரமொன்றை ஒளித்து வைத்து மந்த்ரிகள், வைஷ்ணவர்கள் அபஹரித்ததாகச் சொல்லும் போது, தாம் ஒரு குடத்திலே பாம்பைப் பிடிக்கச் சொல்லி அதைப் பட்டினி போட்டு, ஸ்ரீவைஷ்ணவர்கள் மந்திரிகள் சொன்ன வண்ணமின்றி நல்லவர்களாகில் இப்பட்டினி கிடக்கும் பாம்பும் என்னைக் கடிக்காதென்று கூறி வெகு தீரமாகக் குடத்தில் கையிட்டார். பிறகு மந்திரிகள் குற்றத்திற்கு க்ஷமை கொண்டனர். இவ்வளவு தூய்மையையும் குறித்ததாம். குலசேகரன். சேர குலத்தில் தோன்றி சேரசோளபாண்டிய தேசவரசர்களை யெல்லாம் தமக்குள் அடக்கமாக்கியவராகையாலே க்ஷத்ரிய குலத்திற்கு சிரோபூஷணமானவர். எங்கள் குலசேகர னென்றே கூறும்படி தொண்டர் குலத்திற் சிறப்புடன் விளங்கியதாலும் குலசேகரர். ஆள்கின்றவரிற் சிறந்து பெருமாளென்ற திருநாமமும் பெற்றவர். நம்பாணநாதன். ஓரிடத்தில் ப்ரயோகித்தாலும் நம் என்றதை எல்லோரிடத்திலும் கூட்டலாம். வ்யாஸ பராசராதிகளைப் போலல்லாமல் இந்த ஸம்ப்ரதாயத்திற்கே இவர்கள் சேர்ந்தவர்களென்று இதனால் குறித்ததாம். வேறிடத்திலின்றி இங்கே நம் என்றதற்கிணங்கத் தனிக் கருத்தும் உண்டு. திருப்பாணாழ்வார் அந்தியஜாதியில் வளர்ந்தமை காரணமாக, ஆலயத்திற்கும் அந்தணர்க்கும் அருகிலிராமல் அரங்கனைப் பாடிக் கொண்டு அப்பால் வாஸம்செய்யா நிற்க, அரங்கன் இவரை ஆலயத்திற்கு வரும்படி நியமிக்க, அப்போதும் வரா்மல் விலகியே நிற்க, லோகஸாரங்க மாமுனியை மீண்டும் பெருமாள் நியமிக்க அவர் பலாத்காரமாகத் திருத்தோளிலேற்றி ஆலயத்திலுட் சேர்க்க, அப்போது அமலனாதிபிரான் அருளிச்செய்தார். ஆக எம்பெருமானை் தர்சனத்திலுள்ள நம்மைப் போலே வர்ணாச்ரம தர்மத்தைக் காப்பதில் பிடிவாதமுள்ளவரென்று குறித்ததாம். ஜாதியைக் கொண்டு அபசாரப்படா

மைக்காக அதிகமாக ப்ரதிபத்தியைக் காட்டவும் நம் என்றதாம். அதுவன்றி நம் என்பது தேசிகனைக் கருதியே யென்னலுமாம். இவ்வாழ்வாருக்கு முனிவாஹனன் என்கிற திருநாமத்தை அரங்கன் இடாமற் போனாலும் அப்பேர் அவருக்கு வருமளவுக்கு அபிமானித்தது திண்ணம் அவ்வளவு அபிமானம் தம்மிடமும் வைத்து வருவித்துத் தன்னை அனுபவிக்கவும் தன் விரோதிகளை வெல்லவும் தன் விஷயமாக ஸூக்திகளைச் செய்யவும் அருளி வேதாந்தாசார்யரென்ற திருநாமமுமிட்டான் ஆழ்வார்களுக்குள் இவ்வாழ்வாரும், ஆசார்யர்களுக்குள்ளே இவரும் அரங்கனின் அபிமான விசேஷத்திற்குப் பாத்திரமானபடியாலே **நம்** என்றபடி. பாணன் என்கிற நம் நாதன் என்று கூட்டலாம். பாண நாதன் = பாணகுலத்திலுள்ளவருக்கு நாதன் பாணநாதன், நமக்கு இஷ்டமானவர் நம் பாண நாதன் என்னலுமாம். ஆதிமறை என்ற பாசுரத்தில் நம் பாணன் என்றாற் போலே. பாண் என்பது வாத்யவிசேஷம். 'அடியார்க்கென்னையாட்படுத்தவிமலன்' என்றார் இவர். அடியார்க்காட்டபட்டே நின்றவரை மேலே கூறுகிறார் தொண்டரடிப்பொடி என்று. பக்தாங்க்ரிரேணு என்ற வடமொழித் திருநாமத்திற்கும் இதே பொருள். எல்லோரும் தம்மைவிட மேலானவர் மஹான்கள் என்று விளங்கும்படி இத் திருநாமம் இவருக்கு இஷ்டமாயிருந்தது. தொண்டராகாதவர்கள்மேல் வெறுப்புமுடையவர்.

**மழிசை வந்த சோதி** திருமழிசை யென்ற ஸ்த்தலம் சென்னைக்கருகிலுள்ளது. அங்கே அவதரித்த சோதி இவரைத் திருவாழியின் அம்சமென்பர். பெரும்புலியூரில் யாகஸதஸ்ஸிலே இவருக்கு அக்ரபூஜை செய்ததைச் சிலர் பொறாத போது அவர்கள் தெளியும்படி பரஞ்சோதியாய் விளங்கினரென்கிற ஐதிஹ்யம் இங்கே குறித்ததாகும் ஆக அக்ரஜையை பூ தர்மபுத்ரரின் ராஜஸூய யாகத்திலே பெற்ற பரஞ்சோதியான கண்ணனுக்கும் சிசுபாலாதிகளைத் தெளிவிக்க இவ்வாறு சோதியாகத் தோன்ற வேணுமென்று தோன்றவில்லை யென்று அவருக்கு மேம்பட்டவர் இவர் என்னலாம் இவருக்கு பக்திஸாரரெனத் திருநாமம். மஹாயோகியான படியாலும் எல்லா மதங்களையும் ஆராய்ந்து அகற்றியவராகையாலும் இருளெல்லாம் தீர்க்கும் சோதியாயிருந்தவர். நாராயண பாரம்யத்தையே தொடங்கியவர் அறும் பொருளான சரீராத்ம பாவத்தையே தொடங்கி சாஸ்த்ரார்த்தங்களை வெளியிட்டவர். **வையமெல்லாம்** இத்யாதி. திருமங்கை யென்ற நகரில் தோன்றி அங்குள்ளவர்களுக்கெல்லாம் கோனாய் விளங்கிய இவர் வாளும் (கத்தியும்) வேலும் (குந்தமும்) ஏந்தியது முதலில் வீரசூரராய் சோழ ராஜனுக்கு ஸஹாயமாய் ஆண்டு வருவதற்காகவாயிருந்தது பிறகு குமுதவல்லி என்ற அப்ஸரஸ்ஸான கன்னிகையை மணந்து கொள்பவரான போது ஸ்ரீவைஷ்ணவாராதனத்திற்கே த்ரவ்யங்களைப் பல வழியில் சேகரிக்க வாளும் வேலும் கருவியாயின. அதனால் வைஷ்ணவ மதப்ரசாரமும், ஸ்ரீவைஷ்ணவர்களுடைய அனுக்ரஹத்

தால் எங்கும் மறையின் பொருள் விளங்க அனுகூலமு மேற்பட்டுக் கலியைப் போக்கியதாலும் பரகாலராய் கலியராகி, அப்போது அந்தண வேஷத்தில் மணக்கோலத்தில் ஊர்வலம் வந்த எம்பெருமானிடம் எல்லாம் களவு கொண்டு முடிவில் பாரம் தூக்கமாட்டாதபடியையும் மோதிரம் அந்தணர் கையினின்று கழற்ற முடியாமையையும் கண்டு, 'என்ன மந்திரம் போட்டீர் அந்தணரே' என்று இவர் கேட்டுக் கொண்டே மோதிரத்தைப் பற்களால் பெயர்க்கமுயன்ற போது பற்களில் பட்ட ஸர்வரஸனான ஸர்வேச்வரனின் திருமேனியைச் சுவைத்து வியந்து நிற்க. எம்பெருமானும் இப்போது இவர் மந்த்ரோபதேசம் பெற அதிகாரி என்று கருதி அனுக்ரஹித்தார் தன் நன்மைக்காக ஸமித்பாணி யாய் ஆசார்யனிடம் அடங்கி நிற்கை சிஷ்யாதிகாரம் விரட்டுவதற்கான வாள் வேலேந்தியிருத்தலே இவருக்கு உபதேசம் பெற அதிகாரமளித்தது. அதிகாரத்துடன் க்ரஹித்தார். அறிவு வளர்ந்தது அஹங்காரம் போயிற்று, வாளும் வேலும் வாதிகளை வெல்ல விரகான ப்ரமாணமும் தர்க்கமும் போலாயின. வைஷ்ணவர்களுக்கு அன்னதானத்துடன் வித்யாதானத் திற்கும் வழி யேற்பட்டது அர்ச்சை வரையிலான மூர்த்திகளின் பெருமை விளங்கிற்று பல கோயில்களைப் பரிஷ்க்ரித்தார் திருப்பிரிதி, பதரீ முதலான வடநாட்டுத் திருப்பதிகளினின்று தென்னாட்டின் முடிவு வரையில் திவ்ய தேசங்களில் பெருமானைப் பாடி, 'பரத்ய ஸௌலப்யங்கள் உள்ள இப் பரம புருஷனே மறையின் பொருள்; உற்றதும் அவனடிமை போல் அவனடியார்க் கடிமை' என்று ஸ்த்தாபித்ததாலே இவ் வாழ்வாரால் மறைகள் விளங்கின வளவுக்கு நம்மாழ்வார் உள்பட மற்ற ஆழ்வார்களாலாகவில்லை யென்னலாம். மேலும் நம்மாழ்வாரின் மறை வையமெல்லாம் விளங்கவும் இவர் காரணமானார்.

**என்றிவர்கள்** என்பதற்கு என்றவர்கள் என்று பொருள் ஸர்வஸம்மதம். அன்றி, **என்று** என்பதைத் தனியாகப் பிரித்து என்று = என்றவாறு திருநாமங் களைக் கூறி என வுரைக்க. இது ஓதி என்றதோடு சேரும். இவர்கள் மகிழ்ந்து பாடும் தமிழ் மாலைகளை இவர்கள் திருநாமங்களை முன்னம் அனுஸந்தானம் செய்து கொண்டு, இப்படி குருப்யோ நம: என்றதற்குப் பிறகு இவர்கள் பாசுரங்களை ஓதித் தெளிவதென்றபடி மறைகளில் மறைந்த பொருள்களைத் தெளிவிப்பதற்காக இதிஹாஸ புராணங்கள் இயற்றப் பெற்றன. அவை களும் இத் தமிழ்மறைகளும் ப்ராப்யமான ப்ரஹமம் முதலாக அர்த்த பஞ்சகத்தை யறிவிக்கின்றன. ஆனால் இதிஹாஸ புராணங்கள் எம்பெருமா னுடையவும் பக்தர்களுடையவும் சரித்ரங்களைச் சொல்லுவனவாய் நேரான பகவதனுபவானந்தம் பெருக்காக அமையவில்லை. **மகிழ்ந்து பாட**லென்பது இங்கேயேயாம். **शोकः श्लोकत्वमागतः** என்கிறபடி ஸ்ரீமத் ராமாயணம் பிறந்தது சோக ரஸத்தினாலே இவ்வளவு எழுதிய வால்மீகி மஹர்ஷி சித்ரகூடாதி களில் இருந்தவர் நேரில் ராமனைக் கண்டபோது அவருடைய பெருமையை

எடுத்துக் காட்டி ஒரு ஸர்க்கமாவது பேரானந்தமாகப் புகழ்ந்து பேசினரா? வியாஸரும் பாரதத்தில் பீஷ்மாதிகள் கண்ணனைக் கண்டு களித்ததைக் கூறின வாறு தாம் கண்ணனிடம் ஈடுபட்டதை நேரில் காண்பித்துக் கொண்டாட வில்லை. பல கிளைக்கதைகளாலும் வெவ்வேறு ப்ரஸங்கங்களாலும் அவற்றில் எம்பெருமானுடைய அனுபவம் இடையிடை விடப்பட்டுச் சிதறிப் போ யிற்று. இத்துடன் ப்ரஜைகள் பிறவியினின்று உணர்ந்த தமிழ்ப் பாஷையில் அமைந்திருப்பது மற்றொரு பாக்யம். தமிழ்ச் சொற்களும் செய்ய = ருஜுவான நேராகப் பொருளைக் கூறுகின்றனவாய் ஸரளங்களாயிருப்பவை. செவிக் கினிய செஞ்சொற்கள் இவ்வளவு தமிழ் ப்ரபந்தங்களைப் படித்தும் தடுமாறு கின்றவர் உலகிலுளர். ஆகையால் இவற்றைத் தெளிய ஓத வேண்டும் ஸம்ப்ரதாயமாக க்ரஹித்தால் தெளிவு நன்கு உண்டாம். வடமொழியில் ஆசார்ய மூலம் க்ரஹிப்பதைவிட இங்கே தெளிவது எளிது. சொற்கள் ஸரளங்கள் பரிமிதங்கள். அதிக ஸந்தேஹத்திற்கிடமாகாதவை. மறையில் வேதத்தில் தெளியாத நிலங்கள்—இடங்களெல்லாம் இவற்றின் மூலம் நாம் தெளிந்து வருவது கண்கூடு. இதனை இல்லையென்னவொண்ணுது தமிழ் பாஷை தெரியாதவர்கள் வடமொழியில் ப்ரயாஸப்பட்டுத்தான் சில பெரி யோர்கள் மூலம் உண்மை யுணரவேண்டும் நல்ல காலமாய் நமக்கு இந்த எளிய வழி யேற்பட்டிருப்பதற்காக நாம் மகிழ்ந்து இவர்களைத் தொழுவது நியாயம். வேதங்களில் உலகுக்கெல்லாம் காரணமான பரப்ரஹ்மம் ஒன்று உளது என்று தெரிந்தாலும். அதன் மூர்த்தி, அதை யாராதிக்கும் முறை, அதைப் பெற யார் என்ன உபாயம் அனுஷ்டிப்பது என்றவாருன விஷயங்கள் பகவத்கீதையிலிருந்து அறியப்படுமளவில் கூட வேதங்களினின்று தெளியப் பெரு. திவ்ய ப்ரபந்தங்கள் தெளிவாக்குகின்றவாறு கீதையும் தெளிவிக்க வில்லை யென்னலாம். ஆழ்வார்களோ, 'அவரவர் தாந்தாமறிந்தவாறேத்தி... தொழுவர், உலகளந்த மூர்த்தி யுருவே முதல்' (14 ), 'முதலாவார் மூவரே அம்மூவருள்ளும் முதலாவான் மூரிநீர்வண்ணன், முதலாய நல்லானருளல் லால் நாமநீர்வையகத்துப் பல்லாரருளும் பழுது' (15), 'திருமகளும் மண்மகளும் ஆய்மகளும் சேர்ந்தால் திருமகட்கே தீர்ந்தவாறென் கொல்— திருமகள் மேல் பாலோதஞ்சிந்தப் படநாகணைக் கிடந்த மாலோதவண்ணர் மனம்' (42) பணிந்தேன் பனிமலராள் அங்கம் வலங்கொண்டானடி (4) பொன்னுழி பாடென்றருள் நீர்மை தந்தவருள் (58), திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன், (1), சார்வு நமக்கென்றும்...தேன்மரும் பூமேல் திரு (100), குறை கொண்டு நான்முகன் குண்டிகை நீர் பெய்து மறை கொண்ட மந்திரத்தால் வாழ்த்தி—கறை கொண்ட கண்டத்தான் சென்னி மேல் ஏறக் கழுவினன் அண்டத்தான் சேவடியை யாங்கு (9), உணர்ந் துணர்ந்துணரிலும் இறை நிலையுணர்வரிதுயிர்காள்! நன்றெ்ன நாரணன்

இன்பத்தி லிறைஞ்சுதலி லிசையும் பேற்றில்
இகழாத பல்லுறவி லிராகம் மாற்றில்
தன்பற்றில் வினைவிலக்கில் தகவோக்கத்தில்
தத்துவத்தை யுணர்த்துதலில் தன்மை யாக்கில்
அன்பர்க்கே யவதரிக்குமாயன் நிற்க
அருமறைகள் தமிழ்செய்தான் தாளே கொண்டு
சுவ்பற்ற மதுரகவி தோன்றக் காட்டும்
தொல்வழியே நல்வழிகள் துணிவார்கட்கே. 2

---

*நான்முகன் அரனென்னுமிவரை ஒன்ற நும் மனத்து வைத்துள்ளி நும் இருபசைய றுத்து, கொடுவினையுடனே மாளும் ஓர் குறையில்லை மனனகமல மறக்கழுவி நாளும் நந்திருவுடையடிகள்தம் நலங்கழல் வணங்கி, அகல கில்லேனிறையுமென்றலர்மேல் மங்கையுறை மார்பா...புகலொன்றில்லா வடியேன் உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேனே சன்மசன்மாந்தரம் காத்தடியார்களைக் கொண்டு போய் தன்மை பெறுத்தித் தன் தாளிணைக் கீழ் கொள்ளுமப்பன், வேரிமாறாத பூமேலிருப்பாள் வினை தீர்க்குமே" என்றாற் போன்ற பாசுரங்கள் அருளியதால் திருவும் திருமாலுமான தம்பதிகளே தெய்வமும் உபாயமும் உபேயமும்; சரணாகதி ஸாத்யோபாயம்; ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்யுமளவுக்கு ஓங்கிய அனுபவமே மோக்ஷ புருஷார்த்தமென்றெல்லா விஷயங்களும் தெளிவாவதால் இவற்றைத் தெளிந்தவர்களுக்கு மறையின் பொருள் பிரயாசையின்றி மனத்தில் திடமாய் நிற்குமென்றபடி. இவ்வாழ்வார்களின் அவதாரகால விஷயத்தில் மாதம் திருநக்ஷத்ரம் இரண்டே ஸ்ரீதேசிகன் போன்ற பூர்வாசார்யர்கள் குறித்துளர், எந்த யுகம் என்ன ஸம்வத்ஸர மித்யாதிகளைக் குறிக்கவில்லை. ஆகையால் அது விஷயமான விசாரம் அவசியமன்றெனத் தெரிகிறது. (1)*

*நம் குருபரம்பரையில் கூடஸ்த்தராக நின்றருள்பவர் நம்மாழ்வார். அவர் எல்லா ஆழ்வார்களையும் தமக்கு அவயவங்களாக கொண்டவராகையால் அவரை யனுஸந்திக்கும் போது அவர்களுடைய அனுஸந்தானமும் சேருமென்றறிவிக்கக் கீழ்ப்பாசுரம் இயற்றப்பட்டது. பெரியாழ்வாரைச் சொல்லுமிடத்தில் ஆண்டாளையும், நம்மாழ்வாரைச் சொல்லுமிடத்தில் மதுரகவிகளையும் சொன்ன தாகவே பாவிக்க வேணும். அவர்களில் ஆசார்ய நிஷ்டரான அவ்விருவரும் உள்ளடங்கியவர்கள் என்கிற கருத்தாலே ஸ்பஷ்டமாக அவர்களைக் கூறவில்லை. ஆசார்ய புரஸ்காரம் வேண்டுமென்பது ஆண்டாளுடைய பாசுரத்தாலும் வியக்தம், 'வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்ல பரிசு வருவிப்பரேல் அது காண்டுமே' (103) எனவருளினரே. அதைவிட மிக ஸ்பஷ்டமாயிருப்பது மதுரகவியாழ்வாரின்*

பாசுரங்களாலென்று அவருடைய அனுஷ்ட்டானத்தை ஆசார்ய ஸம்பந்தத்திற்கு ப்ரமாணமாகக் காட்டுகிறார். இதனால் கீழ்க் கூறியவாறு ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்தி நமக்குப் பல அம்சங்கள் தெளிய விரகாயிருப்பது மட்டுமன்றி ஆசார்ய ஸம்பந்தத்திற்கென்றே பிறந்த பிரபந்தமுமுளதென்று காட்டியபடி. செய்ய தமிழ் மாலைகளால் ஆழ்வார்கள் தெளிவாக எல்லாப் பொருள்களையும் விளக்கியிருப்பதால் ஆசார்யாச்ரயண மில்லாமலே அனாயாஸமாக எல்லாம் புத்திமான்களால் அறியப்படக் கூடுமாகையால் எதற்காக ஆசார்ய ஸம்பந்தம் என்ற வினாவிற்கு மறுமாற்றமாகவும் இப்பாசுரம் பிறந்தது. அருளிச் செயல்கள் மூலம் அறிவிக்கும் ஆழ்வார்களே எம்பெருமானின் ஸம்பந்தத்தை விட்டு ஆசார்ய ஸம்பந்தத்தை முக்கியமாகக் கொண்டிருப்பதால் அவர்கள் திருவுள்ளப்படியும் அது அவசியமானதென்றதாயிற்று. அந்த ஆசார்ய ஸம்பந்தமும் பல படியாக ஆசார்யனை தேவனைப்போல் கொள்வதாலென்க **यथा देवे तथा गुरौ, देवमिवाचार्यमुपासीत** என்று தேவனைப் போல் ஆசார்யனை பக்தியுடன் உபாஸிக்க வேண்டுமென்கிறது. தேவனுக்கும் ஆசார்யனுக்கும் பல படிகளில் ஒத்திருக்கையுண்டு. **अज्ञानध्वान्तरोधात्** என்ற ந்யாஸவிம்சதி ச்லோகம் முதலானவற்றையும் அனுஸந்திக்க, இங்கே மதுரகவியாழ்வார் ஒருவாறு பத்துப் படியில் ஒத்துமையைக் காட்டியிருப்பதைக் கூறுகிறார் பகவத்ஸம்பந்தம் பெறுதற்குமுன்னாக ஆசார்ய ஸம்பந்தம் பெற வேண்டுமென்பதும் மதுரகவியாழ்வாரின் அனுஷ்ட்டானத்தினின்று தெளிவாகிறதென்றும் குறித்தருளுகிறார். இன்பத்தில் இத்யாதி.

பதினோரு பாசுரங்களான கண்ணிநுண்சிறுத்தாம்பில் பத்துப் பாசுரங்களாலே பத்துவிதமான ஸம்பந்தத்தைத் தமக்கும் ஆசார்யனுக்கும் காட்டுகிறார். ஜீவனுக்கு எம்பெருமான்விஷயத்திலுள்ள அம்சங்கள் முதல் ஐந்து; ஜீவர்கள்விஷயத்தில் எம்பெருமானின் செயல்கள் ஐந்து மேற்பாசுரங்களில், இந்தப் பத்து ஸம்பந்தங்களையும் எம்பெருமானைவிட்டு ஆசார்யனிடமே கொண்டார் மதுரகவிகள் இன்பம் = இங்கும் ஸுகப்படுகை. இறைஞ்சுதல் = சரணமாகக் கொள்கை, இசையும் பேறு = இஷ்டதமமான புருஷார்த்தம் இகழாத பல் உறவு = அழிக்கவாகாத பலவித பந்து ஸம்பந்தம் இராகம் மாறுதல் = வேறு விஷயத்தில் பற்றை விட்டு உரியவிடத்தில் கொள்வது. இவை ஜீவனுக்கு—சிஷ்யனுக்கு வேண்டுவன எம்பெருமானும் ஆசார்யனும் செய்பவை யாவை—தன்பற்று = தானாகவே ஜீவனை யன்புடன் பற்றுவது, வினைவிலக்கு—பாபங்களைப் போக்குகை, தகவோக்கம்—தயையின் வெள்ளம் (பெருக்கு). தத்துவத்தை யுணர்த்துவது = ஜ்ஞாநோத்பாதநம், தன்மையாக்கை = தனக்கு ஸமமாக்குகை என்ற ஐந்து. இப்பத்து அம்சங்களைப் பெறுவிக்கக் கூடியவனான அன்பர்க்கே—அன்பர்களை அனுக்ரஹிக்கவே

அவ்தாரம் செய்யும் ஆயன் = கோவலன் நிற்க. அவனை விலக்கப் போவ தில்லை, அவனுடைய ஸம்பந்தங்களே இவை. இவற்றைக் கொள்ள அவன் சித்தமாயிருக்கிறான். வேண்டாமென்ன வொண்ணாது அப்படி யிருந்தும் அங்கே அவற்றைக் கொள்ளாமல் நம்மாழ்வாரிடமே கொண்டார் மதுர கவிகள். நம்மாழ்வார் ஆயன்விஷயமாக அவற்றைக் கொண்டிருக்க, இவர் ஆழ்வார்விஷயமாகவே கொண்டார் எங்ஙனே என்னில்—பலபல கண் டுண்டு கேட்டுற்று மோந்தின்பம் பலபலவே ஞானமும் பாம்பணை மேலாற் கேயோ என்றார் நம்மாழ்வார். (2-5-6) 'தென்குருகூர் நம்பி யென்றக்கால் அண்ணிக்கும் அமுதூறும் என் நாவுக்கே' என்றார் இவர். இது இன்பம். இறைஞ்சுதல், திருவேங்கடத்தானே. புகலொன்றில்லாவடியேன் உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேன் என்றார் ஆழ்வார், இவர் மேவினேன் அவன் பொன்னடி மெய்ம்மையை என்றார். இசையும் பேறு, ஒழிவில் காலமெல்லாம் உடனாய் வழுவிலாவடிமை செய்ய வேண்டும் நாம் என்று அவருக்கு, குருகூர் நம்பிக்காள் உரியனாய் என்று இவருக்கு—உறவு, நன்மக்களும் மேலாத் தாய் தந்தையும் அவரே இனியாவாரே (5-1-8) என்றபடி அவருக்கு, அன்னையாய் அத்தனாய் என்னையாண்டிடும் தன்மையான் என்று இவருக்கு. இராகம் மாறுதல், முன்ன மாயங்களெல்லாம் முழு வேரரிந்து...என்னை உன் சின்ன மும் திருமூர்த்தியும் சிறந்தது என்றார் அவர். நம்பினேன்...மடவாரையும் முன்னெல்லாம். நம்பிக்கன்பனாய் என்றார் இவர் தன்பற்று என்னைத் தன்னாக்கி என்னால் தன்னை இந்த தமிழ்பாடிய வீசனை என்று அவர், தன் புகழேத்தவருளினான் என்றிவர். வினைவிலக்கு—செய்யார் வினைகள் தீர் மருந்தே, வேரிமாறாத பூமேலிருப்பாள் வினைதீர்க்குமே என்று அவர், பண்டை பலவினைப் பாற்றியருளினான் என்றிவர். தகவு—ஆழியானருள் வுருவானமைகின்றான் என்றார் அவர் இவரோ, ஆயிரம் இனி தமிழ் பாடினான் அருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே என்றார், தத்துவ முணர்த்தல் மயர்வற மதிநலமருளினன் யவனவன் என்று அவர், வேதத் தினுட் பொருள் நிற்கப் பாடி என்றிவர். தன்மையாக்குதல்—தன்மை பெறுத்தி மேவும் தன்மையாக்கினான் என்றவாறும், திருத்திப் பளரி கொள்வான்—குருகூர் நம்பி, என்றலாறுமாம்.

ஆயன் நிற்க என்பது தாளே கொண்டு என்றவிடத்தில் சேரும். ஆயன் இருந்தும், அவன் தாளை விட்டு, ஆழ்வார்தாளே கொண்டான் என்றபடி. ஆனால் தேவதாந்தரத்தைப் போலே ஆயனை விட்டாரா என்னில், அதற்காகவே, நிற்க என்றது நிற்க = நிற்கைக்காக. அந்த நிலையான ஸம்பந்தம் போகா. அவற்றைப் பெறுதல் ஆசார்ய ஸம்பந்தத் திற்குப் பிறகே யென்றபடி. நிற்க என்பதை தமிழ் செய்தான் என்ற

விடத்திலும் சேர்க்கலாம். ஆழ்வார் மறைகளைத் தமிழில் செய்ததால்தான் ஆயனுக்கு அந்தப் பத்து ஸம்பந்தங்களும் நின்றன, ஆயன் நிற்க வேணு மென்றே இவர் தமிழ் செய்தார். முன்னே நிற்காமை அம்மறைகள் அருமறையானதால் பொருள் அறியப்படமாட்டாதபடி யிருந்ததால். எளிய வடமொழியான கீதையைப் பாடிய ஆயனும் அவை நிலைநிற்கவில்லை யென்பதற்காக, மாயன் பெருமான் என்னுமல் **ஆயன்** என்றது. மதுர கவிகள் அவதரித்திருந்த காலத்தில் வடமதுரையில் ஆயன் இருந்தா னென்றும், ஆயினும் வடதேசயாத்திரை செய்யச் சென்ற மதுரகவிகள் முன்னதாகச் சென்று அவனது தாள் கொள்ளாமல் ஆசார்யஸம்பந்தம் பெறு மல் அவனைக் கொள்ள இசையாமல் திரும்பி வந்தாரென்றும் இங்கே தோன் றும் ஆழ்வாரின் காலம் தெளிந்து இதனையும் கொள்க. இனி, 'நிற்கப்பாடி என் நெஞ்சுள் நிறுத்தினன்' என்றவிடத்திற் போல. **वृणी हे च तत्राद्यौ** என்ற தற்கு சேஷம் ஆசார்ய ஸம்பந்தமென்பது தோற்ற, அன்பர்க்கே அவதரிக்கும் ஆயன் நிற்க = மனத்தில் நிற்கும்படி தமிழ்மறை செய்தவரான ஆழ்வாரின் என்ற பொருளாம். தமிழ் செய்தான் தாளே கொண்டு **துன்பற்ற,** ஆசார்ய மூலமான உபதேசம் பெறுதவரையில் துன்பு நீடித்திருந்தது சத்ருக்னன் பாகவதனை பரதனை யாச்ரயித்தாற் போலே கண்ணனை விட்டு ஆழ்வா ரைக் கொண்டதால் மதுரகவி அநகரானர் என்றதுமாம் துன்பு **अघम्.**

இப்படி தோன்ற = எல்லோரும் தெளியுமாறு, மதுரகவியால் காட்டும் = காட்டப்பட்ட, தொல்வழியே = ச்ருதி ஸ்ம்ருதி ஸம்மதமாய் பழமையான ஆசார்ய ஸம்பந்தமென்ற வழியே துணிவார்கட்கு = சாஸ்த்ர நம்பிக்கை யுள்ளவர்களுக்கு நல்வழிகள் = சிறந்த மோக்ஷமார்க்கங்கள். தொல்வழியான ஆசார்ய ஸம்பந்தம் காரணம்; அதன் பலன் பக்தி ப்ரபத்தி யென்ற மார்க்க ப்ராப்தி, அன்னமே ப்ராணன் என்றாற் போலே காரணகார்யங்களை ஒன்றாக்கிச் சொன்னதென்க. இனி, 'அவ்வழியே வந்தான்' என்றவிடத்திற் போலே தொல்வழியே = தொல்வழியாலேயே நல்வழிகளாம் என்றும் பொரு ளாம். முன் பொருளைக் கொண்டு தொல்வழியே நல்வழிகள் = ஆசார்ய ஸம்பந்தம் ஒன்று கொண்டாலே போதும்; மேல் வழிகள் இவன் செய்ய வேண்டா. எல்லாம் ஆசார்ய நிஷ்டையாலே ஸித்திக்கும் என்று **स्व सम्भवति वा नेति** என்கிற ச்லோகத்தைக் காட்டி ஸாரப்ரகாசிகையில் உரைத்தார். இன்பத்தில் என்கிற இப்பாசுரத்திற்கு நாம் கண்ணிநுண்சிறுத்தாம்பின் **ப்ரபந்தரக்ஷையில்** கூறிய விரிவையும் முண்டகோபநிஷத்து முதலான மூலப்ரமாணங்களுடன் காண்க.

ஆசார ப்ரமாணம் காட்டப் பெற்றது. விதிவாக்யத்தையும் காட்டி நிஷ்கர்ஷத்தை யறிவிக்கிறார் **पापिष्ठ** இத்யாதியால். மதுரகவி யனுஷ்டானத் தினலே ஆசார்ய ஸம்பந்தம் ஏற்பட்டாலும் அது சில அதிகாரிவிஷயத்

என்று ஆசார்யவத்தையே ஸர்வருக்கும் மோக்ஷகாரணமென்று அறுதியிட்

திலே யாகலாம், சிலருக்கு அதின்றியும் பலனுமென்கிற கேள்விக்கும் இது உத்தரமாகும். மஹாபாபியான க்ஷத்ரபந்துவும், புண்யமே செய்து வந்த புண்டரீகனும் ஆசார்ய ஸம்பந்தத்தினாலேயே முக்தரானார்கள். ஆகையால் ஆசார்ய ஸம்பந்தம் பெறவேண்டும். பாபத்திற்காக அஞ்சவேண்டா. ஆசார்ய ஸம்பந்தம் காக்கும். புண்யமுளதென்று ஆசார்ய ஸம்பந்தத்தை உபேக்ஷிக்கலாகாது என்றதாம். **அறுதியிட்டார்கள்** = முடிவு செய்தார்கள். மஹான் ஒருவனால் ப்ரபத்தி செய்யப்பட்டவனுக்குப் பின்னும் ஆசார்ய ஸம்பந்தமிராமலே மோக்ஷமுண்டே. யார் ஆசார்யன் என்னில், வித்யாஸம்பந்தம் பெறுவிப்பவன் ஆசார்யன். இவனுக்கு ப்ரபத்தி பண்ணியவரே இப்படி ஆசார்யராகலாம். மேலும் ஸாதாரணமான விஷ்ணுகடாக்ஷமே இப்பிறவியில் ஆசார்யஸம்பந்தம் பெறுவிப்பதாயிருக்க ப்ரபத்திமூலமான விசேஷகடாக்ஷம் பின்னே ப்ராயேண ஆசார்ய ஸம்பந்தம் பெறுவிக்கும். ஒருவன் அறிவு தரும் அந்த ஸம்பந்தத்தை மறுத்தானாகில் அவனுக்கு முன்னே ப்ரபத்திஸம்பந்தத்தை எம்பெருமான் இசைந்தானா என்பது விசாரிக்கப்பட வேண்டும். மேலே விரிவு. 'ஆசார்யவாந் பவேத்' என்பது "ஆசார்யவாந் புருஷோ वेद" என்கிற **சாந்தோக்ய** ஸத்வித்யா ச்ருதி வாக்யத்தைக் குறிக்கும். இதனால் தன் அறிவைக் கொண்டு மோக்ஷம் பெற முயல்பவனுக்கு ஆசார்ய ஸம்பந்தமே மோக்ஷ காரணமென்றதாம். யாருக்கும். ஒருவருடைய ஸம்பந்தமின்றி மோக்ஷமில்லை. க்ஷத்ரபந்து வரலாறு **விஷ்ணுதர்மத்**திலே 97வது அத்யாயத்தில் வரையப் பெற்றுள்ளது. இவன் கொடிய செயல்களால் பந்துக்களால் விடப்பட்டு வில்லும் கையுமாக வனத்தில் திரிந்து அவ்வழி போகின்றவர்களைக் கொலை செய்து ஜீவித்திருப்பவன் ஒருநாள் அவ்வழி மாமுனிவர் ஒருவர் தாகத்தினால் அங்கே ஒரு தடாகத்திலே யிழிந்து நீரிலே விழுந்துவிட அவரைக் கரையேற்றி உபசரித்தான். அவர் கிருபை கூர்ந்து கொலையினின்று விலக்கியும் இவன் கேளாமலிருக்க, முடிவாக கோவிந்த நாமோபதேசம் செய்து ஜபிக்க நியமித்தார் அதனால் இவன் பின்னே அந்தணர்குலத்திலே பிறந்து பூர்வஜன்ம ஸ்மரணத்தினாலே கோவிந்த பக்தனாகி மோக்ஷம் பெற்றான். இதனை விரிவாக, "மொய்த்த வல்வினையுள்" (திருமாலை, 5) என்கிற பாட்டில் நமது **ப்ரபந்த ரக்ஷையில்** பார்க்க. **क्षत्रबन्धुरिति ख्यातो राजा प्राणिविहिंसकः ।...चिन्तां चकार स मुनिः क्षत्रबन्धौ दयापरः** இத்யாதி. புண்டரீக விருத்தாந்தம் **பாத்மோத்தர** புராணத்திலே (6 81)ல், இதிஹாஸ ஸமுச்சயத்தில் 32ல். அத்யயனம் தர்மானுஷ்டானம் தீர்த்த யாத்ரை பக்தியனுஷ்டானம் எல்லாம் இருந்தும் பின்னே நாரத மஹர்ஷியுபதேசித்த திருவஷ்டாக்ஷரத்தைக் கொண்டே மோக்ஷம் பெற்றான். மஹாபாரதத்திலும் புண்டரீக விருத்தாந்தம் (**अनुशासन**.106.) உளது, அநிஷ்ட

டார்கள், முமுக்ஷுவுக்கு ஆசார்ய வம்சம் பகவானளவுஞ் செல்ல அநுஸந்திக்க வேண்டுமென்று ஓதப்பட்டது.

---

பலனை விளைவிக்கும் பாபங்களைப் போலே காம்யங்களான புண்யங்களும் மோக்ஷத்திற்கு விரோதியே. நிஷ்காம புண்யமும் ஆசார்ய ஸம்பந்த மூலமாகப் பெறும் ஞானத்தினால் தான் மோக்ஷத்திற்காம். பாடீஷ்டனான க்ஷத்ர பந்துவும் முனிவரை நிஷ்காமமாக உபசரித்ததாலே அம் முனிவரே ஆசார்யராகும்படி நேர்ந்தது. குருவின் ஸம்பந்தம் வேண்டுமென்பது ஸித்தித்தது.

குருபரம்பரானு ஸந்தானம் வேண்டுமென்பதற்கு ப்ரமாணமென் என்னில் **'स चाऽऽचार्यवंशो ज्ञेयोऽसावसाविति आभगवत्तः'** என்கிற ச்ருதி. இது அந்த ஆசார்ய பரம்பரையானது மேலே மேலே இன்னார் இன்னாரென்று பகவான்வரையில் விடாமல் அனுஸந்திக்கப் பெற வேண்டுமென்றது. இந்த வம்சம் பகவானைத் தொடங்கி தன் ஆசார்யன் வரையில் வந்திருப்பதால் வம்சம் உண்டான க்ரமத்திலே பரம்பரையை அனுஸந்திக்க வேண்டுமென்றால் **आभगवत्तः** என்பதற்கு பகவானைத் தொடங்கி என்ற பொருளாம். அப்போது **आभगवत्तः आचार्य-णामयमर्यमिति** என்று வாக்யம் ஸ்வரஸமாகும். மாற்றி **असावसौ** என்றதால் தன் ஆசார்யனைத் தொடங்கி பகவான் வரையிலென்றது ஸ்வரஸமாகும். தூரத்திலிருக்கும் வ்யக்தியை அஸௌ என்பது. உபநிஷத்தில் **ப்ருஹதாரண்யகத்தில்** பலவிடங்களில் இந்த க்ரமத்தையே கொண்டு முடிவில் ப்ரஹ்மத்தைக் கூறி, **तस्मै ब्रह्मणे नमः** என்று முடிப்பதையும் காண்கிறோம். எல்லாம் திருவுள்ளத்திற் கருதியே **'ஆசார்ய வம்சம் பகவானளவும் செல்ல அனுஸந்திக்க வேணும்'** என்றருளினபடி. **असौ असौ** என்றதால் ஒவ்வொரு திருநாமத்தையும் தனித்தனி ஸ்பஷ்டமாக அனுஸந்திக்க வேணுமென்றேற்படுவதால் தனித்தனியே தனியன்களையும் வழங்குவர். ச்ருதி வாக்யத்திலிருந்தும் இந்த ஸ்ரீஸூக்தியினின்றும் இந்த க்ரமமே தெளிவானாலும், இதற்கு ஓர் ஆசார்யரையும் விடாமல் அனுஸந்திக்க வேணுமென்பதிலே தாத்பர்யம் கொள்ளலாமே, அதுவன்றி பகவானின்று ஸ்வாசார்யர் வரையில் உற்பத்தி க்ரமத்திற்கிணங்க அனுஸந்தித்தால் தோஷமுண்டு என்றும் கருத்துக் கொள்வது தகாதென்னில், ஆம்; அக்கருத்து வேண்டா. ஸ்வரஸமான அர்தத்தின் படியே கொண்டால் முதற்பக்ஷமென்றிவ்வளவே தகும். மேலே ஆழ்வார் நாதமுனிகள் முதல் எம்பெருமானார்வரையிலாக வம்சோத்பத்திக்ரமத்தை யனுஸரித்த படி என்னென்னில், எம்பெருமானாரோடு நிறுத்திக் கொள்ளப் போவதால் அனுஸந்தான க்ரமமின்றி உத்பத்தி க்ரமத்தை யறிவிப்பதில் நோக்கானபடியால் அதே தகும் உபதேசம் உத்பத்தி க்ரமத்திலே. பிறகு அனுஸந்தானம் இந்த ச்ருதி ஸூக்திகளின் ஸ்வரஸப்படியிலே என்றதாயிற்று, நிற்க.

**"तमिमं सर्वसंपन्नमाचार्यं पितरं गुरुम्"** என்றும், **"ममाप्यखिललोकानां गुरुर्नारायणो गुरुः"** என்றும், **"त्वमेव बन्धुश्च गुरुस्त्वमेव"** என்றும், **"गुरुरसि गतिश्चासि जगताम्"** என்றும் சொல்லுகிறபடியே ஸர்வலோகத்துக்கும் பரமாசார்யனான ஸர்வேச்வரன்—(1)ப்ரஹ்மாவுக்கு அடியிலே வேதங்களைக் கொடுத்தும் அவற்றிற்கு அப்

---

மற்ற வகையிலே செய்த உபகாரங்களைவிடச் சிறப்பான உபகாரம் செய்ய எம்பெருமானே ஆசார்யரூபமாக அவதரித்திருப்பதால் ஆசார்யர்களுக்கு ஏற்றமென்றருளிச் செய்ய மேல் வாக்யமாகும் அதில் **तमिमम्** இத்யாதிகளை உதாஹரித்தது ஸர்வலோக பரமாசார்யத்வஸ்த்தாபனத்திற்காக, ஆகையால் சொல்லுகிறபடியே என்பதற்கு பரமாசார்யனான என்றவிடத்தில் அந்வயம், க்ருஷ்ண பகவானுக்கே அக்ரபூஜை செய்ய வேண்டுமென்பதை ஸ்த்தாபிக்க ராஜஸூய யாக ஸந்தர்ப்பத்திலே ஸஹதேவனின் சொல்லாகும் முதலில். **तम्** கீழ்க் கூறியபடியான, **इमम्** இங்கே வீற்றிருக்கிற, **सर्वसंपन्नम्** – திரண்டிருக்கும் தேவர்கள் ரிஷிக்கள் அந்தணர்கள் அரசர்கள்போன்ற மஹநீயர்களிடம் பூஜைக்குத் தக்கவாயிருக்கும் குணவிசேஷங்களெல்லாம் சேர்ந்து விளங்கப் பெற்ற. அல்லது **सर्वसंपन्नम्** எல்லோராலும் ஆசார்யனாகவும் பிதாவாகவும் குருவாகவும் ஆச்ரயிக்கப்பட்ட என்னலாம். ஸர்வாசார்யத்வம் இப்போது இந்த வாக்யத்தில் ஸ்பஷ்டமாகும். **आचार्यम्**— ப்ரஹ்ம வித்யை யுபதேசிப்பவனும். **गुरुपरम्परै** என்று பெயரிட்டு முதனின்று குருபதத்தினாலே மோக்ஷ வித்யாசார்யனை இங்கே சொல்லி வருவதாலும், . மேல் வசனங்களுக்கும் இணங்கவும் **गुरुं** ப்ரஹ்ம வித்யாசார்யனும், **आचार्यम्**— அனுஷ்டான ப்ரவர்த்தகனும் என்றூற் போலும் உரைக்கலாம், **पितरम्** எல்லோருக்கும் தந்தையுமானவனை. **भा**ரம் தாங்கமாட்டாத பூதேவி தேவர்களிடம் சொல்வது **ममापि** இத்யாதி ஸுவர்ணத்திற்கு அக்னி குரு, கோக்களுக்கு ஸூர்யன் குரு. ஸர்வலோக குருவான நாராயணன் எனக்கும் குருவென்றது. **'अग्नेरपत्यं प्रथमं सुवर्णं भूर्वैष्णवी सूर्यसुताश्च गावः' पद्मगर्भ भूमिः** என்கிற வசனப்படி **गुरुः** என்பதற்கு இங்கே காரணமென்று பொருள். அகிலலோக குருவென்றவிடத்திலே **गुरु**சப்தம் ஆசார்ய பரமாகலாம். **नारायणो गुरुः** என்றவிடத்திலே **अगुरुः** என்று பதப்பிரிவு ஸ்ரீவிஷ்ணுசித்தீயத்தில். **अगुरुः**= தனக்குக் காரணம் வேறில்லாத நாராயணன் எனக்கு குரு பூர்வார்த்தத்தினின்று **गुरु**பதத்திற்கு **अनुषंग**ம், மேலே **गान्धारीवाक्यम्** , 'நீரே பந்து, நீரே ஆசார்யன்'. மேலே ஆளவந்தார் அருளியது— 'உலகங்களுக்கு ஆசார்யனும், அடையும் இடமுமாகிறீர்' என்று இப்படி ஸர்வலோகாசார்யத்வம் சொல்லப்பெற்றது எல்லா குருபரம்பரையிலும் முதன்மையாயிருப்பதால் ஸர்வலோக பரமாசார்யன். பரோ மா யஸ்மாத் = எவனுக்கு மேலே ஓர் ஆசார்யன் இல்லையோ, அவன் பரமனென்னலுமாம். **सर्वेश्वर**ன் என்பதற்கு அவதரித்தருளினான் என்றவிடத்திலே அந்வயம். முடிவான கார்யம் ஆசார்யராக அவதரிக்கை. முதல் கார்யம். ப்ரஹ்மாவுக்கு

ஹாரம் பிறந்தபோது மீட்டுக்கொடுத்தும் இவன்முகமாக சாஸ்த்ரங்களை ப்ரவர்த்திப்பித்தும், (2)இவன் புத்ரர்களான ஸநத்குமாராதிகளை, "**स्वयमागतविज्ञाना निवृत्तिं धर्ममास्थिताः**" என்னும்படி பண்ணி, அவர்கள் முகங்களாலே ஹிதப்ரவர்த்தனம் பண்ணுவித்தும், (3)இப்படியே மற்றும் நாரத பராசர சுக சௌனகாதிகளான பல மஹர்ஷிகளை யிட்டு **अध्यात्म**ஸம்ப்ரதாயம் குலையாதபடி நடத்தியும்

(4) "**कृष्णद्वैपायनं व्यासं विद्धि नारायणं प्रभुम् । को ह्यन्यो भुवि मैत्रेय! महाभारतकृद्भवेत्? ॥**"

---

உபதேசிக்கை கொடுத்தும் இத்யாதி உம்மைகள் இப்படிப்ரவர்த்திப்பித்த என்றவிடத்தில் சேரும் முதலிரண்டு உம்மைகள், 'சாஸ்த்ரங்களை ப்ரவர்த்திப்பித்து என்றவிடத்தில் சேர்வதுமாம் ரஜஸ்தமோகுணங்கள் மதுகைடபராக வேதாபஹாரம் பிறந்தது ஹயக்ரீவன் மீட்டு அவர்களையும் ஒழித்தார். உம்மைகளால் ஸமுச்சயம் கூறட்பெறும். இனி இவற்றையெல்லாம் செய்தும் = செய்திருந்த போதிலும் முழுப்பயன் பெருமையாலே பரமத நிரஸநாதி பலனுக்காக நமது ஆசார்யபரம்பராரூபமாக அவதரித்தருளினன் என்ற பொருளுமாம். இந்த ஆசார்யர்களே முதலில் **गुरुभ्यः** என்ற ச்லோகத்தால் குறிக்கப் பெற்றவராவர். நமது குருபரம்பராமூலமான உபகாரத்திற்கு முன்னுன உபகாரங்களை **ब्रह्मा**வுக்கு இத்யாதியால். ஸங்க்ரஹிக்கிருர். புத்ரமூலம் ஸர்வவித்யா ப்ரவர்த்தனம், சிறந்த பௌத்ரர் மூலம் நிவ்ருத்தி தர்மப்ரவர்த்தனம், மஹர்ஷிகள் மூலம் உபநிஷதர்த்த ப்ரவர்த்தனம். அனுப்ரவேசாவதாரமான வியாஸாதிகள் மூலம் ஸாமாந்ய விசேஷ ஸர்வதர்மப்ரவர்த்தனம், ஸாக்ஷாத் அப்ராக்ருத ரூபாவதாரங்கள் மூலம் தத்துவஹிதப்ரவர்த்தனம், **श्रीमान्:प्रेरण**ம் பாஞ்சராத்ரத்தைக்கொண்டும் தர்மத்தை ஸ்த்தாபித்தல். அபிநவ தசாவதாரத்தாலே ரஸாஸ்வாதம் செய்வித்தல். என்பவையாம் இவை. வியாஸருக்கு முன்னே சுகாதிகளைச் சொன்னதாலும், ஹம்ஸாதிகளுக்குப் பின்னே ஹயக்ரீவாவதாரத்தைக் குறித்திருப்பதாலும் இவ்வாக்யத்தில் க்ரமம் விவக்ஷிதமன்று, உபகார வகைகளிலுள்ள வேறுபாடு மட்டும் குறித்ததாம். **அடியிலே** = ஸ்ருஷ்டியின் தொடக்கத்திலே. அபஹாரம்—மதுகைடபர்களென்ற அசுரர்கள் செய்தது, ஸநகாதிகள் **ஸ்வயம்**— தாமாகவே, பிறந்த பிறகு உபதேசத்தை எதிர்பாராமலே வந்த விஜ்ஞாநமுடையவர் ப்ரவர்த்திதர்மமென்ற காம்யங்களை விட்டு, நிவ்ருத்திதர்மமென்ற மோக்ஷோபாயத்திலே ஆஸ்த்தையுடையவர். அவர்கள்முகங்களாலே = அவர்கள் மூலமாக, **अध्यात्मसंप्रदाय**ம் ஜீவாத்ம பரமாத்ம விஷயமான உபதேச க்ரமம். குலையாதபடி = அழியாதபடி, மைத்ரேயரே! **कृष्णद्वैपायनम्**— கிருஷ்ணரென்ற திருநாமமுடையரும், பதரிகாமிச்ரே = இலந்தத் தோப்பான த்வீபத்திலே தோன்றியவருமான வ்யாஸரை ப்ரபுவான நாராயணனென்றறிவீராக. நாராயணன் நீங்கலாக புவியிலிருப்பவர் யார்தாம் மஹாபாரதம் எழுத

என்றும், महर्षेः कीर्तनात् तस्य भीष्मः प्राञ्जलिरब्रवीत्" என்றும் சொல்லுகிறபடி நிற்கிற வ்யாஸாதிகளை அநுப்ரவேசித்து மஹாபாரத சாரீரகாதிகளை ப்ரவர்த்திப்பித்தும், (5)ஹம்ஸ மத்ஸ்ய ஹயக்ரீவ நரநாராயண கீதாசார்யாத்யவதாரங்களாலே தானே வெளிநின்று தத்துவ ஹிதபுருஷார்த்தங்களை ப்ரகாசிப்பித்தும், (6)தான் அருளிச் செய்த அர்த்தங்களை எல்லாம் ஸ்ரீ பீஷ்மர் முதலான ஞானாதிகரை யிட்டு மூதலிப்பித்தும்.

---

வல்லவராவர். வ்யாஸமஹர்ஷியின் கீர்த்தநாத் = எதிரிலிராமல் ப்ரஸ்தாவம் மட்டும் வந்தபோதும் प्राञ्जलिः-சௌரவத்தால் அஞ்ஜலிபந்தம் செய்துகொண்டு பீஷ்மர் பேசினர். என்னும்படி நிற்கிற = என்றெல்லாம் புகழும்படி விளங்கிய. शारीरकम्= ப்ரஹ்மஸூத்ரம். ஹம்ஸாவதாரம் ஸநகாதிகளுக்காகப் பிரமன் ப்ரார்த்தித்த போது ஸ்ரீபாகவதத்திற் பணித்தபடி (11-13) ஜீவ பர. விசிஷ்டாத்வைதோபதேசத்திற்காக. மத்ஸ்யாவதாரத்தில் வேதரக்ஷணமும் வைவஸ்தமநுஸ்த்தாபநமும் ஹயக்ரீவாவதாரத்தில் மதுகைடபரை யழித்து பிரமனுக்கு விடரீத ஞானத்தைப் போக்கியது போல் மீண்டும் செய்தது தேவதைகளுக்கு அதிகாரதானமும் பரமைகாந்திதர்மோபதேசம்மும் (திருநாரயணீயம்) நரநாராயணர்கள் விசேஷித்துத் திருவஷ்டாக்ஷரம் அதன் பொருள் அனுஷ்டானமெல்லாம் ப்ரகாசிப்பித்தவர்கள். நரன் தனியாக ப்ரகாசிப்பித்த அம்சமும் சில இருக்கலாம் ஒன்றுமில்லையாகிலும் நாராயண பதத்தாலே ப்ரளய ஜலத்தில் ஆதிசேஷனில் பள்ளிகொண்ட நாராயணனைக் கொள்ளாமல் பதரிகாச்ரம நாராயணனைக் சொள்வது தெளிவாவதற்காக நரநாராயண என்றது அல்லது நர என்ற சொல்லால் तैर्युक्तः श्रूयतां नरः என்றபடி மனுஷ்யாபிநயமே செய்த ராமபிரானைக் கொள்வதுமாம். அவர் பரதனுக்குச் சித்ரகூடத்திலும் வாநரங்களுக்குக் கடற்கரையிலும் ஹிதோபதேசம் செய்தது ப்ரஸித்தம். वैदेहीसहितं सुरद्रुमतले हैमे महामण्डपे मध्येपुष्पकमासने मणिमये वीरासने सुस्थितम्। अग्रे वाचयति प्रभञ्जनसुते तत्त्वं मुनिभ्यः परं व्याख्यान्तं भरतादिभिः परिवृतं रामं भजे श्यामलम् என்றபடியும் ஸ்ரீராமபிரான் உபதேசகர். கீதாசார்யன் 'ஸ்ரீகிருஷ்ணன், தானே வெளிநின்று = அநுப்ரவேசாவதாரமின்றி ஸாக்ஷாத்தாக அப்ராக்ருத ரூபத்தோடே தோன்றி மூதலிப்பித்து = ப்ராமாணிகமாக நிரூபிக்கச் செய்து, எதற்காக மூதலிப்பிக்க வேண்டுமென்னில், பகவான் நேராக நானே தேவதேவன், நானே ஸர்வகாரணம், நானே ப்ராப்யன் என்றவாறு தன்னைப் புகழ்ந்தால், இப்படி ஒவ்வொருவரும் ஸ்வாபிமானத்தாலே பேசுவாரென்றெண்ணி கேட்பவர் உபேக்ஷிப்பரென்று कृष्ण एव हि लोकानामुत्पत्तिरपि चाव्ययः। कृष्णस्य च कृते सर्वम् என்று மூதலிப்பவரையும் அபேக்ஷிப்பதாம். அதனாலேயே கீதாசார்யன் उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्वदर्शिनः என்று பிறர் உபதேசத்தையும் கேட்கத் தூண்டியது. இவ்வளவு ஸாங்கோபாங்கமான வேதம் ப்ரசாரத்தில் இருந்தும், அர்ச்சா பர்யந்தமான எம்பெரு

(7("पञ्चरात्रस्य कृत्स्नस्य वक्ता नारायणस्स्वयम्" என்கிறபடியே அடியிலே தான் அருளிச்செய்த பாஞ்சராத்ரத்தை "ब्राह्मणैः क्षत्रियैर्वैश्यैश्शूद्रैश्च कृतलक्षणैः। अर्चनीयश्च सेव्यश्च नित्ययुक्तैः स्वकर्मसु॥ सात्वतं विधिमास्थाय गीतस्सङ्कर्षणेन यः। द्वापरस्य युगस्यान्ते आदौ कलियुगस्य च॥" என்கிறபடியே அவஸரங்களிலே ஆவிஷ்கரித்தும்.

---

மானுடைய ஸௌலப்ய ஸௌசீல்யாதிகள் ப்ரகாசியாமற் போனதாலும் பக்தியின் அபிவிருத்திக்கு வேண்டுமான, मत्कर्मपरमो भव (12)என்று கீதையிற் கூறிய அர்த்த விசேஷத்தைத் தெளிவாக அறியாமலிருந்ததாலும் குறை காணலாயிற்று. பிறகு அடியிலே ஸ்ருஷ்டியின் தொடக்கத்திலேயே எம்பெருமானே திருவாய்மலர்ந்தருளியதாகும் ஸ்ரீபஞ்சராத்ரம். அதனால், वेदेषु निष्ठामलभमानः शाण्डिल्यः पञ्चरात्रमधीतवान् என்றபடி பலர் தெளிந்தனர். அதன் ப்ரசாரத்தைக் கூறுகிறார் पञ्चरात्रस्येति. कृत्स्नस्य—ஸமஸ்தமான—மூன்றுமான என்றபடி. பஞ்சராத்ர க்ரந்தங்கள் 'ரத்ன த்ரயம்' என்று ப்ரஸித்தமாகும் மூன்று க்ரந்தங்களாவன ஸாத்வதம், பௌஷ்கரம் ஜயாக்யம் என்றவை. அம்மூன்றையும் வேத ப்ரவசனத்தை ஆதியில் செய்துவைத்த நாராயணனே स्वयं वक्ता தானே நேராகச் சொன்னவன். ஸாங்க்யாதி சாஸ்த்ரங்களைப் போலே சில ரிஷிகள்மூலம் சொன்னானென்பதில்லை. இவன் சொன்னவற்றை மூதலிப்பிக்க இவனாலே ப்ரேரிதராய் தேவதைகள் ரிஷிகள் போன்றவரும் பல பாஞ்சராத்ர க்ரந்தங்களை யியற்றினர். நூற்றெட்டு பாஞ்சராத்ரக்ரந்தங்களின் பெயர்கள் விஷ்ணு தந்த்ரத்திலே, अष्टोत्तरसहस्राणि अष्टोत्तरशतानि च। पञ्चरात्राणि तन्त्राणि सन्ति मे कमलोद्भव என்றும் விஷ்ணுவின் வாக்யம். க்ருதாதி யுகங்களில் இருந்து மறைந்த இதற்குக் கலியுகாரம்பத்திலே கீதாசாரீரகாதி மூலம் ஸத்தர்ம ப்ரசாரகாலத்திலே ப்ரசாரம் ஆவச்யகமாயிற்றென்கிறார் ब्राह्मणैरिति. द्वापरस्य युगस्य த்வாபர யுகத்தின் अन्ते முடிவும் कलियुगस्य आदौ च கலியுகத்தின் தொடக்கமுமான ஸந்திகாலத்திலே. यः எந்த ஸாத்வத விதியானது संकर्षणेन = ஸங்கர்ஷண ரூபியான பகவானால் गीतः—உபதேசிக்கப் பெற்றதோ, அந்த, सात्वतं विधिं—ஸாத்வத முறையை—பஞ்சராத்ர முறையை, आस्थाय—ஆதரித்து, அதில் நிஷ்டை கொண்டு, कृतलक्षणैः சங்கசக்ரதாரணம் முதலான ஸ்ரீவைஷ்ணவ சின்னங்களை யணிந்தவராய் स्वकर्मसु—தம் வர்ணாச்ரம தர்மங்களிலே नित्ययुक्तैः எப்போதும் நிலைத்தவருமான, ப்ராம்மண க்ஷத்ரிய வைச்ய சூத்ரர்களான நான்கு வர்ணத்தவராலும் அவரவர்களுக்குச் சொல்லப்பட்ட தனித்தனி வழியாலே பகவான் अर्चनीयः च ஆராதிக்கப்பட வேண்டியவனும், सेव्यः च பஜனம் பண்ணப்பட வேண்டியவனுமாவான். முழு பாஞ்சராத்ராதிகாரிகளைப் போல்வேதமூலமான வர்ணாச்ரம தர்மத்திலே நிஷ்ட்டையுடையரும் பாஞ்சராத்ரப்படி பஞ்ச ஸம்ஸ்காரம் செய்துகொண்டு பகவதாராதனம் ஸேவை கைங்கர்யம் செய்யவாமென்றபடி. सात्वतमென்று மூன்று

(8)"पूर्वोत्पन्नेषु भूतेषु तेषु तेषु कलौ प्रभुः । अनुप्रविश्य कुरुते यत् समीहितमच्युतः" என்கிற

---

க்ரந்த ரத்னத்தில் ஒன்றுக்கு முக்கியமான பெயருமாகும் பொதுவாகப் பஞ்சராத்ரத்தைச் சொல்வதுமாம் सत्त्वः ப்ரஹ்மவித்துக்கள் அவர்களையுடையவன் सत्वान् பகவான் அவர்களாலாராதிக்கப்படுமவன் விஷயமான சாஸ்த்ரம் ஸாத்வதம். அவனை பஜிக்கிறவர்கள் ஸாத்வதர்கள், "ततश्च सत्वान् भगवान् भज्यते यैर्नरैः पुमान् । ते सात्वता भागवता इत्युच्यन्ते द्विजोत्तमाः என்று ஆகமப்ராமாண்யத்திலே भागवत பரமான सात्वत பதத்தின் வ்யாக்யானம் காண்க. सत् ப்ரஹ்மம் அதனையுடையவர் सत्वन्तः பாகவதர். सत्वन्त एव सात्वताः: அவர்களின் சாஸ்த்ரம் सात्वत மென்பதுமாம். இந்த ஸாத்வத சாஸ்த்ரத்தை அதிகரித்தவர்கள் ஸாத்வதர்கள் என்று सात्वतांपतिः என்றவிடத்தில் ஸ்ரீபட்டரின் ஸஹஸ்ர நாம பாஷ்யத்தில் பொருள் கூறப்பெற்றது தானே நேராக அவதரித்து வைதிகவிதிகளுடன் வேதார்த்த ப்ரசாரத்தையும் பாஞ்சராத்ர ப்ரசாரத்தையும் செய்தானென்று சொல்லியாயிற்று. இனி முன் செய்த ஆவேசாவதாரங்களுக்கு மேலாய் நேரான அவதாரமாகாத அபிநவதசாவதாரத்தாலே தேசபாஷா மூலமான ப்ரசாரமும் செய்தானென்கிறார் पूर्वोत्प. भूताश्च தேஹத்தோடு சேர்ந்திருக்கும் ஆத்மாவைச் சொல்வது. भूतानि प्राणिनः श्रेष्ठाः, इमानि भूतानि जायन्ते என்றபடி. பகவானையும் महतो भूतस्य என்று உபநிஷத்து ஓதுகிறது ப்ரபுவான அச்யுதன் கலியில் முன்னமே பிறந்துள்ள பிராணிகளில் சிற்சில விடங்களில் அநுப்ரவேசம் செய்து தனக்கு எது இஷ்டமோ அதைச் செய்து கொள்கிறான் என்றதாம் நேராக அப்ராக்ருத சரீரத்துடன் அவதரிப்பது போல் வேறு ஜீவன்களிலும் அநுப்ரவேசம் உண்டென்பது எல்லா யுகத்திலுமிருப்பதே இங்கே கலியில் என்று குறிப்பிட்டிருப்பதால் कलौ खलु भविष्यन्ति என்ற வாக்யத்திற்குச் சேர விசேஷாவதாரத்தைக் குறிக்கலாமாகையால் ஆழ்வார்கள்விஷயமும் மற்றும் அப்படிப்பட்டவர்விஷயமுமாகலாம். முன்னே அவர்கள் பிறந்திருப்பது வேறு கார்யத்திற்காக. பத்த ஜீவர்களாகில் தந்தம் கர்ம பலனை யனுபவிப்பதற்காக ஸூரிகளின் அவதாரமாய் வந்தவராகில், स्वप्न-ष्ष्यानुसंधानन् என்றபடி பகவானுக்குச் சில தொண்டுகள் செய்வதற்காக என்று கொள்ள வேண்டும். ஆழ்வார்கள் பதத ஜீவர்களா ஸூரிகளா என்ற விசாரமுண்டு 'सादिभक्तास्तु अनन्तगरुड़श्रीनामिण्ड वनात मेरा: इति पुराणप्रसङ्ग என்று சததூஷணியில் श्लोकसमर्थनात्தில் அருளிச் செய்திருப்பதால் ஸூரிகளின் அவதாரமென்பது ப்ராமாணிகம். ஸூரிகளாயிருந்து பத்தர்கள் போலே அபிநயம் செய்கிறார்களென்க எனவே இது அபிநவமானதசாவதாரம். முன் தசாவதாரத்தில் ஸாக்ஷாத் அவதாரமே பெரும்பாலும் பரசுராமாவதாரம் பத்த ஜீவாவதாரம் பலராமன் ஸூரியான ஆதிசேஷனிடத்தில் அவதாரம். இங்கே பத்து அவதாரமும் ஆவேசாவதாரமே கடல்வண்ணன்

படியே பராங்குச பரகாலாதி ரூபத்தாலே अभिनवமாக ஒரு दशावतारम् பண்ணி, மேகங்கள் ஸமுத்ரஜலத்தை வாங்கி ஸர்வோபஜீவ்யமான தண்ணீராக உமிழுமா போலே वेदार्थங்களில் வேண்டும் ஸாரதமாம்சத்தை ஸர்வ

---

பூதங்கள் மண்மேல் என்ற பாசுரத்தில் முன்பின் பதங்களின் சேர்த்தியாலே भूतபதம் முக்தர்கள்விஷயமாகக் கொள்ளப்பட்டதே. ஆக. தேசபாஷை மூலம் அத்யாத்ம சாஸ்த்ர ப்ரசாரத்திற்காகவே, பாஷை வேருயினும் விஷய கௌரவத்தாலும் விஷயத்தை எடுத்துக் கூறும் வைகரியாலும் முக்கிய பாஷையைவிட மேன்மை யுண்டாகுமென்று, अभिनवமான பத்து அவதாரமாய் பராங்குசாதிகளான பத்து ஆழ்வார்களாளுனென்றபடி. **பராங்குசர்**—நம்மாழ்வார், **பரகாலர்**—திருமங்கையாழ்வார். இவர்களை இப் பெயர்களை யிட்டுக் கூறியது பரமத நிரஸனமென்ற ஆசார்ய கார்ய நிறைவைக் காட்டவாம். मेघங்களித்யாதி. கடல் நீரே மேகம் உட்கொண்டு பெய்யும்போது மதுரமாகிறது. அதுபோல் வடமொழிமறைகளிலும் மற்ற புராணுதிகளிலும் பேசப் பெற்ற தத்துவஹித புருஷார்த்தங்களே தமிழ்ப் பாட்டுக்களால் தெரிவிக்கப்படும்போது மிகவும் போக்யமாகின்றன, இலகுவில் பொருள் கொள்ளப்படவாகாத சொற்களினின்று தெளியப் புகும்போது பிரயாசை யேற்படுவதால் போக்யதை குறையும். சொற்களைக் கேட்கும் போதே பொருள்கள் தெளியப் பெற்ருல் போக்யதை அதிகமாம். பொருளின் போக்யதையைக் கொண்டு தானே சொற்களும் போக்யமாகும். அத்துடன் இசையும் சேர்ந்து பக்தி பரிவாஹமாளுல் போக்யதை மிக்கதாகும். மேலும் வடமொழியைச் சிலரே அப்யஸிப்பர், தென்மொழி ஸர்வரும் கற்பதாகும் கேட்பவரெல்லோரும் ரஸித்தால் கூடியிருந்து குளிர்ந்து களிக்கலாம். இதனுல் ஸம்ப்ரதாய ப்ரசாரம் அதிகமாகிறது. कलौ प्रभुः என்றதினின்று ஒவ்வொரு கலியிலும் இந்த ப்ரசாரம் உண்டென்றும் தோற்றும். இதையும் இங்கே அருளிச் செய்த மேகத்ருஷ்டாந்தத்தையும் கவனித்த போது (திருவாய். 2-1-5) "ஊழிதோறூழி யுலகுக்கு நீர் கொண்டு, தோழியரும் யாமும் போல் நீராய் நெகிழ்கின்ற, வாழிய வானமே! நீயும் மதுசூதன், பாழிமையிற் பட்டு அவன்கண் பாசத்தால் நைவாயே" என்ற பாசுரத்தில் பராங்குச நாயகியும் தோழிகளும் பெருமாளுடைய பெருமையிலீடுபட்டுப் பிரிவாற்ருமையால் உலகத்தையே உட்கொள்ளுமளவுக்குக் கண்ணீரைப் பெருக்குகின்றது போல் மேகம் அவனிடம் பாசத்தால் நீரைப் பெய்கின்றது போலும் என்ற பொருளுடன், நம்மாழ்வார் தம் தோழிகளாக பாவிக்கப்பட்ட மற்ற ஆழ்வார்களுடன் கல்பந்தோறும் மேகம் போலே மதுரமாக உலகின் க்ஷேமத்திற்காகப் பெய்வது—அதாவது அருளிச்செயல்களை பிர்சாரம் செய்வது தோற்றுமென்று ஸ்ரீதேசிகன் தெரிவிக்கிருரென்னலாம். ஆழ்வார்களில் नायिकाभावातिशयங்களாலே பராங்குச பரகாலர்களுக்கு ப்ராதான்யம்.

ருக்கும் அதிகாரிககலான பாஷையாலே ஸங்க்ரஹிததுககாட்டியும,

(9)இப்படி தான் ப்ரவர்த்திபபித்த मत्पथத்துககு प्रकटராயும் प्रच्छन्नராயு மிருந்துள்ள பாஷண்டிகளால் उपरोधம் வாராமைக்காக "साक्षान्नारायणो देवः कृत्वा मर्त्यमयीं तनुम्। मग्नान् उद्धरते लोकान् कारुण्याच्छास्त्रपाणिना॥" எனறும்.

---

सारतमांशத்தை—अर्थपञ्चकம் போன்றதை

பக்தர்களை வசீகரிகக இவ்வளவே போதுமாயினும, ததது்வ விசாரத்தி லிழிந்து பிறமதங்களை யாராய்ந்து, வாதப்போா செய்பவரை யடக்குவதற்கு. பரமத நிராஸத்தில் தீாநத ஆசார்யர்களே வேணடும் இதிலலையேல ஸாது ஜனஙகளும் சிதைவர் என்று அதனை அருளிச்செய்கிறா இபபடி யித்யாதி யால் 'அடியிலே வேதஙகளைக கொடுத்தும்' எனறது முதல் காட்டியும் என்ற வரையிற் சொன்னவற்றை யெலலாம் இபபடியென்று அநுவதிக்கிறா பாஷ ண்டிகள என்பதற்கு पाखण्डाः-प्रमाणखण्डिताः எனற பொருள் த்யாய நஸ்மாஞ் ஜலியில கூறபபெறறது வேதப்ரமாணபபடி நடககாதவரெல்லோரும் பாஷண்டிகளே அவர்கள் பாஹ்யர்களும் குத்ருஷ்டிகளும், அவர்களில், ये तु सामान्यभावेन मन्यन्ते पुरुषोत्तमम् எனறபடி நாராயணனை மற்றவரோடு ஸமமாக நினைப்பவரும் சேர்நதவர் प्रकटराய் = பஹிரஙகமாய் பாஷணடிகளாவா சார்வாக பௌத்த ஜைநாதிகள் நாராயணனை நீசப்படுததிகிறவாகள் ப்ரபல பாஷண்டிகள் வைதிகவேஷத்தாலே தம்மை மறைதது அவைதிக பௌத்த மதத்தையே பின்பறறிய அதவைதிகள்முதலானோர் ப்ரச்சன்ன பௌததராவர், சைவர்களிலும பரகடசைவர்கள், ப்ரசசனனசைவர்களென்ற பிரிவுணடு ப்ரசசன்னசைவர் அத்வைதியாகச சொல்லிக கொண்டே சைவ ராயிருப்பவர் இப் பாஷண்டிகளின மதஙகளை நிரஸித்தால் தான வாஸ்தவ ஸித்தாந்தம் வளருமெனறு முடிவு செய்து ஆசார்யாவதாரங்களைச செய்ய முன் வந்தான் ஸர்வேச்வரன कारुण्यात्—கிருபையினால் देवः உலக ஸ்ருஷடி முதலானவற்றைச் செய்யும் நாராயணன், मर्त्यमयीं तनुं कृत्वा மானிட வுருக கொணடு, मग्नान् लोकान् மூழ்கின பராணிகளை शास्त्रपाणिना—சாஸதரமென் னும் கையை நீட்டி साक्षात् उद्धरते நேராகவே தூக்கிக காககிறான், மானிட சரீரமாயினும் ஆசார்யரிடம் ईश्वரன பிறமதநிரஸநததிறகாகத்தானே நேரிற புகுவதாகுமென்றபடி அநுபரவேசததாலான அபிநவ தசாவதாரமான ஆழ்வார்களைவிட, 'साक्षान्नारायणो देवः' என்றபடி ஸாக்ஷாத் அவதாரமாகை யால் ஆசாாயர்களுககு ஏறற மென்று சிலர் சொல்லுவா, இதனை யாராய வேண்டும், ஆசார்யன் ஸாக்ஷாத நாராயணனாகில எல்லோருககும் பகவா னே நேராக ஆசார்யனாய்விட்டதால் குருபரம்பரா நுஸநதானமே வேண்டாமாகும, ராமகருஷ்ணாதிகளிடததிற போலே அவரிடமே சரணா கதி செய்யவாம் அவரே மோக்ஷமளிககலாம் ஆழ்வாாகளும் அவாகளு டைய விபவகாலத்தில் பலருககு ஆசார்யராயிருநத படியால ஸாக்ஷாத

''பீதகவாடைப் பிரானுர் பிரமகுருவாகி வந்து' என்றும் சொல்லுகிறபடியே அகஸ்த்யஸேவிதமானதேசத்திலே அனேக தேசிகாபதேசத்தாலே அவதரித்

---

நாராயணனேயாவதால் அவ் வாசியுமில்லை. எல்லா ஆசார்யர்களும் நாராயணனுனபின்பு ப்ரக்ருதி மண்டலத்திலே பகவானின் விபவாவதாரமே பெரும்பாலுமென்று ஜீவர்கள் மோக்ஷம் போகிருர்களென்பது குறையும். ப்ரத்யக்ஷவிருத்தமாய் ஸர்வஜ்ஞத்வாதிகளும் ப்ரஸங்கிக்கும். ஆசார்யாராதனமே போதுமாய் நித்யகர்மானுஷ்டானங்களிலும் ஆசார்யனையே ஆராத்யனுக பாவிப்பதாம், பகவந்நாமோச்சாரணத்தை விட்டு ஆசார்யநாமோச்சாரணமே எதற்கும் செய்வதாய் மிகவும் க்ஷேபமாம். வேதமும் यथा देवे तथा गुरौ என்று தேவனை உபமானமாக்கி ஆசார்யரிடம் குறையாத பக்தி பண்ணவே சொல்லுகிறது. ஸாக்ஷாத் என்கிற ச்லோகம் இந்த பாவனையை ருபகந்யாயமாகத் திடப்படுத்துகிறது. சிலர் ஆசார்யனை பகவானைவிட மேலாகவும் பாவிக்கவாம். உண்மையில் பகவானே ஆசார்யனுகச் சிலவிடத்தில் அவதரித்திருந்தாலும் அது நிர்விவாதமாக உலகில் அறியப்படாதிருக்கும் போது, அவ்வாசார்யனும், ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति । तमेव शरणं गच्छ என்றுற் போலே உபதேசிப்பதே தகும், 'என்னைச் சரணமாகக் கொள்' என்று உபதேசிப்பது உசிதமாகாது. ஆசார்யர்கள் எல்லோரும் நாராயணனுகில் அவர் வர்ணுச்ரமாதிகளும் அப்போது பொய்யாகும். சிஷ்யர்களும் தங்களைத் திருமங்கையாழ்வாரைப் போலவே ஸாக்ஷாத் நாராயண சிஷ்யர்களாக நினைக்கலாகாது. உண்மை எதுவாயினும் ஆசார்யனை எம்பெருமானுக்கு ஸமமாகவோ, எம்பெருமானுகவேயோ அனுஸந்திப்பதை திடமாகக் கொள்வது அவரிடம் பக்தி பெருகுவதற்காகவென்க. பீதகம ஆடை—பீதாம்பரம் அணிந்த பிரானுர்—உபகாரம் செய்யும் பகவானே பிரமகுரு=ப்ரஹ்மகுரு ஆகி-ப்ரஹ்ம வித்யையை யுபதேசிக்கும் ஆசார்யனுய் வந்து அவதரித்து. முன்னே பீதாம்பரனுய் உபகரித்துப் பின்னே ஆசார்யனுகி அஜ்ஞாநாதிகள் போக்கி மீண்டும் சுயருபத்திலே நெஞ்சில் நிலைத்தான். இவ்வுடல் அவன் பட்டணம். தென்தேசத்திலேயே அவதரித்ததற்குக் காரணம் கூறுகிருர் अगस्त्यसेवितமான தேசத்திலே என்று. ஸேவிதமான—அடையப்பெற்ற. மதப்ரசாரமிராதவிடத்தில் அந்தணரையும் உட்படுத்தி வேறு பாஷையில் மதப்ரசாரம் செய்ய நினைத்த எம்பெருமான் மற்ற பாஷைகளைவிட தமிழை யாதரித்தான். அதற்குக் காரணம் அகஸ்த்ய மஹர்ஷி தென்தேசம் வந்தவராய் அந்த பாஷையை சுத்தமாக்கி இலக்கணம் அமைத்ததே பாகவதர் ஆதரித்த பாஷையில் ஆழ்வார்கள் அருளிச் செயல்களும் எழுந்தன. உபயவேதாந்த ப்ரவர்த்தகரான அகஸ்த்யர் திருவுள்ளம் உவக்க உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்யர்கள் உலகில் தோன்ற வேண்டுமென்று அவன் திருவுள்ளமாம். अगस्त्यसेवितமான தேசத்திலே

த்ருளினான். இத்தைக் கணிசித்து. "कलौ खलु भविष्यन्ति नारायणपरायणाः । क्वचित्क्वचिन्महाभागा द्रमिडेषु च भूरिशः ॥ ताम्रपर्णी नदी यत्र कृतमाला पयस्विनी । कावेरी च महाभागा प्रतीची च महानदी ॥" என்று மஹர்ஷி அருளிச்செய்தான்.

இவ்வாசார்யர்களில், ஈச்வரமுனிகள் பிள்ளை(1) நாதமுனிகள். இவர் ந்யாயதத்துவமென்கிற சாஸ்த்ரமும் யோக ரஹஸ்யமும் அருளிச்செய்தார்.

---

என்பதை 'அபிநவமாக ஒரு தசாவதாரம்' என்றவிடத்திலும் கொள்க. देशिकापदेशத்தாலே. எம்பெருமான் வேறு, தேசிகர்கள் வேறு என்று தோற்றம் மட்டும். உண்மையில் அவனே இவர்கள் என்றபடி. अपदेशம் வியாஜம்—வேஷம்.

இத்தைக் கணிசித்து=வேத பஞ்சராத்ரங்கள்விளங்கும் படியான ஆழ்வார் ஆசார்யர்களுடைய அவதாரங்களைக் கருத்திற் கொண்டு कलौ खलु=स्थान-विशेषाधिकारத்தில் விரித்தவாறு कलौ जगत्पतिं विष्णुं...नार्चयिष्यन्ति' मैत्रेय पाषण्डोपहता जनाः என்று பராசரர் நிர்வேதப் படும் படி கெட்ட கலியிலும், महाभागाः— பாக்ய சாலிகளாய் नारायणपरायणाः ஸகுண நாராயணனையே பரமப்ராப்யமாகக் கொண்ட வைஷ்ணவர்கள் क्वचित् क्वचित् சிற்சில தேசத்திலே भविष्यन्ति உண்டாகப் போகின்றனர். भूरिशः, திரள்திரளாக द्रमिडेषु தமிழ்தேசத்தில் भविष्यन्ति. यत्र எந்தத் தமிழ்தேசத்திலே ताम्रपर्णी என்னும் நதியும் कृतमाला=வைகையாறும் पयस्विनी பாலாறும், महाभागा பாக்யம்பெற்ற कावेरी च காவிரியாறும், प्रतीची மேற்கு திக்காக ஓடுகிற महानदी பெரியாறும், இருக்கின்றனவோ. महर्षि வியாஸர். ஸ்ரீபாகவதத்திலே அருளிச்செய்தார்.

அவதரித்தவர்களில் குருபரம்பரையில் ப்ரதானமாக விளங்கும் ஆசார்யர்கள் இன்னார் இன்னாரென்று தெரியவேண்டுமாகையால் அவர்களையும் ஆசார்யத்வாநுகுணமாக அவர்கள் செய்த உபகாரத்தையும் அறிவிக்கிறார் ஆசார்யவம்சத்தை யறியும்போது அந்தந்த ஆசாரியரின் வித்யாவம்சம் போலே அவதாரவம்சமும் முடிந்தவரையில் அறிய வேண்டியதென்று. அதனையும் சிறிது குறிப்பர். கோத்ர குலாதிகளான மற்ற அம்சங்களை சரித்ரவிமர்சத்தில் கண்டுகொள்வது—ஆசார்யர்களில் என்பதற்கு நாதமுனிகள் என்றவிடத்தில் அந்வயம். நாதர் ரங்கநாதர். ஈச்வரமுனிகள் என்பதாலே பகவன்மனனம் செய்கின்றவர் என்பது விளங்கும். க்ருஹஸ்த்தர்களும் வஸிஷ்ட்ட விச்வாமித்ராதிகளைப் போலே முனிவரே. அபிநவதசாவதாரத்திற்குப் பின்னுள ஆசார்யாவதாரங்களிலே ப்ரத்மாசார்யன் नाथोपज्ञं प्रवृत्तम् என்ற படி நாதமுனிகளே. அதனால் அவரையே முதலில் கூறியதாம். ஆனாலும் இவருக்கு ஆசார்யரில்லையாகில் உபதேசம் அஸாம்ப்ரதாயிகமாம் உண்டாகில் அவரை யறியாத போது பகவானளவும் செல்ல அனுஸந்தியாமை தோஷமாகும். அடியிலே உபதேசம்பெற்ற பிரமன் முதல் நாதமுனிகள்வரையில் நடுவே நின்றதே குருபரம்பரை என்னில், இது மிகவும் நீண்டிருப்பதாம், அவர்

இவருக்கு ஸ்ரீமதுரகவிகள் முதலாக உண்டான संप्रदायपरम्परैयாலும் திருவாய்மொழிமுகத்தாலும் யோகதசையிலே ஸாக்ஷாத்க்ருதராயும் நம்மாழவார் ஆசார்யரானார்.

---

களை யறிவதும் ஸுகரமன்று என்ன, நம்மாழ்வார் இவருக்கு ஆசார்யரென்றார். நம்மாழ்வாருக்கு வெகுகாலம் பின்னுன. இவருக்கு அவர் எங்ஙனே ஆசார்யர் ? நம்மாழ்வாரின் சிஷ்யரான மதுரகவி மூலமான பரம்பரையாலேயென்னில், அந்தப் பரம்பரையிலுள்ளவர் இன்னாரின்னாரென்றறியமுடியாமையால் வம்சஞானம் சரிவர இல்லையாமென்ற கேள்விக்குப் பரிஹாரமாக இவருக்கு இத்யாதி.

மதுரகவிகள் முதலானபரம்பரை இவருக்கு உண்டு ஆனால் அது கண்ணிநுண்சிறுத்தாம்பு என்கிற ப்ரபந்தத்தின் உபதேசத்திற்கு மட்டும். அது வேதோபதேச குருபரம்பரைபோலே, அதற்கு முன்னமே திருக்குடந்தையெம்பெருமான்விஷய்மான ஆராவமுதே என்ற திருவாய்மொழியைக் கேட்டு, அதன்மேல் ஆயிரம் பாசுரங்களையும் அறிய விரும்பித் திருநகரி சென்ற விடத்திலே கண்ணிநுண்சிறுத்தாம்பின் உபதேசம் பெற்றார். அதன்முலமே திருவாய்மொழியைக்ரஹிப்பது ஸம்ப்ரதாயமாகையாலே அத்தன்பிறகும் அங்கு அத் திருக்குடந்தைத் திருவாய்மொழிக்கு உபதேசம் பெற்றார். அத்துடன் அத் திருநகரியெம்பெருமான் விஷயமான திருவாய்மொழி முதலான சில பதிகங்களும் உபதேச மூலம் பெற்றிருக்கலாம். ஆகையால் பரம்பரையாலும் என்றதன் பிறகு திருவாய்மொழிமுகத்தாலுமென்றது. இதெல்லாம் வேதாந்த ஸம்ப்ரதாய ப்ரவசனத்திற்குப் போதாதாகையால் முக்கியமன்று, ஆசார்யரைக் காண அவாவை விளைப்பதற்காம் அதற்கு ஆசார்யனவர் நம்மாழ்வாரே. வெவ்வேறு காலமாயினும், யோகரஹஸ்யம் அருளிய இவர் மஹாயோகியானபடியாலே கண்ணிநுண்சிறுத்தாம்பை உபதேசித்தவர் சொன்ன முறைப்படியில் ஆவ்ருத்தி செய்து யோகானுஷ்ட்டானம் செய்து, அது காரணமாக பரமபதத்தினின்று ஆழ்வார் நேரில் தோன்ற, அவரையாச்ரயித்து நேரிலே ஸர்வஸம்ப்ரதாயார்த்தங்களையும் அருளிச்செயல்களுடன் - க்ரஹித்ததால் மதுரகவிப்ரம்பரையை இடையிடாமலே இவர் ஆசார்யரானபடி. நம்மாழ்வார் எம்பெருமானின் அபிநவதசாவதாரத்திற் சேர்ந்த முக்தராகையாலே அவருக்கு ஆசார்யர் வேறொருவர் வேண்டாமாகிலும், புருஷகார பூதையான பிராட்டியின் திருவுள்ளத்திற்கிணங்கி ப்ரபத்திஸம்ப்ரதாய ப்ரசாரத்தை எம்பெருமான் விரும்பியிருக்க, அவளும் विष्वक्सेनादिकं सर्वं परिजनं भगवत्परिचर्यामाज्ञापयन्त्या. என்றபடி விஷ்வக்ஸேனரை நியமிக்க, அவருடைய அம்சமாக ஆழ்வார் தோன்றி யுபதேசித்தாரென்ற க்ரமத்தைக் கொண்டு நம்மாழ்வாருக்கு மேலே விஷ்வக்ஸேநர், பிராட்டி, பெருமான் என்ற க்ரமத்தை கடைப்பாட்டின்படி நம்

நாதமுனிகள்பிள்ளை ஈச்வர புட்டாழ்வான். ஈச்வர பட்டாழ்வான் பிள்ளை ஆளவந்தார் இவர் அருளிச்செய்த ப்ரபந்தங்கள்— आगमप्रामाण्यமும், पुरुषनिर्णयமும், आत्मसिद्धि—ईश्वरसिद्धि—संवित्सिद्धि என்கிற ஸித்தித்ரயமும், श्रीगीतार्थसंग्रहமும், स्तोत्रமும், चतुःश्लोकியுமாக எட்டு. ஆளவந்தார்பிள்ளை சொட்டை நம்பி, சொட்டை நம்பி பிள்ளை என்னுச்சான், என்னுச்சான் பிள்ளைகள் நால்வர், இவர்களில் ஒருவர் பிள்ளையப்பர். பிள்ளையப்பர்பிள்ளை தோழப்பர், தோழப்பருக்குப் பெண்பிள்ளைகள் இருவர்.

---

குருபரம்பரையில் கொள்க இப்படி ஸர்வசேஷியான பிராட்டியும் ஸூரிகளும் புகுந்த குருபரம்பரையான படியாலே மற்ற வைஷ்ணவாவைஷ்ணவ குருபரம்பரைகளைவிட இதற்கு ஏற்றமுண்டு. ந்யாயதத்வக்ரந்தத்தில் பாஹ்ய குத்ருஷ்டி மதங்களை நன்ருக நிரஸித்திருப்பதால் நாதமுனிகளிடத்தில் ஆசார்யத்வம் புஷ்கலம். ஸம்ப்ரதாயார்த்த க்ரஹணசிந்தந ப்ரவசநாதி காலங்களிலே அவச்யமாய் அநுஸந்திக்க வேண்டிய வித்யா வம்சக்ரமத்தை மேலே விளக்கப்போகிருராய், முதலில் अपत्य ஸந்ததிருபமான. வம்சத்தையும் தெரிந்த வரையில் அனுஸந்திப்பது யுக்தமென்று அதனை யருளிச் செய்கிருர். நாதமுனிகளின் திருப்பேரனுரான இவ் ஆளவந்தாரே இவருடைய ப்ரசிஷ்யரின் சிஷ்யராக வித்யாவம்சத்திலே மேலே குறிக்கப்படுகிறவர் இங்கே நாதமுநிகளும் ஆளவந்தாரும் அருளிய க்ரந்தங்களை முன்னமே கூறிவிட்டு அவர்கள் ஆசார்ய ஸம்பந்தம் பின்னே கூறப்பட்டது. எம்பெருமானுர்க்கு ஆசார்ய ஸம்பந்தத்தை முன்னே கூறிப் பிறகு அவருடைய க்ரந்தங்களைக் கூறியிருக்கிருர், இதனுல் நாதமுனிகளுக்கு நம்மாழ்வார்ஸம்பந்தத்திற்கு முன்னுகவே, அதுபோல் ஆளவந்தாருக்கும் மணக்கால்நம்பிஸம்பந்தத்திற்கு முன்பாகவே अर्थज्ञानம் பெறும்படி தம் பெரியோர்களின் மூலம் வேதாந்த விசேஷார்த்தங்கள் அறியப்பட்டிருப்பது தோற்றும். ஆளவந்தார் க்ரந்தங்களில் ஸ்தோத்ராதி க்ரந்தங்கள் பின்னே கூறப்பட்டவை என்ருலும் ஒரு கோவையிலேயே சேர்த்து முன்னே அருளினுரென்க. இங்கே க்ரதநங்களின் पाठक्रमமும் அவை அவதரித்த க்ரமமும் ஒன்ருகாது.

ஆளவந்தாருடைய ஸந்ததியில் சொட்டைநம்பி என்பவரின் ஸந்ததி மட்டும் இங்கே சொல்லப்பட்டது. வேறு ஸந்ததியும் இருப்பதாக அவ்வம்சத்தினர் கூறியிருக்கிருர்கள். குருபரம்ப்ராப்ரபாவத்திலுமுளது. ஆளவந்தாருக்கும் திருமலைநம்பிகளுக்கும், திருமலைநம்பிகளுக்கும் எம்பெருமானுருக்கும் அதன் மூலமாக ஆளவந்தாருக்கும் எம்பெருமானுருக்கும், எம்பாருக்கும், திருக்குருகைப் பிரான்பிள்ளானுக்கும் பிறவித்துவக்கு ஒருபடி இருக்க அதையும் ஆளவந்தாருடைய வேறு ஸந்ததியையும் குறிக்கவில்லையே தோழப்பர்வம்சத்தைவிட இது முக்கியமல்லவா என்னில்—ஆம்; ஆயினும் தெய்வத்துக்கரசுநம்பிமுதலான பிள்ளைகளின் ஆண்பெண்

நாதமுனிகள்ஸ்ரீபாதத்தை ஆச்ரயித்த முதலிகள் (2)உய்யக்கொண்டார், குருகைக்காவலப்பன், நம்பிகருணாகரதாஸர், ஏறு திருவுடையார், திருக்கண்ணமங்கையாண்டான், வானமாதேவியாண்டான, உருப்பட்டு-ராச்சான்பிள்ளை, சோகத்தூராழ்வான் ஆக என்பர்.

உய்யக்கொண்டார் ஸ்ரீபாதத்தை ஆச்ரயித்தவர்கள் ஐவர். அவர்களாகிறார் (3) மணக்கால்நம்பி, திருவல்லிககேணிப் பாண் பெருமாளரையர், சேட்டலூர் செண்டலங்காரர், ஸ்ரீபுண்டரீக தாஸர், உலகப் பெருமாள்நங்கை.

மணக்கால் நம்பிஸ்ரீபாதத்தை ஆச்ரயித்தவர்கள் ஐவர். அவர்களாகிறார் (4)ஆளவந்தார், தெய்வத்துக்கரசுநம்பி, கோமடத்துத்திருவிண்ணகரப்பன், சிறுப்புள்ளூர்ஆவுடையபிள்ளை, ஆச்சி.

ஆளவந்தார் ஸ்ரீபாதத்தை ஆச்ரயித்தவர்கள் பதினைவர். அவர்களாகிறார் (5)பெரியநம்பி, திருக்கோட்டியூர்நம்பி, திருமாலையாண்டான், ஆளவந்தாராழ்வார், திருமலைநம்பி, ஈசாண்டான், தெய்வவாரியாண்டான், சிறியாண்டான், திருமோகூரப்பன், திருமோகூர்நின்றார், தெய்வப்பெருமாள், திருமங்கையாளியார், பிள்ளைதிருமாலிருஞ்சோலைதாஸர், மாறனேர் நம்பி, ஆள்கொண்டி.

பெரியநம்பி ஸ்ரீபாதத்தை ஆச்ரயித்தவர்கள் அறுவர். அவர்களாகிறார் (6) எம்பெருமானார், மலைகுனியநின்றார், ஆர்ய ஸ்ரீசடகோபதாஸர், அணியரங்கத்தமுதனார், திருவாய்க்குலமுடையான்பட்டர், திருக்கச்சிநம்பி:

எம்பெருமானார் திருக்கோட்டியூர்நம்பி ஸ்ரீபாதத்திலே ரஹஸ்யார்த்தங்களைச் சிக்ஷித்தார். திருமாலையாண்டான்ஸ்ரீபாதத்திலே திருவாய்மொழி [யர்த்தம்] கேட்டார். ஆளவந்தாராழ்வார்ஸ்ரீபாதத்திலே திருவாய்மொழியும்

---

ஸந்ததிகள் பூரணமாகத் தெரியாமலிருப்பதால் திருப்பேரனரான திருமலைநம்பி முதலானோரையும் விளக்கவில்லையென்று கொள்ளலாம்.

செண்டலங்காரர் என்பது ராஜகோபாலன் என்கிற திருநாமமாகும். அவனது திருக்கையில் இருக்கும் சாட்டைக்கோல் செண்டு எனப்படும்

எம்பெருமானாருக்கு ப்ரதான ஆசார்யர் மஹாபூர்ணர் என்கிற பெரியநம்பிகள். ஆளவந்தார்சிஷ்யர்களான மற்றவர்களிடமும் விசேஷார்த்த க்ரஹணம் பண்ணும்படி அவர் நியமிக்க அதன்படி எம்பெருமானார் நடந்துகொண்டார். ஆகையால் திருக்கோட்டியூர்நம்பிகள் ரஹஸ்யார்த்தத்திற்குச் சிந்தநாசார்யரே யல்லது ப்ரதாநாசார்யரல்லர், திருவாய்மொழியின் அர்த்தாநுஸந்தாநத்திற்கு மட்டும் திருமலையாண்டானே ப்ரதாநாசார்யர். திருவாய்மொழி கேட்டார் என்பதற்கு திருவாய்மொழியின் அர்த்த ச்ரவணம் பண்ணினார் என்பது பொருள், திருவாய்மொழியின் அர்த்தம் கேட்டார் என்றும் பாடம் உண்டு. 'திருவாய்மொழியும் ஓதி' என்றதை

ஓதி, ஸ்தோத்ராதிகளும் (ஸ்தோத்ரமும்) அருளிச்செய்யும்(யலும்) நல்வார்த்தைகளும் கேட்டருளினார். திருமலைநம்பிஸ்ரீபாதத்திலே ஸ்ரீமத்ராமாயணம் கேட்டருளினார். இவர் அருளிச்செய்த प्रबन्धங்கள்—श्रीभाष्यம், दीपம், सारம், वेदार्थ-संग्रहம், श्रीगीताभाष्यம், சிறிய गद्यம், பெரிய गद्यம் श्रीवैकुण्ठगद्यம், नित्यம் ஆக ஒன்பது.

இவர்ஸ்ரீபாதத்தில் ஆச்ரயித்த முதலிகளைத் தம் தம் (தாம்) ஸம்ப்ரதாயப் படிகளிலே அறிந்துகொள்வது.

"गुरुं प्रकाशयेत् धीमान् मन्त्रं यत्नेन गोपयेत् । अप्रकाशप्रकाशाभ्यां क्षीयेते संपदायुषी ॥"

---

ஔசித்யத்தாலேதிருவாய்மொழி அர்த்தச்ரவணம்பண்ணுவதற்கு முன் பாகக் கொள்ளலாம். அருளிச்செய்யும் என்கிற பதத்திற்கு முன், ஷிதைஷிகளான முன்னோர்கள் என்கிற சொல்லைக் கூட்டுக. அருளிச் செயல் என்ற பாடத்திலே மூவாயிரத்தையும் அதன் பொருட்சர்ச்சையிலே முன்னோர்கள் செய்திருந்த வார்த்தைகளையும் என்று உரைக்கலாம். ஸ்ரீமத்ரா மாயணம் கேட்டருளினார் என்கிற இடத்திலும் ஸ்ரீமத்ராமாயணத்தில் விசே ஷார்த்தங்களை என்று கொள்க, கேட்ட அர்த்தங்கள் பதினெட்டு என்று சொல்வதுண்டு. ரஹஸ்ய, ப்ரஹ்மஸூத்ர பகவத்கீதா திவ்ய ப்ரபந்தங்களைப் போலே ஸ்ரீமத்ராமாயணத்தில் அர்த்த க்ரஹணத்திற்கு குருபரம்பரானுஸந்தானம் கொள்ளப்படவில்லையானாலும் பாஷ்யகாரர் க்ருஹித்தபடி விசேஷார்த்தங்களை க்ரஹிப்பதானால் அது ஆவச்யகமென்றே கொள்ளலாம்.

स च आचार्यवंशो ज्ञेयः என்ற ஆசார்ய பரம்பரானுஸந்தானத்திற்கான விதியைக் காட்டி நம்மாசார்ய பரம்பரையில் உள்ள ஆசார்யர்களையும் விசே ஷித்துக் குறித்தருளினார். இனி அந்த அநுஸந்தானம் நித்யம் காம்யம் நைமித்திகம் என்று மூன்றுவிதமுமாமென்று விரித்தருளுகிறார். गुरुमिति. धीमान्—புத்திமானாக இருப்பவன். गुरुम्—ஆச்சார்யரை यत्नेन—ப்ரயத்னப்பட்டு ஆஸ்த்தைப்பட்டு प्रकाशयेत्—பிறரிடம் புகழ்ந்து கூறவேண்டும். मन्त्रम्—உபதேசிக்கப்பட்ட மந்தர மந்த்ரார்த்தங்களை यत्नेन எவ்வளவு நிர்பந்தம் வந்தாலும் பரிச்ரமப்பட்டு गोपयेत्—அபாத்ரத்தில் போகாமைக்காக ப்ரகாசப்படுத்தாமலிருக்க வேண்டும். अप्रकाशप्रकाशाभ्याम्—குருவை ப்ரகாசப்படுத்தாமை, மந்த்ரதை ப்ரகாசப்படுத்துகை என்ற இவ்விண்டினால் संपदायुषी—ஐச்வர்யமும் ஆயுஸ்ஸூம் क्षीयेते—க்ஷீணமாகும். பூர்வார்த்தத்தில் விதித்திருப்பதைத் தவறினால் உத்தரார்த்தத்தில் தோஷம் கூறியிருப்பதால் இது நித்யம் என்று ஸித்திக்கும். 'ஸம்பதாயுஸ்ஸூக்கள் க்ஷீணமாகும் என்பதற்கு மற்றவிடங்களிலுள்ள அர்த்தவாதங்களுக்குப் போல தோஷமுண்டென்பதிலேயே நோக்கு

இனி பல நிதர்சநங்களில் கண்ட அந்வய வ்யதிரேகங்களைக் கொண்டு

என்றூர்கள். குருவை ஒருவன் ப்ரகாசிப்பிக்கிறதுவும் ஒருவன் ப்ரகாசிப்பியா தொழிகிறதுவும் குருபக்தியில் தாரதம்யத்தாலேயிறே. பகவத்விஷயத்தில் போலே குருவிஷயத்திலும் பரையான பக்தி யுடையவனுக்கு अपेक्षितार्थங்கள் எல்லாம் ப்ரகாசிக்கும் என்னுமிடம் कठ-जाबालादिச்ருதிகளிலும்

---

ஸம்பதாயுஷீ என்பதற்கு வேறு பொருள் கூறி, காம்யமாகவும் இதை விவரிக்கிறுர் गुरुवैइत्यादियால். குருவை ப்ரகாசப்படுத்துவதென்பது அதைக் கேட்க அதிகாரிகள் இருக்கும் இடத்திலே தானே கூடும். கூறினுலும் அறியமாட்டாத ஜநங்களும், விரோதிகளும் இருக்குமிடத்திலும், ஏகாந்த ஸ்தலத்திலும் இருப்பவனுக்கு ப்ரகாசப்படுத்தவில்லையென்பதனுல் ப்ரத்யவாயம் நேருமா என்கிற கேள்விக்குப் பரிஹாரமாக இதற்கு வேறு தாத்பர்யம் அருளிச்செய்கிறுர். அதாவது यःनेन प्रकाशयेत् என்பதற்கு நேரும் போதெல்லாம் ப்ரகாசப்படுத்த வேண்டுமளவில் பரிவஹிக்கும்படியான பக்தி இருக்கவேண்டுமென்று பொருள், பக்தியின் தாரதம்யத்திற்கீடாக ஞாநதாரதம்யம் ப்ரமாணுதி ஸித்தமாயிற்றே. ஆகையாலேயே ஸம்பத்பதத்திற்கு "सा हि श्रीः अमृता सताम्" என்கிறபடி ஞாநஸம்பத்தே அர்த்தம் என்பது பொருந்தும், இதற்குத் தக்கவாறு आयुःபதத்திற்கும் வேறு பொருள். கூறுவது தகும். 'பகவத்விஷயத்தில் போலே' इत्यादिवाक्यம் "यस्य देवे परा भक्तिः यथा देवे तथा गुरौ। तस्यैते कथिता ह्यर्थाः प्रकाशन्ते महात्मनः॥" என்கிற ச்ருதியின் வ்யாக்யாநமாகும். ஸர்வேச்வரனிடத்திலும், ஸர்வேச்வ்ரனிடத்தில் எவ்வளவோ அவ்வளவு ஆசார்யனிடத்திலும் உயர்ந்த பக்தியுடையவனுக்குக் கீழ்க்கூறிய அர்த்தங்களெல்லாம் ப்ரகாசிக்கும் என்பது இதன் பொருள். कथिताः என்றவிடத்தில் अकथिताः என்றும் பிரிப்பதுண்டு. ஆசார்யர் உபதேசிக்காத அர்த்தமும் பக்தியால் தோன்றும் என்றபடி. இதனைக் கருதியே 'அபேக்ஷிதார்த்தங்களெல்லாம்' என்று இங்கே கூறினது. இதனுல் பக்தி இல்லாதவர்களுக்கு ப்ரகாசிக்காது என்றும், சிறிது பக்தியுள்ளவர்களுக்கு சிறிதே ப்ரகாசிக்கும் என்றும் தானே தெரியவரும். இது ச்வேதாச்வதர ச்ருதியானபடியாலே இங்கே ஆதிபதத்தினுலே க்ரஹிக்கப்படும். கடச்ருதியில் श्रवणायापि बहुभिर्यो न लभ्यः शृण्वन्तोऽपि बहवो यं न विद्युः आश्चर्योऽस्य वक्ता कुशलोऽस्य लब्धा आश्चर्यो ज्ञाता कुशलानुशिष्टः॥ नैषा तर्केण मतिरापनीया प्रोक्ताऽन्येनैव सुज्ञानाय प्रेष्ठ என்றவிடத்திலே பக்தி இல்லாதவனுக்கு துர்லபம் என்பதும் கருதப்படும். ஜாபாலச்ருதி என்றவிடத்தில் ஜாபால உபநிஷத்து என்ற பொருளைக் கொள்ளாமல் சாந்தோக்யத்திலே (4-4) सत्यकाम-जाबालविद्याभागத்தைக் கொள்க. அங்கே ஜாபாலன் = ஜபாலையின் பிள்ளையானவன் அந்யமுகமாக வித்யையை யறிந்தபிறகும் ஆசார்யரை வணங்கி "आचार्याद्धैव विद्या विदिता साधिष्ठं प्रापत्" (ஆசார்யன் மூலமாக அறியப்பட்ட வித்யைதான் பலனளிக்கும் சக்தி பெற்றதாகும்) என்று விக்ஞாபித்ததிலிருந்தும் கீழேநானூறு பசுக்

**संजयादि वृत्तान्त**ங்களிலும் ப்ரஸித்தம். இங்ஙனல்லாதார்க்கு இப்படி **ज्ञानसंपत्**து உண்டாகாது என்னுமிடம் சிஷ்யர்களுடைய ஜ்ஞானதாரதம்யத்தாலே கண்டுகொள்வது. மிகவும் **गुणाधिक**ரான சிஷ்யர்களுக்கும் கடுக **अध्यात्म-विषय**ங்களை ப்ரகாசிப்பியாதார்க்கு நிஷ்டை குலையாது என்னுமிடம்

---

களை மேய்க்க குரு நியமிக்க ஆயிரம் மாடுகள் ஆகும் வரையில் மேய்த்து இப்பெரும் சுச்ரூஷைக்குப் பிறகே வித்யாக்ரஹணத்தில் நோக்குடையவனாயிருந்ததிலிருந்தும் அவனுக்குள்ள பக்தி ஸ்பஷ்டமாகுமே. ஸஞ்ஜயவ்ருத்தாந்தமாவது—ஸஞ்ஜயர் த்ருதராஷ்ட்ரரைக் குறித்து "**मायां न सेवे भद्रं ते न. वृथा धर्ममाचरे। शुद्धभावं गतो भक्त्या शास्त्राद् वेद्मि जनार्दनम्**" (த்ருதராஷ்ட்ரரே! உமக்கு நன்மை யுண்டாகட்டும் நான் கபட கார்யம் செய்கிறதில்லை. தர்மாசரணத்தை காம்யமாக்கி வீணாக்குவதில்லை நிஷ்காமமாகவே செய்கின்றேன். தைவபக்தி குருபக்தி இரண்டினாலும் சுத்தமான மனதைப் பெற்றதால் சாஸ்த்ரத்தினின்று எம்பெருமான்விஷயமான ஞானத்தைப் பெற்றிருக்கிறேன்,) என்ற வாக்யத்தில் அறியப்படும் இவ்விடத்தில் **भक्त्या** என்கிற பதம் குருபக்தியைக் குறிக்கும் என்பதை, "**व्यासप्रसादात् श्रुतवान् एतद्गुह्यमहं परम्**" என்று வெகு நீசனான நான் மிக உயர்ந்த ரஹஸ்யத்தை எம்பெருமான் திருமுகத்தினின்றே நேராகக் கேட்டுணர்ந்துகொண்டது வ்யாஸமஹர்ஷியின் அநுக்ரஹவிசேஷத்தாலே என்று ஆசார்யனைப் புகழ்ந்து கூறியதிலிருந்து தெளிக, **सञ्जयादि** என்கிற ஆதிபதத்தாலே ஏகலவ்யாதிகளைக் கொள்க. ஸாமான்யவித்யைக்கே குருபக்தி கார்யகரமாகும் போது மோக்ஷார்த்தவித்யையில் அது ஆவச்யகம் என்பது ஸுஸ்பஷ்டம். ஏகலவ்யன் முக்யோதாஹரணம் அர்ஜுநதர்மபுத்ராதிகளில் தர்மபுத்ரருக்குக் கூட அர்ஜுனனளவில் தநுர்வித்யையின் லாபம் இல்லாமைக்கு பக்தியின்குறைவே காரணம் இதை 'அச்வத்தாமா ஹத:' என்று சொல்ல தர்மபுத்ரர் இசைந்ததினின்றும் அர்ஜுநன் மிகமிக வெறுத்ததினின்றும் அறியலாம் என்னுமிடம் என்னும் பதத்திற்கு என்கிற விஷயம் என்கிற பொருளை இந்த க்ரந்தத்தில் எங்கும் கொள்க இவ்வளவால் பக்தி இருந்தால் ஞானம் உண்டு என்று அந்வயம் காண்பிக்கப்பட்டது பக்தி இல்லை யாகில் ஞானம் இல்லை என்கிற வ்யதிரேகத்தையும் காண்பிக்கிறார் இங்ஙனல்லாதார்க்கு இத்யாதியால்

**मन्त्रं यत्नेन गोपयेत्** என்கிற பாதத்தை விவரிக்கிறார் **மிகவும்** இத்யாதியால் ப்ரயத்ந பூர்வகமாக மறைக்கவேண்டியதாகில் சில ஸமயம் ஸத்பாத்ரமான சிஷ்யருக்கு ஸுலபமாய் உபதேசிக்கவில்லையென்கிற தோஷம் வாராதோ என்கிற சங்கைக்கு இது ஸமாதானம் முன்னே **ஞாநஸம்பத்து** என்கிற பதத்தால் **संपत्** என்கிற பதத்திற்கும் **நிஷ்டை குலையாது** என்கிற **निष्ठा** பதத்தினால் **आयुः**பதத்திற்கும் அர்த்தம் கூறப்பட்டது நிஷ்டையாவது நிலைத்திருக்கை. ஞானம் நிலைத்திருக்கையும் அது கார்யகரமாகையுமாம். மேலே**சிஷ்யக்ருத்**

ரைக்வாதி வ்ருத்தாந்தங்களிலே ப்ரஸித்தம். பெற்றது குணமாக உபதேசித்தால் "शिष्यपापं गुरोरपि" என்கையாலே ஆசார்யனுக்கு நிஷ்ட்டை குலையும்படியாமென்னுமிடம், வருவது விசாரியாதே இந்த்ரனுக்கு உபதேசித்துத் தானும்

---

யரதிகாரத்தில் ஸம்பத்பதத்திற்கு ஞாநவைசத்ய பூர்வகமான பகவதநுபவ ஸம்பத்து என்றும் ஆயு:பதத்திற்கு ஆத்மாவிற்கு ஸத்தாநுவ்ருத்தி ஹேதுவான சேஷத்வாநுஸந்தாநபூர்வகஸ்வநிஷ்ட்டை என்றும் ப்ரக்ருதாநுகுணமாக ஆசார்யரே பொருள் கூறியிருப்பது காண்க. கடுக—சீக்கிரமாக. ஸச்சிஷ்யருக்கு அடியோடு ப்ரகாசமாக்காமலிருப்பது அநுசிதமாகும். ஆனாலும் விரைவில் ப்ரகாசிப்பியாமை குற்றமாகாது. रैक्वादि இதி. சாந்தோக்யத்தில் (4—1) ஜாநச்ருதி என்கிற அரசன் அநேக ஸத்ரங்களைக் கட்டி அந்நதாநாதிதர்மங்களை நன்கு நடத்திவந்தவன். ஹம்ஸங்களாக வந்த தேவதைகள் மூலம் தனக்குத் தத்துவஞாநமில்லாமையாலுள்ள குறையைத் தெரிந்து வருந்தி, ஹம்ஸமூலமே யறிந்த ரைக்வமஹர்ஷியைத் தேடி அணுகி ஆறுநூறு கோக்கள், ஆபரணம், ரதம், என்ற இவ்வளவையும் ஸமர்ப்பித்து வணங்கி வித்யோபதேசத்திற்கு வேண்டின போதும், எல்லாம் உனக்கே இருக்கட்டும் என்று மறுத்துவிட்டார், பிறகு ஆயிரம் கோக்களையும் தன் பெண்ணையும் ஸமர்ப்பணம் செய்வதாக முடிவு செய்து வந்து ப்ரார்த்தித்தபோது இவனுடைய பக்திக்கு மெச்சி உபதேசித்தார். இதனால் மஹாதார்மிகர்களையும் பரீக்ஷிக்கவேண்டும் அவர்களின் நன்மைக்கே என்று தோன்றினபோது முதலில் மறுத்தது குற்றமாகாது என்பது தெளியலாம். ஆதிபதத்தினால் திருக்கோட்டியூர் நம்பிகளைக் கொள்க. மஹாபூர்ணரை ஆச்ரயித்து ச்ரேஷ்டராக ப்ரஸித்தராய் தம் திருவடிகளைப் பக்திபுரஸ்ஸரம் பணிந்து ப்ரார்த்தித்த எம்பெருமானாருக்கும் மந்த்ரார்த்தத்தின் உபதேசத்தை மறுத்து வெகுதரம் காலஹரணம் அவர் செய்திருந்தாரே. மந்த்ராபநத்தினால் ரைக்வாதிகளிடததில நிஷ்ட்டை என்கிற ஆயுஸ் இருந்தது சொல்லப் பெற்றது. அதன் வ்யதிரேகத்தில் நிஷ்டை குறையும் என்பதற்கும் உதாஹரணம் காட்டுகிறார். பெற்றது இத்யாதியால். பெற்றது குணமாக—நமக்கும் ஒரு சிஷ்யன் வாய்த்தானே, விடலாகாது என்று நினைத்து என்னலாம். சிஷ்யனிடத்தில் பல தோஷங்கள் இருந்தாலும் அவன் பெற்றிருக்கும் சில குணம்சங்களையே நினைத்து என்னலுமாம். அல்லது த்ரிலோகாதிபதியான மஹான் சிஷ்யனாகிறானே என்று ஸந்தோஷித்து என்னவுமாம். சிஷ்யபாபமிதி. பரீக்ஷித்து உபதேசம் செய்ய வேண்டியிருக்க பரீக்ஷிக்காமல் உபதேசிப்பதே பாபமாகையால் அதுவே நிஷ்டை குறைவதற்குக் காரணமாகலாம். ஆகிலும் சிஷ்யனுக்குப் பாபமில்லாத போது கடுக உபதேசம் பாபமாகாது என்கிற கருத்தாலே சிஷ்யபாபம் ஆசார்யரிடம் சேர்ந்து நிஷ்டையைக் குலைக்கும் என்றது, வருவது விசாரியாதே = பரீக்ஷியா

ब्रह्मविद्येயை மறந்து, தன்சிஷ்யனுன நாரதபகவானை இட்டு ஸர்வேச்வரன் உணர்த்துவிக்க வேண்டும்படியிருந்த சதுர்முகன்பக்கலிலே கண்டுகொள்வது. இப்படி "अप्रकाशप्रकाशाभ्याम्" என்கிற இரண்டுக்கும் "क्षीयेते संपदायुषी" என்கிற फलங்களை ஔசித்யத்தாலும் प्रमाणप्रसिद्धियாலும் க்ரமத்தாலே உதாஹரித்தவித்தனை, இரண்டிலும் இரண்டு பலம் அன்வயித்தாலும் வாக்யத்தில் வரும்

---

மல் உபதேசித்தால் தனக்கு வரும் கேட்டைத் தான் ஆராயாமல் என்றபடி. தானுமிதி. உபதேசம் பெற்ற இந்த்ரன் அர்த்தமறியாமையும் அறிந்ததை மறப்பதும் எப்படியோ, அப்படியே குருவும் மறந்தார் என்றதாம். நாரதபகவானை இட்டு என்ற இடத்தில் "सांख्ययोगकृतान्तेन पञ्चरात्रानुशब्दितम् । नारायणमुखोद्भूतं नारदोऽश्रावयत् पुनः ॥ ब्रह्मणस्सदने तात यथादृष्टं यथाश्रुतम् । श्रुत्वा ब्रह्ममुखात् रुद्रः देव्यै सोऽकथयत् पुनः ॥" என்ற வாக்யம் ஸாரப்ரகாசிகையில் உதாஹரிக்கப்பட்டது. இதனின்று பாஞ்சராத்ரத்தின் பொருளை ப்ரும்மா மறந்திருக்க நாரதர் நினைப்பூட்டியதாகவும் அதன் பிறகு பிரமனிடம் ருத்ராதிகள் இதனை அறிந்தார்கள் என்றும் அறியப்படுகிறது. பிரமன் இந்த்ரனுக்கு உபதேசித்ததால் மறந்தான் என்ற விஷயம் இதற்கு முன் ஸந்தர்ப்பத்தில் இருக்கவேண்டும். ஸாரஸங்க்ரஹத்தில் இது बृहन्नारदीय வாக்யம் என்னப்பட்டது. இதனை நன்கு ஆராய்க. நிஷ்ட்டாஹாநியைச் சொல்லவேண்டு மிடத்தில், 'ப்ரம்ம வித்யையை மறந்து' என்றதாலே மறதியும் நிஷ்ட்டாஹாநியாகிறது. இதனுல் நிஷ்ட்டாபதத்திற்கு विशदज्ञा-नाधीनदृढसंस्कारமென்று அர்த்தம் கொள்ளலாம். இதே ஆயுள்ஸ¬மாம். संपत्क्षयமாவது विशदज्ञानाभावம், आयुश्शब्दमुख्यार्थமாவது सत्तानुवृत्तिहेतुவான प्राणोच्छ्वासनिश्वासங்களென்று विशदज्ञानानुवृत्तिरूप—आत्मसत्ताहेतुவான विशदज्ञान-दृढसंस्कारம் ஆயுஸ்ஸாகிறது. அந்த ஸம்ஸ்காரலோபமே மறதியாம், ஆகையால், 'மறதி என்பது ஞாநாபாவமாகையால் संपत्क्षयமாகுமே யல்லது நிஷ்டாக்ஷயமாகாது' என்று சங்கிக்க வேண்டா. இப்படி அந்வயவ்யதிரேகங்களைக் காண்பித்ததிலிருந்து ச்லோகத்தில் गुरुं प्रकाशयेत् அதனுல் धीमाனுவான்; मन्त्रं गोपयेत्. அதனுல் निष्ठारूपविशदसंस्काराधीनज्ञानातिशयवान् என்றவாறு धीमान् ஆவான். என்றும், उत्तरार्धத்தாலே व्यतिरेकமும் ज्ञापितமாகும். அதில் அப்ரகாசத்தாலே ஸம்பத்க்ஷயம் ப்ரகாசத்தாலே ஆயுள்க்ஷயம் என்று பிரித்து ஏகைகவ்யதிரேகம் உதாஹரண முகத்தாலே காண்பிக்கப்பட்டது. இதில் ஔசித்யமாவது यथाஸங்க்யாந்வயம் கொள்வது உசிதமாயிருக்கையும், முதல் த்வந்த்வத்தைப் போலவே இரண்டாவது த்வந்த்வத்தையும் கொள்வது உசிதமாயிருக்கையும். ப்ரமாண ப்ரஸித்தியாவது "यस्य देवे परा भक्तिः" என்ற श्रुत्युदाहरणादि. இனி த்வந்த்வ ஸமாஸஸ்வாரஸ்யத்தைக் கருதி அருளிச்செய்கிருர் இரண்டிலுமிதி. த்வந்த்வஸமாஸப் பொருளாவது इतरेतरयोगம். அதனுல் அப்ரகாச ப்ரகாசங்களிரண்டும் சேர்ந்திருக்க ஸம்பத்க்ஷயமும்

விரோதம் இல்லை. ஆகையால் **सर्वावस्थै**யிலும் **गुरुभक्ति**யின் பரீவாஹமாக குருவை ப்ரகாசிப்பிக்கவும், **महारत्नगर्भ**மான மாணிக்கச்செப்புப்போலே இருக்கிற திருமந்த்ரத்தினுடைய சீர்மையும் தன் நிஷ்டையும் குலையாமைக்காக சில்வான ப்ரயோஜனங்களைப் பற்ற **शिष्यगुणपूर्ति** இல்லாத சபலர்க்கு வெளியிடாதே மந்த்ரத்தை மிகவும் சேமிக்கவும் ப்ராப்தம்.

இவ்விடத்தில் **गुरुशब्द**ம் பரமகுருக்களுக்கும் உபலக்ஷணம்; ஸாமான்ய

---

ஆயு:க்ஷயமும் சேர்ந்திருக்கும் என்று சேர்ந்த போதே பலத்தைச் சொல்லில் குருவின் அப்ரகாசம் மட்டுமிருந்தாலோ மந்த்ரப்ரகாசம் மட்டுமிருந்தாலோ தோஷமில்லை என்றதாகும். இவ்வர்த்தம் ருசிக்காது. அப்பொழுது கீழ்ச் சொன்ன ச்ருத்யாதிவிரோதமும் வரும். ஆகையால் குருவின் அப்ரகாசமொன்றுக்கே ஸம்பரதாயு**रुभयाक्षय**ம். பலன், மந்த்ரப்ரகாசம் ஒன்றுக்கே அவ்வு**भय**க்ஷயம் பலன் என்று கூறினால் என்ன என்ற சங்கையில் இவ்வாக்யம் பிறந்தது. ஒவ்வொன்றிலும் இரண்டு பலம் அந்வயித்தாலும் என்று இவ்வாக்யத்தின் பொருள். **வாக்யத்தில் வரும் விரோத** மில்லை என்பதற்கு—வாக்யம் **बाधि**-தார்த்தக மாகாது, ஆனாலும் முதல் த்வந்த்வஸமாஸத்தில் இரண்டையும் சேர்க்காமல் பிரித்த பிறகே இரண்டாம் த்வந்த்வஸமாஸத்தில் மட்டும் சேர்த்தால் ப்ரக்ரமவிரோத மென்னலாம், ஆனாலும் முடிந்தவரையில் த்வந்த்வஸமாஸஸ்வாரஸ்யத்தை ரக்ஷிப்பது யுக்தம், பூர்வார்தத்தில் **धी** என்று மொத்தமாக எடுத்து எல்லா **धी**யும் **प्रकाशन**ம் **गोपन**ம் ஒவ்வொன்றுக்கும் பலமாகப் பணித்ததும் பொருந்துமென்று கருத்தாம்.

இந்த ச்லோகம் ஸர்வாவஸ்த்தாவிஷயமாகவும் **अन्यथा**வாக நடந்தால் மந்த்ரசக்திஹானியை அறிவிப்பதாகவும் தெரிவிக்கிறார் ஆகையால் இத்யாதியால். விசதமான ஞானம் வந்தபிறகு **गुरुभक्ति** யிராமலிருந்தால் என்ன என்னுமைக்காக **सर्वावस्थै**யிலும்' என்றது, அறியவேண்டிய விஷயங்கள் அநந்தங்களானபடியால் எல்லாம் விசதமாக அறியமுடியாமையால் யாவஜ்ஜீவம் பக்தி வேண்டியதே. **ஸர்வாவஸ்தையிலும்** என்பது 'ப்ரகாசிப்பிக்கவும்' 'சேமிக்கவும்' என்ற இரண்டிலும் சேரும். ப்ரகாசிப்பிக்கவும் என்றவிடத்தில் ஞாந அவைசத்யமில்லாமைக்காக என்று சேர்க்க வேண்டும். பக்தி பரீவாஹமாக ப்ரகாசிப்பிக்கவும் என்பதற்கு நேரும்போதெல்லாம் ப்ரகாசிப்பிக்க இழியுமளவான பக்தியோடு இருக்கவும் என்றது பொருள். **மஹாரத்னங்கள்**—மந்த்ரார்த்தங்கள். மாணிக்கத்தினலான செப்பு—மந்த்ரம். **சபலர்க்கு**= சஞ்சல புத்தியர்க்கு. குரு என்னும் சொல்லுக்கு ஸாக்ஷாத்ஆசார்யன் மட்டும் அர்த்தமில்லை என்கிறார் மேலே. **உபலக்ஷணம்**. என்பதற்கு சேர்த்து க்ரஹிக்க வேண்டுமென்பது பொருள். ஆக **गुरुः** என்பதற்கு தன் குருப்ரம்பரையில் சேர்ந்தவர் எவரையும் என்று அமுக்யமான பொருள். **ஸாமாந்யமாகவுமாம்** இதி. தன்னுடைய அஞாநத்தின் நிவ்ருத்திக்குப் ப்ரயோஜகமான உபதேசம்

மாகவுமாம் मन्त्रशास्त्रம் मन्त्रार्थம் முதலான ரஹஸ்யங்களுக்கும் प्रदर्शनपरம்.

தான் இந்த ரஹஸ்யங்களை அநுஸந்திக்கும்போதெல்லாம் ஆசார்ய பரம்பரையை அநுஸந்திக்கையும் विधिबलप्राप्तம். இவ்வாசார்யர்களுடைய அநுஸந்தானம், "संभाष्य पुण्यकृतो मनसा ध्यायेत्" என்கிறபடியே प्रतिषिद्ध-संभाषणத்துக்கு ப்ராயச்சித்தமுமாம்.

என்னுயிர் தந்தளித்தவரைச்சரணம் புக்கி
யானடைவே அவர்குருக்கள் நிரைவணங்கிப்

---

செய்பவரென்ற போது गुरुசப்த முக்யார்த்தம். ஸாக்ஷாத் காரணமான உப தேசம், பரம்பரயா காரணமான உபதேசம் இரண்டுக்கும் பொதுவாகும் ப்ர யோஜக என்கிற சொல் ரஹஸ்யத்ரயஸாரம் மந்த்ரார்த்தோபதேசமே யன்றி மந்த்ரோபதேசமல்லவே. ஆகையால், 'மந்த்ரம் யத்நேந கோபயேத்' என்பதற்கு இங்கு என்ன ஸம்பந்தம் என்ன; அதுவும் உபலக்ஷணம் என்றார். மந்த்ரத்தை மறப்பதாவது இது मन्त्रानुपूर्वी, இவை மந்த்ரத்தினுடைய ऋषिछन्दस्ஸுகள். இது मन्त्रार्थம் என்றவாறு மந்த்ரத்தைச் சேர்ந்தவையோடு மறப்பதே யாம். குருப்ரகாசநம் எப்பொழுதும் வேண்டுமாகிலும் सकृत् कृतः शास्त्रार्थः என்கிற ந்யாயத்தாலே ஒருதரம் ஆசார்ய பரம்பராநுஸந்தாநம் போதுமே என்ன அருளிச் செய்கிறார் தானிதி. அநுஸந்திக்கும் போதெல்லாம் अध्ययन காலத்தில் போல் சிந்தநா காலத்திலும், பிறருக்கு உபதேசகாலத்தி லும். நித்யம் நைமித்திகம் காம்யம் என்ற மூன்று வகையில், அநுஸந்தானம் செய்யாத போது தோஷத்தைக் கூறியதால் நித்யம் என்பதும் செய்த போது பலத்தைக் கூறியதால் காம்யம் என்பதும் சித்தித்தது அது போல் நைமித்திகமும் ஆகிறது. அது இரண்டு விதம்—அவச்ய கர்தவ்யமாகிறது, பாபப்ராயச்சித்தமாகிறது என்றவாறு. அநுஸந்தாநத்தை நிமித்தமாக்கி விதித்தபடியாலே க்ரஹணஸ்நாநாதிகளைப் போலே ஆவச்யகமாயிற்று. பேசக்கூடாத பாஷண்டிகளோடு பேசுவதால் வந்த பாபத்திற்கு ப்ராயச் சித்தமாக மஹான்களுடைய அநுஸந்தானத்தை கௌதமர் விதித்தார். संभाष्य என்பதற்கு பேசத்தகாதவருடன் பேசினால் என்பது பொருள். न म्लेच्छाशुच्यधार्मिकैः सह संभाषेत என்று இதற்கு முன் ஸூத்ரம்.

நாம் அநுஸந்திக்க வேண்டிய குருபரம்பரை இது. இந்த முறையில் அநுஸந்திக்க வேண்டும் என இரண்டையும் தெளிவாக மேலே பாட்டில் அருளிச்செய்கிறார். எம்பெருமானுக்குப் பின்னால் தோன்றிய ஆசார்யர்களை விஸ்தரம் வேண்டாம் என்று நாம் கீழே வரையாமற் போனாலும் அநு ஸந்தானம் செய்கிறவர்கள் தனிதனியே ஒவ்வொருவரையும் அநுஸந்திக்க வேண்டும் என்று முதலடியாலும், நம்மாழ்வாருக்கு முன்னே இருக்கிற மூவரின் க்ரமத்தை முடிவடியிலும் தெளிவாக்கியது காண்க.

யான் = நான்—என் உயிர் தந்து = என்னுடைய ஆத்மாவை உபதேசித்து;

பின்னருளால் பெரும்பூதூர்வந்தவள்ளல்
பெரியநம்பி ஆளவந்தார் மணக்கால்நம்பி
நன்னெறியை அவர்க்குரைத்த உய்யக்கொண்டார்
நாதமுனி சடகோபன் சேனைநாதன்
இன்னமுதத்திருமகளென்றிவரைமுன்னிட்
டெம்பெருமான்திருவடிகள் அடைகின்றேனே. 3.

---

ஜீவாத்மஸ்வரூபத்துடன் பரமாத்மஸ்வரூபத்தை யுபதேசித்து அளித்தவரை ரக்ஷித்தவரை-எனக்கு ஸத்தையைப் பெறுவித்த ஸாக்ஷாதாசார்யரை, சரணம் புக்கு=சரணமாக அடைந்து; புக்கு யான் என்ற சொற்களின் ஸந்தியில் "யவ்வரில் இய்யாம்" என்ற நூல்படி மேலே யகரம் இருப்பதால் உகரம் இகரமாயிற்று. அவர் குருக்கள் நிரை—அவருடைய ஸாக்ஷாத் பரம்பரா ஆசார்ய பங்க்தியை, அடைவே—க்ரமமாக தனித்தனியாக, வணங்கி—நமஸ்கரித்து, பின்= அதற்குப்பிறகு (முன் தனித்தனியாகக்குறிப்பிட்ட மேல்மேல் ஆசார்யர்களில்) அருளால்=க்ருபையினாலே, பெருப்பூதூர் வந்த=ஸ்ரீபெரும்பூதூரில் தோன்றிய வள்ளல்=தர்சநப்ரவர்த்தகராய் பரமோதாரரான எம்பெருமானார், இது முதலான திருநாமங்களுக்கு என்றிவரை யென்றவிடத்தில் அந்வயம். பெரியநம்பி=மஹாபூர்ணர், ஆளவந்தார்=ஸ்ரீயாமுநமுநிகள். மணக்கால்நம்பி=ஸ்ரீராமமிச்ரர், நல்நெறியை=வேதாந்தார்த்தமான ஸன்மார்கத்தை அவர்க்கு உரைத்த=மணக்கால்நம்பிக்கு உபதேசித்த, உய்யக்கொண்டார்=ஸ்ரீபுண்டரீகாக்ஷர். நாதமுநி=ஸ்ரீரங்கநாதமுநிகள், சடகோபன்-நம்மாழ்வார், சேனைநாதன்-விஷ்வக்ஸேநர் இன் அமுதம்-பகவானுக்கே போக்யமாயிருப்பதால் அம்ருதத்திலும் இனிய அமுதமான, திருமகள்= பெரியபிராட்டி, என்றிவரை=என்ற திருநாமம் கொண்ட இவ்வாசார்யர்களை முன்னிட்டு முதலில் அநுஸந்தித்து நமஸ்கரித்து, எம்பெருமான் திருவடிகளை அடைகின்றேன்=மந்த்ராத்யநுஸந்தானத்திற்காக ஆச்ரயிக்கிறேன். **आचार्याणामसावसौ** என்ற விதிவாக்யத்திலும், உபநிஷத்துக்களில் பல குருபரம்பரையின் அநுஸந்தானத்தைக் காண்பிக்குமிடங்களிலும். 'அஸ்மத்தேசிகமஸ்மதீய' என்றாற்போன்ற பல ஸூக்திகளிலும் மேலாசார்யர்களை விட்டுத் தன் ஆசார்யனை முதலில் அநுஸந்திக்கத் தெரிவித்திருப்பது, இவரே தனக்கு அஜ்ஞானத்தை நேராகப் போக்கியதாலும் இவரை யாச்ரயித்ததாலேயே தனக்கு அவர்கள் குருபரம்பரையில் நிற்பதாலும் என்று தெரிவிப்பதற்காக 'என்னுயிர் தந்து' என்றவாறு விவரித்தருளினார். தன் ஆசார்யருக்கும் எம்பெருமானாருக்கும் இடையில் உள்ள ஆசார்யர்களைத் தனித்தனியே அநுஸந்திக்கவேண்டும் என்கிறார் அடைவே இத்யாதியால், பின் என்பதினால் முன் இவ்வதிகாரத்தில் எம்பெருமானார் வரையிலே குருபரம்பரையை சொல்லி நிறுத்தியிருப்பதால் அத்யயநாதிகாலங்களில் எம்பெருமானார்முதற்கொண்டு அநுஸந்தித்தால் போதும் என்றுநினைக்கலாகாது என்றறிவித்த

एते मह्यमबोधमन्मथशरोन्माथाय नाथादयः
वेदान्तप्रतिनन्दनीयविविधोदन्ताः स्वदन्तामिह ।
आश्वास्यशरण्यदम्पतिदयादिव्यापगाव्यापकाः
स्पर्धा-विप्लव-विप्रलम्भपदवीवैदेशिका देशिकाः ॥ 2.

---

படி. மேலே இருக்கும் 'நன்னெறியை அவர்க்குரைத்த' என்பதை ஒவ்வொரு ஆசார்யருக்கும் கூடுமானவரையில் சேர்க்க நம்பி = பூர்ணர். பெரியநம்பி = ஆளவந்தாரை.யார்ச்ரயித்த எல்லோரும் நம்பிகள். அவர்களில் ச்ரேஷ்டரான படியாலே பெரியநம்பி. வாதப்போரில் வென்றபோது ஆள்வதற்கு வந்தார் என்று இராணிகூற அர்த்தராஜ்யம் பெற்றவரானபடியாலே ஆளவந்தார் என்றது. மணக்காலில் அவதரித்தபடியால் மணக்கால்நம்பி. உய்யக்கொண்டார் ஆசார்யனின் தேவிகளைப் பிறந்தகத்திற்கு அழைத்துப்போனவிடத்தில் அவர்களிட்ட பர்யுஷிதமான அன்னத்தையும் போக்யமாக ஸ்வீகரித்ததால் உய்வதற்காகக் கொண்டார் என்று ஆசார்யரால் கொண்டாடப்பட்டதால் இத்திருநாமம். நாதமுநி = ரங்கநாதன் என்கிற திருநாமத்தை விட்டு நாத என்பது. அர்த்தபுஷ்டிக்காக. சடகோபன் அவதரிக்கும்போது சடவாயுவை ஜயித்தவர் என்று பொருள் உரைப்பர். பூர்வாசார்யக்ரந்தங்களில் சடர்களை கோபித்து வென்றவர் என்ற பொருளே கூறப்பட்டது. இன் அமுதம். சேதனரை எம்பெருமான் உபேக்ஷிக்கும் பொழுது தான் ரக்ஷிக்க முன்வந்து புருஷகாரமாகிப் பேசும் ஸமயத்திலும் எம்பெருமானுக்கு பரம போக்யையாய் அமுதம்போலே அவன் ஸத்தைக்கு ஹேதுவுமாய் இருப்பவளாகி நம் குருபரம்பரையிலும் புகுந்துநின்று இதற்குச் சிறப்பை அளித்தவள் என்றபடி. முன்னிட்டு என்றவரையில் இப்பரம்பரைக்கு அஸாதாரணமான குருக்களைக் கூறி ஸர்வ பரம்பராசார்யனை நமக்கும் பரமாசார்யனென்று எம்பெருமான் என்றது. अस्मद्देशिक மென்கிற ச்லோகத்திலே வடமொழித் திருநாமங்களைக் காண்க.

நித்யம் நைமித்திகம் காம்யம் என்ற விதிகளத்தாலே குருபரம்பராநுஸந்தாநம் என்பதன்றி, ஸத்யகாமஜாபாலனுக்கு ஸ்வாசார்யவிஷயத்திற் போல் நமக்கு குருபரம்பராநுஸந்தாநத்தில் போக்யதாபுத்தியினாலே ப்ரவ்ருத்தி வரவேண்டுமென்று உபதேசிப்பவராய் அவர்களுடைய குணவிசேஷங்களையும் குறிக்கிறார் एते என்கிற ச்லோகத்தினால். एते கீழில் கூறப்பட்டவரும், वेदान्त = வேதாந்தங்களாலே प्रतिनन्दनीय = கொண்டாடப்படவேண்டிய विविध = பலவிதமான उदन्ताः சுத்தமான வரலாற்றையுள்ளவர்களும்; (ரைக்வ-யாஜ்ஞவல்க்யாதிகளை எடுத்துக் கூறும் உபநிஷத்துக்கள் அதற்கு மேலாக நம் ஆசார்யர்களின் வரலாற்றை எடுத்துக்கொண்டாடினால் இது தகும் இவர்களல்லவோ பரமதநிரஸநம் செய்தவர்கள் என்றபடி आश्वास्य = நம்பத் தகுந்த शरण्य = நம்பிக்கைக்குக் காரணமான ரக்ஷணோபயுக்த கல்யாண குணங்கள் நிறைந்த दम्पति திவ்ய தம்பதிகளுடைய दया க்ருபையாகிற दिव्यापगा கங்கையை व्यापकाः எங்கும் பரவச்செய்கிறவர்களும் (व्यापयन्ति इति

इत्थं हृत्पद्मसिंहासनरसिकहयग्रीवहेषोर्मिघोष-
क्षिप्तप्रत्यर्थिदृप्तिर्जयति बहुगुणा पङ्क्तिरस्मद्गुरूणाम् ।
दिक्सौधाबद्धजैत्रध्वजपटपवनस्फातिनिर्धूततत्त-
त्सिद्धान्तस्तोमतूलस्तबकविगमनव्यक्तसद्वर्त्मनीका ॥ 3.

---

**व्यापकाः)** **संघर्ष**=போட்டியென்ன **विप्लव**=ப்ராந்தி என்ன **विप्रलम्भ** வஞ்சனை யென்ன **पदवी** இவை நடமாடும் வழிக்கு **वैदेशिकाः** புறம்பான தேசத்திலிருப்பவர்களுமான **नाथादयः** நாதமுநிகள் முதலான **देशिकाः** ஆசார்யர்கள் **अपोढ-मन्मथ-शर-उन्माथाय ; अपोढ** விலக்கப்பட்ட **मन्मथशर** காமபாணத்தினுலான **उन्माथाय** ஹிம்ஸையை உடைய—காமபாணத்தினுலாம் ஹிம்ஸையிலிருந்து தங்களால் விலக்கப்பட்டவனுன என்றபடி, **मह्यं** என்பொருட்டு **इह** பரமபதம் சென்ற பிறகு போல் இங்கும் **स्वदन्ताम्** ருசிக்க வேண்டும்; போக்யர்களாகுக **अपोढ** இத்யாதியால் அவர்கள் என்னுடைய ராகத்வேஷாதிகளைத் தாங்களே விலக்கி எனக்கு போக்யமாக வேண்டுமென்று விவக்ஷித்தபடி **अत्यन्त** இத்யாதியால் ஞாந வைராக்ய–ஆசாராதி சிறப்பைச் சொன்னதாம். **श्रद्धातव्य** இத்யாதியால் திவ்யதம்பதிகளுக்கு மேலான தயாபூர்த்தி என்கிற ஆசார்ய மஹாகுணம் அருளப்பெற்றது. **संघर्ष** இத்யாதியால் ஒரு தோஷமும் இல்லாதவர் என்றதாம்.

இக் குருபரம்பராஸாரத்தில் பரமாசார்யரான ஸர்வேச்வரன் பலவிதமான உபகாரம் செய்திருந்தும் ஆசார்ய முகமாக அவதரித்துச் செய்ததே விசேஷமாகும் **स्वमतस्थापन**ம் போல் **परमतनिरसन**மும் ப்ரதானமான கார்யமாயிற்றே என்று கீழ்க் கூறிய அர்த்தத்தைக் கூறும் **निगमन**ச்லோகம் **इत्थं** இத்யாதி. **इत्थं**=கீழ்க்கூறியபடி பரமபோக்யமான, **बहुगुणा** மற்ற குருபரம்புரையைவிட அதிக குணங்களைப் பெற்ற **अस्मद्गुरूणां पंक्तिः** நம் ஆசார்ய பரம்பரை **हृत्पद्म**—அந்தந்த ஆசார்யனின் ஹ்ருதய கமலமாகிற **सिंहासन** சிங்காசனத்தில் **रसिक**=ஸ்வஸ்த்தாநத்தை விட்டு வீற்றிருக்க விருப்பமுடைய **हयग्रीव** வித்யாதிதேவதையின் **हेषा ऊर्मि-घोष**=மோதும் அலைகள் மூலமான இரைச்சல் போன்ற கனைப்புக்களால் **क्षिप्त** வெகுதூரம் எறியப்பட்ட **प्रत्यर्थिदृप्तिः** ப்ரதிவாதிகளின் கர்வத்தை யுடையதும்; வாதம் செய்யும் போது வாதிகளின் கர்வத்தைப் போக்க அலைகள் போல் மேன்மேலான் ஆசார்யர்களின் கண்ட கோஷமானது அவர்கள் கோஷமல்ல; அவர்களின் ஹ்ருதயகமலத்தில் விரும்பி வீற்றிருக்கும் ஹயக்ரீவனும் எம்பெருமானின் கனைப்புகளே என்றபடி.

**दिगित्यादि.** **दिक्** எட்டு திக்குகளாகிற **सौध** உப்பரிகைகளில். **आबद्ध** நாட்டப்பட்ட **जैत्र** ஜயசீலங்களான **ध्वज** த்வஜங்களின் (நுனியிலிருக்கும்) **पट** வஸ்த்ரங்களில் உண்டான **पवन** காற்றின் **स्फाति** அபிவிருத்தியால் **निर्धूत** தூரத்தில் தள்ளப்பட்ட **तत्तत्सिद्धान्तस्तोम** அந்தந்த சித்தாந்தத் திரளான **तूल-**

**ஆரண நூல்வழிச்செவ்வை அழித்திடு மைதுகர்க்கு ஓர்
வாரணமாயவர்வாதக்கதலிகள்மாய்த்தபிரான்
ஏரணிகீர்த்தி யிராமானுசமுனி யின்னுரைசேர்
சீரணிசிந்தையினேம் சிந்தியோமினித் தீவினையே. 4.**

---

**सवक** பருத்திக் கொத்துக்களுடைய **विगम** விலக்கினால், அப்புறப்பட்டமையால் **व्यक्त** ஸ்பஷ்டமான பரிசுத்தமான **सद्वर्तनीका** ஸத்ஸித்தாந்தமான வழியை யுடையதுமாய். (**क** என்றது **बहुव्रीहि**யில் வந்த ககரம்) **जयति** சிறந்து விளங்குகிறது. **परमतभङ्ग**மாவது. வாதப்போரில் நேரில் வெல்வதாலும் க்ரந் தங்களை எழுதிக் கண்டிப்பதாலும். இருபடியுமாகும். **घोषाक्षर** என்றதால் முதல்படியும் **ध्वजपट** என்றதால் இரண்டாம்படியும் கூறப்பெற்றதாம். க்ரந்தத்தை **जयध्वज**பட்டிகையாக சதுச்ச்லோகீ பாஷ்யத்திலும் தத்வடீகை யிலும் அருளிச் செய்தாரே.

குருபரம்பராநுஸந்தாநம் போக்ய மாகவேண்டுமென்பதால் **"आचार्यवंशो ज्ञेयः", "गुरुनाम सदा जपेत्" इत्यादि** விதிகள் இந்த ரஸாநுபவத்தில் ஸ்வத; ப்ரவ்ருத்தி யில்லாதார்க்கே முக்யமாகும். பகவத் பாகவத ஆசார்ய விஷய பக்த்யாதிகளிலே ஆசார்ய விஷய பக்த்யாதிகளின் சிறப்பையும் அதனால் எம்பெருமானுக்கு அதிசயிதமான உகப்பையும் ப்ரமாண மூலமறிந்து ஸ்வரூப குண உபய மூலகமான தாஸ்யத்தில் ஸ்வயமே இழிந்தவர்களுக்கு, அவச்ய மான ஸமயத்தில் அவ்வநுஸந்தானத்தை விட்டால் தோஷம் என்பதை அறிவிப்பதற்கே அவ்விதிவாக்யம் அறியப்படும்.

இக் குருபரம்பரையின் மேன்மைக்கு முக்ய காரணமான மூன்று முநிகள் விஷயமான விசேஷாநுஸந்தாநம் இனி மூன்று பாட்டுக்களாலே ஆகிறது ஸ்வாசார்யனுக்கு நெருங்கினவரான படியாலே கீழே ஆதரித்த க்ரமத்தை யநுஸரித்து எம்பெருமானார்விஷயமாக முதல் பாசுரம். அன்றி. அவர்களில் **नाथोपज्ञ प्रवृत्तं बहुभिरुपचितं यामुनेयप्रबन्धैः** என்றபடி கீதா-சாரீரகாதி தர்சந க்ரந்தங்களுக்கு விசதமாக உரையிட்டு தர்சநப்ரவர்த்தகராக இருப்பதாலே முதலில் எம்பெருமானாரையும், அவருக்கு சிஷ்ய மூலமாகவும் க்ரந்தங்கள் மூலமாகவும் கீதாதிகளுக்கு விசத வ்யாக்யாநம் அருள்வதற்குத் தக்கவாறு ஸித்தாந்த ப்ரமேய நிஷ்கர்ஷம் செய்தருளிய ஆளவந்தாரை யடுத்தபடியாக வும், அதற்கு மூலமாய் ஸ்வயமே பரமத நிரஸநம் செய்து விட்டு நம்மாழ்வார் மூலமாகவும் ஸித்தாந்த நிஷ்கர்ஷம் செய்து அவிச்சின்னஸம்ப்ரதாயத்துக்கு மூலமான நாதமுநிகள்விஷயமாக அதன் மேலும் பாசுரம் ஆரண நூல் இத்யாதி. ஆரணம் = ஆரண்யகம் என்னும் வேதாந்த விஷயமான, நூல் = சாரீரக சாஸ்த்ரம். அதன் வழி = மார்கத்தின் செவ்வை = செவ்வையை ஸ்வரஸகதிக்கான நிலையை, அழித்திடும் = குதர்க்கங்களாலே அழித்து வேறு அர்த்தங்களைப் புகவிட்ட ஐதுகர்க்கு = ஹைதுகர்களுக்கு குத்ருஷ்டிகளுக்கு, ஓர் வாரணமாய் = ஒப்பற்ற யானையாகி அவர் வாதம் கதலி(ளி)கள் = அவர்

**நீளவந்தின்றுவிதிவகையால் நினைவொன்றியநாம்**
**மீளவந்தின்னும் வினையுடம்பொன்றிவிழுந்துழலாது**
**ஆளவந்தாரெனவென்று அருள்தந்து விளங்கியசீர்**
**ஆளவந்தாரடியோம் படியோமினியல்வழக்கே. 5**

---

களுடைய வாதங்களாகிற வாழைகளை, மாய்த்த = அழித்தவராய் பிரான் = மஹோபகாரம் செய்தவரும், ஏர் அணி = உலகுக்குத் தகுந்த அலங்காரமான கீர்த்தி = புகழை உடையவருமான இராமானுச முனி = ஸ்ரீபாஷ்யகாரர் என்னும் யதீந்த்ரருடைய இன் உரை = இனிய ஸ்ரீஸூக்திகளிலே சேர் = ஆழ்ந்தவையும், சீர் அணி = அவற்றில் அருளிச்செய்யப்பட்ட விசேஷார்த்தங்களை அலங்காரமாகப் பெற்றவையுமான சிந்தையினோம் = சிந்தநாவ்ருத்திகளை, அல்லது சீரணி சிந்தை = அவற்றின் அத்யயநத்தால் ஏற்பட்ட சமதமாதிகளை அலங்காரமாகக் கொண்ட மநஸ்ஸை உடையவரானோம் இனி = இதன் மேல் தீவினை = வேறு சாஸ்த்ர அப்யாஸங்களையும், காம்ய நிஷித்த கர்மங்களையும் சிந்தியோம் = செய்யக் கருதமாட்டோம். சிந்தயினோம் என்றவிடத்தில் **निर्विष्टं यतिसार्वभौमवचसां आवृत्तिभिर्यौवनम्.** என்றதையும் அநுஸந்திக்க.

பெரியமரங்களை முறிக்கும் மதயானைகளுக்கு வாழைத்தோட்டமழிப்பதில் என்ன ப்ரயாசை. வாழைகள் ஒன்றின் பின் ஒன்றாகத் தொடர்ந்து உண்டாகும். நெருக்கமாக உண்டாவதால் ஒன்றுக்கொன்று வளர்ச்சிக்குத் தடையுமாகும். அதுபோல் சாங்கராதி மதங்களில் க்ரந்தங்கள் நூற்றுக்கணக்காக ஒன்றோடொன்று முரண்பாடாக உண்டாயிருக்கின்றன என்று அறிவிப்பதற்காக வாதக்கதளிகள் என்றது.

**நீள வந்து** இத்யாதி. நீள—காலம் நீண்டதால் அநாதியாக வந்து—ம்ருகாதி ஜன்மங்களும் எடுத்து ஸம்ஸரித்து, விதிவகையால் = ஒருவித ஸுக்ருத விசேஷத்தால் இன்று = இப்பிறவியில் மநுஷ்ய சரீரம் பெற்றதால் நினைவு = க்ருத்யாக்ருத்யாதி விவேகத்திற்கான பழைய வாஸனை, ஒன்றிய நாம் = சேரப்பெற்றிருக்கும் நாம், மீளவந்து = மீண்டும் ஸம்ஸாரத்திலே இழிந்து இன்னும் = இதற்குப் பிறகும், வினை உடம்பு ஒன்றில் = கர்மமூலமான ஒரு சரீரத்தில்கூட விழுந்து உழலாது = புகுந்து அவஸ்த்தைப்படாதபடி. இதற்கு அடியோம் என்ற இடத்தில் அந்வயம். ஆள = ஆள்வதற்கு வந்தார் = ஸபைக்கு எழுந்தருளினார் என = என்னும்படி வென்று = மதாந்தரவாதிகளை ஜயித்து. அருள் தந்து = ராஜதம்பதிகளிடமும் பரிஜநங்களிடமும் ஸ்ரீவைஷ்ணவ ஸமாஜத்தினிடமும் க்ருபை செய்து, விளங்கிய க்ரந்தங்கள் மூலமாகவும் ப்ரவசந மூலமாகவும் எங்கும் ப்ரகாசித்த கல்யாண குணங்களையுடைய ஆளவந்தார் = பகவத்யாமுநமுநிகளுக்கு அடியோம் = தாஸர்களானோம். இனி = இதன் பிறகு அல்வழக்கு = அபார்த்தங்களை சொல்லும் சாஸ்த்ரங்களை படியோம் = படிக்கமாட்டோம் அன்றி, அல்வழக்கு = அக்ரமமான கார்யங்களிலே படியோம் = படியமாட்டோம் இழியமாட்டோம்.

காளம்வலம்புரியன்ன நற்காதலடியவர்க்குத்
தாளம்வழங்கித் தமிழ்மறை யின்னிசை தந்தவள்ளல்
மூளும் தவநெறிமூட்டிய நாதமுனிகழலே
நாளும் தொழுதெழுவோம் நமக்கார்நிகர் நானிலத்தே. 6.

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य
वेदान्ताचार्यस्य कृतिषु श्रीगुरुपरम्परासारस्संपूर्णः

—०—०—

காளம் இத்யாதி. காளம்–காஹளம் திருச்சின்னவாத்யம், வலம்புரி–சிறந்த சங்கம், அன்ன = இவ்விரண்டுக்கு ஸமானராய் சுத்தமாய் ச்ரேஷ்டமான குரல் உடையராய், நற்காதல் = நல்ல பக்தியும் ஆஸ்த்தையுமுடையவரான அடியவர்க்கு = தம்மை ஆச்ரயித்திருந்த, கீழகத்தாழ்வான் மேலகத்தாழ்வான் என்ற இருவர்களுக்கு தாளம் வழங்கி = தாளகீதசாஸ்த்ரத்தில் பயிர்ச்சியை உண்டுபண்ணி, தமிழ் மறை = நம்மாழ்வாரிடமிருந்து பெற்ற நாலாயிர த்ரமிடவேதத்தை இன் இசை = போக்யமான பண்களோடு தந்த = உபதேசித்தவரும், வள்ளல் = ந்யாய தத்வ–யோகரஹஸ்யங்களை அருளிச்செய்து மதஸ்தாபநம் செய்தவரும், மூளும் = எல்லோரும் இழியக்கூடிய தவம் நெறி = உயர்ந்த தபஸ்ஸான ப்ரபத்தி மார்கத்திலே மூட்டிய = எல்லோரையும் இறங்கச்செய்தவருமான நாதமுநி = ஸ்ரீபகவன்நாதமுநிகளுடைய கழல் ஏ = திருவடிகளையே நாளும் = ப்ரதிதிநமும் தொழுது = நமஸ்கரித்து எழுவோம் = உஜ்ஜீவிப்போம். அல்லது உஜ்ஜீவிக்கின்ற, நமக்கு, நால் நிலத்தே = நாலுவிதமான ப்ரதேசங்களையுடைய-பல ப்ரஜைகள் நிறைந்த-பூமியில் ஆர் நிகர் = யார் ஸமராவர்? இந்த உபயவேதாந்த ஸத்ஸம்பரதாயத்திற்கு ஈடான ஸன்மார்கம் வேறு பூமியில் கிடையாது என்றபடி. நானிலங்கள் மருதம் நெய்தல் குறிஞ்சி முல்லை என்ற நான்கு ப்ரதேசங்கள், ப்ரஜைகள் வஸிக்குமிடம். பாலை என்கிற ஐந்தாம் ப்ரதேசமும் உண்டு, அதில் யாரும் வஸிப்பதில்லையாகையாலே அது விடப்பட்டது. மருதம்–வயல்ப்ரதேசம் நெய்தல்–கடலும் கடல் சார்ந்தவிடமும், குறிஞ்சி–மலைசார்பு. முல்லை-காடும் அது கூடுமிடமும்.

குருபரம்பராஸாரவிஸ்தரம் முற்றிற்று.

श्रीः

ஸாரவிஸ்தரம்

श्रीगीता-ब्रह्मसूत्र-द्रमिडनिगम-तद्व्याक्रियार्थोपदेशो
यन्मूलास्ता गुरूणामिह मम हि यथा पंक्तयो हृद्विभूषाः।
तद्वत् श्रीमद्रहस्यत्रयगतपदवाक्यार्थवैविध्यदर्शि-
न्येषा श्रेष्ठाऽऽर्यपंक्तिर्हृदि लसतु सदा यद्बलान्मुक्तिलाभः॥

முமுக்ஷுக்கள் அப்யஸிக்கும் முக்ய க்ரந்தங்களுக்கெல்லாம் குருபரம்பராநுஸந்தாநம் வேண்டுமென்பதைப் பொதுவாக பூமிகையில் நிரூபித்தருளி இனி ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரம் என்கிற க்ரந்த மூலமாக ரஹஸ்

श्रीः

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

श्रीमान् वेङ्कटनाथार्यः कवितार्किककेसरी ।
वेदान्ताचार्यवर्यो मे सन्निधत्तां सदा हृदि ॥
विगाहे निगमान्तार्यविष्णुपादसमुद्भवाम् ।
रहस्यत्रयसाराख्यां त्रिस्रोतसमकल्मषाम् ॥
अविज्ञातं विजानतां विज्ञातमविजानताम् ।
रहस्यत्रयसाराख्यं परं ब्रह्मास्तु मे हृदि ॥

—०—०—

# श्रीमद्रहस्यत्रयसारः

ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரம்

—०—०—

## उपोद्घाताधिकारः

உபோத்காதாதிகாரம். (1.)

आ भगवत्तः प्रथितामनघामाचार्यसन्ततिं वन्दे ।
मनसि मम यत्प्रसादात् वसति रहस्यत्रयस्य सारोऽयम् ॥ 4.

---

*யார்த்தங்களை உபதேசிக்கப் போகின்றவராய் முதலில் அதற்கான குருபரம்பரையை விசேஷித்து வந்தனம் செய்கிறார் **ஆபகவத்தः** இதி உத்தரார்த்தத்திற்கு முதலில் அர்த்தம் அநுஸந்தித்து, பிறகு பூர்வார்த்தத்தை அநுஸந்திக்க. **रहस्यत्रयस्य**= திருவஷ்டாக்ஷரம் த்வயம் சரமச்லோகம் என்கிற மூன்று ரஹஸ்யங்களுடைய **अयम्**= மேலே சொல்லப்போகிற **सारः**= ஸாரமான பொருளெல்லாம் **मम**–என்னுடைய **मनसि**-மனத்தில் **यत्प्रसादात्**–எந்த குருபரம்பரையின் அநுக்ரஹத்தினால் **वसति**= நிலைத்திருக்கின்றதோ, (**ताम्**= அந்த) **अनघाम्**= தோஷமற்ற **आभगवत्तः प्रथिताम्**= பகவான் வரையில் அல்லது பகவான் முதல் ப்ரசித்தமான **आचार्यसन्ततिम्**–குருபரம்பரையை **वन्दे**–வணங்குகிறேன். ப்ரசித்தமான குருபரம்பரையை ஆபகவத்தோ வந்தே = பகவான் வரையில் விடாமல் ஸேவிக்கிறேன் என்றும் ச்ருதியை யநுஸரித்து அன்வயிப்பர்.*

*இந்த ரஹஸ்யார்த்த குருபரம்பரை எம்பெருமானுக்குப் பிறகு மடைப்பள்ளி யாச்சான் முதலான மஹான்களை உட்கொண்டிருக்கும் என்று க்ரந்தத்தின் முடிவினின்று தெரியவரும். இதைக் குறிப்போடு இப்படி தமக்கு ரஹஸ்ய த்ரயத்திற்கு ஸாக்ஷாத் ஆசார்யரான அப்புள்ளாரே ஸ்ரீபாஷ்யாதி ஸித்தாந்த க்ரந்தங்களுக்கும் ஆசார்யர் என்கிற ஏற்றத்தை வெளிப்படுத்திக்கொண்டு **विशिष्य स्वाचार्यवन्दनम्** மேலே செய்கிறார் **कर्मेति**. வேதாந்தக்ரந்தங்களிலே நிர்ணயிக்கப்பட்ட தத்துவ ஹிதபுருஷார்த்தங்களை யல்லவோ விரிவாகவும் ரஹஸ்ய த்ரயத்தில் அடக்கியும் காண்பிக்கப் போகிறார். இங்கு ப்ரஹ்மா*

**कर्मब्रह्मात्मके शास्त्रे कौतस्कुतनिवर्तकान् ।**
**वन्दे हस्तिगिरीशस्य वीथीशोधककिङ्करान् ॥ 5.**

---

த்மகே என்றவிடத்தில் ப்ரஹ்மாச்ரயே என்கிறபாடமும் ஸாரப்ரகாசிகையில் உல்லேகிக்கப்பட்டிருக்கிறது. **कर्म-ब्रह्मात्मके**=பதினறு அத்யாயம் வரையில் தர்மத்தை ஆத்மாவாக–உயிராக ஸாரார்த்தமாக உடையதும் மேல் நாலத்யாயங்களில் ப்ரம்மத்தை ஸாரமாக உடையதுமான **शास्त्रे**=முழு மீமாம்ஸா சாஸ்த்ரத்தில் **कर्मकाण्ड–ब्रह्मकाण्डरूप** வேதம் முதலான சாஸ்த்ரத்தில் என்னவுமாம். **कौतस्कुतनिवर्तकान्. कौतस्कुत**=இவ்வாறு ஏன் என்று ஒவ்வொன்றையும் ஆக்ஷேபிக்கிற வாதிகளை **निवर्तकान्**=வென்று விலக்குகின்றவரும் இந்த யோக்யதைக்குக் காரணத்தை மேலே குறிக்கிருர். **हस्तिगिरीशस्य**=அத்திகிரி நாதனை தேவப்பெருமாளுடைய **वीथी**=ஸஞ்சாரமார்கத்னத **शोधक**–சோதிக்கின்ற அம்மாளுக்கு **किङ्करान्**=அடிமையுமான அப்புள்ளாரை **वन्दे**= வணங்குகிறேன். இதனல் மடைப்பள்ளியாச்சான்மூலமாக ரஹஸ்யார்த்தமும், நடாதூரம்மாள் வரையிலான வேறு பரம்பரா மூலமாக வேதாந்தார்த்தமும் அப்புள்ளாரிடம் ஒன்று சேர்ந்து தம்மிடம் தங்கும் என்றதாயிற்று. வரதனுடைய வீதியாவது வரதன் எழுந்தருளும் மார்க்கமே என்று கொண்டால் இவ்வர்ச்சாமூர்த்தியின் விசேஷ கைங்கர்யத்தில் ஈடுபட்டதைச் சொன்னதாகும். வீதி என்பதாலே பக்தி ப்ரபத்தி முதலானவற்றைக் கொண்டால் அவை ஹஸ்திகிரீச வீதியாகை, அவனை விஷயமாகக் கொண்டதாலாம். அவற்றை சோதிப்பதாவது அவற்றினுடைய உண்மையான ஆகாரங்களை விசதமாகத் தெளிவிப்பதாம். அம்மாளுக்கு கிங்கரராக ஆனமையால் **कौतस्कुतनिवर्तकत्वम्** அப்புள்ளாருக்கு. **कर्मब्रह्मात्मके** என்கிற சொல்லிலிருந்து **कर्मब्रह्मावमर्शप्रभवबहुफलं...शास्त्र**மென்கிற அப்புள்ளார் தனியன் நினைவுறும். ஆக இது அப்புளார் விஷயமே. சோதககிங்கரான் என்றதற்கு சோதகரான கிங்கரர் என்று பொருள் கொண்டால் சோதகத்வம் கௌதஸ்குத நிவர்த்தகத்வம் இரண்டும் ஒருவருக்கே சொன்னதாகும், அநேகமாக இரண்டு விசேஷணமும் ஒரே பொருளில் முடிவதாகலாம். ஆனாலும் நிரீச்வர மீமாம்ஸகர்களும் சாங்க்ராதிகளும் கூட தங்களுடைய மதத்தில் நின்றே கௌதஸ்குத நிவர்த்தநம் செய்யலாம். அவ்வாறின்றி பகவதாராதநமாக கர்ம உபாஸநாதிகளைச் செய்து ஹஸ்தி கிரீசவீதி சோதநம் செய்து கௌதஸ்குத நிவர்தநம் செய்வதென்பது இரண்டாவது விசேஷணம் இருந்தால் தான் ஸ்பஷ்டமாகும் இவ்வர்த்தம் பலவித கிங்கரர்களிலே சோதகரான கிங்கரர்கள் என்று கர்மதாரயத்திலும் சோதகர்களுக்குக் கிங்கரர்கள் என்ற ஷஷ்டீ தத்புருஷனிலும் தெரியவரும். **हस्तिगिरीशवीथि** என்பதற்கு அவனை அடையும் வீதியென்பது போல் அவன் காட்டிய வீதியென்றும் பொருளாம் அத்திகிரியில் ஆளவந்தார் செய்த சரணுகதியின் பலனுக எம்பெருமானரை யாதவ ப்ரகாசனிடமிருந்து பிரித்து, தன் இடம் பெறுவித்து, திருக்கச்சிநம்பிமூலம் ஆறு வார்த்தைகளை

**ஆளுமடைக்கலமென்றெம்மை யம்புயத்தாள்கணவன்**
**தாளிணை சேர்ந்தெமக்குமவை தந்த தகவுடையார்**
**மூளுமிருட்கள் வி(ள்)ள முயன்று ஓதியமூன்றினுள்ளம்**
**நாளுமுகக்கவிங்கேநமக்கோர் விதிவாய்க்கின்றதே. 7.**

---

யறிவித்து, பெரியநம்பிகளை யாச்ரயிப்பித்துக் காட்டிய வீதி அதனை சோதி த்து தர்சன ஸ்த்தாபனம் செய்தருளியவர் எம்பெருமானார். அவருக்கு கிங்கரர்களை யென்னலுமாம். ஹஸ்திகிரீச வீதிகள் தென்கலை வடகலை வீதிகள் உபயவேதாந்த க்ரந்தங்கள் அவற்றிற்கு சோதகரென்னலுமாம், சோதகர்களான தம்மைப் போன்ற சிஷ்யர்களைக் கிங்கரர்களாக உடையவரென்று **பஹு-வ்ரீஹிஸமாஸ**முமாம். இங்கே வீதி சோதககிங்கர பதத்தினாலே பெருமாள்ஸன்னிதியில் திருப்பணி செய்து கொண்டு ஸ்ரீதேசிகனுக்குத் திருவாய்மொழியையும் (வரதன் விஷயமான) சில அர்த்த விசேஷத்தையும் உபதேசித்த மஹானைக் குறிப்பதாயும் உரைப்பர். அப்போதும், பூர்வார்த்தம் அப்புள்ளார்விஷயமென்பதே ஸ்வரஸம். "கண்ணன் கரிகிரிமேல் நின்று அனைத்தும் காக்கின்றானே" என்று க்ரந்த மத்யத்திலும் ஹஸ்திகிரீசனை அநுஸந்திப்பர்.

உபதேசம் தொடங்குவதற்கு முன்னே ஆசார்ய வந்தநம் செய்துவிட்டு உபதேசம் தொடங்குவதை மிக்க ஆஸ்த்தையுடன் சிஷ்யர்களிடம் மகிழ்ந்து சொல்லுகிறார். **ஆளும்** இத்யாதி இப்பாசுரமும் முழு க்ரந்தத்திற்கும் மூலமானது முதலதிகாரார்த்தம் மேலே தொடங்கப்படும். சாஸ்த்ரார்த்தத்தை அநுஷ்டான பர்யந்தம் ஆக்கிக்கொண்டு ஆசார்யர்கள் எமக்கு உபதேசித்த அர்த்தங்களை நித்யம் அநுஸந்திக்க நமக்கு வாய்த்தது ஒரு பாக்யம் என்றபடி. எம்மை= தாளிணை சேர்ந்தால் நம்மை, அடைக்கலம்= ரக்ஷ்ய வஸ்துவாக ஆளும்= ரக்ஷிப்பான் என்று= என முடிவு செய்துஅடைக்கலம் என்பதற்கு புகலிடம் என்ற பொருளும் உண்டு. எம்மை ஆள்கின்ற புகலிடம் இவன் என்று முடிவு செய்து எனவும் உரைக்கலாம். அம்புஜத்தாள் கணவன்= ச்ரிய:பதியினுடைய தாளிணை= ஒன்றுக்கொன்றே ஒப்பான திருவடிகளை சேர்ந்து—தாங்கள் உபாயமாக வரித்து, எமக்கும்—சிஷ்யர்களான எமக்கும் அவை= அத்தாளிணையை தந்த= உபாயமாக உபதேசித்த தகவு உடையார்= க்ருபை பொருந்திய ஆசார்யர்கள், மூளும் இருள்கள்= விரைவில் எவ் விஷயத்திலும் பரவக்கூடிய= அஜ்ஞாந அந்தகாரங்கள் விள்ள= அழியும்படி முயன்று= ப்ரயாஸப்பட்டு. ஓதிய= எமக்கு உபதேசித்த மூன்றின் உள்ளம்= ரஹஸ்யத்ரயத்தின் உட்பொருளை நாளும்= எப்பொழுதும் உகக்க= அநுபவித்து ஆனந்தப்பட ஓர் விதி= ஒப்பற்ற பாக்யமானது நமக்கு= இக்குரு பரம்பராஸம்பந்தம் பெற்றவர்களுக்கு வாய்க்கின்றது= தானே வந்து சேருகின்றது. இந்த க்ரந்தத்தில் சரணாகதி மாத்ரத்தாலே மோக்ஷம் என்பதை விரிவாக அருளிச்செய்யப் போகிறார் இது அநுஷ்டாநத்திற்கு வராததாய் கேட்பதற்கு ஆனந்தமான பேச்சே யாகும். அப்படியானால் துல்ய ப்ரமாண

मणिवर इव शौरेर्नित्यहृद्योऽपि जीवः
कलुषमतिरविन्दन् किङ्करत्वाधिराज्यम् ।

---

த்தாலே அஞ்ஜலி–நாமோச்சாரணுதிகள் கூட ஸாதநமாகலாம் என்று ஆக்ஷேபிக்கிறவர்களுக்கு உத்தரமாகும் இங்கு பூர்வார்த்தம். இது அநுஷ்டானமில்லாத உபதேசமல்ல. அநுஷ்டாநமும் வஞ்சனைக்காக அல்ல. ப்ரபத்தி சாஸ்த்ரார்த்தத்தில் ஆசார்யர்களுக்கு உள்ள தெளிவும் அவர்களுக்கு நம்மிடம் உள்ள தகவுமே உபதேசத்திற்குக் காரணம் என்றபடி, சேர்ந்து என்றவளவால் இருஅநுகூலமாய் த்வயார்த்தமான மஹாவிச்வாஸ பூர்வக சரணுகதி அநுஸந்திக்கப்பெற்றது. எமக்கும் அவை தந்த தகவு என்றதால் அர்த்தோபதேசம் சொன்னதாகலாம் ஆச்சார்யநிஷ்டை செய்ததும் சொன்னதாகலாம், அர்த்தோபதேசம் முன்றும் அடியிலிருந்தும் விளங்கும், தாத்காலிக உபதேசம்மட்டுமின்றி க்ரந்தம் அவதரிப்பதாலே எப்பொழுதும் விடாமல் அநுஸந்திக்கலாம் என்ற கருத்தாலே 'நாளும் உகக்க' என்றது. ஓர் விதி= விவேகம் செய்யக்கூடிய மநுஷ்யப்பிறவிக்கும். பாஹ்யகுத்ருஷ்டி மதங்களால் கலங்காமைக்கும் பாக்யங்கள்போல் ப்ரபத்தி சாஸ்த்ரார்த்தத்தில் தெளிவும் நிஷ்ட்டையும் பெறவும் விலக்ஷணபாக்யம் வேண்டுமென்றபடி

ஒவ்வோர் அதிகாரத்திலும் முதலில் ச்லோகமும் முடிவில் பாட்டும் ச்லோகமும் உண்டு, இங்கு முதலாவதான உபோத்காதாதிகாரத்தின் அர்த்த ஸங்க்ரஹமான ச்லோகம் அருளிச்செய்கிறார் மணிவர இதி. உபோத்காதமாவது—மேலே செய்யப்போகிற விசாரம் அவச்யமில்லை என்னும் விபரீத ஞாநமிராதபடி அதனுடைய ஆவச்யகதையைத் தெரிவித்தலாகும், இங்கு ஸம்ஸாரத்தில் தாபத்ரயமிருந்தாலும் ஸ்வதந்த்ரமாக இருப்பதற்கு ஸாதகமாகப் பலவித உபாயங்களைச் செய்து விளங்கலாமாகையாலே இதை விட்டு என்றுமழியாதபடியான ஒருவித அடிமையைப் பெறுவதற்காக முமுக்ஷுவாய் ரஹஸ்யார்த்தக்ரஹணத்திலிழிவது தகாது என்று ஆக்ஷேபம். இதற்கு ஸமாதநம் இவ்வதிகாரம், தேஹாத்மப்ரமம் நேரிட்டிருக்குமிவன் தன் ஸ்வரூபத்தை விவேகிக்கப் புகுந்து சாஸ்த்ரமே அதற்கு ப்ரமாணமென்று அறிந்தபிறகு அது உபதேசிக்கிறபடியே ஸ்வரூபத்தை இசையவேண்டியிருக்கிறபடியால் அது அடிமையே ஆத்மாவுக்கு ஸ்வரூபமென்றும், அது விவேகிக்குச் சிறந்த புருஷார்த்தமென்றும் உபதேசிப்பதை ஆதரிக்க வேண்டும். இது மேலே விஸ்தரிக்கப்பெறும். என்றவாறு பரிஹாரம். பகவதநுபவத்திற்கும் கைங்கர்யத்திற்கும் ஒவ்வொரு ஜீவனும் யோக்யனுக இருந்தும் அநாதி கர்மவசத்தாலே அதை அறியாமல் அதிலிழியாமலிருப்பினும் ஒருஸமயத்தில் பாக்யவசத்தால் பகவத் கடாக்ஷத்தைப் பெற்று ஆசார்யஸம்பந்தம் உண்டாக முக்யமாக அறிய வேண்டியதை அறிந்து தான் இழந்ததைப் பெற்று ஸத்தை பெறுவான் என்று இவ்வதிகாரார்த்தச் சுருக்கம்.

विधिपरिणतिभेदात् वीक्षितस्तेन काले
गुरुपरिषदुपज्ञं प्राप्य गोपायति स्वम् ॥

---

ஜீவ:= ஜீவன். மணிவர:இவ= ரத்னங்களிற்சிறந்த கௌத்துவம்போல சௌரே:= எம்பெருமானுக்கு, நித்யஹ்ருத்ய: அபி =எப்பொழுதும் ப்ரியமாக இருந்த போதிலும் (ஹ்ருதயாலங்காரமாக இருந்த போதிலும்) கலுஷமதி:=கலங்கிய புத்தியை யுடையனாய் ஆத்ம-பரமாத்மவிஷயவிவேகமற்றவனாய், கிங்கரத்வ ஆதிராஜ்யம் = பகவத்கைங்கர்யமாகிற (தனது) ராஜ க்ருத்யத்தை, அவிந்தந்= அடையாதவனாய் (ஆயினும்), விதிபரிணதிபேதாத் =கர்மாக்கள் பரிபக்வமாவதில் வாய்த்த ஒரு வகையால், அதாவது அஜ்ஞாத ஸுக்ருதாதிகள் பலிக்கத் தருணம் வாய்ந்ததால், தேந-அந்த எம்பெருமானாலே, காலே-ஜாயமாநதசையில், (தான் பிறக்கும் பொழுது) வீக்ஷித:= கடாக்ஷிக்கப் பெற்றவனாய், குருபரிஷதுபஜ்ஞம் = ஆசார்யர்களுடைய பரம்பரையால் உபதேசமூலம் முதலில் அறிவிக்கப்படும் மந்த்ரார்த்தாதிகளை, ப்ராப்ய=பெற்று அறிந்து, ஸ்வம்=தன்னை கோபாயதி= காத்துக் கொள்கிறான். கௌஸ்துபமணி ஜீவர்களுக்கெல்லாம் அபிமான தேவதையாம். அது எம்பெருமானுக்கு ஹ்ருத்யமாக இருப்பது. (திருமார்பில் அலங்காரமாக இருப்பது) அது அவனுக்கு ஹ்ருத்யமாய் (ப்ரியமாய்) இருப்பதாலே, அதன் மூலம் பிராட்டியைப் போல் ஜீவர்கள் எல்லோரையும் திருமார்பில் அணைந்து கொள்ள இஷ்டப்படுவது தேறும். அவ்வளவு அபிமானபாத்ரமாக இருக்கும் ஜீவன் தான் எம்பெருமானுக்கு நித்யசேஷபூதன் என்று தெளிந்து அவனுடைய கைங்கர்யத்தில் இழிந்திருக்க வேண்டும். பகவத் கைங்கர்யம் என்பதை நீசமான அடிமைத் தொழிலாக நினைக்கலாகாது. அது ஒரு ஸார்வபௌமபதவீ என்று தெளிய வேண்டும் ப்ரக்ருதி மண்டலத்தில் உள்ள ஸகல ப்ரஜைகளும் இவனை ஸேவித்துப் பெருமை யடைகிறார்கள் என்றால் அது பெரும் ராஜபதவியே. அங்கே துக்க லவ லேசத்திற்கும் இடமில்லை. அதை விட்டு கர்ம பரவசனாய் அதற்கடங்கி, தான் நினைத்தபடி யெல்லாம் செய்ய முடியாதவனாய் ஸம்ஸாரத்தில் திண்டாடி உழன்று வருகிறான். இப்படிப்பட்டவனுக்கும் ஒரு நல்ல காலம் பிறக்கிறது. இவனுக்கே தெரியாமல் இவன் செய்த சில ஸுக்ருதங்களை கவனித்துவரும் பகவான் எப்படியாவது இவனுக்கு ராஜ்யமளிக்க வேண்டுமென்று விரும்பி அந்த ஸுக்ருதம் பலிக்கும் தருணம் பார்த்திருந்து அது வந்தவாறே இஜ் ஜீவன் பிறக்கும்போது ப்ரஹ்ம-ருத்ர கடாக்ஷத்திற்குப் பாத்ரமாக்காமல் தன் கடாக்ஷத்திற்குப் பாத்ரமாக்குகிறான். இப்படி இவன் கடாக்ஷித்திருக்கிறான் என்பதை ஜீவனின் செயலிலிருந்து அறியவேண்டும். ஸத் விஷயத்திலே த்வேஷமின்றி ஸத்ஸஹவாஸத்திலுமிழிந்து தேஹாத்ம விவேகம் பெற்றிருக்க, ஸதாசார்ய ஸம்பந்தமும் ஏற்பட்டு முதலில்

ச்ரிய:பதியான ஸர்வேச்வரனுக்கு श्रीकौस्तुभस्थानीयனைக்கொண்டு
அவர்கள் அறிந்த க்ரமத்திலே மந்த்ரமூலமாகத் தத்துவ ஹித புருஷார்த்தங்களைத் தெளிகிறான். பிறகு உபாயமனுஷ்டித்துத் தன்னை ரக்ஷித்துக் கொள்கிறான் என்றதாயிற்று, குருபரிஷத் இத்யாதிக்கு ஸாரதீபிகையில் குருபதிஷ்ட ஞானமூலமாக स्वम् = தன்னை प्राप्य = அறிந்து என்று உரை செய்யப் பெற்றது. இதனைப் பின்பற்றி ஸாராஸ்வாதிநியில் 'குருபரிஷத் உபஜ்ஞம்' என்பது க்ரியாவிசேஷணம். குருபரிஷத்தினாலே முதன் முதல் உண்டுபண்ணப்படும்படி. स्वं प्राप्य தன்னை அறிந்து. தன்விஷயமான ஞானத்தைப்பெற்று (स्वं गोपायति = தன்னை ஆதி ராஜ்யம் பெற்றவனாக ஆக்குகிறான்) என்றபடி என்றுபொருள்படும்படி உரை செய்பப்பெற்றது.

उपज्ञोपक्रमं तदाद्याचिख्यासायाम् என்று பாணிநி ஸூத்ரம், उपज्ञा என்ற சொல்லுக்கு அறியப்பட்டது அல்லது அறிவிக்கப்பட்டது என்றும் उपक्रम என்பதற்கு தொடங்கப்பெற்றது என்றும் பொருள். पाणिनेः उपज्ञा पाणिन्युपज्ञम्. नन्दस्य उपक्रमः नन्दोपक्रमम् என்று தத்புருஷ ஸமாஸத்தில் नपुंसकलिङ्गமாகிறது. இதுபோல் இங்கும் गुरुपरिषदः उपज्ञा गुरुपरिषदुपज्ञम् என்று விக்ரஹம். उपज्ञा என்று சொல்லப்பட்டஞானமும் उपक्रम என்று சொல்லப்பட்டதொடக்கமும் முதன் முதலானது என்றறிவிக்க விரும்பினால் இப்படி ஸமாஸம் விதிக்கப்பட்டது. ஆக குரு பரிஷதுபஜ்ஞம் என்பதற்கு குரு பரம்பரையால் முதன் முதல் அறியப் பெற்றது என்று பொருளாகும் அறிவிக்கப்பெற்றது என்ற பொருளைக் கொண்டு குருபரிஷத்தினால் அறிந்து ப்ரவர்த்திக்கப்பட்ட என்றும் உரைப்பர். இவனுடைய ஜ்ஞானம் நேராக குருமூலமாயிருக்க வேண்டுமென்பதற்காக இதை प्राप्य என்கிற க்ரியாபதத்திலே ப்ராப்தி (ஞாந) க்ரியைக்கு விசேஷணமாக்கி ப்ராப்ய 'என்பதற்கு ஸ்வம் என்பது கர்ம என்றனர் ச்லோகத்தில் சொற்கள் அமைந்த' க்ரமத்திலேயே 'ப்ராப்ய என்பதற்கு உபஜ்ஞம் என்பதை கர்மாவாக்கி கோபாயதி என்பதற்குமட்டும் ஸ்வம் என்பது கர்ம என்னலாம் அப்பொழுது குருபரிஷதுபஜ்ஞம் என்பதற்கு குருபரிஷத்தினால் முதன் முதல் அறியப்பெற்றதை அல்லது அவர்கள் அறிவுமூலம் ப்ரவ்ருத்தமானதை ப்ராப்ய தான் பெற்று—அறிந்து தன்னை காக்கிறான் என்றதாயிற்று. இப்படி குருபரிஷதுபஜ்ஞம் என்ற சொல்லானது 'ஸாரேயம்' என்று தொடங்கிய விஷயமென்று எளிதிலறியலாம். இச் சொல் இவ்வதிகாரத்தின் முடிவில் அருளப்பெறும் "இத் தேசிகர்......சுரக்கும் பாசுரங்களைக் கொண்டு ...... இவ்வர்த்தங்கள் முமுக்ஷுவான இவ்வாத்மாவுக்கு ஞாதவ்யங்கள்" என்கிற வாக்யார்த்தத்தின் சுருக்கமாகும். ஆக நாம் அறிந்ததை ஆசார்யர் சொன்னார் என்று நினைக்காமல் ஆசார்யர் அறிந்து முதலில்அறிவிக்க அதுமூலம் பெற்றதே நமக்கு கார்யகரமாகும் என்ற தெளிவுடன்முதன் முதல் ஆசார்யர் அறிவிக்க உபதேசப்ரகாரத்தைப் பெற்று என்றதாயிற்று.

முதல் வாக்யத்தாலே ஜீவாத்மா நித்யமாக பகவச்சேஷனென்பதற்கு

हृदयङ्गமனாய், குமாரனென்றும், புத்ரனென்றும், சிஷ்யனென்றும், प्रेष्यனென்றும், शेषभूतனென்றும், दासभूतனென்றும் அவ்வோ சாஸ்த்ரங்களிலே प्रतिपन्नனாயிருக்கும் ஜீவாத்மா. இவன் தனக்கு வகுத்த சேஷியாய், "அயர்

---

ப்ரமாணம் உண்டு என்கிறார். அதன்மேல் வாக்யத்தினால் ஸர்வேச்வரன் தன் அடிமையானவனுக்கு தன்னோடொக்க ஆநந்தத்தை அளிக்கப்பார்க்கும் ஸௌஜந்யத்தையாலே அடிமை போக்யம் என்கிறார். இவ்வளவுநாள் அவ்வாநந்தத்தை யளிக்காமைக்குக் காரணம் மேலே அருளிச்செய்கிறார். அக்காரணத்தை விலக்கி அதை யளிக்க ஆனவரையில் அவன் முயற்சி செய்வதையும் அது பலனளிக்குமென்பதையும் மேலே மொழிவர். இப்பொருளெல்லாம் தெளிவாகப் படுவதற்காக ராஜகுமார த்ருஷ்டாந்தம் கூறப்படுகிறது. இது ஸ்ரீபாஷ்யத்தில் ஸமந்வயாதிகரணத்திலும் சாங்கரபாஷ்யத்திலும் அதற்கு முன்னே த்ரமிடபாஷ்யத்திலும் சொன்னதொன்றாகும் அதை நன்கு ஸமந்வயப்படுத்துவதற்காக விஸ்தாரப்படுத்தியது இங்கே விசேஷம். ராஜகுமாரத்ருஷ்டாந்தம் அத்வைத மதத்திற்குச் சேராது பிதா புத்ரனுக்கு முடிசூடி தனக்கு ஸமமாக்குகை என்பது பேதபக்ஷத்தில்தான் பொருந்தும்.

முதலில் ச்ரிய:பதியான என்ற விசேஷணம் இருவருக்கும் இவன் அடிமை என்பதை அறிவிப்பதற்காக. கௌஸ்துபஸ்தாநீயனாய்க் கொண்டு ஹ்ருதயங்கமனாய் என்பது மணிவர 'இவ' சௌரே: 'நித்யஹ்ருத்யோऽபி என்பதின் விவரணம். கொண்டு என்பதால் இருப்பதாலே என்றதாம். கௌஸ்துபஸ்தாநீயனாகையாவது கௌஸ்துபம்போல் மதிக்கப்பட்டிருக்கை. கௌஸ்துபமாகிற அதிஷ்டாந தேவதைக்கு ஸம்பந்தப்பட்டிருக்கையுமாம். ஹ்ருதயங்கமன் என்பதற்கு மார்பை யடைந்தவன் என்றும் மனத்திற்கு ப்ரியமானவன் என்றும் பொருள். இதனால் உடையவனை விட்டு உடைமை எப்படி ஸ்வதந்த்ரமாக ஆகாதோ, அப்படியே ஜீவன் என்று குறிக்கப்பட்டது. குமாராதி சப்தங்களை ச்ருதிஸ்ம்ருதிகளில் கண்டுகொள்வது அவ்வோ = அந்தந்த. மந்த்ரிகோபநிஷத்தில் "पिबन्त्येनां अविषमां अविज्ञाताः कुमारकाः । एकस्तु पिबते देवः स्वच्छन्दः" தேவனுடைய குமாரர்களான ஜீவர்கள் அறியாமையாலே மூலப்ரக்ருதியை அநுபவிக்கின்றனர் என்றது. "पिता पुत्रेण पितृमान् योनियोनौ" என்கிற ச்ருதி தன் பிள்ளையைத் தனக்குத் தகப்பனாக்கிக் கொண்டு அவதரிக்கிறான் பரமாத்மா என்று புத்ரபாவத்தைச் சொல்லிற்று. இப்படி "शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम्" "प्रेष्यस्य क्षमितव्यं मे" "ज्ञानानन्दमयस्तु आत्मा शेषो हि परमात्मनः" "दासभूतास्स्वतः सर्वे ह्यात्मानः परमात्मनः" இத்யாதி வாக்யங்களைக் கொள்க. இவ்வளவால் சேஷத்வம் என்ற உறவு ஒழிக்க ஒழியாது என்றதாயிற்று. ச்லோகத்திற்போல ச்ரிய:பதியான என்று தொடங்கி முழுமையும் ஒரே வாக்யமென்பதுண்டு. அப்போது ப்ரதிபன்னனாயிருக்கும் ஜீவாத்மா என்பதற்கு அறியப்பட்டிருக்கிற ஜீவாத்மா.

வறும் அமரர்கள் அதிபதியாய், உயர்வற உயர்நலமுண்டயவனாய், நமக்கும் பூவின்மிசை நங்கைக்கும் இன்பனாய், ஞாலத்தார்தமக்கும் வானத்தவர்க்கும்

---

என்றும் இவ்ன்தனக்கு என்பதற்கு இவனுக்கு என்றும் பொருளாம் தனி வாக்யமாக்குவதே ஸ்வரஸமாகில் ஜீவாத்மா சாஸ்த்ரகளில் குமாராதி பதங்களாலே நித்யசேஷனாக அறிவிக்கப் பட்டிருக்கிறான் என்பது பொருள். ஆகையால் சேஷத்வம் இன்றியமையாதது. மேலே இவன் இத்யாதி வாக்யத்திற்கு இவ்வதிகாரத்தின் முடிவில்!சிறிது முன்பே முடிவு. இவன் என்கிற கர்த்தாவுக்கு மேலே यथावत्प्रकाशरहितனாய் என்றவிடத்திலும், பிறகு "வேற்றுருக்கொண்டு நிற்க" என்றவிடத்திலும் அந்வயம் தனக்கு இத்யாதியால் எம்பெருமானுக்கு சேஷித்வத்தையும் ஸர்வேச்வரத்வத்தையும் நித்யாநந்தானுநுபவத்திற்குத் தக்க நித்யவிபூதியுடைமையையும், மிக்க ஆவலோடு விடாமல் நித்யஸூரிகளாலே பரிசரிக்கப்படுவதையும் அவ்வளவிருந்தும் ஸம்ஸாரிகளான ஜீவர்களுக்கும் அந்நிலை பெறுவிக்க அவன் மநோரதித்திருக்கிறபடியையும் அறிவிக்கிறார். தனக்கு வகுத்த சேஷியாய் இந்த ஜீவாத்மாவுக்குப் ப்ராப்தமான = ஸ்வபாவஸித்தமாக ப்ரமாணத்தால் அறியப்பட்ட ஸ்வாமியாய். இதனால் ஸம்ஸாரத்திலே ராஜாதிகளும் தேவதாந்தரங்களும் சேஷியாகை கர்மாதீனம். எம்பெருமான் சேஷியாவது ஸ்வரூப ப்ராப்தம். அதை விரும்பாமல் விட முயற்சி செய்வது அதிக அநிஷ்டத்திற்கே காரணமாகும் என்றபடி. நித்ய ஸூரிகளே அடிமையாயிருக்கும் பொழுது அஜ்ஞாநியான இவன் அதை வெறுப்பது தகுமோ என்று அறிவிக்கிறார் மேலே.

அயர்வறுமமரர்கள். அயர்வு = மறதி = அஜ்ஞாநம், அறும் = அற்றிருக்கிற அமரர்களுக்கு = தேவர்களுக்கு நித்ய ஸூரிகளுக்கு மிகவும் மேம்பட்ட ஸ்வாமியாய், நமக்கு மட்டும் அதிபதியல்ல; ப்ரும்மாதி தேவர்களுக்குமட்டுமதிபதியல்ல; அஜ்ஞாநம், அறிந்ததை மறப்பது என்கிற தோஷமின்றி எல்லாமறிந்திருக்கும் நித்யஸூரிகளுக்கும் நாதன். அதிபதி என்றவிடத்தில் அதி என்பது மிகவும் மேலானமையைக் காட்டுவதால் நமக்கும் நித்யஸூரிகளுக்கும் உள்ள வாசியைப் போல் நித்யஸூரிகளுக்கும் எம்பெருமானுக்கும் மிக்க வாசியுண்டு என்று அறிவித்ததாம். அவச்யமான கல்யாண குணபூர்த்தியைச் சொல்ல உயர்வு இத்யாதி. உயர்வு = உயர்ச்சி அற = வேறொன்றுக்குத் தம்மைவிட உயர்ச்சி இராதபடி உயர் = உயர்ந்த (அநவதிகாதிசயமான—ஸர்வோத்க்ருஷ்டமான) நலம் = கல்யாண குணங்களையுடையவன். இம் மஹாபுருஷனுக்கு நம்மிடத்திலே அன்பு தன் திவ்ய மஹிஷியான அலர்மேல்மங்கையிடம் தனக்குள்ள அன்புக்குக் குறையாதது என்கிறார் நமக்கும் இதி. பூவின்மிசை = தாமரைப்பூவின் மேலே வஸிக்கும் நங்கை = கல்யாண குணபூர்ணை லக்ஷ்மீ, இன்ப

பெருமாளுன ஸர்வேச்வரன், "वैकुण्ठे तु परे लोके श्रिया सार्धं जगत्पतिः । आस्ते" என்றும், "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலா நிற்ப" என்றும் சொல்லுகிறபடியே பெரிய பிராட்டியாரோடேகூடத் தெளிவிசும்பிலே, "याऽयोध्येत्यपराजितेति विदिता नाकंपरेण स्थिता" என்கிறபடியே अयोध्यादिशब्दवाच्य

---

ளுய் = அன்பு வைத்தவளுய். பூவின்மிசை நங்கைக்கும் நமக்கும் என்றுமே பாசுரத்தில் மாற்றியருளியது—நம்மிடம் அன்பு வைத்து நம்மைப் பெற ஸஹாயமாயிருக்கிறுள் என்கிற காரணத்தாலே அவளிடம் அன்பு வைத்தாளுே என்னலாம்படி அவன் குணம் இருப்பது என்று அறிவிப்பதற்காக. அன்பு இருந்தாலும் நமக்கு நற்பதவி அளிக்க முன் வராதவன் என்று நினைக்க வேண்டா என்று அறிவிக்க ஞாலத்தார் இத்யாதி. ஞாலம் = பூமி; ப்ரக்ருதி, அதிலுள்ள ஸம்ஸாரிகளுக்கும், வானம் = பரமபதம் அங்குள்ள நித்யஸூரிகளுக்கும் ஸமசீலமாகப் பெருமாளுக இருப்பவன்; அவர்களைப் போல் எம்மை ஆக்க முயற்சியுள்ளவன். ஸர்வேச்வரன் நம்மால் சேஷியாக நினைக்கப்பட்ட ப்ரம்மாதிகளையும் ஆள்கின்றவன். மேலே ஆநந்தாநுபவத்திற்கிடமான நித்யவிபூதி. அங்கே நகரம், மண்டபம் கட்டில் படுக்கை இவையெல்லாம் அருளிச்செய்கிறுர்.

கீழே பெரிய பிராட்டியிடமும் நித்யஸூரிகளிடமும் உள்ள அன்புக்கு ஈடான அன்பு என்றுரே அவர்களிடம் உள்ள அந்த அன்புக்கு ப்ரமாணமும் இங்கே காட்டப்படுகிறது. ஜகத்பதி:—இவ்வுலகுக்கும் நாதனுன, விஷ்ணு: = விஷ்ணுவானவன் அசிந்த்யாத்மா = அநுமானத்திஞல் ஊஹிக்கப்படமாட்டாத ஸ்வரூபஸ்வபாவமுடையனுய் ச்ரியா ஸார்த்தம் = பெரியபிராட்டியோடுகூட வைகுண்டே து = வைகுண்டமென்கிற விலக்ஷணமான பரே லோகே = ப்ரக்ருதி மண்டலத்திற்கு மேலான உலகில் ஆஸ்தே = வீற்றிருக்கிறுன். பக்தை; பாகவதைஸ் ஸஹ = ஆழ்ந்த பக்தியுடையராய் கைங்கர்யமும் செய்கின்றவர்களுடன்கூடி. ஒண்தொடியாள் – ஒண் = அழகிய, தொடி = முள்கைவளைகளையுடைய (ஸர்வாபரணபூஷிதையான என்றபடி) திருமகளும் பெரியபிராட்டியும், நீயும் = நாராயணனுன நீயும் நிலா நிற்ப = ஸ்ரீவைகுண்டத்திலே நிலைத்திருக்க, அது கண்ட நித்யஸூரிகளின் நிலையைக் கண்டு ஐச்வர்ய கைவல்யங்களை ஸவாஸநமாக விட்டு விலகினேன் என்று இந்த "கண்டு கேட்டு" 4-9-10 இத்யாதி பாசுரத்திற்குப் பொருளாகையால் வைகுண்டத்தில் இருப்பே இதன் அர்த்தமாம். தெளிவிசும்பு = தெளிவான ஆகாசம், சுத்த ஸத்துவமாய் ஞாநாநந்தமான பரமபதம். மேலே நகரநிர்தேசம். நாகம் பரேண = பரமபதத்தின் மேலே ஸ்த்திதா—இருக்கின்ற அயோத்யா இதி = அயோத்யை என்கிற பெயராலும் அபராஜிதா இதி = அபராஜிதா என்கிற பெயராலும் விதிதா = ப்ரமாணத்திஞல் அறியப்பெற்றது யா = எந்த நகரி, அதை உங்களுக்கு ராஜதாநியாக அறிகிறுர்கள்.

மான கலங்காப்பெருநகரிலே **सहस्रस्थूणादि** வாக்யங்களாலே ஓதப்படுகிற திருமா மணிமண்டபத்திலே **कौषीतकिब्राह्मणादि**களிலே ஓதப்படுகிற **पर्यङ्क**விசேஷத்திலே, "சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்" என்றும் "**निवास-शय्यासन**" என்றும் சொல்லுகிறபடியே **सर्वदेशसर्वकालसर्वा.स्थोचितसर्वविधकैङ्कर्य**-

---

என்று **आज्ञानुग्रह** என்கிற பட்டர் ச்லோகத்திலே சொல்லப் பெற்றது. "தேவாநாம் பூ: அயோத்யா", என்றும் "அபராஜிதா பூ:" என்றும் வேத வாக்யம், கலங்கா பெருநகரிலே, அயோத்யா அபராஜிதா என்கிற சொல்லின் பொருளைக் கருதி கலங்காத என்றது. "அவைஷ்ணவாநாம் அப்ராப்யம்" என்கிற ஸ்தாநத்திலே இருப்பதால் யாரும் போர் புரியவோ வெல்ல வேண்டுமென்று நினைத்தோ வருவதற்கு இடமில்லை. அத்துடன் சிறிதும் சிதறாமல் சாச்வதமாயிருப்பதால் காலக்ரமத்திலே அழியும் என்பதுமில்லை. நகரமும் அங்குள்ள விமாநமண்டப கோபுராதிகளுமெல்லாம் ஸாவயவங்களானாலும் எம்பெருமானின் பரவாஸுதேவ விக்ரஹம் போலே சாச்வதமாகையாலே கலங்காதவை, ஸஹஸ்ரஸ்த்தூணேதி. "**सहस्रस्थूणे दृढे उग्रे यत्र देवानां अधिदेव आस्ते**" என்று ச்ருத ப்ரகாசிகையிலெடுத்த **தலவகார உபநிஷத்** வாக்யம், ஆயிரம் தூண்களையுடையதாய் திடமாய் பெரிதான எந்த மண்டபத்தில் தேவாதிதேவன் வீற்றிருக்கிறானோ என்பது பொருள். கௌஷீதகி ப்ராம்மணம். கௌஷீதகிசாகையின் ஒரு பாகம். **பர்யங்க விசேஷம்** "**अमितौजाः पर्यङ्कः**" என்று அங்கே ஓதப்பட்ட அளவற்ற ஒளியுடைய கட்டில். அதன் மேலுள்ள மெத்தை ஆதிசேஷன் என்பாராய், ஜீவர்களனைவரும் சேஷர்களாக இருக்க நித்யஸூரிகளனைவரும் சேஷக்ருத்யம் செய்துவாரா நிற்க அநந்தாழ்வானுக்கு மட்டும் ஏன் சேஷனென்று பெயர் என்பதற்கு–எம்பெருமான் எல்லோரும் எல்லா கைங்கர்யமும் செய்பத் தகுதியுள்ளவர் ; எதை எவர் விரும்பினாலும் செய்யலாம்; செய்ய சக்தியுமுண்டு ; ஒரே மையத்தில் பல உருக்களைக்கொண்டு பல கைங்கர்யங்களையும் செய்யலாம் என்பதை ஒருவருடைய அநுஷ்டானமூலமாகக் காண்பிப்பவனாகி அதனால் பிறருக்கு அஸூயைக்குக் காரணமில்லை ஆநந்தஸாம்யமிருப்பதாலே என்றுகொண்டு அசோக வநிகாந்யாயத்தாலே அநந்தாழ்வானிடம் அந்த சேஷவ்ருத்திகளை ஸங்கல்ப்பித்தான். இப்படி பல சேஷவ்ருத்திகளைச் செய்வதாலே சேஷனென்று திருநாமமாயிற்று என்று ஸமாதாநத்தைக் கருதி பல சேஷவ்ருத்திக்கு ப்ரமாணமாகப் பாசுரத்தையும் அதை அடியொற்றிய ஆளவந்தார் ச்லோகத்தையும் குறிக்கிறார் சென்றால் இத்யாதி அந்தந்த ஸமயாநுகுணமாக, குடையாகவும், ஆஸநமாகவும், ஆகிறார். எப்பொழுதும் கடலில் தெப்பம்போன்ற மெத்தையாகவும் விளக்காகவும், பீதாம்பரமாகவும், அணையும் திண்டாகவுமிருக்கிறார் திருமாலுக்கு அநந்தாழ்வான் என்று பாசுரத்தின் பொருள் (முதல் திருவந்தா.தி 53) **निवासेति.** நிவாஸம்=கோவில், சய்யா=மெத்தை ஆஸந=சிங்காஸநம்,

ங்களையும் सर्वविधशरीरங்களாலே அனுபவித்து சேஷத்வமே தனக்கு நிருபகமாகையாலே சேஷன் என்றே திருநாமமாம்படியான திருவனந் தாழ்வானுகிற திருப்பள்ளிமெத்தையிலே வானிளவரசாய்க்கொண்டு தான் வாழ்கிற வாழ்வை ஸர்வாத்மாக்களும் அநுபவித்து कृतार्थராக வேணும் என்று सहृदयனுயிருக்கிற இருப்பு அடியாக நித்யாநுபவம் பண்ணுகிற அந்தமில்பேரின்பத்தடியரான நித்யஸூரிகளோடு ஒக்கத் தானும் ஸ்வாமி

---

பாதுகா = மரவடி. அம்சுகம் = பீதாம்பராதி, உபதாநம் = திண்டு, வர்ஷாதப வாரணம் = மழை வெய்யில்களை விலக்குமது = குடை; ஆதிபதத்தால் மணி விளக்கு முதலானவைகளைக் கொள்க. இப்படிப்பட்ட யதோசிதம் = தக்கவாறு தவசேஷதாம் கதை: = உனக்கு சேஷமாம் நிலையைக்கொண்ட சரீர பேதை. = வெவ்வேறு உருக்களாலே ஜநை; = ஜநங்களாலே சேஷ இதி ஈரிதே = சேஷனென்று சொல்லப்பட்ட என்று ச்லோகார்த்தம். முன்ச்லோ கத்தில் அநந்தभोगिनि என்ற விடத்தில் இதற்கு அந்வயம். இதனை திருவநந்தாழ்வானுகிற என்று மேலே குறிப்பர். ஸர்வவித சரீரங்களாலே அநுபவித்து = அந்தந்த கைங்கர்யத்துக்குத் தக்க சரீரங்களைக்கொண்டு செய்து, இதற்கு ஆம்படியான என்றவிடத்தில் ஆன என்ற ஸமாந கர்த்ருக க்ரியையில் அந்வயம். 'சேஷத்வமே தனக்கு நிருபகமாகையாலே'. எல்லோருக்குமே சேஷத்வம் ஸ்வரூப நிருபகமென்றே ஸித்தாந்தம். இவ ருக்கு பலோபதாயகமான சேஷத்வம் பஹுவித கார்யபர்யவஸாயி சேஷத்வம் நிருபகம் என்க. திருவநந்தாழ்வான். விஷ்ணு புராணத்தில் "நாந்தம் गुणानां गच्छन्ति தேந அநந்தோயம் உச்யதே" என்று அளவற்ற கைங்கர் யம் செய்யும் இவருடைய குணங்களுக்கு யாரும் எல்லை காணுர்; அதனுல் அநந்தனென்று பெயர் என்னப்பட்டது. ஆழ்வான் = ஆழ்ந்தவர். திருப்பள்ளி மெத்தையிலே. இளவரசாய் வீற்றிருப்பதால் இங்கே முழு சயநத்திற்காக மெத்தையல்ல. கீழே ஆஸ்தே என்பதைக் காண்க. வானிளவரசாய், "யுவா அகுமார;" என்றபடி கௌமாரத்தின் முடிவும் யௌவநத்தின் ஆரம்பமும் சேர்ந்த நிலை இளமை. இந்த தசையுடைய திருமேனியோடு அரசாள்கிறுன் என்றபடி யல்லது இவன் யுவராஜன், இவனுக்குமேல் வ்ருத்தராஜன் வேறெ ருவன் என்று நினைக்க வேண்டா. வான் பரமபதம். ராமாத்யவதாரங்களில் பூமியில் மூப்புண்டு அரசாள்வதும் உண்டு. அதற்காக வான் என்றது வாழ்வையனுபவித்து இதி பரமாநந்தஸ்வரூபமான பரமாத்மானுபவம் பரமபுருஷார்த்தம். அவன் இவர்கள் அநுபவிப்பதை ப்ரயோஜனமாக நினைக் கிருன். அவனுடைய உகப்பையே இவர்கள் ப்ரயோஜனமாக நினைப்பர். ஸஹ்ருதயனுய். ஹ்ருதயத்தில் பற்றுள்ளவனுய்; அல்லது எல்லோரிடமும் ஸமானமான ஹ்ருதயமுடையவனுய் இருப்புஅடியாக = இவர்கள் பண்ணும் நித்யாநுபவத்திற்கு அவனுடைய ஸஹ்ருதயத்வமே அடி = காரணம்

கைங்கர்யத்துக்கு स्वरूपयोग्यதையாலே இட்டு பிறந்துவைத்து

அநாதிமாயையாலே ஸுப்தனாய், "अनेकजन्मसाहस्रीं संसारपदवीं व्रजन् । मोहश्रमं प्रयातोऽसौ वासनारेणुकु(गु)ण्ठितः ॥ என்கிறபடியே ப்ரக்ருதியாகிற பாழிலே விழுந்து ஓடியோடிப் பல பிறப்பும் பிறந்து தட்டித்தாவற்று அழுக்கடைந்து ஒளி அழிந்தபடியாலே தத்துவ ஹிதவிஷயமாய் यथावत्प्रकाशरहितனாய் நிற்க ;

---

**அந்தம் இல் பேரின்பத் தடியரான.** முடிவில்லாத அபரிச்சின்னமான ஆநந்த முடைய 'தாஸர்களான' ஒக்க = ஸமமாக தானும் என்பதற்கு **பிறந்து** என்ப தோடு அந்வயம். **ஸ்வரூபயோக்யதை** சேஷசேதநத்வம் என்கிற ஸ்வரூபமே கைங்கர்யத்திற்கு யோக்யதையாம். ஆயினும் கைங்கர்யம் செய்யாமைக்குக் காரணம் சில இடையூறுகள். **இட்டுப் பிறக்கையாவது**—பிதாவின் சொத் தைக் குறித்தே புத்ரன் பிறப்பதுபோல் ஜீவாத்மா பகவத் கைங்கர்யத்தைக் குறித்தே அநாதியாக இருக்கை. **வைத்து** என்பதற்கு இருந்தும் என்பது பொருள். இவ்வளவால். தனக்கு வகுத்த சேஷியான திருமாலினுடைய வாழ்க்கையை அவனுடைய ஸஹ்ருதயத்வம் காரணமாக நித்யஸூரிகள் அநுபவத்திற்கு ஸமமாகத் தானும் அநாதிகாலமாக அநுபவம் பெறக் காரணமான சேஷத்வமும் சேதநத்வமும் என்கிற ஸ்வரூபம் இருந்தும் என்றதாயிற்று. இனி அநுபவத்திற்கு இடையூறு இன்னதென்று அறிவிக் கிறார். அவித்யா.கர்ம.வாஸநா.ருசி.ப்ரக்ருதிஸம்பந்தங்கள் இடையூறுகள். ஸுப்தனாய், வ்ரஜந் வாஸநாரேணு, ஓடி ஓடி பலபிறப்பும்' என்கிற சொற்க ளால் அவை குறிக்கப்பெறும் **அநாதிமாயையாலே ஸுப்தனாய்** இதி 'அநாதி மாயயா ஸுப்த: என்று அத்வைதிகாரிகை யுண்டு அங்கே அநாதி' யான பொய்யான அவித்யாதோஷத்தாலே ப்ரகாசமற்றவனாய் என்று பொருளாகலாம். இங்கே அநாதி மாயை மூலப்ரக்ருதி. **அநேக ஜந்ம ஸாஹஸ்ரீம்** = ஜந்மஸஹஸ்ரங்கள் அநேகங்கள் உடையதான, **ஸம்ஸாரபத வீம்** = கதாகத மார்க்கத்தை **வ்ரஜந்** = அடைந்து செல்கிறவனாய் **அஸள** = இந்த ஜீவன் வாஸநா ரேணுகுண்டித; = அந்தந்த ஜந்மங்களில் சேகரிக் கப்பட்ட வாஸனைகளான தூள்களால், வெகுதூரம் செல்கிறவனுடைய உடம்பு புழுதிகளால் போல் மூடப்பட்டவனாய், **மோஹச்ரமம்** = அநுபந்தி களை விடுகிறோமே என்கிற மோஹத்தால் களைப்பை யடைகிறான் என்றபடி. **பாழிலே** = பாலைவனத்திலே, அல்லது நல்லது விளையாத நிலத்திலே **ஓடி ஓடி** = (திருவா 4—10—7) ஓடி ஓடிப் பல பிறப்பும் பிறந்து மற்றோர் தெய் வம் பாடி ஆடி அதைப் பணிந்து அதற்கே அடிமை செய்து திண்டாடினீர் களே. ஆதிமூர்த்திக்கு அடிமை புகுங்கள் என்று அருளிச் செய்தார் ஆழ்வார். அப்படிப் பிறந்து. **தட்டி** நல்ல புருஷார்த்தம் பெறுமல். **தாவு அற்று** தங்க இடமிராமல், **அழுக்கடைந்து** வாஸநாமலங்களால் மறைக்கப்பட்டு. **ஒளி அழிந்தபடியாலே** கௌத்துவத்துக்கு ஒளிபோல் கௌஸ்துபஸ்கா

ஒரு ராஜா अन्तःपुरத்துடனே வேட்டைக்குச் சென்று விளையாட்டிலே ஸக்தனான அளவிலே வார்த்தை அறிவதற்கு முன்பே வழிதப்பின ராஜ குமாரன் எடுத்தார்கையிற் பிள்ளையாய் ஏதேனும் ஒரு குறிச்சியிலே வளர, அவன் தனக்கில்லாத शबरत्वादिजातिகளை ஏறிட்டுக்கொண்டு, माताप्येका

---

நீயனான இவனுக்கு ஞானவிகாஸமே ஒளி. **ப்ரகாசரஹிதனாய்** என்பதற்கு மேலே வரும் **நிற்க** என்பதோடந்வயம். அதற்கு நின்றபோது என்று பொருளாம் முதலில் இங்கேயுள்ள **நிற்க** என்ற சொல்லுக்கு அப்பொருளல்ல. கீழ்ச் சொன்ன ஜீவனுக்கு ஒரு திருஷ்டாந்தம் சொல்லப்போகிறவராய் தார்ஷ்டாந்திகவிஷயமான பேச்சு இவ்வளவில் நிற்கட்டும் . என்கிற பொருளாம். இங்கே **நிற்க என்ற** சொல் இல்லை என்பாரும் உண்டு. ஆனால் **ஸாரப்ரகாசிகையில்** 'நிற்க' என்ற சொல்லை இசைந்து **स्थिते सति** என்று உரைக்கப்பட்டது.

இப்படிப்பட்ட ஜீவாத்மாவுக்கு ராஜ குமாரனை த்ருஷ்டாந்தமாக்குகிறார் **ஒரு ராஜா** இத்யாதியால். பேசத் தெரியாத சிறு குழந்தையான ராஜ குமாரன் வேட்டைக்குச் செல்லும் **அரசனோடு** காட்டுக்குச் செல்வது பொருந்துவதற்காக **அந்தப்புரத்துடனே** என்றது. வேட்டை விளையாட்டை அனுபவிக்க ராணியும் கூடச் சென்றாளென்றபடி. அவளும் குழந்தையை ஓரிடத்தில் விட்டு விளையாட்டிலே வேறிடம் சென்றாள். **எடுத் தார்கையில் பிள்ளையாய்** = வேற்றுமுகமில்லாமையால் எடுத்தவர்களுக் கெல்லாம் பிள்ளைபோல் இருப்பவன். வேடுவர்கள் கையில். கொண்டபோது அவர்கள்பிள்ளையானான். **குறிச்சியிலே** = நீசருடைய குடிசையிலே **வளர** = வளர்ந்தபோது. **அவன்** என்கிற சொல்லுக்கு **தட்டுப்பட்டுநிற்குமா போலே என்று** தூரத்திலுள்ள சொல்லோடு அந்வயம். **சபரத்வாதி ஜாதிகளை** இதி, இங்கே சபரத்வ ஜாத்யாதிகளை என்றிராமையால் ஆதிபதத்தாலும் வேறு ஜாதியைக் கொள்க எடுத்தவர் வேடுவராயிருந்தால் சபரத்வஜாதி. வேறு யாரேனுமாகில் வேறு ஜாதி மேலே 'வேடுவச்சேரியில்' என்று கிளிக்குச் சொன்னாரேயல்லது ராஜகுமாரனுக்குச் சொல்லவில்லை, **ஏறிட்டுக் கொண்டு** என்பதற்கு **நிற்குமாபோலே** என்றவிடத்தில் அந்வயம். ஒரு ஜாதியில் பிறந்த ஜீவன் சேர்க்கையினாலே மற்றொரு ஜாதியின் செயலைச் செய்வானோ? சிங்கமாய்ப் பிறந்தது யானைபோல நடந்துகொள்ளுமோ என்ன, சேர்த்தியால் செயல்மாறுவதற்கு த்ருஷ்டாந்தம் வேறு அருளுகிறார் **மாதேத்யாதியால்.**

ஓரிடத்திலிருந்து சென்று வேடுவச்சேரியில் க்ரூரமாகப் பேசும் ஒரு கிளியையும் அதைக் கடந்து முனிவராச்ரமத்தில் மர்யாதையாக வரவேற்கும் மற்றொரு கிளியையும் பார்த்து மாறுதலுக்கு வியந்து நிற்கும் ஒருவனைப் பார்த்து அம் முனிக்கிளி சொல்வதாமிது. பக்ஷிண := பறவையான், மம = எனக்கும், தஸ்ய = வேடுவக்கிளிக்கும் **மாதா** அபி ஏகா = தாயும் ஒன்று, பிதா

पिताप्येको मम तस्य च पक्षिणः। अहं मुनिभिरानीतः स चानीतो गवाशनैः॥ अहं मुनीनां वचनं शृणोमि गवाशनानां स वचश्शृणोति। प्रत्यक्षमेतत् भवताऽपि दृष्टं संसर्गजा दोषगुणा भवन्ति என்கிறபடியே வேடுவச்சேரியில் கிளிபோலே அவர்கள் பழக்கி வைத்த பாசுரமே தனக்குப் பாசுரமாய், அவர்களுக்குப் பிறந்தவர்களைப் போலே அவர்கள் ஊணும் வ்ருத்தியுமே தனக்கு ஊணும் வ்ருத்தியுமாய், தன் பிறவிக்கு உரிய भा[illegible]ங்களிலும் आचारसंस्कारादिகளிலும் புதியதுண்ணாதே राजभोगविरुद्धங்களான जुगुप्सितव्यापारங்களிலே தனக்குப் பேறும் இழவும் ஹர்ஷ

---

அபி ஏக := தந்தையும் ஒன்று அஹம் = நான். முநிபி : = முனிவராலே, ஆநீத := இங்குக் கொண்டுவரப்பட்டேன் ஸ ச = அக் கிளியும் गवाशनैः = மாடுதின்பவராலே. ஆநீத ; = வழியில் தங்களிடத்திற்குக் கொண்டுவரப் பட்டது நீத: என்னுமே ஆநீத: என்றதால் வேடுவக்குறிச்சியும் வழியிடை யிலிருப்பது தெரிகிறது அஹம் = நான், முநீநாம் - முனிவருடைய வசநம் = பேச்சை, ச்ருணோமி = கேட்டு அதன்படி நடக்கிறேன். ஸ ச = அக்கிளியும் गवाशनानां = வேடுவர்களுடைய. வச ; = பேச்சை. ச்ருணோதி = கேட்டு நடக் கிறது. ஆக இதனின்று தோஷகுணா : = தோஷங்களும் குணங்களும், ஸம்ஸர்கஜா : பவந்தி இதி ஏதத் = சேர்க்கைக்கிணங்க உண்டாகுமென்பது, பவதாऽபி = உம்மாலும் ப்ரத்யக்ஷம் — நேராக த்ருஷ்டம் = காணப்பட்டது அல்லது प्रत्यक्ष —பலர் கண்டது भवताऽपि दृष्टम् உம்மாலும் காணபெற்றது. ஆகையால் संसर्गजा दोषगुणा भवन्ति । என்றதாம் என்கிறபடியே = என்கிற ப்ரகாரத்தையே உடைய : இதற்கு வேடுவச் சேரிக்கிளியில் அந்வயம்.

அவர்கள் = ராஜகுமாரனை யெடுத்த சபரத்ராதிஜாதியர் பாசுரம் = பேச்சு. அவர்கள் ஊண் உம் வ்ருத்தி உம் = அவர்களுடைய ஆஹாரமும் நடத்தை—தொழிலும் தன்பிறவிக்கு = ராஜ ஜாதிக்கு உரிய = தக்க ஆசார ஸம்ஸ்காராதிகளிலும் = ஸ்நாந உபநயந ஸந்த்யோபாஸநாதி களிலும், புதியதுண்ணாதே = இச் சொல்லுக்கு இதற்குமுன் கொள்ளாததைப் புதிதாகவும் கொள்ளாமல் என்பது சப்தார்த்தம். நவாக்ர[illegible]ணத்தில் புதிதாக விளைந்த நெல்லைக்கொண்டு அன்னம் சமைத்து உண்பது புதியதுண்கை யாம். "இனக் குறவர் புதியதுண்ணும் என்றார் பெரிய திருமொழி (5-3-3) இதனின்றே புதியதுண்பது மாத்திரம் பிறகு வேறு ஆஹாரமே என்ற கருத்தை ய் சிறிதனுபவத்தை—ஏகதேசம் கொள்ளுதலை புதியதுண்கை என்பர் இங்கு உண்கை என்பதற்கு புசித்தல் என்ற பொருளல்ல; கட்டுண்டு இத்யாதிகளிற்போலே அநுபவிக்கை, கொள்கை பொருளாம். இந்த ராஜ குமாரன், தன் பிறவிக்குரியவற்றை ப்ரதிதினம்கொள்ளாமற் போனாலும் ஒரு முறையாவது ராஜமுறைப்படி லௌகிக வைதிக ஸ்நாநம் அன்னப்ராசநம் चौल உபநயநம் யஜ்ஞோபவீததாரணம் ஸந்த்யோபாஸநம் என்பவற்றைப் பெற்றானல்லன் இப்படியவற்றில் ஏகதேசானுபவமும் அற்றவன் என்ற

சோகங்களுமாய், ராஜகுமாரனென்று தன் அடி (பிறவி) அறிவார் சில ऋषयः உண்டானாலும் அவர்களுக்குக் கிட்டவொண்ணாத सामर्थ्य(யை)யுடையனாய், இப்படி स्व[illegible]ஸ்யோடே யௌவராஜ்யம் நடக்கில் உத்தர ஜந்மங்களிலும் ஒரு போக்யதை பெற விரகில்லாதபடியாய்த் தட்டுப்பட்டு நிற்குமா போலே...

இவனும் देहात्माभिमानादिகளாலே தன்னுருக் கொடுத்து (கெடுத்து) தேற்றுக் கொண்டு நிற்க—

அந்த ராஜகுமாரனுடைய லக்ஷணாதிகளாலே ஜாதிவிசேஷத்தை

---

தாயிற்று ஜுகுப்ஸித விஷயம்— அருவருக்கப்படும் வஸ்து அதைப் பெற்ற போது தனக்கு பேறு = இஷ்டப்ராப்தி என்று ஹர்ஷம். இழந்தபோது சோகம் தன் அடி அறிவார் = தன்னுடைய மூலத்தை—பிறப்பை அறிகின்றவர்களான, ரிஷிப்ராயர் என்றது யாரும் சொல்லாமற்போனாலும் தங்களுடைய மநச் சக்தியாலே அறியக்கூடியவர்கள் என்றபடி. ப்ரஸந்திஸித்தமான—இல்லாதிருக்க, தெரியாமல் ஏறிட்டுகொண்ட. விரகு = உபாயம். தன்னுடைய ஜீவநகாலத்திற்குள் தன்னை க்ஷத்ரியனென்று தெரிந்து அதற்கேற்ப நடந்துகொண்டால் தன் பிதா அரசனென்று அறிந்தால் ராஜ்யம் பெறலாம்: அறியாது ராஜ்யம் இழந்தாலும் மேல்ஜந்மத்திலாவது நன்மை பெறலாம் வேடுவனாகவே இருந்து மரித்தால் மீண்டும் கேடேயாம் என்றபடி இதை யருளினது அப்படிப்பட்ட ராஜகுமாரன் பல ஜந்மங்களெடுத்தும் மேல்பதவிக்கு வராமலிருக்குமா போலே ஒவ்வொரு ஜீவனும் அநாதியாகப் பல ஜந்மங்களெடுத்தும் தன்மை யறியமையால் நன்மை பெறாமலே இருப்பதாகுமென்றறிவிப்பதற்காக தட்டுப்பட்டு = இந்த ஜந்மத்தில் இடையூறுகள் நேர்ந்ததால் தடைபட்டு;

த்ருஷ்டாந்தம் முடிந்தது ப்ரக்ருதவிஷயம் சொல்லுகிறோம் என்பது ஸ்பஷ்டமாவதற்காக இவனும் என்ற சொல்லை மீண்டும் ப்ரயோகித்தது தன்னுருக் கொடுத்து தனக்கிருக்கும் நித்யத்வ—பகவச்சேஷத்வாதிகளைக் கைவிட்டு இது வ்யாக்யாஸம்மதமான பாடம் தெலுங்கு லிபி மூலகோசத்திற் கண்ட கெடுத்து என்ற பாடமிருந்தாலும் அழித்து என்கிற பொருளாகையாலே கருத்து ஒன்றே வேறு உருக்கொண்டு நான் மனிதன். இந்த ஜாதி, இந்த குலம், இந்த தேசம் என்று தேஹத்திலுள்ள தர்மங்களைத் தன்னிடத்தில் ஏற்றுக்கொண்டும் சில ஸமயங்களில் தன்னை ஸ்வதந்த்ரமாக நினைத்துக்கொண்டும். ஆத்மாபிமாநாநுகுண புருஷார்த்த வ்யவஸ்த்தையால் என்றபடி. ஒவ்வொருவனும் தன்னை பக்ஷியாகவோ ம்ருகமாகவோ, ஸ்த்ரீயாகவோ, புருஷனாகவோ, எப்படி நினைக்கிறானோ அதற்குத் தக்கபடி பேறுபெற ப்ரவ்ருத்தி செய்கிறான்என்றதாயிற்று.

கெட்டுப்போன நிலைக்கு ராஜகுமாரத்ருஷ்டாந்தம் காட்டினார். திருந்தி (கைங்கர்ய ஸாம்ராஜ்யம் பெறும் நிலைக்கும் அதே த்ருஷ்டாந்தமாகை

அறிவார் சில धार्मिकர் ஒரு விரகாலே இவ்வளை மீட்கப்பெற்று அபிமானிக்க இவனுக்கு வந்தேறியான जात्यन्तराभिमानத்தை வழிவிலக்கி दृष्टादृष्टसंस्कारादिகளாலே उत्तरोत्तरभोगतदुपायங்களுக்கு யோக்யனும்படி விரகு செய்து, இவனுக்கு स्वजात्यनुरूपமான गुणवृत्तங்களைத் தங்கள் उपदेशानुष्ठानங்களாலே குடிபுகுரவிட்டு, இவனுக்கு अनेकदोषदुष्टங்களான शबरादिभोग्यक्षुद्र விஷயங்களை அருவருப்பித்து, राजादिभोग्यங்களான अतिशयितपुरुषार्थங்களை ஆய்ந்தெடுக்கவல்ல அளவுடைமையை உண்டாக்கி நிறுத்துமா போலே.

இவ்வாத்மாவுக்குச் சில धार्मिकர் पित्रादिमुखेन நொடித்து—

---

யால் அதை நிரூபிக்கிறார் அந்த இத்யாதியால். லக்ஷணாதிகளாலே शौर्य தேஜஸ்ஸு சில ஸாமுத்ரிகாலக்ஷணம் என்பவற்றாலே, சில தார்மிகர், ராஜாவின் அந்தரங்கர்களை மேலே சொல்லப் போகிறார். இங்கே அவர் தவிர பொதுவாய் வர்ணாச்ரமச்ரத்தையும் பிறருடைய நன்மையில் நோக்குமுடையவர்களைச் சொன்னபடி ஒருவிரகாலே அவனுக்கிஷ்டமான ஊணும் வ்ருத்தியும் காட்டியொருவிதம் தம்மிடத்தில் அன்பை விளைவிப்பதாலே. மீட்க = சபராதிகளைவிட்டுவிலக்க. வந்தேறியான சபராதிகள் எடுத்த பிறகு ஔபாதிகமாய் வந்ததான, வழிவிலக்கி = விலகினது திரும்பாதபடி சரியான வழியில் ஒதுக்கி. த்ருஷ்டஸம்ஸ்காரமாவன— லோகஸித்தமாய் ராஜகுலத்தார் தங்களுக்குச் செய்துகொள்ளும் செயல்கள் அத்ருஷ்டஸம்ஸ்காரம் சாஸ்த்ரோக்தமான चौल உபநயநாதிகள். ஆதி பதத்தாலே வித்யாப்யாஸம் नीच ஜாதிச் சேர்க்கையற்றிருக்கை முதலான வற்றைக் கொள்க. உத்தரோத்தரேதி. ஸ்வஜாதிவிவாஹ. தர்மப்ரஜா பரிபாலநாதிரூப என்றபடி, விரகுசெய்து = அவையெல்லாம் பெற அநுகூலமாம்படி தங்களுடைய கோஷ்டியிலே சேர்த்து, குடிப்புகுரவிட்டு ஸ்திரமாய் பெற்றிருக்கும்படிசெய்து. ஆய்ந்து = ஆராய்ந்து; வல்ல = தக்கதான அளவுடைமை அறிவுநிலைத்திருக்கை.

இவ்வாத்மேத்யாதியால் தார்ஷ்டாந்திகமான ஜீவாத்மாவைச் சொல்லுகிறது. சிலதார்மிகர் = தேஹாத்மாபிமானத்தாலே ஐஹிகத்தோடு நிற்கையன்றிக்கே தாங்கள் ஆமுஷ்மிக தர்மாநுஷ்டானம் செய்பவராய் ஆஸ்திக்யத்தை விளைவித்து ஆமுஷ்மிகத்திலே இழியவைக்கவேண்டுமென்று க்ருபையுள்ள மஹான்கள் த்ருஷ்டாந்தத்தில் தார்மிகர் ஐஹிகஸர்வஜநயோகக்ஷேமமாத்திரத்திலே நோக்கு உடையருமாவர். இவர் விலக்ஷணர். பித்ராதிமுகேந இது வரையில் அவனுக்கு நன்மை தேடி வந்த பந்துக்கள் மூலமாகவே நொடித்து = ஹிதத்தைச் சொல்லி, (சீக்கிரமாக என்று ஸாரதீபிகையில் அர்த்தம்) சார்வாகநிலையை விட்டு மற்ற சாஸ்த்ரங்கள் எல்லாம் சொல்லுகிறபடி தேஹாதிகளைக்காட்டிலும் வேறாய் உயர்ந்த பலன்களைப் பெறவல்லதாய் நித்யமாயிருக்கும் ஆத்மஸ்வரூபம் என்றறிவது

**पुमान्न देवो न नरो न पशुर्न च पादपः। शरीराकृतिभेदास्तु भूपैते कर्मयोनयः॥**
என்கிறபடியே உரு வியந்த விந்நிலைமையை உணர்த்தி. அதுக்கு அநுரூபமான **पुरुषार्थतदुपाय**ங்களிலே அந்வயிக்கலாம்படி விரகு செய்து உடம்புதின்றூர்

---

முதற்படி. அப்படிப்பட்டதும் ஸ்வதந்த்ர மல்லாமல் தேவதாந்தரசேஷமுமல்லாமல் ஸ்ரீமந்நாராயணசேஷமே என்றறிவது இரண்டாம் படி. முதற்படியை ஸகல ஆஸ்திகர்மூலமும் பெறலாம். இரண்டாம்படியை ஆசார்யன் மூலம் பெறவேண்டும் முதல்படி உபதேசம் தார்மிகராலாவது. ஜீவாத்மா எடுக்கும் சரீரம் நாலுவகை தேவ சரீரம், மானிடசரீரம், திர்யக்சரீரம், ஸ்தாவரசரீரம் என்றவையாம் (வி 2-13-98) பூப = ஸௌவீரராஜனே **புமாந்** = ஜீவன் **நதேவ:** = தேவசரீரமாகமாட்டான். **ந நர:** = மனித சரீரமாகமாட்டான். **ந பசு:** = ம்ருக சரீரமாகமாட்டான். **ந பாதப: ச** = மரம் முதலிய தாவரசரீரமுமாகமாட்டான், அல்லது ஜீவன் தேவத்வம் நரத்வம் பசுத்வம் ஸ்தாவரத்வம் என்ற ஜாதிகளை நேராகப் பெற்றவனுகமாட்டான் என்றபடி **ஏதே** = இந்த தேவத்வாதிஜாதியுடைய த்ரவ்யங்கள் **கர்மயோநய:** = புண்யபாப கர்மமூலமாக வந்த **சரீராக்ருதிபேதா:** வெவ்வேறு உரு அமைப்பின் வகைகளேயாம், என்று ச்லோகார்த்தம் இதனுல் தேஹாத்மப்ரமம் நிவர்த்திக்கப்படுகிறது. **உரு வியந்த** = சரீரத்தைவிட வேருன, வியத்தல் = விலக்ஷணமாகை. **இந்நிலைமை** என்று இகரச்சுட்டினுல் மேல் ஆசார்யோபதேசமூலம் பெறும் நிலைமையைவிட வேருன கீழ்நிலைமை இது என்றறிவித்ததாம். **புருஷார்த்த ததுபாயங்களிலே** இதி தேஹமே ஆத்மா என்று நினைத்தபோது ஆஹாரவிஹாரங்களாகிற புருஷார்த்தங்களில்மட்டும் நிற்பான். தேஹத்தை விடவேறு. நித்யம் என்றறிந்தபோது ஸ்வர்காதி புருஷார்த்தங்களில் நசையும் அவற்றிற்கான யாகாதி தர்மங்களில் ப்ரவ்ருத்தியும் உண்டாமாகையால் அதற்கான அத்யயநாதிகளைச் செய்வித்து என்றபடி. அதற்கு வேண்டும் ஆத்ம குண-ஆசார ரூப அதிகாரத்தை உண்டாக்குவதைச் சொல்ல **உடம்பு** இதி. **உடம்பு தின்றூர்படியன்றிக்கே.** தின்னலுக்கு உடம்பு கர்த்தா, உடம்பினுல் தின்னப்பட்டவர்களுடைய படி = ப்ரகாரம் உடம்பே ஆத்மாவென்று நினைத்திருக்கும் மனைவி மக்கள்முதலானவர்களால் தங்களனுபவத்திற்காளாக்கப் பட்டவர்களின் படி; அல்லது தன்னுடைய உடம்பைப் போஷித்து அதன் வளத்தையே அனுபவிக்கிறவர்களின் படி யென்க, தேஹாத்மாபிமானிகளின் படியென்றபடி, **அதுஅன்றிக்கே** = ஆமுஷ்மிக புருஷார்த்தத்திற்காக காயக்லேசாதிகளைப் பொறுத்துத் தன்னையும் தன் பரிஜநங்களையும் அதற்கு உபயோகப்படுத்துகிறவர்கள் படியைக் கொண்டு என்றதாயிற்று. ஆக இது ஸ்வர்காதி புருஷார்த்தாதிகாரி ஸாதாரணம். **ஸாரப்ரகாசிகையில்** உடம்பு என்பதற்கு ஈச்வர சரீரமான சேதநாசேதநங்கள் என்ற பொருளைக் கருதி—உடம்பு தின்றூர் =

படியன்றிக்கே ஒரு வெளிச்சிறப்புடையார்க்கு வரும் குணாந்தரங்களை உண்டாக்கி ஹேயோபாதேயவிபாகக்ஷனுமாக்கி நிறுத்தினவளவிலே—

இவனுடைய அடியுடைமையையும் சில ஹேதுக்களடியாக வந்த யோக்யதையையும் அளவுடைமையையும் நேராகக் கண்டு பரமகாருணிகனான பரமசேஷியாலே ப்ரேரிதராய்த் தாங்களும் காருணிகோத்தமராயிருப்பார் சில தேசிகர்

"ईश्वरस्य च सौहार्दं यदृच्छा सुकृतं तथा । विष्णोः कटाक्षमद्वेषमाभिमुख्यं च

---

ஐச்வர்ய கைவல்யங்களை யனுபவிப்பவர். அவர்படியன்றிக்கே என்று பொருள் கூறப்பெற்றது அப்பொழுது ஸிக்கு செய்து என்ற வரையில் ஸ்வர்காதிகளில் ப்ரவ்ருத்தியைக் கூறி. உடம்பு இத்யாதியால் அப் பலன்கள் அல்ப்பாஸ்திரங்கள் என்று அவற்றில் வைராக்யம் வந்த நிலைமையைச் சொல்வதாம். ஈச்வர சேஷத்வாதிகளைப் பின்னே ஆசார்யமுகத்தால் அறியப்போவதாக இருந்தாலும் அதற்கு முன்னமே முமுக்ஷுவாகைக்கு விஷய வைராக்யம் காரணம் என்று அவர் கருத்து உடம்புதின்றூர் என்பதற்கு தேஹாத்மாபிமானி என்கிற முன் சொன்ன அர்த்தத்தைக் கொண்டால் மேலே ஹேயோபாதேய விபாகக்ஷமனுமாக்கி என்றவிடத்தில் ஐச்வர்ய கைவல்யங்கள், ஹேயம் மோக்ஷம் உபாதேயம் என்கிற விபாகம் செய்ய வல்லனுக்கி என்கிறதால் முமுக்ஷுத்வத்தைக் கொள்ளலாம் க்ஷமனும் என்கிற உம்மையால் அதற்கு முன் புபுக்ஷு தசையும், இங்கே முமுக்ஷுதசையும் அறிவிக்கப் பெற்றதாகலாமே. வெளிச்சிறப்பு வெளி வெளிவாங்கல் நிர்மலமாய் ப்ரகாசிக்கை அதற்குச் சிறப்பு = ஏற்றம் திடநிச்சயம். உள்ளேயிருக்கும் ஆத்ம விவேகம் முகத்திலே நன்கு தோன்றும்படி இருப்பு என்னலுமாம்.

இனி ஸதாசார்யஸம்பந்தமாகிற மேலான படியை அருளிச்செய்கிறூர் இவனுடைய இத்யாதியால். த்ருஷ்டாந்தமான ராஜகுமாரனிடத்திலும் மேலான படியைக் காண்பிக்க வேண்டும். அதையும் இடையிலே யருள்வர். அடியுடைமை = மூலகாரணத்தையுடைத்தாயிருக்கை அதாவது ஸ்வாபாவிக பகவச் சேஷத்வமும் முன்னமே அவனுடைய ஸௌஹார்தத்துக்கு விஷயமாயிருக்கையும். அடி = மூலம். யோக்யதை = தேஹாத்ம விவேகாதிகள். அளவுடைமை = ஹேய உபாதேய விவேகம் பெற்றிருக்கை 'நேராகக் கண்டு' என்பதற்கு தேசிகர் என்றவிடத்தில் அந்வயம் கண்டவர் சில தேசிகர். சில என்றசொல் தேசிகராகக்கூடியவரில் யார் வேண்டுமானாலுமிருக்கலாமென்பதற்காக ஆசார்யர்க் நேர்படுவது = கிட்டுவது எளிதிலாகாதென்பதற்காக அதற்கு அடைவாக வரவேண்டும் அநேக காரணங்களை ப்ரமாணத்தால் காட்டுகிறூர். ஈச்வரஸ்ய ஸௌஹார்தம் = ஈச்வரன் அநாதியாகவே நம்மிடம் வைத்திருக்கும் அன்பு, நிர்ஹேதுக க்ருபை யத்ருச்சாஸுக்ருதம் = எதிர்பாராமல் நேரும் புண்யம்; திடீரென்று ஏற்பட்ட ஸப்ராஹ்மண ரக்ஷண பகவத்ஸேவாதிகள். இவைகள் தெரிந்துசெய்வதாகும். இதுபோல்

सात्त्विकैः॥ सम्भाषणे षडेतानि ह्याचार्यप्राप्तिहेतवः॥" என்கிறபடியே நேர்பட்டு.

அந்த ராஜகுமாரனுக்குச் சில ராஜாந்தரங்கர் நேர்பட்டுப் பிறவியை உணர்த்தி மேலுள்ள ப்ரியதமங்களையும் ஹிததமங்களையும் தெளிவித்து ஒரு விரகாலே அந்த ராஜாவுக்கும் ராஜகுமாரனுக்கும் परस्परसंश्लेषाकாங்க்ஷையை उत्तम्பிக்குமா போலே இவனுக்கும்—

---

*அஜ்ஞாதஸுக்ருதமுண்டு; நம்முடைய தன : நமக்குத் தெரியாமல் பிறர்கையி லகப்பட்டு நல்ல விஷயத்திலுடயோகப்படுகை இதுபோல் ப்ராஸங்கிக ஸுக்ருதமுமுண்டு. மாட்டை ஓட்டுவதற்குக் கோவிலைச் சுற்றிவந்தால் அது பகவத் ப்ரதக்ஷிணமாகவுமாகிறது अनुषंग सुकृ்முமாம்; பலனுக்காக ப்ரதானமூர்த்தியை தர்சனம் செய்யச் சென்றவிடத்திலே மற்ற மூர்த்திகளை யும் தர்சனம் செய்கை. இதுபோல் நிஷ்காமஸுக்ருதம்—பலனைக் கோலியே எல்லாம் செய்கிறவர்களும் பகவானைக் கண்ட விரைவில் பலனைக் கேட்க மறந்து அஞ்சலி செய்வதுபோன்றது. இத்தகைய புண்யங்களுக்கு என்ன செய்வதென்று பார்த்து இவற்றை ஈச்வரன் உயர்ந்த மோக்ஷபுருஷார் த்தத்திற்கே மூலகாரணமாக்குகிறான். இந்த ஸுக்ருதங்களையும் கொள்ளுவதற்காக ச்லோகத்தில் तथा என்ற சொல். विष्णोः कटाक्ष = ஜாயமானதசையில் ஜீவர் பிறக்கும்போது சிலர்க்கு நேரும் பகவத்கடாக்ஷம். (கடாக்ஷமென்றே ப்ரதமாவிபக்தியிலே ப்ரயோகம் ஆர்ஷம்) अद्वेषम् = வேதம் ஈச்வரன் வைதிகர்கள் என்ற நல்ல விஷயத்திலே த்வேஷ மில்லாமை द्वेषस्य अभावः अद्वेषम्; असंगम् என்பது போல் அவ்யய ஸமாஸம் आभिमुख्य—ஸத்விஷயத்தில் நோக்குடையனாகை. सात्त्विकैस्संभाषणम्— ஸத்வகுணம் நிறைந்த பலரோடு அடிக்கடி கலந்து பேசுகை एतानि षट्— இவை ஆறும் आचार्यप्राप्तिहेतवः = ஆசார்யனோடு சேர்க்கைக்கு ஹேதுக்களா கும். ஸாத்விகஸம்பாஷணத்தால் தானே படிப்படியாக தேஹாத்மவிவே கத்தில் உண்டாகிறன. இந்த நிலையில் ஜீவனைக் கொண்டு நிறுத்தி, இனி ஆசார்யர் செய்யும் உபதேசம் போன்றதை த்ருஷ்டாந்த மான ராஜகுமாரனிடமும் காட்டுகிறார் அந்த ராஜகுமாரனுக்கு = தார்மிகர் களாலே அளவுடைமையை யுண்டாக்கி நிறுத்தப் பட்ட ராஜகுமாரனுக்கு; ராஜஅந்தரங்கர் அவனுடைய பிதாவான அரசனோடு நெருங்கிப்பழகும் மந்திரிமுதலானோர் பிறவியை யுணர்த்தி = எங்களரசனுக்கு நீ குமாரன் என்று தெரிவித்து; மேலுள்ள = பிதாவோடு சேர்ந்தால் வரப்போகிற ப்ரியதமங்களை மிகவும் இஷ்டமான பலன்களை; ஹிததமங்களை = அவற் றுக்கு உபாயங்களை. ஒரு விரகாலே = ராஜாவினிடம் ராஜகுமாரயோக் யதையை அறிவிப்பதாலும், ராஜகுமாரனிடத்தில், 'ராஜா உன்னை இழந்தது முதல் எப்போது பெறுவோம் என்று' வருந்துகிறான் என்று உபதேசிப்பதாலும். संश्लेषाकाङ्क्ष = சேரவேண்டுமென்கிற ஆஸ்தை. உத்தம்பிக்குமா போலே – வெகு நாளைய ப்ரதிபந்தகத்தால் மங்கியிருந்ததை*

नायं देवो न मर्त्यो वा न तिर्यक् स्थावरोऽपि वा । ज्ञानानन्दमयस्त्वात्मा शेषो हि परमात्मनः ॥"
என்றும் "दासभूताः स्वतस्सर्वे ह्यात्मानः परमात्मनः" என்றும் ப்ரமாணங்கள்
சொல்லுகிறபடியே "பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும் விண்ணுலகு

---

அபிவ்ருத்தி செய்வது போல். இதற்கு தார்ஷ்டாந்திகத்தில் முயன்று என்பதோடந்வயம். ராஜாந்தரங்கரின் ஸ்தாநத்திலே இங்கு தேசிகர், அவர்கள் பிறவியுணர்த்துவது போல் இவர்கள் குடல்துவக்கைத் தெரிவிப்பது; அவர்கள் ப்ரியதம ஹிததம உபதேசங்கள் செய்வதுபோல் இவர்கள் மோக்ஷ புருஷார்த்த ஸதுபாயங்களை உப தேசிப்பது. அங்கு ராஜா குமாரனைப் பற்றி அறியாதவனாயிருப்பதால் ராஜகுமாரனுக்குப் போல் ராஜாவுக்கும் அஜ்ஞாநநிவ்ருத்தி செய்வதும் ஆகாங்க்ஷை விளைவிப்பதும் அந்தரங்கரின் கார்யமாயிற்று. இங்கு எம்பெருமான் ஸர்வஜ்ஞனாய் ஸாகாங்க்ஷனாயே இருப்பதால் ஜாயமாநகடாக்ஷாதி உபாயங்களையும்செய்திருப்பதால் எம்பெருமானைத் தூண்டவேண்டிய அவச்யமில்லை. ஜீவனுக்கே உபதேசத்தைச் செய்து உபாயங்களிலே இழிவித்தல்மட்டும் ஆசார்ய கார்யமாம். ஆகையினால் பரஸ்பர ஸம்ச்லேஷாகாங்க்ஷையென்று த்ருஷ்டாந்தத்தில் சொன்னாப் போலே சொல்லாமல் இவனுக்கு தத்ப்ராப்த்யுபாயங்களிலே முயன்று என்று பொதுவாக அருளப்போகிறார். ஆனாலும் பிராட்டி புருஷகாரமாக வேணும். ஸ்ரீபாஷ்யகாரர் ஸமந்வயாதிகரணத்தில் உபநிஷத்தினின்று மாதாபிதாக்களுக்கு மேற்பட நமக்கு நன்மை செய்ய நாராயணன் ஸமயம் பார்த்துக்கொண்டிருக்கிறான் என்று ஸித்தமான தத்துவத்தை அறிந்தவுடனே வேதமோதுகிறவன் ஆநந்தம் பெறுகிறான். இவ்வளவிலேயே ப்ரஹ்ம பரமான வாக்யம் பயன்பெற்றதாகும் இனி அவன் தானாகவே பலனளிப்பானா, இவன் ஏதாவது செய்ய வேண்டுமா என்று ஆராய்ச்சி வரும்போது பக்தி ப்ரபத்திகளை விதிக்கிற சாஸ்த்ரங்கள் இவன் உபாயம் ஒன்று அநுஷ்டிக்கவேண்டுமென்றறிவிக்கிறது என்றருளிச் செய்தார்.
இதனால் த்ருஷ்டாந்தத்திலே ராஜா தன்னைப் பெற முயற்சி சிறிதுமில்லாத குமாரனையும் குடல்துவக்காலே பேறு பெறுவிக்கலாம் அதுபோல் இங்கு ஆகாது. சாஸ்த்ரவிஹிதமான உபாயமொன்றைச் செய்தாக வேண்டும் என்பதும் உபாயங்களிலே முயன்று என்றவிடத்திலே கருதப்படும்.

नायं देव इत्यादि. अयं आत्मा என்று சேர்ப்பது. இந்த ஜீவாத்மாவானவன் தேவாதிசரீரமாகமாட்டான் தேவாதிசரீரங்களில் எப்போதும் இருப்பவனுமாகான். இது முன்னமே அறிந்ததேயாம் தேசிகர் புதுஉபதேசம் आत्मा ज्ञानस्वरूपனாய் (स्वयंप्रकाशனாய்) ज्ञान-दृश्यकனுமாகிறானென்பது இதைக்கூட மதாந்தர மூலம் அறியலாம். நம்மாசார்ய மூலமாவது—பரமாத்மாவுக்கு இவன் சேஷனாகவேயிருப்பான்; எல்லா ஆத்மாக்களும் பரமாத்மாவுக்கு இயற்கையிலே அடிமையாகவே யாவர்களென்பதாம். இந்த முக்கியாம்சத்தை விவரிக்கிறார். இங்கு நாச்சியார் பாசுரத்தின் ஒரு பாகம். பொங்கு = பொங்கு

மங்காதுஞ் சோராமே யாள்கின்ற செங்கோலுடைய' श्रियःपति नारायणனுடனே குடல்துவக்கைத் தெளிவித்து, இவனுக்கு तत्प्राप्त्युपायங்களிலே முயன்று இவன்(இருவரும்)பெறுகிற பேறே தங்களுக்குப் பொன்னுலகையும் புவனி முழுவதையும் ஆளுகையாக உகந்து, அதடியாக அன்று ஈன்ற

கின்ற அலைமோதுகின்ற ஓதம்= ஸமுத்ரத்தாலே சூழ்ந்து= சூழபெற்ற புவனியும்= பூமியும். இதனால் ஜலாவரணம் சூழ்ந்த ப்ரம்மாண்டத்தையே (ப்ரக்ருதி மண்டலத்தையே) கொண்டதுமாம். விண்ணுலகும்= வைகுண்டலோகமும். அங்கு= அந்தந்த விபூதியில். ஆதும்= யாதும் ஒரு சேதநாம்சமும் சோராமே= விடப்படாதபடி, ஆள்கின்ற என்பதற்கு நாராயணனிட்த்திலே யந்வயம். செம்மையான ஆஜ்ஞையை ப்ரஜைகளிடத்தில் செம்மையோடு செய்கின்ற ச்ரிய:பதி என்றதாலே இருவரும் ஸ்வாமி என்று தெரிவிக்கப்பெறும். இதற்கு பாசுரத்தில் (11.3.) செல்வன் என்ற சொல். இந்த ஈச்வரத்வம் நாராயண என்ற திருநாமத்தின் பொருள்களை யாராய்ந்தாலும் தெளியலாமென்பதற்காக நாராயணன் என்றது. அவனோடு குடல்துவக்கு= பிறவியினின்று ஸம்பந்தம். சேதநாசேதநங்களெல்லாம் அவனுக்கு அதீனமான ஸ்வரூபஸ்த்திகளையுடையவை. அந்த ஸத்தாகாலத்திலெல்லாம் சேஷனாகவே யிருப்பதால் சேஷத்வம் ஸ்வாபாவிக ஸம்பந்தமாகிறது. ஜீவனுக்கு ஈச்வரனோடே யிருக்கக்கூடிய எல்லா ஸம்பந்தங்களையும் கொள்ளலாம். ஆகையால் உடையவன் உடமையைக் காப்பது திண்ணமென்று உபாயங்களிலே மூட்டுவதாம். உபாயங்களிலே முயற்சியாவது—அவனுக்கு ஏதேனும் உபாய ஸம்பந்தம் ஏற்படுமளவிற்கு உழைக்க வேண்டுமென்று ப்ரயத்நப்படுகை. இவ்வளவு பாடுபடுவதால் இவர்களுக்கு ராஜகுமாராபிமானிகளுக்கு ராஜமூலமாகப் போல் வரும் பலன் என்னவென, அருளிச்செய்கிறார் இவனித்யாதி. இவன்= இந்த ஜீவாத்மா. இவன் என்றவிடத்திலே இருவரும் என்கிற பாடமும் உண்டு. எம்பெருமானும் ஜீவனும் என்பது பொருள். ஜீவன் மோக்ஷம் பெறுவது ஸர்வசேஷியான எம்பெருமானின் உகப்பிற்கேயாகையால் இது தகும். அதிக வாத்ஸல்யத்தாலே பரோபகாரபரர்களுக்கு ஜீவனின் பேறும் இஷ்டமாகலாம், பொன்னுலகையும் இதி. மஹாராஜனுகை பெரும் புருஷார்த்தம். உபயவிபூதி நாதனை நாராயணன்போல் பொன்னுலகான பரமபதத்தையும் ப்ரக்ருதி மண்டலத்தையும் ஆளுகை "இந்திரலோகமாளும் அச்சுவை பெறினும்" என்றபடி கிடைக்கப்பெற்றால் எவ்வளவு உவப்போ அவ்வளவு இருவரும் புருஷார்த்தம் பெறுவதாலேயே தேசிகர் பெறுவர்.= பெற்றதாக நினைப்பர். அதடியாக= அவ்வுகப்பு காரணமாக. இதற்கு சுரக்கும் என்பதோடந்வயம். 'க்ருபயா நி:ஸ்ப்ருஹோ வதேத்' என்றபடி தனக்கு ஒரு பலனைக் கோராமல் பிறர் வருத்தத்தைப் பொறுக்காமல் அவர் பலனையே தன் பலனாக நினைத்து இழிவதற்குக் காரணமான வாத்ஸல்யத்திற்குத் தக்க உதாரணம் அறிவிக்கிறார் அன்று இத்யாதியால். அன்று ஈன்ற= அப்பொழுதே பெற்ற, பசுக்களுக்கு

கன்றுக்கு இரங்கிச் சுரக்கும் धेनुவைப்போலே இத்தேசிகர் இவ்வாத்மாவுக்கு अज्ञान.संशय विपर्ययங்கள் தீரவேண்டுமென்று மிகுதிகுறைவறச் சுரக்கும் பாசுரங்களைக்கொண்டு "तत्त्वेन यश्चिदचिदीश्वरतत्स्वभाव" इत्यादिகளிற்படியே ஈச்வரனுடையவும் ஈசிதவ்யங்களுடையவும் स्वरूपस्वभावसंबन्धங்களும் भोगापवर्ग-ங்களும் त्याज्योपादेयங்களான இவற்றினுடைய உபாயங்களும் இவற்றின் गतिप्रकारங்களும் उक्तानुक्तங்களான मोक्षविरोधिகளுமாகிற இவ்வர்த்தங்கள்

---

கன்றுகளிடத்தில் நாளுக்குநாள் அன்பு குறையும் பெற்ற க்ஷணத்திலே உள்ள அன்புக்கு ஈடு ஒன்றுமில்லை, முன் ஈற்ற கன்றையும் தனக்கு ஆஹாரம் அளிக்க வரும் ஆளேயும் கொம்பாலும் குளம்பாலும், குத்தி மெறித்துக் கன்றைத் தன்னிடம் சேர்த்துக்கொள்ள முயலும் இரங்கி= க்ருபை கூர்ந்து சுரக்கும்=மடியினின்று பாலைத்தானே பெருக்குகின்ற; தேநுவைப்போலே என்றது மேலே சுரக்கும் என்பதில் சேரும் இங்கே இத்தேசிகர் என்ற சொல் இருக்கிறது. கீழே இருக்கும் சிலதேசிகர் என்று சொல்லை "நேர்பட்டு" "முயன்று" "உகந்து" என்கிறவிடங்களில் அந்வயித்து சுரக்கும் என்பதோடும் சேர்வதால் இது வேண்டுவதில்லையானாலும் அச்சொல் வெகு தூரத்திலிருப்பதால் அதை நினைப்பூட்டுவதற்காக மீண்டும் சொன்னதாம். இதனின்று, சில தார்மிகர்களுக்கு மேலாக சில தேசிகர் शेषो हि परमात्मन என்று உபதேசித்ததுபோல் அதன் பிறகு ஞாதவ்யங்களான ஸர்வார்த்தங்களையுமறிவிக்க வேறு தேசிகரே வேண்டுமென்பது வேண்டா என்றதாயிற்று. अज्ञान संशय विपर्ययங்கள் – ஆத்ம ஈச்வர மோக்ஷாதி விஷயங்களிலே சிலவற்றை அடியோடு அறியாமை அஜ்ஞாநம். நித்யமா அநித்யமா, ஈச்வரன் தேவதாந்தரமா நாராயணனா, மோக்ஷம் ஸம்ஸாரத்தை விட்டு இருப்பு மாத்திரமா. எம்பெருமானின் அநுபவ கைங்கர்யங்களுமா என்றவாறான ஸந்தேஹங்கள் ஸம்சயம். விபர்யயமாவது= இந்த ஸம்சயத்தில் உண்மைபாகாத பக்ஷங்களை உண்மையாக ப்ரமிப்பது. மிகுதி குறைவு அற=அதிக விரிவும் அதிகச் சுருக்கமுமில்லாதபடி, சுரக்கும் பாசுரங்களை பசு சுரப்பது பால், தேசிகர் சுரப்பது பாசுரம் (பாசுரம்=உபதேசவாக்யம்.) இதே गुरुपारम्पर्यमென்று கீழே கூறப்பட்டது உபதேசம் அர்த்தஞானத்திற்காகையாலே அறியவேண்டுமர்த்தங்கள் எவை என்ன விவரிக்கிறாராய் அவ்விஷயங்களெல்லாம் அடங்கிய ஸ்ரீ விஷ்ணுபுராண விஷயமான ஆளவந்தார் ஸ்ரீ ஸூக்தியை உதாஹரிக்கிறார் तत्त्वेन என்று ச்லோகத்தில் यः= எந்த பராசரர் उदारः = வள்ளலாய் चेतनம், अचेतनம் ईश्वरன், இம்மூன்றின் ஸ்பாவங்கள், ஐச்வர்ய கைவல்ய போகங்கள், மோக்ஷம், அவற்றின் உபாயங்கள், அவற்றைப் பெறப்போகும் மார்க்கங்கள் என்றவற்றைத் தெளிவாக்கி விஷ்ணு புராணம் இயற்றியருளினர் என்னப்பட்டது, இவற்றில் சிலவற்றின் அறிவு இவை த்யாஜ்யங்கள்-விடவேண்டியவை என்றறிவதற்காக; மற்றவற்றின் அறிவு கொள்வதற்காக. ஆகையால் மோக்ஷவிரோதிகளை யறிவதும் சேர்க்

முமுக்ஷுவான இவ்வாத்மாவுக்கு ஜ்ஞாதவ்யங்கள் ...இவ்வர்த்தங்கள் எல்லாம் அத்யாத்மவிஷயஶப்தராஶியில் ஸாரதமமான ரஹஸ்யத்ரயத்திலே ப்ரதிதந்த்ரஸாரோத்தாரேண ஸங்க்ரஹிக்கப்படுகிறன.

> திருவுடன்வந்தசெழுமணிபோல் திருமாலிதயம்
> மருவிடமென்ன மலரடி சூடும்வகை பெறுநாம்
> கருவுடன்வந்தகடுவினையாற்றில்விழுந்தொழுகாது
> அருவுடனைந்தறிவார் அருள்செய்ய வமைந்தனரே. 8.

---

கப்படுகிறது. இவ்வாத்மாவுக்கு இதி. இவ்வதிகாராரம்பத்திலே இவன் என்றாரம்பித்த இரண்டாவது வாக்யத்திற்கு இங்கே ஜ்ஞாதவ்யங்கள் என்ற இடத்தில் முடிவு - ஆக மஹாவாக்யத்தின் அமைப்பானது — இவன்... யதாவஸ்தப்ரகாஶகர்ஹ- ஞய் ... வேற்றுருக்கொண்டு நிற்க. இவ்வாத்மாவுக்கு சில தார்மிகர்...உண்டாக்கி...நிறுத்தினவளவிலே...சில தேசிகர் சுரக்கும் பாசுரங்களைக்கொண்டு இவ்வர்த்தங்கள் இவ்வாத்மாவுக்கு ஜ்ஞாதவ்யங்கள் என்ற வாறு. சில ஸ்ரீகோசங்களில் ஜ்ஞாதவ்யங்கள் என்றவிடத்தில் 'ஜ்ஞாதவ்யங்கள் என்று உபதேசிப்பார்கள்' என்று வாக்யபூர்த்தி உளது ரஹஸ்யத்ரயாதிகாரி வேதாந்தார்த்தங்களைத் தெளிவதுமட்டும் போதாது அவை ரஹஸ்யத்ரயத்தில் அடங்கிய வகையுமறிய வேண்டுமென்ற கருத்துடன் மேலே மூன்றாம் வாக்யம் சப்தராசியில் ஸாரதமமான = சப்தங்களுக்குள் சிறந்ததான். ப்ரதிதந்த்ரஸாரோத்தாரேண = நமது ஸித்தாந்தத்தில் மட்டுமுள்ள விசேஷார்த்தங்கள் ப்ரதிதந்த்ரஙகள் அவற்றில் ஸாரமானவற்றைப் பிரித்தெடுத்து என்றபடி.

கீழே ஞாதவ்யங்கள் என்றும் ப்ரதிதந்த்ரஸாரோத்தாரேண என்றும் சொற்களால் அர்த்தபஞ்சகமும் ஸூக்ஷ்மமான சரீராத்ம பாவஸம்பந்தமுமான ஆறும் கருதப்பட்டிருப்பது தோற்ற அவற்றையும் சேர்த்துக்கொண்டு இவ்வதிகாரார்த்தத்தை முடிவில் பாசுரத்தில் சுருக்கி யருளுகிறார். இவ்வதிகாரத்தில் தான் வாழ்கிற வாழ்வை என்றவரையில் ப்ராப்ய ப்ரம்மஸ்வருபமும், ஸ்வாமி கைங்கர்யத்துக்கு என்றதால் ப்ராப்திஸ்வரூபமும். அநாதிமாயயா என்றதால் ப்ராப்தி விரோதியும், ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மா இத்யாதியால் ப்ராப்தாவான ஜீவஸ்வருபமும், ததுபாய என்றவிடத்தில் உபாயமும் ஸகல ஸஜாதீய ஸம்பந்தங்கள் என்றவிடத்தில் சரீராத்மபாவாதிகளும் குறிக்கப்பெற்றன. திருவுடன் = திருப்பாற் கடலிலே யவதரித்த பிராட்டியுடன் வந்த = எம்பெருமானிடம் தானே சேர்ந்த. செழுமணிபோல் =சிறப்புற்ற கௌத்துவ ரத்னத்திற்குப்போல். நமக்கும் திருமால் = ச்ரிய:பதியினுடைய இதயம் = ஹ்ருதயமானது மருவு இடம் = அன்போடு தங்குமிடம் என்ன = என்னப்பட்டிருக்க, மலர் அடி = தாமரைபோன்ற திருவடிகளை சூடும் வகை = சிரஸா வஹிக்கும் ப்ரகாரத்தை பெறும்–பெற்றிருக்கிற நாம்–ஸம்ஸாரிகளான நாம் கருவுடன் வந்த–கர்ப்பத்தினின்றே வருகின்ற. அநாதியாக வருகின்ற என்றபடி. கடு = கடுமையான வினை–கர்மங்களாகிற ஆற்றில்–வெள்ளத்தில் விழுந்து–கரைக்கு ஸமீபமாகாத

कर्मविद्यादिचक्रे प्रतिपुरुषमिहानादिचित्रप्रवाहे
तत्तत्काले विपक्तिर्भवति हि विविधा सर्वसिद्धान्तसिद्धा ।

இடத்தில் முழுகி ஒழுகாது = ஸம்ஸாரத்திலேயே அடித்துப்போகாதபடி நமக்கு அருள் செய்ய = தயை புரிவதற்கு, அருஉடன் = ஸூக்ஷ்மார்த்தமான சரீராத்ம்பாவ ஸம்பந்தத்துடன் ஐந்து = அர்த்தபஞ்சகத்தை = அறிவார் = அறிந்த தேசிகர்கள் அமைந்தனர் = வாய்த்தனர். இனி உபதேசம் பெறவாணேம்; என்ன குறை என்றபடி. தேசிகர் மூலம் ஸூக்ஷ்மார்த்தத்தையும் அர்த்த பஞ்சகத்தையும் அறியாமற்போனல் ஸம்ஸார வெள்ளத்தில் ஒழுகி ஒழியவேண்டியதாகுமென்றபடி. இதயம் மருவிடமென்ன இதன் கருத்தாவது—பிராட்டியுடன் திருப்பாற்கடலிலே தோன்றி சேர்ந்த செழு மணியை அவளுடைய அபிமானம் பெற்றதால் ஹ்ருதயத்தில் வைத்துக் கொண்டதுபோல், அவளுடைய அபிமானத்திற்கும் பாத்திரமான நம்மையும் ஹ்ருதயத்திலே கொள்வதற்கு (திருமார்பில் வைத்துக்கொள்வதற்கு) பெருமாள் ஸித்தமாயிருக்க நாம் மருவத்தகுந்த அவ்விடத்தை விட்டு திருவடித்தாமரையின்கீழ் நம்மைச் சேர்த்துக்கொண்டோம் கைங்கர்யத்திலாசையால். திருமார்பு என்கிற ஹ்ருதயம் மருவிடமாக வேண்டா. அது திருவுக்கும் மணிக்குமேயாகுக. திருமாலின் (ஹ்ருதயம் என்பதற்குப் பொருளான) திருவுள்ளமே நமக்கு மருவிடமாவது போதும். அது மருவிடமாக இருப்பதால்தான் மலரடிசூடும் வகை நமக்கு நேருவது என்றதாம்.

ஈச்வர ஸௌஹார்தாதிகள்மட்டு மிருந்தால் போதுமா? யத்ருச்சா ஸுக்ருதாதிகள் வேண்டுமே. அநாதி காலத்தில் இதற்குமுன் இல்லாத யத்ருச்சா ஸுக்ருதம் இப்பொழுது உண்டென்பது எங்ஙனே கூடுவது? ஆகையாலும், மத்யே மத்யே பல இடயூறுகள் கூடுமாகையாலும் மோக்ஷம்வரையில் பெற்று ஒருவன் ஸ்வஸ்த்தனுவானென்பது விசுவஸிக்க முடியாதது என்கிற கேள்வியை மேலே ச்லோகத்தாலே பரிஹரிக்கிருர். வெள்ளத்திலே அடிபட்டுப் போகின்றவர்களில் முன்னேயும் மத்தியிலும் முடிவிலும் பலர் கரை ஏறுகிருர்கள். அதைக்கொண்டு அப்போதுதான் அவர்களுக்கு அநுகூல காலம் வாய்த்ததென்று முடிவுசெய்கிறோம். அதுபோல் ஸம்ஸார வெள்ளத்தில் ஒழுகும் நம்மில் சிலர் முன்னே மோக்ஷம் போயிருப்பதும் நாம் இப்பொழுது சித்தமாவதும் நமக்குப் பின் சிலர் போவதும் கூடும். ஐஹிகமாயும் ஆமுஷ்மிகமாயுமிருக்கிற ஐச்வர்யங்களில் சிலர் சிலவற்றை சில காலத்திலேயே பெறுவது வேறு காலத்தில் நாநாவிதமான நரகத்தில் படுவது என்றவற்றுக்குப்போல் இதற்கும் தக்க கர்மாவானது வாய்ப்பது திண்ணம். ஈச்வர ஸ்ருஷ்டியே மோக்ஷம் பெறுவிப்பதற்கேயன்றோ என்றபடி इह = இந்த. இது சக்கரத்திற்கு விசேஷணம். प्रतिपुरुषं = ஒவ்வொரு ஜீவனுக்கும். अनादिचित्र = அநாதிகாலமாய் வவெவ்வேறுன प्रवाहे வெள்

तल्लब्धस्वावकाशप्रथमगुरुकृपागृह्यमाणः कदाचित्
मुक्तैश्वर्यान्तसंपन्निधिरपि भविता कश्चिदित्थं विपश्चित् ॥ 7.

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे उपोद்घाताधिकारः प्रथमः ॥

—o—o—

ளத்தை—நீடிப்பை உடைய कर्मविद्यादिचक्रे = புண்ய பாபங்களான வினைகள், देहात्मभ्रमादि விபரீத ஞானமாகிற அவித்யை, அவற்றின் தொடர்ச்சியால் ஏற்பட்ட வாஸனை அவற்றில் ருசி அவை மூலமான ப்ரக்ருதி ஸம்பந்தம்—பிறவி இவையாகிற சக்கரத்தில். இவற்றை சக்கரம் என்பது ஒன்றின்பின் ஒன்றாக வந்துகொண்டேயிருக்குமென்பதற்காக. ப்ரக்ருதி ஸம்பந்தம் வந்ததும் மீண்டும் கர்மா பின்தொடருமே. "तस्मिन् हंसो भ्राम्यते ब्रह्मचक्रे" என்று ஓதப்பெற்றது. चक्रे சுழல்களையுடைய प्रवाहे வெள்ளத்தில் என்னவுமாம். அப்பொழுது चक्रे என்றடத்தில் बहुव्रीहि. प्रवाहे என்றவிடத்தில் तत्पुरुषन். அல்லது சக்கரமாகிற வெள்ளத்திலே என்னலுமாம். सर्वसिद्धान्तसिद्धा = தேஹாத்மவாதியான சார்வாகன் நீங்கலாக வேதபாஹ்யரான ஜைநாதிகள் உள்பட எல்லா ஸித்தாந்திகளும் தங்கள் மதத்திலிசைந்த विपाकः = பலனின் ப்ராப்தியானது प्रतिपुरुषम् = புருஷன்தோறும் तत्तत्काले = அந்தந்த காலத்தில், ஒன்றினுடைய காலம் மற்றொன்றுக்கில்லாதபடி विविधा = நாநாவிதமாக भवति हि = உண்மையாகவே இருக்கின்றதே. ஸர்வ ஸித்தாந்த என்று பொதுவாக இருந்தாலும் சார்வாகம் தவிர என்பது தானே ஸித்திக்கும். இத்தனை ஜந்மங்களிலில்லாதது இப்பொழுது கிடைத்துவிடுமா என்று கேட்டவன் அநாதி கர்மாவை ஒப்புக்கொண்டவனாயிருப்பதாலே அதையிசைந்த ஸர்வஸித்தாந்தங்களைத் தானே அதற்கு உத்தரமான இவ்வசனம் குறிக்கும் மேலும் கர்மம் அநாதி என்பது ஸர்வஸித்தாந்தத்திலும் இசையப் பெற்றதென்பதை ஸ்தாபிப்பதற்காக இந்த ச்லோகம் வரவில்லை எல்லோருமிசைந்தபடி விசித்ர அநாதி கர்ம ப்ரவாஹத்தில் புதிய புதியவகையான பலன் வருகிறதென்று வேறுபாட்டை ஸ்தாபிப்பதற்கே. ஆகையால் कश्चित् = ஒருவன் तल्लब्धेत्यादि. तत् அந்த विपाक (फलப்ராப்தி) வசத்தாலே लब्ध பெறப்பட்ட स्वावकाश தனக்கு இடத்தை யுடையதான प्रथमगुरुकृपा = புத்தாதிகள்போலன்றி உண்மையில் ஆதிகுருவான எம்பெருமானின் க்ருபையினாலே गृह्यमाणः = விஷயீகரிக்கப் பெற்றவனாய் इत्थं கீழ்ச்சொன்னபடி ஆசார்ய ப்ராப்தியாலே विपश्चित् = விசதஜ்ஞானம் பெற்றவனாய் मुक्तैश्वर्य = முக்தர்கள் பெறும் கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தை अन्त முடிவிலுடைய संपत् = ஐஹிக ஆமுஷ்மிக ஸகல ஸம்ருத்திகளுக்கும் निधिरपि = கொள்கலமாகவும். भविता = ஆகப்போகிறான்.

# सारनिष्कर्षाधिकारः २.

## ஸாரநிஷ்கர்ஷாதிகாரம்.

श्रुतिपथविपरीतं क्ष्वेळकल्पं श्रुतौ च प्रकृतिपुरुषभोगप्रापकांशो न पथ्यः ,।
तदिह विबुधगुप्तं मृत्युभीता विचिन्वन्त्युपनिषदमृताब्धेरु(ब्धावु)त्तमं सारमार्याः ॥ 8.

---

இதில் ஸம்சயம் வேண்டா. அந்தந்தக் காலத்தில் அவனவன் புதிது புதிதாகப் பெறுவதெல்லாம் முன்னமே அவன் பெற்றது போன்றதே என்பது நமக்குத் தெரியவில்லை. ஆசார்ய கடாக்ஷாதிகளைப் போலே புதியனவும் பல இருக்கலாம், ஜைநாதிகளும் இப்படி தான் மோக்ஷத்தை நிரூபிப்பர். குணக்கடலான ஈச்வரனை இசைத்த நாம் நிரூபிப்பது எளிதலர மென்றபடி.

ஸ்ரீமதே நிகமாந்த குரவே நம:

### ஸாரநிஷ்கர்ஷாதிகாரம் 2.

உபதேசிக்கப் போகிற வேதாந்தார்த்தங்களை எந்த ரஹஸ்யங்களில் ப்ரபத்தியதிகாரி அடக்கி அநுஸந்திக்க வேண்டுமோ அந்த ரஹஸ்யங்கள் இவை:இவையே சொற்களின் ஸாரமென்று மேலதிகாரத்திலே அருளிச்செய்கிறார் தேஹாத்ம விவேகம் பிறந்து மோக்ஷத்தை விரும்பிய அதிகாரிக்கு உபதேசிக்க வரும் சில தேசிகர் **तत्वेन यः** என்கிற ச்லோகத்தில் சொன்ன அர்த்தங்களை உபதேசிப்பவருமாகலாமே ; வேதமே ப்ரமாணமென்றால், கர்மகாண்டார்த்தத்தை உபதேசிப்பவருமாகலாமே. அது முக்ய ஸாரமாகாதென்றால் வேதத்திலேயே ஸாராஸாரமிரண்டுமுள்ளதாகில் அவற்றைப் போல் ஸாங்க்ய பௌத்தாதிகளையும் கொள்ளலாமே. வேதத்திலும் பல ரஹஸ்யங்களிருக்க இந்த ரஹஸ்யத்ரயமே கொள்ளப்படுவது ஏன்? மூன்றும் வேண்டுமென்பதுமேன் என்ற கேள்விகள் எல்லாம் இங்கே விலக்கப்படும். இதன் ஸங்க்ரஹ ச்லோகம் **ஶ்ருத்யாதி**. இதற்கு முதல் வ்யாக்யாநமான **ஸாரதீபிகை**யிலேயே விரிவாக உரை யுள்ளது. **श्रुतिपथविपरीतम् =** வேதமார்கத்திற்கு மாறாக எல்லாம் சொல்லும் மதக்ரந்தங்கள் **क्ष्वेलकल्पम् =** விஷத்திற்கு ஸமமாகும். மேலே அம்ருதத்தைச் சொல்லுகிற படியால் இங்கே விஷமென்றது கடலைக் கடைந்த போது வந்த விஷம் என்பது ஸ்வரஸம். உபநிஷத்தை அம்ருதம் என்னப் போகிறார். இந்த விஷமும் அந்த அம்ருதமும் அடங்கிய கடல் எது என்றால் பொதுவாக சாஸ்த்ர ஸமுதாயமே கடல் என்னவேண்டும். அதில் வேதபாஹ்ய க்ரந்தங்களும் அத்வைதம்முதலான குத்ருஷ்டிக்ரந்தங்களும் விஷமாகும். கர்மகாண்டாதி சாஸ்த்ர க்ரந்தங்கள் மத்யமம். உபநிஷத்து அம்ருதம். இந்த சாஸ்த்ர ஸமுதாயம் என்கிற பதம் சொல்லாமலே ஸித்திக்கும். முதலிலிராமல் உத்தரார்தத்தில் வேறு வாக்யம் தொடங்கின பிறகு **इह** என்ற சொல் இருப்பதால் அதற்கு சாஸ்த்ர ஸமுதாயம் என்ற பொருளை

விட்டு ச்ருதியில் என்று ஸாரதீபிகையில் பொருள் கூறினர். அச்சொல்லை முன்னே கொண்டு போவது ஸ்வரஸமாகாதே. அங்கேயே அந்வயித்தாலும் இப்பொருள் கொள்ளலாமாகில் கொள்க அப்போது கீழதிகாரத்தின் முடிவில் **அத்யாத்ம விஷயவாக்ய ராசியில்** என்ற பதம் உளதே. அதை அத்யாத்ம= ஆத்மாவைப் பற்றிய விசேஷங்களை விஷயமாகக் கொண்ட வாக்யராசி என்று ஸாங்க்யாதிக்ரந்தங்களையும் கூட்டிப் பொதுவாக்கி இங்கே **इह** என்ற தென்க மேலே **उपनिषदमृताब्धि** என்று உபநிஷத்தைக் கடலாகக் கூறி யிருக்க அதற்கு விசேஷணமான **इह** என்றதை ஸர்வக்ரந்தவிஷய மாக்கலாமோ வென்னில், **इह** என்பது அதற்கு விசேஷணமன்று. **इह** இந்த லோகத்தில் என்கிற பொருளும் வ்யாக்யானஸம்மதமன்று—ச்ருதி என்ற பொருளை பொதுவாகக் கூறினர். **अब्धि**க்கு விசேஷணமாகில் **इह** இந்த என்றே கூறி யிருப்பர். **इह** இந்த ச்ருதியிலடங்கிய **उपनिषदमृत** அம்ருதம்போன்ற உபநி ஷத்தாகிற **अब्धि** கடல் என்று கருதிய பொருள். **श्रुत** என்று பொதுவாகச் சொன்னதாலே ஐச்வர்யபலனைக் கூறும் கர்மகாண்டத்தை பூர்வார்த்தத்தில் சேர்த்தது இசையும் ஆனாலும் பாஹ்ய குத்ருஷ்டி க்ரந்தங்கள் ச்ருதியிலடங் கியவையல்லவே என்று கேட்கலாம். அத்வைதாதி குத்ருஷ்டிக்ரந்தங்கள் ச்ருதிகளின் அபவ்யாக்யாநங்களாகையாலே **व्याख्यानम् व्याख्येय**த்திலடங்கியது என்ற அபிப்ராயத்தாலே என்று விடையாம் நன்றாக உரைக்கப்பட்ட நிலையி லேயே உபநிஷத்து அமுதம். விபரீதவுணர்வுடன் கூடில் அதுவே விஷம் அதுபோல் **जैनबौद्धादि** மதங்களும் **सदेव सोम्य इत्यादि**யான சில **वेद**ச் சொற்களை மூலமாக்கிக்கொண்டு பிறந்து பிறகு பொருந்தாமையால் **वेदबाह्य**ங்களாயின என்ற கருத்தாலே அவற்றையும் ச்ருதியிலடக்கினரென்னலாம். இவ்வளவு பிரயாஸை வேண்டாமாகில் **इह** என்பதற்கு **आत्मविषयग्रन्थराशि**யான **शास्त्र**த்திரளில் என்றே பொருள் கூறுக. இது பெருங்கடல்; **उपनिषदमृताब्धि** என்றது இதிலடங்கிய சிறு கடல். **अब्धे**. என்கிற பாடத்தில் **विभक्ति** வேறாக இருப்பதால் இதுவுமதுவும் ஒன்றன்று என்பது ஸ்பஷ்டம். ஆனால் **सारप्रकाशिकापाठ**மே **अब्धेः** என்பது. **सारदीपिकादिपाठम् अब्धौ** என்பதே. **अमृतमिवोपनिषत् उपनिषदमृतम् उपनिषदमृतमेव अब्धिः उपनिषदमृताब्धिः तत्र** என்க. அம்ருதம் போன்ற உபநிஷத்தைக் கடலாகக் கூறியது ஏன் என்னில், இதி லும் சிலவற்றைக் கழித்து **उत्तमसार**மான அம்ருதத்தைக் கொள்ள வேணு மென்பதற்காக. இது பூர்வவ்யாக்யானரீதிக்கு இணங்கச் சொன்னதாகும் இதுபோல் இந்த சாஸ்த்ரத்திரளே கடல் என்பது ஸ்பஷ்டமாவதற்காக **अब्धौ** என்பதற்கு **इह** என்பதை விசேஷணமேயாக்கலாம் **उपनिषदमृत**—என்றவிடத்தில் பஹுவ்ரீஹிஸமாஸம் உபநிஷத்தை அம்ருதமாக உடைய **इह**-இந்த சாஸ்த்ரத் திரளாகிற **अब्धौ**-பெருங்கடலில் **श्रुतिपर्यवसितम्** என்றந்வயிக்கலாமே **सारदीपिके** யின் கருத்து மேலே விசாரிக்கப்படும் ச்லோகத்தின் **प्रतिपदार्थ**மாவது—**श्रुतौ च**= முழுமையும் ப்ரமாணமாக ஆதரிக்கப்பட்ட வேதத்திலும். **प्रकृति**—ப்ராக்ருதப்ர

இந்த ரஹஸ்யத்ரயத்தில் திருமந்த்ரம் "सर्वमष्टाक्षरान्तःस्थम्" என்கிற

---

பஞ்சமென்ன **पुरुष** = சுத்த ஜீவஸ்வருபமென்ன இவற்றின் போகங்களாகிற ஐச்வர்ய கைவல்யங்களுக்கு. **प्रापकांशः** = அறிவை யளிக்கும் பாகமெல்லாம். இங்கே ப்ருக்ருதி புருஷபோக என்றவற்றுக்கு பாற்கடலில் கிடைத்த பாரிஜாத—அப்ஸர:**प्रभृति भोगसाम्य**ம் கருதப்பெறும், **न पथ्यः** = ருஜுமார்க்கத்தை விட்டு விலகியதாம். முன்னே **क्ष्वेलकर**ம் என்றதாலே சிறிதும் பலனில்லை, கேடுமுண்டுஎன்றது இங்கே. **नपथ्यः** என்றதாலே தத்காலபலன் இருந்தாலும் ஸ்வரூபத்துக்குத். தகாத பலனென்றதாம். **स्तौ च** என்கிற **च**காரத்தை **प्रकृतिपुरुष भोग प्रापकांशश्च** என்று மேலேயும் சேர்க்கலாம்**तत्** = ஆகையாலே **इह** = ஆத்ம விஷயமான. சாஸ்தரத்திரளில் அடங்கிய **उपनिषदमृताब्धौ** = அம்ருதம்போன்ற உபநிஷத்தாகிற கடலில் **विबुधगुप्तम्** = தேவதைகள் போலன்றி **विरक्त**ரான ஞானிகளாலே காக்கப்பட்ட**उत्तमं सारम्** = உயர்ந்த ஸாரதமத்தை **आर्याः** = ருஜுமார்கத்தில் போகின்றவர்கள் **मृत्युभीताः** = ஸம்ஸாரத்தினின்று அஞ்சினவர்களாய் **विचिन्वन्ति** = ஆராய்கின்றனர். **अमृताब्धि** என்பதற்கு பாற்கடல் என்று பொருளைக் கூறி உபநிஷத்தாகிற பாற்கடலினின்று பெறப்படும் உத்தம ஸாரத்தையே அமுதமென்பர். அது ஸாரதீபிகாஸம்மதமன்று. உபநிஷத்தே, அமுதம். அமுதத்தில் இன்னமுதம் ரஹஸ்யத்ரயம். இதே மேலுள்ள மூல வாக்யராசிக்கு இணங்கிய பொருள். ஐச்வர்ய கைவல்ய பாகங்களைப்போலே பக்தியாதி பரமஹித ப்ரதிபாதக ச்ருதி பாகங்களை புறக்கணிக்கலாகாதென்று முழுஉபநிஷத்தையுமே அமுதமென்றருளினர் மேலே **असार** மென்கிற ச்லோகத்திலே கூறிய ஸாரதமமும் முழுஉபநிஷத்தே என்னப்போகிறார். **भक्तिमार्ग**மும் **संसार**த்தினின்றஞ்சிய **भक्त्यधिकारि**களால் க்ரஹிக்கப்படுவதாலும் **व्यासादिविबुध**ர்களால் காக்கப்பட்டதாலும் அமுதமே. ஆகையால் அதுவும் மரணத்திற்கஞ்சிய தேவதைகளால் தேடப்பட்டதும் காக்கப்பட்டதுமான அமுதம் போலாகும் அதிலுமினியதான **रहस्यत्रयरूप**மான அமுதை அமுதில் இன்னமுதமான பெரிய பிராட்டிக்கு ஸமமாக ஸாரதீபிகாகாரர் புகழ்ந்தார். பெரிய பிராட்டியையும் தேவதைகள் தங்களுடைய ராஜ்யலக்ஷ்மியும் அதிகாரமும் அசுரரிடம் விலகாமைக்காக மூர்த்தி வைத்துப் பூஜிப்பதாலே அவளுக்கும் **विबुधगुप्तत्व**ம் உண்டு. **प्रायश्चित्तप्रसङ्गे तु सर्वपापसमुद्भवे। मामेकां देवदेवस्य महिषीं शरणं व्रजेत्** என்றபடி ஸம்ஸாரத்தினின்றஞ்சிய ஆர்யர்களாலும் ஆச்ரயிக்கப்படுகிறுளென்று ஸாம்யம் கண்டுகொள்வது.

மேலே ச்லோகார்த்தத்தை அருளப்போகிறுர். முதலில் உபநிஷத்தாகிற அம்ருதத்திற்குள்ளே மூவை சேர்ந்தவை, இவையே போதும் என்பதை நிரூபிக்க இந்த இத்யாதி திருவஷ்டாக்ஷரம் **अथर्वनारायणोपनिषत्** முதலியவற்றிலிருப்பது. **द्वयं** **खिल**மான **कठश्रुति**யில் விரித்து ஓதப்பட்டதென்பதை மேலே அருள்வர். **चरमरहस्य**ம் **गीतोपनिषत्**த்தில் சேர்ந்தது. ஆகையால் மூன்றும் **उपनिषदमृत**மாகும் தத்துவஞானம் பிறந்தபிறகே உபாயத்தை யநுஷ்

படியே தன் அர்த்தத்தை அறிய எல்லா அர்த்தங்களையும் அறிந்து தரும் படியாயிருக்கையாலும், சரமச்லோகம் **"सर्वधर्मान् परित्यज्य मामेकं शरणं व्रज"** என்று தான் சொல்லுகிற உபாயம் ஒன்றையுமே அவலம்பிக்க **सर्वोपायफलसिद्धि** உண்டாமென்று **स्थापि**க்கையாலும், த்வயமும் **कठश्रुत्यादि**களில் சொல்லுகிற படியே தன்னை ஒரு கால் உச்சரித்தவனை ஸர்வப்ரகாரத்தாலும் க்ருதக்ருத்யனாக்க வல்ல வைபவத்தை உடைத்தாயிருக்கையாலும் ரஹஸ்யத்ரயமே

---

டிக்கவேண்டியிருப்பதால் **अनुष्ठानसंबन्धिमन्त्र**மான **द्वय**த்திற்குமுன் அறிய வேண்டியதாகும் திருமந்தரம் ஆக **मूलमन्त्र**மாம் திருவஷ்டாக்ஷரம். அநேகமாக **द्वय**த்திற்குப் பின்னே சரமச்லோகத்தை எடுத்துரைப்பது வழக்கமாயினும் இங்கே சரமச்லோகம் த்வயத்திற்கு முன்னே கூறப்படுகிறது. ஏனெனில், த்வயம் **प्रपत्त्यनुष्ठान**காலத்திலுபயோகப்படுகிறது. **अनुष्ठेयार्थस्मारकं मन्त्र**ம் என்பரே மோக்ஷத்திற்காக நேராக ப்ரபத்தி யனுஷ்டிக்க வேண்டுமென்று **विधिवाक्य**த்தால் அறிவிக்கப்பட்டபிறகுதானே அனுஷ்டானத்தில் **प्रवृत्ति**யும் **मन्त्रापेक्षै**யும். திருமந்த்ரத்திலோ த்வயத்திலோ ப்ரபத்தி விதிக்கப்படவில்லை. அதனால் சரமச்லோக்த்தை இடையில் எடுத்தது. அதில் **शरणं व्रज, मोक्षयिष्यामि** என்று மோக்ஷத்திற்காக **शरणागतिविधि** இருப்பது ஸ்பஷ்டம். **सर्वमष्टाक्षरान्तःस्थमिति सर्वम = श्रुति · स्मृति · इतिहास · पुराण · पञ्चरात्रादिशब्दराशि** யெல்லாம் திருவஷ்டாக்ஷரத்தினுள்ளே அடங்கியது. அவற்றில் சொல்லிய முக்யார்த்தங்களெல்லாம் **वाच्य**மாகவும் **व्यङ्ग्य**மாகவும் இங்கே கிடைக்கும் என்றபடி. இதைவிட **सर्व**மென்பதற்கு எல்லாப் பொருளும் என்றே அர்த்தம் கொண்டால் என்னவெனில், முழுச்லோகத்தை நோக்குக **त्रयो वेदाः षडङ्गानि छन्दांसि विविधाः स्वराः (ऋचो यजूंषि सामानि तथैवाथर्वणानि च) सर्वमष्टाक्षरान्तःस्थं यच्चान्यदपि वाङ्मयम्** என **नारदीय·हारीतवचन**ங்கள். தன்னர்த்தத்தை யறிய = அறிந்தபோது. **அறிந்து தரும்படி** = அறியும்படி அல்லது கேட்பவர் அர்த்தங்களை யறிவதோடு பிறருக்கும் உபதேசிக்கும்படி. இதனால் எல்லாமிங்கேயே அறியப்பட்டபடியால் வேறுபாகத்தில் ச்ரமப்பட வேண்டியதில்லை என்றதாயிற்று. ஆனாலும் **प्रपत्ति**யை விதிக்கும் வாக்யம் வேண்டும். அதற்காக **चरमश्लोक**ம் இத்யாதி. ப்ரபத்தியோடு **कर्मयोग·ज्ञानयोग·भक्तियोग**ங்களும் **अनुष्ठि**க்கப்பட வேண்டியிருப்பதால் இவ் விதி வாக்யம் போதாதே என்ன, **उपाय**மொன்றையுமே இத்யாதி, ஒன்றையுமே = ஒன்றேயானாலும் அதை. சரமச்லோகத்தை த்வயத்திற்குப் பின்னே அனுஸந்திப்பது **मा शुचः** என்பதில் நோக்காலாம். **कठश्रुतीति खिल**ச்ருதியிலுள்ளது **"सकृदुच्चारः संसारमोचनं(तारको) भवति"** என்கிற வாக்யம். ஸர்வப்ரகாரத்தாலும் = மோக்ஷோபாயமான **भक्त्यादि**களுக்கு அங்கமாக அநுஷ்டிக்கபட்டாற்போலே நேராக மோக்ஷத்திற்கே அநுஷ்டிக்கப்பட்டாலும் என்றபடி. அல்லது விசதஜ்ஞானத்தோடு **अनुष्ठि**த்தாலும் ஸமுதாயஜ்ஞானத்தோடு அநுஷ்டித்தாலும், **मोक्षसाधन**மான ப்ரபத்திபூர்த்தியைப் பின்னே யுத்தேசித்து **मन्त्रोच्चारण**ம் மட்டும் செய்தாலும்,

முமுக்ஷுக்களுக்கு आदरणीयம்.

असारमल्पसारं च सारं सारतरं त्यजेत् ।
भजेत् सारतमं शास्त्रे(स्त्रं) रत्नाकर इवामृतम् ॥

---

जपादिகளைச் செய்யாமல் உபதேசகாலத்தில் आचार्योच्चारणानूच्चारणம் மட்டிலே धरिக்கப்பட்டிருந்தாலும் என்றபடி இந்த ப்ரபாவம் இதற்கே असाधारणம்.

தம் ச்லோகத்தின் பொருளை விசதமாக்க ச்லோகம் ஒன்றை உதாஹரிக்கிறார் असारमिति. இது सारसङ्ग्रहव्याख्यानப்படி தேசிகனுடைய காரிகையாயிருந்தால் அவருடைய கருத்துக்கு மாறாக வேறு அர்த்தம் சொல்லி இங்குள்ளதை தூஷிக்கலாகாது. रहस्यत्रयகாரிகைகளில் இதுவுமொன்று என்று கொள்ளப்படாமையால் सारदीपिकादिகளின்படியில் இது உதாஹரிக்கப்பட்ட ச்லோகமேயாகுமெனில், அப்பொழுது இங்கு உரைக்கப்பட்ட அர்த்தத்திலேயே இந்த ச்லோகம் பிறந்ததா அல்லது "अग्ने नय सुपथा राये" இத்யாதிகளுக்கும் "इदं शरणमज्ञानाम्" இத்யாதி [मनुस्मृति.लक्ष्मीतन्त्रादि] ச்லோகங்களுக்கும் सन्दर्भानुसारமாக வெவ்வேறு பொருள் கொள்வதுபோல் இந்த ப்ரகரணத்தில் இதற்கு இவ்வர்த்தம் கொள்ளப்பட்டது என்னவேண்டும் வேறுவிதம் உரைத்தாலென்னவெனில், அப்போது ஒரு சார்வாகன்கூட இதையே உதாஹரித்து 'மோக்ஷத்திற்காம் பக்திமார்க்காதிகள் அஸாரம்'; நிஷ்பலம் வேறு பலனுக்கான யாகாதிகள் ख्यातिलाभपूजைகளுக்காகிறபடியால் அல்ப்பஸாரம். ராஜ்யபரிபாலநாதிகள் சில நிபந்தனைக்கு உட்படவேண்டியிருப்பதாலும் போகமிருப்பதால் ஸாரம் ஸ்வதந்த்ர धनिक ஜீவனம் ஸாரதரம் காமபுருஷார்த்தம் நிறைந்த ஜீவனம் ஸாரதமம் என்றுரைப்பானாலே இதற்கு உரை செய்தானாகில் அதற்கு அவன் கொள்கை அப்ராமாணிகம், அயுக்தம் என்பதைக் கொண்டே மறுப்பாகும். அதுபோல் आचार्याभिमानமொன்றே मोक्षसाधनமென்று கட்டி भक्तिप्रपत्तिशास्त्रங்களைச் சேர்க்காமல் விலக்கி இதுவே परमार्थம் என்று சிலர் ஸாதிப்பது आचार्याभिमानம் மட்டும் போதாது என்கிற पक्षத்தினர் இசையத் தகுந்ததாகாது. நாம் பக்தியில் அதிகாரமில்லாமல் ப்ரபத்தியை அனுஷ்டித்தாலும் பக்த்யதிகாரிகளுக்கு அதை விதிக்கும் சாஸ்த்ரமே ஸாரதமமாகையாலே அது மோக்ஷமென்கிற பரம புருஷார்த்தத்திற்கே யாகிறபடியாலே அதை अनुपादेयமான கீழ்ப்படியில் சேர்த்து அது सारतमமன்று என்றால் व्यासादिகள் परिहसिக்கும்படியாம் என்று திருவுள்ளம் கொண்டு அதனையும் सारतमத்திலேயே தேசிகன் சேர்த்தருளினார். அதுபோல் பக்தியிற்போல் ப்ரபத்தியிலும் அசக்தனுக்கு आचार्याभिमानம் என்கிறவர்களும் भक्तिप्रपत्ति சாஸ்த்ரங்களையும் सारतमத்திலே சேர்ப்பதே அழகாகும். பக்திப்ரபத்திகள் அஹங்கார கர்ப்பமென்னில், ஆசார்யாபிமானமும் ஆசார்யாஹங்காரகர்ப்பமே. "भक्त्या परमया वापि प्रपत्त्या वा महामते । प्राप्योऽहं नान्यथा प्राप्यः मम कैङ्कर्यलिप्सुभिः" என்று கைங்கர்யபர்யந்த பலனுக்கான பக்தி ப்ரபத்தி இரண்டு தவிர வேறொன்றால் मोक्षம் பெறலாகாதென स्पष्टवचनமிருப்பதால்

आचार्याभिमानமும் அவர் अनुष्டிக்கும் प्रवृत्तिக்கு शिष्यனை விஷயமாக்கிக்கொள்ளு மளவுக்கு ஆகாமற்போனல் மோக்ஷபலன் இல்லை என்று கொள்ளவேண்டும். भक्त्यादिपरभागமும் रहस्यत्रयமானாலும் अनेकभक्तिमार्गங்களில் ஒவ்வொன்றையே ஒவ்வொருவர் ஆதரிப்பது போல் प्रपत्त्याधिकारियும் தமக்கு முக்யமான அம்சத்தைத் தன் விஷயத்திலே उत्तमसारமாகக் கொள்ளலாம்.

இங்கே असारமென்னும் பதத்திற்கு பாஹ்ய குத்ருஷ்டி க்ரந்தங்களை விஷயமாகக் கொண்டதால் ச்லோகத்தில் शास्त्रे என்கிற பதம் பொதுவாக ஸர்வசாஸ்த்ரத்தையும் சொல்லுமென்பது தெளிவு. அதனாலேயே மேலே, बाह्यकुदृष्टिशास्त्रங்கள் என்று शास्त्रபதப்ரயோகம். இப்படி சாஸ்த்ரத்திற்கே रत्नाकरம் த்ருஷ்டாந்தமாகில், ஸாரதீபிகாகாரர் 'ச்ருதிக்கே இது த்ருஷ்டாந்தம், சாஸ்த்ரத்திற்கல்ல' என்றது எங்ஙனே என்னில், அவர் भजे सारतमं शास्त्रम् என்று द्वितीयान्तமாகவே शास्त्रபதபாடம் எடுத்ததால் அதற்கிணங்க அவர் கருத்தை ஊஹிக்கவேணும். அதாவது ச்லோகத்தில் ச்ருதென என்ற பதமிருப்பதால் ச்ருதிரூபபூர்ண வேதத்தையே இங்கும் கொள்ளவேண்டியிருப்பதால் அதில் அடங்கியதே அஸாரமாக வேண்டும். बाह्यकुदृष्टिपक्षங்கள் அதிலடங்கியவை யல்லவே என்ற கேள்விக்கு உத்தரம் கூறுகிறார் —நீர் கருதியபடி ச்ருதியையே கொண்டாலும் விரோதமில்லை. அப்போது असारமென்பதை दृष्टान्तமாகக் கொள்ளலாம். ச்ருதியிலடங்காத பாஹ்ய குத்ருஷ்டிக்ரந்தங்கள் அஸாரமாய் எப்படி अनुपादेयமோ, அப்படியே ச்ருதியிலடங்கிய अल्पसारादिகளும் अनुपादेयமென்னலாமே. ஆகையால் ச்ருதிக்கே ரத்நாகரம் த்ருஷ்டாந்தமாகட்டுமென்றவாறு மேலே "சாஸ்த்ரத்திற்கு த்ருஷ்டாந்தமன்று" என்றதின் கருத்தாவது—सारतमं शास्त्रமென்று ஸாரதமமான பாகத்தையே சாஸ்த்ரமென்று சொல்லியிருப்பதால் அதற்கு अमृतமே த்ருஷ்டாந்தமாகையால் रत्नाकरம் த்ருஷ்டாந்தமாகாது. இனி रत्नाकर इवा-मृतम् என்ற வாக்யத்தைத் தனியாகப் பிரித்து ஸாரதம சாஸ்த்ரத்தில் வேறு அம்சத்தை விட்டு ரஹஸ்யத்ரயத்தைமட்டும் ரத்நாகரத்தில் அமுதைப் போல் கொள்வது என்று உரைத்தால் இது மிகவும் க்லிஷ்டகதி. ஆகையால் रत्नाकरம் सारतमशास्त्रத்திற்கு दृष्टान्तமாகாது என்றார். அதன்மேல் பாஹ்யாதிக்ரந்தம் मुख्यशास्त्रமாகாதென்றும் குறித்திருக்கிறார். இதெல்லாம் शास्त्रम् என்கிற பாடத்தையும், श्रुते என்கிற சொல்லையும் ப்ரதானமாகக் கொண்டவரின் கேள்விக்குக் கூறிய உத்தரமாகும், சரியான பொருள் முன்னமே கூறப்பெற்றது.

மேலே नारायणपरமான भागம் நீங்கலாக देवतान्तरपरभागமுள்பட மற்ற शास्त्रங்களையெல்லாம் கழிக்கப்போகின்றவராய் முதலில் सारतमமே கொள்ள வேண்டுமென்கிறார் परमपुरुषार्थமுமிதி. परतत्त्वமான नारायणனும் प्रत्यक्षादिप्रमाणத்தாலே அறியவொண்ணாதிருக்க परतत्त्वத்தையும் என்

படியாலே இவற்றுக்கு "शास्त्रात् वेद्मि जनार्दनम्" [என்றும்], "तस्माच्छास्त्रं प्रमाणं ते कार्याकार्यव्यवस्थितौ" [என்றும்], "शब्दब्रह्मणि निष्णातः परं ब्रह्माधिगच्छति" என்றும் சொல்லுகிறபடியே சப்தமே ப்ரமாணம். அவ்விடத்தில் अनन्तपारं वेदितव्यमल्पश्च कालो बहवश्च विघ्नाः। यत् सारभूतं तदुपाददीत हंसो यथा क्षीरमिवाम्बुमिश्रम्

---

கூட்டவில்லை எனில், अवतारகாலத்தில் रामकृष्णादिகளின் திருமேனி யமைப்பும் செயலும் கண்டு हनुमदादिகள் रामादिகளிடத்தில் सर्वेश्वरत्वத்தை ऊहित्தது போலே परतत्त्वமானது வேறு प्रमाणத்திற்கும் विषयமாகலாம். अदृष्टफलத்திற்கான व्यापारங்களில் இன்னது இன்ன फलத்திற்குச் செய்யவேண் டுவதென்பது विधिக்கும் शास्त्रமின்றி அறியவியலாது என்று கருத்தாம். அன்றி, परमपुरुषार्थமும் तदुपायமும் என்ற சொற்களாலே மோக்ஷத்தையும் பக்த்யாதி களையும் க்ரஹிப்பது போல் सिद्धोपेयமும் सिद्धोपायமுமான भगवानையும் க்ரஹிப் பதாம். அப்பொழுது परतत्त्वமும் சொல்லப்பெற்றதாகிறது. அதனாலேயே ஜநார்த்தநவிஷயமான வாக்யத்தையும் உதாஹரித்ததாம் जनार्दनபதத்திற்குப் பல பொருள்கள் உண்டு. जनः उपजनः–ஜந்மம்—பிறவி அதை अर्दनः–தொலைப்ப வன் मोक्षமளிப்பவன் என்ற பொருள் तात्पर्यचन्द्रिकैயில் கூறப்பெற்றது. அப் படிப்பட்ட नारायणனை சாஸ்த்ரத்தினின்று அறிகிறேன் என்றார் ஸஞ்ஜயர் तस्मादिति. तस्मात्–சாஸ்த்ர முறையின்றி தவம் முதலானவற்றை உக்ரமாக வெகு ச்ரத்தையோடு செய்தாலும் ஆயாஸமின்றி வேறு பலன் சிறிது மில்லையாகையாலே कार्याकार्यव्यवस्थितौ–இது செய்யத் தகும் இது செய்யத் தகாது என்கிற முடிவு விஷயத்தில் அர்ஜுனா! ते-உனக்கு शास्त्रम् = வேதமே प्रमाणम् = ஆதாரமாகுமென்று.

शब्देति. இதற்கு வேதமாகிற ब्रह्मத்தில் निष्णातः = முழுகினவன் (नि–स्नातः निष्णातः) परब्रह्मத்தைப் பெறுகிறான் என்று பொருள் தோன்றும். இது मुण्डकोपनिषத்தின் अर्थத்தைச் சொல்லும் विष्णुपुराणसन्दर्भத்திற்குச் சேராது. "शब्दब्रह्माऽऽगममयं परं ब्रह्म विवेकजम्" என்று அங்கேயே இதற்கு விவரண முள்ளது. ஆக இதன் பொருளாவது—शब्दब्रह्मणि = வேதாதி சப்த மூலமாக आचार्यனிடமிருந்து பெற்ற श्रवण மென்னும் ब्रह्मज्ञानத்தில் निष्णातः = மநநம் செய்து நிலை பெற்றவன் परं ब्रह्म = ब्रह्मविद्यै என்கிற विद्यैயைப் பெறுகிறான், அந்த ब्रह्मविद्यै विवेकजम् = श्रीभाष्यத்தில் लघुसिद्धान्तத்தில் கூறியபடி विवेक विमोकादि उपायமூலம் உண்டாவதாம்.

असारம் என்கிற ச்லோகார்த்தம் विशदமாகும்படியுள்ள மற்றொரு ச்லோகமாகும் अनन्तेत्यादि. இதன் அர்த்தமாவது—अन्तम्–முடிவு; पारम्-அக்கரை இரண்டு மில்லாதது अनन्तपारम्. அக்கரையுண்டாகில் கடலுக்கு முடிவுண்டு. அதுபோல் शास्त्रத்திற்குமாம். अनन्त மென்பதே போதுமாயிருக்க पार என்று சொல்லானது அறியவேண்டிய அம்சத்தைக் கடலாக நமக்கு ரூபிப்பதற் காகவாம். அநந்தபாரமாய் वेदितव्यम् = அறிய வேண்டியது ஒன்றன்று; बहु = பல. कालश्च अल्पः = அறிவதற்கான காலமும் ஸ்வல்பமேயாகும், அக்காலத்தி

என்கிற ச்லோகத்தில் 'सारभूतम् என்கிற பதத்தாலே प्रतिपन्नமான निरुपाधिकसार த்தை விஷயீகரிக்கிற सारतम சப்தம் उपादेयம், बाह्यकुदृष्टि சாஸ்த்ரங்கள். அத்யந்த-அஸாரங்களாகையாலே अनुपादेयங்கள். வேதத்தில் पूर्वभागத்தில் ऐहिकफलसाधनप्रतिपादकமான ப்ரதேசம் अत्यल्पसारமாகையாலே अनुपादेयம். आमुष्मिकफलप्रतिपादकांशம் ऐहिकफलத்திற்காட்டில் अतिशयितफலத்தை உடைத் தாகையாலே சிலர்க்கு ஸாரமென்னலாயிருந்ததேயாகிலும் दुःखमूलत्वादिदोषदुष्ट- மாகையாலே अनुपादेयம். आत्म.तत्प्राप्ति.तत्साधनमात्रத்தை प्रतिपादिக்கும் அம்சமும் ஸாரதரமாயிருந்ததேயாகிலும் அதிலும் अत्यन्तातिशयितமான परमात्मानुभवसापेक्ष

---

லும் विघ्नाश्च= இடையூறுகளும். बहवः= பற்பலவாம் हंसो यथा= அன்னப்பக்ஷி போல விவேகியானவன் यत् सारभूतम्= எது ஸாரமாகவே உளதோ, உண் மையில் सारமோ, अम्बुमिश्रम्= நீரோடு கலந்துள்ள क्षीरमिव= பாலைப்போல सारादिகளோடு கலந்ததான तत्= அதனையே उपाददीत= (பிரித்து)கொள்ள வேண்டும். सारம் என்னுமே सारभूतமென்றதால் सारतमமென்றதாகிறது. सार மாயும் सारतर மாயுமிருப்பதுங்கூட सारतमத்தை கவனித்த விவேகிக்கு सार மாகத் தோன்றுது.. எது सारமாகத் தோன்றியது பின்னே எப்போதும் उपेक्षिக்கும்படியாகாதோ அதுவே सारभूतம்; அது सारतमம் श्लोकத்தில் यथा என்பதற்கு इव (போல) என்றர்த்தமாம். उपमानप्रयोगத்தில் ஒரே इवசப்தமும் प्रयोगिப்பதுண்டு. उपमेयांशம் ஒவ்வொன்றுக்கும் उपमानांशத்தைப் பிரித்துக் குறிப்பதற்காக अनेक इवशब्दமும் प्रयोगिப்பதுண்டு "शरैरुस्रैरिवोदीच्यान् उद्धरिष्यन् रसानिव" என்கிற रघुवंशश्लोकத்தில் காண்க निरुपाधिकसारத்தை இதி. कर्मोपाधिயினாலே असार. अल्पसारादिகளும் சிறந்த सारமாகத் தோன்றும். அது இல்லாதபோதும் सारமாகத் தோன்றுவது सारतमமே. இது परतत्त्व परमहित परमपुरुषार्थமே. இப்படி अर्थம் सारतमமாகையாலே அதைச் சொல்லும் शब्दराशिயும் सारतमமாகிறது. ஸாரதமசப்தம்= ஸாரதமமான சொற்கள்.

बाह्यादिயால் असारமென்கிற श्लोकத்திற்கு व्याख्यानம், कुदृष्टिशास्त्रங்க ளென்பதால் सांख्यம் योगம் अद्वैतம் முதலானவற்றைக் கொள்க. पूर्वभागம்= உபநிஷத்துக்கு முன்னுனது. ऐहिकफलम्= இப்பிறவியில் பெறப்படும் फलம் என்பர் मीमांसकர். அதுபோல் வேறு பிறவியில் இவ்வுலகில் பெறுவதும் अल्पसारமாய் ऐहिकமாகையால் इह என்பதற்கு இவ்வுலகில் என்ற பொருளே கொள்க. आमुष्मिकமாவது உயர்ந்த மேலுலகில் பெறப்படுவது. दुःखमूलत्वादिदोषங்களாவன — दुःखमूलत्वम् दुःखमिश्रत्वं दुःखोदर्कत्वम् (பின்னும் துக்கத்ற்காகை) अल्पत्वम् अस्थिरत्वम् परिशुद्धात्मज्ञानमूलत्वम् स्वाभाविका- नन्दानुभव विरुद्धत्वम् என்றவை. இவ் ஏழும் ऐश्वर्यफलங்களிலுண்டு. आत्मप्राप्ति என்கிற कैवल्यத்திற்கு दुःखमिश्रत्व மில்லை அதற்கும் दुःख उदर्कत्वம் பிறக் காலத்தில் दुःखத்தைப் பெறுவது உண்டென்றூர்கள் सारदीपिकादिகளில். आत्मतत्प्राप्ति साधनमात्रத்தை= जीवात्माவையும் அதனுடைய प्राप्तिயான कैवल्यத்தை யும் அதற்கு साधनமான कर्मयोगादिகளையும் மட்டும் मात्रपदம் भक्तियोगத்தை

ரர்க்கு अनुपादेयம். परमात्म-तत्प्राप्ति-तदुपायங்களை வெளியிடும் ப்ரதேசம். सारतम மாகையாலே விவேகிக்கு उपादेयம் அவ் அம்சத்திலும் प्रधानप्रतितन्त्रங்களான தத்த்வஹிதங்களுடைய ஸங்க்ரஹமாகையாலே மிகவும் ஸாரதம (உபாதேய) மாயிருக்கும் रहस्यत्रयம். ஆகையால் "बहुभ्यश्च महद्भ्यश्च शास्त्रेभ्यो मतिमान्नरः । सर्वतस्सारमादद्यात् पुष्पेभ्य इव षट्पदः ॥" என்கிறபடியே ரஹஸ்யத்ரயம்

---

விலக்குவதற்காக ஸாரதரமாய் = ऐश्वर्यத்தைவிட உயர்ந்ததாய். அதிலும் அத்யந்தாதிசயிதமான = ஐச்வர்யத்தைவிட மிகவும் மேலான. तदुपायங் களை பக்தியோகங்களையும் ப்ரபத்தியையும் ஆக रत्नाकरे अमृतमिव = समुद्रத்தில் அம்ருதம் போல் उपनिषदमृतம் முழுமையுலும் सारतमமாயிற்று

எல்லாம் सारतमமாயினும் இதையே ஒரு கடலாகக் கொண்டு இதிலிருந்து எடுப்பவற்றில் மற்றவற்றை விட்டு रहस्यत्रयத்தைமட்டும் கொள்வதை காரணத்துடன் தெரிவிக்கிறார். அவ்வம்சத்திலும் इत्यादियால். குறுகியகாலத்தில் விரிவான அம்சங்களை க்ரஹிப்பது முடியாதாகையாலே ஸங்க்ரஹமான भागமே கொள்ளவேண்டியிருக்கிறது ஸங்க்ரஹத்தில் प्रधानांशம் व्यक्तமாக வேண்டும் சிறிய கண்ணாடி பெரிய உருக்களைக் காட்டுமா போலே இந்த रहस्यங்கள் தெளிவிப்பதால் இவையே போதும் प्रपत्त्यधिकारி प्रधानமாய் அறிய வேண்டும் प्रतितन्त्रங்களாவன—தனக்கு 'नरुपाधिकशेषत्வ'மும்; अनन्यशरणत्वமும்; भगवानுக்கு उपायान्तरनिरपेक्षமாய் அருள இரக்கம்; प्रपत्ति என்கிற उपायத்திற்கு स्वतन्त्रமாகைக்கு யோக்யதை என்பவை. 'மிகவும் सारतमமாயிருக்கும்' என்றே पाठம் 'மிகவும் उपादेयம்' என்ற பாடம் उपादेयமன்று, அது மேல்वाक्यத்திலே வரும். இதன் மேல்—மிகவும் सारतमமென்றால் என்ன? सारतमமென்ற तमप्பாலேயே पूर्णமான अतिशयத்தைச் சொல்லிவிட்டபடியால் அதிலே तारतम्यம் சொல்லவொண்ணாதே. प्रपन्नனுக்கு இது सारतमம் போல் भक्तருக்கு द्वयमन्त्र மாகாத भक्तिमन्त्रादिகள் सारतमமாகையாலே அவரைக் குறித்து அதுவே மிகவும் सारतमமாகையால் अव्यवस्थैயாமே என்ன—उत्तरமருளிச்செய்கிறார் ஆகையால் इति. மிகவும் उपादेयம் என்பதிலே நோக்கு. எல்லாம் सारतमமே. ஆகையால் எல்லாம் उपादेयமே = उपादानத்திற்கு अर्हமே ஆனால் அவரவருக்கு அதது उपादेयतमமாகும். மிகவும் सारतमம் என்பதற்கு மிகவும் उपादेयமான सारतमம் என்பதே பொருள் (सारतमत्वத்திலே ஏற்றக்குறைவில்லை) என்பது கருத்து. बहुभ्यश्चेति. बुद्धिमानான மனிதன் வெகுவாயும் விரிவாயுமுள்ள சாஸ்த்ரங்களெல்லாவற்றினின்றும், வண்டு புஷ்பங்களினின்று போல் सारத்தைக் கொள்ளுவான் என்று பொருளாம். बाह्यकुदृष्टिग्रन्थங்களில் सारமில்லையாகையாலே இங்கே शास्त्रेभ्यः என்ற சொல் மற்றவற்றையே கூறத்தகும். வண்டும் असारமான பூவினின்று ஒன்றையும் கொள்ளாது. இப்படி असारத்தை விட்டதுபோல் अल्प सारादिகளையும் விட்டு सारतमங்களை மாத்திரம் கொண்டு அவற்றினின்றே தனக்கு उपादेयமாவதை மட்டும் கொள்ள வேண்டுமென்றும் கருத்துரைப்பர். सर्वतः என்பதற்கிணங்க अनन्यशरणत्वादितत्परமான

முமுக்ஷுவான இவ்வாத்மாவுக்கு மிகவும் உபாதேயமாகக்கடவது

அமையாவிவை யென்னுமாசையினால் அறுமூன்றுலகில்
சுமையான கல்விகள் சூழவந்தாலும் தொகையிவை யென்று
இமையாவிமையவரேத்திய எட்டிரண்டெண்ணிய நம்
சமை(ம)யாசிரியர் சதிர்க்கும் தனிநிலைதந்தனரே. (9)

மூலமந்த்ரத்தையும், தான் அநுஷ்டிப்பதற்காக ப்ரபத்தியைக் கூறும் த்வய த்தையும் விதிவாக்ய மின்றி அனுஷ்டிக்கவாகாதாகையால் ஸ்பஷ்டமாய் அதற்கான சரமச்லோகத்தையும் கொள்ள வேண்டுமென்று குறித்ததாகும்.

மேலே ஸங்க்ரஹப்பாசுரம் அதிகச் சுமைகளான வித்யைகளை விட்டு ஸாரமமாய் பேறு பெறுதற்கான மந்தரங்கள்மட்டிலே நமக்கு ஆசார்யர்கள் நிலை யளித்தனரென்றது இதன் கருத்து. உலகில் = லோகத்திலுள்ள அறுமூன்று = பதினெட்டான, சுமையான = மேன்மேல் வ்யாக்யாநங்களாலே மிகவும் பாரமான கல்விகள் = வித்யாஸ்தானங்கள், அமையா = இவை படித்த மட்டும்போதா என்னுமாசையினால் = என்று இவனுக்கு மேன்மேல் ஆசையிருப்பதால் ஆதரத்துடன் சூழவந்தாலும் = இவனை யபிமாநித்துத் தாங்களே சூழ்ந்துகொள்ள வந்து சேர்ந்தாலும். இவை தொகை = இவை யெல்லாம் எண்ணிக்கைக்காகவே யன்றி பலனுக்கில்லை. எட்டிரண்டு மட்டுமன்றி எல்லாம் அறிந்தவர்க்கும் அவை தொகையாய் சுமையாக இருக்க இவற்றின் உண்மைப் பொருளறியாதவருக்கு அக் கல்விகள் சுமையென்பதில் என்ன ஸந்தேஹம்? என்று = என முடிவுசெய்து நமது ஸித்தாந்தாசிரியர் இமையா = இமை கொட்டாதவரான, அஜ்ஞாநம் சிறிது மில்லாதவரான. இமையவர் = நித்ய ஸூரிகளாலே ஏத்திய = துதிக்கப்பெற்ற, எட்டு = திருவஷ்டாக்ஷரத்தையும் இரண்டு = மற்ற இரண்டான த்வயசரமச்லோகங்களையும் எண்ணிய - கூட்டுகின்ற. அன்றி = பரிசீலநம் செய்கிற நம் சமையாசிரியர் = சதிர்க்கும் = சாதுர்யமாயிருக்கும். தனிநிலை = ஒப்பற்ற நிலையை தந்தனர் = நமக்கு அளித்தனர்.

பதினெட்டு வித்யாஸ்தாநங்களாவன — நாலுவேதங்கள், சிக்ஷை, வ்யாகரணம், சந்தஸ் (வ்ருத்தம்), நிருக்தம் ஜ்யோதிஷம். கல்பம் என்கிற ஆறு அங்கங்கள், மீமாம்ஸை, நியாயசாஸ்த்ரம் புராணம் தர்மசாஸ்த்திரம், ஆயுர்வேதம் தனுர்வேதம், காந்தர்வம் அர்த்தசாஸ்தரம் என்பவை. நம்மாசிரியர்கள் இவையெல்லாம் தமக்கு வந்திருந்தும் எட்டும் இரண்டுமே முக்யமென்று எண்ணி நம்மையும் பார்த்து உனக்கு விசேஷ ஆஸ்த்தையிருப்பதால் அதைக் கண்டு இரங்கி எல்லா வித்யாஸ்தாநங்களும் உன்னைச் சூழும்படி வந்தாலும், உன்னுடைய அறிவானது அவற்றைச் சூழ்வதால் அவை உன்னிடத்தில் சேர்ந்திருந்தாலும் படிப்பு அதிகம் என்பதைக் காட்டுவதற்கான எண்ணிக்கை தவிர மோக்ஷபலனுக்கு அதனால் ஆகக் கூடியது ஒன்றுமில்லை, எட்டும் இரண்டும் எண்ணினால் போதும். இரண்டு

शाखानामुपरि स्थितेन मनुना मूलेन लब्धात्मकः
सत्ताहेतुसकृज्जपेन सकलं कालं द्वयेन क्षिपन् ।
वेदोत्तंसविहारसारथिदयागुम्भेन विस्रम्भितः
सारज्ञो यदि कश्चिदस्ति भुवने नाथस्सयूथस्य नः ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीरहस्यत्रयसारे सारनिष्कर्षाधिकारो द्वितीयः.

---

டன் எட்டைக் கூட்டுவது ச்ரமமாயிருக்குமாகில். எட்டோடு இரண்டைக் கூட்டுக. தத்தவஞானத்திற்குப் பிறகு उपायानुष्ठानத்தில் இழியதாம். அதிகம் படித்து कर्मयोग-ज्ञानयोग भक्तियोगங்களிலிழியாமல் प्रपत्तियிலிழிவது சதுரனென்பதற்கு அடையாளம் என்று உபதேசிப்பர். இமையவர் ஏத்திய விஷ்வக்ஸேநரும் நம்மாழ்வாரும் குருபரம்பரையில் இருந்து எல்லாவற்றையும் விட்டு எட்டும் இரண்டும் ஏத்தி உபதேசித்தார்களல்லவா? சமயாசிரியர் = சமயம் = समयம் ஸித்தாந்தம். சமையம் என்ற சொல்லும் இப்பொருளில் ஸாதுவே. சமையாசிரியர் என்றும் படிப்பர். சமைய ஆசிரியர் அல்லது சமை ஆசிரியர் சமைக்கும் ஆசாரியர்கள் என்று कूरस्थरான மடைப்பள்ளியாச்சானையும் यतिराजमहानस என்றபடி நினைத்ததாம். சமைத்தல் என்பதற்கு திருந்தச் செய்தல் என்றும் பொருள் உண்டு.

இம் மூன்று ரஹஸ்யங்களைக் கொண்டு உபாயானுஷ்டானம் செய்த பிறகும் यावज्जीवம் இம்மூன்றின் அனுஸந்தானம் அவச்யமாகுமென்பாராய் சிறந்த இவ்வதிகாரிக்கு அனைவரும் அடிமையாகவேண்டுமென்கிறார் शाखानामिति. शाखानाम् = பல வேதசாகைகளுடைய उपरि = மேல்பாகமான உபநிஷத்தில் स्थितेन = அடங்கிய मूलेन मनुना = மூலமந்த்ரமாகிய திருவஷ்டாக்ஷரத்தால் लब्धात्मकः = அடையப்பெற்ற ஸ்வரூபத்தையுடையவனாய்—பிறவியுற்றவனாய் என்றபடி सत्ताहेतुसकृज्जपेन—सत्ता-ஆத்மா ஸத்தாகிநீடிப்பதற்கு हेतु-காரணமான सकृज्जपेन = ஒரே தரம் உச்சாரணத்தை உடைய; ஒருதரம் உச்சாரணத்தினாலேயே முழுமோக்ஷஸத்தைக்குக் காரணமான என்றபடி; द्वयेन = த்வய மந்த்ரத்தைக்கொண்டு सकलं कालम् = தன் ஜீவனகாலம் முழுமையும் क्षिपन्—கழிக்கின்றவனாய் वेद = வேதங்களுக்கு उत्तंस = சிரோபூஷணமான; வேதாந்த வேத்யனை என்றபடி அல்லது வேதத்தை சிரோபூஷணமாக உடைய; வேதத்தை ப்ரமாணமாகக்கொண்டாடுகிற என்றபடி. विहार सारथि = லீலா அவதாரத்தாலே தேர்ப்பாகனை கண்ணனுடைய दयागुम्भेन = கருணையே இவ்வடிவு என்னும்படியான சொற்றொகையாம் சரமச்லோகத்தாலே विस्रम्भितः = விச்வாஸம் பிறப்பிக்கப்பட்டவனுமாய் सारज्ञः இம்மூன்று ஸாரங்களையும் நன்கறிந்த कश्चित् = ஒருவனாவது भुवने = உலகில் अस्ति यदि இருக்கிறானாகில் सः = அவன் सयूथः = தன் பரிவாரங்களோடு கூடினவனாய் नः = நம் பரிவாரங்களுடன் கூடிய நமக்கு नाथः = ஸ்வாமியாகிறான். यूथस्य नः என்றும் பாட

முண்டு. அப்பொழுது नः यूथस्य = நம்மைச் சேர்ந்த பரிவாரத்திற்கு என்பது பொருள் முன் பாடத்தில் सयूथः सः नः என்று பதப்பிரிவு. अथर्व नारायणोपनिष த்து முதலானவிடத்தில் திருமந்த்ரம் ஓகப்பட்டிருப்பதாக मूलमन्त्राधि காரத்தில் அருளப்போகிறார். அதை शाखानामुपरि என்றவிடத்தில் கருதுகிறு தாம். உலகில் மூலம் (வேர்) கீழேயும் शाखै (கிளை)கள் வானத்திலும் இருக்கும். இந்த மூலம் शाखैகளுக்கு மேலே ; யிருக்கிறது. मूलमन्त्रம் तत्त्वत्रय த்திற்கு மூலமாக இருப்பதாலும் மூலமான भगव னைச் சொல்லுவதாலும் மூலமாகும். வேதங்களுக்கு प्रणवம் வித்து அந்த வித்தினின்று தோன்றியதாய் அதன் அர்த்தத்திற்கு விரிவானது திருவஷ்டாக்ஷரம். இது सर्ववेदार्थத்திற்கும் ஸங் க்ரஹமாகையாலே இதன் விரிவாக வேதசாகைகளாமென்றும் அவைகளுக்கு இது மூலமென்றும் சொல்லலாம். अष्टाक्षरம் அறிந்தவன் सकलवेदங்களையும் அறிந்தவனானபடியால் அவற்றைவிட உயர்ந்தது இது என்பதற்காக शाखाना- मुपरि स्थितेन என்றதென்னலுமாம். लब्धात्मकः आत्मलाभம் என்கிற சொல். प्राचीनशास्त्रग्रन्थங்களில் उत्पत्ति (பிறவி) என்ற பொருளில் ப்ரயோகிக்கப்படும். मूलमन्त्राधिकारத்தில் "திருமந்த்ரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து द्वयैकनिष्ठனுவான்" என்றருளியபடி பிறவிக்கு मूलमन्त्रம் காரணம். பிறவி யாவது இங்கு ஞானப் பிறவி "பிறந்தபின் மறந்திலேன்." என்பரே. இந்த ஞானப்பிறவியை ஆத்மாவின் பிறவியாகவைத்து लब्धात्मकः என்றது. பிறந் தது நீடித்திருக்கவேண்டும் அந்த सत्तैக்குக் (ஸ்திதிக்கு) காரணமாகும் ஒருதரம் द्वयोच्चारणம் மோக்ஷத்திற்காக ஸங்கல்பித்து ஒரு தரம் ப்ரபத் திக்கு அங்கமாக மந்த்ரம் ப்ரயோகித்தால் காலத்தில் மோக்ஷம் பெறலாம். மோக்ஷமாவது ஜ்ஞானத்திற்கு संपूर्णமான விகாஸம் அது பிறகு நிலைத் திருப்பதால் அதுவே ஆத்மாவின் सत्तैயாகிறது अस्ति ब्रह्मेति चेद् वेद सन्तमेनं ततो विदुः என்று ब्रह्मज्ञानसत्तैயையே आत्माவின் सत्तैயாக வேதம் ஓதிற்று இங்கு जप பதத்தாலே ஏற்கனவே आचार्यரிடத்தில் உபதேச காலத்தில் க்ரஹித்த தையே மீண்டும் ப்ரபத்தியனுஷ்டிக்கும்போது சொல்வதாம் என்றறிவிக்கப் படும் மோக்ஷகாலத்தில் सत्तै ; திருமந்த்ரார்த்த க்ரஹண காலத்தில் பிறவி; மத்ய காலத்தில் ज्ञानத்தின் தொடர்ச்சி எதனுல் ; மோக்ஷத்திற்கான सकृज्जपம் இதற்குக் காரணமாகாதே என்ன. सकलं कालं द्वयेन क्षिपन् என்ருர். ஸம்ஸார தசையில் காரணமின்றி இயற்கையாக ஞானவிகாஸம் வாராதாகையால் द्वयमर्थानुसन्धानेन सह सदैवं वक्ता என்கிற நியமனப்படி यावज्जीवம் द्वयத்தை ஆவ் ருத்தி செய்து கொண்டிருக்கவேண்டும் அதில் श्रुतिस्मृत्यादि सर्व प्रमाणार्थத்தை யும் முதலில் அடக்கி க்ரஹித்திருப்பதால் அதெல்லாம் இப்பொழுது நினைவில் வருமென்றபடி. இதனுல் भगवद्विषयம் நீங்கலாக வேறுவிதம் போதுபோக்க லாகாதென்றதாயிற்று மூலமந்த்ரத்தில் அறியப்பெற்றதை த்வயத்திலே அநுஸந்திப்பதாலும் सन्ध्याकालेषु जप्तव्यम् सततञ्चात्मशुद्धये என்ருற்போலே

श्रीः

## प्रधानप्रतितन्त्राधिकारः ३.

### ப்ரதாந-ப்ரதிதந்த்ராதிகாரம். 3

—•—०—

आधेयत्वप्रभृतिनियमैरादिकर्तुश्शरीरं सत्तास्थेमप्रयतनफलेष्वेतदायत्तमेतत् ।
विश्वं पश्यन्निति भगवति व्यापकादर्शदृष्टे गम्भीराणामकृतकगिरां गाहते चित्तवृत्तिम् ॥ (...)

மூலமந்த்ரஜபவிதி இருப்பதாலும் இரு மந்த்ரங்களும் யாவஜ்ஜீவம் அனுஸந்திக்கப்படலாம். சரம ரஹஸ்யம் ப்ரபத்த்யநுஷ்டானத்திற்குமுன்னே விதிவாக்யமுண்டென்பதற்காகவேயாகையால் ப்ரபத்த்யநுஷ்டானத்திற்குப் பிறகு அது வேண்டாமே என்பதற்கு உத்தரம் வேதேத்யாதி. ப்ரபத்தியை யநுஷ்டித்தவனுக்கு யாவஜ்ஜீவம் விச்வாஸத்தொடர்ச்சி வேண்டும் என்னவாகுமோ என்று சோகிக்கலாகாதென்றறிவிக்க, எம்பெருமான் ப்ரபத்திவிதியோடு நிற்காமல் பரமதயையினுலே மா சுச: என்றும் அருளியிருப்பதால் அதனநுஸந்தாநத்திற்காக சரமரஹஸ்யம் வேண்டுமென்றதாயிற்று. இது ப்ரபத்த்யநுஷ்டானத்திற்குப் பின்பேயாகையால் இதற்காக சரமரஹஸ்யத்தை மூன்றுவதாக அநுஸந்திக்கிறுர்கள். ப்ரபத்த்யநுஷ்டானத்திற்கு முன்பு சோகிக்கவேண்டும் இல்லையேல் அநதிகாரியாவான். பின்னே சோகிக்காமலிருக்கவேண்டும் சோகித்தால் ப்ரபத்தி விகலமாம். सारज्ञः = ஸாரதமமான ரஹஸ்யங்களின் ஸாரமெல்லாமறிந்தவன்.

ஸாரநிஷ்கர்ஷாதிகாரம் முற்றும்.

முன்பாசுரத்தில் அருஷடன் ஐந்தறிவார் என்று ஸூக்ஷ்மமான प्रधान प्रतितन्त्रஜ்ஞானமும் अर्थपञ्चकஜ்ஞானமும் வேண்டுமென்றதை அடைவாக விரித்துரைக்க மேலே இரண்டதிகாரங்கள். நமது ஸித்தாந்தத்தில்மட்டும் கொள்ளப்பட்ட விசேஷார்த்தங்களில் சரீராத்மபாவமென்கிற அம்சம் முக்யமாய் விவேகியை மோக்ஷத்திற்குத் தூண்டுவதாகையாலே प्रधान प्रतितन्त्रம் என்று கருதி அதனை ச்லோகத்தில் कण्ठोक्तமாக்குகிறுர். ச்லோகத்தின் அர்த்தம்—भगवति = ஸர்வேச்வரனானவன் व्यापक-आदर्श-दृष्टे सति = வ்யாபக மந்த்ரமாகிற திருமந்த்ரமாம் கண்ணுடியில் காணப்பட்டபோது एतत् = இந்த विश्वम् = காரணவஸ்தையிலும் கார்யாவஸ்தையிலுமுள்ள ஸர்வமும். आदि कर्तुः = உபாதாநகாரணமாயும் நிமித்தகாரணமாயுமிருக்கும் நாராயணனுக்கு आधेयत्व प्रभृति नियमैः = ஆதேயத்வம் முதலானவற்றின் (आधेयत्वं विधेयत्वं शेषत्வமென்பவற்றின்) नियमैः நிலைப்புக்கள் காரணமாக, (நியமாவது—ஒரு காலத்தில் இல்லை என்னவாகாதபடி सार्वकालिकत्वம். பகவானுக்கு உலகம் आधेयமாக இருப்பதும் सार्वकालिकம். அதுபோல் विधेयत्वமும் शेषत्वமும். இம்மூன்று सार्वकालिकत्वங்கள் காரணமாக) शरीरம் = உடலாகும். இப்படி எப்பொழுதும் आधेयம் विधेयம் शेषமென்றதாலே என் சொல்லிற்றுயிற்றென்ன, அதை விவரிக்கிறுர். सत्तेत्यादियால் सत्ता = ஸ்வரூப

த்திலும் **स्थेम**= இருப்பிலும் **प्रयतन**= ப்ரவ்ருத்தியிலும்—வ்யாபாரத்திலும் **फल**=பலன்விஷயத்திலும் **एतदायत्तम्**—எம்பெருமானுக்கு அதீனமாகவேயிருக்கும் **इति** என்பதை **पश्यन्**=காண்கின்றவனுய் **गम्भीराणाम्**= பொருளறியமுடியாத **अकृतक गिराम्**=ஒருவரால் இயற்றப்படாமல் அநாதியாயுள்ள சொற்களின் (வேதங்களின்) **चित्तवृत्तिम्**= மனநிலையை—கருத்தை **गाहते**= ஆழ்ந்து அறிகிருன். உலகில் ஆதாரமான வஸ்து இல்லையென்ருல் **आधेय**மான வஸ்து ஸ்வரூபம் பெருது. **आधेय**மாவது ஒன்றையாச்ரயித்திருக்கும் வஸ்து. உலகு எப்பொழுதும் எம்பெருமானுக்கு **आधेय**மென்பதால் இதன் ஸ்வருபமே அவனுக்கதீனமென்றதாயிற்று. இதுபோல் **स्थिति**யிலும் அவனுக்கதீனமென்றதாம். **आधेय**மாவது—தங்கியிருக்ககூடியது; **विधेय**மாகையாவது. விதிக்கு= ஆக்ஞைக்கு நியமநததிற்கு விஷயமாகை. ஈச்வரன் வஸ்துவினுடைய ஸ்வருபத்தையும் அதன் நீடித்திருப்பையும் அதற்கு வ்யாபார சக்தியையும் ஸங்கல்பிக்காமற்போனுல் இவை இரா. இதனுல் **विधेयत्वनियम**த்தால் **सत्तास्थितिप्रवृत्ति**கள் அவனுக்கதீனமென்றதாயிற்று. உலகில் சேஷமான வஸ்து சேஷியின் பலனுக்காகவே இருக்கும். சேஷியின் உகப்புக்காகவே சேஷன் நடந்துகொள்ள வேண்டும். ஆக தன் பலன் வேறின்றி சேஷியின் பலனுக்காகவே சேஷன் ஆகிறபடியால் சேஷன் விரும்பிய பலன் சேஷியைச் சார்ந்ததாய் அவனுக்கதீனமென்றதாயிற்று. இந்த மூன்று ஆகாரங்கள் இருப்பதால் உலகு பகவானுக்கு உடலாம். இங்கு **நியம** என்ற சொல் வேண்டும். எப்பொழுதும் **आधेय**மாகாமல் ஒரு ஸமயத்தில் **आधेय**மாயிருப்பதைக் கொண்டு சரீரம் என்னலாகாது. சிறிது காலம் கையில் வைத்துக்கொள்ளப்பட்ட குடம் முதலானவை ஜீவனுக்கு சரீரமல்லவே. அதுபோல் சில காலம் அரசனின் ஆஜ்ஞைக்குட்பட்டு ப்ரஜை இருப்பது காரணமாக ப்ரஜை அரசனுக்கு சரீரமாகாது. அதுபோல் ஒரு ஸமயம் தொண்டுசெய்து சேஷமானதால் சரீரமாகாது. ஆகையால் மூன்றிலும் நியமங்களும் வேண்டுமென்றது. இம் மூன்றில் ஒன்றைக்கொண்டே சரீரமென்று வ்யவஹரிக்கலாமானுலும் **शरीर**மென்பது சேதநனைக் குறித்தேயாகையால் ஒவ்வொரு சேதநனைக் குறித்தும் இவற்றில் ஒன்றைவிட்டு ஒன்றிராதாகையால் **विनिगमनाविरहेण** மூன்றும் சரீரபதத்தின் அர்த்தமென்பதற்காக மூன்றையும் சேர்த்துச் சொன்னது.

இந்த ச்லோகத்தில் **पूर्वार्ध**த்தைத் தனிவாக்யமாகப் பிரித்தும் **दृष्टे** என்பதை **सतिसप्तमी**யாக ஆக்காமல் பொருள் கூறலாம்—**एतत्**= இதெல்லாம் அவனுக்கு சரீரமாய் அவனுக்கதீநமாயிருக்கிறது. இது தத்வஸ்திதி. என்றதாம். **इति** இவ்வாகாரத்தோடு **विश्वम्** ஸர்வத்தையும் **व्यापकादृशदृश**மான பகவானிடத்தில் காண்கின்றவன்... **गाहते** என்றந்வயமாயிற்று.

மந்த்ரங்களில் திருவஷ்டாக்ஷரம் த்வாதசாக்ஷரம் ஷடக்ஷரம் என்கிற மூன்றும் வ்யாபகமந்த்ரங்கள். வ்யாபகன்= வ்யாபித்திருப்பவன், எம்பெரு

என்று சொல்லப்பட்டது(ன). இவற்றில் प्राप्यமான ब्रह्मத்தினுடைய ஸ்வரூபம் திருமந்த்ரத்தில் प्रथमाक्षरத்திலும் நாராயண சப்தத்திலும் த்வயத்தில் ஸவிசேஷணங்களான நாராயண சப்தங்களிலும் चरमश्लोकத்தில் माम् अहम् என்கிற பதங்களிலும் अनुसन्धेयம். அவ்விடங்களில் அனுஸந்திக்கும்போது, "श्रिया सार्धं जगत्पतिः, एष नारायणः श्रीमान्, भवान्नारायणो देवः श्रीमांश्चक्रधरो विभुः. श्रीवत्सवक्षा नित्यश्रीः, विष्णोः श्रीरनपायिनी, सीतासमक्षं काकुत्स्थमिदं वचनमब्रवीत्, सीता-

---

लक्ष्मीसहायமாய் என்கிற வாக்யத்திலே சுருக்கிக் காட்டி, பிறகு प्रत्यगात्मनः என்கிற இரண்டாவது அர்த்தத்தை விவரிப்பர், இவ்வேழு அர்த்தங்களில் லக்ஷ்மீஸஹாயத்வம் முதல் அம்சம்—தர்மங்களையறியாதபோது தர்மியானது விலக்ஷணமாக அறியப்படாது, பலவகை தர்மங்களில் எந்தத்தர்மத்தை விட்டால் தர்மிஸ்வரூபமே அறியப்படமாட்டாதோ அந்த தர்மத்தை ஸ்வரூப நிரூபகதர்மமென்பர். மற்ற தர்மங்களை நிரூபிதஸ்வரூப விசேஷணமென்பர். அதாவது ஸ்வரூப நிரூபகதர்மத்தாலே நிரூபிக்கப்பட்ட பிறகு அந்த வஸ்துவுக்கு விசேஷணமாகத் தோற்றும் தர்மம் என்றபடி, உதாரணம்—ஒரு மநுஷ்ய வ்யக்திக்கு வேறொன்றுக்கில்லாத அஸாதாரணமான ஆகாரம் அங்கவமைப்பு. அது ஸ்வரூபநிரூபகதர்மம். அவனுக்குள்ள அறிவு சக்தி சொத்து முதலானவை நிரூபித ஸ்வரூப விசேஷணம், பிரம்ம ஸ்வரூப நிரூபகதர்மங்கள் सत्यत्वं ज्ञानत्वं अनन्तत्वं आनन्दत्वं अमलत्वम् என்ற ஐந்து என்று ஸூத்ர-பாஷ்யாதிஸித்தம். இவற்றுடன் இவற்றைவிட முக்யமாக ஸ்வீகரிக்கப்பட்ட தர்மம் ச்ரீபதித்வம். இதை யறியாத போது ஸத்யத்வாதிமாத்ரத்தைக் கொண்டு பிரம்மமானது ருத்ராதி தேவதாந்தரத்தை விட வேறாக அறியப்படமாட்டாது. ஸ்வரூப நிரூபகதர்மமென்றால், அது ஸ்வரூபத்தில் எப்பொழுதும் இருந்தாக வேண்டும் ஒரு ஸமயமில்லையாகில் ஸ்வரூபம் வேறுவிதமாக அறியப்படுகிறபடியால் அது ஸ்வரூபநிரூபகதர்மமாகாது. எனவே श्रीमत्त्वம் என்கிற தர்மம் எப்போதும் உளதென்கிற அம்சத்தையும் காண்பிக்க ப்ரமாண ஸம்ப்ரதாய வசனங்களை உதாஹரிக்கிறார் श्रिया सार्धं இத்யாதியால். முதலில் ஸம்ஸ்கிருதப்ரமாண ஸம்ப்ரதாய வாக்யங்களைக்கூறி, பிறகு அருளிச்செயல்களைக் காட்டுவதென்பது இங்கே கையாண்ட முறை.

श्रिया सार्धं जगत्पतिः-லக்ஷ்மியோடுகூட உலகங்களுக்கு ஸ்வாமியாய் யுக்திக்கப்படாத ஸ்ரூபமுடையனான விஷ்ணு வைகுண்டமென்கிற மேலான லோகத்தில் பக்தர்களாய் தனக்கடிமையானவர்களோடு கூடி இருக்கிறான் என்றதில் மேல் உலகில் ஸ்ரீஸம்பந்தமிருப்பது தெளிவாயிற்று. एष नारायणः श्रीमान् क्षीरार्णवनिकेतनः என்ற விடத்தில் வ்யூஹாவதாரத்திலும் ஸ்ரீஸம்பந்தம் கூறப்பெற்றது. மேலே 'भवान्—ராமனான நீயே ஸ்ரீமானாய் திருவாழியேந்திய ப்ரபுவான நாராயணனென்னும் தேவன்' என்கிறபடியால் விபவத்திலும் அது தெரிகிறது ஸ்ரீவத்ஸமென்கிற மறுவை மார்பினிலுடையவனாய் நித்யமான பிராட்டியையுடையவன் என்பதனால் பிராட்டி அழியாதவள் என்பது

मुवाचातियशा राघवं च महाव्रतम्, अलमेषा परित्रातुं राघवाद्राक्षसीगणम्, भवेयं शरणं हि वः,

வ்யக்தம். இப்படி ஸ்ரீயின் பதியாகையாம் நித்யயோகத்தோடு கூட விட்டுப் பிரியாமையும் உண்டு என்பதும் ஸ்பஷ்டமாகைக்காக अनपायिनी என்றது. ஸத்யத்வாதி தர்மங்கள் பரமாத்மஸ்வரூபத்தில் எங்கும் வியாபித்திருப்பது போல் ஸ்ரீஸ்வரூபமும் எங்கும் பரவியிருந்தால்தான் எந்த ப்ரதேசத்திலும், परिच्छिन्नமாக உபாஸிக்கும் போதும் பரமாத்மாவைக் காண இவள் ஸ்வரூப நிரூபகதர்மமாவாளென்கிற ஸ்வாரஸ்யத்தாலே பிராட்டிக்கு विभुत्वமும் ஸித்திக்கும், ஆத்ம ஸ்வரூபத்திற்குப் போல் பிராட்டியின் திருமேனிக்கும் பகவானுடைய திருமேனிக்கும் நித்யஸம்பந்தம் இவ் வாக்யங்களில் அறியக் கூடியதே. सीतासमक्षமிதி,-ஸீதையின் முன்பாக ராமனைக் குறித்து லக்ஷ்மணன் இவ்வார்த்தையைச் சொன்னார் என்றபடி. பஞ்சவடியில் மூன்று பேரும் ஸுகமாய் வாழ்வதற்குப் பாங்காகக் காடு இடம் தீர்த்தம் எல்லாம் அமைந்தவிடத்தில் ஆச்ரமத்தை நிர்மாணம் செய்யென்று ராமன் ஆஜ்ஞாபித்தபோது லக்ஷ்மணன் சொல்லும் வார்த்தை இது. பதினாலுவர்ஷத்தில் இப்பொழுது மிகுந்துள்ள சில வர்ஷம் மட்டுமன்றி—நூறு வருஷம் வாஸம் செய்வதானலும் பரதந்த்ரனாய் காத்துக் கொண்டிருக்கிறேன். பரதந்த்ரனாகையாலே ஏவினபடி செய்வது ஸ்வரூபோசிதம். தேவருக்கு ஸம்மதமான இடத்தை தேவரே காண்பித்து நியமிக்கவேண்டுமென்கிறார். இங்கே ஸீதையைப் புருஷகாரமாகச் செய்ய வேண்டுவதென் எனில், அவர் வேண்டுகிறபடி நமக்குப் பிடிப்பான இடத்தை நாம் காண்பித்து நியமிப்பதே தகுமென்று இராமனிடம் ஸீதை சொல்வது என்றவாறுகுக. அல்லது ஸீதைக்கு எதிரில் சொன்னாரென்றால் ஸீதையையும் ராமனையும் குறித்துச் சொன்னார். இருவரும் சேர்ந்து நியமிக்க வேண்டுமென்றார் இருவருடைய பாரதந்த்ரியத்திற் கிணங்கி என்ற கருத்துமாகலாம். அப்போது பிராட்டிக்கும் உபாயத்வம் ஸித்திக்கிறது. இருவரையும் குறித்துச் சொன்னது व्यक्तமாக வேறிடம் காண்பிக்கிறார் "सीतामुवाच" என்று. अतियशाः-இன்னும் அதிகமாகக் கீர்த்தியைப் பெறவான லக்ஷ்மணன். காட்டிற்குப் போய் வந்த பிறகு மூன்று பேருக்கும் கீர்த்தி யதிகமாயிற்று. அவற்றுள் உறக்கமின்றி ஊழியம் செய்த லக்ஷ்மணனுடைய கீர்த்திக்கு ஈடு வேறில்லை. அக் கீர்த்தி பெறப்போகிறவராய் ஸீதையைக் குறித்துச் சொன்னார். வநவாஸத்திலும் ஆச்ரிதரக்ஷணத்திலும் மஹாஸங்கல்பத்தையுடைய் ராமனைக் குறித்தும் சொன்னார். இருவரையும் வேண்டுகிறபடியால் இருவரும் உபாயமென்பது ஸ்பஷ்டம். இனி ஸீதையைக் குறித்துச் சொல்லிவிட்டு அவள் புருஷகாரமான பிறகு ராமனைக் குறித்தும் சொன்னாரென்றால் இது புருஷகாரத்திற்கும் உதாரணமாகும். अलमिति. இந்த ஸீதை தன் பர்த்தாவான ராமனிடத்திலிருந்து அரக்கிகளின் திரளை நன்குக் காக்கப் போதுமானவள் என்றதால் அவ்வரக்கிகளை வதைக்க ராமன் முயன்றால், இவர்கள் என்னை சரணமடைந்தவர்கள் ; நான் अभयप्रदानம்

भवांस्तु सह वैदेह्या, तया सहासीनमनन्तभोगिनि, कान्तस्ते पुरुषोत्तमः, स्वपरिचरणभोगैः श्रीमति प्रीयमाणे, श्रीमते निर्मलानन्दोदन्वते विष्णवे नमः, श्रियःकान्तोऽनन्तो वरगुणगणैकास्पद-वपुः, ब्रह्मणि श्रीनिवासे, श्रियःपतिर्निखिलहेयप्रत्यनीककल्याणैकतान...अनन्तज्ञानानन्दस्वरूपः"
'நீயும் திருமகளும் நின்ருயால்,' 'ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலா நிற்ப,' 'கோலத்திருமாமகளோடுன்னை,' 'நின் திருவருளும் பங்கயத்தாள்

---

செய்திருக்கிறேன் என்று சொல்லி ஸீதை ராமனை விலக்கிவிடுவாள் என்று ஸித்திக்கும் இதனுல் புஷ்கலமான ஸத்யஸங்கல்பத்வமாம் உபாயத்வம் தெளிவாயிற்று. இவள் ஸங்கல்பித்தாள் என்பதைக் கூறும் வாக்யம் **भवेयं शरणं हि वः** என்றது. உங்களுக்கு நான் சரணமாக்கடவேனுல்லேனே என்பது பொருள். ஹிசப்தத்தினுலே இதில் சிறிதும் ஸம்சயிக்க வேண்டாம் என்றதாம். **भवांस्तु सह वैदेह्या** என்பதால் ப்ராப்யாகாரம்—ப்ராப்யமாம் போது சேர்த்தி கூறப்படுகிறது. தேவரீர் தேவியாரோடு கூட மலையின் தாழ்வரைகளில் இஷ்டப்படியாக விஹாரம் செய்யலாம். தேவரீருக்கு விழித்துக் கொண்டிருக்கும் போதும் உறங்கும் போதும் ஸமயோசிதமான பணிவிடைகளைச் செய்யக் காத்திருக்கிறேன் என்ற இளைய பெருமாள் மூலமாக த்வயமந்த்ர—உத்தரகண்டத்தின் பொருளைக் குறித்ததாம்.

இனி ஸம்ப்ரதாய ஸ்ரீஸூக்திகள். இதில் மூன்று ஆளவந்தாரின் மூன்று க்ரந்தங்களிலுள்ளவை; மேலே நான்கு எம்பெருமானுரின் நாலு க்ரந்தங்களிலுள்ளவை. "பிராட்டியோடு கூட ஆதிசேஷன் மீது வீற்றிருக்கிற உன்னை", "ஸர்வ சேதநாசேதநங்களுக்கு மேலானவன் புருஷோத்தமன் உனக்குப் ப்ரியமாய் தகுந்த பர்த்தா.' "நித்யமுக்தாதிகள் தனக்குச் செய்யும் கைங்கர்யங்களாகிற போகங்களைக் கொண்டு பிராட்டியோடு சேர்ந்து ப்ரீதி பெறுகின்றவனிடத்தில்," "ஸ்ரீமானுயும் துக்கஸம்பந்தம் சிறிதுமில்லாத ஸுகக்கடலுமான விஷ்ணுவுக்கு எனது ப்ரணமம்"."பிராட்டிக்குப் ப்ரியனுய் அளவற்று உயர்ந்த குணத்திறனுக்கு முக்ய ஸ்த்தானமான ஸ்வருபமுடையவன்." ஸ்ரீக்கு நித்யவாஸ ஸ்தானமான பரப்ரஹமத்தினிடத்தில்" "ச்ரிய:பதியாய் அகிலஹேயப்ரத்யநீகனுய் மங்களகுணத்திற்கே இடமாய் அபரிச்சின்னனுய் ஜ்ஞாநாநந்தஸ்வரூபனுன" என்றவாறு இவற்றின் பொருள்.

**நீயும் इत्यादि** "கோவர்த்தனக் குன்றை எடுத்து, மழைபொழியும் மாரியைத் தடுத்த மஹா குணமுடையவனே', உன் பூசனைக்கு விரும்பக்கூடிய பூக்கள் நிறைந்த திருக்கோவிலூரில் வாசப்புறம் போகாமலும் உட்புறம் புகாமலும் நடுவிடமான இடைகழியையே விரும்பித் திருமகளோடு நீயும் நாங்களனுபவிக்கும்படி நின்றுவிட்டாய். ஆல்= ஆச்சர்யம்" ஒண் இத்யாதியின் பொருளை உபோத்காததிகாரத்தில் முதலில் காண்க. கோலம் இத்யாதி. ஞாலத்தின் நடுவிலே ஸஞ்சாரம் ஸ்த்திதி, சயனம் முதலான பல கார்யங்கள் செய்து பல யுகமாக உயிர்களைக் காக்கும் ஸ்வாமியே! அழகும் ஆபரணங்களும் நிறைந்த திருமாமகளோடு உன்னைக் கூடாமலே இன்னும் எவ்வளவு நாள் நான்

திருவருளும்,' 'உன் தாமரை மங்கையும் நீயும்,' 'அகலகில்லேனிறையும், உணர் முழு நலம்,' 'நந்தா விளக்கேயளத்தற்கரியாய்', என்னு(று)ம் ப்ரமாணங்கள் சொல்லுகிறபடியே ஸர்வ ப்ரகாரத்தாலும் सर्वावस्थैயிலும் सहधर्मचारिणियான பெரிய பிராட்டியாரோடு பிரிவில்லாத முழு நலமான अनन्तज्ञान...

---

தளர்ந்தேயிருப்பது? நின் இத்யாதி. "न त्यजेयं कथञ्चन என்ற உனது க்ருபையையும், न कश्चित् नापराध्यति என்ற பிராட்டியின் க்ருபையையும் ஆதாரமாகக் கொண்டு உன் கோயிலிலே கைங்கர்யம் செய்துகொண்டு". பங்கஜத்தாள் = பங்கஜவாஸிநீ உன் இத்யாதி. திருப்புளிங்குடியில் பள்ளி கொண்டவனே! நீ இவ்வளவு கிடந்த நாள் கிடந்தாய். உன் திரு உடம்பு நோவுபடும்படி இன்னும் எத்தனை காலம் கிடந்தே இருப்பாயோ. உனக்குக் கைங்கர்யம் செய்ய வந்திருக்கும் தொண்டர்களான எங்களிடம் க்ருபை கூர்ந்து பெரும் தடாகமளவு மலர்ந்த ஒரு தாமரைப்பூப் போன்ற உன் திருக்கண்ணை விழித்து நீ படுக்காமல் எழுந்து உனது பெரிய பிராட்டியாரும் நீயுமாக மூவுலகும் தொழும்படி வீற்றிருந்தருள வேண்டும்". அகல இத்யாதி. "இறையும் = ஒரு க்ஷணமும் அகல கில்லேன் பிரியமுடியாதவளாயிருக்கிறேன் என்று கூறி அலர்மேல்மங்கையினால் நித்யவாஸம் செய்யப்பெற்ற திரு மார்பை உடையவனே திருவேங்கடத்தானே" ; இங்கு உபாயதசையில் லக்ஷ்மீஸம்பந்தம் சொல்லப்பெற்றது; முன்னே உபேயதசையில்.

இதுவரையில் ச்ரிய:பதித்வமென்கிற ஸ்வரூபநிரூபகதர்மத்தை விஸ்தாரமாகச் சொல்லி இனி ஸர்வஸம்மதமான தர்மங்களுக்குப் பாசுரங்களை மட்டும் ப்ரமாணமாகக் காட்டுகிறார். உணர்முழுநலம், உணர் = ஞானம், நலம் = ஆனந்தம் ; முழு என்று देहलीदीपந்யாயமாய் இரண்டிற்கும் சேரும். முழுமையும் ஞானம் என்றதாலே "कृत्स्नः प्रज्ञानघन एव" என்கிற ச்ருதியின்படி परमात्मस्वरूपத்தில் ஒரு प्रदेशமும் जडமாகாது अस्वयंप्रकाशமாகாது என்றதாம். முழுமையும் நலம் என்றதாலே அனுகூலமாகாத அம்சம் சிறிதுமில்லை என்றதாம். நந்தாவிளக்கே = அழியாத ப்ரகாசமுடையவனே! நந்துதல் = அழிதல். அழியாதவனே என்று விளிக்கவில்லையானாலும் இவனுடைய ப்ரகாசம் அழியாததென்றதாலே இவன் அழியாதவன் என்பது தானே ஸித்திக்கும். ஆக सत्यं ज्ञानம் என்னப்பட்டவன் என்றதாயிற்று. இனி अनन्त என்பதின் அர்த்தம் 'அளத்தற்கரியாய்' என்று. அளத்தற்கு—அளப்பதற்கு—பரிச்சேதிப்பதற்கு அருமையானவனே—அசக்யமானவனே. மூன்று வித பரிச்சேதமும் அற்றவனே! இவ் வசனங்களால் சொன்ன தர்மங்களைச்சேர்த்து அனுஸந்திக்கிறார், 'என்று(னு)ம் ப்ரமாணங்கள்' என்கிற வாக்யத்தால் 'ஸர்வப்ரகாரத்தாலும்' என்றதால் शान्तानन्त என்கிற ச்லோகத்திற் சொன்ன பரமாத்ம ஸ்வரூபம், பரவாஸுதேவ நித்ய திவ்யமங்கள விக்ரஹம் அவதாரரூபங்கள் என்கிற மூன்றிலும் अनुरूपरूपविभवैः என்கிறபடி அவற்றுக்கு ஈடான பிராட்டியின் ஆத்மஸ்வரூபம் நித்ய திவ்ய விக்ரஹ

स्वरूपமாக அநுஸந்திக்க வேணும். இப்படி "समस्तहेयरहितं विष्ण्वाख्यं परमं पदम्",

ஸ்வரூபம் அவதாரவிக்ரஹங்கள் இவற்றின் दृढமான சேர்க்கை கருதப் பெறும். **अनुरूपरूपविभवैः** என்றவிடத்திலே ரூபபதத்திற்கு திவ்யாத்ம ஸ்வரூபமும் நித்யமான திருமேனியும் அவதாரரூபங்களும் பொருள். அவற்றுக்கு **विभव**மாவது **परमात्मा**வுக்கு ஈடாம்படியான சிறப்பு, ஸர்வாவஸ்த்தையிலும் என்பதற்கு **सृष्टिस्थित्यादि**வ்யாபார தசையிலும் உபாயத்வ—உபேயத்வாதி தசைகளிலும் அவதாரங்களில் பால்யயௌவநாதிதசைகளிலும் வநவாஸ—நகரவாஸாதி நிலேகளிலும் என்று பொருளாம். வ்யூஹ விபவாதிதசைகளிலும் என்கிற பொருளானது ஸர்வப்ரகாரத்தாலும் என்றவிடத்தில் அவதாரரூபங்களேயும் சேர்த்திருப்பதாலே சொன்னதாயிற்று. ராமக்ருஷ்ணத்யவதாரங்களில் பால்யாதி தசைகளில் யாருக்கும் ப்ரத்யக்ஷமாகாவிடினும் ஸ்ரீஸம்பந்தத்திற்கு ஹாநியில்லே. வாமந ப்ரஹ்மசாரி நிலேயிலும் அகலகில்லேன் இறையுமென்று உறைந்தவளல்லளோ?'ஸர்வப்ரகாரத்தாலும் ஸர்வாவ்ஸத்தையிலும்' என்பதற்கு பிரிவில்லாத என்றவிடத்தில் அந்வயம், ஂமுழு நலமான என்று தனித்திருப்பதாலே அநந்த ஜ்ஞாந ஸ்வரூபமான என்ற பாடத்தையே கொள்க. ஜ்ஞாநாநந்த என்று ஆநந்தபதம் வேண்டியதில்லே.

அமலத்வம் நீங்கலாக மற்ற ஸ்வரூபநிரூபகதர்மங்களேச் சொல்லி முடித்து அமலத்வத்தையும் அருளிச்செய்கிறுர் இப்படி இத்யாதியால் முன்னமே ஏன் சேர்த்துச் சொல்லவில்லே எனில், இது **आनन्दादयः प्रधानस्य** என்கிற அதிகரணத்தில் சேர்க்காமல் "**अक्षरधियाम्**" என்று வேறு அதிகரணத்தில் சொல்லப்பட்டிருப்பதால். அங்கேதான் ஏன் பிரித்துச் சொல்ல வேண்டுமெனில், ஸத்யத்வாதிதர்மங்கள் **भाव**ஸ்வரூபங்கள். அனந்தத்வமும் **सर्वदेशासंबन्ध.सर्वकालसंबन्ध.सर्वोत्कृष्टत्वरूप**மாய் **भावपदार्थ**மே. அமலத்வமாவது 'ஸர்வஹேயங்களுமில்லாமை. இல்லாமையென்ற **अभाव**த்தைச் சொல்வதென்பது **अधिकरण**மான பரமாத்மஸ்வரூபத்தை முன்பு அறியாத போது ஸாத்யமாகாது. "**स्वरूपे क्वचित् किञ्चित् तादृगेव निषिध्यते,**" என்பரே. எங்கு எதற்கு **अभाव**ம் சொல்லுகிறேமோ அந்த **अधिकरण**மும் **प्रतियोगि**யும் முன்னே அறிவிக்கப்பட்ட பிறகுதான் **अभाव**த்தை அறிவிக்கமுடியும். எதற்கு **अभाव**மோ அது **प्रतियोगि**. ஆக **सत्यत्वादिधर्म**ங்களேக் கொண்டு பரமாத்மஸ்வரூபத்தை அறிவித்தபிறகு இந்த அபாவரூபமான அமலத்வத்தை அறிவித்ததாம். ச்ரிய: பதித்வமென்கிற ஒரு தர்மமே போதுமே; மற்ற தர்மங்கள் எதற்கு எனில், இது லக்ஷணவாக்யமல்லவே. லக்ஷணவாக்யமாகில் ப்ரயோஜனமின்றி பல தர்மங்களேச் சொல்லலாகாதென்னலாம், பரமாத்ம ஸ்வரூபத்தை அறிவிக்க இவ்வளவு தர்மங்களுக்கும் யோக்யதையுள்ளபோது விடாமல் சொல்லுவதே தகும். ஒவ்வொரு தர்மத்துக்கு ஒவ்வொரு வைலக்ஷண்யத்தைக் குறிப்பதிலே நோக்கென்று **जन्माद्यधिकरण** ஸ்ரீபாஷ்யத்திலே காண்க.

**समस्तहेयरहितं = प्रतिकूल**மொன்றுமிராதது. **अचेतन**வஸ்துவிலுள்ள **जडत्वविकारि-**

"परः पराणां सकला न यत्र क्लेशादयस्सन्ति परावरेशे" என்கிறபடியே हेयप्रत्यनीकமாக அனுஸந்தேயம். "तैर्युक्तश्श्रूयतां नरः, तमेवंगुणसंपन्नम् ज्येष्ठं श्रेष्ठगुणैर्युक्तम्, एवं श्रेष्ठगुणैर्युक्तम्, गुणैर्विरुरुचे रामः, तमेवंगुणसम्पन्नमप्रधृष्यपराक्रमम्, बहवो नृप! कल्याणगुणाः पुत्र

---

स्यादिகளும் ஜீவர்களுக்குள்ள துக்கம் सुखाभासம் முதலான அபுருஷார்த்தங்களு மில்லாதென்றபடி. परं पदமிதி. पद्यते इति पदम्-அடையப்படும் உயர்ந்த வஸ்து என்று பரமாத்ம ஸ்வரூபத்தைச் சொன்னபடி. வேதார்த்தஸங்க்ரஹத்திலே பரமாத்ம ஸ்வரூபமும், மோக்ஷத்தில் பெறக்கூடிய சுத்தஜீவஸ்வரூபமும், நித்ய விபூதியும் இச்சொல்லுக்குப் பொருளாகுமென்றார். परः पराणां-உயர்ந்தவற்றிற் கும் மேலாக உயர்ந்தவன். परावरेशे-वर-உயர்ந்தவஸ்துவுக்கும் अवर தாழ்ந்த வஸ்துவுக்கும் எல்லாவற்றிற்கும் ईशे நாயகனான यत्र எந்த விஷ்ணுவினிடத் தில் क्लेशादयः க்லேசம் முதலானவைகள் न सन्ति இல்லையோ. இதற்கு யோக ஸூத்ரத்தின் படி क्लेश कर्म विपाक आशयங்கள் இல்லாதவன் என்று பொரு ளாம். அங்குச் சொன்ன க்லேசங்களாவன अविद्या, अस्मिता-राग-द्वेष-अभिनिवेश ங்கள் என்கிற ஐந்து. अविद्येயாவது அஜ்ஞானம். அஸ்மிதையாவது அஸ்மி என்னும் தன்மை; அதாவது அஹங்காரம். ராகம் = ஆசை; த்வேஷம் = பகை. அபிநிவேசம் = தகாதவிடத்தில் அதிக ஆஸ்த்தை. கர்மங்களாவன—புண்ய பாபங்கள். विपाकங்களாவன जाति. आयुर्भोगங்கள். ஜாதியாவது ஜந்மம்—பிறவி. ஆயுः = ப்ராணஸ்த்திதி. भोगம் ஸுகதுக்கானுபவம், ஆசயமாவது அடிக்கடி செய்ததால் வந்த துர்வாஸனை. இவையெல்லாம் இல்லாதவன் ஈச்வரன். இதே हेयप्रत्यनीकत्वம் = हेयங்களுக்கு எதிர்ப்பாயிருக்கை அமலத்வமென்றபடி.

நிர்குணம் ப்ரம்மம் என்ற வாதத்திற்கு நேர்மாறாக ஸ்வரூப நிரூபகதர்மங்களைப் போலே நிரூபிதஸ்வரூப விசேஷணங்களான குணங் களும் நிறைந்தவன் என்பதற்கு ப்ரமாணங்களை உதாஹரிக்கிறார்—சிலர் பர மாத்மாவுக்கு ஞானம் சக்தி முதலானவை இருப்பதாக அங்கங்கே சொன்னா லும், குணமாக்கிப் பொதுவாக अनन्तगुणगुणपूर्णனாகச் சொல்லாமையால் निर्गुण மென்னலாமென்பர். அது தவறு; பொதுவாக குணங்களைக் கூறும் வாக்யங் களும் உள என்றறிவிப்பதற்க்காக गुणபதம் சேர்ந்த வாக்யங்கள் பல காட்டுகிறார். तैः என்று नारदवाक्यம். வாரீர் வால்மீகி மஹர்ஷியே! உம்மால் கூறப்பெற்றனவும் கருத்திற் கொள்ளப்பட்டனவும் உலகில் எங்கும் கிடைக்கா தவையுமான பற்பலவான गुणங்களோடு கூடிய ஒருநரனையே நம்மிடம் கேளீர். तमेवமிதி—கீழ்ச் சொன்ன குணங்கள் நிறைந்த அந்த ராமனை." "மூத்தவனும் எல்லோருக்கும் மேலான குணங்களையுள்ளவனும்" "இவ்வாறு சிறந்த குணங்களோடு கூடின்" "ராமன் குணங்களாலே விசேஷமாக விளங்கினான்" இவ்வாறு गुणங்கள் நிறைந்தவனும் அடக்க முடியாத பராக்ரம முடையவனுமான அந்த ராமனை" "அரசனே உமது மகனுக்குக் கல்யாண குணங்கள் மிகவாயிருக்கின்றன, "ரக்ஷணஸ்வபாவமும் க்ருபையும் உபதேசமூலமான அறிவும் ஸௌசீல்யமும் வெளியிந்த்ரிய நிக்ரஹமும்

सन्ति ते, "आनृशंस्यमनुक्रोशः श्रुतं शीलं दमश्शमः । राघवं शोभयन्त्येते षड्गुणाः पुरुषोत्तमम्" विदितस्स हि धर्मज्ञश्शरणागतवत्सलः, शरण्यं शरणं च त्वामाहुर्दिव्या महर्षयः, निवासवृक्षस्साधूनामापन्नानां परा गतिः, तेजोबलैश्वर्यमहावबोधसुवीर्यशक्त्यादिगुणैकराशिः, 'सर्वभूतात्मभूतस्य विष्णोः को वेदितुं गुणान्', "यथा रत्नानि जलधेरसङ्ख्येयानि पुत्रक । तथा गुणाश्च देवस्य त्वसङ्ख्येया हि चक्रिणः" वर्षायुतैर्यस्य गुणा न शक्या वक्तुं समेतैरपि सर्वदेवैः । चतुर्मखायुर्यदि कोटिवक्त्रो भवेन्नरः कापि विशुद्धचेताः ॥ स ते गुणानामयुतैकमंशं वदेन्नवा देववर प्रसीद", तवानन्तगुणस्यापि षडेव प्रथमे गुणाः । यैस्त्वयेव जगत्कुक्षावन्येऽप्यन्तर्निवेशिताः, इषुक्षयान्निवर्तन्ते नान्तरिक्षक्षितिक्षयात् । मतिक्षयान्निवर्तन्ते न गोविन्दगुणक्षयात् ॥"

---

மனத்தை அடக்குகையுமாகிற இந்த ஆறுகுணங்கள் (ஜ்ஞானசக்தியாதிகளான ஆறு குணங்கள் நிறைந்த புருஷோத்தமனின் அவதாரமாய் இப்படியும்) புருஷோத்தமனுன ராமனுக்கு ஶோபையை அளிக்கின்றன". "அந்த ஸ்ரீராமன் தர்மங்களை யறிந்தவராகவும் சரணுகதரிடத்திலே வாத்ஸல்யமுடையவராகவும் ப்ரஸித்தரல்லரோ" "தேவலோகத்திலுள்ள மஹர்ஷிகள் உன்னை ரக்ஷிக்கத் தகுதியுடையவனும் ரக்ஷகனுமாகச் சொல்லுகிறுர்கள்." "ஸாதுக்களுக்கு நித்யவாஸத்திற்குப் பாங்கான நிழல்மரமாகவும் ஆபத்துக்கு அளானவருக்கு முடிவான கதியாகவும்", "தேஜஸ்ஸு பலம் ஐச்வர்யம் நியமந சக்தி மஹாஜ்ஞானம், சிறந்த வீர்யம், சக்தி முதலான குணங்களின் பெருங்குவியலான" 'ஸர்வப்ராணிகளுக்கும் அந்தராத்மாவான விஷ்ணுவினுடைய குணங்களை யாரறியவல்லர்", "பிள்ளாய்! கடலில் ரத்னங்கள் எவ்வாறு எண்ணமாளாதவையோ அவ்வாறே சக்ரபாணியான தேவனுடைய குணங்களும் எண்ண மாளாதவை என்பது ப்ரஸித்தம்." "வருஷங்கள் பதினுயிரங்கள் சென்ருலும் ஸர்வதேவர்களும் ஒன்று சேர்ந்தாலும் எவனுடைய குணங்கள் கூறமாளாவோ. ஒரு மனிதன் நான்முகனின் அளவிற்கு ஆயுள் உடையனுய் அவனைப்போலன்றி கோடிமுகம் கொண்டவனுய் சுத்தமான மனமு முடையனுய் எங்காவது நிலைத்துமிருப்பானுகில் அவன் உனது குணங்களில் பதினுயிரத்தில் ஓர் அம்சத்தைச் சொல்வானே அல்லது மாட்டானே. தேவச்ரேஷ்டனே அருள்புரியவேண்டும்", (குணங்கள் அனந்தமாயிருக்க ஆறுகுணங்கள் என்பதன் கருத்தென்ன எனில்,) "உன் குணங்கள் அனந்தமாயினும், அவற்றுக்குக் காரணமான குணங்கள். ज्ञान-शक्ति, बलैश्वर्य-वीर्य तेजस्सுக்களான ஆறு குணங்களால் அவற்றின் உட்பிரிவான மற்ற குணங்கள். त्वया உன்னுல் कुक्षौ जगदिव சிறுவடிவான உனது திருவயிற்றில் ப்ரபஞ்சமெல்லாம் அடக்கி வைக்கப்பட்டது போல், अन्तः निवेशिताः தமக்குள் அடக்கப்பட்டுள்ளன. इषु இதி. அம்புகளை எறிகின்றவர்கள் इषुक्षयात्—அவர்களிடமிருந்த அம்புகள் ஆய்விட்டபடியினுலே निवर्तन्ते நிவ்ருத்தியடைகிறுர்களேயல்லது अन्तरिक्ष क्षयात् அம்புகள் செல்ல ஆகாசத்தில் இடமில்லை யென்றே, क्षितिक्षयात् எறிந்த அம்புகள் விழ பூமியில் இடமில்லை யென்ற காரணத்தினுலோ न—நிவ்ருத்திக்கிறுரல்லர். அது

"வல்வினையேனையீர்கின்ற குணங்களையுடையாய்!", "உயர்வற வுயர் நலமுடையவன்" என்கிறபடியே **प्राप्यत्वप्रापकत्वोपयुक्त**ங்களான குணங்களாலே விசிஷ்டமாக **अनुसन्धेयम्. सदैकरूपरूपाय. नित्यसिद्धे तदाकारे तत्परत्वे च पौष्कर...। यस्यास्ति सत्ता... हृदये तस्यासौ सन्निधिं व्रजेत्", समस्ताश्शक्तयश्चैता नृप यत्र प्रतिष्ठिताः। तद्विश्वरूप-**

---

போல் பகவத்குணங்களை யெல்லாம் ஆராய்கின்றவரும் **मतिक्षयात्**– புத்திக் குறைவினால் நிவர்த்திக்கிறார்களல்லது கோவிந்தனிடத்தில் குணங்கள் இனி மனனம் செய்ய இல்லை என்கிற காரணத்திலாலல்ல.

இனி தென்மொழி ப்ரமாணம். **வல்வினையேனை**—கொடிய பாபங்களையுடைய என்னை **ஈர்கின்ற**—பிளக்கின்ற குணங்களை **உடையாய்**—உடையவனே!. எம்பெருமானின் குணங்களை நினைத்துப் பிரிவாற்றாமையால் பரிதவிக்கும் பராங்குச நாயகியின் பேச்சு இது. உலகில் பகவத்குணங்களையே நினைக்கவாகாதபடி பாபம் செய்த நாஸ்திகர்கள் நிறைந்திருக்கின்றனர். அவர்களை அந்த குணங்கள் பீடிப்பதில்லை. நான் உன்னிடம் அதிக ஆஸ்த்தை பெற்றிருந்தும் உன்னை அனுபவிக்கப் பெறமாட்டாதபடியும். உன் குணங்கள் என்னைப் பிளக்கிறபடியும் இருப்பதால் என் வினை அதைவிடக் கொடியது. இவ்வினையை உன்னை வணங்கிப்போக்குவோமென்றால், வணங்கும் ஆறு=விதத்தைஅறியேன். அது மாநஸம், வாசிகம் காயிகம் என்று மூன்று விதமாகும். அக்கருவிகளும் யானும் நீதானே. அதையும் நீ தானே செய்விக்கவேண்டும். **அதுவுமாகாதபடி வல்வினையேன்** நானென்றபடி. இதனால் சுவையறிந்தவர் ஒருநொடிகூட விடவாகாதபடி போக்யத்வம் குறித்ததாம். இந்த **குணங்களுக்கு** முழு உயர்ச்சியை அறிவிக்கிறார்—**உயர்வு அற**—தன்னைவிட உயர்ச்சி வேறு இடத்தில் இல்லாதபடி **உயர் நலம்** உயர்= உயர்ந்த நலம்—ஆனந்தாதி **குணங்களையுடையவன்**.

இவ்வளவு ப்ரமாணக்களால் அறிவிக்கப்பட்ட குணங்களை உபயோகம் காட்டும் வகையிலே இருவகையாகப் பிறிக்கிறார்' **प्राप्यत्वेति.** **गुण**ங்களாலே **विशिष्ट**மாக என்பது **गुणैर्विशिष्ट**ம் என்ற வடமொழியை அநுஸரித்தது குணங்களாலே விசேஷிக்கப்பட்டதாக என்று உரைக்கலாம். குணங்களோடு சேர்ந்ததாக என்றே சொன்னபடி. இனி திருமேனியும் உண்டென்பதற்குப் ப்ரமாணங்கள்—**सदैकरूपरूपाय.** **सदा**—எப்போதும் **एकरूप** ஒரேவிதமான **वृद्धिक्षय**ங்களில்லாததான திருமேனியை யுடையவனான விஷ்ணுவின் பொருட்டு, இங்கு திருமேனியைச் சொல்வதில்லையாகில் இரண்டாவது ரூபபதம் வீணாம். திருமேனி நித்யமென்பதற்கு மற்றுமொரு ப்ராமாணம்—"நித்யஸித்தே—அழியாமலும், உண்டுபண்ணப் படாமலுமிருக்கிற **तदाकारे**–அவனுடைய திருமேனி விஷயத்திலும் **तत्परत्वे च**. அவனுடைய ஸர்வப்ரகார உத்கர்ஷத்திலுமுள்ள ஸத்தா—இருப்பானது **यस्य** எவனுடைய **हृदये अस्ति**–மனத்தில் பட்டிருக்கின்றதோ **पौष्कर**–தாமரையிலுண்டான பிரமனே! **तस्य** அவனுக்கு **असौ** அந்த—தூரத்திலுள்ள பெருமானே **सन्निधिं व्रजेत्**—

**वैरूप्यं रूपमन्यद्धरेर्महत्, इच्छागृहीताभिमतोरुदेहः, न भूतसङ्घसंस्थानो देहोऽस्य परमात्मनः, न तस्य प्राकृता मूर्तिर्मांसमेदोस्थिसम्भवा, भुजैश्चतुर्भिस्समुपेतमेतद्रूपं विशिष्टं दिवि संस्थितं च, रुक्माभं स्वप्नधीगम्यम्, तत्रैकस्थं जगत् कृत्स्नम्, पश्यामि देवांस्तव देव देहे, अस्त्रभूषण-**

---

நெருங்கி வருவான். இதனுல் பகவானுக்கு ஸர்வோத்கர்ஷமும் திருமேனியின் நித்யத்வமும் திடப்ரமாண ஸித்தமென்றதாயிற்று. பௌஷ்கர ஸம்ஹிதானுஸாரி பாரமேச்வரஸம்ஹிதையில் 'तत्परत्वे च संततम् । यस्यास्ति सक्तिर्हृदये என்று सत्ता என்கிறவிடத்தில் ஸக்தி என்கிற பாடம் காணப் படுகிறது, அப்போது அவ்விரண்டு விஷயத்திலும் எவனுடைய மனத்திற் குப் பற்று உளதோ என்று பொருள் நன்கறியப்பெறும். அந்தத் திருமேனி सर्वाधारமென்கிருர் समस्ताः–இதி. नृप–அரசனே! पताः–கீழ்க்கூறிய முக்தன், बद्धன், बद्धனுக்கும் கர்ம என்ற समस्ताः शक्तयः–பல கார்யங்களுக்கு உபயோக மாய் சக்தி என்னப்பட்டவைகளெல்லாம் எந்தத் திருமேனியிலே प्रतिष्ठिताः— நிலைபெற்றனவோ, இத்திருமேனியுடனிருந்தே बद्धमुक्त கார்யங்களெல்லாம் நிர் வஹிக்கிருன் என்றதாயிற்று. अस्त्रभूषणरूपமான நிலையென்று முடிவில் அருளப் போகிருர். तत्–அந்த ஹரே:–பகவானுடைய ரூபம் திருமேனியானது अन्यत् வேருய் மஹத்=பெரிதாய் विश्वरूपवैरूप्यம் உலகிலுள்ள எல்லா உருக்களிலும் விலக்ஷணமானது. विरूपमेव वैरूप्यम्. முக்தர்களும் பத்தர்களுங் கூட அசேதனங்கள் போல் பகவானுக்கு சரீரங்களே. ஆனுலும் இந்தத் திருமேனி அவற்றுக்கும் ஆதாரமாய் அவற்றைவிட விலக்ஷணமாகும்; ஹேயம் சிறிது மில்லாததுமாகும். அவதார ரூபங்களும் இஷ்டப்படி உண்டென்கிருர்— इच्छागृहीत—தனக்கு இச்சையுள்ள போது கொள்ளப்பட்ட अभिमत—தனக் கிஷ்டமுமான உரு–பரரூபத்தினும் பெரிதுமாகிற, தேஹ:=திருமேனியுடையவன், அது पाञ्चभौतिकமன்று என்கிருர் नेति. இந்த பரமாத்மாவினுடைய திருமேனியானது भूतसङ्घसंस्थानः न—பஞ்சபூதங்களுடைய சேர்க்கையான அமைப்பு உடையதன்று, பூதங்கள் என்பதென்; ப்ரக்ருதி கார்யத்திலே சேர்ந் ததுமல்ல, ஹேயாகாரம் கொண்டதுமல்ல என்கிருர் மேலே. அவனுக்கு மாம்ஸமென்ன मेदः கொழுப்பென்ன अस्थि—எலும்பென்ன இவைகளின் சேர்க்கையிலான ப்ருக்ருதி கார்யமான சரீரமென்பதில்லை. 'அவதாரசரீரமும் சாச்வதமென்பதற்கு பட்டர் குறித்த ப்ரமாணத்தைக் காட்டுகிருர்—चतुर्भिः भुजैः—நான்கு புஜங்களோடு சேர்ந்த, இத்திருமேனி विशिष्टं விலக்ஷணமானது. दिवि च संस्थितं பரமபதத்திலும் நிலையாக உள்ளது. இதே ध्यानगोचरம் என் கிருர்–रुक्माभं–ஸ்வர்ணகாந்தி போன்ற காந்தியுடையதும், ஸ்வப்நம் போன்ற धी–புத்தியினுலே= எதிரில் வஸ்து இராமற் போனுலும் இருக்குமிடத்திற் போல் விசதமான दर्शनसमानाकारமான ஞானத்தினுல்—யோகிகளின் ஸாக்ஷாத் காரத்தினுல் गम्यं—கொள்ளப்படுவதும். இதனுல் शुभाश्रयமான என்றதாம். எம்பெருமானின் திருமேனி உலகத்தைவிடப் பெரிதுமுண்டு என்கிருர். "तत्र= அந்த விராட்ரூபத்தில் एकस्थम् एकदेशத்திலிருப்பதான कृत्स्नं—எல்லா जगत्—

संस्थानस्वरूपम्. भूषणास्त्रस्वरूपस्थं यथेदमखिलं जगत्, तमसः परमो धाता शङ्खचक्रगदाधरः"
என்கிறபடியே सर्वजगदाश्रयமான अप्राकृतदिव्यमङ्गळविग्रहविशिष्टமாக अनुसन्धेयம்.

இவ்விக்ரஹம் पर-व्यूह-विभव-हार्दार्चावताररूपेण पञ्चप्रकारமாயிருக்கும்படியும் இவற்றிலுள்ள விசேஷங்களும் भगवच्छास्त्रसंप्रदायத்தாலே அறியப்படும்.

"विष्णोरेता विभूतयः," (வி.பு 122) "महाविभूतिसंस्थान" (வி.பு.5.1) "नान्तोऽस्ति

---

உலகும்". "ஏ தேவனே! உம்முடைய திருமேனியில் தேவதைகளையும்கூட பார்க்கிறேன்", இந்த தேஹத்தில் உலகு இருப்பது போல் பரவாஸுதேவ ரூபத்திலும் வேறு உருக்கொண்டு இருக்கிறதென்கிறார் अस्त्रेति-अस्त्र—ஆயுதங்களுடையவும் भूषण–பூஷணங்களுடையவும். संस्थान–உருவைக் கொண்ட உலகுடன் கூடின திருமேனியை தரிக்கிறான்". (பூஷணங்களுடையவும் அஸ்த்ரங்களுடையவும் ஸ்வரூபமாகவிருக்கிற",) "இவ்வுலகெல்லாம் எப்படி பூஷணமாகவும் ஆயுதமாகவும் திருமேனியிலிருக்கிறதோ அப்படியை எனக்குச் சொல்லவேணும்." அத்திருமேனி உள்ள இடம் ப்ரக்ருதி மண்டலத்திற்கும் மேலானதென்கிறார்—"धाता—எல்லாம் படைக்கின்றவன் சங்கசக்ராதிகளை தரிக்கின்றவனாய் (நான்கு புஜமுடையனாய்) तमसः—ப்ரக்ருதி மண்டலத்திற்கும் परमः–மேலேயிருப்பவன் இந்த ராமன்". "जगदाश्रयமான" என்பதற்கு विग्रह என்ற பதத்திலந்வயம், विग्रहமாவது திருமேனி.

पञ्चप्रकारமாய்= ஐந்து விதமாய். तत्त्वत्रयचिन्तनाधिकारத்திலே இதற்கும் இதன் விசேஷங்களுக்கும் விரிவு. विशेषங்களாவன पररूपத்தில் शान्तोदित-नित्योदित-द्विभुजचतुर्भुजादि ; व्यूहத்தில் விசேஷம் நாலு व्यूहமும் ஒவ்வொன்றில் நாலுவகையும்; विभवத்தில் விசேஷம் मत्स्य. कूर्मादि ; हार्दத்தில் விசேஷம் योगिகளுக்கே गोचरமாகையும் விசேஷகார்யங்களுக்காக शक्त्यावेशம் போலே சில जीवர்களிடத்தில் வேறு ரூபத்தையும் பெறுகையும்; अर्चैயில் விசேஷம் स्वयंव्यक्त-दैव-सैद्धादिभेदம்.

திருமேனியைப் போல் विभूतिயும் உண்டென்கிறார் विष्णोरिति. विभूति யாவது நியமிக்கப்படும் வஸ்து. இது சேதநாசேதந ரூபமாய் இரண்டு விதமாயிருக்கும். பிரமன் दक्षप्रजापति முதலானோர் மற்ற ஜந்துக்கள் सृष्टिகாலம் முதலானவற்றைக் கொண்டு ஸ்ருஷ்டியையும், தன்னுடைய விஷ்ணு ரூபம் मन्वादि அரசர்கள் सर्वप्राणिகள் स्थितिகாலம் இவற்றைக் கொண்டு ரக்ஷணத்தையும், रुद्रன் यमादिகள் जन्तुக்கள் लयकालம் இவற்றை विभूतिயாகக் கொண்டு ப்ரலயத்தையும் பகவான் நடத்துகிறான். இவற்றில் विष्णोरेताः विभूतयः என்றது रक्षणविभूतिயைப் பற்ற; महाविभूतिसंस्थान என்று संबोधनம். त्रिपाद्विभूति எனப்படும் नित्यविभूतिயில் நிலையான இருப்பை உடையவனே! இந்த लीलाविभूति என்னும் प्रकृति एकपाद्विभूतिயாகும் क्रमक्रमமாக बद्धர்கள் मुक्तராகின்றபடியால் இந்த விபூதி குறையும். அந்த விபூதி வளரும். नान्त इति. உமது அம்சங்களான சிறந்த விபூதிகளை (नियाम्यवस्तुக்களை) எல்லாம் அருளவேணும் என்று अर्जुनன் கேட்க श्रीगीतैயில் பத்தாவது அத்யாயத்தில் பல வஸ்துக்களைக் கூறி भगवान् கூறுவது இது. परन्तप—சத்ரு ஸம்ஹாரம் பண்ணுகிற

मम दिव्यानां विभूतीनां परन्तप" (गी.10) इत्यादिகளுடைய संग्रहமான "यदण्डमण्डान्तरगोचरं च यत्" என்கிற ச்லோகத்தின்படியே अनन्तविभूतिविशिष्टமாக अनुसन्धेयம். இவ் விபூதிகளில் சேதநங்களாயும் அசேதநங்களாயுமுள்ள இரண்டு வகையும் लीलार्थங்களாயும் भोगार्थங்களாயும் विभक्तங்களாயிருக்கும். आनुकूल्यमात्रம் பொதுவாயிருக்க रसवैषम्यத்தாலே लीलाभोगविभागம் यथालोकம் கண்டுகொள்வது.

அப்படியே "जन्माद्यस्य यतः" (ஸூ.1 1.2) क्रीडा हरेरिदं सर्वम्, (பா.சா.206) क्रीडतो बालकस्येव, (பா.சா.206) बालः क्रीडनकैरिव. (பா.ஸபா.40) "हरे विहरसि

---

அர்ஜுநனே! எனது சிறந்த விபூதிகளுக்கு अन्तो नास्ति= முடிவே இல்லை. ஆகையால் தனித்தனியே எல்லாம் சொல்லவாகாதென்றதாம். सङ्ग्रहमान= ஒன்றையும் விடாமல் सङ्ग्रहித்த. ஆளவந்தார் श्लोकத்தை எடுக்கிறார், அதன் அர்த்தம்—'ब्रह्माण्डம் எதுவோ அதன் உட்புறத்தை இடமாகக் கொண்ட வஸ்து எதெதுவோ, ब्रह्माण्डத்திற்கு மேன் மேல் பத்துமடங்கு பெரிய ஆவரணங்கள் யாவையோ, அவையும் सत्त्वरजस्तमस् என்ற गुणங்களும் प्रकृतियும் बद्धजीवனும் பரமபதமும் பத்த ஜீவனுக்கு மேலான அஸம்ஸாரி ஆத்மாவும் अप्राकृत दिव्यमङ्गलविग्रहமும் உனது விபூதிகளாகும். இங்கே திவ்யமங்களவிக்ரஹத்தைத் தனியே கூறியது அந்த விக்ரஹம் போலவே வாசியில்லாமல் எல்லாமே நியாம்யமாகுமென்கைக்காக. இவ்விபூதியில் லீலாரஸத்திற்கான சேதநாசேதநங்கள் भोगरसத்திற்கான சேதநாசேதநங்கள் என்கிற பிரிவைக் காண்பிக்கிறார் இவ் இதி. लीलैயாவது सृष्टि-रक्षा-भङ्गங்களாகிற जगद्व्यापारம். அது மூலமான रसம்= आनन्दம் लीलारसம். உலகில் जीवர்களுக்கு वस्तुக்கள் अनुकूलமாவதில் कर्मவுக்கு அனுகுணமாக தாரதம்யமிருக்கலாம். ஈச்வரனுக்கு அது இல்லையாகையாலே ரஸத்தில் பிரிவு எங்ஙனே என்பதற்கு மறுமாற்றம் आनुकूल्यமாத்திரம் இத்யாதி. रसवैषम्यத்திற்கு व्यापारवैषम्यமே कारणம். ப்ரக்ருதி மண்டலத்தில் ஜீவர்களுடைய ஸ்வாபாவிகாகாரத்தை மறைத்து தேவ மநுஷ்யாதிபேதத்தை யிட்டுக் கார்யங்களை நடத்துவதால், वेषमूलமான ரஸம் ஸ்வாபாவிகமல்ல வாகையாலே குறைவான ஆனந்தம். இது लीलारसம். यथालोकம் = உலகில் विनोदமாக வேஷம் பூண்டு ஆடுமிடங்களிலே இத்தகைய ரஸம் உண்டு. ஸ்வாபாவிகமாக பரமபதத்தில் பெறப்படுவது भोगरसம்.

இந்த ரஸத்திற்குக் காரணமான लीलाव्यापारத்திற்கு ப்ரமாணங்களைக் காட்டுகிறார் அப்படியே इति. अस्य—இந்த சேதநாசேதந ப்ரபஞ்சத்திற்கு जन्मादि—உத்பத்தியும் ஸ்த்திதியும் அழிவும் यतः—எதன் மூலமாகின்றனவோ அது ब्रह्मம் என்று सूत्रार्थம். इदं—ப்ரக்ருதி முதல் ப்ருதிவி வரையிலான सर्वं-எல்லாம் हरेः—பகவானுடைய क्रीडा-லீலாவ்யாபாரமாய் क्षरम् அழிவுள்ளதென்றறியவேண்டும், "व्यक्तமான प्रपञ्चமும் प्रकृतियும் जीवனும் காலமும் எல்லாம் विष्णुவே. எல்லாமாயிருக்கிறான் விஷ்ணு. விளையாடும் சிறுபிள்ளை போன்ற அவனுடைய விளையாட்டுவ்யாபாரத்தைப் பார்" ஒருவனுக் கடங்காமல் அளவற்ற சக்தியுடைய பகவான் எங்கும் இஷ்டமான உருக்

क्रीडाकन्दुकैरिव जन्तुभिः" "लोकवत्तु लीला कैवल्यम्" (सू 2.1.33) என்கிறபடியே லீலாரூபஜகத்வ்யாபாரலக்ஷணமாக அனுஸந்தேயம்.

இப்படி லக்ஷ்மீஸஹாயமாய், अपरिमितज्ञानानन्दமாய், हेयप्रत्यनीकமாய், ज्ञानशक्त्याद्यनन्तमङ्गळगुणविशिष्टமாய், दिव्यमङ्गळविग्रहोपेतமாய். शरीरभूतविभूतिद्वययुक्तமாய், जगत्सृष्ट्यादिव्यापारलीलமாய்க் கொண்டு ப்ராப்யமான ப்ரஹ்மத்தை ப்ராபிக்கும் प्रत्यगात्मவினுடைய बद्धमुक्तनित्यसाधारणरूपமும், उपायाधिकारियान தனக்கு இப்போது அஸாதாரணமான ரூபமு மறியவேணும்.

இவர்களில் बद्धராவார்—अनादिकर्मप्रवाहத்தாலே அநுவ்ருத்தஸம்ஸாரராய்

---

களையுடையவனைய் விளையாட்டுக் கருவிகளைக் கொண்டு சிறுவன் களிப்பது போல் களித்து வருகிருன்" "ஹரியே (त्वं न्यपद्धिः....)" வினைகளாகிற நூலுக்கு வசமாய் கீழே விழுகின்றனவும் மேல் எழுகின்றனவுமான பந்துக்கள் போன்ற ஜந்துகளைக் கொண்டு நீ விளையாடுகிறாய்", "உலகில் அரசருக்கு வேட்டை ஆட்டம் எல்லாம் போல் பகவானுக்கு जगद्व्यापारம் வெறும் லீலையாகும்" இவ்வசனங்களால் स्वरूप.गुण.विग्रह விபூதிகள் போலே व्यापारங்களும் அவனுக்குண்டு என்றதாயிற்று. இதுபோல் பரமபத வ்யாபாரங்களான भोगव्यापारங்களுமுண்டு என்றறிக. ஆக प्राप्यமான ब्रह्मமானது निर्विशेषம் निर्गुणம் निराकारம் निष्प्रपञ्चம் निष्क्रियம் என்கிற மதம் अप्रामाणिकம். ப்ரமாணவாக்ய ங்களில் எங்காவது அவ்வாறு प्रयोगமிருந்தால் ஹேயமான அந்த அம்ச ங்கள் அவனுக்கில்லை என்றே கருத்தாகும்.

இப்படிச் சொன்ன எல்லாவற்றையும் திடப்படுத்துவதற்காக மீண்டும் சுருக்கி யருள்கிறார் இப்படி इत्यादियால். प्राप्य स्वरूप सङ्ग्रहத்திற்குப் பிறகு अर्थपञ्चकத்தில் இரண்டாவதான प्राप्ताவான जीवனைக் கூறுவர். கீழ்க்கூறிய स्वरूप-निरूपकधर्मங்கள் மூன்றுவிதமாகின்றன. ஒன்று எம்பெருமானைப் போலே பல வற்றிற்கு धर्मियान द्रव्यமாயிருக்கும் பிராட்டியே धर्मமாயிருக்கை. மற்றொன்று सत्यत्वादि भाव धर्मம். மூன்றாவது अमलत्वமாகிற अभावरूप धर्मம். இம் மூன்றையும் लक्ष्मीसहायமாய் இத்யாதியால் அடைவாகக் கூறினர். विभूतिद्वयமாவது प्रकृतिயும் परमपदமும். प्रापिக்கும் प्रत्यगात्मा என்பதற்கு அடைகின்ற जीवात्मा என்று பொருள்.

ஜீவாத்மாக்கள் பல வகுப்பாயிருப்பதால் எல்லோருக்கும் ஓரேவிதமான ரூபம் சொல்லமுடியாதென்பதற்காக ஜீவர்களின் विभागமும் அதில் முமுக்ஷுவான தான் சேர்ந்த வகுப்பில் தனக்குள்ள வாசியும் அறியவேண்டு மென்று அவற்றைக் கூறுகிறார் बद्धेत्यादियால். "ज्ञानानन्दमयस्त्वात्मा शेषो हि परमात्मनः என்றவை सर्वजीवसाधारणाकारமாம். அப்படியாகில் नित्यसूरिகளைப் போலே ஏன் बन्ध மின்றி இருக்கலாகாதென்ற வினா எழும். அதற்காக असाधारण ஆகாரததைச் சொன்னார், அப்பொழுது மோக்ஷத்திற்கு அவகாசமில்லை என்று நினைப்பான். அதற்காக—मुक्तரானவரும் உண்டு; मुक्तिக்கு வழியுமுண்டு, அவ்வழியில் நீயு மிழிந்திருக்கிறாய், ஆகையாலே நீயும் प्राप्ताவாவாய் என்று

ब्रह्मादिस्तम्बपर्यन्तविभागभागிகளான क्षेत्रज्ञர். முக்தராவார்—शास्त्रचोदितங்களான உபாய விசேஷங்களாலுண்டான भगवत्प्रसादத்தாலே अत्यन्तनिवृत्तसंसारராய் संकोचरहितभगवदनुभवத்தாலே निरतिशयानन्दராயிருக்குமவர்கள். நித்யராவார்—ஈச்வரனைப்போலே अनादियाக ज्ञानसङ्कोचமில்லாமையாலே "सवयस इव ये नित्य-

---

இவனைத் தெளிவிப்பதற்காக முவ்வகை विभागமும் साधारणासाधारण-आकारங்களும் சொல்லப்படுகின்றன. अनुवृत्त என்பதற்கு மேன்மேல் தொடர்ந்து வருகிற என்பது பொருள். ब्रह्मा—चतुर्मुखन். स्तम्बம் சிறுசெடித்தண்டு, தேவச்ரேஷ்ட்டனை பிரமன்தொடங்கி स्थावरத்தில் கடைசியான स्तंबம் வரையிலான ஜீவர்கள் எல்லோரும் बन्धம் உள்ளவராகையாலே बद्धர். क्षेत्रज्ञपदம் बन्धदशैயில் ஜீவாத்மாவைச் சொல்லும். क्षेत्रமாவது प्रकृतिகார்யமான शरीरம். அதிலிருப்பால் அறிவு பெறுகிறவன், இல்லையேல் அறிவில்லாதவன் क्षेत्रज्ञन். मुक्तரென்பதற்கு ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்டவர் என்பது பொருள், விடுபடுவதற்குக் காரணத்தையும் விடுபட்டபிறகுப் பெறும் விசேஷத்தையும் விரித்துரைக்கிறார் शास्त्र இத்யாதியால். चोदितங்களான = विधिக்கப்பட்ட. उपायविशेषங்கள் = भक्तिप्रपत्तिகள். अत्यन्तनिवृत्त संसारராய் = बन्धरூப संसारनिवृत्तिக்கு अन्तம் = முடிவு கிடையாதபடி—पुनस्संसार மில்லாதபடி संसारनिवृत्तियுடையராய். संसारनिवृत्तियாவது संसारध्वंसம். बन्धदशैயிலும் கடந்துபோன சில ஸம்ஸாரபாக நிவ்ருத்தியுண்டு. அது முக்தியாகாது. संसारत्वावच्छिन्नप्रतियोगिताकध्वंसம் (எல்லா ஸம்ஸாரத்திலுடைய நிவ்ருத்தி) என்று சொல்லலாகாது. ஒருவருடைய मुक्तिகாலத்தில் மற்றொருவருக்கு ஸம்ஸாரமிருக்குமாகையால் முழு ஸம்ஸாரநிவ்ருத்தி எப்பொழுதுமில்லையே ஆகையால் அவனவனுக்குத் தன் தன் ஸம்ஸாரமனைத்துக்கும் நிவ்ருத்தி स्वकीयसंसारत्वावच्छिन्नप्रतियोगिताकाभावः என்று சொல்லவேண்டும். இது முக்தி வருவதற்கு முன் प्रलयादि காலத்திலும் ஸம்பவிக்காது. नित्यருக்கு இந்த मुक्ति வாராது. स्वकीयसंसार என்றவிடத்தில் स्वपदத்தினால் नित्यரை க்ரஹிக்கமுடியாதே. அவனுடைய ஸம்ஸாரம் என்பது ப்ரஸித்தமன்றே, नित्यர் என்பதற்கு नित्यं परमपदத்திலே ईश्वरனோடிருக்கும் ஜீவர் என்று பொருள். नित्यர் அழியாதவர் என்றால் विभागத்துக்குரிய धर्मம் சொன்னதாகாது. बद्धादि आत्माக்களுக்கும் அழியாமையுண்டே, நித்யமாயிருப்புக்குக் காரணம் அநாதியாய் ज्ञानसंकोचமில்லாமை. सवयस என்பது श्रीगुणरत्नकोशश्लोकம். "ते साध्यास्सन्ति देवाः जननि गुणवपुर्वेषवृत्तस्वरूपैः
भोगैर्वा निर्विशेषाः सवयस इव ये नित्यनिर्दोषगन्धाः ।
हे श्रीः श्रीरङ्गभर्तुस्तव च पदपरीचारवृत्त्यै सदाऽपि
प्रेमप्रद्राण-भावाविलहृदयहठात्कारकैङ्कर्यभोगाः ॥"

தாயே! ஸ்ரீதேவியே! எவர்கள் கீழ்ச்சொன்ன परमपदத்திலே நற்குணங்கள் अप्राकृतशरीरம் वेषம் शुद्धமான செயல் இவற்றைக் கொண்டு எம்பெருமானோடு வாசியில்லாதவராய் இதில் சிறிது வாசியிருந்தாலும் ஆனந்தாம்சத்திலே வாசியேயில்லாதவராய் अनादियாய் அவரோடு சேர்ந்

निर्दोषगन्धाः" என்கிறபடியே अस्पृष्टसंसारராய்க் கொண்டு नित्यकैङ्कर्यம் பண்ணு கிற अनन्तगरुडविष्वक्सेनादिகள்.

இவர்களெல்லார்க்கும் ஸாதாரணமான ரூபம் अणुत्वज्ञानानन्दामलत्वादिகளும் भगवच्छेषत्वपारतन्त्र्यादिகளும். முமுக்ஷுவான தனக்கு அஸாதாரணமாக அறியவேண்டும் ஆகாரங்கள் उपोद्घातத்திலே சொன்னோம். மேலுங் கண்டு கொள்வது.

இப் ப்ராப்தாவினுடைய ஸ்வரூபம் ப்ரணவ நமஸ்ஸுக்களில் மகாரங்களிலும், नारशब्दங்களிலும், "प्रपद्ये" என்கிற உத்தமனிலும், "व्रज" என்கிற मध्यमனிலும், "त्वा" என்கிற பதத்திலும், "मा शुचः" என்கிற வாக்யத்திலும் अनुसन्धेयம். प्राप्त्युपायமும் இதின் பரிகரங்களும் फलस्वरू [மு?]மிருக்கும் படியும் மேலே प्राप्तस्थलங்களிலே பரக்கச் சொல்லக் கடவோம். இவற்றில் உபாயம் திருமந்த்ரத்தில் நமஸ்ஸிலும், अयनशब्दத்திலும், த்வயத்தில் पूर्वखण्डத்திலும், चरमश्लोकத்தில் पूर्वार्धத்திலும் अनुसन्धेयம். फलस्वरूपம் चतुर्थ्यन्तपதங்களிலும், द्वयத்தில் நமஸ்ஸிலும், "सर्वपापेभ्यो मोक्षयिष्यामि" என்கிற விடத்திலும் अनुसन्धेयம்.

---

திருப்பதால் ஸமானமான வயதிலுள்ள தோழன்மார்களைப் போன்றவர்களாய் எப்பொழுதும் சிறிதும் दोषமில்லாதவராய் ஸ்ரீரங்கநாதனுடையவும் உன்னுடையவும் திருவடிகளில் कैङ्कर्यம் செய்வதற்காக எப்போதும் அன்பினால் உருகியும் பல கருத்துக்களால் கலங்கியுமுள்ள மனத்தின் बलात्कारத்தினாலான कैङ्कर्यங்களாகிற உனது भोगங்களைச் செய்கின்றவராக இருக்கின்றனரோ, அவர்கள் साध्यதேவர்களாவர். साध्य என்பதற்கு प्राप्य என்பது பொருள். அவர்கள் வேறிடத்தில் சில நாளிருந்து परमपद மடைந்தவர்களல்லர், அங்கேயே எப்போது மிருப்பதால் எம்பெருமானைப் போலே யடையப்படுகிறவர்களே. "यत्र पूर्वे साध्यास्सन्ति देवाः" இத்யாதிகள் प्रमाणம். सदाऽऽपि என்கிற பதத்தில் "सदा पश्यन्ति सूरयः" என்கிற ச்ருதி கருதப்பெறும், अनन्तன் = ஆதிசேஷன். पारतन्त्र्यம் = பிறருக்கு ஆதீனமாயிருக்கை. भगवत्पारतन्त्र्यமாவது भगवदधीनமாயிருக்கை अमलत्वादि என்ற आदिपदத்தால் सत्यत्वமென்கிற स्वरूपनिरूपकधर्मத்தையும், पारतन्त्र्यादि என்கிற आदिपदத்தால் आधेयत्वத்தையும் கொள்வது. சொன்னோம் சொன்ன ஆகாரங்களாவன यदृच्छासुकृतம் जायमानकटाक्षம் अद्वेषம் आभिमुख्यம் सात्त्विकसंभाषणம் देहात्मविवेकம் सदाचार्यप्राप्ति, उपदेशग्रहणश्रद्धै இவைபோன்றவை. கண்டுகொள்வது. மேல் अधिकारம் ஒவ்வொன்றிலும் मुमुक्षुவுக்கு வேண்டுவன சொல்லப்படுகின்றனவே.

ஆரம்ப ச்லோகத்தில் रहस्यपदங்களிலே अर्थपञ्चकம் அடங்கியிருப்பதை सङ्ग्रहித்து அதை மேலே விளக்குகின்றவராய் प्राप्यब्रह्मस्वरूपம் அடங்கியிருப்பதை ஆரம்பத்திலேயே விளக்கியருளினார். प्राप्ताவான ஜீவனுடைய स्वरूपம் முதலானவை கீழே விளக்கப்படவில்லை யாகையால் அவற்றை விளக்குவதற்காக இப்प्राप्ता இத்யாதி, प्राप्तिविरोधिயைக் குறிக்கும் रहस्यச் சொற்கள் மேலே குறிக்கப்படும். परमपदம் பெறுதற்குச் சிறிது முன் வரையில் विरोधि-

**प्राप्तिविरोधि**யாவது **अविद्याकर्मवासनादिरूप**மான **मोक्षप्रतिबन्धकवर्ग**ம். இதில் **प्रधान**ம் **अनादि**யாக **सन्तन्यमान**மான **आज्ञातिलङ्घन**மடியாகப் பிறந்த **भगवन्निग्रह**ம்.

இது **क्षेत्रज्ञ**ர்க்கு **ज्ञानसंकोचकर**மான **त्रिगुणात्मकप्रकृतिसंसर्गविशेष**த்தை யுண்டாக்கியும்.

இப் **प्रकृतिपरिणामविशेष**ங்களான **शरीरेन्द्रियादि**களோடே துவக்கி, "திண்ணமழுந்தக் கட்டிப் பல செய்வினைவன்கயிற்றால் புண்ணை மறைய வரிந்தென்னைப் போரவைத்தாய் புறமே" என்றும் (தி 5.1 5)

---

மூலம் நமக்குத் தடை நேருமென்று அச்சமுற்று அதிக கவனத்துடன் நடந்து கொள்ள வேண்டுமென்பதற்காக **विरोधि**கள் யாவை என்பதை **विस्तरेण** தெரிவிக்கிறார். **वासनादि** என்கிற **आदि**பதத்தால் **रुचि**யும் **प्रकृतिसंबन्ध**மும் க்ரஹிக்கப்படும். **सन्तन्यमान**மான = தொடர்ச்சியாகச் செய்யப்படுகின்ற. **आज्ञातिलङ्घन**மாவது—**श्रुतिः स्मृतिः ममैवाज्ञा** என்ற **विधिनिषेधरूप**மான **भगवदा**ஜ்ஞையை மீறுதல். இது **अविद्याकर्म** என்ற விடத்தில் **कर्मपदार्थ**ம். இதுமூலமான **भगवन्निग्रह**மும் இதிலடங்கியதே. இந்த **भगवन्निग्रहम्** நேராக **अविद्या, वासना रुचि प्रकृतिसंबन्ध**ங்களால் வருகிறதில்லை; **किन्तु** கர்மாவினால். ஆகையால் கர்மாவுக்குப் **प्राधान्य**ம். **मुमुक्षु**வுக்கு **बाधक**மாகையால் புண்யகர்மாவையும் கூட்டிக் கொள்க இது என்பதற்கு வெகுதூரத்தில் வரும் 'விலக்காயிருக்கும்' என்கிற க்ரியையோடு அந்வயம் அதுவரையில் ஒரே வாக்யம். **प्रकृतिसंबन्ध**ம் என்கிற **पद**த்தினாலே **ईश्वरनित्यमुक्त**ர்களுக்கும் நேரும் **प्रकृतिसंसर्ग**த்தை விட்டு **प्रकृतिसंसर्ग विशेष**த்தை—**जीवज्ञानसंकोचकारण**மான **प्रकृतिसंसर्ग**த்தை = **प्रलयकाल**த்தில் தன் **विश्राम**த்திற்குக் காரணமான **गुणसाम्यावस्थ प्रकृतिसंसर्ग**த்தையும் **सृष्टिकाल**த்தில் தன் **कर्ममूल**மான **गुणवैषम्यावस्थप्रकृतिसंसर्ग**த்தையும் கொள்வது. இது **क्षेत्रज्ञ**ர்க்கு இத்யாதியால் சொல்லப்படுகிறது. அதில் **प्रलयकालसंसर्ग**த்தை விசேஷமில்லாமையாலே **உண்டாக்கியும்** என்ற சிறிய வாக்யத்திலே சுருக்கிவிட்டு **सृष्टिकाल**த்திலுள்ள **अनर्थ**ங்களைப் பரக்க நிரூபிக்கிறார் இப் **प्रकृतीत्यादि**யால். துவக்கி—சேர்த்து. **शरीरेन्द्रियादि**களோடே துவக்கி என்ற போது கண்ணபிரானை (5-1-5) என்கிற பாட்டிலே "நடுவே ஓர் உடம்பில் இட்டு" என்றது நினைவுற்றதால் அதற்கு மேலடிகளான **திண்ணம்** இத்யாதினைய எடுத்தருளுகிறார். **ஓர் உடம்பில்**. ஒரே ஒரு உடம்பில் என்ற பொருளதல்ல; பலவிதமாய் ஆராயப்படும் ஒப்பற்ற உடம்புகளிலே என்ற பொருளதாம், **உடம்பில் புகவிட்டு**, நான் வெளிப்போகாதபடி நான் செய்த வினைகளாகிற வலிய கயிற்றால் திடமாகவும் துர்வாஸனைகள் படியும்படியும் என்னைச் சேர்த்துக் கட்டி **रक्तमांसास्थिमय**மாய் புண்போலிருக்கும் உள்பாகம் வெளியில் தெரிந்தால் காக்கையும் நாயும் கொள்ளை கொள்ளும், கட்டிய கட்டும் வீணுமென்று அப்புண் மறையும்படி அதைத் தோலாலே வரிந்து = மூடி, மழமழப்பான அத் தோலைக் கண்டு நானே அதில் மோஹம் கொள்ளும் படியாக்கி, **புறமே போக வைத்தாயே** = வெளி யனுபவத்திலேயே இழிய

அந்நாள் நீ தந்த வாக்கையின் வழியுழல்வேன்'' (தி 3.2.1.) என்றுஞ் சொல்லுகிறபடியே देहेन्द्रियादिपरतन्त्रனுக்கியும்.

அவ்வவஸ்த்தையிலும் शास्त्रवश्यதை கூடாத तिर्यगादिदशैகளிலே நிறுத்தியும், शास्त्रयोग्यங்களான मनुष्यादिजन्मங்களில் बाह्यकुदृष्टिमतங்களாலே கலக்கியும், அவற்றில் இழியாதவர்களையுமுள்பட "भगवत्स्वरूपतिरोधानकरीं विपरीतज्ञानजननीं स्वविषयायाश्च भोग्यबुद्धेर्जननीम्" என்கிறபடியே இம் மூலப்ரக்ருதிமுதலான मोहनपिञ्छिकैதன்னுலே तत्त्वाज्ञान-विपरीतज्ञान विषयप्रावण्यங்களைப் பண்ணியும்,

---

விட்டாயே. நான் எங்கே உன்னை நண்ணுவது என்று ஆழ்வார் கதறும் படியான பாசுரத்தை எடுத்தது मुमुक्षुவுக்கு இத்தகைய நிர்வேதம் வேண்டு மென்பதற்காக. வைத்தாய் புறமே என்றபோது स्थावरजन्तुவாக்கியதும் தோன்றும். ஜங்கமமாக்கியது தோன்றும் பாசுரத்தை உதாஹரிக்கிறார். அந்நாள் (3-2-1) என்று. 'எம் முகில்வண்ணனே'; நீ எனக்கு ஸ்ருஷ்டியின் தொடக்கத்திலே அளித்த ஆக்கையானது (உடலானது) அவ்வுடல் முடிவுக்குள்ளே உன்னைப் பெறுவிக்கும்படியன்றி மேன்மேலுடல்களுக்கான கர்மகாரணமாய் இதுகாறும் உடல்களில் உழன்றேன். இனியும் உழலப்போகிறேன். மேன்மேல்நோய் வினைகளுக்குக் காரணமாகுமேயல்லது இது நீக்கக் காரணமாகாது. என்னுள்தான் உன்னை இனி வந்து கூடுவன் என்றபடி. இப் பாட்டுக்களால் அளவற்ற பிறவிகள் பெறுவது தெளிவாம். இப்பிறவிகளில் படிப் படியாக மேலே ஏறுகிருன் என்ற நிபந்தனையுமில்லை. மேல் உச்சிவரையில் சென்றவனும் திடீரென்று அடிக்கீழ் விழலாம். ब्रह्मपदம் பெற்றவனே பிறகும் புழுவாகப் பிறக்கலாம். ஆகையால் प्राप्तिविरोधि எளிதில் நீங்காதென்றதாயிற்று, படிப்படியாக மேலே ஏறுவதென்று வைந்துக்கொண்டாலும் கடைப்படி வரையில் கணக்கற்ற கேடுகளென்று காட்டுகிருர், அவ்வவஸ்த்தையிலும் இத்யாதியால், शास्त्रवश्यதை கூடாத என்றதால் मृगपक्ष्यादिदशैகளில் பாபம் செய்தோம் என்கிற பயத்திற்கு இடமிராமற்போனுலும் மோக்ஷம்பெற ज्ञानानुष्ठानங்களுக்கு இடமில்லை யென்றவாறு निर्वेदம் வேண்டும் என்று அறிவித்ததாம் मनुष्यादि என்கிற ஆதிபதத்தால் राक्षसादिகளைக் கொள்க. இழியாதவர்களையும் = இதரமதங்களை யறியாதவர்களையும் அறிந்து உபேக்ஷித்தவர்களையும். गद्यத்தில் तिरोधानபதத்தால் तत्त्वविषयத்தில் अज्ञानமும் विपरीत ज्ञान பதத்தால் भ्रान्तिயும் स्वविषयायाश्च भोग्यबुद्धेः என்றதால் விஷயங்களிலே பற்றும் கொள்ளப்படும். करीं जननीं என்பன மூல ப்ரக்ருதிக்கு விசேஷணம். அது ப்ரபஞ்சத்தில் போக்யமான வஸ்துக்களாக உண்டாகி அப்படி யுண்டான தன் (வஸ்து) விஷயத்திலே இதுவே நமக்கு போக்யமென்று பற்றை உண்டுபண்ணுகிறது. मोहनपिच्छिकैயாவது இந்த்ரஜாலம் செய்கிறவர்கள் ஜநங்களுக்கு மோஹத்தை யுண்டுபண்ணுவதற்காகக் கையில் मन्त्रித்து வைத்திருக்கும் மயில்தோகை. प्रावण्यமாவது பற்று—ஈடுபாடு.

मानसदोषங்களைச் சொல்லி வேறு கருவிகளால் வரும் பாபகர்மங்களையும்

இவையடியாக "ஆவி திகைக்க வைவர் குமைக்கும் சிற்றின்பம் பாவியேனைப் பல நீ காட்டிப் படுப்பாயோ" என்கிறபடியே सुखलवार्थமான अकृत्यकरणादिரூபமான आज्ञातिलङ्घनத்தைப் பண்ணுவித்தும், "पापं प्रज्ञां नाशयति क्रियमाणं पुनः पुनः। नष्टप्रज्ञः पापमेव पुनरारभते नरः" என்கிறபடியே மேலும் अपराधபரம்பரைகளிலே மூட்டி அதன் फलமாக क्षिपाम्यजस्रमित्यादिகளிற்படியே गर्भजन्मजरामरणनरकादिचक्रपरिवृत्तिயிலே परिभ्रमिப்பித்தும்,

क्षुद्रसुखादिகளுக்கு साधनமான राजसतामसशास्त्रार्थங்களைக் கொண்டு "यक्षरक्षांसि राजसाः। प्रेतान् भूतगणांश्चान्ये यजन्ते तामसा जनाः" என்கிறபடியே

---

கூட்டுகிறார். இவை இதி. இவையடியாக = இந்த தத்த்வாஜ்ஞாநாதிகள் காரணமாயிருப்பதாலே. **ஆவி இதி**, (6-9-9) ஆவி-ஆத்மாவானது திகைக்க—என் செய்வதென்றறியாமல் ப்ரமித்து நிற்கும்படி, ஐவர்—யமபடர்கள் போன்ற இந்த்ரியங்கள் குமைக்கும்—துன்பப்படுத்திய போது இடையிலுண்டான **பல** = பல இந்த்ரியங்கள் மூலமாகையாலே பலவான, **சிறுஇன்பம்** அத்யல்ப ஸுகங்களை, பாவியேனை—பாபியாயிருக்கும் எனக்கு, **காட்டி**—அவற்றில் நான் இழியும்படி காண்பித்து, படுப்பாயோ = என்னை இப்படி படுத்தலாமோ [என்று விவேகிகள் வருந்தும்படியான] **என்கிறபடியே** என்பதற்கு **ஸுகலவார்த்தமான** என்னும் அடுத்த சொல்லில் அந்வயம். **अकृत्यकरण**மாவது வேண்டாமென்ற **सुरापानादि**களைச் செய்வது. **आदि**பதத்தால் **कृत्याकरण**ம்—செய்யவேண்டுமென்று விதித்தவற்றை விடுகை கொள்ளப்படும். இந்த தோஷங்கள் ஏதேனுமொரு மதத்திலிழிந்தவருக்கும் இழியாதவருக்கும் பொதுவாயிருக்கும். இது படிப்படியாக அஸுரப் பிறவிக்குக் காரணமென்கிறார் **पाप**மிதியால். பாபமானது **पुनःपुनः क्रियमाण**—பல தரம் செய்யப்பட்டதாய் **प्रज्ञां**—உள்ள அறிவையும் **नाशयति**—அழிக்கும். **नष्टप्रज्ञः नरः** அறிவிழந்த மனிதன் மீண்டும் பாபத்தையே செய்கிறான். **क्षिपामीति. असुरान्** அதிக பாபத்தாலே என்னை எதிர்த்து அஸுரராய்ப் பிறந்தவர்களை **अजस्रं**—எப்பொழுதும். மீளாதபடி **आसुरीषु योनिषु एव**—அஸுர யோனிகளிலேயே **क्षिपामि**—எறிகிறேன், இங்கு **अजस्रம்** என்றிருப்பதால் இது எப்போதும் மோக்ஷாதி நன்மையைப் பெறவாகாதபடி நித்யமாக, இவர் **घोरसंसारि**களே யாவர்கள் என்கிற பக்ஷத்தை வெகுபேர் ஆதரிப்பர்.

இவ்வளவு **अर्थ**த்தில் விழாமல் **वेदविश्वास**முள்ளவர்க்கு வரும் நன்மைகளை மேலே காண்பித்து அங்கும் வரும் கேடுகளைக் குறிப்பது **क्षुद्रेत्यादि**யால். கர்ப்பம் ஜந்மம் மூப்பு மரணம் நரகம் முதலானவை மாறிமாறி வருகிற படியாலே **चक्र**ம். அதனுடைய **परिवृत्ति** = சுழன்று வருகை. **आस्ति**கர்களில் கீழ்பட்டவர்கள் தாமஸர்; சிறிது மேற்பட்டவர் ராஜஸர். அவர்கள் வேதங்களில் சொல்லப்பட்ட சில தாமஸ ராஜஸ**गण**ங்களை **दैव**மாக ஆராதிப்பர். அந்த **गण**ங்களும் **வினை**ப்பயனைப் பிறந்து பல வருத்தங்களுக்கு ஆளாகி இருப்பவர்களே. இப்படி தனக்கு **ஸம**மாகவே, ஒழுகு சங்கிலியிலே = எல்லோ

தன்னோடு ஒக்க வொழுகுசங்கிலியிலே கட்டுண்டு உழலுகிற க்ஷேத்ரஜ்ஞர்காலிலே விழப் பண்ணியும், அவர்கள் கொடுத்த **जुगुप्सावहक्षुद्रपुरुषार्थ**ங்களாலே **क्रिमि**களைப் போலே **कृतार्थ**ராக மயக்கியும்.
**योगप्रवृत्त**ரானவர்களையும் **क्षुद्रदेवतायोग**ங்களிலேயாதல், **नामाद्यचेतनोपासन**ங்களிலேயாதல் மூளப்பண்ணிச் சில்வானங்களான **फल**ங்களாலே யோகத்தைத் தலைசாய்ப்பித்தும்,
**आत्मप्रवण**ரையும் **प्रकृतिसंसृष्टं प्रकृतिवियुक्त**மென்கிற இவ்விரண்டு படியிலும் **ब्रह्मदृष्टि**யாலேயாதல் ஸ்வரூபமாத்ரத்தாலேயாதல் உபாஸிக்க மூட்டி அவை நாலு

---

ரையும் கட்டும்படி வெகு நீண்டிருக்கும் (பல பூட்டுக்கள் கொண்ட) பெருங் கயிறு போலேயிருக்கும் இரும்புசங்கிலியிலே தன்னைப் போலவே கட்டுண்டு= கட்டப்பட்டுத் திண்டாடுகிற **बद्ध**ரான **गण**ங்களின் காலிலே விழுந்து கிடக்கும்படி பண்ணுகிறது இவனிடமுள்ள **प्राप्तिविरोधि** கர்ம. அந்த **गण**ங்களோ வென்றால் தங்களுடைய அசக்தியைக் காண்பிக்காமல் தங்களுக்கு ஊழியம் செய்யச் சிலர் கிடைத்ததற்குக் களித்து **जुगुप्सावह**மான — அருவருக்கத் தக்க அல்ப்பமான புருஷார்த்தங்களைக் கொடுத்து மயக்குகிறார்கள். இவனும் மலத்திலகப்பட்ட புழுக்களைப் போல் கிடைத்ததைப் பெரிதாக நினைத்துத் தன்னை **कृतार्थ**னாக= பெறவேண்டியதைப் பெற்றவனாக நினைக்கிறான்.

இப்படி கெட்டவன் சிலகாலம் கழித்து '**यजन्ते सात्त्विका देवान्**' என்கிற மேற்படி ஏறுவான். **यक्ष-राक्षस-भूत-प्रेतादि**களைவிட தேவர்கள் சிறந்தவர்கள். அவர்கள்விஷயமான **याग**ங்களைச் செய்கிறான். **याग**த்தைவிட **योग**ம் சிறந்ததென்பதை யறிந்தும் அந்த தேவதாவிஷயமான யோகத்திலேயே இறங்குகிறான். இப்படி இறங்கும் பலர் அத்தேவதைகளை **क्षुद्र**ர்கள் என்று விட்டு வேறு விதம் ஆராயும்போது. **नाम ब्रह्मेति उपासीत (वेदादिशब्दराशि** முழுமையையும் ப்ரம்மமாக ஏறிட்டு உபாஸிக்க வேண்டும்) என்றாற் போன்ற உபாஸநத்தில் இழிகிறான். ஏனெனில், "**तस्य सर्वेषु लोकेषु कामचारो भवति**" என்று **शब्दराशि** பரவும் லோகங்களனைத்திலும் **यथेच्छसञ्चार**மென்ற மா பலன் சொல்லியிருப்பதால். அப்படி அதிக பலன் என்கிற காரணத்தினாலேயே **भूमविद्य**யில் அதற்கும் மேலாகச் சொல்லப்பட்ட **वाग्ब्रह्मोपासनादि**களில் மூளுகிறான். இம் மாபலன்களும் உண்மையில் சில்வானங்களே — அத்யல்பங்களே. இப் பலன் வந்தவாறே கதிர் முதிர்ந்தவுடன் பயிரின் தலைப்பாகம் சாய்வது போல் யோகம் சாய்ந்து ஒழிகிறது. இந்த உபாஸனங்களைவிட **आत्मोपासन**மே சிறந்ததென்று கொண்டு **भूमविद्य**யில் **आत्मोपासक**னை **अतिवादि** என்று முதலில் புகழ்ந்திருக்கிறது. **अतिवादि** என்பதற்கு, தான் உபாஸிக்கும் வஸ்துவை மற்ற வஸ்துவைவிட உயர்ந்ததாகச் சொல்லுகிறவன் என்றது பொருள். **विषयानुभव**த்தைவிட **आत्मानुभवानन्द**ம் பெரிதென்று **गीतादि**களும கூறும் இந்த **आत्मप्रवण**னை = **आत्मोपासन**த்திலே ஆத்மானுபவத்திலே நோக்குள்ளவனை நாலுவிதமாக **कार्याधिकरण**த்தின் கடைசியில் **भाष्य**த்தில் அருளிச்

வகைக்கும் பலமாக अल्पास्वादங்களைக் கொடுத்து पुनरावृत्तियைப்பண்ணியும்.

ब्रह्मात्मकस्वात्मचिन्तनप्रवृत्तரானவர்களையும் स्वात्मशरीरकपरमात्मचिन्तनपररையும் अन्तरायமான आत्मानुभवத்தாலே யாதல், अष्टैश्वर्यसिद्धिகளாலே யாதல், वस्वादि-

---

செய்தார். நான்கு உபாஸநங்களாவன — बद्धனை जीवனை बन्धविशिष्टனகவே க்ரஹித்துக் கொண்டு உபாஸிப்பது ஒன்று; அதே बन्धविशिष्टजीवனை ब्रह्मமாக ஏறிட்டு உபாஸிப்பது இரண்டாவது; बन्धविशिष्टமாகக் கொள்ளாமல் சுத்த ஜீவஸ்வருபத்தை மட்டும் உபாஸிப்பது மூன்றாவது, அந்த சுத்தஸ்வருப த்தை ब्रह्मமாக ஏறிட்டு உபாஸிப்பது நான்காவது; ஏறிட்டு உபாஸிப்பதை दृष्ट्युपासनமென்று வழங்குவர். விஷம் தீண்டினவன் தன்னை கெருடனாகை உபாஸித்துக் கொள்ளவேண்டுமென்றாற்போலே சாஸ்த்ரங்கள் ஒரு பலனுக்காக ஒரு த்ருஷ்டியை விதிக்கும். அந்த दृष्टि ब्रह्मஜ்ஞானமாயிருந்தாலும் தத்துவஜ்ஞானமன்றாகையாலே मोक्षம் பெறுவிக்காது. இந் நான்குவித உபாஸநங்களுக்கும் अल्पமான பலன்களே என்று अतोऽन्यदार्तम् என்கிற ச்ருதிவாக்யத்தைக் கொண்டு அங்கே பாஷ்யகாரர் முடிவு செய்தார். सनत्कुमारரும் இந்த ஆத்மோபாஸனத்தால் சோகம் தீராதென்று முடிவு கொண்டு तरति शोकं आत्मवित् என்று நாரதர் அபேக்ஷித்த ஆத்மஞானம் सत्य.सुखभूमरूप'परमात्माவின் ज्ञानமே. இவ்வுபாஸநம் செய்கிறவன்தான் உண்மையான अतिवादी என்று பின்னே வெளியிட்டார். ஆக ब्रह्मदृष्टियான உபாஸனம் போல் अचेतनोपासनம் போல் शुद्धचेतनस्वरूपमात्रोपासनமும் அழியும் பலனையே அளிப்பதாகும். ஆக இவ்வுபாஸகனையும் ब्रह्मप्राप्तिविरोधियான்து விடவில்லை யென்றதாயிற்று.

இதனால் இதையும் விட்டு दृष्टि उपासनமன்றி ब्रह्मविषयकமாய் तत्त्वज्ञानமாகிற उपासनத்திலிழிகிறான். அவ்வுபாஸநம் இருவிதமாகும். தனக்கும் ब्रह्मத்திற்கும் சரீராத்மபாவஸம்பந்தம் உண்மையில் இருப்பதால் நான் ब्रह्मात्मकன் = ब्रह्मத்தை நான் आत्माவாக உடையவன் என்று தன்னை ப்ரதானமாக்கி உபாஸிப்பது ஒன்று என்னை சரீரமாக உடையவன் பரமாத்மா என்று பரமாத்மாவை ப்ரதானமாக்கி உபாஸிப்பது இரண்டாவது. இரண்டிற்கும் மோக்ஷமென்கிற பலன் உண்டு. ஆனால் क्षुद्रபலனுக்குமிடம் இருக்கிறது. இவ்விரண்டில் முதல் உபாஸனத்தை पञ्चाग्निविद्य என்பர். இவன் பிறரைப் போலன்றி தன்னை ப்ரதானமாக்கி உபாஸிப்பதால் இவ்வுபாஸநமானது தன்னை மட்டும் அனுபவிப்பது என்கிற கைவல்யத்தை முதலில் கொடுத்து, பிறகே மோக்ஷமளிக்கும். எனவே விரைவில் மோக்ஷம் பெறாமையால் ஸ்வாத்மானுபவத்திலே இழிவதால் ப்ராப்திக்குக் காரணமான இதுவே சிறிது காலம் प्राप्तिविरोधियுமாகிறது. ऐश्वर्यफलानुभवத்தைக் காட்டிலும் कैवल्यफल மானது நீண்டகாலம் அனுபவிக்க வேண்டியிருப்பதாலும், அப்போது भगवदनुभवம் சிறிதும் இராமையாலும் இது பெரிய अन्तरायம் (இடையூறு) என்று இதை முதலில் எடுத்தார்.

पदप्राप्ति-ब्रह्मकायनिषेवणादिகளாலே யாதல், अभिषेकத்துக்கு நாளிட்ட ராஜ

---

மற்ற உபாஸகர்களுக்கும் நேரக்கூடிய விக்னமாகும் अष्टैश्वर्यसिद्धि. அவை "अणिमा महिमा गरिमा लघिमा प्राप्तिः प्राकाश्यम् ईशत्वं वशित्वம் என்பன. யோகம் பண்ணுகிறவன் இவற்றை அபேக்ஷிக்காமற் போனாலும் நாம் யோகம் பெற்றோமென்று ஒருவித உத்ஸாஹத்தைப் பெறுதற்காக ஈச்வரனால் அளிக்கப்படும் ஸித்திகளாம் இவை. இப்பலனையே பெரிதாக இவன் நினைத்துவிட்டால் இதுவும் अन्तरायம்—இடையூறு ஆகிறது. சில பரமாத்மோபாஸனங்களுக்கு மோக்ஷம் போல் क्षुद्रபலனும் ஒவ்வொருவிதமாக உபநிஷத்தில் சேர்க்கப் பட்டிருக்கிறது, அதற்குக் காரணம் க்ஷுத்ர பலனை விடாதவரும் மோக்ஷத்தி லிழியட்டுமென்கிற கருணைதான். அப்பலன்களில் वस्वादिपदप्राप्ति என்பது ஒன்று. அதாவது சூரியன் ஒரு தேனடை. நாலு வேதங்களில் விதிக்கப் பட்ட தர்மங்கள் மூலமாக வரும் பலன்களாகிற நான்குவிதமான அமுதங்கள். அத் தேனடையில் கிழக்கிலிருந்து நான்கு திக்குகளிலும் இருக்கின்றன. இதிஹாஸ புராணமூலமான அமுதம் ஸௌரியனிடம் மேல் திக்கிலிருக்கிறது. वसु रुद्र आदित्य मरुत् साध्यர்களெனப்படும் ஐந்துவித देवगणங்கள் இவ்வைந்தையும் அங்கங்கிருந்து அனுபவிக்கின்றனர். இவ்வமுதம் கொண்ட சூரியனுக்கும் இவற்றை அனுபவிக்கும் வஸ்வாதிகளுக்கும் பரமாத்மா அந்தர்யாமி என்று உபாஸிப்பவன் मधुविद्यानिष्ठन். இவன் முதலில் वस्वादि देवगणसायुज्यம் பெற்று அவர்களைப் போல் அனுபவித்துவிட்டு காலக்ரமத்தில் தான் உபாஸித்த சூர்யன் உதயாஸ்தமயமில்லாமல் முக்தனாகிறது போல் ப்ரஹ்மப்ராப்தி என்கிற மோக்ஷம் பெறுகிறான். வேறு உபாஸநத்திலிறங்கியிருந்தால் இந்த अन्तरायம் நேராது. இதில் இழிவதற்கு இந்த க்ஷுத்ரபலத்தில் நசை என்கிற प्राप्तिविरोधिயே காரணம் இதைப் போல் ब्रह्मकाय निषेवणம் என்கிற क्षुद्रமும் உண்டு. அதாவது மோக்ஷதர்மத்தில், அத்யாயம் 194 முதல் 198 வரையில் जापकोपाख्यानம். जपம் பண்ணுகிறவர்களுக்கு फलம் என்ன. जपம் प्रवृत्तिधर्मமா निवृत्तिधर्मமா என்று தர்மபுத்ரர் கேட்டபோது வேதஸம்ஹிதாஜபம் செய்து வந்த ஒரு ப்ராம்மணனுடைய இதிஹாஸத்தை பீஷ்மர் குறிப்பிடுகிறார். फलத்தில் நசை இல்லாமல் स्वयंप्रयोजनமாம் ஜபமே செய்ய வேண்டுமென்றிருந்த அந்த ப்ராம்மணனுக்கு ब्रह्मकायनिषेवणம் என்கிற பலன் முடிவில் சொல்லப்பட்டது. அதாவது நான்முகனுடைய சரீரத்தில் தங்கி இருக்கை, पाञ्चरात्रத்தில் क्रममुक्तिயில் अनिरुद्धசரீரத்தில் புகுந்திருந்து பிறகு प्रद्युम्नனிடத்தில் புகுந்திருந்து மேன்மேல் फलனுக்கு मुक्तன் செல்லுகிறான் என்றவிடத்தில் போலே चतुर्मुखशरीर-प्रवेशம் என்பதற்கு சதுர்முக ஸாயுஜ்யத்திலே தாத்பர்யம் என்பது ஸர்வஸம்மதமானாலும் உண்மையில் சரீரப்ரவேசம் உண்டு. அங்கு கடைசி அத்யாயத்தில், யோகம் செய்கிறவர், ஜாபகர் இருவருக்கும் பலன் ஸமம்

என்று கூறி நான்முகன் ஜாபகனைப் பார்த்து **उपगतं मयि चेत्युक्त्वा व्याददे स ततो मुखम्। अथास्यं प्रविवेशास्य ब्राह्मणो विगतज्वरः॥** (என்னிடத்தில் வாஸம் பண்ணு என்று வாயைத் திறந்தான். ப்ராம்மணனும் அதில் புகுந்தான்) என்று ஸ்பஷ்டமாகவிருக்கிறதே.

இதன் மேல் கேள்வி—இங்கு முடிவில் ப்ரஹ்மகாய ப்ரவேசம் மட்டுமே சொல்லப்பட்டிருப்பதால் இதற்கு மேல் ஜாபகன் மோக்ஷம் சென்றான் என்பதற்கு ப்ரமாணமில்லை. ஆகையால் **वस्वादिपदप्राप्ति** போலே இது அந்தராயம் = இடையில் வந்ததென்னவாகுமோ. **श्रुतप्रकाशिकै**யில் **कार्याधिकरण**த்தில் எடுத்த ச்லோகம் பாரதத்தில் கீழ்வருவாறு காணப் படுகிறது, "**अथवा नेच्छते तत्र ब्रह्मकायनिषेवणम्। उत्क्रामति च मार्गस्थो नैव क्वचन जायते॥ आत्मबुद्धिं समास्थाय शान्तीभूतो निरामयः। अमृतं विरजाः शुद्धमात्मानं प्रतिपद्यते॥**" என்று. இதில் மோக்ஷப்ராப்தியும் பலனாகத் தெரிகிறதே என்னில், அங்கு ப்ரஹ்மகாயநிஷேவணத்தைப்பெற விரும்பாதவன் முதலிலேயே சரீரத்தினின்று கிளம்பி வேறெங்கும் பிறக்காமல் அர்ச்சிராதிமார்க்கமாக, அம்ருதம் அடைகிறான் என்றதால் மோக்ஷம் தனிப் பலன் சிலர்க்கு, சிலர்க்கு ப்ரஹ்ம காய நிஷேவணம் என்றேற்படுகிறபடியால் இதை இடைப்பலன் என்பது எவ்வாறென்கிறீரென்றவாறு.

ஸமாதாநம்—இடைப்பலனாக தான் இது கருதப்பட்டுள்ளது. தாத்பர்ய சந்த்ரிகையில் (8-23) "**यथा च मुमुक्षोरेव कस्यचित् मध्ये ब्रह्मकायनिषेवणसुखमुच्यते. यथा च, अथवा नेच्छते तत्र.........ब्रह्मकायनिषेवणसङ्गान्मुक्तस्य देवयानेन मार्गेण परमाकाशगमनमुच्यते**" என்பது காண்க. ப்ரஹ்மகாய நிஷேவணமில்லாமல் நேராக மோக்ஷமே ஜபப்பலனாகக்கூடுமானாலும் அதை விரும்பியவனுக்கு அது இடைப்பலனாகலாம். விரக்தனாய் நிவ்ருத்திதர்மநிஷ்டனான ஜாபகனிடம் **काल-मृत्युप्रभृति**களும் **इक्ष्वाकु**வும் வந்து அவன் புத்தி மாறும்படி பேசும்போது இக்ஷ்வாகு, ஜபப்பலனைத் தனக்களிக்க வேண்டுமென்று கேட்க, ஜாபகனும் இசைந்த பிறகே, இருவரும் அப்பலனை அனுபவிக்க வேண்டுமென்று அவ்வரசன் நிர்பந்திக்க, **कालादि**கள் எல்லோரும் சேர்ந்து ஸ்த்தானங்களுக்குள் உயர்ந்த ஸ்தானமான நான்முக ஸ்தானத்திற்குச் சென்று அநுபவியுங்கள் என்று முடிவு செய்த போது, இருவரையும் நான்முகனும் புகுந்து வஸிக்கும்படி உட்கொண்டான். அங்கே விரக்தனாகாத இக்ஷ்வாகுவுக்கு மோக்ஷபலனுக்கு இடமில்லையாகையாலே அப்பலனை மட்டும் சொல்லியிருந்தாலும் ஜாபகன் பின்னால் மோக்ஷமும் பெற்றிருக்கலாம். தர்மபுத்ரர் ஜபப்பலன் எதுவாகுமென்று கேட்டதற்கு **भीष्म**ர் நரகங்களெல்லாம்கூட ஜப பலன் என்றுகூறி **रम्याणि कामचाराणि विमानानि सभास्तथा।......एते वै निरयास्तात स्थानस्य परमात्मनः** என்று **परमपद**த்தைக் காணும்போது ஆச்சர்யமான ஸ்வர்க்காதிகளும் நரகங்களே ; அவற்றை விரும்பாதவன் ஜபத்தினால் மோக்ஷம் பெறுகிறானென்றார் **अथवा नेच्छते** என்கிற ச்லோகத்திற்குப் பொருள்

குமாரனுக்குச் சிறையிலே எடுத்து கை நீட்டின சேடிமார்பக்கலிலே கண்ணோட்டமுண்டாமா போலே प्रारब्धकर्मफलமான தேஹேந்த்ரியங்களிலும் तदनुबन्धिகளான परिग्रहங்களிலும் तन्मूलभोगங்களிலும் கால்தாழப் பண்ணியாதல் अन्यपरராக்கியும்.

இப்படிப் பல முகங்களாலே भगवत्प्राप्तिக்கு விலக்காயிருக்கும்.

---

ஏதேனுமாகுக. முதலில் निरिच्छः त्यजति प्राणान् ब्राह्मीं संश्रयते तनुम् என்று நான்முகனின் சரீரத்தில் ப்ரவேசத்தைச் சொல்லி, "सर्वान् योगान् समाक्रम्य क्रमात् प्राप्नोति वै परम् என்று க்ரமமுக்தியும் சொல்லப்பட்டது. 197ல் ஸம்ஹிதா ஜபம் செய்கிறவன் நான்முகனை அல்லது அக்னியை சூர்யனை சந்த்ராதிகளை அடைந்து அங்கங்கு அனுபவித்து வைராக்யம் வந்தபோது பரமாத்மாவை யடைகிறான். (129–134) என்று க்ரமமுக்தியும் சொல்லப்பெற்றது.

आदिபதத்தினால் ब्रह्मकायनिषेवणத்திற்கும் மேலான विष्णुलोक-अनिरुद्धादिव्यूहलोक प्राप्ति மூலமான अन्तरायத்தையும் கொள்ளலாம் இப்படி कैवल्य ऐश्वर्यफलன்கள் கலந்த மோக்ஷத்திற்கான परविद्यैகள் நீங்கலாக மோக்ஷமாத்ரத்திற்கேயான பரவித்யைகளிலும் अणिमैश्वर्यसिद्धिरूपமான தடை சொல்லப்பட்டது. அதில் அகப்படாத பக்தியோக நிஷ்ட்டருக்கும் அவர்கள் பக்தியோகத்தை தேஹேந்த்ரியங்களைக் கொண்டும் பல வஸ்துக்களைக் கொண்டுமே செய்ய வேண்டியிருப்பதால் அப்போதைக்கப்போது அததற்கு வசப்பட்டு புத்தி மயக்கம் பெறுவது ஸஹஜம். அதனாலும் தாமதமுண்டு என்று மேலே சொல்லுகிறாராய் அதற்கு லோகத்ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார் अभिषेकத்திற்கு हेत. எடுத்துக் கை நீட்டின—चामरம் விசிறி முதலானவற்றை எடுத்துக் கொண்டு உபசரிக்கக் கை நீட்டின என்றபடி. ராஜகுமாரனின் दुष्प्रवृत्तिயைக் கண்டு சிக்ஷித்து சிறையிலடைத்து இனி திருந்தினனென்று நினைத்து அபிஷேகத்திற்கு நாள் வைத்து அழைக்கச் செய்தேயும் பலர் கண்டிருக்கும்போதே பழைய வாஸனையாலே ராஜகுமாரன் நீசரான சேடிகளை ஆதரத்துடன் காண்பது உலகில் ப்ரஸித்தமாகலாம். அதுபோல் விரக்தரர்களுக்கும் தங்கள் परिग्रहங்களிடத்திலேயே காலம் தேசம் பாராமல் கலங்கி, துர்புத்தி ப்ரவ்ருத்தி யுண்டாகுமென்றபடி. கால் தாழப்பண்ணி—காலை மேலே எழும்பாதபடி செய்து. இப்படி எல்லோரிடமும் குறையாகில் யார் இதிலகப்படாதவர் என்னில்—முதலிலே ஸதாசார்ய ஸம்பந்தம் பெற்றது முதல் உபாயபூர்த்தி வரையிலுள்ள காலத்தில் இடையில் ஒருவித விக்னமுமின்றி எல்லாம் செய்து முடிக்க பாக்யமுள்ளவர் சிலரே என்க, "विलम्बरहितमोक्षहेतुக்களான सुकृतविशेषங்கள்' என்கிற மேல்வாக்யத்தில் இதைக் காண்க. விலக்கு—தடை. வைராக்யமற்ற அற்பதேவதா பக்தர்கள் வரையிலான ஜநங்களோடு अध्यात्म வித்துக்களையும் ஒரு கோவையிலே கூட்டுவது உசிதமோ என்ன அருளிச்செய்கிறார் முப்பத்திரண்டு அடியான இதி. இதற்கு

முப்பத்திரண்டடியான துரவு தத்துவார் முன்னடியிலே விழுந்ததோடு (?முப்பதாமடியிலே விழுந்ததோடு வாசியில்லாதாப்போலே ஏதேனுமொரு பாவத்திலே अन्तरायமுண்டானலும் இவன் ஸம்ஸாரத்தைக் கடந்தானுகான்.

कर्मयोगादिகளில் ப்ரவ்ருத்தனுக்கு "नेहाभिक्रमनाशोऽस्ति" इत्यादिகளிற்படியே இட்ட படை கற்படையாய் என்றேனுமொரு நாள் फलसिद्धि யுண்டா

---

விழுந்தது என்கிற க்ரியையோடு அந்வயம். அவர்கள் முன்னடியில் விழுந்ததற்கும் முப்பதாமடியில் விழுந்ததற்கும் வாசியானது இல்லை; தாண்டினல் வரும் பலனைப் பெருமை என்பது துல்யமாயிருப்பதால். என்றதாம். துரவு—கிணறு. தத்துவார்—தாண்டுகிறவர்கள். இங்கே முப்பதாமடியிலே விழுந்ததோடு என்ற பாடமே பல கோசங்களில் காணப்படுகிறது. सारप्रकाशिकैயில் முப்பத்தோராம் அடியென்றே வ்யவஹரித்திருக்கின்றுர். सार-विवरिणिயில் 'முப்பத்திரண்டாமடியிலே விழுந்தாதாடு' என்றே கருதப் பெற்றுள்ளது. सारबोधिनीग्रन्थத்தில் முப்பத்தோராமடி என்று மூலப்பதிப்பு, உனரயில்) முப்பதாமடியில் என்றே உளது. உரைகளிலுள்ள இரண்டையும் விட்டு முப்பதாமடி என்ற ஸ்வதந்த்ர பாடமே வெகு பேர் கொண்டிருப்பதால் कैवल्यार्थ पञ्चाग्निविद्यै, ऐश्वर्यार्थमधुविद्यै இவற்றை முப்பத்தொன்று முப்பத்திரண்டு அடிகளோடு துல்யமாக வைத்து அவற்றில் ஸம்பந்தப்பட்டவர்களுக்கு வேறு உபாயம் வேண்டாமலே செய்த உபாயத்தைக் கொண்டே சிறிது தடுமாறி मोक्षप्राप्ति வருவதால், முப்பத்தியொன்று முப்பத்திரண்டு அடியில் விழுகிறவரும் அதற்குமேல் தாண்டுவதற்கு முயற்ச்சியின்றி இருந்தவிடத்திலிருந்தே கையால் கரையைப் பிடித்துக் கொள்ளலாமாகையால் முப்பது வரை விழுந்தவருக்கும் இவர்களுக்கும் சிறிது வாசியுண்டு என்று குறிப்பதற்காக முப்பதாமடி என்றதென்னலாம். வெற்றிபெற்றவர்க்கு வெகுமதி அளிப்பதில் கூட, முப்பத்தொன்று முப்பத்திரண்டில் விழுந்தவருக்கு முழு வெகுமதி இராவிடினும் விரைவில் அந்நிலை பெறுவாரென்று 2வது 3வது வகுப்பு வெகுமதி அளிக்கக்கூடுமென்பதும் காரணமாம். इति स्थितस्य गतिः. துரவு தத்துவதென்கிற த்ருஷ்டாந்தம் சரியன்று நடுவில் விழுந்தவிடத்திலிருந்து தாண்டினல் போதாது. முமுக்ஷுவாயிருப்பவன் நிவ்ருத்தி தர்மம் செய்து வருகிறவன் நடுவிலே நின்றுலும், நின்றவிடத்திலிருந்தே செய்வதால் அது போதுமென்கிற வாசியுண்டே என்ன அதை இசைந்து கருத்துரைக்கிருர் कर्मेति. கர்மயோகாதிகளாவன கர்மயோகம் ஜ்ஞானயோகம் பக்தியோகம் என்ற நிவ்ருத்திதர்மங்கள். नेहेति. इह—இந்த நிஷ்காமகர்மத்தில் अभिक्रमनाशः—தொடங்கி விடப்பட்ட பாகத்திற்குப் பலனில்லை யென்பது नास्ति—இல்லை. செய்ததை மறுபடியும் செய்யாமல் மேலே தொடரலாம், இட்டபடை--निवृत्तिधर्मத்தில் செய்யப்பட்ட சிறிய भागமும் கற்படை—கல்லால் கட்டிய भागத்திற்கு ஸமமாகும், அதற்கு மேலேயே கட்டலாமென்றபடி. இதனுல் செய்தது வீணுகாமையால்

மென்கிறவிதுவும் कल्पान्तर मन्वन्तर युगान्तर जन्मान्तरादिகளில் எதிலேயென்று தெரியாது. आनुकूल्यம் மிகவுமுண்டாயிருக்க वसिष्ठादिகளுக்கு विलम्बம் காணு நின்றோம். प्रातिकूल्यம் மிகவுமுண்டாயிருக்க वृत्रक्षत्रबन्धुप्रभृतिகளுக்குக் கடுக மோக்ஷமுண்டாகக் காணுநின்றோம். ஆதலால் विलम्बरहितमोक्षहेतுக்களான

---

கிணறு தத்துவதற்கு இது ஸமமாகாவிடினும் உடனே பலன் ஏற்படா தாகையால் தாமதத்திற்குப் போக்கில்லை என்றதாயிற்று. कल्पान्तरமாவது பிரமனின் இந்நாளுக்கு மேல் வரும் நாள். मन्वन्तर—இக்கல்பத்தினிடையி லேயே வருகிறமேல் मन्वन्तरம். मन्वन्तर என்கிறவிடத்தில் मन्वन्तरान्तर என்று பாடமிருக்கலாம் ஒவ்வொரு கல்பத்திலும் 14 மந்வந்த்ரமென்ற भागங்கள். 71 चतुर्युगம். ஒவ்வொரு भागத்திற்கும் மந்வந்தரமென்ற பெயராகையால் வேறு மந்வந்தரமென்கிற பொருளைச் சொல்ல मन्वन्तरान्तर என்ற பதம் வேண்டுமே. இனி मन्वादத்திற்கே ஒவ்வொரு மநுவம்சபரம்பரை.—மந்வ ந்தரகாலமென்கிற பொருளை लक्षणया கொண்டால் अन्तरபதம் அதிகம் வேண்டா. युगान्तरமாவது ஒரு மந்வந்தரத்திலேயே ஒரு யுகத்திற்கு மேல் யுகம். இந்த கல்ப்பாதி காலங்களில் முன்காலத்தைவிட பின் காலம் நெரு ங்கியதாகும். நெருங்கிய காலத்தை முன்னே கூறி. दूरकालத்தைப் பின்னே கூறாமல் மாற்றிக் கூறியது ஏன் எனில், யுகாந்தரமென்கிற நெருங்கிய காலமும் பலத்திற்காக விரைவுகிறவனுக்கு உண்மையில் வெகுதூரகாலமே என்று அறிவிக்கவாம். அதிகமாக ஆநுகூல்யமுடையவரை எம்பெருமான் அதிகமாக அநுக்ரஹிப்பானுகையால் கல்ப்பாந்தரமோ மந்வந்தரமோ என்று சங்கிக்கலாமோ என்ன அருளுகிறார் आनुकूल्यमिति. தற்காலத்திலுள்ள சாஸ்த்ரஜ்ஞான ஸதாசாராதிகளுக்கும் பூர்வஜன்ம கர்மபலன் வருவ தற்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லை. आनुकूल्यமாவது ஆக்ஞைப்படி நடக்கை वसिष्ठेति. நான்முகனின் மாநஸபுத்ரனாய் ஜ்ஞானபக்தி வைராக்ய ஆசார நிறைவாலே வஸிஷ்டரென்று பெயர் பெற்ற மஹானும் நிமியின் சாபத் திற்கு ஆளாகி தம் தேஹத்தைவிட்டு, பிரமனுடைய ஆஜ்ஞையினால் मित्रावरुण ருக்கு மகனாகி சாபம் தீர்ந்தவாறே மீண்டும் பந்தம் நீடிக்கும்படி வஸிஷ்ட ரானார். இது பெரும் விளம்பமல்லவா இதை यावदधिकारं अवस्थितिः என்கிற ஸூத்ரவுரையில் காண்க. காணுநின்றோம்—காண்கிறோம்—ப்ரமாண வசனத்தினின்று वृत्रासुरன் ஸ்ரீபாகவதத்தின்படி நன்கறிகிறோம். பூர்வ ஜந்மத்தில் பகவத்பக்தனாயிருந்தவன். பார்வதியின் சாபத்தாலே வ்ருத்ர னென்ற அஸுரப்ராஹ்மணனாகப் பிறந்து இந்த்ரனோடு போர் செய்யு மளவில் அவனுடைய வஜ்ராயுதத்திற்கு அகப்படாமற் போகவே வஜ்ர மெறிந்த இந்த்ரன் மீண்டும் வஜ்ரமெடுக்காமல் வெள்கி நிற்க, வ்ருத்திரன் அவனை வேண்டினான். 'நான் விரைவில் யித்தேஹத்தை முடித்துக் கொண்டு மோக்ஷமே போக வேண்டும் ஆகையால் விரைவில் வஜ்ராயுதத்

सुकृतविशेषங்கள் ஆர்பக்கலிலே கிடக்குமென்றும் தெரியாது. विलम्बहेतुவான் निग्रहத்துக்குத் காரணங்களான दुष्कर्मविशेषங்களும் ஆர்பக்கலிலே கிடக்குமென்றும் தெரியாது.

இப்படி அநிஷ்ட பரம்பரைக்கு மூலங்களான आज्ञातिलङ्घनங்களாலே வந்த भगवन्निग्रहविशेषமாகிற प्रधानविरोधिக்குச் செய்யும் பரிஹாரத்தை “तस्य च

---

தாலே, எதிர்க்கும் என்னை நீ வதைக்க வேண்டுமென்று வேண்டி அதுபடியே அஸுர சரீரத்தினின்றே மோக்ஷம் சென்றான். க்ஷத்ரபந்து வரலாறு(ப 18 ) கீழே கூறப்பெற்றது. பகவத்பக்தரில் ப்ரதானரான ப்ரஹ்ம-ருத்ர-வ்யாஸாதிகளுக்கு அதிகாரம் தீரும்வரையில் ஸம்ஸாரம் நீடிப்பதாயிருக்க அவர்கள்மூலம் உபதேசம் பெற்ற ஸாமாந்ய புருஷர்களுக்கும் சீக்கிரம் மோக்ஷம் தெரிவதால் விரைவில் மோக்ஷம் பெறுவிக்கவாம் ஸுக்ருத விசேஷம்வரையிலான ஆனுகூல்யம் இவர்களுக்கு முன்னமே இருந்தது ஊஹிக்கப்படும். தெரியாது இதி. புண்யபாபங்கள் மூலமான அத்ருஷ்டம் பகவானுடைய அனுக்ரஹ நிக்ரஹரூபமாகையால் அவை பக்வமாகும் காலங்களும் விசித்ரங்களாகையாலே நமக்கு ஊஹிக்க இயலாது; ஈச்வரன் ஒருவனே தெரிந்திருப்பான் என்றபடி. இப்படி விளம்பமிருந்தாலும் வேறு வழியினால் பலன் பெற இடமில்லையாகையாலே எப்போதாவது வந்தாற் போதுமென்கிற ஆஸ்தையினாலே மோக்ஷ விஷயத்திலே ப்ரவர்த்திக்கின்றனர். தடையிருந்தால் செய்த கர்மாவுக்குப் பலன் தாமதிக்குமென்பது எப் பலன் விஷயத்திலுமுண்டு. மோக்ஷோபாய விஷயத்திலும் அதே ந்யாயமென்று ஸூத்ரகாரரும் நிர்ணயித்தார். இப்படியிருக்க யமநியமாதி அஷ்டாங்கயோகம் விரைவில் கைக்கூடுவது எங்ஙனே. துஷ்கர்ம வசத்தாலே இந்த்ரிய ஜயாதிகளும் எளிதில் பெறவாகாமற் போமே என்ன—நிக்ரஹிக்கும் ஈச்வரனே அனுக்ரஹ வழியும் காண்பித்திருக்கிறானென்கிறார் இப்படி இத்யாதியால். வசீகார்ய பரம்பரையை இதி. யோகத்திலிழிகிறவன் எதை வசீகரிக்க வேண்டும்; எதைவிட எதை வசீகரிப்பதில் ச்ரமம் அதிகம் என்பதை इन्द्रियेभ्यः परा ह्यर्थाः என்கிற மந்த்ரங்கள் நிரூபிக்கின்றன. இந்த்ரியம், விஷயம், மனது, புத்தியென்னும் அத்யவஸாயம், ஜீவாத்மா, உடல், பரமாத்மா என்பவை வசீகரிக்கப்படவேண்டியவைகள். வசீகரிக்கவேண்டிய வழியையும் “यच्छेत् वाङ्” என்கிற மந்த்ரம் காண்பிக்கிறது. வெளியிந்த்ரியங்களை மனத்திலும் மனத்தை புத்தியிலும் புத்தியை ஜீவாத்மாவிலும் ஜீவாத்மாவை பரமாத்மாவிலும் அடக்க வேண்டுமென்கிறது. இந்த்ரியத்தை மனத்தில் அடக்குவதென்றால், மனத்தை ஜெயித்துவிட்டால் இந்த்ரியம் ஜெயிக்கப்பட்டதாகுமென்றபடி. அப்போது பரமாத்மாவை வசீகரித்தால்தானே இவ்வளவும் வசீகரிக்கப்படும். பக்தியோகத்தால் பரமாத்மாவை வசீகரிப்பதென்றால், பக்தியோகம் இந்த்ரிய ஜயத்தாலேயாவது. இந்த்ரிய ஜயம் ஈச்வர வசீகாரத்தாலாவது, ஈச்வர வசீகாரம் பக்தியோக

**वशीकरणं तच्छरणागतिरेव**'' என்று **कठवल्लि**யில் **वशीकार्यपरम्परै**யை வகுத்த இடத்திலே ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்தார். இவ்விரோதி**वर्ग**த்தையெல்லாம் ரஹஸ்ய த்ரயத்தில் விதிக்கிற அர்த்தங்களுடைய **व्यवच्छेदशक्ति**யாலும், நமஸ்ஸுக்களில் மகாரங்களில் ஷஷ்ட்டிகளாலும், **सर्वपापशब्द**த்தாலும் **अनुसन्धित्**து ஸம்ஸாரத்தில் அடிச்சூட்டாலே பேற்றுக்குறுப்பான வழிகளிலே **त्वरिक्क प्राप्तम्**.

**பொருளொன்றென நின்ற பூமகணாதனவனடி சேர்ந்து**
**அருளொன்றுமன்பனவன்கொளுபாயமமைந்தபயன்**

---

த்தாலாவதென்றபோது **चक्रकदोष**முண்டாம் என்ற சங்கையில். அவனை வசீகரிப்பது சரணாகதியினாலென்று ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்தார். இதை அவனே யருளினான். **"मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते"** என்றபடி.

ப்ராப்யமான ப்ரஹ்மத்தையும் ப்ராப்தாவான ஜீவனையும் போல் விரோதி பாகத்தையும் மந்த்ரத்தில் எந்த சொற்களில் அனுஸந்திப்பதென்பதை விளக்குகிறார் இவ்விரோதீதி. விதிக்கிற அர்த்தங்களாவன. காரணமும் காப்பவனும் நாராயணன்; அவன் எப்போதும் ஸ்ரீஸமேதன்; சேஷத்வம் ஜீவனுக்கு ஸ்வரூபம்; ஜீவன் ஜ்ஞாநாநந்த ஸ்வரூபன் பரதந்த்ரன்; உபாயம் சரணாகதி; ஈச்வரன் ஸர்வாந்தர்யாமி ஸர்வாதாரன் ஸர்வபலத்திற்கும் உபாயம்; அவனது அனுபவ கைங்கர்யமே முக்கிய பலன் என்பவை. இதிலிருந்து—நாராயணன் தவிர மற்றவிடத்தில் காரணத்வரக்ஷகத்வங்களில்லை; ஜீவாத்மா ஜடஸ்வருபமான தேஹமன்று; கைங்கர்யம் தவிர வேறு பலன் தகாது என்றெல்லாம் தெரியவரும். இது தான் **व्यवच्छेदशक्ति** என்றது. ஒன்றைச் சொன்னால் அதற்கு மாறான அம்சம் அதிலிருந்து விலக்கப்படுமே. ஷஷ்ட்டிகளாலும் இதி. இரண்டு மந்த்ரங்களில் உள்ள நம: பதத்தில் ம: என்பதில் ஷஷ்ட்டீ, நம: என்பதற்கு எனக்கு இல்லை என்பது பொருள், எல்லாம் எம்பெருமானுடையதாயிருக்க சிலவற்றில் எனக்கு என்று தன் ஸம்பந்தத்தைக் கொள்வது தவறு; ஆகையால் இந்த மமகாரமே விரோதி என்றபடி பேற்றுக்கு உறுப்பான =**पुरुषार्थ**த்திற்குக் காரணமான. ஸம்ஸாரத்தில் அடிச்சூட்டாலே **इति**. கோடையில் கொதித்த புழுதி மணல்களில் வைத்த காலில் உண்டான சூடுபோல் அஸஹ்யமான தீவ்ர ஸம்ஸார தாபத்ரயம்காரணமாக (அதை நீக்க) என்றபடி. இவ்வதிகாரத்தை அதிகரித்தவன் அநுஸந்திக்க வேண்டிய முறையைப் பாட்டால் வெளியிடுகிறார்—

பாசுரம் பொருள் இத்யாதி. பொருள் = ப்ராப்யமான வஸ்துவானது ஒன்று என = அற்ப அஸ்த்திரங்களான வேறு வஸ்துக்கள் போலன்றி அத்விதீயமாய்—வேறொன்றில்லையென்னும் படி உபயவிபூதிவிசிஷ்ட ஏகதத்துவமாய் நின்ற—ப்ரமாணங்களில் தேறி நின்றவனான, பூமகள் நாதன்—ச்ரிய:பதியென்ன, அவனடி—அவனுடைய திருவடிகளை சேர்ந்து—அடைந்து. அருள் ஒன்றும்—அவன் க்ருபைக்கே விஷயமாய், ப்ராப்தா எனப்படும் அன்பன்—

மருளொன்றியவினை வல்விலங்கென்றிவையைந்தறிவார்
இருளொன்றிலாவகையென்மனந்தேறவியம்பினரே. 11.

प्राप्यं ब्रह्म समस्तशेषि परमं प्राप्ताऽहमस्योचितः
प्राप्तिर्दायधनक्रमादिह मम प्राप्ता स्वतस्सूरिवत् ।
हन्तैनामतिवृत्तवान् अहमहम्मत्या विमत्याश्रयः
सेतुस्संप्रति शेषिदम्पतिभरन्यासस्तु मे शिष्यते ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे अर्थपञ्चकाधिकारश्चतुर्थः 4.
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

—o—o—

---

பக்தியுள்ள ஜீவனென்ன, அவன்கொள் உபாயம் — அந்த ஜீவனுல் ஸ்வீகரிக்கப்படும் உபாயமென்ன, அமைந்த பயன்-அதற்குத் தகுந்த பலனுன ப்ரஹ்ம ப்ராப்தியென்ன, மருள்ஒன்றிய—அஜ்ஞாநத்துடன் சேர்ந்த, வினை—கர்மங்களாகிற. வல்விலங்கு—திடமான விலங்காகிற ப்ராப்தி விரோதியென்ன. என்றிவை ஐந்து—பூமகள்நாதன், அன்பன், உபாயம், பயன, விலங்கு என்றிவை ஐந்துக்கும் என்று என்பதில் அந்வயம். இவ் அர்த்த பஞ்சகத்தை அறிந்த ஆசார்யர்கள் இருள் ஒன்று—இவ்வைந்தில் ஒவ்வொன்றையும் அறியாமையாகிற அநேகவித அஜ்ஞாநங்களில் ஒன்றுகூட இலாவகை-இல்லாதபடி—எல்லாம் தொலையும்படி. என் மனம் தேற = எனது மனமானது நிச்சய ஞானம் பெறுமாறு இயம்பினர் உபதேசித்தனர்.

இவ்வளவு தெளிந்தவன் பரந்யாஸம் செய்துகொள்ள விரைந்தானுகில் அப்போதே தெளிந்தவனுவானென்று ச்லோகத்தினுல் அறிவிக்கிறார். प्राप्यमिति। प्राप्यं—அடைய வேண்டிய வஸ்துவானது ब्रह्म—ப்ரஹ்மமெனப்படும் समस्तशेषि எல்லா வஸ்துவுக்கும் சேஷியாய் परमं—எவ்விதத்திலும் ஸர்வோத்க்ருஷ்டமான வஸ்து; प्राप्ता;-அதை அடைய வேண்டிய अहं = நான் अस्य उचितः—ஞாநாநந்தஸ்வருபத்வ-அபஹதபாப்மத்வாதி தர்மங்களாலே அவனுக்குத் தகுந்தவனே. इह—நான் அடையும் புருஷார்த்தங்களில் प्राप्तिः—ப்ரம்ம ப்ராப்தி என்கிற புருஷார்த்தமானது दायधनक्रमात्—பிதா பிரித்து வைத்திருக்கும் தனத்தின் கணக்கிலே मम—எனக்கு सूरिवत्—நித்ய ஸூரிகளுக்குப் போலே स्वतः प्राप्ता - ஸ்வபாவமாக ஏற்பட்டதாகும். हन्त – அந்தோ! अहं – நான், अहम्मत्या — தேஹாத்ம ப்ரமாதியால் विमत्याश्रयः—மமகாராதி விபரீத ஞானத்திற்குக் கொள்கலமாயிருந்து एनां - இந்த ப்ரஹ்ம ப்ராப்தியை अतिवृत्तवान् – இதுவரையில் பெறுதொழிந்தேனே, संप्रति—அதனைப் பெற விரும்பிய இந்நிலையில் मे – எனக்கு शेषिदम्पतिभरन्यासः – ஸ்வாமிகளான திவ்ய

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

## तत्त्वत्रयचिन्तनाधिकारः

### தத்த்வத்ரயசிந்தநாதிகாரம் 5.

—o—o—

प्रकृत्यात्मभ्रान्तिर्गलति चिदचिल्लक्षणधिया
तथा जीवेशैक्यप्रभृतिकलहस्तद्विभजनात् ।
अतो भोक्ता भोग्यं तदुभयनियन्तेति निगमैः
विभक्तं नस्तत्त्वत्रयमुपदिशन्त्यक्षतधियः ॥

---

தம்பதிகளிடத்தில் என்னுடைய பாரத்தை வைப்பதென்கிற सेतुस्तु – உபாயமே शिष्यते–செய்யப்படவேண்டியதாகவிருக்கிறது இனி என் அதிகாரத்தை நன்கு உணர்ந்து பக்திக்கு அங்கமாகவோ ஸ்வதந்த்ரமாகவோ அதைச் செய்ய வேண்டுமென்றபடி.

அர்த்த பஞ்சகாதிகாரம் முற்றிற்று. 4.

அர்த்தபஞ்சகத்திலேயே தத்துவத்ரயம் அடங்கியிருப்பதால் மீண்டும் தத்துவத்ரய விஷயகமான அதிகாரம் எதற்கு என்னுமைக்காக, தத்வத்ரயசிந்தநாதிகாரம் என்று பெயர் அருளினர். தாமே மேலே இப்படி நிர்தேசிப்பர். கீழே "ப்ராப்யஸ்ய ப்ரஹ்மண: என்கிற புராணவாக்யத்தின்படி அர்த்த பஞ்சகம் அறியப்படவேண்டுமாகில் 'भोक्ता भोग्यं प्रेरितारं च मत्वा' என்று வேதம் மூன்றைமட்டும் ஓதுகிறதும், முன்னோர்கள் स्वाधीनत्रिविधचेतनाचेतन என்று மூன்ருகப் பிரிப்பதில் ஆதரத்தைக் காண்பிக்கின்றதும் ஏன் என்கிற சங்கையை ச்லோகத்தினுல் பரிஹரிக்கிருர். ஜீவனுக்கு தேஹாத்ம ப்ராந்தியும் ஸ்வதந்த்ராத்ம ப்ராந்தியுமே ஸகல பாபங்களுக்கும் காரணமாகும். தேஹாத்மப்ராந்தியுள்ளவன் நரகாதிகள் வர ப்ரஸக்தியில்லை யென்று எத்தகைய பாபத்திலும் துணிவான். ஸ்வதந்த்ராத்ம ப்ராந்தியுள்ளவன் வேறு ஏதேனும் மோக்ஷம் நினைப்பானல்லது பகவதனுபவ கைங்கர்யங்களை மோக்ஷமாகக் கொள்ளான். இந்த ப்ராந்திகளை நிவர்த்திக்க மூன்று தத்துவங்கள் வெவ்வேறென்றது.

ச்லோகார்த்தமாவது चित् अचित् लक्षणधिया—சேதநம் அசேதநம் என்பவற்றின் தனித்தனியான–அஸாதாரணமான தர்மங்களைத் தெளிந்தால் प्रकृति आत्मभ्रान्तिः—தேஹம் இந்த்ரியம் ப்ராணன் என்ற அவஸ்த்தைகள் பெற்ற ப்ரக்ருதி யென்கிற அசேதநத்திலே வந்த ஆத்மா என்னும் ப்ராந்தியானது= தேஹமாத்மா இந்த்ரிய மாத்மா ப்ராணன் ஆத்மா என்றவாருன ப்ராந்தியானது गलति—ஒழியும். तथा—அப்படியே जीव ईश ऐक्यप्रभृतिकलहः—ஜீவனும் ஈச்வரனும் ஒன்று என்றும், ஈச்வரனில்லை என்றும் வரும் விவாதமானது तद्विभजनात्–ஈச்வரனை ஜீவனைவிட வேருகப் பிரித்ததனுல் गलति–ஒழியும். अतः—

ஸம்பந்தமும் **अर्थपञ्चक**முங்கூட ஆறு அர்த்தமறியவேண்டியிருக்க, இவற்றில் ஏகதேசமான தத்துவத்ரயத்தை முமுக்ஷுவுக்கு விசேஷித்து அறியவேணுமென்று ஆசார்யர்கள் உபதேசித்துப்போருகைக்கு அடியென் என்னில், அதுக்கடி **प्रकृत्यात्मभ्रम**மும் **स्वतन्त्रात्मभ्रम**மும் இதுக்கு **निदान**மான **अनीश्वरवादरुचि**யுமாகிற மஹாவிரோதிகளை முற்படக் கழிக்கப் **प्राप्त**மாகை.

---

ஆகையினால் = இந்த தத்துவத்ரயஜ்ஞானம் அவச்யமான ப்ரமநிவ்ருத்திகள் அநேகத்திற்கு காரணமாயிருப்பதால் **त्रिगमैः** = **भोक्ता भोग्यं प्रेरितारं च मत्वा, विद्याविद्ये ईशते यस्तु सोऽन्यः, क्षरं प्रधानं अमृताक्षरं हरः क्षरात्मानौ ईशते देव एकः. यः पृथिव्यां तिष्ठन्, य आत्मनि तिष्ठन्** என்கிற வேதங்களால் **भोक्ता** = கர்ம பலானுபவம் செய்யும் ஜீவன் **भोग्यं**–அனுபவத்திற்கு விஷயமான அசேதநம் **तदुभयनियन्ता** – அவ்விரண்டை **नियमि**க்கின்ற ஈச்வரன் **इति** என்று **विभक्त** – பிரித்து ஓதப்பட்ட **तत्त्वत्रयं** – மூன்று தத்த்வங்களையும் **अक्षतधियः** – அழியாத அறிவைப் பெற்ற பெரியோர் **नः** – நமக்கு **उपदिशन्ति** – உபதேசிக்கின்றனர்.

முதலில் மூன்று தத்துவங்களை யறிந்து தேஹாத்ம ப்ராந்த்யாதிகளை விட்டு, 'நரகாதிகள் உண்டு ஈச்வரன் உண்டு அவனுடைய ஆக்ஞையை மீறிய தால் இத்தகைய கொடிய ஸம்ஸாரமென்று தெளிந்தானாகில், 'நான் எப்படிப்பட்டவன்; எதை யடைந்தால் கேடு ஒழியும்' என்று நிர்வேத மூலமான சிந்தை பெறுவானாகில் அவனுக்கு அர்த்த பஞ்சகம் உபதேசிக்கப் பெறும். அர்த்தபஞ்சகம் வேதத்தில் ஓதப்படவில்லையே யென்னவேண்டா. **'येयं प्रेते विचिकित्सा मनुष्ये'** என்று நசிகேதஸ்ஸு மோக்ஷ ஸ்வரூபத்தைக் கேட்கிறான். **अन्यत्र धर्मात् अन्यत्राधर्मात्** என்று மோக்ஷோபாயத்தைக் கேட்கிறான். தாபத்ரயத்தில் அடிபட்ட ஜீவனுக்கு ப்ராப்திவிரோதி இருப்பது ஸர்வமதஸாதாரணமாகத் தெரிந்ததே. மதாந்தரத்தில் கொண்ட பலனும் உபாயங்களும் ப்ராப்திவிரோதியில் சேருமென்று விசதமாக அறியவேண்டியதுளது என்று கருத்து.

இவ்வவதாரிகையை தாமே காண்பித்துக்கொண்டு ச்லோகத்திற்கு அர்த்தம் அருள்கிறார் **ஸம்பந்தம்** இத்யாதியால். கூட = சேர. தத்துவத்ரய சிந்தனமாவது தார்க்கிக.சாங்கர.பாஸ்கராதி பக்ஷங்கள் போலன்றி அவற்றை உள்ளது உள்ளபடியே தெளிகை. அதற்காக இங்கே விரிவு. உபதேசித்துப் போருகை– உபதேசித்து வருகை. அடி—மூலகாரணம். அதற்கு அடி என்பதற்கு ப்ராப்தமாகை என்பதில் அந்வயம். **प्रकृत्यात्मेति**. உலகில் யாருக்கும் மூல ப்ரக்ருதியில் ஸ்வாத்மப்ராந்தி இராமற்போனாலும் தேஹேந்த்ரிய ப்ராணன்களிலொன்றில் இது நான் என்கிற ப்ராந்தியாமிது. **निदान**மாவது மூல காரணம். **अनीश्वरवादरुचि**யாவது—ஈச்வரனேயில்லை யென்பதில் அபிநிவேசம். இவ்வபிநிவேசம் ப்ரமத்திற்குக் காரணம் "**अभिनिवेशवशीकृतचेतसां बहुविदामपि संभवति भ्रमः**" என்றதே. இந்தச் சிந்தனம் தத்துவ ஜ்ஞானமாகிறபடியாலே ப்ரமத்தைக் கழிக்கவாம்; ருசியைக் கழிக்குமோ என்னில்.

*இத்தை நினைத்து* **भोक्तृभोग्यनियन्तृरूपத்**தாலே *சாஸ்த்ரங்களிலே தத்த்வ*

---

சாஸ்த்ர மூலமான தத்துவ ஜ்ஞானமானபடியால் அநீச்வரவாதிகளுக்கு சாஸ்த்ரம் சொல்லும் அநிஷ்டத்தை அறிந்தபோது அவ்வநிஷ்ட நிவ்ரு த்திக்காக இந்த ருசியைக் கழிப்பதாகும். முற்பட—இவற்றைக் கழிக்காத போது அர்த்த பஞ்சகத்தை யறிய ப்ரவிருத்தி வாராது. கழிக்க (ப்ராப்த மாகை)—கழிப்பது [உசிதமாகை.] கழிக்கை என்றும் பாடமிருக்கலாம். நியந்த்ரு ரூபத்தாலே=போக்தா போக்யம் நியந்தா என்ற ஆகாரங்களால். சேதநாசேதந என்னுமல் போக்தா போக்யமென்று வேதம் சொன்னது ப்ராக்ருத பதார்த்தங்களுக்கு போக்யத்வமும் ஜீவனுக்கு அவற்றின் போக்த் ருத்வமும் உண்மையில் இருப்பதாலே ஸம்ஸாரஸம்பந்தம் இது ஔபர்திக மாகையாலே கழிக்கப்படவேண்டும். பகவானை போக்யமாக்கி தான் போக்தாவாய் போகஸாம்யம் பெறவேண்டும். ஆகையால் ஜீவனுக்கு भोगादिகளைக் கொள்ளாமல் நிர்விகாரத்வஸ்தாபனம் செய்கிற ஸாங்க்யாதி பக்ஷம் வேதவிருத்தமென்று தெரிவித்தபடி. ச்வேதாச்வதரோபநிஷத்தில் 1-12-ல் போக்தேத்யாதி மூன்றும் பாதமாகும். கீழே ஈச்வரோபாஸ நாதிகளால் வரும் மோக்ஷபர்யந்தமான பலனை அழகாகச் சுருக்கி உப தேசித்து விட்டு இம் மந்த்ரம் ஓதப்படுகிறது. '**एतत् ज्ञेयं नित्यमेवाऽऽत्मसंस्थं नातः परं वेदितव्यं हि किञ्चित् । भोक्ता भोग्यं प्रेरितारं च मत्वा सर्वं प्रोक्तं त्रिविधं ब्रह्ममेतत्,**" இதற்கு வேதார்த்தஸங்க்ரஹவ்யாக்யாநாதிகளில் கூறியவாறு அர்த்தங்களைத் தெளிக. இங்குச் சுருக்குவம்—மத்வா என்பதற்கு ப்ரோக்தம் என்பதில் அந்வயம். போக்தா என்பதை போக்தாரம் என்று மாற்றி போக்தா வையும் போக்யத்தையும் ப்ரேரிதாவையும் ஆராய்ந்து என்னலாம். அல்லது போக்தா போக்யம் இரண்டும் ப்ரதமாந்தமாக, ப்ரேரிதாரம் என்பதையும் ப்ரதமாந்தமாக்கி இதி என்று சேர்த்து போக்தா, போக்யம், ப்ரேரிதா என்று நன்கு மநநம் செய்து என்னலாம் இவற்றை மநநம் செய்து ஸர்வம் ப்ரோக்தம்= என்னுல் முழுமையும் ப்ரவசனம் செய்யப்பட்டது. ப்ரும்மமானது ஏதத் த்ரிவிதம்= இப்படி மூன்று விதமாயிருக்கும். ஜகத் காரணத்வத்தைக் கொண்டு அறியும்போது ப்ரஹ்ம பதத்தாலே சிதசித்விசிஷ்டப்ரஹ்மத்தையே கொள்ள வேண்டியிருப்பதாலே அதில் விசேஷணாம்சம் இரண்டு, விசேஷ்யாம்சம் ஒன்று என்று மூன்று அம் சம் அடங்கியிருப்பதால் த்ரிவிதம் என்கிறது இவற்றில் விசேஷ்யமே ப்ரஹ்ம பதத்திற்கு முக்கியப் பொருள்; மூன்றுமல்ல. **षड्विधा शरणागतिः** என்றவிடத் தில் அங்கியான சரணுகதியையும் அங்கங்கள் ஐந்தையும் சேர்த்து ஷட்விதா என்பதுபோல் இது என்று கொள்க. இந்தத் தத்வத்ரயவிவேகமானது கணுதர் கூறிய ஸப்த பதார்த்தவிபாகம் போலாம். ஒன்றில் ஒன்று சேராது தனித்தனியே பிரிந்ததாகும். அர்த்தபஞ்சக விபாகமானது கௌதமர் கூறிய **प्रमाणप्रमेयादिषोडशपदार्थविभाग**ம் போலாகும், ஒன்றில் ஒன்று கலந்திருக்கும்.

விவேகம் பண்ணுகிறது. இவற்றில் வைத்துக்கொண்டு "अचेतना परार्था च

---

உதாரணம்: ப்ரமாணமே ப்ரமேயமாகலாம். ப்ரமேயமும் ப்ரமாணமாக லாம். மேலேகூறும் ஸம்சயாதிகள் இவற்றில் அடங்கியவையே. அதுபோல் ப்ராப்யமான ப்ரஹ்மமே ப்ராப்தியுபாயமுமாகலாம். निग्रहादिमुखமாய் प्राप्तिविरोधियுமாகலாம் உபாயவிரோதியுமாகலாம். ப்ராப்தாவான ஜீவனும் प्राप्तिविरोधियான ப்ரக்ருதியும் முக்தனுக்கு ப்ராப்யகோடியிலும் சேரலாம் ஆகையால் அங்கே ஒவ்வொன்றையும் தனித்தனி பிரிக்காமல் இங்கே இவ்வதிகாரத்திலேயே साधर्म्यवैधर्म्यங்களை (ஸாதர்ம்யமாவது — அநேகத்திற்குப் பொதுவான ஆகாரம், வைதர்ம்யமாவது சிலவற்றில் இராமல் சிலவற்றிற்குமட்டுமுள்ள ஆகாரம்) கொண்டு வெவ்வேறாகக் காட்டுவதற்காக விரிவாகச் சிந்தனை செய்கிறார் இது "साधर्म्यवैधर्म्याभ्यां तत्त्वज्ञानात् निःश्रेयसम्" என்று கணாதர் காட்டிய வழி. இதனால் எந்த அசேதனத்தையும்விட ஜீவன் விலக்ஷணனென்றும் இவ்விரண்டையும்விட ஈச்வரன் விலக்ஷணனென்றும் தெளியப்பெறும். இந்த साधर्म्यवैधर्म्यविवेचनததிற்கு விரிவு பரமதபங்கத்தில்.

விரித்து உரைக்க விரும்பி அசேதநத்தை மூன்றாகவும் சேதநத்தை மூன்றாகவும் பிரிக்கிறார், भोक्ता भोग्यं என்கிற வாக்யத்திலே बद्धரான भोक्ताக்களும் ஐச்வர்யமாம் भोग्यமும் முதலில் தோன்றும். இவ்விரண்டையும் भोक्ताவும் भोग्यமும் ஆகுகைக்காக ப்ரேரிப்பிக்கிறவன் வேறொருவனும் உண்டு என்பதற்காக प्रेरितारं च என்றது. இப்படி முதலில் மூன்று தத்துவங்கள் பிரிந்தே தோன்றினாலும் உண்மையை ஆராய்ந்தால் भोक्तृत्वமும் प्रेरितृत्वமும் जीवेश्वरர்கள் இருவருக்கும், भोग्यत्वம் மூன்றுக்கும் பொதுவாயிருப்பதால் भोक्तृ पदத்தாலே முதலில் जीवனை க்ரஹித்ததற்கு விரோத மிராதபடி निरुपाधिकभोक्ता என்று அர்த்தம் கொள்ளாமல் प्रेरिता என்பதற்கு सर्वप्रेरिता என்று பொருள் கொண்டு भोक्तृபதத்தாலே गोबलीवर्दन्यायத்தாலே அவனைவிட வேறான भोक्ताக்கள் எல்லோரையும், இவ்விரண்டு पदங்களால் சொல்லப்பட்ட आत्माக்களை விட்டு भोग्यत्वம் மாத்திரம் உள்ள ஸர்வத்தையும் भोग्यपदத்தாலும் கொள்ளுகிறபடியால் மூன்று வகையான चेतनाचेतनங்களெல்லாம் இந்த श्रुतिயில் விவக்ஷிதம் இதைக் குறிக்கவே 'இவற்றில் வைத்துக்கொண்டு' என்னப் போகிறார். ஈச்வரன் ஒருவனே யாகிலும் அவனுடைய ஸ்வரூப நிரூபக தர்மங்களிலே பிராட்டியும் சேர்ந்திருப்பதால் அவளுக்கும் ஜகதீச்வரத்வ முண்டாகையாலே ஈச்வர நிரூபணத்திலே பரவ்யூஹாதி நிரூபணம் போலே பிராட்டியின் நிரூபணமும் சேரும்.

கீழெடுத்த भोक्तृभोग्यनियन्तृश्रुतिயை யநுஸரித்து சேதந நிரூபணம் முதலில் செய்யவேண்டியிருந்தும், உலகில் அசேதநத்தின் க்ரஹணமே முதலில், பிறகே விலக்ஷண ஜீவஜ்ஞானம், பிறகு அதைவிட ஸூக்ஷ்மமான ப்ரமாத்மஜ்ஞானமென்கிற முறை யிருப்பதால் முதலில் அசேதநவிபாகம். "இவற்றில் வைத்துக்கொண்டு" என்பதற்கு சிதசிதீச்வர தத்வங்களில் அந்தர்

नित्या सततविक्रिया । त्रिगुणा कर्मिणां क्षेत्रं प्रकृतेरूपमुच्यते ॥", "अनादिर्भगवान् कालो नान्तोऽस्य द्विज विद्यते ।",' 'कलामुहूर्तादिमयश्च कालो न यद्विभूतेः परिणामहेतुः ।",

பூதமாக்கிக்கொண்டு என்று பொருள். இதற்கு. 'ஸ்வபாவம் சொல்லிற்று' 'ப்ரகாரம் விவேகிக்கப்பட்டது.' 'ஈச்வரஸ்வபாவம் உபதேசிக்கப்பட்டது' என்கிறவிடங்களில் அந்வயம். த்ரிகுணம். காலம். சுத்த ஸத்வத்ரவ்யம் என்ற மூன்று பிரிவுகள் அசேதனத்தில். இவற்றில் ஒன்றில் ஒன்று அடங்காது. மூலப்ரக்ருதியில் மஹதாதிகள் அடங்குவதுபோல் காலாதிகள் அடங்காவே.

**अचेतनेति.प्रकृतेः** ப்ரக்ருதியினுடைய **रूपं**-ஸ்வரூபமானது **अचेतना**-சைதந்ய மற்றதென்றும் **परार्थं च** – ஆத்மாவுக்கு உபகாரார்த்தமாக ஏற்பட்டதென் றும் **नित्या** – அழியாததென்றும். **सततविक्रिया** - ஸ்ருஷ்டி காலத்தில் விஷம மாகவும் ப்ரளயகாலத்தில் ஸமமாகவும். இப்படி எப்போதும் ஏதேனுமொரு மாறுதலை அடைந்தவண்ணமே யிருக்குமென்றும் **त्रिगुणा** - ஸத்வ ரஜஸ் தமோ குணங்களையுடையதென்றும் **कर्मिणां क्षेत्रं** - புண்ய பாபங்கள் செய்த ஜீவர்களுக்கு விளையுமிடமாய் சரீராதிரூபமாயிருக்குமென்றும் **उच्यते** சொல் லப்படுகிறது. இதில் அசேதநத்வாதிகள் இதற்கும் காலாதிகளுக்கும் பொது வான ஆகாரம். **सततविक्रियत्वादि**கள் இதற்கேயானவை.

இதற்கு இந்த விகாரங்கள் உண்டாவதற்கு காலம் ஸஹகாரிகாரண மாகையால் அடுத்தபடி கால த்ரவ்யத்தைக் கூறுகிறார். மூன்றாவதாக **शुद्ध सत्वत्**தைக் கூறுவர். இவ்வதிகாரத்தில் மேலே இரண்டாவதாக சுத்தஸத்வத்தைக் கூறியது இது த்ரிகுணம், அது ஏககுணம். இக்குணமே இல்லாதது காலம் என்று நிரூபணஸௌகர்யத்தைக் கொண்டாகும். **अनादिरिति. भगवान्** **भगवदात्मक**மான: பகவானை அந்தர்யாமியாகவுடைய காலः=காலத்ரவ்ய மானது அநாதि:=ஆரம்பமற்றது ஆகையாலேயே **द्विज** - உபநீதனே ! **अस्य**- இந்த காலத்திற்கு **अन्तः**—முடிவும் **न विद्यते** - இல்லை. சிலர் ப்ரக்ருதிக்கு மஹதாதிகள்போல் காலமும் ஒரு கார்யம் என்பர் ; வேறே சிலர் ப்ரக்ருதி பரிணாமமான **महदादि, सूर्यस्पन्दादि कालोपाधि**கள் தவிர காலமென்பது வேறில்லை யென்பர். இந்த விஷ்ணுபுராண வசனத்தாலே அப் பக்ஷங்கள் போம். ஆத் யந்தமற்றது, ப்ரக்ருதியைப் போன்றதென்று தெரிகின்றதே. காலம் செய்யும் கார்யமென்ன ? காலத்தினுடைய அதிகாரத்திற்கு அளவு உண்டா ? காலமும் பரமாத்மாவுமொன்றென்றாலென்ன ? இவ்வாக்யத்தில் **भगवा**னாகவே சொல்லப் பட்டிருக்கிறதே என்ற சங்கைகள் தீரும்படி சில வாக்யங்களை எடுக்கிறார். **कलेति**—காலத்தினுடைய மிக்க நுண்ணிய பிரிவு க்ஷணமென்று பெரும் பாலும் பணிப்பர். அமரத்தில் க்ஷணத்தில் முப்பதிலொரு பாகம் கலை என்றும், அதில் முப்பதில் ஒரு பாகம் **काष्ठै** என்றும். அதின் கீழ்ப்பிரிவுகளும் கூறப்பெற்றுள்ளன முஹூர்த்தமாவது இரண்டு நாழிகையென்பர். பன்னிரண்டு க்ஷணம் முஹூர்த்தம் என்றது அமரம். **आदि**பதத்தாலே **दिन.मास.संवत्सरादि**களைக் கொள்க. காலத்ரவ்யமானது **कलामुहूर्तादि**களான பல

"ज्ञानानन्दमया लोकाः।", "कालं स पचते तत्र न कालस्तत्र वै प्रभुः।" इत्यादिகளிலே

---

विभागங்களைக் கொண்டதாகும். இதில் காலத்ரவ்யம் கலை முஹூர்த்தமென்றுற்போன்ற எல்லா பரிணாமங்களையும் அடைகிறதென்பது ஒரு பக்ஷம் மிகவும் நுண்ணியதாய் கடைக்கோடியான ஒரேவிதமான பரிணாமமே எப்போதும் காலத்திற்கு; அவற்றைக் கூட்டும்போது कलामुहूर्तादिभेदம் தானே வருமென்பது பக்ஷாந்தரம். இந்தக் காலமானது यद्विभूतेः — எந்த பகவானுடைய விபூதியான வஸ்துக்களுடைய परिणामहेतुः न = பரிணாமங்களுக்குக் காரணமாகவில்லையோ என்றதாம். காலமானது ப்ரக்ருதியின் பரிணாமங்கள் எல்லாவற்றிற்கும் ஜீவனுடைய ஜ்ஞான ஸங்கோச விகாஸாதிதசைகளுக்கும் காரணமாயிருக்க அது விபூதி பரிணாமத்திற்குக் காரணமன்றென்று எவ்வாறு கூறலாமெனில்—இங்கே विभूति பதத்தினாலே அவனுக்கு அஸாதாரணமான திருமேனியையும் அதைப்போல் அவனுக்கேயான நித்யவிபூதியையும் கொள்வதாம். காலம் எங்கும் பரவியிருந்தாலும் காலத்திற்குத் தக்கபடி கார்யங்கள் உண்டாகிறதென்பது ப்ராக்ருத வஸ்துக்கள் மட்டிலே. நித்யவிபூதியிலுள்ள பரிணாமங்களெல்லாம் காலத்தை எதிர்பார்க்காமல் அவனுடைய ஸங்கல்ப்ப மாத்ரத்தாலே உண்டாகும். அதுபோல் அவனுடைய அப்ராக்ருத திருமேனிக்குச் சிறிதாகை, பெரிதாகை, குறுகுதல், நீளல் முதலான பரிணாமங்களும் காலத்தை அபேக்ஷிக்காமல் வருகின்றவையே என்றபடி. அந்த परिणामங்களுக்கு பகவான் காரணம், காலம் காரணமன்று என்றதால் பகவானைவிட காலம் வேறு என்றதாயிற்று. கலாமுஹூர்த்தாதி பரிணாமம் பெறும் காலமென்றதாலும் பரிணாமமே இல்லாத பகவானைவிட வேறென்று தேறும். ப்ரக்ருதி பரிணாமங்களுக்கெல்லாம் காரணமாய் நித்யவிபூதி பரிணாமங்களுக்குக் காரணமன்றியிருப்பதென்றதால் ப்ரக்ருதி-ப்ராக்ருதம் நித்யவிபூதி எல்லாவற்றினும் இது வேறு என்று ஸித்தித்தது. சைவ ஸித்தாந்தத்தில் போல மாயையினின்று காலம் உண்டாகிறதென்றாலும், அது உண்டாவதற்கு முன்னே ப்ரக்ருத்யாதி வஸ்து இருக்கிறதென்று வ்யவஹாரமிருப்பதால் காலமில்லாமல் அந்த வ்யவஹாரத்தை நிர்வஹிக்க முடியாததலால் காலத்ரவ்யம் வேறென்று இவ் வசனத்தால் ஸித்தமாகும் 'கலாமுஹூர்த்தாதி பரிணாமமின்றி மஹா காலம் ஒன்று உண்டு' என்கிற தார்க்கிக மதமும் அனுபவ விருத்தம்

மூன்றாவது அசேதநத்ரவ்யத்திற்குப் ப்ரமாணம் "ஜ்ஞாநாநந்தமயா லோகா:" இத்யாதிவசனம். இதர அசேதனங்கள் ஜடமாயிருப்பவை. அவை போலன்றி நித்யவிபூதியானது ஸ்வயம்ப்ரகாசமாகவிருப்பதால்ஜ்ஞாநமயமென்கிறது ஜ்ஞானமுடையதென்கிற அர்த்தமில்லை ; அசேதநமாயிற்றே. ஆகையாலேயே ஆனந்தமயமென்பதற்கும் எப்போதும் ஆனந்தமாயே யிருக்கிறதென்றே பொருள். நித்யவிபூதியில் காலமிருந்தும் கார்யகரமாகிறதில்லை யென்பதற்கு ப்ரமாணம் कालमिति முன்னெடுத்த

त्रिगुण-काल-शुद्धसत्त्वरूपங்களான त्रिविधाचेतनங்களுடைய ஸ்வபாவம்சொல்லிற்று.

"पुमान्न देवो न नरः", "नायं देवो न मर्त्यो वा", "क्षरस्सर्वाणि भूतानि कूटस्थोऽक्षर उच्यते" यद्वै पश्यन्ति सूरयः" इत्यादिகளாலே त्रिविध ஜீவர்களுடைய ப்ரகாரம்

---

வசனம். जापकोपाख्यानத்தில் பரப்ரஹ்மஸ்த்தானத்தை வர்ணிப்பது இது. तत्र—அந்த பரமபதத்திலும் सः—அந்த பகவான் कालं—காலத்தை पचते—பரிணமிக்கச் செய்கிறுன். ஆனால் तत्र - நித்யவிபூதி விஷயத்திலும் அதன் கார்யங்கள் விஷயத்திலும் காலமானது न प्रभुः - காரணமாவதில்லை. कालः संपच्यते तत्र என்று இப்போதைய प्रथमपादபாடம். ஆனாலும் उत्तरार्धத்தில் सः என்கிற பதம் உள்ளது. स कालस्य प्रभू राजन् सर्वस्यापि तथेश्वरः என்று उत्तरार्धமாம். स्वभाव மிதி. இம்மூன்று அசேதனங்களுக்கு இங்குச் சொல்லப்பட்ட தர்மங்களிலே சில ஸாதாரணங்களானாலும் அஸாதாரண தர்மமும் சொல்லப்பட்டது காண்க.

அசேதனத்தைப்போலே சேதனமும் மூன்றுவிதமென்கிறுர் पुमानिति. बद्धன் முக்தன் நித்யனென்கிற மூன்றிலே बद्धचेतनராவர் देवमनुष्य तिर्यक् स्थावरங்களான பௌதிக வஸ்துக்களென்று சார்வாகர் நினைப்பர். அவ்வாறின்றி देहातिरिक्तராய் தேஹமூலமான ஸுகதுக்கானுபவம் செய்பவர் बद्धரென்று முதல் வாக்யத்தால் அறிக மேலே இதற்கு अनुवादம். पुमान् என்பதற்கு ஜீவன் என்பது பொருள். बद्धரைவிட முக்தருக்கு இருக்கும் வாசியைச் சொல்லும் வாக்யம் क्षर இதி. सर्वाणि भूतानि—ஸர்வ ப்ராணிகளும் ஜனனமரணங்களுக்கு இடமாயிருப்பதால் क्षरः எனப்படுவர். இவர் बद्धசேதனர். कूटस्थः—ஜநநமரணுதிகளுக்கிடமில்லாத நிலையிலிருக்கும் जीवர்கள் अक्षर उच्यते அக்ஷரபதத்தால் சொல்லப்படுவர். कूटस्थः என்கிறவிடத்தில் कूटபதத்திற்கு மலையின்முடி என்பது பொருள். எவ்வளவு மழை பெய்தாலும் மலையின் முடி மாறுபடுவதில்லை; அதுபோன்றது என்றபடி. அல்லது कूट பதத்திற்கு கருமானிடமிருக்கும் பட்டறை என்கிற இரும்புக் கட்டியாகும். காய்ச்சின இரும்பை அதன்மேல் வைத்து அடிக்கும்போது காய்ச்சின இரும்பில் மட்டும் மாறுதல் ஏற்படும். பட்டறையில் மாறுதல் ஏதுமிராதென்றதாம். அன்றி, ஸ்ரீகீதா பாஷ்யத்தில் அருளிச் செய்தபடி பலவித யோனிகளில் பிறப்பதற்குப் பொதுவாய் அனேக ஸந்ததிக்குக் காரணமான மூலபுருஷன்போல் இருப்பவனென்றும் பொருளாம். அப்போதும் விகாரங்களுக்கு இடமாகாதவன் என்பதே கருதப்பெறும். நித்யஸூரிகளைச் சொல்லும் வசனம் यद्वै இதி. கீழே யோகிகளுக்கு கைவல்யஸ்த்தானத்தைக் கூறிவிட்டு =एकान्तिनः सदा ब्रह्मध्यायिनो योगिनो हि ये । तेषां तत् परमं स्थानं यद्वै पश्यन्ति सूरयः என்று பரப்ரஹ்மத்யானம் செய்யும் பரமைகாந்திகள் பெறும் ஸ்த்தானமானதே நித்யஸூரிகள் பார்த்த வண்ணமிருக்கும் ஸர்வோத்க்ருஷ்டமான ஸ்த்தானமென்றது. இங்கே மோக்ஷம் போகிறவர்களை योगि பதத்தால் கூறி அது ஸூரிகள் காணுமிடம் என்றதாலே முக்தராகப் போகும் யோகிகளைவிட ஸூரிகள் வேறென்று தெளியலாம். மேலும் இது "सदा पश्यन्ति सूरयः என்கிற ச்ருதியின்

விவேகிக்கப் பட்டது.

"सर्वज्ञस्सर्वदृक् सर्वशक्ति ज्ञान बलर्द्धिमान् । क्लम तन्द्री भय क्रोध कामादिभिरसंयुतः ॥"
इत्यादिகளாலே ஈச்வரஸ்வபாவம் उपदिष्टமாயிற்று.

---

அனுவாதம். வேத வாக்யத்தை இங்கு எடுப்பதில்லையாகையால் அதை இங்கு நேராக உதாஹரிக்கவில்லை. அங்கு सदा என்கிற பதத்திலுல் ஸூரிகள் அதை எப்போதும் கண்டுகொண்டிருக்கிறார்களென்று சொல்லப்பட்டது. ஸூரி பதத்தாலே முக்தர்களைக் கொண்டால் ஒவ்வொரு முக்தனும், தான் போனபிறகே காண்பானாய் அதற்குமுன் காணமாட்டானாகையாலே எப்போதும் காணும் ஸூரி ஒருவருமில்லையாம். ஒரு காலத்திலே ஒரு முக்தன் காண்கிறானாலும் ஒரு முக்தனும் காணாத காலம் ஒன்றில்லையாகையாலே அவ்வாறு கூறிற்றென்றால், स्वरसार्थ மன்று. कौषीतकिமுதலான ச்ருதிகளில் महिषीपरिजनद्वारपालकादिகளும் சாச்வதமாயிருப்பது ஓதப்பெற்றது. - ஆகையால் ஜீவர்களிலும் மூன்று வகை உண்டு.

प्रेरिता என்ற ஈச்வரனை மேலே நிரூபிக்கிறார் सर्वेति. இந்த ச்லோகத்தில் ஈச்வரனுக்கு ஜ்ஞாநத்தைச் சொல்ல மூன்று பதங்களிருக்கின்றன. புநருக்தி வாராதபடி =மீமிசை ச்சொல்லாகாதபடி பொருளை வேறுக்குக. सर्वज्ञः—सर्वश्चासौ ज्ञश्च என்று कर्मधारयम். सर्वशब्दத்திற்கு सर्वशरीरकன் என்பது பொருள். ज्ञः - சேதனன். ஜீவர்கள்சேதனராயிருந்தாலும் सर्वशरीरकராயிருந்து சேதனர்களாகமாட்டார்கள். இவன் ஸர்வசரீரகத்வம் பெறுமளவுக்கு வேண்டும் ज्ञानपरिपाकமுடையவன். सर्वदृक्-எல்லாவற்றையும் प्रत्यक्षமாகக் காண்கிறவன் மேலே ஸர்வ விஷயத்திலும் शक्ति ज्ञानं बलं समृद्धि எல்லாம் உடையவனென்றது. सर्वदृक् என்பதே போதுமாயிருக்க மீண்டும் सर्वविषयज्ञानம் என்பது என் என்னில், प्रत्यक्षज्ञानம் போல் अनुमित्यादिज्ञानமும் அவனுக்குண்டு என்பதற்காகவாம்; அல்லது. காருண்ய वात्सल्यादिसर्वविधप्रशस्त ज्ञानविशेषங்களும் உண்டென்றதாம். [उत्तरार्धम्]—क्लमம் - வாட்டம். तन्द्री - சோம்பல். भयம் - அச்சம். क्रोधம் - கோபம். कामம்—ஆசை இவை முதலான ஹேயகுணங்களுடன் சேராதவனென்றதாயிற்று. இதில் சொன்ன ईश्वरस्वभावம் பிராட்டிக்குமுண்டு. இதிற் கருதிய सर्वान्तर्यामित्वसर्वशक्तित्वங்கள் नित्यர்களுக்கில்லாமையாலும் अनन्याधीनसर्वज्ञत्वादिகளும் அங்கில்லாமையாலும் இந்த வாக்யம் नित्यसूरिसाधारणமாகாது.

ச்ருதியில் त्रिविधचेतनाचेतनங்கள் विवक्षितங்களென்னலாகுமோ. முதலில் बद्धராக இருப்பவரே பிறகு முக்தர்களாகிறபடியால் बद्धர் வேறு முக்தர் வேறென்கிற विभागம் கூடுமோ. प्रकृति काल-नित्यविभूतिகள் போலே ரூபரஸாதி குணங்களும் தர்மபூதஜ்ஞானமென்னும் த்ரவ்யமும் அசேதனங்களாயிருக்க மூன்றே அசேதனங்களென்றது பொருந்துமோ. அவை இருந்தாலும் அவற்றின் விவேசனம் அவ்சயமில்லையென்னில், प्रकृत्यात्मभ्रम स्वतन्त्रात्मभ्रम निवृत्तिக்கு कालनित्यविभूत्यादि நிருபணம் அவச்யமில்லை யாகையாலே तत्त्वत्रयचिन्तनத்தில் அவற்றையும் விடலாமே என்கிற சங்கைக்கு ஸமாதானமாக, தாம் செய்யும்

இவ் ईशेशितव्यரூபமான தத்த்வத்ரயம் நிற்கும் நிலையை स्वाधीनत्रिविधचेतनाचेतनस्वरूपस्थितिप्रवृत्तिभेदम् என்று சுருங்க அருளிச்செய்தார்.

त्रिविधचेतनரென்றது बद्धரையும் முக்தரையும் நித்யரையும். त्रिविधाचेतनமென்றது त्रिगुणद्रव्यத்தையும் காலத்தையும் சுத்தஸத்த்வமான द्रव्यத்தையும்.

ஸ்வரூபமென்றது स्वासाधारणधर्मத்தாலே நிரூபிதமான धर्मिயை. स्थिति யாவது இதினுடைய कालान्तरानुवृत्ति. இதுதான் நித்யவஸ்துக்களுக்கு நித்யையாயிருக்கும்; அநித்யவஸ்துக்களுக்கு ईश्वरसङ्कल्पத்துக்கு ஈடாக ஏறியும் சுருங்கியுமிருக்கும். இங்கு ப்ரவ்ருத்தியாவது—प्रवृत्तिनिवृत्तिरूपமான

---

विभागம் ஸம்ப்ரதாயத்திற்கிசைந்ததென்று காட்டுகிறார் இவ்விश இத்யாதியால். बद्धரையும் முக்தரையும் இதி. बद्धரே முக்தராகிறாரென்பது உண்மை ஆனாலும் எல்லோருமே नित्यमुक्तர் உண்மையில் बद्धரில்லையென்றும், बद्धரில் ஒருவரும் இதுவரையில் मुक्तராகவில்லையென்றும் விபரீதமதங்களை விலக்க இவ் विभागம் செய்தது. குணங்களும் தர்மபூதஜ்ஞானமும் தர்மிஸ்வரூப நிரூபணத்திலே அடக்கப்படுமாகையால் அவற்றைத் தனியாகப் பிரிக்க வில்லையென்று கருத்து. मेघनादारि என்பவர் त्रिविधचेतनाचेतन என்றவிடத்தில் சேதனரே त्रिविधர். அசேதனங்கள் लीलाविभूति नित्यविभूति என்ற இரண்டேயாகும். காலம் என்கிற தனி அசேதந வஸ்து இல்லை என்கிறார், சிலர் नित्यविभूति யை விட்டுவிட்டு व्यक्तமென்ற महदादिகளைத் தனியாகக் கொண்டு வ்யக்தம் அவ்யக்தம் காலம் என அசேதனம் மூன்றுவித மென்கிறார்கள். आत्मसिद्धिயில் "प्रकृति·पुरुष·काल·व्यक्त·मुक्ताः यदिच्छां अनुविदधति नित्यं नित्यसिद्धैरनेकैः" என்கிற पूर्वार्धத்தில் இவ் विभागம் தோன்றும். ஆயினும் காலத்ரவ்யம் தனியாக இருப்பதாலும் நித்யவிபூதி தனி த்ரவ்யமாக ஸம்ப்ரதாயத்தில் எல்லோருமிசைந்திருப்பதாலும் வ்யக்தமான மஹதாதிகள் அவ்யக்தத்தைக் காட்டிலும் வேறாகாமையாலும் கீழ்க்கூறியபடியே அசேதனம் மூன்றாகுமென்ற கருத்தாலே त्रिविधचेतनம் என்றது இத்யாதி.

स्वरूपம் என்பதற்கு தர்மத்தைவிட்டு வ்யக்தி மாத்ரம் பொருளென்று நினைப்பர். அதை மாற்ற स्वासाधारणधर्मத்தாலே இத்யாதி. நித்யவஸ்துக்களுக்கு உற்பத்தியைச் சொல்லவாகாதானபடியாலே स्वरूपस्थिति என்று स्थिति மாத்ரம் சொல்லப்பட்டது. उत्पत्तिயாவது அவஸ்த்தாவிசேஷமாகையாலே ஸ்வரூபபதத்தாலே க்ரஹிக்கப்பட்டதுமாம். स्थितिயாவது उत्तरकालसंबन्धம். அநாதியான வஸ்துவுக்கு எந்த கால ஸம்பந்தமும் உத்தரகால ஸம்பந்தமே யாகிறபடியால் எந்த கால ஸம்பந்தமும் விடப்படமாட்டாது. அசேதனத்திற் சேர்ந்த காலத்ரவ்யத்திற்கு ஸ்த்திதியாவது என்ன; அதற்கு காலஸம்பந்தம் கூறவொண்ணாதே என்னில். இங்கே ஸ்வபர நிர்வாஹக समाधिயைக் கொள்க. अनित्यवस्तुக்களுக்கு = பரிமிதகாலம் மட்டும் இருக்கும் வஸ்துக்களுக்கு प्रवृत्तिनिवृत्तिरूपமான இதி. प्रवृत्ति என்பதற்கு प्रयत्नம் என்று பொருள் கொண்டால் அசேதனத்திற்குச் சேராது. ஆகையால் பொதுவாக வ்யாபாரம் அர்த்

வ்யாபாரம். இவையெல்லாம் வஸ்துக்கள் தோறும் प्रमाणप्रतिनियतமாயிருக்கும். ப்ரமாணங்கள் வஸ்துக்களைக் காட்டும்போது அவ்வோ வஸ்துக்களின் ஸ்வரூபத்தையும் स्वरूपनिरूपकधर्मங்களையும் निरूपितस्वरूपविशेषणங்களையும் வ்யாபாரங்களையும் காட்டும். அதில் ஸ்வரூபத்தை स्वरूपनिरूपकधर्मங்களாலே விசிஷ்டமாகவே காட்டும். அந்த ஸ்வரூபத்தைச் சொல்லும்போது அவ்வோ தர்மங்களை யிட்டல்லது சொல்லவொண்ணாது அவற்றைக் கழித்துப் பார்க்கில் शशविषाणतुल्यமாம்.

---

தம். அசேதநத்திற்கு ஸ்ருஷ்டி வ்யாபாரம் प्रवृत्तिव्यापारமாகும், ப்ரளயத்திற்கான வ்யாபாரம் நிவ்ருத்திவ்யாபாரமாகும். அல்லது—அசேதனத்தில் ப்ரவ்ருத்தியிற் சேராத நிவ்ருத்தியில்லை; எல்லாம் चलनात्मकव्यापारமே. चेतनனுக்கு प्रवृत्तिயைப்போல் நிவ்ருத்தியுமுளதே; அதற்கும் ईश्वराधीनत्वம் சொல்லவேண்டுமே' என்னில், मितगत्याधिकारத்தில் மொழிந்தபடி அதுவும் अकरणसंकल्परூபமாகையால் வியாபாரமாய் प्रवृत्तिயில் சேருமென்று இதன் கருத்தாம்.

தர்மிகளைப் போல் தர்மங்களும் ப்ராமாணிகங்களாகையாலே மறுக்கலாகாது என்கிறார் இவை இத்யாதியால். அந்த தர்மங்கள் சில ஸாதாரணங்களும் (பொதுவாகவும்) சில அஸாதாரணங்களுமாகும். சிலர் முதலில் வரும் நிர்விகல்பக ப்ரத்யக்ஷம் வ்யக்தியை மட்டும் காட்டும்; தர்மங்கள் பின்னால் ஸவிகல்பக விஷயங்களென்பர். அது தவறு. தர்மியில் போலே தர்மங்களிலும் இந்த்ரிய ஸம்பந்தமிருக்கும்போது ஸாதாரண தர்மங்களோ அஸாதாரண தர்மங்களோ இந்த்ரியத்துக்கு யோக்யங்களானவை யெல்லாம் தர்மியோடு கூடவே காட்டப்படும். அத் தர்மங்களில் எது ஸ்வரூபநிரூபக தர்மம், எது நிரூபித ஸ்வரூப விசேஷணமென்று ஆராய்ந்து கொள்ள வேண்டும். ஸ்வரூபநிரூபக தர்மங்களை விட்டு आपातமாக ஸ்வரூபம் காணப்பட்டால் அது சரியான ஸ்வரூபஜ்ஞானமாகாது, ஓடும் குதிரையை குதிரையின் வடிவை விட்டு நிறத்தோடு மட்டும் கண்டால் அதை அச்வ ஸ்வரூப ஜ்ஞானமென்று கொள்ளலாகுமோ என்க. தர்மங்களாலே விசிஷ்டமாக= தர்மவிசிஷ்டமாக என்றபடி.

ப்ரத்யக்ஷம் தர்மத்தோடு தர்மியை காட்டுமானாலும் சப்தப்ரமாணத்தில் அந்த நிர்பந்தமுண்டோ என்ன அருளிச்செய்கிறார் அந்த இத்யாதியால், ஒவ்வொரு சொல்லும் ப்ரவ்ருத்தி நிமித்தமான தர்மத்துடனேயே தர்மியைச் சொல்லுவதால் தர்மிமாத்ரம் எதற்கும் பொருளாகாது அத்வைதிகள் தத்த்வமஸி என்கிற விடத்தில் தத் த்வம் என்கிற இரண்டு சொற்களும் ஸர்வஜ்ஞத்வாதி धर्मங்களையும் அஜ்ஞத்வாதி தர்மங்களையும் விட்டு शुद्धात्माவை லக்ஷணையால் சொல்லுகின்றன என்பர். உண்மையில் அந்த தர்மங்கள் இல்லையாகில் அப்படிப்பட்ட ஆத்மா சசவிஷாணமே. அவை இருந்தாலும் அவற்றைச் சொல்லாமல் धर्मिயை மட்டும் சொல்லுவதென்னில், அது शशविषाणतुल्यம். முயற்கொம்பு போலாம். ஜ்ஞானத்திற்கு விஷயமாகாது. விரோதி தர்மத்தை

ஆகையால் ஜீவஸ்வரூபத்தை **ज्ञानत्वम्, आनन्दत्वम्, अमलत्वम्, अणुत्वम् इत्यादि**களான **निरूपकधर्म**ங்களை யிட்டு நிருபித்து **ज्ञानम्, आनन्दम्, अमलम्, अणु** என்று இம்முகங்களாலே சொல்லக் கடவது.

---

க்ரஹிக்காதபோது **धर्मिज्ञानं मिथ्याज्ञान बाधक**மாகாதாகையாலும் **सविशेषधर्मि**யே **तत्त्वमसि**க்கு அர்த்தமாக வேண்டும். எங்குமே சப்தத்திற்கு தர்மி மட்டும் பொருளாகாது. **संज्ञाशब्द**ங்களிலும் அர்த்தஜ்ஞானத்தில் ஸம்ஜ்ஞையை விசேஷணமாகக் கொண்டனர். ஸ்வரூப நிருபகதர்மமாவது—உத்திஷ்டமான வஸ்துவை மற்றவற்றைவிட வேருக எந்த தர்மம் அறிவிக்கிறதோ அதுவாகும். இப்படி அறியப்பட்ட வஸ்துவுக்குள்ள இதர விசேஷங்கள் நிருபிதஸ்வரூப விசேஷணங்களாகும். ப்ரத்யக்ஷ ப்ரமாணம் வஸ்துவை ஸ்வரூபநிருபக தர்மத்தோடு சேர்த்துக் காட்டுமானுலும் சப்தாதி ப்ரமாணத்திற்கு அந்த நியமமில்லை. ஸாதாரணமோ அஸாதாரணமோ ஏதேனும் ஒரு தர்மமின்றி வஸ்து சப்தத்திஞலும் சொல்லப்படாதென்று சொல்லியாயிற்று.

கீழ்உதாஹரித்த **स्वाधीने**த்யாதிவாக்யத்தில் சொன்ன வஸ்துக்களின் ஸ்வரூப-ஸ்திதி-ப்ரவ்ருத்திகளை விவரிக்கப் போகிறவராய் அதற்கு சேஷமாக **स्वरूप**-சப்தார்த்தத்தை நிருபித்தார். இனி க்ரமமாக, பொதுவாக சேதனர்க்குள்ள **स्वरूपादि**களையும் அசேதநங்களுக்குள்ள **स्वरूपादि**களையும் அவற்றின் மூன்று உட்பிரிவுகளின்படி அததன் ஸ்வரூபாதிகளையும் சொல்லத் தொடங்கி முதலில் சேதனருக்குப் பொதுவான ஸ்வரூபத்தைக் கூறுகிறார் **ஆகையால் जीवस्वरूपத்தை** இத்யாதியால். தேஹாதிரிக்த ஜீவன் ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தால் அறியப்படமாட்டாஞகையாலே சப்தத்தைக்கொண்டே அறிய வேண்டும். அந்த ஸ்வரூப நிருபகதர்மம் எது, அத்துடன் தர்மியைச் சொல்லும் சொல் யாது என்ன, விரித்துரைக்கிறுர் **ज्ञानत्वं** இத்யாதியால். **ज्ञानत्व**மாவது **ज्ञानाश्रयत्वम् ज्ञानस्वरूपत्वम्** என இரண்டுமாகலாம். இப்படியே **आनन्दत्व**முமாம். **ज्ञानाश्रयत्व**த்தைவிட **ज्ञानस्वरूपत्वं लघु**வாகலாம். ஆனல் அப்ராக்ருதமாய் அசேதநமான அணுவுக்கு அணுத்வம் ஞாநத்வ மெல்லாமிருக்கும். ஜ்ஞாநாச்ரயத்வமே யில்லை. **अमलत्व**மாவது **अपहतपाप्मत्वादि** தர்மம். **अणुत्वम्-अणुपरिमाण**முடையவனுகை. இந்த தர்மங்கள் எல்லாவற்றையும் ஒரே சப்தத்தால் சொல்லமுடியாதாகையால் தனித் தனி சப்தங்களை ப்ரயோகிக்க வேண்டுமென்றறிவிக்கிறுர் **ज्ञानम् इत्यादि**யால். இந்த ஜ்ஞாநத்வாதிகள் ஈச்வரனுக்கும் ஸாதாரணமாயிருப்பதால் ஜீவாஸாதாரண தர்ம மாகா. ஜீவஸ்வரூப மாத்ர நிருபகதர்ம மாகா. அணுத்வமும் பூமி முதலான பரமாணுக்கும் உண்டாகையாலே அஸாதாரணமாகாது அதனுல் ஜ்ஞானத்வாதிகளில் ஏதேனுமொன்றையும் அணுத்வத்தையும் சேர்த்தால் அப்போது **जीवमात्रनिरूपकधर्म**மாகும். இந்த **ज्ञानत्व आनन्दत्व चेतनत्व अणुत्वादि**கள் ப்ரணவத்தில் மகாரத்தாலே அறிவிக்கப்பட்டவை அதற்கு முன்னே அகாரத்திற்குமேலான **लुप्तचतुर्थी**யாலே **भगवच्छेषत्वम्** சொல்லுகிறபடியால் அதை ஏன் ஸ்வரூப நிருபக தர்மமாகச் சொல்லவில்லையென்ன, அருளிச்

இஜ் ஜீவதத்த்வம் ஸர்வேச்வரனுக்குச் சேஷமாயே யிருக்குமென்றும் அவனுக்கே निरुपाधिकशेषமென்றும் अयोगान्ययोगव्यवच्छेदங்களாலே प्रथमपदத்தில் தோற்றின சேஷத்வம் सम्बन्धरूपமாகையாலே सम्बन्धिस्वरूपம் निरूपितமானாலல்லது அறியவொண்ணாமையாலே ஜீவனுக்கு இது निरूपितस्वरूपविशेषण.

---

செய்கிறார் इज्जीवतत्त्वमित्यादि. சேஷத்வம் அசேதனத்திற்கு முண்டாகையாலே असाधारणமாகாதென்னில், சேதநத்வத்தையும்கூடச் சேர்ப்போம் ஆக शेषत्वविशिष्टचेतनत्वं असाधारण धर्मமாகும். चेतनत्व स्थानத்தில் ज्ञानस्वरूपत्वம் சேர்க்கலாகாது. தர்மபூதஜ்ஞானத்திற்கும் அது ஸாதாரணமாகுமே. अणुत्वமும்போதாது. भौतिक பரமாணுவுக்கும் அது பொதுவானதாகுமே. ஆகையால் शेषत्वे सति चेतनत्वम् ஸ்வரூப நிரூபகமாகலாம். ஆனால் ஈச்வரனும் தன் இச்சையினாலே ஜீவனுக்கு சேஷமாகிறபடியால் அது அஸாதாரணமாகாது. ஆகையால் स्वतश्शेषत्वे सति என்று பரிஷ்கரிக்க வேண்டும். அதாவது निरुपाधिकशेषत्वம். ஈச்வரன் अवतारादिகளில் சில காரணத்தைக் கொண்டே शेषமாகிறபடியால் निरुपाधिकशेषत्वம் இல்லையாம். चतुर्थ्यन्तமான अकारத்தாலே भगवच्छेषत्वे सति என்றே சொல்லுகிறபடியால் அது भगवानுக்கு साधारण மாகாதேயென்னில் नरनारायण-रामलक्ष्मणादि அநேக மூர்த்திகளைக் கொண்டபோது அவனுக்கே அவன் சேஷமாகை வரலாம். உண்மையில் ஸ்வரூப நிரூபக தர்மத்தில் भगवच्छेषत्वமென்னாமல் சேஷத்வம் மட்டுமே லக்ஷணத்தில் சேர்த்திருப்பதென்க. அந்த சேஷத்வத்திற்கு निरुपाधिकत्वம் கிடைக்க சப்தமில்லையே என்னில், अयोगव्य-वच्छेदத்தாலே கிடைக்கும். அதாவது சதுர்த்தியினால் சேஷத்வம் மட்டும் சொல்லப்பட்டதே யல்லது, 'औपाधिकம் = இந்த காரணத்தாலே சேஷத்வம்' என்று उपाधिக்குக் குறிப்பு இல்லை. உண்டாகில் ஒரு ஸமயம் சேஷத்வமும் மற்றொரு ஸமயத்தில் சேஷத்வாயோகமும் = அஃதிராமையுமாம். அதில்லையாகையாலே எப்போதுமே சேஷத்வமுளதென்று शेषत्वायोगம் நீக்கப்படுகிறபடியால் शेषत्वायोगव्यवच्छेदம் ஏற்படுகிறது. இதை 'निरुपाधिकशेषம்' 'अयोग-व्यवच्छेदம்' என்ற பதங்களால் குறித்தார். இதை நாலு வாக்யத்திற்குமேலே 'ப்ரதமாக்ஷரத்தில் சதுர்த்தியில்' என்கிற வாக்யத்தாலே விவரிப்பர் இனி, अयोगव्यवच्छेद லாபத்திற்கு இப் பிரயாசை ஏன்? அகாரத்திற்குமேலுள்ள உகாரம் ஏவகாரார்த்த மாகையாலே अयोगव्यवच्छेदம் கிடைக்கலாமே என்ன, உகாரமானது அவனுக்கே சேஷமென்றறிவிப்பதால் अन्ययोगव्यवच्छेदத்தையே கூறும். அதாவது அந்த சேஷத்வம் எம்பெருமான் தவிர வேறொன்றோடு योगம்—ஸம்பந்தம் உள்ளதன்றென்றே யறிவிக்குமென்பதற்காக அவனுக்கே என்றும் अन्ययोगव्यवच्छेदம் என்றும் பதங்களைச் சேர்த்தது. இவ்வளவால் स्वतश्शेषत्वे सति चेतनत्वம் असाधारणनिरूपकधर्मமாகலாமென்றதாயிற்று. ஆனாலும் शेषशेषिभावம் என்பது ஸம்பந்தமாகையால், ஸம்பந்தமென்பது எதோடு எதற்கோ அவ்விரண்டை அறியாதபோது அறியப்படாதாகையால் முன்னமே அறியப்பட்ட வஸ்துவுக்கு विशेषणமாகப் பின்னேயே அறியப்படு

மென்னலாம். अणुत्वे सति चेतनत्वம்போலே स्वतस्शेषत्वे सति चेतनत्वமும் ஜீவ லக்ஷணமாகவற்ருகையாலே இச்சேஷத்வம் ஜீவனுக்கு स्वरूपनिरूपकமென்னவு

---

கிறபடியால் நிரூபித ஸ்வரூப விசேஷணமே யாகுமென்கிற காரணத்தினுல் அதை ஸ்வரூப நிரூபகமென்று சொல்லவில்லை.

இனி லக்ஷணங்களெல்லாம் அஸாதாரண தர்மங்களாகையால் லக்ஷணம் इतरव्यावृत्तமாக = மற்றவற்றைவிட வேருக ஸ்வரூபத்தைக் காண்பிக்கிறபடியால் स्वरूपनिरूपकமாகலாமே யென்னில், ஆகுக, घटाभावமென்கிறவிடத்தில் घटமும் अभावமும் தனித்தனியே அறியப்பட்டு அதன்பிறகு प्रतियोग्यनुयोगि-भावसंबन्धம் அறியப்படுகிறதில்லை. घटप्रतियोगिकत्वविशिष्टமான अभावமென்று ஸம்பந்தத்தோடு சேர்ந்து अभावம் க்ரஹிக்கப்படுகிறது. அதுபோல் ப்ரணவம் முதலில் தோன்றிய अकारार्थनारायणशेषत्वத்தோடு மகாரார்த்தமான சேதனனை அறிவிக்கிறபடியால் இப் ப்ரணவத்தால் जीवன் இந்த स्वरूपनिरूपकधर्मத்துடன் அறிவிக்கப்படலாம். அதனுலேயே ஜீவனை देहातिरिक्तत्व.ज्ञानस्वरूपत्वादिகளைவிட சேஷத்வத்துடனே அறிவது ச்ரேஷ்டமென்பர். இங்கே "वपुरादिषु" என்கிற ஆளவந்தார் श्लोकத்தை நினைப்பது."

இப்படி முமுக்ஷு வானவன் जीवனை க்ரஹிக்கும் போது சேஷத்வவிசிஷ்டமாக க்ரஹிப்பது உசிதமானுலும் கைவல்யத்தில் சேஷத்வமென்கிற அம்சம் அனுபவிக்கப்படுகிறதில்லை யாகையால் அதற்குமாகப் பொதுவாக ஜீவஸ்வரூபத்தை ஸ்வரூபகநிரூபகதர்மங்களோடு योगबलத்தாலே காண்கிற போது ज्ञानत्व आनन्दत्वादिகளே காணவாகும். அதனுலும் சேஷத்வத்தை முதலில் சொல்லவில்லை. லக்ஷணமாகச் சொல்லும் போது அணுத்வத்தோடு ज्ञानत्व आनन्दत्वादिகளில் ஏதேனுமொருதர்மம் போதுமானுலும் ப்ரத்யக்ஷத்தினுலே மாட்டைக்காணும் போது அதற்குள்ள முக்கோணமுகம், सास्ना என்கிற கழுத்துச்சதை தொங்கல், வால்கொத்து முதலான பல ஸ்வரூப நிரூபகதர்மங்களோடே மாடு க்ரஹிக்கப்படுவது போல் ப்ரஹ்மத்தை योगबलத்தாலே காணும் போது सत्यत्वज्ञानत्वादिகளான எல்லா தர்மங்களோடு க்ரஹிப்பது உசிதமென்று सर्वधर्मங்களோடு சிந்தனை செய்வது இசையப் பெற்றிருக்கிறது. அதுபோல் जीवस्वरूपமும் विनिगमनाविरहத்தாலே = ஒரு தர்மத்தைக் கொள்வது, மற்றதை விடுவதென்பதற்குக் காரணமிராமையாலே, योगबलத்தாலே ज्ञानत्वादिसर्वधर्मங்களோடு க்ரஹிக்கப்படுவது தகுமென்று கருதி ज्ञानம் आनन्दம் अमलம் अणु என்று சேர்த்தருளினுர். லக்ஷணமாகக் கூறும் போது அவ்வளவு விசேஷணங்கள் வேண்டாமென்று अणुत्वे सति என்றவாறு இரண்டு இரண்டு தர்மங்களை மட்டும் அருளினுரென்க ஆகவற்ருகையாலே = ஆகக் கூடியதாகையாலே. शेषत्वे सति चेतनत्वமென்பது பிராட்டிக்கும் கூடுவதால் अतिव्याप्तिदोषம் என்னில், उभयशेषत्वे सति चेतनत्वமென்று கருத்துக் கொள்க.

மாம். இப்படி **विभुत्वे सति चेतनत्व**மும், **अनन्याधीनत्व निरुपाधिकशेषित्वादि**களும் ஈச்வர லக்ஷணங்கள். ஜீவேச்வரரூபமான ஆத்மவர்க்கத்துக்கெல்லாம் பொதுவான லக்ஷணம்-**चेतनत्व**மும் **प्रत्यक्त्व**மும். **चेतनत्व**மாவது-**ज्ञानाश्रय**மாகை. **प्रत्यक्त्व**மாவது-தனக்குத்தான் தோற்றுகை. அப்போது **धर्मभूतज्ञाननिरपेक्ष**மாக "நான்" என்று தோற்றும். இப்படி **चेतनत्वादि**கள் ஈச்வரனுக்கும் ஜீவனுக்கும் பொதுவாகையாலே அவனிற்காட்டில் **व्यावृत्ति** தோற்றுகைக்காக

---

**प्रसङ्गात् अणुत्वे सति** என்கிற **दल**த்திற்கு **प्रयोजन**த்தை யறிவிப்பதற்காக ஈச்வரலக்ஷணத்தையும் இங்கே கூறுகிறார் **विभुत्वे** இத்யாதியால் **विभुत्वं** மட்டுமாகில் **काल**த்தில் **अतिव्याप्ति।** **चेतनत्वं** மட்டுமாகில் **जीव**னிடத்தில் அதிவ்யாப்தி. **अनन्याधीनत्वं** தனி ஈச்வரலக்ஷணம். ராமாத்யவதாரத்தில் **दशरथादि**களுக்கு அதீனமாகாமலிருந்தாலும் அங்கு அதீனனென்கிற ப்ராந்தியே. **औपाधिकशेषित्व**ம் ஜீவாதிகளுக்கும் **दशरथादि**களுக்கு அவதாரத்திலுமிருப்பதால் **औपाधिक**மான அதை விலக்குவதற்காக **शेषित्व**த்திற்கு **निरुपाधिकत्वं** விசேஷணம். இதுபோல் **चेतनत्वं** மட்டும் ஜீவலக்ஷணமாகாவிட்டாலும் ப்ரத்யக்த்வம் ஜீவலக்ஷணமாகலாமே யென்கிற சங்கையில் அதுவும் பொது என்பதற்காக **जीवेश्वर** என்ற வாக்யம். இங்கே '**जीवेश्वररूप**மான **आत्मवर्ग**த்திற்கு' என்று **प्रयोगि**த்ததால் **जीवरूप**மான **आत्मवर्ग**ம் **ईश्वररूप**மான **आत्मवर्ग**ம் என்று அர்த்தமாகையால் **ईश्वर**னும் ஒரே **आत्मा**வன்று, பிராட்டியும் பெருமானும் என்கிற இரண்டு ஆத்மாக்களான வர்க்கத்திற்கு **ईश्वरत्व**ம் பொதுவென்றதாயிற்று. ப்ரத்யக்த்வம் பொதுவாகில் **चेतनत्व**மும் **प्रत्यक्त्व**மும் ஒரே தர்மமாகலாமே யென்ன வேறென்று நிரூபிக்கிறார் **चेतनत्व**மாவது இத்யாதியால், **प्रत्यगात्मा** என்பதற்கு ஜீவாத்மா என்பது பொருளல்ல தன்தன் **आत्मा**வை மட்டும் **स्वात्मा** என்று குறிப்பது போல் **प्रत्यगात्मा** என்கிறது. **स्व** என்ற சொல்லால் தன்னை க்ரஹிப்பது தோற்றும் அதை விவரிக்கிறார் **தனக்குத்தான் தோற்றுகை** என்று. தோற்றுமாகாரம் **நான்** என்பது. இங்கே **தான்** என்ற சொல்லுக்குக் கருத்தை வெளியிடுகிறார் **धर्मभूतज्ञाननिरपेक्ष**மாக என்று. ஆத்மாவும் இதர வஸ்துக்கள் போல் தர்மபூதஜ்ஞானத்தால் தான் க்ரஹிக்கப்படும். **इदम्** என்று வெளிவஸ்துவை க்ரஹிக்கும். **अह**மென்று தன்னை க்ரஹிக்கும் என்று இவ்வளவே **सेद्रम्** என்பர் **तार्किक**ர். நமது ஸித்தாந்தத்தில் தர்மபூதஜ்ஞானத்தாலே ஆத்மக்ரஹணமுண்டாகிலும் அது எப்போதும் உளதன்று. ஆத்மா ஜ்ஞாநஸ்வரூபமாகையால் தர்மபூதஜ்ஞானத்தை எதிர்பாராமலேயே தானே ப்ரகாசிக்கும். ஆகையால் **प्रत्यक्स्वरूप**மாவது **अहमिति व्यवहारानुगुणत्व**ம். **चेतनत्व**மாவது **ज्ञानाश्रयत्व**மென்றவாறு இரண்டுக்கும் வேறுபாடு காண்க. **चेतनलक्षण** நிரூபணத்தின் முடிவில் இதெல்லாம் விசதமாக விசாரிக்கப்படும்; இங்கே இவ்வளவு சொன்னது ஜீவலக்ஷணத்திலுள்ள சொற்களுக்கு ப்ரயோஜநம் தெளிவதற்காக என்று காட்டுகிறார் இப்படி இத்யாதியால். இங்கே **स्वतश्शेषत्व**த்தைக் குறிக்

ஜீவலக்ஷணத்தில் स्वतन्त्रशेषत्ववादிகள் சொல்லுகிறது. प्रथमाक्षरத்தில் चतुर्थियில் தோற்றின तादर्थ्यத்துக்கு उपाधियில்லாமையாலே ஸர்வரக்ஷகனை श्रियःपतिக்கு ஜீவாத்மா निरुपाधिकशेषமாயே யிருக்குமென்றிப்படி यावत्स्वरूपம் सम्बन्धம் சொல்லுகை अयोगव्यवच्छेदம். मध्यमाक्षरத்தில் अवधारणसामर्थ्यத்தாலே அவனுக்கே निरुपाधिकशेषम், வேறொருத்தருக்கு निरुपाधिकशेषமன்றென்கை अन्ययोगव्यवच्छेदம்.

---

கும்போது தாம் சொன்ன अयोग अन्ययोगव्यवच्छेदங்களை விவரிக்கிறார் प्रथमाक्षरத்தில் இதி.

चतुर्थ्यந்தமான அகாரத்தின்மேல் உகாரம் இருப்பதால் அவன் பொருட்டே ஜீவன் என்றே அதற்கு அர்த்தமாகையால் அவன் தவிர மற்றவருக்கு சேஷமாகான் என்கிற அந்யயோகவ்யவச்சேதமே கிடைக்கும். 'அவனுக்குச் சேஷனே ஜீவன்' என்று சேஷபதத்தின்மேல் ஏவகாரமிருந்தால், 'சேஷனேயாவான் ; சேஷமாகாமலிரான்' என்று அயோகவ்யவச்சேதம் கிடைக்கும். ஆக இந்த உகாரத்தால் अयोगव्यवच्छेदம் கிடைக்காது. ஆனாலும் சதுர்த்தியால் தெரிவிக்கப்பட்ட சேஷத்வத்திற்கு காலாவதி குறிக்கப்படவில்லையாகையாலே अयोगव्यवच्छेदம் ஸித்திக்கிறது. அதாவது निरुपाधिकत्वம். அதை உகாரார்த்தத்தில் சேர்த்தால் வேறொருவருக்கு निरुपाधिक சேஷன் ஆகான் என்று கிடைக்கும். அதைச் சேர்க்காமல் பொதுவாக அந்ய சேஷனல்லன் என்று சொல்லவொண்ணாது. பிதாமுதலானவருக்கும், சில ஸமயம் ராஜாதிகளுக்கும் தேவதாந்த்ரத்திற்கும் சேஷனாயிருப்பதால் சேஷத்வாபாவம் அந்வயிக்காதே. ஆக निरुपाधिक சேஷனல்லன் என்பதே சேரும். ஆக நிருபாதிகத்வ நிரூபணத்திற்கு ப்ரயோஜநமும் ஏற்பட்டது. राज्ञः पुरुषः என்கிறவிடத்தில் உபாதி குறிக்கப்படவில்லையானாலும் புருஷன் அரசனுக்கு निरुपाधिक சேஷன் ஆகான், எம்பெருமானுக்காகில் निरुपाधिक சேஷனாகிறான் என்கிற வாசி யறிந்தால் போதுமே;निरुपाधिकत्वத்தை விவக்ஷிப்பானேன்என்று சங்கிக்கவொண்ணாது. உண்மை நிலையை மந்த்ரம் உரைப்பது யுக்தமன்றோ. அத்துடன் निरुपाधिकत्वத்தைச் சேர்க்கவில்லையாகில் अन्ययोगव्यवच्छेदத்தை நிரூபிக்க முடியாதேயென்க. இவ்வளவால் பிறரைக் குறித்து निरुपाधिकசேஷத்வமில்லை என்று தானே கிடைக்கும், அதனால் भागवत निरुपाधिकசேஷத்வம் இல்லையென்று கிடைப்பதை மறுக்க வேண்டாவே, இப்படிभागवत விஷயத்தில் போல் தேவதாந்தர விஷயத்திலும் सोपाधिक சேஷத்வத்தை இதால் நீக்கியதாகாதே. பித்ராதிகளுக்குப் போல் தேவதாந்தரங்களுக்கும் सोपाधिक சேஷமாகலாமே என்று சங்கிக்க வேண்டா. भागवत சேஷத்வமென்பது பகவானைப்பற்றியுள்ள निरुपाधिकशेषत्वத்தின் வளர்ச்சியாகும். ஸ்வதந்த்ரமாக நினைக்கப்பட்ட இதரர்களைப்பற்றிய சேஷத்வம் அதன் வளர்ச்சியாகாது. ஆக அந்ய யோகவ்யவச்சேதம் என்றவிடத்தில் பகவானைப் போல ஸ்வதந்த்ரராக நினைக்கப்படும் அந்யரைக் கொள்வதாகில், சேஷத்வம் இன்னாரைக் குறித்துத் தகும், இன்னாரைக் குறித்துத் தகாது என்ற விவேகம் ப்ரமாண

இச்சேஷத்வம் भागवतशेषत्वपर्यन्तமாக வளரும்படி மேலே சொல்லக்கடவோம்.

இப்படியிருக்கிற சேதநருக்குப் ப்ரவ்ருத்தியாவது-पराधीनமுமாய் परार्थமுமான कर्तृत्वமும் भोक्तृत्वமும். ஈச்வரன் தன் भोक्तृत्वार्थமாக இவர்களுக்குக் कर्तृत्वभोक्तृत्वங்களை உண்டாக்குகையால் இவை परार्थங்கள்.

---

மூலமறியப்பட வேண்டியதாகும். இங்கே பிறர்க்கு निरुपाधिक சேஷனல்லன் என்றதாலே ஸோபாதிக சேஷமாகவேண்டு மென்றதில்லை. இது தகும் இது தகாதென்று சாஸ்த்ரத்தில் விதிப்பதும் கழிப்பதுமான சேஷத்வம் ஸோபாதிக சேஷத்வமே பகவான் இஷ்டப்பட்டதால் அவனுடைய ஆக்ஞையான சாஸ்த்ரத்தின்படி வரும் சேஷத்வம் அவனைப் பற்றிய சேஷத்வத்தின் வளர்ச்சியாகும்; அவ்வாறாகாத சேஷத்வம் அதற்கு மாறாகும். இதன் விரிவு புருஷார்த்த காஷ்டாதிகாரத்திலாம். ஆக निरुपाधिकत्व நிருபணமிங்கு அதைச் சேர்த்தே அந்யயோகவ்யவச்சேதத்தைச் சொல்லவேண்டியிருப்பதாலு மென்றதாயிற்று.

நித்யமான வஸ்துக்களுக்கு நித்யமாயிருக்கு மென்று முன்பு பொதுவாகச் சொன்ன ஸ்த்திதி இதற்குமுண்டு என்பது இங்கே இருக்கிற என்ற சொல்லால் அறிவிக்கப்பட்டதாகும். पराधीनமுமாய் = எம்பெருமானுக்கு அதீனமுமாய் परार्थமுமான-எம்பெருமானுக்கே ஆவதுமான. भोक्तृत्वमिति. வினா-भोक्तृत्वமென்றுலென்ன; भोगकर्तृत्वமா. भोग-आश्रयत्वமா. कर्तृत्वமாகில் कर्तृत्वமும் என்ற சொல்லே போதும், இது வேண்டா. भोगமாவது सुखदुःखानुभवம். அதற்கு आश्रयமாகையென்பதே स्वरसार्थம். प्रयत्नाश्रयत्व மென்கிற कर्तृत्वமிங்கில்லை 'என்னில், அப்போது प्रवृत्तिயாவது என்று இதையும் ப்ரவருத்தியில் சேர்த்தது கூடுமோ? விடை—भोगத்தை உத்தேசித்து ஜீவன் கார்ய கர்த்தாவாகிறபடியால் भोगமும் இவனுக்கு ஸாத்யமாகிறது. ஸாத்ய மெல்லாம் பகவானுக்கு அதீன மென்றறிவிப்பதற்காக ப்ரவ்ருத்தி பதத்தாலே அதையும் கொள்ள வேண்டும். முன்னே நிவ்ருத்தியைக் கொண்டதுபோல். ஆக ப்ரவ்ருத்தி பதத்திற்கு धात्वर्थ மான க்ரியை என்று பொதுவாகப் பொருளாமென்க. जीवன் भोक्ताவாவது परार्थமாக =பகவானுக்காக என்பது அனுபவத்திற்கு முரணாகும். யாரும் அவ்வாறு நினைத்து போகத்திலிழிவதில்லையே என்ற கேள்விக்கு ஸமாதானம் ஈச்வரன் இத்யாதி. அசேதநமெல்லாம் சேதநனுக்காக என்கிறோம். அசேதநம் தன்னை சேதநனுக்காகவென்று நினைக்கிறதா. அது நினைக்காவிட்டாலும் சேதநன் இது தனக்காக என்று நினைப்பதே போதுமென்னில். அதுபோல் இங்கும் ஜீவன் அறியாவிட்டாலும். ஈச்வரன் இவர்கள் भोक्ताவாவது தனக்காகவென்று நினைப்பதால் परार्थமெனக் குறையில்லை. இனி தனக்காக என்றால் என்ன? ஜீவன் भोक्ताவானதால் பரிபூர்ணனான ஈச்வரனுக்கு கிடைப்பது என்ன எனில். அதற்காகவே தன் भोक्तृत्वार्थமென்று விவரணம். संसारिகள் மூலம் भोगरसமும் அவனுக்கு உண்டாகிறபடியால் அந்த रसानुभवத்திற்காக

बद्धचेतनருக்கு நீக்கியுள்ளாரில் भेदம் अविद्याकर्मवासनारुचिप्रकृतिसम्बन्धयुक्तராயிருக்கை. இவர்களுக்கு अन्योन्यம் வரும் ज्ञानसुखादिभेदத்தை ब्रह्मादिस्तम्बपर्यन्त

---

என்றபடி. कर्तृत्वத்தின் பலன் भोक्तृत्वम्. அதன் பலன் இந்த ரஸம். பலனே அபேக்ஷிக்காதவிடத்தில் कर्तृत्वமே रसத்திற்குக் காரணமாகலாம்.

चेतनाचेतनविभागத்தில் பொதுவாக सर्वचेतन स्वरूपस्थितिप्रवृत्तिகள் ஈச்வராதீனமென்று சொல்லியாயிற்று. இனி அசேதன விஷயத்தில் சொல்ல வேண்டும். ஆனால் சேதனரை त्रिविध என்று மூன்று வகுப்பாகப் பிரித்திருப்பதால் ஒவ்வொரு வகுப்புக்கும் स्वरूप स्थितिप्रवृत्तिகள் வெவ்வேருகையால் அவற்றுக்கு ईश्वराधीनत्वத்தை நிரூபித்துவிட்டு சேதநவிஷயத்தை முடித்துக் கொண்டு அசேதநவிஷயம் சொல்ல வேண்டுமென்று கருதி முன் கூறிய மூன்று வகுப்பில் முதல் வகுப்பைப் பற்றி முதலில் சொல்லுகிருர் बद्धचेतनருக்கு இதி. நீக்கியுள்ளாரில் = மற்ற चेतनரைக் காட்டிலும் भेदம் = स्वरूपभेदம். अविद्यादिகள் முன்னமே விவரிக்கப்பட்டன. இக் कर्मविद्यादिचक्रம் ஒவ்வொரு बद्धात्माவுக்கும் துல்யமாயிருப்பதால், 'बद्धात्मा ஒன்றே; भेदமில்லே' என்னலாகாதோ என்ன அருளிச்செய்கிருர் இவர்களுக்கு இதி. अविद्यादिகள் துல்யமாயிருந்தாலும் ज्ञान-अज्ञान-सुख-दुःखादिகள் ஒருவருக்குப் போல் ஒருவருக்கில்லே யாகையால் "नाना आत्मानः व्यवस्थातः" என்று கணுதர் கூறியபடி जीवभेदம் வெகு சாஸ்த்ரயுக்தி ப்ரஸித்தம். அதில் பிரமன் முதல் ஸ்தம்பமென்கிற स्थावरச் செடிவரையில் ज्ञानादिभेदம் வேதமூலம் அறியக் கூடியதென்பதே விசேஷம். வகுப்புக்களிலே = देवतिर्यङ्मनुष्यस्थावररूपமான பிரிவுகளிலே. பல ப்ரம்மாண்டங்களுக்கு பல ப்ரம்மாக்களிருப்பதால் ப்ரம்ம வகுப்பு ருத்ர வகுப்பு என்ற உட்பிரிவும் கூறலாம். எல்லா உடலிலும் ஒரே ஜீவனுகில் ஒரு சரீரத்திலுள்ள ஜீவன் மற்ற சரீரங்களில் உண்டாகும் ज्ञानसुखादिகளேயும் தன்னுடையனவாக க்ரஹிக்க வேண்டும். அவ்வாறின்றி அங்கங்கு க்ரஹிக்கின்றவன் வெவ்வேறென்று ஸ்பஷ்டமாயிருப்பதால் बद्धजीवன் ஒருவனுகானென்றபடி. சரீரந்தோறும் ஜீவன் வேறென்பது சரீரத்வம் ஸித்தித்த பிறகு தானே. देवमनुष्यादि अचेतनद्रव्यம் शरीरம் என்ற போது பொதுவாக த்ரவ்யம் சரீரமென்ற அபிப்ராயமா அல்லது அந்தந்த ஆகாரத்தோடு சேர்ந்த த்ரவ்யம் சரீரமென்ரு? அசேதந த்ரவ்யம் எப்பொழுதும் சேதநனுக்கு சரீரமாகாது. சரீராகாரத்துக்கு முன்னும் பின்னும் அவன் அதை धरिக்காமையால். இரண்டாவது பக்ஷமுமில்லே. ஆகாரத்தோடு சேர்ந்த த்ரவ்யத்தையும் உறக்கம் முதலான காலங்களில் ஜீவன் தரிப்பதில்லேயே. மேலும் ஜீவன் சரீரத்தை விட்டு விலகின பிறகும் சரீரமிருக்கின்றதே; எது தானுள்ள காலமெல்லாம் எவனுல் தரிக்கப்படுகிறதோ அது அவனுக்கு சரீரமென்கிற சரீரலக்ஷணம் வாராதே மேலும் எல்லா த்ரவ்யமும் எம்பெருமானுக்கு சேஷமாய் சரீரமாயிருக்க ஜீவனுக்கும் சரீரமாகுமோ ஒரு சரீரத்திற்கு இரண்டாத்மாக்கள் உண்டோ என்ற கேள்விகளேக் களேவதற்காக

ங்களான வகுப்புக்களிலே கண்டுகொள்வது. இப்பத்த சேதநர் தந்தாமுக்குக் கர்மாநுருபமாக ஈச்வரன் அடைத்த சரீரங்களை **धर्मिस्वरूप**த்தாலும் **धर्मभूतज्ञान**த்தாலும் **धरि**யா நிற்பர்கள், **धर्मि**யால் வருகிற **धारण**ம் சரீரத்தினுடைய ஸத்தைக்குப் ப்ரயோஜகமாயிருக்கும். **जाग्रदाद्यवस्थै**யில் **धर्मभूतज्ञान**த்தாலே வருகிற **शरीरधारण**ம் **पुरुषार्थतदुपायानुष्ठान**ங்களுக்கும் **कृतोपाय**னை பரமைகாந்திக்கு **भगवदनुभवकैङ्कर्य**ங்களுக்கும் **उपयुक्त**மாயிருக்கும். **पापकृ**த்துக்களுக்கு இச்சரீர தாரணம் விபரீத பலத்துக்கு ஹேதுவாயிருக்கும். இஜ்ஜீவர்கள் இச்சரீரத்தை விட்டால் இதின் **संघात**ம் குலையுமித்தனை, சரீரத்துக்கு **उपादान**மான

---

இப் **बद्धचेतन**ர் இத்யாதி. எல்லாம் ஈச்வர சரீரமே. ஆனாலும் சிற்சில ஆகார விசிஷ்டமான த்ரவ்யத்தை சிற்சில ஜீவருக்கு அவர் செய்த கர்மாவுக்குப் பலனளிப்பதற்காக சரீரமாக்குகிறான். அதனால் ஈச்வரனுக்கு **निरुपाधिकशेष**மான வஸ்து ஜீவனுக்கு **सोपाधिकशेष**மாகிறது. பொதுவாக த்ரவ்யம் ஜீவ சரீரமன்று. அவித்யாதிகள் ஐந்தில் ப்ரக்ருதி ஸம்பந்தமென்று சொல்லப்பட்டது ப்ரளயாதி காலங்களில் ஸூக்ஷ்ம ப்ரக்ருதி ஸம்பந்தமானபோது **शरीरात्मभाव**மென்கிற ஸம்பந்தமன்று. ப்ரக்ருதியைவிட்டு அப்பால் போக மாட்டாமை மட்டுமாம். **स्थूलप्रकृतिसंबन्धविशेष**மே **शरीरात्मभाव**ம். உறக்கத்தில் ஜ்ஞானமிராவிடினும் அந்த ஆகார விசிஷ்ட த்ரவ்யம் ஜீவ ஸ்வரூபத்தால் தரிக்கப்படுகிறது. அதனால் ஜீவாதீனமாக ஸத்தையை யுடையதாக அப்போதும் சரீரமிருக்கிறது அதனால் ஜாகரத்தில் ஸங்கல்பத்தால் தரிக்கிறது வேண்டா என்னலாகாது, அந்த **धारण**ம் ப்ரவ்ருத்திக்குக் காரணமாகும். **धर्मार्थकाममोक्ष**ங்களென்கிற நான்குவித புருஷார்த்தங்களுக்கும் அததன் உபாயானுஷ்டானங்களுக்குமாம் அந்த ப்ரவ்ருத்தி. ப்ரபன்னனாய் மோக்ஷத்திற்கும் ஓர் உபாயம் செய்ய வேண்டியதின்றி க்ருதக்ருத்யனாய் வேறு பலன்களில் அடியோடு நசையற்றவனாய் பரமைகாந்தியானவன் ஸங்கல்பத்தால் தரிப்பதெதற்கென்னில். ஸ்வயம் ப்ரயோஜநமான **भगवदनुभव**த்திற்கும் கைங்கர்யத்திற்குமான ப்ரவ்ருத்திக்குமென்க. பாபிகள் செய்யும் சரீர **धारण**ம் **अर्थकाम**ங்களுக்காக ஆவதோடு **नरकादि** அநிஷ்டத்திற்கும் காரணமாகும். நாரக சரீரத்தை ஸங்கல்பத்தால் ஏன் தரிக்கிறானெனில், **दुःखानुभव**த்தால் பாபம் கழிந்தால் **सुख**ம் பெறலாமென்கிற ஆசையினாலென்க ஜீவன் சரீரத்தை விட்ட பிறகும் சரீரம் உளதென்பது தவறு. **संघात**ம்—அதாவது அவயவங்களின் ஒருவிதமான அமைப்பு ஆக அத்துடன் கூடிய த்ரவ்யமே ஜீவசரீரம். ஜீவன் வெளிப் புறப்படும் க்ஷணத்திலேயே அவ்வமைப்பு குலைந்துவிடுகிறபடியால் அவ் ஆகார விசிஷ்டத்ரவ்யமில்லாமையால் அதற்கு சரீர லக்ஷணம் பொருந்தும். இவ்வாகாரத்திற்கு முன்னும் பின்னுமான நிலைகளில் எப்போதுமே ஈச்வரனுக்கு மட்டுமே அது சரீரமாகும் ஆகையால் சரீரந்தோறும் ஜீவன் வேறென்பது யுக்தமே இது **स्थूलप्रकृति संबन्ध**ம் இது இல்லாத போது **सूक्ष्मप्रकृति संबन्ध**ம். இந்த ஸம்பந்தமே **बद्ध**ருக்கு மற்றவரைக் காட்டிலும் ஸ்வரூப

द्रव्यங்கள் ஈச்வர சரீரமாய்க்கொண்டு கிடக்கும். பத்தசேதநர்க்கு இதரரிற் காட்டில் स्थितिभेदம் संसारबन्धம் यावन्मोक्षம் அநுவர்த்திக்கை. प्रवृत्तिभेदம் पुण्यपापानुभयरूपங்களான त्रिविधप्रवृत्तिகளும். முக்தருக்கு நீக்கியுள்ளாரில் भेदம்

---

भेदம் என்றதாயிற்று. இனி बद्धருக்கு மற்றவரைவிட ஸ்த்திதியில் பேதத்தைக் குறிக்கிறார் बद्ध இதி. ஸ்த்திதியாவது உத்தரகாலாநுவ்ருத்தி ; ஸம்ஸார ஸம்பந்தமென்கிற கீழ்ச்சொன்ன ஸ்வரூபத்திற்குப் பிற்காலத்திலும் அநு வ்ருத்தி = தொடர்ச்சியே மற்றவருக்கில்லாமல் இவர்களுக்குள்ள ஸ்த்திதி யென்றபடி. ஸ்வரூபத்தின் அநுவ்ருத்தியே ஸ்த்திதியென்றதாயிற்று. அநாதி ஸம்ஸாரத்தில் எப்போது प्रथमसंबन्धம் ? எங்கிருந்து தொடர்ச்சி எனில், ஒவ்வொருவனுக்கும் स्वरूप स्थिति प्रवृत्तिகளை விவரிக்கும் போது முதல் க்ரஹிக்கப்பட்ட ஸம்பந்தத்தை ஸ்வரூபமாகவும் பின்புள்ளதை ஸ்த்திதி யாகவும் கொள்க. நித்யனுடைய ஸ்த்திதி போலே இது நித்யை யாகா தென்பதற்காக यावन्मोक्षம் என்றது, மோக்ஷம் வருவதற்கு முன் வரையில் என்றபடி. கடைத்தசையிலுள்ள बद्धனைக் கொண்டு நிரூபிப்பதானால் ஸ்வ ரூபம் ஒன்றே சொல்லவாம். நித்ய ஸம்ஸாரியான ஜீவன் உண்டென்னும் பக்ஷத்தில் நித்யாநு வ்ருத்தியே யுண்டு ; यावन्मोक्षமென்பது மற்றவர் விஷயம் இப்படி बद्धருக்குப் பிறரைவிட வைலக்ஷண்யம் சொன்னதோடு बद्धருக்குள்ளே ஒவ்வொருவருக்குள்ள स्थितिभेदமும் यावन्मोक्षம் என்றதால் अर्थात् குறித்ததாகும். அவரவர் மோக்ஷம் போகும் காலம் வெவ்வேறாக விருப்பதால் அதுவரையிலான संसारानुवृत्ति வெவ்வேறாகிறபடியால் அங்கும் स्थितिभेदமாம். बद्धருக்கு நித்ய முக்தர்களைவிட ப்ரவ்ருத்தியில் भेदம் சொல்ல पुण्ये த்யாதி. மோக்ஷத்தில் புண்ய பாபங்களுக்கு அவகாசமில்லையாகையால் அவர்களுடைய ப்ரவ்ருத்திகளைக்காட்டிலும் இது வேறென்றபடி. சாஸ்த்ரத்தில் பலத்திற் காக விதிக்கப்பட்ட ப்ரவ்ருத்தி புண்யம். வேண்டாமென்று நிஷேதிக்கப் பட்ட செயல் பாபம். விதிக்கப்படாமலும் நிஷேதிக்கப்படாமலும் இருக் கும் லௌகிக கார்யங்கள் புண்யமுமல்ல பாபமுமல்ல வாகையாலே अनुभयமா கும் ப்ரவ்ருத்தி भेदம் புண்யபாப अनुभय ரூபமென்றதோடு நிற்காமல் "ரூபங்களான த்ரிவிதப்ரவர்த்திகளும்" என்றது ஏன் எனில், மூன்றுவிதமான ப்ரவ்ருத்திகளும் பெரும்பாலும் மனுஷ்யாதி சரீரத்தில் சேரும் ; ம்ருகாதிக ளான சில ப்ராணிகளிடத்திலே अनुभयरूपமான ப்ரவ்ருத்தி மட்டுமேயிருந் தாலும் பின்னே புண்யபாபமும் சேரப்போகிறபடியால் த்ரிவித ப்ரவ்ருத்தி யுண்டு. நித்ய முக்தர்களுக்கு अनुभयம் மட்டுமிருந்தாலும் புண்யபாபங்கள் பின்னே வராமையால் த்ரிவித ப்ரவ்ருத்திகள் இல்லை யென்றதாம். அன்றி— अनुभयமென்கிற पदத்தில் नञ् ஸத்ருசமான भिन्नवस्तुவைக் குறிப்பதாகையால் புண்ய பாபங்களைப்போலே पूर्वकर्माधीनत्वமென்கிற सादृश्यமுடைய अनुभयप्रवृत्ति யையே க்ரஹிக்கிறபடியால் नित्यमुक्तप्रवृत्तिகள் अनुभयமாகா. ஆகையால் अनुभयप्रवृत्ति யைக் கொண்டும் प्रवृत्तिभेदம் சொல்லலாமென்பதற்காக த்ரிவித ப்ரவ்ருத்திக

प्रतिबन्धकनिवृत्तியாலே आविर्भूतस्वरूपராயிருக்கை. स्थितिभेदம் पूर्वावधिயுண்டான आविर्भावத்துக்கு उत्तरावधि யின்றிக்கே யிருக்கை. இவர்களுக்கு अन्योन्यं स्थितिभेदம் आविर्भावத்தில் முற்பாடுபிற்பாடுகளாலுண்டான முன்புற்ற ஏற்றச்சுருக்கம் प्रवृत्तिभेदம் अनादिகாலம் இழந்துபெற்ற परिपूर्णभगवदनुभवजनित-प्रीतिकारितமான यथाभिमतकैङ्कर्यविशेषங்கள் நித்யருக்கு நீக்கியுள்ளாரில் भेदம் अनाद्याविर्भूतस्वरूपராய் परतन्त्रராயிருக்கை. இவர்களுக்கு நீக்கியுள்ளாரிற் காட்டில் स्थितिभेदம் अनाद्यनुवृत्तமான शेषिद्वयानुभवம். இது நித்யருக்கெல்லாம் பொதுவானபடியாலே இவர்களுக்கு अन्योन्यம் स्थितिயில் வைஷம்யமில்லை.

---

ளும் என்று சேர்த்ததென்க முக்தருக்கு நீக்கியுள்ளாரில் = மற்ற ஜீவர்களைக் காட்டிலும் भेदம்—ஸ்வரூபபேதம்—बद्धருக்கு बद्धம் ஸ்வரூபமாவதுபோல் முக்தருக்கு முக்தியே ஸ்வரூபம் என்றபடி. प्रतिबन्धकनिवृत्तியாலே — அநாதி புண்ய பாப நிவ்ருத்தியாலே கைவல்யத்திலும் ஜீவஸ்வரூபமான अपहतपाप्मत्वादि குணத்திற்குத் தோற்றமுண்டு. ஆனால் அது प्रतिबन्धकनिवृत्तியால் வரும் சரியான ஆவிர்ப்பாவமன்று. पूर्वावधि உண்டான =காரணாதீனமான—முன்பில்லாததான. उत्तरावधिயாவது ध्वंसம். आविर्भाव अनुवृत्तியே स्थिति. அது பின்னே எப்போதும் உளதென்பதற்காக उत्तरावधि யின்றிக்கே என்றது. நித்யருடைய स्थितिயும் எப்போதும் உளதானாலும் அது அநாதி ஆவிர்பாவத்தைச் சேர்ந்தது. இது ஸாதி ஆவிர்பாவத்தைச் சேர்ந்தது என்பது விசேஷம் अन्योन्यम्—ஒரு முக்தனைக் காட்டிலும் மற்றொரு முக்தனுக்கு முற்பாடு இத்யாதி. எல்லா முக்தருக்கும் வந்த ஆவிர்பாவம் எப்போதும் உளதானாலும் அந்த ஆவிர்பாவம் போன கல்பத்தில் வந்தது இப்போது வந்தது என்றவாறு प्रथमத்திலிருக்கும் क्षणादि कालसंख्यै அதிகமாகையும் குறைவும் स्थितिभेदமாகுமென்றபடி अनादि இதி. நித்யருடைய கைங்கர்யங்கள் அநாதியானவை முக்தருடைய கைங்கர்யம் அனாதிகாலமா யில்லாமல் பின்னால் பெறப்பட்டவை ஆக அநாதியாகாத கைங்கர்யம் ப்ரவ்ருத்தி भेदம். बद्धருக்கும் ப்ரீதிகாரிதமான கைங்கர்யம் கிடைக்குமாகையால் அதைவிட வைலக்ஷண்யம் காட்டுவதற்காக அநாதிகாலமிழந்து பெற்ற, परिपूर्ण भगवदनुभवजनित என்று சேர்த்தது. बद्धருடைய கைங்கர்யம் அல்பமானது அனாதி காலமாகவே இருக்கும். அவர்களுக்கு பரிபூர்ண பகவதனுபவமேயில்லை. "यथाभिमतकैङ्कर्यம்" என்பதே போதுமாயிருக்க तद्विशेषங்கள் என்றது முக்தர்களுக்குள் அந்யோந்யம் प्रवृत्तिभेदத்தைக் குறிப்பதற்காக. நீக்கியுள்ளாரில் भेदம் =बद्धमुक्तர்களைக் காட்டிலும் स्वरूपभेदம். நித்யருக்கு நித்யத்வமே ஸ்வரூப भेदம்—அதாவது ஸ்வரூப ஆவிர்பாவத்திற்கு அநாதித்வம் அது எம்பெருமானுக்கும் உண்டாகையால் அவனை விலக்க பாரதந்த்ரத்வம் சேர்க்கப்பட்டது अनादिस्वरूपाविर्भावविशिष्ट जीवत्वं नित्यत्वम्. அதனுடைய அநுவ்ருத்தியே स्थिति भेदம் என்கிறார். இவர்களுக்கு இதி. शेषिद्वयानुभवம் என்பதற்கு தனக்கு ச்ரீயும் நாராயணனுமான இருவரும் சேஷிகளென்கிற அனுபவம் என்று பொருள்.

இவர்களுக்குப் प्रवृत्तिभेदம் अनादिप्रवाहनित्यங்களான कैङ्कर्यविशेषங்கள். अनन्तगरुडादिகளுக்கு अधिकारविशेषங்களும் तदुचितकैङ्कर्यங்களும் व्यवस्थितங்களாயிருக்க நித்யருக்கும் முக்தருக்கும் सर्वविधकैङ्कर्यसिद्धिயுண்டென்கிற அர்த்தம் கூடுமோவென்னில், ஸ்வாமியினுடைய அபிப்ராயத்துக்கு ஈடாகத் தனக்கு அபிமத

---

अनादि प्रवाह नित्यங்களான இதி अनादित्वமாவது—இது ஆரம்பகாலம் என்னப் படமாட்டாமை. கைங்கர்யம் க்ரியாரூபமாகையால் அழியாமலிரா. அதனால் ப்ரவாஹநித்ய மென்றது. प्रवाह नित्यत्वமாவது. ஏதேனும் ஒரு கைங்கர்யம் மேன்மேலும் வந்தபடி யிருக்கை கைங்கர்யங்கள் என்னமே கைங்கர்ய விசேஷங்கள் என்றதால் ஒவ்வொரு நித்யருடைய கைங்கர்யமும் தனிப் பட்டதாகையால் अन्योन्यம் प्रवृत्ति भेदம் உண்டென்று காட்டினபடி

இப்படி ஒருவருக்கொருவர் கைங்கர்ய வ்யவஸ்த்தை யுடையரானால் ஒரு நித்யருக்கும் ஸர்வகைங்கர்யஸித்தி இல்லை என்று தெரியலாயிருக்க நித்யர் முக்தர் எல்லோருக்கும் எல்லா கைங்கர்ய ஸித்தியுண்டென்று எம்பெருமானார் गद्यத்திலே "भगवदनुभवजनितानवधिकातिशयप्रीतिकारित – अशेषावस्थोचिताशेषशेषतैकरतिरूपनित्यकैङ्कर्यप्राप्त्यपेक्षया" என்று सकलकैङ्कर्यप्राप्तिயைப் பலனாகக் கூறியது எங்ஙனே என்று கீழ்ச்சொன்ன விசேஷ பதத்திலூன்றிக் கேட்கிறார் अनन्तेत्यादियால். अधिकारिविशेषங்களாவன शयनம் वाहनம் सेनापति द्वारपालकர் गणाधिपति ஆயுதம், பூஷணம், चेतनाचेतनविशेषाभिमानि என்றவாறுமவை. விடை அருளிச்செய்கிறார். स्वामी இத்யாதியால். அபிப்ராயத்துக்கீடாக = அபிப்ராயத்திற்கு ஒத்து गद्यश्रीसूक्तिயில் अशेषशेषता என்றும் रतिरूपकैङ्कर्य என்று மிருப்பதால் எல்லா சேஷத்வத்தையும் கொள்வதென்றும் इच्छத்தபடி கைங்கர்யம் செய்வதென்றும் தெரிவதால் பூர்வபக்ஷி சொல்லும் அர்த்தமாவது—அவனவனுக்கு சேஷத்வம் ஒவ்வொன்றே யாகையால் அசேஷ பதத்தாலே எல்லாருடைய சேஷத்வத்தையும் கொள்ளவேண்டும். எல்லார் சேஷத்வத்திலுமாசைப்பட்டுச் செய்யும் கைங்கர்யம் எல்லார் கைங்கர்யமுமே யாகுமென்றவாறு. இதில் இந்த ஸ்ரீஸூக்திக்கு வேறு அர்த்தம் சொல்லவாகாது என்று கருத்தா, இவ்வர்த்தத்தை ஏன் விட வேண்டும் என்று என்று பக்ஷங்களைக் கருதி மறுமாற்றமாம்.

இங்கு முதல் பக்ஷமுசிதமல்ல; 'அசேஷசேஷதா' என்பதற்கு தன்னுடையதும்தன்னைச் சேர்ந்த எல்லாவற்றினுடையனவுமான சேஷத்வங்களிலே ருசியினால் வந்த கைங்கர்யமென்று பொருளாம் இதனால் தானும் தன்னைச் சேர்ந்த வஸ்துக்களும் சேஷமாகவே யாம்படி கைங்கர்யம் செய்ய வேண்டுமென்றதாயிற்று, இனி சேஷதா என்பதற்கு சேஷவ்ருத்தி என்று பொருளாய் எல்லா சேஷவ்ருத்திகளிலும் ருசியாலான அதாவது 'தன்னால் எவ்வளவு சரீரம் எடுத்துக் கொண்டு எவ்வளவு கைங்கர்யம் செய்ய முடியுமோ, அவ்வளவான என்னலாம். அசேஷகைங்கர்ய என்றே போதுமாயிருக்க சேஷதைகரதிரூப என்றது பூர்வபக்ஷியின் கருத்தை விலக்கவு

विकासங்களில்லை. ஸர்வாத்மாக்களுடையவும் धर्मभूतज्ञानम् विषयप्रकाशनवेळै யிலே स्वाश्रयத்துக்கு स्वयंप्रकाशமாயிருக்கும். ज्ञानत्वமும் स्वयंप्रकाशत्वமும் धर्मधर्मि களுக்கு साधारणம். धर्मभूतज्ञानத்துக்கு विषयित्वமேற்றம். धर्मियान आत्म-स्वरूपத்துக்குப் प्रत्यक्त्वம் ஏற்றம். ज्ञानत्वமாவது—कस्यचित् प्रकाशकत्वம், அதாவது தன்னுடையவாகவுமாம் வேறொன்றினுடையவாகவுமாம் ஏதேனு

---

யாலே நிர்விகாரத்வமில்லை, தர்மிக்கிராமல் தர்மபூதஜ்ஞாநத்திற்கு மட்டுமுள்ள தர்மத்தைக் கூறுகிறார் धर्मि. प्रकाशमानत्वமாத்ரம் घटादिகளுக்குமுண்டு. स्वयंप्रकाशत्वம் என்பது தர்மிக்குமுண்டு. ஸ்வாச்ரயத்திற்கு ஸ்வயம் ப்ரகாசமாயிருக்கை தர்மிக்கில்லை நித்யவிபூதிக்கும் உண்டென்னலாம். அதற்கு ஆச்ரயமான ஈச்வரனுக்கு அது ஸ்வயம் ப்ரகாசமாயிருப்பதால். அதற்காக விஷயப்ரகாசந வேளையிலே என்றது. நித்யவிபூதிக்கு விஷயமொன்று மில்லாமையால் அதற்கு இந்த தர்மம் வாராது. ஸ்வ விஷயப்ரகாசவேளையில் ப்ரகாசிக்கை அல்லது ஸவிஷயகத்வம் என்பதே தர்ம பூதஜ்ஞாநத்திற்கு அஸாதாரணமானாலும் விரிவாக ஸ்வரூபவிவேசநத்திற்காக ஸ்வாச்ரயத்துக்கு இத்யாதி. இதனால் கீழ்ச்சொன்ன ஸ்வஸ்மை ஸ்வயம் ப்ரகாசத்வமென்பது தர்மபூதஜ்ஞாநத்திற்கில்லையென்றும் தெளிவிக்கப்பட்டதாகும் — இரண்டிற்கும் பொதுவான தர்மங்களையும் அஸாதாரண தர்மத்தையும் நிஷ்கர்ஷிக்கிறார் ஜ்ஞாநத்வமும் இத்யாதியால். ஏற்றம்—அஸாதாரணம். இந்த நிருபணத்திலிருந்து கிடைத்த நான்கையும் இங்கு விவரிக்கிறார் ज्ञानत्व மாவது இத்யாதியால். कस्यचित्प्रकाशकत्वம்—किञ्चिन्निष्ठप्रकाशकारणत्वம். ஆத்மாவில் ஸமந்வயம் செய்யும் போது किञ्चित्பதத்தாலே அவ்வாத்மாவையே கொள்ள வேண்டும். தர்மபூத ஜ்ஞாநத்தில் ஸமந்வயத்திற்கு किञ्चित् என்ற பதத்தாலே அதையும் அதன் விஷயமான வஸ்துக்களையும் கொள்ளலாம். இதே அதாவது இத்யாதியால் விவரிக்கப்பட்டது. ப்ரகாச காரணத்வமென்றவிடத்தில் ப்ரகாச பதத்திற்கு ஜ்ஞாநமென்று அர்த்தமாகில், ஆத்மாவும் ஜ்ஞாநமும் ப்ரகாசிக்கும் போதெல்லாம் அதனால் ஒரு ஜ்ஞாநம் உண்டுபண்ணப்படாமையாலும் किञ्चिन्निष्ठप्रकाश என்றதில் ஜ்ஞாநத்திற்கு विषयनिष्ठत्वம் சொல்லவாகாதாகையாலும், ப்ரகாச பதத்திற்கு विषयित्वம் அர்த்தமென்றால் நம்முடைய ஸித்தாந்தத்தில் அது संयोग—संयुक्ताश्रितत्वरूपமாகையாலே ஆத்மாவுக்குத் தன்னிடத்தில் விஷயித்வத்தை சொல்லவாகாதாகையாலும் ப்ரகாச பதத்திற்கு வேறு அர்த்தம் சொல்லுகிறார் व्यवहारानुगुण्यத்தை...என்று. विषयप्रकाशकத்வமே ஜ்ஞாநத்வமாகையால் ஆத்மாவுக்கு இது (ஜ்ஞானத்வம்) சேராது என்கிற ஆசங்கை இந்த நிர்வசநத்தினால் பரிஹரிக்கப்பட்டது இங்கு இவ்வாறு கருத்துக்கொள்ள வேண்டும்—ज्ञानसंविदादि சப்தங்கள் घटमहं जानामि, संवेद्मि இத்யாதி धातुக்களிலிருந்து ஏற்பட்டவை. அந்த धातुக்களுக்கு सकर्मकமாயும் सकर्मक மாயும் உள்ள ப்ரகாச தர்மமே அர்த்தமாகையால் ஜ்ஞாநஸம்விதாதி

இவ்வாத்மாக்களெல்லாருக்கும் धर्मिस्वरूपம் போலே धर्मभूतज्ञानமும் द्रव्य மாயிருக்க, இதின் ஸ்வரூபத்தைத் தனித்து இங்கு அருளிச்செய்யா தொழிந்தது சேதநரென்று எடுத்த விசிஷ்டத்திலே விசேஷணமாய்ச்

---

மென்கிற அசேதந த்ரவயமுமிருப்பதால் அதையும் சேர்ப்பதற்காக த்ரிவித சேதநாசேதந என்றவிடத்தில் சேதநமாத்ரத்தில் த்ரிவித என்பதை அந்வ யித்து அசேதநங்களை நாலாகச் சொல்வது யுக்தமென்கிற ஆசங்கையைப் பரிஹரித்து அசேதநத்திலும் த்ரிவித என்றதன் அந்வயத்தை ஸ்த்தாபிப்பதற் காகக் சேதநநிரூபணத்திலேயே தர்மபூதஜ்ஞாநத்தின் நிருபணத்தைச் சேர்க் கிருர் இவ்வாத்மாக்கள் இத்யாதியால். இங்கே "தர்மிஸ்வரூபம்போலே த்ர வ்யமாய் தர்மபூதஜ்ஞாநமும் இவ்வாத்மாக்கள் எல்லாருக்குமிருக்க" என்ற ந்வயம். எல்லாருக்கு மென்கிற பதத்தினுல்—'பத்தர்கள் தவிர மற்ற வருக்கு எப்போதும் எல்லா விஷயஜ்ஞாநமும் இருப்பதால் தர்மியான ஆத் மாவே ஸர்வ விஷயகமென்னலாம்; வேறு ஜ்ஞாநம் வேண்டா, பத்தருக்கு இந்த்ரியாதிகள் மூலமாகச் சில ஸமயமே ஜ்ஞாநம் வருகிறபடியால் அது தர்மி யைவிட வேருக வேண்டும். அது அந்தःகரண வ்ருத்தி என்றும் அந்தः- கரணத்திற்கு வெளி விஷயத்தோடு ஸம்யோகமே என்றும் ஸாங்க்யாதிகள் சொல்வர்கள்' என்கிற ஆசங்கைக்குப் பரிஹாரம் கருதப்பெறும். 'அஹம் ஜாநாமி' என்று தர்மி வேறு தர்மம் வேருக ஸர்வருக்கும் அநுபவமிருக்க தர்மியோடு ஐக்யம் சொல்லுவது ரூபரஸாதிகளுக்கு ஐக்யம் சொல்லுவது போல் பாதிக்கப்படும். அசேதநமான அந்த:கரணத்தின் வ்ருத்தியோ, ஸம்யோகமோ ஜ்ஞாநமென்பதும் தேஹத்திற்கே ஜ்ஞாநமிசைந்த' சார்வாக பக்ஷத்திற்குத் துல்யமாம். தர்மியே இந்த ஜ்ஞாநமாகில் ஸங்கல்ப – ப்ரவ் ருத்தி—ஸுகாநுபவாதி அவஸ்த்தைகளெல்லாம் தர்மிக்கே நேர்வதால் நிர்விகாரச்ருதிக்கு விருத்தமாகும். 'ஆகில் ரூபரஸாதிகளைப்போலே ஜ்ஞாநம் குணமாகலாமே, அதனுல் த்ரவ்ய நிருபணத்தில் விடப்படுகிறதென்னலாமே' என்னில்—அது தகாது. இதுவும் தர்மிஸ்வரூபம்போலே த்ரவ்யமே. धर्मभूतज्ञानं द्रव्यं ज्ञानत्वात् धर्मिवत् என்று அநுமாநமாம். அதுபோல் सङ्कोच-विकासरूप अवस्थावत्वात् संयोगवत्त्वात् என்கிற ஹேதுக்களையும் கொள்க ஆனுலும் தர்மி ஸ்வரூபம்போலே இது சேதநமாகாது; ஜ்ஞாநத்திற்கு ஜ்ஞாநமிருப் பதாக அநுபவமில்லையே. தீபம் முதலான தேஜஸ்ஸுக்குப் பிரபை ஒரு தேஜஸ்ஸென்ருல் ப்ரபைக்கும் தர்மமாக வேறு தேஜஸ் உண்டு என்னக் கூடுமோ? ஆகையால் धर्मभूतज्ञानம் अचेतनद्रव्यமே. ஆனுலும் இங்கு அசேதநங் களில் அதைச் சேர்க்காமை சேதநபதார்த்தத்தில் அது விசேஷணமாக ஸ்பஷ் டமாகத் தோன்கிறபடியால் அங்கேயே அதனுடைய ஸ்வரூபஸ்திதி ப்ரவ் ருத்திகளை ஈச்வராதீனமாக நிருபித்துக் கொள்ளலாமென்கிற கருத்தினு லென்க, இதற்காகவே ஜீவபத ப்ரயோகம் செய்யாமல் சேதந பதப்ரயோ கம். சேதநா சப்தம் ஜ்ஞாநத்தைச் சொல்லும். चेतना एषामस्ति इति अच्प्रत्ययத்

சொருகி நிற்கையடியாக, இத் தர்மபூதஜ்ஞாநம் விஷயப்ரகாசதசையிலே ஸ்வாச்ரயத்துக்கு ஸ்வயம்ப்ரகாசமாயிருக்கும். இது ஈச்வரனுக்கும் நித்ய

---

தாலே चेतन சப்தமானது चेतनரைச் சொல்லுமென்பர். சொருகி நிற்கையடியாக—அந்தர்கதமாய் தோன்றுகிறது காரணமாக. இதற்கு கீழே ஒழிந்தது என்கிற இடத்தில் அந்வயம்.

எனவே இங்கே அதற்கு ஸ்வரூபத்தைக் கூறுகிறுர். இத் घमिति. घटमहं जानामि என்று ஜ்ஞாநம் உண்டாகும்போது குடமென்கிற விஷயத்தோடுகூட அது தானே ப்ரகாசிக்கிறது. அஹம் என்று ஆத்மாவும் ப்ரகாசிப்பதால் स्वाश्रयத்திற்கு = தனக்கு ஆதாரமான ஆத்மவ்யக்திக்கு இது ப்ரகாசிக்கிறது. ஆகையால் விஷய ப்ரகாச காலத்திலே ஸ்வாச்ரயத்திற்கு ஸ்வயம் ப்ரகாசமாயிருக்கை தர்மபூதஜ்ஞானத்திற்குத் தெரிகிறது. ப்ரகாசமாயிருக்கைமட்டும் घटाதிகளுக்கு மிருப்பதால் அதை விலக்குவதற்காக ஸ்வயம் ப்ரகாசமாயிருக்கை என்றது. ஆத்மாவும் ஸ்வயம் ப்ரகாசமாயிருப்பதால் ஸ்வாச்ரயத்திற்கு என்று சேர்த்தது. சுத்தஸத்வத்ரவ்யமானது தனக்காச்ரயமான பரமாத்மாவுக்கு ஸ்வயம்ப்ரகாசமாயிருப்பதால் விஷயப்ரகாசநதசையிலே என்று சேர்த்தது. சுத்த ஸத்த்வத்ரவ்யத்திலிருக்கும் नित्यत्व-अचेतनत्वादि தர்ம்மாகிற விஷயங்கள் தர்மபூதஞானத்தாலே ப்ரகாசிக்கும்போது சுத்தஸத்வத்ரவ்யமும் பரமாத்மாவுக்கு ஸ்வயம் ப்ரகாசமாயிருப்பதால் இது ஜ்ஞாநத்திற்கு அஸாதாரணமாகாதென்னில்—விஷய ப்ரகாசந தசை என்பதற்கு ஸ்வவிஷய ப்ரகாசந தசை என்றர்த்தமாகையால் சுத்தஸத்வத்திற்கு விஷயமொன்றிராமையால் அதை ஸ்வபதத்தால் எடுக்கவாகாது. அப்படியானுல் ஸ்வவிஷயப்ரகாசநதசையிலே ப்ரகாசிக்கை என்றிவ்வளவே ஸ்வரூபமாகச் சொல்லலாமே என்னில், இப்பொழுது லக்ஷணம் சொல்லவில்லை. சேதநனுக்கு ஜ்ஞாநத்வ—ஆநந்தத்வாதி அநேக தர்மங்களைப் போல் இதர விலக்ஷணமான ஸ்வரூபத்தின் சோதநம் செய்கிறபடியால் அதிக பதமிருந்தால் குற்றமில்லை ஸார ப்ரகாசிகாகர்ரர் லக்ஷணமாகக் கொள்ளும்படி "முதற்பதத்தால் सकर्मकाभासत्वம் ஸித்திக்கிறது. இரண்டாவது பதத்தால் सकर्तृकअवभासत्वமென்கிற லக்ஷணாந்தரம் ஸித்திக்கிறது" என்று ந்யாயதத்வ க்ரந்தத்திலுள்ள லக்ஷணத்தை உரைத்தார்.

'ஜ்ஞாநமென்பது தானிருக்கும் போது ப்ரகாசிக்காமலிருக்க முடியாதாகையாலே விஷய ப்ரகாசந தசையில் என்பதை எதற்காகக் கூறவேண்டும். அதனுல் விஷயத்தை ப்ரகாசப்படுத்தாத தசையும் ஒன்றுண்டென்றேறப்படுகிறதே ; அப்படி இருக்கக்கூடுமோ. ஜ்ஞாநம் நித்யமாயிருக்குமாகில் அது எல்லா விஷயங்களையும் எப்போதும் ப்ரகாசிப்பதாகவே யிருக்க வேண்டுமே' என்ன — அதைப் பற்றி விசதமாக நிரூபிக்கிறுர்—இது

ருக்கும் நித்யவிபுவாயிருக்கும். மற்றுள்ளாருக்கு ஸம்ஸாராவஸ்த்தையில் கர்மாநுரூபமாக बहुविधसङ्कोचविकासவத்தாய் मुक्तावस्थैயிலே एकविकासத்தாலே பின்பு यावत्काल் विभुவாயிருக்கும். இதற்கு प्रवृत्तिயாவது விஷயங்களை ப்ரகாசிப்பிக்கையும், प्रयत्नावस्थैயிலே சரீராதிகளைப் ப்ரேரிக்கையும், பத்த

---

இத்யாதியால். எல்லாருடைய தர்மபூத ஜ்ஞானமும் த்ரவ்யமானபடியாலே அநாதியும் அவிநாசியுமாகும். அதனுல் அதில் ஈச்வராதிகளுக்கு இருக்கும் ஜ்ஞானம் தடையிராமையாலே எங்கும் பரந்ததாய் எப்போதும் எல்லாவற்றையும் க்ரஹிப்பதாகும், बद्धருடைய ஜ்ஞாநம் எங்கும் பரவுதற்கு ப்ரதிபந்தகம் கர்மாவாகும். எந்தெந்த விஷயத்தை க்ரஹிக்கத் தடையில்லாமல் அனுகூலமேற்படுகிறதோ அதை க்ரஹிக்குமளவுக்கு அது பரவும் அவர்களே முக்தராஞல் ப்ரதிபந்தகமில்லாமையாலே ஈச்வராதிகளுக்குப் போல் அது எங்கும் பரவும், இப்படி விஷயம் ப்ரகாசிக்காத காலத்தில் நித்யமாயிருந்தும் ஜ்ஞாநமானது, உறக்கத்திலுள்பட அஹமர்த்தம் ப்ரகாசிக்கிருப் போலே ப்ரகாசிக்காமலிருப்பதால், 'விஷய ப்ரகாசந தசையிலே' என்றது. ஜ்ஞாநம் உண்டானுலும் அது விஷயமாக மற்ருெரு ஜ்ஞாநம் வந்தால் தான் ப்ரகாசிக்குமென்பது தார்க்கிக மதம். ज्ञान इच्छा प्रयत्न सुख दुःखादिகள் உண்டாகும் போதே ப்ரகாசிப்பதால் அதற்கு ज्ञानान्तरम் வேண்டுவதில்லை. ஆத்மா எப்போதும் தானே ப்ரகாசிக்கிருப் போலே ஜ்ஞாநாதிகளும் உண்டாகும் போதெல்லாம் ப்ரகாசிக்கும். விஷய ப்ரகாசந காலத்தில்தான் அவை உண்டாகும். அப்படியானுல் ஜ்ஞாநத்திற்குச் சொன்ன ஸ்வரூபம் सुखादिகளுக்கும் ஆகிறதே என்னில்— सविषयமான ஆத்மகுணங்களெல்லாம் ஜ்ஞானத்தின் உட்பிரிவுகளேயாகையாலே இந்த ஸ்வரூபம் அவற்றிற்கும் வேண்டுவதே யென்க.

இவ்வளவால் ஸ்வரூபம் சோதிக்கப்பட்டது இதிலிருந்தே ஞான த்ரவ்யத்திற்கும் ஈச்வராதிகளுடைய ஜ்ஞானவிகாஸத்திற்கும் ஸர்வகால அநுவ்ருத்தியும் மற்றவர் ஜ்ஞாநத்திற்கு அப்போதைக்கப் போது ஸம்ஸாரத்தில் உண்டாய் அழிவதும், மோக்ஷத்தில் விகாஸமுண்டாய் பின்னே எல்லா காலத்திலும் அநுவ்ருத்தியும் அறியப்பட்டிருப்பதால் ஸ்த்திதி பேதமும் சொல்லப்பட்டது. ஆகையால் ப்ரவ்ருத்தியை மட்டும் நிரூபிக்கிருர் இதற்கு இத்யாதியால். ப்ரவ்ருத்தி என்பது க்ரியை யானகயால் விஷய ப்ரகாசனம் ப்ரவ்ருத்தியாகிறது. सङ्कोचविकासங்களும் இதி. ஸங்கோசம்-प्रसरण-निवृत्तिயாம் विकासம் என்பது விஷய ப்ரகாசநமே யாகையால் எதற்காக மீண்டும் கூறினதென்னில்—சரீரத்தில் தர்மபூதஞானம் காலினின்று தலைவரை பரவியிருக்கிறது. வெளி வஸ்துக்களையும் ஸ்பர்சித்துக் கொண்டு தான் போகிறது. அங்கங்கு விஷய ப்ரகாசமில்லை. ஆகையால் விஷய ப்ரகாசநமாகாத ஞானநிலையுமுண்டென்க.

தசையில் **सङ्कोचविकास**ங்களும், **आनुकूल्यप्रातिकूल्यप्रकाशमुख**த்தாலே **भोग**மென்கிற **अवस्थै**யை அடைகையும். **भोग**மாவது தனக்கநுகூலமாகவாதல் **प्रतिकूल**மாகவாதல் ஒன்றை யநுபவிக்கை, **ईश्वरविभूति**யான ஸர்வவஸ்துவுக்கும் ஆநுகூல்யம் ஸ்வபாவமாய் இப்படி ஈச்வரனும் நித்யரும் முக்தரும் அநுபவியாநிற்க, ஸம்ஸாரிகளுக்குக் **कालभेद**த்தாலும் **पुरुषभेद**த்தாலும் **देशभेद**த்தாலும் **अल्पानुकूल**மாயும் **प्रतिकूल**மாயும் உதாஸீநமாயுமிருக்கிற இவ் விபாகங்களெல்லாம் இவ் வஸ்துக்களுக்கு **स्वभावसिद्ध**ங்களல்ல. இது இவர்களுடைய கர்மங்களுக்கீடாக ஸத்யஸங்கல்பனான ஈச்வரன் இவர்களுக்கு **फलप्रदान**ம்

---

**सुखदुःख**ங்களும் **ज्ञानप्रवृत्तिविशेष**மே வேறில்லை யென்பதற்காக **आनुकूल्ये** த்யாதி. வஸ்து அனுகூலமாக ப்ரகாசிப்பதே ஸுகம்; ப்ரதிகூலமாய் ப்ரகாசிப்பதே துக்கம். இவ்விரண்டும் **भोग**மாகும் 'சந்தனம் பூசும்போது இது அநுகூலம் என்கிற புத்தி உண்டாகிறது. அதற்குப் பிறகு ஸுகத்தின் உற்பத்தி. அதன் பிறகு அதனுடைய அநுபவம்' என்பர் தார்க்கிகர். பூசும்போது இது அநுகூலம் என்று வரும் புத்தியே ஸுகம்; வேறில்லை யென்போம் நாம். உலகில் அநுகூலம் ப்ரதிகூலம் என்று இருவித வஸ்துக்களுண்டாகில் தத்தவ ஜ்ஞாநிகளுக்கு அநுகூலம் அநுகூலமாகவே, ப்ரதிகூலம் ப்ரதிகூலமாகவே தோன்றவேண்டியிருப்பதால் ஸர்வ ஜ்ஞர்களான ஈச்வர-நித்ய-முக்தாதிகளுக்கு ப்ரதிகூல ஜ்ஞாநமுமிருப்பதால் துக்க முமுண்டென்றதாகுமே என்ன அதைப் பரிஹரிக்கிறார் ஈச்வர இத்யாதியால். ஈச்வராதிகள் ப்ரதிகூல வஸ்துவைத் தங்களுக்குப் ப்ரதிகூலமாக நினைப்பதில்லை. சில கர்மிகளுக்குப் ப்ரதிகூலமென நினைப்பர். அந்த ஜ்ஞாநம் துக்கமாகாது. நீலமான வஸ்து எல்லோருக்கும் நீலமாயிருப்பதுபோல் ப்ரதிகூல வஸ்துவும் எல்லோருக்கும் ப்ரதிகூலமாகவே தானே யிருக்கவேண்டுமென்பதில்லை. **बद्ध**ருக்குங்கூட சில வஸ்து சில ஸமயம் ப்ரதிகூலமாயும் சில ஸமயம் அநுகூலமாயுமிருப்பதால் ஒன்றுக்கே இரண்டு ஸ்வபாவம் தகாவாகையால் எந்த வஸ்துவுக்கும் ஆநுகூல்யமே ஸ்வபாவம். பாபகர்மத்தினல் சிலருக்க்குச் சில ஸமயம் ப்ரதிகூலமாகத் தோன்றும். ஈச்வராதிகளுக்கு கர்மம் இல்லாதபடியால் எங்கும் தங்களுக்கு அனுகூலமென்ற ஜ்ஞாநமே = ஸுகமே என்றபடி. கால பேதத்தாலும்; சீதகாலத்தில் அநுகூலமான அக்னி உஷ்ணகாலத்தில் ப்ரதிகூலமாகிறதே. புருஷ பேதத்தாலும்; ஒட்டகத்திற்கு முள் போஜ்யமாகையால் அநுகூலம்; மாட்டுக்குப் புல் அநுகூலம். **देशभेद**த்தாலும்; புளி மிளகாய் முதலானவை சிற்சில தேசங்களில் அதிகமாக வேண்டியிருக்கும் இந்த ஆநுகூல்ய ப்ராதிகூல்யங்கள் ஔபாதிகங்கள். உபாதி யாகிறது கர்ம. ஆநுகூல்யமாவது இஷ்டமாயிருக்கை. ப்ராதிகூல்யமாவது த்வேஷிக்கப்படுகை. ஆகையால் புருஷன்தோறும் இது வெவ்வேறுகும். அசேதநங்களுக்கு இவ்வநுபவ மில்லாமையால் சேதநத்வமே இவ்வநுபவ ஸ்வரூப யோக்யதை என்ன வேண்டும். அது ஈச்வராதி

பண்ணின ப்ரகாரம். இக் கர்மபலம் அநுபவிக்கைக்குப் பத்தருக்கு स्वरूपयोग्यதையும் सहकारियोग्यதையுமுண்டு स्वरूपयोग्यதை परतन्त्रचेतनत्वம். सहकारियोग्यதை सापराधत्वம். நித்யருக்கும் முக்தருக்கும் परतन्त्रचेतनதையாலே स्वरूपयोग्यதையுண்டேயாகிலும் ईश्वरानभिमत-विपरीतानुष्ठानமில்லாமையாலே सहकारियोग्यதை இல்லை. ஈச்வரன் सर्वप्रशासिताவாய்த் தானொருத்தருக்கு शासनीयனன்றிக்கே நிற்கையாலே परतन्त्रचेतनत्वமாகிற स्वरूपयोग्यதையுமில்லை. ஸ்வதந்த்ராஜ்ஞாதிலங்கநமாகிற ஸஹகாரி யோக்யதையுமில்லை.

जीवेश्वररूपரான ஆத்மாக்களெல்லாருடையவும் ஸ்வரூபம் स्वस्मैस्वयंप्रकाशம். இத் धर्मिस्वरूपप्रकाशத்துக்குப் பத்தருக்கு முள்பட ஒருகாலத்திலும் सङ्कोच-

---

களுக்குமிருப்பதால் அவர்களுக்கு ஏன் ப்ராதிகூல்யானுபவமில்லையென்ன, ஸ்வரூபயோக்யதை வேறு. சிலருக்கே அது உண்டு. சிலருக்கு அதுவுமில்லை. அதிருக்குமிடத்திலும் இதர காரணம் கூடாதபோது கார்யம் கூடாது' என்கிறார் இக்கர்மபலம் इत्यादिயால். परतन्त्रचेतनत्वம் स्वरूपयोग्यதை. அது ஈச்வரனுக்கில்லை. நித்யருக்குமது உண்டு; ஆனால் ஸஹகாரி காரணமில்லை. அதாவது அபராதப்பட்டிருக்கை. அபராதமாவது ईश्वरानभिमतविपरीतानुष्ठानம். 'अनभिमत' 'विपरीत' என்று இரு பதங்கள் எதற்கென்னில்-विपरीतानुष्ठानமாவது आज्ञातिलङ्घनம் நிஷித்தத்தை அநுஷ்டிப்பது. இதுபோல் புண்ய கர்மாவும் बन्धकமாகையால் அதன் அநுஷ்டாநத்தை अनभिमत என்றது. अनुष्ठानம் விசேஷமாக ஆதரிக்கப் படுவது अभिमतம். ஸ்வர்காதிகளுக்காக யாகாதிகளை விதித்தது ஜீவர்களின் நிர்பந்தத்திற்காக. ஆனாலும் அது நரகாதி துக்கத்திற்குக் காரணமாகாதாகையாலே நிஷித்தாநுஷ்டான மாகாது. அதில் பூர்ண ஸம்மதி ईश्वरனுக்கில்லாமையால் अनभिमतानुष्ठानமாகும். இவ்விரு யோக்யதையுமில்லாமையால் ஈச்வரனுக்கு துக்கமில்லை. सर्वप्रशासिताவாய் என்றதால் தானாக ஏறிட்டுக் கொண்ட भक्तपारतन्त्र्यமும் சில ஸமயத்தில் அவர்களுடைய आज्ञैயின் अतिलङ्घनादिகளால் அவரிட்ட சாபாதிகளும் ईश्वरனுக்கு बन्धकारणமாகா என்றறிவித்ததாம். இவ்வளவால் சேதனவிசேஷமான சைதந்யத்தினுடைய स्वरूपस्थिति - प्रवृत्तिभेदம் விளக்கப்பெற்றது.

கீழ்ச்சொன்ன धर्मधर्मिज्ञानभेदத்தை அவற்றினுடைய साधर्म्य वैधर्म्यமுகத்தாலே ஸ்த்தாபிக்கிறார் जीवेश्वरेत्यादियाल். वैधर्म्यத்தை யறியாமல் தர்மியான ஆத்மாவையே மதாந்தரஸ்த்தர்கள் धर्मभूतज्ञानமாக ப்ரமித்தார்கள் என்பதிலே நோக்கு. स्वस्मैस्वयंप्रकाशत्वம் என்பது ஆத்மாக்களுக்குமட்டுமே. தர்மபூத ஞானத்திற்கில்லை स्वस्मैप्रकाशमानत्वம் என்றாலும் போதும். स्वयं என்றது அந்த प्रकाशம் धर्मभूतज्ञानाधीनமாகாமலுமுண்டென்பதற்காக. இதுபோல் सङ्कोचविकास மில்லாமையும் ஆத்மாக்களுக்குண்டு. ஆனால் அது ஈச்வர நித்ய ஸூரிதர்மபூதஜ்ஞாநத்திற்கு மிருப்பதாகும். அதனுடைய வைதர்ம்யமாகவும் சொல்ல வேண்டியதாகில் நிர்விகாரத்வமென்று கொள்க. அவர்களுடைய தர்மபூதஜ்ஞாநத்திற்கும் सङ्कोचप्रवृत्तिसुखानुभवाद्यवस्थैகள் உண்டாகை

𑌵𑌿𑌕𑌾𑌸ங்களில்லை. ஸர்வாத்மாக்களுடையவும் 𑌧𑌰𑍍𑌮𑌭𑍂𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑌿𑌷𑌯𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌨𑌵𑍇𑌳 யிலே 𑌸𑍍𑌵𑌾𑌶𑍍𑌰𑌯த்துக்கு 𑌸𑍍𑌵𑌯𑌂𑌪𑍍𑌰𑌕𑌾𑌶மாயிருக்கும். 𑌜𑍍𑌞𑌾𑌨𑌤𑍍𑌵மும் 𑌸𑍍𑌵𑌯𑌂𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑍍𑌵மும் 𑌧𑌰𑍍𑌮𑌧𑌰𑍍𑌮𑌿 களுக்கு 𑌸𑌾𑌧𑌾𑌰𑌣𑌂. 𑌧𑌰𑍍𑌮𑌭𑍂𑌤𑌜𑍍𑌞𑌾𑌨த்துக்கு 𑌵𑌿𑌷𑌯𑌿𑌤𑍍𑌵மேற்றம். 𑌧𑌰𑍍𑌮𑌿யான 𑌆𑌤𑍍𑌮- 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪த்துக்குப் 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌂 ஏற்றம். 𑌜𑍍𑌞𑌾𑌨𑌤𑍍𑌵மாவது—𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑌤𑍍𑌵𑌂, அதாவது தன்னுடையவாகவுமாம் வேறொன்றினுடையவாகவுமாம் ஏதேனு

---

யாலே நிர்விகாரத்வமில்லை, தர்மிக்கிராமல் தர்மபூதஜ்ஞாநத்திற்கு மட்டுமுள்ள தர்மத்தைக் கூறுகிறார் 𑌧𑌰𑍍𑌮𑍇𑌤𑌿. 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌮𑌾𑌨𑌤𑍍𑌵மாத்ரம் 𑌘𑌟𑌾𑌦𑌿களுக்குமுண்டு. 𑌸𑍍𑌵𑌯𑌂𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑍍𑌵𑌂 என்பது தர்மிக்குமுண்டு. ஸ்வாச்ரயத்திற்கு ஸ்வயம் ப்ரகாசமாயிருக்கை தர்மிக்கில்லை நித்யவிபூதிக்கும் உண்டென்னலாம். அதற்கு ஆச்ரயமான ஈச்வரனுக்கு அது ஸ்வயம் ப்ரகாசமாயிருப்பதால். அதற்காக விஷயப்ரகாசந வேளையிலே என்றது. நித்யவிபூதிக்கு விஷயமொன்று மில்லாமையால் அதற்கு இந்த தர்மம் வாராது. ஸ்வ விஷயப்ரகாசவேளையில் ப்ரகாசிக்கை அல்லது ஸவிஷயகத்வம் என்பதே தர்ம பூதஜ்ஞாநத்திற்கு அஸாதாரணமானாலும் விரிவாக ஸ்வரூபவிவேசநத்திற்காக ஸ்வாச்ரயத்துக்கு இத்யாதி. இதனால் கீழ்ச்சொன்ன ஸ்வஸ்மை ஸ்வயம் ப்ரகாசத்வமென்பது தர்மபூதஜ்ஞாநத்திற்கில்லையென்றும் தெளிவிக்கப்பட்டதாகும்— இரண்டிற்கும் பொதுவான தர்மங்களையும் அஸாதாரண தர்மத்தையும் நிஷ்கர்ஷிக்கிறார் ஜ்ஞாநத்வமும் இத்யாதியால். ஏற்றம்—அஸாதாரணம். இந்த நிரூபணத்திலிருந்து கிடைத்த நான்கையும் இங்கு விவரிக்கிறார் 𑌜𑍍𑌞𑌾𑌨𑌤𑍍𑌵 மாவது இத்யாதியால். 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑌤𑍍𑌵𑌂—𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌨𑍍𑌨𑌿𑌷𑍍𑌠𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑌾𑌰𑌣𑌤𑍍𑌵𑌂. ஆத்மாவில் ஸமந்வயம் செய்யும் போது 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍பதத்தாலே அவ்வாத்மாவையே கொள்ள வேண்டும். தர்மபூத ஜ்ஞாநத்தில் ஸமந்வயத்திற்கு 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 என்ற பதத்தாலே அதையும் அதன் விஷயமான வஸ்துக்களையும் கொள்ளலாம். இதே அதாவது இத்யாதியால் விவரிக்கப்பட்டது. ப்ரகாச காரணத்வ மென்றவிடத்தில் ப்ரகாச பதத்திற்கு ஜ்ஞாநமென்று அர்த்தமாகில், ஆத்மாவும் ஜ்ஞாநமும் ப்ரகாசிக்கும் போதெல்லாம் அதனால் ஒரு ஜ்ஞாநம் உண்டுபண்ணப்படாமையாலும் 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌨𑍍𑌨𑌿𑌷𑍍𑌠𑌪𑍍𑌰𑌕𑌾𑌶 என்றதில் ஜ்ஞாநத்திற்கு 𑌵𑌿𑌷𑌯𑌨𑌿𑌷𑍍𑌠𑌤𑍍𑌵𑌂 சொல்லவாகாதாகையாலும், ப்ரகாச பதத்திற்கு 𑌵𑌿𑌷𑌯𑌿𑌤𑍍𑌵𑌂 அர்த்தமென்றால் நம்முடைய ஸித்தாந்தத்தில் அது 𑌸𑌂𑌯𑍋𑌗— 𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌤𑍍𑌵𑌰𑍂𑌪மாகையாலே ஆத்மாவுக்குத் தன்னிடத்தில் விஷயித்வத்தை சொல்லவாகாதாகையாலும் ப்ரகாச பதத்திற்கு வேறு அர்த்தம் சொல்லுகிறார் 𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌾𑌨𑍁𑌗𑍁𑌣𑍍𑌯த்தை...என்று. 𑌵𑌿𑌷𑌯𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕த்வமே ஜ்ஞாநத்வமாகையால் ஆத்மாவுக்கு இது (ஜ்ஞானத்வம்) சேராது என்கிற ஆசங்கை இந்த நிர்வசநத்தினால் பரிஹரிக்கப்பட்டது இங்கு இவ்வாறு கருத்துக்கொள்ள வேண்டும்—𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌵𑌿𑌦𑌾𑌦𑌿 சப்தங்கள் 𑌘𑌟𑌮𑌹𑌂 ஜானாமி, 𑌸𑌂𑌵𑍇𑌦𑍍𑌮𑌿 இத்யாதி 𑌧𑌾𑌤𑍁க் களிலிருந்து ஏற்பட்டவை. அந்த 𑌧𑌾𑌤𑍁க்களுக்கு 𑌸𑌕𑌰𑍍𑌮𑌕மாயும் 𑌸𑌕𑌰𑍍𑌤𑍃𑌕 மாயும் உள்ள ப்ரகாச தர்மமே அர்த்தமாகையால் ஜ்ஞாநஸம்விதாதி

மொன்றினுடைய व्यवहारानुगुण्यத்தைப் பண்ணுகை. स्वयंप्रकाशत्वமாவது—

---

சப்தங்களும் அவற்றையே கூறுமாகையால் ஆத்மாக்களையும் நித்யவிபூதியையும் அச்சொற்களால் சொல்லலாகாது. :அதனால் அந்த ஜ்ஞாநாதி சப்தமே ஆத்மாதிகளில் கௌணமாக ப்ரயோகிக்கப்படும். அதற்காக வேண்டும் ஸாத்ருச்யமாவது ஸ்வயம்ப்ரகாசத்வம். அது தர்மபூத ஜ்ஞானத்திற்குப்போல் இதற்குமுண்டே என்றனர் சிலர். ஜ்ஞாநாதிசப்தங்கள் धातु விலிருந்து வராத रूढமான வேறு சப்தங்கள் என்றனர் மற்றும் சிலர். எந்த அர்த்தத்தில் ரூடி என்னில் ப்ரகாசகத்வமென்கிற பொதுவான தர்மத்தில் என்க. இனி வேறு சப்தத்தைக்கொள்ளாமல் ज्ञादि धातुக்களுக்கே ப்ரகாசகத்வம் பொருள் என்னலாம். அது सकर्मकமாயும் सकर्तृकமாயுமிருக்கும்போதே धातु ப்ரயோகிக்கப்படுமென்பது घटमहं இத்யாதி சொற்களின் சேர்க்கையாலேயே (समभिव्याहारத்தாலேயே) தெரியவருமாகையால் धातुவின் பொருளாக सकर्मकत्व-सकर्तृकत्वங்களைச் சேர்க்க வேண்டியதில்லை. धातुவினால் ज्ञानरूपமான ஆத்மாவை வாங்கிக்கொண்டால் अहं जानामि என்று ஆத்மாவையே அதற்கு ஆச்ரயமாகச் சொல்லவாகாது. அதனால் இங்கு தர்மபூதஜ்ஞானத்தைமட்டும் கொள்வதுஆனாலும் பொதுவாக ஜ்ஞாநமித்யாதிபத ப்ரயோகத்தில் ப்ரகாசமான ஆத்மாவையும் கொள்ளுவதில் விரோதமில்லை இப்படி मुख्यार्थமே வருகிறபடியால் गौणமென்ன வேண்டியதில்லை. मुख्यार्थம் लघुவாயிருப்பதும் இப்பக்ஷத்திற்கு साधकம். व्यवहारानुगुण्यத்தைப்பண்ணுகை इति. व्यवहारहेतुत्वं ஜ்ஞானலக்ஷணமென்று தார்க்கிகர் கூறியிருப்பதைக் கொண்டு व्यवहारानुगुण्यம் ज्ञानत्वं என்றே लघुவாகக் கூறலாமாயினும் வஸ்துவிலிருக்கும் ப்ரகாசத்தை व्यवहारानुगुण्यமென்று விவரிக்க வேண்டியிருந்தபடியால் आत्मसिद्धि-श्रीभाष्यादिகளை அநுஸரித்து आनुगुण्यத்தைப் பண்ணுகை என்று விவரித்தபடி. व्यवहारानुगुण्यமாவது व्यवहारार्हत्वं व्यवहार्यதை. அதற்கு ஹேது என்றாலும் व्यवहारहेतु என்றாலும் விசேஷபேதமில்லை.

स्वयंप्रकाशத்வத்தை விவரிக்கிறார் स्वयमिति ஆத்மா உறக்கத்திற்போலே எப்போதும் தர்மபூதஜ்ஞாநாபேக்ஷயின்றியே अहமென்று ப்ரகாசிக்கிறது. தார்க்கிகர்—முதலில் अयं घटः என்கிற ஆகாரமாய் தர்மபூத ஜ்ஞானம் உண்டாகிறது. இது व्यवसायம். பிறகு घटमहं जानामि என்று உண்டாகும் अनुव्यवसायத்தால் இது ப்ரகாசிக்குமென்பர். அது யுக்தமன்று. ज्ञान-सुखादिகள் உண்டாயிருக்கும் போது அவை உண்டா இல்லையா என்ற ஸந்தேஹம் எப்போதும் வாராமையால் முதல் ஜ்ஞாநமே घटमहं जानामि என்ற விதமாகவே யிருக்கும். अयं घटः என்பது முக்கிய விஷயமான एकदेशத்தின் अनुवादமாகும் இதை ஜ்ஞாநாந்த்ரத்தாலே அபேக்ஷயற என்றார். தர்மபூத ஜ்ஞானத்தினுடைய स्वप्रकाशங்கள் "स्वसंबन्धितया ह्यस्याः सत्ता विज्ञप्तिवादि च" என்று ஸ்ரீபாஷ்யத்திலருளிச் செய்தபடி धर्मिभूतज्ञानाधीनமாயிருப்பதால் ज्ञानान्तरापेक्षै உளதே என்னில், அதற்காகவே "தன்னை

தன்னை விஷயீகரிப்பதொரு ज्ञानान्तरத்தால் அபேக்ஷையறத் தானே ப்ரகாசிக்கை. धर्मभूतज्ञानத்துக்கு विषयित्वமாவது தன்னை யொழிந்ததொன்றைக்

---

விஷயீகரிப்பதொரு'' என்கிற விசேஷணம். धर्मिभूतज्ञानापेक्षै யிருந்தாலும் ज्ञानविषयक-अनुव्यवसायरूपज्ञानापेक्षैயில்லாமையாலே ஸமந்வயமாகிறது என்றபடி ज्ञानान्तरத்தால் அபேக்ஷை என்ற तृतीयाप्रयोगம் ஸம்ஸ்க்ருதபாஷாநுஸாரியாய் வந்தது. ஜ்ஞாநாந்தரத்தினுடைய அபேக்ஷை என்றதேயாம். ஜ்ஞானத்தால் என்பதே போதும். அந்தர பதம் வேண்டுவதில்லை. ஆகிலும் விலக்ஷண ஜ்ஞாநத்தால் என்பதற்காகவாம் இது. வைலக்ஷண்யமாவது தன்னை விஷயீகரிப்பது என்று சொல்லப்பட்டது. தர்மபூதஜ்ஞானம் வேறொன்றை விஷயீகரித்து ப்ரகாசிப்பிக்கும். தான் தன்னை விஷயீகரிக்காமலேயே பிரகாசிக்கும் என்ற வாசியைக் குறித்ததாம். இப்படி ज्ञान சப்தத்திற்கு ப்ரகாசகத்வம் பொருளானல் धर्मिभूतज्ञानத்திற்குத் தான் ப்ரகாச்யமாகிறமையால்—விஷயமாகிறதென்றதாயிற்றே. ஆகையால் எல்லா ஜ்ஞாநத்திற்கும் விஷயித்வம் பொதுவாக விருக்க, धर्मभूतज्ञानத்திற்கு அது ஏற்றமென்னலாமோ என்ன விவரிக்கிருர் धर्मेति—.

இதன் கருத்தாவது—धर्मभूतज्ञानத்திற்கே सकर्मकत्वம். ஆத்மாவில் ज्ञानशब्दप्रयोगம் स्वयंप्रकाशत्व முண்டென்றறிவிப்பதற்காக. ஆகையால்தான் "ज्ञानस्वरूपं अत्यन्तनिर्मलम्", "ज्ञानानन्दमयस्त्वात्मा" இத்யாதி ப்ரயோகங்களில் ज्ञानपद த்திற்கு स्वयंप्रकाशமென்று அர்த்தமாகையால் எதற்குப் ப்ரகாசகம் என்கிற வினவிற்கு இடமில்லை. இதை விட்டு ப்ரகாசகம் என்றே பொருள் கூறினல் धर्मज्ञान ப்ரயோகத்தில் போலே धर्मिயில் ज्ञानपद ப்ரயோகத்திலும். कस्य प्रकाशकम् எதைப் ப்ரகாசிப்பிக்கிறது என்று कर्माकांक्षै வரும். யாரும் आत्मा स्वस्य स्वगत-एकत्व-अनुकूलत्वादेश्च ज्ञानं भवति என்று ப்ரயோகிப்பதில்லை என்று வினவலாம். இதற்கு விடை பின்வருமாறு—धर्मभूतज्ञानं தனக்கும் தன்னிடமுள்ள ज्ञानत्व प्रत्यक्षत्व अनुमितित्वादि தர்மங்களுக்கும் ப்ரகாசகமா யிருந்தாலும் मम ज्ञानं स्वस्य-स्वनिष्ठज्ञानत्वादेश्च ज्ञानं भवति என்று ப்ரயோகிப்பதில்லை. ஏன் எனில், ज्ञानம் உண்டாகும்போதே தானும் தன்னிடம் உள்ள அந்த தர்மங்களும் ப்ரகாசிக்கிறது இயற்கையாகையால் அதுவிஷயத்திலே ज्ञानं कस्य ज्ञानं भवति என்கிற கேள்வி பிறாமையால் அவ்வித உத்தர வாக்யத்திற்கு அவகாசமில்லை. எனவே कस्य ज्ञानं भवति என்கிற கேள்வியால், ஜ்ஞானமானது விஷய ப்ரகாச காலத்திலேயே ப்ரகாசிப்பதால் எந்த விஷயத்திற்கு ப்ரகாசகமாகிறது என்றே கேட்டதாகும், அப்போது घटस्य ज्ञानं पटस्य ज्ञानம் என்று உத்தரமாகும். அதுபோல் தர்ம பூதஜ்ஞானமானது जानाति என்று கர்த்தாவுடன் சேர்த்து ப்ரயோகிக்கப்படுகிறபடியால் யாருக்கு ஜ்ஞாநம் என்று கர்த்தாவின் ஆகாங்க்ஷையுமுண்டு "ज्ञानानन्दमयस्त्वात्मा" என்று ஆத்மாவே ஜ்ஞாநமென்று கூறும்போது ஆத்மாவானது மண் நீர்முதலானவை போலே स्वनिष्ठமாய்

அதாவது **साचार**மாகவும் ஸகர்மகமாகவுமன்றியே தோற்றுகின்றபடியால் 'ஆத்ம ஸ்வரூப ஜ்ஞானத்திற்கு ஆச்ரயமுமில்லை கர்மாவுமில்லை. ஆத்ம ஸ்வரூப ஞானம் ஒரு விஷயத்தை ப்ரகாசிப்பிக்கிறதன்று என்று தெரிந்தால் அப்போது **ப்ரகாசத்வம்** என்கிற ஜ்ஞாநத்வம் எப்படி ஸித்திக்குமென்று கேள்வி வர, அது—வேறொன்றை ப்ரகாசிப்பிக்காவிடினும் தன்னை ப்ரகாசிப்பிக்கையாலே யாகக் கடவதென்று முடிவதால், அக் கேள்வி நிவ்ருத்தியடைகிறது. ஆக ஸ்வயம் ப்ரகாசமாகும் அம்சம் தவிர வேறொன்றே **कस्य ज्ञान**மென்று ஆகாங்க்ஷிக்கப்படும். அதுவே கர்மகாரகமாகும். இதே தன்னையொழிந்ததொன்றை என்ற சொல்லில் கருதியதாம். அது தனக்கு **पृथक्सिद्ध**மான வெளி வஸ்துவுமாகும், **अपृथक्सिद्धधर्मि**யான ஆத்மாவுமாகும். ஸ்வயம் ப்ரகாசமான **ज्ञानत्व प्रत्यक्षत्वादि**களைக்காட்டிலும் வேறாய் தர்மபூதஞானத்திலிருக்கிற **नित्यत्व द्रव्यत्वादि** நாநா தர்மமுமாகும். அவற்றை ப்ரகாசிப்பிக்கையே ஜ்ஞானத்திற்கு **विषयित्वம்**. அதே **सविषयकत्वம் सकर्मकत्वம்**.

தன்னையொழிந்ததொன்றை என்பதற்கு **स्वभिन्न**மென்று பொருளாலும் **"नान्यत् श्रृणोति नान्यत् विजानाति स भूमा"** இத்யாதி ச்ருதிகளில் **उभयविभूतिविशिष्ट भूमाख्यब्रह्मभिन्न**மென்றபோது **विशिष्टब्रह्मान्तर्गत**மான **विशेष्यविशेषणोभय**த்தைக்காட்டிலும் வேறானதே **अन्य**சப்தத்திற்குப் பொருளாகிறதுபோல் தன்னை என்கிற பதத்தாலே **स्वयंप्रकाशत्वधर्मविशिष्टधर्मि**யான தர்ம பூதஜ்ஞானத்தை எடுத்தால் **तद्भिन्न**மென்றபோது அந்த விசேஷணவிசேஷ்யங்கள் தவிர மற்றவையென்றே அர்த்தமாகக் குறையில்லை. ஆக **तद्भिन्नत्व**மாவது இங்கு **तदनन्तर्गतत्वம்** ; **तद्विषयक-प्रतीत्यविषयत्वம்**. இதைவிட்டு **स्वपृथक्सिद्ध**மென்ற பொருள் கொண்டால் **धर्मभूतज्ञाननिष्ठद्रव्यत्वनित्यत्वादि** தர்மம் க்ரஹிக்கப்படாதொழியும்.

ஆக தர்மபூதஜ்ஞானம் இப்படி ஸவிஷயகம். விஷயத்வமாவது **ज्ञानकर्मत्वம்**. **धर्मिभूतज्ञानம் स्वयंप्रकाश** மாகாததொன்றைப் ப்ரகாசிப்பிக்கிற தன்றாகையாலே ஸவிஷயகமன்று. ஏகத்வ-அநுகூலத்வ–ப்ரத்யக்த்வ விசிஷ்டமாய் ஆத்மா ஸ்வயம்ப்ரகாசமாகிறது. மற்ற **नित्यत्व अणुत्व निरवयवत्वा**திகளான அப்ருதக் ஸித்த தர்மங்களும் அவற்றுடன் சேர்த்து க்ரஹிக்கப்படும் ஆத்மாவும் தர்மபூத ஜ்ஞானத்திற்கு விஷயமாகுமென்றதாயிற்று.

ஏகத்வாதி விசிஷ்டமாய் ஆத்மா ஸ்வயம் ப்ரகாசம் என்பதற்கு உபநிஷத் பாஷ்யகாரர் செய்த நிர்வாஹம் **एकत्वादिधर्म**ங்களும் ஆத்மாவும் தர்மியினாலேயே ப்ரகாசிப்பிக்கப்படுமென்றது. ஸாக்ஷாத்ஸ்வாமி நிர்வாஹமாவது **धर्मि स्वयंप्रकाशि**க்கிறுப்போலே **एकत्वादिधर्म**ங்களும் **स्वयंप्रकाशि**க்கின்றன என்றது இப்பக்ஷத்தில் **विरोधपरिहारादि** க்ரந்த விரோதம் வருமென்று ஆக்ஷேபித்து, தாமே, ஸாராஸ்வாதிநியில் பரிஹரித்திருக்கிறார். **'प्रत्यक्त्वैकत्वादिविशिष्टतया तु स्वप्रकाशता'** என்கிற வாக்யம் ஸாராஸ்வாதினிக்கு விருத்தமென்றனர் சிலர். இந்த வாக்யமே ஸாராஸ்வாதிநியில் தமக்கநுகூலமாக எடுக்கப்பட்டிருக்கிறது. விசிஷ்டம் ஸ்வயம் ப்ரகாசமென்றால் விசேஷ்யம் ஸ்வயம் ப்ரகாசம்,

விசேஷணம் விசேஷ்யத்தாலே प्रकाश्यமென்றதாகுமோ? விசேஷ்யம் போல் விசேஷணமும் தானே ப்ரகாசிக்குமென்று தானே ஸித்திக்கும் लक्ष्मीविशिष्ट-नारायणன் स्वतः पूज्यன் என்றால் நாராயணனுக்கு ஸ்வத: பூஜ்யத்வம் லக்ஷ்மிக்கு नारायणाधीनம் பூஜ்யத்வம் என்று கிடைக்குமோ. அங்கு நாராயணனிடத்தில் பூஜ்யத்வம் சொல்லப்படும்போது நாராயணனையும், லக்ஷ்மிக்குச் சொல்லும் போது லக்ஷ்மியையும் स्वतः என்கிற பதத்தாலே க்ரஹிப்பது போல் இங்கும் ஸ்வயம் என்கிற பதத்தினாலே தர்மிக்கு ப்ரகாசம் சொல்லும்போது தர்மியையும். ஏகத்வாதிகளுக்கு ப்ரகாசம் சொல்லும்போது அந்த தர்மங்களையுமே க்ரஹிப்பதல்லவோ ஸ்வரஸமாகும் என்று இவர் கருத்து. தர்மியினுடைய ப்ரகாசத்திற்கு தர்மி மாத்ரம் காரணமாவதுபோலன்றி தர்மங்களின் ப்ரகாசத்திற்கு தர்மமும் காரணம் தர்மிஸம்பந்தமும் காரணமாகையாலே விரோத பரிஹார க்ரந்தமும் மற்ற க்ரந்தமும் இப் பக்ஷத்திற்கு बाधक மாகா என்றங்கே நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

இங்கு ஸங்கரஹமாகச் சிறிது ஆராயப்படுகிறது. 'धर्मिभास्यत्वம் என்பதற்கு धर्म्यधीनविषयताश्रयत्वம் अर्थம்; ஆக धर्मी धर्मविषयकமாகிறது. धर्मभास्यं என்றால் தனக்குத்தானே விஷயம். धर्मம் தன்னைக் கொண்டு ஸவிஷயமாகிறது என்று தார்க்கிக ரீதியில் பொருளுரைப்பதானால் தர்மஞானத்திற்குப் போலே தர்மிக்கும் ஸ்விஷயகத்வமிருப்பதால் எதற்காக விஷயித்வம் धर्म-भूतज्ञानத்திற்கு ஏற்றமென்று சொல்ல வேண்டும். தான் இப்படி ஏற்றமாகச் சொன்னதை நிர்வஹிப்பதற்காக, 'தன்னை யொழிந்ததொன்றை ப்ரகாசிப்பிக்கை' என்று சிலவற்றை விலக்கி ஏன் பரிஷ்கரிக்க வேண்டும் இதைவிட எல்லாவற்றிற்கும் விஷயித்வமுண்டு. ஆனால் தன்னை விஷயீகரிப்பது धर्मी; தர்மபூத ஜ்ஞாநம் தன்னைவிட வேறு தர்மியையும் என்ற வாசியுளது என்றே கூறலாமே. அவ்வாறு கூறுமையால் இந்த ஸ்ரீஸூக்தியில் தர்மபூதஜ்ஞாந கர்மத்திற்கன்றி மற்றதற்கு விஷயத்வம் கிடையாதென்ற கருத்துத் தெளிவாகிறது.

தார்க்கிக மார்கத்தை ரஸித்த நவீந மஹான்களின் வ்யாக்யாநங்களில் எங்கும் விஷயதாசப்த घटितமாகவே பரிஷ்காரங்கள் காணப்படுகின்றன. நம் ஸித்தாந்தத்தில் விஷயத்வமாவது ज्ञानसंयोगம் என்பதும் அவர்களறிந்ததே—ज्ञानरूपद्रव्यத்திற்கு घटपटादिद्रव्यங்களோடு संयोगமும் அவற்றின் धर्मங்களோடு संयुक्ताश्रितत्वமும் உண்டு. தன்னோடு அதற்கு ஸம்யோகமும் தன் தர்மத்தோடு संयुक्ताश्रितत्वமும் வாரா. அதுபோல் धर्मिभूतज्ञानத்திற்கு அதனால் ப்ரகாச்யமான அத்துடன் संयोगம் வாராதாகையாலே அதை விஷயத்வமென்னலாகாது. அதுபோல் அதன் एकत्वानुकूलत्वादिகளையும் संयुक्ताश्रितங்களாகச் சொல்வாகாமையாலே அவை அதற்கு விஷயம் என்னவொண்ணாது. நித்யத்வ-ஏகத்வாதி விசிஷ்டமாக ஆத்மா தன்னுடைய தர்மபூத ஜ்ஞாநத்தால் ப்ரகாசிக்கும்போது அதற்கு விஷயமாகிறதே: स्वापृथक्

सिद्धज्ञानத்தோடு தனக்கு ஸம்யோகம் கூடுமா पृथक्सिद्ध ஸ்த்தலத்தின் தானே ஸம்யோகம் என்ற ஆசங்கை வாராமைக்காக न्यायतत्त्व க்ரந்தத்தில் பொதுவாக संविद्दूरत्वं प्रकाशः என்னப்பட்டது. அதாவது ज्ञाननैरन्तर्यம். नैरन्तर्यமே ஸம்யோகம் என்கிற பக்ஷம் பௌத்தரிசைந்தது. இங்கு நம் மதத்தில் ஸம்யோக பர்யவஸிதமான நைரந்தர்யத்தையும் அது வாராத விடத்தில் சுத்த நைரந்தர்யத்தையும் கொள்ளலாமென்று திருவுள்ளம். அதற்குப் பிறகு அதைவிட்டு வ்யவஹார க்ஷமத்வமே ப்ரகாசமென்று ஆத்மஸித்தியிலும் அருளப்பெற்றது. भानं भासनं प्रकाशः என்ற சொற்களுக்கு प्राकट्यं ज्ञातता அர்த்தமென்றனர் மீமாம்ஸகர். ஜ்ஞாநவிஷயத்வமே ஜ்ஞாததை என்று அதை மறுத்தனர் மற்றவர். அந்த விஷயத்வம் ஸம்வித்दूरत्वமென்ருர். ஸ்வயம் ப்ரகாசத்திற்கும் प्रकाशமென்பது வரவேணுமே என்று பிறகு வ்யவஹாரக்ஷமத்வமென்ருர். ज्ञानं प्रकाशयति 'घट'மென்பதை நிர்வஹிப்பதற்காகவுமாம் இது.

ஆக भानம் भासनம் प्रकाशம் இத்யாதி சொற்களுக்கு வ்யவஹார க்ஷமத்வம் அர்த்தமே யல்லது விஷயித்வ மர்த்தமல்ல. விஷயத்வமும் धर्मभूतज्ञान-कर्मत्वமல்லது வேறல்ல அதனுல் स्वप्रकाशव्यतिरिक्तविषयத்திலேயே ஜ்ஞாநகர்மத்வமிருப்பதால் விஷயித்வமேற்ற மென்பது கல்பனையல்ல; ஸ்வதஸ்ஸித்தமானதே. ஆக ப்ரகாசகமென்பதற்கு व्यवहारानुगुण्यकारणமென்று அர்த்தமானுல் அது தர்மிக்குமட்டுமா தர்மத்திற்குமுண்டா என்று பார்க்கவேண்டும் व्यवहारे व्यवहर्तव्यं कारणமென்று शशविषाणादि அஸத் வ்யவஹாரமில்லாமையை நிர்வஹிப்பதற்காகச் சொல்வது ஆனுல் வ்யவஹரிக்கப்பட வேண்டிய घटादि வஸ்து தெரியாத போது வ்யவஹாரமுண்டாகிறதில்லையாகையால் व्यवहर्तव्यविषयज्ञानं कारणமென்கிறது जडமான வஸ்துவின் வ்யவஹாரத்திற்கு ஜ்ஞாநாபேக்ஷை யிருந்தாலும். अजडமான ஆத்மாதி வஸ்துவின் ஸத்தாமாத்ரத்திலேயே வ்யவஹாரம் கூடுமாகையால் அங்கே व्यवहर्तव्यज्ञानं कारणமென்கிற கல்பனை அநாவச்யகம். जडமான வஸ்துவிஷயத்தில் வ்யவஹாரத்திற்காக सत्तातिरिक्तமான விஷயதாரூப ப்ரகாசம் வேண்டுமென்ருர் அப்புள்ளார் न्यायकुलिशத்தில். व्यवहर्तव्यமான வஸ்து வர்த்தமாநமாகாமல் भूतமாக அல்லது भविष्यத்தாகவானுல் அது வ்யவஹாரத்திற்கு முன் க்ஷணத்தில் இராமையால் அதனுடைய ஜ்ஞாநமே காரணமென்று சொல்லவேண்டும். இப்படி யிருக்க எல்லா இடத்திலுமே வ்யவஹர்தவ்ய விஷயகமான ஜ்ஞாநமே காரணமென்றும் ஸ்வயம்ப்ரகாச விஷயத்திலே வ்யவஹர்தவ்யபதத்தினுல் போல் तद्विषयकज्ञानபதத்தாலும் அதையே வாங்கிக் கொள்ளலாமென்றும் தனக்கே தான் விஷயமாகுமென்றும் சொல்வது யுக்தமன்று. கார்ய காரணபாவம் गुरुவாயிருப்பதோடு தனக்குத் தான் விஷயமாகாததாலும் இது சொல்லக்கூடியதன்றே. "अङ्गुल्यग्रवत् स्वात्मस्पर्शस्य अशक्यत्वात्" விரல் நுனியால் அந்த நுனியையே தொடமுடியுமோ; அது

போல் தன்னைத் தொடவாகாத ஆத்மாவுக்குத் தான் விஷயமாகாது என்றும் அருளினர். ஆகையால் ஜ்ஞாநமான தனக்கு வ்யவஹர்தவ்ய விஷயகத்வமில்லை

இப்படி வ்யவஹர்தவ்யம் காரணமாகில் ஏகத்வ-அநுகூலத்வாதி-தர்மங்களும் ஆத்மாவும் வ்யவஹர்தவ்யமாயிருப்பதால் அவையெல்லாம் வ்யவஹாரானுகுண்ய ஹேதுவாகுமே. அப்பொழுது எல்லா தர்மமும் ஸ்வயம் ப்ரகாசமாகுமாகையால் ஸர்வார்த்தஸித்தியில் "धर्मभूतज्ञानं द्रव्यं स्वयंप्रकाशत्वात् आत्मवत्" என்ற அநுமாநம் தப்பாகும். एकत्वादिகளிலும் ஸ்வயம்ப்ரகாசத்வமிருப்பதால் அங்கே த்ரவ்யத்வமில்லாமையால் ஹேது துஷ்டமாகிறதே என்னில்— இங்கே சிறிது விளக்கிவிட்டு ஹேதுவை நிர்துஷ்டமாக நிரூபிப்போம். एकत्व-अनुकूलत्वादिகள் ஸ்வயம்ப்ரகாசமானாலும் इदमेकत्वम् (இது ஏகத்வம்) என்றவாறு விசேஷ்யமாகத் தனியே தோன்றுவதில்லை. ஆத்மா என்கிற धर्मीயும் இந்த धर्मங்களும் इदमित्थमென்று விசிஷ்டமாகவும் धर्मिविशेष्यक மாகவுமே ஸ்வரஸமாய் வ்யவஹரிக்கப்படும். அதுபோல் தர்மபூத ஜ்ஞாநமும் அதிலுள்ள ज्ञानत्वप्रत्यक्षत्वादिகளான தர்மங்களும் धर्मभूतज्ञानविशेष्यकமான வ்யவஹாரத்திற்கே ஹேதுவாகும். मीमांसाशास्त्रदीपिकैயில் अयं गौः என்றே ஜ்ஞாநமுண்டாகுமே யல்லது अत्र गोत्वम् என்றுண்டாவதில்லை. தர்மதர்மிகள் தோன்றும் போது தர்மங்கள் விசேஷணமாகவும் தர்மி விசேஷ்யமாகவும் தோன்றுவது இயற்கையென்று சொன்னதை இதற்கு த்ருஷ்டாந்தமாகக் கொள்க. ஆகையாலேயே வ்யவஹர்தவ்யமான தர்மங்களின் ப்ரகாசம் धर्म्यधीनமாவது போல் தர்மிக்கு விசேஷணமாகத் தோன்றுவதாலும் धर्मங்களுடைய ஸத்தா स्थिति கார்யங்கள் धर्म्यधीनங்களாகையாலும் आत्माद्यधीनமாகவுமாகிறது. அதனால்தான் विरोधपरिहारग्रन्थத்தில் "आनुकूल्यமென்கிறதான தர்மம் ஆத்மஸ்வரூப ப்ரகாசத்தாலே எப்பொழுதும் தோன்றும்" என்றது. ஆத்மஸ்வரூபத்திற்கும் धर्मங்களுக்கும் சேர்த்தே வ்யவஹாரம். அவ் வியவஹாரம் ஆத்மா தர்மியாகையாலே तदधीनம் = அதற்கு அதினமுமாகிறது. एकत्वानुकूलत्वादिविशिष्ट-आत्मस्वरूपம் विशिष्टव्यवहारத்திற்குக் காரணமென்றால் விசேஷ்ய விசேஷணங்களில் அந்தந்த அம்சவ்யவஹாரம் அந்தந்த அம்சத்திற்கு அதீனமென்றும் விசேஷ்யத்திற்கும் அதீனமென்றும் சொன்னதாகிறது. ஆகையால் ஸ்வயம் ப்ரகாசமென்றதாலே स्वविषयक धर्मभूतज्ञानानधीन-प्रकाशமென்று சொன்னதாகுமே யல்லது धर्म्यधीनत्वமில்லை யென்றதாகாது ஸ்வயம் ப்ரகாசமான தர்மபூதஜ்ஞானத்திற்கும் ப்ரகாசம் अहं जानामि என்று விசிஷ்டாகாரமாகிறபடியால் தர்மியான ஆத்மாவுக்கும் அதீனமே யென்று आत्मसिद्धिயில் அருளினர். "स्वसंबन्धितया ह्यस्याः सत्ता विज्ञप्तितादि च" என்கிற श्रीभाष्यसूक्तिயும் காண்க.

ஆகிலும் एकत्व-अनुकूलत्वादिகள் போல सविषयकज्ञानம் धर्मமானாலும் ஆத்மா

வுக்கு விசேஷணமாகவே தோன்றவேண்டுமென்பதில்லை ज्ञानत्वप्रत्यक्षत्वादि தர்மங்களுக்கு தர்மியாய் த்ரவ்யமாயிருப்பதால் விசேஷ்யமாகவும் தோன்றும். அதனால் घटमहं जानामि என்றாற்போலே मम घटज्ञानம் என்பதுமுண்டு.

तथाच धर्मभूतज्ञानं द्रव्यं स्वयंप्रकाशत्वात्' என்கிற அநுமாநத்தில் स्वविशेष्यकव्यवहारहेतुत्वात् स्वनिष्ठव्यवहारविशेष्यत्वानुगुण्यहेतुत्वात् என்றது ஹேதுவாகையால் एकत्वादि धर्मங்களில் இதில்லாமையால் ஹேது நிர்துஷ்டமே सर्वार्थसिद्धियில் (2-7-) प्रत्यक् மென்கிற ச்லோகத்தில் நமது अलभ्यलाभமென்கிற உரையிலும் வேறிடத்திலும் இதற்கு விரிவாம். விஷயித்வமேற்ற மென்பது விவரிக்கப் பெற்றது.

மேலே "ப்ரத்யக்த்வமேற்றம்" என்பதற்கு விவரணம். தான் தவிர வேறு வஸ்துக்களும் வேறு ஆத்மாக்களும் पराक्काகிறபடியால் प्रत्यक्त्वம் ஓர் ஆத்மாவுக்குத்தானே வரும். पराग्भिन्नं தானே प्रत्यक्. ஆகையால் सर्वधर्मिभूत ஜ்ஞானத்திற்கும் அது ஏற்றமாகுமோ? அதற்காக स्वयप्रकाशत्वமே प्रत्यक्त्व மென்றால் அது धर्मभूत ஜ்ஞானத்திற்குமாவதால் ஆத்மாவுக்கு ஏற்றமாகாதென்று சங்கிக்கவேண்டா. அது ஸர்வ ஆத்மாக்களுக்குமுண்டு. அதாவது स्वस्मैभासमानत्वம். ஒவ்வோர் ஆத்மாவும் அததற்காக ப்ரகாசிக்கிறபடியால் எல்லாவற்றிற்குமது உண்டு. தார்க்கிகர் स्वविषयकज्ञानाश्रयत्वம் प्रत्यक्त्वம் என்றனர். அந்தந்த ஆத்மா அததுவிஷயமான தர்மபூதஜ்ஞானத்திற்கு ஆச்ரயமானபோது அது இருப்பதால் लक्षणसमन्वयம். இதுபோல் अहमिति व्यवहारकर्तृत्वं प्रत्यक्त्वம் என்றும் கூறுவர். ज्ञानமோ व्यवहारமோ இல்லாத காலத்திலும் प्रत्यक्त्वமிருப்பதால் அதை ஸுகமாக நிர்வஹிப்பதற்காகவும் நாம் ஸ்வயம் ப்ரகாசத்வம் இசைந்திருப்பதாலும் भासमानत्वம் प्रत्यक्त्वம் என்போம். भासमानत्वமானது விஷயதாச்ரயத்வமன்று. தர்மபூதஜ்ஞானமில்லாதபோது விஷயத்வம் கிடையாதென்று முன்பே சொன்னோம். ஆகையால் व्यवहारानुगुण्यமே भासमानत्वம். व्यवहारप्रयोजकधर्माश्रयत्वமுமாம். स्वयंप्रकाशமான வஸ்துக்களுக்கு धर्मभूतज्ञानविषयत्वமின்றியே ஸத்தாமாத்ரத்தாலேயே வ்யவஹாரமும் संशयविपरीतज्ञानाभावமும் உண்டென்றதும் முன்பே சொல்லப்பட்டது. இந்த भासमानत्वம் धर्मभूतज्ञानादिகளுக்கும் வருகிறபடியால் स्वस्मै என்று லக்ஷணத்தில் சேர்த்தது. स्वस्मै-स्वोद्देश्यकமான-स्वगतफलத்திற்கு ஹேதுவான भासमानत्वம் என்றதாயிற்று. स्वपदத்தினாலே भासमानத்தை க்ரஹிப்பது. अचेतनवस्तुக்களெல்லாம் சேதநனுக்காக ஏற்பட்டபடியால் अचेतनभानத்தின் फलन் अचेतनத்திற்குமில்லை. फलமாவது புருஷார்த்தம். ஒவ்வொரு ஆத்மாவும் வேறு சேதநனால் தன்னுடைய धर्मभूतज्ञानத்தாலே ग्रहिக்கப்படும்போது அவனுக்காக भासिக்கிறபடியாலே அதைக்கொண்டு ப்ரத்யக்த்வம் சொல்ல முடியாது. தன் ஜ்ஞாநத்தால் தனக்கு भासिக்கும்போது தனக்கு ப்ரத்யக்த்வம் சொல்லலாம். ஆனாலும் ஜ்ஞாநமில்லாத காலத்திலும் நிர்வஹிப்பதற்

**भजनाद्यवस्थाविशेषविशिष्ट**தையை யிட்டுச் சிலவற்றை அநித்யங்களென்கிறது. அழிந்ததோடு ஸஜாதீயங்களான **अवस्थान्तर**ங்கள் மேலும் முழுக்க வருகையாலே **प्रवाहनित्य**ங்களென்று சொல்லுகிறது.

---

வுக்கு அல்லது ஜகத்துக்கே நாசம் சொல்வது கூடுமோவென்னில் உத்தரம் நாமாந்தரேத்யாதி. த்ரவ்யம் நித்யமாயினும் அதில் வெவ்வேறு அவஸ்தைகள் வந்துகொண்டிருக்கும். உதாஹரணம். மண்ணுண்டை குடமாகிறது. உடைந்தால் ஓடு சூர்ணம் தூள் என்றவாறுகும். இப்படி வெவ்வேறு பேர் பெறும்படியான அவஸ்தையோடு சேர்ந்த த்ரவ்யத்தை கார்யமென்கிறது. அதற்கழிவுண்டு—உண்டையழிந்தது குடமழிந்ததென அநுபவஸித்தமிறே. முன் த்ரவ்யத்திற்கு நாசமில்லை யென்றதற்கு, த்ரவ்யஸ்வருபத்திற்கு உத்தரகாலாஸம்பந்தமில்லை என்று பொருள். இங்கே நாசமென்பது பூர்வாவஸ்தா விரோதி உத்தராவஸ்தை. இப்படி அவஸ்தை மாறுவதால் அநித்யமென்கிறது. ஆனாலும் இந்த நாசத்தையாவது த்ரவ்யத்திற்குச் சொல்ல வேண்டாவோ எனில், பரிணமங்களெல்லாம் ப்ரவ்ருத்தி சப்தார்தமாகையாலே இவை சொல்லப்பட்டனவேயாம். இப்படி வஸ்துக்கள் அநித்யமாகில் நித்யமான வேதம் இவற்றைச் சொல்லக்கூடுமோ. சொன்னால் அநித்யார்த்த ஸம்யோகமென்ற தோஷமேற்பட்டு அதுவும் அநித்யமாகுமே. அநித்யமானாலும் ப்ரவாஹநித்யங்கள் என்னில், இது தவறு. ப்ரவாஹம் நித்யமாகிலன்றோ அது போலிவை நித்யமாகும் என்ன, உத்தரம் அழிந்ததோடு இதி. ப்ரவாஹம் மேன்மேல் ப்ரவஹிக்கிறுப் போலே இவையும் மேல்மேல் ப்ரவஹிக்கிறபடியால் நித்யமாகும். சில காலம் ஆற்றில் ப்ரவாஹமில்லாமற்போனாலும் வருஷந்தோறும் ப்ரவாஹம் வருகிறபடியால் ப்ரவாஹம் நித்யமென்கிறது. அதுபோல் ஜங்கமஸ்தாவராதி வஸ்துக்களில் அந்தந்த வ்யக்தி அழிந்தாலும் அதே ஜாதியில் வேறு வ்யக்தி வந்து கொண்டே யிருப்பதால் இவையும் நித்யம். சில காலம்மட்டும் தொடர்ந்து வந்து பின்னே எப்போதும் இதைப் போன்ற வஸ்து வாராதாகில், அது ப்ரவாஹ நித்யமாகாது. ஸ்ருஷ்டி காலத்தில் இருந்து ப்ரளய காலத்திலிராமற்போனாலும் மறு ஸ்ருஷ்டியில் வருகிறபடியால் எல்லாம் நித்யமே, வஸந்த ருதுவில் உண்டாகுமவை வேறு ருதுக்களி லில்லாமற் போனாலும் மேன்மேல் வஸந்தருதுக்களில் வருகிறபடியால் ப்ரவாஹ நித்யமே யல்லவோ. ஆக ப்ரவாஹநித்யத்வமாவது தான் அழிந்தாலும் தன்க்கு உத்தரகாலமெல்லாம் தனக்கு ஸஜாதீயமேதேனும் இருக்கை என்னவொண்ணுதே, ஸ்ருஷ்டிக்கு உத்தரமான ப்ரளயத்தில் ஸஜாதீய வஸ்துவில்லையே யென்றாலும், குற்றமில்லை. ப்ரவாஹ நித்யத்வமாவது ஏகஜாதீயமான வ்யக்திகளெல்லாம் தமக்கு உத்தரகாலத்தில் தஜ்ஜாதீய வஸ்துவை உடைத்தாயிருக்கை. **तज्जातीयप्रवाहनित्यत्वं नाम तज्जात्याश्रयत्वव्यापक तदुत्तरकालवर्तितज्जातीयकत्वम्। न तु तदुत्तरकालत्वव्यापकतज्जातीयकत्वम्.** ஆகையால் முழுக்க என்பதற்கு

இப் பதார்த்தங்கள் எல்லாவற்றினுடையவும் स्वरूपस्थितिप्रवृत्तिभेदங்கள் ஈச்வரனுக்கு ஸ்வாதீநங்களாயிருக்கையாலது—ईश्वरसत्तையையும் ईश्वरेच्छையையு மொழிய இவற்றுக்கு ஸத்தாதிகள் கூடாதொழிகை. ஆகையால் ஸமஸ்த வஸ்துக்களுக்கும் स्वभावसिद्धानुकूल्यம் ईश्वरेच्छायत्तம். இத்தாலே ஈச்வரனுக்கும்

---

ஒவ்வொரு உத்தரகாலத்திலும் என்று பொருளல்ல. அந்தந்த வ்யக்தியின் காலத்திற்குப் பிற்காலத்திலும் என்று பொருள்.

மோக்ஷத்தில் தர்மபூத ஜ்ஞாநவிகாஸம் என்ற அவஸ்தை யுண்டானதே பின்னே எப்போதுமிருப்பதால் ப்ரவாஹ நித்யமாகாது. ஒரு க்ஷணத்திலும் அவஸ்தாந்தரமில்லையே, ஒரே அவஸ்தை தானே. பிண்டத்வம் கடத்வம் சூர்ணத்வம் இத்யாதி விஜாதீய அவஸ்தையாகில் ப்ரவாஹ நித்யமென்ப தில்லை. ஆகையால் ஸஜாதீயங்களான என்ற விசேஷணம். ப்ரதாந ப்ரதி தந்த்ராதிகாரத்தில் ஸ்வரூபஸ்த்திதி ப்ரவ்ருத்திகளுக்கு ஸங்கல்பாதீநத்வமும் சொல்லப்பட்டதே, இந்த ஸம்ப்ரதாய ஸ்ரீஸூக்தியில் ஸ்வாதீந என்று ஸங்கல்பாதீநத்வத்தை விட்டது ஏன் என்ன. ஸ்வாதீநபதத்தில் அதுவும் கருதப்பெற்றதே யென்கிறார். यदि ईश्वरसत्ता ईश्वरेच्छा च न स्यात्, एषां स्वरूप-स्थितिप्रवृत्तयो न स्युः என்று தர்க்கரூபமாக ப்ரயோகிக்க வேண்டும். இது நித்யவஸ்துவின் ஸத்தாஸ்திதிகளுக்கும் வரும்,

ஸ்வரூப பதத்திற்கு ஸ்வரூபநிரூபக தர்மங்களோடும் நிரூபிதஸ்வரூப விசேஷணங்களோடும் சேர்ந்த தர்மி என்றர்த்தமாகையால் அந்த தர்மங் களைச் சேர்ந்த ஆநுகூல்யாதி தர்மங்களை மேலே விசாரிக்கிறார் ஆகையால் இதி. இவ்வாநுகூல்ய விசாரம் கீழே தர்மபூதஜ்ஞாநத்தின் ப்ரவ்ருத்தியான போகத்தை விசாரிக்கும்போதே செய்யப்பட்டிருப்பதால் மீண்டும் இங்கு எதற்கு எனில், அங்கே ஆநுகூல்யாநுபவம் ப்ராதிகூல்யாநுபவமென்கிற போகவிபாகத்திலே நோக்கு. ஆநுகூல்யம் ஸ்வாபாவிகம் என்பதை ஸித்த மாகக் கொண்டு அங்கே அது சொல்லப்பெற்றது. இங்கே எது ஸ்வாபாவிகம், எது ஔபாதிகம் என்பதை ஸ்தாபிப்பதற்காக இவ் விசாரம். எல்லாம் ஈச்வரேச்சாதீநமென்றால் வஸ்துக்களுடைய ப்ராதிகூல்யம்போலே ஆநு கூல்யமும் ஈச்வரேச்சாதீநமாகையால் ஸ்வாபாவிகமாகுமோ. இச்சை யென் கிற உபாதி மூலமாகத் தானே அது ஏற்படுகிறது என்கிற கேள்விக்குப் பரிஹாரமாக ஆகையால் இதி. ஸ்வாபாவிகமாய்க் கொண்டே இச்சா தீநமுமாகலாம். கர்மாவைப் போன்ற நிலையில்லாத காரணத்தினால் சில ஸமயம்மட்டும் வருவதே ஔபாதிகமாகும். ஈச்வரேச்சை அத்தகைய உபாதி யன்றென்றபடி. மேலும் இவ்வாக்யத்துக்குக் கருத்தாவது—ஈச்வரேச்சாதீநமல் லாமல் ஈச்வர ஸத்தாதீநமாகமட்டும் கொண்டால் ப்ராதிகூல்யந்தான் ஸ்வா பாவிகமாகட்டுமே என்று கேள்வி எழும். இச்சாதீநமென்றால் தனக்கொன்று ப்ரதிகூலமாக வேண்டுமென்று இச்சிக்கமாட்டானாகையாலே ஆநுகூல்யமே

நித்யருக்கும் முக்தருக்கும் ஸர்வமு மநுகூலமாயிருக்கும். பத்தருக்குக் கர்மாநுரூபமாகப் புருஷபேதத்தாலும் காலபேதத்தாலும் இவற்றில் प्रातिकूल्यங்களும் अल्पानुकूल्यங்களும் நடவாநிற்கும். இப் பத்தர்தங்களுக்கும் स्वात्मस्वरूपம் सर्वदा अनुकूलமாக ईश्वरेच्छासिद्धம். இப்படி அநுகூலமான ஆத்மஸ்வரூபத்தோடே एकत्वभ्रमத்தாலும் கர்மவசத்தாலுமிறே ஹேயமான சரீரம் ज्ञानहीनருக்கு

---

ஸ்வாபாவிகமாகிறது. ஆகையால் இச்சாதீநத்வமும் ஸம்ப்ரதாய ஸ்ரீஸூக்திக்கு அர்த்தமென்று ஸ்தாபித்தபடி. இப்படி தனக்கு எல்லாமநுகூலமான படியால் தன்னோடு भोग ஸாம்யங்கொண்ட நித்யருக்கும் முக்தருக்குங்கூட எல்லாம் அநுகூலமாகிறது. ஸர்வமும் என்றவிடத்தில் ஸர்வதா என்றும் சேர்க்க. இப்படி ஆநுகூல்யம் ஸ்வாபாவிகமாகில் ஸம்ஸாரிகளுக்கு இது தோன்றாமல் இல்லாத ப்ராதிகூல்யம் தோன்றுவதேன் என்பதன்மேல் பத்தருக்கு இத்யாதி. காலபேதத்தாலும் என்பதோடு தேசபேதத்தாலும் என்பதையும் சேர்ப்பது. ப்ராதிகூல்யங்களும் இத்யாதியோடு உதாஸீநத்வத்தையும் சேர்க்க. இவை முன்பே சொல்லப்பட்டன. பலவித ப்ராதிகூல்யாதிகளைக் கருதி பன்மை. அல்பாநுகூல்யம் என்றதன் கருத்து வஸ்துக்கள் எம்பெருமானுக்கு சேஷமென்கிற அறிவின்மேலான ஆநுகூல்யமே மேலான ஆநுகூல்யம். அவ்வறிவில்லாதபோது எவ்வளவு நன்மை ஏற்பட்டாலும் அந்த ஆநுகூல்யம் அல்பமே என்றதாம். ஈச்வராதிகளுக்குப்போல் ஸம்ஸாரிகளுக்கு எப்போதுமநுகூலமாயிருப்பது ஏதேனும் உண்டா என்பதற்கு உத்தரம் இப்ஸ்வர் இதி. அந்தந்த ஆத்மாவுக்கு அததன் ஸ்வரூபம் என்றுமநுகூலமே. இந்த ஆநுகூல்யமும் यथावस्थित आत्मस्वरूप भगवच्छेषत्वज्ञानமின்றி அநுபவிக்கப்படுகிறபடியால் மந்தாநுகூல்யமே. எல்லாமறிந்த பிறகு பெறப்படும் ஆநுகூல்யம் பூர்ணமாம். விரோதபரிஹார க்ரந்தத்தில் மந்தாநுகூல்யமென்று அருளியதும் இதே கருத்தாலேயாம். இப்படி எப்போதும் ஆத்மா அநுகூலமாகத் தோற்றுவதானல் ப்ரதிகூலமான தேஹத்தோடு ஆத்மாவை யொன்றாக எப்படி ப்ரமிக்கிறான் என்றால் உத்தரம் இப்படி இத்யாதி. தேஹத்தில் ப்ராதிகூல்யத்தை க்ரஹிப்பதற்கு முன்னே பூர்வகர்மாதீநமாய் தேஹத்திற்கும் ஆத்மாவுக்குமுள்ள விருத்த ஆகாரத்தை க்ரஹிக்காமையினால் ஆத்மாவோடு தேஹத்தை ஒன்றாக ப்ரமிக்கிறான். அதனால் ஆத்மாவிலுள்ள ஆநுகூல்யம் தேஹத்திலே ஏறிடப்படுகிறது. இது க்ருஹக்ஷேத்ராதிகள் தனக்கு நன்மை செய்வதால் அவற்றில் வந்த ஆநுகூல்ய புத்தியைப் போன்றதன்று. தேஹத்தில் அத்தகைய புத்தி நல்ல தேஹம் பெற்ற சில விவேகிகளுக்கிருக்கலாம். எல்லோருக்கும் அந்த தேஹத்திலுள்ள ஆநுகூல்ய புத்தியானது ஆத்மாவின் ஆநுகூல்யத்தை ஏறிட்டுவந்ததேயாம். இனி ஜ்ஞாநமில்லாதவர்களுக்குப்போலே ஜ்ஞாநமுள்ளவர்களுக்கும் நித்யமுக்தர்களுக்குப்போல் தேஹாதிகளிலும் பகவச்சேஷத்வ ஜ்ஞாநத்தினாலே ஆநுகூல்ய புத்தியுண்டா

அநுகூலமாய்த் தோற்றுகிறது. இவற்றுக்குக் கர்மோபாதிகமான ப்ரதிகூலரூபத்தாலே முமுக்ஷுவைப்பற்ற த்யாஜ்யத்வம். ஸ்வாபாவிகமான அநுகூல ரூபத்தாலே முக்தனைப்பற்ற அவைதமக்கே உபாதேயத்வம். அஹங்காரமமகாரயுக்தனாய்க் கொண்டு தனக்கென்று ஸ்வீகரிக்குமவை யெல்லாம் ப்ரதிகூலங்களாம். ஸ்வரூபஜ்ஞானம் பிறந்து ஸ்வாமிசேஷமென்று காணப்புக்கால் எல்லாம் அநுகூலமாம். இவ்வர்த்தம் பரிபூர்ணப்ரஹ்மாநுபவம் சொல்லுமிடத்திலே பரக்கச் சொல்லக்கடவோம்.

---

கலாமே. இப்படியிருக்க முமுக்ஷுக்கள் தேஹத்தைவெறுப்பது தகுமோஎன்ன, உத்தரம் இவற்றுக்கு இத்யாதி. முமுக்ஷுக்கள் ஸம்ஸாரிகளானபடியால் பூர்வ கர்ம வசத்தாலே தேஹம் இவர்களுக்கு பல ப்ரதிகூலங்களைச் செய்வதால் தேஹமுள்ள வரையில் அவை நிவர்த்திக்கபடாவாகையால் த்யாஜ்யமாகும். முக்தனான பிறகு ப்ரதிகூலமான கர்மஸம்பந்தமில்லையாகையால் அவைவெறுக்கப்படா. அவைதமக்கே உபாதேயத்வமிதி. ப்ராக்ருதமான தேஹாதிகளை பத்தர்கள் போல் இவன் எடுத்துக் கொள்ளவில்லையே. அவ்வாறிருக்க எப்படி உபாதேயத்வம் சொல்லப்படுகிறதென்னில். முன் வெறுத்த தேஹாதிகளையே ஸர்வஜ்ஞனான முக்தன் நாம் இந்த தேஹத்தோடு முன் இருந்தோம் என்று ப்ரத்யக்ஷத்தாலே க்ரஹிக்கும் போது அவற்றை வெறுக்காமல் தனக்கு இவை முன்னே இருந்தது தகும் என்று அபிநந்திக்கிறானாகையாலே உபாதேயமென்றது என்க, இப்படியே ஈச்வரனுக்குப் போலே முக்தர்களுக்கும், 'அந்தந்த ஸம்ஸாரி பெற்ற ப்ரதிகூலாம்சங்கள் கர்மாதீநமாகையாலே தகும்' என்றே புத்தி யிருப்பதால் அப்படி நினைப்பதும் உபாதேயத்வமாம்.

ஆகில் முக்தரைப் போலே ஸ்வாபாவிக ஆநுகூல்யம் தெரிந்த ஜ்ஞாநியான ஸம்ஸாரிகளுக்கு எல்லாம் உபாதேயமாகலாமே. அத்ருஷ்ட வசத்தினாலே எல்லாம் ப்ரதிகூலமாகாமல் அநுகூலமாய் அமைந்து வாழும் ஜ்ஞாநிகள் எதையும் விரக்தி யின்றி ஸ்வீகரிக்கலாமே என்ன உத்தரம் அஹங்காரேத்யாதி ஸம்ஸாரியாயிருக்கும் போது எப்படிப்பட்ட ஜ்ஞாநிக்கும் அஹங்காரமமகாரத்தொடர்ச்சி யிருக்கும். அவனுடைய பரிஜநங்களுக்கும் ஸ்வப்ரயோஜநாபேக்ஷையில்லாமலே பரிசர்யையில் ப்ரவருத்தி யென்பது நிச்சயிக்கலாகாது. இப்படி க்யாதிலாப பூஜாதிகளில் ஸந்தோஷம் இயற்கையில் வருவதால் ஸம்ஸாரத்தில் ஸ்திதியை ஜ்ஞாநி எப்போதுமே ப்ரதிகூலமாக நினைக்கவேண்டுமென்றபடி. இது எல்லாம் ஸ்வாமியான திருமாலுக்கு சேஷம் என்பதை ப்ரத்யக்ஷமாக அறியாமையால் வருவதாகும்; சாஸ்த்ரமூலமான ஜ்ஞாநம் மட்டும் போதாது. ஸர்வம் ஸ்வாமிசேஷமென்று முக்தியில் காண்கிறபோதே எல்லா மநுகூலமாகும். தேஹத்தைக்காட்டிலும் ஆத்மா வேறு நித்யம் என்கிற ஸ்வரூபஜ்ஞாநமில்லாமல் தேஹமான நான் ஸ்வாமி சேஷம் என்று நினைத்தானாகில் தேஹபோஷணாதிகளிலே இழிவான்.

இப்படி स्वाधीनसर्वसत्तादिகளையுடையவனுயிருக்கிற ஈச்வரனுடைய ஸ்வரூபம் सत्यत्वादिகளாகிற स्वरूपनिरूपकधर्मங்களாலே ஸத்யமாய் ஜ்ஞாநமாய் அநந்தமாய் ஆனந்தமாய் அமலமாயிருக்கும். இவ்வர்த்தத்தை "நந்தாவிளக்கே அளத்தற்கரியாய்" என்றும் 'உணர்முழுநலம்' என்றும் "சூழ்ந்ததனிற் பெரிய

---

அது முக்திக்குக் காரணமாகாது. அதனுல் ஸ்வரூபஜ்ஞாநமும் வேண்டும். அப்போது அஹங்காரமமகாரங்கள் போம். இனி முக்தி பெற்றவருக்கும் தன் ஆத்மாவை அஹமென்று நினைப்பதும், தன் சரீரத்தையும் தான் செய்யும் கைங்கர்யத்தையும் மம என்று நினைப்பதும் தொடர்ந்திருப்பதால் தான் செய்யும் கார்யம் அநுகூலமாயும் பிறர்செய்யும் கார்யம் ப்ரதிகூலமாகத் தோன்ருவிடினும் உதாஸீநமாகத் தோன்றலாமே. அதனுல் அங்குள்ளவர்களுக்கு அஹமஹமிகயா கைங்கர்யத்தில் போட்டி போடுவதிருக்குமாகையால், தான் செய்ய நினைத்ததைப் பிறர் செய்துவிட்டால் இவ்வுலகில் அது ப்ரதிகூலமாகத் தோன்றுவதுபோல் அங்கும் தோற்றுமே என்ன அருளிச்செய்கிருர் இவ்வர்த்தமிதி. எல்லாம் அங்கு ப்ரத்யக்ஷ ஸித்தமாகையாலே தான் செய்யும் கார்யத்திலேயும் தன்னைக் கர்த்தாவாக முக்தன் நினைக்கமாட்டான். சேஷத்வம் ப்ரத்யக்ஷமாயிருக்கையாலே அவனுடைய உகப்பையே ப்ரதாநமாக நினைப்பான். பகவானுடைய ஸங்கல்பம் ப்ரத்யக்ஷமாகத் தெரிகிறபடியால் அவன் ஸங்கல்பித்த கார்யத்தை விட்டு வேறு கார்யத்தில் போட்டியிடமாட்டான். தன்மூலமாக வரவாகும் பகவானுடைய உகப்பானது பிறர் செயலிலிருந்தே வருவதைக் கண்டு ஸந்தோஷமே யடைவான். அதனுலேயே அங்கு எல்லோருக்கும் ஆநந்தம் துல்யமென்றது. தன்னை அஹமென்று நினைக்கும் அஹங்காரமும் தன் சரீராதிகளை ஔபாதிகமாகத் தனதாக நினைப்பதும் ஆநுகூல்ய க்ரஹணத்திற்கு பாதகமாகா என்று அவ்வதிகாரத்திலுல் தெளிவாகும் என்றபடி. பரக்க—விஸ்தாரமாக.

இவ்வளவால் ஸ்வாதீந இத்யாதி சூர்ணிகையின் அவயவார்த்தங்களெல்லாம் சொல்லப்பெற்றன. இங்கே பஹுவ்ரீஹிஸமாஸமாகையாலே விசேஷ்யமாக ஈச்வரன் சொல்லப்பட்டிருப்பதால் அவனுடைய ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகளையும் விசதமாக்குகிருர் இப்படி இத்யாதியால். ஸத்தாதிகளை என்பதற்கு ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகளை என்பது பொருள். அர்த்தபஞ்சகாதிகாரத்தினின்று இவ் வாக்யங்களுக்கு அர்த்தத்தைத் தெளிக. சூழ்ந்து என்ற பாசுரம் திருவாய்மொழி 10—10— ம் பாசுரம். இப்பாசுரத்தில் முன்னடிகளில் எங்கும் சூழ்ந்து பரமபதம்வரையில் உயர்ந்த அழிவற்ற மூலப்ரக்ருதிக்கு அந்தர்யாமியென்றும், அந்த ப்ரக்ருதியையும் நித்யவிபூதியையும் சூழ்ந்ததாலே அதைவிட பெரிதான தர்மபூதஜ்ஞாநவிகாஸத்தையுமுடைய ஸ்வயம்ப்ரகாசமான ஜீவாத்மாவுக்கு அந்தர்யாமி என்றும் கூறி இவ்வடியில் தன் ஸ்வரூபத்தாலும் தர்மபூதஜ்ஞாநத்தாலும் எங்கும் சூழ்ந்

சுடர்ஞான வின்பம்" என்றும் 'அமலன்' என்றும் இத்யாதிகளாலே ஆழ்வார் கள் அநுஸந்தித்தார்கள். மற்றுள்ள குணங்களும் **दिव्यमङ्गलविग्रहादि**களு மெல்லாம் ஈச்வரனுக்கு **निरूपितस्वरूपविशेषण**ங்களாயிருக்கும். இக் குணங் களில் **ज्ञानबलैश्वर्यवीर्यशक्तितेजस्सुक्क**ளென்று ஆறு குணங்கள் **परत्वोपयुक्त**ங்களா யிருக்கும்; **सौशील्यवात्सल्यादि**கள் **सौलभ्योपयुक्त**ங்களாயிருக்கும். இக் குணங்க ளெல்லாம் ஸர்வகாலத்திலும் **स्वरूपाश्रित**ங்களாயிருக்கும். **परव्यूहादिविभाग**ங் களில் **गुणनियम**ம் சொல்லுகிறதெல்லாம் அவ்வோ ரூபங்களை அநுஸந்திப் பார்க்கு ஸர்வேச்வரன் ஆவிஷ்கரிக்கும் குணவிசேஷங்கள் சொல்லுகைக்காக வத்தனை, **औपनिषदविद्याविशेष**ங்கள்தோறும் **अनुसन्धेयगुणविशेष**ங்கள் நியதங்

---

திருப்பதால் அஜ் ஜீவாத்மாவையும்விட பெரிதாய் ஜ்ஞாநஸ்வரூபமாயிருப்ப வனே என்றதால் அநந்தஜ்ஞாந—ஆநந்த ஸ்வரூபத்வம் ஸ்பஷ்டமாயிற்று. சுடராவது சர்மபூதஜ்ஞாநம். அமலன் என்பது திருப்பாணாழ்வாரின் 'அமல னாதிபிரான்' என்ற ப்ரபந்தத்தின் முதல் சொல்லாகும், அகில ஹேயப்ரத்ய நீகன் என்பது பொருள். இத்யாதிகளாலே என்பதற்கு மற்றும் பல வாக் யங்களாலும் என்பது பொருள், இவ் வாக்யத்திலே இத்யாதி என்ற சொல்லே போதுமாகையால் 'என்றும்' என்கிற சொற்கள் இராமலிருக்கலாம். நிரூபிதஸ்வரூப விசேஷணங்களான குணங்களை இருவிதமாகப் பிரிக்கிறார் இக்குணங்களை இதி. பரத்வமாவது—மிக்கவுயர்ந்த நிலை; ஸௌலப்யமாவது— எல்லோரையும் கிட்டியிருப்பது. அவதாரங்களில் சிற்சில குணங்களே தெரிகிறபடியால் எல்லா குணங்களும் சேர்ந்திரா என்னவேண்டா என்றரு ளிச்செய்கிறார் இக்குணங்கள் இதி. ஸர்வகாலத்தில் என்று அவதாரங்களை யும் கொண்டபடி. ஸகுணமான ப்ரஹ்மம் ஒரு காலத்தில் நிர்குணமாகு மென்கிற ப்ரமத்தையும் போக்கினபடி. ஸ்வரூபாச்ரிதங்கள் என்றதாலே இவையெல்லாம் பரமாத்ம குணங்களே. விக்ரஹ குணங்கள் ஸௌந்தர்யாதி கள் வேறு என்றதாம். பரவ்யூஹாதி என்கிற ஆதிபதத்தாலே விபவாதிகளில் கண்ட குணவ்யவஸ்தையைக் குறித்ததாம். 'குணநியமம் சொல்லுகிறது' என்ற நியமம் பரரூபத்தில் ஆறு குணம்; ஸங்கர்ஷணாதி வ்யூஹங்களில் இரண்டு இரண்டு குணங்கள் என்கிற வ்யவஸ்தை. இது மேலே பட்டருடைய ச்லோகத்திலிருந்து வ்யக்தமாகும். அந்தந்த ரூபங்களை யுபாஸிக்கிறவர் களுக்கு யோகதசையில் அந்தந்த குணங்களைமட்டும் தோற்றச் செய்கிறான் என்றறிவிக்க குணவ்யவஸ்தையை ப்ரமாணம் சொல்லுகிறதல்லது வேறு குணங்கள் அங்கில்லை யென்பதற்காக அல்ல. த்ருஷ்டாந்தமாக உபநிஷத் திலே விதிக்கப்பெற்றப் பல பரவித்யைகளைக் காட்டுகிறார் ஔபநிஷதேதி. அநுஸந்தேய குணவிசேஷங்கள். உபாஸநகாலத்தில் உபாஸிக்கவேண் டிய குணங்கள். சாண்டில்ய வித்யையில் மநோமயத்வாதிகள். தஹர வித்யையில் அபஹத பாப்மத்வாதிகள். ஸத்வித்யையில் ஸூக்ஷ்மத்வாதிகள்

களாறுற்போலே भगवच्छास्त्रोक्तமான रूपविशेषानुसन्धानத்துக்கும் गुणविशेषங்கள் நியதங்கள். அவ்விடத்தில் पररूपத்தில் ज्ञानादिगुणங்கள் ஆறும் वेद्यங்கள்.

व्यूहங்கள் நாலென்றும் மூன்றென்றும் சாஸ்த்ரங்கள் சொல்லும். நாலு व्यूहமுண்டாயிருக்க व्यूहवासुदेवरूपத்துக்குப் पररूपத்திற்காட்டில் अनुसन्धेयगुण-भेदமில்லாமையாலே त्रिव्यूहமென்கிறது. இப் பக்ஷத்தை "गुणैष्षड्भिस्त्वेतैः प्रथमतरमूर्तिस्तव बभौ ततस्तिस्रस्तेषां त्रियुग युगळैर्हि त्रिभिरभुः" என்கிற ச்லோக

---

என்றவாறு காண்க. ரூபவிசேஷாநுஸந்தாநத்திற்கும்—ஸங்கர்ஷணாதி ரூபங்களின் உபாஸநத்திற்கும். நியதங்கள்—வ்யவஸ்த்திதங்கள். எவ்வித மாக வ்யவஸ்த்தை என்பதை விவரிக்கிறார். அவ்விடத்தில் இதி பரரூபத்தில் व्यूहவாஸுதேவ ரூபத்திலுமென்க. வேத்யங்கள் உபாஸிக்கத் தக்கவை பரவாஸுதேவரூபத்தை யுபாஸிக்கும்போது ஆறு குணங்களையு முபாஸிக்க வேண்டுமென்றதாயிற்று. ஷாட்குண்யத்தில் குணविभागமுள்ள ரூபங்களை வ்யூஹங்களென்கிறது. அவற்றில் மூன்று வ்யூஹங்களுக்கு இரண்டு இரண் டாக குணविभागம். ஆகையால் த்ரிவ்யூஹபக்ஷமே தகுமென்று தோன்றும். வ்யூ ஹங்கள் நாலு என்பது ஸுப்ரஸித்தம். இதில் எது உசிதம் என்ன உத்தரம்—வ்யூஹங்கள் இதி. ப்ரமாண ஸம்ப்ரதாயங்களில் ஸ்பஷ்டமாயிருக்கும் நாலு வ்யூஹங்களென்கிற பக்ஷம். ஸித்த வஸ்துவில் விகல்பம் கூடாதாகையால் வ்யூஹங்கள் மூன்றே என்று வ்யூஹவாஸுதேவ ரூபத்தை நிஷேதிக்க முடி யாது. இப்படியிருக்க மூன்று என்றது உண்மையில் பரரூபத்தைக்காட்டிலும் வ்யூஹவாஸுதேவரூபம் வேறாயிருந்தே அதுபோல் ஆறு குணங்களுள்ளதா யிருப்பதால் குணவிபாகம் சொல்ல இடமில்லை என்று அதை விட்டது என்ற படி. இப்பக்ஷத்தை என்பதற்கு சதுர்வ்யூஹபக்ஷத்தை என்று ஸாரதீபிகையில் வ்யாக்யாநம். த்ரிவ்யூஹபக்ஷத்தை என்று ஸாராஸ்வாதிநியில். மேலே உதா ஹரித்த கூரத்தாழ்வான் ச்லோகம் எதற்கு இசையுமென்று பார்த்துக்கொள்க.

गुणैरिति. ஹே த்ரியுக = மூன்று இரட்டைகளையுடையவனே. वरद = வரத ராஜனே ; தவ—உனது ப்ரதமதரமூர்த்தி;— முதன்முதலான மூர்த்தியா னது, ஏதை:—இந்த, ஷட்பி: து गुणै;—ஆறு குணங்களோடும் சேர்ந்தே बभौ—விளங்கியது. தத;—அந்த மூர்த்தியிலிருந்து திஸ்ர;—மூன்று மூர்த் திகள் தேஷாம் த்ரிபி; युगलै;—அந்த குணங்களின் மூன்று இரட்டைகளோடு கூடி अभुः;—விளங்கின. இதன் உத்தரார்தம்—व्यवस्था या चैषा ननु वरद साऽऽविष्कृति-वशात् भवान् सर्वत्रैव त्वगणितमहामंगलगुणः—என்றதாம். ननु वरद—ஓ வரதராஜனே या एषा व्यवस्था—இந்த ஆறும் இரண்டிரண்டும் என்கிற வ்யவஸ்தை யா தொன்றோ, सा—அந்த வ்யவஸ்தையானது आविष्कृतिवशात्—நீ உபாஸநகால த்தில் யோகிகளுக்குத் தோற்றச்செய்யும் நிலையை யநுஸரித்ததாகும். உண்மை யில் सर्वत्र எல்லா ரூபங்களிலும் भवान्—நீ अगणित எண்ணற்ற महा मंगल—மிக்க சுபமான गुण एव—குணங்களையுடையவனே. இங்கே ततः என்கிற பதத்தினால் மூன்று வ்யூஹரூபத்திற்குக் காரணமான வ்யூஹவாஸுதேவரூபத்தைச்

த்திலே ஸங்க்ரஹித்தார்கள் இப் **परव्युह**ங்களில் **गुणक्रियाविभाग**ங்கள்—
"**षाड्गुण्याद्वासुदेवः पर इति स भवान्(भवन्?)मुक्तभोग्यो बलाढ्यात् बोधात् सङ्कर्षणस्त्वं हरसि वितनुषे शास्त्रमैश्वर्यवीर्यात्। प्रद्युम्नस्सर्गधर्मौ नयसि च भगवन् शक्तितेजोऽनिरुद्धो बिभ्राणः पासि**

---

சொல்வதால் ப்ரதமதர மூர்த்தியென்பதும் அதுவே. ஆக இந்த ச்லோகத்தில் சொன்னது சதுர்வ்யூஹபக்ஷம் என்று ஸாரதீபிகாவ்யாக்யாநம். ப்ரதமதர என்று தரப் ப்ரத்யயம் சேர்ந்திருப்பதால் பரவாஸுதேவ ரூபமே முதற்பாதத்திற்கு அர்த்தம்: தத: என்றது கீழே யருளியபடி பரவ்யூஹ வாஸுதேவ ரூபங்களுக்கு பேதத்தைப் பாராட்டாமல் என்று ஸாராஸ்வாதிநியின் அபிப்ராயம். ப்ரதமதர என்கிற பதத்தில் ப்ரதமமாகிற வ்யூஹவாஸுதேவ ரூபமுண்டு. பரரூபம் அதற்கும் முன்னுலாகையாலே ப்ரதமதரம் என்று குறித்ததுமாம். பரரூபத்தில் உள்ள நித்யோதித—சாந்தோதித விபாகமும் குறித்ததாம். இந்த ச்லோகத்திற்கு விவரணமாகும் மேல் பட்டர் ச்லோகம் என்று மூலத்திலும் தோன்றுகிறது. த்ரியுக என்ற எம்பெருமான் திருநாமத்திற்கு இந்த ச்லோகம் விவரணமாகிறது. மூன்று இரட்டைகளை யுடையவன் என்பது அதன் பொருள். மூன்று இரட்டை யென்பது ஆறுகை யாலே ஆறு குணமுள்ள பரவாஸுதேவனும் பொருளாகலாம். தனித் தனியே இரட்டைகளையுடைய த்ரிவ்யூஹங்களும் பொருளாகலாம்.

குணவிபாகம் கூறப்பெற்றது. அக் குணங்களுக்குத் தக்க கார்யவிபாகமும் வ்யூஹங்களுடைய திருநாமங்களும் தெளிவாவதற்காக பட்டருடையஸ்ரீஸூக்தியை யுதாஹரிக்கிறார். இப்பரேதி. ஷாட்குண்யாதிதி. பகவன் — ஷாட்குண்ய பூர்ணனே: ஹே ரங்காதிராஜ! ஸ பவாந் - அப்படிப்பட்ட நீ முன் ச்லோகத்தில் கூறியபடி இந்த்ராதிகளைப்போலன்றி அஹங்கார லேசமுமில்லாமல் ஸ்வரூப ஸ்வபாவங்களிலே பெரியவனான நீ, பர: வாஸுதேவ இதி — பரவாஸுதேவனென்ற பெயருடையவனாய் ஷாட் குண்யாத் — ஆறு குணங்களால், முக்தபோக்ய; — முக்தர்களா லநுபவிக்கப்படுகிறவனாகிறாய். இங்கே பவான் என்கிற சொல்லுக்கிணங்க 'பவதி என்கிற க்ரியா பதத்தைக் கூட்டிக் கொள்ளவேண்டும். **तथा**— அதுபோல் வ்யூஹ்ய — வ்யூஹாவதாரம் செய்து. இங்கே த்வம்— நீ, ஸங்கர்ஷண : — ஸங்கர்ஷண வ்யூஹமாய் பல ஆட்யாத் = பலமென்ற குணத்தோடு கூடின போதாத் — ஜ்ஞானத்தினாலே ஹரஸி — லோகஸம்ஹாரமென்கிற கார்யம் செய்கிறாய். சாஸ்த்ரம்; விதநுஷே — சாஸ்தரங்களை ப்ரசாரம் செய்கிறாய். ப்ரத்யும்ந: - ப்ரத்யும்நவ்யூஹமாய் ஐச்வர்ய வீர்யாத் - ஐச்வர்யம் வீர்யம் என்கிற இருகுணங்களின் சேர்க்கையால் ஸர்கதர்மௌ - ஸ்ருஷ்டியையும் உலகில் தர்மங்களையும்— நயஸி - நடத்துகிறாய். அநிருத்தச்ச - அநிருத்தவ்யூஹமுமாய் சக்திதேஜ :— சக்தியையும் தேஜஸ்ஸையும் - பிப்ராண ; - பரிக்கின்றவனாய், பாஸி - உல

**तत्त्वं गमयसि च तथा व्यूह्य रङ्गाधिराज ॥"** என்கிற ச்லோகத்திலே ஸங்க்ரஹிக்கப் பட்டன. **जाग्रदादिपदभेद**ங்களிலுள்ள விசேஷங்களெல்லாம் **"जाग्रत्स्वप्नाद्यलस-**

கத்தைக் காக்கிறாய்; தத்த்வம் गமயஸி ச—தத்த்வத்தையும் அறிவிக்கிறாய். இங்கே பரவாஸுதேவனுக்கு என்ன கார்யம் சொல்லப்பட்டதெனில் முமுக்ஷுக்களுக்கு போக்யமாகைக்காக மோக்ஷமளிப்பதே. இது முக்த போக்ய பதத்தில் கருதப்பெற்றது. பலமென்ற குணம் ஸம்ஹாரத்திற்கும், ஜ்ஞாநம் சாஸ்த்ர நிர்மாணத்திற்கும், ஐச்வர்யம் ஸ்ருஷ்டிக்கும், வீர்யம் தர்ம ஸ்தாபநத்திற்கும், சக்தி ரக்ஷிப்பதற்கும், தேஜஸ் தத்த்வத்தை யறிவிப்பதற் கும் உபயோகப்படுவதாகத் தெரிகிறது. பவாந் என்கிற பதமிருப்பதால் இங்கு மட்டும் பவதி என்று பதம் சேர்க்க வேண்டும் பவந் என்ற பாட மிருந்து முக்த போக்ய: பவந்=முக்தபோக்யனாய்க் கொண்டு என்று சேர்ப் பதால் தனி வாக்யமிராமல் மேலே சேரும். ஐச்வர்யவீர்யாத், சக்திதேஜ: என்ற இரு சொற்களும் ஸமாஹார ஏக வசநாந்தங்கள். இங்கு மூன்றே ரூபங்களைச் சொன்னது வ்யூஹவாஸுதேவ ரூபத்தை இசையாததாலல்ல, மேல் ச்லோகத்திலிவரே அதை யருளிச் செய்வதால் பரரூபத்தோடு பேத த்தைப் பாராட்டாமல் அருளியதேயாகும். சதுர்வ்யூஹம் நான்காகப் பிரிக் கப்பட்டு பதினாறுகின்றது என்கிற விசேஷத்தை ஸங்க்ரஹிக்கும் பட்டரு டைய ச்லோகத்தை எடுத்துக் குறித்தருளுகிறார் ஜாக்ரதிதி — இங்கே சதுர் வ்யூஹத்திற்கு என்று ஒரு பதத்தை முதலில் சேர்க்க, ஜாக்ரதாதி என்கிற ஆதிபதத்தினால் ஸ்வப்நம் ஸுஷுப்தி மூர்ச்சை என்கிற அவஸ்தாவத்துக் களை க்ரஹிப்பது. இந்த அர்த்தத்தில் வரதராஜபஞ்சாசத்தில் **रूढस्य चिन्मय-तया** என்று தானே ஒரு ச்லோகமருளிச்செய்ததையும் காண்க. ஸ்ரீஸாத்த்வதம் லக்ஷ்மீதந்த்ரம் விஷ்வக்ஸேநஸம்ஹிதை முதலானவற்றில் இதன்விரிவு. ஸாரா ஸ்வாதிநியிலும் விரிவாகக் காண்க. அதன் சுருக்கமாவது—பரமபதத்தில் பக வான் விசாகயூபமென்று பேர்பெற்ற ஒரு ஸ்தம்பமாக விளங்குகிறான். அந்த ஸ்தம்பத்தில் நடுவில் நாலு ஸ்தாநங்கள் சதுர்வ்யூஹமுள்ளவை. வாஸு தேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்த ரூபங்கள் அடைவாக ப்ரதக்ஷிண மாக, கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு ஸ்தாநங்களில் அம் மரக்கிளைகள்போல் உயர்ந்து விளங்குகின்றன. மேல் ஸ்தாநத்தில் இருக்கும் சதுர்வ்யூ ஹத்தை துரீயம்=மூர்ச்சிதம் என்கிறது. அதற்கு அடுத்த கீழே உள்ள சதுர் வ்யூஹம் ஸுஷுப்தம். அதற்குக் கீழே ஸ்வப்நம், அதன் கீழே ஜாக்ரத். ஜாக்ரத்ஸ்தாநத்தில் சதுர்வ்யூஹத்திற்கு ஆகாரம் வர்ணம் ஆயுதம் த்வஜா த்யுபகரணம் ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரம் எல்லாம் ஸ்பஷ்டமாயிருக்கும். ஸ்வப்நஸ்தாநத்தில் வர்ணாதிகள் ஸ்பஷ்டமாயிரா; ஜகத்வ்யாபாரமில்லாமல் அதில் இச்சைமாத்திரம் தோற்றும். ஸுஷுப்திஸ்தாநத்தில் இச்சையும் தோற்றாமல் ஸ்வாநந்தாநுபவத்திலிருக்கும். மூர்ச்சிதஸ்தாநத்தில் ஆகார

तुरीयप्रायध्यातृक्रमवदुपास्यः। स्वामिन् तत्तद्गुणपरिषदं ध्यातुर्व्यूहं(हं) वहसि चतुधा॥" என்று

---

ங்கள்கூட கிளைகள் போல் தோன்றுமாம். மனிதனுக்கு ஜாக்ரத்தசையில் ஸர்வேந்த்ரியவ்யாபாரமும் ஸ்வப்நத்தில் மநோமாத்ரவ்யாபாரமும் ஸுஷுப்தியில் ப்ராணமாத்ரவ்யாபாரமும் மூர்ச்சிதத்தில் ப்ராணன் ஒளிந்திருப்பதுமாக மேன்மேல் குறைவாகத் தோன்றுவது போல் இந்த நாலு ஸ்தாநத்திலும் தோற்றுமாகையாலே இந்த நாலு சாதுர்வ்யூஹத்தை ஜாக்ரதாதி பதங்களாலே வ்யவஹரிப்பதாம். அவற்றின் ஸ்தாநமாகையாலே அவ்விடங்களையும் ஜாக்ரதாதி பதத்தால் சொல்வதாம். இப்படி ஈச்வரன் அவதாரம் செய்திருப்பது இவ்விதமான உபாஸநம் செய்து சிலர் பலன் பெறுதற்காக. உபாஸகர்களையும் ஜாக்ரதாதி தசையிலுள்ள புருஷர்க்கு ஸமமாக பட்டருடைய ச்லோகம் தெரிவிக்கும். ச்லோகார்த்தமாவது—

ஸ்வப்நபதம் ஸ்வப்நமநுபவிக்கும் வ்யக்தியைச் சொல்லும். ஸுப்த என்னுதே ஸ்வப்ந என்றது பாஞ்சராத்ரப்ரயோகத்தை யநுஸரித்தும், உறக்கமுள்ளதென்கிற அர்த்தமாருட்டம் வாராமைக்குமாம். अस्वलस-உறக்கமுள்ளது. तुरीय—மூர்ச்சிதம். प्राय-என்கிற பதம் तत्प्रायं च द्वयमपि विदन् என்கிறவிடத்திற் போல भूयोधर्ममूलமான ஸாம்யத்தைச் சொல்லும். ஆக ஜாக்ரதாதி தசையிலுள்ள புருஷர்களுக்கு ஸமாநமாக நாலு நிலைகளைப் பெற்ற உபாஸகர்கள் என்று ध्यातृ என்கிற வரையிலான பதத்திற்கு அர்த்தம். உபாஸகர்களுடைய நாலு நிலைக்கு ஜாக்ரதாதி புருஷஸாம்யம் எவ்வாறெனில்—சிலர் இப்படி நிலைக்கலாம். அதாவ்து பூர்ணத்யாநம் பண்ணுகிறவன் ஜாக்ரத்துக்கு ஸமாநன். படிப்படியாகக் குறையக் குறைய ஸ்வப்நாதி ஸாம்யமென்று. அவ்வாறு கொள்வதில்லை. ப்ராயசப்த ஸ்வாரஸ்யதைக் கொண்டு வேறு விதமாம். இந்த ध्याता ஜாக்ரத்ப்ராயனென்றால் ஜாக்ரத்தசையிலுள்ள ப்ராக்ருத மநுஷ்யன் வெளி வஸ்துக்களையே அதிகம் காண்பதுபோல இவனும் விஷயாந்தர அனுபவமே யதிகமுள்ளவன்; மிகக் குறைவான பரமாத்மாநுபவமுள்ளவனென்றபடி உபாஸகன் ஸ்வப்ந ப்ராயனென்றால் வெளிவஸ்துக்களை இந்த்ரியங்களாலே யநுபவிக்காமல் மனத்தில் மட்டும் அவற்றின் சிந்தனையைக் கொண்டு அதிக பரமாத்மாநுபவம் பண்ணுகிறவன் என்றதாம். ஸுஷுப்தப்ராயனான ध्याताவுக்கு பாஹ்ய சிந்தையுமில்லாமல் வாஸநாமாத்ரமாய் பகவத்த்யாநமே விஞ்சியிருக்கை, மூர்ச்சித ப்ராயனான உபாஸகனுக்கு பாஹ்யவாஸனையும் கார்யத்திற்கு வராமல் பகவந்மயனாயிருக்கையாம்.

ச்லோகத்தில் ध्यातृक्रमवदुपास्यः என்பதில் பிரிக்காமல் ஒரே பதமாகவும் கொள்வர். क्रमवत् என்று பிரிப்பதே வெகுவாக இசைந்தது. இங்கே वत् என்பது मत्वर्थप्रत्ययமா, वतिप्रत्ययமா-அதாவது க்ரமமுள்ளது என்ற இதன் அர்த்தமா அல்லது க்ரமம்போல் என்ற அர்த்தமா என்ற விவாதத்திற்கிடமிருக்கிறது. ஒரே பதமென்று வைத்து ஜாக்ரதாதி புருஷஸமாநமான உபாஸகர்களின்

ஸங்க்ருஹீதங்களாயிற்று

---

க்ரமத்தையுடைய அதிகாரிகளாலே உபாஸிக்கப்படுகிறவனுய் என்று பொருளுரைப்பர். இதில் ध्यातृ என்கிற பதத்தாலே அதிகாரிகளைச் சொன்னதால் க்ரமவத் என்பது வ்யர்த்தமாம். ஒரு பதமாகவே கொண்டு ध्यातृभिः क्रमवदुपास्यः உபாஸகர்களாலே க்ரமேண உபாஸிக்கப்படுகிறவன் என்று ஸார தீபிகையில் உரைத்தனர், இந்த ச்லோகத்திற்கு ராமாநுஜாசார்ய வ்யாக்யாநமொன்றிருப்பதாக அதில் தெரியவருகிறது. ध्याता‌க்களுடைய க்ரமம் போலே= ध्याता‌க்களுடைய ரீதிபோலே என்றதாய் चतुर्धा—(நான்குவிதமாக) என்கிற பதத்தோடு சேரும். உபாஸகர்களுடைய முன்னும் பின்னுமான நான்கு நிலைகள்போல் நான்குவிதமாக என்பது பொருள். ध्याता‌க்களுடைய ரீதியையுடைய என்றர்த்தமாய் க்ரமவத் என்பதை சாதுர்வ்யூஹமென்கிறதற்கு விசேஷணமாக்கலாம். அல்லது க்ரமவதுபாஸ்ய: என்று ஒரே பதமாய் க்ரமவத் என்பதை உபாஸந க்ரியாவிசேஷணமாக்கி உபாஸகர்களோடு ஸாம்யத்தையுடையவனுக உபாஸிக்கப்படுகிறவன் என்று, அல்லது உண்மையில் உபாஸகஸமமான ஜாக்ரदादि ஆகாரங்களை விஷயமாக உடைய உபாஸநத்திற்கு விஷயமாகின்றவன் என்றர்த்தமும் ஸ்வரஸமானது. ஏதேனும் கொள்க. ஆக இப்படி உபாஸிக்கப்படுகின்றவனுயென்றதாயிற்று.

स्वामिन्–[ரங்க]நாதனே! நீ तत्तद्गुणपरिबर्हैः–அந்தந்த ஸ்த்தாநத்திற்கு உரிய நிறம் வ்யாபாரம் உபகரணங்கள் இவற்றை யுடையவனுய் चातुर्व्यूह्यं–வாஸுதேவாதிவ்யூஹங்கள் நான்கை चतुर्धा—ஜாக்ரதாதி ப்ரகாரத்தாலே நான்குவிதமாக वहसि—வஹிக்கிருய். இந்த ரூபத்யாநம் பண்ணுகிறவர்கள் மட்டும் நான்குவிதமா யிருப்பவர்களென்றே, அந்தந்த சாதுர்வ்யூஹத்தை யுபாஸிப்பவர் அததற்குத் துல்யமாயிருப்பதாகவோ நினைக்கவேண்டா. பொதுவாக எதை யுபாயஸிப்பவரும் ஜாக்ரதாதி படிகளில் க்ரமேண இருப்பர் என்றபடி (ஜாக்ரதாதி வ்யூஹங்கள் ஜாக்ரதாத்யவஸ்தையிலிருக்கும் ஜீவர்களுக்கு अधिष्ठाता‌க்கள் என்றும் விஷ்வக்ஸேந ஸம்ஹிதை வரைகிறது) இந்த विशाखயூபத்தில் துரீயஸ்த்தாநம் முதலென்றும் அதனின்று. ஸுஷுப்தஸ்தாநம் பிறகு ஸ்வப்நஸ்தாநம் பிறகு ஜாக்ரத் என்றே லக்ஷ்மீதந்த்ரம் சொல்லும். உரைகளிலும் ஜாக்ரத்வ்யூஹத்திற்கு ஸ்வப்நவ்யூஹம் காரணமென்றதால் இது ஸர்வஸம்மதம். ஸூக்ஷ்மம் ஸ்த்தூலத்திற்குக் காரணமென்பதாலும் இது உசிதம். இப்படி முதலாயிருக்கும் ஸ்தாநத்தை துரீய ஸ்தாநமென்றது நாலாவதாக வந்ததாலல்ல. லோகத்தில் ப்ராணிகளுக்குள்ள ஜாக்ரதாதி தசைகளில் மூர்ச்சாதசை நான்காவதாக இருப்பதால் அத்தோடு ஸாம்யத்தாலே இத்தையும் துரீயமென்றது. இந்த வ்யூஹங்களில் மூர்ச்சாஸ்தாந வ்யூஹம் முதலாவதாயிருப்பதுபோல் உபாஸகர்களுடைய நான்கு நிலை

களில் முதல் நிலையை துரீய வ்யூஹத்திற்கு ஸமமாக்கி வ்யூஹங்கள் ஜாக்ரத வஸ்தையில் முடிவது போல் உபாஸக நிலையையும் அதில் முடிக்கலாம். அப்போது ஆரம்பதசையில் உபாஸகனுக்கிருக்கும் ஈச்வர உபாஸநவகை துரீய ஸமாநம், சிறிது அதிகமானது ஸுஷுப்திக்கு ஸமாநம். அதன்மேல் அபி வ்ருத்தமானது ஸ்வப்நதுல்யம். பூர்ணபரமாத்ம ப்ரகாசம் ஜாக்ரத்வ்யூஹம் போல் மேம்பட்டதாகிறது. இப்போது வ்யூஹங்களுக்குப் போல் இவ் வுபாஸநக்ரமத்திற்கும் கார்யகாரணபாவம் பொருந்துகிறது. ஜாக்ரத் தசையே பூர்ண பரமாத்ம ப்ரகாசம் என்ற கருத்தினுலேயே ஸ்ரீதேசிகன் "रूढस्य चिन्मयतया हृदये करीश स्तम्बानुकारिपरिणामविशेषभाजः । स्थानेषु जाग्रति चतुर्ष्वपि सत्त्ववन्तः शाखाविभागचतुरे तव चातुरात्म्ये ॥" என்கிற ச்லோகத்தில் जाग्रति என்கிற க்ரியாபதத்தை ப்ரயோகித்தது என்னலாம். ஸத்வகுணமுள்ள மஹான்கள் (சின்மயமாய்) த்யாநகாலத்தில் தம்முடைய ஹ்ருதயகமலத்திலே முளைத் தெழுந்த செடித்தண்டு போலான விசாகயூபத்தின் நாலு ஸ்த்தாநங்களில் கிளைகள் போல் விளங்கும் உனது சாதுர்வ்யூஹத்தில் விழிப்புள்ளவர் களாக இருக்கிறுர்கள் என்று ச்லோகத்தின் பொருள். பட்டருடைய ச்லோகத்தில் ஜாக்ரத் ஸ்வப்நாத்யலஸ துரீய துல்யமான சாதுர்வ்யூஹம் என்னுமல் துரீய व्युत्क्रमवत् என்றதும் மநுஷ்யனுடைய ஜாக்ரதாத்ய வஸ்தைகளுக்கு ஸமமாக ஜாக்ரதாதி வ்யூஹங்களைச் சொன்னுல் ஜாக்ரத் தசைக்குப் பிறகு क्रमेण ஸ்வப்நாத்யவஸ்தைகள் போல் ஜாக்ரத் வ்யூஹத் திற்குப் பின்னுக மற்ற வ்யூஹங்கள் தோன்றும்; அது தகாதென்பதற்காக. இப்போது व्युत्क्रमवत् என்பதாலே ஜாக்ரதாதிப்ராயரான உபாஸகர் களுக்கு अस्फुट.स्फुट.स्फुटतर स्फुटतम நிலைகள் போல் நாலு व्यूह நிலைகளென் ருல் துரீயத்திற்கும் अस्फुटध्यानத்திற்கும் ஸாம்யம் கொள்ளலாம் என்ற வாறு ஆராய்க.

வ்யூஹங்கள் நிருபிக்கப்பட்டன. வ்யூஹாந்தரங்களையும் வ்யூஹபதத் திலே விவக்ஷிக்க வேண்டுமென்று கருதி அருளிச்செய்கிறுர், கேசவேதி. கேசவாதி தாமோதராந்தமான பன்னிரண்டு மூர்த்திகளில் மும்மூன்று வாஸுதேவாதி நான்கு மூர்த்திகளில் ஒவ்வொன்றிலிருந்து உண்டான வையாம். கேசவநாராயண மாதவமூர்த்திகள் व्यूहவாஸுதேவ கார்யங்கள் என்றவாறு பிரித்துக் கொள்க. விசாகயூபத்தில் மேல் व्यूहமுண்டான பிறகு கீழ் व्यूहம் உண்டாயிருந்தாலும் அதை व्यूहாந்தரமென்பதில்லை, காரணத்தில் போல் கார்யத்திலும் व्यूहத்வ ஜாதிக்குத் தொடர்ச்சி யிருப்பதால் அவையும் व्यूहங்களே. அந்த ஜாதியின்றி கார்யமாயிருப்பதால் கேசவாதி व्यूहாந்தரமென்று பாரிभाஷிகமாகச் சொல்வது. व्यूहமென்பது ஷாட்குண்ய த்தின் பிரிவினுல் ஏற்பட்ட பெயரென்று முன்னமே சொன்னேம்.

இனி விபவநிருபணம். எம்பெருமானுடைய விபூதிகளான தேவ.திர்யங்,

**विभवाङ्गकளாவன—पद्मनाभादिகளான** முப்பத்துச்சின்ன(சில்வான) ரூபங்கள். **இவற்றில்** மத்ஸ்ய-கூர்மாதிகளான அவதாரங்கள் ஒரு ப்ரயோஜனவ்சத் தாலே விசேஷித்துச் சொல்லப்பட்டன.

---

மநுஷ்ய.ஸ்தாவர ரூபங்களுக்கு ஒத்ததாய் அது என்கிற ப்ராந்தியைத் தரும் படியிருப்பதாலே இந்த ரூபங்களை விபவமென்றது. பத்மநாபாதிகளான என்று பத்மநாபமூர்த்தியை முதலிற் சொன்னது ஸாத்வதாதிக்ரந்தங்களில் விபவங்களைக் குறிக்கும் போது இதனை முதலில் குறித்திருப்பதாலேயாம்; விபவமூர்த்திகளுக்குள் பத்மநாபமூர்த்தியே முதலிலுண்டான மூர்த்தியென்ற கருத்தாலல்ல. அஹிர்புத்ந்யஸம்ஹிதையில் **"विभवाः पद्मनाभाद्याः त्रिंशच्च नव चैव हि"** என்றும் விஷ்வக்ஸேந ஸம்ஹிதையில் **'पद्मनाभादिकास्सर्वे वैभवीयास्तथैव च। षट्त्रिंशत्संख्यासंख्याताः प्राधान्येन गणेश्वर॥"** என்றும் விபவபதப்ர யோகத்தாலே இவை யெல்லாம் விபவங்களாம். முப்பதுக்கு மேல் ஒரு ஸம்ஹிதையில் ஆறு ரூபங்கள் அதிகமாகவும், ஒன்றில் எட்டு என்றும் ஒன்றில் ஒன்பது என்றும் நாற்பதுக்குள்ளாகக் குறிக்கப்பட்டிருப்பதால் பொதுவாக 'முப்பத்துச்சில்வான ரூபங்கள்' என்றது. இதற்கு முப்பதுக்கு மேல் சில அதிகங்களான ரூபங்கள் என்றும் பொருள் கொள்ளலாம். உரைகளில் சில்வானமான ரூபங்கள் என்று உரையுள்ளது. சில்வானம் என்கிற பதத்திற்கு ஒரு கார்யத்திற்கு வைத்திருக்கப்பட்டிருக்கும் வஸ்து வில் மிகுதியாக்கப்பட்ட அம்சமென்று பொருளாம், அது ஸ்வல்ப்பமாகவே யிருக்கும், அது போலிங்கும் முப்பதுக்கு மேல் மிகுந்த ஸ்வல்பமான என்கிற பொருளில் அச் சொல்லுக்கு ப்ரயோகமென்க, முப்பத்துச் சின்ன ரூபங்கள் என்கிற பாடமுமுண்டு. சின்ன என்பதற்கும் ஸ்வல்பமான என்றே பொருளாய் முன் சொன்ன அர்தத்திலே முடிவாம். முப்பதுக்கு மேல் ஸ்வல்ப எண்ணிக்கை அதிகமான ரூபங்கள் என்றபடி. இவ் விபவங் களிற் சேர்ந்த பத்மநாப **मधुसूदन** வாமந த்ரிவிக்ரம நாராயணாதிகள் **व्यूहा**ந்தர பத்ம**नाभादि**களைவிட வேருக இருக்கவேண்டும். விபவாவதா ரங்கள் இவ்வளவு இருக்க பத்து என்கிற ப்ரஸித்திக்குக் காரணம் கூறுகிருர் இவற்றில் இதி. மத்ஸ்ய கூர்மாதிகளான என்கிற ஆதிபதத் தால் **'मत्स्यः कूर्मो वराहश्च नारसिंहश्च वामनः। रामो रामश्च रामश्च कृष्णः कल्की जनार्दनः॥'** என்ற கல்க்கிபர்யந்தமான அவதாரங்களைக் கொள்க. ஒரு ப்ரயோஜந இதி. ஸௌலப்யாதிசயாதி ப்ரயோஜநமென்பர். உபகாரபாஹுள்யாதி ப்ரயோஜநமாராய்க மத்ஸ்யாவதாரம் தர்மமூலமான வேதஸம்ரக்ஷணத் திற்கு. கூர்மாவதாரம் தர்மாராத்யர்களான தேவர்களின் அமரத்வத் திற்கு. வராஹாவதாரம் தர்மபூமியை நிலையாக்குவதற்கு. நரஸிம்ஹாவதாரம் தன்னையே தர்மாராத்யனுக நினைத்த அஸுரனை யழிப்பதற்கு. வாமநாவ தாரம் பேருக்காக தர்மம் செய்யும் அஸுரனை சிக்ஷிப்பதற்கு. பரசுராமா வதாரம் யஜ்ஞத்திற்கான பசுவை அபஹரித்து அக்ரமம் செய்த அஸுராம்ச

இவ்விபவங்களில் ஈச்வரன் அவ்வோ கார்யவிசேஷங்களுக்கு ஈடாகத் தான் வேண்டின குணங்களை வேண்டினபோது மறைத்தும் வேண்டினபோது ப்ரகாசிப்பித்தும் நடத்தும். இவற்றில் अवान्तरभेदங்கள் "कृतरूपाण्यसंख्यानि"

---

ரான பகைவரை வதைப்பதற்கு; ஸ்ரீராமாவதாரம் அதர்மம் ஓங்கிய அரக்கரை யழிப்பதற்கு; பலராமாம்சம் அதர்ம மார்கத்திலிழிந்த ருக்மி முதலானோரை மாய்ப்பதற்கு; ஸ்ரீக்ருஷ்ணாவதாரம் அதர்ம வ்ருத்தியாலான ஸமஸ்தபார (भार) நிவ்ருத்திக்கு; கல்க்கியவதாரம் தர்மயுகத்தை கொண்டு வருவதற்கு. இவை யெல்லாம் பஹுஜநோபயோகியாய் தர்மப்ரதாநமானவை இதுபோல் வேதலோகதேவ அஸுர மநுஷ்ய ராக்ஷஸாதிகளான ஸாதுக்களின் ரக்ஷணமும் ஒருவாறு தக்கவாறு கூறப்படும். மத்ஸ்யம் நீர்ப்ராணி. கூர்மம் தரையிலும் சில காலமிருக்கும் நீர்ப்ராணி. வராஹம் நீரிலபிமானமுள்ள தரைப்ராணி, ந்ருஸிம்ஹரூபம் முழு ம்ருகமாகாதது, வாமநம் முழு மானிடமான சிறிய ரூபம். பரசுராமன் चहவ்த்யாஸத்தாலே ஜாதி மாறிய மனிதர். பலராமன் பாபம் செய்தாலும் தட்டாத அவதாரமான மநுஷ்ய ரூபம். ஸ்ரீராமன் முழு மநுஷ்யாபிநயம் செய்த தர்மமூர்த்தி, ஸ்ரீக்ருஷ்ணன் ஈச்வர ஸ்வபாவத்தை ப்ரகாசப்படுத்திக் கொண்டே மநுஷ்யனாய் உலகை மயக்கினவர். கல்கீ ஈச்வரத் தன்மையிலேயே நின்றவர்—என்றவாறுமாம். சிலர் இப் பத்து அவதாரங்களும் பத்து க்ரஹங்களால் வரும் வாதையை விலக்கிக் காக்கும் என்றும் கூறுவர். தசாவதாராநுஸந்தாநத்திற்கு விசேஷ பலனை தசாவதார ஸ்தோத்ரத்தின் முடிவிலும் காண்க. அங்கு इच्छामीन இத்யாதிகுணவிசேஷக் குறிப்பையும் நோக்குக.

மேலே வ்யூஹரூபத்திற் போலே விபவத்திலும் சிற்சில குணங்களே ப்ரகாசிக்குமென்கிறார். வேண்டின குணங்களை = தற்சமயம் அவச்யம் அபேக்ஷிக்கபடவேண்டிய குணத்தையே மறைக்கவேண்டுமென்று நினைத்த போது மறைப்பர்; ப்ரகாசப்படுத்த நினைத்த போது ப்ரகாசிக்கச்செய்வர். யுத்தத்தில் ஜராஸந்தனைக் கண்ணன் பலகால் பரிபவித்தான். தான் அசக்தன்போலிருந்து பீமஸேனனைக் கொண்டு கொன்றான் என்பது போல் காண்க. விபவரூபங்கள் எண்ணற்றவை, வ்யூஹரூபங்கள்போலல்ல என்கிறார் இவற்றில் இதி. பல கோபிகளுடைய க்ருஹங்களிலும் ராஸ க்ரீடையிலும் க்ருஷ்ணரூபங்கள் பல என்பது ஸ்பஷ்டம். வ்யூஹத்திலிருந்து பிறந்த வ்யூஹாந்தரம் போலே விபவத்தில் பிறந்த விபவாந்தரமுண்டு. இது வ்யூஹாந்தரத்தில் ஸங்கர்ஷணாதி வ்யூஹத்வஜாதி தெரியாமலிருப்பது போல் இங்கும் க்ருஷ்ணத்வாதி அநுஸந்தாநம் வாராதபோது விபவாந்தரமெனப்படலாம். பட்டர்பாஷ்யத்திலும் பரமதபங்கத்திலும் ப்ராதுர்பாவம் ப்ராதுர்பாவாந்தரம் என்று இருவகைகள் கூறப்பெற்றன. அவற்றில் ப்ராதுர்பாவங்கள் அப்ராக்ருதவிக்ரஹத்தோடு மட்டும் சேர்ந்த அவதாரங்கள். அவ்

इत्यादिகளிற்படியே அநந்தங்கள். இப்படியே विभवान्तरங்களும் கண்டுகொள்வது. சில ஜீவர்களை विग्रहविशेषத்தாலும் சக்திவிசேஷத்தாலும் अधिष्ठित्து அதிசயிதகார்யங்களை நடத்துகிறதுவும் विभवभेदம். परव्यूहादिरूपங்கள் தாமே ஆச்ரிதர்க்காக அவர்கள் அபேக்ஷித்தபடியிலே "विश्वाकृत्यात्मना विश्वे समा-

---

வாறின்றி ப்ராதுர்பாவாந்தரங்கள் ஜீவர்களில் அனுப்ரவேசித்த அவதாரங்கள். அவை போலன்றி விபவாந்தரங்கள் அப்ராக்ருதவிக்ரஹங்கள் கொண்ட அவதாரங்களேயாகும். அந்த ப்ராதுர்பாவாந்தரங்களான விபவங்களை மேலே கூறுகிறார் சில இத்யாதியால். பொதுவாக சேதநாசேதநங்களையெல்லாம் உட்புகுந்து நியமிக்கிற ஸர்வேச்வரன் அபிமாந விசேஷத்தாலே சில ஜீவர்களுக்குப் பெருமையையும் புகழையும் விளைப்பதற்காகத் தன் சக்திவிசேஷத்தையும் புகுவித்து अधिष्ठिக்கிறான் = அதாவது வ்யாபாரவிசேஷங்களிலே அவர்களை நியமிக்கிறான். ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் புரஞ்ஜய ப்ரஸ்தாவாதிகளில் இது ஸ்பஷ்டம், எல்லா மநுஷ்யர்களுக்கும் ஹ்ருதயத்திலே யோக விஷயமாகைக்காக ஹார்தவிக்ரஹத்தோடு ஸந்நிதாநம் செய்வது மட்டுமின்றி ப்ரம்ம ருத்ராதிகளான சிலரிடத்தில் ஸ்ருஷ்டி ஸம்ஹாராதி விசேஷநிர்வாஹகார்யத்திற்காக அப்ராக்ருதவிக்ரஹத்தோடு கூடியிருந்து अधिष्ठिப்பதும் ப்ரமாணஸித்தம். வெளியில் பலருக்கு ப்ரத்யக்ஷமாக விளங்கும் முன்சொன்ன மத்ஸ்யாதி மூர்த்திகள் போல் இவையும் விபவத்தில் சேர்ந்தவையே, ஆனால் வ்யாஸ பரசுராமாதிகளிடத்தில் போல் ஜீவத்வாரகமான விபவங்கள். விக்ரஹமில்லாமல் சக்தி விசேஷ ஆவிர்பாவமும் இங்கே விபவமாக அருளப்பெற்றது, இப்படி பரவ்யூஹங்கள் நீங்கலாக எல்லாமே விபவங்களானால் அர்ச்சாரூப ஹார்தரூபங்களும் விபவமாகலாமே; பஞ்ச ரூபங்களென்பது எவ்வாறு என்பதற்கு ஸமாதாநமாக மேலே பரேத்யாதி.

வ்யூஹாதீதி आदिபதத்தால் விபவத்தைக் கொள்வது. உண்மையில் பரவ்யூஹ விபவங்கள் என்றபடி ரூபங்கள் மூன்றே, ஸ்ரீபாஷ்யத்தில் ஸ்ரீபாஞ்சராத்ராதிகரணத்திலும் ஸஹஸ்ர நாமத்தில் வராரோஹநாம பாஷ்யத்திலும் இது வ்யக்தம். ஆனாலும் மற்ற விபவங்கள் போலன்றி கோயில் கொண்டு எல்லோருக்கும் ஸுலபமாம்படி சிரகாலஸ்த்தாயியாயிருப்பதென்கிற விசேஷத்தாலே அர்ச்சாவிபவத்தையும், ஒரொரு ஜீவனுக்கு மட்டுமாகி, கோயில் போலே கெடாமல் யோக விஷயமாகை என்கிற ஏற்றத்தால் ஹார்தவிபவத்தையும் தனியாகக் கொண்டது. விபவமூர்த்தி அர்ச்சையாவது போல் பரவாஸுதேவ மூர்த்தியும் வ்யூஹ மூர்த்திகளும் அர்ச்சையில் ஆவாஹநம் செய்யப்படும். ஹார்தரூபம் பரவ்யூஹ விபவங்களில் எதைச் சேர்ந்ததென்னில்—வ்யூஹவிபவங்களின் அம்சம் இது என்பதற்கு ப்ரமாணமில்லை யாகையால் எல்லாவற்றிற்கும் மூலமான பரரூபத்தின் ஸூக்ஷ்மாம்சமே என்று உரைகளில் ஸ்பஷ்டம். பிம்பேதி. பிம்ப—ஆக்ருதி—ஆத்மநா = பொன் வெள்ளி முதலானவற்றாலாய் ப்ரதிஷ்டைக்கான மூர்த்தி பிம்பம். அதனுடைய ஆகாரம் எவ்வாறோ அது போன்ற ஆகாரத்தை

गत्यावतिष्ठते" என்கிறபடியே நிற்கிற நிலே அர்ச்சாவதாரம். ஸர்வருடையவும் ஹ்ருதயங்களிலே ஸூக்ஷ்மமாயிருப்பதொரு ரூபவிசேஷத்தைக் கொண்டு நிற்கிற நிலே अन्तर्याम्यवतारம் இது सर्वान्तर्यामियान दिव्यात्मस्वरूपத்தை अनुसन्धिக்க இழிவார்க்குத் துறையாக. "अष्टाङ्गयोगसिद्धानां हृद्यागनिरतात्मनाम्। योगिनामधिकारस्यादेकस्मिन् हृदयेशये" इत्यादिகளிலே சொல்லுகையாலே अन्तर्यामिरूपமென்று சொல்லப்பட்டது.

---

யுடைய आत्मना–அப்ராக்ருத விக்ரஹத்தைக் கொண்டு அந்த பிம்பத்தில் ப்ரதிஷ்டாகாலத்தில் समागत्य—ஒவ்வோர் அவயவத்தோடும் சேர்ந்து கலந்து अवतिष्ठते—நிலேத்திருக்கிருன் என்றபடி. நீரும் பாலும் கலந்தாற் போலே ஸ்வர்ணுதி மூர்த்தியில் கலந்திருக்கிருன். அவதாரபதத்திற்கு இறங்குகை = கீழ்ப்ரதேசத்தில் சேரும்படி வருகை யென்றர்த்தமாகையால் அந்த अधःप्रदेशसंबन्धानुकूलव्यापार மென்கிற அர்த்தத்தில் फलव्यापारयोर्धातुः என்கிறபடி வ்யாபாரமோ அதன் பலமோ முக்யார்த்தமாகக் கொள்ளப்படலாமாகையால் இங்கே अधःप्रदेशस्थिति யென்கிறதை யிட்டு அவதாரபதப்ரயோகம். ஆகையால் நிற்கில நிலே அவதாரமென்கிறது ஸமஞ்ஜஸம். அர்ச்சை யென்னுமே அர்ச்சாவதாரமென்பது அர்ச்சா பதத்தாலே பூஜையைக் கொள்ளாமைக்காகவும், 'பிம்பங்களே மூர்த்திகளாக ஆரோபிக்கப்படுகின்றன உண்மையில் வேறு ரூபப்ரவேசமில்லே என்கிற விபரீதபுத்தியைப் போக்கவுமாம். ஹார்த்தரூபத்தை யருளிச் செய்கிருர் ஸர்வருடையவும் இதி. ஸர்வபதத்தாலே மநுஷ்யாதிகளே மட்டும் கொள்க. யோகம் செய்ய சக்தியற்ற ம்ருகாதிகளில் ஹார்தமில்லே யாதலின். இந்த அம்சம் ஸர்வத்தினுடையவும் என்னுமே ஸர்வருடையவுமென்று உயர்திணேயால் குறிக்கப்பெறும். அந்தர்யாமி பதத்திற்கு (बृहदा) அந்தர்யாமி ப்ராம்மணத்தில் ஓதினபடி எல்லா அசேநத்ரவ்யங்களிலும் ம்ருகாதி சேதநங்களிலும் மநுஷ்யர்களிடம் போல் புகுந்திருக்கிற பரமாத்மஸ்வரூபமே பொருள். அந்த ஸ்வரூபமே முடிவில் யோகிகளால் ஹ்ருதயத்திலும் ஹ்ருயத்திலுள்ளிருக்கும் ஜீவனிலும் த்யாநம் செய்யப்படுகிறபடியால் அந்தர்யாமியாகிறது. அது வாகாமல் பகவான் ஹ்ருதயத்தில் ஸூக்ஷ்மமாகும் திவ்ய மங்கள விக்ரஹம் எடுத்துக்கொண்டும் தங்குகிருன். அந்த விக்ரஹத்தையும் ஹார்தபதத்தாலே கொள்ளவேண்டுமென்று தெளிவிப்பதற்காக அந்தர்யாமி என்றுமே அந்தர்யாம்யவதாரமென்பது. அந்த: = உள்ளே நியமிப்பது பரமாத்ம ஸ்வரூபமானுலும் அது ஸ்வீகரித்த திருமேனியானபடியால் அந்தர்யாம் யவதாரமென்கிறது ஹார்தரூபமும் அதுவே, இது அந்தர்யாமியான பரமாத்ம ஸ்வரூபத்தை யோகத்இல் காண்பதற்கு முன் துணேயாயிருக்கும் ரூபமாகையால் அந்தர்யாமி ரூபம் என்று கொள்க இது ஸாத்வதஸம்ஹிதையில் அஷ்டாங்க என்கிற ச்லோகத்தால் சொல்லப்பட்டது யம நியம ஆஸநப்ராணுயாம ப்ரத்யாஹார தாரணு த்யாந ஸமாதிகளாகிற யோகம் செய்து ஜீவாத்ம ஸ்ரூவபத்தின் தர்சநமாகிற ஸித்தியைப் பெற்றவர்களாய்

இப்படி அவதரிக்கிற ரூபங்களில் வகைகளெல்லாம் शुद्धसत्त्वद्रव्यमयங்களாய் कर्मतत्फलங்களோடு துவக்கற வருகையாலே शुद्धसृष्टिயென்று பேர் பெற்றிருக்கும். இவ்வவதாரங்களெல்லாம் ஸத்யங்களென்றும், இவ்ற்றில் ஈச்வர

---

ஹ்ருதயத்திலே பரமாத்மாராதநம் செய்ய மனம் வைத்தவர்களாயிருக்கும் பக்தியோக நிஷ்டர்களுக்கு மட்டுமே ஹ்ருதயத்தில் எழுந்தருளியிருக்கும் ஒரு மூர்த்தியில் அதிகாரமுண்டு என்று அதன் பொருள். இந்த சுபாச்ரயமான ரூபத்தின் ஸாக்ஷாத்காரத்தால் பாபமற்றவர்களுக்கே பரமாத்ம ஸ்வரூபத்யாநத்தில் யோக்யதையாம். ஆகவே அதிலிழிகின்றவர்க்கு இது இறங்கும் துறையாகிறது. பரமாத்ம ஸ்வரூபத்யாநம் நிராகாரத்யாநம். அதற்கு உபாயமாகும் ஸாகாரத்யாநம் அதில் வெளியிலிருக்கும் சதுர்வ்யூஹாதி பூஜை அயோகிகளுக்கும் ஸுலபமாயிருக்கும். யோகிகளுக்கே ஸுலபமாயிருக்கும் ஹார்தரூபாராதனம் என்று ஸாத்வதாதிகளில் சொல்லப்பெற்றது.

இந்த ரூபங்களில் பரமபதத்திலுள்ளவை அப்ராக்ருதமென்றும் ப்ரக்ருதி மண்டலத்திலுள்ள ரூபங்கள் ப்ராக்ருதமென்றும் நினைக்க வேண்டா, எல்லாம் அப்ராக்ருதங்களே என்கிறார் இப்படி இதி. சுத்த ஸ்ருஷ்டியாவது சுத்தஸத்வத்ரவ்ய மூலமான ஸ்ருஷ்டி. ப்ரக்ருதியில் சுத்த ஸத்வத்ரவ்யமேதெனில், பரவாஸுதேவரூபத்தில் ஓர் அம்சமே பிரிக்கப்பட்டு வ்யூஹவிபவாதிகளாக வளர்கின்றன. பகவத்விக்ரஹ ஸ்ருஷ்டி மாத்ரமன்றி அவனைச் சேர்ந்த பூஷண—ஆயுதாதிகளும் அப்ராக்ருதரூபங்களே. இது கீதையில் दिव्यमाल्याम्बरधरं दिव्यगन्धानुलेपनम् என்று திவ்யபதத்தினால் அறியப்பெற்றது இவ்வளவுமாத்ரமன்றி அவன் எழுந்தருளியிருக்கும் சில இடங்களும் அப்ராக்ருதங்களாகும். திருவேங்கடமென்ற திருமலையானது பரமபதத்திலிருந்த க்ரீடா பர்வதமாகும். அது வராஹப்பெருமாளின் நியமநத்தினால் கொணரப்பபெற்றது என்றதை மாஹாத்ம்யக்ரந்தத்தில் காண்க. ஆகையாலே சுத்த விக்ரஹ ஸ்ருஷ்டி யென்னுமே சுத்த ஸ்ருஷ்டி என்று பொதுவாகச் சொன்னது. வஸ்துவுக்கு சுத்தத்வமாவது ரஜஸ்தமஸ்ஸுக்களோடு கலசாமை. ஸ்ருஷ்டிக்கு சுத்தத்வமாவது புண்ய பாப கர்மாதீநமாகாமை; அதன் பலாநுபவத்திற்காக ஆகாமையுமாம். இது இரண்டு சுத்த பதங்கள் கொண்டவாக்யத்திலே கருதப்பெற்றது.

சிலர்—அவதாரங்களில் பகவானுக்கு "राज्यात् भ्रंशो वने वासः सीता नष्टा द्विजो हतः। ईदृशीयं ममालक्ष्मीः निर्दहेदपि पावकम्" इत्यादिயால் வ்யஸநங்களும் அவத்யாதிகளும் தெரிவதால் இவற்றை ஈச்வரனுக்கு இசையலாகாது என்று இவற்றைப் பொய்யாகச் சொல்லவேண்டியிருப்பதால் அவதாரமே இந்த்ரஜாலம்=பொய்யானது மெய்யன்று என்பதே உசிதம் அப்படி அவதரிக்கிறனென்றால் புண்யபாபம் ஜ்ஞாநஸங்கோசம் எல்லாம் ஏற்பட்டு அநீச்வரத்வத்திலே முடியும் என்கிறார்கள். இதைக் கண்டித்து கீதையில் நாலாவது அத்யாயத்தில் க்ருஷ்ணன் வெளியிட்டிருக்கிற அவதார ரஹ

னுக்கு ஜ்ஞாநாதிஸங்கோசமில்லையென்றும், இவ் விக்ரஹங்கள் ஶுத்தஸத்த்வமயங்க ளென்றும், இவற்றிற்கு ஈஶ்வரேச்சையொன்றுமே காரணமென்றும் தர்மரக்ஷணம் பண்ண வேண்டும் காலமே காலமென்றும், ஸாதுபரித்ராணாதிகளே ப்ரயோஜனங்க ளென்றும், இவ்வர்த்தம் தெளிந்து அநுஸந்திப்பார்க்கு ஏகஜந்மத்திலே ஸ்வாதிகாராநுகுணஸமீஹிதோபாயபூர்த்தியாலே ஜந்மாந்தரம் அநுபவியாதே முக்தராகலா மென்றும், "बहूनि मे व्यतीतानि" என்று தொடங்கி ஐந்து ச்லோகத்தாலே கீதாசார்யன் அருளிச்செய்தான்

இது ஸ்வதந்த்ரப்ரபத்திநிஷ்டனுக்கு ஶரண்யகுணவிசேஷஜ்ஞாநமுகத்தாலே உபாயாநுஷ்டாநக்ஷணத்திலே

---

ஸ்யத்தைச் சுருக்கி யருளிச்செய்கிறார் இவ்வவதாரங்கள் இத்யாதியால். இங்கு வாக்யங்களில் சொல்லியிருக்கும் அம்சங்கள் மேலே சரமச்லோகாதி காரத்திலே, "अवतारस्य सत्यत्वं अजहत्स्वस्वभावता। शुद्धसत्त्वमयत्वं च स्वेच्छामात्रनिदानता॥ धर्मग्लानौ समुदयः साधुसंरक्षणार्थता। इति जन्मरहस्यं यो वेत्ति नास्य पुनर्भवः॥ என்று இரண்டு காரிகைகளால் ஸங்க்ரஹிக்கப்பெற்றன. अजोऽपि सन् என்று ஆரம்பித்து இவ்வர்த்தம் கீதையில் கூறப்பெற்றது. இவ்வர்த்தம் தெளிந்து = இந்த ஆறு அம்சத்தையும் தெளிவாகத்தெரிந்து; அநுஸந்திப் பார்க்கு = சிந்தனை செய்பவருக்கு; த்யாநிப்பாருக்கு என்றபடி. இது "बहवो ज्ञानतपसा पूता मद्भावमागताः" என்று தப:பதத்தாலே யறிவிக்கப்பெற்றது. ஏகஜந்மத்திலே = எந்த ஜந்மத்தில் சிந்தனை செய்கிறாரோ அதே ஜந்மத்தில். ஸ்வாதிகாரேதி. பக்த்யதிகாரியாயிருந்தால் பக்தியே ஸமீஹிதமான = இஷ்ட மான உபாயம்; ப்ரபத்த்யதிகாரிக்குப் ப்ரபத்தியே. बहूनि मे व्यतीतानि இதி. இந்த யோகத்தை ஸூர்யனுக்கு நான் ப்ரவசநம் செய்தேன் என்று க்ருஷ்ணன் அருளியபோது அர்ஜுநன் வெகுகாலத்திற்கு முன்னே பிறந்து வ்யாபகனான ஸூர்யனுக்கு இப்போது பிறந்த நீர் ப்ரவசநம் செய்ததாகக் கூறுவது சேருமோ என்று கேட்டான். அதற்கு இது உத்தரம்—ஹே அர்ஜுந எனக்குப் பல ஜந்மங்கள் கடந்தன. உனக்கும் பல; அவற்றையெல்லாம் நான் அறிகிறேன்; நீ அறிகிறதில்லை என்பதே விசேஷம். கடந்த ஜந்மத் தில் உபதேசித்ததை நினைத்துச் சொன்னேன் என்றபடி. பக்த்யதிகாரிக்கு அவதாரரஹஸ்ய சிந்தநம் எந்த தசையில் புநர்ஜந்மத்தை விலக்கத் துணை யாகும் என்பதை ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் பத்தாவது அங்கத்தில் ஆராய்க. அங்கே ஸர்வஸாக்ஷாத்காரமென்கிற நமது வ்யாக்யாநத்தைக் காண்க. பக்தியோகாதிகாரிக்கு இது வேண்டுவதானாலும் ப்ரபத்த்யதி காரிக்கு ப்ரபத்தியே ஜந்மாந்தரத்திற்குக் காரணமான ப்ராரப்தத்தையும் போக்குமாகையால் இது எதற்கு என்கிற சங்கையில் வேறு ப்ரயோஜநம் கூறுகிறார் இது. இதி. ப்ராரப்தத்தைப் போக்கவாகாத பக்தியோகத் திலிழிந்தவனுக்கும் அவதாரரஹஸ்யசிந்தநத்தில் அபிமாநத்தாலே ப்ரார ப்தத்தைப் போக்க முன் வரும் ஈச்வரன் அகிஞ்சநனாய் திண்டாடுமிவனிடத் திலுள்ள அவதாரரஹஸ்ய சிந்தநத்தை வீணாக்கமாட்டான். இது ஸமயத்தில்

महाविश्वासादिகளை स्थिरीकरित्து उपकारகமாம்.

இப்படியே அர்ச்சாவதாரமும் மிறுக்கற மோக்ஷத்தைத் தருமென்னு மிடத்தை— (वि. ध)

"सुरूपां प्रतिमां विष्णोः प्रसन्नवदनेक्षणाम्। कृत्वाऽऽत्मनः प्रीतिकरीं सुवर्णरजतादिभिः॥
तामर्चयेत् तां प्रणमेत् तां यजेत् तां विचिन्तयेत्। विशत्यपास्तदोषस्तु तामेव ब्रह्मरूपिणीम्॥"

என்று श्रीशौनकभगवान் அருளிச்செய்தான். ஆழ்வார்களும் இவ் அவதார ரஹஸ்யத்தையும், अर्चावतारवैलक्षण्यத்தையும் प्रचुरமாக அநுஸந்தித்து,

---

ஸம்சயத்திற்கிடம் கொடுக்காமல் சங்காபஞ்சகநிவர்த்தகமான ஐந்து அம்சங்களில் அடங்கிய பகவத்குண விசேஷத்தைத் தெளிவாக்கி மஹாவிச்வாஸத்தையும் ப்ரபத்த்யநுஷ்டாநத்தில் உத்ஸாஹத்தையும் நிலை நிற்கச் செய்யுமென்றபடி. இவ்வளவால் விபவாவதாரவைபவம் சொல்லிற்று.

அர்ச்சாவதாரமானது பக்தியோக நிஷ்டருக்கு பக்தியோகம் செய்ய யோக்யதை வருவதற்காக கீதாபாஷ்யத்தில் "मत्कर्मपरमो भव" என்ற விடத்தில் சொன்ன மூர்த்தியாராதநாதிகளுக்காக ஏற்பட்டபடியால் மோக்ஷத்திற்காகச் செய்யும் உபாஸநாதி ரூபமான உபாயத்திலே விஷயமாகுமோ. ஆகையால் மோக்ஷத்தைத் தருவது வேறு அவதாரமே என்கிற சங்கையைப் பரிஹரிகிறார் இப்படி இதி. இப்படியே= பரவ்யூஹவிபவங்கள் போலவே; மிறுக்கு அற—ஆயாஸமில்லாமல்; விபவவ்யூஹங்களையிடையிடாமல் நேராகவே என்ற படி. என்னுமிடத்தை = என்கிற விஷயத்தை. सुरूपामिति. प्रसन्नवदनेक्षणां அநுக்ரஹமளிக்கும் வகையில் தோற்றும் திருமுகமும் திருக்கண்களுமுடைய आत्मनः प्रीतिकरीं - ஸேவிக்கும் போதே தனக்கு ப்ரீதியையுண்டாக்குகிற ஸ்வரூபாம் நல்ல வடிவமுள்ள विष्णोः प्रतिमां—பகவானின் விக்ரஹத்தை सुवर्णरजतादिभिः—பொன் வெள்ளி செப்பு மரம் கல் ஸுதை முதலானவற்றால் कृत्वा—செய்து ப்ரதிஷ்டையும் செய்து तां—அந்த மூர்த்தியை अर्चयेत्—அர்ச்சிப்பது. प्रणमेत्—ஸேவிப்பது. यजेत् - பூஜிப்பது. विचिन्तयेत्—த்யாநம் செய்வது. अपास्तदोषः तु—அதனாலேயே அநாதி கர்மாதிதோஷங்கள் விலக்கப்பெற்றவனாய். ब्रह्मरूपिणीं—பரப்ருஹ்ம ஸ்வரூபமான तां—அதே மூர்த்தியை विशति—அமர்ந்து புகுகிறான். பரவாஸுதேவனைப் பெறுகிறான் என்றபடி, இங்கே विचिन्तयेत्, विशति என்கிற பதங்களாலே அர்ச்சாமூர்த்தி த்யாநமே மோக்ஷம் தரும் என்னப்பெற்றது. அர்ச்சாவதாரமே போதுமாகில் ஆழ்வார்கள் "உயர்வற உயர்நலமுடையவன்", "பரனடி மேற் குருகூர்ச் சடகோபன்" என்றெல்லாம் பரரூபத்தை யநுஸந்தித்தது ஏன் என்ன அருளிச்செய்கிறார் ஆழ்வார்களும் இதி. பர ரூபத்தில் ஈடுபட்டவை உபநிஷத்துக்கள். விபவத்தில் புராணங்கள். வ்யூஹத்திலும் அர்ச்சாப்ரதிஷ்டா முறையிலும் பாஞ்சராத்ராகமங்கள். "பத்துடையடியவர்க்கு எளியவன்." இத்யாதிகளிலே விபவாத்யவதாரரஹஸ்யத்திலும், திவ்ய தேச மங்களாசாஸநமேஅதிகமாகையால் அர்ச்சாவதார வைலக்ஷண்யத்திலுமே பெரும்பாலும் ஈடுபட்டவை திவ்யப்ரபந்தங்கள். பரரூப அநுஸந்தாநம்

இதற்குப் பேரணியாகப் பரத்வத்தைக் கண்டு போந்தார்கள்.

இப்படியிருக்கிற ஈச்வரன் தன் ஆநந்தத்துக்குப் परीवाहமாகப் பண்ணும் வ்யாபாரங்கள் सकलजगत्सृष्टिस्थितिसंहारमोक्षप्रदत्वादिகள். இவ்வீச்வரன் "नित्यैवैषा जगन्माता विष्णोः श्रीरनपायिनी" इत्यादिகளிற்படியே सर्वावस्थैயிலும் सपत्नीकனாய்க்

---

செய்தது பேரணியாகையால்; அதாவது மூலபலமாகையால். போரில் முன் நின்று ஸேனை சத்ருக்களை ஜயிப்பதானாலும் அதற்கு நகரத்திலுள்ள பேரணி=மூலபலம் உதவியாயிருப்பது போல் அவதாரங்களெல்லாம் பர ரூபத்திலிருந்து வந்தவை யாகையாலே அதன் ஸ்வபாவத்தொடர்ச்சியாலே இவை பலனளிப்பதால் அதற்காக அதையும் பேசினார்கள் என்றபடி பர ரூபத்தைக் கண்டு என்றதால், "मनुष्यत्वे परत्वं च" என்ற கீதார்த்த ஸங்க்ரஹத்தில் போலே அர்ச்சாவதார அநுபவத்திலேயே பரத்வம் உட்கொள்ளப்பட்டது என்றதாம்.

இவ்வளவால் ஈச்வரனுடைய ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகளில் பஞ்சரூப விசிஷ்ட ஸ்வரூபம் விவரிக்கப்பட்டது. அந்தந்த ரூபங்களின் நீடிப்புக்கு ஏற்ப ஸ்த்திதியும் அறிந்தபடியேயாம். மேலே வ்யாபாரங்களை ஒரு வாக்யத்தில் சுருக்குகிறார் இப்படி இதி. போகவிபூதியில் பரிபூர்ண ஆநந்தனாயிருப்பவன் எதற்காக இங்கு ஸ்ருஷ்ட்யாதிகளைச் செய்யவேண்டுமென்று வினவலாகாது. பூர்ணாநந்தனாயிருப்பவன்தான் லீலையாக பல வ்யாபாரம் செய்வது, அரசனுக்குப் பந்துவிளையாட்டுப் போல இந்த ராஜாதி ராஜனுக்கு ஸ்ருஷ்ட்யாதிகள் லீலையாம், இப்படி ஆநந்தவெள்ளத்திற்கு மேற்போக்கானாலும் இந்த வ்யாபாரங்களால் बद्धஜீவர்களுக்கு மோக்ஷமளிப்பதற்காக வாத்ஸல்யத்தினாலே அவர்களின் கர்மாக்களைக் கழிப்பதற்காகத் தக்கவாறு பலன்களை யளிப்பதால் வைஷம்யாதிகள் வாராதபடி விளையாடுகிறான். கீழே சேதநபதத்தாலே பத்தமுக்த நித்ய ஜீவர்களை மட்டும் சொல்லியிருப்பதால் இங்கே ஈச்வரனென்று எம்பெருமான் ஒருவனையே சொன்னதால் ஸ்ரீதத்துவத்தைச் சொல்லவில்லையே என்று நினைக்கவேண்டா. ப்ரஹ்ம ஸ்வரூப நிரூபகதர்மங்களில் ச்ரிய: பதித்வமும் சேர்ந்ததாமே. ஆகையாலே மற்ற தர்மங்களைவிட லக்ஷ்மீயென்கிற தர்மத்திற்கு ஸ்வரூப ஸ்த்திதி ப்ரவ்ருத்திகள் என்கிற விசேஷங்களிருப்பதைச் சொல்லுவதற்கு இதே இடம் என்று கருதி அருளிச்செய்கிறார் இவ்வீச்வரன் இத்யாதி, நித்யேதி. ஜகத்பிதாவான விஷ்ணுவினிடத்திலிருந்து अनपायिनी—பிரியாதவளாய், जगन्माता—உலகுக்கெல்லாம் தாயுமாய் एषा—இந்த லக்ஷ்மியானவள். नित्या—எப்போதுமே யிருப்பவள். ப்ருகு மஹர்ஷிக்குப் பெண்ணான பிறகோ, திருப்பாற்கடலிலிருந்து தோன்றின பிறகோ சேர்ந்தவளென்பதில்லை ஸர்வாவஸ்தையிலும்—ஸகலஜகத்ஸ்ருஷ்டி ஸம்ஹார மோக்ஷ ப்ரதத்வாதிகளென்று கீழ்க்கூறப்பட்ட ஸர்வதசைகளிலும். எல்லா தசைகளிலும் ஸபத்நீகனாயிருக்குமென்றதாலே இந்த ஸர்வாவஸ்த்தைகளும்

கொண்டேயிருக்குமென்னுமிடத்தை "तत्त्वेन यः", "माता पिता" என்கிற ச்லோகங்களிலே உபகாரவிசேஷத்தாலே सादरமாக விசேஷித்துச் சொல்லப் பட்ட पराशर - पराङ्कुशप्रबन्धங்களிலே தெளிந்துகொள்வது.

இவ்விடத்தில், दण्डधरत्वமும், पुरुषकारत्वादिகளும் எம்பெருமானுக்கும் பிராட்டிக்கும் கூறாக विभजित्த வ்யாபாரங்கள்.

---

பத்நியான இவளுக்குமுண்டு என்றதாயிற்று तत्त्वेन यः என்றது பராசரரைப் பற்றியது. माता पिता என்பது நம்மாழ்வார் விஷயம். இவ்விருவரை ஆள வந்தார் இ ச்லோகங்களாலே விசேஷித்துக் கொண்டாடியது எம்பெருமானோடு துல்யமாக நமக்கு ஈச்வரீ யாகிறளென்கிற உண்மையை இவர்கள் தெளிவாக அறிவித்தார்களென்று உபகார ஸ்ம்ருதியினாலே. இதை பராசர ப்ரபந்தத்தில் திருப்பாற்கடல் கடைந்த வ்ருத்தாந்தம் சொன்னவிடத்திலே மைத்ரேயருக்கு விரிவாக உபதேசித்ததிலிருந்து காண்க. பராங்குச ப்ரபந்தத்தில் பல இடங்களில் உள்ளதற்கு உதாஹரணமாக अर्थपञ्चकाधिकारादिகளில் இருப்பதைக் காண்க.

பராசரர் "यथा सर्वगतो विष्णुः तथैवेयं द्विजोत्तम" என்று விஷ்ணுவைப் போலே ஸ்வருபத்தாலும் ஸ்வபாவத்தாலும் ஸர்வ வ்யாபியா யிருப்பவள் என்று சொல்லியிருந்தாலும் "स्त्रीनाम्नी लक्ष्मीः" என்று ஸ்த்ரீகளை யபிமாநிப் பவளென்றும், அவனே पुंनामा भगवान् என்று புருஷர்களை யபிமாநிப்பவன் என்றும் வாசியைச் சொல்லவில்லையோ. ஸம்ப்ரதாயத்திலும் பாஞ்சராத்ராதிகளுக்கிணங்க அஜ்ஞாத நிக்ரஹையான இவளுக்கு தண்டதரத்வாதிகளில்லை (தண்டதரத்வமாவது சிக்ஷிப்பது; பாபபலமான துக்கத்தையளிப்பது) இவை ஈச்வரனுக்கு உள. அவன் உபாயமாகைக்கு இவள் புருஷகாரமாகிறாள். சரணாகதியை நடத்திவைக்கிறாள் என்றவாறு பல வாசிகளிருப்பதாலே இருவருக்கும் ஸர்வஸாம்யம் சொல்லக் கூடுமோ என்ன உத்தரம் இவ்விடத்தில் இத்யாதி, ஸர்வாந்தர்யாமியான எம்பெருமானை புருஷமாத்ராபிமாநியாகச் சொல்வது தகுமோ. அதுபோல் இவளுக்கும் ஸ்தரீமாத்ர அபிமாநித்வம் சொன்னதற்குக் கருத்து வேறு கொள்ளவேண்டும். இருவரும் எல்லா தர்மங்களையும் பெற சக்தர்களானாலும் தாங்களாக இஷ்டப்பட்டு भोगரஸாநுகுணமாகச் சிற்சில தர்மங்களுக்கு வ்யவஸ்தையைப் பண்ணிக் கொண்டார்கள். ஸ்த்ரீகளுக்கு ஸ்த்ரீஸ்வபாவம் விஞ்சியிருப்பதற்காக விசேஷ அபிமாநம் இவர்களிடம் வைத்தாலும் புருஷர்களையும் இவள் நியமிப்பவளே. க்ருஹத்திலிருக்கும் ஸகல சொத்துக்கள்விஷயத்திலும் தம்பதிகளுக்குத் துல்யமான உரிமையிருந்தாலும் அவரவர் சில அம்சங்களைப் பிரித்து கவனித்துக்கொள்வது போல் ஆம் இது என்றபடி. விபஜித்த வ்யாபாரங்கள் என்று வ்யாபாரபதப்ரயோகம் தண்டதரத்வாதிகள் வ்யாபாரமாயிருப்பதாலே. ஆகையால் வ்யாபாரமல்லாத தர்மங்களுக்கும் விபாகமுண்டு இது மேலே எடுக்கும் பட்டருடைய ச்லோகங்களிலே வ்யக்தம்.

'उपदिश्यमानधर्माधारத்திற்காட்டில் अतिदिश्यमानधर्माधारத்துக்கு விசேஷம் स्वतः प्राप्तமென்று உவர் அருளிச்செய்ததுக்கும் இப்படி विभागத்தால் வந்த வைஷம்

---

ஆனாலும் ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்து மத்யஸ்தராயிருக்கும் ஒருவர் பெருமாளுக்கும் பிராட்டிக்கும் ஸ்வதஸ்ஸித்தமான பேதமுமுண்டு என்று நிரூபிப்பதற்காக उपदिश्यमानेति வாக்ய ப்ரயோகம் செய்தார். அதன் அர்த்தமாவது. "नित्यं तद्धर्मधर्मिणी, "यथा सर्वगतो विष्णुः तथैवेयम्" என்ற வாக்யங்கள் எம்பெருமானுக்குள்ள தர்மங்கள் பிராட்டிக்குமுண்டு என்கிறன. இதனால் உபநிஷத்து முதலான ப்ரமாணங்களில் எம்பெருமானுக்கே எல்லா தர்மங்களும் சொல்லியிருந்தாலும் தனியாகப் பிராட்டிக்குச் சொல்லப்படாமலிருந்தாலும் அங்கிருந்து இங்கு அதிதேசம் சொல்லியிருப்பதாலே = அதாவது அவனோடு ஸாம்யமுண்டு அவனுக்குச் சொன்னவையெல்லாம் இவளுக்கும் என்றதாலே தர்மஸாம்யம் ஏற்படுவதுபோல், சில தர்மங்கள் அவரவருக்குத் தனியாக இயற்கையிலே உள்ளவை யென்றும் கொள்ளலாம். லோகத்தில் ஓர் இடத்தில் சொல்லப்பட்ட தர்மத்தை மற்றோரிடத்திற்கு நிரூபிக்குமிடங்களிலெல்லாம் அந்தந்த வஸ்துக்களுக்கு ஸ்வபாவஸித்தமான பேதத்தையும் காண்கிறோமே. சந்த்ரனைப்போல் ஆநந்தமளிப்பது முகமென்றால் சந்த்ரத்வ முகத்வாதி தனிவிசேஷங்கள் பல இல்லையா. பூர்வ மீமாம்ஸையில் யாகாதிகளை ப்ரக்ருதியாகவும் விக்ருதியாகவும் பிரித்தது. ப்ரக்ருதி யாகமாவது அந்த யாகத்தில் செய்யவேண்டிய தர்மங்களுக்கெல்லாம் எதற்கு ஸ்பஷ்டமாக உபதேசமே யிருக்கிறதோ அதுவாகும். விக்ருதியாகமாவது இங்கு உபதேசிக்காத தர்மங்களையும் இதற்கு முன்சொன்ன ப்ரக்ருதி யாகத்திலிருந்து கொண்டு வரவேண்டுமென்று ஆராய்ந்து அதைப்போல் இதையும் செய்ய வேண்டுமென்று எதற்கு நிரூபிக்கிறோமோ அந்த யாகமாகும். உதாரணம்— ஆக்நேயயாகம் ப்ரக்ருதி. ஸௌர்யயாகம் விக்ருதி. இதற்கு தர்மஸாம்யம் பிறகு ஏற்பட்டாலும் ஒன்று அக்நிதேவதாகம் மற்றொன்று ஸூர்ய தேவதாகம் என்று ஸ்வபாவத்திலேயே வாசியுள்ளது. அதுபோல் வேறு இடத்திலிருந்து வருவிக்கும் தர்மங்களைத் தவிர அபூர்வமான வேறு தர்மங்களும் விக்ருதி யாகத்தில் விதிக்கப்பட்டிருந்தால் அந்த वैशेषिकाकारங்களாலும் வைலக்ஷண்யம் ஸ்வத:ப்ராப்தம். அதுபோல் பிராட்டிக்கும் பல விசேஷங்கள் என்றார் உவர் = மத்யஸ்தர். மேலெடுக்கும் ச்லோகத்தில் பட்டர் ஸமமான ஆகாரங்கள் தவிர வேறுபாட்டிற்கான ஆகாரங்களெல்லாம் இருவரும் இஷ்டப்பட்டு அநாதியாக வைத்துக்கொண்டதாலாமென்று அருளிச்செய்திருப்பதால் இருவருடைய இச்சையில்லாமல் ஸ்வாபாவிக வைஷம்யத்தை இசைய லாகாது. உவரின் வாக்யத்தில், 'விசேஷம் ஸ்வத: ப்ராப்தம்' என்பதற்கு விசேஷமில்லாமலிருக்க முடியாது என்பது அர்த்தமே தவிர அந்த விசேஷம் இவர்களிச்சையில்லாமல் வந்ததென்றும் பொருளல்ல என்றதாயிற்று. இந்த நிர்ணயத்திற்கு மூலமான ச்லோகத்தை யுதாஹரிக்கிறார் இது இதி.

யத்திலே தாத்பர்யம். இது "युवत्वादौ तुल्येऽपि' என்கிற ச்லோகத்திலே निर्णीतम्

---

இது= இந்த வைஷம்யம் தாங்களாகச் செய்துகொண்ட விபாகத்தால் வந்ததென்பது, "युवत्वादौ तुल्येऽपि अपरवशताशत्रुशमन.स्थिरत्वादीन् कृत्वा भगवति गुणान् पुंस्त्वसुलभान् । त्वयि स्त्रीत्वैकान्तान् म्रदिम.पतिपारार्थ्य.करुणा.क्षमादीन् वा.भोक्तुं भवति युवयोः आत्मनि भिदा ॥ ஹே ஸ்ரீரங்கநாயகி! युवयोः— உங்களிருவருக்கும் युवत्वादौ—யௌவநம் முதலான ரூபகுணங்களும் மற்றும் ஸ்வரூபகுணங்களும் तुल्येऽपि ஸமமாகவிருப்பதாகிலும், भगवति - எம்பெருமானிடத்தில் पुंस्त्वसुलभान् ஆண்மையோடு சேர்ந்திருக்கத்தக்க, अपरवशता— பாரதந்த்ர்யமில்லாமை (க்ரூரமாயிருக்கையும் ஸ்வாதந்த்ர்யமும்) शत्रुशमन—விரோதிகளை யழிப்பது, स्थिरत्व உறுதியாயிருக்கை आदीन्—இவை முதலான गुणान्— குணங்களையும், त्वयि உன்னிடத்தில் स्त्रीत्व-एकान्तान्—பெண்மையோடேயே இருக்கவான, म्रदिम மென்மை पतिपारार्थ्य-பர்த்தாவுக்கு சேஷமாயிருக்கை करुणा-தயை, क्षमा பொறுமை आदीन् गुणान्-இவை முதலான குணங்களையும், வ்யவஸ்த்திதமாக कृत्वा - வைத்து भोक्तुं–அநுபவிப்பதற்காகவே. युवयोः आत्मनि—உங்களுடைய ஸ்வரூபத்தில் भिदा–பிரித்திருக்கை भवति-நிலைத்திருக்கிறது; स्थिरत्वादि என்கிற ஆதிபதத்தாலே दण्डधरत्वादिகளையும் க்ஷமादीन् என்கிற आदिபதத்தால் புருஷகாரத்வாதிகளையும்கொள்க. எல்லா குணமும் இஷ்டப்பட்டால் இருவருக்கும் இருக்கக்கூடுமாகிலும் நீ ஸ்த்ரீவிக்ரஹத்தையும் அவன் புருஷவிக்ரஹத்தையும் மாதாபித்ருபாவத்திற்காக இசைந்து அந்த ஆண்மைக்கும் பெண்மைக்கும் உரிய குணங்களையும் வ்யவஸ்த்தை செய்து கொண்டது போகத்திற்கு அநுகூலமாயிருக்கைக்காக, போகத்திற்காகவே பேதத்தை ஏற்படுத்தியதாயென்றபடி. कृत्वा என்கிற क्त्वाप्रत्ययम् भवति என்ற இடத்தில் சேராது, ஸமாநகர்த்ருகமான க்ரியையன்றே என்று भोक्तुं என்றதோடு சேர்ததது. பிரித்துவைத்துக்கொண்டு அநுபவிப்பதற்காக என்றபடி. भिदा என்பதற்கு भेदनம் பிரிக்கை என்று முழு அர்த்தத்தைக் கொண்டால் कृत्वा என்பது அங்கும் சேரும். ஆக போகாநுபவத்திற்காக அந்தந்த குணங்களை அங்கங்கு வைத்துப் பிரிக்கை ஏற்பட்டிருக்கிறதென்றபடி அவன் ஸ்வதந்த்ரனாயிருக்கையும் அவனுக்கு நீ சேஷமாயிருக்கையும் தாங்களே செய்துகொண்டவையாகையாலே நீ புருஷகாரமானாலும் அவன் ஸ்வாதந்த்ரயத்தாலே மீறுவானென்பதில்லை, நீ சேஷமாயிருக்கிறபடியாலே ஆச்ரிதரக்ஷணத்தை த்ருடமாக ஸங்கல்பித்துக் கொள்வதும் அவனை நிர்பந்திப்பதும் செய்ய மாட்டாயென்பதில்லையென்றபடி.

பிறருக்குப் பரவசமாயில்லாமை என்பது இருவருக்கும் கூடுமாகிலும் அவனைப் பதியாகக் கொண்டதாலே அதை அவனுக்கு வைத்து இவள் சேஷமாக நின்றதாம். ஜீவனிடம் சேஷத்வமானது ஈச்வரேச்சையாலேற்பட்டது. அந்த இடத்தில் அந்த சேஷத்வம் भोगादिகளுக்காக ஈச்வரனால் பிரிக்கப்பட்டதென்று சொல்வதில்லை. ஆகையினால் அதைவிட பிராட்டி

யினிடமுள்ள பாரார்த்யத்தை भोगத்திற்காக विभजिக்கப்பட்டதாகச் சொல்வதால் जीवशेषत्वं भगवदिच्छामात्रकृतம் அதற்கு ஜீவனின் இச்சை காரணமன்று; இவளுடைய சேஷத்வத்திற்கு இவளுடைய இச்சையும் சேர்ந்தே காரணமென்றதும் இங்கே தெரியவருகிறது. பட்டர் युवत्वादौ என்பதற்கு முன் ஒரு ச்லோகத்தில் "ज्ञानशक्तिबलैश्वर्यवीर्यतेजस्सुக்களான षाड्गुण्यம் क्षेमङ्करत्वம் முதலான ஆத்மகுணங்களும், பரிமளம் காந்தி முதலான திருமேனிகுணங்களும் இருவருக்கும் ஸமமென்று அருளினர். பகவானைப் போலே ஷாட்குண்யாதிகளைச் சொன்னதாலே ஈச்வரத்வம் பூர்ணமென்று தெளிவாம். ஷாட்குண்யத்திலுட்பட்ட சக்தியானது உபாதாநத்வ ரூபமென்று பாஞ்சராத்ராதிகளில் உபபாதிக்கப்பட்டிருப்பதால் ஜகத்காரணத்வம் ஸித்தம். க்ஷேமங்கரத்வமென்பது மோக்ஷபர்யந்த பலனை ஸங்கல்பிப்பதேயாம். இது மேலே ऐश्वर्ये अपारे (8) என்கிற ச்லோகத்திலும் ஸ்பஷ்டம். ஈச்வரனோடு ஸமமாகும் இக்குணங்கள் என்று ஸ்பஷ்டமாயிருக்க இவை அவனுக்கு ஸ்வபாவஸித்தம், இவளுக்கு இக்குணங்கள் அவனால் வந்தவை என்பது ஸ்வரஸமாகாது. அவனுக்கதீநமென்றாலும் இவள் அவன்திருவுள்ளத்திற்கு உட்பட்டே ஜகத்காரணமாகவும் மோக்ஷத்தை ஸங்கல்பிக்கிறவளாகவும் ஆகிறாளென்று கிடைக்குமே யல்லது இவையில்லை என்று தோன்றாது. அடுத்த ச்லோகத்தில் अन्येऽपि यौवनमुखाः என்று வேறு குணங்களையும் கூறி இவையெல்லாவற்றையும் இங்கே युवत्वादौ तुल्येऽपि என்று அநுவாதம் செய்தார். இனி சத்ருசமநம் கருணை க்ஷமை என்றாற்போன்ற குணங்களும் இருவருக்குமுண்டாகையால் எப்படி வ்யவஸ்திதங்களாகுமென்னில்—பிராட்டிக்கு சத்ருசமநசக்தி யுண்டு; ஆனாலும் விபாகம் செய்துகொண்டிருப்பதால் அதைச் செய்வதில்லை. இதையே "तपसश्चानुपालनात् । न त्वा कुर्मि दशग्रीव भस्म भस्मार्ह तेजसा ॥" என்றாள். தான் சக்தியற்றவளாய் பகவானைக்கொண்டு சத்ருசமநம் செய்கிறாளென்பதில்லை. இவ்வாறே பகவான் கருணைக்கடலானாலும் விபாகத்திற்கிணங்கி இவள் தூண்டியபிறகே குணத்தை ஆவிஷ்கரிப்பான். இதுபோல் ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்தில் (.-87) उपादत्ते என்கிற ச்லோகத்தில் எம்பெருமானுக்குச் சொன்ன சேதநாசேதநசேஷித்வம் பிராட்டிக்கு முண்டு என்று ஸ்ரீமாந் என்கிற பதத்தினாலே தெரிவித்திருப்பதால் उभयाधिष्ठानं चैकं शेषित्वமென்பதில் விவாதமில்லை யாகையால் அந்த சேஷித்வப்ரயுக்தமாக உபேயத்வம் போலே உபாயத்வமும் பிராட்டிக்கு ஸ்வாபவமென்று ஸ்பஷ்டமாவதால் அதை ஈச்வரனுக்கு மட்டு மிசைவது தகாது. இல்லையேல் உபேயத்வமும் இல்லையென்ன வேண்டும். இப்படி பட்டரது திருவுள்ளம்.

எம்பெருமானைச் சொன்னவிடமெல்லாம் பிராட்டியையும் சொல்லிற்றாமத்தனை" என்கிற எம்பெருமானாரின் ஸூக்தியையும் பட்டர் முதலானவரின் ஸூக்தியையும் உபேக்ஷித்து உபநிஷத்துக்களிலும் புராணாதிகளிலும் பகவான் ஒருவனையே எங்கும் சொல்லியிருப்பதால் அவனுக்கே ஈச்வரத்வம்,

"இறை நிலையுணர்வரிது" என்று ஆழ்வார் அருளிச்செய்த நிலத்திலே ஏதேனுமொரு वृथानिर्बन्धं ஆகாது. "कृशान् अर्थांस्ततः केचिदकृशांस्तत्र कुर्वते"

---

பிராட்டிக்கில்லை என்று பிடிவாதமாகப்பேசுகின்றவர்களைக் குறித்துக் கூறுகிறார் இறைநிலை இத்யாதி. ஆழ்வார் "உணர்ந்து உணர்ந்து" (1-3-6) என்கிற பாட்டில் த்ரிமூர்த்திகளில் யார் இறை—(ஈச்வரன்) என்பதே அறிவதற்கு அரிதாயிருக்கிறது, ப்ரமிக்கவேண்டா. நன்றாக ஆராய்ந்து முடிவு கொள்ளுங்களென்று கூறியிருக்கிறார். மேலே இரு பசை யறுத்து நன்றெறில் நாராயணனிடம் நலம் செய்ய வேண்டுமென்று தெளிவித்தார். உணர்ந்து உணர்ந்து என்றதாலே ப்ரமாணத்தையும் ப்ரமாணாநுகூலமான தர்க்கத்தையும் கொண்டு நிர்ணயிக்க வேண்டுமேயல்லது கேவல யுக்திவாதங்கள் தகா; பலர் கூடி ஒருமுகமாகப் பல குதர்க்கங்களை ப்ரயோகித்தாலும் உண்மை மாறுதாகையால் ருத்ராதிகள் ஈசவரராக மூடியாதென்று அங்கே தெரிவிக்கப்பட்டது. அது போல் அந்த ஈச்வரதத்வத்தில் பிராட்டிவிஷயமாக விவாதப்பட்டு, மைத்ரேயர் பராசரரிடமிருந்து ஈச்வரீ என்று தெளிந்தார். அதைப் பின்பற்றிய ஆழ்வார்ஸ்ரீஸூக்திகளும் அப்படியே ஸ்பஷ்டமாகப் பேசுகின்றன. இவற்றை மீறிப் பிராட்டிக்கு ஈச்வரத்வமில்லை யென்கிற நிர்பந்தம் கொள்வது வீணாகும். वृथा निर्बन्ध மாகாதென்ற விடத்தில் ஆகாது என்கிறதற்கு தகாது என்று அர்த்தமாய் सिद्धोपायशोधनाधिकारத்தில் அருளப்போகிறபடி அநர்த்தத்திற்கே காரணமாகுமென்று கருத்தாம். நாங்கள் சொல்வது எப்படி वृथा நிர்பந்தமாகும்; யுக்திகளைக் கொண்டு प्रमाणங்களுக்கு வேறு கருத்தைதானே சொல்லுகிறோமென்ன அருளிச்செய்கிறார் कृशान् इति. பாரத ஸபாபர்வத்தில் (39-ராஜஸூயயாகத்தில்) ப்ராம்மணர்கள் முதலானோர் யாகபூமியினுள்ளே புகுந்து பலவித சர்ச்சைகள் செய்தார்கள் என்ற விடத்தில் "जजल्पुरमितौजसः" என்று ஜல்பத்தையும் "वितण्डां वै परस्परम्" என்று விதண்டையையும் கூறி அதன் மேல் சொன்ன ச்லோகமிது. ஜல்பமாவது வெற்றி பெறவேண்டுமென்று தான் பிடித்த பக்ஷத்தையே ஆபாஸ யுக்திகளாலும் ஸ்தாபிப்பது, விதண்டையாவது— தன் பக்ஷத்தை ஸ்தாபிப்பதை விட்டு பிறர்பக்ஷத்தை தூஷணம் மட்டும் செய்வது. ச்லோகார்த்தமாவது—तत्र—அந்த ராஜஸூயயாகத்தில் केचित्—சிலர் ततः—கீழ்க்கூறிய ஜல்பவிதண்டைகளைக் கொண்டு कृशान्—அத்யல்பங்களாயும் साधकबलமற்றவைகளுமான अर्थान्—விஷயங்களை अकृशान् कुर्वते அந்நிலைக்கு மாறாக ஆக்க முயல்கின்றனர். இந்த ச்லோகத்தில் மேல்பாதி अकृशांश्च कृशान् चक्रुः हेतुभिश्शास्त्रनिश्चयैः என்றிருப்பதால் க்ருசங்களை அக்ருசங்களாக்குவது போல் அக்ருசங்களையும் க்ருசங்களாக்குவதும் சொல்லப்படுகிறது. हेतुभिः शास्त्रनिश्चयैः என்பது இரண்டிலும் சேரும். ஆக சாஸ்த்ர நிச்சயப்படியில் க்ருசமானவற்றை ஹேதுக்களாலே அக்ருசமாகவும் சாஸ்த்ர நிச்சயப்படியில் அக்ருசமானவற்றை ஹேதுக்களாலே க்ருசங்களாகவும் காண்

என்கிறபடியே तर्कपाण्डित्यத்தாலே நினைத்ததெல்லாம் साधिக்கலாயிருக்கச் செய்தேயிறே நாம் प्रमाणशरणராய்ப் போருகிறது. ஆகையால் இவ் ईश्वर-तत्त्वத்தையும் ईशितव्यतत्त्वங்களையும் यथाप्रमाणम் தெளிய प्राप्तम्.

இவ்விடத்தில் सर्वज्ञனாகவும் வேண்டா, अत्यन्तानुपयुक्तங்களிற்போலே स्वल्पोपयुक्तங்களானவற்றில் अभिसन्धि பண்ணவும் வேண்டா. अपरिच्छेद्यமான கடலிலே படகோடுவார் வழி முதலாக வேண்டுவன தெளியுமாபோலே இவ்வளவு விவேகிக்கை அவச்யாபேக்ஷிதம்.

---

பிக்கிறார்கள் என்றதாம். இவ்வாறு செய்வது பிசகு என்று வாக்ய தாத்பர்யம். தர்க்க பாண்டித்யத்தாலே இதி.வஸ்து தத்துவம் எப்படியானாலும் தாம் நினைத்ததை ஸாதிப்பதற்காக ஸமயோசிதமாக எதை உபயோகிக்கலாமோ ஊஹாபோஹசக்தியால் அதைக்கொள்வது அவர்கள்பாண்டித்யமாகும். நினைத்ததெல்லாம் "त्वामेवाहुः कतिचित्" என்றபடி லக்ஷ்மியை பகவானுக்கு மேலாகவோ, லக்ஷ்மிக்கு ப்ராப்யத்வம் கூட இல்லை என்றோ, புருஷகாரத்வம் கூட அவச்யமில்லையென்றோ, சிவாதிகளே சிறந்தவர்கள் என்றோ, வேதம் அப்ரமாணமென்றோ எண்றவாறு கொள்க. என்கிறபடியே என்பது ஸாதிக்கலாயிருக்க என்பதிலும் போருகிறது என்ற இடத்திலும் சேரும். நாம் என்கிற சொல்லாலே தேசிகன் தம்மை மட்டும் சொல்வதாக ப்ரமிக்க வேண்டா ; நாதமுநி முதலானவர்களுள்பட தர்க்கதௌர்பல்யமும் ப்ரமாண ஸ்வரஸப்ராபல்யமும் கொண்டவர்கள் அனைவரையும், இவ்விஷயத்தில் விவாதம் செய்கிற ஏகதேசிகளையும் சேர்த்துச் சொன்னது. நீங்களும் ப்ரமாணத்திற்கு பவ்யப்படவேண்டுமென்றபடி. ஆகையால் இதி. சேதநாசேதநதத்துவவிஷயத்திலே ஸாங்க்யதார்க்கிகாதிரீதிகளை ப்ரமாணவிருத்தமென்று விட்டது போல் பிராட்டிவிஷயத்திலும் அப்ராமாணிகத்தை விடவேண்டுமென்றதாயிற்று.

ப்ராக்ருதபதார்த்த விசேஷஸ்ருஷ்டி க்ரமத்திலும், பரமாத்ம ஸ்வரூபம் போலே ஸர்வ வ்யாபியாக திவ்யமங்கள விக்ரஹமுண்டு என்பதிலும், அவதார விக்ரஹங்கள் நித்யம் = அழியாதவை என்பதிலும் அந்தந்த லோகங்களின் ஸத்தா காலபரிமாணாதிவிஷயங்களிலும் (பரமதபங்க) மற்று மித்தகைய விஷயங்களிலும் நிர்தாரணம்செய்யுமளவுக்கு சாஸ்த்ர வசநங்கள் அகப்படாமையால் அது விஷயத்தில் பரிச்ரமப்பட வேண்டா என்கிறார்: இது பொதுவாவதுபோல் பிராட்டிவிஷயத்திலும் உத்கர்ஷம் இருந்து இல்லை யென்று மறுப்பது அபசாரத்திற்கிடமாகையாலே நிஷ்கர்ஷிக்க முடியவில்லை யென்று வாளாவிருப்பதே தகும். விபரீதத்தில் பிடிவாதம் தகாது என்பதற்குமாம். अपरिच्छेद्यமான—அளவிடமுடியாத வெகுவிஸ்தாரமான ; படகு ஓடுவார். ஓடும் படகிலே இருப்பவர்கள். இவ்வளவு விவேகிக்கை—சேதநாசேதந ஈச்வர விஷயங்களிலே இவ்வதிகாரத்தில் சொன்னவளவு தெளிகை.

இது प्रतिष्ठितமாகைக்காக இவற்றின் விரிவுகள் எண்ணுகிறது.

இப்படி மூன்று தத்த்வங்களாக வகுத்துச் சிந்தித்தாற்போலே सर्व-विशिष्टवेषத்தாலே ஈச்வரன் एकतत्त्वமாக அநுஸந்திப்பார்க்கும், ईश-ईशितव्यங்கள் आत्म-अनात्मக்கள் उपाय-उपेयங்களென்றாற்போலே இரண்டு அர்த்தம் ज्ञातव्यமாக வகுப்பார்க்கும், ரக்ஷ்யன் ரக்ஷகன், ஹேயம்-உபாதேயம் என்று இப்புடைகளிலே अर्थचतुष्टयம் ज्ञातव्यமாக संग्रहிப்பார்க்கும். முன்பு சொன்னபடியே अर्थपञ्चकம், षडर्थங்களென்று விவேகிப்பார்க்கும், रहस्यशास्त्रங்களிற்படியே सप्तपदार्थचिन्तादिகள் பண்ணுவார்க்கும் அவ்வோ ज्ञानानुष्ठानप्रतिष्ठरूपங்களான प्रयोजनविशेषங்கள் கண்டு கொள்வது.

---

ஆகில் ந்யாயஸித்தாஞ்ஜந-தத்த்வ முக்தாகலாபாதிகள் எதற்கு என்ன அருளிச்செய்கிறார் இது ப்ரதிஷ்ட்டிதமாகைக்காக என்று. கீழ்ச்சொன்ன ப்ரமேயங்களை தனித்தனியாக அங்கீகரிக்க வேண்டுமென்பதிலேயே நோக்கு. தத்த்வத்ரயம் என்கிற எண்ணிக்கையிலே நோக்கில்லை. ஆகையாலேயே அர்த்தபஞ்சகமென்றும் தத்த்வத்ரயமென்றும் சொன்னோம். இதுபோல் வேறுவிதமாகப் பிரிக்க நினைத்தவர்கள் வேறுவிதமாக எண்ணிக்கையும் சொல்லுவார்கள். அத்தகைய நிருபணங்களும் ப்ராமாணிகங்களே என்கிறார் இப்படி இதி. ஏக தத்த்வமாக இதி. अशेषचिदचित्प्रकारं ब्रह्म एकमेव तत्त्वम् என்று தாமும் ந்யாய ஸித்தாஞ்ஜநத்தில் அருளிச்செய்தார். विशिष्टाद्वैतம் என்று ஸித்தாந்தப் பெயரும் ப்ரஸித்தம். தத்த்வமுக்தாகலாபக்ரந்தத்தில் முதலில் தத்த்வங்களை இரண்டாகப் பிரித்து உட்பிரிவுகளையும் மேன்மேல் இரண்டு இரண்டாகவே கூறியிருக்கிறார். ஆகையால் இந்த நிருபணங்களில் ஒன்றோடொன்றுக்கு விரோதமில்லை இப்புடைகளில் = இப்ரகாரங்களில், मिति माता मानं मेयமென்ற நான்கும் हेयं तन्निवर्तकं हानं तदुपायः என்ற நான்கும். ரஹஸ்ய சாஸ்த்ரங்களென்று பாஞ்சராத்ரத்திற்கு மூலமான ரஹஸ்யாம்நாயமென்ற வேதமும் பஞ்சராத்ரமும் கொள்ளப்படுமென்பர். ஸப்தபதார்த்தசிந்தை என்பதை அந்த சாஸ்த்ரப்படி, பகவான், வித்யை, கர்ம, காலம், கர்த்தவ்யதை, இதிகர்த்தவ்யதை, ஸமயம் என்று விவரிக்கின்றனர். இவ் விபாகத்தில் எல்லா தத்துவங்களையும் பகவான் என்ற தத்துவத்தில் அடக்கலாம். ப்ரக்ருதி, காலம் ஜீவன் ஈச்வரன் நித்யவிபூதி தர்மபூத ஜ்ஞாநம் அத்ரவ்யம் என்று ந்யாயஸித்தாஞ்ஜநம் செய்த பிரிவும் ஒருவகை ஸப்தபதார்த்தமாகும். ரஹஸ்ய சாஸ்த்ரத்தில் அப் பிரிவு கூறுமையால் உரைகளில் அதை விட்டிருக்கலாம். काणाद गौतम பாசுபதாதிகள் சொன்ன ஸப்த பதார்த்த ஷோடசபதார்த்த-ஷட்த்ரிம்சத்பதார்த்த விபாகங்கள் அவற்றிலடங்கிய வஸ்துக்கள் அப்ராமாணிகங்களாகையாலே அங்கீகரிக்கப்படா. ஜ்ஞாநாநுஷ்டாநேதி. அவ்வாறு பிரிப்பது அந்த முறையை யறிந்தால் சில கார்யங்கள் செய்ய அநுகூலமாயிருக்குமென்றபடி. இப்படி ஈச்வரனைப் போலே ஈசிதவ்யங்களையுமறிய வேண்டும். அந்த ஜ்ஞாநம் நிலைநிற்கும்படி

"शास्त्रज्ञानं बहुक्लेशं बुद्धेश्चलनकारणम् । उपदेशाद्धरिं बुद्ध्वा विरमेत् सर्वकर्मसु ॥"
என்கிறது உபயுக்தமான ஸாராம்சத்தைக் கடுக ச்ரவணம் பண்ணி, க்ருஷி பண்ணுதேயுண்ண விரகுடையவன் க்ருஷிசிந்தையை விடுமா போலே, விரிவு கற்கைக்கு ஈடான शास्त्राभ्यासादिकर्मங்களில் உபரதனுய்க் கடுக மோக்ஷோ பாயத்திலே மூள ப்ராப்தமென்றபடி.

उपयुक्तेषु वैशद्यं त्रिवर्गनिरपेक्षता । करणत्रयसारूप्यमिति सौख्यरसायनम् ॥

---

விரிவுகளையும் கற்கவேண்டுமென்ருல், शास्त्रज्ञानं என்கிற ச்லோக விரோதம் வருமே. அது—ஈச்வர ஜ்ஞாநம் தவிர வேறென்றின் ஜ்ஞாநமும் வேண்டா; சாஸ்த்ராப்யாஸத்தையும் விடவேண்டுமென்றதே என்ன அருளிச்செய்கிருர் शास्त्रेति. இந்த ச்லோகத்திற்கு அர்த்தமாவது. शास्त्रज्ञानं—மதாந்தரங்கள்மூலமான ஆக்ஷேபங்களும் அவற்றின் பரிஹாரங்களுமான பாகம் நிறைந்த சாஸ்தரங்களினுடையவும் பிறமத க்ரந்தங்களினுடையவும் அப்யாஸமானது பொருளை யறியமுடியாமையால் அதிக க்லேசத்தை விளைவிக்கும் புத்தியின் சலனத்திற்கு அதாவது ஸம்சயத்திற்கும் விபரீத ஜ்ஞாநத்திற்கும் காரணமுமாகும். ஆகையினுல் उपदेशात्—ஸ்வஸித்தாந்தத்தினுடைய நிஷ்கர்ஷம் மட்டும் தெரிவிக்கும் இவ்வதிகாரம் போன்ற வாக்யராசியைக் கொண்டு हरिं—ஜீவமோக்ஷஸாதநங்களுடன் சேர்ந்த ப்ரஹ்மத்தை बुद्ध्वा—தெரிந்து सर्वकर्मसु—அதற்காக சாஸ்த்ராப்யாஸம் போன்ற வேறுகார்யங்களில் विरमेत्-இழியாமலிருப்பது என்பதாகும். க்ருஷிபண்ணுதே இதி. க்ருஷி பலமான தான்ய ப்ராப்தி க்ருஷி பண்ணுமலே கிடைக்குமாகில் க்ருஷி எதற்கு? அது போல் எல்லா சாஸ்த்ரங்களையும் அப்யஸித்து ச்ரமப்பட்டு ஆராய்ந்து பெறவேண்டும் நிஷ்கர்ஷத்தை ஊட்டும் உபதேசம் கிடைக்குமாகில் அவ்வளவிலே விச்வாஸத்துடன் உபாயாநுஷ்டாநத்திலிழிவது யுக்தம். அதில் அவிச்வாஸமோ பிறருடைய ஆக்ஷேபங்களைப் போக்க சாஸ்த்ரங்களையும் பயிலவேண்டுமென்கிற ஆசையோ இருந்து அப்யாஸச்ரமத்தைப் பொறுப்பவருக்கு அதை இந்த ச்லோகம் விலக்காது. நிர்ணயிக்க முடியாமல் உபாயமுமநுஷ்டிக்காமல் கெடவேண்டா என்றிவ்வளவே சொல்லும், கடுக = சீக்கிரமாக.

கடுக மோக்ஷோபாயமநுஷ்டித்தவர்களும் பிறகு கூடுமானவரையில் எல்லாம் விசதமாயறிவது அவச்யமென்று காரிகையால் நிரூபிக்கிருர். उपयुक्तेषु மோக்ஷார்த்தமான அறிவில் ஸம்பந்தப்பட்ட தத்த்வஹிதபுருஷார்த்தங்களில் वैशद्यं—பிறரால் கலங்காதபடி வேண்டும், தெளிவு त्रिवर्गनिरपेक्षता—மோக்ஷாதிரிக்தமான தர்மார்த்தகாம புருஷார்த்தங்களில் இழியாமை—அவற்றை விரும்பாமை இது அதற்குள்ளதோஷங்களை யறிந்தால்தான் உண்டாகும். करणत्रयसारूप्यम्—மநோவாக்காயங்கள் என்ற மூன்று கருவிகளும் ஒரேவிஷயமாயிருக்கையென்பது. இது ஜ்ஞாநவைசத்யமிருந்தால் தான் இல்லையேல் படிப்பிற்குத் தகுந்த சீலவ்ருத்தங்களில்லாமல் மேல் வேஷம் ஒன்றும், உள்மனம்

தேறவியம்பினர் சித்துமசித்துமிறையுமென
வேறுபடும்வியன்தத்துவமூன்றும்வினையுடம்பில்
கூறுபடுங்கொடுமோகமுந்தானிறையாங்குறிப்பும்
மாறநினைந்தருளால் மறைநூல் தந்தவரதியரே. (12)

---

வேறுமாக இருந்தால் ஒரு பலனும் வாராது. ஆகையால் அறிவு ஆவச்யகம் என்றதாயிற்று. इति सौरपरसायन-வைசத்யமிராமல் அர்த்தகாமங்களிலிழிந்து மோக்ஷார்த்தாநுஷ்டாநமும் செய்கிறவனுக்கு பல சிந்தைகளால் ஸளக்யம் கெடும். इति= இவை மூன்றும் சேர்ந்தபோது விபரீதஜ்ஞாந விபரீத ப்ரவ்ருத்தியில்லாமையால் ஸளக்யபாதக நிவ்ருத்தியும் ஸளக்ய புஷ்டியுமே யுண்டு. வைசத்யம் முதலான இம்மூன்று சொற்களால் முறையே ஜ்ஞாநவைராக்யாநுஷ்டாநங்கள் கருதப்பெற்றன என்றறிக அதிகார ஆரம்ப ச்லோகத்தில் அருளிய அர்த்தத்தை முடிவில் பாட்டினுல் ஸங்க்ரஹிக்கிறுர். தேற இதி. அருளால் தயைபுரிந்து மறைநூல்—"भोक्ता भोग्यं प्रेरितारं च என்றுற் போல ச்ருதிரூபமான சாஸ்த்ரத்தை, தந்த ஆதியர்= உபதேசித்த பூர்வாசார்யர்கள் வினை உடம்பில்-வினை= கர்ம-கர்மமூலமாக உண்டான, கர்மத்திற்குக் காரணமுமான உடம்பில்= ஸகலதோஷாஸ்பதமான தேஹத்தில் கூறுபடும்= பங்கு கொண்ட, எப்போதும் அநுவர்த்திக்கிற, கொடு மோஹமும்—கொடிய தேஹாத்ம ப்ரமமும், தான் இறை ஆம்= தானே ஈச்வரன் என்கிற. குறிப்பும் எண்ணமும் ஸ்வதந்த்ராத்ம ப்ரமமும் மாற நினைந்து—நமக்கு தொலைய வேண்டுமென்றே திருவுள்ளம் கொண்டு, சித்தும் அசித்தும்—சித்துஉம்—ஜீவனும் அசித்உம்—அசேதனமும், இறைஉம்—ஈச்வரனும், என= என்ற வேறுபடும்—ஒன்றுக்கொன்று வேறுன, வியன் தத்வம்—விலக்ஷணமான ஆச்சர்யமுமான தத்த்வம் மூன்றும்—மூன்று தத்த்வங்களையும், தேற இயம்பினர்= தெளியும்படி சொன்னுர்கள். இம்மூன்று தத்த்வங்களை நன்கு தெளிந்தால்தான் தேஹாத்ம ப்ரமும் ஸ்வதந்த்ராத்ம ப்ரமமும் நீங்கும் என்று இதை ச்ருதியைக் கொண்டு உபதேசித்தனர் என்றபடி,

சாஸ்த்ர ப்ரமாணத்தைக் கொண்டு அர்த்தபஞ்சகம் போல் தத்த்வத்ரயமும் நிரூபிக்கப்பட்டது. ஆப்தர்களுடைய க்ரந்தங்களில் தத்த்வ எண்ணிக்கை பலவகையிலிருந்தாலும் எல்லார் இசைந்த ப்ரமேயங்களும் ஒரே விதமாகையால் ஒன்றிலும் விரோதமில்லை என்கிற ஸாமரஸ்யத்தையும் அருளினுர். இதுபோல் தர்க்கமூலமான உண்மையான வேதாந்தார்த்தத்திற்கு மாறுன தத்த்வவிபாகங்களெல்லாம் இந்த சாஸ்த்ரீய விபாகத்திற்கு ஸமங்களாகா. ஆகையால் இதைக் கொண்டு அவற்றை பாதிக்கவேண்டும். இனி வரப்போகும் விபரீத தத்த்வ விபாகங்கள் இப்போதுள்ள க்ரந்தங்களில் கழிக்கப்படாமலிருந்தாலும் இந்தத்-தத்த்வ ஜ்ஞாந மாத்ரத்திலேயே தாமே கழியப்பெறும். தூரத்தில் உயர்ந்த வஸ்துவைப் பார்த்து, கட்டையா புருஷனு என்று ஸந்தேஹப்பட்ட பிறகு புருஷனென்கிற நிச்சயம் பிறந்தவளவில்

आवापोद्वापतस्स्युः कति कति कविधीचित्रवत् तत्तदर्थे-
ष्वानन्त्यादस्तिनास्त्योरनवधिकुहनायुक्तिकान्ताः कृतान्ताः ।
तत्त्वालोकस्तु लोप्तुं प्रभवति सहसा निस्समस्तान् समस्तान्
पुंस्त्वे तत्त्वेन दृष्टे पुनरपि न खलु प्राणिता स्थाणुतादिः [1]॥ 15.

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे तत्त्वत्रयचिन्तनाधिकारः पञ्चमः. 5

—o—o—

---

கட்டை என்ற புத்தி எப்படி விலகுமோ அதுபோல் பின்னுல் ஒருவர் அது மொட்டைமரம் அல்லது அது கல் என்று சொன்னுல் அதுவும் தவறென்று கழிக்கப்படுமே; அந்த விபரீத புத்தி உதியாதே. அதுபோல் இம்மத விஷயங்களிலுமென்று ச்லோகத்தினுல் அருளிச்செய்கிருர் **आवाप इति.** **तत्तदर्थेषु**—அந்தந்த மதங்களிலிசைந்த ஸித்தாந்தார்த்தங்களில் **आवाप-उद्वापतः**—**आवापोद्वापाभ्यां**—அவரவர்கள் இஷ்டப்படி சிலவற்றைக் கொள்வதாலும் சிலவற்றை விடுவதாலும் **कविधीचित्रवत्**—காவ்யம் செய்கிறவரின் புத்தியில் பல விஷயங்கள் ஒன்று சேர்ந்தும் பிரிந்தும் மாறிமாறி சேர்ந்தும் விசித்ரமாவது போல், **अस्ति नास्त्योः**—இது இருக்கிறது இது இல்லை என்கிற கல்பங்களுக்கு **आनन्त्यात्**—முடிவு இல்லாமையால் **अनवधिकुहनायुक्तिकान्ताः**—அதற்குத் தக்க எண்ணற்ற குதர்கங்களாலே ஆபாதரமணீயமாகத் தோன்றுகிற **कृतान्ताः** ஸித்தாந்தங்கள் **कति कति**—இனியும் பிறக்குமாகையால் எத்தெத்தனையோவாகும் அவை இப்பொழுது அறியப்படாமலிருந்தாலும் **निस्समः** ப்ரபலப்ரமாண ஸித்தமாகையாலே அவற்றைத் தனக்கு ஸமமாகக் கொள்ளாத ப்ரபலமான **तत्त्वालोकः**—தத்த்வார்த்தத்தின் விசதமான ஜ்ஞானமானது **सहसा**—விசாரத்திற்கு இடமளிக்காமலே உடனே **तान्** அந்த **समस्तान्**—எல்லாக் கொள்கைகளையும் **लोप्तुं**—அழிப்பதற்கு **प्रभवति**—ஸாமர்த்யம் பெறும். **पुंस्त्वे**—(தூரத்தில் தோன்றிய வஸ்துவில் இருக்கும்) புருஷாகாரம் **तत्त्वेन**—உள்ளபடி **दृष्टे सति**—காணப்பட்டபோது **स्थाणुतादिः**—அங்கே கல்பிக்கப்படும் கட்டை கல் என்கிற ஆகாரம் **पुनरपि**—மீண்டும் **न खलु प्राणिता**—உயிர் பெருதே. 1 **स्थाणुतादिः** என்ற விடத்தில் **स्थाणुतादि** என்று நபும்ஸகமாகவோ **स्थाणुताधीः** என்ற பாடமோ கொள்வதாகில் **प्राणिता** என்பது (**लुट्**) **कृदन्त**மாகாமல், **लुडन्त**மாம் என்னவேணும். அப்போது **अनद्यतनभविष्य**த்தை ஏன் என்று சங்கைக்கு இடமுண்டு. **स्थाणुतादिः** என்ற **पुल्लिङ्ग**மாகில் **प्राणिता** என்றது **कृदन्त**மாகும். **धर्म**ம் என்கிற விசேஷ்யத்தைக் கொண்டு **आदिः** என்றதாம். **आदिपद**த்தால் **पाषाणत्वादि धर्म**ங்களையும்கூறினதாகும், **पद**த்திற்கு வேறுஅர்த்தமுமுண்டு, **स्थाणुपद**த்திற்கு ருத்ரன் பொருளாகையால் **पुंस्त्वे**—ப்ரம்மத்திற்கு **पुरुषसूक्तादि**யில் ஓதப்பெற்ற மஹாபுருஷத்வம் **पुरुषोत्तमत्वम् तत्त्वेन दृष्टे**-சாஸ்த்ரார்த்தமாகஅறியப்பட்டபோது **स्थाणुतादिः**—**रुद्रत्व-चतुर्मुखत्वादि**கல்பமானது **पुनरपि** மனனம் செய்வதற்கு முன்

श्रीः

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

பரதேவதாபாரமார்த்த்யாதிகாரம் 6.

—o—o—

## अथ परदेवतापारमार्थ्याधिकारः

आत्मैक्यं देवतैक्यं त्रिकसमधिगता तुल्यतैक्यं त्रयाणाम्
अन्यत्रैश्वर्यमित्याद्यनिपुणफणितीराद्रियन्ते न सन्तः ।
त्रय्यन्तैरेककण्ठैस्तदनुगुणमनुव्यासमुख्योक्तिभिश्च
श्रीमान्नारायणो नः पतिरखिलतनुर्मुक्तिदो मुक्तभोग्यः ॥ 16.

---

போல் பின்பும் न खलु प्राणिता—ஜீவிக்க இடம் பெறுதே என்று இப்படி இது அடுத்த அதிகாரத்தில் கூறப்போகும் परदेवतापारमार्थ्यத்திற்கு ஸூசகமாம்.

ஸாரவிஸ்தாரத்தில்.

தத்த்வத்ரய சிந்தநாதிகாரம் முற்றும்.

श्रीः

பரதேவதா பாரமார்த்த்யாதிகாரம்.

பூர்வாதிகாரத்தில் நிரூபித்த தத்வத்ரயத்தில் ஈச்வரன் ப்ரதானனென்பது அங்கேயே வ்யக்தம். அர்த்தபஞ்சகாதிகாரத்தில் ப்ரதாநமாகச் சொல்லப்பட்ட பரப்ரம்மமும் ஈச்வரனுமொன்றென்பதும் அர்த்தஸித்தம். அந்த ஈச்வரன் ஸ்ரீமந்நாராயணனென்று, 'ஸ்ரீமத்வம் ஸ்வரூப நிரூபக தர்மம்' இத்யாதி ஸ்வவாக்யங்களாலே அறிவிக்கப்பட்டிருந்தாலும் அவனே பரதேவதையென்று பரதேவதாபாரமார்த்யத்தைத் தக்க ப்ரமாணங்களைக் கொண்டு மதாந்தர மூலமான கலக்கங்கள் வாராதபடி தெளிவிப்பதற்காக மேலதிகாரம் தொடங்குகிறுர். பரதேவதா பாரமார்த்த்யம் என்னும் சொல்லின் பொருள் இவ்வதிகாரத்திலே "देवतापारमार्थ्यं च என்று உதாஹரிக்கும் ச்லோகத்திற்கு உரை செய்யும்போது விவரிக்கப்படும். கலக்கங்கள் எவ்வாறென்பதையும் ச்லோகத்திலே ஸங்க்ரஹிக்கிறுர் आत्मैक्यमिति. सन्तः—தெளிவான ப்ரம்ம ஜ்ஞாநமுள்ளவர்கள் आत्मैक्यं = तमेव एकं जानथ आत्मानम् என்கிறபடி உலகிலுள்ள ஆத்மாக்களுக்கு பேதமில்லாமையால் ஏகத்வ ஸங்க்யையேயாம்; दैवतैक्यं—एको देवः सर्वभूतेषु गूढः, तदेवाग्निः तद्वायुः तदु सूर्यः இத்யாதிகளின் படியிலே மற்ற ஜீவர்கள் வெவ்வேறுயினும் அக்நி-வாயு, ஸூர்ய, ப்ரம்ம ருத்ராதி ஸர்வதேவதா சரீரங்களுக்கும் ஆத்மா ஒன்றே யாகையால் தேவதைக்கு ஏகத்வ ஸங்க்யையே; त्रिकसमधिगता—ப்ரம்ம விஷ்ணு ருத்ரர்களென்ற மூன்று ஆத்மாக்களை समधिगता—அடைந்திருக்கின்ற तुल्यता—ஸமத்வம். மும்மூர்த்தி ஸமத்வமே; त्रयाणाम्—இம்மூன்று மூர்த்திகளிலுள்ள ஆத்மாவுக்கு ஸமத்வமோ பேதமோ இல்லை ऐक्यम् ஐக்யமே; अन्यत्र ऐश्वर्य-

ஸர்வேச்வரத்வமென்பது இம்மூவரினும் வேறுபட்ட ஓர் உயர்ந்த ஆத்மாவுக்கே; **इत्यादि**—இவ்வுக்திகளை முதலாகவுடைய. ஆதிபதத்திலே ருத்ராதி பாரம்யோக்தி கொள்ளப்படும் **अनिपुणभणितीः**— நன்கு பரிசீலநம் செய்யாதவர்களின் பேச்சுக்களை **नाद्रियन्ते** இசையமாட்டார்கள். அநாதரிப்பர்கள். நம்முடைய பரதேவதை அப்படிப்பட்டதன்று நிபுணர்கள் நிரூபித்தது எதைக்கொண்டு; அப் பரதேவதை எது என்னில், **एकस्वनैः**—ஓரே எழுத்து (த்வனி) உடைய—ஓரேவிதமானச் சொற்களையுடைய; ஓரர்த்தத்திலேயே முடிகின்ற என்றபடி; **त्रय्यन्तैः**—வேதாந்தங்களாலும்—**तदनुगुणैः**—அந்த ச்ருதிகளைப் பின் பற்றிய—**मनुव्यासमुख्योक्तिभिश्च** மநுமஹர்ஷி வ்யாஸர் முதலான முன்னோர்களின் ஸூக்திகளான இதிஹாஸ புராணாதிகளாலும் **नारायणः**—நாராயணனே **श्रीमान्**—லக்ஷ்மியுடன் சேர்ந்தவனாகவே **अखिलतनुः**—சேதநாசேதநங்களை சரீரமாக உடையவனாய் **मुक्तिदः**– மோக்ஷமளிப்பவனாய் **मुक्तभोग्यः**—முக்தர்களாலே அனுபவிக்கப்படுகின்றவனாய் **नः पतिः**—ப்ரம்மருத்ராதிபத்தர்களும் முக்தர்களும் நித்யர்களுமான நமக்கு ஸ்வாமியுமாகிறான்.

ஆத்மைக்யம் என்ற சொல்லிலே ப்ரஹ்மமென்ற ஓராத்மாவே ஸத்யம் மற்றது பொய் என்கிற சாங்கர பக்ஷமும், ஓராத்மாவே பல சேதநாசேதநங்களாகப் பரிணாமமடைகிறதென்கிற பக்ஷமும், அசேதநங்கள் வெவ்வேறாயினும் பசு பக்ஷி மநுஷ்ய தேவேச்வர ஆத்மாக்களெல்லாம் ஒன்றென்கிற பக்ஷமும் கருதப்பெறும். **त्रिकसमधिकता** என்கிற பாடம் தவறு; **तुर्यता** என்கிறதற்கு விசேஷணமாக **त्रिकसमधिगता** என்பது என்று மேலுள்ள விவரண ஸ்ரீஸூக்திகளுக்கிணங்க உரையில் கூறப்பட்டிருக்கிறது. மூன்று மூர்த்திகளிலுள்ள ஆத்மாக்களுக்கும் சிறிதும் வைஷம்யமில்லையாகில் மூவரும் ஓரே ஆத்மா என்பதே யுக்தமென்று சிலர் ஸாம்ய பக்ஷத்தை விட்டு ஐக்ய பக்ஷத்தைக் கொண்டனர். **अन्यत्रैश्वर्यं** என்றது ப்ரம்மருத்ரர்களைப் போலேயே விஷ்ணுவையும் கீழாக்கி விஷ்ணுவைவிட வேறான அதாவது விஷ்ணு நாராயண வாஸுதேவாதி சப்தவாச்யனைவிட வேறான ஆத்மாவே ஈச்வரன் என்ற **व्योमातीत**வாதமாம். ஆதிபதத்தினால் பிரமனே பரதேவதை அல்லது ருத்ரன் அல்லது இந்த்ராதிகளில் ஒருவன் அல்லது லக்ஷ்மீ ஸமேதனாகாத தனி நாராயணன் பரதேவதை என்கிற பக்ஷங்கள் கூறப்பட்டன **एकस्वनैः** என்பதால் **सत् असत् आत्मा ब्रह्म रुद्रः शिवः हिरण्यगर्भः आकाशः प्राणः** இத்யாதிகளான ஸாமாந்ய விசேஷ சப்தங்களெல்லாம் '**एको ह वै नारायण आसीत्; न ब्रह्मा; नेशानः,**' என்று நாராயணன் தவிர மற்றவற்றைக் கழிக்கிற வாக்யத்தோடு ஸமாநார்த்தமாக வேண்டுமென்னப்பட்டது, அவ்வுபநிஷத்துக்களே "**कारणं तु ध्येयः, ह्रीश्च ते लक्ष्मीश्च पत्न्यौ** என்று ஜகத்காரணமான ச்ரிய:பதியையே மோக்ஷத்திற்காக த்யாநம் செய்ய வேண்டுமென்றதாலும் நாராயணாநுவாகத்தில் மோக்ஷத்திற்கான வித்யைகளில் **ब्रह्मशंभुशिवादि** சப்தங்களில் எவை இருப்பினும் அவற்றுக்கு நாராயணனே பொருள் என்றதாலும், அதற்காக அவ

उक्तवैधर्म्यங்களாலே பொதுவிலே प्रकृति-पुरुष-ईश्वर विवेकம் பண்ணினாலும்

---

னையே ஸர்வாந்தர்யாமியாய் எல்லாம் அவனுக்கு சரீரமென்றதாலும் "नान्यः पन्थाः என்று அவனுடைய அறிவாலேயே மோக்ஷமென்றதாலும் तत्क्रतुन्यायத்தாலே அவனுடைய உபாஸநத்தாலே அவனையே பெறவேண்டியிருப்பதால் नारायणप्राप्तिயே மோக்ஷமென்று தெரிவதாலும் எல்லா உபநிஷத்தும் ஏககண்டமாய் இந்த ச்லோகத்தில் நாலாம் பாதத்தில் சொன்ன எல்லா அம்சங்களையும் நிரூபிக்கிறதென்றபடி. तदनुगुण என்று வேதாந்தத்தோடு பொருந்திய ஸ்ம்ருதிகளைக் கொள்ள வேண்டுமென்றதால் கபிலாதி ஸ்ம்ருதிகள் (ஸாங்க்ய சாஸ்த்ராதிகள்) விருத்தமாகையாலே உபேக்ஷிக்கப்படவேண்டுமென்று குறித்ததாம். வெகு ஸ்ம்ருதிகள் அநுகூலமாய் ஒன்றிரண்டே விபரீதமாயிருப்பதால் भूयसांन्यायப்படி அல்பத்தை உபேக்ஷிப்பது உசிதமென்று उक्तिभिः என்கிற பஹுவசநத்தால் அறிவித்ததாம், 'ऋषिं प्रसूतं कपिलम् என்று வேதம் கபிலரைக் கொண்டாடியிருக்கிறதே' என்கிற கேள்வியை மறுப்பதற்காக மற்றவரை விட்டு மநுவ்யாஸரை எடுத்தது. இருவரும் यद्वै किं च मनुरवदत् तद्भेषजम्, स हो वाच व्यासः पाराशर्यः. என்று வேதத்தால் கொண்டாடப்பட்டவரே, இங்கே கபில ரிஷியாகப் பிறந்தார் என்றதேயல்லது அவர்வார்த்தையை ச்ருதி கொண்டாடவில்லை. மநுவ்யாஸருடைய உக்திக்குமேற்றம் சொல்லுகிறதென்று நோக்குக. மநுமஹர்ஷியும் தொடக்கத்திலேயே ततस्स्वयंभूर्भगवान्......आपो नारा इति......तेन नारायणः स्मृतः" என்று காரணம் நாராயணனே என்றார். வ்யாஸரும் "नारायणो जगन्मूर्तिः अनन्तात्मा सनातनः । (शान्ति.मो.8-12) என்று நாராயணனையே ஸ்ருஷ்டி ப்ரளய காரணமாகக் கூறினார். "न दैवं केशवात् परम्, ध्येयो नारायणस्सदा, तत्त्वं जिज्ञासमानानां...हरिर्नारायणः परः" இத்யாதிகளும் அவருடைய சொற்களே. मुख्य-முதலானவரின் பராசராதிகளை இத்தால் கொள்க. விஷ்ணுபுராணத்தில் विष्णोस्सका. शादुद्भूतं जगत् तत्रैव च स्थितम् என்றெல்லாம் முதலில் கூறி மோக்ஷத்திற்கு அவனுடைய த்யானத்தையே முடிவிலும் சொன்னார். வால்மீகி மஹர்ஷியும் "अधिकं मेनिरे विष्णुं देवाः सर्षिगणास्तदा" என்ற வசநத்தாலும் மேலே ப்ரம்ம ஸ்துதி முதலியவற்றாலும் விஷ்ணுபாரம்யத்தை விளக்கினார் லோகத்தில் எல்லோராலும் பெருமதிப்புடன் பாராயணம் செய்யப்பட்டு வரும் रामायण भारत भागवत विष्णुपुराणादिகளைப் போலே மற்ற ஸாத்த்விக புராணத்தையும் இங்கே சேர்த்துக்கொள்க. राजसम् तामसम् என்னப்பட்டிருப்பதாலேயே மற்ற புராணங்கள் தத்தவ ஜ்ஞாநத்திற்கு உபயோகப்படா என்று தெரியவரும்.

தத்துவத்தை மூன்றாக பிரித்துச் சேதநாசேதநங்களைவிட ஈச்வரனுக்கு உள்ள வாசியைக் கீழே தெரிவித்திருப்பது போதாதோ? இது 'பரதேவதை' என்று தேவதாவ்யக்தி நிஷ்கர்ஷமிராமற் போனாலென்ன என்கிற சங்கையைப் பரிஹரிக்கிறார். उक्तेति. उक्तवैधर्म्यங்களாலே = கீழே தத்துவங்களுக்கு साधर्म्यवैधर्म्यங்களைச் சொல்லியிருப்பதால் ஈச்வரனுக்கு மற்றவற்றைவிட

"ஒன்றுந்தேவும்'' इत्यादिகளிற்படியே परदेवताविशेषनिश्चयமில்லாதபோது "உன்னித்து மற்றொரு தெய்வம் தொழா ளவனை யல்லால்'' என்கிற परमैकान्तित्वம் கூடாமையாலும், परमैकान्तिக்கல்லது व्यवधानरहितமாக मोक्षம் கிடை

---

वैषम्यங்களைச் சொன்னதாலே என்றபடி. அங்கே ஸ்ரீமத்வமாகிற ஸ்வரூப நிரூபக தர்மமும் பரவ்யூஹாதி ரூபங்களும் சொல்லப்பட்டனவே. அதனால் பரதேவதா நிச்சயம் உண்டாயிற்றே என்னில்—அதெல்லாம் முன் எடுத்த भोक्ता भोग्यं என்கிற தத்த்வத்ரய ச்ருதியிலும் प्राप्यस्य ब्रह्मणः என்கிற வாக்யத்திலும் ஸ்பஷ்டமாக ஏற்பட்டதல்லவே. ஒன்றும் தேவும் (திரு 4-10) இதி. இதில் பத்துப் பாசுரங்களாலும் ஆழ்வார் அர்ச்சாவடிவிலுள்ள ஆதிப்பிரானே எல்லா தேவதைகளும் மற்ற ஜீவர்களும் மற்ற உலகும் ஸமஷ்டியும் ஒன்றி தனியில்லாத ப்ரளயகாலத்தில் நான்முகனையும் தேவர்களையும் ஸர்வ ஜீவர்களையும் படைத்து ஸர்வபுருஷார்த்தங்களை யளிப்பவனாய் அதனாலே ஆதிபிரான் என்று பேர் பெற்று விளங்குபவன்; இவனை விட்டு மற்ற தெய்வத்தை ஏன் நாடுகிறீர்கள்? शाक्यजैनपाशुपतादिகள் செய்யும் வாதமெல்லாம் வீணாகும் என்றெல்லாம் விளக்கியுள்ளார். ''ஒன்றும் தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதுமில்லா அன்று நான்முகன்தன்னொடு தேவர் உலகொடு உயிர் படைத்தான், குன்றம் போல் மணிமாட நீடு திருக்குருகூரதனுள் நின்ற ஆதிப்பிரான் நிற்க மற்றைத் தெய்வம் நாடுதிரே'' என்றது முதற்பாசுரம். பரதேவதா = விசேஷ நிச்சயம். இதுதான் பரதேவதை என்கிற நிச்சயம், 'ஒன்றும் தேவும்' என்கிற பாட்டில் நாராயணனைவிட்டு வேறு தேவதையை நாடலாகாதென்றார். அவனையும் தொழுது மற்ற தேவதையையும் தொழலாமென்று நினையாமைக்காக உன்னித்து என்கிற திருவாய்மொழியையும் உதாஹரிக்கிறார். இப்பாசுரத்தில்—எம்பெருமானிடம் மன்னி அவனைப் பெருமையால் தவித்துவரும் பெண்ணுக்கு அநுகூலம் செய்வதாக நினைத்து அவளுடைய அன்னைமார்கள் தேவதாந்தரத்தைத் தொழுது தோள் குலைக்க ஆடிப் பாடும்போது தோழிமார்கள் அவர்களுக்கு அதனின்று விலக உபதேசம் செய்வதாம். நீங்கள் உன்னித்து = நினைத்து அன்றி வேறு தேவதைகளை இப்படி தொழுகிறீர்களே; அவள் இதுபோல் அவனையல்லது ஒருவரையும் தொழமாட்டாள், எதற்காக உங்களிஷ்டப்படி வேண்டிக்கொண்டு தோள் குலைக்க ஆடி ப்ரயாஸைப்படுகிறீர்கள்? இது அவளுக்கு அதிக க்லேசத்தையே உண்டு பண்ணும், தேவதாந்தரங்களுக்கு இவளுடைய கஷ்டம் நீக்க ஆகாது. இனி நீங்கள் இவளாலே மன்னப்படுகின்ற ஸகலவேதவேத்யனை த்வாரகாதிபதியை ஏத்திப்பாருங்கள்; இவளும் உங்களோடு சேர்ந்து தொழுது கலந்து ஆடிக் களிப்பாள் என்று பரமைகாந்தித்வத்தை வெளியிட்டார். பரதேவதா நிஷ்கர்ஷமிராமற் போனாலும் காலக்ரமத்தில், தான் ஆச்ரயித்த தேவதாமூலமாகவே மார்கண்டேயருக்கு சிவன மூலமாகப் போல் பரதேவதா நிச்சயம வரலாம். அப்போது பரமை

ப்ராமாண்யாலும் ईश्वरன் இன்ன देवताविशेषமென்று निष्कर्षिக்க வேணும்.

அவ்விடத்தில் (1) चेतनाचेतनங்களுடைய अत्यन्तभेदம் प्रमाणसिद्धமாகையாலே எல்லாம் परदेवतैயாயிருக்கிற ब्रह्माद्वैतமென்கிற पक्षம் घटियாது. (2) स्वभावसिद्धமான जीवेश्वरभेदமும், அப்படியே देवादिरूपரான ஜீவர்களுடைய अन्योन्यभेद

---

காந்தித்வம் திடமாகும். பரமைகாந்தித்வமாவது—சிறந்த ஏகாந்தியாகை. ஏகாந்தித்வமாவது வேறு பலன் வேண்டியிருந்தாலும் அதையும் பரதேவதையினிடமிருந்தே பெற நோக்குடையனாகை. ஐகாந்த்யத்தில் சிறப்பாவது—பரதேவதையினிடமும் வேறு பலனை அபேக்ஷிக்காமலிருக்கை. மோக்ஷமும் ஸ்வர்காதி பலமும் விரும்பினபோது வேறு பலனை யளித்து வைராக்யம் வந்த பிறகே பரதேவதை மோக்ஷமளிக்கும். ஆகையால் அங்கே வ்யவதாநம். அதாவது இடையில் வேறு பலனால் தடைப்படுகை உண்டு. இங்கே பரமைகாந்தித்வப்ரஸ்தாவம் எதற்கென்னில், முமுக்ஷுவுக்கு பரமைகாந்தித்வம் வரையில் வேண்டுவதா யிருக்க அதற்கு முன்னான பரதேவதா நிச்சயம் கூட வில்லை யென்றால் எங்ஙனே फलसिद्धியென்றறிவிக்க என்க.

ऋक्चैवங்களாலே ப்ரஹ்மத்திற்கு அசேதநபேதமும் ஜீவபேதமும் ஸித்தமாயிருக்க இந்த ச்லோகத்தில் ஆத்மைக்யபக்ஷத்தை எதற்காக எடுத்துக் கழிக்க வேண்டுமென்பதற்கு உத்தரமாகும் அவ்விடத்தில் இத்யாதி. அந்த நிஷ்கர்ஷத்திற்கு விஷயமான வஸ்துவில் என்று பொருள். ஆத்மைக்யாதிகள் கூடா—என்று மேலே அந்வயம் தேறும். ஆத்மைக்யம் என்று சொன்னது த்ருஷ்டாந்தமாக. இப் பக்ஷம் போலே மேற் பக்ஷங்களும் ஆதரிக்கக் கூடாதவை என்றபடி. சேதநாசேதநங்களுடைய அத்யந்த பேதம் என்பதற்கு சேதநாசேதநங்களுக்கு பரஸ்பர பேதமும் சேதநாசேதநங்களைக்காட்டிலும் ப்ரஹ்மத்திற்கு பேதமும் ஸ்வாபாவிகமாகவே என்று பொருள். ப்ரஹ்மத்ரவ்யமிதி. ப்ரஹ்மம் ஜகத்காரணமாகையாலே அதற்கு ஸர்வஜ்ஞத்வாதிகளுமுண்டாகையாலே பரதேவதாத்வம் ஸித்தம். ஆனாலும் सर्वं खलु इदं ब्रह्म இத்யாதி வாக்யங்களால் ஸர்வத்தோடு அபேதமென்கிற பக்ஷம் யாதவப்ரகாசாதிகள் இசைந்தது. இப் பக்ஷத்தில் அபேதம் ஸ்வாபாவிகமாய் பேதம் ஔபாதிகமாகும். அப்போது காரணதசையிலும் முக்தி தசையிலும் கூட ஜீவாதிகளுக்கு பேதம் சொல்லியிருப்பதால் அவர்கள் கூறிய அத்யந்தாபேதத்திற்கு பங்கமுண்டாகும். அதனால் இப்பக்ஷமில்லை. தேவதைக்யபக்ஷத்தை நிராகரிக்கிறார் ஸ்வபாவேதி. அப்படியே= அவ்வாறே—அது போலவே. सुखेति. ஈச்வரனுக்கு என்றும் ஸுகமே; ஜீவர்களுக்கு பலவித துக்கங்கள் ராகத்வேஷாதிகள் எல்லாமுண்டு. அதனால் ஈச்வரன் வேறு - ஜீவர்களிலும் ஸுகம் துக்கம் ஜ்ஞாநம் அஜ்ஞாநம் செல்வம் ஏழ்மை சக்தி அசக்தி தேவத்வ மநுஷ்யத்வாதிகள் என்ற அம்சங்கள் ஒருவருக்கு உள்ளவாறு மற்றவருக்கில்லை யாகையால், "नाना आत्मानः व्यवस्थातः" என்கிற कणादसूत्रத்தின்படி பேதம் ஸ்வாபாவிக

மும். सुखदुःखादिव्यवस्थயாலே प्रामाणिकமாகையால், सर्वान्तर्यामि ஒருவனேயாகிலும் ब्रह्मरुद्रेन्द्रादिदेवतैகளும் ईश्वरனோடும் தன்னில்தானும் अभिन्नர் என்கிற பக்ஷம் கூடாது.

---

மாகிறது. இந்த ந்யாயமே தேவதைகள்விஷயத்திலுமென்றபடி. आदिபதத்தால் தேவர்களைப் போலே ஆராத்யர்களான யக்ஷ ரக்ஷோ பூதாதிகளும் தேவதைகளாகில் ஸாத்விக ராஜஸதாமஸபேதமும் ஸ்பஷ்டமென்று குறித்ததாம். ஆகையால் "अष्टौ वसवः, एकादश रुद्राः, चतुर्मुखात् रुद्रः, रुद्रात् स्कन्दः, देवेन्द्रः, शचीपतिः இத்யாதிகளாலே பலபடியில் தேவபேதம் ஸ்வாபாவிகமே. தன்னில் தானும் இதி, ப்ரஹ்மாதிதேவதைகளில் ஒவ்வொரு தேவதையும் மற்ற தேவதையோடு ஐக்யமுடையவரென்கிற பக்ஷம் என்றபடி, இந்த வாக்யத்தில் ஜீவேச்வர பேதமும் தேவாதி ஜீவபேதமும் என்று தொடங்கி முடிவில் தேவேச்வர அபேதபக்ஷம் கூடாதென்று முடித்ததால் இவ் வாக்யம் தேவேச்வர பேதத்தையும் தேவர்களுக்குள் பரஸ்பர பேதத்தையும் கழிப்பதாகும். சேதந ஸாமாந்யத்திற்கும் பரதேவதைக்கும் பேதம் ஏற்கனவே ஸித்தமென்று முன் வாக்யத்திலேயே அறியலாம். இதர ஜீவர்களைவிட தேவதைகள் எவ்வளவோ மேலாயிருப்பதால் பல சரீரம் கொள்பவராகையால். தேவதைக்யமிருக்கலாமென்று நினைப்பவரின் பக்ஷத்தை தேவதைக்யமென்றது.

இவ் வாக்யத்தில் ஸர்வாந்தர்யாமி ஒருவனே யாகிலும் என்கிற அம்சம் எதற்காக? तदेवाग्निः तद्वायुः இத்யாதி வாக்யங்களில் பரதேவதைக்கு ஸர்வ தேவதைக்யம் சொல்லியிருப்பதால் அதை மறுக்கலாகாதென்கிற சங்கைக்கு ஸமாதானம் சொல்லுவதற்காக என்னலாம். 'तदेवाग्निः என்கிற வாக்யம் தேவதைக்யத்தைச் சொல்லவில்லை. பரமாத்மாவை தேவதாந்தர்யாமியாகச் சொல்லுகிறது. ஆகையால் அந்தர்யாமிக்கு ஐக்யமே யல்லது தேவதைக்கு ஐக்யமில்லை என்றதாகும். அப்படியானால் ஸர்வாந்தர்யாமி யாகையால் என்று தன் பக்ஷத்தை ஸ்தாபிக்க யுக்தியாகும். அப்போது ஆகிலும் என்கிற பதப்ரயோகம் பொருந்துமா? அந்த ப்ரயோகமானது பூர்வபக்ஷி ஸர்வாந்தர்யாமித்வத்தை தனக்கு ஸாதகமாகக் கொண்டதாகக் காண்பிக்கிறதே. இனி வேறு கருத்து உரைப்பர். ஈச்வரனை ஸர்வத்திற்கும் அந்தர்யாமியாகக் கொண்டிருப்பதால் தேவதைகளுடைய சரீரத்திலும் அவன் இருக்க வேண்டியிருப்பதால் அவனையே தேவதைகளாகவும் கொண்டால் साङ्कर्यமிருப்பதால் தனி தேவதாஜீவர்கள் வேண்டாவே என்கிற சங்கைக்குப் பரிஹாரமாக வந்தது இது. ஸர்வாந்தர்யாமியான பரமாத்மாவை அங்கீகரித்தாலும் தேவஜீவர்களை விடமுடியாது; பேதம் ப்ராமாணிகமாகையால் என்றபடி. இப்படியே ஆகிலும் என்பது பொருந்தினாலும் ஒருவனே என்பது எதற்கு? ஒருவனே போதுமே பலர் வேண்டாவே என்கிற சங்கையைப் பரிஹரிப்பதற்காக என்னல் வேண்டும். அந்த சங்கை எவ்வாறெனில்—

இத் தேவதைகளில் ப்ரதாநராகச் சொல்லுகிற ब्रह्मरुद्रेन्द्रादिகளுக்குக் कार्यत्व - कर्मवश्यत्वங்கள் प्रामाणिकங்களாகையாலும், "आभूतसंप्लवे प्राप्ते प्रलीने

---

இங்கு ஸாராஸ்வாதிநியில் அருளிச்செய்திருப்பது பின்வருவாறு—ப்ரமாணங்களில் "अग्निस्सर्वा देवताः, प्रजापतिस्सर्वा देवताः, सर्वो वै रुद्रः, आपो वा इदं सर्वम्, पुरुष एवेदं सर्वम् என்றவாறு அக்நி முதலானவற்றிற்கு ஸர்வதேவதைக்யம் சொல்லுகிறது. இது அந்தர்யாமீக்யம் என்றால் பொருந்தாது. ஒருவன் தானே ஸர்வாந்தர்யாமியாயிருக்கக் கூடும். பலர் அந்தர்யாமியாகில் ஒரு கார்யமும் நடைபெறாது. ஆகையால் அக்நி ப்ரஜாபதி ருத்ரன் ஜலதேவதை, பரமபுருஷன் எல்லோரும் ஒன்று என்று கொண்டால் அந்தார்யாமி ஒருவனாகலாம். ஆனால் இவர்களெல்லாம் ஒன்றானபோது நேராகவே ஸர்வதேவதைக்யம் சொல்லலாமாகையால் தேவதாந்தர்யாமித்வம் வேண்டா என்கிற சங்கைக்கு ஸமாதானமாகும் இவ்வாக்யம். அது இவ்வாறு—ஒருவன்தான் அந்தர்யாமியா யிருக்கவேண்டும்; ஆகிலும் தேவபேதம் ப்ரமாணிகமாகையால் ஐக்யம் கூடாது. எப்படி அந்தர்யாமி ஐக்யம் என்னில். அக்நி ருத்ராதிபதங்களாலே அக்நி ருத்ராதி ஜீவர்களை மட்டும் கொண்டு ஸர்வதேவதாந்தர்யாமித்வம் சொன்னால் பலருக்கு அந்தர்யாமித்வம் வருவதால் விரோதமாம். அதற்காக அக்னியந்தர்யாமிக்கு ஸர்வதேவதைக்யம், இப்படி ருத்ராத்யந்தர்யாமிக்கு என்றவாறு वामदेवः प्रतिपेदे अहं-मनुरभवं सूर्यश्च என்கிற வாக்யத்தில் अहम्पदानुपदादिகளுக்குப் போலே இங்கு अग्निरुद्रादिपदங்களுக்கும் सर्वदेवतापदத்திற்கும் அததன் அந்தர்யாமி என்று பொருள்கூறி அந்தந்த தேவதாந்தர்யாமிக்கு ஸர்வதேவதாந்தர்யாமித்வம் சொல்லுவதால், 'அந்தர்யாமி ஒருவனே தேவர்கள் வெவ்வேறே' என்று ஸித்திக்கக் குறையில்லை யென்றவாறு.

இதற்குமேல் त्रिकसमधिगता என்று தொடங்கிச் சொன்ன பக்ஷங்கள் எல்லாவற்றையும் ஒரே வாக்யத்தால் நிராகரிக்கிறார் இத்தேவதைகளில் இத்யாதியால், ब्रह्मरुद्र इन्द्रादि இதி. ச்லோகத்தில் மும்மூர்த்திகளையே கூறியிருப்பதால் இங்கும் அவ்வளவே உசிதமாயிருக்க இந்த்ராதி பதப்ரயோகம் எதற்கெனில்—ப்ரம்ம ருத்ரர்களுச்கு ப்ராமாணிகமான கார்யத்வ கர்மவச்யத்வங்களை மறுத்தால் இந்த்ராதிகளுக்கும் மறுக்கலாமே, ஆகையால் அங்குப் போல் இங்கும் இசையவேண்டுமென்று த்ருஷ்டாந்தமாகக் காண்பிப்பதற்காக. ப்ராமாணிகங்கள் இதி—ப்ரமாணங்களை இவ்வாக்யத்திற்கு மேலே "तद्विग्रहः, सर्वे देवाः" என்று அருளப்போகிறார். இப்படியாகில் ப்ரம்மாதிகளைப் போலே விஷ்ணுவும் கார்யமாய் கர்மவச்யனாகலாமே ब्रह्मविष्णुरुद्रेन्द्राः सर्वे संप्रसूयन्ते என்று अथर्वशिखையில் விஷ்ணுவையும் பிறப்பவற்றிற் சேர்த்ததே. விஷ்ணு நாராயணனாகையால் பிறவி பொருந்ாதென்னில். நாராயணனும் பிறந்தவனேயாகலாமே என்ற கேள்விகளுக்குப் பரிஹாரம் आभूतेத்யாதியால். (सा.सा. 10) आभूत—பஞ்சமஹாபூதங்களுள்பட संप्लवे—

प्रकृतौ महान्। एकस्तिष्ठति विश्वात्मा स तु नारायणः प्रभुः॥", "आद्यो नारायणो देवः तस्माद् ब्रह्मा ततो भवः", "परो नारायणो देवस्तस्माज्जातश्चतुर्मुखः। तस्माद्रुद्रोऽभवद्देवि" இத்யாதிகளிலே, "ततस्त्वमपि दुर्धर्षस्तस्माद्भावात् सनातनात्। रक्षार्थं सर्वभूतानां विष्णुत्वमुपजग्मिवान्॥" என்கிறபடியே ஸ்வேச்சாவதீர்ணனாய் த்ரிமூர்த்திமத்யஸ்தனான விஷ்ணுநாராயணாதிசப்தவாச்யன் தானே தன்னுடைய பூர்வாவஸ்தையாலே ஸர்வஜகத்துக்கும் காரண

---

லயமானது प्रलीने—நேர்ந்த பிறகு महान्—மஹத்தத்வமும் (महात என்று ஸப்தமிவிபக்தியைக் கொள்க.) प्रकृतौ—மூலப்ரக்ருதியில் प्रलीने—லயித்த பிறகும். विश्वात्मा—ஸர்வாந்தர்யாமியாயிருந்த ஒருவன்மட்டும் तिष्ठति அழியாமலிருக்கிறான்—சரீரமான உலகமழிந்தாலும் அவனழிவதில்லை. सः—அவன் ஸர்வப்ரபுவான நாராயணனே யாவான். नारायणः (வ.பு 25) நாராயணன் என்கிற தேவதையே आद्यः—முதல்வன். உண்டாகிறவனல்லன். तस्मात्—அவனிடமிருந்து உண்டானவன் பிரமன். ततः—அந்தப் பிரமனிடத்திலிருந்து உண்டானவன் भवः—ருத்திரன். வேறு வாக்யத்திலும் (வ.பு.90) देवि—பூதேவியே! நாராயணனே மேலான தேவன். அவனிடமிருந்தே நான்முகன் பிறந்தான், அங்குநின்று ருத்ரன் பிறந்தான் என்றது. இவற்றால் நாராயணன் பிறப்பதில்லை. அவனுக்கு மேலான ஒரு வ்யக்தி கிடையாது, ப்ரம்ஹ ருத்ரர்கள் பின் உண்டானவர் என்றது ஸ்பஷ்டமாயிற்று.

விஷ்ணுவும் இவர்களைப் போல் ஜீவனாயிருந்தாலென்ன வென்பதற்கு - உத்தரம் (ரா. உத்.104). பிரமன் சொல்லுகிறான் ततः—நான் வேண்டினபடியாலே दुर्धर्ष—பரிபவிக்கப்படவாகாத त्वमपि—நீரும் तस्मात्—அந்த (பரமபதத்திலிருக்கின்ற) सनातनात्—எப்போதுமுள்ளதான भावात्—பரவாஸுதேவ ரூபத்தினின்று ஸர்வப்ராணிகளுடைய ரக்ஷணத்திற்காக विष्णुत्वम्—தாமே விஷ்ணுவாகையை उपजग्मिवान्—இசைந்து கொண்டீர். இங்கே விஷ்ணுரூபத்திற்குக் காரணமாக சாச்வதமான ரூபத்தைச் சொன்னதால் நாராயணன் என்கிற ஆத்மஸ்வரூபம் போலே திருமேனியும் சாச்வதமாயிருப்பது தெரிகிறது. பிரமனும் ருத்ரனும் பிறந்தார்களென்பது போல் விஷ்ணுவும் பிறந்தான் என்னாமல் நீரே விஷ்ணுத்வத்தை=விஷ்ணு ரூபம் கொள்வதைப்பெற்றீர் என்பதாலே விஷ்ணு பரமாத்மாவே; வேறு ஜீவனல்லனென்பது ஸ்பஷ்டமாகிறது ஆகையால் இது கர்மாதீனமான பிறப்பல்ல, ராமக்ருஷ்ணாத்யவதாரம் போலே தானே விரும்பித் தோன்றியதாகும் त्रिमूर्तिमध्यस्थनாக - இரு மூர்த்திகள் நடுவிலே ஸமமாக ஒரு மூர்த்தியாக நின்றாலும் உண்மையில் இவன் அநாதியான நாராயணனே. அதனால் தான் உலகமெல்லாம் விஷ்ணுரூபத்திற்குப் பிறகுண்டாகாமல் முன்னமே சில உண்டாயிருந்தும் विष्णोः सकाशादुद्भूतम् என்று விஷ்ணுவையே ஜகத்காரணமாகச் சொல்லுகிறது. ஒரே பரமாத்மா நாராயணமூர்த்தியிலிருந்து செய்த கார்யத்தை விஷ்ணு மூர்த்தியைக் கொண்டும் க்ருஷ்ணனே உலகத்திற்கெல்லாம் காரணமென்னுமா போலே ஆத்மா ஒன்றாகையால் கூறலாம். தன்னுடைய பூர்வாவஸ்த்தை

மென்கையாலும். “नित्यं हि नास्ति जगति भूतं स्थावरजङ्गमम्। ऋते तमेकं पुरुषं वासुदेवं सनातनम् ॥” என்கிறபடியே அவனே நித்யனென்கையாலும், (3) त्रिमूर्तिகளும் ஸமரென்றும் (4) त्रिमूर्तिகள் एकतरமென்றும் (5) त्रिमूर्त्युत्तीर्णன் ஈச்வரனென்றும் (6) त्रिमूर्तिகளுக்குள்ளே ப்ரஹ்மாவாதல் ருத்ரனாதல் ஈச்வரனென்றும் சொல்லுகிற साम्य - ऐक्य - उत्तीर्ण - व्यक्त्यन्तरபக்ஷங்கள் ஘டியா(து).

ப்ரஹ்மருத்ராதிகள் ஸர்வேச்வரனுக்குக் கார்யபூதர் என்னுமிடம் “तद्विसृष्टस्स पुरुषो लोके ब्रह्मेति कीर्त्यते” इत्यादिகளாலும், ‘संक्षिप्य च पुरा लोकान्

யாவது விஷ்ணுவான அவதாரத்திற்கு முன்னுன வாஸுதேவாதி ரூபத்துடனிருக்கை அந்த நிலையிலே ஸர்வ ஜகத்திற்குக் காரணம்; இந்த அவதார நிலையிலன்று. இப்படி விஷ்ணுவும் நாராயணனும் ஒன்றென்றும் விஷ்ணுவுக்கு அவதாரமே யன்றி பிறவி இல்லை யென்றும் கூறியாயிற்று

நாராயணனுடைய மூர்த்தி நித்யமென்பதற்குப் ப்ரமாணம் नित्यं हि இதி. (भा.-शां-347). உலகில் எப்போதுமுள்ள வாஸுதேவன் என்கிற அந்த ஒரு புருஷன் நீங்கலாக உலகில் தாவரமும் ஜங்கமுமான ப்ராணி ஒன்றுகூட நித்யமாகாதன்றோ என்று ச்லோகார்த்தம், எல்லா ஆத்மாவும் நித்யமாயிருப்பதால் வாஸுதேவனை நித்யமென்று ஸ்தாபிக்க வேண்டியதில்லை; வேறு ப்ராணி-ஆத்மா நித்யமல்ல என்று சொல்லவுமாகாது. ஆகையால் இந்த வசனம் ஆத்மாவுக்குள்ள உருவங்களில் ஜீவாத்மா கொண்ட உருவெல்லாம் அநித்யமென்றும வாஸுதேவ உருவம் நித்யமென்றும் சொல்லவே வந்ததென்க, வ்யூஹ வாஸுதேவ ரூபத்தை விலக்குவதற்காக ஸநாதநம் என்றது. இவ்வாச்யத்தில் எடுத்த வசநங்கள் ச்லோகத்தில் சொன்ன துல்யத்வாதி பக்ஷங்களை யெல்லாம் நிரஸிக்குமென்கிறார் த்ரிமூர்த்திகளும் இத்யாதியால். இங்குச் சொன்ன க்ரமத்திலேயே இப்பக்ஷங்களை ச்லோகத்திலும் க்ரமமாகக் கொள்ளவேண்டும். ஆகையால், ‘अन्यदैश्वर्यं’ என்பதற்கு “उपादानं तु भगवान् निमित्तं तु महेश्वरः”, என்று உபாதாந காரணமான நாராயணனுக்கு மேலாக மஹேச்வரன் உண்டு; அவனே दहर வித்யையில் तस्मिन् यदन्तः என்றும், श्वेताश्वतरத்தில் ततो यदुत्तरतरम् என்றும் சொல்லப்பட்டவனென்கிற व्योमातीतवादமாகும். இது पराधिकरणத்தில் ஸூத்ரகாரரால் நிராகரிக்கப்பட்டது. ஆக அங்கு இத்யாதி என்கிற ஆதிபதத்திற்கு ப்ரஹ்மருத்ராதிகளுக்கு ஸர்வேச்வரத்வ வாதம பொருளாகும் இதே இங்கு வ்யக்த்யந்தர பதத்திற்கு அர்த்தம்,

இனி முன்வாக்யத்தில், ‘கார்யத்வ கர்மவச்யத்வ வாதங்கள் ப்ராமாணிகங்கள்’ என்றதை விவரிக்கின்றவராய் முதலில் கார்யத்வத்திற்கு வசநங்களைக் கூறுகிறார். (मनु-1-11) மதயஸ்தரான மநுவின் பேச்சு—तद्विसृष्टः—அந்த பகவானால் விலக்ஷணமாகப் படைக்கப்பட்ட स पुरुषः அப்படிப்பட்ட புருஷன் உலகில் ब्रह्मा என்று புகழப்படுகிறான் (रा उत्त 104) ப்ரதிவாதியான பிரமன் சொல்லுவதாவது—पुरा—முன்னே मायया—

मायया स्वयमेवं हि। महार्णवे शयानोऽप्सु मां त्वं पूर्वमजीजनः॥ "क इति ब्रह्मणो नाम ईशोऽहं सर्वदेहिनाम। आवां तवाङ्गे संभूतौ तस्मात् केशवनामवान्॥" "अहं प्रसादजस्तस्य कस्मिंश्चित् कारणान्तरे। त्वं चैव क्रोधजस्तात पूर्वसर्गे सनातने॥" என்று, எதிரிகையாலே விடுதீட்டானபடியே அவர்கள் தங்கள் பாசுரங்களாலும் ஸித்தம்.

இவர்கள் கர்மவச்யராய்ச் சில கர்மவிசேஷங்களாலே ஸர்வேச்வரனை ஆராதித்துத் தந்தம் பதங்கள் பெற்றார்களென்னுமிடம் "सर्वे देवा वसुदेवं यजन्ते सर्वे देवा

---

ஸங்கல்பத்தாலே स्वयमेव—தாமே, लोकान्—லோகங்களை संक्षिप्य—லயிக்கச் செய்து महार्णवे ஏகோதக ஸமுத்ரத்தில் अप्सु—ஜலத்தில் शयानः—பள்ளி கொண்டவராய் என்னை நீர் முன்னே உண்டுபண்ணீர்; (ஹரி - விஷ்ணு. ப 131) எதிரியான ருத்ரன் சொல்லுகிறான்—ब्रह्मण —ப்ரம்மதேவனுக்கு क என்று பெயர். நான் எல்லா ப்ராணிகளுக்கும் ஈசனாகிறேன். आवां க. ஈச என்கிற நாங்களிருவரும் உம்முடைய திருமேனியிலுள்ளவர்கள். ஆகையால் நீர் கேசவன் என்ற பெயருடையீர் முதலில் பொதுவாக ஒருவர் சொன்ன வார்த்தை. பிறகு பிரமனும் ருத்ரனும் நேராக எம்பெருமானோடு சொன்ன வார்த்தைகள். மேலே விஷ்ணுவுக்கு எதிரிலன்றி மறைவில் பிரமன் ருத்ரனோடு பேசிக்கொள்வது—'தாத—அப்பா குழந்தாய், अहं—நான் सनातने—அநாதியாக வருகிற पूर्वसर्गे—முன் கல்பத்தில் कस्मिंश्चित् कारणान्तरे-வேறொரு காரணமாக ஏற்பட்ட तस्य प्रसादजः—அந்த பகவானுடைய திருவுள்ள உவப்பினின்று உண்டானவன்; என்று என்ற பதத்திற்கு 'அவர்கள் தங்கள் பாசுரங்களாலும்' என்றவிடத்தில் அந்வயம். எதிரிகையாலே விடுதீட்டானபடியே—ஸமமாகப் பேசநின்ற ப்ரம்மருத்ரர்கள் சொன்ன பேச்சானது எதிரியே தன் கையினால் எழுதிக்கொடுத்த விடுதலை சீட்டின் படியாகும் தீட்டு—சீட்டு. சகரத்திற்கு தகரம், விடுசீட்டு—தனக்கு ஸம்பந்தமில்லாமையை அறிவிக்க எழுத்து மூலம் விடுத்த சீட்டு—அவர்கள் தங்கள்-அவர்களுடைய= ப்ரம்மருத்ரர்களுடைய. இவர்களுக்கு கார்யத்வம் तस्मात् ब्रह्मा ततो भवः—என்று முன் எடுத்த வாக்யத்தாலேயே ஸித்தமானாலும் அது நாராயண பாரம்யப்ரதானமாகையாலே இதற்காகவே யானதும் அவர்களே சொன்னதுமான வாக்யத்தைக்கொண்டு இங்கு விரித்ததாம். இப்படி ஸ்ம்ருதிகள் போல் ச்ருதிவாக்யங்களும் உண்டு மஹோபநிஷத்தில் "अथ पुनरेव नारायणः ...... मनसा अध्यायत तस्य......ललाटात् त्र्यक्षः शूलपाणिः पुरुषोऽजायत। अथ पुनरेव नारायणः......तत्र ब्रह्मा चतुर्मुखोऽजायत," நாராயணோபநிஷத்தில் नारायणात् ब्रह्मा जायते नारायणात् रुद्रो जायते, ஸுபாலோபநிஷத்தில் ललाटात् क्रोधजो रुद्रोऽजायत, शतपथब्राह्मणத்தில் பிரமனிடத்தில் ருத்ரன் பிறந்ததும் அழுததும், अनपहतपाप्मा वा अहमस्मि नामानि मे धेहि என்று பாபம் போவதற்காகப் பேர் வைக்கவேண்டுமென்று வேண்டினதும் ஓதப்பெற்றது. இதனால் கர்மவச்யத்வமும் ஸ்பஷ்டம். மேலே இதற்குத் தனியாக ஸ்ம்ருதிகளையும் உதாஹரிக்கிறார். பதங்கள்—அதிகாரஸ்தாநங்கள். ஸர்வே-இத்யாதி. எல்லா-தேவர்

वासुदेवं नमन्ते" "सब्रह्मकास्सरुद्राश्च सेन्द्रा देवा महर्षयः । अर्चयन्ति सुरश्रेष्ठं देवं नारायणं हरिम् ॥", "चिन्तयन्तो हि यं नित्यं ब्रह्मेशानादयः प्रभुम् । निश्चयं नाधिगच्छन्ति तमस्मि शरणं गतः ॥", "पद्मे दिव्येऽर्कसङ्काशे नाभ्यामुत्पाद्य मामपि । प्राजापत्यं त्वया कर्म सर्वं मयि निवेशितम् । सोऽहं सन्न्यस्तभारो हि त्वामुपासे जगत्पतिम् ॥", "युगकोटिसहस्राणि विष्णुमाराध्य पद्मभूः । पुनस्त्रैलोक्यधातृत्वं प्राप्तवानिति शुश्रुम ॥". "विश्वरूपो महादेवस्सर्वमेधे महाक्रतौ । जुहाव सर्वभूतानि स्वयमात्मानमात्मना ॥", "महादेवस्सर्वमेधे महात्मा हुत्वाऽऽत्मानं देवदेवो बभूव । विश्वान् लोकान् व्याप्य विष्टभ्य कीर्त्या विराजते द्युतिमान् कृत्तिवासाः ॥" "यो मे यथा कल्पितवान् भागमस्मिन् महाक्रतौ । स तथा यज्ञभागार्हो वेदसूत्रे मया कृतः ॥" इत्यादिகளிலே प्रसिद्धம்.

இவர்கள் भगवन्मायापरतन्त्रராய் गुणवश्यராய் ज्ञानसंकोचविकासவான்களாயிருப்

---

களும் வாஸுதேவனை ஆராதிக்கிறார்கள்; வணங்குகிறார்கள். सब्रह्मकाः இதி (भा शां 351) ப்ரம்மா ருத்ரன் இந்த்ரன் உள்பட தேவர்களும் மஹர்ஷிகளும் தேவச்ரேஷ்டனாய் ஜகத்வ்யாபாரமாகிற லீலையையுடையவனான ஹரி என்கிற நாராயணனை அர்ச்சிக்கிறார்கள். चिन्तयन्त இதி. (भा-शां- 11) ப்ரம்மருத்ராதிகள் எந்த ப்ரபுவை எப்போதும் சிந்திக்கும் வண்ணமிருந்தும் நிச்சயம் பெறவில்லையோ, அவனை சரணமடைகிறேன். पद्म இதி (रा उत्त 14) நாபியில் ஸூர்யனுக்கு ஸமமான திவ்யமான தாமரைப்பூவில் என்னையுமுண்டுபண்ணி நான்முகருக்கு ஸம்பந்தப்பட்ட ஸகல கார்யங்களும் உம்மால் என்னிடத்தில் வைக்கப்பட்டன. அப்படிப்பட்ட நான் வைத்த பாரத்தைப் பெற்றவனாய் லோகநாதனான உன்னையுபாஸிக்கிறேன் என்று ப்ரும்மாவின் வாக்யம். युगेति இதி. தாமரையிலுண்டான பிரமன் எத்தனையோ யாயிரங்கோடியுகம் விஷ்ணுவை யாராதித்து மூன்று லோகத்தையும் படைக்கும் அதிகாரத்தை மீண்டும் பெற்றானென்று கேட்கிறோம். विश्वरूप இதி (भा·शां 3:0) ஸமஸ்த ரூபங்களையுடைய மஹாதேவன் ஸர்வமேதம் என்கிற பெரிய யாகத்தில் ஸர்வப்ராணிகளையும் தன்னையும் தானே ஹோமம் பண்ணினான். महेति (भा-शां 20) மஹாத்மாவான மஹாதேவன் ஸர்வமேதம் என்னும் யாகத்தில் தன்னையே ஹோமம் செய்து தேவதேவனானான். அதனால் எல்லா உலகங்களையும் சூழ்ந்து, தரித்து, (அஷ்ட மூர்த்தியாய்) ஒளியுளளவனாய் कृत्तिवासाः—யானைத் தோலை வஸ்தரமாக உடையனாய் விளங்குகிறான். यः இதி. (भा-शां 4) ப்ரம்ம ருத்ராதிகளை அவர்களதிகாரம் பெறுவதற்காகப் பெரிய வைஷ்ணவ க்ரது செய்யும்படி எம்பெருமான் ஏவி அவர்கள் செய்த பிறகு அவர்களுக்குத் தான் அளிக்கும் பலனைச் சொல்லுகிறான்—எவர் எனக்கு இப் பெரும் யாகத்தில் எப்படி भाग ம் ஸமர்ப்பித்தாரோ அப்படியே அவர் வேதத்திலும் ஆபஸ்தம்பாதி ஸூத்ரத்திலும் யாகத்தில் भाग ம் பெறத் தக்கவராக என்னாலாக்கப்பட்டார். த்ரிமூர்த்திகளில் சேர்ந்த ப்ரும்ம ருத்ரர்கள் கர்மவச்யரானாலும் கர்மவிசேஷமடியாக ரஜஸ்தமோகுணங்களை ஆள்கின்றவரான பிறகு அக்குணங்களுக்கு அதீனமாவரோ என்ன, கார்ய बल த்தாலும் ப்ரமாண बल த்தாலும் அதை இசையவேண்டுமென்கிறார் இவர்கள். இத்யாதியால், மாயை

பார்களென்னுமிடம் वेदापहारादिवृत्तान्तங்களிலும். "ब्रह्माद्याः सकला देवा मनुष्याः पशवस्तथा। विष्णुमायामहावर्तमोहा(गर्त)न्धतमसावृताः॥". 'ब्रह्मा विश्वसृजो धर्मो महानव्यक्तमेव च। उत्तमां सात्त्विकीमेतां गतिमाहुर्मनीषिणः॥" इत्यादिகளிலும் सुव्यक्तம்.

இவர்கள் தங்களுக்கு अन्तरात्माவான அவன் கொடுத்த ज्ञानादिகளைக்கொண்டு அவனுக்கு ஏவல்தேவை செய்கிறார்களென்னுமிடம். "एतौ द्वौ विबुधश्रेष्ठौ प्रसादक्रोधजौ स्मृतौ। तदादर्शितपन्थानौ सृष्टिसंहारकारकौ॥" என்று சொல்லப்பட்டது.

---

யாவது மூலப்ரக்ருதி. குணங்கள் ஸத்த்வ ரஜஸ் தமஸ்ஸுக்கள். வேதாபஹாராதி இதி விசேஷபுண்யவசத்தால் பிரமனாகப் பிறந்து எம்பெருமானால் வேதங்களளிக்கப்பெற்றும் உடனே அவ்வேதங்கள் मधुकैटभासुரர்களால் அபஹரிககப்படவே, மிகவும் தவித்து எம்பெருமானை வேண்ட பகவான் ஹயக்ரீவனாய் அவதரித்து மீட்டு அளித்த வரலாறு பாரதத்தில் ஸ்ரீநாராயணீயத்தில் உள்ளது. ஆதிபதத்தால் ஆளவந்தார் அருளிச்செய்த गुरुपातकத்தைக் கொள்க. ருத்ரன் பிரமனுடைய தலையைக் கிள்ளியதால் மஹாபாதகியாய் அந்த ப்ரம்ம கபாலம் கைவிட்டுப் பிரியாமலிருக்கவே என்ன செய்வதென்று தவித்து பிக்ஷையால் கபாலம் நிறைந்தாலன்றி அது பெயராது என்பதையறிந்து எங்குப்போய் எவ்வளவு பிச்சை எடுத்தும் அது நிறையாமலிருக்கவே இமயமலை சென்று ஸ்ரீமந் நாராயணனைப் படிந்துப் ப்ரார்த்திக்க, அவர் தனது திருமேனியில் ஒரு பக்கத்தை நகத்தினால்பிளந்து ரக்தத்தைப் பெருக்கி நிறைக்கவே அக் கபாலம் பல சுக்கலாயொழிந்தது என்ற வரலாறு மாத்ஸ்ய புராணத்தில். இவர்கள் மாயைக்கு அதீனமானவர்கள் என்பதற்கு (வி. பு. 5-30) अदिति வாக்யம் ப்ரமாணம். பிரமன் முதலான தேவர்களும் மனிதர்களும் பசுக்களும் இப்படியெல்லாம் விஷ்ணுவின் மாயையாகிற பெரும் சுழலால் வந்த மோஹமாகிற நள்ளிருளாலே சூழப்பட்டிருக்கின்றனர் முக்குணவச்யர் என்பதை (12) மநுஸ்ம்ருதியில் காண்க. 'பிரமனும் உலகம் படைக்கும் ப்ரஜாபதிகளும் தர்மதேவதையும் மஹத்தத்த்வாபிமாநியும் மூலப்ரக்ருதிக்கு அபிமாநியும் என்றவாறான ஸத்த்வகுணமூலமான பிறப்புக்களை மஹான்கள் சொன்னார்கள்.' இங்கு ப்ரம்மாவைச் சொன்னது ருத்ரனுக்கும் குறிப்பாகும். இவர்களுக்கு ஜ்ஞாநஸங்கோசம் போல் விகாஸமும் இருப்பதாலே தங்கள் தொழிலை பகவதாஜ்ஞையென்று செய்கிறார்கள் என்கிறார் இவர்கள் இதி ஏவல்தேவை = ஏவினபடி ஸேவை = கைங்கர்யம், एतौ இதி. தேவச்ரேஷ்டர்களான இவ்விரு மூர்த்திகளும் முறையே எம்பெருமானின் மனத்தெளிவாலும் சீற்றத்தாலும் உண்டானார்கள். அவன் காண்பித்த மார்க்கத்தைப் பின்பற்றி ஸ்ருஷ்டியையும் ஸம்ஹாரத்தையும் செய்கிறார்கள். இப்படியாகில் हिरण्यगर्भः समवर्तताग्रे, शम्भुराकाशमध्ये ध्येयः என்று (ஆராதன-உபாஸநங்களைக் கூறியது கூடுமோ என்ன. அவ்வசநங்கள் அவர்களுக்கு அந்தர்யாமியான பகவானையே சொல்லும். தனியாக ப்ரும்மருத்ரர்களை மோக்ஷத்திற்காக உபாஸிக்கலாகாதென்பதற்குப் ப்ரமாணமருளிச்செய்கிறார் இவர்

இவர்களுக்கு शुभाश्रयत्वமில்லையென்னுமிடத்தை "हिरण्यगर्भो भगवान् वासवोऽथ प्रजापतिः" என்று தொடங்கி "अशुद्धास्ते समस्तास्तु देवाद्याः कर्मयोनयः।" என்றும், "आब्रह्मस्तम्बपर्यन्ता जगदन्तर्व्यवस्थिताः। प्राणिनः कर्मजनितसंसारवशवर्तिनः॥" என்றும், कर्मणां परिपाकत्वादाविरिञ्चादमङ्गलम्। इति मत्वा विरक्तस्य वासुदेवः परा गतिः" என்றும் पराशर - शौनक - शुकादिகள் प्रतिपादित्தார்கள்.

---

களுக்கு இதி. சுபாச்ரயத்வமாவது சுபத்வமும் ஆச்ரயத்வமும். சுபத்வமாவது ஹேயப்ரத்யநீகத்வம் = ஹேயங்களைப்போக்குகை. ஆச்ரயத்வமாவது-எளிதில் சித்தத்திற்கு விஷயமாகை. இவ்விரண்டும் எம்பெருமான் திருமேனிக்கு உண்டு. அவனுடைய திவ்ய ஆத்ம ஸ்வரூபத்திற்குக்கூட சுபத்வமே உண்டு; ஆச்ரயத்வமில்லை திவ்யமங்கள விக்ரஹத்யானத்தினால் சித்தம் பக்வமான பிறகே அதற்கு அவ் வாத்மஸ்வரூபம் விஷயமாகுமே யல்லது எளிதிலாகாது இப்படியிருக்க ப்ரம்மருத்ராதிகளுக்கு இதற்கு ப்ரஸக்தி ஏது. ஆகிலுமிங்கு அவர்களுடைய சரீரத்திற்கும் சுபாச்ரயத்வமில்லை என்கிறதாம். அவர்களுடைய சரீரங்கள் அவயவ அமைப்போடிருக்கிறபடியால் ஆச்ரயமாகக்கூடுமாயினும் சுபமாகா என்று கருத்து. இந்த அம்சம் अन्ये तु पुरुषव्याघ्र चेतसो ये व्यपाश्रयाः। अशुद्धास्ते समस्तास्तु देवाद्याः कर्मयोनयः என்கிற ச்லோகத்தில் (वि पु 6-7-77) व्यपाश्रयपदத்தாலும் अशुद्धபதத்தாலும் தெரிவிக்கப்பெற்றது. ஹிரண்யகர்ப்ப: = பிரமன்; அவனுக்கு விசேஷணமாம் பகவான் என்பது वासवः-இந்த்ரன். वासवोऽथ என்றவிடத்தில் वासुदेव என்பது अपपाठம். प्रजापतिः-கச்யபாதி ப்ரஜாபதி. இதனுடைய உத்தரார்த்தத்தில் मरुतो वसवः रुद्राः என உளது. ते-அந்த ஹிரண்யகர்ப்பன் முதலான समस्ताः देवाद्याः-தேவாஸுரர்கள் எல்லோரும் कर्मयोनयः—கர்மமூலமாக உண்டானவர்கள் अशुद्धाः—ஹேயம் போக்குபவர்களாகமாட்டார்கள். आब्रह्मेति-பிரமன் முதல் स्तम्बपर्यन्ताः-சிறுகண்டான செடிவரையிலான जगदन्तर्व्यवस्थिताः-உலகத்தினுள்ளே வ்யவஸ்தைக்கு உட்பட்டவர்களான ப்ராணிகள் கர்மாவினால் உண்டுபண்ணப்பட்ட ஸம்ஸாரத்திற்கு வசப்பட்டிருப்பவர்களே யென்பது சௌனகரின் சொல் (வி. த. 104) சுகர் ஸ்ரீபாகவதத்தில்; 11-19 कर्मणामिதி. புண்ய பாபகர்மங்களுக்குப்பலமாயிருப்பதால் பிரமன்வரையில் அமங்களமே = துக்கமேயென்று பரிசீலநம் செய்து விரக்தனானவனுக்கு வாஸுதேவனே முடிவில் ப்ராப்யனாகிறான், ஆகையால் சுபாச்ரயத்வமில்லை. இம் மூன்று வசநங்களை மட்டுமெடுத்து இவற்றிற்குக் கர்த்தாக்களைச் சொல்லுமிடத்திலே பராசர சௌநக சுகர்கள் என்று சொல்ல வேண்டியிருக்க சுகாதிகள் என்று ஆதி பத ப்ரயோகத்தால் कर्मणामித்யாதிச்லோகங்கள் மற்ற ரிஷிகளுடைய க்ரந்தங்களிலுமிருப்பதாகத் தெரிகிறது.

கீழே ப்ரம்ம ருத்ரர்களுக்குக் கார்யத்வம் கர்மவச்யத்வமிரண்டையும் நாராயணனுக்குத் திருமேனி நித்யமென்பதையும் அதனால் கர்ம வச்யத்வமில்லையென்பதையும் கொண்டு ச்லோகத்திலுள்ள பக்ஷங்களை யெல்லாம்

இவர்களுக்கு பகவான் ஆச்ரயணீயனென்றுமிடத்தையும் பகவானுக்கு ஓர் ஆச்ரயணீயரில்லையென்னுமிடத்தையும், "रुद्रं समाश्रिता देवा रुद्रो ब्रह्माणमाश्रितः । ब्रह्मा मामाश्रितो राजन् नाहं कञ्चिदुपाश्रितः ॥ ममाश्रयो न कश्चित् तु सर्वेषामाश्रयो ह्यहम् ॥" என்று தானே யருளிச்செய்தான்.

இவர்கள் उभयविभूतिनाथனான ஸர்வேச்வரனுக்கு விபூதிபூதரென்னுமிடம் "ब्रह्मा दक्षादयः कालः" "रुद्रः कालान्तकाद्याश्च" इत्यादिகளிலே மற்றுள்ளாரோடு துல்யமாகச் சொல்லப்பட்டது. இப்படி वस्त्वन्तरம் போலே இவர்களும் सर्वशरीரயான ஸர்வேச்வரனுக்கு प्रकारभूதரென்னுமிடம் वस्त्वन्तरங்களுக்கும்

---

கண்டித்து கார்யத்வ கர்மவச்யதவங்களை ப்ரமாணங்களைக் கொண்டு ஸ்தாபித்தருளினுர். இவர்களுக்கும் பகவானுக்கும் உள்ள பல வைதர்ம்யங்களை (வாசிகளை) விரிவாகக் கூறிக் கீழ்ச் சொன்ன அர்த்தத்தை ஊர்ஜிதப் படுத்துகிறுர் இவர்களுக்கு இத்யாதியால். रुद्रम - இதி (भा - आश्व । ८) அரசனே! தேவர்கள் ருத்ரனை யாச்ரயித்திருக்கிறுர்கள். ருத்ரன் பிரமனை. பிரமன் என்னை ஆச்ரயித்தவன் நான் ஒருவரையும் ஆச்ரயிக்கவில்லை. எனக்கு ஓர் ஆச்ரயமிருக்கமுடியாதே எல்லோருக்கும் நானன்றோ ஆச்ரயன். இந்த வசநத்தில் தேவர்களுக்கு, ருத்ராதிகளை ஆச்ரயமாகச் சொன்னுலும் முடிவாக நாராயணன் ஆச்ரயமாயிருப்பதாலேயே எல்லோருக்கும் பலனென்று தெரிவதால் பகவானே எல்லோருக்கும் ஆச்ரயணீயனென்பது ஸித்திக்கும்.

இனி, சரீராத்மபாவம் சொல்லப்படுகிறது. விபூதிபூதர் என்பதற்கு நியாம்யர்கள் என்பது பொருள். ப்ரம்மேதி. विभूतयो हरेरेताः जगतस्सृष्टिहेतवः என்பது உத்தரார்த்தம் 1-வி பு-1-22. ஸ்ருஷ்டியை நிர்வஹிப்பதற்காக பகவானுக்கு பிரமனும் தக்ஷப்ரஜாபதி முதலானவர்களும் அதற்கு உரிய காலமும் நியாம்யங்கள். ப்ரளயம் நேரும்போது ருத்ரனும் காலன் யமன் முதலானவர்களும் நியாம்யங்கள் இதற்கு உத்தரார்த்தம் "चतुर्धा प्रलयायैताः जनार्दनविभूतयः என்றதாம் மற்றுள்ளாரோடு. தக்ஷாதிகளோடு யமாதிகளோடு. இவ்விரண்டு ச்லோகங்களினிடையிலே "விஷ்ணுர் மந்வாதய: கால:" என்கிற ச்லோகமிருக்கிறது விஷ்ணு ஸாக்ஷாத் நாரயாணனென்று முன்னமே ஸ்த்தாபித்து விட்டதால் இத இங்கே விடப்பட்டது. ஆனுலும் மந்வாதிகளோடு துல்யமாக விஷ்ணுபகவானை நியாம்யனுகச் சொல்லியிருப்பதால் விஷ்ணுவை விட வேறு ஒருவனே நியமிக்கிறவனுகட்டுமே என்னில்– இதன் உத்தரார்த்தத்தில் "स्थित्यर्थे सत्त्वभूतस्य विष्णोरेता विभूतयः என்று விஷ்ணுவையே நியந்தாவாகச்சொல்லியிருப்பதால் அவனுக்கு அவனே விபூதியாகை கூடாமையால் விஷ்ணு பதத்திற்கு விஷ்ணு என்கிற திருமேனி மட்டும் பொருள்; பரமாத்மா பொருளல்ல. இப்படி இவர்கள் நியாம்யராகில் "ब्रह्मा [illegible] என்ற ஐக்யம் எப்படி கூடும என அருளுகிறுர் இப்படி இத்யாதி. வஸ்த்வந்தரம் போலே—அசேதந வஸ்துக்களும் தேவமநுஷ்யாதி ஜீவர்களும் போலே என்றபடி. ப்ரகாரபூதர் என்பதற்கு चेतनाचेतनविशिष्ट பகவானை

இவர்களுக்கும் சேர नारायणादिशब्दसामानाधिकरण्यத்தாலே ஸித்தம். இவர்கள் சரீரமாய் அவன் ஆத்மாவாயிருக்கிறபடியை, "तवान्तरात्मा मम च ये चान्ये देहिसंज्ञिताः । सर्वेषां साक्षिभूतोऽसौ न ग्राह्यः केनचित् क्वचित् ॥" என்று ब्रह्मा ருத்ரனைக் குறித்துச் சொன்னான். இவர்கள் शेषभूतர் அவன் शेषि என்னுமிடத்தை, "दासभूताः स्वतः सर्वे ह्यात्मानः परमात्मनः । अतोऽहमपि ते दास इति मत्वा नमाम्यहम् ॥" என்று मन्त्रराजपदस्तोत्रத்திலே सर्वज्ञனை ருத்ரன் தானே சொன்னான். இப்படி सर्वप्रकारத்தாலும் நாராயணன் समाधिकदरिद्रன் என்னுமிடத்தை न परं पुण्डरीकाक्ष दृश्यते पुरुषर्षभ ।", "परं हि पुण्डरीकाक्षान्न भूतं न भविष्यति"

---

சப்தத்திற்குப் பொருளாகச் சொல்லும்போது பகவானுக்கு விசேஷணமாகத் தோன்றுகிறவர்கள் என்று பொருளாம்,...

சேர - துல்யமாக. நாராயணேதி 'ब्रह्मा नारायणः, शिवश्च नारायणः, विश्वश्च नारायणः, विश्वं नारायणं देवं, स ब्रह्मा स शिवः' இத்யாதிகளில் ஸாமாநாதிகரண்யம், ஸமாநவிபக்திநிர்தேசம் (அபேதத்தைக் குறிக்கும் விபக்தி). ப்ரகாரபூதமென்றதாலே अपृथक्सिद्धिसंबन्धம் அறிவித்ததாம், ஸ்பஷ்டமாக சரீராத்மபாவத்திற்கும் ப்ரமாணம் மேலே. तवेति (भा-शां 6 ) திரு நாராயணீயம், तव - உனக்கும் मम - எனக்கும் देहिसंज्ञाः— தேஹமுள்ளவராகையாலே देही என்று பெயர் பெற்றவர் अन्ये ये च. மற்றவர் எவரோ. அவர்களுக்கும் सर्वेषां - எல்லோருக்கும் असौ - இந்த பரமாத்மா. साक्षिभूतः—ஸாக்ஷாத் द्रष्टा வாகிறார், எல்லோரையும் நேரக் காண்கிறவராகிறார். ஆனால் எங்கும் எவராலும் காணக்கூடியவரல்லர். मम तव என்ற சொற்களால் குறிக்கப்படுகிறவர்களை இன்னார் என்று விளக்குகிறார் ப்ரம்மா ருத்திரனை என்று. பிரமன் சொன்ன சரீராத்மபாவத்தாலேயே ஸ்பஷ்டமானதையே ருத்ரன் இசைந்திருக்கிறான் என்பதைத் தெரிவிக்க அஹிர்புத்ந்யஸம்ஹிதையை உதாஹரிக்கிறார் दासेति. மந்த்ரராஜமாவது—ந்ருஸிம்ஹன்விஷயமான அநுஷ்டுப் மந்த்ரம், அதிலுள்ள ஒவ்வொரு பதத்திற்கு ஒவ்வொரு ச்லோகமாக ருத்ரன் சொன்ன ஸ்தோத்ரம் பதஸ்தோத்ரம். "எல்லா ஜீவாத்மாக்களும் இயற்கையாகவே பரமாத்மாவான உனக்கு சாச்வதமாய் தாஸராயிருப்பவர்கள், ஆகையினால் நானும் உனக்கு அடிமையென்று திடமாக முடிவு செய்து நான் நமஸ்கரிக்கிறேன்." கீழ்க்கூறிய ஜகத்காரணத்வாதிகளைப் போலே தேவத்வ - மங்களத்வ - பாலநத்வ - தைவதத்வாதிகளாலும் பரமன் என்பதைப் பரக்க நிரூபிக்கிறார். இப்படி இதி. समाधिकदरिद्रன் समेन च अधिकेन च दरिद्रः ஸமனும அதிகனும் இல்லாதவன் என்றபடி. உபயவிபூதி விசிஷ்டனுக்கும் இப்படி சில தாரித்ர்யங்களுண்டு नेति. (भा भी 68) புருஷ ச்ரேஷ்டனே! செந்தாமரைக் கண்ணனுக்கு மேலாக ஒன்றும் (இப்போதும்) காணப்படுகிறதில்லை. செந்தாமரைக்கண்ணனுக்கு மேலானது முன்னுமில்லை; பின்னுமில்லை. அரசர்களில் சிறந்தவனே! தேவர்களில் விஷ்ணுவுக்கு மேற்பட்டவனில்லை. (ஸ்ரீரங்கமாஹாத்ம்யம் 8-50) மங்களவஸ்து வாஸுதேவனு

"न विष्णोः परमो देवो विद्यते नृपसत्तम" "न वासुदेवात् परमस्ति मङ्गलं न वासुदेवात् परमस्ति पावनम् । न वासुदेवात् परमस्ति दैवतं न वासुदेवं प्रणिपत्य सीदति ॥" त्रैलोक्ये तादृशः कश्चिन्न जातो न जनिष्यते ।", "न दैवं केशवात्परम्", "राजाधिराजस्सर्वेषां विष्णुर्ब्रह्ममयो महान् । ईश्वरं तं विजानीमस्स पिता स प्रजापतिः ॥" इत्यादिகளாலே பலபடியும் சொன்ஞர்கள். கருவிலே திருவுடையார்களாய் जायमानदशैயிலே रजस्तमप्रशमहेतुவான मधुसूदनனுடைய कटाक्षமுடையவர்கள் முமுக்ஷுக்களாவார்களென்னுமிடமும், ब्रह्मरुद्रदृष्டரானவர்கள் रजस्तमःपरतन्त्रராவார்களென்னுமிடமும், "जायमानं हि पुरुषं यं पश्येन्मधुसूदनः । सात्त्विकस्स तु विज्ञेयस्स वै मोक्षार्थचिन्तकः ॥ पश्यत्येनं जायमानं ब्रह्मा

---

க்கு மேற்பட்டதில்லை. பரிசுத்தமாக்கும் வஸ்து வாஸுதேவனுக்கு மேற்பட இல்லை. ஆராத்யமான தேவதை வாஸுதேவனுக்கு மேல் இல்லை. வாஸுதேவனே வணங்கின பிறகு வருந்துகிறவனில்லை மூவுலகிலும் அவனுக்கு ஸமானமாக ஒருவன் உண்டானவனுமில்லை உண்டாகப் போகின்றவனுமில்லை. न दैवं இதி (நாரஸிம்ம புராணம் 18) கேசவனைக்காட்டிலும் மேற்பட்ட தெய்வமில்லை. ராஜேதி (பா. ஆச்வ - 43) "விஷ்ணுவே எல்லோருக்கும் அரசரான ப்ரம்ம ருத்ராதிகளுக்கும் மேலான அரசன்; பரப்ரஹ்மம் மஹத்வமுடையவன்; அவனை நாயகனுக நன்கு அறிகிருேம்; அவனே தந்தை; அவனே ஸர்வப்ரஜா நாதன்."

இனி மோக்ஷமளிப்பவன் விஷ்ணுவே என்பதை விசதமாக்குவதற்காக விஷ்ணுவின் கடாக்ஷத்திற்கும் ப்ரஹ்ம ருத்ரர்களுடைய த்ருஷ்டிக்கு முள்ள வாசியை வெளிப்படுத்துகிருர் கருவிலே இதி. கருவு—गर्भम्. கர்ப்பமாயிருக்கும் போதே அல்லது கர்ப்பத்திலேயே. திருவுடையார் திரு ஸம்பத்து - பாக்யம் யத்ருச்சாஸுக்ருதாதி. இது பூர்வஜந்மத்தில் ஏற்பட்டுத் தொடர்ந்து வருவதாகும். ப்ரஹ்லாதாதிகளுக்கு கர்ப்பதசையிலேயே நாரதாதிகள் மூலமான ஜ்ஞாந விசேஷமும் திருவாகலாம். இது பிறக்கும் போது வரும் விஷ்ணுகடாக்ஷத்திற்குக் காரணம். ஜாயமாந தசை जायमानस्य दशा जायमान-दशा. கர்ப்பத்திலிருக்கும் சிசு பிறக்கிறதாக ஆன ஸமயத்தில்; மதுஸூதநன் என்பதற்கு மது என்கிற அஸுரனே ஸம்ஹாரம் பண்ணினவன் என்றது பொருள். தமோ குணம் மதுவாகவும் ரஜோ குணம் கைடபனுகவும் பிறந்து பிரமனிடத்திலிருந்து வேதத்தை அபஹரித்துவிட்டபோது எம்பெருமான் ஹயக்ரீவனுய் அவதரித்து அவர்களை ஸம்ஹரித்தபடியால் அவனுடைய கடாக்ஷம் रजस्तमःप्रशमहेतु என்ருர். மேலுள்ள ச்லோகத்தில் உள்ள மதுஸூதநபதத்திற்கு இது விவரணம்.

ப்ருஹ்மருக்ரத்ருஷ்டரானவர்கள் = ப்ரம்மாவினுலோ ருத்ரனுலோ ஜாயமாந தசையில் பார்க்கப்பட்டவர்கள் முறையே ரஜஸ்ஸுக்கோ தமஸ்ஸுக்கோ வசமாவார்களென்றபடி (भा शां: ३५८) மதுஸூதந என்கிற பதம் பொதுவாக பகவானைச் சொல்லும். ஹயக்ரீவனை மட்டும் கொண்டாலும் ச்லாக்யமே जायमानं - பிறக்கும் தருவாயிலுள்ள यं पुरुषं - எந்த ஜீவனே

रुद्रोऽथवा पुनः। रजसा तमसा चास्य मानसं समभिप्लुतम्॥" என்று விபஜிக்கப்பட்டது.

இவர்கள் முமுக்ஷுக்களுக்கு அனுபாஸ்யரென்னுமிடமும், இவர்களுக்குக் காரணபூதனான ஸர்வேச்வரனே இவர்களுக்கும் மற்றுமுள்ள முமுக்ஷுக்களுக்கும் உபாஸ்யனென்னுமிடமும் "संसारार्णवमग्नानां विषयाक्रान्तचेतसाम्। विष्णुपोतं विना नान्यत्किञ्चिदस्ति परायणम्" என்றும், "ब्रह्माणं शितिकण्ठं च याश्चान्या देवताः

---

அவன் கடாக்ஷிக்கிறானோ அந்த ஜீவன் ஸாத்துவிகனாக அறியத்தக்கவன். ஸாத்துவிகனானபடியால் மோக்ஷ பலனுக்கான அம்சங்களையே சிந்திக்கிறவனாக ஆவான். ஸாத்த்விகனாகிறான் ரஜஸ்தமோ குணங்கள் குறைந்து ஸத்துவ குணம் மேலிட்டவன். ब्रह्मा पुनः—பிரமனோ (புநச்சப்தமானது து என்ற பதம் போலே [விஷ்ணுவை விட இவர்க்குள்ள]வாசியைக் காட்டும்) अथवा रुद्रः—ருத்ரனோ जायमानं पुरुषं—பிறக்கின்ற புருஷனை पश्यति—பார்க்கிறானாகில் (चेत् என்று பதத்தைச் சேர்த்துக்கொள்வது) अस्य—இந்த ஜீவனுடைய मानसं—மநஸ்ஸானது, रजसा तमसा च—ரஜோ குணத்தினாலோ தமோ குணத்தினாலோ (वा என்பதின் பொருளைக்கொள்க) समभिप्लुतम्—நிரைக்கப் பட்டதாகும். அதனால் ஸம்ஸாரத்திலேயே உழல்பவனாவான என்றபடி.

இனி ஜாயமாந தசையில் அவரவர்களுடைய பார்வைகள் அததற்குக் காரணமாயிருந்தாலும், விஷ்ணுவினால் கடாக்ஷிக்கப்பட்டவர்களே மோக்ஷத்திற்காக ப்ரம்மருத்ரர்களை உபாஸித்தால் என்ன, தன்னை உபாஸித்தாற் போலே அவர்களை உபாஸித்தாலும் ஸரவேச்வரன் தானே நேராகவோ அவர்கள்மூலமாகவோ மோக்ஷம் கொடுப்பானென்றால் என்ன தோஷம். ஆகையால் உபாஸ்யத்வம் மூவருக்கும் ஸமமாகலாமே என்பதற்கு ஸமாதாநம். இவர்கள் இத்யாதி. कारणं तु ध्येयः என்ற வசநத்தினால் மோக்ஷத்திற்காகக் காரணவஸ்துவை உபாஸிக்கவேண்டும். அவர்களும் ஸ்திதிப்ரளயங்களுக்குக் காரணமாகின்றார்களே என்னில், स कारणं कारणानां என்று காரணங்களுக்கும் காரணமானதையே உபாஸிக்க ஓதியிருப்பதால் விஷ்ணுவே அவர்களுக்கும் காரணமாகையால் அவர்கள் தங்களுக்கு மோக்ஷத்திற்காக விஷ்ணுவை உபாஸிப்பது போல் நாமும் அவனை உபாஸிப்பதே உசிதமாகும் அவர்களையுபாஸிக்கலாகாது என்பதற்கு வசநங்களும் உண்டு. संसारेति (வி. தர். 1-59) சப்தாதிவிஷயங்களாலே ஆக்ரமிக்கப்பட்ட மனமுடையராய் ஸம்ஸாரக்கடலில் முழுகினவர்களுக்கு விஷ்ணு என்கிற கப்பல் நீங்கலாக வேறொரு சிறந்த உபாயமில்லை பராயணம் என்கிற சொல்லுக்கு பரம உபாயம் என்று பொருள். இந்த ச்லோகத்தில் விஷ்ணுவையே உபாயமாகச் சொன்னதால் விஷ்ணுவினாலே நியமிக்கப்பட்டு பரமருத்ராதிகளே மோக்ஷமளிப்பார்களென்பதில்லை என்று தேறும் உபாஸிக்கப்பட்ட தேவதையே பலனளிக்குமென்பது பொருளாயிருப்பதால் பலனளிக்கமாட்டாத இவர்கள் உபாஸிக்கத்தக்கவரல்லர் என்பதும் தேறும். ஸ்பஷ்டமான வசநமும் எடுக்கிறார் ब्रह्माणं शितिः. (பா. சாந்தி 350) பிரமனையும் நீலகண்டன்

स्मृताः। प्रतिबुद्धा न सेवन्ते यस्मात् परिमितं फलम् ॥" என்றும், "हरिरेकस्सदा ध्येयो भवद्भिस्सत्त्वसंस्थितैः। उपास्योऽयं सदा विप्रा उपायोऽस्मि हरेस्स्मृतौ" என்றும் சொல்லப் பட்டது. இத்தாலே இவர்களை मोक्षोपकारकராகச் சொன்னவிடங்களும் आचार्यादिகளைப் போலே ज्ञानादिहेतुக்களாகையாலேயென்று நிர்ணீதம். இவ்வர்த்தம். "सूर्यस्यैव तु यो भक्तस्सप्तजन्मान्तरं नरः। तस्यैव तु प्रसादेन रुद्रभक्तः

---

என்கிற சிவனையும் (शिति - கறுப்பு). தேவதைளாக ஸ்ம்ருதிகளில் சொல்லப் பட்டவர் வேறு யாவரோ அவர்களையும் प्रतिबुद्धाः—தத்துவஜ்ஞாநமுடைய ஏகாந்திகள் न सेवन्ते—ஸேவிக்கமாட்டார். உபாஸிக்கமாட்டார். ஏனெனில் यस्मात्-எதனுல் அவர்கள் மூலம் பெறும் பலம் परिमितं–மிகவும் ஸ்வல்பமாகும். இந்த ச்லோகத்தினுல் அல்ப்ப பலனுக்காக அவர்களை உபாஸிப்பதேயல்லது; மோக்ஷபலனுக்காக உபாஸிப்பதில்லை யென்பது ஸ்பஷ்டமாகிறது. प्रतर्दन வித்யாதிகளில் இந்த்ராதிகள் உபாஸிக்கப்படுகிருர்களேயெனில், அசேநங்கள் போலே சேதநர்களான இந்த்ராதிகளும் சில உபாஸநங்களில் விசேஷணமாகத் தோன்றினுலும் ப்ரதாநமாக உபாஸிக்கப்படுகிறவன் ஸர்வேச்வரனேயாவான். ஆகையால் அவர்கள் பரமோபாயமாக மாட்டார்கள். இதே ருத்ரனும் தானே சொல்லியிருக்கிருன். பரமோபாயமாகாமல் பரம்பரையாக உபாயமாவது சில விடங்களிலிருக்கலாமென்பதை விலக்குவது மேல் ச்லோகம் हरिः இதி (ஹரிவம்சம் வி 132 கைலாஸ யாத்ராப்ரகரணம்) विप्राः—அந்தணர்களே सत्त्वसंस्थितैः—ஸத்த்வ குணத்தில் நிலைபெற்ற भवद्भिः—உங்களால் எப்போதும் ஹரி ஒருவனே த்யாநம் பண்ணத்தக்கவன். எப்போதும் அவனே உபாஸிக்கத்தக்கவன். हरेः स्मृतौ—பகவானை உபாஸிப்பதில் उपायः अस्मि—நான் உபாயமாகிறேன். இங்கே சொன்ன த்யாநமாவது கர்மாநுஷ்டாந காலத்திலும் அவனை மறவாமை. உபாஸநமாவது. மோக்ஷத்திற்கான வித்யாநுஷ்டாநம். இந்த வசநமானது விஷ்ணு ஸஹஸ்ரநாம சாங்கர பாஷ்யத்திலும் எடுக்கப்பட்டுள்ளது. உபாயோऽஸ்மி என்றதால் ருத்ரனை முதலில் த்யாநம் செய்து அவனநுக்ரஹம் பெற்று பரமாத்மோபாஸநம் செய்ய வேண்டுமென்று பொருளல்ல; தெளிவான ஜ்ஞாநத்திற்காக ஆசார்யாதிகளைப் போலே ருத்ரனையும் ஆச்ரயிக்கலாமென்கிருர். இத்தாலே இதி. இதே "शङ्करात् ज्ञानं अन्विच्छेत्" என்கிற ப்ரமாண ஸம்மதமாகும். சொன்னவிடங்களுமென்பதற்கு சொல்லும் வசநங்களும் என்று பொருள். आचार्यादि என்கிற ஆதிபதத்தால் ஹிதோபதேசம் செய்யும் மற்ற காருணிகரைக் கொள்வது. ज्ञानादि என்கிற ஆதிபதத்தால் வைராக்ய புருஷகாரத்வாதி க்ரஹணம். ருத்ரன் மார்க்கண்டேயனுக்குப் புருஷகாரம் என்பரே. மோஹசாஸ்த்ரப்ரவர்த்தகனை ருத்ரன் ஆசார்யாதிகளைப்போலே ஆகக்கூடுமோ? பிரமனைப்போலே ஸர்வவித்யா ப்ரவர்தகனுக ப்ரஸித்தியில்லையே என்ன, அதற்கு ப்ரமாணம் காட்டுகிருர் இவ்வர்த்தம் இதி सूर्यस्येति। यो नरः—எந்த மனிதன் ஏழு ஜந்மங்களுக்கான அவகாசம் முழுமையும் (அந்

प्रजायते ॥ शङ्करस्य तु यो भक्तस्सप्तजन्मान्तरं नरः । तस्यैव तु प्रसादेन विष्णुभक्तः प्रजायते ॥ वासुदेवस्य यो भक्तस्सप्तजन्मान्तरं नरः । तस्यैव तु प्रसादेन वासुदेवे प्रलीयते ॥” என்கிற இடத்திலும் விவக்ஷிதம்.

இப்படி सूर्यभक्त्यादिகள் परम्परया भगवद्भक्त्यादिகளிலே மூட்டுவதும் परावर-

---

தரம் என்பதற்கு அவகாசம் பொருள்) सूर्यस्य एव भक्तः-ஸூர்யனுக்கே பக்தனாகிறானே, அவன் ஸூர்யனுடைய அனுக்ரஹத்தால் ருத்ரனிடம் பக்தனாகிறான், ருத்ரனிடத்தில் அவ்வளவு காலம் எவன் பக்தனோ அவன் அவனுடைய அனுக்ரஹத்தாலே விஷ்ணுபக்தனாகிறான். விஷ்ணுவினிடத்தில் (வாஸுதேவனிடத்தில்) அவ்வளவு காலம் பக்தனானவன் அந்த வாஸுதேவனிடத்திலேயே லயிக்கிறான் என்று பொருள். மோக்ஷத்தில் பரவாஸுதேவனிடம் சேர்க்கையைச் சொல்ல வேண்டியிருப்பதால் वासुदेवे प्रलीयते என்றது விஷ்ணுவினிடத்தில் பக்தி பண்ணினால் வாஸுதேவனிடத்தில் லயிப்பது. விஷ்ணுவும் வாஸுதேவனும் ஒருவராகையாலே என்றறிவிப்பதற்காக विष्णोरेव च यो भक्तः என்று சொல்லாமல் वासुदेवस्य यो भक्तः என்றது. सूर्यस्यैव என்றது முதல் ஏவகாரங்களிருக்கிறபடியாலே ஸூர்ய பக்தனாகாமல் அவன் அநுக்ரஹம் பெறாமல் ருத்ர பக்தனாக முடியாது. அவ்வாறே ருத்ரபக்தனாகாதவன் அவனுடைய அநுக்ரஹமில்லாமையால் விஷ்ணு பக்தனாகான் என்று பொருள் கொள்ளலாகாது. ஓராசார்யனிராமற் போனால் வேறு ஆசார்யனை அடைவது போல் வேறு விதத்திலும் அந்தந்த பக்தியைப் பெறலாமே. ஸூர்யாதிகளை ஆச்ரயிக்காமலும் ருத்ராதி பக்தர்களாவது ஸர்வஸம்மதம். ஆனால் ஏவகாரத்திற்கு என்ன கருத்தெனில், பொதுவாகவே தேவதைகளுக்கு தம்மை யண்டினவனை தமக்கே யடிமை யாக்கிக் கொள்வது என்கிற துர்குணமுண்டு. அதுவே யல்லாமல் दक्षப்ரஜாபதி யாகத்திலே ஸூர்யனின் பற்களை உடைத்த ருத்ரனுக்கு பக்தனாகையை விரோதியான ஸூர்யன் இசையானென்றும் மோஹநார்த்தமாக சாஸ்த்ரம் செய்து தன்னையே ஸர்வேச்வரனாகச் சொல்லும் சிவன் விஷ்ணு பக்தனாகையை இசையானென்றும் நினைக்கவேண்டா. எந்த ஸூர்யனும் சிவனும் விரோதியாக நினைக்கபபடுகிறார்களோ அவர்களிடத்திலேயே பக்தனுக்கும் அவர்களநுக்ரஹத்தாலேயே மேம்பட்டவர்களிடத்தில் பக்தி பெற இடமுண்டு என்றபடி: रुद्रस्यैव तु यो भक्तः என்னாமல் शङ्करस्य च என்றது ருத்ரன் என்கிற சொல்லுக்கிணங்க அவன் அழப்பண்ணுகிறவன், ஸம்ஹார காரணமாகிறவன் அவன்மூலம் நன்மை இல்லையென்று நினைக்கவேண்டா என்பதற்காக என்னலாம். शङ्करात् ज्ञानम् अन्विच्छेत् என்கிற வசநம் நினைவுறும்

இவ்வசநத்தில் ஏவகாரத்தினால் ஸூர்யனிடத்திலேயே ருத்ரனிடத்திலேயே பக்தனாகிறவன்—அதாவது ஸூர்யனுக்கு மேற்பட ருத்ரனுக்கு மேற்பட தெய்வமில்லை என்றிருப்பவன் என்று பொருள் கொள்ளலாகாதென்றறிவிப்பதற்காக இப்படி இத்யாதி. परम्परया என்பதற்கு ருத்ரபக்த்

तत्त्वங்களிலே ऐक्यबुद्धियும் व्यत्ययबुद्धियும் समत्वबुद्धियும் மற்றும் இப்புடைகளிலே வரும் மதிமயக்கங்களும் आसुरस्वभावத்தாலே ஒரு விஷயத்தில் प्रद्वेषादिகளுமின்றிக்கே सूर्यादिகளைப் பற்றுமவர்களுக்கே என்னுமிடத்தை, "ये तु सामान्य-भावेन मन्यन्ते पुरुषोत्तमम् । ते वै पाषण्डिनो ज्ञेयास्सर्वकर्मबहिष्कृताः" इत्यादिகளிலே

---

யாதிமுகமாக, அதுபோல் ருத்ரன் செய்யும் உபதேசாதி முகமாக என்று பொருள். भगवद्भक्त्यादि என்ற ஆதிபதத்தால் प्रपत्तिயையும் மோக்ஷாதிகளையும் கொள்வது. பராவரதத்துவங்களிலே பரதத்துவமான விஷ்ணுவினிடதிலும் அவரதத்துவமான தேவதாந்தர விஷயத்திலுமென்றபடி. கீழ்ச்லோகத்திற்கிணங்க ருத்ரஸூர்யாதி ரூபமான உச்ச நீச தத்த்வகளிலென்றும் பொருளாகலாம். व्यत्ययबुद्धिயாவது பரதத்வத்தை அவரமாகவும் அவரதத்வத்தைப் பரமாகவும் நினைப்பது. அவரமாவது - பரமாகாதது, கீழ்ப்பட்டது. இப்புடைகளிலே- இந்த ப்ரகாரங்களிலே; ஐக்யாதிபுத்திகளைப்போலே என்றபடி. மதிமயக்கம் - விபரீதஜ்ஞாநம். நாராயணன் வரையிலான தத்த்வங்களுக்கும் மேலே ஒரு தத்த்வமுள்ளதென்கிற மோஹமும் நாராயணன் உபாதாந காரணமேயல்லது நிமித்தகாரணமல்லன் என்றாற்போன்ற மோஹமும், மோஹமே கூடாதபோது ப்ரத்வேஷாதிகள் ஸுதராம் கூடாவென்க. ஆகையால் ஏவகாரத்தைக்கொண்டு 'இதரரிடத்தில் ப்ரத்வேஷம் வேண்டும் 'என்றும் நினைக்க வேண்டா என்றறிவிப்பதற்காக 'ஒரு விஷயத்தில் ப்ரத்வேஷாதிகளும்' என்றது. மேம்பட்டவர்களிடத்தில் மட்டுமின்றி யாரிடத்திலும் ப்ரத்வேஷமில்லாமலிருப்பதே அவச்யமென்றறிவிப்பதற்காக ஒரு விஷயத்திலே என்றது, ये द्विषन्ति महात्मानं न स्मरन्ति च केशवम् न तेषां पुण्यतीर्थेषु गतिः என்ற வசநம் காண்க. येत्विति। समानमेव सामान्यम् तस्य भावः सामान्यभावः ஸமாநபதத்திற்கு अनयोस्समाना माता இத்யாதிகளிற்போல் ஏகம் என்கிற பொருளுமுண்டு. ஆக सामान्यभावமானது ஐக்யமுமாம் ஸாம்யமுமாம் बद्धमुक्तादि ஸர்வபுருஷர்களுக்கும் மேம்பட்டு புருஷோத்தமனாயிருப்பவனை எவர்கள் கீழ்ப்பட்ட புருஷர்களோடு ஏகமாகவோ ஸமமாகவோ நினைக்கிறார்களோ அவர்கள் பாஷண்டிகளாக ஸமஸ்தவைதிக கர்மங்களிலிருந்து விலக்கப்பட்டவராக அறியத்தக்கவராவர். இப்படி ஸமத்வ புத்தியே கூடாதென்றால் விஷ்ணு கீழ்ப்பட்டவனென்கிற புத்தி கூடாதென்பது கூறாமலே விளங்கும் असाधारण्यं परत्वेन चेतयानो ह्यचेतनः। स पाषण्डीति विज्ञेयः सर्वकर्मबहिष्कृतः ॥ என்று விசேஷ வசநமும் உளது. ஸர்வகர்மபஹிஷ்க்ருத: என்பதற்கு ஸர்வகர்மாவிலிருந்து பஹிஷ்கரிக்கப்பட்டவன் = கர்மாநர்ஹனுக்கப்பட்டவன் என்பது பொருள். ஆகையால் கீழ்ச்சொன்னதற்கு இவ்வசநம் ப்ரமாணமாகிறது. पाषण्डिनः என்பதற்கு प्रमाणेन खण्डिताः पाखण्डाः என்று உதயனர் பொருள் உரைத்தார். கீழ்க்கூறிய விபரீத ஜ்ஞாநமுள்ளவர்களுக்குப் பொதுவாக வைதிககர்மாக்களிலே அதிகாரமில்லை யாகையாலே ஸூர்யபக்த்யாதிகளும் செய்ய வழியில்லை. இப்படி தேவதாந்தர பரத்வ

கண்டுகொள்வது. இப்படி ஜ்ஞாநாதிகளில் மாருட்டம் உடையார்க்கு देवतान्तर-भक्ति உண்டேயாகிலும் भगवन्निग्रहத்தாலே प्रत्यवायமே फलिக்கும்.

ஆகையால், "त्वं हि रुद्र महाबाहो मोहशास्त्राणि कारय। दर्शयित्वाऽल्पमायासं फलं शीघ्रं प्रदर्शय॥" என்கிறபடியே मोहनशास्त्रங்களிலே दृष्टफलसिद्धியை உண்டாக்கினதுவும் அவற்றை யிட்டு மோஹிப்பித்து நரகத்திலே விழ விடுகைக்காக வத்தனை.

---

புத்தியுள்ளவனுக்கு தேவதாந்தர பக்தியானது பகவத்பக்தியில் மூட்டாதாகில், தேவதாந்தர பக்தரான பாணாஸுரன் மார்க்கண்டேயன் घण्टाकर्णन் என்றாற்போன்றவர்கள் பகவத்பக்தர்களாய் நன்மை பெற்றது எங்ஙனே என்னில் - பாணாஸுரன் க்ருஷ்ணனால் வதைக்கப்பட்டு தனக்குள்ள புத்திமாருட்டத்தை இழந்தான். இவர்களுக்கு தேவதாந்தரம் நன்மை செய்வது அநதிகாரிகளான இவர்கள் செய்த கர்மாவின் பலனல்ல; அநதிகாரியானாலும் பக்தனாகிறான் என்கிற அன்பினாலேயே யாகும். வ்யத்யய புத்தி திருடமாகவிருக்கும் போது ருத்ரன் அவர்களை மாற்றமாட்டாமல் வெகுநாள் உபேக்ஷித்து நல்ல ஸமயம் ப்ரதீக்ஷித்தே நன்மையை உபதேசிப்பது, ஏழு ஜந்மம் ப்ரதீக்ஷித்தே நன்மையை உபதேசிப்பது ஏழுஜந்மம் ப்ரதீக்ஷிப்பதும அதற்காகவே. ப்ரதர்தநன் இந்த்ரனைக் குறித்து "त्वमेव मे वरं वृणीष्व यं त्वं मनुष्याय हिततमं मन्यसे என்று வேண்டினது போல் வெகுகாலம் சிவனோடு பழகி சிவஸாயுஜ்யமே பெரிதென்கிற அபிநிவேசத்தை விட்டு, எது ஹிதமோ அதை எனக்கு அருளவேணுமென்று கேட்கும் நிலைக்கு வருமவர்களைப் பார்த்து தன்னைப்போல் அபிமானித்து கரை புரண்ட க்ருபையால் உண்மையை விளக்குவது தேவதாந்தரத்திற்குமுண்டு. இப்படி வ்யத்யய புத்தி மாறும் அதிகாரிகள் ஸர்வ கர்ம அநதிகாரியாவதில்லை என்றவாறாராய்க. இப்படி இத்யாதி. புத்திமாருட்டமிருந்தாலும் தேவதாந்தர பக்தியுண்டாகில் அவர்களுடைய உதவியினால் இவன் நல்ல வாழ்க்கை பெற்றே இருக்கலாமே என்ற வினவுக்கு, விபரீத புத்தி காரணமாக தேவதாந்தரம் தன் பக்தனுக்கும் கேட்டையே விளைவிக்கும். எம்பெருமான் திருவுள்ளத்தை மீறி நன்மை செய்வது அவர்களுக்கு ஸாத்யமாகாது. இதற்கு ப்ரதியாக எம்பெருமானிடம் நன்மை பெறும் அதிகாரிவிஷயத்தில் தீமை செய்வதும் அவர்களாலாகாது. தேவதாந்தரத்தினுடைய எச்செயலும் எம்பெருமான்திருவுளளமின்றி நடைபெறாதென்று இந்த கட்டத்தில் நிரூபிக்கிறார். ப்ரத்யவாயமே—அநர்த்தமே. இதன் விவரணம் ஆகையால் இத்யாதி. மஹாபாஹுவான ருத்ரனே! மோஹத்திற்கான சாஸ்த்ரங்களை நீ செய்; நீ உபதேசிக்கும் கார்யங்களில் வைதிகமான யாகாதிகளைவிட ஆயாஸக் குறைவைக் காண்பித்து அதற்குப் பலனையும் அளி; அதை விரைவிலும் அளி" என்ற எம்பெருமான் நியமனத்திற்குட்பட்டு தேவதாந்தரம் அவர்களுக்கு நன்மை செய்வது போல் எண்பித்து வைதிக தர்மங்களி

सत्यसङ्कल्पனான பகவான் ஒருவனை நிக்ராஹ்யனாக்கக் கோலினால் "ब्रह्मा स्वयम्भूश्चतुराननो वा रुद्रस्त्रिनेत्रस्त्रिपुरान्तको वा । इन्द्रो महेन्द्रस्सुरनायको वा त्रातुं न शक्ता

---

லிருந்து விலக்கி விபரீத புத்தியைத் திடப்படுத்தி நரகபர்யந்தம் விளைவிப்பதால் அநர்த்தமே பலனாகிறது.

ஸத்யஸங்கல்பனான = தடைபடவாகாத ஸங்கல்பத்தை யுடையவனான; நிக்ராஹ்யனாக்க தன் நிக்ரஹத்திற்கு விஷயமாக்க. கோலினால் என்பதற்கு இச்சித்தால் என்று பொருள். ப்ரார்த்தித்தாலென்பதல்ல वाञ्छति. இது ஹநுமான் ராவணனுக்குச் செய்யும் உபதேசம். युद्ध-யுத்தத்தில் रामवध्यं ஸ்ரீராமனால் வதைக்கப்பட வேண்டும் நிலையிலுள்ளவனை त्रातुं—காப்பதற்கு பிரமனோ ருத்ரனோ இந்த்ரனோ எவரும் न शक्ताः—சக்தியுள்ளவரல்லர். ப்ரஹ்மாதிகளைச் சில விசேஷணங்களைக் கொண்டு பலப்படுத்துவது மூன்று பாதங்களில். ஜீவர்களுக்குள் பெரியவனானபடியாலே ப்ரஹ்மா என்கிறது ब्रह्मம் அபிமானத்தால் தன் பெயரை நீட்டி ப்ரஹ்மா என்று தன் மூத்த மகனுக்குப் பெயரிட்டது. அப்படிப்பட்டவனும் ராமவத்யனைக் காக்க முடியாது. स्वयंभूः = தானாக உண்டானவர் என்கிற பொருள் சேராது பகவானால் உண்டுபண்ணப்பட்டவனானாலும் வேறு ஜீவரால் உண்டுபண்ணப்படவில்லை என்பதற்காக ஸ்வயம்பூ: என்றது. காணமாட்டாத ஸர்வேச்வரனைக் காணாமல் இவனை மட்டும் கண்ட தேவதைகள், இவர் தாமே பிறந்தவர் போலும் என்று நினைத்தார்கள் என்பதை இது அறிவிக்கும். அல்லது ஸ்வயம்பூ என்றதற்கு பிறந்த நிலைமையளவிலே நிற்காமல் காலக்ரமத்தில் தன்னைத் தான் ஸ்த்திரமாக்கிக்கொள்ளும் நிலைபெற்றவனென்ற பொருளாம். அந்நிலை பெற்றிருப்பினும் காக்கமுடியாது. चतुराननो वा—நான்கு முகங்கள் மூலமாக நான்கு வேதங்களிலுள்ள மந்த்ரங்களை யெல்லாம் விரைவாக ஜபித்தாலும் காக்கமுடியாதென்றபடி. போர் செய்யத்தெரியாத பிரமன் போரிற்காப்பதெப்படி என்ன அவனை விட்டு ருத்ரனை எடுக்கிறார். ஸம்ஹாரத்திற்கேற்பட்ட ருத்ரன் ஸம்ஹரிக்கும் ராமனுக்கு ஸஹாயமாவானே யல்லது காக்க வல்லனோ என்ன, மேலே த்ரைலோக்யரக்ஷகனான இந்த்ரனை எடுத்தது. மேலே மேலே ப்ரபலனைச் சொல்லவேண்டியது உசிதமாகையால் இந்த்ர-ருத்ர-ப்ரஹ்மக்ரமத்தை ஆதரிக்கவேண்டும். அது இல்லாமையால் இப்படி அவதாரிகை. रोदयतीति रुद्रः எல்லோரையும் அழப்பண்ணும் சக்தியுள்ளவன். அவன் முக்கண்ணனானபடியாலே மூன்றும் கண்ணைத் திறந்து முழு அக்னியை வீசினாலும் அவன் வீர்யம் ராமனிடம் செல்லாது. (ஹனுமானிடம் அக்னி தன் வீர்யம் செய்யமுடியவில்லை) அவ்வளவு மட்டுமின்றி மூன்று பட்டணங்களாக லோஹ உருவெடுத்து மூவுலகையுமழித்து வந்த த்ரிபுராஸுரரை ஸம்ஹரிக்க தன் பெலன் போதாதென்று எல்லா தேவர்களுடைய பெலத்தையும் பெற்றதால் மஹாதேவனென்று பேர் பெற்று த்ரிபுரர்களுக்கு யமனாயிருந்த நிலையிலும் அவன் அசக்தனே. इन्द्र.—इदि परमैश्वर्ये என்று

युधि रामवध्यम् ॥" என்கிறபடியே देवतान्तरங்கள் ரக்ஷிக்க शक्तரல்லர்கள். ஸர்வ தேவதைகளும், सुग्रीवमहाराजादिகளைப்போலே தனக்கு अन्तरङ्गभूतராயிருப்பாரும் தன்னையடைந்தானொருவனை நலிய நினைத்தால், "सकृदेव प्रपन्नाय" என்கிற படியே सत्यप्रतिज्ञனான தன் व्रतம் குலையாமைக்காக ராவணாதிகளைப் போலே दुष्प्रकृतिகளாய் நிராகரிக்கவேண்டுவாரை நிராகரித்தும், ஸ்ரீவாநரவீரர்களைப் போலே सत्प्रकृतिகளாய் அநுகூலிப்பிக்கவேண்டுவாரை அநுகூலிப்பித்தும்

---

மூவுலகத்திற்கும் நாதனாய் ரக்ஷணாதிகாரி அவன் தன் இயற்கைநிலை போதாமல் "महान् वा अयमभूत् यत् वृत्रमवधीत्" என்கிற ச்ருதிப்படி மஹேந்த்ரனான நிலையிலும் அசக்தனே, सुरनायकः—ஸர்வ தேவர்களையும் ஸேனையாகத் திரட்டிக் கொண்டு வந்தாலும் அசக்தனே. वाகாரம் இருப்பதாலே न शक्तः என்று ஏகவசநம் தகும்; பன்மையாயுள்ளது. இம் மூவரும் சேர்ந்து வந்தாலும் அசக்தரேயென்று குறிக்கவாம் युधि—யுத்தம் நடக்கும் போது. போரில் இழியாதபோதும் போரை விட்டு விட்டேனென்றாலும் காக்கலாம். ஆனால் அந்நிலையில் ராமனே கருணை புரிவாராகையாலே இவர்களுக்கு விசேஷகார்யமில்லை அவதாரத்திலேயே ராமனிடமிருந்து மீட்கமுடியாதென்றால் பரரூபத்தில் அவன் ஸங்கல்பத்தை மாற்ற முடியுமோ. எம்பெருமான்வதைக்க நினைத்தவனைப் பிறர் காக்கமுடியாதென்றார்; எம்பெருமானை ஆச்ரயித்தவனை அந்தரங்கருள்பட எவரும் நலிய கில்லார் என்கிறார் ஸர்வ இத்யாதியால். "श्रूयते किल गोविन्दे भक्तिमुद्वहतां नृणाम् । संसारन्यूनताभीताः त्रिदशाः परिपन्थिनः ॥" என்றபடி நலிய ஸமர்த்தர்களான தேவதைகளும் எம்பெருமான் ரக்ஷிக்க நினைத்த பிறகு ஒன்றும் செய்ய சக்தரல்லர் என்பதை "तस्य ह देवाश्चन न अभूत्या ईशते" என்று ப்ருஹதாரண்யகம் ஓதிற்று. தேவதைகளை விட அந்தரங்கரை எடுக்கிறார் सुग्रीवेति. ஸுக்ரீவர் அந்தரங்கர் என்பதைத் தெளிவிக்க அந்தரங்கபதம். ராஜ்யமளித்து மஹாராஜனென்று பதத்தையும் சூட்டினதாலே அந்தரங்கத்வம் ஸ்பஷ்டம். சரணாகதரான விபீஷணாழ்வானை ஸுக்ரீவாதிகளின் சூழ்ச்சியிலிருந்து காத்ததாலே அந்தரங்கரும் விரோதிக்க முடியாதென்று ஸ்பஷ்டமாயிற்று என்று அறிவிப்பதற்காக ஸுக்ரீவமஹாராஜாதிகளைப்போலே என்றது. ஆச்ரயித்தவன்விஷயத்திலே பெருமாள் ஸத்ய ஸங்கல்பன் என்பதற்கு ப்ரமாணம் காட்டுகிறார் सकृदेवेति தன் வ்ரதம் குலையாமைக்காக என்றதால் எவ்வித நஷ்டம் வருவதானாலும் அதையும் பொறுத்துக்கொண்டு வ்ரதரக்ஷணமே செய்வர் என்றது. अप्यहं जीवितं जह्याम्—என்றனரே. விரோதிகள் நலிய நினைத்தால் அவர்களை ஹிரண்ய ராவணாதிகளைப்போலே ஒழிக்கலாம்; அந்தரங்கர் முன்னமே ப்ரபந்நராகையாலே அவர்களை நிராகரிக்க முடியாதாகையால் புது ப்ரபந்நனை எப்படி ரக்ஷிக்கமுடியுமென்பதற்கு ஸமாதாநம். அநுகூலிப்பித்தும் என்று. ஆய் என்ற சொற்கள் வேண்டுவார் என்ற சொல்லில் சேரும். தனக்குப் ப்ராணஹாநி வருதாயிருந்தாலும் வ்ரதத்தை விடமாட்டேனென்று சொல்ல

ஸர்வேச்வரன் ரக்ஷிக்கும். देवतान्तरங்கள் பக்கல் "काङ्क्षन्तः कर्मणां सिद्धिं यजन्त इह देवताः। क्षिप्रं हि मानुषे लोके सिद्धिर्भवति कर्मजा ॥" என்கிறபடியே त्रिषमधुरप्रायங்களான क्षुद्रफलங்கள் கடுக ஸித்திக்கும். அவைதாமும் "लभते च ततः कामान् मयैव विहितान् हि तान्" "एष माता पिता चापि युष्माकं च पितामहः। मयाऽनुशिष्टो भविता सर्वभूत-

---

வேண்டியிருக்க पिशाचान् दानवान् என்றும் किमेष रजनीचरः என்றும் தனக்கு ஆபத்து கிடையாதென்றது अस्थानभयத்தாலே கலங்கின அந்தரங்க ஸுக்ரீவாதிகளின் கலக்கம் நீக்குவதற்காகவன்றோ அதனால் அவர்களை அநுகூலிப்பித்ததாகிறது. இப்படி அவர்களையும் திருத்திப் பணிகொள்வான் என்றது.

இப்படி பகவான் ஸத்யஸங்கல்பனாய் அவனை மீறிச் செய்ய தேவதாந்தரங்கள் அசக்தராயிருப்பதாகில் ஏன் உலகில் தேவதாந்தர ஆராதநம் செய்கிறார்களென்ன அருளிச்செய்கிறார் தேவதாந்தரங்கள் இத்யாதி. काङ्क्षन्त இதி. कर्मणां—கர்மகாண்டத்தில் இதர தேவதைகளைக் குறித்து விஹிதமான கர்மாக்களுடைய सिद्धिं—பலனை काङ्क्षन्तः—விரும்புகின்றவர்களாய் इह देवताः—இங்கிருக்கும் தேவதைகளை यजन्ते—ஆராதிக்கிறார்கள். कर्मजा—பரமாத்ம ஜ்ஞாநம் சேராத வெறும் கர்மாவினால் வரக்கூடும் सिद्धः—பலமானது मानुषे लोके—இவ்வுலகிலேயே क्षिप्रं—விரைவிலேயே भवति हि—உண்டாகிறதன்றோ. பகவான் விரோதியாய் ஸத்யஸங்கல்பனாயிருக்குமிடத்தில் தேவதாந்தர மூலம் பலன் கிடைப்பது அரிதானாலும் அந்நிலை ஏதோ சில இடத்திலேயே யாகையால், தேவதாந்தர மூலம் ப்ராயேண பலன் வரலாமென்றே அவர்களை யாராதிக்கிறார்கள். ஆனாலும் ஸந்தேஹத்திற்கிடமில்லாதபடி தேவதாந்தரத்தை விட்டு பகவானை ஆராதிக்கலாமே யென்னில், பகவான் நிஷ்காமகர்ம மூலமாக மோக்ஷத்திற்காக உபாஸநாதிகளான கர்மங்களாலே ஆராதிக்கபடுகிறான். தேவதாந்தர விஷயத்திலே முதல் கர்மாவே போதும். இதனால் வரும் பலன் விரைவிலேயே வருகிறது. இவ்வுலகிலேயே கிடைக்கிறது. பகவந் மூலமான பலன் தாமதித்து பெறப்படும் அதுவும் லோகாந்தரத்தில். ஆகையால், நாளைய மயிலைவிட இன்றைய காக்கையே சிறந்ததென்று பழமொழிப்படி இதில் இழிகிறார்கள். அப்பலன் ப்ரக்ருதி மண்டலத்தில் பெறக்கூடியதாகையால் விஷம் கலந்த தேனுக்கு ஸமாநம். பிற்காலத்தில் அநர்த்தத்தை விளைவிப்பது. அல்பமும் அஸ்திரமும் துக்கமிச்ரமும் ஆகுமென்றபடி. அந்த ஹேயமான பலன்களையும் ஈச்வரன் மூலமாகப் பெற்றே தேவதாந்தரமளிக்குமென்கிறார் அவைதாமும் இதி—ஹிதாந் என்றவிடத்தில் ஹி என்பது தனிப்பதம். मयैव—என்னாலேயே विहितान्- செய்யப்பட்ட तान्—அந்த कामान्—கர்மபலன்களை ततः—அந்தந்த தேவதாந்தரத்தினிடத்திலிருந்து लभते—அடைகிறான். एष இதி. இது பரமாத்ம வாக்யம் (பா.சா 349) युष्माकं—உங்களுக்கு பிதாமஹனும் மாதாவும் பிதாவுமான एषः—இந்த நான்முகன் मया अनुशिष्टः—என்னால் ஆஜ்ஞாபிக்கப்பட்டு सर्वभूतवरप्रदः—எல்லா ப்ராணிகளுக்கும் வரன் கொடுப்பவனாக भविता ஆகப்போ

वरप्रदः ॥ अस्य चैवानुजो रुद्रो ललाटाद् यस्समुत्थितः। ब्रह्मानुशिष्टो भविता सर्वसत्त्ववरप्रदः ॥" इत्यादिகளிற்படியே भगवद्घोतங்கள். "यस्मात् परिमितं फलम्" "सात्त्विकेषु तु कल्पेषु माहात्म्यमधिकं हरेः । तेष्वेव योगसंसिद्धा गमिष्यन्ति परां गतिम् ॥" என்கையாலே

---

கிறான். यः—எவன் ललाटात्—எனது நெற்றியிலிருந்து समुत्थितः—உண்டானனோ—இந்த ருக்ரனும் இவனுக்குத் தம்பியாய் இவனால் ஆஜ்ஞாபிக்கப் பட்டு ஸர்வ ஜந்துக்களுக்கும் வரன் அளிப்பவனாவான். அவர்களே எல்லா ப்ராணிகளுக்கும் வரன் அளிப்பாராகில் பகவானை ஆச்ரயிக்க வேண்டாவே யென்னில், விவேகிகள் அவர்களை ஆச்ரயிக்கமாட்டார்கள். ஏனெனில், यस्मात् परिमितं फलम्—அவர்கள் அளிக்கும் பலன் அல்ப்பமாயே இருப்பதால். அற்பமான பலனையே விரும்புகிறவர்களுக்கு அவர்கள் அப் பலனை யளிப்பார் களாகிலும் கர்மாக்கள் மோக்ஷத்திற்கும் உபயோகப்படுமென்று நாம் இசைந்திருப்பதால் அவர்ளால் அவர்களை யாராதிக்கும் போதே மோக்ஷமே வேண்டுமென்று கேட்பவருக்கு அதையும் அவர்கள் அளிப்பாரென்னலாமே யென்ன, மோக்ஷபலனை அளிக்க அவர்கள் இபலாரென்கிறார் सात्त्विकेषु-இதி. माहात्म्यम् என்பதற்கு निगद्यते என்கிற க்ரியாபதத்தைச் சேர்க்க அச்சொல் सङ्कीर्णेषु सरस्वत्याः पितॄणां च निगद्यते என்று முன்னமேயுள்ளது. இதன் பொருளாவது—'புராணங்களெல்லாம் ஏகமுகமாக இராமல் தத்த்வத்தையே பலவாறாகச் சொல்லுகின்றனவே. எந்த புராணத்தை ஆகரிப்பது' என்று விசாரிப்பவனைத் தெளிவிக்க மாத்ஸ்ய புராணம் இவ்வாறு கூறுகிறது— 'பிரமனுடைய ஆயுளில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கல்ப்பகாலமாகும். அந்தக் கல்ப்பங்களுக்குள் எந்தக் கல்ப்பத்தில் ரஜோகுணம் பிரமனுக்கு அதிகமாயிருக்கிறதோ, அதில் பிரமனுக்கே மாஹாத்ம்யம் கூறப்படும். அவனுக்குத் தமோகுணம் நிறைந்த கல்ப்பத்தில் அவனே அக்நிக்கும் சிவனுக்கும் மான்மியத்தை மொழிவான். எல்லா குணங்களும் ஒருநாளிலேயே மாறி மாறி வருமாகில் அது ஸங்கீர்ண கல்ப்பமாகும். அதில் பித்ருக்களுக்கும் ஸரஸ்வதிக்கும் பெருமையைப் பணிப்பான். ஸாத்த்விக கல்ப்பங்களில் தான் விஷ்ணுவுக்கு அதிக மேன்மையை விளக்குவான். ஸாத்துவிக ராஜஸாதி கல்ப்பங்களில் தத்ஸ்வரூபனாய் = அதாவது அந்த கல்பத்திற்கேற்ற குணமுடையவனாய் புராணம் செய்வான். இப்படிப்பட்ட கல்பங்களுக்குள் तेष्वेव - ஸாத்விக கல்ப்பங்களிலேயே योगसंसिद्धाः-संसिद्धयोगाः-நிறைவேறின யோகமுடையவர்களாய் மோக்ஷம் பெறுவர்கள். இதரகல்ப்பங்களில் மோக்ஷத்திற்கான யோகம் ஸித்திப்பது அரிது. விஷ்ணுமாஹாத்ம்ய ஜ்ஞாநம் அவற்றில் ப்பெறவாகாதே. தேவதாந்தரத்திற்குப் புராணங்களில் மாஹாத்ம்யம் மொழிந்திருப்பது ரஜஸ்தமோ குணமூலமாகையாலே பொய்யாகும். தத்துவ ஜ்ஞானமே மோக்ஷகாரணமாகும். ஸர்வகர்மஸமாராத்யன் பகவானே யென்கிற மாஹாத்ம்யஜ்ஞானமுண்டாகில், அந்தர்யாமியை விட்டு தேவதாந்தரத்தை யாராதிப்பரோ என்றெல்லாம் ஆராய்க.

அவர்கள்பக்கல் மோக்ஷம் विलम्बத்தும் கிடையாது.

सर्वेश्वरன்பக்கல் "युगकोटिसहस्राणि विष्णुमाराध्य पद्मभूः" इत्यादिகளிற்படியே அதிசயிதமான ஐச்வர்யாதிகளும் வரும். பின்பு விடாய் தீரக் கங்காஸ்நாநம்

---

இந்த ச்லோகத்தில் सत्त्वेव என்கிற ஏவகாரத்தால் ஸாத்த்விக கல்ப்பங்களிலேயே மோக்ஷஹேதுவான யோகஸித்தி; தேவதாந்தரமாஹாத்ம்யம் சொல்லும் கல்பாந்தரங்களில் மோக்ஷார்த்தயோகஸித்தி இல்லையென்று ஏற்படுவதால் தேவதாத்தரத்திற்கு மோக்ஷம் அளிக்க சக்தியில்லையென்பது ஸ்பஷ்டம். தேவதாந்தரங்களுக்கு மோக்ஷமளிக்கும் சக்தியிராவிடிலும் வேறு பலனை யபேக்ஷிக்கிறவர்கள் தேவதாந்தரங்களை விடமுடியுமோ. விரைவில் வரும் பலனை விட்டு மோக்ஷத்திற்கு நோக்கு உள்ளவர்கள் வெகு சிலரே யாவரே யென்ன, இதர பலனையும் ஸர்வேச்வரனிடம் அடையலாமென்கிறார் ஸர்வேச்வரன் இதி. இதே அதிகாரததில் युगकोटि என்கிற ச்லோகம் முன்னே எடுக்கப்பட்டிருக்கிறது. இதில் உத்தரார்த்ததில் புந: என்ற சொல் இருப்பதால் மூவுலகைப் படைக்கும் ஐச்வர்யம் மீண்டும் பெற்றானென்பதாலே இடையில் இழந்து எம்பெருமானை ஆராதித்துப் பெற்றானென்று தெரிகிறது. முதலில் பெற்றது எம்பெருமானிடமே; இது पद्मभूः என்கிற பதத்தினால் அறிவிக்கப்பெறும் இந்த பிரமனின் ஐச்வர்யம் வேறொரு தேவதைகள்மூலம் பெறவாகாதென்பது ஸ்பஷ்டம். त्रैलोक्य மென்பதற்கு कृतकम् अकृतकं कृतकाकृतम् என்று மூன்றுவிதமான லோகங்களைக் கொண்ட முழு ப்ரம்மாண்டமும் பொருள். ऐश्वर्यपदத்தால் ருத்ராதிகள் பெறும் त्रैलोक्यसंहारै-श्वर्यமும் க்ரஹிக்கப்படும். அவற்றுக்கெல்லாம் மேலான விஷ்ணுலோக வாஸ-கைங்கர்யாதி ரூபமான ஐச்வர்யத்தையும் கூட்டுக. இது पुरुषश्चाधि-दैवतम् என்கிற கீதாவாக்யத்தில் கூறியதாகும். அதற்கான ப்ரமாணத்தையும் இத்யாதி என்கிற ஆதிபதத்தால் கொள்க ऐश्वर्यादि என்கிற ஆதிபதத்தால் கைவல்யத்தைக் கொள்க. இவைகளே வரும்போது தேவதாந்தரங்கள் மூலம் வரும் பலன்களும் இவன்மூலம் வருமென்பதில் ஸம்சயமில்லை. இது ஆதிகளும் என்ற உம்மையினால் அறிவிக்கப்பெறும். இப்படி ஸர்வவித பலப்ரதத்வம் 'आर्तो जिज्ञासुः अर्थार्थी ज्ञानी च भरतर्षभ என்று கீதையில் சொல்லப்பெற்றது.

இப்படி தேவதாந்தரங்கள்மூலம் பெறப்படாத பலன்கள் யாவும் இவன்பக்கலிலே யாகவேண்டியிருப்பினும் தேவதாந்தரங்கள்மூலமாகப் பெறும் பலனை இவனிடம் கேட்பது உசிதமாகுமோ; அவர்கள்மூலம் தானே சீக்கிரம் பெறப்படுமென்ன, அதே பலன் தேவதாந்தரங்கள் மூலமின்றி இவன்மூலம் பெறப்படில் அதற்குப் பெரிய விசேஷமுண்டென்கிறார் பின்பு இத்யாதியால். விடாய் தீர—சரீரத்திலுண்டான களைப்புப் போவதற்காக. கங்கையில் நீராடும் போது பாபம் போகவேண்டுமென்று நினைக்காவிட்டாலும் பாபத்தைப் போக்குவது அதற்கு இயற்கை. தேவதா

பண்ணப் பாபம் போமா போலே विषयस्वभावத்தாலே आनुषङ्गिकமாகப் पापक्षयம் பிறந்து रजस्तमस्सुக்கள் தலைசாய்ந்து सत्त्वोत्तरம் உண்டாய் जनक अम्बरीष केकयादि களுக்குப்போலே क्रमेण मोक्षपर्यन्तமாய்விடும்.

मोक्षोपायनिष्ठனும் போது "बहूनां जन्मनामन्ते ज्ञानवान् मां प्रपद्यते", ' ये जन्मकोटि-

---

ந்தரமூலமான பலனே நேராக ஈச்வரமூலமாகப் பெறப்பட்டால் அது ரஜஸ் தமோஹேதுவான பாபங்களைப் போக்கி ஸத்வகுண வ்ருத்தியைச் செய்யும். அதற்குக் காரணம் எம்பெருமான் திருவுள்ளத்திலுள்ள அபிப்ராயமே. தேவதாந்தரம் மோக்ஷமளிக்கமாட்டாமையால் தான் அளிக்கும் க்ஷுத்ரபலனைத் தர மீண்டும் மீண்டும் தன்னிடமே வந்து கொண்டிருக்க அழைக்கிறது. ஈச்வரனோவென்னில்–இவர்கள் இந்த க்ஷுத்ரத்திலேயே நிற்கிறார்களே; நம்மிடம் மஹாபலம் பெறுவார்களோ என்ற சிந்தையுடனேயே க்ஷுத்ரபலன் அளிப்பான். அதனால் அப் பலன் அநுபவித்து முடிவதற்குள் வைராக்யம் வருகிறது ஆகையால் பின்னே வரும் பெரும் பலனை உத்தேசித்து தேவதாந்தரத்தை விடுவது உசிதம் ஆநுஷங்கிகமாக–உத்தேசிக்காமலிருக்கும் போதே முக்ய பலத்துடன் தானே சேர்ந்ததாக. தலைசாய்ந்து—கதிர் பழுத்த பயிர்களின் நுனிப்பாகம் பூமியில் விழுவதுபோல் கீழாகி என்றதாம் ஜநகேதி. அரசர்களான ஜநகாதிகளுக்கு ஐச்வர்ய ஸம்ருத்தியிருந்தும் மோக்ஷார்த்த ப்ரவ்ருத்தியும் விசேஷமாக விருப்பதற்குக் காரணம் அந்த ஐச்வர்யம் அவர்களால் எம்பெருமான்மூலம் பெறப்பட்டதேயென்று கருத்து. 'க்ரமேண மோக்ஷ பர்யந்தமாய் விடும்' என்பதற்கு க்ஷுத்ர பலத்திற்கான பகவதாச்ரயணம் என்கிற எழுவாய் தானே கிடைக்கும். தேவதாந்தராச்ரயணம் போலே க்ஷுத்ரபலத்துடன் நிற்காமல் அதில் வைராக்யத்திற்குக் காரணமாய் மோக்ஷ ப்ரவ்ருத்திக்கு இடமளிக்குமென்றபடி. இப்படி பகவதாச்ரயணம் மோக்ஷ பர்யந்தமாகில் தேவதாந்தரபக்தர்கள் போலே பகவானையாச்ரயித்த தேவகீ வஸுதேவாதிகளும் பல ஜந்மம் எடுத்தது ஏன் என அருளிச்செய்கிறார் மோக்ஷோபாயேதி மோக்ஷோபாயநிஷ்டனும் போது என்பதற்கு பக்தி ப்ரபத்த்யாதிகளை அநுஷ்டித்து வரும்போது என்று பொருளில்லை ஸாக்ஷாத் உபாயமான பக்தியோகத்திற்கு முன்பு நேரும் விளம்பத்தை மேலே சொல்லுகிறாரே. ஆகையால் பகவதாச்ரயணத்தினாலே வந்த க்ஷுத்ரபலனால் பரம்பரயா ப்ராப்யமோக்ஷோபாயமான க்ஷுத்ரபலார்த்தமான பகவதாச்ரய நிஷ்டனும் போது என்று பொருள். बहूनाम् இதி. மோக்ஷ பர்யந்தமாக்கவல்ல பலன் பெற்றபிறகும் பல பிறவிகளின் முடிவிலேயே வாஸுதேவஸ் ஸர்வம் = ஸர்வ விதபந்துவும் ப்ராப்யனும் ப்ராபகனும் வாஸுதேவனே என்கிற ஜ்ஞாநவானாகி என்னிடம் ப்ரபந்நனாகிறான். வேறு பலன்களை விட்டு ப்ராப்யனும் பகவானே என்கிற புத்தியைப்பெறுதல் விரைவிலாகாது என்றபடி. ये இதி. (பௌ-ஸம் 38) அநேககோடி பிறவிகள் எடுத்த எம்பெருமான் மூலம் ஐச்வர்யம் பெற்றவர்களுக்கும் அவற்றின் முடிவிலேயே அச்யுதனிடத்தில் நிலையாம்.

ஷிரேணைஷாமன்தே ऽत्र संस्थितिः" "जन्मान्तरसहस्रेषु तपोध्यानसमाधिभिः। नराणां क्षीणपापानां कृष्णे भक्तिः प्रजायते॥" என்கிறபடியே விளம்பமுண்டு மோக்ஷருசி பிறந்து வல்லதோ ருபாயத்திலே மூண்டால் "तेषामहं समुद्धर्ता मृत्युसंसारसागरात्। भवामि न चिरात् पार्थ मय्यावेशितचेतसाम्॥" என்கிறபடியே மோக்ஷஸித்திக்கு விளம்பமில்லை. ஸ்வாபாசி நானுக்குத் தான் கோலி(ரி)னதே யளவு; வேறு விலம்பாவிலம்பங்

ஜந்போ ஆயிரக்கணக்கான ஜந்மங்களில் தவம், த்யானம், முதிர்ந்த யோகம் இவை மூலம் பாபம் கழிந்த மனிதர்க்கே க்ருஷ்ணனிடத்தில் பக்தியுண்டாகும். தபோத்யாநஸமாதிகளே பக்தியாயிருக்க அவற்றால் பாபம் போன பிறகு பக்தி வருமென்றால் பொருந்துமோ என்னில்—தேவதாந்தரத்தை விட்டு வேறு பலனுக்காக தபோத்யாநஸமாதிகளைச் செய்து அப் பலன் அநுபவிக்கும் போது அவற்றால் பாபம் போனவர்களுக்கே க்ருஷ்ணனிடத்தில் இவனே ப்ராப்யன் என்கிற பக்தி யுண்டாகுமென்று பொருளாம். உபாயம் பகவதாச்ரயணரூபமானாலும் அது க்ஷுத்ர பலனுக்கானபடியாலே ராஜஸமாகலாம் ஆனாலும் பக்திவிரோதி பாபங்களைப்போக்கும். பக்தியாவது-ப்ராப்யனும் அவனே என்று அவனிடத்திலேயே பற்று. விளம்பமிதி. ஆகையினாலேயே மூன்று ஜந்மங்களில் பகவானை மனனம்பெற்ற பிறகே மோக்ஷத்தில் நிலை பெற்றது இப்படி. விளம்பமுண்டாகில் கீதையில் भवामि न चिरात् என்று விரைவில் மோக்ஷமளிப்பதாகச் சொன்னது சேருமோவென்பதற்கு ஸமாதாநம் மோக்ஷருசி இத்யாதி. பக்திரூப உபாயத்தில் இழிந்த பிறகு விளம்பமில்லை என்கிறது இவ்வாக்யம். பக்தியில் ப்ரவ்ருத்திக்குத் தடையான பாபம் கழிவது விளம்பத்தாலே என்பது முன்வாக்யத்தின் பொருள். தேஷாம் இதி. என்னோடு எப்போதும் சேர்க்கையையே விரும்பி என்விஷயமாக பக்தியைப் பண்ணுகிறவர்களுக்கு ம்ருத்யுவான ஸம்ஸார ஸமுத்ரத்தினின்று உத்தாரத்தை =கரையேற்றலை நான் செய்வேனென்கிறான். இதனால் பக்தியிலிழிந்தவனுக்கு உடனே மோக்ஷமென்று நினைக்கவேண்டா. பக்தியென்கிற உபாயம் பூர்ணமாகவேண்டும். அதன் பிறகும் ப்ராரப்த கர்மா இருக்குமாகில் அது கழியும் வரையில் விளம்பமே. ப்ராரப்தகர்மம் முடிந்து விட்டால் பகவத்ஸாக்ஷாத்காரரூபமாயிருக்கிற பக்தியும் உண்டாயிருந்தால் மீண்டும் ஸஞ்சிதத்திலிருந்து பிரித்து ப்ராரப்தகர்மாவைக் கொடுத்து விளம்பிப்பதில்லை. அதற்கு மாறாக "ददामि बुद्धियोगं तम्" என்றபடி உபாய பூர்த்திக்கே முயலுவான் என்றபடி

பரமவைராக்யத்தோடு மோக்ஷத்தில் ருசி பிறந்திருப்பவன்விஷயத்தில் விரைவில் பலனளிக்க பகவான் ப்ரவ்ருத்தியாமையால் அவனுக்குக் கருணைக் குறைவென்ற தோஷம் வாராதோ என்ன அருளிச்செய்கிறார் ஸ்வதந்த்ரேதி. முன் எடுத்த கீதா ச்லோகத்தில் கர்த்ருத्व என்று சொன்ன ப்ரபத்தி இருவிதமாகும். பக்திக்கு அங்கமான ப்ரபத்தியாகில் அதன் மூலம் பக்தியைப்பெற வேண்டியிருப்பதால் அந்த பக்தியும் தர்சநஸமாநாகார ஜ்ஞாநமாகையால்

களுக்குக் குறி யில்லை. இந் நியமங்களெல்லாம் "स्वातन्त्र्येश्वरमपर्यनुयोज्यमाहुः" என்கிற निरङ्कुशस्वच्छन्दதையாலே सिद्धங்களென்று प्रमातन्त्रருக்கு सिद्धம்.

---

அது வெகுகாலம் கழித்தே வரக்கூடுமாகையால் ப்ராரப்த கர்மாவின் நீடிப்பை பக்தியோக நிஷ்டனே வேண்டும்படியாகிறது, அதனால் உடனே மோக்ஷத்தை அவன் கேட்கமுடியாது. உடனே மோக்ஷமாகில் இங்குள்ள காலம் பக்தியால் அவனை அனுபவிக்கவேண்டுமென்கிற ஆசையும் நிறைவேறாது. பக்தி பிறந்த பிறகும் ப்ராரப்த கர்மாவானது நீடிக்குமாகில் அவதார ரஹஸ்ய சிந்தனத்தாலே அந்த ஜந்ம முடிவிலேயே பக்தனும் மோக்ஷம் பெறலாம். இதன்றி, அந்த ப்ரபத்தி ஸ்வதந்த்ர ப்ரபத்தியாகில் —நேராக மோக்ஷத்திற்கேயான ப்ரபத்தியாகில், ஆர்த்தனாய் அப்போதே மோக்ஷத்தைக் கோரினாலும், த்ருப்தனாய் தேஹாவஸாநத்திலே மோக்ஷம் கோரினாலும் இவன் கோரின வளவிலே மோக்ஷம் ஸித்தம். ஆகையால் இழிந்த உபாயத்திற்குத் தகுந்தபடி காலம் வகுக்கப்படுகிற டியால், 'ஈச்வரனுக்குக் கருணையில்லை' என்னவொண்ணாதென்றபடி. குறி இல்லை. இவன் தேஹாவஸாநத்திலே மோக்ஷம் கேட்டிருந்தும் அவன் விளம்பிக்கிறான் என்பதற்கோ, அவ்வளவு விளம்பம் பொறாமல் ஈச்வரன் அவிளம்பமாக மோக்ஷம் கொடுக்கிறானென்பதற்கோ ஸாதகமாக-குறிப்பாக-ஜ்ஞாபகமாகவிருக்கும் ப்ரமாணமில்லை. இந் நியமங்களெல்லாம் என்பதற்கு தான் ஈச்வரனாயிருந்தும் தன்னை யண்டினவனுக்குப் பலனைத் தாமதமாக அளிப்பதும், தனக்குக் கீட்பட்ட தேவதைகளை அடைந்துவேண்டுகின்றவர்க்கு அவர்கள்மூலம் பலன்களை விரைவில் அளிப்பதும் என்ற வ்யவஸ்தையை ஏன் செய்தான்? தன்னை யாச்ரயித்த பிறகும் தன்னையே ப்ராப்யமாக அடையும் படியான பக்தியை ஏன் தாமதமாகக் கொடுக்கிறான்? விரைவில் பெறும்படி எல்லோருக்கும் ஸ்வதந்த்ர ப்ரபத்தியையே விதிக்காமல் நீண்ட பக்தியை ஏன் விதிக்கிறான்? ஜ்ஞாந சக்தி யதிகம் பெற்றவரைத் தாமதப்படுத்தி, கீட்பட்ட ப்ரஜைகளுக்கு ஏன் மோக்ஷம் விரைவில் அளிக்கிறான் என்ற கேள்விகளில் அடங்கிய நியமங்கள் என்பது பொருள். "स्वातन्त्र्यं இதி. வைகுண்ட ஸ்தவம் 55—रूपप्रकारपरिणामकृतव्यवस्थं चिदं विपर्यसितुं अन्यत् असच्च कर्तुम्। क्षाम्यन् स्वभावनियमं किमुदीक्षसे त्वं என்று முன்புள்ள மூன்று பாதங்கள். (क्षाम्यन्—க்ஷமனாய் = சக்தனாயிருந்து ஸ்வபாவ நியமத்தை ஏன் கணிசிக்கிறாய்) இதன் அர்த்தமாவது. சேதநா சேதந ரூபமான ஜகத்தில் இதற்கு ஸ்வரூப பரிணாமம், வேறொன்றுக்கு ப்ரகார பரிணாமம் அதாவது ஸ்வபாவபரிணாமம் என்கிற வ்யவஸ்தையை நீ தானே செய்தாய்; இது கர்மாதீநமல்லவே. ப்ரளயத்தில் அஸத்தாய் உள்ளதை ஸ்ருஷ்டியில் ஸத்தாக்குகிறாய். ஸூக்ஷ்மத்தை ஸ்தூலமாக்குகிறாய். ஸ்பர்சமில்லாததிலிருந்து ஸ்பர்சத்தை உண்டுபண்ணுகிறாய். உஷ்ணமான அக்நியிலிருந்து குளிர்ந்த நீரைப் படைக்கிறாய். இந்த விசித்ரமெல்லாம் ஸ்வாதந்த்ர்யத்தாலேயே அப்படி யிருக்க ஸ்ருஷ்டி மத்தியில்

இவ்வர்த்தங்கள் இப்படித் தெளியாதார்க்கே देवतान्तरங்கள் सेव्यங்களென்னு மிடம் "प्रतिबुद्धवर्जं सेव्यं तु" என்று व्यवस्थै பண்ணப்பட்டது.

இத் தேவதாந்தரங்களை भागवच्छरीरமென்று அறியாதே பற்றினர்க்கு,

---

அந்தந்த வஸ்துஸ்வபாவத்தை அனுஸரித்து கர்மாவுக்கு அனுகுணமாக நடப்பது ஏனோ? ஸ்வதந்தரமாய் எப்படி வேண்டுமானாலும் நடந்து கொள்ளலாமே. ஆனாலும் உனக்கு இஷ்டமான ஸ்வாதந்த்ர்யமிது. நீ ஈச்வரனை ஒருவிதம் ஸ்வதந்த்ரனாயிருக்க, ஏன் இவ்வாறு என்று யார் கேட்க முடியுமென்றதாம். இதன் கருத்து என்னவெனில்— ஈச்வரன் நடந்து கொள்ளும் விதம் ப்ரமாண ஸித்தமாக எதெது உள்ளதோ அததற்குத் தகுந்த காரணத்தை = யுக்தியை ஆலோசிக்க வேண்டுமே யல்லது வீண் கேள்வி கேட்பது தகாது. கீட்சொன்ன நியமங்களெல்லாம் தேவதைகளி டத்தில் அபிமானத்தாலும் மோக்ஷத்திலுள்ள அருமையை அறிவிக்கும் நோக்காலும், த்ரிவர்கபலத்தில் ருசியுள்ளவருக்குச் சிறிது சிறிதாகவே அதை விலக்கவேண்டுமென்ற எண்ணத்தினாலும் ஸர்வ ப்ரகாரத்திலும் அசக்தன்விஷயத்தில் அளவு கடந்த கருணையாலும் என்றெல்லாம் ஆலோ சிக்கவேண்டுமென்றவாறு,

இப்படி ப்ரமாணபரதந்த்ரராக விருக்கவேண்டுமானால் "आदित्यं अम्बिकां विष्णुं गणनाथं महेश्वरम्" என்று பஞ்சாயதநபூஜை விதிக்கப்பட்டிருக்க விஷ்ணு மாத்ரஸேவை சாஸ்த்ர விருத்தமன்றோ என்பதற்கு ஸமாதானமாம் மேலே இவ்வர்த்தங்கள் இத்யாதி. அந்த சாஸ்திரவிதி ஸர்வவிஷயமன்று. தேவ தாந்தரங்கள்மூலம். க்ஷுத்ர பலன்கள் பெற்றால் ஸம்ஸார நிவ்ருத்திக்கு அவகாசம் நேராது. அப் பலனை விரும்பாமை முக்ய கல்பம். விரும்பினாலும் எம்பெருமான்மூலம் பெற்றால் விளம்பித்தாவது மோக்ஷமுண்டு என்ற விஷயங்களைத் தெளியாதவர்களுக்கே அவர்கள் ஸேவ்யராவார். प्रतिबुद्धवर्जं முமுக்ஷுவான விவேகிகள் நீங்கலாக மற்றவருக்கே தேவதாந்தரம் ஸேவிக் கத் தக்கதாகும். 'प्रतिबुद्धा न सेवन्ते', 'नान्यं देवं नमस्कुर्यात्'. 'बुद्धरुद्रादिवसतिं...... दूरतः परिवर्जयेत् என்று சாஸ்த்ரமே விலக்குகிறதே. கர்மவிதி வாக்யங்களில் தேவதாந்தரத்தைச் சொல்லும் அக்ந்யாதி சப்தங்கள் அந்தர்யாமி பர்யந்த மான அர்த்தத்தைச் சொல்லுமென்பது சாஸ்த்ர ஸித்தாந்தம். இந்த சரீராத்ம பாவத்தை யறிந்தவன்தானே प्रतिबुद्धன். प्रतिबुद्धன்தானே உள்ளபடி இக் கர்மாவை யநுஷ்டிக்கமுடியும். இதரதேவதைகளுக்கு க்ஷுத்ர பலனைக்கொடு க்கு மதிகாரம் இருப்பதால்தானே அவர்களைச் சொல்லும் பதங்களை ப்ரயோ கித்து கர்மாநுஷ்டாநம் செய்வது. ஆகையால் பலாபேக்ஷையுள்ள ப்ரதி புத்தனும் தேவதாந்தரங்களை ஆராதிப்பது சாஸ்த்ரஸம்மதந்தானென்ன இவ் விஷயத்தை மேலே வெகு விரிவாக அருளிச்செய்கிறார் இந்தேவதே த்யாதி யால். மீமாம்ஸகர்கள் சாஸ்திரஸித்தமான தேவதைகளையே இல்லையென்று ஸ்தாபித்துக்கொண்டே கர்மாநுஷ்டானத்தால் பலன் உண்டென்கிறார்

சார்வாகனுயிருப்பான் ஒரு ஸேவகன் ராஜாவினுடம்பிலே चन्दनादिகளைப் प्रयोगिக்க ராஜசரீரத்தில் आत्मा प्रीतனுமா போலே वस्तुवृत्तயில் सर्वेश्वरனே आरा-ध्यனுனலும். "येऽप्यन्यदेवताभक्ता यजन्ते श्रद्धयाऽन्विताः । तेऽपि मामेव कौन्तेय यजन्त्य-विधिपूर्वकम् ॥" என்கிறபடியே शास्त्रार्थविवेक முண்டானபடியாலே அவற்றிற் சொன்ன फलம் विकलமாம் भगवच्छरीरங்களென்றறிந்த क्षुद्रफलங்களைக் கடுகப் பெறவேணுமென்கிற रागविशेषத்தாலே அவர்களை உபாஸிப்பார்க்கு அவ்வோ

---

கள். அப்படியிருக்க தேவதைகள் உண்டென்று இசைந்தாலும் அவர்களுடைய உருவம், பெருமை அவர்களுக்கு அந்தர்யாமி பகவான் என்றெல்லாம் அறியாமற்போனுலும் பலனுண்டு என்பதில் என்ன ஸந்தேஹம்? அறிவுக்குத் தக்கவாறு பலனில் தாரதம்யம் இசையலாம். மீமாம்ஸாபாதுகையிலும் (16) अन्तर्यन्तारं एकं निखिलदिविषदां प्रागबुद्ध्वैव केचित् ज्ञा[..]येयं च बुद्ध्वा कतिचन यदित्वा सन्दिहाना यजन्ते । तेषामस्ति अन्तवत्तु स्मृतमिह हि फलम् என்றவாறு அருளினர். ஆகையால் அந்தர்யாமி ஜ்ஞாநமில்லாவிட்டாலும் தேவதார்தரத்தையே உத்தேசித்துச் செய்தாலும் ஈச்வரன் அவர்களுக்கு ஆத்மாவ[ான]படியாலே அந்தக் கர்மாவினுல் ப்ரீதியடைகிருன். இதற்கு த்ருஷ்டாந்தப் [சார்வ]ாகனுய் இத்யாதி. தேஹமே ஆத்மா வேறு இல்லை என்கிற கொள்கையுள்ளவன் சார்வாகன். அக் கொள்கையுள்ள வேலைக்காரன் அரசனுக்கு சந்தனம் பூசி மாலையிட்டால் அதனுல் அரசனுடைய சரீ[ரமே ப்]ரீதியடைவதாக அவன் நினைத்தாலும், உண்மையில் ஜீவாத்மா வேறு இருப்பதால் அது தானே ப்ரீதியடையும். அதுபோல் ஸர்வேச்வரன் இல்லையென்று நினைத்து யாகாதிகள் செய்தாலும். ஈச்வரன் ப்ரீதியடைவது ஸித்தம். ஆனுலும் அவ்வநுஷ்டாநமே போதுமெனலாகாது. 'அவ்வநுஷ்டாநம் விதிபூர்வகமன்று. அதாவது ये—எவர்கள் अन्यदेवताभक्ता अपि—இதர தேவதைகளிடத்திலேயே பக்தியுள்ளவர்களாயிருந்தாலும் வைதிக கர்மா என்கிற ச்ரத்தையோடு அநுஷ்டிக்கிருர்களோ. அர்ஜுனு! அவர்களும் என்னையே ஆராதிக்கிருர்கள் ஆனுல் விதிபூர்வகமாகாதபடி என்றதாம். ஆக சாஸ்த்ரார்த்தத்தில் குறைவு இருப்பதால் பலனும் குறையும். தேவதைகளுக்கும் அந்தர்யாமி பகவான் என்று தெளிந்து அநுஷ்டாநம் செய்யும் போது, அந்தர்யாமியே நமக்குப் பலன் அளிப்பவன்; இதர தேவதைகளை நாம் ஆராதிக்க வேண்டாம் என்கிற எண்ணத்தோடு அந்தக் காம்யகர்மங்களையநுஷ்டிக்கலாமா எனில். திருநாராயணீயத்தின்படி காம்யகர்மங்களுக்குப் பலன் கொடுக்கும் அதிகாரத்தை ஈச்வரன் தேவதைகளுக்கு இட்டிருப்பதால் அதை மீறி அவர்களை உபேக்ஷித்துச் செய்வது தகாது. அவர்கள் பகவானின் சரீரமாகையால் அவர்கள்மூலம் பகவான் த்ருப்தி அடைந்து அவர்களுக்கு அவன் கொடுக்க நமக்கு அவர்கள் கொடுக்கிருர்கள் இவர்கள் மூலம் வருவதால் நமக்கு இது=விரைவிலேயே பெறப்படும் என்று தத்த்வமறிந்து செய்வது உசிதம், அவ்வளவிலே அந்த கர்மாக்களின் பலன்

फलங்கள் பூர்ணங்களாம். இப்படி அறிந்தால் பகவான் தன்னையே "आर्तो जिज्ञासुरर्थार्थी" என்கிறபடியே फलान्तरங்களுக்காகவும் பற்றினால் அந்த फलங்கள் अतिशयितங்களாம்.

अनन्यप्रयोजनராய்ப் பற்றினார்க்கும் "शरीरारोग्यमर्थांश्च भोगांश्चैवाऽऽनुषङ्गिकान् । ददाति ध्यायिनां नित्य(पुंसा)मपवर्गप्रदो हरिः" என்கிறபடியே फलान्तरங்கள் आनुषङ्गिकமாக வரும். இவ்வர்த்தத்தை अनुषक्तसंदर्शयिரான ஸ்ரீகுலசேகரப்பெருமாளும் "நின்னையே தான் வேண்டி நீள்செல்வம் வேண்டாதான் தன்னையே தான்

---

பூர்ணங்களாகும் இது காம்யமான கர்மாநுஷ்டான க்ரமம் ஒருவன் ஏகாந்தியாயிருந்து இதரதேவதைகளைம் பலனை விரும்பாமல் எம்பெருமானையே ஆராதிக்க நினைத்தால் அவன் அத்தகைய காம்யகர்மாவை விட்டு "चतुर्विधा भजन्ते मां जनाः सुकृतिनोऽर्जुन । आर्तो जिज्ञासुः अर्थार्थी ज्ञानी च भरतर्षभ" என்று விதிக்கப்பட்டதில் இழிபவேண்டும். இவ் வசனத்திற்கு முன்னே கீதையில் தேவதாந்தரங்களை ஆராதிக்கவான கர்மாக்களை இழிவாகச் சொல்லி ஸுச்ருதமுள்ளவர்கள் பகவத்பக்தியிலே இழிபவேண்டும் அந்த பக்தியே எல்லா பலனுமளிக்கும் என்றதால் தேவதாந்தர ஸம்பந்தமுள்ள செயலை விட வேண்டியதென்னதாகுமே. 'वैष्णवं वामनं आलभेत" என்றவாறான லோக ஜயத்திற்காக விஷ்ணுவையே உத்தேசித்த கர்மாவை பக்தியைப் போல் செய்வது தகும். आर्त -ஐச்வர்யம் நஷ்டமானபோது மீண்டும் விரும்பி கவலைப் படுகிறவன். अर्थार्थी-ஜந்ம தரித்ரனாய் ஐச்வர்யம் அபேக்ஷிக்கிறவன். जिज्ञासुः-சுத்த ஜீவாத்மாநுபவமாகிற கைவல்யத்தை அபேக்ஷிக்கிறவன். ज्ञानी—பகவானையே ப்ராப்யமாகவும் அறிந்து முக்தியிலிழிபவன். இவர்களெல்லோரும் பகவத் பக்தியினால் விரும்பின பலனைப் பெறுவார்கள். இவ்வளவால் முன் கேட்ட கேள்விக்குப் பரிஹாரமாகிவிட்டது. வேறு பலனை விரும்பாமலே பரமைகாந்தியான ஜ்ஞாநியுமுண்டு என்பது கூடுமோ? நீண்ட காலம் அநுஷ்டித்துப் பெறவேண்டும் பக்தியோகமானது பல லௌகிக ஸாதநங்களின்றிப் பெறவாகாதாகையால் வேறு பலனை யபேக்ஷிப்பது இன்றியமையாததன்றோ என்ன அருளிச்செய்கிறார் சரீரேதி மோக்ஷமொன்றையே குறித்து அதற்கான உபாயமொன்றையே யநுஷ்டிப்பவனுக்கு மற்ற பாரங்களை பகவான் தானே எடுத்துக்கொள்ளுகிறார். அறியாமையாலும் பொறுமையிராமையாலும் இவர்கள் வேறு பலனிற்காகவும் கார்யங்கள் செய்வது. ச்லோகார்த்தமாவது–ध्यायिनां–பக்தியோக நிஷ்டர்களுக்கு अपवर्ग-प्रदः—அதன் பலனான மோக்ஷத்தை யளிக்கும் பகவான் ஆநுஷங்கிகமாக = அவர்கள் கேட்காமலிருக்கும்போதே இப் பலங்களுடைய ஸம்பந்தம் வேண்டியிருப்பதால் சரீரத்திற்கு ஆரோக்யத்தையும் தநதாந்யாதிகளையும் போகங்களையும் எப்போதும் தானே யளிக்கிறான் என்றதாம். இதற்கு குலசேகரப் பெருமாளின் பாசுரத்தைப் ப்ரமாணமாக்குகிறார். நின்னை இத்யாதி. வித்து

வேண்டுஞ் செல்வம்போல்" என்று அருளிச் செய்தார். "अभिलषितदुरापा ये पुरा कामभोगा जलधिमिव जलौघास्ते विशन्ति स्वयं नः" என்று ஈசாண்டானும் தாமருளிச்செய்த ஸ்தோத்ரத்திலே நிர்வசித்தார். இது विद्य विशेषरागांचशेषादिनियतम्.

---

வக்கோட்டம்மானே! நின்னையே = உன்னையே வேண்டி—அபேக்ஷித்து. நீள் செல்வம் வேண்டாதான் தன்னையே—நீண்டதான செல்வத்தை அபேக்ஷிக்காமலிருக்கும் என்னையே. தான் வேண்டும்—தானாகவே அபேக்ஷித்து வரும் செல்வம் போல் என்றது பொருள் இதன்மேல் உள்ள பாசம் "மாயத்தால் மின்னையே சேர்திகிரி விற்றுவக்கோட்டம்மா நின்னையே தான் வேண்டி நிர்பன் அடியேனே" என்றது. மின்னையே சேர் - மின்னலுக்கே ஒத்திருக்கிற திருவாழி ஏந்திய ஸ்வாமியே! உனது ஆச்சர்ய ஸங்கல்பத்தால் செல்வம் என்னையே வேண்டுகிறுப்போலே நான் உன்னையே வேண்டியிருப்பன் என்று பொருள். अभिलषितेति. முன்னே எந்த லௌகிக போகங்கள் அதிகமாக விருப்பப்பட்டும் பெறப்படாமலிருந்தனவோ அவைகள் ஆற்று வெள்ளங்கள் கடலில் வந்து புகுவது போல் தாமாகவே நம்மிடம் புகுகின்றன என்றபடி. இப்படி தானாகவே பல ப்ராப்தியானது எல்லா பக்தர்களுக்கும் ஏன் இல்லை என்ன, உத்தரம் இது இத்யாதி. வித்யாவிசேஷமாவது உபாஸந விசேஷம். உபாஸந விசேஷத்தால் இப் பலனுனால் ஆநுஷங்கிகம் என்னலாகுமோ என்னில், சில உபாஸநங்கள் மோக்ஷத்திற்கு விதிக்கப்பட்டிருந்தாலும் அதற்கு ஆநுஷங்கிகமாகச் சில பலன்களுண்டு என்று சாஸ்த்ரம் சொல்லியிருப்பதால் அந்த உபாஸந விசேஷத்தை இங்கே கொள்வதாம். அதாவது உபகோஸலவித்யை. அதற்கு அர்ச்சிராதிமார்க்கத்தாலே ப்ரஹ்ம ப்ராப்தியே பலனென்று ஓதப்பெற்றது அப்படியிருக்க 'सर्वमायुरेति ज्योक् जीवति नास्य अवरपुरुषाः क्षीयन्ते (பூரண ஆயுளைப்பெறுகிறான் ஆரோக்யத்தோடு ஜீவிக்கிறான். ஸந்ததி க்ஷீணமாகிறதில்லை) என்றும் பலன் சொல்லப்பட்டுள்ளது. இது ஆநுஷங்கிகம். இதற்காக இவ்வுபாஸநம் செய்யப்படவில்லையே. இங்கு வினவலாம்—இவ்வித்யையில் பரமாத்ம வித்யையோடு அக்நிகள் அக்நி வித்யை என்கிற தங்கள் வித்யையை உபதேசித்து அதன் பலனாகவனரோக்ஷேத்ரபலனைச்சொல்லியிருக்கிறது ஆகையால் இப்பலனுக்காக அக்நிவித்யை அநுஷ்டிக்கப்படுகிறபடியால் எங்ஙனே ஆநுஷங்கிகமாகுமெனறவாறு. இதற்கு மறுமாற்றம். "एषा सोम्य ते अस्मद्विद्या च आत्मविद्या च" என்று உபகோஸல வித்யைக்கு அக்நிவித்யையை அங்கமாக ஓதியிருப்பதால் வேறு பலனுக்காகில் அங்கமாகாதாகையால் இதற்குத் தனிப்பலனில்லை. அப்படியிருக்க ஆயுராதி பலன்களைச் சொல்லியிருப்பது உத்தேசிக்கப்பட்ட பலனல்ல; ஆநுஷங்கிக பலனே என்ற கருத்தாம் த்ருஷ்டி விதிக்குச்சொன்ன பலன்கள் ஆநுஷங்கிகமாகாவாகையால் அவற்றை இங்குக்கொள்வது தகாது. உபகோஸல வித்யையிலே மோக்ஷார்த்த உபாஸநத்திலடங்கிய संयद्वामत्व वामनीत्व भामनीत्वादि गुणानुसंधानங்களுக்குச் சொன்ன தனிப்பலன்களை ஆநுஷங்

இப்படி ஸர்வேச்வரனுக்கும் ब्रह्मरुद्रादिகளுக்கும் உண்டான விசேஷங்களை "எம்பெருமானுண்டுமிழ்ந்த எச்சில் தேவரல்லாதார் தாமுளரே" என்றும்,

---

கமென்னலாம். उद्गीथத்தில் செய்யும் ஆதித்யமண்டல புருஷத்ருஷ்ட்யுபாஸநத்தில் அடங்கிய उत् என்கிற பகவந்நாமாநுஸந்தாநத்திற்கு ஸர்வ பாபங்களினின்றும் வெளிப்படுகை என்று சொன்ன பலன் ஆநுஷங்கிகமாகலாம். மேலுலகங்களையும் தேவகாமங்களையும் பெறுகையென்ற ப்ரதாந பலன் அவ்வுபாஸநததிற்கு வேறுயிருக்கின்றதே. முண்டகோபநிஷத்தின் முடிவில் "नास्य अब्रह्मवित् कुले भवति" என்றதும் ஆநுஷங்கிகம். மோக்ஷார்த்தமான அக்நிரஹஸ்யவைச்வாநரவித்யையில் "अत्र पुमृषु जयति सर्वमायुरेति" என்பதும் ஆநுஷங்கிகம் என்றவாறு காண்க. ராகவிசேஷமாவது பக்தி யோக நிஷ்டனுக்கும் பூர்வபாபவசத்தாலே சிலவற்றில் ராகம் உண்டாகும் யோகப்ரஷ்டனுக்கு அவன் ஆசைப்பட்ட பலனையளித்தப் பிறகு விரக்தனுக்கி யோக பூர்த்தி செய்விப்பது போல் பக்தியோக நிஷ்டன் ஆசைப்பட்டதை அந்த ஸமயத்தில் அவனுக்கு அளிக்காமற் போனாலும் எந்த ஸமயத்தில் அளித்தால் அவன் அதனால் கெடமாட்டானோ அந்த ஸமயம் பார்த்து அளிப்பான் ஈச்வரன். அதனால் ஈசாண்டானுடைய பலாநுபவம் இவ்வாறு என்றதாம். ஒருவன் ஆசைப்படாமலிருக்க ஈச்வரன் தன்னுடைய கார்யபூர்த்திக்காக அவனுக்கு க்ஷேத்ரத்திலே நசையுண்டாக்குகிறான் என்பது சேராது. ராக விசேஷாதி என்கிற ஆதிபதத்தால் ஏற்கனவே செய்திருந்த காம்யகர்மாநுஷ்டாநத்தைக் கொள்க. பக்தியோக நிஷ்டரில் சிலர்க்கு அதற்கு வேண்டுமானதற்குமேல் அதிகமாக அளிப்பதற்குக் காரணம் வித்யாவிசேஷாதிகள். சிலருக்கு சரீராரோக்யாதிகளைக் கொடுக்காமல் வருத்துவது அவருடைய பாப பலன். ப்ரதிபந்தக பாபமில்லாத போது போதுமளவுக்கு ஆநுஷங்கிக பலன் உண்டாம்.

இவ்வளவால் தேவதாந்தரங்களெல்லாம் நாராயணனுக்கதீநமாகையாலே ப்ரதிபுத்தர்கள் தேவதாந்தரங்களை ஆச்ரயிப்பது தகாதென்று வசநமிருப்பதால் எம்பெமானிடமே வேறு பலனைக் கேட்டும் பெறலாம். கேளாமற்போனாலும் அவனே அதிகாரியைப் பார்தது அளிப்பதுண்டு என்றெல்லாம் பரதேவதாபாரமார்த்யஜ்ஞாநமுள்ளவனுக்கு வேண்டும் பாரமைகாந்த்ய நிலைக்கு வடமொழிப்ரமாணங்கள் வரையப்பெற்றன. தெளியாத மறைநிலங்களைத் தெளிவிக்கின்ற ஆழ்வார்களுடைய திவ்ய ஸ்ரீ ஸூக்திகள் வேறுவிதமாகச் சொல்லுமாகில் கீழ்க்கூறிய நிஷ்கர்ஷம் நிலைக்காதென்று கருதி இவ்விஷயத்தில் த்ரமிடவேதங்களையும் உதாஹரிக்கிறார். முதலில் எல்லா தேவதைகளும் நாராயணனிடத்தில் உண்டாகி அழிபவர்கள் என்பதை அறிவிக்கிறார் எம்பெருமான் இதி. (பெரிய திருமொழி 11-6.2 நில்லாத பெருவெள்ளம் என்றும் பாட்டில்.) எல்லா உலகும் ப்ரளயஜலத்தில் அகப்பட்டு ப்ரஹ்மாண்டமே அழிந்த காலத்

"நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும் தான் முகமாய்ச் சங்கரனைத்தான் படைத்தான்" என்றும், "மேவித்தொழும் பிரமன் சிவன் இந்திரனாதிக்கெல்லாம் நாவிக்கமல முதற்கிழங்கு" என்றும், "தீர்த்தனுலகளந்த சேவடிமேல் பூந்தாமஞ்சேர்த்தி அவையே சிவன் முடிமேல் தான் கண்டு பார்த்தன் தெளிந்தொழிந்த பைந்துழாயான் பெருமை" என்றும்,

---

தில் யார் இருப்பவர். எம்பெருமான் ஒருவன் தானே. ஆகையால் எம்பெருமான் உண்டு உமிழ்ந்த உலகத்தில் சேர்ந்தவர்களே தேவதைகளெல்லாரும். இப்படி அவனின் எச்சிலான தேவதைகளே தவிர வேறு தேவதை ஏது. வஸ்துக்களை அழித்து உண்டு பண்ணுகிறான் என்கிற பொருளிலே எம்பெருமான் உண்டு திருவயிற்றில் வைத்திருந்து உமிழ்கிறான் என்று சொல்லுவது ப்ரமாண வாக்யங்களின் மரபு. இப்படி எச்சில் என்று சொன்னால் ஹேயத்வம் வ்யக்தமாகுமென்று திருவுள்ளம். இங்குப் பொதுவாக தேவர்கள் என்று சொல்லியிருந்தாலும் ப்ரம்மருத்ரர்கள் என்று கண்டோக்தமா யிராமையால், திருமழிசையாழ்வார் நான்முகன் திருவந்தாதியை உதாஹரிக்கிறார் நான்முகன் இதி. தான் முகமாயென்பதற்கு தான் நடுவே த்வாரமாயிருந்து என்பது பொருள். எம்பெருமான் நான்முகனை நேராகப் படைத்தான், அவன் மூலமாக சங்கரனைப் படைத்தான் என்றபடி. இதரர் மூலமாகப் படைக்கப்படுகிறவையெல்லாத்திலும் எம்பெருமானுக்கு முக்யமான காரணத்வமுண்டு என்பதோடு ப்ரம்ம ருத்ரர்களாலே தொழப்படுகிறவனும் அவன் என்பதற்கான ஸ்ரீஸூக்தி மேவி இத்யாதி—மேவி விசேஷ ஆதரத்துடன் தொழும்— உன்னை ஸேவிக்குமவரான ப்ரம்மாதிகளுக்கெல்லாம் முதல் காரணமான நாபிகமலத்திற்குக் கிழங்கே=மூலமானவனே! (திருவாய்மொழி 10-10-3. ஆவிக்கோர்) எம்பெருமானை மட்டுமாராதித்தாலே ஸர்வதேவதாராதநப் பலமுண்டு என்பதற்கான பாசுரம் தீர்த்தன் இதி. (2-8-6) எல்லோரையும் சுத்தமாக்குகின்ற எம்பெருமானின் செவ்விய திருவடிமேல் பூமாலைகளை அர்ஜுநன் ஸமர்ப்பித்து விட்டு, பிறகு சிவனுடைய ஆலயத்தில் சிவனைக் காணும்போது அவனுடைய சிரஸில் தான் முன்பு எம்பெருமானிடம் ஸமர்ப்பித்த பூமாலைகளையே பார்த்து இவன் எம்பெருமானின் திருவடியை வணங்கி வருகிறவன் நாம் ஸமர்ப்பித்த பல வகைப் பூமாலைகளில் இவனுக்கான மாலைகளை இவன் சிரஸ்ஸில் வைத்து விட்டு எம்பெருமான்தனக்கேயான பை = பசுமையானத் திருத்துழாயையுடையவனாக விளங்குகின்ற எம்பெருமானே ஸர்வ ப்ரபு என்று தெளிந்தான். பார்த்தன் தெளிந்தொழிந்த என்பதற்கு அர்ஜுநனால் மீண்டும் ஐயத்திற்கு இடமிராதபடி நிச்சயிக்கப்பட்ட என்பது பொருள். ஒரு ஸமயம் கண்ணனோடு பேசிக் கொண்டிருந்த அர்ஜுநன், சிவனைப் பூஜிக்க வேண்டிய காலம் வந்துவிட்டது. விரைவில் செல்ல வேண்டுமென்று எழுந்த போது நீ சிவனுக்கு என்ன மாலைகளை சேகரித்து வைத்திருக்கிறாயோ அவற்றை

"வானவர் தம்மையாளுமவனும் நான்முகனும் சடைமுடியண்ணலும்செம்மையாலவன் பாதபங்கயம் சிந்திததேத்தித்திரிவரே'' என்றும், "பேசநின்ற சிவனுக்கும் பிரமன் தனக்கும் பிறர்க்கும் நாயகனவனே'' என்றும், "ஒற்றை விடையனும் நான்முகனுமுன்னையறியாப் பெருமையோனே'' என்றும், "எருத்துக்கொடியுடையானும் பிரமனுமிந்திரனும் மற்றுமொருத்தரு மிப்பிறவி

---

இங்கே திருவடியில் சேர்; அவனை ஆராதித்ததாகும் என்று கண்ணனருளினன். அதில் நம்பிக்கையுடன் அப்படியே அர்ஜுநன் செய்தான். ஆனாலும் சிவனிடம் சென்று பொறுக்க வேண்டிக்கொள்ள வேண்டுமென்று அவன் சென்றபோது அங்கே கண்ட காட்சி இது. ப்ரம்மருத்ராதிகள் மநோவாக்காயங்களால் எங்கும் அவனைத் தொழுதவண்ணமிருப்பர் என்பதற்குப் பாசுரம் வானவர் இதி (3-6-4 வைம்மின்) = வானவர் தம்மை—ஸ்வர்கவாஸிகளான தேவதைகளை ஆளுகின்ற இந்த்ரனும் பிரமனும் சடைமுடி = ஜடாதாரியான ருத்ரனை அண்ணல் உம் = ஸ்வாமியும் செம்மையால் எல்லோரையும் அநுக்ரஹிப்பதாகிற பகவானுடைய ஆர்ஜவகுணத்தால், அல்லது செம்மையால் கபடமின்றி ஒழுங்கான தங்கள் நிலையால் எம்பெருமானுடைய திருவடித்தாமரையை மநஸா த்யாநித்து ஏத்தி—வாயினால் துதித்து எங்கும் பஹிரங்கமாய் ஸஞ்சாரம் செய்து வருவர். செம்மையாகத் தொழுகிறார்கள் என்பதற்கு—உதாஹரணத்தை ஸ்தாபிக்கும் பாசுரம் பேச இத்யாதி. (திருவா.மொ 4-10-4) பேசநின்ற = உலகில் பலபேர், சிவனே பரன், பிரமனே பரன் என்று பேசும்படி த்ரிமூர்த்திகளில் நின்ற—அல்லது நானே பரதைவம், விஷ்ணு கீழ்ப்பட்டவன் என்று தானே பேசிவருகின்ற; சிவனுக்கும் மற்றவருக்கும் நாயகன் எம்பெருமானே என்றபடி. இதனால் ருத்ராதிகள் தாங்கள் உண்மையறிந்தவர்களாய் பிறரை மட்டும் மயக்குகிறார்கள். அதனால் உலகில் மோஹம் வளர்ந்தது என்றதாம். அவர்களுக்கு அஜ்ஞானமும் உண்டென்கிறார் ஒற்றை இதி. விடை—வ்ருஷபம். ஒன்றான—ஒப்பற்ற வ்ருஷபத்தை வாஹநமாக உடையவனும் உன்னை யறியவாகாதபடியிருக்கும் பெருமையுடையவனே! (பெரியா. தி) அரங்கத்தரவணைப் பள்ளியானே! இவர்களுக்கு ஸம்ஸார ரோகம் நீக்கும் மருந்துவிஷயத்திலும் அஜ்ஞாநமென்கிறார்' (பெரியா தி-5-3-6) வ்ருஷபத்தை த்வஜமாக உடையவனும் நான்முகனும் தேவேந்த்ரனும் மற்றவர்களும் இந்த ஸம்ஸார ரோகத்திற்கு மருந்து இன்னதென்று அறிகின்றவர்களுமாகார். அநுஷ்டிக்காமற் போனாலும் அறிவாவது இருக்கலாமே; அதுவுமில்லை என்றபடி. பிறருக்கும் வித்யோபதேசம் செய்யும் இவர்களுக்கு இது தெரியாதென்பது கூடுமோ என்னில், பல வித்யைகளில் ஏதோ ஒன்று இரண்டு அறிந்திருந்தாலும் எல்லா வித்யைகளும் அறிந்தவரல்லர். அறிந்த வித்யையும் ஒரு நாள்கூட தடைபடாதபடி அநுஷ்டிப்பதற்கு வழிபறிந்தவருமாகார். இக்காலத்திய வைத்யர்கள் நாடியைப் பார்த்து வ்யாதியை இன்னதென்றறிய மாட்டாமல்

யென்னும் நோய்க்கு மருந்தறிவாருமில்லை" என்றும் பல முகங்களாலே அருளிச்செய்தார்கள்.

இப் परदेवतापारमार्थ्यம் திருமந்த்ரத்தில் प्रथमाक्षरத்திலும் நாராயண சப்தத்திலும், द्वयத்தில் सविशेषणங்களான நாராயணசப்தங்களிலும், चरमश्लोकத்தில் माम्, अहम् என்கிற சப்தங்களிலும் अनुसन्धेयம்.

இத் தேவதாவிசேஷநிச்சயமுடையவனுக்கல்லது "கண்ணன் கண்ணல்லதில்லையோர் கண்ணே" என்றும், "களைவாய் துன்பம் களையாதொழி

---

இந்திந்த வ்யாதிக்கு இந்திந்த மருந்து என்பதை மட்டும் புஸ்தகத்திலிருந்து அறிந்து மற்ற தேஹ நிலை யறியாமல் தோன்றியபடி எழுதிக்கொடுத்து வ்யாதியை வளர்ப்பர். அவ்வளவு அறிவுகூட இவர்களுக்கில்லையென்கிறார் போலும். பலமுகங்களாலே என்பதற்கு कार्यत्वம் फलपेक्षत्वம் भगवदधीनமான आराध्यत्वம் भगदाराधकत्वம் भगवत्स्वामित्वம் भगवन्महिमाज्ञानம் मोक्षोपायपरिज्ञानமென்ற ப்ரகாரங்களாலே என்றபடி.

ஒவ்வொரு அதிகாரார்த்தமும் மந்த்ரங்களில் அடங்கியிருப்பதைக் காண்பிப்பதும் அதிகாரகார்யமாகையால் இங்கும் அதைக் குறிக்கிறார் இப் பரதேவதேதி இதுவரையில் சொன்னதே பரதேவதா பாரமார்த்யம். அதாவது பரதேவதையின் வாஸ்தவநிலை. இப்படிப்பட்டது பரதேவதை என்ற அதன் உண்மை. தவிர ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் பரமார்த்தம் எது என்று விசாரிக்கத்தொடங்கி புத்ர ராஜ்யாதிகள் போன்றவற்றைக் கழித்து ப்ரம்மமே பரமார்த்தம் என்று பரமார்த்த சப்தத்திற்கு பரமபுருஷார்த்தம் என்று பொருள் கொண்டிருக்கிறார். அப் பொருளையும் கூறலாம் ஸர்வஜக்தகாரணமாய் சிறந்த தேவதையொன்றுண்டு என்று மட்டு மறிந்தால் போதாதோ? இது தான் பரதேவதை யென்று வ்யக்தி நிர்த்தாரணம் எதற்காக? பொதுவாகக் கடவுள் என்று மட்டும் கொண்டால் மதபேதமூலமான கோலாஹலமும் குறையுமே என்பதற்கு மறுமாற்றம் இத்தேவதாவிசேஷேதி ச்ருதியில் ஜகத்காரணம் ப்ரஹ்மமென்று வருணர் உபதேசித்த பிறகும் அது எது என்று ஆராய்ந்து கொள் என்று அவர் உபதேசிக்க அதுபடி ஆராய்ந்தார் ப்ருகு என்பவர். நாராயணாநுவாகத்தில் மோக்ஷத்திற்கான பக்தி மார்க்கத்தில் எதிலும் நாராயணனையே உபாஸிக்க வேண்டுமென்று நிர்ணயம்செய்யப்பட்டது. முதன் முதல் மூர்த்தி த்யாநம் செய்து சுத்தமாய் நிச்சலமாய் மனத்தைப் பெற்ற பிறகே திவ்யாத்மஸ்வரூபத்யானத்தில் இறங்க வேண்டுமென்று ஸ்ரீவிஷ்ணுபுராணம் தெளிவிக்கிறது. கீதையிலும் ஜீவாத்ம த்யாநத்திற்கு முனபே பகவந்மூர்த்தி த்யாநம் வேண்டுமென்றார். புருஷகாரமான் லக்ஷ்மியோடு சேர்ந்திருந்த நிலையையும் முன்பு அறியவேண்டியிருக்கிறது இத்யாதிகாரணங்களால் மூர்த்தி நிர்ணயம் வேண்டியிருப்பதால் न दैवं केशवात् परम् இத்யாதி. ஆகப்பொதுவாக அறிவது போதாதென்று கருத்து.

இதைப் பாசுரங்களைக் கொண்டு விளக்குகிறார் கண்ணன் இதி. (திருவா

வாய் களைகண் மற்றிலேன்" என்றும், "ஆவிக்கோர் பற்றுக்கொம்பு நின்னலா லறிகின்றிலேன் யான்" என்றும், "தருதுயரந்தடாயேல்" என்கிற திரு மொழி முதலானவற்றிலும் சொல்லும் அனந்யசரணத்வாவஸ்தை கிடையாது.

இந்தப் பரதேவதாபாரமார்த்யத்தைத் திருமந்த்ரத்திலே கண்டு தத்பர்யமாக

---

2-2-1) கண்-ரக்ஷகன் கண்ணன்-நாராயணன். நாராயணனென்கிற ரக்ஷகன் தவிர வேறு ரக்ஷகனில்லை என்றதாம். களைவாய் இதி. (திருவா 5-8-18) வளைந்த நுனியுடைய திருவாழியை ஆயுதமாக உடைய குடந்தைக் கிடந்த மாமாயனே! நீ என் துன்பங்களைக் களைந்தாலும் சரி, களையாது விட்டாலும் சரி; களையும் படியான ரக்ஷகன் வேறு எனக்கில்லை. ஆவிக்கு இதி (திருவா 10 10-3 கூவிக்கொள்ளாய்) பிரஹ்மாதிகளுக்குக் காரணமான நாபிகமல முதற்கிழங்கானவனே! என்னுடைய ஆத்மா என்னும் கொடி வளரப் பற்று வதற்கான ஒப்பற்ற கொம்பாக உன்னையல்லது வேறொன்றை நானறி பவனில்லை.

தருதுயரம் இதி திருமொழி என்றதாலே விற்றுவக்கோட்டம்மான் விஷய மான பத்துப்பாசுரங்களையும் இங்கே கொள்ளவேண்டு மென்றதாம். நான் செய்த கர்மம் காரணமாக நீ எனக்குத் தரவேண்டிய துக்கத்தைத் தடுக்காமற்போனாலும் உன் சரணமே எனக்குச் சரண்; ஈன்ற (பெற்ற) தாய் அழுங்குழவியைத்தகாத கோபத்தினால் அப்பால் தள்ளினாலும அவள் காலைப்பிடித்தே குழந்தை அழா நிற்கும்; கண்டார் இகழும்படியான பல செயல்கள் காதலன் செய்திடினும், கொண்டானையல்லாது அறியாள் குலமகளும்; குடிமக்கள், காப்பதற்கே முடி சூடிய அரசனின் செங்கோல் நோக்கியே சிறந்து வாழ்வர்; மருத்துவன் கட்டி முதலானவற்றை வாளால் அறுத்துச் சுடினும் நோயாளன் அவனிடமே மாளாத காதல் உடையனு வான்; கப்பலின் மேல் தங்கிய காக்கை நடுக்கடலில் அதைவிட்டு எங்குப் போனாலும் அதன் மேல் மீண்டு ஏறியே பிழைக்கும்; சூர்யன் செந்தழலே என்றபடி காய்ந்தாலும் செங்கமலம் அவனாலேயே அலர்வதாம்; மேகமே வராத காலத்திலும் பயிர்கள் கறுத்தெழும் மாமுகிலையே காண விருக்கும்; நீர் சேர்ந்து இலங்கும் ஆறுகளெல்லாம் விரைந்துக் கடலிலேயே புகும்; வேண்டாத செல்வத்தை நீ யளித்தாலும் அது என்னை விடாமலிருப்பது போல் நானும் உன்னை விடமாட்டேன் என்று பல உதாஹரணங்களைக் கூறித் தமமுடைய நெறியை ஆழ்வார் விண்ணப்பித்தார். ஆக தத்த்வ ஜ்ஞானம் வந்த பிறகு அவனை உபாயமென்று அனந்யோபாயத்வஜ்ஞானம் நிலைப் பதற்குப் பரதேவதை இன்னதென்ற நிஷ்கர்ஷம் வேண்டும்.

இந்தப் பாரமார்த்ய ஜ்ஞானத்திற்கு தேவதாந்தரங்களையும் தேவதாந்தர பக்தர்களையும் அண்டாமலிருப்பதும் பலன் என்பதைத் திருமங்கையாழ்வா ரின் பாசுரத்தாலே விளக்குகிறார் அவர் திருவஷ்டாக்ஷரத்திற்கு இதுவும் பொருள் என்று அறிவித்திருப்பதையும் கவனிக்க வெண்டும். முதல் ததீய

देवतान्तरत्यागமும் तदीयपर्यन्तமாக भगवच्छेषत्वமும் प्रतिष्ठितமான படியை "மற்று மோர் தெய்வ முளதென் றிருப்பாரோடுற்றிலேன் உற்றதும் உன்னடியார்க்கு அடிமை" என்கிற பாட்டிலே ஸர்வேச்வரன்பக்கலிலே सर्वार्थग्रहणம் பண்ணின ஆழ்வாரருளிச் செய்தார். இவர் "பாருருவி(ல்) நீரெரிகால்" என்கிற பாட்டிலே परिशेषक्रमத்தாலே विवादविषयமான மூவரை நிறுத்தி, அவர்கள் மூவரிலும் प्रमाणानुसन्धानத்தாலே இருவரைக் கழித்துப் परिशेषित்த परंज्योतिस्ஸான ஒருவனை "முகிலுருவ மெம் அடிகளுருவம்" என்று நிஷ்கர்ஷித்தார்.

---

பதத்திற்கு தேவதாந்தர பக்தர் பொருள். இரண்டாம் तदीय பதத்திற்கு பாகவதர்கள் பொருள். மற்றும் இதி. (பெரிய திரு 8-10-3) இப்பாசுரத்தின் மேல் ஈரடிகள் "மற்றெல்லாம் பேசிலும் நின்திருவெட்டெழுத்தும் கற்று நான் கண்ணபுரத்து உறையம்மானே என்றும். திருக்கண்ணபுரத்தெம்பெருமானே! உன் விஷயமான திருவஷ்டாக்ஷரத்தை உன்னிடமே கற்று அதினின்று பல பொருள்களைப் பேசினும் ஸாரமாக நான் உற்றது என்னவெனில்—தேவதாந்தர பக்தர்களோடு சேர்ந்திராதவனுகையும் உனது அடியார்களுக்கு அடிமையாயிருப்பதும் ஸர்வார்த்தக்ரஹணம் பண்ணின, பாகவத ஆராதநத்திற்காகக் கொள்ளை கொண்டும் பணம் பறிக்கும் இவ்வாழ்வார் எம்பெருமான் திருமணக்கோலத்துடன் எழுந்தருளும்போது அவனிடம் எல்லாம கொள்ளை யடித்து முடிவில் மோதிரத்தைக் கழற்ற மாட்டாமல் பற்களால் பற்றிக் கழற்ற முயன்ற போது ஸர்வரஸமான திருமேனியின் சுவை சுவைத்து ஈடுபட்ட தருணத்தில் ஸர்வேச்வரன் உவந்து இவர் விருப்பிய மந்த்ரம் இது என்று திருவஷ்டாக்ஷரத்தை உபதேசித்து அதன் அர்த்தத்தையும் அருளினன் அதனுல் லௌகிக அர்த்தமும் வைதிக மந்த்ரார்த்தமும் ஆகிய ஸர்வார்த்தமும் க்ரஹணம் பண்ணினவர் ஆனுர்.

தேவதாந்தரஸம்பந்தத்தை ததீயபர்யந்தம் விடவேண்டுமென்பது திருமந்த்ரார்த்தம் என்று அருளிச்செய்ததைக் கொண்டு ப்ரஹ்ம ருத்ரர்கள் தேவதாந்தரங்களென்று திருமங்கையாழ்வார் கொண்டிருக்கிருர் என்னலாகுமோ, மும்மூர்த்தியும் ஒரே தேவதை. இந்த்ராதிகளே தேவதாந்தரங்களென்று அவர் இசைந்திருக்கக் கூடாதோ என்ன, சாஸ்த்ரார்த்தங்களை வெளியிடும் திருநெடுந்தாண்டகப்பாசுரத்தை எடுத்து அவருடைய நிஷ்கர்ஷத்தை வெளியிடுகிருர் பார் இதி. இங்கு உருவி என்றும் உருவில் என்றும் இரண்டு பாடங்கள் உண்டு.

பாருருவி(ல்) நீரெரிகால் விசும்புமாகிப் பல்வேறு சமயமுமாய்ப் பரந்துநின்ற
ஏருருவில் மூவருமே யென்னநின்ற இமையவர்தந்திருவுருவேறெண்ணும்போது
ஒருருவம் பொன்னுருவமொன்றுசெந்தீ ஒன்று மாகடலுருவமொத்துநின்ற
மூவுருவும் கண்டபோதொன்றும் சோதி முகிலுருவமெம்மடிகளுருவந்தானே.

ஏர் உருவில்-அழகாயிருக்கும் உலகில் மூவரும் ஏ-மூன்று பேரும் சிறந்தவரே என்ன—என்னும்படியாக, நின்ற—ப்ரமாண தர்க்கங்கள் குறையற்ற வண்ணம் நிலைத்த, இமையவர் தம்-ப்ரம்ம விஷ்ணு ருத்ரர்களுடைய, திருஉருமேம்பட்ட ஸ்வபாவங்களை வேறு-வெவ்வேறாகப் பிரித்து (அவாராய்ச்சியின் முடிவுக்காக) ஒத்து நின்ற—அவர்களின் தொழிலுக்கு ஒத்து நிலைத்துள்ளனவான பொன் உருவம் ஒன்று—பிரமனின் பொன் போன்ற உருவொன்று, செம் தீ ஒன்று—சிவந்த நெருப்புப் போன்ற சிவனுருவம் மற்றொன்று, மா கடல் உருவம் ஒன்று—பரந்த ஆழ்ந்த கடல் போன்ற விஷ்ணுவுருவம் மற்றொன்று என்னவான மூ உருவு உம்—மூன்று மூர்த்திகளையும் கண்ட போது—அவரவருக்கான சாஸ்த்ரக்கண்ணால் பார்த்த பிறகு-, உருவு இல்-உலகஸ்ருஷ்டிக்கான ஸ்வபாவங்களையுடைய பார் நீர் எரி கால் விசும்பு உம் ஆகி—பூமி ஜலம் தேஜஸ்ஸு வாயு வானமென்பனவும் அவற்றிற்கு முன்னை வஸ்துக்களுமாய், பல்வேறு-ஒன்றோடொன்று சேராதவாறு பலவான சமயமும் ஆய்-வ்யஷ்டி பதார்த்தங்களிலுள்ள வ்யவஸ்த்தைகளுமாய் பரந்து நின்ற-சேதநங்களிலும் (பரமபதத்திலும் கூட) வியாபித்திருக்கும் சோதி—கீழ்க்கூறிய சோதியான, எம் அடிகள்-எமது ஸ்வாமியின் உருவம்—திருமேனியானது, முகில் உருவம் சோதி—மேகம் போன்ற அப்ராக்ருதமேனி, ஒன்று தான் ஆம்—ஒன்றேயாகும்.

இது நமது ப்ரபந்த ரக்ஷை உரைப்படி பதவுரை. முழுக்கருத்துரையையும் யோஜநாந்தரத்தையும் அங்கே காணலாம். பரிசேஷ க்ரமத்தாலே, இம்மூவரே ஸர்வஜகத்துக்கும் ஸம்பந்தப்பட்ட ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரத்தைச் செய்கிறவராகையால் இந்த்ராதிகள் அப்படியல்லராகையால் கடைசியாக இம்மூவரிலே யார் பரதேவதை என்றே விவாதம் நின்றது என்றபடி. ப்ரமாணாநுஸந்தாநத்தாலே—பிரமனுக்கு பொன்னுருவம், சிவனுக்கு செந்தீயுருவம் விஷ்ணுவுக்கு பெருங்கடல் உருவம் என்றதையும் அவரவர்ஸ்வபாவத்தையும் கூறும ப்ரமாணத்தை ஆராய்ந்து என்றபடி. இருவரைக் கழித்து இத்யாதி, பெரும் கடல் உருவமாகையால் எவ்வளவு பேர் இழிந்தாலும் இடம் உள்ளது. ஸ்ருஷ்டி ஸ்த்திதி ஸம்ஹாரங்களில் நமக்கு வேண்டுவது ஸ்த்திதி (ரக்ஷணம்). இனி பிறவியை விரும்பவில்லை; பிறந்தது அழிந்தே தீரும் ரக்ஷணத்தில் மோக்ஷமளிப்பதும் சேர்ந்தது. "न हि पालनसामर्थ्यं ऋते सर्वेश्वरं हरिम्" என்றபடி விஷ்ணுவையே நாம ஆச்ரயிக்கவேண்டும். மாகடலினின்று முகில்தோன்றி எங்கும் பரவுகின்றாப்போல் பரவாஸுதேவமூர்த்தியினின்று இவ்வானத்திற்கு வந்துள்ள முகில்ரூடமான விஷ்ணுவே எம்மடிகள் ஆவர். சோதி-ஜ்யோதி என்ற பதத்தில் பரவாஸுதேவ மூர்த்தியும் தோன்றும். இவ்வாழ்வார் மூர்த்திகளை எடுத்து விசாரித்ததால் ஆத்மஸ்வரூபஜ்ஞாநம் மட்டும் போதாது. शुभाश्रयज्ञानம் வேண்டுமென்று குறித்ததாம். இதையும் கொண்டு தான் போலும் திருமங்கையாழ்வார் பரமாத்ம விஷயத்திலே தேஹாத்மவாதி யானார் என்கிறது.

இந்த रूपविशेषத்தையுடைய பரமபுருஷனே सर्ववेदप्रतिपाद्यமான परतत्त्वமென்னுமிடத்தை सर्ववेदसारभूतप्रणवप्रतिपाद्यதையாலே "மூலமாகிய ஒற்றையெழுத்தை மூன்று மாத்திரையுள்ளெழ வாங்கி வேலை வண்ணனை மேவுதிராகில்" என்று பெரியாழ்வார் அருளிச்செய்தார்.

तैत्तिरीयத்தில் श्रियःपतित्वचिह्नத்தாலே महापुरुषனுக்கு व्यावृत्ति ஓதினபடியை நினைத்து "திருக் கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்று உபக்ரமி

---

உருவுக்குச்சொன்ன தாரதம்யம் போல மூன்று ஆத்மாக்களுக்கும் உள்ள தாரதமயத்தையும் இங்குக் கூட்டிக்கொள்வது பரந்துநின்ற என்றது அதே.

ரூபத்தோடு நிற்காமல் ரூபத்துடன் கூடிய பரமாத்மஸ்வரூபமந்த்ராதிகளை விளக்கியருளின பொரியாழ்வார்பாசுரத்தை மேலே எடுக்கிறார். அங்கே ப்ரணவத்துக்கு அவனைப் பொருளாகச் சொன்னது ப்ரணவம் ஸர்வவேத ஸாரமாகையாலே ஸர்வவேதத்திற்கு விழுப்பொருள் என்று சொன்ன படியாம். அதற்காகவே மூலமாகிய என்றார் ப்ரணவத்தை மூலமந்த்ரம் என்று சொல்லுவது மரபு இப்படி மூலமாகிய ஓர் எழுத்தான ஓங்காரத்தை உள் = ஹ்ருதயத்திற்குள்ளே மூன்று மாத்ரை எழும்படி வாங்கி = உச்சரித்து வேலைவண்ணனை—கடல் வண்ணனை திருமாலை, மேவுதிர் ஆகில்—த்யாநம் செய்வீர்களாகில்' என்றதாம். 'விண்ணகத்தில் மேவதுமாமே' என்று முடிவு; பரமபதத்திற்குச் செல்லுவதாகும் என்று அதன் பொருள். ஒற்றை எழுத்து என்றதாலே அகாரம் உகாரம் மகாரம் என்று பிரிக்காமலே முழுச்சொல்லாகவும் பகவானைக் கூறும் என்றதாம், இங்கே यः पुनरेतं त्रिमात्रेण ओमित्यनेन परमपुरुषमभिध्यायीत स तेजसि सूर्ये संपन्नः.........पाप्मना विनिर्मुक्तः...स उन्नीयते ब्रह्मलोकम् என்கிற प्रश्नोपनिषद्वाक्यं கருதப்பெறும். அங்கே மூன்று மாத்திரைகளில்லாமல் ஒரு மாத்திரையாக உச்சரித்தால் இம்மைப் பலனும் இருமாத்திரையாகில் ஸ்வர்க்க பலனும் ஓதபெற்றுள்ளன.

இது வரையில் நாராயணன் பரதேவதை என்று நிஷ்கர்ஷித்தாயிற்று. இனி பெரிய பிராட்டியுடன் சேர்ந்து பரதேவதையாய் உபாயமாய் உபேயமாகிறான் என்றதைச் சுருக்கமாக அருளுகிறார் தைத்தரீயத்தில் இத்யாதியால். உத்தர நாராயணத்தில் "वेदाहमेतं पुरुषं महान्तम्" என்று புருஷஸூக்தத்தில் சொன்ன புருஷனை எடுத்து ह्रीश्च ते लक्ष्मीश्च पत्न्यौ என்று லக்ஷ்மீபதித்வத்தைக் கொண்டு தேவதாந்தரத்தைக்காட்டிலும் ஜகத்காரணமான வஸ்து வேறு என்று அறிவிக்கப்பட்டுள்ளது. அதை நினைத்து பேயாழ்வார் மூன்றும் திருவந்தாதியில் தொடக்கத்திலும் முடிவிலும் பிராட்டியைக் கொண்டு பெருமாளைச் சிறப்பித்தார். திரு = பெரிய பிராட்டியை, கண்டேன்—தர்சநம் செய்தேன். அவளுக்கு வாஸஸ்தாநமான பொன் மேனி—ஹிரண்மயமான எம்பெருமான் திருமேனியையும் கண்டேன். எம்பெருமான் திருமேனி முகில் வண்ணமாகவிருந்தாலும் பொன்மயமுமாகும் சிறந்த பொன்னுக்கு நீல ஒளியும் உண்டென்பர். ஆனாலும்........."हिरण्यश्मश्रुः हिरण्यकेशः"

த்து. "சார்வு நமக்கு" என்கிற பாட்டிலே, '**प्रतिबुद्ध**ரான நமக்குப் பெரிய பிராட்டியாருடனே இருந்து என்றும் ஒக்கப் பரிமாறுகிற இவனையொழிய **प्राप्यान्तर**மும் **शरण्यान्तर**முமில்லை; இத் தம்பதிகளே **प्राप्य**ரும் **शरण्य**ரும் 'என்று **निगमि**க்கப்பட்டது. இவ்வர்த்தத்தை "**देवतापारमार्थ्यं च यथावद्वेत्स्यते भवान्**",

---

என்றபடி கேசம்முதலானவையும் பொன்நிறமாகுமோ வென்னில்— திருக்கண்டேன் என்றதாலே அதற்கும் ஸமாதான மாயிற்று. எம்பெருமான் ஒளிக்கு மேம்பட்டதான பிராட்டியின் பொன்னொளியால் அவனொளி அடக்கப்பட்டதால் மின்னலின் மத்யத்திலிருக்கும் முகிலுக்குப்போல நிற மாற்றமாகையால் கேசாதிகளுக்கும் அது கூடும். சார்வு இதி. (190–) "சார்வு நமக்கென்றும் சக்கரத்தான் தண் துழாய் தார்வாழ் வரைமார்பன் தான் முயங்கும்—காரார்ந்த வானமரு மின்இமைக்கும் வண்தாமரை நெடுங்கண் தேன்அமரும் பூமேல் திரு". சக்கரம் ஏந்தினவனும் குளிர்ந்த திருத்துழாய்மாலை வாழஇடமான மலைபோன்ற திருமார்பையுடையவனே மோஹிக்கும்படி யுள்ளவளாய், கருமைநிறம் நிறைந்த மேகத்திலமர்ந்த மின்னலையும் அடக்குகின்றவளும். அழகிய தாமரைப்பூப் போன்ற நீண்டகன்ற திருக்கண்களையும் உடையளும் தேன்நிறைந்த புஷ்பத்தில் வஸிப்பவளுமான ஸ்ரீதேவியே நமக்கு என்றும்–எப்போதும் சார்வு—ஆச்ரயிக்குமிடமானவள் உபாயமும் உபேயமுமாவாள் என்ற பாசுரங்களில் பிராட்டியையும் பெருமானையும் ப்ராப்ய-ப்ராபகமாக அருளினர். பாட்டிலே நிகமிக்கப்பட்ட தென்று அந்வயம். இங்கு என்றும் என்ற சொல்லாலே ஆபத்து உள்ள போதோடு இல்லாத போதோடு வாசிபற அபாச்ரயமாகிருள்—உபாயமாகிருள். என்றதாயிற்று. இவ்வாறே பெரியவாச்சான்பிள்ளையுரையும். **ஒக்கப் பரிமாறுகிற** = சமமாக அநுக்ரஹம் செய்கிற; இவளோடு சேர்ந்து எம்பெருமானே உபாயமென்ருல் பிராட்டிக்கு உபாயத்வத்திலே ஐய்யப்படுவர்கள் என்று கருதி எம்பெருமானுக்குப் ப்ரியையான பிராட்டி உபாயமென்றருளினர். அதனுல் இவளுக்கு உபாயத்வாம்சத்தில் குறைவில்லை என்பது ஸ்பஷ்டமாவதைக் குறிப்பதற்காக ஒக்கப்பரிமாறுகிற என்றது. "**ह्रीश्च ते लक्ष्मीश्च पत्न्यौ**" என்று பூதேவியைப்போலே ஸ்ரீதேவியைச் சொல்லியிருக்க அதனுல் உபாயத்வம் ஸித்திக்குமோ? **तमेवैकं जानथ आत्मानम्, हरिरेकस्सदा ध्येयः. मामेकं शरणं व्रज** என்கிற ச்ருதி ஸ்ம்ருதிகளால் ஒருவனே உபாயம் என்பது ஸ்பஷ்டமாயிருக்க, '**தாமரையாள்** கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு' என்று மற்ற ஆழ்வாரெல்லாரும் சொல்லியிருக்க, அதற்கு முரண்படும்படிக் கீழ்ச் சொன்ன பாசுரத்திற்குப்பொருள்பொருந்துமோஎன்ன.புராணரத்நப்ரவர்த்தகரான பராசர மஹர்ஷியை யநுஸரித்து எதற்கும் பொருள் கூறவேண்டுமென்பதே ஸாம்ப்ரதாயிகமென்று அருளிச் செய்கிருர் இவ்வர்த்தத்தை இத்யாதியால். பெரிய பிராட்டியாருக்கு உபாயத்வ உபேயத்வ உபயுக்தமான நாராயண ஸாம்யத்தை என்றபடி மற்றவரைவிட பராசரருக்கு என்ன

"पुलस्त्येन यदुक्तं ते सर्वमेतद्भविष्यति" என்று पुलस्त्यवसिष्ठवरप्रसादத்தாலே परदेवता पारमार्थ्य ज्ञानமுடையனாய் பெரியமுதலியார் तस्मै नमो मुनिवराय पराशराय என்று आदरிக்கும்படியான श्रीपराशरब्रह्मर्षि பரக்கப்பேசி "देवतिर्यङ्मनुष्येषु पुन्नामा भगवान् हरिः । स्त्रीनाम्नी लक्ष्मीर्मैत्रेय नानयोर्विद्यते परम् ॥" என்று பரமரஹஸ்ய யோக்ய

---

விசேஷமென்ன அவருக்கு ஏற்றத்தைச் சொல்ல தேவதேத்யாதி. பராசர மஹர்ஷி. தம் தகப்பனுரான சக்தியை விச்வாமித்ரன் அனுப்பிய ராக்ஷஸன் கொலே செய்தானென்று உலகமே அராக்ஷஸ மாம்படி யாகம் செய்யும்போது, அரக்கர்கள் ஆயிரக்கணக்கில் விழுந்தழிவதைக்கண்டு வஸிஷ்டமஹர்ஷிவந்து உபதேசம் செய்யக் கேட்டு யாகம் செய்வதை அவர் நிறுத்தியபோது ராக்ஷஸ குலகூடஸ்த்தரான புலஸ்த்யர் வந்து வஸிஷ்டரால் ஸத்கரிக்கப்பட்டு பராசரரின் குணவிசேஷத்தைக் கண்டு மெச்சி, இவ்வளவு சாந்தனுகவிருக்கக்கூடிய நீ சாந்தி நிதியாய் சாந்த்யாதி மூலமாய் அறிய வேண்டிய தேவதையினுடைய ஸர்வோத்க்ருஷ்டமான நிலையை உள்ளபடி அறியப்போகிருயென்று அநுக்ரஹித்தார். பேரனுக்கு அவர் தந்த பேர் ஆசீர்வாதத்தை ஸ்த்திரப்படுத்தின்ருராய் வஸிஷ்ட மஹிர்ஷியானவர், புலஸ்த்யமஹர்ஷியாலே என்ன பணிக்கப்பெற்றதோ அது அப்படியே ஆகப்போகிறதென்று அருளினர். இங்கே विद्धि, भवतु என்று ப்ரயோகிக்காமல் वेत्स्यते भविष्यति என்று ப்ரயோகித்ததால் பராசரமஹர்ஷிக்கு ஏற்கனவே இந்த பாரமார்த்யஜ்ஞானம் வரபாக்யமிருப்பது கண்டு அருளினதாகத் தெரிகிறது. ஸ்ரீபாஷ்யத்தில் वरप्रदान என்றுள்ளது. இங்கு வர ப்ரஸாதத்தாலே என்ற சொல். பராசரர் அவர்களை வேண்டாமற் போனலும் இங்கு வரசப்தப்ரயோகம் வேண்டிப் பெறவேண்டிய விஷயம் இதென்பதைக் குறிக்கும். அவர்களாலேயே இவருக்காக வரிக்கப்பட்டது என்னலுமாம். मत्प्रसादात् असन्दिग्धा என்று ப்ரஸாதசப்தம் புராணத்திலுள்ளது. यथावत् என்கிற பதத்தினலே எம்பெருமானுக்கு ஈடாகப் பிராட்டியின் மேன்மையைப் பரக்கப் பேசியபடியால் இவருடைய அறிவே நல்லறிவென்றதாகும். பெரிய முதலியார் மஹாஜ்ஞாநியான ஆளவந்தார் तस्मै नमः என்கிற ச்லோகார்த்தத்தை உபோத்காதாதிகாரத்திலே கண்டு ஆதரிக்கும் படியான என்பதும் கீழே உடையனுய் என்பதும் பராசர விசேஷணம். ஆழ்வார்களைப்போலே பிராட்டியின் பெருமையை பூர்ணமாக வெளிப்படுத்தினவர் பராசர மஹரிஷி என்று அவரிடத்தில் விசேஷ ஆதரம் ஆளவந்தாருக்கு. ப்ரஹ்மர்ஷி என்பதற்கு ப்ராஹ்மணரிஷி என்று பொருளல்ல. ப்ரஹ்ம யாதாத்ம்ய ஸாக்ஷாத்கார முடைய ரிஷி என்பதாகும். பரக்கப்பேசி—விரிவாகக் கூறி. "विष्णोः श्रीरनपायिनी" என்று ஸர்வாவஸ்தையிலும் ஸஹதர்மசாரிணியானவளுக்கு यथा सर्वगतो विष्णुः तथैवेयम् என்று ஸர்வாகாரஸாம்யத்தைச்சொல்லி अर्थो विष्णुरियं वाणी என்று தொடங்கி பல தத்வங்களைக் கூறி அவைற்றில் ஸ்த்ரீவிஷயத்தில் விசேஷாபிமாநியானவள் பிராட்டி, புருஷ விஷயத்தில் பகவான் என்று நிகமநம் செய்தார். देवेति, पुन्नामा

னை ஸசிவ்யனுக்கு உபதேசித்தான்.

இத்தை மயர்வற மதிநலமருளப் பெற்று "आद्यस्य नः कुलपतेः" என்கிற

---

புல்லிங்க சப்தவாச்யத்திற்கு அபிமாநியானவன், स्वामी பகவான்; ஸத்ரீ லிங்கமான சொல்லுக்குப் பொருளாயிருக்குமவற்றிற்கெல்லாம் அபிமாநி யானவள் ஸர்வேச்வரி லக்ஷ்மீ அப்போது லக்ஷ்மிக்குப் போலே பூமிப்பிராட்டிக்கும் இந்நிலை கூடுமோ என்ன அதை மறுக்கிறார் नानयोर्विद्यते परम् இதி. இவ்விருவரைக்காட்டிலும் வேறு இவ்வாறில்லை என்றபடி. अनयोः என்பதை பஞ்சமீ விபக்தியாக மாற்றிக்கொள்க. அல்லது अनयोः இவ்விருவருக்குள் न परम्— ஒன்று உயர்ந்ததல்ல. சேதநாசேதநங்களைப் பற்றிய ஆகாரங்களில் இருவருக்கும் ஸாம்யமே யல்லது ஏற்றத்தாழ்வில்லை என்றபடி. देवतिर्यङ्मनुष्येषु என்றது ஸ்தாவரத்திற்கும் உபலக்ஷணம். ப்ராணிகளிடத்தில் ஸ்த்ரீத்வபும் ஸ்தவங்கள் சொல்லக் கூடுமாகிலும், शाटी पटः वस्त्रं என்று பலவிதமாக வ்யவஹரிக்கப்படும் வஸ்துக்களில் யாருக்கு அபிமாநம் என்னில், இவ்விருவரும் எல்லா வஸ்துகளுக்கும் ஸமமாய் ஸ்வாமியாயிருந்தும் பெண்களுக்குப் பெண்மைக்குத் தக்க குணவிசேஷங்களும் புருஷர்களுக்கு அவர் நிலைக்குத் தக்கவையும் தங்களபிமாநத்தால் உண்டாக்கப்பட வேண்டுமென்று அவர்கள் சில பிரித்துக்கொண்டார்கள். அததற்குக் காரணம் "युवत्वादौ तुल्ये என்று பட்டர் அருளிச்செய்தபடி புருஷாஸாதாரணமான ஸ்வாதந்த்ர்யாதிகளை பகவானுக்கும் ஸ்த்ரீக்குச் சிறப்பான பாரதந்த்ர்யாதிகளை பிராட்டிக்குமாக அவர்கள் தாங்களே பிரித்துக்கொண்டிருப்பது தான். பரமரஹஸ்ய யோக்யனை என்றதால் இதுவிஷயத்தில் பொதுவாக जिज्ञासै=தெளிய வேண்டுமென்ற விருப்பமே சிஷ்யர்களுக்குக்குண்டாவதில்லை இவரே இதை கவனித்து அறிய விரும்பிக் கேட்டார். ஆகையால் இவர் ஆஸ்த்தையுள்ளவர்; யோக்யர். ஆளவந்தார் பராசரரைப் போலே தெளிவுற்ற பராங்குசரை "माता पिता" என்கிற அடுத்த ச்லோகத்திலே ப்ரஸ்தாவித்தார். ஆசார்யராக இருக்கக்கூடிய இவரைச் சொன்னது இவருக்கு அம்சங்களான மற்ற ஆழ்வார்களுக்கும் உபலக்ஷணமென்னலாம். மயர்வறமதிநலம் அருளப் பெற்று என்பதற்கு அருளிச்செய்தார் என்றவிடத்தில் அந்வயம். மயர்வு—அஜ்ஞாநம் அற—ஒழியும்படி; மதி—ஜ்ஞாநத்தையும். நலம்—பக்தியையும் அருள—எம்பெருமான் அநுக்ரஹித்ததால் பெற்று—அவற்றை யடைந்து; வேதாந்தங்களிலும் புராணங்களிலும் வெகுவாக எம்பெருமானையே புகழ்வதால் பிராட்டியினுடைய மஹத்வத்தை பராசருடைய வசநங்களிலினின்றும் "लक्ष्म्या सह हृषीकेशो देव्या कारुण्यरूपया । रक्षकस्सर्वसिद्धान्ते वेदान्तेऽपि च गीयते" இத்யாதி பஞ்சராத்ர வசநங்களினின்றும் மட்டுமே அறிவதாகும். ஆகவே இருவருடைய அநுக்ரஹத்தால் மதிநலம் பெற்றிருப்பதால் பிராட்டி விஷயத்தில் அஜ்ஞாநமும் பக்திக் குறைவும் இல்லாதவராகி வேதவேதாந்த புராணபஞ்சராத்ராதிகளைப் பார்க்கும் ஆழ்வாருக்கு எல்லாம் இருவருக்கும்

படியே प्रपन्नसन्तानकूटस्थரான நம்மாழ்வாரும் "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக் கண்ட சதிர் கண்டு" என்று அருளிச்செய்தார். இவ் விஷயத்தில் वक्तव्यமெல்லாம் चतुःश्लोकीव्याख्यानத்திலே परपक्षप्रतिक्षेपपूर्वकமாகப் பரக்கச் சொன்னோம். அங்கே கண்டு கொள்வது.

வாதியர்மன்னுந்தருக்கச்செருக்கின் மறைகுலையச்
சாதுசனங்களடங்க நடுங்கத் தனித்தனியே
ஆதியெனுவகை யாரணதேசிகர் சாற்றினர்-நம்
போதமருந் திருமாதுட நின்ற புராணனையே. 13

---

துல்யமான பெருமையைப் பகர்வதாகத் தோன்றியது. ஆக எல்லாவற்றிற்கும் உபப்ரும்ஹணமானது அருளிச்செயல். आद्यस्य—நமக்கும் நம்பூர்வாசார்யர்களுக்கும் ஜ்ஞாநத்திற்குக் காரணமான नः कुलपतेः—ப்ரபந்நரான நம் வம்சத்திற்குப் பதியுமான என்று ஆழ்வாருக்கு விசேஷணம், எம்பெருமான் எல்லாருக்கும் ஹேதுவாய் ஆத்யனாகிறான். ஸகல குலத்திற்கும் பதியாகிறான். இவர் தம்முடைய அருளிச்செயல் மூலமாக எல்லோருக்கும் ஜ்ஞாநஹேதுவாகலாம். நம் ஸம்ப்ரதாயத்திற்கே ஸ்வாமியாவர், குருபரம்பரையில் சேர்ந்திருப்பதால். ஒண்தொடியாள் என்கிற பாசுரத்தின் பொருளை உபோத்காதாதிகாரத் தொடக்கத்தில் காண்க. இவ்விஷயத்தில்—பெரிய பிராட்டியார் விஷயத்திலே, வக்தவ்யமெல்லாம் = லக்ஷ்மீ என்பவள் பகவானுடைய சக்தி காருண்யம் முதலான தர்மமே; வேறு ஆத்மா அன்று; வேறு ஆத்மாவானாலும் ஜீவர்களைப் போலே அணுவே; விபுவானாலும் ஈச்வரத்வமில்லை; அது உண்டாகிலும் பராதீநமாக இருக்கலாமென்ற வாறு அவரவர் ஊஹித்தவற்றுக்குச் சொல்லவேண்டும் ஸமாதாநங்களையெல்லாம் என்றபடி. சதுச்ச்லோகியாவது ஸ்ரீவிஷயமாக ஆளவந்தார் அருளிச்செய்த நாலு ச்லோகம். பரபக்ஷேதி. இப்பக்ஷங்கள் = வக்தவ்ய பதத்தின் பொருளில் கூறிய பக்ஷங்கள். பிராட்டியினுடைய புருஷகாரத்வ உபாயத்வ உபேயத்வங்கள் மஹாவிச்வாஸத்தை அங்கமாக வுடைய ப்ரபத்த்யநுஷ்டாநத்திற்கு முக்யமாக அறியவேண்டியிருப்பதால். அங்கே கண்டு கொள்வதென்று அருளிச்செய்தார். இப்படி பரதேவதையான இருவருக்குமுள்ள பாரமார்த்த்யம் பணிக்கப் பெற்றதாயிற்று.

இவ்வதிகாரத்தில் நாம் நிஷ்கர்ஷித்ததெல்லாம் மஹாபுருஷ நிர்ணயம் செய்துள்ள ஆளவந்தார் எம்பெருமானார் நடாதூரம்மாள் முதலான ஆசார்யர்களின் க்ரந்தங்களுக்கு விவரணமாகுமென்ற கருத்தைக் காட்டும் நிகமநப் பாசுரம். வாதியர் இத்யாதி வாதியர்—வாதம் செய்யும் பிறர் மன்னும்—தங்களிடத்தில் நிலைத்துள்ள, தருக்கம் செருக்கின்—தம்முடைய தர்க்கங்கள் என்கிற கர்வத்தினாலே மறை குலைய—வேதங்களெல்லாம் "बिभेति अल्पश्रुताद् वेदः" என்று அஞ்சும்படியும் ஸாதுஜநங்கள்-வாதப்பயிர்ச்சி இல்லாமல் திடமான தத்துவ ஜ்ஞாநம் மட்டு முடைய நல்லோர், அடங்க—முழுமையாக

जनपदभुवनादिस्थानजैत्रासनस्थेष्वनुगतनिजवार्तं नश्वरेष्वीश्वरेषु ।
परिचितनिगमान्तः पश्यति श्रीसहायं जगति गतिमविद्यादन्तुरे जन्तुरेकः ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे
परदेवतापारमार्थ्याधिकारः षष्ठः 6.

—०—०—

நடுங்க-நடுங்கும்படியாகவும் தனித்தனியே—அவரவர் இஷ்டப்படி, ப்ரஹ்ம ருத்ராதிகளில் ஒவ்வொருவரை, ஆதி யெனுவகை-உலகுக்குக் காரணம் என்னுதபடி; அந்தந்த தேவதையை ஆதியென்பர் அந்தந்த வாதியர். ஆரணம் தேசிகர்—ஆரண்யகம் என்கிற வேதாந்தத்திற்கு ஆசார்யரானவர்கள். போது அமரும்—புஷ்பத்தில் நித்யவாஸம் செய்கின்ற, திருமாதுடன் லக்ஷ்மியோடு கூட (மாது—யௌவநமுள்ள ஸ்த்ரீ) நின்ற—யாரும் இல்லையாக்க முடியாதபடி நிலைத்துள்ள நம் புராணனை—நம் ஸம்ப்ரதாயத்தாலே நன்கு அறியப்படும் ப்ரஸித்தமான அநாதி புருஷனையே; நம் என்பதற்கு ப்ரஸித்தமான என்பது பொருளென்பர். சாற்றினர்—உலகெல்லாம் அறியும்படி கோஷித்து ஸ்தாபித்தனர்.

பூவுலகில் கண்ட அரசர்களைப் போலே ப்ரஹ்மருத்ராதி ஈச்வரர்களும் அழிகின்றவர்களேயென்று அவர்கள்விஷயமான சாஸ்த்ர மூலமே தெளிவு பிறந்தால் ஸ்வர்காதி புருஷார்த்தம் போலன்றியே ஸ்திரமான லக்ஷ்மீநாராயணரூப புருஷார்த்தத்தையே வேதாந்த விழுப்பொருளாகத் தெளிவன் என்கிறார் जनपदेति. एको जन्तुः-பிறக்கும் ஜந்துக்களில் இவனே பிறந்தவன் என்று சொல்லும்படி பிறவியை ஸபலமாக்கிக் கொண்ட ஒருவனே. जनपद—தேசங்களென்ன भुवन-லோகங்களென்ன आदि-இவை முதலானவையான स्थान—தங்கள் ராஜ்யத்திற்கான जैत्रासन—ஜயசீலமான ஸிம்மாஸநங்களில் स्थेषु—நிலையாயிருந்த ईश्वरेषु—க்ஷத்ரிய இந்த்ர ருத்ர ப்ரஹ்மாதிகள் अनुगतनिजवार्त—தாங்கள் போன பிறகும் வெகுகாலம் தொடர்ந்திருக்கிற தங்கள் ப்ரஸித்திகள் காலக்ரமத்தில் தங்களையே பின்பற்றும்படி. नश्वरेषु सत्सु—அழிபவராயிருக்கும் போது—அழிவர் என்பதை அறிந்தபோது என்றபடி, இம்மையும் மறுமையுமான ஐச்வர்யாதிகளில் விரக்தனுய். अविद्यादन्तुरे—அஜ்ஞாநத்தினல் மேலும் கீழுமான जगति—உலகில் परिचित-निगमान्तः—வேதாந்த பரிசயம் செய்தவனுய், श्रीसहायं—திருமாலையே गतिं—ஸம்ஸாரிகளுக்கு ப்ராப்யப்ராபகமாயிருப்பதாக पश्यति—காண்கிறுன். நன்கு வேதாந்த பரிசயம் பண்ணினவனுக்கு இவ்வுலகிலுள்ள அரசர்களைப் போலே காலக்ரமத்தில் ப்ரம்மருத்ராதிகளும் அழிவரென்றும், திருவுடன் சேர்ந்த நாராயணனே நித்யாநந்த பரம உபாயமென்றும் அறிவு (தெளிவு) விசதமாகுமென்றதாம்.

பரதேவதாபாரமார்த்யாதிகாரம் முற்றும்

—०—०—

தத்த்வபேடிகை முற்றிற்று
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

श्रीः

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

## मुमुक्षुत्वाधिकारः

## முமுக்ஷுத்வாதிகாரம் 7.

कालावर्तान् प्रकृतिविकृतीः कामभोगेषु दोषान्
ज्वालागर्तप्रतिमदुरितोदर्कदुःखानुभूतिम् ।

---

ஸ்ரீ:

### முமுக்ஷுத்வாதிகாரம்

இது வரையில் ஸாரதமமானது ரஹஸ்யத்ரயம் என்று கூறி பரதத்த்வ பரமஹித பரமபுருஷார்த்தங்களுள்பட வேதாந்த ப்ரமேயங்களை அதற்கு அர்த்தமாகத்தெளிவிப்பதற்காக நாலதிகாரங்களாலே தத்த்வ நிரூபணம் செய்தருளினார். இனி ஸாங்கப்ரபதநாதி காரம் வரையில் பரமஹித நிரூபணம். தத்த்வத்ரயஜ்ஞாநத்திற்குப் பலம் வேறு புருஷார்த்தங்களில் வைராக்யமும் பரமபுருஷார்த்தத்தில் ருசியும்; இந்த முமுக்ஷுத்வம் இல்லாதபோது உபாய விசாரத்தில் இழியமாட்டான். ஆகவே முமுக்ஷுத்வம் முதலில் விளக்கப்படுகிறது; முதலில் ஆசார்யாச்ரயணத்திற்கே முமுக்ஷுத்வம் காரணமாயிருந்தாலும் அது தீவ்ரமன்று வயிறு நிறைந்தவனுக்கு உயர்ந்தபோஜ்யத்தைக் கண்டவுடனே வரும் புபுக்ஷை போன்றது முதல் முமுக்ஷுத்வம். வயிற்றில் ஒன்று மில்லாதவனுக்கு வரும் புபுக்ஷுத்வம் போன்றதாகும் தத்த்வஜ்ஞாநத்திற்குப் பிறகு வரும் முமுக்ஷுத்வம். இத்தைக் கருத்தில் கொண்டே 'कस्तितिक्षेत बन्धम्' என்று அருளப்போகிறார். கீழே नश्वरेषु ईश्वरेषु என்றது அழிகின்றவரை ஆச்ரயிக்காமல் அழியாத நாராயணனை ஆச்ரயிக்க வேண்டும் என்பதைப்போல் ஐச்வர்யாதி புருஷார்த்தம் நச்வரமாகையால் அதை விடுகையென்கிற மோக்ஷத்தை விரும்பவேண்டுமென்று இவ்வதிகாரார்த்தத்தையும் குறிக்கவேண்டுமென்று. ஸம்ஸாரத்திலேயே உழன்றிருக்க த்ருடாத்யவஸாயம் கொண்டவனுக்கும் முமுக்ஷுத்வம் உண்டாம்படி விவேகத்தை விளைவிக்குமாறு ச்லோகமருளிச் செய்கிறார் काले‍ति முமுக்ஷைக்கு இப்போதுள்ளதில் தோஷஜ்ஞாநமும், அடைய வேண்டுவதில் குணஜ்ஞாநமும் காரணமாகையால் அடைவாக அவற்றை ஊட்டுகிறார் कालावर्तान्—காலத்தினுடைய பரிணாமங்களான, क्षण-लव-मुहूर्त-मास-संवत्सर-युगादि களாகிற சுழல்களையும். பல க்ஷணங்கள் பல முஹூர்த்தங்கள் பல வருஷங்கள் என்றபடி எல்லாம் பலவாகி சுழலாகின்றன. சுழலில் ஒரு புறத்தினின்று மற்றொரு புறத்தில் சுழல்வதுபோல் மேன்மேல் காலத்தில் புகுந்து ஜீவன் மேலெழமாட்டாமல் கீழுக்கு இறங்குகிறான். ஆகையால் பந்தம், प्रकृति—विकृतीः மூல ப்ரக்ருதியையும். அதனுடைய பரிணாமங்களான ஸமஷ்டி வ்யஷ்டிகளையும். ப்ரளயகாலத்தில் ப்ரக்ருதியோடு ஸம்பந்தப்பட்டிருக்கையும் பந்தமே. ஸ்ருஷ்டியில் பந்தம் ஸுப்ரஸித்தம். சில உபாஸகர்களுக்கு

याथातथ्यं स्वपरनियतं यच्च दिव्यं पदं तत्
काराकल्पं वपुरपि विदन् कस्तितिक्षेत बन्धम् ॥

இப்படி இவ்வர்த்தங்களை अध्यात्मशास्त्रங்களாலே தெளிந்து स्वयंप्रकाशत्व-

---

இந்த்ரியாதி ஸமஷ்டிவஸ்துக்களில் அததற்குத் தகுந்த காலங்களில லயித்திருக்கை என்கிற பந்தம் ஸாங்க்யர்களாலே சொல்லப்பட்டது வ்யஷ்டிகளில் அந்தந்த லோகத்தில் பந்தம் தெரிந்ததே. ப்ரக்ருதியானது பல விகாரங்களைப் பெற்று அவற்றில் போக்ய புத்தியை உண்டுபண்ணுகிற படியால் ஸுகங்களுக்கு தானே காரணமாகுமென்ன, அவ்வாறு நினைப்பது தவறு; இந்த ப்ராந்தியானது தோஷத்தை யறியாமையால் வந்ததென்று கருத்துப்படக் கூறுகிறார் कामभोगेषु दोषान् इति—அந்தந்த ஜீவன் இஷ்டப்பட்ட விஷயங்களின் அநுபவங்களிலே இருக்கும் தோஷங்களை; அவை யாவன दुःखास्थिरत्वादिகளான ஏழாம், ஸுக மத்தியில் வரும் துக்கம் மட்டுமன்று துக்கமாகவே போங்காலமும் உண்டென்கிறார் ज्वालेति. ज्वालानां— நெருப்புக் குழிகளுக்கு प्रतिम—ஸமாநங்களான இது துக்கத்திற்கு விசேஷணம். दुरन्तोदर्क—முதலில் ஸுகாபாஸ பலத்திற்குக் காரணமான பாபங்களுக்கு उदर्क—பிற்காலத்தில் வரும் பலனான दुःखநரகாதி துக்கங்களின் अनुभूतिम् அநுபவத்தையும் இதுவரையில் அநிஷ்டம் சொல்லியாயிற்று स्वपरनियतं—அவனவன் தன்னிடத்திலும் பரமாத்மாவினிடத்திலும் வ்யவஸ்தையாயிருக்கும் याथातथ्यं—உண்மையையும் दासत्वस्वामित्व-कार्यत्व कारणत्व कर्मवश्यत्व अकर्मवश्यत्व-मोक्षार्हत्व मोक्षप्रदत्व-देवतान्तरसंबन्धानर्हत्व परमैकान्तिप्रियत्वादिरूपமான வைலக்ஷண்யத்தை என்றபடி. दिव्यं—மிகவும் சிறந்ததான यत् पदं சாஸ்த்ர ப்ரஸித்தமான யாதொரு பரமபதமோ तत्—நித்ய பரமாநந்தமான அந்த ஸ்தாநத்தையும், काराकल्पं-சிறைக்கூட்டுக்கு ஸமாநமான वपुः अपि—தனது ப்ராக்ருத சரீரத்தையும். ப்ராக்ருத சரீரத்தை விட்டாலல்லது நன்மை இல்லை என்றறிவித்தபடி இவற்றை யெல்லாம் विदन्—கீழ் நாலதிகாரங்களில் சொன்ன விஷயங்களை ஆய்ந்து தெளிகின்ற कः—எவன் தான், बन्धं—மீண்டும் ஸம்ஸாரத்திலே உழன்றிருப்பதை तितिक्षेत—பொறுப்பான்.

கீழ்க்கூறிய விஷயமான ஜ்ஞாநம் மோக்ஷத்தில் ருசிக்கு எவ்வாறு காரணமாகிறதென்பதை விரித்து உரைக்கிறார். இப்படி இத்யாதியால். இப்படி என்று தொடங்கி "முமுக்ஷுக்களான அதிகாரிகள்" என்றவரையில் ஒரே வாக்யம். இப்படி தெளிந்து என்று அந்வயம்.

இவ்வர்த்தங்களை என்பதற்கு ப்ரதிதந்த்ராதிகாரார்த்தங்களை என்றும், பரதேவதாபாரமார்த்யாதிகாரார்த்தங்கள் என்றும் பொதுவாக நாலதிகாரார்த்தங்களையும் என்றும் உரை செய்வர். பொதுவாகக் கூறி இது மோக்ஷருசிக்கும் காரணம். இது மோக்ஷருசிக்கு மட்டும் காரணமென்று தெளிவதற்காக மேலே பிரித்துக் கூறுகிறார் என்னலுமாம். தத்த்வத்ரயாதிகாரத்தில் தேஹாத்மவிவேகமும் ஜீவபரவிவேகமும் அறிவிக்கப்பெற்றது.

ज्ञातृत्व-कर्तृत्व-भोक्तृत्व-शरीरित्व-अणुत्व-नित्यत्व निरवयवत्व-च्छेदन दहन क्लेदन शोषणाद्य-नर्हत्व-वृद्धिह्रासरहितस्वरूपत्वादिகளாலே आत्माவுக்கு विशेषणभूत देहेन्द्रियादि वैलक्षण्यத்தைக் கண்டு, இவனுடைய परलोकगमन-देहान्तरप्राप्तियोग्यत्वनिश्चयத்தாலே सामान्येन लोकोत्तीर्णपुरुषार्थयोग्யராய், नरकपतनादिजन्मान्तरक्लेशங்களுக்கு அஞ்சி அவற்றின் காரணங்களான கர்மங்களினின்றும் निवृत्तராய், आधेयत्व-विधेयत्व-शेषत्व-अल्प-शक्तित्व-अणुत्व-अज्ञानसंशयविपर्यय दुःखादियोग्यत्व-अशुभाश्रयत्वादिகளாலே உண்டான विशेष्यभूत ईश्वरव्यावृत्तिनिश्चयத்தாலே भगवत्कैङ्कर्यरूपமான स्वरूपमात्रवैभवத்தை அபே

---

தேஹாத்மவிவேகத்தால் ஐஹிகபலத்தோடு நிற்காமல் ஸ்வர்க்க மோக்ஷஸாதாரணமான பரலோக ஃபலருசியும் நரகாதி ஜந்மாந்தர துக்கபயத்தால் பாபத்திலிருந்து நிவ்ருத்தியும் ஏற்பட்டது. ப்ரக்ருத்யாத்மவிவேகத்தால் இந்த ப்ராக்ருத விஷயாநுபவத்தைவிட ஜீவாத்ம அநுபவத்திற்கு உத்கர்ஷத்தையறிந்ததால் ஐச்வர்யருசியை விட்டு கைவல்ய ருசி பெறும்படியாயிற்று. ஜீவபரவிவேகத்தால் அதிலும் தோஷமறியப்பட்டு பகவானுச்கு எப்போதும் சேஷன் பரதந்த்ரன் என்ற ஜ்ஞாநத்தால் கைங்கர்யபர்யந்தமான மோக்ஷத்திலேயே ருசி பிறப்பதாயிற்று கீழ்ச்சொன்ன அர்த்தங்களை மந்த்ரத்தில் ஆங்காங்கு அடக்கி அடிக்கடி அறிவதிலிருந்து அஹங்காரமமகாரவாஸனை கழிந்து மோக்ஷருசி வளர்கிறதுமாகிறது என்று இங்கே கருதியபடி. ஜீவாத்ம தர்மங்கள் ஸ்வயம்ப்ரகாசத்வாதிகள். இதனால் தேஹேந்த்ரிய ப்ராணவைலக்ஷண்யம் ஸித்திக்கும். छेदन. தஹந-க்லேதந சோஷணாத்யநர்ஹத்வம் என்பது ஒரு தர்மம். இது "अच्छेद्योऽयं अदाह्योऽयं என்று கீதையில் சொல்லப்பட்டது. இதன் விவரணமும் தத்வத்ரயாதிகாரத்தில். வ்ருத்தி—உபசயம் வளர்தல். ஹ்ராஸம்—அபசயம்—குறைதல். இது தர்மபூதஜ்ஞாநத்திற்கிருந்தாலும் ஆத்மஸ்வரூபத்திற்கில்லை. ஆதிபதத்தால் अमूर्तत्वं—தடைபடாமலிருக்கை प्रतिघातानर्हत्वं கொள்ளப்படும். सामान्येन-ஸ்வர்க்க மோக்ஷஸாதாரணமான; லோகோத்தீர்ண புருஷார்த்தமாவது இந்த ஜந்மத்தில் அநுபவிக்கும் புருஷார்த்தத்திற்கு மேலான புருஷார்த்தம்; நரகபதநாதி என்கிற ஆதிபதத்தால் பூலோகாதிகளிலேயே வரும் மஹாதுக்கம் க்ரஹிக்கப்படும். ஸ்வயம் ப்ரகாசத்வாதிகளான கீழ்க்கூறிய தர்மங்களில் ஈச்வரஸாதாரணமானவற்றை விட்டு ஜீவமாத்ரத்திற்குள்ள தர்மங்களைக் கூறுகிறார் ஆதேயத்வேத்யாதியால். அஜ்ஞாநஸம்சய.விபர்யய. துக்காதியோச்யத்வம் என்பது ஒரு தர்மம் அஜ்ஞாநம்-ஒன்றுமேயறியாமை; விபர்யயம்—வேறாக ப்ரமிப்பது ; துக்காதி என்கிற ஆதிபதத்தால் த்வேஷ அஸூயாதிகளைக் கொள்வது. அசுபாச்ரயத்வமாவது—சுபாச்ரயராஹித்யம். எம்பெருமான் திருமேனி சுபாச்ரயம்; மற்றது அசுபாச்ரயம். விசேஷ்யபூதேதி. சேதநாசேதநங்களைச் சொல்லும் பதங்களெல்லாம் எம்பெருமான்வரையில் கூறுமாகையால் ஜீவன் ப்ரகாரமாய் ஈச்வரன் விசேஷ்யமாகிறான். இதைச்சொன்னது அவனோடு அப்ருதக்ஸித்தியிருப்பதாலே அவனுக்கு அடிமையாயிருப்பது ஸ்வரூப ப்ராப்தமென்றறி

க்ஷிக்கைக்கு யோக்யராய், सर्वापेक्षितसङ्ग्रहமான திருமந்த்ரத்தைக் கொண்டு
सारतमार्थங்களை अनुसन्धिக்கும்போது प्रथमपदத்தில் तृतीयाक्षरத்தாலே प्रतिपन्नமான
ज्ञानत्वाद्यनुसन्धानத்தாலே देह - तदनुबन्धिகளில் வரும் अहङ्कार - ममकारங்களையும்,
प्रथमाक्षरத்தில் लुप्तचतुर्थियாலே प्रतिपन्नமான तादर्थ्यத்தாலே देहातिरिक्त आत्मस्वरूप
तद्गुणங்களில் "त्वं मेऽहं मे" என்கிற ச்லோகத்தின் படியே தனக்குரிமை

---

விக்கவாம் மந்தரங்களை யறியாதவர்களுக்கும் இந்த விவேகங்களெல்லாம் உண்டு இவற்றை மந்த்ரத்தில் அறிய வேண்டுமென்று கீழ்க்கூறிபதற்கு பலனை விவரிப்பதற்காக ஸர்வேத்யாதி. உதாஹரணமாக திருமந்த்ரம் ஒன்றை இங்கு எடுத்தது. அதில் ஒவ்வொரு பதத்தின் அர்த்தஜ்ஞானத்திற்கும் விசித்ரமான அஹங்காரமமகார நிவர்த்தகத்வமுண்டென்பதை சமத்காரமாக அருளிச்செய்கிறார் ப்ரதமேத்யாதியால். த்ருதீயாக்ஷரம் மகாரம். मन ज्ञाने என்ற தாதுவைக் கொண்டால் ஜ்ஞானஸ்வரூபத்வம் ஜ்ஞானாச்ரயத்வம் இரண்டும் கிடைக்கும். माङ् माने என்ற தாதுவைக் கொண்டால் மிதமானது அணுவானது என்று தெரியலாகும். மகாரமானது அஸ்மச்சப்தத்திலடங்கிய மகாரம் மற்ற அக்ஷரங்கள் போய் நிற்கிறது என்றபோது अहम् (நான்) என்ற பொருள்படும். இப்படி அஹமர்த்தமாய் ஜ்ஞானமாய் அணுவாய் இருப்பது ஜீவன் என்று தெளிவதால் ஜடமாய் ஸ்தூலமான தேஹாதிகளைக்காட்டிலும் வேறு என்பது தேறும். தேஹத்தை அஹமாக நினைத்து தேஹத்திற்கு ஸம்பந்தப்பட்ட க்ஷேத்ர புத்ராதிகளை மம என்கிறவன் மம க்ஷேத்ரம் என்றவாறு க்ரஹிப்பன். சரியாகத்தன்னைத்தெரிந்த பிறகு மமகாரத்தை விடுவான் அநுஸந்தாநத்தாலே என்ற த்ருதீயா விபக்திக்கும் மேலே தாதர்த்யத்தாலே இத்யாதி த்ருதீயா விபக்திகளுக்கும் அடியறுத்து என்கிற பதத்தோடு அந்வயம். வேறு அஹங்காரமமகாரங்களை மேலே குறிக்கிறார். ப்ரதமாக்ஷரம் அகாரம் அதன் மேலுள்ள சதுர்த்தீவிபக்தி லோபித்திருக்கிறது அதனால் அறியப்பட்டது தாதர்த்யம். அதாவது சேஷத்வம். அகாரவாச்யனான நாராயணனுக்கு நான் சேஷன் என்னைச் சேர்ந்தவையும் அவனுக்கே சேஷம் என்றறிந்தால் நான் எனக்கே சேஷன் என்ற அஹங்காரமும் தன்னைச்சேர்ந்த குணாதிகள் தன்னுடையவை என்ற மமகாரமும் தொலையும். त्वं मे अहं मे என்கிற ச்லோகம் பட்டர் ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீரங்கநாதனுடைய திருமஞ்ஜநகாலத்தில் தீபத்திற்கு எதிராக மஞ்சநிறமான ஈரவாடையும் ஒற்றைத் திருத்துழாய் ஸரமுமாய் நிற்கும் திருக்கோலத்தைக் கண்டு ஏதோ ஸத்யமென்று சபதமிடுவதற்காக நிற்பதாக உத்ப்ரேக்ஷித்து அதற்குக் காரணம் ஜீவனோடு எற்பட்ட விவாதம் என்று ஊஹித்து இந்த ச்லோகத்தில் நிரூபிக்கிறார். இந்த ச்லோகம் இருவருடைய் உக்தி ப்ரத்யுக்திரூபம். முதலில் பகவானுடைய வார்த்தை त्वं मे நீ எனக்கு தாஸனானவன் என்று; மேலே ஜீவன் பேச்சு अहं मे நான் எனக்கே யாவேன் உனக்கல்லன் என்றபடி. இதில் எம்பெருமானுக்கு சிறிது ஸந்தோஷம்.

யுண்டாக நினைக்கிற अहङ्कार-ममकारங்களையும், मध्यमाक्षர'த்தில் अवधारणार्थं

---

என்னைப் பார்த்து நீ எனக்கு என்னுமல் தன்னை மட்டும் தனக்குமட்டுமாக இவன் சொல்லிக்கொண்டானே என்று நினைத்தான்—மேலே கேள்வி—कुतस्त्वं நீ சொல்வதற்கு என்ன ப்ரமாணம் என்று. மேலே ஜீவன் तदपि कुतः— முதலில் நீ சொன்னதற்கு என்ன ப்ரமாணம். பகவான் इदं वेदमूलप्रमाणात्-पतिं विश्वस्य. दासभूताः स्वतस्सर्वे. இத்யாதி ப்ரமாணங்களால் எனக்கு நீ சேஷன் என்றபடி. மேலே ஜீவன் एतच्च अनादिसिद्धात् अनुभवविभवात्-ப்ரமாண மூல மான உரிமையைவிட அநுபவமூலமான தற்கு ஏற்றமுண்டு. நான் என்னைச் சேர்ந்தவன் என்கிறது வெகுகால அநுபவத்திலிருக்கிறது. சில வர்ஷகாலம் நீடித்த அநுபவமே போதுமென்பர். இங்கே விபவம்; நான் எடுத்தஜந்மமெல் லாவற்றிலும் ஒன்று விடாமல் அநாதியாக ஏற்பட்ட அநுபவமாகும் अहं मे என்றது மேலே பகவான். तर्हि साक्रोश एव அநுபவ விபவமானது எதிரியின் எதிர்ப்போடு கூடினதாகவே யிருக்கிறது. எதிரியின் ஆக்ஷேபம் இராமல் தொடர்ச்சியாக வந்த அநுபவமே உரிமைக்கு ஸாதகமாகும் நடுநடுவில் ஆக்ஷேபமுண்டாகில் அநுபவம் செல்லாது. மேலே ஜீவன் क्वाऽऽक्रोशः कस्य—ஆக்ஷேபம் எங்கே யிருக்கிறது; யார் செய்தது. பகவான் गीतादिषु मम विदितः—கீதை பாஞ்சராத்ரம் முதலானவிடங்களில் ஜீவன் எனக்கே சேர்ந் தவன், ஸ்வதந்த்ரனல்லன். என்று என்னுடைய ஆக்ஷேபமே யுள்ளது ஸுப்ரஸித்தம். மேலே ஜீவன் कोऽत्र साक्षी—அந்த வாக்யங்களுக்கு அது தான் பொருள், ஆக்ஷேபித்தவனும் நீ தான் என்பதற்கு நீ தன் ஸாக்ஷியாக யாரைக்கொண்டு நிரூபிக்கிறது. மேலே பகவான். सुधीः स्यात्—மஹா ஜ்ஞாநிகளான வ்யாஸாதிகளே ஸாக்ஷியாவர். முடிவாக ஜீவனின் சொல். हन्त त्वत्पक्षपाती सः—உன் கக்ஷியில் சேர்ந்த வ்யாஸாதிகளை மத்யஸ்தனை ஸாக்ஷியாக்கக் கூடுமோ என்று. இதன் மேல் மத்யஸ்தன் அகப்படாமை யாலே தன் வாதத்தை ஸ்தாபிக்க ஸத்யம் செய்ய தீபத்திற்கு எதிரில் நிற் கிறுய் போலும் என்றுர் பட்டர். मृग्यमध्यस्थवत् त्वम् இதி.மத்யஸ்தன் தேடப் படவேண்டியவனுய் அகப்படாமலிருப்பதால் தவிக்கும் வ்யவஹாரியைப் போல் தோற்றமளிக்கிறுய் என்று. இதனின்று தன்னைத் தனக்காக நினைக்கும் அஹங்காரம் ஜீவனுக்குண்டென்று அறிவித்ததாம். நினைக்கிற என்கிற சொல்லுக்கு நினைவாகிற என்கிற பொருளிலே நோக்கு. அஹம் மம சேஷீ என்கிறதே அஹங்கார மமகாரமாகிறது. தேஹாதிரிக்த ஆத்ம ஸ்வரூபத்தை அஹமென்று க்ரஹிப்பது யுக்தமாயிருக்க இந்த அஹங்கார த்தை அடியறுக்க வேண்டுமென்னலாமோ என்னில். பகவச்சேஷத்வ க்ரஹணத்திற்கு விரோதமில்லாத அஹங்காரம் க்ராஹ்யமாகும். எனக்கு நான் சேஷீ என்றவிடத்தில் அஹங்காரம் பகவச்சேஷத்வ ஜ்ஞாநத்திற்கு விரோதியாவதால் அடியறுக்க வேண்டியதாகிறது. இப்படியே அஹம் குணாநாம் நிருபாதிக ஸ்வாமீ, மம நிருபாதிக சேஷபூதா: குணா: என்கிற

தாலே अन्यशेषभूतोऽहम् என்றும் ममान्यश्शेषी என்றும் வரும் अहङ्कार-ममकारங்களையும், मध्यमपदத்தில் प्रतिपन्नமான निषेधविशेषத்தாலே स्वरक्षणव्यापारத்தைப் பற்ற வரும் निरपेक्षस्वातन्त्र्य-निरुपाधिकशेषित्वाभिमानरूपங்களான अहङ्कार-ममकारங்களையும், இந் निषेधसामर्थ्यந்தன்னாலே तृतीयपदத்திலே चतुर्थியாலே अभिप्रेतமாய் भाविயான कैङ्कर्यरूपानुभवமாகிற फलத்தைப் பற்ற இப்போது फलान्तरानुभवन्यायத்தாலே வரும் स्वाधीनकर्तृत्वभोक्तृत्व-स्वार्थकर्तृत्व भोक्तृत्व भ्रमरूपங்களான अहङ्कार-ममकारங்களையும் यथायोग्यம் आर्थமாகவும் शाब्दமாகவும் அடியறுத்து இப்படி स्थिरप्रतिपन्नज्ञानராய்,

---

அஹங்கார மமகாரத்தையும் கொள்க. விபரீத புத்தியானது அஹம் எனகிற ஆகாரத்தோடு கூடியிருந்தால் அஹங்காரமென்றும் மம என்றதோடு சேர்ந்தால் மமகாரம் என்றும் சொல்லப்படுகிறது. மத்யமாக்ஷரமாவது உகாரம். மத்யமபதம் நம: என்பது நிஷேதவிசேஷத்தாலே மம ந ஸ்வாதந்த்ர்யம் மம ந சேஷித்வம் என்கிற நிஷேதத்தாலே, இதனுல் அடியறுக்கப்படும் அஹங்காரமமகாரங்களாவன அஹம் நிரபேக்ஷஸ்வதந்த்ர: மம நிரபேக்ஷஸ்வாதந்த்ர்யம் என்றுப்போன்றவை. த்ருதீயபதம் நாராயணுய என்பது அதற்கு நோக்கு கைங்கர்யத்திலே. நம: என்பதை அதோடு சேர்த்துப் பார்க்கும்போது ஃபல விஷயத்திலே வரும் அஹங்கார மமகாரங்களும் கழிக்கப்பெறுமென்கிறார். இந்நிஷேதேதி. எனக்கு ஸ்வாதந்த்ர்யமில்லை என்றால் அதனுல் ஸ்வரக்ஷணவ்யாபாரம் செய்ய நான் அசக்தன் என்று தெரிவிப்பதாகுமென்று அநந்யோபாயத்வ ஸித்திக்காகக் கருத்தைக் கூறினும் இந்த நிஷேதம் அவ்வளவுடன் நிற்காமல் மேலே நான் செய்யப்போகிற கைங்கர்யங்களையும் நான் ஸ்வதந்த்ரமாகச் செய்யப்போகிறேனல்லேன் என்பதையும் குறிக்கும். எனக்கு சேஷித்வமில்லை என்கிற நிஷேதமும் அந்த கைங்கர்யம் எனதன்று எம்பெருமான் உகப்புக்கே என்று ஸ்வார்தத்வ புத்தியையும் நிவர்த்திக்கும். இது ஐஹிக ஆமுஷ்மிக பலன்களை யநுபவிக்கிற காலத்தில் நான் செய்கிறேன் எனக்காகச் செய்கிறேன் என்கிற புத்தி ஸஹஜமாக இருப்பதால் இதைப்போல் மோக்ஷத்திலும் அந்த புத்தி வாராது பகவானையே பரமசேஷியாகவும் தன் செயலை கைங்கர்யமாகவும் தன்னை அத்யந்தபரதந்த்ரனுகவும் நினைத்திருப்பதால் என்று பலாந்தரத்திற்கும் இதற்குமுள்ள வைஷம்யத்தை பலன் வருவதற்கு முன்னமே முமுக்ஷு பரிசீலிக்க இந்த மத்யமபதம் உபயோகப்படுகிறதென்றகாயிற்று. ஆர்த்தமாகவும் சாப்தமாகவும் இதி. நம: என்கிற பதமானது மமகார घटितமாயிருப்பதால் மமகார நிஷேதம் சாப்தம். மற்ற பதங்களில் அஹங்கார மமகார நிஷேதங்கள் ஆர்த்தம். உகாரார்த்தமான அவதாரணத்தில் அஹங்கார நிஷேதம் சாப்தம். மற்றது ஆர்த்தம், அடியறுத்து அடியோடு அறுத்து. அடியாவது—இவற்றின் தொடர்ச்சிக்குக் காரணமான வாஸனை.

தத்த்வஜ்ஞானம் ஸுப்ரதிஷ்டிதமானல் மேலே வரவேண்டியது விஷய

அற்பஸாரங்களவை சுவைத்தகன்றொழிந்தேன் கண்டுகேட்டுற்று மோந்துண்டுழலுமைங்கருவி கண்டவின்பந் தெரிவரியவளவில்லாச் சிற்றின்பம்" "तस्मिन् प्रसन्ने किमिहास्त्यलभ्यं धर्मार्थकामैरलमल्पकास्ते". "अन्तवत्तु फलं तेषां तद्भवत्यल्पमेधसाम्". "अनित्यमसुखं लोकमिमं प्राप्य भजस्व माम्". "महाबलान् महावीर्यान्

---

வைராக்யமும் ப்ராப்யமான பரமாத்மாவினிடம் ருசியும். இதை விரித்துரைக்கிருர் அற்பஸாரங்கள் இத்யாதியால், ஸ்திரப்ரதிஷ்டிகஜ்ஞாநராய் என்பது மேலே அவஸ்தையுடையராய் என்பதோடு சேரும். அற்பஸாரங்களவை—ஸ்வல்பமான ஸாரத்தையுடைய ப்ராக்ருத விஷயங்களை, சுவைத்து—அநுபவித்து பிறகு அல்பத்வாதி தோஷங்களை அறிந்தபடியாலே. அகன்றேன்—நின்றேன் திருவாய்மொழி-3-2-6 கண்டு இத்யாதி. திருவாய்மொழி. 4-9-10 உற்று—ஸ்பர்சித்து. இப்படி ஐந்து இந்த்ரிய விஷயங்களை யநுபவித்து அவற்றிலேயே நான் உழலக் காரணமான ஐங்கருவி—ஐந்து இந்த்ரியங்கள் மூலம் நான் கண்ட இன்பம்—ஸுகத்தையும். தெரிவு அரிய-தெரிந்து கொள்வதற்கருமையான விசுத்தமான, மநஸ்ஸாலேயே அநுபவிக்கவேண்டிய, அளவு இல்லா-விஷயாநுபவம் போலே பரிச்சிந்நமாகாத சிறு—பரமாத்மாநுபவத்தைக்காட்டிலும் மிகவும் சிறிதான இன்பம் ஜீவாத்மாநுபவத்தை (கைவல்யத்தை) இவ்விரண்டையும் நாலாமடியில் ஒழிந்தேன் என்ற விடத்தில் சேர்க்க. இப்படி ஒழித்ததற்கு பகவதநுபவத்திலுள்ள ருசியைக்கண்டது காரணம் என்பதை குறிக்கும் "ஒண்தொடியாள் திருமகளும் நீயும் நிலா நிற்ப கண்ட சதிர் கண்டு என்கிற பாகம். இப்படி மோக்ஷத்திற்காகச் செய்யும் உபாயமும் பலமும் சொல்லப்படும். இதை அடைந்தேன் உன் திருவடியை என்கிருர்.

தஸ்மிந் 1-17-91 வி பு. தஸ்மிந்—அந்த பகவான். ப்ரஸந்நே—அநுக்ரஹத்திற்கு உன்முகனுயிருக்கும் போது இஹ-இங்கு, அலப்யம்—அடைய முடியாதது. கிம் அஸ்தி—என்ன இருக்கிறது. நாலுபுருஷார்த்தங்களில் தர்மார்த்த காமங்கள் என்ற மூன்றும் அலம்=வேண்டாம். தே-அவைகள் அல்பகா:—ஆபாஸமான அல்பபுருஷார்த்தங்கள். முதற் பாதத்திற்கு. அவன் வேறுபலனை அளிப்பவனுயிந்தாலும் நமக்கு அது வேண்டாம் என்ற கருத்தாகலாம் என்றும் நான்கு புருஷார்த்தங்களில் அடையப்படாதது ஒன்றுமில்லாமையாலே நாம் மோக்ஷத்தை விடலாகாது என்றும் கருத்து உரைக்கலாம். அந்தவத் இதி. அல்பமேதஸாம்-அல்பமான பலனில் நோக்குள்ளபடியாலே அல்பமான புத்தியுடைய தேவதாந்தர பக்தர்களின் தத்பலம்—அப்பலன் அந்தவத்து பவதி—அழிவுள்ளதேயாகும். அநித்ய மிதி. நித்யமாகாததும் ஸுகமற்றதுமான இந்த ப்ராக்ருத லோகத்தை ப்ராப்ய (ஸ்த்திதஃ த்வம்) அடைந்திருக்கிற நீ இது அநித்யம் அஸுகம் என்று உணர்ந்து நித்ய ஸுகலோக ப்ராப்த்திக்காக, மாம் பஜஸ்வ—என்னை ஆச்ரயி. மஹாபலான் இதி. வி. பு. 4.24 மஹாபலான்-மிக்கமநோபலமும் வீர்யமும்

अनन्तधनसञ्चयान्। गतान् कालेन महता कथाशेषान् नराधिपान्॥ श्रुत्वा न पुत्रदारादौ गृहक्षेत्रादिकेऽपि वा। द्रव्यादौ वा कृतप्रज्ञो ममत्वं कुरुते नरः॥''. ''सर्वं दुःखमयं जगत्,'' ''स्वर्गेऽपि पातभीतस्य क्षयिष्णोर्नास्ति निर्वृतिः'', ''राज्ये गृध्नन्त्यविद्वांसो ममत्वाहृतचेतसः। अहंमानमहापानमदमत्ता न मादृशाः'', ''आब्रह्मभवनादेते दोषास्सन्ति महामुने। अत एव हि नेच्छन्ति स्वर्गप्राप्तिं मनीषिणः॥''. 'ब्रह्मणस्सदनादूर्ध्वं तद्विष्णोः परमं पदम्। शुद्धं सनातनं ज्योतिः परं ब्रह्मेति तद्विदुः॥ न तत्र मूढा गच्छन्ति पुरुषा विषयात्मकाः। दम्भलोभमदक्रोधद्रोहमोहैरभिद्रुताः॥ निर्ममा निरहङ्कारा निर्द्वन्द्वास्संयतेन्द्रियाः। ध्यानयोगरताश्चैव तत्र गच्छन्ति साधवः॥''

---

அளவற்ற தநராசியும் உடையராயிருந்தும் நராதிபாந் = உலகாண்டவர்களும் கதாந் = மாண்டவர்களாய்; மஹதா காலேந—அவர்களிருந்த காலம் ஸ்வல்பமாய் இல்லாத காலம் அதிகமாய், கதாசேஷாந்—அவர்களைப்பற்றிய கதைகள் மட்டும் நின்றிருப்பதாக ச்ருத்வா-கேட்டு, எல்லாம் அல்பம் அநித்யம் என்று க்ருதப்ரஜ்ஞ:—தெளிவு உடையவனான நர:—மனிதன், மக்கள் மனைவி முதலானவர்களிடமோ, வீடு வயல் முதலானவற்றிலோ, பணம் போகம் முதலானவற்றிலோ மமத்வத்தைக் கொள்ளமாட்டான். மறுமையும் வேண்டாமென்கிறார் ஸர்வ மிதி. வி பு. 1-17 பரமாண்டத்தினுடைய எல்லா உலகமும் துக்கப்ரசுரமே. வி. பு. ஸ்வர்கே இதி. ஸ்வர்கலோகத்திலும் க்ஷயிஷ்ணோ:—புண்யக்ஷயம் பெறவேண்டியவனாய். பாதபீதஸ்ய—கீழே விழப்போகிறேன் என்று அஞ்சியும் இருப்பவனுக்கு. நிர்வ்ருதி:—ஸுகமானது நாஸ்தி—இல்லை. ராஜ்யே இதி. வி பு. 6.7. கேசித்வஜன் காண்டிக்யன் என்கிற அரசன் சொல்லுகிறான். அவித்வாம்ஸ:—அறிவற்றவர்கள் மமகாரத்தாலே கவரப்பட்ட மனமுடையராய், அஹங்காரமென்கிற பெருங்குடியினால் ஏற்பட்டக் கொழுப்பினால் பித்துப் பிடித்தவர்களாய் ராஜ்யத்தில் பேராசை வைத்திருக்கிறார்கள்; ந மாத்ருசா:—என்னைப் போன்றவர்கள் அப்படி யிருக்கமாட்டார்கள். ஆப்ரஹ்மேதி இதிஹாஸஸமுச்சயம் 3.48 ஏதே தோஷா:— இந்த அல்பத்வாதிதோஷங்கள் ஆப்ரஹ்ம பவநாத் ஸந்தி—நான்முகன் வீட்டிற்குமுண்டு. மஹர்ஷியே அத ஏவ ஹி—அதனால் தானே மநீஷிண:—விவேகமுள்ளவர்கள் ஸ்வர்கம் பெறுதலை விரும்பார். பரமபதத்தில் இந்த தோஷமில்லை என்கிறார் ப்ரஹ்மண: இதி. பார-ஆ.217. நான்முகனின் இடத்திற்கு மேலே உள்ளது. தத்-ப்ரமாண ப்ரஸித்தமான விஷ்ணுவின் உயர்ந்த ஸ்த்தாநம் சுத்தம்—ஹேயமற்றது; ஸநாதநம்—எப்போதும் உள்ளது. ஜ்யோதி:—ஸ்வயம் ப்ரகாசமானது. தத்—அதை பரம் ப்ரஹ்ம இதி விது:-பரப்ரஹ்மமென்றே அறிகின்றனர். அங்கிருப்போருக்கு ப்ரஹ்மஸம்பந்தம் ஸ்திரமாகையால் அதையே ப்ரஹ்மமென்பர் தத்ர-அவ்விடத்திற்கு மூடா:—முட்டாள்களாய் விஷயாத்மகா: விஷயப்பற்றே உடையவர்களாய். டம்பம்—லோபம் மதம் கோபம் த்ரோஹம் மோஹம் இவற்றால் விடாமல் பிடிக்கப்பட்டவர்கள் ந கச்சந்தி—செல்ல வியலார். மமகாரமும் அஹங்காரமும் அற்று ராகத்வேஷாதி த்வந்த்வங்களின்றி

"रम्याणि कामचाराणि विमानानि सभास्तथा। आक्रीडा विविधा राजन् पद्मिन्यश्चामलोदकाः॥"

"एते वै निरयास्तात स्थानस्य परमात्मनः" इत्यादि ப்ரமாணங்களாலே अल्पत्व-अस्थिरत्व-दुःखमूलत्व-दुःखमिश्रत्व-दुःखोदर्कत्व-विपरीताभिमानमूलत्व-स्वाभाविकानन्द विरुद्धत्वங்களாகிற अचिद्विषयानुभवदोषसप्तகத்தையும் இவற்றில் यथासम्भवம் உண்டான

---

இந்த்ரியங்களை யடக்கி=த்ய·நயோகத்திலே ஈடுபாடுடைய ஸத்துக்களே அங்கே செல்வர். ரம்யாணீதி பா. சா 196 ரம்யாணி--மனத்திற்கு இன்பம் தருகின்றனவும் காமசாராணி—இஷ்டமான இடமெல்லாம் செல்லக் கூடியதுமான விமாநங்களும் ஸபா:--ஸபாஸ்தாநமான மண்டபாதிகளும் ஆக்ரீடா:--உத்யாநங்களும். ராஜன்—அரசனே பலவித விளையாடுமிடங்களும் தெளிவான தீர்த்தங்களுள்ள पद्मिन्यः தாமரை ஓடைகளும்" 'தாத-அப்பா! ஏதே வை-இப்படி தேவலோகத்திலிருப்பவை யெல்லாம் பரமாத்மந:—பகவானுடைய, ஸ்த்தாநஸ்ய - இடமான ஸ்ரீவைகுண்டத்திற்கு (ஸ்ரீவைகுண்டத்தோடு ஒற்றுப் பார்க்கும் போது) நிரயா:- நரகங்களே யாகும். இங்கு ஏதே என்ற சொல்லானது; 'அமூநி யாநி ஸ்தாநாநி தேவாநாம் அமராத்மநாம்" என்று அங்குள்ள வாக்யத்திலிருக்கும் யச்சப்தத்திற்கு ப்ரதிநிர்தேசமாகும். ஸ்தாநஸ்ய பரமாத்மந: என்று ஸ்தாநத்தைச் சொன்னபடியால் அதற்கிணங்க ஸ்தாநங்களை பொருளாகக் கொள்வது பொருந்தும். அதைவிட்டு ரம்யாணி காமசாராணி என்ற வாக்யங்களை எடுத்தது ஏனெனில்—நரகமாகக் கூடாதவையும் நரகமாமென்று அவற்றின் சிறப்பைக் தெளிவிப்பதற்காக என்க கூறிய ப்ரமாண வாக்யங்களிலிருந்து கிடைத்த அம்சங்களைத் தெளிவிக்கிறார் இத்யாதி இதி. அல்பத்வரூபதோஷம் அல்பஸாரங்கள் அல்பகாஸ்தே இத்யாதியால் கூறப்பட்டது. அஸ்திரத்வம் அநித்யம் அஸுகம் என்பதால்; துக்க மூலத்வாதிகள் அஸுகம் துக்கமயம் என்பதால்; துக்கமான மூலத்தையுடையதாயிருக்கை துக்க மூலத்வம் துக்கமிச்ரத்வம் = துக்கத்தோடு கலந்திருக்கை துக்க உதர்கத்வமாவது—துக்கமாகவே யிருக்கும் பலனையுடையதாயிருக்கை. விபரீத அபிமாந மூலகத்வமாவது—மமத்வாஹ்ருத, அஹம்மாநக்ஷாபாந இத்யாதிஸித்தம். ஸ்வாபாவிகாநந்தத்வ விருத்தத்வமாவது 'ந தத்ர மூடா கச்சந்தி' இத்யாதிஸித்தம். ஏதே தோஷாஸ்ஸந்தி என்பதினால் இவையெல்லாம் தோஷமென்று கூறினதாகும். அசித் விஷய அநுபவமானது ப்ராக்ருத பதார்த்தாநுபவம். ஐச்வர்யாநுபவம் என்றபடி. இவற்றில் இந்த ஏழு தோஷங்களில் சேதநமாத்ர அநுபவமாகிற கைவல்யத்திற்கு சில தோஷங்களே வருமாகையால் யதாஸம்பவம் உண்டான என்றார். இத்தனை தோஷங்களென்று எண்ணிச்சொல்லாமல் யதாஸம்பவம் என்று ஏன் சொல்ல வேணுமென்னில்—பஞ்சாக்நிவித்யாநிஷ்டன் கைவல்யாநுபவத்திற்குப் பிறகு பஞ்சாக்நி வித்யை யென்கிற உபாயத்தாலேயே மோக்ஷாநந்தமே பெறுகிறானாகையால் அந்த கைவல்யாநுபவத்திற்குப் பிறகு துக்கமில்லாமையால்

வைராக்யாநுபந்தோபாங்களையும், இவ்வநுபவங்களுக்கு எதிர்த்தட்டான மோக்ஷாநுபவத்தின் வைலக்ஷண்யத்தையும் விசதமாக அநுஸந்தித்து. "பரமாத்மநி யோ ரக்தோ

---

துக்கோதர்க்கத்வம் சொல்லவொண்ணாது ஜ்ஞாநயோகாதிகளால் கைவல்யம் பெற்றவர்கள் கைவல்ய காலத்திற்குப் பிறகு ஸம்ஸாரத்தில் இழிவதால் அங்கே துக்கோதர்க்கத்வமுண்டு. ஒரே விதமான எண்ணிக்கையில்லையாகையாலே பாதஸம்பவம் என்றது. ஆக ஐச்வர்யத்திற்குப்போல் இதற்கும் அல்பத்வமுண்டு. கைவல்யம் ஸ்திரம் என்று சிலரின் கொள்கை. அஸ்திரத்வம் சரமச்லோகாதிகாரத்திலே ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. துக்கமூலத்வம் மோக்ஷத்திற்குமுண்டே, வெகு ஜந்மங்களில் ப்ரயாஸைபட்டு தானே மோக்ஷம் பெறுவதென்னில், துக்கமூலத்வம் என்பதற்கு துக்கமயமான சரீராதிகளைக் கொண்டு பலாநுபவம் செய்வதாலாம் துக்கமூலத்வம் பொருள். மோக்ஷபலாநுபவகாலத்தில் அக்தகைய கருவிகள் இல்லை. கைவல்யகாலத்தில் சிறிதும் துக்கமில்லையாகையால் துக்கமிச்ரத்வம் போல் துக்கமூலத்வமுமில்லையென்னலாம். விபரீதாபிமாநமூலத்வம் அங்குமுண்டு. மோக்ஷபலமான அநுபவம் ஸர்வசேஷியான எம்பெருமானுக்காக் என்று தெளிந்திருப்பதால் அங்கு விபரீதாபிமாநமில்லை. இங்கே சேஷியை மறந்து ஸ்வார்த்தமாய் ஸ்வதந்த்ரமாய் அநுபவிப்பதால் ப்ரமமுண்டு, மோக்ஷத்தில் ஸ்வாத்மஸ்வரூபாநுபவமும் பகவதாநந்தாநுபவத்தோடு சேர்ந்திருப்பதால் ஸ்வாபாவிக ஆநந்தவிருக்தத்வம் உண்டே என்னில்— ஸ்வார்த்தத்வாதி புத்தியோடு வரும் அநுபவங்களெல்லாம் ஸ்வாபாவிகாநந்தவிருத்தம். இது அவ்வாறன்று. எதிர்தட்டான = அநல்பத்வ ஸ்திரத்வாதி குணங்களையுடையதான.

பரமாத்மநீதி. "ஸர்வைஷணவிநிர்முக்த: ஸ பைக்ஷம் போக்துமர்ஹதி" என்றது உத்தரார்த்தம். பரமாத்மாவினிடத்தில் பற்றும் ஐச்வர்ய கைவல்யங்களில் விரக்தியுமுடையவன் தன் ஜீவநகாலத்தில் புத்ரவித்தலோகைஷணைகளை விட்டவனுமானவன் பிக்ஷை எடுக்க அதிகாரியாவானென்று இதன் பொருள். முமுக்ஷு என்கிற பதத்திற்கு மோக்ஷம் பெற விருப்பமுள்ளவன் என்றது பொருள். மோக்ஷம் என்பதற்கு பரமாத்மாவின் அநுபவம் என்ற அர்த்தம் கொண்டால் ப்ராக்ருத விஷயாநுபவத்தையும் பகவதநுபவத்தையும் சேர விரும்பினவனுங்கூட முமுக்ஷுவாகலாம். அது தகாதென்பதற்காக மோக்ஷபதத்திற்கு ஸம்ஸாரத்தை விட்டுவிடுகை என்ற பொருள் கொள்ளவேண்டும். சிலர் பரமாத்மாநுபவத்தையும் ஸம்ஸாரத்திலே சேர்த்து அதையும் ஒழிக்கப்பார்ப்பர். அவர்களும் யதாசாஸ்த்ரம் முமுக்ஷுக்களாகார். ஆசையால் விஷயாநுபவத்யாகரூபமோக்ஷமும் ஸகுண ப்ரஹ்மாநந்தரூபமான மோக்ஷமும் விருப்பப்படவேண்டுமென்றதாயிற்று.

இவ்வளவு விரும்பியும் அதற்கான உபாயத்திலிழிபாதவனுக்கு உத்கட முமுக்ஷையில்லையென்று கருதி. எந்த தசையில் மோக்ஷோபாய அநுஷ்டா

विरक्तोऽरमतात्मनि" என்கிற அவஸ்தையையுடையவராய், "प्रवृत्तिलक्षणं धर्मं प्रजापतिरथाब्रवीत्" என்கிற प्रवृत्तिधर्मங்களினின்றும் निवृत्तராய், "निवृत्तिलक्षणं धर्ममृषिर्नारायणोऽब्रवीत्" என்கிற निवृत्तिधर्मங்களிலே प्रवृत्तரானவர்கள் முமுக்ஷுக்களான अधिकारिகள்.

கீழ்ச்சொன்னபடியிலே परावरங்களான தத்வங்களும் पुरुषार्थங்களும் தெளிந்தாலும் இப்படி वैराग्यपूर्वकமாகப் परमपुरुषार्थोपायानुष्ठानத்தில் प्रवर्तियாதாகில், "शीलवृत्तफलं श्रुतम्", "शमार्थं सर्वशास्त्राणि विहितानि मनीषिभिः । तस्मात् स सर्वशास्त्रज्ञो यस्य शान्तं मनस्सदा ॥" என்கிற श्रुतफलத்தையும் இழந்து "नाच्छादयति कौपीनं न दंशमशकापहम् । शुनः पुच्छमिवानर्थं पाण्डित्यं धर्मवर्जितम् ॥" என்கிறபடியே ஹாஸ்யனும்.

---

நத்தை விடாமல் செய்யவாகிறது. அத்தசையிலுள்ள முமுக்ஷையே முமுக்ஷுத்வமாகுமென்றறிவிக்க அருளிச்செய்கிறார் ப்ரவ்ருத்தி இத்யாதி. (பா. சாந்தி 219.) அத—ப்ரஜைகளை ஸ்ருஷ்டித்த பிறகு. ப்ரஜாபதி:—பிரமன் உலகில் ப்ரஜைகளை வ்ருத்தி செய்வதற்காக ப்ரவ்ருத்திலக்ஷணம்—க்ஷுத்ரபலனைக் குறித்து உண்டாகும் ப்ரவ்ருத்தியைத் தனக்கு லக்ஷணமாக உடைய தர்மத்தை. அதாவது காம்யகர்மாவை அப்ரவீத்—உபதேசித்தார். நாராயண:—பதரிகாச்ரமத்தில் வஸிக்கும் நாராயணன் மோக்ஷம் பெறுதல் முக்யமென்று கருதி நிவ்ருத்திலக்ஷணம் தர்மம் வேறு பலத்திலிருந்து நிவ்ருத்தியை லக்ஷணமாக உடைய தர்மத்தை அதாவது ஃபலஸங்க.கர்த்ருத்வ-மமதாத்யாகமாகிற ஸாத்த்விக த்யாகத்தை அங்கமாக உடைய நிஷ்காம கர்மாவை உபதேசித்தாரென்றது பொருள். இப்படி உபாய ப்ரவ்ருத்தியுடையவனுக்கே பூர்ண முமுக்ஷுத்வமென்றதாயிற்று.

இதை வ்யதிரேக முகத்தாலே விளக்குகிறார் கீழ்... இப்படி இதி. சீலவ்ருத்தபலம் ச்ருதம் "அக்நிஹோத்ர பலா வேதா: தத்தபுக்தபலம் தநம் । ரதிபுத்ரபலா தாரா: சீலவ்ருத்தபலம் ச்ருதம்" தத்தபுக்த என்பதற்கு பிறருக்கு அளிப்பதும் தான் உண்பதும் என்று பொருள். பா. ஸபா. 10. சீலம்—ஆத்மகுணம். வ்ருத்தம்—ஸதாசாரம். இரண்டையும் ப்ரயோஜனமாகவுடையது படிப்பு. நேதி. ஸர்வசாஸ்த்ரங்களும் சமார்த்தம்—துஷ்ப்ரவ்ருத்தியில்லாமைக்காக மநீஷிபி:—புத்திமான்களாலே விஹிதாநி—ஏற்படுத்தப்பட்டன. தஸ்மாத்—சமம் சாஸ்த்ரஜ்ஞாநத்தின் பலனாகையாலே, யஸ்ய மந:—எவனுடைய மனது ஸதா சாந்தம்—எப்போதும் அடங்கியிருக்கிறதோ, ஸ:—அவன் ஸர்வசாஸ்த்ரஜ்ஞ:—எல்லா சாஸ்த்ரமும் அறிந்தவனாவான் என்று சீலவ்ருத்தங்களைப்போல் சமத்தையும் பலனாகக் கூறிற்று. இதிஹாஸ ஸமுச்சயம் 12. சுந:—நாயினுடைய புச்சம்—வாலானது கௌபீநம்—மறைக்கவேண்டிய ஸ்தானத்தை (பாகத்தை) ந ஆச்சாதயதி—மறைக்கிறதில்லை தம்ச-மசகாபஹம்—ஈக்கள் கொசுகுகளிவற்றை ஓட்டுவதாகவும் ந—இல்லை. வாலினுடைய அடிப்பாகம் மறைப்பதற்கும் நுனிப்பாகம் ஓட்டுவதற்குமாகின்ற

ஆகையால் "वयसः कर्मणोऽर्थस्य श्रुतस्याभिजनस्य च । वेषवाग्बुद्धिसारूप्यमाचरन् विचरेदिह ॥" என்கிறபடியே श्रुतानुरूपமாக स्वोचितமான परमपुरुषार्थोपायानुष्ठानத்திலே सञ्चरिக்குமவர்கள், "தன் கருமஞ்செய்யப்பிறருகந்தார்" என்கிறபடியே

---

யை மாட்டு வாலில் கண்டிருக்கிறோம். தத் என்ற பதம் சேர்க்கவேண்டும். ததிவ = நாய் வால்போல் தர்ம வர்ஜிதம் பாண்டித்யம்—நல்லொழுக்க மில்லாத சாஸ்த்ரஜ்ஞானமானது. அநர்த்தம்—நிஷ்ப்ரயோஜநமாகும் ஒரு வனுக்கு ஜ்ஞாநத்தோடு நல்லொழுக்கமும் இருந்தால் அது அவனுக்கிருக் கும் தாழ்ந்த குலப் பிறவியையும் சரீர ரோகாதிகளையும் மறைத்துவிடும். தம்சமசகங்கள் போன்ற அநாதி புண்யபாபகர்மங்களையும் போக்குமென்று கருத்து. ஹாஸ்யனும். புச்சமேயில்லாத ஐந்துவை யாரும் பரிஹஸிப்ப தில்லை. நிஷ்ப்ரயோஜநமான வாலையுடைய நாயைத்தான் பரிஹஸிப்பர். அதைப்போல் அபண்டிதனைப் பரிஹஸிப்பார் யாருமில்லை. தர்மாநுஷ்டா நத்திற்காகாத பாண்டித்யமே பரிஹாஸ ஹேது. சிலர் பராவர தத்த்வ விவேக மிராமையால் மோக்ஷப்ரவ்ருத்தியை விட்டு வைதிகாசாரங்களை விடா மல் நடத்தி வருவர் அவர்கள் ஹாஸ்யராகாவிட்டாலும் ச்லாக்யராக மாட் டார். உயர்ந்த தேவதைகள்கூட ச்லாகிக்கும் நிலை மோக்ஷோபாயத்தில் இழிந்த மஹான்களுக்கு என்று கூறி உபஸம்ஹாரம் செய்கிறார் ஆகையால் இதி வயஸ; இதி மநுஸ்ம்ருதி-4-18 வயஸ:—தன் வயதிற்கும் கர்மண:— தான் செய்யவேண்டிய கார்யத்திற்கும் அர்த்தஸ்ய—ஐச்வர்யத்திற்கும் ச்ருதஸ்ய—சாஸ்த்ரஜ்ஞாநத்திற்கும் அபிஜநஸ்ய ச—தன் குலத்திற்கும் வேஷ-வாக்-வ்ருத்திஸாரூப்யம்—தன்னுடைய வேஷம் பேச்சு நட வடிக்கை இவைகளோடு ஒத்திருப்பை, ஆசரந்—செய்துகொண்டு இஹ இவ்வுலகில் விசரேத்—ஸஞ்சரிக்கவேண்டும். ஒவ்வொருவனும் தன்னுடைய வேஷவாக்வ்ருத்திகளை வயது முதலானவற்றிற்கு ஒத்தபடி செய்யவேண்டும். எந்தெந்த வயதில் எவ்வாறு வேஷவாக்வ்ருத்திகள் வேண்டுமோ அவ்வாறு அவற்றைக் காக்கவேண்டும். இப்படியே எல்லாவற்றிற்கும் கொள்க. எவனும் ஏதேனும் ஒரு வேஷம் பேச்சு வ்ருத்தி இவைகளில்லாமலிருக்க முடியாது. அவற்றைத் தன் வயது செயல் முதலானவற்றிற்கும் ஒத்தபடி வைத்துக்கொள்ளாமற்போனல் அவனும் ப்ரஷ்டனுவான். பால்யத்தில் ப்ரம்ம சர்யத்தில் கச்சம் தரிப்பதும் டவ்யப்படாமல் பேசுகையும் யௌவனத்தில் க்ரஹஸ்தாச்ரமத்தில் கச்சமிலாமையும் காஷாயாதி தாரணமும், வைதிக கர்மாக்களில் லௌகிகவேஷமும், ஐச்வர்யம் இருந்தும் ஏழ்மை வேஷமும் இவ்வாறு ஒன்றுக்கொன்று ஒத்திராமை கூடாது. ஆகையால் ஜ்ஞாநத் திற்கு அநுகுணமாக ஆசாரமும் ஸஹவாஸமும் உபாயப்ரவ்ருத்தியும் வேண்டுமென்றதாயிற்று இப்படி நடந்து கொள்வதும் புகழ்பெற வேணு மென்கிற எண்ணத்தோடு கூடாது புகழ் வந்துவிடுமே என்றஞ்சி விடுவதும் தகாதென்கிறார் தன் இதி. தான் செய்யவேண்டும் வர்ணாச்ரம தர்ம

"तं देवा ब्राह्मणं विदुः", "प्रणमन्ति देवताः" इत्यादிகளிற்சொல்லும் ஏற்றப்பெறுவர்கள்.

நின்ற புராணனடியிணையேந்துநெடும்பயனும்
பொன்றுதலேநிலையென்றிடப்பொங்கும்பவக்கடலும்
நன்றிது தீயதிதென்று நவின்றவர் நல்லருளால்
வென்றுபுலன்களைவீட்டினைவேண்டும்பெரும்பயனே. (14)

---

கார்யத்தை இது நாம் செய்யவேண்டியதென்பது மட்டும் கொண்டு செய்யவேண்டும். அதைக் கண்டு அதனால் தங்களுக்கு ஒன்றுமில்லையாகிலும் நல்லோர் உகக்கலாம். அப்படிப்பட்டவனை தேவர்கள் प्रणमन्ति என்றபடி வணங்கலாம்; மதிக்கலாம். அந்த ஏற்றத்தை எதிர்பார்த்துச் செய்வது தகாது. தானாக வரும் ஏற்றத்தை நிவர்த்திக்க முயற்சியும் வேண்டா. இது பலருக்கு வழிகாட்டியாகுமென்றபடி.

முமுக்ஷு என்டதைப் பாட்டினால்விவரிக்கிறார் நின்ற என்று. இங்கே வேண்டும் என்பது வினைமுற்று. சேதநன் என்று கர்த்தாவுக்கு அத்யாஹாரம். வீட்டினை என்பது கர்ம; வீட்டினை—வீட்டை. மோக்ஷத்தை; பாட்டின் பொருளாவது-கீழ 'திருமாதுடன் நின்ற புராணனையே' என்று முடிந்திருப்பதால் இங்கும் நின்ற என்பதற்கு 'திருமாதுடன் நின்ற' என்ற பொருள் சொல்லாமலே விளங்கும். அல்லது நின்ற= என்றுமழிபாமல் நின்ற என்றதாம். அதனால் இவனுடைய ப்ராப்தியாகிற மோக்ஷம் நித்யமென்றதாயிற்று. இப்படி நின்றவனான புராணன்= அநாதியான புருஷனுடைய அடி இணை—ஒன்றோடு ஒன்று ஒத்த திருவடிகளை ஏந்தும் சிரஸா தரிப்பதாகிற (கைங்கர்யம் செய்வதாகிற) நெடும் பயன் உம்= உத்தரகாலமெல்லாம் நீண்ட பரமபுருஷார்த்தத்தையும், பொன்றுதலே நிலை= அழிவதே இதற்கு நிலையான தன்மை என்றிட= என்னப்பட்டிருக்கும்போது; என்னவேண்டியிருக்க, பொங்கும்—மேன்மேல் எழுகின்ற, பவக்கடலும்—ஸம்ஸார ஸமுத்ரத்தையும் இது நன்று—நெடும்பயனை நல்லது இது தீயது—பவக்கடல் கெட்டது என்று நவின்றவர். என் உபதேசித்த ஆசார்யர்களின் நல்லருளால்—அவ்யாஜமாக வந்த க்ருபையினால் சேதநனானவன், புலன்களைவென்று= வேறு புருஷார்த்தத்தில் புகாதபடி இந்த்ரியங்களை ஜயித்து, பெரும் பயன்-மஹாபுருஷார்த்தமான வீட்டினை—மோக்ஷத்தையே வேண்டும்-விரும்புவான் மேலே ச்லோகத்திற்போல் இப்பாட்டிலும கைவல்யமும் தீயதாகக் கருதப்பெற்றதாகும். பவக்கடல் என்கிற பதத்தினாலே கைவல்யத்தையும் கொள்ளலாம். கைவல்யாநுபவம் ப்ரக்ருதி மண்டலத்திற்குள்ளிருப்பதே யாகையாலும் கைவல்யம் கழிந்த பிறகு ஸம்ஸரிக்கவேண்டியதுண்டாகையாலும் அவனையும் உட்கொள்ளும் படி இக்கடல் பொங்குகிறதென்று கருத்து. நல்லருளால் அருளுக்கு நன்மையாவது அண்டினவர்கள் க்ஷுத்ரபுருஷார்த்தங்களில் உழல்வதைப் பொறுக்கமாட்டாமல் அவசமாக வருகை. வென்று புலன்களை என்ற விடத்தில் புலன் என்று மனத்தையும் கொண்டிருப்பதால் ஆத்மா

विषमधु बहिष्कुर्वन् धीरो बहिर्विषयात्मकं
परिमितरसस्वात्मप्राप्तिप्रयासपराङ्मुखः ।
निरवधिमहानन्दब्रह्मानुभूतिकुतूहली
जगति भविता दैवात् कश्चिज्जिहासितसंसृतिः ॥ १९ ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे मुमुक्षुत्वाधिकारः सप्तमः ७.
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

—o—o—

---

நுபவமாகிற ஆகர்ஷகத்தில் அகப்படாமைக்காக மோக்ஷத்தில் த்ருடாத்யவஸாயத்தைக் கொண்டு மனத்தை வெல்லவேண்டுமென்று குறிக்கதகாம்.

தத்தவஜ்ஞாநம் எவ்வளவு விசகமாக விருந்தாலும் அப்படி ஜ்ஞாநமுள்ளவர் எல்லோரும் முமுக்ஷுக்களாகமாட்டார்; வைராக்யம் பூர்ணமாக வருவதென்பது ப்ராசீநவிசேஷஸுக்ருதத்தாலே யாகக்கூடியதென்று மேலே ச்லோகத்தால் அறிவிக்கிறார். விசேஷத்தீர: கச்சித் — "मनुष्याणां सहस्रेषु कश्चिद् यतति सिद्धये" என்றாற்போலே ஜ்ஞாநிகளுக்குள் விசேஷவிவேகியான ஒருவனே बहिर्विषयात्मकं — ஆக்மாவைக்காட்டிலும் வேறாய் வெளி இந்த்ரியங்களுக்கு விஷயமான ஐச்வர்யமாகிற विषमधु — துக்கத்தில் முடியும் ஸுகஹேதுவான விஷத்தோடு கலந்த தேனை. बहिष्कुर्वन् — மனதிற்படாதபடி அப்புறப்படுத்துகிறவனாய் परिमितरस — அத்யல்ப்பாநந்தமான स्वात्म — தன்ஜீவஸ்வரூபத்தின் प्राप्ति — பெறுகையாகிற கைவல்ய விஷயமான प्रयास — உபாயாநுஷ்டாநத்திலுள்ள ப்ரயாஸையினின்று पराङ्मुखः — விலகினவனாய் निरवधि — எல்லையற்ற महानन्द — பேராநந்தமாகிற ब्रह्म பரமாத்மாவின் अनुभूति — அநுபவத்திலே कुतूहली நிரம்ப ஆஸக்தையுள்ளவனாய் जिहासितसंसृतिः — ஸம்ஸாரத்தை விட விருப்பமுள்ளவனாக दैवात् - பாக்யத்தினால் யத்ருச்சாஸுக்ருதாதிகளால். भविता - ஆகப்போகிறான். ஸம்ஸாரத்தில் வெளி விஷயங்கள் விஷம் கலந்த தேன் போலிருப்பதால் எளிதில் விடப்பட்டாலும், கைவல்யத்தை விடான்; அங்கே சிறிதும் துக்கமில்லையே என்னில் அதுவும் அத்யல்ப்பமாகையாலே அதற்காகப் பாடுபடுவது மலையைக் கல்லி எலியைப் பிடிப்பதற்கு ஸமமாகும்.

இந்த ச்லோகம் முமுக்ஷுக்களாய் உபாயாநுஷ்டாநத்திலிழிகின்ற அனைவரையும் சொல்வதானாலும் பிறந்தது முதல் விஷயப்பற்றே சிறிதுமிராமல் ப்ரம்மாநந்தாநுபவத்திலேயே நோக்குள்ள விரக்தாக்ரேஸரர்களான சில மஹான்களை ஸ்வரஸமாகக் கருதியிருக்குமென்பர். அம் மஹான்கள் ப்ரம்மசர்யத்திலிருந்தே ஸந்யஸித்துக்கொண்ட ஆதிவண்சடகோபயதீந்த்ர மஹாதேசிகன், ஸாக்ஷாத்ஸ்வாமி என்று ப்ரஸித்தரான ஜ்ஞாநவைராக்யாநுஷ்டாநசேவதி ஸ்ரீமத்வேதாந்தராமாநுஜ மஹாதேசிகன் இவர்போன்றவர்கள். இந்த ஸாக்ஷாத்ஸ்வாமி க்ருஹத்தில் அவதரிக்கும்போது ஸ்ரீபாஷ்ய

காரர் கோயிலினின்று புறப்பாடாய் வீதியில் திருமாளிகைக்கு நேராக எழுந்தருளினதாகவும் அவரை ஸேவித்தக்கொண்டு ஸாக்ஷாத்ஸ்வாமியின் திருத்தகப்பனார் நின்றிருந்த போது புருஷப்ரஜை பிறந்திருப்பதாக பந்துக்கள் சொன்னதாகவும் அவர் ஜோதிச்சாஸ்த்ரவித்தான படியால் உடனே 'வெளியில் ஒரு ஸந்யாஸீ உள்ளே ஒரு ஸந்யாஸீ' என்றதாகவும், 'வம்சவ்ருத்திக்காக ஒரு குழந்தை ஜநித்தால் நல்லது; விரைவில் ஸந்யஸித்து விடுவனே' என்ற அச்சத்தினால் குமாரருக்கு பால்யத்திலேயே விவாஹம் செய்வித்ததாகவும் ருதுசாந்திதினத்தில் அரைக்குள் புகுந்த இம்மஹாவிரக்தர் பத்நியின் மேல் கண்ணோட்டமின்றி யதிஸார்வபௌமஸூக்திரஸாநுபவத்திலேயே ஆழ்ந்திருந்ததாகவும் இப்படியே சில நாள் செல்ல குமாரரைக் கூப்பிட்டு இது க்ருஹஸ்தனுக்கு லக்ஷணமன்றென்று தகப்பனார் சொல்ல, தேவரீர் நினைப்பதே முக்ய க்ருஹஸ்த தர்மமாகில் கார்ஹஸ்த்யமே வேண்டா என்று சில நாளில் ஸந்யஸித்துக்கொள்ள வெளியேறினதாகவும் ஸர்வவிதமான ஏஷணைகளையும் விட்டு தேசிகஸூக்திப்ரவசந—க்ரந்தநிர்மாணரூப கைங்கர்யமாத்ரபரராய் எழுந்தருளியிருந்ததாகவும் முன்னோர்கள் அருளிச்செய்வர். முமுக்ஷையின் முதிர்ச்சிக்கு உதாஹரணமாக இவர்களை எடுத்தாலும் இந்த ச்லோகத்தில் சொன்ன நிலை ப்ராயிகமாக ப்ரபந்நர்கள் எல்லோருக்கும் உண்டு.

முமுக்ஷுத்வாதிகாரம் முற்றும்.

ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம:

—o—o—

## அதிகாரிவிபாகாதிகாரம் 8.

முமுக்ஷுக்கள் எல்லோருமே ஸ்வதந்த்ர ப்ரபத்திக்கு அதிகாரிகளாக மாட்டார்கள்; சிலருக்கே இது உபாயமாகுமென்றறிவிப்பதற்காக மேலே மூன்று அதிகாரங்கள் முதலில் முமுக்ஷுக்களைப் பல அதிகாரிகளாகப்பிரிப்பது அதிகாரி விபாகாதிகாரத்தில் கீழ் அதிகாரத்தில், "நிவ்ருத்தி தர்மங்களிலே ப்ரவ்ருத்தரானவர்கள் முமுக்ஷுக்களான அதிகாரிகள்" என்றார். நிவ்ருத்தி தர்மங்களாவன கர்மயோகமும் ஜ்ஞாநயோகமும் பக்தியும் ப்ரபத்தியும்; இதை "मुमुक्षुणा यत् सांख्येन योगेन न च भक्तित:।" என்கிற வாக்யத்தாலும் தெரிவிக்கப்பட்டது. கர்மஜ்ஞாநயோகங்கள் பக்தியைப் போல் ஸாக்ஷாதுபாயமாகா விட்டாலும் அவையின்றி பக்தியோகம் செய்யவாகாவானபடியால் அவையும் முமுக்ஷு கார்யமே. லக்ஷ்மீதந்த்ரத்திலும் நிவ்ருத்தி தர்மங்கள் இந்நான்கு என்ற विभागமுள்ளது. ஆக, 'அவைபோல் ப்ரபத்தியும் பக்திக்கு அங்கமாகவே நிவ்ருத்தி தர்மமேயன்றி ஸ்வதந்த்ரமென்னலாகாது. ஸ்வதந்த்ரமாகில் குருபூதமான பக்தியோகத்தோடே இதற்கு விகல்பம் சொன்னால் பக்தியை யாரும் அநுஷ்டிக்கமாட்டார். மோக்ஷரூப பலத்தில் வைஷம்யமில்லையாகையால் 'विकल्पोऽविशिष्टफलत्वात्' என்கிற ந்யாயமாய் விகல்பம் சொல்ல வேண்டியதாகும். ஆக ப்ரபத்தி ஸாக்ஷாதுபாயமாகாது' என்கிற ஆக்ஷேபத்தைப் பரிஹரிப்பாராய் ச்லோகத்திலே இதை ஸங்க்ரஹிக்கிறார்.

श्रीः

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

## अधिकारिविभागाधिकारोऽष्टमः

## அதிகாரிவிபாகாதிகாரம் 8.

—o—o—

मुमुक्षुत्वे तुल्ये सति च मधुविद्यादिषु यथा
व्यवस्था संसिद्ध्यत्यधिकृतिशेषेण विदुषाम् ।
विकल्प्येत न्यासे स्थितिरितरविद्यासु च तथा
नियत्या वैयात्यं नियमयितुमेवं प्रभवति ॥ 20.

---

मुमुक्षुत्वे इति. ப்ரபத்தியும் ஸாக்ஷாத் உபாயமாகலாம். பக்தி மார்கங்கள் பல இருந்தாலும் அவற்றில் அவ்யவஸ்த்திதவிகல்பம் போலே வ்யவஸ்தித விகல்பமும் காண்கிறோம். सद्विद्यादहरविद्यादिகள் மோக்ஷமென்கிற பலத்திற்கு மாத்திரம் ஸாதநமானவை. அங்கே விகல்பம் அவ்யவஸ்திதம் = எதை வேண்டுமானாலும் செய்யலாம். மதுவித்யை முதலான மற்றும் சில பக்தியோகங்களுண்டு அவற்றுக்கு மோக்ஷபலன் போல் அதற்கு முன்னாக வஸ்வாதி தேவதாஸ்தாநப்ராப்த்யாதி பலமும் சிறிது காலமுண்டு. இங்கே ஸத்வித்யாதிகளுக்கும் மதுவித்யாதிகளுக்கும் மோக்ஷபலம் துல்யமாகையால் விகல்பமுண்டாகிலும் வ்யவஸ்த்தையுண்டு. 'மோக்ஷமாத்ரம் விரும்புகிறவனுக்கு ஸத்வித்யாதி; வஸ்வாதி பதப்ராப்தியும் சேர்த்து வேண்டுகிறவனுக்கு மதுவித்யையே; ஸத்வித்யாதிகளல்ல' என்பதே வ்யவஸ்தை. ஆக அங்கே அதிகாரிபேதம் அதிக்ருதி விசேஷத்தாலே = அதிகாரத்தில் फलेच्छैயில் வாசியாலேயாம். அதுபோல் பக்தி ப்ரபத்திகளிலும் அதிகாரவிசேஷத்தாலே வ்யவஸ்தையையங்கீகரிக்கிறோம். இனி மதுவித்யையில் பலத்தில் வாசியிருப்பதால் வ்யவஸ்தை கூடும். இங்கு அவ்வாறில்லையே என்று கேட்கலாம் பலத்திலும் தாரதம்யமுண்டு. பக்தியோக நிஷ்டன் ப்ராரப்த கர்மம் பூர்ணமாக அநுபவித்த பிறகே மோக்ஷம் பெறுவான். ப்ரபந்நன் ப்ராரப்த கர்மத்தையும் விலக்கி இந்த தேஹத்தின் முடிவிலேயே மோக்ஷம் பெறுவான். शीघ्रफलप्राप्ति காமனையுள்ளவனுக்கு ப்ரபத்தி யென்றதாயிற்று. மோக்ஷம் விளம்பித்துப் பெறப்பட்டாலும் இவ்வுலகில் பகவதநுபவரஸம் பெற வேண்டுமென்கிற ஆசையுள்ளவர் பக்தி யோகத்திலிழிவர் என்கிற விசேஷமுமுண்டு. மேலும் அதிகாரவிசேஷம் फलवैஷம்ய மூலமே யென்று நிர்பந்தமில்லை, பலன் துல்யமானாலும் சக்தனுக்கு குருவான வுபாயம், அசக்தனுக்கு இலகுவான உபாயமென்கிற வ்யவஸ்த்தை கூடும். ஆக ச்லோகார்த்தமாவது

मुमुक्षुत्वे—மோக்ஷத்தில் ருசி துல்யமாயிருந்தாலும் மதுவித்யை முதலான சில பக்தியோகங்களிலே फलவைஷம்யத்தைக்கொண்டு வ்யவஸ்திதவிகல்பம் எப்படியோ, तथा—அப்படியே न्यासे—ப்ரபத்தியிலும் इतरविद्यासु च—பக்தி யோகங்களிலும் வ்யவஸ்த்தை, ஸித்திக்கும். மதுவித்யாதிகளில் फलவைஷம்ய

இப்படி परमपुरुषार्थोपायங்களான निवृत्तधर्मங்களிலே प्रवृत्तரான अधिकारिகள் இருவர். அவர்களாகிறார்—अङ्गत्वप्रपत्तिनिष्ठனும் स्वतन्त्रप्रपत्तिनिष्ठனும்.

स्वतन्त्राङ्गप्रपत्तिभ्यां प्रपन्नाविव तावुभौ। फलसाधनभक्तिभ्यां भक्तावपि च दर्शितौ॥

---

மாகிற அதிகாரவிசேஷமுள்ளது பக்தியைக்காட்டிலும் ப்ரபத்தியில் அதிகாரவிசேஷம் ஃபலவைஷம்யத்தாலும் சக்த—அசக்தாதிகாரிபேதத்தாலும் என்றறிக. ஒருவனுக்கு சீக்ரமோக்ஷப்ராப்தியில் விருப்பமும் மற்றொருவனுக்கு விளம்பித்து மோக்ஷப்ராப்தியில் விருப்பமும் ஏன் உண்டாகிறதென்னில், இதற்கு ஸமாதாநம் நான்காம் பாதம் नियत्याः—பூர்வஜன்ம அத்ருஷ்டத்தினுடைய वैयात्यं—தார்ஷ்ட்யமானது (துணிவு=ப்ராபல்யம்) एवं—இவ்வாறு नियमयितुं—வ்யவஸ்தை செய்வதற்கு प्रभवति—ஸமர்த்தமாகிறது. வெவ்வேறு விதமான விருப்பத்திற்குப் பூர்வாத்ருஷ்டமே காரணமாகும் பக்தியில் சிலருக்கு வஸ்வாதி பதப்ராப்திகாமனை; சிலருக்கு அதில்லை. ப்ரபத்தியில் சிலருக்கு ஆர்த்தி. சிலருக்கு தேஹாவஸாநத்திலே மோக்ஷத்தில் விருப்பம். சிலருக்கு மோக்ஷத்தில் விருப்பமே வருகிறதில்லை, எல்லாவற்றிற்கும் நியதிதான் காரணம். இதுபோல் சக்தி—அசக்திகளுக்கும் நியதியே காரணம். ஆகையால் द्विरूपமான ப்ரபத்திக்கு வ்யவஸ்தித விகல்பம் கூடுமாகையால் ஸ்வதந்த்ர ப்ரபத்தியை இசைவதில் விரோதமில்லை.

இப்படி பக்தியும் ப்ரபத்தியும் தனித்தனியதிகாரிகளிடம் வ்யவஸ்திதமாகில் "मामेव ये प्रपद्यन्ते" "चतुर्विधा भजन्ते मां" என்று ப்ரபந்நரையே பக்தராகச் சொன்னது சேருமோ ஆகையால் பக்தரை விட ப்ரபந்நரை வேறாகப் பிரிக்கலாகாதென்ன, பிரித்து நிர்வஹிக்கிறார் இப்படி இதி. நிவ்ருத்தி தர்மங்கள் நாலிலே கர்மயோக ஜ்ஞாநயோகங்கள் போலன்றி பரமபுருஷார்த்தத்திற்கு ஸாக்ஷாதுபாயமாக பக்தி போல் ப்ரபத்தியும் ஸித்தமாகையால் அதிகாரிகளிருவரென்று பிரிப்பது தகும் பக்தர்களையும் ப்ரபந்நர்களாக வசநங்கள் ப்ரவிப்பதால் பக்தன் ப்ரபன்னன் பக்திநிஷ்டன் ப்ரபத்திநிஷ்டன் என்று பிரிக்கமுடியாவிட்டாலும் அத்வாரக ப்ரபத்தி நிஷ்டன் ஸத்வாரக ப்ரபத்தி நிஷ்டன் என்று பிரிக்கலாம் பக்தி ப்ரபத்திகளிரண்டும் பகவத் ப்ரஸாத த்வாரா மோக்ஷஸாதநமாகையால் அத்வாரகமாகுமோ வென்னில். அத்வாரக ப்ரபத்தி யென்பதற்கு மோக்ஷஸாதநமாகத் தான் செய்யும் வ்யாபாரமொன்றை இடையிடாத ப்ரபத்தி யென்று பொருள். பக்தியோக நிஷ்டன் செய்யும் ப்ரபத்தியெல்லாம் பக்தியை ஸாதிப்பதற்காய் அங்கமாகையாலே அது பக்தியைக் கொண்டு ஸத்வாரகமாகிறது. स्वतन्त्रेति. ஆக இருவரும் ப்ரபந்நர்கள், ஒருவனுடைய ப்ரபத்தி ஸ்வதந்த்ரம். நேராக மோக்ஷஸாதநமாகையால் ப்ரதாநம்; அங்கமன்று. பக்தனுடைய ப்ரபத்தி அங்கம். இதுபோல் இருவரும் பக்தர்களாகவும் சொல்லப்பட்டிருக்கிறார்கள். भक्तानां त्वं प्रकाशसे. भक्तजनवात्सल्यम्. मम मद्भक्तभक्तेषु இத்யாதி வாக்யங்கள் இருவரையும் குறிக்குமே. அதில் விசேஷமென்னவெனில்—பக்தியோக நிஷ்ட

"ज्ञानी त्वात्मैव मे मतम्" என்கிறபடியே यथाधिकारं कर्म-ज्ञान-भक्ति-प्रपत्तिनिष्ठர்களும்

ருடைய பக்தி மோக்ஷஸாதநமாய் உபாயமாகும். ப்ரபந்நனுடைய பக்தி ஸ்வயம்ப்ரயோஜநம். உபாயமன்று. இருவருக்கும் பகவானிடத்தில் ப்ரீதியுண்டு. ஆனால் பக்தனுக்கு பக்தியே உபாயமாகையால் அதற்கு 'स्नेहपूर्वमनुध्यानम्'மென்று லக்ஷணமாகையால் ப்ரீதியுமுபாயகோடியில் சேரும். ப்ரபத்தி லக்ஷணத்தில் ஸ்நேஹம் சேராமையால் அது அவனுக்கு ஸஹஜமாயிருப்பதேயன்றி உபாய கோடியில் சேராது. இப்படி பக்தி சப்தத்திற்கு வேறு அர்த்தத்தைக்கொண்டு நிர்வாஹம். இது स्वाङ्गभक्ति என்கிற ப்ரபத்தியின் பெயருக்கிணங்கியதாகும். ப்ரபந்நபாரிஜாதத்தில் விஷ்வக்ஸேநஸம்ஹிதாச்லோகம் भक्तिशब्दश्च मुख्यं कृत्वा प्रपत्तौ पर्यवस्यति। सेवा तु प्रोच्यते सद्भिः भक्तिशब्देन भूयसी என்று உளது. ஸேவையென்ற பொருளைக்கொண்டால் ப்ரபன்னன் கைங்கர்யமாகவே எல்லாம் செய்வதால் இவனும் பக்தனாகிறான். இனி, அங்கமாகவோ அங்கியாகவோ மோக்ஷார்த்த ப்ரபத்தியுடையவன் ப்ரபன்னனென்றது போல் एकभक्ति யாய் பகவானையே உபாயமாகப்போல் உபேயமாகவும் கொண்டு அவனிடம் பெற்ற பக்தியே பக்தி. அது உள்ளபடியால் இருவரும் பக்தராவரென்னலுமாம் ப்ரபத்தியைக்கொண்டு பிரிப்பது போல் உபாயபூதபக்தியுடையவன் பலபூதபக்தியுடையவன் என்றிருவராய் ஏன் பிரிக்கவில்லையென்னில், இங்கு ப்ரபத்தி விசாரமே ப்ரதாநமாகையால் அதையிட்டே விபாகம் செய்தது. மேலும் கர்மயோக ஜ்ஞாநயோக நிஷ்டர்களுக்கும் அமுமுக்ஷுக்களான பலருக்குங்கூட பலபூதபக்தியிருப்பதால் அவ்வாறு விபாகம் தகாது. 'இப்படி ஸத்வாரக ப்ரபத்தி நிஷ்டன் என்பதும் கர்மயோக ஜ்ஞாநயோக ஸாதாரணமாகுமே; மேலதிகாரத்தில் "மற்றவதிகாரிக்கும் கர்மயோகாதிசாரம் முதலாக.........கர்த்தவ்யங்களில் அத்யந்த அசக்யமான நேர்களிலே இப்படி ப்ரபத்தி வசீக்ருதனான ஈச்வரன்" என்ற வாக்யத்தினாலே ப்ரபத்தி கர்மயோகாதித்வாரகமாகவுமாகிறதென்று தெரிகிறதே என்னில்-அந்த நிவ்ருத்தி தர்மநிஷ்டரையும் க்ரஹித்தால் குற்றமில்லையென்க அல்லது ஸத்வாரக ப்ரபத்தியென்பதற்கு பக்தித்வாரக ப்ரபத்தியென்பது பொருளாகும். இது போல் கர்மயோகியையும் பக்தி நிஷ்டன் என்னலாம். பக்தியை நிஷ்டையாக முடிவான உபாயமாகக்கொண்டு தானே கர்மயோகத்திலிழிகிறான்.

இனி இவ்விபாகமும் தகாதென்போம். ப்ரபத்தி நீங்கலாக உக்தியும் ஆசார்ய நிஷ்டையுங்கூட மோக்ஷோபாயமாக ஸம்ப்ரதாய ஸம்மதமாகையால் இருவர் என்னவொண்ணாதே என்ன அவர்களும் அத்வாரக ப்ரபத்தி நிஷ்டரேயென்று த்ருஷ்டாந்த பூர்வகம் அருளிச்செய்கிறார் ஸ்நாநமிதி ஸ்நாநம் ஏழுவகையானது. வாருணம் மாந்த்ரம் மாநஸம் திவ்யம் வாயவ்யம் பார்த்திவம் ஆக்நேயம் என்றவாறு. வாருணம்—अवगाहस्நானம். மாந்த்ரம்—आपो हि ष्ठा இதி மந்த்ரங்களைக்கொண்டு ப்ரோக்ஷணம். மாநஸம்—அஷ்டாக்ஷராதி மந்த்ரங்களைக்கொண்டு பகவத்திவ்யமங்கள விக்ரஹ சிந்த

मुख्यप्रकारங்களான स्नानभेदங்களாகுற்போலே उक्ति आचार्यनिष्ठ என்கிற இவையும் प्रपत्तियில் मुखभेदங்கள்.

---

நம். திவ்யம்—வெய்யிலுடன் சேர்ந்த மழைத்துளியில் நிற்பது. வாயவ்யம்-காற்றில் வரும் गोधूळி படு நிற்கை. பார்த்திவம்-புண்ட்ரதாரணாதி. ஆக்நேயம்—சாஸ்த்ரஸம்மதமான பஸ்மத்தை (சாம்பலை) பூசுவது. "आपोहिष्ठादिभिर्मन्त्रं मृद्लम्भस्तु पार्थिवम्। आग्नेयं भस्मना स्नानं वायव्यं गोरजः स्मृतम्॥ यत्तु सातपवर्षेण दिव्यं तत् स्नानमुच्यते। वारुणं चावगाहस्तु मानसं विष्णुचिन्तनम्॥" मानसं प्रवरं स्नानं सर्वे शंसन्ति सूरयः।' என்றது காண்க. அவகாஹஸ்நாநமான வாருணத்திலே சக்தியில்லாதவனுக்கு மாந்த்ராதி ஸ்நாநங்கள். அவற்றில் ஏதேனுமொன்றும் போதும். அவகாஹஸ்நாநம் செய்தவர்களும் பாஹ்ய ஜலத்தில் அநேக அசுத்தியிருக்குமாகையாலே மாந்த்ராதி ஸ்நாநத்தைச் செய்ய விதியுள்ளது. ध्यानानुस्मरणं परम् என்கிறந்யாயமாய் மாநஸம் பகவத்த்யாநமாகையாலே சிறந்தது. ஒன்று செய்தால் வேறொன்று கூடாதென்று நிஷேதமில்லையாகையால் ஸமுச்சயமும் கூடுமானாலும் துல்யபலங்களாகையாலே விகல்ப்பம் ஸம்மதமே. இப்படி ஸ்நாநம் எழுவிதமானாற்போலே ப்ரபத்தி மூன்று விதமாகையால் உக்தி ஆசார்யநிஷ்டை செய்பவரும் ப்ரபத்திநிஷ்டரே ப்ரபத்தியின் முகபேதங்கள் என்பதற்கு ப்ரபத்தியின் ப்ரகாரபேதங்கள்—அவாந்தரபேதங்கள் என்று பொருள். அல்லது ப்ரபத்தியிலும் ஓரொன்றை முன்னிட்டு. இப்பெயர்கள். முகபேதமாவது-முன் நின்றவஸ்துவின் பேதம் = வாசி; உக்திநிஷ்ட்டையில் முகமாவது ஸமுதாய ஜ்ஞாநபூர்வகமாக பூரண ப்ரபத்தி கர்ப்பமான உக்தியே. ஆசார்ய நிஷ்டையில் பரஸமர்பணத்திற்காக ஆசார்யாச்ரயணம் முகமாகும்.

இனி ஸ்நாநமாவது சரீரத்திற்குள்ள அசுத்தியைப் போக்கச் செய்யப்படும் நீராட்டம். உடலின் மேல் ப்ரத்யக்ஷமாயுள்ள அழுக்கு நீராட்டத்தால் போவதால் அங்கே ஸ்நாந பதத்திற்கு ப்ரயோகம் அதிகமாக விருந்தாலும் சாஸ்த்ரவிதிப்படி மாந்த்ரமாநஸாதி வ்யாபாரங்களாலும் சரீரத்தில் நம்மால் காணவாகாத அசுத்திகள் போகிறபடியால் எல்லா ஸ்நாநங்களுக்கும் कायशुद्ध्यर्थव्यापारत्वம் என்று பொதுவாக லக்ஷணமிசைகிறோம். அதைப்போல் ஜ்ஞாநரூபமான ப்ரபத்திக்கும் வாச்வ்யாபாரமான உக்திக்கும் ஆசார்யாச்ரயணமான காயிக வ்யாபார வ்ருத்திக்கும் ஸாதாரணமாகும்படி ஒரு ப்ரபத்தி லக்ஷணம் சொல்லி ப்ரபத்தி மூன்றுவிதமென்பதா அல்லது உக்தி ஆசார்ய நிஷ்டை இரண்டையும் தந்மூலக மாநஸ ஜ்ஞாநமாகப் பரிஷ்கரித்து ப்ரபத்தி மூன்றுவிதம் என்பதா என்ற கேள்வியில் இரண்டாவது பக்ஷமே உசிதமென்றறிவிக்கப் பரிஷ்காரம் செய்கிறார் உக்திபாவது இத்யாதியால் முக்ய गौण ஸாதாரணமாக ஸ்நாந லக்ஷண மிசையலாம். வாசிககாயிகவ்யாபாரஸாதாரணமாக ப்ரபத்திலக்ஷணமிசைவது தகாது. ज्ञानादेव मोक्षः என்கிற சாஸ்த்ரம் விரோதிக்குமே. இதன் விரிவு வேறிடத்தில். ஆகையால் உக்தி ஆசார்ய

இவற்றில் उक्तिயாவது—आनुकूल्यसङ्कल्पाद्यङ्गங்களில் वैशद्यமில்லாதார் அவனை

நிஷ்டையென்கிற பதங்களுக்கு ஜ்ஞாநரூப ப்ரபத்தி வரையில் பொருள் கொள்ள வேண்டுமென்று கருத்து இவற்றில் ஆசார்ய நிஷ்டா பதத்தின் அர்த்த விஷயத்தில் யாருக்கும் விவாதமில்லை. உக்தி பதார்த்த விஷயத்தில் விவாதப்படுவர். அதாவது வாக்வ்யாபாரமான உச்சாரணமே சாஸ்த்ர பலத்தாலே நேராக மோக்ஷஸாதநமாகலாமென்கிறனர் சிலர். அப்படியாகில் मन्त्रार्थं मुक्तिबीजं परिणतिवशतः फलते सम्पदाय' என்று ந்யாஸவிம்சதியில் மந்த்ரோசச்ரணம் மட்டும் போதாது; அதற்குப் பிறகு அதன் கார்யமான ஜ்ஞாநரூப ப்ரபத்தி செய்யப்படவேண்டுமென்றருளியது விரோதிக்காதோவென்னில் விரோதமில்லையென்கின்றனர் மந்த்ரோச்சாரணம் மட்டும் செய்தவர்களுக்குப் பின்னால் ப்ரபத்தி அவச்யம் வேண்டும். மந்த்ரார்த்த ஸமுதாய ஜ்ஞாநத்தோடு மந்த்ரோச்சாரணம் செய்தால் அதற்குப் பிறகு ப்ரபத்தி வேண்டா. இந்த ஸமுதாய ஜ்ஞாந விசிஷ்ட உச்சாரணமே உக்தியென்பதாகுமென்றவாறு. ஆகையால் இவ்வாக்யத்தின் முடிவில் உனக்கே பாமாக ஏறிட்டுக்கொள்ள வேண்டுமென்கை என்ற சொல்லுக்கு ஏறிட்டுக்கொள்ளவேண்டுமென்று ப்ரார்த்தநாவாக்யத்தைச் சொல்லுகையென்று பொருள் கொள்வதென்பர் வேறு சிலர் ஏறிட்டுக்கொள்ள வேண்டுமென்பதற்கு ஏறிட்டுக்கொள்ள வேண்டுமென்றபேக்ஷிக்கையென்று பொருள் கூறி அபேக்ஷையாவது उपायभूतो मे भवेति प्रार्थना मतिः என்னப்பட்ட மாநஸ ஜ்ஞாநமேயாகையால் உக்தி நிஷ்டையிலும் மாநஸ ஜ்ஞாநமான ப்ரபத்தியே கடையில் நிற்பது. கடையிலிருப்பதே ப்ரதானமென்ற நியமமிராவிடினும் இங்கு உள்ள நிலையிதே என்பர்.

இவ்வாக்யத்தில் பதங்களுக்கு அர்த்தமாவது. வைசத்யமில்லாதார் என்கிறது ஏறிட்டுக்கொள்ளவேண்டுமென்கையென்கிறதற்குக் கர்த்தா. சரணமாகப் பற்றுகிற என்பதற்கு கர்ப்பமான என்பதோடு அந்வயம் மந்த்ரத்திலே ஸாங்க ப்ரபத்தி பூர்ணமாகச்சொல்லப்பட்டிருப்பதை விசதஜ்ஞாநமில்லாதார் அறியாவிட்டாலும் இம்மந்த்ரம் இந்த இந்தபாகத்தால் இந்த இந்த அம்சத்தைச் சொல்லுகிறதென்று ரக்ஷகனான சரண்யன் அறியுமளவுக்குப் பதங்கள் பொதிந்த வாக்யமாயிருந்தால் போதுமென்றபடி. ஆநுகூல்ய ஸங்கல்பாத்யங்கங்கள் என்ற அங்கபதத்தால் ஷடங்கமான உபாயத்தில் ஆறு அங்கங்களையும் கொள்க. அவற்றில் வைசத்யமாவது ஆநுகூல்ய ஸங்கல்பாதிகள் இத்தகையவை இவற்றில் இது அங்கம், இது அங்கி, இவை கண்டோக்தமாகவும் வ்யங்க்யமாகவும் இந்த இந்த பதங்களால் சொல்லப்படுகின்றன, இங்கு அங்கங்கள் அங்கிக்குச் செய்யுமுபகாரம் இத்தகையது என்றவையெல்லாம் அஹிர்புத்ந்யாதி ஸம்ஹிதைகளிலுள்ளபடி தெளிகை இது பூர்ண ஜ்ஞாநிகளுக்கு ஏற்படும். இவ்வைசத்யமில்லாதார் செய்வதை உக்தியென்றது. ஆகில் அங்கங்களில் ஒன்றான ஆகிஞ்சந்ய ஜ்ஞாநம் (எனக்கு

யொழியப் போக்கற்று நிற்கிற அதிகாரமும், அபேக்ஷித்தால் ரக்ஷிக்கு மென்கிற விச்வாஸமுமுடையராய்க்கொண்டு சரணாகதியைப் பூர்ணமாக

---

வேறு உபாயமில்லை என்கிற தெளிவு) இல்லாதவர்களும் மஹாவிச்வாஸமில்லாதவர்களுங்கூட உக்தி நிஷ்டை செய்யலாமோ என்ற ஆக்ஷேபத்தைப் பரிஹரிக்க அவனையொழிய இத்யாதி. அதிகாரமுடையராய் = தமக்கு உபாயாந்தரமில்லையென்கிற ஜ்ஞானமுடையராய். உபாயாநுஷ்டாநம் செய்யாமற் போனாலும் உடையவன் உடைமையைக் காப்பானென்று மஹாவிச்வாஸத்துடன் வாளாவிருந்தால் உபயோகமில்லை அப்போது உக்தி நிஷ்டையும் செய்ய மாட்டார்கள் என்றறிவிக்க அபேக்ஷித்தால் ரக்ஷிக்குமென்றது அபேக்ஷை = ஶ்ரோத்ரவரணம். மந்த்ரோபதேசமில்லாமல் செய்த ப்ரபத்தி மோக்ஷஸாதநமாகாதென்றறிவிக்கிறார் சரண்யன் இத்யாதியால். ஆநுகூல்யஸங்கல்பாத்யங்கங்கள் போலே மந்த்ரோச்சாரணமும் வேண்டுமென்றதாயிற்று எளிதில் அங்கங்களையறியுமளவுக்கு வேண்டும் பதங்களில்லாத ப்ரணவாதிமந்த்ரங்கள் உக்தி நிஷ்டைக்குப் போதாவென்ற கருத்தாலே பூர்ண ப்ரபத்தி கர்ப்பமான என்றது. த்வயாதிகாரத்தில், 'மந்த்ராந்தரங்கள் இப்படி சரண்ய சரணாகதி-தத்பலங்களை விசதமாக ப்ரகாசிப்பியா; திருமந்த்ரத்திலும் இவைமூன்றும் ஸங்க்ஷிப்தங்கள். ஆகையாலே ப்ராப்ய ப்ராபக விசேஷங்களை ஸம்பூர்ணமாக ப்ரகாசிப்பிக்கிற இத் த்வயமே ப்ரபத்திமந்த்ரங்களெல்லாத்திலும் ப்ரதாநம்' என்றதால் இது பூர்ண ப்ரபத்தி கர்ப்பமே. வாக்யத்தாலே என்பதற்கு மந்த்ரத்தாலே யென்று பொருள். சில அதிகாரிகளுக்கு மந்த்ரமில்லாத வாக்யங்களும் ப்ரபத்திக்கு ஸாதநமாகலாமென்று குறிப்பதற்காக வாக்யபத ப்ரயோகம். வாக்யத்தாலே யென்பதற்கு வேணுமென்கை யென்பதில் அந்வயம். இங்கே என்கையென்பதற்கு என்று சொல்லுகையென்று பொருள் சொல்பவர் வாக்யத்தாலே வேணுமென்கை என்பதற்கு வாக்யத்தைச் சொல்லுகை யென்று முடிவாக அர்த்தம் சொல்லுவர். என்கையென்பதற்கு என்று அநுஸந்திக்கையென்று சொல்பவர் மந்த்ரரூபமான வாக்யத்தைச் சொல்லி பிறகு மாநஸஜ்ஞாநமான ப்ரார்த்தனையைச் செய்வது ஆக உக்தியென்பதற்கு உக்தி பூர்வக ப்ரார்த்தநாத்மக மாநஸஜ்ஞாநமென்று பொருள் கொள்வர். இப்போது பாசுரத்தைச் சொல்லிச் சரணம் புகுமென்ற த்ருஷ்டாந்த வாக்யத்துடன் பொருத்தமுண்டென்பர். இப்போது ஆசார்யநிஷ்டாபதம் போலே இதுவும் ஜ்ஞாநபரமாகும். ஸாரஸங்க்ரஹத்தில், வாக்யத்தாலே என்பதற்கு மந்த்ரத்தாலே என்கிற பொருளோடு நிற்காமல் த்வயத்திற்கு அர்த்தமான அங்காங்கிகளைக் விரித்து ப்ரதிபாதிக்கும் ந்யாஸவித்யா ப்ரயோக ஸங்க்ரஹ வாக்யத்தாலே யென்று பொருள் கொள்ளப்பட்டது, மந்த்ரத்தோடு நிற்காமல் இப்படி ப்ரபத்தி ப்ரயோக உச்சாரண ஸம்ப்ரதாயத்தை இப்போதும் காண்கிறோம். இப்படி ப்ரயோகித்தாலும் பதவாக்ய வ்ருத்-
ந்தமறியாதவர்களுக்கு ஸமுதாயமாக இவ்வாக்யராசிக்கு இந்த ஷடங்கம்

பொருளென்றுதான் ஜ்ஞாநமிருக்கும். மற்றவருக்கு விசதமாகவே யிருக்கும். விசதஜ்ஞாநமுள்ளவர் போல் ஸமுதாயஜ்ஞாநமுள்ளவரும் இந்த சப்தோச்சாரணத்தோடு நிற்காமல் ஆநுகூல்ய ஸங்கல்பாத்யங்காங்கிகளை யநுஷ்டிக்க வேண்டும். இப்படி அந்த அந்த வாக்யோச்சாரணத்தைத் தொடர்ந்து உண்டாகும் ஜ்ஞாநம் ப்ரபத்தி ரூபமாகையால் உக்தி நிஷ்டையும் ப்ரபத்தியிலடங்கிற்று. உனக்கே பரமாக ஏறிட்டுக் கொள்ள வேண்டுமென்கிற ஜ்ஞாநத்தில் பரந்யாஸமும் கோப்த்ருத்வவரணமும் அடங்கியிருக்கிறபடியால் 'பரந்யாஸாநுஷ்டாநமிங்கு தெரியவில்லை' என்னலாகாது. இது "அஸிதெ துஸ்ஸாதெ" என்கிற ஸாங்க ப்ரபதநாதிகார ச்லோகத்தில் ஸ்பஷ்டமாகும்.

இந்த வாக்யத்தில் உக்தி நிஷ்டனுக்கு அங்கங்களில் வைசத்யமில்லையென்று சொல்லி ஆகிஞ்சந்யம் விச்வாஸம் பரந்யாஸம் கோப்த்ருத்வவரணம் இவற்றை மட்டும் சொல்லியிருப்பதால் உக்தி நிஷ்டன் ஆநுகூல்ய ஸங்கல்ப, ப்ராதிகூல்ய வர்ஜநஸங்கல்பங்களைச் செய்யாமலிருக்கலாமென்ன வொண்ணாது. விசதஜ்ஞாநத்தைப் போல் அவிசத ஜ்ஞாநத்தைப் பெறுவதும் யதாசக்தி யநுஷ்டாநத்திற்கேயாகையால் அவிசதமாக அவற்றின் அநுஷ்டாநம் ஸித்தமே. சிலர் "இம் மந்த்ரார்த்தத்தினுடைய ஸமுதாய ஜ்ஞாநபூர்வக ஸக்ருதுச்சாரணமே" என்கிற ஸ்ரீஸூக்தியைக் கொண்டு உக்தி நிஷ்டனுக்கு அங்காங்கிகளுடைய ஜ்ஞாநமே போதும்; அநுஷ்டாநம் வேண்டியதில்லை யென்றனர். பின்னுள்ளார் அநுஷ்டியாத போது ப்ரபத்திக்கு உக்திநிஷ்டையில் ப்ரவேசமிராமற் போமாகையால் அநுஷ்டாநம் வேண்டியதே. ஆனால் அங்காங்கியநுஷ்டாந பூர்வகமாக மந்த்ரோச்சாரணமிங்கு. முக்ய ப்ரபத்தியில் மந்த்ரோச்சாரணத்திற்குப் பிறகு ப்ரபத்த்யநுஷ்டாநமென்று வாசி யாம். இப்படி முடிவிலநுஷ்டிக்கப்படுகிறபடியால் உக்தி நிஷ்டையில் உச்சாரணம் ப்ரதாநமாகிறது. ஆகையினால் ஏறிட்டுக் கொள்ளவேணுமென்கிற வாக்யத்திற்கு அநுஸந்திக்கையென்கிற அர்த்தத்தை விட்டு வாக்யோச்சாரணம் செய்கை என்கிற அர்த்தம் கொள்ளவேண்டுவதாமென்கின்றனர். ஸாராஸ்வாதிநியை யநுஸரிக்கிறவர்கள் இதை யிசையார். எந்தவிடத்திலும் மந்த்ரப்ரயோகமானது அநுஷ்டிக்க வேண்டிய அர்த்தத்தை ஸ்மரிப்பதற்கேயாகும். அது மூலமாக ஸ்மரித்தே யநுஷ்டிக்க வேண்டும். அதனால் அது கரணமந்த்ர மென்கிற மீமாம்ஸாஸித்தமானதை விடுவதற்கு ப்ரமாணமில்லை. ப்ரபத்திவிசிஷ்ட வாக்யோச்சாரணமென்ற போது—உச்சாரணத்திற்கு ப்ரபத்தி அங்கமாகில் த்ருஷ்ட ரீதியில் உபகாரகமாகாது. உச்சாரணம் ப்ரபத்தி ஸாதநமாகில் த்ருஷ்ட ரீதியில் உபகாரகமாம் இப்போது அதை விட்டதாம் ஸமஸமுச்சயபக்ஷத்தில் ஜ்ஞாநகர்மஸமுச்சயவாதமாம். உச்சாரண மாத்ரம் உபாயமென்கிற பக்ஷத்தில் ஜ்ஞாநமே உபாயமென்கிற ஸித்தாந்தத்தை மீறினதாகும் 'தமேவ விதித்வா' என்கிற ச்ருதிவாக்யத்தில் பகவானே உபாயம் வேறொருவரல்லர் என்கிற

आचार्योपदेशவாக்யத்தாலே, தாதிமார் சொன்ன பாசுரத்தைச் சொல்லி सार्व-भौमனை शरणம் புகும் मुग्धரான सामन्तकुमारர்களைப் போலே. என்னுடைய रक्षை உனக்கே भरமாக ஏறிட்டுக் கொள்ளவேணுமென்கை.

---

யோஜனையைக் கொண்டாலும் ஜ்ஞாநம் மட்டுமே மோக்ஷத்திற்கு ஸாத்யோபாயம் என்கிற புருஷார்த்தாதிகரண பாஷ்யகார ஸித்தாந்தத்தை. இல்லையென்ன வொண்ணாது. "सकृदुच्चारः संसारमोचनं भवति" என்கிற வாக்யம் விசதாவிசதஜ்ஞாநயுக்த ஸர்வ புருஷ ஸாதாரணமாகையால் உச்சாரணத்துக்கு ப்ராதாந்யத்தைக் காட்டாது. 'येन केनापि प्रकारेण द्वयवक्ता' என்பதும் ஸ்ரீபாஷ்யகாரரைப் போன்ற விசத ஜ்ஞாநிகளையும் கொள்வதாகையால் உச்சாரண ப்ராதாந்ய ஸாதகமாகாது இத்யாதி அம்சங்கள் இவர்களுடைய க்ரந்தங்களிலே விரிவாகக் காணவேண்டியவை, விரிவுக்கு இங்கு இடமில்லை.

விசதஜ்ஞாநமில்லாதவர்களுக்கும் பலம் ஸித்திப்பதை சாஸ்த்ர மூலமே யிசைவதாம். அதற்கு லோகத்ருஷ்டாந்தமும் அருளிச்செய்கிறார் தாதிமார் இதி. தாதிமார்—धात्री என்னப்படும் வளர்க்கும் தாய்கள். அவர்கள் வளர்க்கும் நிலைமையிலிருக்கும் குமாரர்களுக்கு, தங்கள் கஷ்டமோ, ஸார்வபௌமரிடம் பேசவோ நெருங்கவோ தெரியாதாகையால் அவர்கள் சொல்லியனுப்புகின்றனர். அச் சொல்லுக்குப் பொருளைக் குமாரர்கள் அறிய இயலார். ஸார்வபௌமன்-ஸர்வபூமிக்கும் அரசனாயி நக்கிறவன். मुग्धரான = ஒன்றுமேயறியாத. அவனால் ஸாமந்தரெனப்படும் சுற்றுப்புறங்களிலிருக்கும் சிற்றரசர்கள் துஷ்டர்களாயிருந்து சிக்ஷிக்கப்பட்டபிறகு கதியற்ற நிலையிலே குமாரர்களுக்குப் பின்னே ராஜ்பாதி ஸௌக்யத்திற்காக வழி தேடி தாதிகள் செய்யும் செயலிது போலே என்பது என்கையென்பதோடு சேரும். 'தாதிமார்சொல்ல சரணம் புகும்' என்னாமே பாசுரத்தைச் சொல்லி என்றது ப்ரக்ருதத்தில் आचार्योपदेशவாக்யத்தாலே யென்று மந்த்ராதி சொற்களிருப்பதால் அதற்குத் தகுந்தபடி த்ருஷ்டாந்தத்தை யமைப்பதற்காகவாம். "சொல்லி சரணம் புகும் என்றாலும் சொல்வதும் சரணம் புகுவதும் ஒன்றே; இச்சொல் சரணாகதி யென்கிற ப்ரார்த்தநாசப்தவிசேஷமென்று தெளிவிக்க அவ்வாறு சொன்னது" என்பர் சிலர், पक्त्वा भुङ्क्ते என்றாற்போலே சொல் வேறு, ஜ்ஞானரூப சரணாகதி வேறு என்று சொல்லக் கூடுமாகையால் அர்த்தபேதமே ஸ்வரஸம். ஆக சரணம் புகுமென்று மாநஸகாயிக வ்யாபாரங்களைக் கொள்வதென்பர் பிறர். இந்த ந்யாயமே வாக்யத்தாலே... என்கை யென்ற விடத்திலும், என்கை யென்பது மாநஸவ்யாபாரத்தைச் சொல்லும் முக்யமான பரந்யாஸத்தைச் சொல்லாமல் ப்ரார்த்தனையைச் சொல்வானே யென்னில், இது त्वमेवोपायभूतो मे भवेति प्रार्थना मतिः । शरणा-गतिरित्युक्ता என்றது போலாம். என்கை யென்பது पञ्चाङ्गानुष्ठानगर्भமான லௌகிக வாக்ய ப்ரயோகம் என்கிற பக்ஷத்திலும் ஸமுதாய ஜ்ஞானபூர்வகமென்று சொல்லியிருப்பதால் பொருள் அறிந்திருப்பதால் அது [illegible]

पदवाक्यादिवृत्तान्तम் அறியாத பாலன் ஒரு கால் "भवति भिक्षां देहि" என்றால் ஆட்யரான ஸத்துக்கள் அகத்திலே அப்போதே भिक्षासिद्धि உண்டாமா போலே "கொள்ளக் குறைவிலன் வேண்டிற்றெல்லாம் தரும்" என்னும் படி

---

பரத்தோடே சேர்ந்தே வருகிறபடியால் அங்கும் ஜ்ஞாநாம்சத்திற்குக் குறையில்லை. அதற்கு ப்ராதாந்யமே இது உபாயவிபாகாதிகாரத்தில் नमस्कारம் வாசிகம் மாநஸம் காயிகம் என்றவிடத்தில் விளங்குமென்பர்.

மந்த்ர பூர்வகவைதிக கார்யங்களிலும் அர்த்த ஜ்ஞாநமில்லாமலே கார்ய ஸித்திக்கு லௌகிக உதாஹரணம் காட்டுகிறார் பதவாக்யேதி. பதவாக்யாதி வ்ருத்தாந்த மறியாதவன் = பதமாவது என்ன, வாக்யமாவது என்ன? அப்பதங்களில் எது முக்யம எது அமுக்யம் அதினுடைய வ்ருத்தி சக்தியா, லக்ஷணையா? இவ்விடத்தில் எத்தனை பதங்கள் पदविभागம் सुबन्ततिङन्तादि विभाग எவ்வாறு என்றெல்லாம் அறியாதவன்; ஒரு கால்-ஒரே தரம், सकृदुच्चारः என்பதற்குப் பொருத்தமாகச் சொன்னதாமிது. அஜ்ஞாத்துக்களிடம் இதே போதும் भवति भिक्षां देहि என்பதற்கு, முதன் முதல் सामान्य என்ற व्युत्पत्ति व्यवहारத்திலே அர்த்தம் தெரிந்து கொள்ளும் சிறுவன் गोपदादिகளைப் பிரித்துப் பொருள் தெரியாமல் மொத்தமாக 'பசுவைக்கொண்டுவருவது' இதன்பொருள் என்றறிகிறாப்போலே, பிக்ஷைபிடக்கேட்பது இதன் பொருள் என்று மட்டு மறிவானேயல்லது விசேஷமறியான் இப்படியிருக்க भवति என்பது க்ரியா பதமன்று' பூஜ்யமான அம்மையே என்ற பொருளதென்றறிய ப்ரஸக்தி யேது? அதுபோல் இங்குமென்றபடி. அளிக்கும் அம்மைகள் கூட பாஷைக்கு அர்த்தம் தெரியாமலே யளிக்கிறார்களேயென்னில், இருக்கலாம் அது அறிந்தவர்கள் அளிப்பதைக் கண்டென்க அதற்காக ஸர்வஜ்ஞனான ஈச்வரன் அறியாதவனாகவேண்டுமா சக்தியற்ற ஸத்துக்களும் சக்தரானவ அஸத்துக்களும் பிக்ஷையிடார். அதற்காக 'ஆட்யரான ஸத்துக்கள்' என்றது. அகமாவது க்ருஹம் அப்போதே என்றது பிக்ஷை அப்போதே வேணுமென்ற பேக்ஷித்ததால த்ருஷ்டாந்தத்தில் சேரும்; ப்ரக்ருதத்தில் ப்ரபத்தியினால் பலன் எப்பொழுது அபேக்ஷிதமோ அந்தப்போதிலே வருமென்று கொள்க. அல்லது அப்போதே அவ்வளவாலேயே எங்கும் த்ருஷ்டாந்த தார்ஷ்டாந்திகங்களுக்கு பூர்ணஸாம்யம் சொல்லவாகாது முடிந்த வரையில் கொள்ள வேண்டும். ஆகையால் सुबन्ततिङन्तங்கள் பதங்கள் என்றவாறு வ்யாகரண மூலமான பதஜ்ஞாநம் போல் ஸாஹித்ய வ்யுத்பத்தி மூலமான பதஜ்ஞாநமு மில்லாதவன் என்றெல்லாம் அங்கேற்படுவதால அதுபோல் அடியோடு அஜ்ஞனுக்கும் உக்தி நிஷ்டை என்னலாகாது ஸமுதாய ஜ்ஞாநம் வேண்டும். த்ருஷ்டாந்தத்தைக் காட்டினமாத்திரத்திலேயே ப்ரமாணமில்லாத அம்சம் வஸ்துவுக்கு ஸித்தித்துவிடாது உலகில் இத்தகையதுண்டென்று காட்டுவதற்காகவே த்ருஷ்டாந்தம் சொல்வது. கொள்ள இத்யாதி திருவாய்மொழி 3-9-5ல் 'கொள்ளும் பயனில்லை' என்ற பாசுரத்தில் மூன்றாம் அடி. குப்

யிருக்கிற परिपूर्णपरमोदारविषयத்தில் இவ்வுக்திக்கும் फलाविनाभावம் உண்டு. அறி விலிகளாய் இவ்வுக்தி மாத்ரமே பற்றுசானவர்கள் திறத்தில் "येन केनापि प्रकारेण द्वयवक्ता त्वम्" என்று சொல்லுகிறபடியே இவ்வுக்தி மாத்ரமும் உண்டறுக்க

---

பையைச் செல்வமாகக் கொண்ட மானிடத்தை வள்ளலென்று புகழ்ந்தால் ஏதேனும் பயன் கொள்ளுவதாகுமோ, மணிவண்ணனையே கவி சொல்லுங்கள். அவன் கொள்ளக் குறைவிலன் என்கிறார். இதை பரிபூர்ண பதத்தாலே ஸங்க்ரஹிக்கிறார்; வேண்டிற்றெல்லாம் தரும் என்பதை பரமோதார பதத்தினாலே. இங்கே அவனிடமிருந்து எவ்வளவு த்ரவ்யங்களை நாம் கொண்டாலும் அவன் குறைவில்லாதவனே. என்ற பொருளைக் கொள்ளாமல், 'கவிபாடுகிறவர் அவனுடைய குணங்களில் எவ்வளவு கொண்டு பாடினாலும் அவன் குறைவிலன். அப்போதும் கூறவேண்டிய குணங்களுள்ளவனாகவே யிருப்பான்' என்று பொருள் கொள்வதுண்டு. ஏனெனில்–வேண்டிற்றெல்லாம் தருமென்றதாலேயே எப்போதும் எதை வேண்டினாலும் அளிப்பான் என்றதால். ஆயினும் இந்த ஸந்தர்ப்பத்திற்கிணங்க முதற்பொருளே ஸ்வரஸமாகும். நாம் எவ்வளவு த்ரவ்யம் கொண்டாலும், இனி அது அவனிடமில்லை யென்பதில்லை; ஸத்ய காமனானகையாலே ஸங்கல்பமாத்ரத்தாலே வேண்டும்போது மீண்டுமெல்லாம் பெற்றே யிருப்பானென்றபடி இவ்வுக்திக்கும். விசதஜ்ஞாநமில்லாமல் செய்த உக்தி நிஷ்டைக்கும்; फलाविनाभावம்–பலத்தோடு வ்யாப்தி=அவச்யம் தானே பலத்தை யுண்டுபண்ணுகை.

த்ருஷ்டாந்த மாத்திரத்தைக்கொண்டு ப்ரக்ருத விஷயத்தில் விசதஜ்ஞாநமில்லாவிட்டாலும் பலன் உண்டென்னக்கூடுமோ: பலனுண்டானாலும் பூர்ணமாயிருக்கக் கூடுமோ என்ன—எம்பெருமானுடைய சொல்லிலிருந்தே சரண்யனுக்கு இச்ருபாதிசயமுண்டென்று தெரிகிறதென்கிறார் அறிவிலிகளாய் இதி. அறிவிலிகள்—விசதஜ்ஞாநமில்லாதவர்கள் பற்றுக—அவலம்பம் பிடிப்பு. உபாயம். येन केनापि இதி. கத்யத்தில் ப்ரபத்தியை யநுஷ்டித்த எம்பெருமானாரைப் பார்த்து எம்பெருமான் சொல்லும் வாக்யமிது. இதற்கு ஆர்த்தனாக விருந்தோ த்ருப்தனாகவிருந்தோ அதாவது உடனே பலாபேக்ஷையாலோ தேஹாவஸாநத்தில் பலாபேக்ஷையாலோ என்றும், சத்ருவாக விருந்தோ மித்ரனாக விருந்தோ என்றும் பொருள் கொள்வதுண்டு. இந்த ஸந்தர்ப்பத்திற்கு முக்ய ப்ரபத்திக்கு வேண்டிய விசதஜ்ஞாநத்துடனேயோ உக்தி நிஷ்டைக்குப் போதுமான ஸாமாந்ய ஜ்ஞாநத்துடனேயோ என்கிற பொருளே பொருந்தும். இவ்வுக்திமாத்ரமும்—இந்த உக்தி நிஷ்டையையும்; உண்டறுக்கமாட்டாது=பகவத்க்ருபையானது இவன் செய்த உக்தியை தான் புசித்து அழித்துவிடாது. வீணாக்கிவிடாது. பலனளிக்குமென்றபடி கத்யத்தில் பலனளித்திருக்கிறுப்பது ஸ்பஷ்டம். இவ்வாக்யத்தில் த்வயவக்தா என்றிருப்பதால் ப்ரபத்தியிராமற்போனாலும் த்வயோச்சாரணமே फल ஸாதநமென்றும், येन केनापि என்றியிருப்பதால்

மாட்டாது शरण्यன் க்ருபை. இவ்வர்த்தத்தை "पापीयसोऽपि शरणागतिशब्दभाजः"
என்றும், शरणवरणवागियं योदिता न भवति बत सापि धीपूर्विका என்றும். "प्रपत्तिवाक्ये

---

வசத்தால் ஆநுகூல்ய ஸங்கல்பாதிரூப अङ्गद्वयानुप्रवेशமான மாநஸ ஜ்ஞாநம்
அடியோடிராவிட்டாலும் பலனுண்டென்றும் தேறுமேயென்ன வேண்டா.
கீழ अकिञ्चनोऽशरणः शरणमहं प्रपद्ये என்று ப்ரபத்தியை இவர் அநுஷ்டித்திருப்
பதால் இவரைப் பார்த்து த்வயவக்தா என்றால் ப்ரபத்தி யநுஷ்டாநத்தை
விடாமல் த்வயத்தைச் சொன்னவர் என்றே ஈச்வரன்கருத்தாகும் ஆக
விசத ப்ரபத்தியுடனே அவிசதப்ரபத்தியுடனே த்வயத்தைச் சொன்ன நீர்
என்றபடி. த்வயம் பூர்ண ப்ரபத்திகர்ப்பமாயிருப்பதாலே அநுஷ்டாநம்
ஸாமாந்யமாயிருந்தாலும் போதுமென்று குறித்தபடி இவ் வாக்யத்திற்கு
ப்ரபத்தியை யநுஷ்டித்த பிறகு த்வயோச்சாரணம் செய்ய வேண்டுமென்று
கருத்துக்கொள்ளலாகாது முக்ய ப்ரபத்தியும் இவ்வாக்யத்திற்கு விஷயமாகை
யால் அங்கு த்வயோச்சாரணம் முந்தியதாகையால் ஒரே விதமாகப் பொருள்
கொள்வதற்காக உக்தியிலும் த்வயோச்சாரணத்திற்குப் பிறகே ப்ரபத்தி
யநுஷ்டாநம் என்றதே ஸ்வரஸமாகப் பொருந்தும்.

येन केनापि என்பதற்கு விசதஜ்ஞாநமில்லாமலும் என்று நீர் கருதும்
பொருளைக் கொள்ளாமலே வேறு பொருளே கூடுமாகையால் இது இப்படிப்
பட்ட தயாவிசேஷத்திற்கு ப்ரமாணமாகாதென்ன—ப்ரமாணமாக ஸம்ப்ர
தாய ஸ்ரீஸூக்தியை யருளிச் செய்கிறார் இவ்வர்த்தத்தை இதி. மஹா
பாபியாயினும் சரணாகதியைச் சொல்லும் சப்தத்தைச் சொன்ன என்னை
ரக்ஷிக்க உனது ஈச்வரத்வத்தை உபயோகப்படுத்தலாகாது பாபமுமிருக்
கிறதே என்னில்—உனது ஜ்ஞாநமும் சக்தியும் கருணையும் இருக்கும் போது
=என்விஷயத்தில் ப்ரவ்ருத்திக்கும் போது எனது பாபம் பராக்ரமம் கொள்
ளாது=தன் சக்தியைக்காட்டாது இங்கு சரணாகதி भाजः என்னாமல் சரணா
கதி சப்த பாஜ: என்றபடியால் அர்த்தத்தைத் தெளியாவிட்டாலும் பலனுண்
டென்று தெரிவித்ததாம். கீழ त्वदीयचरणौ शरणं प्रपद्ये என்று சொன்ன பிறகான
विस्रणं त्वयि न இத்யாதியால் பூர்ணாநுஷ்டாநமில்லாத வாக்கு இது என்று
தெரிகிறது. இதே சரணாகதி சப்த என்பதன் கருத்து விசதஜ்ஞாநமில்லா
மையை ஸ்பஷ்டமாக அறிவிக்கும் வாக்யம் शरणवरण இத்யாதி. इयं = கீழ
शरणमित्यहं त्वां वृणे என்று சரணமாக வரிக்கப்பட்டதைக் கூறும் வாக்கானது
या उदिता—எது சொல்லப்பட்டதோ, सा अपि—அதுவும் धीपूर्विका न भवति—
விசதஜ்ஞாநத்தினால் வந்ததல்ல; बत-அந்தோ इति என்று கண்டு यदि
दयनीयता मयि अहो वरद तव भवेत्. ततः प्राणिमि (வரதராஜஸ்தவம் 84.) मयि—
என்னிடத்தில் உனக்கு தயைபுரிதல் உண்டாகில் அப்போது தான் संसारग्र-
विदाहव्यपागतप्राणனை நான் உஜ்ஜீவிப்பேன் என்றது பொருள் இங்கே சரண
வரணவாக்கு இயம் என்பதற்கு த்வயமென்கிற மந்த்ரோச்சாரணம் என்
கிற பொருளல்ல; शरणमित्यहं त्वां वृणे என்று தாம் ச்லோகமாக அருளிச்

निरीक्षितुं वृणे" என்றும் அபியுக்தர் பேசினார்கள்.

---

செய்திருப்பதேயாம். அது அர்த்த ஜ்ஞாந பூர்வகமாக வந்திருப்பதால் धी பூர்வகமன்று என்னவொண்ணாது. பலனில் நம்பிக்கையோ ச்ரத்தையோ இராமல் கபடமாகச் சொன்ன வாக்கு இது என்று பொருள் கொள்ளலாமே என்னில்—அப்போதும் அது மஹாவிச்வாஸாதிகளை யுண்டு பண்ணி பூர்ண ப்ரபத்தியால் பலனளிக்குமென்ன வேண்டும். அதைவிட மேலே शरण वरण वाक्यं या अद्य मे वन्द तदधिकं न किञ्चन मम என்று இதற்கு மேல் தாம் செய்யப்போவதொன்றுமில்லையென்றதால் அவிசதஜ்ஞாநத்தோடு செய்த உக்தி நிஷ்டை என்று கொண்டால் தான் நேராக மோக்ஷஸாதநமிது என்னக் கூடும். என்ன பலனுக்காக இது செய்தது என்பதைத் தெளிவிக்கும் ச்லோகத்தை யுதாஹரிக்கிறார் प्रपत्ति "यथा च यादृगसि योऽसि यद्गुणः करीश यादृग्विभवो यदिङ्गितः। तथाविधं त्वाऽहमभक्तदुर्दृशं प्रपत्तिरासां निरीक्षितुं वृणे॥" என்றது பூர்ண ச்லோகம் कयैकारणभावादि எந்த ப்ரகாரங்களோடு—எந்த திருமேனியோடு எந்த ஸ்வரூபகுணவிபவங்களோடு எத்தகைய வ்யாபாரத்தோடு நீ யிருக்கிறாயோ, அவற்றோடு பக்தியற்றவர்களால் காணமுடியாத உன்னை ப்ரபத்தியென்கிற சொல்பட்டாலே நன்றாகக் காணவேண்டுகிறேனென்றதால் பரிபூர்ண ப்ரஹ்மஸாக்ஷாத்காரத்திற்கு இந்த ப்ரபத்தி காரணமாகுமென்று தெரிவித்ததாம். ஏவகாரத்தால் धीपूर्वकமாகாத என்றறிவித்ததாம். धीपूर्वक என்பதற்கு மந்த்ரார்த்தவிசதஜ்ஞாநபூர்வகமென்றர்த்தமாகையால் அவ்வாறாகாத வாக்கென்ற போது அவிசதஜ்ஞாநபூர்வகமான வாக்கு என்று சேரும். ப்ரபத்தி விஷயமான வாக்கை விசதஜ்ஞாநபூர்வகமாக ப்ரயோகம் செய்தால் அப்போது மந்த்ரார்த்தமான ப்ரபத்திரூப ஜ்ஞாநமும் ஸாங்கமாக கூடவேயுண்டாகும் அதுபோல் அவிசத ப்ரபத்தி விஷயமான ஜ்ஞாநமாகிற ஸமுதாய ஜ்ஞாந பூர்வக வாக்ய ப்ரயோகம் செய்தால் அதே ஸமயத்தில் அவிசதஸாங்க ப்ரபத்தி ரூபஜ்ஞாநமுமுண்டாகும். விசதஜ்ஞாந பூர்வமாக வாக்ய ப்ரயோகம் செய்தவர்களும் ப்ரபத்தி ரூபஜ்ஞாநத்தை யநுஷ்டிக்காமலிருந்தால் फल ஸித்தியில்லை. ஆகையால் धी பூர்வக என்ற பதமானது ப்ரபத்தியுண்டாவதற்கெப்படி ஸூசகமோ அப்படியே அவிசத ஜ்ஞாந பூர்வகமென்கிற பதமும் அவிசத ப்ரபத்தியுண்டாவதை ஸூசிப்பதற்குத் தடையில்லை. ஒருக்கால் மந்த்ரோச்சாரணம் மட்டுமானால் அது குருவின் உச்சாரணத்திற்குப் பின்னான உச்சாரணரூபமாய் அர்த்த ஜ்ஞாநபூர்வகமாகாமலிருக்கலாம். ச்லோகரூப ஸ்வ வாக்ய ப்ரயோகமானது அர்த்தஜ்ஞாந பூர்வகமாகவே யிருக்கும். ஆனாலும் மந்த்ரத்தில் இவ்வம்சம் இவ்வங்கத்தைக் குறிக்கிறதென்று விசதமாகத் தெரியாமல் ஸமுதாயஜ்ஞாநபூர்வகமாகலாம். எனவே 'ப்ரபத்தி वाचैव' என்ற விடத்திலும் அவிசத ப்ரபத்தியைக் கூட்டுவதும் கருதப்பெற்றதாம். மற்ற விரிவு நமது ந்யாஸதத்துலக்ரந்தத்தில்.

சிலர், 'உக்தி சப்தத்தாலே கேவலவாக்யோச்சாரணத்தைச் சொன்ன

இவ் उक्तिमात्रनिष्ठனுடையவும் आचार्यनिष्ठனுடையவும் நிலைகள் இரண்டையும். "तत्र भरोऽहमकारिषि धर्मिकैराचार्यमत्यपि वाक्यमुदीरितम् । इति मदाक्षिकयस्त्विदृदस्य

லும் ஸமுதாய ஜ்ஞாநபூர்வக வாக்யோச்சாரணத்தைச் சொன்னாலும் அதில் ப்ரபத்தி சேராமையால் உக்தி நிஷ்டையிலும் ஆசார்ய கர்த்ருகமான ப்ரபத்தியுண்டு. ஆகக் கீழே "உக்தி ஆசார்யநிஷ்டை இவையும் ப்ரபத்தியின் முகபேதங்கள்" என்கிற வாக்யத்திற்கு ஆசார்யன் அநுஷ்டிக்கும் ப்ரபத்திக்கு முகமாக = பூர்வாங்கமாக சிஷ்யனிடம் வரும் சார்யங்களே பொருள். அந்த உக்தியினுடைய விவரணந்தான் மேலே உக்தியாவது என்கிற வாக்யம். இப்படி ப்ரபத்தியுடன் சேராத உக்திக்கு ஆசார்ய ப்ரபத்தி முக்யமாக அபேக்ஷிதமாகையால் அதை 'तत्र भरोऽहम्' என்கிற பட்டருடைய ஸூக்தி தெரிவிக்கிறது. ஆகக் கூரத்தாழ்வானுடைய ஸூக்திகளுக்கும் தாம் ப்ரபத்தி யநுஷ்டாநம் செய்யாமல் ஆசார்ய ப்ரபத்தியை எதிர்பார்க்கிற வெறும் வாக்யோச்சாரணமே பொருளாகலாம். என்பர். இதைப் பரிஹரிப்பதற்காக இவ்வுக்திமாத்ர இத்யாதி. இதன் கருத்தாவது—விசதஜ்ஞாநமுள்ளவர்களுக்குப் போல் அவிசதஜ்ஞாநமுள்ளவர்களுக்கும் அவிசத ப்ரபத்தியாலே பலனென்பது ஸம்ப்ரதாய ஸித்தம். கூரத்தாழ்வானுடைய ஸ்ரீஸூக்தி ஆசார்யனுடைய ஸமீபத்தில் ஏற்படாமையால் ஆசார்யன் செய்யும் ப்ரபத்தியை எதிர்பார்த்துச் சொன்னதென்ன வொண்ணாது. பூர்வபக்ஷியினுடைய ஆக்ஷேபத்திற்கு முக்யகாரணமாவது உக்தியே ப்ரபத்திகர்ப்பமாயிருந்தால் இரண்டு ப்ரபத்திக்கு ஸமுச்சயம் கூடாதாகையாலே பட்டர் இரண்டையும் சேர்த்தது தகாததாமென்பதே அப்படி யிரண்டையும் சேர்த்ததற்குக் கருத்து வேறு கூறுவம். ஆகையால் ஆசார்ய நிஷ்டையிற் போல் உக்தி நிஷ்டையில் ஆசார்ய ப்ரபத்தி சேருவது அவச்யமில்லை. இதுவே ப்ரபத்தி கர்ப்பம்—ப்ரபத்தி கர்ப்பமாகாத உக்திக்கு ஆசார்ய ப்ரபத்தி வேண்டுமென்றால் அதை மறுக்கமாட்டோம். 'अचिन्त्यार्थिनः' என்கிற பாத்மஸம்ஹிதா ச்லோகத்திற்கு அது விஷயமாமென்பதை வேறிடத்தில் காண்க வென்றபடி. ச்லோகார்த்தமாவது தார்மிகர்களான ஆசார்யர்களாலே நான் உனக்கு பரமாகச் செய்யப்பட்டேன். அதாவது யெனக்கு ஆசார்ய நிஷ்டை நடந்துவிட்டது; நானும் சரணமென்கிற வாக்யத்தைச் சொல்லியுமுளேன் என்றவாறு இது உக்தி நிஷ்டை இவ்விரண்டும் சேரா. ஆகிலும் சேர்த்துச் சொன்னது இதுவுமோர் உபாயமுண்டு என்று நமக்கு அறிவிப்பதற்காக. அபிசப்தமானது அபேக்ஷித ஸமுச்சயத்தைப் போல், இது அதிகமென்று குறிப்பதற்காக அநபேக்ஷித ஸமுச்சயத்தையும் சில விடத்தில் காட்டும். 'தகுந்த வைத்யர் வந்திருக்கிறார்; மற்றொரு வைத்யரும் அருகிலிருக்கிறார்' என்று சொன்னால் இருவரும் சேர்ந்து வைத்யம் செய்ய வேணுமென்று சொன்னதாகாது. உத்தராதத்தில் ஸாரதீபிகையில் இதி = என்கிற காரணத்தினாலே இதம் = கீழ்ச்சொன்னதை யென்று பொருள்

मां कुरु भरं तव रङ्गधुरन्धर ॥" என்று சேர்த்து அநுஸந்தித்தார்கள். இதில் மிகுதி காட்டுகிற अपरार्धத்தாலே ஓரொன்றே அமையுமென்று ஸூசிதமாயிற்று.

---

கூறப்பெற்றது. மற்றவர் இதீதம் என்று ஒன்றாகச்சேர்த்து கீழ் சொன்னதையென்றுரைத்தனர். ससाक्षिकम् என்பதற்கு ஸாக்ஷியாக காண்பித்து என்றது பொருளாகாது. ஸாக்ஷிகளையிட்டு மூதலிப்பித்து ஸாக்ஷியோடு சேர்ந்ததாக்கி என்று ஸாராஸ்வாதிநியிலுள்ள பொருள். ஸாரதீபிகையில் நீ என்னை ஸ்வீகரிக்கும் போது நான் உன்னை 'त्वं मे अहं मे' என்றபடி நிவாரணம் பண்ணமுயன்றாலும், 'உன் ஆசார்யர் பரஸமர்ப்பணம் செய்தாரே; நீயும் சரணவாக்கைச் சொன்னாயே; இந்த ஆசார்யர்களே இதற்கு ஸாக்ஷி' என்று நீ சொல்லிக்கொண்டு என்னை ஸ்வீகரியென்று கருத்துக்கூறப்பெற்றது. இந்த ச்லோகத்திற்கு முன்பு பட்டர் ப்ரபந்ந ரக்ஷணத்தில் தீக்ஷிதனை உன்னை விட்டு விலகியுள்ளேன் நம்பிக்கைக்கான விவேகமில்லாமையால் விநய வேஷம் பூண்டு பூரவர்களைப்போல் என்னை எண்பிக்கிறேன் டம்பமா(யிபா)யிருந்து என்றதால் நிவாரணத்தில் ப்ரவ்ருத்தியுமிருக்கலாமென்று இவ்வுரையாளரின் கருத்து. வேறு கருத்தும் கொள்வர்—

இவர் कुरु भरं तव रङ्गधुरन्धर என்று சொல்லுவதற்காக இந்த ச்லோகம் ஆரம்பித்தார். 'நீ உன்னை வேஷம் பூண்டவனாகச் சொல்லுகிறாயே, இப்படிப்பட்ட உன்னை காத்தால் எனக்கு வைஷம்யதோஷம் வாராதோ என்று எம்பெருமான் கேட்காமைக்காக, பூர்வார்த்தத்தில் இரண்டு உபாயங்களைச் சொன்னார். நீ பொய் சொல்லுவதாக ஜநங்கள் நினைப்பார்களே நான் எப்படிக் காப்பதென்னுமைக்காக ஸஸாக்ஷிகயந் என்றார். என் ஆசார்யன் பரம் ஸமர்பிக்கும் போதும் நான் சரணமென்று சொன்ன போதும் கண்டிருந்தவர்கள் தேவிமார் ஸூரிகள் போன்றவர் பலகோடி. அவர்கள் எல்லோரையும் ஸாக்ஷியாக்கலாமென்றதாம். இனி வேறு கருத்துமாம்—என்னை பரமாக ஸ்வீகரியென்று கேட்கிறாயே ஏற்கனவே பரமாக ஸமர்பிக்கப்பட்டிருந்தால் இப்போதும் கேட்டால் ப்ரஹ்மாஸ்தரவிரோதம் வாராதோ. இதற்கு முன் ஸமர்பிக்கப்படாமலிருந்தால் இது மநப்பூர்வமாக விராததாலே நான் எப்படி ரக்ஷிப்பது என்று எம்பெருமானின் கேள்வி யெழுமென்று நினைத்து முதலில் பூர்வார்த்த விஷயத்தை விஜ்ஞாபித்தார். அதன் கருத்தாவது என்னைப் போல் வேஷம் பூண்டவராகாமல் தார்மிகராய் பூஜ்யரான ஆசார்யராலே நான் ஸமர்ப்பிக்கப்பட்டிருக்கிறபடியால் உபாயவிஷயத்தில் விவாதமேயில்லை. இதற்கு உம்மிடமே ஸாக்ஷிகள் பலரிருக்கிறார்கள். இதற்கு வேறு துணைவேண்டாமலிருக்கும் போது என் வாக்காலும் சரணமென்று சொன்னேன். அதுவும் நான் நிவாரணம் பண்ணுகிறவனல்லன் என்று தெரிவிப்பதற்காகவும் பழைய உபாயத்தை நினைப்பூட்டுவதற்காகவும். இப்போது செய்வதும் அந்த புத்தியின் தொடர்ச்சியையும் பலத்தில் ஆஸ்த்தையையும் காண்பிப்பதற்காகவே யென்றதாயிற்று. ஸாக்ஷி-ப்ரமாணம்-ஸஸாக்ஷிகம்

இவர்களில் आचार्यनिष्ठன் "पुत्रः प्रेष्यस्तथा शिष्य इत्येवं च निवेदयेत्" என்று शास्त्रसमुच्चयादिகளிற் சொல்லுகிறபடியே आचार्यனுடைய आत्मात्मीय भरसमर्पणத்

---

ப்ராமாணிகம். இதைப் ப்ராமாணிகமாக்கிக் கொண்டு என்று உரைத்தாலும் இவ்வளவு கருக்கையும் அங்கும் கொள்வது. மிகுதி காட்டுகிற = ஆதிக்யத்தை = அநபேக்ஷிதமென்பதை தெரிவிக்கிற. இப்படி உக்தி நிஷ்டையானது ப்ரபத்தியோடு சேர்ந்திருப்பதால் ஆசார்யநிஷ்டைக்கு மட்டுமே ஆசார்ய சர்தருகமான ப்ரபத்தி வேண்டுமென்று அதை சோதித்தருளுகிறார் இவர்களில் இதி. ஆசார்ய நிஷ்டை என்ற சொல்லுக்கு ஆசார்யரை யாச்ரயித்தல்-அதாவது தான் உபாயமநுஷ்டிக்காமல் ஆசார்யனே நமக்காக உபாயம் அநுஷ்டித்தருள்வரென்கிற நம்பிக்கையில் ஆசார்யனை யாச்ரயித்திருத்தல். ஆசார்ய பதத்தாலே உபதேசம் பண்ணுகிற குருவையே கொள்வதென்றதில்லை. எவ்விதமாகவாவது மதீயனென்று அபிமானிக்கும் மஹான்களையெல்லோரையும் கொள்ளவேண்டும் ஆகையால் ஏதேனும் உபதேசித்த ஆசார்யர் உபதேசிக்காத பாகவதர் இவர்களில் எவரை யாச்ரயித்தாலும் இங்கு ஆசார்ய நிஷ்டையே இப்படி இது உபலக்ஷணமென்று पुत्रः प्रे:......इत्येवं என்கிற உதாஹரிக்கும் ஸ்ரீஸூக்தியிலிருந்து வ்யக்தமாகும் இது போலவே ஆசார்ய நிஷ்டருக்குக் கைங்கர்யத்தாலே' என்கிற மேல்வாக்யத்தில் ஆசார்ய நிஷ்டபதத்திற்கும் எல்லாம் சேர்த்தே பொருள். पुत्र இதி. त्रिसन्ध्यं कारयेत् बालान् वन्दनं देवपादयोः என்பது பூர்வார்த்தம். க்ருஹத்தில் எல்லோரும் காலையில் ஸ்நாநாதிகளைச் செய்து வைதிக லௌகிகாலங்காரங்களுடன் ஆசமநம் செய்து சுத்தராய் எம்பெருமானிடம் அபிகமநம் செய்யவேண்டுமென்று பெரியோர்களைச் சொல்லி, மூன்று காலத்திலும் சிறுவர்களையும் எம்பெருமான்திருவடிகளில் ப்ரணாமம் செய்விக்கவேண்டுமென்று பூர்வார்த்தத்தில் சொல்லி மேல் புத்ர இத்யாதி வாக்யத்தால் க்ருஹஸ்தனானவன் தன்னோடு அபிகமநத்தில் சேர்ந்திருக்குமவர்களை. இவன் மகன், இவன் வேலைக்காரன், இவன் சிஷ்யன் என்றுற்போலுள்ள ஸம்பந்தத்தைக் கூறி எம்பெருமானிடம் நிவேதநத்தைச்செய்யவேண்டுமென்கிறது. இங்கே நிவேதநமாவது தெரிவித்தல்மட்டுமென்றால் நிஷ்ப்ரயோஜநம். ஆகையால் ஸமர்ப்பணமே. மாலை வரையிலான கைங்கர்யங்களை என்னைக்கொண்டு நடத்திக் கொள்ள வேண்டுமென்று காலையில் தன் விஷயமான பரஸமர்ப்பணம் போல் இவர்கள் மூலமாகவும் உரிய கைங்கர்யத்தை நடத்திக்கொள்ள வேண்டுமென்பதே நிவேதந மென்றதாயிற்று. இந்த நியாயமாகவே மோக்ஷார்த்த भरसமர்பணத்திலும் வேண்டியவர்களைச் சேர்த்துக் கொள்ளலாமென்று தேர்வதால் இவனை யபிமானிக்கு மாசார்யன் இவனையும் இவன் பரத்தையும் பகவானிடம் ஸமர்பிக்கலாமாகையால் ஆசார்ய ப்ரபத்தியும் மோக்ஷ ஸாதநமாகிறது. இங்கே புத்ர: ப்ரேஷ்ய: சிஷ்ய: என்று சேஷத்வ ஸம்பந்தத்தை மட்டும் சொன்னபடியால் அஜ்ஞத்வ அசக்தத்வாதிகளே ஆசார்ய நிஷ்டைக்குக்

திலே தானும் அனுபூதன். "सिद्धिर्भवति वा नेति संशयोऽच्युतसेविनाम्। न संशयोऽत्र तद्भक्तपरिचर्यारतात्मनाम्॥" என்கிற சணக்கிலே आचार्यनिष्ठனுக்குக்முதிக்ஷாரத்

---

காரணமென்பதில்லை. ப்ரார்த்தித்தால் தான் என்பதுமில்லை அபிமானமிருந்தால் யாருக்கும் செய்யலாமென்றதாயிற்று. இவ்வாக்யத்திற்கு மோக்ஷார்த்தமாக யாருக்காவது பரஸமர்ப்பணம் செய்ய வேண்டுமென்றிருந்தால் அபிகமநகாலத்தில் அதையும் செய்யலாமென்றே பொருள் கொள்ளுவதுமுண்டு.

மோக்ஷமென்பது பகவதநுக்ரஹத்தாலாகவேண்டியிருப்பதால் பகவானையாச்ரயிப்பதை விட்டு பாகவதாச்ரயணத்தாலே அதைப் பெறவாகுமோவென்ன அருளுகிறார் सिद्धिरिति பகவானையாச்ரயிப்பவர்களுக்கு பலஸித்தியுண்டோ இல்லையோ என்று ஸந்தேஹமாம், பாகவத சுச்ரூஷையிலே இழிந்த மனமுடையவர்களுக்கு பலஸித்தியில் ஸம்சயமில்லையென்பது வாக்யார்த்தம் பகவத் ஸேவைகளிலும் பலஸித்தி ப்ராமாணிகமாகையால் அதில் ஸம்சயம் சொல்லவொண்ணாது. அதனால் இதர ஸதுதிக்காக இல்லாத ஸம்சயத்தை யாரோபித்ததென்ன வேண்டும் பகவத்விஷயத்தில் ஸம்சயத்தை யாரோபித்தது போல் பாகவத ஸேவை விஷயத்தில் ஸம்சயத்தை யாரோபிக்காமல் விட்டது அதைவிட இதில உத்கர்ஷத்தைக் கருதியே என்ன வேண்டும் அவ்வுத்கர்ஷம் எத்தகையதென்றாராய்ந்தபோது "मम मद्भक्तभक्तेषु प्रीतिरभ्यधिका भवेत्" என்கிற வசநத்தினாலே பாகவத ஸேவை விஷயத்தில் ப்ரீத்யாதிக்யம் தெரிவதால் அந்த ப்ரீதியின் தாரதம்யத்தையே இவ்வசநம் கருதுகிறதென்னலாம். ஆக அச்யுதஸேவிகள் விஷயத்தில் ப்ரஸாதம் குறைவு பாகவதஸேவிகள் விஷயத்தில் ப்ரஸாதம் அதிகம் குறைவான ப்ரஸாதத்தினாலேயே மோக்ஷம் பெறலாமாகில் அதிகப்ரஸாதத்தினால் மோக்ஷமென்பது ஸுநிச்சிதமாகிறது பகவத்கைங்கர்யத்தை விட்டு பாகவத கைங்கர்யத்தில் அதிக ப்ரஸாதத்திற்காக இழிவது போல் ப்ரபத்தியினால் வரும் மோக்ஷத்தில் தாரதம்யமிராவிட்டாலும் அதிக ப்ரீதியென்கிற பலனையுத்தேசிப்பது உசிதமாகையால் தானே நேரில் ப்ரபத்தி செய்துகொள்ளாமல் ஆசார்ய மூலமான ப்ரபத்தியை அபேக்ஷிப்பது ச்லாக்யமென்பது இங்கே குறித்ததாம். கைமுதிகந்யாயத்தாலே யென்பதற்கு ஸாக்ஷாத் அச்யுத ஸேவிக்கே பலன் கிடைக்கும்போது ஆசார்ய மூலமாக ஸேவிப்பவனுக்கு ஸம்சயமில்லையென்ற பொருளே ஸ்வரஸமாகும். ஸாரப்ரகாசிகா ஸம்மதமுமிதுவே. இனி பகவத்சுச்ரூஷையைவிட பாகவதசுச்ரூஷைக்கே உத்கர்ஷமாகில் சுச்ரூஷையோடு பாகவதர் செய்யும் பரஸமர்ப்பணத்திலுமந்வயம் ஏற்பட்டால் ஸுதராம் பலஸித்தியென்றும் கருத்துக்கொள்ளலாமென்னில் கொள்க. ஆனால் பரிசர்யாபலம் வேறு. பரஸமர்ப்பண பலன் மோக்ஷமென்பது வேறு, பொதுவாக்கிக்கொண்டு உபபாதநம் செய்யவேண்டும். நிற்க. ச்லோகம் பொதுவாக சுச்ரூஷையைப் பற்றியிருந்தாலும் அதே ந்யாயத்தை ப்ரபத்திக்கும் கொள்ளலாமென்று கருத்து. அதற்காகவே என்கிற

தாலே ஃபலஸித்தியில் ஸந்தேஹமில்லை; ஒரு மலையில் நின்றும் ஒரு மலையிலே
தாவும் ஸிம்ஹசரீரத்தில் ஜந்துக்களைப்போலே பாஷ்யகாரர் ஸம்பந்தம் பண்ண
அவரோடு உண்டான குடல்துவக்காலே நாமும் உத்தீர்ணராவுதோ (வோ)

---

படியே பொன்னுமல் என்கிற கணக்கிலே யென்றது. துல்யந்யாயமா யென்றபடி ஸாரப்ரகாசிகையிலும் முதலில் பகவத் ப்ரபந்நனுக்கு ஃபலஸித்தியில் ஸம்சயமானாலும் ஆசார்ய நிஷ்டனுக்கு ஸம்சயமில்லையென்று யதாச்ருதத்தின் மேல் ஸித்திக்கும் அர்த்தத்தைச் சொல்லி முடிவில், "பாதபாதுகாபரிக்ரஹந்யாயேந ப்ரீத்யாதிக்யமுண்டு" என்றே ஸ்தாபித்தார் ஸாரதீபிகையிலும் இன்பத்தில் என்கிற பாசுரத்தில் ஆசார்யாபிமாந நிஷ்டை மோக்ஷோபாயங்களுக்குள்ளே உத்க்ருஷ்டமான உபாயமென்று நிகமித்தார்.

வேறொருவர் செய்யும் ப்ரபத்தியாலும் பலனுண்டென்பதையும் அதன் சிறப்பையும் ஸம்ப்ரதாய வாக்யத்தாலே காட்டுகிறார் ஒருமலை இதி. தாவும் என்ற சொல்லாலே இரண்டு மலைமுடிகளும் நெருங்கியிருப்பது தெரிகிறது. ஸிம்ஹசரீரத்தில் ஜந்துக்களாவன - ஈ வண்டு முதலானவைகள். இவற்றில் தனியே போக சக்தியற்றவையுமிருக்கலாம் சக்தியுள்ளவையுமிருக்கலாம். இந்த த்ருஷ்டாந்தத்தாலே நமக்கு அபேக்ஷையும் ப்ரவ்ருத்தியுமிராமற்போனாலும் பாஷ்யகாரர்ஸம்பந்தத்தாலே மோக்ஷமுண்டென்று சேறுமென்னில்—அப்போது ஜந்துக்கள் போகவேண்டுமென்று சிங்கம் நினைக்காமலிருந்தாலும் தன்னை வாதிக்கும் ஜந்துக்களிவை வரவேண்டாமென்றே அது நினைத்தாலும் சிங்கத்தோடு அவற்றுக்கு தேசாந்தர ப்ராப்தி போல் பாஷ்யகாரர் நினைக்காவிட்டாலும் மோக்ஷமுண்டென்றும் ப்ரஸங்கிக்கும். குடல்துவக்காவது சரீரஸம்பந்தம். அது பாஷ்யகாரரின் திருமேனியோ நமக்கில்லை அவருடைய ஆத்மஸ்வரூபத்தோடே நம் ஆத்மாவுக்கு ஸம்ச்லேஷ விசேஷமில்லை அப்படியிருந்து மோக்ஷமாகில் அவர் பரமபதித்த போதே முதலியாண்டான் முதலியவர்களுக்கு அது ப்ரஸங்கிக்கும் ஆக அவர் குடல்துவக்காவது அபிமான ஸம்பந்தமே. அந்த அபிமானமும் அவருடைய ஆத்மாத்மீய பரஸமர்பணத்திலே அவர் சிலர்களேற்படுத்திய ஸம்பந்தம், அது அவரவர் தேஹாவஸாநத்திலே யென்று அவருக்கு அபிமதமானதையால் வ்யக்திக்குத் தக்கவாறு மோக்ஷத்தில் காலபேதமுண்டு. அந்த அபிமாநபாத்ரமானவர்கள் ஸிம்ஹ சரீர ஜந்துக்கள் போல் சக்தருமாகலாம். அசக்தருமாகலாம், வேதாந்த ஸிம்ஹாஸநாதிபதியான முதலியாண்டான் முதலானோருக்கு அப்போது ஜ்ஞாநசக்த்யாதிகளிலே பென்ன வொண்ணாது. ஆசார்ய மூலமாக ப்ரபத்தியினால் ஏற்படும் பகவத்ப்ரீத்யாதிக்யத்தைப் பெற வாய்ப்பில்லையாகில், அப்போது தான் தானாக ப்ரபத்தி செய்துகொள்ளலாம் ஆசார்யநிஷ்டையே எம்பெருமானுக்கு உவப்பானது. பக்த்யாதிகளில் ஒருவன மற்றொருவனுக்காக அநுஷ்டிப்பதில்லையாகிலும் ப்ரபத்தி அவ்வாறின்றி பிறருமநுஷ்டிக்கலாமென்று "ये [illegible]" என்கிற

னென்று முதலியாண்டான் அருளிச் செய்த பாசுரம்.

"अन्धोऽनन्धग्रहणवशगो याति रङ्गेश यद्वत् पङ्गुर्नौकाकुहरनिहितो नीयते नाविकेन।
भुङ्क्ते भोगानविदितनृपः सेवकस्यार्भकादिः त्वत्संप्राप्तौ प्रभवति तथा देशिको मे दयालुः ॥"

---

பட்ட பிறகு ப்ரீத்யாதிக்யமென்ற பலத்தை விடுவது ந்யாயமில்லை. ஆகை யால் நாம் சக்தராயினும் தனியே செய்து கொள்ளலாகாதென்கிற கருத்தா லேயே "நாமுமுத்தீர்ணராவுதோம்" என்றருளிச் செய்தார் இங்க ஆசார்ய மூலமான ப்ரபத்தி சிஷ்யன் ப்ரார்த்திப்பதாலுமாம், ஆசார்யரே அதிக ஆகரத்தினால் தாமே யனுஷ்டிப்பதுமாம். பொதுவாக ஆசார்ய நிஷ்டை யென்பது ஆசார்ய மூல ப்ரபத்திக்குக் காரணமான அபிமான ஸம்பந்தமே.

இனி அஜ்ஞாந அசக்த்யாதிகளும் ஆசார்யநிஷ்டைக்குக் காரணமென் பதைக் குறிக்கத் தமது ந்யாஸதிலக ச்லோகத்தையுதாஹரிக்கிறார். ச்லோ கார்த்தமாவது—ரங்கநாதா! குருடன் கண்ணுள்ளவனின் பிடிப்புக்கு வசப் பட்டு எப்படி வேறு இடம் சேருகிறானோ. முடவன் கப்பலோட்டியால் எப்படி கப்பல் நடுவே தூக்கி வைக்கப்பட்டு அக்கரை யடைவிக்கப்படு கிறானோ. ராஜஸேவை செய்கிறவனுடைய குழந்தை முதலானவர்கள் அரசனைப் பற்றி யொன்றும் தெரியாமலே எப்படி போகங்களை யநுபவிக் கிறார்களோ—அவ்வாறு நான் உன்னைப் பெறுவதற்கு தயை புரியும் தேசி கனே வல்லவனாகிறாரென்றதாம். இங்கே மேலோடு பார்க்கும் போது अनघ ङ्गु ஸ்தாநத்திலே தேசிகன் என்று தோன்றும். அது சேராது. ஆகையால் तथा என்பதை देशिकः प्रभवति என்பதோடு சேர்க்காமல் तथा मे त्वत्संप्राप्तौ என்கிற ஸம்ப்ராப்தியிலே சேர்த்துப் பொருள் கொள்க இங்கே மூன்று த்ருஷ்டாந்தங்கள் எதற்கென்னில்—முதல் த்ருஷ்டாந்தம் அஜ்ஞனா யிருந்து ஆசார்யன் பண்ணிவைக்கத் தானே ப்ரபத்தி செய்து கொள்ளும் அதிகாரியைப்பற்ற: இரண்டாவது த்ருஷ்டாந்தம் தான் ப்ரார்த்தனை செய்து ஆசார்யன் செய்யும் ப்ரபத்திக்கு விஷயமானவனைப் பற்ற; மூன்றாவது, தான் ப்ரார்த்திக்காமலே ஆசார்ய ப்ரபத்திக்கு விஷயமானவனைப் பற்ற என்று ஸாரதீபிகையில், இரண்டாவது த்ருஷ்டாந்தம் சக்த்யபாவத்தைப் பற்ற; மூன்றாவது த்ருஷ்டாந்தம் ஜ்ஞாநாபாவத்தைப் பற்ற என ஸார ப்ரகாசிகையில் உரையாம் இங்கே ஆசார்யநிஷ்டா ப்ரகரணத்திலேயே இந்த ச்லோகத்தை யெடுத்திருப்பதால் உக்தி நிஷ்டாப்ரகரணத்தில் तव भरोऽहं என்கிற ச்லோகத்தோடே சேர்த்துக் குறிக்காமையால் மூன்று உதாரணமும் ஆசார்ய நிஷ்டா விஷயமே யென்பது ஸ்வரஸம். இந்த ச்லோகத்திற்கு நயினாராசார்யர் வ்யாக்யானத்திலும் ஜ்ஞாநாபாவம், சக்த்யபாவம், ஜ்ஞாநம் சக்தி இரண்டுமில்லாமை என்ற அடைவில் மூன்று உதாஹரணங்களென்றே விவரணமுள்ளது. உபாயவிபாகாதிகாரத்தில் தாமே, 'ஜ்ஞாநத்திலேயாதல் சக்தியிலே யாதல் இரண்டிலுமாதல் குறையுடையார்க்கு என்று இந்த ரீதியையே யருள்வர். அது போலிங்கும் சொல்வது உசிதமென்று ஸாராஸ்

என்று न्यासतिलकத்திலே சொன்னோம். ஏதேனும் ஒரு प्रकारமாகவுமாம், ஆரேனும் ஒருவர் அநுஷ்டிக்கவுமாம் प्रपत्तिக்கல்லது ஸர்வேச்வரன் परम-पुरुषार्थம் கொடுக்க இரங்கான் என்றதாயிற்று.

இப்படி "पशुर्मनुष्यः पक्षी वा ये च वैष्णवसंश्रयाः । तेनैव ते प्रयास्यन्ति तद्विष्णोः परमं पदम् ॥" என்றும்,

---

வாதிநியின் திருவுள்ளம் இதனால் சக்தருக்கு ஆசார்ய நிஷ்டை தகாதென்று ஸித்தித்து விடாது. ந்யாஸதிலகத்தில் 'स्वस्याचार्यैर्विनिहित भराः' என்கிற ச்லோக மானது பட்டர்விஷயமென்றும், பட்டர் ஆசார்ய நிஷ்டரென்றும் ந்யாஸோல்லாஸ க்ரந்தத்திலுமுள்ளது. இங்குள்ள ஆசார்ய நிஷ்டா விஷய மான வாக்யங்களில் வரும் ஆக்ஷேபங்களும் அவற்றிற்கு ஸமாதாநங்களும் ஆசார்ய நிஷ்டா அதிகார ப்ரகாரங்களின் விரிவுமெல்லாம் நமது ந்யாஸாதி கார ஸர்வஸ்வத்தில் நன்கு காணலாகும்.

பக்தியோகத்தில் அசக்தனுக்கு ப்ரபத்தியாகில் சக்தனுக்கு ப்ரபத்தி அவச்யமன்றாகையால் ஸத்வாரக ப்ரபத்தி நிஷ்டன் என்னாமல் பக்தி நிஷ்ட னென்று பிரித்தலே தகும். மேலும் பக்தியில் அசக்தனுக்கு ப்ரபத்தி, முக்ய ப்ரபத்தியில் அசக்தனுக்கு உக்தி ஆசார்ய நிஷ்டையென்கிற ப்ரபத்தி களென்றாற்போலே இவற்றிலும் அசக்தனுக்கு வேறோர் உபாயமும்கூடுமாகை யால் இருவரே என்று பிரித்தல் தகுமோ என்கிற சங்கையைப் பரிஹரிப் பதற்காக இதுவரையில் சொன்னதை நிகமிக்கிறார் ஏதேனும் இதி. ஏதேனு மொரு ப்ரகாரமாவது—ஸத்வாரகமாகவோ ஸ்வதந்த்ரமாகவோ, விசத ஜ்ஞாந பூர்வகமாகவோ, ஸமுதாய ஜ்ஞாநபூர்வகமாகவோ என்றதாம். ஆரேனுமொருவர் = தானோ பிறரோ. பிறரிலும் ஆசார்யரோ பாகவதரோ. பரமபுருஷார்த்தம் கொடுக்க என்றதாலே மற்ற பலன்கள் ஜ்ஞாநமாகாத உபாயங்களாலும் साधிக்கக்கூடியதாகும் மோக்ஷரூபபலம் ஜ்ஞாநத்தினாலே யே ஸாதிக்கப்படவேண்டும். அந்த ஜ்ஞாநமும் பக்தி ப்ரபத்தி தவிர வேறு ஜ்ஞாநமாகாது. பக்தியோகமும் நீண்டகாலம் பல ஜந்மங்களைக் கொண்டு ஸாதிக்கப்பட வேண்டியிருப்பதால் பல இடையூறுகளும் நேர்வதால் ப்ரபத்தி செய்யாமலே பக்தியை நிறைவேற்ற எவராலுமாகாது. ஆகை யால் ஸத்வாரக ப்ரபத்தி நிஷ்டனென்கிற விபாகம் தகும் இதனால் ஸ்ரீரூபாய மான பக்தியை அஜநஸாதிகளை விரும்பி யநுஷ்டிக்க ஆசைப்படுகிற வனுக்கு இந்த க்ரந்தத்தில் சொல்லப்படும் ப்ரபத்தியை எதற்கு அறிய வேண்டுமென்கிற கேள்வியும் பரிஹரிக்கப்பட்டது. இப்படி ப்ரபத்தி அவச் யம் வேண்டுமாகில் வேறு உபாயங்களைச் சொல்லும் வசநங்கள் விரோ திக்குமேயென்ன அவற்றின் கருத்தை உரைக்கிறார் இப்படி இதி. பசுரிதி. சாண்டில்ய ஸ்ம்ருதி ம்ருகமோ மனிதனோ பக்ஷியோ எந்த ஜீவர் வைஷ்ண வரை யாச்ரயித்திருக்கிறாரோ அவர் அப்படி யாச்ரயித்திருப்பதாலேயே பரமபதம் செல்வார். என்று ஆச்ரயணமாத்ரத்தாலேயே மோக்ஷம் சொல்லு

"ते वयं भवता रक्ष्या भवद्विषयवासिनः। नगरस्थो वनस्थो वा त्वं राजा जनेश्वर॥" என்றும்,

"நற்பாலயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும் நற்பாலுக்குய்த் தனன்" என்றும், "வன்மையாவது நின் கோயிலில் வாழும் வைட்டணவ

---

கிறது, தே இத்யாதி (ராமா ஆ.காண்டம்.) இப்படி கஷ்டப்பட்டுக் கொண்டு உமது தேசத்திலே வஸிக்கக் கூடிய நாங்கள் (ரிஷிகள்) உம்மால் ரக்ஷிக்கப், படவேண்டியவர். ஜநங்களுக்கு ஈச்வரனே! நீர் நகரத்திலிருந்தாலும் காட்டிலிருந்தாலும் எங்களுக்கு அரசனேயென்றனர். இதனுல் ராஜாவி னுடைய தேசத்திலிருக்கும் ப்ரஜைகள் ராஜாவினுல் ரக்ஷிக்கப்படுகிறது போல் பகவானுடைய தேசத்தில் வஸிக்கும் ஜீவர்கள் பகவானுல் காக்கப் படவேண்டுமென்று விஷயவாஸம் ரக்ஷைக்குக் காரணமென்றதாயிற்று— விஷயமாவது தேசம். எல்லாமே பகவத்தேசமாகையால் தேசவாஸம் காரணம் என்று சொல்வது எதற்கெனில்—ராமனுக அவதரித்த போது ராம ராஜ்யத்திலுட்பட்டவரைக் காப்பது அவச்யமானுல் அது போலே அந்தந்த க்ஷேத்திரத்தில் அவதரித்த அர்ச்சா மூர்த்திகளுக்கு க்ஷேத்ர வாஸம் செய்யு மவர்களைக் காக்கவேண்டியது அவச்யமென்று அறிவித்ததாம். அரசருடைய தேசத்தில் வஸிப்பது அரசனுல் காப்பாற்றப்படுவதற்காக என்கிற நல்ல எண்ணமுடையவர்களை அரசன் காப்பது போல் பகவத் க்ருபைக்குப் பாத்ரமாக வேண்டுமென்று க்ஷேத்ரவாஸம் செய்தால் அவனை விடலாகாது என்றதாயிற்று. இதற்கு இவ்வளவு தாத்பர்யமுண்டென்பதை நம்மாழ் வாரின் பாசுரத்தாலும் விளக்குகிருர். நற்பால் ஆதி, கற்பாரென்று பாசுரத் தொடக்கம் 7-5-1. நல்ல ப்ரதேசங்களையுடைய அயோத்திமாநகரத்தில் ஜங்கம ஸ்தாவர ஜந்துக்களை யெல்லாம் நற்பாலுக்கு—நல்ல ஸ்வபாவத் திற்கு உய்த்தனன்=ஏற்றினன். இங்கு நற்பால் என்பதற்கு பரமபதத் திற்கு என்கிற பொருள் கூறுவாருமுண்டு நல்ல ஸ்வபாவம் அதாவது அவனை விட்டுப்பிரிந்தால் துக்கம், அவனேடு சேர்ந்திருந்தால் ஸுகம் என்கிற தன்மை யுடைய என்பதாம். ராமபிரான் அயோத்தியில் எழுந்தருளி யிருந்தபோது செழுமை யுற்றிருந்த மரங்கள் அவன் காட்டுக்குச் சென்றபோது வாடிவதங்கி நின்றனவே. அந்த ஸ்வபாவமே, அவன் தன் னடிச் சோதிக்கு எழுந்தருளும்போது அந்நிலை நீடிக்கும் ஸாந்தாநிக லோகம் அழைத்துச் செல்லக் காரணமாயிற்று. அதன் பிறகே மோக்ஷம் சென்றது. ஆகிலும் அயோத்தி வாழ்க்கையே மோக்ஷகாரணம் என்றதைப் பாசுரப்பொருளாக வைத்து இங்கு ஆக்ஷேபம். விபவாவதாரத்தில் க்ஷேத்ர வாஸம் காரணமாகலாம். அர்ச்சாவதாரத்தில் அதில்லையென்று நினைக்கா மைக்காக மேற்பாசுரம். வன்மையாவது இதி வன்மை—பலம். எனக்கு மோக்ஷம் பெறக் காரணமான பலமானது உன்னுடைய கோயிலில் க்ஷேத் திரத்தில் வைஷ்ணவனு யிருந்து வாழ்வதே யென்று பொருள். 'நன்மை தீமைகள் ஒன்று மறியேன்' என்று 5-1-3. பாசுர ஆரம்பம், நான் உன்னைப்

னென்னும் வன்மை'' என்றும் சொல்லுகிற भागवताभिमान - भगवद्विषयत्वादि களுக்கும் தன் பக்கலிலேயாதல். பிறர்பக்கலிலேயாதல். முன்பேயாதல் - பின்பேயாதல் ஓர் உபாயத்துவக்குண்டு. எங்ஙனே யென்னில்; இவை உபாஸநத்திலேயாதல் ப்ரபத்தியிலேயாதல் மூட்டியும், उत्पन्नोपासनனுக்கு उत्तरोत्तरोपचयத்தைப் பண்ணியும், स्वानन्तरप्रपदनानुष्ठानம் பண்ணினவனுக்கு இங்

---

புகழ்வதில் தவறுதலிருந்தாலும். திருவஷ்டாக்ஷரம் சொல்லி வஸிக்கும் வைஷ்ணவனுகையால் என் தவறை யுபேக்ஷித்து இவ்வாழ்க்கைக்குப் பலன் அளிக்கவேண்டும். வைஷ்ணவ ஸம்ச்ரயபதத்திற்கு அர்த்தம் பாகவதாபிமாந பதத்தாலே வெளியிடப்பட்டது. வைஷ்ணவ ஸம்ச்ரயா: என்கிற சொல்லுக்கு வைஷ்ணவனே ஆதாரமாகவுடைய என்றோ பலனுக்காக வைணவனை யாச்ரயித்திருக்கிற என்றோ பொருள் கொள்ளலாகாது. பசுபக்ஷ்யாதிகள் அவ்வாறு நோக்கியாச்ரயிக்கவில்லையே. ஆகையால் வைஷ்ணவ: ஸம்ச்ரய: அவைகள் விஷயமான அபிமாநத்திற்கு ஆச்ரயன் என்றே பொருளாம். அப்போது அவனுடைய அபிமாநத்திற்கு விஷயமாகை யென்பதே காரணம் அபிமானமாவது—இந்த ஜீவன் மதீயன் என்று அபிமானிக்கை ஆதி பதத்தினுல் வைஷ்ணவத்வாதிக்ரஹணம். இங்குச் சொல்லப்பட்ட ஆகாரங்கள் நேராக மோக்ஷகாரணமல்ல. பக்தி ப்ரபத்திகளுக்குத் துணையாகுமத்தனை யென்கிறுர் தன்பக்கலிலே இத்யாதியால் தன் பக்கலிலே உபாயமாவது தான் அநுஷ்டிக்கும் உபாயம். இது பக்தியுமாகலாம் ப்ரபத்தியுமாகலாம். பிறர் பக்கலிலே உபாயமானது தனக்காகப் பிறர் செய்யும் உபாயம். அது ப்ரபத்தியே. பக்தி வேறொருவருக்காக வேறொருவர் செய்யவாகாது. 'அபஹதபாப்மத்வாதி குணங்களுள்ள எனக்கு அந்தர்யாமி எம்பெருமான் (अहं ब्रह्मास्मि) என்கிற உபாஸநமுள்ளவனுக்கு புண்யபாபகர்ம நாசத்தால் மோக்ஷம். இது வேறொருத்தருடைய பலனுக்குக் காரணமாகாது. இதனுல் பக்தி ப்ரபத்தி மூலமாக இவைகள் மோக்ஷ ஸாதநமென்றதாயிற்று. பக்தி ப்ரபத்திகள் முன்பே நடந்திருந்தாலும் இந்த பாகவதாபிமாநாதிகள் அததற்குத் துணையாகுமென்று சொல்லக் கூடுமோ ஆக முன்பேயாதல் என்பது எங்ஙனே பொருந்துமென்ன—அதன் கருத்தை வெளியிடுகிறுர் எங்ஙனே இத்யாதியால் மூட்டியும் என்றவளவால் பின்பேயாதல் என்பது ஸங்க்ரஹிக்கப்பட்டது. உத்பந்நேதி உபாஸநமென்கிற உபாயம் முன்பே யுண்டாயிருந்தாலுங்கூட முடிவுவரையில் தினந்தோறும் தொடர்ந்து வளர்ந்து வரவேண்டியிருப்பதால் பின்னே வரும் பாகவதாபிமாநாதிகளும் உத்தரோத்தர உபசயத்துக்கு= அததற்குப் பின்னே மேன்மேல் வரும் உபாஸந வளர்ச்சிக்குக் காரணமாகும். ஆகையால் ஒரேஸமயத்தில் முடியும் ப்ரபத்தியாகிற உபாய விஷயத்தில் தான் அதற்குப் பின்னே வரும் பாகவதாபிமாநாதிகளோடு எவ்வாறு ஸம்பந்தமென்கிற கேள்வி நிற்கும். அங்கு ப்ரபத்தியோடு துவக்காவது ப்ரபத்திக்குப் பின்வரும் கைங்கர்யத்தை

குற்ற कैङ्कर्याभिवृद्धिயை உண்டாக்கியும் भगवत्प्राप्तियிலே த்வரையை உண்டாக்கியும் உபகாரகங்களாம்.

இவர்களில் வ்யாஸாதிகளைப் போலே उपायान्तरसमर्थனாகையாலே अकिञ्चन

---

வ்ருத்தி செய்கை. வேறொரு ப்ரயோஜநமும் கூறுகிறார் பகவத் ப்ராப்தி இதி. ப்ரபந்நனானவன் தேஹாவஸாநத்திற்குள்ளே முன்னிருந்த பரபரப்பு நீங்கி, 'மற்றொரு ஜந்மம் வேண்டாமென்றோமே. ஒரு ஜந்மம் கழித்தளித்தால் நலம் என்று நசையுள்ளவனாகில் பலனளிப்பவனுக்கு ப்ரவ்ருத்தி மந்தமாகும். அவ்வாறின்றி த்வரையிருப்பது ப்ரபத்திக்கு ஸஹாயமாகுமென்றபடி. மேலும் பாகவதாபிமாநாதிகள் நீடித்து கைங்கர்யாபிவ்ருத்தியும் த்வரையும் ஏற்பட்டால் இவற்றையெல்லாம் ப்ரபந்நனென்கிற அபிமாநத்தால் ஸர்வேச்வரன் செய்விக்கிறான் என்று அவனிடத்திலிருக்கும் மஹாவிச்வாஸத்திற்குப் புஷ்டியளிப்பதால் ப்ரபத்தியோடு துவக்குத் தகுமென்றதாம். 'இவ்வளவு க்லேசப்பட்டாவது நிர்வஹிக்கும்படி முன்பேயாதல் என்று வரைய வேண்டுமோ? மேலும் 'வைஷ்ணவ ஸம்ச்ரயா:' என்பதற்கு பாகவதாபிமாநவிஷயனென்று பொருள் கொள்ளுகிறது போல் அபிமானித்த பாகவதனாலே பரஸமர்ப்பணத்தில் விஷயமாக்கப்பட்டவன் என்றே பொருள் கூறலாமாகையால் அதை ப்ரபத்தியைவிட வேறாக ஏன் கொள்ளவேண்டும். இப்படி மேல்வாக்யங்களும் பின்னே ப்ரபத்தியநுஷ்டிக்கிற விஷயமாகவேயாகலாமே' என்னில்—ப்ரபத்தி செய்யாமல் மதீயனென்று அபிமாநிக்கப்பட்டவர்களுக்கும் பலனைக் கூறுவதாக வாக்யத்திற்குப் பொதுவிலே பொருள் தகுமாயிருக்க ஸங்கோசிப்பது ந்யாயமன்று. துப்புடையாரை (4-10-1) என்கிற பாசுரத்தில் 'ஒப்பிலேன் ஆகிலும் நின்னடைந்தேன். ...அப்போதைக்கிப்போதே சொல்லிவைத்தேன்' என்று கீழே ப்ரபன்னரான பிறகு இங்கே 5-1-3ல் 'வன்மையாவது உன் கோயிலில் வாழும் வைட்டணவன் என்னும் வன்மை' என்று பின்னுள்ள விஷய வாஸத்தைக் காரணமாக்குகிறபடியால் இதற்கிணங்க ப்ரபன்ன விஷயத்திலும் முன்பேயாகிலும் என்று சொல்லவேண்டியதாயிற்றென்றபடி.

இனி இவ்வதிகாரிகளுக்குப் பலத்தில் வேறுபாட்டை விளக்குகிறார் இவர்களில் இத்யாதியால். இங்கு இவ்வாறு வினா—பக்தனை அவனிடமுள்ள மோக்ஷோபாயத்தைக்கொண்டுதானே தனியதிகாரியாகப் பிரிக்கவேண்டும். மோக்ஷத்திற்கு உபாயமாவது பக்தி தானே; ஸத்வாரக ப்ரபத்தியன்றே. ஆகையால் ப்ரபத்தி ஸாத்ய பக்தி நிஷ்டனென்று பிரிக்கவேண்டும். அங்கு 'ப்ரபத்தி ஸாத்ய பதத்திற்கு ப்ரயோஜநமில்லை. அது எப்போதுமேயுள்ளது. அவன் பண்ணுகிற ப்ரபத்திக்கு பக்தி ஸித்தியே பலம்; மோக்ஷமன்று. மோக்ஷத்திற்காக ப்ரபத்தி பண்ணினானாகில் பக்தி ஸமர்த்தனாயிருந்து ப்ரபத்தி செய்தால் பலிக்காது. பலிப்பதாகில் பக்தி வேண்டாமாகையாலே அது ஸத்வாரக ப்ரபத்தியாகாது. மேலும் ப்ரபத்தியென்பது அகிஞ்சனனாய்

னுமன்றிக்கே विलम्बाक्षமனாகையாலே अनन्यगतिயுமன்றிக்கேயிருக்கிற सद्वारक-प्रपत्तिनिष्ठனுக்கு प्रारब्धकर्मावसानभावियான अन्तिमप्रत्ययத்தை अवधियாக உடைத்தான उपासनका। - अङ्गिயினுடைய यथावस्थितावाप्तिपूर्वकமான मोक्षम् फलம்.

सर्वाधिकारமாய், सर्वविघ्ननिवर्तनक्षमமாய், सर्वेष्टसाधनமாகவற்றாய், सुकरமாய்

---

அநந்யகதியாயிருப்பவனுக்கே யாகும் பக்தியோகநிஷ்டன் ஸகிஞ்சனனாகை யாலே எப்படி ப்ரபத்தி செய்யலாம் அதிகாராரம்பத்திலே ச்லோகத்தில் மதுவித்யாதி ந்யாயத்தாலே பக்த ப்ரபந்நர்களுக்கு फलभेदம் சொன்னது—எப்படி? சக்தருக்கும் அசக்தருக்கும் பலமொன்று தானே என்றவாறு. இதற்கு இங்கே கருதிய உத்தரமாவது—பக்தன் செய்கிற ப்ரபத்திக்கு பக்தி ஸித்தியே பலனானாலும் 'मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते', 'मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये' என்றுமோக்ஷார்த்தமாக அங்கப்ரபத்தியும் விதிக்கப்பட்டிருப்பதால் முமுக்ஷு வான நான் மோக்ஷார்த்தமாக பக்தி ஸித்திக்காக ப்ரபத்தி செய்கிறேன் என்று நினைத்து ப்ரபத்தி செய்வதால் மோக்ஷஸாதநத்வம் ப்ரபத்திக்கும் அங்கீகரிக்க வேண்டும். வ்ரீஹியானது (நெல்)யாகத்தில் நேராக உபயோகப்படாமல் அன்ன-புரோடாசமூலமாக உபயோகப்படுவதானாலும் 'व्रीहिभिर्यजेत' என்னும் வாக்யமிருப்பதாலே யாகத்திற்கு வ்ரீஹியே பரம்பரயா அங்கமாகவும் ஸாதந மாகவும் கொள்ளப்படுவது போலாமிது. ப்ரபத்தி செய்த பிறகு பக்தி எதற்காக என்னவாகாது. பக்தித்வாரகமாகப் பலன்வேண்டுமென்று தானே ப்ரபத்தி செய்கிறான். அப்படி ஏன் கேட்கிறானென்னில், வ்யாஸாதிகள் ஏன் பக்தி செய்தார்கள்? சக்தராயிருப்பதால் என்னில், அத்தகைய அதிகாரி இப் போதும் உண்டாகில், அவனுக்கு மிது துல்யமே சக்தனாயிருந்தும் விளம் பத்தைப் பொறுக்காதவனாகில் பக்தியை விடலாம். பொறுத்தால் வேறு ஜந்ம மெடுத்து வேறு பலனை யநுபவிக்க நசையுள்ளவனாகையாலே அநந்யகதி கனாக மாட்டான். சக்தனாயிருப்பவன் ப்ரபத்தியை எதற்குச் செய்யவேண்டு மென்னில் இது மேலதிகாரத்திலே விளக்கப்படும். ஆக இவன் செய்யும் ப்ரபத்திக்கு பக்தி நிஷ்பத்தியும் மோக்ஷமும் சேர்ந்து பலனாகிறது. இவன் செய்த ப்ரபத்தி ஒன்றல்ல; பக்தி நிஷ்பத்திக்குத் தடையை விலக்க அப் போதைக்கப் போது வெவ்வேறு ப்ரபத்தி செய்தே வருகிறான். அந்தந்த ப்ரபத்தி அவ்வப்போது வரும் பக்தி நிஷ்பத்திக்குக் காரணமாய் அது மூலமாக மோக்ஷத்திற்குக் காரணமென்னவேண்டும். ஆகையால் த்வாரமான பலன் வெவ்வேறு இருப்பதால் ஒரு மோக்ஷத்திற்கு இத்தனை ப்ரபத்தியா வென்று சங்கிக்கவேண்டா. அத்வாரக ப்ரபத்தி நிஷ்டனுக்கு பக்தி நிஷ்பத்திக்கு ப்ரதியாக இங்குச் செய்யும் கைங்கர்யம் பலமாகிறது. பிறகு மோக்ஷம். இதை விவரிப்பதற்காக ஸர்வாதிகாரமாய் இத்யாதி.

முக்யத்திலே யதிகாரமுள்ளவன்தானே அசக்தனும் போது கௌணத்

सकृत् कर्तव्यமாய், आशुकारियாய், प्रतिबन्धानर्हமாய், ब्रह्मास्त्रबन्धம் போலே स्वफलத்தில் उपायान्तरप्रयोगासहமாயிருந்துள்ள प्रपत्तियைத் தன் அதிகாராநுரூபமாக अद्वारकமாகப் பற்றினவனுக்குப் परिपूर्णानुभवத்துக்கு வேறு प्रतिबन्धकம்

---

தைச் செய்கிறுன். பக்திக்கு அதிகாரி மூன்று வர்ணமே யாகையால் ப்ரபத்தி வேறொருவருக்சாகுமோவென்ன ஆகுமென்பதற்காக ஸர்வாதிகாரமாய் என்றது. ஸர்வாநிஷ்ட நிவர்த்தநக்ஷமமாய் என்றதாலே மோக்ஷத்திற்காக ப்ரபத்தி பண்ணுகிறவன் இடைவிடாத விசேஷ கைங்கர்யங்களுக்கு விரோதியென்கிற காரணத்தினுலே ச்ருஷி வ்ருத்தி, ச்வவ்ருத்தி, பாபாசரணம் முதலான அநிஷ்டங்களின் நிவ்ருத்தியுடன் தேஹாவஸாநம்வரையில் விசேஷ கைங்கர்யத்தை யபேக்ஷித்தானுகில் அதுவும் ஸித்திக்குமென்று சொன்னதாம். ப்ராரப்தத்தில் அநிஷ்டஸாநிவர்த்தகம் என்பது आशुकारियாய் என்கிற பதத்தாலேயே ஸித்திக்கும். ஸர்வேஷ்ட ஸாதநம் இதி. ப்ரபத்தியானது ப்ரதிபந்தக நிவ்ருத்திமாத்ரம் செய்யும் என்பதில்லை. ஸ்வர்காதி பலங்களுக்காக யாகாதிகளைச் செய்யமுடியாதவன் அதற்காக பரந்யாஸம் செய்தால் அத்தகைய பலனும் ஸித்திக்குமென்றபடி. ஸக்ருத் கர்தவ்யமாய் இதி. ஸ்வர்காதி பலனுக்காக ஒருதரமே செய்யக்கூடிய கர்மாவும் அநேகமுண்டு. ஆனுலும் மோக்ஷத்திற்கான பக்தியோகத்தைவிட வாசியைக் குறிக்கவாமிது. அல்லது க்ஷணசார்யமாயென்றதாம். ஆசுகாரியாய்—மற்ற உபாயம் போலன்றி இவன் எந்த ஸமயம் பலன் பெறவேண்டுமென்று விரும்புகிருனே அப்போதே விரைவிலேயே யளிக்கும்; விளம்பித்தே யளிக்குமென்பதில்லை. ப்ரபதிபந்த அநர்ஹம் இதி. தேஹாவஸாநத்தில் பலனைக் கேட்டபடியால் அப்போது வருமதை எதுவும் தடுக்காது. பக்தியோகத்தில் ஜந்மாந்தரமுண்டாகையால் அந்திம ப்ரத்யயம் இதேஜந்மத்தில் வருமென்பதில்லை. ஆகையால் அது பல காரணங்களாலே ப்ரதிபந்திக்கப்படும். உபாயாந்தரேதி. ப்ரபத்தி ஒரேதரம் அநுஷ்டிக்கப்படுவதானுலும் அதற்கு அங்கமாக இவன் வாழ்நாளுக்குள் ஏதேனுமொன்று அங்கமாகச் செய்யப்பட வேண்டுமென்பதில்லை. ப்ரஹ்மாஸ்தரம் போலே வேறொரு துணையை யிது அபேக்ஷிக்காதே என்றபடி. பற்றினவனுக்கு = அத்வாரக ப்ரபத்தி யநுஷ்டித்தவனுக்கு. இதற்கு 'பரிபூர்ண கைங்கர்ய பர்யந்தமோக்ஷம் பலன்' என்பதோடந்வயம். ப்ரபத்தி யநுஷ்டித்தவுடனே தேஹாவஸாநபர்யந்தம் இப்பலன் ஸித்திக்காமலிருக்கிறபடியால் இங்கே இந்த தேஹத்தோடு செய்யும் கைங்கர்யங்களை அந்த கைங்கர்யத்திற்கு அங்குரமாகப் फलகோடியில் சேர்க்கிறுர். மோக்ஷோபாயம் நிஷ்பந்நமான பிறகு ப்ரபத்திக்கு ப்ராரப்தத்தையும் கழிக்க சக்தியிருப்பதால் உடனே மரணம் வரவேண்டியிருக்க, அது வாராமையும் இங்கே கைங்கர்யமும் எங்ஙனே கூடுமென்பதற்கு உத்தரமருளுகிருர் பரிபூர்ணேத்யாதியால், ஸ்வாநுமதியாலே ஸ்தாபிதமான சரீரமென்று மேலே சொல்லப் போகிருர். எடுத்த சரீரத்திற்கு க்ரமமாக எப்போது முடிவு வரவேண்டுமோ

இல்லாதபடியாலே ப்ரதிக்ஷணம் முதலாக "இங்கே திரிந்தேற்கு இழுக்குற்றென்" என்றும், "இச்சுவை தவிர யான் போய் இந்திரலோகமாளுமச்சுவை பெறினும் வேண்டேன்" என்றும், "ஏரார் முயல் விட்டுக் காக்கைப் பின்

---

அதுவரையில் இந்த சரீரத்தோடிருக்க விரும்பி யிருக்கிறான். அதனால் தானாக தேஹாவஸானம் வரும்போது மோக்ஷம் வேண்டுமென்று கேட்கிறான். இப்படி சரீரத்திலிருக்கிற நசையே, ஸம்மதியே உடனே மோக்ஷத்திற்கு ப்ரதிபந்தகமாயிற்று. இது தவிர வேறு ப்ரதிபந்தகமில்லை. இஷ்டப்பட்ட சரீரத்தைக் கொண்டு இவன் செய்யவேண்டியது கைங்கர்யமே; ப்ரதிக்ஷணம் முதலாக என்கிற சொல்லுக்கு ஸ்தாபிதமான என்பதோடு அந்வயம்.

அதிக விவேகமில்லாத ப்ரபந்நனுக்கு சரீரத்தோடிருக்க நசையுண்டானாலும் மேலே வரும் பலனின் பெருமை தெரிந்த விவேகிக்கு ஆர்த்த ப்ரபத்தியை விட்டு த்ருப்த ப்ரபத்தியில் ப்ரவ்ருத்தி வருமோ என்ன—அது வருவதும் ஸஹஜம் மஹா விவேகிகளுக்கே அது உண்டு என்பதற்கு வசநங்களை உதாஹரிக்கிறார். இங்கே யென்று (திருவாய். 8.10-4) இங்கே—பரமபதம் செல்லாமல் இந்த பூமியில், திரிந்தேற்கு—பகவத்பாகவத கைங்கர்யபரனாய்த் திரியும் எனக்கு, இழுக்குற்று-தாழ்வு, என்? ஒன்றுமில்லை யென்றபடி. பகவத்பாகவத கைங்கர்யமில்லாமல் வேறு விதமாகவிருந்தால் தாழ்வைச் சொல்லலாமே யல்லது இதில் தாழ்வில்லை யென்று நம்மாழ்வார் திருவுள்ளம். இச்சுவை—(தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலை). 'பச்சை மாமலை போல் மேனி' என்றாற் போன்றதாய் யமபடர்களைக் காலில் விழப்பண்ணும் நாமஸங்கீர்த்தநாநுபவ ரஸத்தை விட்டு நான், பரமபதம் சென்று, பரமைச்வர்யமுடையவனாகையாலே இந்த்ரனென்று சொல்லப்பட்ட பகவானுடைய லோகமாகிற பரமபதத்தை யாளுகை யென்கிற அந்த அநுபவரஸத்தை பெறவாகுமென்றாலும், அபேக்ஷிக்கமாட்டேன். இவ்வுலகில் நாமஸங்கீர்த்தநரஸாநுபவமே சிறந்தது கைங்கர்ய ரஸம், நாமஸங்கீர்த்தநரஸம், இரண்டையுமருளினார்; திருமேனியநுபவ ரஸத்தைக் கூறுகிறார். ஏரார் (சிறிய திருமடல் திருமங்கையாழ்வார்) ஏர்—அழகு=போக்யதை ஆர்—நிறைந்த முழுமாம்ஸமாய் பூமியிலகப்படும் முயலை விட்டு வானத்தில் பறக்கும் காக்கையை புசிக்கப் பிடிக்கப் பின்னாலே ஓடுவதோ, இவ்வுலகில் பெறக்கூடும் பகவந் மூர்த்தியநுபவத்தை விட்டு பரமபதத்தில் பரவாஸுதேவாநுபவத்திற்குப் போக ப்ரயாஸை ஏன் கொள்ளவேண்டும்? விபவரூபமான க்ருஷ்ணனுடைய அநுபவத்தில் ஈடுபட்ட கோபஸ்த்ரீகளுடைய பேச்சிது என்று அங்கே தெளிவானாலும், திருமங்கையாழ்வார் தம்மை கோபஸ்த்ரீயாகவும் தாமநுபவிக்கும் அர்ச்சையை க்ருஷ்ண விபவரூபமாகவும் பாவித்து இவ்வாறு அருளினதாகக் கருதி முயல் என்பது அர்ச்சாவதாரத்தை பென்க. இது அர்ச்சைக்கு உபலக்ஷணமென்பதுமுண்டு. நேராக விபவமூர்த்தியோடு இவ்

போவதே" என்றும், स्नेहो मे परमो राजन् त्वयि नित्यं प्रतिष्ठितः। भक्तिश्च नियता वीर भावो नान्यत्र गच्छति॥" என்றும் சொல்லுகிற படிகளிலே இச் சரீரத்தோடே யிருந்து कैङ्कर्यानुभवம் பண்ணவேணுமென்கிற अभिसन्धिக்குக். காரணமான

---

விஷயம் பேசும் பரமபக்தனை ஆஞ்சநேயன் வாக்யத்தை உதாஹரிக்கிறார். ஸ்நேஹ இதி. (உத்தரகாண்டம் 40.14) ராமபிரான் அவரவர்களுக்கு வெகுமானங்களை யளித்து அரசர் வானரர் அரக்கர் எல்லோரையும் அனுப்பும்போது. அவரவர் ராமனைக் கொண்டாடி तव बुद्धिर्महाबाहो वीर्यमद्भुतमेव च। माधुर्यं परमं राम स्वयम्भोरिव नित्यदा என்று பரத்வ ஸௌலப்யங்களைப் பற்றிப் புகழ்ந்தார்கள். இப்படிப் புகழ்ந்து அவரவர்கள் செல்லும்போது ஹநுமான் சொல்லுவது இந்த ச்லோகம். அரசரான உம்மிடம் எனக்கு அன்பும் வீரரான உம்மிடத்தில் பக்தியும் நிலைத்துள்ளது. என்னுடைய மனம் வேறிடம் செல்லவில்லை; உமது சரித்திரம் உலகில் எவ்வளவு காலம் பேசப்படுமோ அவ்வளவுகாலம் என் சரீரத்தில் ப்ராணன் நிலைத்திருக்குமென்பதில் ஐயமில்லை உமது திவ்யசரித்ரத்தைக் கேட்டுக்கொண்டு என் ஆசையைத் தீர்த்துக்கொள்கிறேன் என்கிறார். இங்கே மேலே ராம சரித்ர ப்ரஸ்தாவம் வருகிறபடியால் ஸ்ரீராம மூர்த்தியை விட்டு வேறு மூர்த்தியில் நசையில்லையென்பது தெரிகிறது. இதுபோல் ப்ரபன்னர்க்கு அர்ச்சைகளிடமாம்; எல்லா மூர்த்தியும் துல்யமாக நினைத்தால் பரமபத மூர்த்தியை உபேக்ஷித்து இவ்வுலகில் இருப்பது ஏன்? ஸ்நேஹபக்திகளுக்குக் காரணமாகக் கீழ கூறப்பட்ட ஸௌலப்ய பரத்வங்களை இங்கே ராஜன் வீர என்கிற சொற்கள் காண்பிக்கும். ராஜந்—எல்லோருக்கும ராகத்தை யுண்டுபண்ணுகிறவனே रञ्जयति इति राजा। பரத்வமுள்ளவரிடத்திலிருக்கும ப்ரீதியை பக்தியென்பர். இந்த ச்லோகத்தில் இப்போது காணப்படும் பாடம் स्नेहो मे परमो राजन् त्वयि तिष्ठतु नित्यदा। भक्तिश्च नियता वीर भावो नान्यत्र गच्छतु என்றவாறு. மேல் ச்லோகத்திலே என் சரீரத்தில் எனக்கு ப்ராணன் இருக்கவேண்டுமென்று ப்ரார்த்தனை யன்றி. இருப்பதாகவே சொல்லுகிறபடியால் அதுபோல் ஸ்நேஹமும் பக்தியும் வேறிடத்தில் மனம் செல்லாமையும். இவருக்கு இயற்கையிலேயே இருப்பதாகச் சொல்வது தகும். ஆகையால் அந்த ப்ரார்த்தநாபாடம் ஸாம்ப்ரதாயிகமன்று. ராமபிரான் முடிவில் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளும் போது அயோத்தி சராசரங்களோடு ஸுக்ரீவாதிகளையும் அழைத்துச் செல்லுகிறார். அங்கு ஹநுமான் சேரவில்லை. ராமமூர்த்தி மறையுமிடம் செல்ல மனமில்லை.

இப்படி ஆழ்வார் முதலானவர்களுக்கே இங்குள்ள பகவதநுபவத்தில் ஆஸ்த்தையுண்டென்றால் மற்றவர்க்கு அது வருவது ஸஹஜம். ஆகையால் விவேகியான ப்ரபந்நர்கள் க்ஷுத்ரமான இம்மையநுபவங்களுக்காக உடல் நீடிப்பதை விரும்பாமற்போனாலும் கைங்கர்யத்திற்காக விரும்புவது தகும். ஸர்வேச்வரன் ப்ரபத்திக்கு சக்தியிருப்பது காரணமாக உடனே மோக்ஷம்

अर्चावतारादिसङ्गமடியாக வந்த स्वानुमतिயாலே स्थापितமான சரீரத்தின் அவஸா நத்தை எல்லையாக உடைத்தாய், देश-काल-स्वरूपपरिच्छेद वத்தாய்க்கொண்டு இங்கு உண்டாம் कैङ्कर्यफलोद्गमத்தை முதலாகவுடைத்தான परिपूर्णकैङ्कर्यपर्यन्त-मोक्षம் फलம்.

"वरं वरय तस्मात् त्वं यथाभिमतमात्मनः। सर्वं संपत्स्यते पुंसां मयि दृष्टिपथं गते ॥" "किं वा सर्वजगत्स्रष्टः प्रसन्ने त्वयि दुर्लभम्", "तस्मिन् प्रसन्ने किमिहास्त्यलभ्यम्", "किं लोके

---

அளிப்பதானல் யாரும் ப்ரபத்தியில் இழியமாட்டார்கள்; தத்துவஜ்ஞாநம் பெறக்கூட அஞ்சுவார்கள். உபதேசிப்பவரும் குறைந்துவிடுவர் என்ரு ராய்ந்து தேஹாவஸாநத்தில் பலன் பெறச்செய்யும் ப்ரபத்தியையே முக்ய மாக விரும்புவானென்றறிக. ஸ்வாநுமதியாலே= எனக்கு இந்த சரீரம் நீடிக்கட்டுமென்று தன்னுடைய ஸம்மதியாலே இப்படி நசைகூடுமாகில் ப்ராரப்தகர்மம் நீங்கும் வரையில்கூட இங்கே வஸிக்க ஏன் விரும்பலாகா தென்னில்—கைங்கர்யம் செய்யத் தக்க உயர்ந்த சரீரமே தனக்குப் பின்னே வருமென்று நிலையில்லையாகையாலே இந்த தேஹத்தோடு நிற்பதென்க.

இவன் எவ்வளவு விரும்பினாலும் இங்கு வரும் கைங்கர்யமெல்லாம் தேசபரிச்சிந்நமாகவும் காலபரிச்சிந்நமாகவும் ஸ்வரூபத்தில் மிகச் சிறிய தாகவுமே இருக்கும்; கைங்கர்யபலோத்கமத்தை—கைங்கர்யமாகிற பலத்தின் தொடக்கத்தை—இவன் ப்ரபத்தி செய்யும் போது மோக்ஷத்தைப் போலே இங்கு நிர்விக்ன கைங்கர்யத்தையும் ப்ரார்த்தித்திருப்பானுகில் இக்கைங் கர்யம் பலமேயாகிறது. அபேக்ஷிக்காமற் போனாலும் இவன் செய்யும் கார்யங்களை யெல்லாம் வேறு பலனை விரும்பாமல் கைங்கர்யமாய் நினைக்கிற படியால் இது பலமாகிறது. அப்ரபந்நனுக்கு மோக்ஷம் கிடையாதென்று ப்ரபத்தி மோக்ஷஸாதநம் என்று சொல்லிக் கொண்டு அந்த ப்ரபத்தியை கைங்கர்ய ஸாதநமுமாகச் சொல்லக்கூடுமோ என்ன—அது ஸர்வ பல ஸாதந மென்று நிரூபிக்கிருர். வரமித்யாதியால்; अथवा பக்தி ப்ரபத்திகள் फलसाधन மென்ருல் ஸ்வதந்த்ரமாகவல்ல; भगवन्मुखமாகவே யென்கிருர் वरमित्यादि யால். த்ருவனுக்கு ப்ரத்யக்ஷமாகி பகவான் சொல்லும் வார்த்தையிது. "வாராய் த்ருவனே! தஸ்மாத்—ஆகையாலே என்னுடைய தர்சநம் வீணு காதபடியால் உன்னிஷ்டப்படி வரனைக் கேள். நான் கண்ணுக்கு இலக்கான பிறகு ஆச்ரிதருக்கு எல்லாம் ஸித்திக்கும்." அதற்கு த்ருவனுடைய மறு மொழி किं वेति. எல்லா உலகையும் படைப்பவனே! நீ யருளும் போது எது யடைய வரிதாகும். வேறு ஒருவர் சொல்லும் வார்த்தை तस्मिन्निति. அந்த எம்பெருமான் அருளும் போது இங்கு அடையக்கூடாதது என்ன உள்ளது. (வி 4-1-17-91); இந்த ச்லோகத்தில் இஹ என்றிருப்பதால். மறுமைப் பலனும் கருதப்பெற்றது தோற்ற மேல் ச்லோகம். किमिति. (வி, த 43-46.) ஏ. தால்ப்யரே! விஷ்ணுவினிடத்தி லீடுபட்ட மனமு டைய ஜீவர்களுக்கு இவ்வுலகிலோ மறுவுலகிலோ ஸாதிக்க முடியாதது

तदिह परत्र चास्ति पुंसां यत् विष्णुप्रवणधियां न दास्य साध्यम्", "फलमत उपपत्तेः" என்றும் சொல்லுகிறபடியே ஸர்வேச்வரன் सकलफलप्रदனாகையாலே அவன் திருவடிகளில் ப்ரபத்தி सकलफलसाधनமாகையால் இவ்வதிகாரிகள் இருவருக்கும் இது यथाभिमतफलहेतुவாயிற்று. "चतुर्विधा भजन्ते माम्" என்கிறபடியே உபாஸநம் யாதொருபடி चतुर्विधफलத்துக்கும் साधनமாயிருக்கிறது—அப்படியே—
"तावदार्तिस्तथा वाञ्छा तावन्मोहस्तथाऽसुखम् । यावन्न याति शरणं त्वामशेषाघनाशनम् ॥"
என்கிறபடியே ப்ரபத்தியும் இச் சதுர்வித பலத்துக்கும் साधनமாகவிறே महर्षिகள் அறுதியிடுவது. இதில் "अशेषाघनाशनम्" என்கையாலும், आदरம் தோற்ற "तावत्" என்று अधिकारம்தோறும் आवर्तिக்கையாலும் இவன்

---

என்னவுண்டு. எல்லாப் பலனும் எம்பெருமானே அளிக்கிறானென்றார்; நாம் செய்யுமுபாயம் அவனருள் பெறுதற்காக என்பதை ப்ரஹ்ம ஸூத்ரத்தைக் கொண்டு அறிவிக்கிறார். फलमिति. அத:—இந்த எம்பெருமானிடமிருந்தே பலம்—பலனும், உபபத்தே: அவனுக்கே அறிவும் சக்தியும் ஐச்வர்யமும் அன்பும் எல்லாமிருப்பதால். இவ் வசநங்களெல்லாம் ஸர்வேச்வரன் ஸர்வ பலனுமளிப்பவன்என்பதற்கு ப்ரமாணம். அதைக்கொண்டுஅவனிடம் உபாயாந்தரஸ்த்தானத்தில் செய்யும் ப்ரபத்தி எல்லாப் பலனையுமளிக்குமென்று ஊஹிக்க வேண்டும். ஸ்பஷ்டமான வசநமுமுண்டென்கிறார். चतुर्विधा என்பது கீதாவாக்யம். த்ருஷ்டாந்தம். 'जनास्सुकृतिनोऽर्जुन । आर्तो जिज्ञासुः अर्थार्थी ज्ञानी च भरतर्षभ என்று முழுச்லோகம். புண்யசாலிகளாய் என்னிடம் பக்தி செய்கிறவர்கள் நாலு வகையர். आर्तः-ஐச்வர்யமிழந்து தவிப்பவன், अर्थार्थी—புதியதாக ஐச்வர்யம் விரும்புகிறவன், जिज्ञासुः—ஐச்வர்யத்தை (விஷயாநுபவத்தை) விட்டு ஜீவாத்மாநுபவத்தை விரும்புகிறவன், ज्ञानी—உபாயமும் உபேயமும் பகவானேயென்று தெளிந்தவன், அதாவது மோக்ஷத்தையே விரும்புகிறவன். என்றவாறு. பக்தி ஸகல பலனுக்கும் ஸாதநமென்பதற்கு இது ப்ரமாணம், ப்ரபத்திக்கும் இவ்வாறு வசநம் மேலே तावदिति (வி. 4-1-9-73 வராஹ ஸ்துதி). எல்லா வினைகளையும் அழிக்கும் உன்னிடம் எவ்வளவு காலம் சரணாகதி செய்யாமலிருக்கிறானோ, அவ்வளவு காலமே இழந்ததற்கு வ்யஸநம்; இல்லாத விஷயத்தில் பெறவேண்டுமென்ற ஆசை அவ்வளவு காலமே. ஆத்மாவை யறியாமை யென்ற குறை அவ்வளவு காலமே. असुखं...துக்கம் ஸம்ஸார துக்கமும் அவ்வளவு காலமே; ப்ரபத்தி செய்து அந்தந்தப் பலனுக்கு ப்ரதிபந்தகமான பாபத்தைப் போக்கிக் கொண்டால் அந்தந்தப் பலன் கிடைக்குமென்றபடி. ஒருதரம் செய்த ப்ரபத்திக்கே இவை யெல்லாம் பலனாகில் தாவத் என்ற சொல் ஒன்றே போதும். தனித்தனியே தாவத் என்று சொல்லி இருப்பதால் அதது வேறு பலன் என்று தெரிகிறது. தாவத் என்ற சொல் இரண்டே யிருந்தாலும் மற்ற तथा என்ற சொற்களுக்கும் அதே அர்த்தமாகையால் நாலு தாவத் பதமிருந்தபடி. அதிகாரந்தோறுமென்பதற்கு ஒவ்வொரு பலஸம்பந்தம் சொல்லுமிடத்திலும் என்று பொருள்.

அபேக்ஷித்த பலமெல்லாம் இவன் கோலி(ரி)ன காலத்திலே **यथामनोरथं सिद्धि**க்கும். இப்படிப்பட்ட ஏற்றத்தை நினைத்து "**सत्कर्मनिरताश्शुद्धास्साङ्ख्ययोग-विदस्तथा । नार्हन्ति शरणस्थस्य कलां कोटितमीमपि ॥**" என்று சொல்லுகிறது.

இவனுக்கு இங்கிருந்த காலத்தில் **कैङ्कर्यத்தில் वैषम्यம் தன்** கோலு(ரு)

---

அதிலும் **यदि तदा** என்று ப்ரயோகிக்காமல் **यावत् तावत्** என்று ப்ரயோகித்ததால் சரணமடைந்த க்ஷணத்திலேயே இவன் விரும்பினல் பலன் கிடைக்குமென்று தெரிகிறபடியால், பக்திக்கு ப்ராரப்த கர்ம மழிந்த பிறகே பலன் அளிக்க வல்லமையானபடியால் அதைவிட இதற்குச் சிறப்புத் தோற்றும். **अशेषाघ** என்கிற சொல்லால் ப்ராரப்தம் ஸஞ்சிதம் இரண்டையும் கொள்ளலாமாகையாலும் இது விசதமாகிறது. இதைக் கருதி இப்படிப்பட்ட ஏற்றத்தை நினைத்து என அருளினர்.

ஸத்கர்மேதி (ல. த 17-62) கர்மயோகத்தில் ஆஸக்தியுள்ளவர்கள். சுத்தா:-முமுக்ஷுக்களானபடியாலே சுத்தர்கள்; ஸாங்க்ய வித:...ஜ்ஞாநயோகமநுஷ்டிப்பவர். யோகவித:—பக்தியோகமநுஷ்டிப்பவர். இந்த மூன்று உபாயநிஷ்டர்களும் சரணஸ்த்தஸ்ய—நான்காவது உபாயமான சரணகதி செய்தவனுடைய கோடிதமீம் கலாமபி—மேன்மையின் கோடி பாகங்களிலொன்றைக்கூட நார்ஹந்தி—பெற யோக்யதையுடையரல்லர். பக்தியோக நிஷ்டனுடைய மேன்மைக்கு மேல் கோடி பங்கு மேன்மையையுடையவன் ப்ரபந்நன் என்றதாயிற்று. அம் மேன்மையாவது—ப்ராரப்தமெல்லாம் கழித்து உடனே பலனளிக்கும் தன்மை. இங்கே பக்தியோக நிஷ்டனென்று சொல்லாமல் கர்மயோக ஜ்ஞாநயோகங்களையும் சேர்த்தபடியாலே பக்தி ஸ்தாநத்திலே பண்ணவேண்டிய ப்ரபத்தியை கர்மயோக ஜ்ஞாநயோகங்கள் செய்த பிறகு பக்தி பண்ணவேண்டும் ஸமயத்தில்தான் செய்ய வேண்டுமென்று நினைக்கவேண்டா. கர்மயோகம் செய்யத் தொடங்குவதற்கு முன்னமே பூர்ணமான ஆகிஞ்சந்யத்தை முன்னிட்டு ப்ரபத்தி செய்யலாம். அதனல் கர்மயோகம் பூர்த்தியாவதற்கான பல ஜந்மங்கள். பிறகு ஜ்ஞான யோகத்திற்கும் பல ஜந்மங்கள்; அதன்பின் பக்தி யோகத்திலிறங்கி தர்சநஸமாநாகார ஜ்ஞாநம் பெறுதற்குப் பல ஜந்மங்கள் இப்படி பக்தி நிஷ்பந்நமானலும் ப்ராரப்தம்கழிவதற்காகப் பலஜந்மங்கள் இவ்வளவு காலம் ஸம்ஸாரத்தில் உழன்று வரும் பக்தனைவிட உடனே மோக்ஷம் போகும் ப்ரபந்நனுக்கு எத்தனையோ கோடி மடங்கு மேன்மை யென்னலாம்.

இப்படி ப்ராஸங்கிகமாக முமுக்ஷுவுக்கன்றி புபுக்ஷுக்கும் ப்ரபத்தி உபாயமென்று ஸாதித்து முமுக்ஷுவான ப்ரபன்னனின் மேன்மையருளினர். இனி ப்ரக்ருத முமுக்ஷு விஷயத்தில் ப்ரபத்திக்குப் பலனகச் சேர்க்கப்பட்ட, இங்குச் செய்யும் கைங்கர்ய விஷயத்திலே ஒரு கேள்வியைப் பரிஹரிக்கிறர் இவனுக்கு இதி. கேள்வியாவது—இங்குச் செய்யும் கைங்கர்யமும் மோக்ஷமும் ப்ரபத்திக்குப் பலனகில் மோக்ஷம்போலே இது

தலில் वैषम्यத்தாலே வந்தது. அதுதனக்கு அடி प्रारब्ध सुकृत विशेषं. अन्तिम-शरीरानन्तरं பெறும் பேற்றில் ஒரு वैषम्यமில்லை. पारतन्त्र्यं एकरूपं.
"पारतन्त्र्यं परे पुंसि प्राप्य निर्गतबन्धनः । स्वातन्त्र्यमतुलं प्राप्य तेनैव सह मोदते ॥"

---

வும் எல்லோருக்கும் ஒரேவிதமாகும், இங்கு வைஷம்யமிருக்கலாமாகில் ப்ரபந்நர்களில் ஒவ்வொருவருக்கும் மோக்ஷத்தில் பேதம் இருக்கலாம், ஆகில் பக்தருக்கும் ப்ரபந்நருக்கும் கூட வாசியிருக்கலாமென்ன, அருளுகிறார் இவனுக்கு **இத்யாதி;** மோக்ஷத்தில் ஸ்வாபாவிக பலத்திற்கு ஆவிர்பாவமாகையாலே யாருக்கும் வைஷம்யத்திற்கிடமில்லை அது இங்குள்ள பலனில் மட்டும் நேரும். ஏனெனில்—மோக்ஷத்திற்கு ப்ரபத்தி பண்ணும் போது. கைங்கர்யங்கள் செய்யவும் அநுக்ரஹிக்க வேணுமென்று கேட்காமலிருத்தால் அவனுக்கு பூர்வஜந்மஸுக்ருதம் மூலமாகவே கைங்கர்யம் செய்ய நேரிடுகிறபடியால் அது ப்ரபத்திக்குப் பலமன்று; பூர்வஜந்ம ஸுக்ருதத்திற்கீடாக வருகிறது. கைங்கர்யத்தை ப்ரபத்திக்குப் பலமாக நினைத்துக் கேட்பவருக்கும் கைங்கர்யத்தில் வாசியுண்டு; எல்லோரும் ஒரேவிதமாகவே கைங்கர்யத்தை விரும்புகிறார்களென்பதில்லை. சிலருக்குச் சில இஷ்டமாயிருக்கும். மாநஸத்யாநாதிகளில் வாசிககைங்கர்யத்தில் காயிக கைங்கர்யத்தில் ஒன்று ஒருவருக்கு இஷ்டமாகிறது. அவரவர்களுக்குள்ள சக்தியையநுஸரித்தும் பூர்வஜந்ம வாஸனையை யநுஸரித்தும் கேட்பதிலும் கர்மாநுகுணமாக பேதம் இருந்தே தீரும்; எம்பெருமானார் தாம் ப்ரபத்தி யநுஷ்டிக்கும் போது ஸ்வயம் ப்ரயோஜநமாக "பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தி யுக்தம் மாம் குருஷ்வ" என்று ப்ரார்த்தித்தார், இவ்வளவு இந்த சரீரத்தில் நாம் பெறமுடியுமென்று ஒவ்வொருவரும் நினைக்கக் கூடுமா என்றபடி.

சிலர் மோக்ஷத்திலும் பக்தி ப்ரபத்திகளுக்குப் **பலத்தில்** பேதமுண்டென்கின்றனர். பக்தனுக்கு '**स स्वराट् भवति**, '**परमं साम्यमुपैति**, என்று ஸ்வாதந்த்ரயம் சொல்லப்பட்டது ; விஷ்ணுதத்த்வத்திலும் '**स्वातन्त्र्यमतुलं प्राप्य तेनैव सह मोदते।**' என்று 'பூர்ண ஸ்வாதந்த்ர்யமும் பரமாநந்த ஸாம்யமும் சொல்லப்பெற்றது. பக்தன் த்யாந மூலமாக அநுபவத்தில் ஈடுபட்டிருப்பதால் அநுபவத்தில் அவனுக்கு நோக்கு. ப்ரபந்நன் '**तवास्मीति च याचते**' என்றபடி பகவச் சேஷித்வ பாரதந்த்ர்யங்களை விரும்புகிறபடியால் இவனுக்குக் கைங்கர்யமே புருஷார்த்தமாகும். அதனாலேயே '**भक्तैर्भागवतैः सह**' என்று இருவகையாக அங்குள்ளவரைப் பிரித்திருக்கின்றனரென்றவாறு—இது அப்ராமாணிகமென்றறிவிக்கிறார் **பாரதந்த்ர்யமிதி.** பாரதந்த்ர்யம் ஏகரூபம்= பக்தர் ப்ரபந்நர் இருவரிடத்திலும் அவர்களின் உட்பிரிவிலும் எங்கும் ஒரேவிதமாகும். ஸம்ஸாரத்திலிருக்கக் கூடிய பாரதந்த்ரயம் போலவே மோக்ஷத்திலும் குறைவிராமலிருக்கும் ச்ருதியில் **स स्वराट् भवति** என்று ஸ்வாதந்த்ர்யம் சொன்ன வாக்யத்திற்கு ப்ரஹ்ம ஸூத்ரம் நான்காம் அத்யாயத்தில் **फलपाद**மென்கிற நான்காம் பாதத்தில் '**अत एव च अनन्याधिपतिः**' என்கிற ஸூத்ரத்தில்

என்று फलदर्शियிற் சொல்லுகிற स्वातन्त्र्यமும் कर्मवश्यனன்றிக்கே सर्वविधकैङ्कर्य-योग्यனுகை என்று फलपादத்திலே निर्णीतம்.

---

இவனுக்கு பகவத்பாரதந்த்ர்யமே யுள்ளது; அந்யபாரதந்த்ர்யமில்லை; அதாவது ஸம்ஸாரத்தில் பகவானுக்கதீநமாயிருப்பது போல் கர்மாதீநமாகவும் இருந்தான். அந்த பாரதந்த்ர்யம் இப்போதில்லை, அதனுல் கர்மாதீநமாகவிருக்கும் போது விவேகமில்லாமையால் தன்னுலாகாததையும் தான் ஸங்கல்பித்து அஸத்ய ஸங்கல்பனுயிருந்தான். மோக்ஷத்தில் விவேகம் வந்திருப்பதாலே பகவானுடைய திருவுள்ளத்திற்கிணங்கவே ஸங்கல்பிப்பதால் ஸத்ய ஸங்கல்பத்வம் ஸித்திக்கிறது. இதுவே ஸ்வராட்த்வம் என்று நிர்ணயிக்கப் பட்டிருப்பதால் விஷ்ணுதத்த்வ ச்லோகத்திற்கும் இதே பொருள். परे पुंसि பரமாத்மாவினிடத்தில் பாரதந்த்ர்யத்தை प्राप्य—அடைந்து निर्गतबन्धनः—ஸம்ஸாரபந்தம் விலகவே अतुल—ஒப்பற்ற ஸ்வாதந்த்ர்யத்தை யடைந்து तेनैव सह-அவனேடு கூடவே मोदते—ஆநந்திக்கிருன், இவன் எப்போதுமே பரதந்த்ரனுயிருப்பதால் பாரதந்த்ர்யத்தை யடைந்த பிறகு ஸம்ஸாரத்தை விடுகிருன் என்பது கூடுமோ வென்னில்—அடைந்து என்பதற்கு அறிந்து இசைந்து என்னும் பொருளிலே முடிவாம். இருக்கும் பாரதந்த்ர்யத்தை அறியாதபோது போலன்றி பரதந்த்ரனுகவே நடந்து கொள்வதால் 'பரதந்த்ரனுக்கான கைங்கர்ய கர்மாவை' அடைந்து என்று ஒரே கருத்துமாகலாம்; ஸ்வாதந்த்ர்யத்தை யடைந்து என்றதற்கு பகவத்பாரதந்த்ர்யத்தை விட்டு என்று அர்த்தமல்ல. தன்னிஷ்டப்படியிருந்து என்றே பொருள். தன்னிஷ்டப்படியிருக்கத் தடையான கர்மபாரதந்த்ர்யம் விலகினபடியால் ஸத்ய ஸங்கல்பத்வம் ஸ்வாதந்த்ர்யம் இவைகளுக்கு ஹாநியில்லை என்றபடி. ஸ்ரீபாஷ்யகாரர் भूमाधिकरणத்திலே ஸ்வராட் என்பதற்கு அகர்மவச்ய: என்று பொருளுரைத்தது காண்க. அதற்கு மூலம் फलपादமாகையாலே அங்கு விசாரித்து முடிவு செய்ததைக் கருதி பலபாதத்திலே நிர்ணீதம் என்றருளினர். அங்குள்ள அநேகாதிகரணங்கள் இதற்கு ஸாதகமாகுமென்கிற கருத்தாலே பாதத்திலே என்று பொதுவாக அருளினர். வசநபூஷணத்தில் उपायान्तरनिष्ठानां उपेयो भगवदनुभवः என்று பக்தர்களுக்கு அநுபவம் பலன், ப்ரபந்நருக்கு கைங்கர்யம் பலனென்று பிரித்திருப்பது உசிதமாவென்று முமுக்ஷுப்படி வ்யாக்யானமான தாத்பர்யதீபிகையில் கேட்டு, 'அவ்வித பிரிவில் தாத்பர்யமில்லை: கைங்கர்யம் அநுபவ பரீவாஹமானபடியாலே பக்தருக்குமுண்டு; அதனுல் ப்ரபந்நருக்கும் அநுபவம் துல்யமாகவுண்டு' என்று ஸ்தாபித்து வசநபூஷண வ்யாக்யாதாவான அவருடைய ஸாக்ஷாத் சிஷ்யரே அப்பிரிவு இல்லையென்று ஸ்தாபித்திருக்கிருரென்று நிரூபித்திருப்பதால் இவ்விஷயத்தில் ஸம்ப்ரதாயபேதத்தைக் கட்டுவது சரியல்ல. 'ப்ரபத்தி செய்தவனுக்குப் பாரதந்த்ரயகாஷ்டை; பக்தனுக்கு அஹங்காரலேசமுண்டு. 'அது ஸ்வாதந்தர்யமதுலம் ப்ராப்ய'என்று மோக்ஷத்திலேயே ஸ்வாதந்த்ரயத்தைச்

வேண்டும் பெரும்பயன் வீடென்றறிந்து விதிவகையால்
நீண்டுங் குறுகியு நிற்கு நிலைகளுக்கேற்குமன்பர்
மூண்டொன்றின் மூலவினை மாற்றுதலின் முகுந்தனடி
பூண்டன்றி மற்றோர் புகலொன்றிலையென நின்றனரே. (15)

---

சொல்லியிருப்பதால் அதை நினைத்திருப்பதால் இங்குமிருப்பதாகும்' என்றெல்லாம் செய்யும் கல்பனைகள் நியதசேஷத்வாதி விஷயமான பல வசந விருத்தம் என்பதை மேலேயும் காண்க.

இந்த க்ரந்தம் முமுக்ஷுவானவன் ப்ரபத்தியை அவச்யம் அறிய வேண்டுமென்பதற்காக ஏற்பட்டது. பக்த்யுபாய நிஷ்டனுக்கும் லகூபாயங்களான உக்தி ஆசார்ய நிஷ்டை வைஷ்ணவஸம்ச்ரயம் விஷயவாஸம் முதலானவற்றிலிழிந்தவனுக்குமிது வேண்டா என்ற சங்கையைப் போக்க இங்கு ஸத்வாரக ப்ரபத்திநிஷ்டன் அத்வாரகப்ரபத்திநிஷ்டன் என்று இருவகையாகப் பிரித்து எல்லா முமுக்ஷுவுக்கும் ப்ரபத்தி யவச்யமென்று ஸ்தாபித்தார். இது முழுமையும் பாசுரத்தில் ஸங்க்ரஹிக்கிறார் வேண்டும் இதி. வேண்டும்—நாம் அபேக்ஷிக்க வேண்டிய பெரும் பயன்—பெரிய பலமானது வீடு–மோக்ஷமே என்று அறிந்து விதி வகையால்—தனக்குள்ள ஸுக்ருதத்தின் பிரிவுக்குத் தக்கவாறு நீண்டு–தீர்க்க கால ஸாத்யமாகவும் குறுகிஉம்—ஸ்வல்ப்ப கால ஸாத்யமாகவும் நிற்கும்—வ்யவஸ்த்திதமான, நிலைகளுக்கு—உபாயங்களுக்கு ஏற்கும்—அர்ஹராய் நின்ற, சிலர் ஜ்ஞாநசக்த்யாதிகளிருப்பதால் குருபாயத்திற்கு யோக்யதையுள்ளவர்; மற்றும் சிலர் அவையில்லாமையாலே இலகுவான உபாயத்திற்கே அர்ஹர் என்றவரான அன்பர்–மோக்ஷத்தில் ப்ராப்யனான பகவானிடம் அன்புள்ளவர்கள், ஒன்றில் இருவகை யுபாயங்களில் ஏதேனுமொன்றில் மூண்டு—ப்ரவ்ருத்தி செய்து மூலவினை மாற்றுதலில்—ஸம்ஸார காரணமான கர்மாக்களை அப்புறப்படுத்துவதற்கு மற்றோர் புகல்–வேறொரு கதியானது முகுந்தன் அடி–மோக்ஷப்ரதனான ஈச்வரனுடைய திருவடிகளை, பூண்டு அன்றி—பற்றிய பிறகல்லது ஒன்றிலை—ஒன்றுமில்லை என நின்றனர் தெளிந்து கொண்டனர். மோக்ஷமே பரமபுருஷார்த்தமென்றறிந்து அதற்கு இரண்டுவிதமான உபாயங்களைக் கண்டபோது பூர்வஜந்ம ஸுக்ருதத்திற்கு அநுகுணமாய் யாருக்கு எதில் யோக்யதையோ அதிலிழிந்து அதன் மூலம் மூலமான வினைகளைப் போக்கலாமென்று தெளிந்து, எதிலே யிழிவதானாலும் அவன் திருவடியில் சரணாகதியன்றி வேறு வழியில்லை என்ற முடிவுக்கு வந்தனரென்றபடி. இங்கு உத்தரார்த்தத்தில் பக்தி ப்ரபத்திகளான இரண்டு வழிகளில் பக்தியிலோ ப்ரபத்தியிலோ ப்ரவர்த்தித்து கர்மாக்களைக் கழிக்க வேண்டும் அதில் பகவச்சரணாகதி தவிர வேறு இல்லையென்று பொருளுரைத்தல் தகுமோ? பக்தியிலிழிந்து அநாதி கர்மாக்களை விலக்க ப்ரபத்தி வேண்டுமென்றால் பொருந்தும்; ப்ரபத்தியிலிழிந்து கர்மாக்களைப் போக்க ப்ரபத்தி

प्रपन्नादन्येषां न दिशति मुकुन्दो निजपदं प्रपन्नश्च द्वेधा सुचरितपरीपाकभिदया ।
विलम्बेन प्राप्तिर्भजनसुखमेकस्य विपुलं परस्याशु प्राप्तिः परिमितरसा जीवितदशा ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे अधिकारिविभागाधिकारोऽष्टमः

—o—o—

வேண்டும் என்று உரைப்பது அழகாயில்லையே; இரண்டு ப்ரபத்தி சொல்லுவதாயிருந்தால் இவ்வாறு கூறலாமென்றில்—பக்திக்கும் ப்ரபத்தி வேண்டுமென்பதில்தான் இதற்கு நோக்கென்க. அல்லது பக்திப்ரபத்திகளை நேராகச் சொல்லாமல் குரூபாயம் லகூபாயமென்று இருவகையாகக் குறித்து பல குரூபாயங்களான பக்தி மார்க்கங்களையும் ப்ரபத்தி உக்தி ஆசார்ய நிஷ்டை க்ஷேத்ரவாஸம் நாமஸங்கீர்த்தநம் முதலான லகூபாயங்களையும் ஆபாதமாக வாக்யங்களிலிருந்து அறிந்து ஏதேனுமொன்றில் இழியவேண்டுமென்று நினைத்தவர்கள், யார் எந்த உபாயத்தில் இறங்கினாலும் உக்தி க்ஷேத்ர வாஸாதிகளிலிறங்கினாலும் ப்ரபத்தி யல்லது வேறு புகலில்லை. அதாவது ப்ரபத்தியில்லாமல் பக்தி ஸாதிக்கமுடியாது; உக்தி ஆசார்யநிஷ்டையிலும் ப்ரபத்தியே; க்ஷேத்ரவாஸாதிகளுக்கும் ஸத்வாரகமோ அத்வாரகமோ ப்ரபத்தி வேண்டியதே என்று இந்த அதிகாரத்திற் சொன்னபடி தெளிந்தனர் என்றதாம். ஓர் ஒன்று என்ற இருசொற்கள் எதற்காகவென்னில் ஓர் புகல்=ஒப்பற்ற புகல், 'भक्त्या परमया वापि' என்கிற வசனம் விலக்கியதால் ஒன்றில்லை—ஒன்றுமில்லை என்பது அதன் பொருள். இதனால் க்ஷேத்ர வாஸாதிகள் பரம்பரயா காரணமென்று ஸாதிக்கப்பட்டது.

இனி ச்லோகத்தினால் பக்தி ப்ரபத்திகளிலிழிகிறவர்களுக்கு சக்தி அசக்திகளைப் போல் சில பலாம்சத்தில் உண்டான ருசியும் காரணம் என்றறிவிக்கிறார். मुकुन्दः—மோக்ஷமளிக்கும் ஸ்வபாவமுள்ளவன் प्रपन्ना अन्येषाम्—அப்ரபந்நர்களுக்கு निजपदं—தனது பரமபதத்தை न दिशति—கொடுப்பதில்லை. அநுபவிக்கச் செய்வதில்லை. प्रपन्नश्च—ப்ரபத்தி செய்கிறவனும். सुचरितपरीपाकभिदया அவனவன் ஸுக்ருதம் பரிபக்வமாவதிலுள்ள வாசியைக் கொண்டு द्वेधा—இருவிதம்—ஸத்வாரக ப்ரபத்தி நிஷ்டன் அத்வாரக ப்ரபத்தி நிஷ்டன் என இருவிதமாகிறான். एकस्य—ஸத்வாரக ப்ரபத்தி நிஷ்டனுக்கு प्राप्तिः—பரமபத ப்ராப்தியானது, विलम्बेन—தாமதித்தே-ப்ராரப்தமெல்லாம் அநுபவித்த பிறகே. ஆனால் இங்கே विपुलं நீண்டு மகன்றுமுள்ள. भजनसुखम्—த்யாநகாலத்தில் பகவதநுபவச் சுவையுண்டு. परस्य—அத்வாரக ப்ரபத்தி நிஷ்டனுக்கு जीवितदशा—ஜீவித காலமானது परिमितरसा-பகவதநுபவரஸம் சிறிதே யுள்ளதாகும். ஆனால் आशु-விரைவில் प्राप्तिः-பரமபத ப்ராப்தியாகும். ऐहिकपरमात्मानुभवसमृद्धियை விரும்புகிறவன் பக்தியிலிழிவான். அது அரிதென்று அதே ஸமயத்தில் மோக்ஷத்திலே ரஸத்தை விரும்புகிறவன் ப்ரபத்தியிலிழிவான் என்றதாம். प्रपन्नன் என்கிற பதத்திற்கு என்ன

பொருள்? ப்ரபத்தி செய்யப்பட்டவன் என்பது பொருந்தாது. कर्तरि ப்ரத்யயமாய். ப்ரபத்தியைச் செய்கிறவனென்று கொள்ளவேண்டும். ஆசார்ய நிஷ்டனுக்கும் பசுபக்ஷ்யாதிகளுக்கும் வேறொருவரே ப்ரபத்தி செய்கிறபடியால் அந்த ஜீவர்களுக்கு கர்த்ருத்வமில்லை யாகையால் ப்ரபந்நன் என்னவாகுமோ யென்னில்? ஆசார்யாதிகளைப் ப்ரார்த்திப்பவனுக்குப் பரம்பரயா ப்ரபத்தி கர்த்ருத்வம் கூடுமானாலும் பசுபக்ஷ்யாதிகளுக்கு அதுவுமில்லை. என்னில்—ப்ரபந்ந சப்தத்திற்கு முக்ய ப்ரயோகம் நேராக ப்ரபத்தி செய்கிறவனிடத்திலேயே; மற்றவருக்கு அது உபலக்ஷணம். லக்ஷணயா வேறு அர்த்தம் சொல்லி எல்லோரையும் க்ரஹிப்பது. ப்ரபத்தி செய்தவனுக்குப் போல் இதரர்களுக்கும் ஸமர்ப்பிதபரத்வமென்கிற தர்மமுண்டே. இனி இதையே முக்யமாகக் கொள்ளலாம். எங்ஙனே என்னில்-ப்ரார்தநாவிசிஷ்ட ப்ரந்யாஸம் ப்ரபத்தி யென்கிறோமே; அதற்கு பதிலாக ப்ரார்த்தநா விசிஷ்ட ந்யாஸகர்மீபூதத்வம் ப்ரபத்தி யென்கிறது. அதற்காச்ரயமாயிருப்பவன் ப்ரபந்நன். ப்ரார்த்தநாவைசிஷ்ட்யம் ந்யாஸத்திற்கு ஸமாநகர்த்ருகத்வ ஸம்பந்தத்தினால் என்பது துல்யம். இப்படி பரார்த்தநாவிசிஷ்ட பரந்யாஸமாத்ரம் ப்ரபத்தியாய் அதற்கே ஸ்வகர்மீபூதபரஸ்வாமித்வம் புருஷனுடன் ஸம்பந்தம் என்னலாம். ஆத்மாத்மீய பரந்யாஸமான ப்ரபத்திக்கு கர்த்தா ஆசார்யனானாலும் பரஸம்பந்தித்வம் ஆத்மாவுக்கும் ஆத்மீயருக்குமுண்டே, ஆகையால் 'प्रपन्नादन्येषाम्' என்கிற ப்ரபந்ந சப்தத்தாலே ஆசார்ய நிஷ்டரை க்ரஹிக்கக் குறையில்லை.

அதிகாரி விபாகாதிகாரம் முற்றும்.

ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம:

### உபாயவிபாகாதிகார: (9)

முமுக்ஷுக்களெல்லோருக்கும் ப்ரபத்தியால் மோக்ஷமாகில் அதிகாரி பேதமே யிருக்கமாட்டாதென்கிற ஆசங்கையைப் பரிஹரிக்க கீழதிகாரத்தில் பக்தி மார்க்கங்களெல்லாம் துல்யமாக மோக்ஷோபாயங்களாயிருந்தாலும் மதுவித்யாதிகளில் பலபேதமுமிருப்பதால் அதிகாரி விபாகமிருப்பதுபோல் அத்வாரக ஸத்வாரக ப்ரபத்திகளிலும் சக்தி அசக்தி பேதத்தாலும் फलभेदத்தாலும் அதிகாரி விபாகம் கூடுமென்று நிரூபித்தார். இதனாலேயே உபாயபேதமும் வ்யக்தமாகையால் உபாயவிபாகாதிகாரம் எதற்கெனில்—ப்ரமாணங்களில் பக்தி ப்ரபத்திகளைப் போலே ஈச்வரனையும் உபாயமாகச் சொல்லியிருப்பதால் அதை நிர்வஹிக்கும் சிலர், 'ஈச்வரனை உபாயமாக நினைத்தவர்கள் தமக்குள் அத்யந்த பாரதந்த்ர்யத்தை நினைத்து ஒன்றுமே செய்யவேண்டா. அதில் விச்வாஸமில்லாதவர்களுக்கே பக்தியோ ப்ரபத்தியோ வென்று அதிகாரி விபாகம் செய்வர். இதை நிரஸிப்பது இவ்வதிகாரத்தில் ஈச்வர உபாயத்வத்தையும் பக்த்யாத்யுபாயத்வத்தையும் விருத்தமாக்கி விகல்பம் சொல்வது தவறு. யாகாதி கர்மங்களுள்பட எங்கும் பகவானே உபாயமென்று

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

## उपायविभागाधिकारः

### உபாயவிபாகாதிகாரம் 9.

उपायः स्वप्राप्तेरुपनिषदधीतः स भगवान्
प्रसत्त्यै तस्योक्ते प्रपदननिदिध्यासनगती ।
तदारोहः पुंसस्सुकृतपरिपाकेण(न) महता
निदानं तत्रापि स्वयमखिलनिर्माणनिपुणः ॥

---

'फलमत उपपत्तेः' என்கிற ஸூத்ரத்தில் வ்யாஸர் அருளினார். அவன் என்றும் ஸித்தமாயிருப்பதால் ஸித்தோபாயமென்கிறது சேதநன் ஒரு வ்யாபாரம் செய்யாமலிருக்க ஈச்வரன் தானே உபாயமாகிறானென்றால் வைஷம்யாதி தோஷம் வருமாகையாலும், பக்தி ப்ரபத்திகளை விதித்திருப்பதாலும் இந்த வ்யாஜம் அநுஷ்டித்தவர்விஷயத்திலே வ்யாஜத்திற்கு விஷயமாகிக் கொண்டே அவன் உபாயமாகிறான். லக்ஷ்மீ தந்த்ரத்தில் கர்மயோக ஜ்ஞாநயோக பக்தியோக ப்ரபத்திகளான நாலு உபாயங்கள் சொல்லப்பட்டாலும் முதல் மூன்றும் க்ரமேண ஓரதிகாரிக்கேயாவது போல் ஸாத்யோபாயத்தோடு ஸித்தோபாயமும் ஓரதிகாரிக்கேயாம். ஆகையால் ஈச்வரோபாயாதிகாரியென்று ஒரு பிரிவு கிடையாது. ஆகக் கீழ்ச்சொன்ன இரண்டுவித அதிகாரிகளே உளர் என்று நிரூபிப்பதாம். இங்கு, இப்படி ஸித்தோபாய ஸாத்யோபாயங்களும் நிரூபிதங்களாம். ஸமந்வயாதிகரண ஸ்ரீபாஷ்யத்திலே ஸாத்யோபாயம் ஆவச்யகம் என்றதையும் காண்க ச்லோகார்த்தமாவது **सः**-அந்த, ஸித்தமாய் ஸாத்யோபாய ஸாபேக்ஷகனான், **भगवान्**=உபாயத்வத்துக்குரிய கல்யாணகுண விசிஷ்டனான திருமால் **स्वप्राप्तेः**—தன்னைப் பெறுகையாகிற மோக்ஷத்திற்குத் தானே **उपायः उपनिषदधीतः**—உபாயமாக உபநிஷத்தில் ஓதப்பட்டான். **अमृतस्य एष सेतुः, परामृतात् परिमुच्यन्ति सर्वे, धातुप्रसादात् महिमानं, यमेवैष वृणुते तेन लभ्यः** இத்யாதிகளைக் காண்க. அநுக்ரஹ ஸங்கல்பமுடையவனாய் பகவான் உபாயம் என்றபடி. **तस्य**-அவனுடைய **प्रसत्त्यै**—அநுக்ரஹ ஸங்கல்பத்திற்காக, அதற்குக் காரணமாக, **प्रपदननिदिध्यासन गती**—ப்ரபத்தி, த்யாநம் என்கிற இரு வழிகள் **उक्ते**—ஓதப்பட்டன **पुंसः**-ஜீவனுக்கு **तदारोहः**-பக்தி ப்ரபத்தி என்கிற உயர்ந்தபடியில் ஏறுகையும் **महता**-பெரிய **सुकृतपरिपाकेन**-புண்யத்தின் முதிர்ச்சியினால் ஆகும். **तत्रापि**-அத்தகைய ஸுக்ருத விசேஷத்திலும் **अखिलनिर्माण निपुणः स्वयम्**-தானே எல்லாம் படைக்க வல்லனான அவன் **निदानम्** ஆதிகாரணமாகிறான். ஆக பகவான் உபாயமென்று சொல்லுகிறது அவன் ஸங்கல்பித்த போதே பலன் வருகிறபடியாலே அவனே நேராகக் காரணமாகிறான் பக்தி ப்ரபத்திகள் அந்த ஸங்கல்பத்திற்கே காரணமாகையால் நேர் உபாயமாகா. ஆனாலும் யாகாதிகளைப் போலே மோக்ஷஸாதநமாக விதிக்கப்பட்டிருக்கிறபடியால் அவை உபாயமே. ஸித்தாந்தத்திலே அத்ருஷ்டமென்று ஜீவாத்ம குணத்தை யிசையாமல் பகவத் ப்ரீதியே

இவர்களுக்குக் கர்தவ்யமான உபாயமாவது ஒரு ஜ்ஞானவிசேஷம். இத்

---

த்வாரமாகக் கொள்கிறபடியால் ப்ரஸாதமென்பது த்வாரமாகும் ப்ரீதனை பகவான் ஸங்கல்ப்பம் செய்தாலொழிய பலன் வாராதாகையாலே ஸங்கல்பம் ப்ரதாநம். அது தர்மியான பகவானை யாச்ரயித்திருப்பதால் பகவத் ஸங்கல்பம் உபாயமென்னுமல் ஸங்கல்பவிசிஷ்ட பகவான் உபாயமென்கிறது. வெறும் பகவான் எப்போதுமிருக்கிறபடியால் உபாயமாகான். மேலும் அந்த ஸாத்யோபாயத்திற்குக் காரணமான ஸுக்ருதத்திலும் அநாதிஸம் ஸாரத்தில் அதற்குக் காரணமாயிருந்த சரீர ஸத்ஸஹவாஸ தத்காரண பரம் பரையிலும் எங்குமவன் அவ்வவ பலனை ஸங்கல்பிக்க வேண்டி யிருப்பதால் எங்கும் விடாமல் சேர்ந்துள்ள அவனையே ப்ரதாந காரணமென்கிறோ மென்றதாயிற்று.

இதன் விவரணம். ஸித்தம் ஸாத்யமென்று உபாயம் இரண்டாகிறது போல் உபேயமுமிரண்டாகிறது. அந்த உபேயமான விரண்டும் பிரிக்கப்படுகிறதில்லை. அதாவது ஸித்தோபாயத்திலிழிந்தவனுக்கு ஸித்தோபேயம், ஸாத்யோபாயத்திலிழிந்தவனுக்கு ஸாத்யோபேயம் என்ற பிரிவு கிடையாது. இப்படி ஸித்தஸாத்ய உபேயங்கள் ஓர் அதிகாரிக்குச் சேருவது போல் ஸித்தஸாத்ய உபாயங்களும் சேர்ந்தே யிருக்கும் அந்தச் சேர்க்கையை ஸாத்யோபாய உபேயங்களை ஜ்ஞாநமாக்கி ஸித்தோபாயோபேயத்தை அதற்கு விஷயமாக்கி உபபாதிக்கிறார் இவர்களுக்கு இத்யாதியால் இதனால் ஜ்ஞாநாந் மோக்ஷ: என்பதும் ரக்ஷித்ததாகும். சில ஸமயம் கைங்கர்யமென்பது இல்லாவிட்டால் மோக்ஷம் போய்விட்டதென்கிற சங்கையும் தீரும். அப்போதும் ஜ்ஞாநரூப மோக்ஷத்திற்குக் குறையில்லையே. இவர்களுக்கு = प्रपदननिदिध्यासनादौ என்று சொல்லப்பட்ட உபாயநிஷ்டர்களுக்கு. இனி, ஸித்தோபாயம் ஸாத்யோபாயமென்ற இரண்டு உபாயங்களிலும், அவ்வாறு இரண்டு உபேயங்களிலும் ஸித்தமான ஈச்வரன் எப்படி ஸாத்யமாகானோ–அப்படி ஸாத்யமாகச் சொல்லப்பட்டதும் ஸாத்யமாகாது. 'ஜ்ஞாநாந் மோக்ஷ: மோக்ஷமானது பகவதநுபவம்' என இரண்டுமே ஜ்ஞாநமாயிற்றே; ஜ்ஞாநம் க்ரியை போல் புருஷதந்த்ரமன்றே; வஸ்து தந்த்ரந்தானே; அதனால்தானே ஜ்ஞாநேச்சாக்ருதிகள் க்ருதி ஸாத்யங்களல்ல, சக்ஷுராதி ஸாமக்ரீ இருக்கும் போது புருஷ ப்ரயத்நமின்றியே தானே உண்டாகின்றன. இப்படி உபாயம் ஸாத்யமாகாதாகையால் அதைக் கொண்டு அதிகார நிரூபணம் எங்ஙனே என்கிற சங்கையைப் பரிஹரிக்க கர்த்தவயமான என்றார். मन्तव्यो ध्यातव्यः இத்யாதி விதிகளைக் காண்க. உண்மையில் யாகதாநாதிகளும் ஜ்ஞாநவிசேஷமென்றே தாந்த்ரிக ஸித்தாந்தம், அவை கர்த்தவ்யமென்பதில் விவாதமில்லையே. எல்லா ஜ்ஞாநமும் கர்த்தவ்யமாகாவிட்டாலும் சில கர்தவ்யமாகலாமென்பதற்காக விசேஷம் என்கிற சொல் உபாய பதத்தாலே ஸத்வாரக ப்ரபத்தி. அத்வாரக ப்ரபத்தி

தாலே साध्यமாய் प्राप्तिरूपமான உபேயமாவது[ம்?]ஒரு ज्ञानविकासविशेषं. இவற்றில் உபாயமாகிற ज्ञानविकासविशेषं करणसापेक्षமுமாய் शास्त्रविहितமுமாய் सत्यत्वादिகளான स्वरूपनिरूपकधर्मங்கள் அஞ்சோடே கூடின, அவ்வோ विद्याविशेष-प्रतिनियतगुणादिகளிலுலே नियत-ब्रह्मविषयமுமாயிருக்கும் उपेयமாகிற ज्ञानविकास-विशेषं करणनिरपेक्षமுமாய் स्वभावप्राप्तமுமாய் गुणविभूत्यादिகள் எல்லாத்தாலும்

---

என்று கொள்ளலாகாது. மேலே பக்தி ப்ரபத்திகளை நிரூபிப்பதால் இங்கு ச்லோகத்தில் குறித்தபடி அவற்றையே குறிக்கவேண்டும். 'ஒரு' என்று ஏகத்வ விவக்ஷையில்லை. உபேயமான ஜ்ஞாநவிகாஸ விசேஷத்தைவிட வேறான என்றதாம் இது பலவித பக்தி ரூபமாயும் பலவகையான ப்ரபத்தி ரூபமாயுமிருக்கும்; ஏகரூபமன்று. இனி உபேயமான ஜ்ஞாநத்திற்கும் ஸாத்யத்வம் கூடுமென்கிறார் இத்தாலே இதி. இத்தாலே ஸாத்யமாய்= இதைக் கொண்டு உண்டுபண்ணப்படுவதாய் ஒரு= உபாயமாகச் சொன்ன ஜ்ஞாநத்தைவிட வேறான; விசேஷ பதத்தினுடைய அர்த்தத்தை விவரிக்கிறார் இவற்றில் இதி. பக்தி ப்ரபத்திகள் மனத்தை சுத்தமாக்கி ஸங்கல்ப ப்ரயத்ந பூர்வகம் ஸாதிக்கப்படுகிறபடியால் கரணஸாபேக்ஷமென்பது ஒரு விசேஷம் அதற்கு சாஸ்த்ர விதிகளே காரணமாகையால் சாஸ்த்ரவிஹிதத்வமும் ஒரு விசேஷம். ப்ரஹ்மத்திற்கு குண.ஸ்த்தாந.விக்ரஹங்கள் பலவிருப்பதால் எந்தெந்த அம்சங்களை விஷயீகரிக்க வேண்டுமென்பதை சாஸ்த்ர மூலமாக அறிய வேண்டியிருப்பதால் ஒவ்வொரு வித்யையில் ப்ரஹ்ம விசேணமாக ஒவ்வொரு விதமான குண.ஸ்த்தாந விக்ரஹங்கள் விஷயமாகும்; எல்லாமல்ல. எல்லாம் விஷயீகரிக்கவும் முடியா ஆக வ்யவஸ்தித ப்ரஹ்ம விஷயத்வமென்பதும் விசேஷம். இதற்கு நேர்மாறாக உபேயமான ஜ்ஞாநத்தில் விசேஷங்களைக் குறிக்கிறார் உபேயேதி. உபேயமாவது பரிபூர்ண ஜ்ஞாநாநுபவம். அது பூர்ண விகாஸரூபம். அது ப்ரதிபந்தகமான வினைகள் விலகின பிறகு, தானே வருகிறது. ஆகையால் கரணஸாபேக்ஷத்வமில்லை. ஸ்வபாவப்ராப்தம் அதாவது ஸ்வாபாவிகமாகையால் சாஸ்த்ர விஹிதமன்று. ஸர்வவிஷயகமாகையால் வ்யவஸ்தித ப்ரஹ்ம விஷயமன்று. இப்படியானல் இதற்கு ஸாத்யோபேயமென்று எங்ஙனே பெயரென்னில்—நேராக அதை ஸாதிக்க வேண்டுமென்கிற ப்ரயத்நமில்லா விட்டாலும் அதற்கு ப்ரதிபந்தகமான கர்மாவின் நிவ்ருத்திக்கு இவன் ப்ரயத்னப்படுகிறபடியாலும் ப்ரதிபந்தகம் சென்ற பிறகு இதன் விகாஸம் உண்டாகிறபடியாலும் அதை ஸாத்யமென்கிறது. ஜ்ஞாநரூபமான உபாய உபேயங்களில் நேராக ஜந்யத்வ ரூபஸாத்யத்வமிருப்பது போல் அநாதியான ஈச்வரனிடத்தில் நேராக ஜந்யத்வம் வாராதாகையால் ஸாத்யமென்று வ்யவஹரிப்பதில்லை. 'व्रीहीन् अवहन्ति' என்கிற விஷயத்தில் முன்னமேயிருக்கிற வ்ரீஹிக்கு वैतुष्यविशिष्टाकारेण अवहननसाध्यत्वத்தையிசைவது போல் (वैतुष्यமாவது உமியை விட்டிருக்கை) ஈச்வரனும் प्रसादविशिष्टा-कारेण साध्यமாகிறபடியால் ஸாத்யோபாயமென்னலாமே பரமபதத்தில்

परिपूर्णब्रह्मविषयமுமாயிருக்கும்.

श्लो-उपासितगुणादेर्या प्राप्तावप्यबहिष्क्रिया । सा तत्क्रतुनयग्राह्या नाकारान्तरवर्जनम् ॥
प्राप्तिरूपமான இவ்வநுபவத்தினுடைய परीवाहமாய்க் கொண்டு कैङ्कर्यம் உபேயம். இவ்வுபாய ரூபமாயும் प्राप्तिरूपமாயுமிருக்கிற ज्ञानத்துக்கு விஷயமாய்க்

---

வரும் அநுபவ விசிஷ்டாகாரேண ஸாத்யமாய் ஸாத்யோபேயமென்னலாமே என்று சங்கிக்கலாம். ஆனாலும் உத்பத்தியென்பது விசேஷ்யத்தில் இல்லை யாகையால் ப்ரஹ்மத்தை அப்படி வ்யவஹரிப்பதில்லை. எல்லாத்தாலும் என்றது பரிபூர்ண என்பதோடு சேரும். முன் வாக்யத்தில் குணாதிகளினாலே என்பது நியத என்ற விடத்தில் சேரும்; இனி यथाक्रतुरस्मिन् लोके पुरुषो भवति, तथेतः प्रेत्य भवति என்கிற ச்ருதியானது—எவ்விதமாக ஒரு வஸ்துவை இங்கே உபாஸிக்கிறானோ, மேலுலகம் சென்று அவ்விதமாக அநுபவிப்பவனாகிறானென்றதே பரிமிதமான குணவிபூதிகளோடு ப்ரஹ்மோபாஸநம் செய்தால் பரிபூர்ண ப்ரஹ்மாநுபவம் வரக்கூடுமோ? ஆகையால் மோக்ஷம் ஏகரூபமாகாது அந்தந்த விதமான மோக்ஷத்திற்கு அந்தந்த விதமான உபாயமென்னவேண்டும் அது தகாதாகையால் பக்தி மார்க்கங்களுக்கு உபாயத்வமும் கூடாதென்கிற சங்கையைப் பரிஹரிக்கிறார் उपासित என்கிற காரிகையால். எப்படி உபாஸிக்கிறானோ அப்படி அநுபவிக்கிறானென்றால் உபாஸநத்திற்கு விஷயமான ஆகாரங்கள் फलकालத்தில் அவச்யமநுபவிக்கப்படுமென்றே பொருளாகையால், உபாஸிக்கப்பட்டது நீங்கலாக மற்றது வாராதென்கிற அர்த்தமில்லை. ஆக உபாஸிக்கப்பட்ட गुणादेः குணம் விபூதி முதலானவற்றிற்கு प्राप्तावपि—அநுபவகாலத்திலும் या अबहिष्क्रिया—நீக்கலில்லையென்பது யாதொன்று உண்டோ, அதுவே—நீங்காமையே तत्क्रतुनयग्राह्या—அநுபவிக்கப்படவேண்டிய வஸ்து விஷய உபாஸநத்தைப் பற்றி சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட ந்யாயத்தினாலே க்ரஹிக்கப்படும். नाकारान्तरवर्जनम्—வேறு அம்சத்தை அநுபவிப்பதில்லையென்பது न—இல்லை. अन्ययोगव्यवच्छेद மென்பதில்லை अयोगव्यवच्छेदமே. ஸ்வபவஸித்தமான அநுபவத்திலே ஸாத்யோபேயத்வத்தைச் சொல்வதை விட கைங்கர்யத்தில் சொல்வது ஸுகரமானபடியால் கைங்கர்யம் உபேயமென்னலாமே என்னில்—அதற்கு ஸமாதாநம் प्राप्तीति. ब्रह्मविदाप्नोति परम्, स्थानं प्राप्स्यसि शाश्वतम्, सर्वमाप्नोति सर्वशः என்று ப்ராப்தியைப் பலமாகச் சொல்லியிருப்பதால் கைங்கர்யம் பரீவாஹமாம்படிக்கு உயர்ந்த அநுபவமே உத்தேச்யமும் எப்போதுமிருப்பதும். ஆகையால் அதை விடமுடியாதென்றபடி.

இப்படி ஸாத்யோபாய உபேயங்களை நிரூபித்து ஸித்தனான ஈச்வரனுக்கு இவற்றின் ஸம்பந்தத்தால் தான் உபாயத்வ-உபேயத்வங்கள் என்று நிரூபிக்கிறார் இவ்வுபாயேதி. ஆக ஸாத்யோபாயத்தை உபேக்ஷித்தால் ஈச்வரனுக்கு ஸித்தோபாயத்வம் ஸித்திக்காதென்று கொள்க. உபாயத்வமாவது—காரணத்வம் तमेवं विद्वान् अमृत इह भवति नान्यः पन्थाः என்ற வாக்யத்தால்-இவ்வுலகில்

கொண்டு फलप्रदत्व—भोग्यत्वादिवेषத்தாலே ஈச்வரனுக்கு उपायत्वமும் उपेयत्वமும்.

இவ்வீச்வரனுடைய उपायत्वம் अद्वारकप्रपत्तिनिष्ठன்பக்கல் उपायान्तरस्थान-निवेशத்தாலே विशिष्टமாயிருக்கும்; மற்ற அதிகாரிக்கும் कर्मयोगारम्भம் முத

---

இப்படி पुरुषसूक्तத்தில் சொன்னது போல் விதிக்கப்பட்டுள்ள குணவிசேஷாதிகளோடு கூடிய பரமபுருஷஜ்ஞாநமுடையவன் முக்தனாகிறான் வேறு வழியில்லை என்று சொல்லப்பட்டுள்ளது. धनवान् सुखी தநமுள்ளவன் ஸுகப்படுகிறானென்றால் ஸுகத்திற்கு தனம் காரணமென்று தெரிகிறது போல் வித்வாந் अमृतः =வித்யையுள்ளவன் மோக்ஷமடைகிறான் என்றால் மோக்ஷத்திற்கு வித்யை உபாயமென்று ஸித்தித்து விடும், மேலே 'नान्यः पन्थाः என்கிற வாக்யத்தால் முன்வாக்யத்தில் உபாயமாகச் சொல்லப்பட்ட வித்யை தவிர வேறு உபாயமில்லையென்று தெளிவாகிறது. இப்படி வித்யா விஷயமாய்க் கொண்டே ஈச்வரன் உபாயமாகலாம். ஈச்வரன் உபாயமென்று பொதுவாகச் சொன்னாலும் இதையே கொள்க. இப்படி ஈச்வரன் வித்யாவிஷயமாய்க் கொண்டு ப்ரஸாத விசிஷ்டனாகிறான்; அப்போது மோக்ஷஸங்கல்பமுடையவனாகிறான். ஸங்கல்பித்தவுடனே மோக்ஷமாகையால் ஸங்கல்ப விசிஷ்டனுக்குக் காரணத்வம். அதே உபாயத்வம். இதையே फलप्रदत्व வேஷத்தாலே என்றருளினார். ஈச்வரனுக்கு உபேயத்வம் ஸ்வர்காதிதேசங்களுக்குப் போலே அநுபாவ்யத்வரூபம். அநுபவத்திற்கு உபேயத்வம் ஆத்மாவுடன் ஆதார ஆதேயபாவ ஸம்பந்தமே. அநுபவரூப फलமில்லையாகில் அவன் உபேயமாகான். அவ்வாறே வித்யாரூப உபாயமில்லையாகில் அவன் உபேயனாகான். இப்படி ஈச்வரனுக்கு ஸித்தோபாயத்வம் எல்லார் விஷயத்திலுமாகில் பக்திநிஷ்டனுக்கும் அவன் உபாயமாகிறபடியால் பக்தனுக்கு பக்தி உபாயம், ப்ரபந்நனுக்கு ஈச்வரனே என்று பிரித்துச் சொல்வதின் கருத்தென்ன என்ன, அதை விளக்குகிறார் இவ்வீச்வரோ ஸத்வாரக ப்ரபத்தி நிஷ்டனுக்கு பக்தி உபாயம்-மோக்ஷஸாதநம். பல ப்ரதனாய்க்கொண்டு மட்டும் ஈச்வரன் உபாயம். அத்வாரக ப்ரபத்தி நிஷ்டனுக்கு ப்ரபத்தி பரந்யாஸரூபமாகையாலே தான் செய்யவேண்டும் பக்த்யாதிரூப பரத்தை இவன் பகவானிடம் ஸமர்ப்பிக்கிறான். அதாவது நீ பல ப்ரதனாவது போல் பக்தி ஸ்தாநத்திலுமிருக்கவேண்டுமென்கிறான், அப்போது இவனிடம் பக்தியை எதிர்பார்க்காமல் தானே பக்திக்கு (பதிலாக) प्रतिनिधियாக நிற்கிறபடியாலே அந்த உபாயத்வமும் அவனுக்குச் சேருகிறது இதையருளிச் செய்கிறார் உபாயாந்தரஸ்த்தாந நிவேசத்தாலே விசிஷ்டமாயிருக்குமென்று. निवेशेन विशिष्टன் என்று வடமொழியில் எழுதுகிறபடியால் அங்குப் போல் நிவேசத்தாலே என்று த்ருதீயா விபக்தி. விசிஷ்டம் என்பதற்கு யுக்தம் என்று பொருளானால் நிவேச யுக்தமென்றதாம். நிவிஷ்டமென்றதாயிற்று. இனி விசேஷண விசிஷ்டமென்றாற்போலே விசேஷணம் =வ்யாவர்தகம். விசிஷ்டம்=வ்யாவர்த்யம் என்ற பொருள் கொண்டால் உபாயாந்தர

.லாக स्वपालनपूर्तिपर्यन्तமாக நடுவுள்ள कर्तव्यங்களில் अत्यन्ताशक्यமான நேர்களிலே -இப்ரपत्तिवशीकृतனான ஈச்வரன் புகுந்துநின்று அந்த दुष्करकर्तव्यங்களாலே வரும் पापनिवृत्तिயையும் सत्त्वोन्मेषादिகளையும் உண்டாக்கிக் கொடுத்து அவ்வுபாஸந மாகிற உபாயத்தை फलपर्यन्तமாக்கிக்கொடுக்கும்

---

ஸ்தாநநிவேசரூப வ்யாவர்தக தர்மத்தாலே வ்யாவ்ருத்தமாயிருக்குமென்க. फलप्रदत्वம் போலே உபாயாந்தரஸ்தாநநிவேசம் ப்ரபத்தி விஷயத்தில் அதிகப் படி. பக்தியானது फल ஸங்கல்ப்பத்திற்குக் காரணமான ப்ரஸாதத்திற்குக் காரணமாய் உபாயமென்னப்படுகிறது. ப்ரபத்தியானது அவ்வளவோடு நிற் காமல் அதற்கு முன் உபாயாந்தரஸ்தாந நிவேசத்திற்கும் காரணமாகிறதென் றது விசேஷம். இப்படி பக்தி ஸ்தாநத்திலே பகவானை நிறுத்துவது ப்ரபத்தி கார்யமானால் பக்திநிஷ்டன் ஸத்வாரக ப்ரபத்தி நிஷ்டனாவதென்? இவன் எதற்காக ப்ரபத்தி செய்வது? அப்போது இவன் பக்தியை விடவேண்டுமே ஆக இரண்டு அதிகாரியென்னக்கூடுமோ என்ற கேள்விக்கு ஸமாதாநம் மற்ற இத்யாதி. ப்ரபத்தியானது பலனளிப்பவனை இவன் செய்யவேண்டு முபாயஸ்த்தாநத்திலே நிறுத்தி அது மூலமாகவே பலன் பெறுவிக்கு மென்று பொதுவாகக் கொள்ளவேண்டும். பக்தி நிஷ்டன் ப்ரபத்தி செய்வது பக்தி ஸ்தாநத்திலே நிறுத்துவதற்கல்ல; பக்தியை ஸாதிப்பதற்காக அவன் சில உபாயங்களைத் தேடும் போது பல பாபங்கள் அதற்குத் தடையாகத் தெரிந்ததால் அவற்றை விலக்கப் பெரிய பெரிய ப்ராயச்சித்தங்களைப் பண்ணவேண்டுமென்று தெளிந்து அந்த ப்ராயச்சித்தங்கள் தனக்குச் செய்ய இயலா, தனக்கு வேண்டும் பலனுக்கு உரிய காலத்திற்குள்ளே ஸாதராம் அவற்றைத் தனித்தனியே செய்வது முடியாதென்று தெளிந்து அந்தந்த ப்ராயச்சித்த ஸ்தாநத்திலே பகவானை நிறுத்துவதற்காம்; பகவா னும், ப்ராயச்சித்தம் செய்தவனுக்குத் துல்யனாக இவனை பாவித்துத் தடை களை விலக்கி மனத்தில் ஸத்த்வகுணத்தை வ்ருத்தி செய்கிறான். அதனால் பக்தி யுண்டாகிறது. ஆகையால் ப்ரபத்தியின் கார்யம் எங்கும் ஒரே ரீதியாயிருக் கும் இது பக்தியோகத்திற்கு மட்டுமல்ல பகவத் விஷயமான பக்தியோகத் திற்கு முன்னே ஜீவாத்மாவை அவச்யம் காணவேண்டியிருப்பதால் அதற் காக ஜ்ஞாநயோகத்தையும் அதற்குமுன்னே கர்மயோகத்தையும் ஸாத்த்விக த்யாகத்தோடு கர்மாக்களைத் தொடங்கிச் செய்யவேண்டி யிருப்பதால் அவற்றுக்குத் தடைகளை விலக்கவும் பெரியபெரிய கார்யங்களைச் செய்ய வேண்டி, கதியில்லாமல் ப்ரபத்திகளையே செய்ய முன் வருவான். ஆக பக்தி நிஷ்டன் செயலில் ப்ரபத்தி ப்ரசுரமாயிருக்கும். இதரனுக்கு ஒரே ப்ரபத்தி. நேர்களிலே என்பதற்கு அவஸரங்களிலே அல்லது கார்யங்களிலே என்று பொருள். உபாயத்தைப் फल பர்யந்தமாக்கி என்றதால் அவன் செய்த பல ப்ரபத்திகளுக்காக பக்தியை விடமுடியாது. பக்தியை ஸாதி த்துக் கொடுப்பதற்குத் தானே அவற்றைச் செய்தான். ஆகையால் பக்தி மூல

அங்குக் கர்மயோகமாவது—சாஸ்த்ரத்தாலே ஜீவபரமாத்மயாதாத்ம்யஜ்ஞானம் பிறந்தால் தனக்கு ப்ராப்யங்களாய் ஃபலஸங்கரஹிதங்களான காம்யகர்மங்களோடும் நித்யநைமித்திக

---

மாகவே அங்குப் பலன் என்றதாம்

கர்மயோகாரம்பம் முதலாகவென்றவிடத்தில் கர்மயோகமாவது என்ன? அது முதலாக என்றதால் வேறென்றுமிருப்பதாகத் தெரிகிறது. முமுக்ஷுவுக்கு உபாயங்கள் நாலு, கர்மயோகம் ஜ்ஞானயோகம் பக்தியோகம் ப்ரபத்தி என்பவை என்கிறார்கள். பக்தியோகாதிகளைப் போலே கர்மயோக ஜ்ஞானயோகங்களும் ஸ்வதந்த்ரமாக மோக்ஷஸாதநமாகத் தெரிவதால் ஒருவனுக்கே, 'கர்மயோகம் தொடங்கி பக்தி பூர்த்தி வரையில்' என்று சொன்னது பொருந்துமோ? இங்குக் கர்மயோகம் ஜ்ஞானயோகமென்று இவன் செய்யவேண்டிய நித்யகர்மாக்களையும் இவன் பெறவேண்டிய ஆசார்ய மூலகமான பகவத் ஜ்ஞானத்தையும் கொள்வதாகில், அவையில்லாமல் பக்தி யநுஷ்டிக்க முடியாதாகையாலே அவற்றைத் தனியே கூறவேண்டியதவச்யமல்ல ஸ்வர்கத்தை யபேக்ஷிக்கிறவன் யாகம் செய்யவேண்டுமென்று இவ்வளவே போதுமாயிருக்க அவனுக்கும் அதுவிஷயத்தில் ஜ்ஞாநாதிகள் வேண்டியிருப்பதால் அவனுக்கு கர்மயோகம் ஜ்ஞானயோகம் யாகம் என்ற மூன்றும் வேண்டுமென்று யாராவது சொல்வார்களோ என்ன, கர்மயோகமென்பதற்கு நித்ய கர்மாநுஷ்டாந மென்று பொருளல்ல. ஜ்ஞானயோகமென்பதற்கு பரமாத்ம விஷய ஜ்ஞானமென்றும் பொருளல்ல இவை வேறு என்றும், இவற்றில் கர்மாவானது ஜ்ஞானமன்றாகையாலே நேராக மோக்ஷஸாதநமாகமாட்டாது; ஜ்ஞானயோகமாவது பரமாத்மாவைப்பற்றியதல்லவாகையால் தத்க்ரதுந்யாய விரோதம் வாராமைக்காக நேராக மோக்ஷஸாதநமாகாது. அவை பக்தியோகத்திற்கே பரம்பரயா ஸாதநமாகு மென்று விரித்து உரைக்கத் தொடங்குகிறார். அங்கு இத்யாதி. உபாய விபாகாதிகாரத்தில் கர்மயோகம் ஜ்ஞானயோகம் பக்தி ப்ரபத்தி ஈச்வரன் என்று ஐந்து உபாயங்களைக் கூறுகிறாராலும், இப்படி விபாகம் செய்வதில் கருத்தில்லை. உபாயத்தில் ஸித்தோபாயம ஸாத்யோபாயமென்கிற இரு பிரிவு உண்டு. மோக்ஷார்த்த ஸாத்யோபாயத்தில் பக்தி ப்ரபத்தி என்கிற இரண்டு பிரிவே. அந்த பக்தியில் உட்பிரிவுகள் பல. ப்ரபத்தியிலும் மாநஸ வாசிகாதிகள் பலவாம். கர்மயோக ஜ்ஞானயோகங்கள் உபாயத்தை ஸாதிப்பனவாய் பரம்பரயா உபாயங்கள் என்றறிவிப்பதாகக் கூறியதெனக் கொள்க.

பக்தியோகம் செய்வதற்கு முன்னே ஜீவாத்ம விஷயமாக யோகம் செய்து ஜீவாத்மஸ்வரூப அவலோகநம் செய்யவேண்டும் அதற்காக கர்மயோக ஜ்ஞானயோகங்கள் செய்யவேண்டும் அதற்கு முன்னே ஜீவாத்மஸ்வரூபம் எப்படிப்பட்டதென்று ஆசார்ய மூலாக அறிந்திருக்கவேண்டும். பிறகு முமுக்ஷுவாகி ஸாத்த்விகத்யாகத்துடன் ஸகல கர்மாநுஷ்டாநம் செய்கிறவனாகவேண்டும். அந்த நித்ய நைமித்திக கர்மாநுஷ்டாநம் கர்மயோகம்

ங்களோடும் கூட सनियमமாகப் परिगृहीतமாயிருக்கும் कर्मविशेषம் அதின் अवान्तरभेदங்கள் "दैवमेवापरे यज्ञम्" என்று தொடங்கிச் சொல்லப்பட்ட देवार्चन-

---

தொடங்குவதற்கு முன்னமும், கர்மயோகாதிகளில் இழியாத அத்வாரக ப்ரபத்தி நிஷ்டனுக்கும் பக்தியோகம் முடிவாக அநுஷ்டிப்பாருக்கும் பொது வானது. பொதுவான அதைவிட கர்மயோகமென்பது வேறு. அதாவது பகவத் கீதையில் दैवमेवापरे यज्ञं என்று தொடங்கிச் சொல்லப்பட்டது கர்மயோகங்கள் பலவுண்டு. அவை ஜீவாத்மாவலோகநத்திற்குக் காரணம். அதாவது ஒருவன் ஜீவாத்மதர்சநம் தனக்கு வரவேண்டுமென்று விரும்பி ஸங்கல்பித்துக் கொண்டு ஸஹஸ்ரநாமார்ச்சனை போன்ற தேவார்ச்சனையோ ஏதேனும் ஒரு விதமான தபஸ்ஸோ தீர்த்த யாத்ரையோ தாநமோ யாகவகையோ ப்ராணா யாமமோ ஏதெனுமொன்றை தினந்தோறும் விடாமல் செய்து வரவேண்டும். ஒரு நாள் தேவார்ச்சனை, ஒரு நாள் தாநம், ஒரு நாள் யாகமென்று மாற்ற லாகாது. வைராக்யம் முதிர்ந்து ஜீவாத்ம தர்சநத்திற்கு உரிய மனச்சுத்தி இதன் மூலம் பெறப்படும். மற்ற நித்ய நைமித்திக கர்மாக்களை இதற்குத் துணையாகச் செய்யவேண்டும். இவற்றைஆச்ரமதர்மமென்று மற்றவர் செய் வர். இந்த நித்ய கர்மாநுஷ்டாநத்தை ஜ்ஞாநயோகி அதற்குத்துணையாகச் செய்வான் பக்திநிஷ்டன் இதை பக்தியோகத்திற்குத் துணையாகச் செய் வான் இந்த நித்ய கர்மாநுஷ்டாநம் அததற்குத் துணையே, கர்மயோக மல்ல. இத்துடன் இவன் வேதங்களில் காம்யமாக அதாவது ஐஹிக ஆமுஷ்மிக மான பலவித பலன்களுக்காக ஓதப்பட்டிருக்கும் கர்மாக்களைக்கூட தனக்கு வைராக்யத்தை வளர்ப்பதற்காக அந்தப் பலன்களை த்யாகம் செய்துவிட்டு பகவத் ப்ரீதிக்காகவே செய்கிறேன் என்று ஸங்கல்பித்து முடிந்தவரையில் செய்யலாம். அவையும் துணையாகி இவனுக்குத் தொடர்ந்து யோக பூர்த்தி யாவதற்கு உதவும். இதையே "फलसङ्गादि ரஹிதங்களான காம்ய கர்மங்க ளோடும்" என்று அருளிச்செய்தார். फलसङ्गமாவது—பலத்தில் பற்று; ஆதி பதத்தினால் 'நான் கர்த்தா,' 'இது எனக்கு' என்கிற புத்திகளைக் கொள்க. இவையில்லாமலிருக்க வேண்டும் இவற்றைவிட வேண்டும் கர்மாநுஷ்டான காலத்தில். இதற்கு முன்னமே தேஹம் வேறு, ஜீவன் வேறு, பரமாத்மா வேறென்று அததனுடைய ஸ்வரூப விவேகத்துடன் எனக்கு மோக்ஷமேவேண் டும் என்கிற தெளிவும் வேண்டும் இதை சாஸ்த்ரத்தாலே ஜீவபரமாத்மயாதா த்ம்யஜ்ஞானம் பிறந்தால் என்றார். ஸநியமமாக என்பதற்கு தான் எடுத்துக் கொண்ட கர்மயோகத்தை விடாமலும் மாற்றாமலும் தொடர்ச்சியாக என்ற படி. 'அவாந்தரபேதங்கள்' என்பதற்கு உட்பிரிவுகள் என்பது பொருள். अपरे–சிலர் दैवम्—தேவனை எம்பெருமான்விஷயமான அர்ச்சநாதிரூபமான यज्ञम्—யாகத்தைக் கர்மயோகமாகக் கொண்டிருப்பர். यज्ञपदத்திற்கு यज देव- पूजायां என்கிறபடி ஆராதநம் பொருள். எந்தக் கர்மயோகமும் பகவத் ப்ரீதி காரணமாகையால் ஆராதநமாய் யஜ்ஞமாகலாம். இந்த அர்ச்சனையை

तपस्तीर्थ-दान-यज्ञादिகள். अधिकारिभेदத்தாலே, ப்ரபத்திதானே பக்தியை இடையிட்டும் இடையிடாதேயும் मोक्षहेतुவானாற்போலே இக்கர்மயோகம் ज्ञानयोगத்தை இடையிட்டும் இடையிடாதேயும் सपरिकरமான योगத்தைக்கொண்டு आत्मावलोकनसाधनமாம். ज्ञानयोगமாவது—

---

மட்டும் दैवम् என்றது நேராக அர்ச்சாமூர்த்தியைக் குறித்தே செய்கிற படியால் என்க இதே தேவார்ச்சநம். தீர்த்தமாவது—தீர்த்தயாத்ரை, யஜ்ஞாதிகள் யாகஹோமாதிகள் இப்படி கர்மயோகத்தை வெகுகாலம் செய்து, மநச்சுத்தி பெற்றவன் அதிக தேஹசக்தியையும் பிறர் ஸஹாயத்தையும் அபேக்ஷிக்கிற கர்மயோகத்தை விட்டு ஜ்ஞாநயோகத்தைச் செய்வான். அதன் பிறகு முக்யயோகத்ததைச் செய்வான். அதாவது 'समं कायशिरोग्रीवम्, என்றபடி ஆஸநத்தில் அமர்த்து ப்ராணாயாமபூர்வகமாக எல்லா இந்த்ரியங்களையும் அடக்கி மனத்தை நிருத்தி ஜீவாத்மாவைத் தொடர்ச்சியாக த்யாநம் செய்வது, இதைச் செய்து வந்தால் ஜீவாத்மாவின் அவலோகநம்—தர்சநம் ஏற்படும். சிலர் ஜ்ஞாநயோகத்தை இடையில் செய்யாமலே த்யாந யோகம் வரையில் கர்மயோகத்தையே செய்வர். கர்மயோகம் செய்யும் போது உண்மையான ஜீவாத்ம ஸ்வரூபத்தை மனத்திற் கொண்டு, 'இதனுடைய தர்சநத்திற்காக இதைச் செய்கிறேன்' என்று நினைத்துவருகிற படியால் கர்மயோகத்தில் ஜ்ஞாநம் அடங்கியிருப்பதால். தனி ஜ்ஞாந யோகம் வேண்டாவென்று கருத்து. அப்போது ஜ்ஞாநயோகத்தால் வர வேண்டும் த்யாநயோகம் இத்தாலேயே வருகிறதென்றதாயிற்று. இப்படி ஜ்ஞாநயோக ஸாபேக்ஷமாயும் ஜ்ஞாநயோக நிரபேக்ஷமாயும் காரணமென்று சொல்லக்கூடுமோ என்ன, அதற்கு த்ருஷ்டாந்தமருளிச் செய்கிறார் ப்ரபத்தி தானே இதி. ஸத்வாரக ப்ரபத்தி நிஷ்டன் ப்ரபத்தியினால் பக்தியை ஸாதித்து அதனால் மோக்ஷம் பெறுகிறான். அங்கே ப்ரபத்தி பக்தி ஸாபேக்ஷமாயிருக்கிறது; அத்வாரக ப்ரபத்திநிஷ்டனுக்கு ப்ரபத்தியே பக்தி நிரபேக்ஷமாக ஸாதநமாகிறது. ஆகையால் ஒன்றுக்கே இரண்டு வகையும் கூடும் கர்மயோகம் செய்கிறவன் ஜ்ஞாநயோகத்திற்காக என்று அதை உத்தேசிக்காமல் செய்வதே முக்யபக்ஷமென்று கீதையின் முடிவு. இடையிட்டும்—இடையில் வைத்தும்; இடையிடாதேயும் = இடையில் ஜ்ஞாநயோகத்தைச் செய்யாமலும், ஸபரிகரமான; பரிகரம்—ஆஸநம் ப்ராணாயாமம் ப்ரத்யாஹாரம். யோகத்தைக் கொண்டு—யோகம் வாயிலாக, இந்த யோகத்தை லக்ஷ்யபூதமான யோகமென்றும் சிரோபூதமான யோகமென்றும் சொல்வர். கர்மயோகமென்பதற்கு கர்மவிசேஷ ரூபமான உபாயம் என்று பொருள். ஜ்ஞாநயோகமென்றால் ,என்ன? ஜ்ஞாநமாகிற உபாயமென்றால் த்யாநயோகமும் ஜ்ஞாநயோகந்தானே. கீதையில் 'ज्ञानयज्ञेन चाप्यन्ते' என்று பகவத் ஜ்ஞாநத்தையே ஜ்ஞாநமென்கிறதே என்ன அதை விவரிக்கிறார் ஜ்ஞாந யோகமாவது என்று. இந்த ஜ்ஞாநயோகம் பரமாத்ம விஷயக

கர்மயோகத்தால் अन्तःकरणजयம் பிறந்தவனுக்கு प्रकृत्यादिविलक्षणமாய் ஈச்வரனைப்பற்ற आधेयत्व - विधेयत्व - शेषत्वங்களாலே शरीरतया प्रकारமான

---

மன்று; ஜீவாத்ம விஷயகம். இந்த ஜ்ஞாநமானது—கர்மயோக ஆரம்பத்துக்கு முன்னமே ஏற்பட்டுத் தொடர்ந்து வந்து கொண்டிருப்பது சிலருக்கு கர்மயோகாரம்பத்திற்கு முன்னே ஜீவாத்ம ஜ்ஞாநம் ஸாமாந்யமாயிருக்கும். சிலருக்கு விசதமாகவுமிருக்கும். கர்மயோகத்தினுலே அந்த: கரண ஜயம் பிறக்கும் வரை சரியான மனச்சுத்தியுண்டாகும் வரையில் இருக்கும் ஆத்ம ஜ்ஞாநத்திற்கு ஜ்ஞாநயோகமென்று பெயரில்லை அதன் பிறகு வரும் சிந்தநம் ஆத்ம பரிசீலநம் நிரந்தரமாய் அதாவது விஷய சிந்தநத்தோடு கலக்காமல் இருக்கும். அந்த ஆத்ம ஸ்வரூபத்தை இவன் ப்ரக்ருதி முதலான அசேதநங்களைக்காட்டிலும் விலக்ஷணமாய் அறிந்திருப்பதால் இவனுக்கு தேஹாத்ம ப்ரமமில்லை. பகவானுக்கு இது ஆதேயமும் விதேயமும் சேஷமுமாகும். அதனுல் பகவானுக்கு சரீரமென்று சொல்லப்படும் அதனுல் அவனுக்கு ப்ரகாரமாகும். அதாவது ஜ்ஞாநத்தில் விசேஷணமாகத் தோன்றுவது என்ற பொருளல்ல; அப்ருதக்ஸித்த தர்மமாகுமென்கிற பொருளாகும். இதனுல் ஸ்வதந்த்ராத்ம ப்ரமமும் இவனுக்கு விலகிற்று. இப்படிப்பட்ட ஆத்மாவிற்கு ஸ்வரூபம் எத்தகையதென்ருராயும்போது ஜ்ஞாநாநந்த ஸ்வரூபமாய் அபஹதபாப்மத்வாதிகுண விசிஷ்டமாயிருக்கும். அந்த ஸ்வரூப பரிசீலநம் இந்த்ரிய ப்ரத்யாஹாரமும் த்யாநமும் இராமலே பாஹ்ய விஷயத்தில் அவதாநமின்றி தொடர்ந்து வரும்போது ஜ்ஞாநயோகமாகிறது. இப்படி கர்மயோக மாத்ரத்தாலோ கர்மயோகத்திற்குப் பிறகு வரும் ஜ்ஞாநயோகத்தாலோ த்யாநயோகம் கூடியபோது ஜீவாத்ம ஸாக்ஷாத்காரம் வருகிறது. அதில் ஜ்ஞாநத்வ ஆநந்தத்வ அபஹதபாப்மத்வாதி ஜீவதர்மங்கள் தோன்றும். ஆதேயத்வ விதேயத்வ சேஷத்வரூபமான சரீரத்வம், அப்ருதக்ஸித்தத்வம் என்கிற தர்மங்கள் தோன்ரு. அந்த ஆகாரங்களோடு இவன் ஆத்மாவை த்யாநம் செய்யவில்லையே. அப்படி த்யாநம் செய்து அவற்றிற்கும் ஸாக்ஷாத்காரம் வந்திருந்தால் அதுவே பகவத் விஷயகமாய் பக்தியோகமே யாமாகையால் இதற்குப் பிறகு பக்தியோகம் செய்யவேண்டுமென்று மேலே சொல்வது சேராது. அதனுல்தான் முன்வாக்யத்தில், ப்ரகாரமாகும்படி நிரந்தரசிந்தநமென்னுமல் உண்மையிலே ப்ரகாரமான தன் ஸ்வரூபத்தை யென்றது. பரமாத்மாவுக்கு சரீரமாக ஜ்ஞாநயோகத்தில் ஆத்மாவைச் சிந்திப்பது இஷ்டமானுல் 'சரீரதயா நிரந்தர சிந்தநம் பண்ணுகை' என்றே அருளியிருப்பர். அவ்வாறின்றி சரீரதயா ப்ரகாரமானவென்று ஸ்வரூப விசேஷணமாக (சிந்தந விசேஷண மாக்காமல்) அருளியதாலே பகவத்சரீரத்வம் ஜ்ஞாநயோகத்தில் சிந்தநீயமன்று. இனி கேட்கலாம்—கர்மயோகாரம்பத்திற்கு முன்னமே பகவத் சேஷத்வம் அறியப்பெற்று ஸ்வதந்த்ராத்ம ப்ரமம் நீங்கவேண்டி

தன் ஸ்வரூபத்தை निरन्तरचिन्तनம் பண்ணுகை. இக் கர்மயோக ஜ்ஞாந யோகங்களாலே योगमुखத்தாலே आत्मावलोकनம் பிறந்தால் वैषयिक सुख वैतृष्ण्या-वहமான आत्मानुभवसुखமாகிற आकर्षकத்தில் அகப்பட்டிலனாகில் परमपुरुषार्थமான

---

யிருப்பதால் அந்த சேஷத்வ சரீரத்வாதிகளை ஜ்ஞாநயோகத்திலும் விடாமல் சிந்தனை செய்தாலும் த்யாநயோகம் செய்யும் போது சரீரத்வாதிகளை விட்டு ஜ்ஞாநத்வ அபஹதபாப்மத்வாதிகளை மட்டும் ஆத்மாவில் த்யாநம் செய்கிறான். அதனால் அவ்வளவுக்கே ஸாக்ஷாத்காரம். அதன் பிறகு பரமாத்ம த்யாநயோகத்திலேயே சரீரத்வாதிகளை யுமநுஸந்திப்பதென்றால் என்ன என்றவாறு, இதற்கு விடை—த்யாநத்திற்கு விஷயமாகாதவற்றையும் அறிய வேண்டியதவச்யமானாலும் அவற்றிற்கு நிரந்தர சிந்தநத்திற்கு அவச்ய மில்லை. வாக்யங்கள் மூலமாக ஜீவசிந்தனை செய்யும் போது சரீரத்வாதிகளு மறியப்பட்டாலும் நிரந்தர சிந்தநமவச்யமில்லை யென்பதே யாகும்.

பக்தியோகம் முதலிலேயே செய்தாலென்ன? அதற்கு முன் ஜீவாத்மாவலோகநத்திற்காகவான இந்த ப்ரயாஸை எதற்காக என்ன, இந்த ஆத்மாவலோகநம் பிறந்தவனுக்கே பக்தியோகத்தில் அதிகாரமென்கிறார். இக்கர்மயோகேதி. கர்மயோக ஜ்ஞாநயோகங்களாலே என்றதற்கு கர்மயோகத்தாலோ கர்மயோக பூர்வக ஜ்ஞாநயோகத்தாலோ என்று பொருளாம். யோகமுகத்தாலே = ஜீவாத்மத்யாநயோகம் வாயிலாக. பிறந்தால் என்பதற்கு 'உபயுக்தமாய்க் கொண்டு' என்ற பதத்தில் அந்வயம்; கீழும் அந்வயம். ஜீவாத்மதர்சநமானது 'यं लब्ध्वा चाधिकं लाभं मन्यते नाधिकं ततः' என்று இதற்கு மேலான ஸுகமில்லை யென்ற புத்தியை யுண்டுபண்ணக்கூடியதாகையால் பகவத் பக்திக்கு ப்ரதிபந்தகமே யன்றி ஸாதகமாகுமோ என்ற கேள்விக்கு உத்தரமாகும் வைஷயிக இத்யாதி. அந்த ச்லோகத்திற்கு தாரபுத்ராதி விஷய ஸுகங்களை ஆத்மஸுகத்திற்கு மேலாக நினைக்க மாட்டானென்றே பொருள். பரமாத்ம ஸுகம் 'மேற்பட்டதன்றென்கிற புத்தி இவனுக்கு உண்டாகாது. ஆனாலும் பரமாத்ம ஸுகம் பெரிதென்று தெரிந்தவர்களே விஷய ஸுகத்தில் இழிவது இயற்கையாயிருக்க அதற்குமேலான ஜீவஸுக ஸாக்ஷாத்காரம் வந்தபோது அது ஆகர்ஷகமாவதில் ஸம்சயமில்லை. ஆனாலும் அதிலும் தோஷங்களிருப்பதைப் பரிசிலநம் செய்துகொண்டே யிருந்தால் அது ஆகர்ஷகமாகாது ஆகர்ஷகமானால் அப் பலன் நீடிக்கக்கூடிய கைவல்ய ஸ்தாநத்தை விரும்பி பக்தியோகத்திலிழியமாட்டான். அகப்படாதபோது அதைவிட பரமபுருஷார்த்தம் பகவதநுபவமென்று அதில் ருசியுமிருப்பதால் பக்தியோகத்திலிழிவான். ஆகர்ஷகத்தில்; வலை, சுழல், அயஸ்காந்தம் என்ற வைபோல் தனக்கதீநமாக்குவதால் இதுவும் ஆகர்ஷகம். அகப்பட்டிலனாகில் என்பதற்கு அகப்படாமலிருந்தால் என்று பொருள். இப்படி பாதகமாகக் கூடிய ஜீவஸாக்ஷாத்காரத்தை விரும்பாமலிருந்தாலென்ன? அதனுடைய த்யாநமில்லையாகில் பரமபதத்தில் அதனுடைய ஸாக்ஷாத்காரம் உண்டாகு

भगवदनुभवத்துக்கு உபாயமான भक्तियोगத்திலே இழியும்போது உள்ளிருக்கிற ரத்னம் காண்கைக்குக் கிழிச்சீரை கண்டாற்போலே अन्तर्यामिயைப் பார்க்கும் போதைக்கு அவனுடைய शरीरभूतனான ஜீவாத்மாவினுடைய दर्शनம் उपयुक्त-

---

மோ வென்னில்—பகவத்யாநமாத்ரம் செய்கிறவன் நித்ய ஸூரிகள், நித்ய விபூதி, மற்றும் பல விசேஷங்கள் பரிபூர்ணமாகப் பரம ,தத்தில் ஸாக்ஷாத் கரிப்பது போல் ஜீவனுக்கு இவன் ஸ்வரூபமும் அங்கே பார்க்கப்படலாமே என்ன, இங்கு அதனுடைய அவலோகநம் வேண்டுவதற்கு த்ருஷ்டாந்த மொன்று அருளிச் செய்கிறார் உள்ளிருக்கிற இத்யாதியால் கிழிச்சீரை யாவது—நிதியை மூடிக்கொண்டிருக்கும் வஸ்த்ரம். வஸ்த்ரத்தினாலோ செப்பாலோ ரத்நம் மூடப்பட்டிருந்தால் முதலில் அதைக் கண்டு அதன் பிறகே அதனுள் இருக்கும் ரத்நத்தைக் காண்பர். அதுபோல் தனக்கு அந்தர்யாமியான பரமாத்ம தர்சநத்தை விரும்புகிறவன் தன் தர்சநத்தைப் பெற்ற பிறகு அதன் த்யாநத்திலே இழிவது ஸ்வரஸம். ஆகையால் முதலில் ஜீவாத்ம த்யாநம் அவச்யமாகிறது. சாஸ்த்ராநுகுணமாக தர்க்கமாராய வேண்டுமல்லது தர்க்காநுகுணமாக சாஸ்த்ரத்திற்குப் பொருள் கொள்வது தகாது. ஆகையால் நித்ய விபூத்யாதிகளைப் போலன்றி நியதமாக, 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்று இவன் த்யாநம் செய்ய வேண்டியதவச்யமாகையால் ப்ரஜாபதி வாக்யாதிகளிலும், 'अध्यात्मयोगाधिगमेन देवं मत्वा' என்கிற கடவல்லி யிலும் முன்புற ஜீவாத்மத்யாநத்தை விதித்திருப்பதால் இங்கு ஜீவாத்ம தர்சநம் அவச்யமாகிறதென்று கருத்து. மேலும் அசித்தத்தவாநுபவ மாகிற ஐச்வர்யம், சித்தத்தவமாகிற கைவல்யம் என்ற இவ்விரண்டுக்கு மேலாய் பரமபுருஷார்த்தமாகிற மோக்ஷத்தில் வேறு பலத்தில் விரக்தனுக்கு அதிகாரமாகையால் ஐச்வர்ய பலத்தில் போலே ஸூக்ஷ்மாத்ம விஷயத்திலும் அநுபவமளித்து இவனுடைய வைராக்யத்தைப் பரீக்ஷிக்கும் ஈச்வரன் ஆத்ம தர்சநமில்லாதவனை ஸூஸூக்ஷ்ம பக்தியோகத்தில் இழிவிப்பதில்லை யென்று கொள்ளவேண்டும். அவனுடைய சரீரபூதமான இத்யாதியால் ஜீவர்த்ம தர்ச நம் பரமாத்ம பக்திக்குக் காரணமாகாது; வஸ்து வேறாயிருப்பதால் என்கிற சங்கை பரிஹரிக்கப்படுகிறது சீரையும் ரத்னமும் வேறாயிருந்தால்கூட சீலையுடைய தர்சநம் ரத்னதர்சநத்திற்குக் காரணமாவது போல் ஆகலாமே. அங்குச் சிறிய ரத்நம் பெரிய சீலையால் மறைக்கப்படுகிறது போல் அணுவான ஜீவனால் விபுவான பரமாத்மா மறைக்கப்படவில்லையே யென்னில், விபுவான பரமாத்மாவில் ஜீவாத்மா என்கிற உபாதியால் அளவிடப்பட்ட (ஜீவாத் மோபஹிதமான) ப்ரதேசமே உபாஸிக்கப்படவேண்டியிருப்பதால் அச்சிறிய ப்ரதேசத்திற்கு ஜீவாத்ம ஸ்வரூபம் ஆவாரகமென்று கொள்ளலாம் முடி வாக ஜீவாத்ம அந்தர்யாமியாக பரமாத்மாவை த்யாநிக்க வேண்டியிருப் பதால் இவ்விரண்டு வஸ்துவும் வெவ்வேறாகவிருந்தாலும் ஒன்றோடு ஒன்றைச் சேர்த்துக் காணவேண்டியபோது ஒன்றினுடைய தர்சநம் வேறொன்றின் தர்ச

மாய்க் கொண்டு भक्तियोगத்துக்கு अधिकारकोटियிலே ஏறிட்டுக்கிடக்கும்.

भक्तियोगமாவது – अनन्यनिष्ठனாய் अनन्याधीनனாய் अनन्यशेषभूतனான பகவானுடைய स्वरूपादिகளை விஷயமாகவுடைத்தாய் निरतिशयप्रीतिरूपமான ध्यान-विशेषம். அதுதான் तैलधारैயைப் போலே निरन्तरமான स्मृतिरूपமாய் साक्षात्कार-तुल्यமான वैशद्यத்தையுடைத்தாய் பரமபதத்துக்கு प्रयाणம்பண்ணும் दिवस-மறுதியாக நாள்தோறும் அநுஷ்டிக்க வளர்ந்து வருவதாய் अन्तिमप्रत्ययावधि-

---

நத்திற்குக் காரணமென்னக் குறையில்லை. அதிகாரகோடியிலே = அதிகார வகுப்பிலே; ஏறிட்டுக்கிடக்கும் = ஸம்பந்தப்பட்டிருக்கும். ஏறிடல்–ஏறல்; பக்தியோகத்திற்கதிகாரமாக அவ்வுபாஸநத்தை விதிக்கும் சாஸ்த்ரத்தின் பூர்ண அர்த்த ஜ்ஞாநமும் அநுஷ்டிக்க சக்தியும் அதன் பலமான மோக்ஷத்தில் இச்சையும் அதிகாரங்களாவது போல் ஜீவாத்ம தர்சநமும் அதற்க்கதிகாரமென்றபடி.

வேதாந்த ச்ரவணாதிகளுக்கு முன்பு கூட ஆஸ்திகர்களுக்கு பக்தியானது ப்ரஸித்தமாயிருக்க ஜீவாத்ம தர்சநமுள்ளவனுக்கே பக்தியில் அதிகாரமென்னக்கூடுமோ என்ன, இங்குச்சொல்லும் பக்தியோகம் அதைவிட வேறென்கிறார் பக்தியோகமாவது என்று. எம்பெருமானுக்கு மேல் ஒருவன் ஆதாரமாய் நியந்தாவாய் சேஷியாய் இருப்பானாகில் இவனிடத்தில் பக்தி புஷ்கலமாகாது. ஆகையால் நிரதிசய ப்ரீதியாகாது அதற்காகவே स्वे महिम्नि प्रतिष्ठितः என்றார் ஸநத்குமாரர். 'आत्मेश्वरम्—, 'नान्योऽतोऽस्ति द्रष्टा' இத்யாதிகளையும் காண்க. அதனால் அநந்ய நிஷ்டனாய் இத்யாதி. ஈச்வரன் வேறொருவனுக்கு ஆதேயனல்லன். न विद्यते अन्यस्मिन् निष्ठा–स्थितिः यस्य सः अनन्यनिष्ठः. ஸ்வரூபாதிகளை. என்ற ஆதிபதத்தால் குணம் மூர்த்தி ஸ்தாநம் இவற்றைக் கொள்க. நிரதிசய ப்ரீதியென்றதால் ஈச்வரனுக்கு ப்ராப்யத்வமும் ஸூசிதம். ப்ரபத்தியென்கிற உபாயம் ஸக்ருத் கர்தவ்யம். அநுவ்ருத்தியில்லை. கர்மயோக ஜ்ஞாநயோகங்களும் ஆயுள் நடுவிலே முடிந்து பக்தியோகத்திற்கு ஆரம்பகமாமாகையாலே ஆயுள் முடிய அநுவர்த்திப்பதில்லை. அதனால் அவற்றைவிட பக்தியோகத்திற்குள்ள வாசியைக் குறிக்கிறார் அதுதான் இதி. முழு வாக்யத்திலே சேர்க்காமல் இதைத் தனியாக்கியது காம்யமான சில பகவத்த்யாநங்கள் वैशद्यம் आप्रयाणानुवृत्ति இவற்றைப் பெறாமலுமிருக்குமென்பதற்காக ध्रुवा स्मृतिः—என்கிற வசநத்தை யநுஸரித்து 'நிரந்தரமான' என்றது. அந்தரமாவது விச்சேதம்–தொடர்ச்சியின்மை, அது இல்லாது என்றபடி. அதற்கு த்ருஷ்டாந்தம் தைலதாரை, ஸ்நேஹக் குறைவினால் ஜலத்தினுடைய தாரையில் இடையிடையில் விச்சேதமிருக்கும்; தைலத்திற்கு அது இல்லை. இந்த பக்தி ஸ்ம்ருதியாகில் 'द्रष्टव्यः'' என்று ப்ரத்யக்ஷ ரூபமாகச் சொன்னது சேருமோ என்பதற்கு உத்தரம் ஸாக்ஷாத்காரேதி. ப்ரத்யக்ஷம் போலே இந்த ஸ்ம்ருதி விசதமாயிருப்பதாலே தர்சநமென்றது. 'एवं वर्तयन् यावदायुषं' என்கிற வசநார்த்தத்தை யறிவிக்கிறார். பரம

யான ज्ञानसन्ततिविशेषம். இதுக்கு वर्णाश्रमधर्मங்கள் ज्ञानविकासहेतुவான सत्त्वविवृद्धिக்குக்களையான रजस्तमस्सुக்களுக்கு மூலமான पापங்களைக் கழித்துக்கொண்டு इतिकर्तव्यतैயாக விருக்கும். இப்பக்தியோகந்தானே "प्रत्ययार्थं च मोक्षस्य सिद्धयः संप्रकीर्तिताः" என்கிறபடியே இளநெஞ்சரைத் தேற்றுகைக்கு இட்ட விரகான வழி

---

பதம்......அறுதியாக—வளர்ந்து வருவதாய் என்று. வளர்ச்சியாவது அதிக காலத்தொடர்ச்சியுமாம்; மேன்மேல் விசதமாகையுமாம். 'वर्तयन् यावदायुषम्' என்று த்ர்மாநுஷ்டாநத்தை ஆயுள் முடிய விதித்தது எதற்காக. நித்யகர்மாவாகையாலே விடக்கூடாதென்ற கருத்தாகில், அது ஸாமான்ய வசநத்தாலேயே ஸித்தம்; பக்தி ஸந்தர்ப்பத்தில் சொல்ல வேண்டியதில்லை. பக்தியோகத்திற்கு இது அங்கமென்னில், மாநஸமான பக்தியோகத்திற்கு காயிககார்யம் பாதகமாகுமே யல்லது ஸாதகமாகாது. முன்னே கர்மயோக ப்ரஸ்தாவத்தில் 'நித்ய நைமித்திகங்களோடு கூடின கர்மவிசேஷம் கர்ம யோகம்' என்றவிடத்தில் கூடின என்றதாலே ஸமஸமுச்சயமும் கொள்ள லாம். அது ப்ராமாணிகமல்ல வென்னில், கர்மாவுக்குக் கர்மா அங்கமாகவுமாக லாம். இங்கென் என்ன கர்மாநுஷ்டாநத்திற்கு உபயோகம் சொல்லுகிறுர் இதுக்கு இதி. ஜ்ஞாநஸந்ததி விசேஷத்தோடு கர்மாவுக்கு ஸமஸமுச்சயம் சொல்லுகிற யாதவப்ரகாச மதம் தவருகையால் கீழே பக்தியோகத்தை மட்டும் சொன்னது தகும், பாஸ்கரர் கர்மாநுஷ்டானத்தை யங்கமாக்கி விஷம ஸமுச்சயமே கொள்ளுகிருராஞலும் கர்மா எப்படி உபகாரகம் என்றபோது आरादुपकारकम् என்கிருர். அதைவிட संनिपत्योपकारकமாகச் சொல்வது மீமாம்ஸா ஸம்மதமாகும். அதாவது ப்ரதாநமான பக்தி யோகத்தால் பலன் வரும்போது கர்மாநுஷ்டாநமும் துணையாகிறதென் பதை விட்டு பக்தியோகம் உண்டாவதற்கே கர்மாநுஷ்டாநம் என்கிற इतिकर्तव्यतै= அங்கம் வேண்டுமென்பது உசிதமென்றபடி. எப்படி இது உண்டு பண்ணுகிறது என்பதை விவரிக்கிருர் ஜ்ஞாநவிகாஸேத்யாதியால்— ஜ்ஞாநவிகாஸத்திற்கு ப்ரதிபந்தகம் பாபம்; धर्मेण पापमपनुदति' என்கிற வசனப் படி அது கழிந்தால் அதன் கார்யமான ரஜஸ்தமஸ்ஸுக்கள் மனத்தில் குறை வதால் ஸத்த்வம் வ்ருத்தியடைகிறது. அதஞல் सत्त्वात् सञ्जायते ज्ञानम् என்ற படி பக்தி ரூபஜ்ஞாநம் வளர்கிறது. பக்தியோகம் செய்வதாலேயே மோக்ஷம் ஸித்தமென்று நினைக்கலாகாது அதையே வேறு பலனில் நசையால் செய் தால் வேறு பலன்தான் வருமென்றறிவிக்கிருர் இப்பக்தி என்று. எதற் காக ஈச்வரன் இதையும் வேறு பலனுக்குக் காரணமாக்குகிருன் என் னில் ஸமாதாநம் இளநெஞ்சரை இத்யாதி. நெஞ்சுக்கு இளமையாவது விச்வாஸக்குறைவு. ப்ரத்யயார்த்தம் என்கிற ச்லோகத்திற்கு அர்த்தமாவது— मोक्षस्य—மோக்ஷமென்கிற பலன்விஷயத்தில் प्रत्ययार्थं—நம்பிக்கை வருவதற் காக सिद्धयः—ஐச்வர்யாதி பலன்களும் संप्रकीर्तिताः—கூறப்பட்டன என்றதாம். அதாவது யோகம் செய்கிறவனுக்கு பின்னலேயளிக்க வேண்டிய பலனிருக்க

யில் कामनाभेदத்தாலே ऐश्वर्यादिகளுக்கும் साधनமென்னுமிவ்வர்த்தம் "चतुर्विधा भजन्ते माम्" என்று சொல்லப்பட்டது. அவ்விடத்தில் "तेषां ज्ञानी नित्ययुक्त एकभक्तिर्विशिष्यते" என்று தொடங்கிச் சொன்ன ज्ञानियினுடைய ஏற்றத்தை, "चतुर्विधा मम जना भक्ता एव हि ते स्मृताः । तेषामेकान्तिनः श्रेष्ठास्ते चैवानन्यदेवताः ॥

---

அதற்கு முன்னே अणिमाद्यष्टसिद्धिகளையும் அளிப்பது இது போல் மோக்ஷமும் வரும் என்கிற நம்பிக்கைகாக என்று உரைப்பர். ஸாரப்ரகாசிகா-ஸாராஸ்வாதிநிகளில் ஈச்வரன் தானாக அளிக்கும் அணிமாதி ஸித்திகளைக் கொள்ளாமல் ஐச்வர்யாதி பலன்களுக்குக்காக இதை விதித்தது நம்பிக்கைக்காக என்று உரைக்கப்பட்டது. வேறு விதமும் கூறுவதுண்டு. கர்மகாண்டம் தொடங்கி ஒவ்வொரு கர்மாவுக்கும் சிற்சில பலன்களை விதித்தது அதற்காகவே அந்த கர்மா ஏற்பட்டதென்கிற காரணத்தாலல்ல; பகவத் த்யானத்திற்கு அங்கமாக கர்மாக்களை விதித்து அதற்குக் கர்மாக்கள் உபகாரகமாகுமென்கிறதில் நம்பிக்கை வருவதற்காக வேறு பலன் காட்டியதென்பது இதன் பொருள் என்றவாறு. 'विविदिषन्ति यज्ञेन दानेन तपसा अनाशकेन' என்று எல்லா கர்மாவையும் த்யானாங்கமாக விதித்திருப்பது காண்க. இதே முக்ய பலன். தேற்றுகைக்கு இட்ட விரகான வழியில் இதி. தேற்றுகைக்காகவென்றபடி, எம்பெருமான் த்ருட நம்பிக்கை வருவதற்காகச் செய்யும் உபாயங்கள் பலவுண்டு. வேதத்தில் நம்பிக்கை வருவதற்காக சத்ருவைகொல்லுவதற்கான அபிசாரயாகத்தையும் விதித்தான். ஸுக்ரீவனுக்கு விச்வாஸம் வருவதற்காக ஏழு மராமரங்களை வீழ்த்தினன். இப்படியான உபாயங்களுக்கு மோக்ஷார்த்தமான செயலைப்போல் அபேக்ஷித்தால் ஐச்வர்யத்தைப்பலமாக்கியது முண்டு. காமநாபேதத்தாலே = ஆநுஷங்கிகமாக வரும் அணிமாதிகளைப் போலன்றி ஐச்வர்யாதிகள் வேணுமென்று அபேக்ஷித்துச் செய்ததாலே யென்றபடி चतुर्विधाः—நஷ்ட ஐச்வர்யத்தையோ நவீன ஐச்வர்யத்தையோ நிரந்தர ஆத்மாவலோகநத்தையோ நித்ய மோக்ஷத்தையோ அபேக்ஷிப்பவர்களாய் என்றபடி. இங்கே கீதையில் தேவதாந்தர பரர்களாகாமல் ஸுக்ருத வசத்தாலே என்னிடம் பக்தராவர்கள் நால்வர் என்று எல்லோரையும் கொண்டாடியிருக்க तेषां ज्ञानी என்ற வசநம் ஜ்ஞாநியை மட்டும் புகழ்ந்தது नित्ययुक्तः एकभक्तिः என்கிற பதங்களாலே. இது நால்வருக்கும் பொதுதானே என்ன, விவரிக்கிறார் அவ்விடத்தில் இதி. அநுகீதையில் இதற்கு விவரணம் चतुर्विधा मम जनाः (பா. சாந்தி 350) இத்யாதியால். இவர்கள் எல்லோரும் பக்தர்கள் தான்; ஆனால் ஜ்ஞாநிகளே ஏகாந்திகள். அல்லது ச்ரேஷ்டரான ஏகாந்திகள்—பரமைகாந்திகள் என்றபடி. எப்பலனும் எம்பெருமான் மூலமே பெறவேண்டும் என்றிருப்பவர்கள் ஏகாந்திகள். அதனாலேயே ஆளவந்தார் 'ऐकान्त्यं भगवत्येषां समानमधिकारिणाम्' என்றார். ते चैव—அவர்களே अनन्यदेवताः—இதரதேவதாஸம்பந்த மற்றவர்கள். மோக்ஷம் தவிர வேறாய் தாம் கோலின ஐச்வர்ய கைவல்யங்களுக்கு அவன் தவிர வேறு ஒருவரை உபாயமாகக் கொள்ளாமையாலே

अहमेव गतिस्तेषां निराशीःकर्मकारिणाम् । ये तु शिष्टास्त्रयो भक्ताः फलकामा हि ते मताः॥ सर्वे च्यवनधर्माणः प्रतिबुद्धस्तु मोक्षभाक् ॥'' என்று தானே வெளியிட்டான். இப்படி मोक्षोपायமாக विधित्त भक्तियोगம் परभक्तिயென்று பேசப்பட்டது.

இதினுடைய हेतुவாய் सात्त्विकपरिशीलनादिகளாலே வந்த भगवद्विषयத்தில்

---

தத்காலம் ஏகாந்தியானாலும் அப் பலனை யனுபவித்து இழந்த பிறகு மீண்டும் ஸம்ஸாரியானபோது தேவதாந்தர பரனுமாகலாம். மோக்ஷத்திற்கேயாகிற பக்தி செய்கிறவன் அது நித்யமாகிவிட்டபடியாலே என்றும் தேவதாந்தர ஸம்பந்த மற்றவனேயாவான். ஐகாந்த்யத்தை விவரிக்கிறார் = அஹமேவேதி. வேறு பலனை விரும்பாமல் உபாயாநுஷ்டாநம் செய்கிறவருக்கு நானே ப்ராப்யன். மற்ற பக்தர்கள் அவ்வாறில்லை. அவர்கள் வேறு பலன்களை விரும்பியிருக்கிற படியாலே ஏகபக்தியாக மாட்டார்கள். ஏகபக்தி: என்பதற்கு ஏகமான பக்தியையுள்ளவன் என்கிற பொருளல்ல. ஒன்றிலேயே பக்தி அன்பு உடையவன். ப்ராப்யமும் உபாயமும் நானே என்றிருப்பவனுக்கு என்னிடமே அன்பு வேறு பலனுக்கு என்னை உபாயமாக்கினவனுக்கு வேறு பலனிலும் அதற்காக என்னிடமும் அன்பு. ஆக அவன் அனேக பக்தி, நித்ய யுக்த: என்பதற்கு மரணம் வரையில் என்னிடம் யோகம் செய்கிறான் என்கிற அர்த்தமல்ல என் ஸம்பந்தத்தை யழியாதபடி கொண்டவன் என்பது பொருள். வேறு பலனை யடைகிற வரையில் மட்டும் என் ஸம்பந்தமுள்ளவன் இப்படி நித்ய யுக்தனாகான். शिष्टाः-மிகுந்தவரான; ஜ்ஞாநிகளைக்காட்டிலும் வேறான भक्ताः பக்தர்கள் எல்லோரும் च्यवनधर्माणः—பெற்ற விடத்திலிருந்து நழுவுகையை அவச்யமுள்ளவர்கள். प्रतिबुद्धस्तु-ஜ்ஞாநியே मोक्षभाक्-மோக்ஷம் பெறுகிறான்.

பரபக்தி யென்பதற்கு பரையான மோக்ஷஸாதநமான பக்தி யென்பது பொருள். பரமாத்ம விஷயகமான பக்தி யென்ற பொருளாகில் அது முன் பின் பக்திக்குமாய் எல்லோருக்கும் பொதுவாயிருக்கும். பரமாத்ம பக்தி இந்த பக்தி யோகத்திற்குக் காரணமாகும் வகையையும் இதற்குப் பிறகு முடிவில் வரும் பக்தி யொன்றையும் தெளிவாக உரைப்பாராய் அவ்விரண்டிற்கும் பக்தி யோகமென்றும் பரபக்தி யென்றும் பெயரில்லை யென்பதையும் விவரிக்கிறார். இதனுடைய இத்யாதியால். இதினுடைய ஹேதுவாய் = இந்த பக்தியோகத்திற்குப் பரம்பரயா காரணமாய். பரிசீலனம் ஸாத்த்விக புருஷர்களோடு செய்யும் ஸம்பாஷணம்; ஸாத்த்விக சாஸ்த்ர பரிசிலநமும் மேலே சொல்லப்படும். அது மூலமாக வரும் ப்ரீதி முன்பிருந்ததைவிட உயர்ந்ததாகும். அதுவும் பரபக்தியைப் போலே பகவானை விசதமாக அறியவேண்டுமென்கிற அவாவுக்குக் காரணமாயிருப்பதானாலும் பரபக்திக்குள்ள சிறப்பு இல்லாமையால் பரபக்தி யென்றே சொல்லப்படமாட்டாமல் பக்தியென்றே சொல்லப்படுகிறது. ஸாத்த்விகபரிசிலநத்திற்கு முன்னமேகூட எம்பெருமானிடத்தில் ஸஹஜமாகப் பலருக்கு ப்ரீதி வருவதுண்டு. महनीयविषये प्रीतिः भक्तिः—பெரியவிடத்தில் சிறியவனுக்குள்ள ப்ரீதியே பக்தி

प्रीतिविशेषம் ஸர்வேச்வரனைத் தெளியவறிய வேணுமென்னும் अभिनिवेश த்துக்குக் காரணமாய் பக்தியென்று பேர்பெற்றிருக்கும்.

இத்தாலே "शुद्धभावं गतो भक्त्या शास्त्राद्वेद्मि जनार्दनम्" என்கிறபடியே शास्त्रजन्यतत्त्वज्ञान - कर्मयोगादिपरम्परयாலே பிறந்த परभक्तियானது साक्षात्करिக்க வேணுமென்னும் अभिनिवेशத்தை உண்டாக்கி "योगेश्वर ततो मे त्वं दर्शयात्मान-मव्ययम्, 'காணுமாறருளாய்" "ஒரு நாள் காணவாராய்" என்று विलपिக்கும்

---

யென்கிற லக்ஷணத்தைக் கொண்டு எல்லாம் பக்தி தான், ஆனாலும் स्नेह-पूर्वमनुध्यानं भक्तिरित्यभिधीयते என்று சாஸ்த்ரத்தில் பரிபாஷையாகப் பேசப் பட்ட பக்தியோகமிராதபோது அதன் கீழ்ப்படியில் பொதுவாக எல்லோ ருக்குமுள்ள பக்திக்கு மிகவும் மேலாய் ச்ரவண மநநாதிகள் செயதாக வேண்டுமென்ற தீவ்ரமான ஆசையுள்ளவனிடத்தில் பக்தியுள்ளவன் இவன் என்று ப்ரயோகித்தால் அந்த பக்திபதமானது பரபக்தியோடு அதற்குள்ள நெருங்கிய ஸாம்யத்தைக் குறிக்கிறதென்பது தகுமென்று கருத்து இதன் மூலம் பெறும் பரபக்திக்கு நடுவிலுள்ள அம்சங்கள் இத்தாலே என்று தொடங்கி பரபக்தியானது என்றவளவால் குறிக்கப்பட்டன शुद्धभावमिति भा. உ.68 'ஸாத்த்விகஸம்பாஷண மூலமான பக்தியினாலே ஸ்ரீமந்நாராயணனே பரதத்த்வமென்கிற சுத்தமான மனமுடையனாய் பொதுவான பக்தியுள்ளவர் களுக்கு மேலாகவிருந்து சாஸ்த்ரமூலமாக மோக்ஷமளிக்கும் பெருமானைத் தெளிவாக அறிகின்றேன்' என்று ச்ரவணமநநங்கள் சொல்லப்பட்டன. பிறகு முமுக்ஷுவாய் கர்மயோக ஜ்ஞாந யோகங்களுக்குப் பிறகு பரபக்தியைப் பெறுகிறான். இப்படி ஸாதாரண பக்தி, பக்திவிசேஷம், பரபக்தி என்று மூன்று சொல்லப்பட்டன. இதன் மேல் பரமபக்தி யென்பதொன்றுண்டு. ஆனல் அதற்கு முன்னே பரஜ்ஞாநம் வரவேண்டும். மோக்ஷம் பெறுவதற்கு முன் இத்தனை நிலைகளுண்டானாலும் பரபக்திக்கு முன் உள்ள பக்தி பரம் பரயா உபாயமாகும். பரபக்திககுப்பின்னை பரமபக்தி பரஜ்ஞாநமென்பவை फलத்திற்கு மூலமாகத் தாமே வருகிறபடியால் फलकोटिயிலே சேரும். ஆக பகவத் ப்ரஸாதஹேதுவாய் ஸாத்யோபாயமாயிருப்பது பரபக்தியானபடி யாலே உபாயமாகிறது என்று தெளிவு பெறும்படி மேலே வரும் ப்ரஜ்ஞாந பரமபக்திகளை விரித்துரைக்கிறார் ஸாக்ஷாத்கரிக்க இத்யாதியால், இத்தாலே என்று தொடங்கிய வாக்யம் உண்டாக்கும் என்றதோடு முடியும். அபி நிவேசமாவது ஆவல்; அதன் கார்யத்தை சொல்லுகிறார் யோகேதி. கீதை. 11-4. योगेश्वर அந்தந்த சேதநாசேதநங்களுக்கான ஸ்வபாவயோகத்தை நியமிக்கின்றவனே! ततः-நான் காணக்கூடுமென்ற திருவுள்ளம் காரணமாக त्वम्—நீர் आत्मानं—தன்னை अव्ययं குறைவற मे दर्शय—எனக்குக் காட்டியருள வேணும். காணுமாறு அருளாய்; 8-1-1 தேவிமாரவார் என்ற பாசுரத் தின் முடிவிது. பக்தர்கள் காண்பதற்கு வேண்டுமநுகூலங்களையுடையனா யிருப்பதாலே காணுமாறு—நான் கண்ணால் காணும்படி அருளாய் = அருள்

படி பண்ணி இவ்வபேக்ஷாமாத்ரமடியாக வந்த भगवत्प्रसादविशेषத்தாலே तत्कालनियतமான परिपूर्णसाक्षात्कारத்தை உண்டாக்கும். இஸ் ஸாக்ஷாத்காரம் परज्ञानமென்று பேசப்பட்டது.

இப்படி निरतिशयभोग्यமான भगवत्स्वरूपத்தை ஸாக்ஷாத்கரித்தவாறே பெருவிடாய்ப்பட்டவன் தடாகத்தைக் கண்டாற்போலே பிறந்த प्रीतिविशेषம் परमभक्ति. இது 'முனியே நான்முக'னிற்படியே संकोचமற अनुभविத்தல்லது धरिக்கவொண்ணுத अभिनिवेशத்தை உண்டாக்கி மறுக்கவொண்ணுத திருவாணை யிட்டு வளைத்துக் கூப்பிடுகையாலே இவனுக்குக் கடுகப் प्राप्तिயைக் கொடுக்

---

புரியவேண்டும். ஒரு நாள் இதி 9-1 4 தளர்ந்தும் என்கிற பாசுரத்தின் முடிவு. ஒரு நாள் காணவாராய் விண்மீதே. ப்ரஹ்ம இந்த்ர ருத்ராதிகள் சூழ நீ ஆகாசத்தில் நான் ஒரு நாள் காணும்படி வரவேண்டும் அபேக்ஷா மாத்ரமடியாக—தீவ்ரமான ஆவலைக் கண்டு அதே காரணமாக வந்ததாம் பகவதநுக்ரஹம் கீழ்சொன்ன ப்ரமாணங்களில் பரிபூர்ண ஸாக்ஷாத்காரம் வேண்டப்படாவிட்டாலும் அதுபோல் இதுவுமுண்டாகுமென்ற கருத்து. பாபத்தி யுள்ளவனுக்கு வரும் பூர்ணஸாக்ஷாத்காரம் நீடித்திராதென்கிறர் தத்காலநியதமான என்று. இது பரஜ்ஞாநம். இவ்வுலகில் எம்பெருமான் விஷயமாக வரும் ஜ்ஞாநங்களுக்குள்ளே இது உயர்ந்தது இதன் மேலான பரமபக்தியை விவரிக்கிறர் இப்படி இத்யாதியால். ஸர்வேச்வரன் தனது ஸ்வரூபத்தை ரூபகுணுதிகளோடு மிகவும் போக்யமாகக் காண்பித்ததால் முன் இருந்ததற்கு மேலான ப்ரீதி விசேஷமுண்டாகிறது. அதே பரம பக்தி. இதனின்று வரும் அபிநிவேசம் இனி யெம்பெருமானை மோக்ஷத்தில் பெருமல் நிற்பதில்லை யென்ற ஆஸ்த்தையை யுண்டுபண்ணும். இதுவும் ஆழ்வார்பாசுரத்தில், 'முனியே. நான்முகனே' என்ற முடிவான திருவாய் மொழியில் குறிக்கப்பெற்றது. முனியே மனனம் = உலகெல்லாம் படைக்க ஸங்கல்பம் செய்கின்றவனே! நான்முகனே—ஸமஷ்டிலோக ஸ்ருஷ்டி யெல்லாம் ஆனபிறகு நான்முகனுக்கு அந்தர்யாமியாக உண்டானவனே! ஸங்கோசமற அநுபவிக்கையாவது—ஜ்ஞாநஸங்கோசம் தீர்ந்த பிறகு மோக்ஷத்தில் வரும் பூர்ணுநுபவம், இங்கு முதற்பாசுரத்தில் நீ என்னை விட்டுப்போவதை ஸம்மதிக்கமாட்டேன். மாயம் செய்யேல் என்று பரமபத ப்ராப்தியையும் பூர்ணுநுபவத்தையும் வேண்டினர். இரண்டாவது பாசுரத்தில், 'திருவாணை நின்ணுணை கண்டாய்' என்று பிராட்டிபேரிலும் அவன் பேரிலும் ஆணைவைத்து, நீயே என்னை யழைத்து அடிமையாக்கிக்கொள்ள வேண்டுமென்று வேண்டினர். இவர் வேண்டினபடி நடந்ததும் கடைப் பாசுரத்தில், "அலற்றி அவாவற்று வீடுபெற்ற கூருகூர் சடகோபன் என்று நுவலப்பெற்றது மறுக்க வொண்ணுத திருவாணையிட்டு தன்பேரில் ஆணை யிட்டால் அதை அவன் மறுக்கத் துணியான். அப்படி ஆணையிட்டு வளைத்து = விடாமல் சூழ்ந்து கூப்பிடுகையாலே = கூட்பிட்டுக் கதறுகையாலே. ஈச்வரனு

கும்படி ஸர்வேச்வரனுக்குத் त्वरातिशयத்தை உண்டாக்கி இவனை அவாவற்று வீடு பெறப்பண்ணும்.

இப் பக்தியோகம் त्रैवर्णिकரையொழிந்தார்க்கும் त्रैवर्णिकர்தங்களில் ज्ञानத்திலேயாதல் சக்தியிலேயாதல் இரண்டிலுமாதல் குறையுடையார்க்கும், फल-विलम्बம் பொறுக்க இசையாத तीव्रसंवेगமுடையார்க்கும் योग्यமல்லாமையாலே தங்கள் அளவுகளைத் தெளிந்து अद्वारकமாக ப்ரபத்தியை மோக்ஷோபாயமாகப் பற்றுமவர்களுக்கு ஸர்வफल साधनமான ப்ரபத்திதானே परमभक्तिस्थान

---

க்கு மோக்ஷமளிக்க த்வரையை யுண்டாக்குவதாம். அவா அற்று = ஆசை தீர்ந்து, பலன் பெறும்வரையில் ஆசை தொடர்ந்துவரும்; பெற்ற பிறகு பெற வேண்டுமென்ற ஆசை பூர்த்தியாகிறபடியால் முடிந்துவிடும். பக்தி பரபக்திகளைப் போலே பரமபக்தியும் ப்ரீதிவிசேஷமென்றார். அதன் கார்யமான ஆவலையும் பரமபக்தி யென்று சொல்வதுண்டு. இந்த பரபக்த்யாதி நிலைகளை 'भक्त्या मां अभिजानाति यावान् यश्चास्मि तत्त्वतः। ततो मां तत्त्वतो ज्ञात्वा विशते तदनन्तरम्' என்கிற கீதாவ்யாக்யாநத்தில் விரிவாகக் காண்க. இவ்வளவால் பரமபக்தியே உபாயம்; அதுமூலமான அபிநிவேசத்தைக் கண்டு ஈச்வரன் தானாக அளித்த பரஜ்ஞாந பரமபக்திகள் மோக்ஷம் போலே பலனாய் மோக்ஷத்திற்கு முன்னே வரக்கூடியவை யென்றதாயிற்று.

இப்படி கர்மயோக ஜ்ஞாநயோகங்கள் அங்கமாய் பரபக்தி ப்ரதாநமான ஓர் உபாயம் சொல்லியாயிற்று. ப்ரபத்தியானது கர்மயோக ஜ்ஞாநயோகங்கள் போலே அங்கமாவது மட்டுமின்றி. ப்ரதாநமுமாகுமென்று இரண்டாவது ஸாத்யோபாயத்தையும், பக்தி நிஷ்டனுக்குப் போலே அவனுக்கும் இங்குப் பலனுண்டு என்பதையும் அருளிச்செய்கிறார் இப்பக்தியோகமிதி. த்ரைவர்ணிகரை யொழிந்தார்க்கும் = மூன்று வர்ணத்தினரல்லாதவர்களுக்கும்; சூத்ராதிகளுக்கு மென்றபடி. த்ரைவர்ணிகர் தங்களில்—த்ரைவர்ணிகர்களில். பக்தி ஸ்தாநத்திலே ப்ரபத்தி யாகையாலே பக்திக்கதிகாரிகளான மூன்று வர்ணத்தினருக்கே இதில் அதிகாரமென்று நினைக்க வேண்டா; பக்தி செய்ய முடியாதவர்களெல்லோருக்கும் ப்ரபத்தியாம். பக்தி செய்ய முடியாமைக்குக் காரணம் பக்தி விஷயமான ஜ்ஞாநமில்லாமையுமாம். சக்தியில்லாமையுமாம். (இரண்டுமில்லாமையுமாம்) இரண்டுமிருந்தும் இத்தேஹாவஸாநத்திலே மோக்ஷத்தை யபேக்ஷிப்பதால் அதற்குள் பக்தியைப் பூர்த்தியாகச் செய்ய முடியாமையுமாம் இதையே फल விளம்பம் பொறுக்க இசையாத (இடங்கொடுக்காத) தீவ்ரஸம்வேகம் என்றது. தீவ்ரஸம்வேகமாவது பலன் பெறுவதில் அதிகப்பற்று; அதிக வேகம். ஸம்ஸாரத்தில் அடிச்சூட்டால் இங்கு இருக்கவாகாதபடிக்கான அதிக அச்சமுமாம். தங்கள் அளவுகளைத் தெளிந்து. இவ்வள்வுதான் நமக்குள்ளது; நம்மால் பக்தியால் மோக்ஷம் பெறவாகாதென்று தெளிந்து. அத்வாரகமாக மோக்ஷோபாயத்தை ஸாதிப்பதற்காக பக்தியை விட்டு. चोदितैயாகையாலே—விதிக்கப்பட்டிருப்ப

த்திலே चोदितैயாகையாலே உபாஸகனுக்குப் परभक्तिக்கு மேல்வரும் अवस्थैகள் போலே இஸ் स्वतन्त्रप्रपत्तिनिष्ठனுடைய கோலு(ரு)தலுக்கு ஈடாக இப்ப்ர பத்திக்கு மேல் வரும் अनुकूलावस्थैகள் இதின் फलமாயிருக்கும்.

இப்படி प्रपत्तिக்கும் भक्तिக்கும் अधिकारिविशेषத்தைப் பற்றித் तुल्यफलत्वமுண்டாகையாலே விகல்பமாகக் கடவது. இவற்றுக்கு "नाना शब्दादिभेदात्"

---

தாலே. 'मुमुक्षुणा यत् सांख्येन योगेन न च भक्तितः।' என்று பக்தி செய்ய முடியாத போது ப்ரபத்தியை விதித்ததே. பக்தி நிஷ்டனுக்கு மேல் வரும் அவஸ்தைகள் பரஜ்ஞாந பரமபக்திகளும் அதற்கு முன்னுகை ஆநுஷங்கிகமான பகவத் பாகவத கைங்கர்ய உபயோகி ஸம்ருத்திகளும். கோலுதலுக்கீடாக. ப்ரபத்தி நிஷ்டனும் தன் அளவுகளைத்தெளிந்து பரஜ்ஞாந பரமபக்திகளையோ, யோக பூர்வகமான ஸாக்ஷாத்காரத்தையோ, ஜ்ஞாநத்துக்குத் தக்க ப்ரவசநாதி கைங்கர்யங்களையோ, செல்வத்துக்குத் தக்க கைங்கர்யங்களையோ, ஆமரணம் நிரபராத கைங்கர்யத்தை மட்டுமோ ப்ரபத்தி செய்து கேட்கலாம். அப் போது அவை ஸித்திக்கும். வேண்டாதவர்களுக்கும் பூர்வ ஜந்மஸுக்ருதத் தாலே யெல்லாம் ஸித்திப்பதுமுண்டு.

இப்படி இங்குள்ள பலன்களில் வாசிஇருந்தாலும் மோக்ஷரூப முக்ய பல னில் வாசியில்லையென்கிறுர் இப்படி இத்யாதியால். விகல்பமாகக்கடவது பக்தி நிஷ்டன் அங்கப்ரபத்தி செய்வது போல் அத்வாரக ப்ரபத்தி நிஷ்டனும் மோக்ஷத்தில் அதிகபலனுக்காக பக்தி செய்யலாமென்பதில்லை யென்ற படி. ஒரு பக்தியோகத்திலிழிந்தவன் வேறொரு பக்தியோகத்தைச் செய் யாமலிருப்பது போல் ப்ரபத்திநிஷ்டனும்வேறு உபாயம் செய்யாமலிருப் பதாம். இதெல்லாம் ப்ரஹ்மஸூத்ரத்திலும் அறிவிக்கப்பட்டதென்கிறுர் இவற்றுக்கு இதி. விகல்பஸூத்ரத்தில் ப்ரபத்திக்கும் சேர்த்து விகல்ப மென்பது ப்ரபத்தியையும் ஸூத்ரகாரர் ஸம்மதித்திருப்பது தெரிந்தா லொழிய ஸித்திக்காதாகையால் ப்ரபத்தியில் ஸம்மதிக்கு ஸூத்ரத்தைக் குறிக்கிறுர் नानेति. உபநிஷத்தில் சொல்லப்பட்ட மோக்ஷோபாயம் ஒன்ரு பலவா என்கிற கேள்வியில் பல என்று ஸ்தாபிக்கும் ஸூத் ரம் இது. नाना—மோக்ஷோபாயங்கள் பலவாகும். பூர்வமீமாம்ஸையில் உபாயமாகச் சொல்லப்பட்ட கர்மாக்கள் பல என்பதற்கு என்ன காரண ங்கள் அங்குக் கூறப்பெற்றனவோ, அவைகளே இங்கும் காரணங்க ளென்கிற கருத்தினுலே அவற்றையே शब्दादिभेदात् என்று குறிக்கிறுர். இங்கு ஆதிபதமிருப்பதாலே அங்குச் சொன்ன शब्दान्तरம் अभ्यासம் संख्यै संज्ञै गुणம் प्रकरणान्तरம் என்றவற்றில் கூடுமளவு கொள்ளலாமென்று கருத்தாம். இங்கு சப்தபதத்தினுலே शब्दान्तरம் என்கிற முதல் ப்ரமாணம் குறிக்கப் பெற்றது. அதாவது வெவ்வேறு க்ரியையைச் சொல்லும் சொல் என்ற தாகும். எல்லா பக்தியோகமும் தர்சநஸமாநாகார ப்ரீதிரூபாபந்நத்யாநமே யாகையால் அதை விதிக்கிற யஜநாதி சொல்லுக்கு வேறு பொருளில்லை

(3-3-56) என்கிற अधिकरणத்திலே भेदம் सिद्धம். "विकल्पोऽविशिष्टफलत्वात्" (3-3-57) என்கிற அதிகரணத்திலே விகல்பமும் सिद्धம். உபாஸநத்தில் விசேஷங்கள் போலே शाखाभेदங்களிலும் भगवच्छास्त्रसंहिताभेदங்களிலும் சொல்

---

இப்படியிருக்க சப்தாந்தரமென்பது ப்ரபத்தியையும் கொண்டால்தான் பொருந்தும். பக்தி வேறு ப்ரபத்தி வேறாகையால் அதது சப்தாந்தரமே. இவ்விஷயம் ந்யாஸவிம்சதியில் "नानाशब्दादिभेदात्—என்கிற ச்லோகத்தில் விரித்துரைக்கப்பெற்றது. இப்படி இரண்டும் வேறுன்மை இந்த ஸூத்ரத்தில் வ்யாஸரால் சொல்லப்பட்டிருக்கிறபடியால் மேலே விகல்பஸூத்ரத்தில் இதற்கும் பக்திக்கும் விகல்பம் சொல்லுகிறுரென்பது ஸித்இத்தது. விகல்பமாவது—பலவற்றில் ஏதேனுமொன்றைக் கொள்வது (அநுஷ்டிப்பது) अविशिष्टफलत्वात् என்பதற்கு 'வாசியற்ற முக்யபலனை யுடையதாகையால்' என்பது பொருள். முக்யமான மோக்ஷமென்கிற பலனில் வாசியில்லாமையால் என்றபடி.

இந்த ஸூத்ரங்களில் பக்தி மார்கங்கள் பல என்று கருதபெற்றது ஸர்வஸம்மதம். அதுபோல் ப்ரபத்தியிலும் பலவகையுண்டோ என்ன அருளிச்செய்கிறுர். **உபாஸநத்தில் இதி.** உபாஸநங்கள் போலே என்னுமல் உபாஸநத்தில் விசேஷங்கள் போலே என்றதால் ஸத்வித்யா दहरவித்யாதி உபாஸநங்கள் வெவ்வேருகவிருப்பது போலே ஒரே உபாஸநத்திலும் சாகாபேதத்தாலே (உபாஸநாபேதமிராமற் போனுலும்) சில தர்மங்கள் விகல்பமாகக் கொள்ளப்படும். வைச்வாநரவித்யையில் சாந்தோக்யத்தில் சொன்ன **ப்ராதேசமாத்ரத்வம்** ஸ்ரீபாஷ்யரீதியில் வேறு. அக்நிரஹஸ்யத்தில் வேறு. இதுபோல் காண்க. இப்படி ஒரே ந்யாஸவித்யையில் விசேஷங்களென்னவெனில், மந்த்ராதி விசேஷங்களே. தைத்திரீய ந்யாஸவித்யை ओमित्यात्मानं युञ्जीत என்றது அதற்கு ப்ரணவமே மந்த்ரமாயினும் ந்யாஸம் பண்ணப்படும் ஆத்மாவை க்ரஹிக்க वसुरण्य மந்த்ரம் கொள்ளப்பட்டிருப்பதால் அதனுடைய அர்த்தாநுஸந்தாந மூலகமாக ஜீவாத்மக்ரஹணம் விசேஷாங்கமாகிறது. பலத்திலும் தக்ஷிணுயந உத்தராயணபேதத்தாலே சந்த்ர ஸாயுஜ்யம் ஆதித்ய ஸாயுஜ்யம் அவாந்தர பலமாகத் தெரிகிறது. ச்வேதாச்வதரத்தில் मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये என்கிறவிடத்தில் இது தெரியவில்லை. ப்ரணவம் போலே மந்த்ர ரத்நம், 'ஸ்ரீமந்நாராயண ஸ்வாமிந்' என்ற மந்த்ரம் மற்றும் விஷ்ணுதேவதாகமான மந்த்ரம் பாஞ்சராத்ரங்களில் விதிக்கப்படுகின்றன மந்த்ரம் விகல்பமாக விதிக்கப்பட்டால் ஏதேனுமொரு மந்த்ரத்தைக் கொண்டு பண்ணலாமென்றதாம். மந்த்ரங்கள் விகல்பமாக விதிக்கப்பட்டதால் மந்த்ரத்தினுடைய அர்த்தமான பகவத்குணம் விக்ரஹம் முதலானவற்றின் அநுஸந்தாநங்களுக்கும் விகல்பமென்று சொன்னதேயாம். सकृदेव प्रपन्नाय என்று தன் விஷயமாக ஸ்ரீராமனும் मामेकं शरणं व्रज என்று தன்னை ஸ்ரீக்ருஷ்ணனும் சொன்னவிடத்தில் ஸ்வரஸ

லும் न्यासविद्यैயில் मन्त्रादिविशेषங்கள் கண்டுகொள்வது. நமஸ்காரம் वाचिकம் मानसம் कायिक மென்று பிரிந்தாற்போலே प्रपत्तियिலும் ஓரொன்றை முன்னிட்டு

---

மாக குணவிக்ரஹாதிகள் வேறுயிருந்தாலும் ப்ரபத்தி வேறு என்று யாரும் சொல்வதில்லை. உபாஸநமார்கங்கள் अहं ब्रह्मास्मि என்று ஆத்ம பரமாத்ம ஸ்வரூபங்களை ப்ரதாநமாக்கியவை. ப்ரபத்தியில் உபாயத்வ உபயுக்தங்களான பலகுணங்களோடு பரமாத்மாவை யநுஸந்திப்பதோடு ஆநுகூல்யஸங்கல்பாதி கார்யங்களும் செய்யவேண்டியிருப்பதால் இந்த அங்காங்கிகள் ஏகரூபமாயிருப்பதால் பொதுவாக ப்ரபத்தி ஒன்று என்பதே ஸ்வரஸமென்பர். அதனாலேயே உபாஸநத்தில், ந்யாஸவித்யையில் என்ற ஏகவசநம் என அருளினர் ஸாராஸ்வாதிநியில்; ஸாரப்ரகாசிகையில் ப்ரபத்தியிலும் பேதம் கருதப்பெற்றது பொதுவாக ப்ரபத்தியை விதித்த பிறகு மந்த்ராதிகளை விகல்பமாக விதிக்கக் கூடிய இடம் ஸாராஸ்வாதிநிக்கு விஷயம்: ஒரே சாகையில் ப்ரபத்தியின் உத்பத்திவிதிகளிலேயே குணவிக்ரஹாதிகளும் சேர்க்கப்பட்டிருந்தால் அந்த இடம் ஸாரப்ரகாசிகைக்கு, விஷயம். ஸ்ரீபாஞ்சராத்ர ரக்ஷையில் 'यद्यप्यनन्यप्रयोजनस्यापि तत्तत्रोपयुक्तन्यासविद्याभेदात्... गुणविभूत्यादिकं नाना भवति' என்கிற வாக்யம் யோக ப்ரகரணத்திலிருப்பதாலே அங்குள்ள ந்யாஸவித்யாபதம் सर्वोपाधिविनिर्मुक्तं क्षेत्रज्ञं ब्रह्मणि न्यसेत्' என்று விதிக்கப்பட்ட யோகரூப ந்யாஸத்திற்கு அங்கமான மந்த்ரபேதத்தைச் சொல்லுவதாம். அங்கே ப்ரபத்தி பேதம் சொல்லுவதற்கு ப்ரஸக்தியில்லை. அங்கேயே அடுத்த வாக்யத்தில் तत्तत्सद्विद्योदितरूपादिविशेषविशिष्ट என்கிற வாக்யத்தால் மந்த்ரபேதத்தால் ரூபாதிபேதமிருந்தாலும் யோக ஸ்வரூபம் அவிசிஷ்ட மென்கிறார். அது போல் இங்கும் மந்த்ராதி பேதமிருந்தாலும் ப்ரபத்தி ஸ்வரூபம் அவிசிஷ்ட மென்பதே தகும். ஸத்வித்யா தஹரவித்யாதி பேதம் போலே யன்றி, ப்ரக்ருதவாக்யம் ஏகோபாஸநத்தில் அநேக விசேஷங்கள் போலே ஏகப்ரபத்தியில் மந்த்ராதி விசேஷங்களைச் சொல்வதே ஸ்வரஸமாகும். அதனாலேயே மேலே நமஸ்காரம் என்கிற வாக்யமும் ப்ரபத்தி பேதமில்லாமையைச் சொல்லவந்தது.

ப்ரபத்தியை மாநஸம் வாசிகம் காயிகமென்று பிரித்திருப்பதால் அந்தந்த கரணத்தினால் வரும் க்ரியை வெவ்வேறானதால் ப்ரபத்தியை விதிக்கிற வாக்யமே மூன்று விதமான ப்ரபத்திகளை விதிக்கவேண்டுமாகையால் त्रिर आहुतीर्जुहोति என்கிற விடத்தில் மூன்று என்கிற ஸங்க்யையினால் கர்மபேதம் போலே இங்கும் முக்கரணபேதத்தாலே ப்ரபத்தி பேதம் சொல்ல வேண்டுமென்ன, இதற்கு உத்தரம் அருளிச்செய்கிறார் நமஸ்காரமிதி. நமஸ்காரமானது—மாநஸம் வாசிகம் காயிகம் என்று மூன்று விதமாக ப்ரஸித்தம். மாநஸநமஸ்காரமாவது—நமஸ்கரிக்கப்படுகிறவனைத் தனக்கு மேம்பட்டவனாக நினைத்திருக்கை. இவ்வர்தத்தைச் சொல்லும் நம: இத்யாதி சப்த ப்ரயோகம் வாசிகம். காயிகமாவது—அஞ்ஜலி-ப்ரணிபதநாதி நம: என்கிற

இவ்विभागங்கள் சொல்லப்பட்டன. 'இவை பொருந்தினபோது पूर्णनमस्कार மானுற்போலே पूर्णप्रपत्तिயாகக் கடவது' என்றவர்கள் பாசுரங்களுக்கும் वाचिक-कायिकங்களான व्यापारविशेषங்கள் परीवाहமாம்படியான मानसप्रपत्तिயினுடைய

---

பதத்திற்கு இம்மூன்றையும் அர்த்தங்களாகக் கொள்வதாம். முக்யமாகை யால் மாநஸ புத்தியே முக்யார்த்தம். குரும் நமஸ்கரோதி என்ருல் குரு நம்மைவிட மேம்பட்டவன் என்றிருக்கிருன் என்பது அர்த்தம்; அது வாசிக மும் காயிகமும் ஆகுமோ என்னில்—மாநஸ நமஸ்காரத்தினுடைய பரீவாஹ மாக நமச்சப்தாதிகளும் அஞ்ஜல்யாதிகளும் ஏற்படுவதால் மாநஸநமஸ் காரத்தையே அந்தந்த வ்யாபாரத்திற்குக் காரணமாயிருக்கும் போது வாசிக மென்றும் காயிகமென்றும் சொல்வதென்பது ஸர்வஸம்மதம். அந்தந்த வ்யாபாரம் மாநஸபுத்தியிராமல் வராதாகையால் புத்தியே நமஸ்காரபதத் திற்கு அநுகதமான அர்த்தமாகிறது. அது போல் ப்ரபத்தி விஷயத்திலும் கொள்க. லௌகிகமான நமஸ்காரபதத்திற்கே லாகவத்தாலே ஜ்ஞாநமாத்ரம் பொருளான போது, ப்ரபத்தி பதத்திற்கும் ஜ்ஞாநமே மோக்ஷஸாதநம் என் கிற ப்ரமாண விரோதம் வாராமைக்காகவும் லாகவத்தாலும் ஜ்ஞாநமே பொருளென்பது ஸுதராம் ஸித்திக்கும். ஆக மாநஸ ப்ரபத்தியாவது கீழே உபாயமாவது ஜ்ஞாநவிகாஸ விசேஷம் என்று சொன்னபடி ஜ்ஞாந மாத்ரமேயாகும். இந்த ஜ்ஞாநம் வந்த பிறகு இதன் கார்யமாய் பரீவாஹ மான வாக்ய ப்ரயோகம் வரும் போதும் இதே அந்த வாக்யத்திற்குக் காரண மாகையாலேவாசிகமென்னப்படுகிறது.அதுபோல்அஞ்ஜலி ப்ரணிபாதாதிகள் வரும்போது அவற்றிற்குக் காரணமான புத்தியென்ற பொருளிலே காயிக ப்ர பத்தியென்கிற சப்தப்ரயோகமாம். இம்மூன்றிலும் பொதுவாயிருக்கக்கூடிய ஜ்ஞாநமே மோக்ஷஸாதநமாகையால் க்ரியா பேதமில்லாமையாலே மூன்று ப்ரபத்தியை விதிக்கவேண்டா. தானுக வரும் பரீவாஹத்திற்கு விதியுண்டோ? பரீவாஹத்தால் இவனுக்கு ஜ்ஞாதமுண்டாயிருப்பது பிறருக்குத் தெரியு மத்தனை. ஆக வாசிககாயிக பேதங்களையிட்டுப் பல ப்ரபத்தி விதியில்லை. இங்கே கீழ்ச் சொன்னபடி த்ருஷ்டாந்தமான நமஸ்காரத்தை மூன்று பிரி விலும் ப்ரதாநமாக ஜ்ஞாநரூபமாக இசைந்து தார்ஷ்டாந்திகத்தில் மட்டும் மாநஸப்ரபத்தி த்யாந ப்ரதாநம், வாசிகப்ரபத்தி பரஸமர்பணபரமான த்வயோச்சாரணமாய் சப்தப்ரதாநம், காயிக ப்ரபத்தி பரஸமர்பண பூர்வக ப்ரணிபாதரூபமாய் காயவ்யாபாரப்ரதாநமென்கிருர்கள். த்ருஷ்டாந்தத் தோடு ஏகரூபமாகச் சொல்ல வேண்டியிருக்க மாற்றிச் சொல்வது எதற்கு? அப்போது இதற்குத் தகுந்த த்ருஷ்டாந்தமன்ரோ கூறவேண்டும். உக்தி நிஷ்டை த்வயோச்சாரண ப்ரதாநமென்று கீழே சொல்லப்பட்டதாகக் கொண்டாலும் காயிக ப்ரதாநமான ப்ரபத்தியை சொல்லாமையால் அது இல்லையென்று ஏற்படுகிறது. ஆசார்ய நிஷ்டை சொல்லப்பட்டதே; அதே அதென்னில், அது பரஸமர்பண பூர்வகமாக ஆசார்யன் செய்யும் ப்ரணிபாத

பூர்த்தியிலே தாத்பர்யமாகக் கடவது.

---

மன்றே. ஆசார்யன் செய்யும் பரஸமர்பணத்திற்கு முன்னுக சிஷ்யனுக்குள்ள வ்யாபாரமல்லவோ ப்ரக்ருத ஆசார்யநிஷ்டை அது ப்ரணிபாதமும் ஆகலாம். வாசிகாதிவ்யாபாரமுமாகலாம். சிஷ்ய வ்யாபார மூலகமாக ஆசார்யன் செய்யும் ப்ரபத்தியே ஆசார்ய நிஷ்டை என்ற நிஷ்கர்ஷத்தில் அது மாநஸ வ்யாபாரமுமாகலாம்; காயிகமென்று கட்டுப்படுத்த இடமில்லை. பரத்வாஜ ஸம்ஹிதா வாக்யங்களுக்கு இரண்டுவிதமாகப் பொருள் கூறலாமென்று வேறிடத்தில் விரித்துரைத்திருக்கிறோம். மேலும் பரீவாஹமான வாசிக காயிகங்களே இங்கு விவக்ஷிக்கப்பட்டிருப்பதால் பரஸமர்பணபரமந்த்ரோச்சாரணமாகாது இது. மந்த்ரோச்சாரணம் பரீவாஹமாகாதே த்வயோச்சாரண பூர்வகமாக மாநஸ ப்ரபத்தி செய்கிறவர்களுக்கும் அவசாத் பரீவாஹமாகச் சில வாக்யங்கள் வரும். அவை எவை யென்னில், ஆநுகூல்ய ஸங்கல்பாதி அங்காங்கிகளை மனத்தினுல் அநுஷ்டிக்கும்படி தெரிவிக்கும் வாக்யராசியே அதுபோல் காயிக வ்யாபாரமும் மாநஸப்ரபத்தி அநுஷ்டிக்கிற காலத்தில் தண்ட ப்ரணுமாதிகள் ஸாத்யமாகாவிட்டாலும் அஞ்ஜலி दैन्यव्यञ्जकनकरणवृत्ति · हस्ताभिनयाविரூபமாய் பரீவாஹமாய் வருவது ஸஹஜம். த்யாநயோகரூப பக்தியோகம் உபாயமாயிருக்க ஸ்துதி-நாமஸங்கீர்த்தந-ப்ரணுமாதிகள்ான பாஹ்ய வ்யாபாரங்களும் வேதார்த்த ஸங்க்ரஹாதிகளில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ज्ञानान्मोक्षः என்கிற ப்ரமாணத்திற்கிணங்க இவை பரீவாஹமாம்படியான த்யாநமே உபாயமாகக் கொள்ளவேண்டும். சிலருக்கு முடிவான ஸமயத்தில் இப்பக்வாஹம் வரமாட்டாதபடியாகி த்யாநமே நிற்கும். ஆக ஸர்வஸாதாரணமாக ஜ்ஞாநமே உபாயம். அது போல் இங்குமாம். ஆக மாநஸம், வாக்வ்யாபார விசிஷ்ட மாநஸம், காயிகவ்யாபார விசிஷ்டமாநஸம், வாக்காய உபய வ்யாபார விசிஷ்ட மாநஸம் என்கிற நான்கிலும் மாநஸாம்சமே ப்ரதாநமாகும். ஓரொன்றை முன்னிட்டு என்பது த்ருஷ்டாந்தம் தார்ஷ்டாந்திகமிரண்டிற்கும் பொதுவானது. பொருளும் ஒரேவிதமாகும். ஒவ்வொரு கரணவ்யாபாரம் முதலில் பொருளாய்த் தோன்றும்படி தத்வாசக சப்தத்தைச் சேர்த்து என்று பொருள். வாசிக காயிக பதங்கள் மாநஸ வ்யாபாரத்திலே முடிவதாலும் வாக்காய வியாபாரங்களை சக்தியால் சொல்லி அது மூலமாக மாநஸத்தைச் சொல்லுகின்றன. இப்படி முதலில் சொல்லப்படுவது என்கிற ப்ராதாந்யமே தவிர ஃபலத்திற்கு அந்தந்த வியாபாரமே ப்ரதானமாகிறதென்கிற ப்ராதான்யமில்லை. இப்படி மூன்றும் தனித்தனி உபாயமானல் மூன்று சேர்ந்தபோதே பூர்ணப்ரபத்தி. நமஸ்காரமும் மூன்றும் சேர்ந்தால் தானே பூர்ணமாகும் என்று ஆப்தர்கள் சொன்னது சேருமோ என்ன. அருளினுர் இவை இத்யாதி இங்கே ஜ்ஞாநகர்மங்கள் ஸமுச்சிதமாக உபாயமாகுமென்கிற கருத்தல்ல, உபாயமான மாநஸ ப்ரபத்தியானது பரீவாஹமான வாக்காய

यथाधिकारम् இவையெல்லாம் फलप्रदங்களென்னுமிடம் முன்பே சொன்னோம்.

---

வ்யாபாரங்கள் சேராமலிருந்தால் ஏககரண வ்யாபாரமானபடியாலே அபூர்ணமென்றும், சேர்ந்தபோது பூர்ணமென்றும் ப்ரசம்ஸையாகச் சொல்வது. பரீவாஹமென்பதற்கு மநோவ்யாபாரம் விஞ்சியிருக்கை பொருளாகையால் தனி மநோவ்யாபாரத்தைவிட அதைப் பூர்த்தி யென்னலாமே. இப்படி ஜ்ஞாந கர்மஸமஸமுச்சயத்தையும் ஸஹியாத ஆசார்யர்களுக்கு உக்தி நிஷ்டையில் ஜ்ஞாநத்தோடு ஸமப்ராதாந்யமோ ஜ்ஞாநத்தைவிட உக்திக்கு ப்ராதாந்யமோ அபிமதமாக மாட்டாது. அப்ரதாநமான உக்திக்கு வாசகமான உக்தி என்ற பதத்தைக் கொண்டு உக்தியை முதலில் தோன்றச் செய்து அதுமூலமாக ஜ்ஞாநத்தை யறிவிப்பதால் இப்படி ப்ரதமப்ரதீதத்வமென்கிற ப்ராதாந்யமே யுள்ளதென்க. இப்படி வாசிக வ்யாபார விசிஷ்டமும் காயிகவ்யாபார விசிஷ்டமும் உபாயமாக விதிக்கப்பட்டால் மாநஸத்தை விதிக்குமிடத்திலும் छागपशु ந்யாயத்தாலே இந்த விசிஷ்டமே உபாயமாகலாமாகையாலே ஸாமாந்யமாநஸம் உபாயமாகுமோ. பரீவாஹமானது விதிக்கப்பட்ட கார்யத்தில் சேராதாகையால் அந்த வ்யாபார விசிஷ்ட மாநஸத்வேந காரணத்வம் சொல்லுவதில்லை; பரீவாஹம் அங்க கோடியிலும் சேராது; பொதுவாக அதிகப்படியாய் ஒருவித பகவத் ப்ரீதிக்கு மட்டும் காரணமாயிருக்கலாம் ஆகையால் ஸாமாந்ய விசேஷ ந்யாயமில்லை யெனில்—மாநஸம் மட்டுமிருக்கும் போது அத்தால் விஷயங்கள் விசதமாக க்ரஹிக்கப்படும். மாநஸ ப்ரபத்தி ஸாங்கமாக முடிந்த பிறகு வாசிக காயிகங்கள் பரீவாஹமாக நேருமானால் மாநஸ ப்ரபத்தி வைசத்யத்திற்குக் குறையில்லை. அவ்வாறின்றி ஸாங்காநுஷ்டாநம் செய்யும்போதே அங்காங்கி விஷய வாக்யங்கள் அப்யஸிக்கப்பட்டவை நினைவுற்றுப் பரீவாஹமாக வருமாகில் இடையிடையே இவ்வாக்யோச்சாரணத்தில் மனம் ப்ரவர்த்திக்கையால் உள்ளே வரும் ஜ்ஞாநதாரையில் வைசத்யம் குறையாகவிருக்கும். அதனால் விசதமாநஸமே ச்ரேஷ்டம்; அவிசதமாக்கப்பட்ட வாசிகமும்காயிகமும் அதைவிடசிறந்ததன்றென்னில். அப்போது இவை உபாயமாகமாட்டா என்ன அருளிச்செய்கிறார் यथाधिकारमिति.ஸப்தவிதஸ்நாந விதிபோலே மாநஸவாசிககாயிக ப்ரபத்தி விதியிருப்பதால் அவற்றில் எது முக்யமோ அது சக்தாதிகாரமென்றும் அமுக்யத்தை அசக்தாதிகாரமென்றும் கொள்ளுவோம். ஈச்வர நித்ய முக்த யோகிகள் போல் ஜ்ஞாநசக்தி அதிகம் பெற்றவர்களுக்கு ஒன்றினால் மற்றொன்றின் வைசத்யத்திற்குத் தடையிராது. மற்றவருக்கு அவைசத்யமிருந்தாலும் द्वे शरणमन्नारं என்கிற வசனப்படி அசக்தவ்யாபாரமும் பலனளிப்பதே. கீழே பரீவாஹப்ரஸ்தாவமில்லாமல் ப்ரபத்தி உக்தி என்கிற ப்ரஸ்தாவத்தில் சக்தாசக்த அதிகாரி பேதத்தைச் சொன்னது இதற்கும் சொன்னதேயாகும். உக்தி நிஷ்டையில் ஸமுதாய ஜ்ஞாநமென்பது ஸுநிச்சிதமாகையால் அதை ப்ரதாநமாக

நின்றநிலைக்குற நிற்கும் கருமமும் நேர்மதியால்–
நன்றெனநாடியஞானமும் நல்குமுட்கண்ணுடையார்
ஒன்றியபத்தியுமொன்றுமிலாவிரைவார்க்கருளால்
அன்றுபயன்றருமாறுமறிந்தவர் அந்தணரே. (16)

---

எடுத்துச் சொன்னோம். வாசிககாயிக பரீவாஹஸ்தலத்தில் மாநஸ வைச த்யம் சிலருக்கு இருக்கலாம் சிலருக்கு இல்லாமலுமிருக்கலாம். அதனால் அங்கு அதைச் சொல்லவில்லை. ஆனாலும் ஸமாந ந்யாயமிருப்பதால் சொன்னதாகவே கொள்ளவேண்டும். பரத்வாஜ ஸம்ஹிதையில் சிஷ்ய னுக்கு வாசிகமந்த்ரோச்சாரணத்தையும் காயிகப்ரணாமத்தையும் ஆசார்யன் செய்வித்து அந்த அதிகாரிவிஷயத்திலே ஆசார்யன் செய்யும் ஆசார்ய நிஷ்டையை வாசிகமென்றும் காயிகமென்றும் சொல்வதுண்டு. அப்போது கீழ் ஆசார்ய நிஷ்டா ப்ரஸ்தாவத்தாலேயே வாசிககாயிகங்களும் சொல்லப் பட்டனவாம். ஆனால் அந்த வாசிக காயிகவ்யாபாரங்கள் ப்ரபத்யநு ஷ்டாநத்திற்கு முன்னே நடக்கிறபடியால் பரீவாஹமாகமாட்டா. எல்லாம் மாநஸ ப்ரதாநமாய் ப்ரபத்தி பேதமில்லை யென்றாலும் ப்ரபத்தி ஒன்று விசத ஜ்ஞாநரூபம், ஒன்று அவிசத ஜ்ஞாநரூபம் என்கிற பேதமிருப்பதால் இந்த உபாயவிபாகமுமுண்டு.

இவ்வளவால் இந்த அதிகாரத்தில் சொன்னதாவது—ஈச்வரன் ஒருவனே உபாயம். கர்மயோகாதிகள் விவேகிக்கு உபாயமாகா, அனுஷ் டிக்கத்தகா என்பது தவறு, ஸாத்யோபாயமில்லாத போது ஸித்தோ பாயத்திற்கு உபாயத்வமே ஸித்திக்காது. ஆகையால் ஸித்தோபாயம் ஸாத்யோபாயம் என்கிற விபாகம் கொள்ளவேண்டும். ஆனாலும் கர்மயோக ஜ்ஞாநயோகங்கள் போல ப்ரபத்தியும் அப்ரதாநமாகி பக்தியோகம் ஒன்றே உபாயமென்பதுமில்லை. அதுபோல் அகிஞ்சநனுக்கு ப்ரபத்தியும் உபாய மாகையால் நேரான ஸாத்யோபாயங்கள் இரண்டு; கர்மஜ்ஞாநயோகங்கள் மோக்ஷத்திற்குப் பரம்பரையாகவே உபாயமென்று விபாகரீதி யென்பதாம். இவ்வம்சத்தைப் பாட்டில் சுருக்கி யருளிச்செய்கிறார் நின்ற இத்யாதி. நின்ற நிலைக்கு–முமுக்ஷுவாய் உபாயத்திலிழிய வேண்டுமென்று உறுதியுட னிருக்கும் தன்து முதல் நிலைக்கு, உற—ஸம்பந்தப்பட்டு நிற்கும் இருக்கின்ற, கர்மமும்—கர்மயோகத்தையும்; உம்மைக்கெல்லாம் அறிந்தவர் என்பதில் அந்வயம். நேர்மதியால்—கர்மயோகானுஷ்டாநத்தினால் ஸ்த்திரமாய் நிற்கும் ஸூக்ஷ்ம புத்தியைப் பெற்றதாலே நன்று என—இனி தனக்கு ஜ்ஞாந யோகமே நல்லதாகுமென்று. நாடிய—கொண்ட. ஜ்ஞாநமும்—ஜ்ஞாந யோகத்தையும், நல்கும்=அதிகாரத்திற்குத் தக்கப்படி அந்த இரு யோகங் களாலே விரும்பப்பட்ட. உள்கண்—உள்ளிருக்கும் ஜீவாத்ம விஷயமான ஸாக்ஷாத்காரத்தை, உடையார்—அடைந்தவர்கள், ஒன்றிய—அந்த ஆத்ம ஸாக்ஷாத்காரம் பூர்ணபுருஷார்த்தமாகாதென்று தெளிந்து பரமாத்மாவைப்

कर्म ज्ञानमुपासनं च शरणव्रज्येति चावस्थितान्
सन्मार्गान् अपवर्गसाधनविधौ सद्वारकाद्वारकान् ।
एकद्व्याकृतियोगसंभृतपृथग्भावानुभावान् इमान्
सम्यक् प्रेक्ष्य शरण्यसारथिगिरामन्ते रमन्ते बुधाः ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे उपायविभागाधिकारो नवमः 9.
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

—०—●—

---

பற்றி நின்ற, பத்தியும் பக்தியோகத்தையும், ஒன்றும்இலா—கீழ்ச்சொன்ன உபாயங்களுக்கு அநர்ஹராய். அகிஞ்சநரான விரைவார்க்கு. மோக்ஷ பலனை மிகவிரைவில் பெற விருப்பமுள்ளவர்களுக்கு. அருளால்—உபாயத்தை எதிர்பாராமல் கருணையினாலேயே அன்று—இவன் அபேக்ஷிக்கும் காலத்திலேயே பயன் தரும் ஆறு உம்—பகவான் மோக்ஷத்தை யளிக்கின்ற வகையையும்-ப்ரபத்தியையுமென்றபடி. அறிந்தவர்-அறிகின்றவர்கள் 'கர்ம யோக ஜ்ஞாநயோகங்கள் உட்கண்ணுக்காக, பக்திப்ரபத்திகள் மோக்ஷத்திற்காக' என்று விவேகித்தவர்கள். அந்தணர்—ப்ரஹ்மவித்துக்களாவர்.

நாலையுமறிந்தவர் அந்தணர் என்றார். அவ்வாறு அறிந்து பக்தியில் சக்தியிருந்தாலும் விளம்பம் ஸஹிக்காமல் விரைந்து ப்ரபத்தியிலிழிவது என்கிற அறிவு சிறந்ததென்கிறார் ச்லோகத்தினாலே कर्मेति। अपवर्गसाधनविधौ—மோக்ஷத்தை ஸாதிப்பதில் सद्वारक अद्वारकान्—இடையில் வேறு உபாயத்தைக் கொண்டதும் கொள்ளாததுமாய் இருவகையான; கர்மயோகமென்றும் ஜ்ஞாந யோகமென்றும் உபாஸநமென்றும் சரணாகதியென்றும் अवस्थितान्—இருக்கின்ற सन्मार्गान् ஸத்துக்களே யநுஷ்டிக்கவேண்டிய; एकेत्यादि, एक आकृति பரம்பராஸாதநத்வமோ ஸாக்ஷாத்ஸாதநத்வமோ ஏதேனும் ஒரு ஆகாரத்தினுடையவும் द्वि आकृति—ஸாக்ஷாத்தும் பரம்பரையுமான இரண்டு ஆகாரத்தினுடையவும்; அது போல் ஸஞ்சித கர்மமாத்ர நாசகத்வமான ஓர் ஆகாரத்தினுடையவும் द्वि आकृति ஸஞ்சித நாசகத்வ ப்ராரப்தநாசகத்வரூபமான இரண்டு ஆகாரத்தினுடையவும் योग—சேர்க்கையினாலே संभृत- ஸம்பாதிக்கப்பட்ட पृथग्भाव—வாசியையும். अनुभाव மஹிமையையுமுடைய इमान्—இந்த நான்கு உபாயங்களை सम्यक् प्रेक्ष्य—நன்றாக ஆராய்ந்து शरण्य-அகிஞ்சநரையும் காக்கும் குணவிசேஷமுள்ள सारथि-பார்த்த ஸாரதியினுடைய गिराम्-ஸூக்திகளான கீதைகளில்-अन्ते-சரமமான ச்லோகத்தில் बुधाः-வித்வான்கள் रमन्ते-ஈடுபடுகின்றனர். நாலு உபாயங்களில் கர்மயோக ஜ்ஞாநயோகங்கள் நேராக மோக்ஷஸாதநமல்லவாகையால் பரதந்த்ரங்களே; ஆனாலும் அவையில்லாமல் பக்தியோகத்திற்குச் செல்ல முடியதாகையால் அதற்குத் தனியான மஹிமையுண்டு. அவற்றுள் கர்மயோகம் ஆத்மாவலோகநத்திற்கு ஸத்வாரகமுமாகும்

கொண்டு "अलमेषा परित्रातुं राक्षस्यो महतो भयात्" என்று திருவடி अनुवदिக்கையாலும், பெருமாள் ஒருத்தனை निग्रहिக்கப்பார்க்கிலும் அவர்சீற்றத்தையாற்றி இவள் ரக்ஷிக்க வல்லவளாகையாலே रक्षिष्यतीति विश्वासம் சொல்லப்பட்டது.

"अभियाचाम वैदेहीमेतद्धि मम रोचते", "भर्त्सितामपि याचध्वं राक्षस्यः किं विवक्षया" என்கையாலே गोप्तृत्ववरणம் சொல்லிற்றாயிற்று.

இவ் வைந்துக்கும் अङ्गियான आत्मनिक्षेपம், "प्रणिपातप्रसन्ना हि मैथिली जनकात्मजा"

---

சொன்னாள். அவள் சொல்லும் போது மரத்தின்மேல் உட்கார்ந்து கேட்டிருந்த ஹநுமான் திரும்பி அக்கரையில் எல்லா வரலாற்றையும் வாநரர்களுக்குச் சொல்லும் போது 58.82—த்ரிஜடையின் பேச்சை யநுவாதம் செய்யுமிடத்தில் அவள் சொன்னதாக இதையும் சொன்னார். இதை விடாமல் அநுவாதம் செய்ததாலே ராமன் தவிர வேறு கதியில்லை யென் பார்க்கும் ஸீதை கதியென்பது திடமாகிறது. திருவடி=சிறிய திருவடி என்று சொல்லப்படும் ஹநுமார். த்ரிஜடை சொன்னபோது ஸீதை ரக்ஷிப்பாளென்கிற விச்வாஸம் ராக்ஷஸிகளுக்குண்டாயிற்று. அவ் வாக்யத்தாலும் அநுவாதத்தாலும் रक्षिष्यति इति विश्वासः, (அ-ஸ்) என்று சொல்லப்பட்ட விச்வாஸம் நமக்கு அறியலாயிற்று. இவ்வளவு அபயப்ரதாநம் பண்ணும் ராமனைத் தடுப்பது எப்படி யென்னில்—அதை யறிவிக்கிறார் பெருமாள் இத்யாதியால். அவன் நிக்ரஹிப்பது சீற்றத்தினால்; இவளுடைய இங்கிதங்களை பார்க்கும் போதே அதற்கு மாறாகச் செய்யமாட்டாதவனும்போது சீற்றம் ஒழிகிறது, இவளை யாச்ரயித்திருக்கிறார்களென்றறிந்தாலும் சீற்றம் போம். ஒருக்கால் சீற்றம் ப்ரபலமாக வுண்டானாலும் இவளுடைய இனிமையான சொற்கள் அதை யாற்றுமென்க. விச்வாஸம் சொல்லப்பட்டது=வால்மீகியால் நமக்கு அறிவிக்கப்பட்டது. ஆகையால் நிக்ரஹிக்க ப்ரஸக்தியில்லை யென்றபடி. अभियाचामेति—याचध्वं என்ற சொற்களால் கோப்த்ருத்வ வரணம் சொல்லப்பட்டது. वैदेहीं—ஸீதாதேவியை अभियाचाम—ரக்ஷிக்க வேண்டுமென்று ப்ரார்த்திப்போம். एतत् हि—இந்த கோப்த்ருத்வ வரணமன்றோ मम—எனக்கு रोचते—இஷ்டமாகிறது. இவ்வளவு அபராதம் செய்திருக்கும் போது அவள் காப்பாளோ என்னில், भर्त्सितामपि—உங்களால் பயமுறுத்தப் பட்டவளையும் याचध्वं-வேண்டுங்கள். நீங்கள் ஏதோ சொல்ல விரும்பியிருப்பதாலே किं-என்னவாகும் இப்படி இவளை ப்ரார்த்தனை செய்தால் இது தெரிந்து ராவணாதிகள் நம்மை நலிந்தால் என்ன செய்வதென்று நீங்கள் சொல்ல விரும்புகிறீர்கள்போலும். அது வேண்டா என்றபடி, சொல்லிற்றாயிற்று= சொன்னதாயிற்று என்றபடி. அங்கியும் சொல்லப்பட்டதென்று எங்ஙனே யறியலாமென்ன அங்கியை யறிவிக்கும் வசனத்தையும் காட்டுகிறார் प्रणिपा-तेति (ஸு 27-57) காகாஸுரன் செய்தது வெறும் நிபாதம். இவள் செய்யச் சொல்வது ப்ரணிபாதம். மாநஸ நமஸ்காரம் உங்களிடமிருப்பதை ஸீதா தேவி யறிவது நீங்கள் செய்யும் காயிக நமஸ்காரத்தால். ஜநகரின் புதல்வி

என்று **प्रसादकारणविशेष**த்தைச் சொல்லுகிற **प्रणिपातशब्द**த்தாலே **विवक्षित**மாயிற்று. ஆகையால் "**न्यासः पञ्चाङ्गसंयुतः**" என்கிற **शास्त्रार्थ**ம் இங்கே **पूर्ण**ம்.

இப்படி உபதேசிக்க ராக்ஷஸிகள் விலக்காதமட்டே பற்றாசாகப் பிராட்டி தன் **वात्सल्यातिशय**த்தாலே "**भवेयं शरणं हि वः**" என்று அருளிச்செய்தாள்.

---

யாகையாலே தர்மநெறி தவறுமையில் அதிக ஊக்கம் **வைத்திருப்பவ**ளென்றதாம். ஐந்து அங்கங்களோடு சேர்த்துச் சொல்லப்பட்ட இந்த நமஸ்காரம் ப்ரபத்தியே. **சாஸ்த்ரார்த்தம்**, லக்ஷ்மீதந்த்ரமென்ற பகவச்சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட அர்த்தம். இப்படி இவ்வளவு உபதேசித்தாலும் ராக்ஷஸிகளோ த்ரிஜடையோ ப்ரபத்தி செய்ததாகத் தெரியவில்லையே. அப்படியிருக்கப் பிராட்டி **भवेयं शरणं हि वः** என்று அபயப்ரதாநம் செய்தது எப்படி யென்னில் அருளிச்செய்கிறார் இப்படி இதி. **விலக்காதமட்டே**—தாங்கள் ஸம்மதிக்கவில்லை யென்று ராக்ஷஸிகள் சொல்லி விலக்கவில்லை; அவ்விலக்காமையை மாத்திரமே யென்றபடி. **பற்றாசாக**=பிடிப்பாக—**வாத்ஸல்யாதிசயத்தாலே**— உபாயாநுஷ்டாநத்தைக் கண்டு பெறும் வாத்ஸல்யத்திற்கு மேம்பட்டு, அஜ்ஞாத நிக்ரஹையான தம் ஸ்வபாவத்திற்குரியதான, அவர்களிடமுள்ள குற்றத்திலே நோக்கு வைக்காதபடிக்கான அன்பினாலே யென்றபடி. **भवेयमिति**, முமுக்ஷுலோகமாவது—**ततस्सा ह्रीमती बाला भर्तुर्विजयहर्षिता। अवोचत् 'यदि तत् तथ्यं भवेयं शरणं हि वः'॥'** என்றதாம் (ரா. ஸு 58–90.) இந்த ச்லோகம் த்ரிஜடையின் வார்த்தைக்குப்பிறகு 27.ம் ஸர்கத்திலிருப்பதில் விவாதமிருந்தாலும் பின்னே ஹனுமான்வார்த்தையில் இருப்பது திண்ணம். **ततः**—த்ரிஜடை சொன்ன பிறகு **बाला** என்ன வரப்போகிறதென்றதை யறியாதிருந்தும் **सा**-அப்பிராட்டி, **ह्रीमती** துரவஸ்த்தையிலிருக்கும் போதே சொல்லுகிறோமே, பரிஹஸிப்பார்களோ என்று வெட்கம் மிக்க விருந்தும், **भर्तुः**—பர்த்தாவான ராமனின் **विजयहर्षिता**—வெற்றி வருவதற்கு மகிழ்ச்சியுற்று **अवोचत्**—தமக்குள்ள வெட்கத்தையுமறிவிக்கும் **ரீதியில்** பேசினாள். என்னவெனில்—**तत्**—த்ரிஜடை சொல்லுவது **तथ्यं यदि**—உண்மையாகில் **वः**—உங்களுக்கு **शरणं**—உபாயமாக **भवेयं हि**—ஆவது நிச்சயமே என்றவாறு. இது விலக்காமையை சரணாகதியாகக் கொண்டு அபயப்ரதாநமுமாகலாம், சரணாகதி செய்வதற்கு அவர்கள் விச்வாஸத்துடன் இழியும்படி ப்ரோத்ஸாஹப்படுத்துவதுமாகலாம். அதற்கு இவளுடைய வாத்ஸல்யமும் அவர்கள் விலக்காமையும் காரணமாகிறது. த்ரிஜடை செய்த சரணாகதிக்குப்பின் சொன்னதுமாகலாம். ச்லோகத்தில் **ततः**—என்பதற்குத் தகுந்தபடி அர்த்தம் கொள்ளலாம், ஸ்வப்ந வ்ருத்தாந்தத்தைக் கேட்க்கத் தொடங்கும் போதே அரக்கிகளுக்கு அச்சமிருப்பது சொல்லப்பட்டிருப்பதால் அச்சமே பற்றாசாகவிருக்கலாமாகிலும் அவர்களுடைய அச்சமென்கிற மநோபாவத்தைவிட விலக்காமை யென்பது விஸ்பஷ்டமாக அறியக்கூடியதாயிருப்பதால் இதைச் சொன்னது, த்ரிஜடையின்

இப் பாசுரம் सहृदयமாய் फलपर्यन्तமான படியை,

**मातर्मैथिलि राक्षसीस्त्वयि तथैवार्द्रापराधास्त्वया रक्षन्त्या पवनात्मजाल्लघुतरा रामस्य गोष्ठी कृता**
என்று अभियुक्तர் வெளியிட்டார்கள். இவ்விடத்தில் த்ரிஜடையுடைய आत्मात्मीय भरसमर्पणத்திலே அவளுக்குப் பிறவித்துவக்காலே, நம்மவர்களென்று

---

செயலே பற்றுசாகவென்னலாமாகிலும் ஆசார்ய நிஷ்டையிலும் சிஷ்யரிடத்தில் விலக்காமை யென்கிற குணம் வேண்டுமென்று அறிவிப்பதற்காக இவ்வாறு அருளியது, அபாயம் இவர்களுக்கு நேருமென்று ஸ்வப்நமூலமாக அறிந்து த்ரிஜடை சொன்னாளே, அப்படி நேர்ந்ததா? பிராட்டி உபாயமாக ஆனதுண்டோவென்ன, அதை பட்டருடையஸ்ரீஸூக்திமூலமாகஅறிவிக்கிறார். ஸ்ரீஸூக்தியில் पापानां वा शुभानां वा என்கிற பிராட்டியின் பாசுரம் கருதப் படும். ஸஹ்ருதயமாய் = மேலுக்குச் சொன்னதாகாமல் மநப்பூர்வமாய். फलपर्यन्तமிதி. இதனால் இவளிடம் செய்தது புருஷகார ப்ரபத்தியன்று. ஸாக்ஷாத் ப்ரபத்தியே யென்று அறிவித்ததாம். मातरिति. मातः—தாயே! मैथिलि—ஸீதாதேவியே! त्वयि—உன்னிடத்தில் तथैव-முன்போலவே சரணாகதிக்குப் பின்னும் அல்லது அவர்கள் செய்யும் அபராதத்திற்கு வேறு த்ருஷ்டாந்தம் சொல்லவாகாதவாறு आर्द्र—अपराधाः—அப்போதுமுள்ள அபராதத்தையுடைய राक्षसीः—அரக்கிகளை पवनात्मजात्—வாயுபுத்ரனை ஹனுமானிடத்தினின்று रक्षन्त्या—காத்த त्वया-உன்னால், शरणमिति उक्तिक्षमौ—சரணமாக வேண்டுமென்று தாமே சொல்லுவதற்குத் தக்க நிலையிலிருந்த काक காகாஸுரனையும், तं-அந்த மஹாதார்மிகனை विभीषणं च—விபீஷணனையும் रक्षतः-காத்த रामस्य-ஸ்ரீராமபிரானுடைய गोष्ठी-திருவோலக்கமானது लघुतरा कृता—மிகச்சிறியதாக்கப்பட்டது. விபீஷணன் அபராதமே செய்யாதவன். நேராக சரணாகதியும் செய்தவன், காகாஸுரன் பிறகு குற்றம் செய்வதை விட்டவன். काकः—என்று கத்தியதாலே का என்று ஸ்த்ரீ லிங்கமாய் कः-புல் லிங்கமாய்எந்த ஸ்த்ரீயும் புருஷனும் என்னைக்காப்பர் என்று சொல்லி விழுந்தவனாகிறான்—இந்த அரக்கிகளோ நீண்டகாலம் அபராதம் செய்துகொண்டேயிருப்பவர்கள். இவர்களைக் காத்ததாலே க்ஷமையென்கிற குணம் உன்னிடமே பொருந்தி யிருப்பதால் आर्द्र-அபராதர்களான எங்களுக்கு நீயே துணை. உன் திருவோலக்கமே நாங்கள் எல்லோரும் சேர்வதால் பெரிதாகும். விலக்காத மட்டே யென்றதால் சரணாகதி செய்யவில்லை யென்று தெரிகிறதே; சரணாகதி செய்வது உசிதமென்று இவள் சொன்னபடியாலே சரணாகதிக்கு ஐந்து அங்கங்கள் உண்டென்று நாம் தெளியலாமாகிலும் ஸீதை காத்தது சரணாகதியைக் கொண்டா அல்லது தானே இஷ்டப்பட்டா என்ன, ராக்ஷஸிகள் செய்தது விலக்காமை மட்டுமே, ஆனால் இவர்களுக்கும் சேர்த்து சரணாகதி செய்தவள் த்ரிஜடை யென்கிறார் இவ்விடத்தில் இதி. இதற்கு வசநமுண்டோ வென்னில் प्रणिपातप्रसन्ना हि என்று பரந்யாஸத்தாலேயே ப்ரஸந்நையாவாள் என்று அவளே சொல்லியிருப்பதால்

கண்ணோட்டம் பிறக்கும் ராக்ஷஸிகளும் अन्तर्भूतைகள்.

அப்படியே ஸ்ரீ வீபீஷணாழ்வானோடு கூடவந்த நாலு ராக்ஷஸரும் அவருடைய உபாயத்திலே अन्तर्भूतர். அங்குற்ற अभयप्रदानप्रकरणத்திலும் இவ் अनुसन्धानம் அடைக்கலாம் எங்ஙனேயென்னில்; प्रातिकूल्यத்திலே व्यवस्थितனான ராவணனுக்குங்கூட "प्रदीयतां दाशरथाय मैथिली",

---

கார்யாத் காரணாநுமாநம். அதில் இவள் சொன்ன உபதேச மாத்ரத்தைக் கொண்டு அரக்கிகள் தாங்களே ப்ரபத்தி செய்துகொள்ளும்படி தெளிவு பெறவாகாதாகையாலே இவர்களுக்குமாக த்ரிஜடையே செய்திருக்க வேண்டு மென்றபடி. செய்வதற்குக் காரணம் அருளுகிறார் நம்மவர்கள் என்று. கண்ணோட்டம் பிறக்கும் = கடாக்ஷம் பெற ஆஸ்பதமான. நம்மவர்களென்று நினைப்பதற்குக் காரணம் பிறவீத்துவக்கு. ஒரு ராக்ஷஸகுலத்திலே இவளுக்கும் அவர்களுக்கும் பிறவி என்கிற ஸம்பந்தம். ஆத்மாத்மீய பர ஸமர்பணத்திலே = தன்னுடையவும் தன்னைச் சார்ந்தவர்களுடையவும் பரத்தை ந்யாஸம் செய்கையென்கிற க்ரியையிலே; அந்தர்பூதைகள்—ஆத்மீயர்களாக அவளால் கொள்ளப்பட்டு அடங்கியவர்கள். த்ரிஜடையின் உபதேசத்திலே அவள் ராக்ஷஸிகளுக்கு அங்கங்களையும் प्रणिपातप्रसन्ना என்று பர ந்யாஸத்தையும் உபதேசித்திருப்பதால் அவர்களுக்கு உபாயஸம்பந்தத்தை அவள்விரும்பியது ஸ்பஷ்டமாயிருப்பதால் தான்பண்ணின சரணாகதியில்அவர்களைச் சேர்த்துக் கொண்டாளென்பது ப்ரகரணத்தில் அறியப்பட்டதேயாம்.

விபீஷணன் பண்ணின சரணாகதியில், கூடவந்த நான்கு ராக்ஷஸர்களையும் சேர்த்திருப்பதற்கு அங்கு गमकம் ஒன்றுமில்லை. அவரோடு அவர்கள் வந்தது மட்டுமே சொல்லப்பட்டிருக்கிறது. विभीषणमुपस्थितम्, अनुजो रावणस्याहम् என்று தம்மை மட்டுமே சொல்லிக்கொள்ளுகிறார். அதனால் அவர்களை ரக்ஷித்தது வேறேதேனும் ஸம்பந்தத்தாலாகுமென்று நினைக்க வேண்டா. மஹாதார்மிகரான விபீஷணர் கூடவந்தவர்களை விட்டுத் தமக்குமட்டும் ரக்ஷணம் கேட்கமாட்டார். ப்ரபத்தியும் आत्मात्मीय भरन्यासो हि आत्मनिक्षेप उच्यते என்று स्वभरन्यासத்தோடு स्वकीयभरन्यासம் சேர்ந்ததாயிருக்குமென்று தெரிவதால் गद्यத்தில் பாஷ்யகாரர் அருளிச்செய்த मां என்கிற சொல்லுக்கு ததீயர்களோடு சேர்த்துப் பொருள் கொள்வதுபோல் இங்கும் கொள்வதே ச்லாக்யமாகும். இல்லையேல் சரணாகதியில் ஸம்பந்தப்படாத அவர்களைத் தனியே விசாரிக்காமற் சேர்த்துக்கொள்வதற்கு ஸுக்ரீவாதிகளிசையாரென்ற கருத்தினாலே யருளிச்செய்கிறார் அப்படியே இதி அவருடைய உபாயத்தில் அவர் அநுஷ்டித்த சரணாகதியில். அபயப்ரதாந ப்ரகரணமென்று விபீஷண வ்ருத்தாந்தம் சொல்லுவதாய் सकृदेव प्रपन्नाय என்கிற ச்லோகமடங்கிய பாகத்திற்குப் பெயர். ப்ராதிகூல்யத்திலே வ்யவஸ்த்திதனான = ப்ராதிகூல்யத்தை விட்டு விலகாதிருக்க ஆக்ரஹமுள்ள. வ்யவஸ்த்திதனான என்ற பாடமே உரைகளில் காண்கிறது. வ்யவஸிதனான என்ற பாடமாகில் ப்ராதி

"सीतां च रामाय निवेद्य देवीं वसेम राजन्निह वीतशोकाः" என்று ஹிதம் சொல்லு கையாலே आनुकूल्यसङ्कल्पம் தோற்றிற்று. இந்த ஹிதவசநம் पित्तोपहत னுக்குப் பால் கைக்குமா போலே அவனுக்கு द्वेषहेतுவாயிற்று. "त्वां तु धिक् कुलपांसनम्" என்று धिक्कारம் பண்ணினபின்பு, 'இனி இவனுக்கு உப

---

கூல்யத்திலே வ்யவஸாயமுள்ளவனென்று பொருளாகும். அப்போது, இன்னும் ப்ராதிகூல்யம் செய்யவில்லையோ வென்றும் தோன்றும். ஆகையால் இதுவே சிறந்தது. दाशरथाय मैथिली என்று இரண்டு பேருக்கும் பிறவியில் மேன்மை சொல்லப்படுகிறது. दाशरथये என்றிருந்தால் தசரதருக்கு ஔரஸ புத்ரன் என்ற பொருளாகும். பகவான் அவதரிப்பவர்; எல்லோருக்கும் பிதாவானவர் உண்மையில் புத்ரனாகமாட்டார். ஆகையால் ஏதோ ஒரு ஸம்பந்தமே தசரதருக்குமிவருக்குமென்றும், மிதிலாநகரத்தில் பூமியில் அவ தரித்தபடியால் मैथिली என்றும் அவதார மஹிமை யறிவித்ததாகுமே. அதனால் ராமனை வெல்லவாகாது, ஸீதையையும் வசப்படுத்தவாகாதென் றறிவித்ததாம். இப்படி இவர் சொல்லவே, ஸபையைக் கலைத்துவிட்டு மறுநாள் ஸபை கூடுவதாக வைத்துக் கலைந்த பிறகு மறுநாள் உதயத்தில் ஸபைக்குச் செல்வதற்கு முன்பாக அதிகக்கூட்டமில்லாத ஸமயத்தில் விபீஷணன் ராவணனில்லத்திற்குச் சென்று ஸீதை வந்தது முதல் நேர்ந்து வரும் அநர்த்தங்களையும் அறிவித்து வணங்கி வேண்டியும் அவன் பிடிவாத மாயிருப்பதையும் கண்டு வருந்தி, ஸபைக்குச் சென்று பெருந்திரளிலே எல்லோரும் அவனுக்கநுகூலமாயிருப்பதையும் இந்த்ரஜித்தினுடைய அஹங் காரத்தையும் கண்டு வெறுத்துத் தீரமாக விசேஷ ஹிதோபதேசம் செய்து முடிவில் சொன்ன வார்த்தை 'धनानि रत्नानि विभूषणानि वासांसि दिव्यानि मणींश्च चित्रान् । सीतां च रामाय निवेद्य देवीं वसेम राजन् इह वीतशोकाः॥' என்று. முன்னே ஸீதையைமட்டும் ஸமர்ப்பித்தால் போதுமென்றேன். நீங்கள் இப்போது செய்யும் தீவ்ரமான குற்றத்துக்குப் பரிஹாரமாக धन.ரத்ந.திவ்யமணி வஸ்த்ர பூஷணாதிகளோடு ஸீதையை ராமனிடம் ஸமர்பித்தாலல்லது சோக மின்றி ஸுகமாய் வாழமுடியாது, ஆகையால் அப்படி நாம் ஸமர்ப்பிக்க வேண்டுமென்றார். இங்கே நிவேதநமாவது ஸமர்ப்பணமென்று ஸ்பஷ்டம். இவ்வளவு சேர்ந்துவாழ விரும்பி யிருந்தவர் ஏன் விட்டுப்புறப்பட்டா ரென்ன, காரணமருளிச் செய்கிறார் இந்த இத்யாதி. பித்தோபஹதன்— பித்தரோகத்தால் பீடிக்கப்பட்டவன். இங்கே பித்தஸ்தாநத்திலே உள்ளது காமமும் கர்வமும். உத்வேகமாவது — தன்னுடைய பெருமையைப் பொறுக்காமல் அஸூயையினால்இப்படி பேசுகிறானென்ற விபரீத புத்தியினால் அவனை விட்டொழித்தாலல்லது தனக்கு நன்மையில்லை யென்று ஒழிப்பதில் உண்டான த்வரை. त्वां இதி. 'अन्यस्तु एवंविधं ब्रूयात् वाक्यमेतन्निशाचर। अस्मिन् मुहूर्ते न भवेत् त्वां तु धिक् कुलपांसनम्॥ நீ சொன்ன பேச்சை வேறொரு வன் சொல்லியிருந்தால் இந்த க்ஷணமே அவன் ஒழிந்திருப்பான்; இப்படி

தேசிக்கவும் ஆகாது; இவனோடு अनुबन्धित्த विभूतिகளுமாகாது; இவன் இருந்தவிடத்தில் இருக்கவுமாகாது' என்று அறுதியிட்டு, 'त्यक्त्वा पुत्रांश्च दारांश्च' "परित्यक्ता मया लङ्का मित्राणि च धनानि च" என்கிற ஸ்வவாக்யத்தின்படியே அங்குத் துவக்கற்றுப் போ(ரு)கையாலே प्रातिकूल्यवर्जनाभिसन्धि தோன்றிற்று.

"रावणो नाम दुर्वृत्तः" என்று தொடங்கி सर्वजित्தான ராவணனோட்டை விரோதத்தாலே தாம் போக்கற்று நிற்கிறநிலையைச் சொல்லுகையாலும், பின்பும் "अनुजो रावणस्याहं तेन चास्म्यवमानितः । भवन्तं सर्वभूतानां शरण्यं शरणं गतः ॥"

---

குலத்திற்கு அழுக்குக்குக் காரணமாயிருக்கிற உன் விஷயத்திலே திக்காரம் மட்டும்செய்து நிற்கிறேனென்றான். त्यजेदेकं कुलस्यार्थे என்கிற கணக்கில் விபீஷணனையொழிக்க வேண்டுமென்று அவனுக்குக் கருத்து. இனி இவனிடமிருந்தால் ராமனுக்கு ஆநுகூல்யம் செய்யவாகாது; இவன் செய்யும் ப்ரதிகூலத்திற்குத் துணையாகத் தானிருக்க வேண்டும்; இவனைத் திருத்தமுடியாதென்று தெளிவான பிறகு நம்மையாவது நாம் காத்துக் கொள்வது நல்லதென்ற வெளியேற முடிவு செய்தார். இதனின்று ப்ராதிகூல்யவர்ஜநமென்கிற ப்ரபத்யங்கம் தெளிவாவதை வசனத்துடன் விரித்துரைக்கிறார். त्यक्त्वा என்கிற ச்லோகம் வாநரர்களோடு விபீஷணன் சொல்வதிலிருப்பது. परित्यक्ता என்பது சேர்ந்த பிறகு ஸ்ரீராமனிடம் சொல்வது. அங்கே भवद्गतं मे राज्यञ्च जीवितं च सुखानि च என்று உத்தரார்த்தம். என்னுடைய ராஜ்யம் உம்மைச் சேர்ந்தது என்கிறார். லங்கை இவருடைய ராஜ்யமா? இனி எனக்கு ராஜ்யம் உமக்கு அதீநமென்று தமக்கு ராஜ்யம் அவர் அளிக்க வேண்டுமென்று ஸ்பஷ்டமாய்ப் பரபரப்புடன் கேட்கிறாரென்பதும் ஸ்வரஸமன்று. ராஜ்யத்திற்காக அவர் வரவில்லை; தர்மத்தில் மதியோடுதானென்பது ஸித்தாந்தம். ஆகையால் அரசனாகாமல் இதுவரையில் செய்தது போல் உமது ராஜ்யத்தில் ராஜக்ருத்யம் உமக்கடிமையாகச் செய்வேன் என்கிறாரென்னலாம். இதனாலும் ஆநுகூல்ய ஸங்கல்பமும் தெரியும்.

கார்ப்பண்யத்தைக் குறிக்குமிடத்தைக் கூறுகிறார். रावणो नाम दुर्वृत्तो राक्षसो राक्षसेश्वरः । तस्याहं अनुजो भ्राता विभीषण इति श्रुतः ॥ रावयति इति रावणः என்கிற பேரிலிருந்தே அவன் நடத்தை தெரிகிறது. राक्षसेश्वरः—எந்த ராக்ஷஸனும் இவனளவுக்கு அக்ரமம் செய்யமுடியாது. ராக்ஷஸ ஜாதி ஈச்வரனாயிருக்கத் தகாது. என்பதை ராக்ஷஸ: என்று குறிக்கிறார். ஸர்வஜித்தான இதி. மேலே ராமனிடம் ராக்ஷஸ बलाबलத்தைச் சொல்லும் போது விபீஷணனே ராவண பராக்ரமத்தை விரிவாகச் சொல்லப்போகிறார். இவன் மகன் இந்த்ரஜித்து. இவன் ஸர்வஜித்து. ராவணனோட்டை—ராவணனோடு. ராவணனை ஜயிப்பவரை யாச்ரயித்தாலல்லது வேறு கதியில்லை. ஏன் அவனோடு விரோதம் செய்து கொண்டீரென்பதற்கு உத்தரம் अनुज இத்யாதி, அவனுக்குப் பின்னே பிறந்தவன். ஆனால் அவனுக்கு அநுகூலமாகப் பிறக்கவில்லை. தண்டகாரண்யத்தில் கரன் (खरन्) ப்ராதா இருந்

என்கையாலும் **कार्पण्यम्** சொல்லப்பட்டது.

அஞ்சாதே வந்து கிட்டி **"सर्वलोकशरण्याय राघवाय महात्मने"** என்று சொல்லும்படி பண்ணின மஹாவிச்வாஸம் **"विभीषणो महाप्राज्ञः"** என்று **कारणमुख**த்தாலே சொல்லப்பட்டது. **प्राज्ञ**தையை விசேஷிக்கிற **महच्छब्द**த்தாலே

---

தனன். அவன் ஸோதரனாய்ப் பிறந்தவனில்லை. நான் அவமதிக்கப்பட்ட தம்பி **विभीषणः**—பயப்படுத்தும் செயலில்லாதவன். அவனுக்குத் தம்பியான படியால் அவனுக்கநுகூலமாகவே நடக்க வேண்டுமென்கிறான். பரமாபத்திலும் தர்மத்தை விடாமலிருக்க நினைப்பவன் நான் தர்மாநுகூலமாக நான் சொல்வதே விரோதம் செய்ததாக அவனால் நினைக்கப்பட்டது, எல்லோராலும் மதிக்கப்பட்டிருந்த என்னை அவமானப்படுத்திவிட்டான். ஆகையால் ராக்ஷஸேச்வரனை-ராக்ஷஸர்களைத் தன்னிஷ்டப்படியாள்கின்றவனை விட்டு ராக்ஷஸர்கள் உள்பட ஸர்வ ப்ராணிசரண்யரான உம்மை **त्वां विना गतिर्नास्ति** என்று சரணமடைந்தேன் என்றார். **कार्पण्य**மாவது ஆகிஞ்சந்யாநுஸந்தாநம்.

மஹாவிச்வாஸத்தைக் கார்யமுகத்தாலும் காரணமுகத்தாலும் அறிவிக்கிறார் அஞ்சாதே யென்று. ஸாதாரண வாநரத்தைக் கண்டாலே அஞ்சுவர். லங்காதஹநவாநரத்துக்கீடான எண்ணற்ற வாநரங்களைப் படையாக்கிப் பகைவரைப் பரிபவிக்க வந்திருக்குமிடத்திலே வரத் துணிவது ச்ரமம். அங்கே வந்தார். **आजगाम मुहूर्तेन** என்றபடி தன்னிடத்துக்குத் தான் வருவதாகத் துணிந்து வந்தார். வானத்தில் ஸஞ்சரித்து அதற்கு வல்லரான வாநரர்களின் திரளைக் கிட்டி நின்றதும் துணிவினால். அவர்கள் மரங்களைப் பிடுங்கியடிக்க ஸுக்ரீவாஜ்ஞையை எதிர்பார்த்திருக்கும்போது, 'நீங்கள் செய்யத்தக்கது இதன்று; சரணாகதனாய் வந்தவனை ராமனிடம் ஸமர்ப்பிப்பது ராமபரிஜநத்தின் லக்ஷணம். அவன் ஸர்வலோக சரண்யனான பரமாத்மா. ரகுவம்சத்தில் அவதரித்ததும் ஸர்வலோக சரண்யத்வத்தை ஸ்தாபிக்கவே. குஹன் பரதன் ரிஷிகள் சபரீ ஸுக்ரீவன் போன்றாருக்குப் போல் எங்களுக்கும் சரண்யனாகக் கூடியவன். அதற்கு வேண்டும் ஸர்வ ஸம்ருத்தியுடையவனாகையாலே மஹாத்மா. **'निवेदयत मां क्षिप्रं विभीषणमुपस्थितम्'** என்னை சீக்கிரம் ஸமர்ப்பியுங்கோள். என்னைப் பின் தொடர்ந்து வந்து சில அரக்கர்கள் பலாத்காரமாக லங்கைக்கு இழுத்துச்சென்றால் சரணாகதரைக் கைவிட்டாரென்று அபவாதம் நேர்ந்துவிடும். நான் வராமற் போனாலும் ஹநுமார் என்னை யறிந்தவராகையாலே ஏதேனுமொரு வாநரம் என்னிடம் பேச வரக்கூடுமோ என்று எதிர்பார்த்தேன்; அது இல்லையாகையாலும் ராமகைங்கர்யம் செய்யவேண்டுமென்றும் **उपस्थितम्**—உபஸ்திதனானேன்—நெருங்கிவிட்டேன் என்றார். இதெல்லாம் மஹாவிச்வாஸமில்லாதபோது செய்யவாகாது. இவ்வளவு விச்வாஸம் இவருக்கு எப்படி வந்ததென்ன, காரணத்தை யறிவிக்கிறார் **महाप्राज्ञः** என்று. ரிஷிகளில்கூட இவ்வளவு ப்ராஜ்ஞா கிடைப்பது அரிது. **ज्ञः**—அறிவுள்ளவன்; விசேஷ அறிவுள்ள

विश्वासातिशयந்தானே विवक्षितமாகவுமாம்,

"राघवं शरणं गतः" என்கையாலே उपायवरणान्तर्नीतமான गोप्तृत्ववरणம்

---

वन् प्रज्ञன். அந்த அறிவு மாறாமலிருந்ததால் प्रज्ञ एव प्राज्ञः. அந்த ப்ராஜ்ஞதைக்கு महत्त्वம் விசேஷணம். மற்றவருடைய ப்ராஜ்ஞதையைவிட பெரிதானது என்றதாம். இந்த மஹாப்ராஜ்ஞதையால் ஏற்பட்டது மஹாவிச்வாஸமென்றபடி. இனி ப்ராஜ்ஞ: என்கிற பதமே பூர்ண ப்ரஜ்ஞதையைச் சொல்லுகிறபடியால் மஹத் என்கிற விசேஷணம், 'மஹாவிச்வாஸ யுக்தமாகி மஹத்தானது' என்று மஹாவிச்வாஸச் சேர்த்தியையே அறிவிக்கிறதென்று வேறு யோஜனையைத் தெரிவிக்கிறார் ப்ராஜ்ஞதையை இத்யாதியால். மஹாகாருணிக:—பரமோதார: இத்யாதி சப்தங்கள் போல மஹாப்ராஜ்ஞசப்தமும் புருஷனுக்கு மஹத்வம் சொல்லுகிறதல்ல. ப்ராஜ்ஞதையென்ற தர்மத்துக்கு மஹத்வத்தைச் சொல்லுகிறது.

गोप्तृத்வவரணத்தைக் குறிக்கும் சொல்லைச் சொல்லுகிறார் राघवम् இதி. உபாயவரண அந்தர்நீதமான இதி. உபாயவரணமாவது நீ எனக்கு உபாயமாக வேணுமென்று வரித்தல். இந்த உபாயத்வ வரணமும் அநுஷ்டேயமான அங்கமானால், 'உபாயவரணம் சொல்லிற்று' என்றே சொல்லலாம். அவ்வாறு கூறாமல் அங்கமான गोप्तृत्व வரணம் ச்லோகத்தில் உபாயவரணத்தைச் சொல்லும் சொல்லில் அடக்கப்பட்டிருக்கிறதென்றதாலே உபாயவரணம் அநுஷ்டேயாங்கமன்று; ஆனால் அதைச் சொன்னது பரஸமர்ப்பணத்தை வ்யஞ்ஜிப்பிப்பதற்காக என்று இந்த வாக்ய ஸ்வாரஸ்யத்தால் ஏற்படுகிறது. மற்ற விரிவு இவ்வதிகாரத்தின் முடிவில் த்வயத்தில் ஸமந்வய ப்ரகரணத்திலும், த்வயாதிகாரத்திலுமாம். உபாயத்வவரணம் 'சரணம் கத:' என்பதின் பொருள். त्वमेव उपायभूतो मे भवेति प्रार्थना मतिः। शरणागतिरित्युक्ता' என்று உபாயத்வ ப்ரார்த்தனையை சரணாகதி சப்தார்த்தமாகச் சொல்லியிருப்பதால் गोप्த்ருத்வவரணத்தை சரணாகதி சப்தார்த்தமாகக் கொள்ளலாகாது. 'உபாயத்வமென்றாலும் गोप्तृत्वமென்றாலும் ஒன்றுதானே; ஈச்வரனிடத்தில் गोप्तृத்வம் தவிர வேறு உபாயத்வம் என்ன உண்டு என்னில், சரணசப்தத்திற்கு ரக்ஷகன் என்ற பொருளை விட்டு உபாயமென்கிற பொருளைக் கொள்ளவேண்டுமென்று 'उपाये गृहरक्षित्रोः शब्दः शरण-मित्ययम्। वर्तते साम्प्रतं त्वेष उपायार्थैकवाचकः' என்ற வாக்யத்தால் அறிவிக்கப்பட்டது. ஆகையால் उपायत्वप्रार्थना என்கிறவிடத்திலும் இந்த உபாயத்வத்தைக் கொள்ளவேண்டும். அந்த உபாயமாவது ஸாத்யோபாயமான பக்த்யாதியான गुरुभूत கார்யம். त्वमेव என்கிற ஏவகாரத்தால் நீ தவிர வேறு உபாயமில்லை யென்றதால் ரக்ஷகனான நீயே ஸாத்யோபாயமாகவும் ஆகவேணுமென்றதாயிற்று. ஸித்தோபாயத்தைவிட ஸாத்யோபாயம் வேறானபடியாலே ஸாத்யோபாய மாகவேண்டுமென்றால்—ஸாத்யோபாய ஸ்தானத்தில் நிற்க வேணும்; ஸாத்யோபாய கார்யகாரி யாகவேணும்

சொல்லிற்ருயிற்று, उपायवरणशब्दத்தாலே व्यञ्जितமாகிறவளவன்றிக்கே, "निवेदयत मां क्षिप्रं विभीषणमुपस्थितम्" என்கையாலே घटकपुरस्सरமான आत्मनिक्षेपம் சொல்

---

ஸாத்யோபாயத்தை யபேக்ஷிக்காமலே ஸாத்யோபாய கார்யமான ரக்ஷையைச் செய்யவேணுமென்றதாம். நிரபேக்ஷ ரக்ஷகனுகவேணுமென்றதாயிற்று. இந்த நிரபேக்ஷ ரக்ஷகத்வ ப்ரார்த்தனையில் ரக்ஷகத்வ ப்ரார்த்தனையென்கிற கோப்த்ருத்வ வரணம் அடங்கியதே. ச்லோகத்தில் प्रार्थना मतिः என்று மதி சப்தமிருப்பதால் ஜ்ஞாநரூபமான ப்ரார்த்தனையே உபாயத்வ ப்ரார்த்தநை, உபாயத்வாபேக்ஷை; சரணம் கத: என்றவிடத்தில் கதிசப்தம் ஜ்ஞாநார்த்தகமாகையாலே ஜ்ஞாநரூப ப்ரார்த்தனையே சரணுகதி யென்றதாகிறது. அநுஷ்டாந காலத்தில் நீ உபாயமாக வேணுமென்ற வாசகசப்த ப்ரயோகமிராமற் போனுலும் சரணுகதி செய்கிறவனுக்கு, 'பகவான் என்னிடத்தில் ஸாத்யோபாயத்தை யபேக்ஷிக்காமலிருக்க வேணும்' என்கிற எண்ணம் நியதமாகவிருப்பதால் மதிரூப சரணுகதிசப்தவாச்யார்தத்திற்கு லோபமில்லை. இதில் गोப்த்ருத்வ வரணம் அந்தர்கதமென்றதாலே அதுவும் ரக்ஷகத்வாபேக்ஷை யென்கிற எண்ணமாகும். ப்ரமாணவாக்யங்களிலும் ஸம்ப்ரதாய ஸ்ரீஸூக்திகளிலும் வடமொழியிலும் தென்மொழியிலும் எங்கும் உபாயத்வ வரணத்தைச் சொல்லாமல் गोப்த்ருத்வ வரணத்தையே அங்கமாக வரைந்திருப்பதால் அநுஷ்டிக்க வேண்டிய அங்கம் அதுவேயாகும். அதனுல் தான் த்ரிஜடாசரணுகதியில் अभियाचाम என்றது போல் இங்கே गोப்த்ருத்வ வரணத்தைச் சொல்லும் சொல் இல்லையே என்கிற ஆசங்கையில் கோப்த்ருத்வ வரணமும் உபாயத்வ வரணமும் ஒன்றுதான் என்று சொல்லாமல் சரணுகதி சப்தார்த்தமாகச் சொன்ன உபாயத்வ வரணத்தில் அங்கமாகச் செய்யவேண்டிய गोப்த்ருத்வ வரணம் அடங்கியுள்ளதென்ருர். அநுஷ்டிக்க வேண்டியதல்லாத உபாயத்வ வரணத்தைச் சொன்னது பரந்யாஸத்தைக் குறிப்பதற்காகவே. இதே இங்கு வ்யஞ்ஜிதமாகிற என்ற சொல்லால் உரைக்கப்பெற்றது. எப்படி வ்யஞ்ஜிதமாகுமென்னில்—உபாயத்வ ப்ரார்த்தனையாவது உபாயாந்தரஸ்த்தாநநிவேசப்ரார்த்தனை—உபாயாந்தர ஸ்த்தாநநிவேசத்திற்கு பரந்யாஸமே காரணம். காரணமின்றி கார்யம் வாராதாகையால் அதைச் செய்வது இதனுல் குறிக்கப்பெற்றதாம். அதனுல் இவர் பரந்யாஸம் செய்தது சரணம் கத: என்றதாலேயே அறிவிக்கப்பெற்றதாயிற்று.

இச்சொல்லுக்கு இவ்வளவு கருத்துள்ளதென்பது निवेदयत என்ற சொல்லாலும் அறிவிக்கப்படுகிறதென்கிருர். घटकपुरस्सरமான இதி. विघटகர்களான வாநரர்களை அவ்வாறு பாவிக்காமல் பகவானுக்கு அந்தரங்கரென்று மதிப்பு வைத்து ஸமர்ப்பிக்க அவர்களை வேண்டுகிருர். ஒரு ப்ரபத்தியை இவரும் இத்தனை வாநரர்களும் சேர்ந்து ஸமர்பித்துச் செய்யவேண்டுமோ என்னில், 'நான் செய்த ஸமர்ப்பணம் கபடமான ஸமர்ப்பணமென்று உங்கள் மனதில் பட்டிருந்தால் உங்களில் யாராவது உண்மையான ஸமர்ப்பணம் செய்து

விற்று. இப்ரகரணத்திலே निवेदनशब्दம் विज्ञापनमात्रपरமானுல் निष्प्रयोजनம்.

இப்படி மற்றுமுள்ள प्रपत्तिप्रकरणங்களிலும் लौकिकद्रव्यनिक्षेपங்களிலும் संक्षेप-विस्तरप्रक्रियையாலே இவ்வர்த்தங்கள் காணலாம். தான் ரக்ஷிக்க மாட்டாததொரு வஸ்துவை ரக்ஷிக்கவல்லனொருவன் பக்கலிலே ஸமர்ப்பிக்கும்போது தான் அவன் திறத்தில் अनुकूलाभिसन्धिயை யுடையனுய், प्रति-कूलाभिसन्धिயைத் தவிர்ந்து, 'இவன் ரக்ஷிக்க வல்லன்; அபேக்ஷித்தால் ரக்ஷிப்பதும் செய்யும்' என்று தேறி, தான் ரக்ஷித்துக் கொள்ளமாட்டா

---

என்னைக் காக்கவேணும். இது அந்தரங்க லக்ஷணமென்று கருத்தாம். விஜ்ஞாபநமாத்ரபரமானுல் என்கிற மாத்ரபதத்தால் ஸமர்ப்பணத்தில் விஜ்ஞாபநமும் அடங்கியிருக்கிறதென்றதாம். निष्प्रयोजनमिति. ஒரு திருவோலக்கத்தில் ராமனுள்பட எல்லோரும் சேர்ந்திருப்பதால் இவரும் 'स्वरेण महता महान्', 'प्रणादश्च महानेष:' என்றபடி ஆர்த்தியால் உச்ச ஸ்வரத்தில் பேசுகிறபடியால் இவர்கள் விஜ்ஞாபிக்காமலே ராமனுக்கும் இது திருச்செவியில் பட்டதே யாகுமென்று கருத்து. ஆனுலும் சொல் நிஷ்ப்ரயோஜநமாகிறதென்பதற்காக அதற்கில்லாத பொருளை அதில் ஏறிட முடியுமா வென்னில், नैवेद्यनिवेदनादिகளிலும் स्वयमात्मनिवेदनम् இத்யாதிகளிலும் ஸமர்ப்பணபரமாக ப்ரஸித்தமான நிவேதநசப்தம் இங்கும் முன்னே விபீஷண வாக்யத்தில் धनानि இத்யாதி ச்லோகத்தில் सीतां च रामाय निवेद्य देवीम् என்று ஸமர்ப்பண பரமாகச்சொல்லப்பட்டிருப்பதால் இந்த விபீஷணவாக்யத்திலும் இதேஉசிதமென்று கருத்து.

ஸ்ரீமத்ராமாயணத்தில் இவ்விரண்டிடங்களில் பரிகரங்களெல்லாம் காணவானுலும் மற்றவிடங்களில் இவைகளெல்லாமிருப்பதாகத் தெரியாமையால் அவரவர்கள் சக்த்யநுஸாரமாக यथासंभवம் இசையலாம்; அவச்யமென்பதில்லை என்னுமைக்கு இப்படி இத்யாதி. எங்குமநுஷ்டிக்க வேண்டியது ஒரேவிதமானுலும் நடந்ததைச் சொல்லுவதும் எங்கும் விரிவாக இருக்கவேண்டுமென்பதில்லை. ஸமயாநுஸாரமாகப் பேச்சில் ஸங்க்ஷேபமும் விஸ்தரமுமுண்டு. லோகத்தில் ஒருவன் ஒரு வஸ்துவை மற்றொருவனிடம் பாதுகாப்புக்காக வைக்கும்போதுகூட இவையெல்லாம் காணலாயிருப்பதால், இவையெல்லாம் நாம் காண்கிறமுறையிலேயே அங்கமாயிருப்பதாலும், 'प्रपत्तिं तां प्रयुञ्जीत स्वाङ्गैः पञ्चभिरावृताम्' என்கிற விதியுமிருப்பதாலும் மஹாஃபலமாய் ஏகரூபமாயுமிருக்கிற மோக்ஷத்திற்கான ப்ரபத்தியில் யதேச்சமான ஏற்றக்குறைவை இசைவது தகாதென்றபடி. மற்றுமுள்ள என்பதற்கு ராமாயணத்திலுள்ள தேவசரணுகதி கட்டம் முதலானவையும் வேறு க்ரந்தங்களிலுள்ள த்ரௌபதீ சரணுகத்யாதி வாக்யங்களும் க்ரஹிக்கப்படும். லௌகிகமான த்ரவ்யநிக்ஷேபம் धनधान्य பூஷணுதி விஷயம். அவன் திறத்தில்—ரக்ஷிக்கிறவனிடத்தில். அநுகூல அபிஸந்தி. இங்கே ஸங்கல்ப்பம் விதிக்கப்பட்டிருக்கிறது. அங்கு அவ் விதி யிராவிடினும் இவனுக்கு இந்த எண்ண

மையை யறிவித்து, நீ ரக்ஷிக்க வேணுமென்று அபேக்ஷித்து, ரக்ஷ்ய வஸ்துவை அவன்பக்கலிலே ஸமர்ப்பித்துத் தான் निर्भरனாய் भयங்கெட்டு மார்பிலே கைவைத்துக்கொண்டு கிடந்து உறங்கக்காணநின்றோமிறே,

இக்கட்டளையெல்லாம் क्रियमाणार्थप्रकाशकமான द्वयमन्त्रத்திலே अनुसन्धिக்கும்படி எங்ஙனே யென்னில்—

सार्वज्ञ्यसर्वशक्तियुक्तனாய், कर्मानुरूपफलप्रदனாய், सर्वोपकारनिरपेक्षனாய், क्षुद्रदेवதை

---

யிருக்க வேண்டுமென்றபடி ரக்ஷிப்பதும் செய்யும் இதி. வல்லனாயிருக்கிறானென்றது மட்டுமல்ல; நன்மனமுடையனாகையாலே விடாமல் ரக்ஷண கார்யமும் செய்வானென்றபடி—தேறி—என்று மஹா விச்வாஸமும், அறிவித்து என்று கார்ப்பண்யமும், அபேக்ஷித்து என்று கோப்த்ருத்வ வரணமும், ஸமர்ப்பித்து என்று பரந்யாஸமும் சொல்லப்பட்டன. இது மோக்ஷார்த்த மன்றாகையால் ஸ்வரூப ஸமர்ப்பண-ஃபலஸமர்ப்பணங்கள் இல்லை; விதி இராத போதும் ஸ்வபாவத்தில் இவையெல்லாம் சேர்ந்துவருவதால் இவ்வாறு அநுஷ்டிக்காத போது பூர்த்தி யில்லையென்று தெரிகிறது. பயங்கெட்டு—இந்த வஸ்துவை ரக்ஷிக்கமாட்டாமல் இழப்போமோவென்ற அச்சமில்லாமல்; மார்பிலே கைவைத்து—த்ரவ்யரக்ஷணபாரம் தனதாக நினைப்பவன் படுக்கையிலும் உறக்கமில்லாமல் த்ரவ்யத்திலே கைவைத்தவண்ணமிருப்பான். பிறரிடம் தன் பரத்தை ஒப்பித்த பிறகு கை மார்பில் வைக்கப்படுகிறது. ஆத்மா அங்கிருப்பதால் அது நிர்ப்பயமாயிருப்பதைத் தொட்டுப் பார்ப்பது போலும்

ஒவ்வொரு அதிகாரத்திலும் சொன்ன ப்ரமேயங்களை அங்கங்கே ரஹஸ்ய த்ரயத்திலும் அடக்கிக் காட்டுவது வழக்கமாகையால் அதுபோல் இங்கும் பரிகரங்களை—,முக்யமாக த்வயமந்த்ரம் அநுஷ்டிக்க வேண்டிய அர்த்தங்களை ப்ரகாசப்படுத்த வேண்டுமாகையால், இதில் விஸ்தரேண நிரூபிக்கிறார். இக்கட்டளை இதி—கட்டளை வ்யவஸ்த்தை. அவச்யமான இவை யென்றபடி. क्रियमाणार्थेति. अनुष्ठेयार्थप्रकाशकत्वம் கரணமந்த்ரலக்ஷணம். த்வயம் ப்ரபத்திக்குக் கரணமந்த்ரம்; செய்யப்படுமதில் முதலங்கங்களான ஆநுகூல்ய ஸங்கல்ப ப்ராதிகூல்யவர்ஜநங்களை ஸ்ரீமந்நாராயண என்கிற முதற்பதங்களிலே அநுஸந்திக்க வேண்டுமென்கிறார் ஸார்வஜ்ஞ்யேதி. ஸ்ரீமந்நாராயண என்ற சொற்களில் ஸ்ரீபதம் புருஷகாரமான பிராட்டியின் பெருமையையும் மற்ற அம்சம் அவளோடு சேர்ந்து உபாயமாகிற எம்பெருமானின் பெருமையையும் அறிவிப்பனவாம். அதனால் அவன் உபாயமாக மாட்டானோ என்று வரும் சங்கை தவிர்க்கப்படும். இங்கே, பலவித சங்கைகளையும் அவற்றின் நிவ்ருத்திக்குக் காரணங்களையும் காண்பிக்கிறார். இந்த சங்கைகளாவன—: பாபிகளான நமக்கு அவன் நெருங்கும்படியாகான். 1 அதற்குக் காரணம் அவன் ஸர்வஜ்ஞனாய் நம் பாபங்களெல்லா மறிந்தவனாய் சிக்ஷிக்க சக்தனாயுமிருக்கை, அவனை யடைவதற்கு விரோதியான பாபங்கள் அநந்தங்

களைப்போலே क्षिप्रकारियன் றிக்கேயிருப்பானாய், 5. समाधिक दरिद्रனான सर्वेश्वरன் 1 अनन्तापराधங்களையுடையார்க்கு अभिगम्यனாகையும் 2 प्राप्तिविरोधियான अनन्तापराधங் களையுடையார்க்கு அளவில்லாத फलத்தைத் தருகையும், 3 अल्पव्यापारத்துக்குத் தருகையும், 4 தாழாதே தருகையும், 5 தரம் பாராதே தருகையும் கூடுமோவென் கிற சங்கைகளுக்கு निवर्तकங்களுமாய், यथासम्भवம் उपायत्वप्राप्यत्वोपयुक्तங்களுமா யிருந்துள்ள पुरुषकार-सम्बन्ध-गुण-व्यापार-प्रयोजनविशेषங்களாகிற சேஷியினுடைய

---

ளாயிருப்பதால் ப்ரதிபந்தகமுள்ளதனால் மோக்ஷபலனைத் தரமாட்டான். அது அளவில்லாத பலமாகையால் பின்னே இந்த அபராதங்களை யநுபவிக்க அவகாசமில்லையே. 2. பாபங்களிருந்தாலும் உபேக்ஷிக்கலாகாதோ என் னில் உபேக்ஷியாமைக்குக் காரணம் கூறுகிறார் கர்மாநுரூபபலப்ரதனாய் இதி. தனக்கு வைஷம்ய நைர்க்ருண்யங்கள் வாராமைக்காக அவன் கர்ம பலன் கொடுத்தே தீரவேண்டுமே யென்றபடி. அளவில்லாத பலத்தை என்பது—மேலே தருகையும் என்கிற ஒவ்வொரு சொல்லிலும் சேரும். 3. நாம் செய்வது அல்பவ்யாபாரமாகையால் இதற்காகப் பலனை யளிக்கமாட் டான். ஒருக்கால் இதனால் அவனுக்கு ஏதேனும் உபகாரமுண்டாகில் அளிக்கலாமென்று நினைக்கலாம்: அவன் ஸர்வோபகார நிரபேக்ஷனாயிற்றே; பரிபூர்ணனுக்கு நாம் என்ன உபகாரம் செய்யவாகும். 4. இத்துடன், கேட்ட போதே தாழாதே= விளம்பிக்காமலே உடனே தருகிறானென்றது எங்ங னே? 'தேவதாந்தரங்களல்லவோ உடனே பலனளிப்பவை. இது क्षिप्रं हि मानुषे लोके என்று சொல்லப்பட்டது. அளவில்லாத ஜந்மங்களெடுத்து பக்தி பண்ணாலும் பலனளிக்கத் தாமதிக்குமிவன் இதற்கு சீக்கிரம் பலனளி ப்பது எங்ஙனே? 5. இதுபோல் தரம்பாராதே தருகிறானென்கிறீர். தாரதம்யம் பார்க்காதே அந்தணர் அந்தியர் என்ற எல்லோருக்கும்பலனளிப்பதாகச்சொல் வது தகாது. தனக்கு ஒத்தாரும் மிக்காருமில்லாத மஹாபுருஷன் தரத்தில் நோக்குள்ளவன் பிறரைக் கண்ணெடுத்தே பாரானே. இப்பலம் எங்கே யளிப் பது? இவ்வாறு ஐந்துவிதமான காரணத்தைக் கொண்டு ஐந்துவிதமான சங்கை கள். இவற்றைப் போக்கும் ஸ்ரீமந்நாராயண என்றது. இங்கே ஸ்ரீபதமும் நாராயணபதமும் கேவல (रूढि)ரூடியினாலே அவ்விருவரையும் சொல்வ தாகில், ஆநுகூல்ய ஸங்கல்பாதிகளை இச்சொற்களில் கருதப்பெற்றதாகச் சொல்லமுடியாது. ஆகையால் யோகவ்யுத்பத்தியாலே அவ்விருவரிடமிருக் கும் ஆகாரங்களையும் சொன்னால் அந்த ஆகாரங்களை அறிந்த போதே 'அநு கூலனாயிருக்க வேண்டும்; ப்ரதிகூலனாயிருக்கலாகாது' என்று தெளிவுண்டாம். இங்குச் சொல்லும் ஆகாரங்களுக்குள் ஐந்து ஆகாரங்கள். ஐந்து சங்கை களுக்கு நிவர்த்தகமானபடியால் ப்ரதாநங்கள், இந்த ஆகாரங்களில் புருகார வத்வம் என்கிற ஆகாரம் உபாயத்வத்துக்கு உபயுக்தமானது. மற்ற ஆகார ங்கள் உபாயத்வம் ப்ராப்யத்வம் இரண்டுக்கும் உபயோகப்படும். இதனைக் கருதி यथासंभवம் உபயுக்தங்கள் என்று கூறி அந்த ஆகாரங்கள் ஐந்தை

ஆகாரங்களைப் பொதிந்து கொண்டிருக்கிற श्रीमच्छब्दத்திலும் नारायणशब्दத்தி லும் आर्थமாக आनुकूल्यसङ्कल्पமும் प्रातिकूल्यवर्जनமும் अनुसन्धेयமாகக் கடவது இப்படி

---

அவற்றுக்குள்ள விசேஷங்களோடு கூறுகிறுர். அந்த விசேஷங்களைத் தெளிந்து அவற்றோடு சேர்த்து அறிந்தால்தான் சங்கைகள் தீரும், இங்கே பிராட்டி புருஷகாரம். புருஷகாரமென்ற சொல்லுக்கு ஒருவ னுக்கு இஷ்டத்தை நிறைவேற்ற வல்லனுயிருக்குமவன் நெருங்கப்பட மாட்டாமலிருக்கும் போது அவனை இவன் நெருங்க இணங்கும்படி செய் விக்க வல்லனுன சேதநன். பொருள் ஸம்பந்தமாவது ஸ்வாமிதாஸபாவம். குணங்கள் பரத்வ ஸௌலப்ய உபயுக்தங்களானவை. வ்யாபாரமாவது— ஸங்கல்பம். ப்ரயோஜநமாவது—ஃபலப்ராப்தி. இவ்வர்த்தங்கள் மேலே இவ் விசேஷங்கள் இத்யாதி வாக்யங்களிலே முறையே 'புருஷகார விசேஷத் தாலே', 'ஸ்வாமித்வ தாஸத்வ ஸம்பந்த உபாதிகமாய்', 'நிருபாதிக காருண் யாதிகளாலே—ஸஹகார்யந்தா நிரபேக்ஷமான தன் ஸங்கல்ப மாத்ரத் தாலே', 'தன் ப்ரயோஜநமாக' என்ற சொற்களினின்று அறியப்படும். இங்கே पुरुषकारश्च संबन्धश्च गुणश्च व्यापारश्च प्रयोजनं च என்று த்வந்த்வ ஸமாஸம் செய்து இவற்றின் விசேஷங்களென்றதாலே விசேஷபதம் ஒவ்வொன்றிலும் சேரும். புருஷகாராதிகள் ஐந்தும் ஸ்ரீமந்நாராயண என்ற சொல்லில் அடக்கப்பட்டிருக்கின்றன என்பது எவ்வாறெனில்—ஸ்ரீ என்கிற சொல் லால் புருஷகாரமான பிராட்டி சொல்லப்படுகிறுள். ஸ்ரீசப்தயோக வ்யுத்பத்தி கள் த்வயாதிகாரத்திலே குறிக்கப்பெறும். அதனுல் நம்மால் ஆச்ரயிக்கப் பட்டு நாம் சொல்வதைக் கேட்டு எம்பெருமானை யாச்ரயித்து அவனைக் கேட்பித்து நாம் நெருங்கவாகாமைக்குக் காரணமானவற்றைப் போக்கு கிறுளென்ற புருஷகாரத்வம் கிடைக்கும். நார என்று சொல் முதலான வற்றிலிருந்து அவனுக்கும் ஜீவனுக்குமுள்ள ஸம்பந்தம் தெரியவரும். நார சப்தமே அவன் குணங்களைச் சொல்லுகிறபடியால் அவையும் ஸித்திக்கும். நாரமென்கிற ஜீவஸமூஹத்தை அயநமாக ஸ்த்தாநமாக உடையவன், எங்கும் சூழ்ந்து நியமிக்கிறவன் என்றதாலே ஸங்கல்பரூப வயாபாரமும் ஸித்திக் கும், சேஷியாய் நியமிக்கிறுன் என்றதாலே தன் ப்ரயோஜநமாக என்று ஸித்திக்கும். அதுபோல்—நரசப்தத்தாலே ஜீவர்களைச் சொல்லி அவர்கள் செய்யுமவற்றை நாரபதத்தால் கூறி அவற்றுக்கு அயநம் அடைவிக்கிறவன் என்றுல், ஜீவர்களின் ப்ரயோஜநத்தைத் தன் ப்ரயோஜநமாகக் கொண்ட வன் என்று தேறும். உலகில் எத்தனையோ புருஷகாரங்கள் வீணுகின்றன; ஸம்பந்தங்கள் பல இருந்தும் பயன் பெறவாவதில்லை; அது போலில்லை யென்று அறிவிப்பதற்காக இவற்றிற்கு விசேஷங்களைக்கூறுவன. ஸ்ரீமந் நாராயண சப்தங்கள். ஆநுகூல்ய ஸங்கல்ப—ப்ராதிகூல்யவர்ஜநங்களை நேராகச் சொல்லாமற் போனுலும் आर्थமாக அநுஸந்திக்கலாமென்றதைச் சொல்லி எப்படி आर्थமென்பதைக் காட்டுகிறுர் இப்படி யென்கிற வாக்யத்

विशिष्टனை ஸ்வாமியைக் காட்டுகிற சப்தங்கள் औचित्यத்தாலே அவன் திறத்தில் प्राप्तமான अभिमतानुवर्तनसङ्कल्पத்தையும் अनभिमतनिवर्तनத்தையும் प्रकाशिப் பிக்கின்றன. இப் புருஷகாராதிகள் அஞ்சுக்கும் விசேஷங்களாவன—(1) மறுக்க வொண்ணுமையும், (2) ஒழிக்கவொழியாமையும் (3) निरुपाधिकமாகையும், (4) सहकारिயைப் பார்த்திருக்க வேண்டாமையும், (5) தண்ணியரான பிற ருடைய பேறே தன் பேருகையும்.

---

தால். விசிஷ்டனை—கீழ்க்கூறிய ஐந்து ஆகாரங்களோடு சேர்ந்தவனை; அபிமத அநுவர்த்தந ஸங்கல்பமாவது அவன் இஷ்டப்பட்டவற்றை விடாமல் செய்துவர ஸங்கல்பிப்பது. अनभिमतनिवर्तनமாவது—அவன் வேண்டாவென் றதை விலக்கியிருக்கை. முறையே ஐந்து ஆகாரங்களுக்குள்ள விசேஷங் களை வெளியிடுகிறுர் இப்புருஷகாரேதி. மறுக்க வொண்ணுமை யென்பது இப்புருஷகாரத்துக்கு விசேஷம். உலகில் புருஷகாரமாயிருப்பவர் ப்ரபுக் களுக்கு மறுக்கக் கூடியவருமாவர். எம்பெருமானும் வேறு ஒருவரை நாம் புருஷகாரமாகக் கொண்டால் மறுக்கலாம். பிராட்டியைப் புருஷகார மாகக் கொண்டால் மறுக்கவொண்ணுது. அதற்குக் காரணம் வால்ல ப்யாதிசயம் எம்பெருமான், 'இவள் நமக்குத் துல்யமாக ப்ராப்யமும் உபா யமுமாகைக்கான சேஷித்வாதிகளைப் பெற்றிருந்தும் நமக்கும் பெரும்புகழ் அளிப்பதற்காக நமக்கதீநமாகிப் புருஷகாரமாகிருளே என்று அவளிடத்தில் கௌரவமும், 'गुणात् रूपगुणाच्चापि' என்றவாறுன விசேஷங்கள் மூலமாக அநுராகமும் வைத்திருப்பதாம். ஒழிக்க ஒழியாமை யென்பது பகவானிடத்தி லுள்ள ஸ்வாமித்வத்திற்கு விசேஷம். ப்ரஜைகளுக்கு மற்றவரிடமிருக்கும் ஸ்வாமிதாஸபாவம் ஔபாதிகமாகையால் ஸ்த்திரமாகாது. எம்பெருமா ஞேடு இது ஸ்வாபாவிகம், ஒழிக்க முயற்சி கொண்டாலும் ஒழிக்கவாகாது. 'உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது' என்றதே. நிருபாதிகமாகை பகவத்குணங்களுக்கு விசேஷம். மற்றவிடங்களிலுள்ள தயாதிகள் ஸ்வார்த்த மோ, பரார்த்தமோ ஔபாதிகமாகலாம். ஜ்ஞாந சக்த்யாதிகளும் அங்கே ஔபாதிகமாக இருப்பதால் சில ஸமயம் கார்யபங்கம் ஏற்படலாம். இங்கு அவ்வாறு அல்ல. ஸஹகாரியை இத்யாதி வ்யாபாரத்திற்கு விசேஷம். பிறருடைய ஸங்கல்பரூப வ்யாபாரம் ஸஹகாரியான உபகரணங்கள் சேர்ந்தபோதே கார்யகரமாகுமாகையால் கார்யஸித்தி நியதமன்று, ஈச்வரன் ஸங்கல்ப மாத்ரத்தாலே எல்லாம் ஸாதிப்பானுகையால் அது ஸஹகாரி நிரபேக்ஷம். தண்ணியரான இத்யாதி ப்ரயோஜநத்திற்கு விசே ஷம். பகவான் ஸர்வசேஷியானபடியாலே பிறருடைய ரக்ஷணத்தால் அவன் தனக்கே ப்ரயோஜநமென்னலாம். இப்படி ஸ்வப்ரயோஜநமாயிருப்ப தாலே எல்லோரையும் ரக்ஷிப்பான் என்பதில்லை. தண்ணியராய்= அத்யந்த நீசராய் தம்முடைய ஆகிஞ்சந்யத்தை வெளியிடுமவரைக் கண்டால் இரக் கம் மிக்கனுய் அதே வ்யாஜமாகக் கொண்டு பலனளிக்கிறுன். அப்போது

இவ்விசேஷங்கள் அஞ்சாலும் शङ्कापरिहारம் பிறந்தபடிஎங்ஙனேயென்னில்—

(1) सर्वज्ञனாய் सर्वशक्तियாயிருந்தானேயாகிலும் மறுக்கவொண்ணாத पुरुषकारविशेषத்தாலே अन्तःपुरपरिजनविषयத்திற்போலே अभिगन्तव्यताविरोधिகளான அபராதங்களையெல்லாம் க்ஷமித்து இவற்றில் 'अविज्ञाता' என்னும்படி நின்று अभिगन्तव्यனும்,

(2) कर्मानुरूपफलप्रदனேயாகிலும் இப் प्रपत्तिरूपव्याजத்தாலே प्रसन्नனாய்

---

தன் ப்ரயோஜனத்தை மறந்து ஆச்ரிதரின் பேறே தன் பேறு என நினைப்ப தால் தான் பெரும் பேறு பெற்றிருந்தும் ஆச்ரிதர் பெறாத வரையில் தன்னைப் பேறு இழந்தவனாகவே நினைக்கிறானென்றபடி. உலகில் புருஷ காராதிகள் ஐந்துமிருந்தும் பலன் பெறப்படாமலிருப்பதால் இதில் விச்வா ஸம் குன்றுமென்னுமைக்காக எம்பெருமானிடமுள்ள புருஷகாராதிகளுக்கு விசேஷங்களுண்டு என்றார், அவ்விசேஷங்களால் சங்கைகள் தீருமென்ப தை மேலே விளக்குகிறார் இவ்விதி அந்த:புரேதி. அரசர்கள், மற்ற ப்ரஜைகள் நெருங்கவாகாதபடி யிருந்தாலும் அந்தப்புரமெனப்படும் ராணிகளுடைய பரிஜநங்களுக்கு நெருங்கப் பாங்காயிருப்பதைக் காண்கி றோம். இதற்கு ராணியினிடமுள்ள தாக்ஷிண்யமே காரணம். உலகில் சில விடத்தில் அந்த தாக்ஷிண்யம் குறைவாயிருக்கலாம். பிராட்டியிடம் அவ் வாறில்லை. अभिगन्तव्यताविरोधि—உபாயாநுஷ்டாநத்திற்கு நெருங்குவதற்கு விரோதி. க்ஷமித்து = குற்றங்களுக்கு சிக்ஷை செய்ய வேணுமென்கிற அபி ஸந்தியை விட்டு; இவ்வளவே போதுமாயிருக்க. இவற்றில் அவிஜ்ஞாதா என்னும்படி நின்று என்றது எதற்கு என்னில்—புருஷகாரபலத்தாலே க்ஷமித்திருந்தாலும், 'இனி ஜாக்ரதை; ஏதோ இப்போது பொருத்தேன்' என்பானோ என்றஞ்சி நெருங்குகிறவன் தானும் ஒருதரம் க்ஷமை கொள்ள வேண்டா என்று தைர்யமூட்டுவதற்காக. பிராட்டியோடு கலந்து பேசும்போது குற்றங்களைப் பற்றிச் சர்ச்சைசெய்தவன், அவளிடத்தில் தாக்ஷி ண்யத்தாலே எல்லாம் உபேக்ஷித்து, குற்றவாளிக்கு அபிமுகமாய் இவன் செய்த குற்றங்களை மறந்தவன் போலிருக்கிறான். நீயாக மீண்டும் குற்றத்தை நினைப்பூட்ட வேண்டாவென்று உபதேசித்தபடி. அவிஜ்ஞாதா என்றது நாமஸஹஸ்ரத்தில் ஒன்று. குற்றத்தை யறியாதவன் என்பது பொருள். அறிந்தும் இவனுக்குத் தெரியாது என்று பிறர் கூறும்படி நடந்து கொள்கிறானென்றபடி. உண்மையில் அவனிடமுள்ள ஜ்ஞாநத் திற்கு என்று மழிவில்லை.

உபாயவிரோதி நிவ்ருத்தி சொல்லியாயிற்று. ஃபலப்ராப்தியில் இரண்டாவதான சங்கையைத் தீர்ப்பது கர்மேத்யாதி. செய்யும் கர்மத்துக்குத் தக்கவாறுதானே ஃபலன். நித்ய பரிபூர்ண ப்ரஹ்மமாநு பவமாகிற மோக்ஷம் இவ்வுபாயத்திற்கு பலனாகுமாவென்று சங்கிக்க வேண்டா. பூர்ண ப்ரஹ்மாநுபவம் அவனுடைய ஸஹஜகாருண்யத்தாலே

स्वामित्व-दासत्वसम्बन्धोपाधिकமாய் दायம் போலே स्वतःप्राप्तமான அளவில்லாத फलத்தையும் தரும்.

(3) अवाप्तसमस्तकामதையாலே सर्वोपकारनिरपेक्षனேயாகிலும், अल्पव्याजத்தாலே वशीकार्यனை सुजनसार्वभौमனைப் போலே தன் निरुपाधिककारुण्यादिகளாலே இவன் செய்கிற சிலவான व्यापारத்தைத் தனக்குப் परमोपकारமாக ஆதரித்துக் கொண்டு कृतज्ञனாய்க் கார்யம் செய்யும்.

(4) क्षुद्रदेवதைகளைப் போலே क्षिप्रकारि யன்றாகிலும், மற்றுள்ள शास्त्रार्थங்களுக்கு विलम्बित्துப் फलம்கொடுத்தானேயாகிலும், अनन्यशरणனுடைய प्रपत्तिக்கு औदार्यादिगुणसहितமாய் सहकार्यन्तरनिरपेक्षமான தன் सङ्कल्पमात्रத்தாலே फाक-

---

எல்லோருக்கும் தாயப்ராப்தம்; அதற்கு இது உபாயமன்று. அதற்கேற்பட்ட தடையை நீக்குவதற்கே யாமிது. இது ப்ரஸந்நனாய் என்கிற சொல்லால் குறித்ததாம். ப்ரஸாதமாவது நிக்ரஹஸங்கல்ப நிவ்ருத்தி. அதாவது ப்ராப்தி விரோதியான அநாதி புண்யபாப ஸஞ்சயத்தை க்ஷமிக்கை. இந்த ஸர்வபாப நிவ்ருத்தியாகிற மஹாபலத்திற்குத் தக்க உபாயமாகுமோ இப்பிரபத்தி யென்னில்—பிதாவுக்குப் புத்ரனிடம் அவன்பாகத்தைக் கொடுப்பதற்காக அவன் செய்த குற்றத்திற்கு ஏதேனும் சிறிய வ்யாஜத்தைக் கல்பித்துக் கொள்வது அநுபவ ஸித்தமாயிருப்பதால், அதுபோல் இங்கும் கூடுமென்று விதிக்கநுகூலமான தர்க்கத்தைக் கொள்க. மூன்றாவது சங்கைக்குப் பரிஹாரம் அவாப்தேத்யாதி. உபகாரம் வேண்டாதவனுக்கும் அதிக காருண்ய வாத்ஸல்யாதிகளாலே மஹோபகாரமாக நினைக்கும் தன்மை யுண்டு. 'अण्वप्युपहृतं भक्तैः प्रेम्णा भूर्यैव मे भवेत्', पत्रं पुष्पं फलं तोयम्...... अश्नामि प्रयतात्मनः' कथञ्चित् उपकारेण कृतेन एकेन तुष्यति' இத்யாதிகளைக் காண்க. நாலாவதற்காகவாம்? க்ஷுத்ரேத்யாதி—க்ஷுத்ரதேவதைகள் விரைவில் பலனை யளிப்பது தம்மை யாச்ரயித்தவர்கள் தம்மை விட்டுப் போகாமலிருக்க வேண்டும்; தாம் பெருமைப் பெறவேண்டுமென்பதற்காக எம்பெருமான் சீக்கிரம் பலனளிக்காமலிருப்பது தன்னிடம் வரம் பெற்ற தேவதைகளின் கோரிக்கைக்கு விரோதம் வராமலிருக்க வேண்டுமென்ற கருத்தால். அப்படியிருந்தும் பொதுவாக நிஷ்காம கர்மாக்களுக்கும் அவர்களுக்கும் ஸம்பந்தமில்லை யென்று திருநாராயணீயத்தில் அவனே சொல்லியிருப்பதால் அவர்களுக்கு ஸம்பந்தப்படாத கர்மாவில் இவன் விரைவில் பலனளிப்பது அவர்களுக்கு விரோதமாகாது. காம்யங்களிலும் சிற்சில தேசகாலங்களில் உலகில் தத்த்வத்தை வெளியிட வேண்டுமென்று அவர்களைவிட விரைவில் இவன் பலனளிப்பதுமுண்டு. பொதுவாகவே அப்படியிருக்க ப்ரபத்தி விஷயத்தில் இஷ்டமான பலனெல்லாம் விடாமல் அளிப்பதில் அவனுக்கு விசேஷ ஸங்கல்பம். 'ददाम्येतद् व्रतं मम' என்றாரே. சாஸ்த்ரத்தில் விஹிதமான எந்த உபாயத்திற்கும் பலன் பெறுவது எம்பெருமான் ஸங்கல்பத்தாலே யாயிருக்க, இங்கே தனியாக एतत् व्रतं मम என்பது ஏன் எனில்-இதர

விபீஷணாதிகளுக்குப்போலே இவன்கோலின காலத்திலே அபேக்ஷிதம் கொடுக்கும்.

(5) ஸமாதிகதரித்ரனேயாகிலும் ஸ்வாதந்த்ர்யாதிகுணவிசிஷ்டனுயத் தன் ப்ரயோஜனமாக ஆச்ரிதர்க்கு அபேக்ஷிதம் செய்கிருனுகையால், கோஸலஜனபதத்தில் ஜந்துக்களுக்குப் போலே குமாரனேடொக்கத் திர்யக்கான கிளிக்குப் பாலூட்டுங் கணக்கிலே தரம் பாராதே கொடுக்கும்.

---

உபாயங்களுக்கு ஏதேனும் ப்ரதிபந்தகாதிகளை யிட்டுப் பலனளிக்கத் தாமதிக்கலாம், அளிக்காமலுமிருக்கலாம். அவ்வாறின்றி இங்கே கோலின காலத்தில் பல ஸித்தி யென்பதற்காகவாம். காகவிபீஷணேதி. லோக த்ருஷ்டாந்தம் காண்பிக்குமிடத்தில் ப்ரபத்தி ஸம்பந்தியான காகவிபீஷணர்களையே த்ருஷ்டாந்தமாக்கினது இவ்வாக்யத்தில் ப்ரபத்திக்கு என்று கூறியதால், இவர்கள் இதனுல் பலன் பெற்றது லோகப்ரஸித்தமாய் சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டிருப்பதாலென்க. காகாஸுரன் ப்ராணரக்ஷணம் வேண்டினுன். அது கோலின காலத்திலன்றி வேறு ஸமயத்தில் செய்யக் கூடியதன்று. விபீஷணனும் 'भवद्गतं मे राज्यं च जीवितं च' என்று நீர் சேர்த்துக் கொள்ளாமற்போனுல் எனக்கு உயிர் நிற்காது 'अस्मिन् मुहूर्ते न भवेत्' என்று ராவணன் இஷ்டப்பட்டபடி என் உயிருக்கு அபாயம் நேரும் என்றுனுகையால் உடனே ரக்ஷணம் அவச்யமாயிற்று. இவர்களை ப்ராணனேடு விட்டால் பின்னே தனக்கு என்ன தீங்கு வருமோ என்று சங்கிக்க வேண்டிய விஷயத்திலேயே ரக்ஷணம்செய்திருக்கும்போது மோக்ஷார்த்தம் ப்ரபந்நருக்கு ஏன் கோலின காலத்தில் அபேக்ஷிதம் தரமாட்டானென்றபடி. மேலும், त्रीन् लोकान् संपरिक्रम्य என்று இதர மூலமாகத் தனக்கு ரக்ஷையில்லை யென்பதை காகாஸுரன் அறிந்தான். விபீஷணனும் ராவணனை யடக்க ராமன் தவிர யாராலுமாகாதென்று கருதிப் பேசியிருப்பதால் தேவதாந்தராதி மூலம் ரக்ஷைக்கு ப்ரஸக்தியில்லை. அதுபோல் மோக்ஷார்த்த ப்ரபந்நரெல்லோரும் தேவதாந்தர மூலமாகப் பெறவாகாதப் பலனையே விரைவில் தரவேண்டுகிறபடியால் இது விஷயத்தில் எம்பெருமான் க்ஷிப்ரகாரியாகலாமென்று கருத்து. தரம்பாராதே தரும் என்பதற்கு த்ருஷ்டாந்தமருளுகிருர் ஸமேத்யாதி. ஸமாதிக தரித்ரனை ஸர்வேச்வரன் என்பது தரம் பாராதே தருகையும் என்றவிடத்தில் அந்வயிக்கிறதென்பது இதனுல் வ்யக்தம். தன் ப்ரயோஜநமாக இதி. கீழே பிறர்பேறே தன் பேருக நினைத்துச் செய்கிருன் என்றதே. இங்கே தன் ப்ரயோஜநமாக ஆச்ரிதருக்கு ப்ரயோஜநம் செய்கிருன் என்னப்பட்டது. தன் ப்ரயோஜநமாகாமல் பிறர் ப்ரயோஜநம் மட்டுமாகில் உலகில் உபேக்ஷையுண்டு, இங்கு அவ்வாறில்லை யென்றபடி. உச்ச நீசர்களுக்கு ஒரேவிதமான உயர்ந்த பலனென்பதற்கு கோஸல ஜந்துக்கள் த்ருஷ்டாந்தம். இதுவிஷயத்தில் லோகத்தாரின் செயலை த்ருஷ்டாந்தமாக்க குமாரனேடு ஒக்க இத்யாதி. கிளிமூலமாகத் தனக்குப் பின்னுல் ஒரு பலனை எதிர்பார்க்க முடியாதென்பது திர்யக்கான

இப்படி யथालोकம் பிறந்த சங்கைகளுக்கு யथालोकம் परिहारமுண்டாகையாலே யथाशास्त्रம் प्रपत्ति अपेक्षितसाधनமாகக் குறையில்லை.

இவ் விசிஷ்டமான पुरुषकाराதிகள் அஞ்சையும் सदाचार्यकटाक्षविशेषத்தாலே தெளிந்தவனுக்கல்லது महाविश्वासம் பிறவாது. எங்ஙனே யென்னில்:— ஈச்வரன் अभिमुखனல்லாமையாலே कर्मयोगादिகளுக்கு अनर्हனும்படியான महापराधங்களை உடையனாய் "धिगशुचिमविनीतम्" என்கிற ச்லோகத்தின்படியே எட்ட அரிய फलத்தைக் கணிசிக்கும்படியான चापलத்தையுமுடையனாய் இப் பலத்

---

என்ற சொல்லால் அறிவிக்கப்படுகிறது. புருஷகாராதிகள் இருந்தும் பலன் பெறுமலிருக்கலாமென்று யதாலோகம் சங்கைகள். அவற்றுக்கு முறையே 'அந்தப்புர பரிஜநம்' 'दायம்' 'ஸுஜநஸார்வபௌமன்' 'காகவிபீஷணாதிகள்' (ஆதிபதத்தாலே த்ரௌபதியைக் கொள்க) 'குமாரனேடொக்கக் கிளி' என்று யதாலோகம் பரிஹாரம். இப்படி ப்ரபத்திக்கு லோகத்ருஷ்டாந்தம் கொண்டு பலனை நிச்சயிப்பதானல் நாமஸங்கீர்த்தநாதிகளுக்கும் மோக்ஷ பலனைக் கொள்ளலாமே என்னுமைக்காக யதாசாஸ்த்ரமென்றது. சாஸ்த்ர விஹிதமென்றதற்கிணங்கி யநுகூல தர்க்கம் தேடலாமே யல்லது தர்கத்தாலேயே வஸ்துவை ஸாதிப்பதில்லை யென்றபடி. இவ்வைந்துக்கும் கீழ்க் கூறியபடி விசேஷணமிராமல் போனல், சங்கைகளே நிற்குமென்று விசேஷங்கள் கூறப்பட்டன.

ஆநுகூல்ய ஸங்கல்ப ப்ராதிகூல்யவர்ஜநங்களை ஸ்ரீமந்நாராயண சப்தத்தில் அநுஸந்திக்கவேண்டுமென்பதற்கு சேஷமாக, புருஷகாராதிகளைச் சொல்லத் தொடங்கி அவற்றின் விசேஷங்களை இவ்வாறு விளக்கினர். மஹாவிச்வாஸ ஸித்திக்கு இவ்விசேஷ ஜ்ஞானம் அவச்யமென்பதை யறிவிக்கிறர் இவ்விசிஷ்டமான இத்யாதியால். விசிஷ்டமான = கீழ்க்கூறிய விசேஷங்களை யுடையனவான. இவை யறியப்படாவிடில் மஹாவிச்வாஸம் பிறவாதென்பதற்கு விவரணம் எங்ஙனே இத்யாதி. முன் சொன்ன சங்கைகளே மற்றொரு முகமாகச் சொல்லப்படுகின்றன. அபராதம் அநந்தம். பலனே அரிதும் பெரிதுமானது. உபாயம் அதிஸ்வல்பம். அடையும் காலம் அதிசீக்கிரம். அடைகின்றவரோ நீசதரனை தான் மட்டுமின்றி நீசதமரான தன்னைச் சார்ந்த பலரும். இவை சங்கைக்குக் காரணமானவை. கர்மயோகாதி இதி. கீழ்ப்படியான கர்மயோகத்திற்கே அநதிகாரியான பிறகு ஸாக்ஷாத் மோக்ஷார்த்தமான ப்ரபத்தியில் அபராதிகளுக்கு அதிகாரம் கூடுமோவென்றபடி. धिगशुचिमिति. இந்த ஆளவந்தார் ச்லோகம் இங்கே ஆசங்கைக்கு எடுக்கப்பட்டிருந்தாலும் அங்கே ஸ்தோத்ரத்தில் ஆசங்கையோடு நிற்கவில்லை. இது மேல்ச்லோகத்தோடு ஏகமஹாவாக்யமாய் இப்படி அநர்ஹனயிருந்தாலும் அநர்ஹத்வம் ஸ்வாபாவிகமன்றுகையாலே காகசிசுபாலாதிகளுக்குப் போலே ரக்ஷணம் கூடுமென்று அறிவிக்கிறுரென்க. கணிசிக்கும்படியான சாபலத்தையும். மஹாப(ஃ)லத்தை விஷயீகரிக்கின்ற

துக்கு அநுஷ்டிக்கப் புகு(போ)கிற உபாயம் कायक्लेश-अर्थव्यय-कालदैर्घ्यादि களொன்றும் வேண்டாததொரு सकृदनुसन्धानமாதல், समुदायज्ञानपूर्वकமுक्तिमात्रமாதலாய், இந்த लघुतरமான உபாயத்தைக் கொண்டு அந்த गुरुतरமான फलத்தைத் தான் கோவி(ரி)ன காலத்திலே பெற ஆசைப்பட்டு இப்பலத் துக்கு, "शुनामिव पुरोडाशः" என்கிறபடியே जन्मवृत्तादिகளாலே தான் अनर्हனாய்

---

பேராசையையும். அந்த ச்லோகத்தில் 'विधिशिवसनकाद्यैर्ध्यातुमत्यन्तदूरं तव परिजनभावं कामये' என்றது இங்கே கருதப்பெறும், சாபலத்தையும் என்கிற உம்மையினுல் कामवृत्तत्व, अशुचित्व, अविनीतत्वादिदोषங்களைக் கூட்டுகிறுர். அவைபோல் சாபலமும் ஒரு தோஷமென்றபடி. அநுஷ்டிக்கப் புகுகிற— அநுஷ்டிக்கப்போகிற; ஸ்வல்பமான ஸ்வர்காதிகளுக்கே கர்மாக்கள் காய க்லேசம் அர்த்தவ்யயம் (பணச்செலவு) தீர்க்ககாலம் அநுஷ்டிப்பது முத லானவை வேண்டியிருக்க. இம்மஹாபலனுக்கு இவ்வளவு போதுமோ என்றபடி. ஆதிபதத்தினுல் அத்யயநம், வைதிகாக்நி, யோகசக்தி, பஹு புருஷாபேக்ஷை இத்யாதிகளைக் கொள்வது. सकृदनुसन्धानமாதல் இதி. ஆப்ர யாணம் அஸக்ருத் அங்காநுஷ்டானமும் அநுஸந்தாநமுமாகிற பக்தியோகத் திற்கு நேர்மாருக सकृत् अङ्गाङ्गिகளின் அநுஷ்டாநமாகிற ப்ரபத்திருப அநுஸந் தாநம் என்றபடி. समुदायेति. அங்காங்கிகளைத் தெளிவின்றி அறிந்துகொண்டு அதிகாரிவிபாகாதிகாரத்தில் சொன்னபடி மந்த்ரத்தை ஒரு தரம் உச்சரி த்தல். இங்கே மாத்ரபதத்தினுல் 'மாநஸமான ப்ரபத்தியை யநுஷ்டிக்காமல் மந்த்ரம் சொல்லுவதுமட்டும்' என்றுபொருள் கொள்ளலாகாது; அவிசதமான ஜ்ஞானம் அங்காங்கி யநுஷ்டாநத்திற்காகையால் அதைவிடமுடியாது. மந்த் ரோச்சாரணத்துக்கு முன்ளு பின்ளு இங்கே ப்ரபத்த்யநுஷ்டாநம் என்பதில் விவாதமிருந்தாலும் ப்ரபத்யநுஷ்டாநத்தில் விவாதமில்லை. ஆனுலும் அந்த ப்ரபத்தி அவிசதமாகையால் இருந்தும் இல்லாதது போல்தானென்று உபேக்ஷித்து உக்திமாத்ரமென்றது. ஒருவன் ஸமுதாய ஜ்ஞாநபூர்வகமாக மந்த்ரோச்சாரணம் செய்து ஏதோ ப்ரபலமான இடையூறினுல் மேலே ப்ரபத்தி அநுஷ்டிக்காமற் போனுல் அவனுக்குப் பலனுண்டா என்று விசாரித்து, செய்தது வீணுகாமைக்காக ஈச்வரன் பூர்த்தி செய்து பலனளிப்பா னென்கிருர்கள். இவ்வளவு பெருமை இதற்குச் சொல்வது நம்பத் தகுந் ததோ என்றதுமாம். शुनामिवेति. (பாத்மசர்யாபாதம் 2-83) 'व्रतोपवास तुलितं अशनं तस्य पावनम् । शुनामिव पुरोडाशो न नीचेषु तदिष्यते ॥ புரோடாசமென்பது சில யாகத்தில் தேவதைக்காகச் செய்யப்பட்டிருக்கும் அடை. पुरोडाशபதம் वैदिक लौकिक वस्तुसाधारणமென்று மீமாம்ஸகர் சொல்வதானுலும் ப்ரக்ருத த்தில் வைதிகத்தைக் கொள்க. திருவாராதனத்தில் பகவானுக்கு நிவேதநம் செய்யப்பட்ட அந்நம் பரிசுத்தி யளிக்கக்கூடியது. வ்ரதமும் உபவாஸமும் எப்படி பாபத்தைப் போக்குமோ, அதுபோல் நிவேதிதாந்ந ஸ்வீகாரமும் பாபத்தைப் போக்கும். இதனுல் உபவாஸதினத்தில் இதை உபயோகிக்க

வைத்துத் தன் अनुबन्धिகளையும்கொண்டு இப்பேறு பெறுவதாக ஒருத்தனுக்கு महाविश्वासம் பிறக்கையில் அருமையை நினைத்து "கலவெள்ளுக்கட்டுப் போய்க் கல எண்ணெயாயிற்று" என்று எம்பார் அருளிச்செய்தாரிறே.

---

லாமென்று கொள்ளலாகாது. வேறு நாளில் இது கிடைத்தால் இதை உபவாஸம் போல் பாபம் போக்குவதற்காகக் கொள்ளலாமென்றபடி. உபவாஸம் முக்யபக்ஷத்தில் நடக்காமலிருக்க, பாரணைகாலத்தில் இந்த த்ரவ்யம் கிடைத்து உபயோகித்தால் உபவாஸ பலனுண்டென்னலுமாம். இவ்வளவு உயர்ந்த அந்நத்தை நீசர்களுக்கு உபயோகிக்கலாகாது யாகத்திற்கான ஹவிஸ்ஸு நாய்க்குத் தகாதது போல் நீசர்களுக்குத் தகாதென்றபடி. जन्मेति. ஜன்மம் ஈனமான தேஹமும் அற்ப அறிவும். அநர்ஹனாய் வைத்து = தான் அநர்ஹன் என்பதைத் தெரிந்துகொண்டே என்றபடி. அநுபந்திகளையும் கொண்டு—आत्मात्मीयभरन्यासो ह्यात्मनिक्षेप उच्यते என்கிற படி பரந்யாஸத்திற்குத் தன்னோடு சேர்க்கப்பட்டிருக்குமவர்களோடு சேர்ந்து. கலவெள்ளு இதி. செய்யவரிதான பக்தியோகத்திற்கு வரும் பலன் ஸ்வல்ப்பமான பரந்யாஸத்திற்கு வரக்கூடுமா என்ற கேள்விக்கு எம்பார் அருளிச்செய்த ஸமாதாநமாக—'இது ஒரு க்ஷணத்தில் செய்யக் கூடியதாயிருந்தாலும் இதில் மஹாவிச்வாஸம் சேர்ந்தபடியால் பக்தியை விட இது மஹத்தாய்விட்டது. ஏனெனில்—உன்னைப்போல் விச்வாஸக் குறைவினால் ஆக்ஷேபிப்பவரே பலரானபடியால் இது சில பாக்யசாலிகளுக்கே கைக்கூடும்' என்றார். இதற்கோர் உதாரணமருளினார், 'கல எள்ளுக் கட்டுப்போய் கல எண்ணெய் ஆயிற்று' என்று. இதற்கு ஸாரப்ரகாசிகை தவிர மற்ற உரைகளில், எள்ளுக்கட்டாவது எள்ளுச்செடிச் சுமை; எவ்வளவு சுமையிருந்தால் கல எள்ளு கிடைக்குமோ அவ்வளவு சுமை கொடுக்க வேண்டுமென்று குடியானவனுக்கு நிலக்காரன் உத்திரவிட்டான். அவன் அவ்வளவு செய்வது முடியாதே என்றான். அப்போது எண்ணெயே கலம் கொடுத்துவிடு என்றான் நிலக்காரன். கல எள்ளே விளையாத நிலத்திலிருந்து கொண்ட எள்ளைக் கொண்டு கல எண்ணையை எப்படி கொடுக்க முடியும்? ஆகையால் குடியானவனுக்கு இது ஸாத்யமில்லையென்றபடியாயிற்று. கல எண்ணெய்க்கு எவ்வளவு எள்ளு வேணுமென்று நிலக்காரனுக்குத் தெரியாதா. அவன் எப்படி சொன்னானெனில்—கொண்டுவர வேண்டுமென்று நிலக்காரன் சொன்னபோது அது எப்படி முடியும் ஒரு சுமை கொண்டுவரக்கூட ஆளில்லையே என்று குடியானவன் சொல்ல. சுமைகளை நேரில் கொண்டு வந்து சாகுபடி செய்தால் எள்ளு அதிகமாகுமாகையால் நாம் அதிகம் கேட்ப்போமென்று இவன் இவ்வாறு சொல்லுகிறானென்று நினைத்து அப்படியானால் அங்கேயே சாகுபடி செய்து நீயே புண்ணாக்கையுமெடுத்துக் கொண்டு எண்ணெய் மாத்திரம் கலம் கொடுத்தால் போதுமென்று நிலக்காரன் சொன்னானென்று கொள்க. கல எள்ளு

இவ்விடத்தில் ஸர்வேச்வரனுடைய परत्वमात्रத்தையறிந்து அகலுகையாலே नराधमனென்று பேர்பெற்ற பிறந்துகெட்டானிற்காட்டில் இடைச்சிகளைப்போலே விவேகமில்லையே யாகிலும் ஸௌலப்யத்தை அறிந்து அந் நலனுடையொருவனை நணுகுமவனே பரமாஸ்திகனென்று அப்புள்ளார் அருளிச்செய்யும் பாசுரம்.

---

கொடுக்கமுடியும். கல எண்ணை முடியாது; அதுபோல் பக்தியோகமநுஷ்டிக்க முடிந்தாலும் மஹாவிச்வாஸம் சேர்ந்த ப்ரபத்தி யநுஷ்டிப்பது அரிதென்றதாயிற்று. இப்படி சங்கை ப்ரபலமாக நின்றதுக்கு முக்யகாரணம் எம்பெருமான் மிக்க பரத்வமுடையனாய் நெருங்கவாகாத நிலையிலிருக்கையும் அப்பெரும்பேற்றைப் பெறவாகாதபடி மஹாபராதியாய்மிக்க நீசநிலைமையில் நாம் இருக்கையுமாம். அவனுடைய ஸௌலப்ய ஸௌசீல்ய வாத்ஸல்யாதிகளை நன்றாக அறிந்தவருக்கு அச்சத்திற்கே இடமில்லை யென்று அப்புள்ளார் அருளிச்செய்த ஸ்ரீஸூக்தியிலிருந்து இதற்குஸமாதானம் ஏற்படுகிறது என்கிறார் இவ்விடத்தில் இதி,ஸாரதீபிகையில் ப்ரமாண ச்லோகம் ஒன்று உதாஹரிக்கப்பட்டிருக்கிறது, 'हरेर्विज्ञाय पारम्यं अपगच्छेत् नराधमः। सौलभ्यवेदी भजते कश्चित् तं परमास्तिकः॥' என்று. இது அப்புள்ளார் அருளியதற்கு மூல ச்லோகம் போலுமிருக்கிறது. விவேகமில்லையே யாகிலும் இதி, விவேகமில்லாமலே பல இடைச்சிகள் ஸௌலப்ய மாத்திரத்தையறிந்து நணுகியது உண்டு. பரத்வத்தை நன்கு அறிந்து அதை யடக்குமளவுக்கு ஸௌலப்யமிருப்பதைத் தெளிந்து இழிந்த ஜ்ஞானிகளான இடைச்சிகளும் மற்றும் பக்தர்களும் பலர். மோக்ஷபலனை அவனிடமிருந்து விரும்பும்போது பரத்வத்தை யறியாமலிருக்க முடியாது. தனி பரத்வத்திற்கும் தனி ஸௌலப்யத்திற்கும் உபயோகமில்லை. இதை யறிவிப்பதற்காக திருவாய்மொழி மூன்றும் பாசுரம் நினைவுக்கு வரும்படி அப்புள்ளார் 'அந்நலனுடையொருவனை நணுகும்' என்ற சொற்களை சேர்த்தருளினார்.

'இலனது உடையனிது என நினைவரியவன்,
நிலனிடை விசும்பிடை உருவினன் அருவினன்,
புலனொடு புலனலன் ஒழிவிலன் பரந்த அந்,
நலனுடை யொருவனை நணுகினம் நாமே' என்ற பாசுரமிது. சிலவற்றிற்கு ஸ்வாமி, சிலவற்றிற்கு அல்லன் என்னுதபடி ப்ரக்ருதி, நித்ய விபூதி, ஸூக்ஷ்மம், ஸ்த்தூலம் என்ற ஸர்வ சரீரியாய் என்று பரத்வத்தைக் கூறி ஸௌலப்யாதிகளையும் கூறி மஹாபராதிகளான நாமே நணுகினம் என்று ஸௌலப்யம் முக்யமென்று ஆழ்வார் தெரிவித்தார். புருஷகாராதிகளுக்குச் சொன்ன விசேஷங்களையெல்லாம் அவன் ஏற்படுத்திக் கொண்டதற்கு அவனுடைய காருண்யாதிகளே காரணமாகையால் இப்படி அவன் குணங்களை யறிந்தபோது மஹாவிச்வாஸம் பிறந்து நிற்கக் குறையில்லை.

ஆநுகூல்ய ஸங்கல்பாதிகளை மந்த்ரத்தில் அநுஸந்திக்கவேண்டிய இடம் கூறியாயிற்று. அவ்விடத்தில் பொதிந்துள்ள புருஷகாரத்வாதிகளுடைய

இப்படிப் पुरुषकारादिज्ञानத்தாலே பிறந்த विश्वासमहत्त्वமும் कार्पण्यமும் "प्रपद्ये" என்கிற क्रियापदத்தில் उपसर्गத்திலும் शरणशब्दोपश्लिष्टமான धातुவிலும் उत्तमனிலும் அநுஸந்தேயங்கள். இதில் உத்தமனில் விவக்ஷிதத்தை "अनन्य- शरणः" என்று गद्यத்திலே व्याख्यानம் பண்ணினார்.

இவ்விடத்தில் उपायत्वाध्यवसायवाचकशब्दத்திலே गोप्तृत्ववरणம் अन्तर्नीतम्. "अहमस्म्यपराधानामालयोऽकिञ्चनोऽगतिः", "त्वमेवोपायभूतो मे भवेति प्रार्थनामतिः । शरणागतिरित्युक्ता सा देवेऽस्मिन् प्रयुज्यताम् ॥" என்றும் "उपाये गृहरक्षित्रोः शब्दः शरण- मित्ययम् । वर्तते साम्प्रतं त्वेष उपायार्थैकवाचकः ॥" என்றும் சொல்லுகிறபடியே

---

ஜ்ஞாநத்தினாலே கீழ் விவரித்தபடி ஸித்தித்த மஹாவிச்வாஸத்தையும் மற்ற அங்கங்களையும் மந்த்ரத்தில் அநுஸந்திக்குமிடங்களைக் காட்டுகிறார். இப்படி இத்யாதியால். விச்வாஸத்தின் மஹத்வம் ப்ரசப்தார்த்தம். விச்வா ஸம் க்ரியாபதத்தின் அர்த்தம். அந்த விச்வாஸத்தின் ஆகாரத்தைக் காண் பிப்பது சரணசப்தம். அதனால் சரணமாக அத்யவஸிக்கிறேன் என்று பொருள்படுவதால் அத்யவஸாயத்திற்கு சரணத்வம் விஷயமாகிறது. உத்தமனிலும் = धातुக்குமேலிருக்கிற உத்தமபுருஷனென்கிறப்ரத்யயத்திலும். அதற்கு நான் என்று அர்த்தமாகையால் ஸந்தர்ப்பத்தால் அகிஞ்சநனான நான் என்று கிடைப்பதால் கார்பண்யம் அநுஸந்திக்கப்படுகிறது. அநந்ய சரண:= வேறு பக்த்யாதி உபாயமில்லாதவனாய். இப்படி மற்ற அங்க ங்கள் கிடைத்தாலும் கோப்த்ருத்வ வரணமென்கிற அங்கம் கிடைக்க வில்லையே என்ன, அருளிச்செய்கிறார் இவ்விடத்தில் இதி. அந்தர்நீதமிதி— முன்னே 'உபாயவரணாந்தர்நீதமான' என்றவிடத்தில் அந்தர்நீத பதத்திற்கு அந்தர்கதமென்று பொருள். இங்கே அத்யவஸாயம் அர்த்தமாகையால் வரணம் அந்தர்கதமாகாது. அர்த்தாத்து ஆக்ஷிப்தமென்று பொருள். அதனாலேயே சப்தத்தில் அந்தர்நீதம் என்றார். சரணசப்தத்திற்கு ரக்ஷகன் என்கிற அர்த்தம் உண்டாகையால் ப்ரபத்யே என்கிற தாதுவும்ஜ்ஞாநார்த் தகமாய் வரணத்தையும் சொல்லுமாகையால் கோப்த்ருத்வ வரணம் நேராக சப்தத்தின் பொருளே யாகலாமே, அதைவிட்டு அந்தர் நீதம்—அதாவது— அர்தாத் ஸித்திக்குமென்பதென் என்ன, ஸமாதாநம் அருளிச்செய்கிறார் अहमित्यादिना. அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் அகிஞ்சந: என்கிற பதத்தினாலே வேறு உபாயமில்லை என்பதைக் காண்பித்து நீ உபாயமாக வேண்டும் என்கிற ஜ்ஞாநரூபமான ப்ரார்த்தனை சரணாகதி சப்தத்தின்பொருள்-என்பதால் சரண சப்தத்திற்கு உபாயம் பொருள் என்று தெரிகிறது. அங்கேயே சரணசப்தத் திற்குஉபாயம்,க்ருஹம்(வீடு). ரக்ஷகன் என்றமூன்றர்த்தமுண்டாகிலும் साम्प्रतம் இங்கே சரணாகதி கட்டத்திலே உபாயமென்கிற அர்தத்தையே சொல்லுவ தென்று கூறி ரக்ஷகன் என்கிற பொருளை விட்டதால் கோப்த்ருத்வ வரணம் நேர்ப்பொருளாகாது. சேதநனை ஈச்வரன் உபாயமாக வேண்டுமென்றாலும் அந்த உபாயத்வம் ரக்ஷகத்வம் தவிர வேறென்ன? ஆகையால் எதற்காக

விட்டு சேஷியினிடமே சேரும். ஆகையால் **'तेन संरक्ष्यमाणस्य'** என்று கீழ்க் குறித்த ச்லோகத்தின்படி फल ஸமர்ப்பணமும் இங்கே ஸித்திக்குமென்று கருத்து. **निर्गतो भरः यस्मात् स निर्भरः। निर्भरस्य भावः निर्भरत्वम्। स्वस्य निर्भरत्वम् स्वनिर्भरत्वम् पर्यन्ते यस्येति बहुव्रीहिः।** पर्यन्ते என்பது **भावन**த்துக்கு விசேஷணம். **एकस्मै एकार्थः। एकार्थस्य भावः; रक्षकस्य ऐकार्थ्यं रक्षकैकार्थ्यम्; तस्य भावनं अनुसन्धानम्।** ஒருவனுக்கே யென்றதாலே தனக்குத் தான் சேஷமன்றென்பது வ்யக்தமாயிற்று. இதில் அர்த்தஸித்தமான **भरसमर्पण-फलसमर्पण**ங்களில் **भरसंबन्ध**ம் தனக்கில்லை என்பதை யறிவிப்பது **स्वनिर्भरत्व** பதம் **फलसंबन्ध**ம் தனக்கில்லை யென்பதை யறிவிப்பது த்ருதீயபாதம். இவையெல்லாம் ஆத்ம நிக்ஷேபமென்ற சொல்லிலே கிடைக்கிறபடியால் ஆத்ம ஸமர்ப்பணமே சப்தத்தில் ப்ரதானமாகத் தோன்றினாலும் ப்ரபத்தி பரந்யாஸ ப்ரதானமேயாகையால் மற்ற இரண்டும் அப்ரதானமாகக் கொள்ளப்படும்.

இந்த ஸ்வரூப ஸமர்ப்பண **फलसमर्पण**ங்களை எதற்காகத் தனியே யநுஷ்டிக்க வேண்டும்? மோக்ஷார்த்த பரந்யாஸத்திற்கும் மற்ற பரந்யாஸத்திற்கும் வாசி தோற்றுவதற்காகவென்னில்—ஸகல முமுக்ஷு கார்ய ஸாதாரணமான ஸாத்விக த்யாகத்தினாலேயே அந்த வைலக்ஷண்யம் அறியப்படுமே அங்கே **'स्वशेषभूतेन मया स्वकीयैश्चोपकरणैः स्वाराधनैकप्रयोजनाय'** என்றதாலே **आत्मात्मीय-शेषत्वानुसन्धान**மும் **फलसमर्पण**மும் தெரியலாகுமே யென்னில்– ஸாத்விக த்யாகமென்பது அங்காங்கி ஸாதாரணம். அது கர்மயோகாரம்பத்திற்கு முன்முதல் உண்டு; பொதுவாக நித்ய கர்மாநுஷ்டாநத்திலும் விடாமலிருப்பது. **'यत् करोषि यदश्नासि'** என்றபடி லௌகிக கார்யங்களிலும் மாநஸ ஸாத்த்விக த்யாகமுண்டு. **भोजनमूल**மான த்ருப்தி, ஜ்ஞாநயோக மூலமான ஆத்மாவலோகநம் போன்றவை யெல்லாம் ஏற்படும் போது அததற்கு **भगवदर्पण**ம் ப்ராயேண அரிதாகும். அது போலன்றி மோக்ஷத்தில் ஆநந்தாநுபவ க்ஷணந்தோறும் தனக்கு அப்ராதாந்யமும் பகவானுக்கே ப்ராதாந **फलित्व**மும் விடாமல் தோன்றிவரும். இப்படிப்பட்ட பலனைத் தான் விரும்புவதென்று இதனுடைய வாசி யறிவதற்காக இதற்கு விசேஷப்படி யநுஸந்தாநம் சாஸ்த்ர விஹிதமாயிற்று. இதற்காக த்வயத்தில் உத்தரகண்டத்தில் சதுர்த்தியும் நம:பதமும். இது போலவே அநுஷ்ட்டாந காலத்தில் ப்ரக்ருதி மண்டலத்தில் சேஷமாகவிருப்பவனுக்கு **'स्वाराज्यमतुलं प्राप्य तेनैव सह मोदते'**. **'तस्य सर्वेषु लोकेषु कामचारो भवति'** என்ற வாக்யாதிகளைக் கொண்டு தான் அங்கே. சேஷனாகாமல் ஸ்வதந்த்ரனுயுமிருக்கலாமென்கிற புத்தி வாராமைக்காக ஸ்வசேஷத்வத்யாக பூர்வக பரசேஷத்வாநுஸந்தாநம் விதிக்கப்படுகிறது. அத்தகைய புத்தியை நிவ்ருத்தி செய்வதற்காகவே **'अविभागेन दृष्टत्वात्'** என்கிற ப்ரஹ்ம ஸூத்ரம் ப்ரவ்ருத்தம்—என்றவாறு இவ்வநுஸந்தாநத்திற்குப் பலன் ஆராய்க. விதிப்படி அநுஷ்டித்தாலே பலன் பெறப்படும்.

இப்படி நிரூபித்த ஆத்ம ஸமர்ப்பணத்தை ஸம்ப்ரதாய ஸ்ரீஸூக்தியைக்

ஸ்தோத்ரத்தில் "वपुरादिषु योऽपि कोऽपि वा गुणतोऽस्मानि यथातथाविधः। तदयं तव पादपद्मयोरहमद्यैव मया समर्पितः ॥" என்கிறதுக்குத் தாத்பர்யமென்னென்னில்:—

முத்ரையிட்டிருக்கிற ராஜாவின் கிழிச்சீரை ஒரு ஹேதுவாலே தன் கை

---

கொண்டு ஆக்ஷேபித்து ஸ்த்தாபிக்கிறார் ஸ்தோத்ரத்தில் இதி. சாஸ்த்ரங்களில் நிரூபித்தபடி உண்மையான ஆத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி மூல மந்த்ரத்தால் அறிந்து. பிறகு இந்த ஆத்ம ஸமர்ப்பணம் செய்யவேண்டுமென்றால், இது ஆளவந்தாரின் ஸ்ரீஸூக்திக்கு விருத்தமாகும். தேஹாத்ம விவேகாதிகள் இராதபோதே ஆத்ம ஸமர்ப்பணத்தை அவர் அநுஷ்டித்தமை वपुरादिषु என்கிற ச்லோகத்தில் தெரிகிறதே யென்று ஆக்ஷேபம். ச்லோகார்த்தமாவது—अहं—நான் वपुरादिषु—தேஹ-இந்த்ரிய ப்ராணாதிகளில் योऽपि कोऽपि वा अस्मानि—ஏதேனுமொன்றானாலும் சரி. गुणतः यथा तथाविधः अस्मानि—நான் எந்த குணமுடையவனாகவேண்டுமானாலும் சரி; तत्—இப்படி அறியாமலே अयं अहं—ஏதோ ஒரு விதமாக விருக்கிற நான், अद्य एव—இப்போதே-அழிவதற்கு முன்னேயே तव—உனது पादपद्मयोः—திருவடித்தாமரைகளில். मया—என்னால், समर्पितः—ஸமர்ப்பிக்கப்பட்டேன். இதன் கருத்தாவது—தேஹமே ஆத்மா. இந்த்ரியமே ஆத்மா. ப்ராணவாயுவே ஆத்மா என்றெல்லாம் பலவாக ஆத்மவிஷயத்திலே விவாதம் செய்கின்றனர். இதனால் गुण விஷயத்திலும் விவாதம் ஏற்படுகிறது. ஆத்மா நித்யமா, அநித்யமா, ஜ்ஞாநமா, ஜ்ஞாநியா. जडமா, ஸ்வயம்ப்ரகாசமா என்றெல்லாம் விவாதமிருக்கிறது. தேஹமே ஆத்மா என்றால், रूपरसादिகள் கூட ஆத்மாவிலிருக்கும். இந்த விவாதங்கள் இலகுவாகத் தீர்க்கப்படமாட்டாவாகையால் இவை தெளிந்த பிறகு ஸமர்பிப்பதென்பது ஆகாது. எனவே இவ்வாத்மா எதுவாயினும், எக்குணமுடையதாயினும் உனதே என்று இப்போதே என் பரத்தை ஸமர்ப்பித்துவிடுகிறேன். [இப்படியே வேதமும் 'योऽहमस्मि, स सन् यजे' என்று அறியாதவனும், ஸமர்ப்பிக்க வாகுமென்கிறது.]

இவ்வாக்ஷேபத்திற்கு ஸமாதாநமாம் முத்ரை இத்யாதி. விசதமாக அறியாவிட்டாலும் எம்பெருமானிடம் ஸமர்ப்பித்துவிட்டால் அப்போதும் திருடினன் என்கிற தோஷம் போய்விடுமென்றபடி—ஒரு ராஜா மாணிக்கத்தைச் சீரையால் மறைத்துத் தன் முத்ரை யிட்டுவைத்திருக்க அது ஒருவன் கையிலகப்பட முத்ரையைக் கண்டவுடனேயே இது ராஜாவினுடையதென்றறிந்து உள்ளே யிருப்பதென்னவென்பதைக் கண்டு மாணிக்கத்தை எடுத்து ஸமர்ப்பிக்கலாம். மாணிக்கமென்று தெரிந்து கொண்டு வந்தானே யென்று ராஜா உவப்பன்; முத்ரையைப் பிரிக்காமல் சீரையோடே சேர்த்துக் கொடுத்தாலும் அவ்வளவில் இவன் திருடினனென்ற தோஷம் விலகுகின்றது. இல்லையேல் வேறொருவன்மூலமாக இவனிடம் வந்தாலும், 'இவன் திருடினன்' என்று கொள்ளவேண்டியிருக்கும் அது போல் ஆத்ம வஸ்து இன்னதென்று அறியாமலே தேஹாத்ம ப்ரமமிருந்து

யிலே இருந்தால், ராஜா கைக்கொள்ளுமென்று உள்ளிருக்கிற மாணிக்கத்தின் स्वरूपस्वभावங்களை विशदமாக அறியாதே கிழிச் சீரையோடே மீளக் கொடுக்கு மாப்போலே देहाद्यतिरिक्तात्माவின் स्वरूपस्वभाव-स्थितिகளை विशदமாக விவேகிக்க அறியாதாரும் உள்ள அறிவைக்கொண்டு आत्मसमर्पणம் பண்ணினால் அவ்வள வாலும் अनादिकालம் பண்ணின आत्मापहारचौर्यத்தாலுண்டான भगवन्निग्रहம் शमिக்குமென்கிற शास्त्रार्थத்திலே திருவுள்ளம். இதுக்குமேல் "मम नाथ यदस्ति" என்கிற ச்லோகத்தில் இஸ்ஸமர்ப்பணத்தைப் பற்ற अनुशयம் பண்ணிற் றும், स्वरूपादिविवेक மின்றிக்கே समर्पिக்கப்புக்காலும் தன்னுடைய द्रव्यத்தை

---

ஸமர்ப்பித்தாலும், பகவானுடைய சொத்தைத் தனதாக நினைத்தானென்கிற 'योऽन्यथा सन्तं आत्मानं अन्यथा प्रतिपद्यते । किं तेन न कृतं पापं चोरेण आत्मापहारिणा' என்ற சௌர்யம் நீங்கிவிடும், பகவான் இவனை நிக்ரஹிக்கமாட்டானென்று விசதஜ்ஞாநமில்லாதவருக்கும் ஆத்மஸமர்பணம் வீணாகாதென்று அறிவித் தார். இதன் உட்கருத்தென்ன வென்றால், ஜீவனுக்கு தேஹாத்ம ப்ர மாதிகளிருந்தாலுமிருக்கலாம்; ஸ்வதந்த்ராத்ம ப்ரமமும் ஜீவேச்வராத்வைத ப்ரமமும் தகாவென்பதாம் ஆக அத்வைதிநிலை சார்வாகநிலைக்கும் கீழ்பட்ட தாகுமென்றதாம். ஆத்மஸித்தி முதலான க்ரந்தங்களால் ஜீவதத்துவ த்தை விளக்கி யருளிய ஆளவந்தார், தேஹாத்ம ப்ரமத்துடன்தான் இந்த ஸமர்ப்பணம் செய்தாரென்று ஒரு விவேகியும் சொல்லத் துணியான். கிழிச்சீரையாவது—பொருளை மூடக்கட்டிய வஸ்த்ரம், ஒரு ஹேதுவாலே- தானே அகப்பட்டுக் கொண்டுவந்ததாலோ, யாரேனும் ஒருவன் தன்னிடம் கொண்டு வைத்ததாலோ. கையிலே யிருந்தால் என்பதற்கு, 'கொடுக்குமாப் போலே' என்றவிடத்தில் அந்வயம் கைக்கொள்ளுமென்று=சீரையோடு கொடுத்தால் ராஜாவே சீரையைப் பிரித்து மாணிக்கத்தைக் கொள்ளுவா னென்று எண்ணி, மீள—தாம் மீள்வதற்காக சோரனென்று சிக்ஷிக்கப் படாமைக்காக.

இப்படி அவிவேகியைப் போல் விவேகியும் ஆத்ம ஸமர்ப்பணம் செய்தது தவறென்று அருளிச்செய்வது பொருந்துமோ என்ற கேள்விக்குப் பரிஹாரம் அருளிச்செய்கிறார் இதுக்கு மேல் இதி. ச்லோகார்த்தமாவது— अथवा—அல்லது नाथ—ஸ்வாமியே, माधव—திருமாலே, मम यत् अस्ति—என்ன தாக எது இருக்கிறதோ, यः अहमस्मि—நான் என்றது யாதொன்றோ, तत् सकलम्- அதெல்லாம் तवैव—இதற்கு முன்னும் உனதேயாகும் इति निश्चितधीः—என்று தெளிந்த புத்தியுடைய நான், किं—எதை, ते—உனக்கு समर्पयामि—ஸமர்ப் பணம் செய்ய வல்லேன். இதனால் தாம் செய்த ஸமர்ப்பண விஷயத் திலே தாமே தவறென்று சொல்வது தெரிகின்றது. அநுசயம் பண்ணிற்று— அநுசயம்—பச்சாத்தாபம். அதைக் கொண்டதும் என்றபடி இந்த ச்லோக கத்தில் अथवा என்று டக்ஷாந்தரமாக ஆரம்பித்தால் முன் செய்த ஸமர்ப்பணம் இப்போது பச்சாத்தாபத்துடன் விடப்படுகிறதென்று தெரிகிறது.

ராஜாவுக்கு உபஹாரமாகக் கொடுப்பாரைப்போலே, 'என்னது' என்கிற

---

இக்கேள்விக்கு स्वरूपेत्यादिना பரிஹாரம், கீழ்ச்லோகத்தில் தேஹாத்ம ப்ரமம் முதலான அவிவேகமுள்ளவன் ஸமர்ப்பணம் செய்யலாமென்றார். அந்த விஷயங்களில் அவிவேகமிருந்தாலும் சேஷத்வாம்சத்தில் விவேகமானது ஆத்ம ஸ்வரூபம் தெளிந்தவனுக்குப் போல் இவனுக்கும் இருக்கவேண்டும். அவ்வாறின்றி, தன்னுடைய த்ரவ்யத்தை 'இதுவரையில் எனதாயிருந்த இது இனி ராஜாவுக்கு ஆவது' என்று பக்தியால் கொடுப்பது போல் இதுவரை எனதான ஆத்மாவையும் ஆத்மீயத்தையும் இனி எம்பெருமானுக்குக் கொடுத்துவிடுகிறேனென்று அர்ப்பணம் செய்வது தகாது. என்றுமே அவனதான வஸ்துவை எனது என்ற ப்ரமத்தை விட்டு அவனதாகவே தெளிந்தேன் என்று எண்ணவேண்டும். எப்போதுமே பகவானுக்கு சேஷமென்று சொல்லும் சாஸ்த்ரம், தன் வஸ்துவைப் பிறருக்கு தானம் செய்வது போல் எம்பெருமானிடம் ஸமர்ப்பணம் செய்ய விதிக்குமோ. ஆகையால் சாஸ்த்ர விஹிதமான ஸமர்ப்பணமாவது நான் நினைத்தபடி இது எனதன்றென்றும் அவனதேயென்றும் தெளிவதே. இதைத் தான் इति प्रबुद्धधीः என்று அருளிச்செய்தார். किं नु समर्पयामि என்றதால் உலகில் தன் வஸ்துவைப் பிறருக்கு அர்ப்பணம் செய்கிற வண்ணம் உனக்கு அர்ப்பணம் செய்ய என்ன உள்ளதென்றார். न समर्पयामि என்னுமே किं नु समर्पयामि என்றதால் நான் செய்யும் ஸமர்ப்பணம் எவ்விதமாகும்? உலக ப்ரஸித்தம் போல் ஆகுமோ, திருடின சொத்தை உடையவனுக்குச் சேர்ப்பதுபோன்ற ஸமர்ப்பணமே யாகுமென்று அறிவித்ததாம்.

இவ்வாக்யத்தில் அநுசயம் பண்ணிற்றும் என்ற சொல்லால் பெரிய வாச்சான்பிள்ளையின்உரையை நினைப்பூட்டுகிறார். அவர் இந்த ச்லோகவுரையில், "முன் ச்லோகத்திலே தான்பண்ணின ஆத்மஸமர்ப்பணத்தை அநுசயிக்கிறார்" என்று,அவதாரிகை வைத்து முடிவில், "अथवा என்று கீழில் ஸமர்ப்பண பக்ஷவ்யாவ்ருத்தி. உனக்கு எதை ஸமர்ப்பிப்பேன், ஸமர்ப்பணீயம் எது, ஸமர்பிப்பார். ஆர்? ஸமர்ப்பணீயமாகைக்கு ஸ்வாம்யமில்லை; ஸமர்பிக்கைக்கு ஸ்வாதந்த்ர்யமில்லை" என்று விளக்கினார். இப்படி ஆளவந்தார் ஸமர்ப்பணம் செய்து அநுசயித்துவிட்டாரே. ஸமர்ப்பணம் வேண்டா என்றதாயிற்றே. நாம் ஸமர்பிப்பதா, வேண்டாவா? வேண்டாவாகில் இரண்டு ச்லோகத்தையும் ஸ்தோத்ரத்திலிருந்து எடுத்துவிடலாமென்ற விசாரம் ஏற்படும். பிறகு அவர் வரைந்திருப்பதாவது, "ஸம்ஸார பீதியாலே ஸமர்ப்பிக்கையும் ஸ்வரூபयाथात्म्य ஜ்ஞானத்தாலே அநுசயிக்கையும் இரண்டும் यावन्मोक्षम் அநுவர்த்திக்கக் கடவது" என்றதாம். செய்தது தவறாகில் செய்யாமலிருப்பதே உசிதமென்று நினைக்காமைக்காக ஸமர்ப்பிக்கையும் அநுசயிக்கையும் இரண்டும் வேண்டுமென்கிறார். ஒன்றுக்குக் கர்த்தாவானமை பிசகென்ற போது இரண்டுக்குக் கர்த்தாவாக வேண்டுமென்கிறார். ஒருதரம்

अभिमानத்தோடே समर्पிக்கில் आत्मापहारचौर्யம் அடியற்றதாகாதென்கைக்காக வத்தனை ; அல்லது शास्त्रचोदितமாய்த் தாம் அநுஷ்டித்த ஸமர்ப்பணத்தை अनुकूल्यமாக்கினபடியன்று.

---

செய்ததே தவறென்ற போது மோக்ஷம் பெறும் வரையில் தொடரு மென்கிறார். இல்லையேல், ஸம்ஸாரபீதனாக மாட்டான். அநுசயிப்பது தொடரா விட்டால் தத்துவ ஜ்ஞாநமுடையவனாக மாட்டான் என்கிறார். எப்போதுமே எம்பெருமானுக்கே சேஷபூதனென்கிற தெளிவுடையவன். இதுவரையில் எனதான இது இனி உனதாகட்டும் என்றவாறு ஸமர்ப்பணம் செய்யக் கூடுமோ. ஆக இது சாஸ்த்ரம் சொன்ன ஸமர்ப்பணமாகுமோ என்று ஆராய வேண்டாவா. ஆகையால் பெரியவாச்சான்பிள்ளைக்கும், அவிவேகி யாய் ஸமர்ப்பணம் செய்தால் கடைசி வரையில் அநுசயித்துக்கொண்டு தானிருக்க வேண்டும். அநுசயிக்க இடமிராதபடி ஸமர்ப்பணம் தத்துவ ஜ்ஞாநபுரஸ்ஸரமா யிருக்கவேண்டு மென்பதிலேயே நோக்கு.

ப்ரஹ்மஸூத்ரத்தில் ஜீவனுக்குக் கர்த்ருத்வத்தைக் கூறி யிருக்க கீதையில் கர்த்ருத்வத்தை த்யாகம் செய் என்றார். 'கர்த்ருத்வத்தை ப்ரக்ருதியின் குணங் களில் பாவிப்பது. அல்லது ஈச்வரனிடத்தில் என்னப்பட்டது. இது தகுமா என்றபோது ஆளவந்தாரும் எம்பெருமானாரும், 'ஜீவனுக்கு கர்த்ருத்வம் உண்டு; அது ஸம்ஸாரத்தில் ப்ரக்ருதியின் குணமூலமாக வந்தது; ஔபா திகமென்று நினைக்கவேண்டும். அல்லது எந்த கர்த்ருத்வமும் ஈச்வராதீந மாகையால் ஸ்வதந்த்ரமாகத் தன்னைக் கர்த்தாவாக நினைக்கலாகாது' என்று கருத்து உரைத்தனர்—அதுபோல் ஈச்வரனிடத்தில் ஸமர்ப்பணம் லௌகிக ஸமர்ப்பணம் போலாக முடியாதென்றாலும் ஏதேனுமொரு விதம் ஸமர்ப் பணம் செய்தாக வேண்டும். 'आत्मानं मयि निक्षिपेत्' என்ற விதியுள்ளதே. அது நித்யசேஷத்வாநுஸந்தாநரூபம். லௌகிக ஸமர்ப்பணமாகாத விலக்ஷண ஸமர்ப்பணமிது என்று இரண்டு ச்லோகங்களால் அறிவித்தபடி. இப்போது இவ் அநுஷ்டாநம் தத்துவ ஜ்ஞாந பூர்வகமாயிற்று.

அடியற்றதாகாது.—அடி-மூல காரணம்; சௌர்யத்துக்கு மூலகாரணம் பூர்வவாஸனை. இதுவரையில் எனதான வஸ்துவை இனி எம்பெருமானுக் கென்று ஸமர்ப்பணம் செய்தால் இவன் பிற்காலத்திலும் முன்னே தனதாக விருந்ததாகவே நினைப்பானாகையால் சௌர்ய வாஸனை விலகாது. அதனால் எப்போதும் தனதன்றென்று தெளியவேண்டுமென்றபடி. அஜ்ஞக்ருத்யமாக் கினபடியன்று இதி. தெரியாமல் செய்து விட்டோமென்று அநுசயிப் பதே ப்ரதாநார்த்தம் என்னலாகாதென்றபடி. இவ்வளவால் ஸ்வஸ்வ ரூபஜ்ஞாநம் ஸமர்ப்பணமென்கிற இரண்டில் ஸ்வஸ்வரூப ஜ்ஞாநம் விசத மாகவிராவிட்டாலும் ஸமர்ப்பிக்கலாமென்பதற்காக முதல் ச்லோகம்— தான் எப்போதுமே எம்பெருமானுக்கு சேஷமென்ற விசத ஜ்ஞாநத்துடன் ஸமர்ப்பிக்க வேண்டுமென்பதற்காக இரண்டாம் ச்லோகமென்று தேறிற்று.

ஆக இரண்டு ச்லோகத்தாலும், 'யதாவஸ்தித-ஸ்வரூபாதிவிவேகமில்லையே யாகிலும் "ந மம" என்று ஸ்வஸம்பந்தம் அறுக்கையே "அஹமபி தவைவாஸ்மி ஹி பர:" என்னும்படி பரஸமர்ப்பணப்ரதானமான சாஸ்த்ரார்த்தத்தில் ஸாரம்' என்றதாயிற்று.

இப்படி சேஷத்வானுஸந்தானவிசிஷ்டமான ஸ்வரக்ஷாபரஸமர்ப்பணம் த்வயத்தில் உபாய

---

இதை யருளிச்செய்கிறார் ஆக இதியால். இரண்டு ச்லோகத்தாலுமென்றதற்கு ஸாரமென்றதாயிற்று என்றவிடத்தில் அந்வயம். அந்த ஸாரம் ஸ்வஸம்பந்தம் அறுக்கையே என்னப்பட்டது. இங்கு ஏகாரத்தினால் தேஹாதிவிலக்ஷணமாகத் தன் ஸ்வரூப ஸ்வபாவவிவேகம் ஸாரமன்று என்றதாயிற்று. இந்த ஏகாரத்திற்கு பரஸம்பந்தபோதனம் அஸாரமென்று தாத்பர்யமில்லை. ஸ்வஸம்பந்த மறுக்கை யென்றது பரஸம்பந்தகரணத்திற்கும் உபலக்ஷணம். இதை ஸாரமென்றால் பரஸமர்பணம் முக்யமன்று என்று நினைத்துவிடவேண்டா. ஸகலம் தத்தி தவைவ நியதம் ஸ்வம் என்கிற விடத்திலே ஏவகாரத்தின் விவரணத்திற்காக நமம என்று ஸ்வஸம்பந்த மறுக்கை யென்றார். இதில் மம என்கிற அஹமர்த்தத்திற்கு ஜ்ஞாநவைசத்யம் ஸாரமன்று, மற்ற அம்சத்தால் சொன்ன ஸம்பந்தநிஷேதமும் அநாதியாகவே தனக்கு ஸம்பந்தமில்லை என்கிற அர்த்தமாக வேண்டும்; அன்யதா வீர்யம் அடியற்றதாகாதென்று இதற்கு ப்ராதாந்யம். அந்த ஸமர்ப்பணமும் ஸ்வரூப ஸமர்பணத்திலேயே நிற்காமல் பரபல ஸமர்ப்பணபர்யந்தமாகுமென்பது இந்த ச்லோகத்திலிராவிட்டாலும் கருத்திலுள்ளதென்று அறிவிப்பதற்காக அஹமபி இத்யாதி ப்ரதாநமான என்றவரையிலாம். ஆளவந்தாரே பிதா த்வம் என்கிற ச்லோகத்தில் பக்தப்ரபன்னஸாதாரணமான அம்சத்தைச் சொன்ன பிறகு ப்ரபன்ன என்கிற முடிவான விசேஷணத்தினால் த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே என்று தாம் செய்த சரணாகதியை நினைப்பூட்டி அதில் பரஸமர்ப்பணமும் சேர்ந்திருக்கிறதென்பதை தவைவாஸ்மி பர: என்று அறிவித்திருக்கிறார். அங்கு பர பதத்திற்கு என்னுடைய வ்யாபாரத்தை யபேக்ஷிக்காமலே உன்னால் நான் ரக்ஷிக்கப்பட வேண்டியவன் என்றதே பொருள். புண்யபாப வ்யாபார ஸாபேக்ஷமாக ஈச்வரன் ரக்ஷிப்பது எல்லார்விஷயத்திலுமுள்ளதே, தவ பரோऽஹமகார்ஷி, என்றவிடத்திற்போல் வ்யாபாரநிரபேக்ஷமாக பரணீயன் என்றதே பரசப்தார்த்தம். சாஸ்த்ரார்த்தத்தில்=ஸ்வாத்மானம் மயி நிக்ஷிபேத் என்கிற சாஸ்த்ரார்த்தமான ஆத்ம ஸமர்பணத்தில்.

உபாயபரமான பூர்வகண்டத்தில் ஸமர்ப்பணத்தைச் சொல்லாமையால் ஸமர்ப்பணம் அநுஷ்டேயமன்று. 'ப்ரபத்யே என்பதற்கு ஸமர்ப்பணம் அநுஷ்டேயமென்று பொருள் சொன்னாலென்ன' என்னில்—ப்ரபத்தி விச்வாஸ: இத்யாதி ஸம்ப்ரதாய வாக்யத்துக்கு இது விருத்தமாகும் என்கிற சங்கையைப் பரிஹரிக்கின்றவராய் மந்த்ரத்தில் அதை யநுஸந்திக்க வேண்டுமிடத்தைக் காண்பிக்கிறார் இப்படி இதி. ஆத்ம நிக்ஷேபவாக்யத்திலே ஆத்ம ஸமர்ப்பணத்திற்கு சாப்தப்ராதான்யம் இருந்தாலும் த்வயத்தில் பரஸமர்ப்

பரமான பூர்வखण्डத்தில் महाविश्वासपूर्वक-गोप्तृत्ववरणगर्भமான शरणशब्दोपश्लिष्ट-क्रिया-पदத்திலே சேர்த்து अनुसन्धेயக்கப் प्राप्तம். இப்படி இவை ஆறும் இம்மந்த்ரத்திலே विमर्शदशैயில் தனித்தனியே அநுஸந்தித்தாலும் वाक्यार्थप्रतिपत्तिदशैயில்

---

பணத்தை ப்ரதாநமாகக் கொள்ளவேண்டுமென்பதற்காக சேஷத்வாநுஸந்தாந விசிஷ்டமான भरसमर्पणமென்றது. पूर्वखण्डம் அங்கபஞ்சகபரமாய் उत्तरखण्डம் ஸமர்ப்பண பரமாகலாமே. அப்போது மந்த்ரத்தில் ஸமர்ப்பணம் செவ்வனே சொல்லப்படுமே என்கிற சங்கையைப் பரிஹரிக்க உபாய பரமான பூர்வகண்டத்தில் என்றது. அருளாளப் பெருமாளெம்பெருமானுர் அந்த யோஜனையைக் கொண்டிருந்தாலும் ஸம்ப்ரதாயத்தில் உத்தரகண்டத்தை உபயே பரமாகக் கொண்டிருப்பதால் பூர்வகண்டமே அங்கப்ரதாந ஸர்வாம்சபோதகமாக வேண்டுமென்று கருத்து. महाविश्वासेति. பூர்வர்களின் வ்யாக்யாநப்படி ப்ரபத்தியாவது மஹாவிச்வாஸமே. அவ்வளவோடு நிற்காமல் विश्वासपूर्वकं प्रार्थनमिति यावत्—என்றும் பூர்வவாக்யமிருப்பதால் महाविश्वासपूर्वकगोप्तृत्ववरणம் பொருளாயிற்று, இங்கே உபாயத்வ வரணமென்னுமல் गोप्तृत्व वरणமென்றதால், भरसमर्पणமே சேர்த்து அநுஸந்திக்கப்படுமென்றதால் अनुसन्धेயங்களிலே உபாயத்வ ப்ரார்த்தநையைச்சேர்க்காமையால், அது நியதாமாகவுள்ளதானாலும் அநுஷ்டேயமன்றென்று தெரிகிறது, மஹாவிச்வாஸமாவது உபாயாந்தர ஸ்த்தாநத்தில் நின்று ஸர்வேச்வரன் ரக்ஷிப்பானென்ற கலங்காத விச்வாஸம். இதுவும் गोप्तृत्व வரணமும் சொல்லப்பட்டால் இங்கு அநுஸந்திக்கப்படும் உபாயாந்தர ஸத்தாநஸ்த்திதியானது भरसमर्पणம் செய்யாமல் வரக்கூடியதன்றுகையால் भरन्यासம் இங்கே வ்யஞ்ஜிதமாகிறதென்றதாம், மஹாவிச்வாஸமுள்ளவனும் फलத்தில் த்வரையில்லாமல் गोप्तृत्ववरणம் செய்யாமலிருந்தால் பரந்யாஸம் வ்யஞ்ஜிதமாகாது. गोप्तृत्व-वरणம் மட்டும் பக்தனுக்குமிருப்பதால் அது भरन्यास साधकமாகா, ஆகையால் இரண்டையும் சேர்த்தது. இதுவரையில் ப்ரதாநமான ப்ரபதநம் நிரூபிக்கப்பட்டது. ப்ரபதந சப்தத்திற்கு प्रार्थनान्वित भरसमर्पणம் முக்யார்த்தமாகையாலே ஸ்வரூப ஸமர்ப்பண भर ஸமர்ப்பணங்கள் முமுக்ஷுவுக்குச் சேர வேண்டியிருப்பதால் அவற்றை யங்கமாகச் சேர்ப்பது தெரிவதற்காக ஸாங்கப்ரபதநமென்று இந்த அதிகாரத்திற்குப் பெயர் வைத்தது. அவ்வளவேயன்றி, பூர்வாதிகாரத்தில் அங்கங்கள் சொல்லப்பட்டிருந்தாலும் அந்த அங்கங்களும் இந்த அம்சத்ரயரூபமான அங்கியும் அநுஸந்திப்பதையும் அநுஷ்டிப்பதையும்இங்கே சேர்த்து நிரூபிப்பதாலும் ஸாங்கப்ரபதநமென்று பெயர். இதைத் தொடங்குகிறுர் இப்படி இவை இத்யாதியால். இவை ஆறும். பூர்வாதிகாரத்தில் சொன்ன ஐந்து பரிகரங்களும் இங்குச் சொன்ன ஆத்ம ஸமர்ப்பணமும். விமர்சதசையில்—எந்த பதத்தில் எந்தவெந்த அம்சம் கருதப்படுகின்றது என்று விசாரிக்கும் காலத்தில்; 'வாக்யார்த்த ப்ரதிபத்தி தசையில்' இதி. ப்ரதமகண்டம் ஒரு வாக்யம்,இரண்டாம் கண்டத்தில் சதுர்த்

அல்லாத वाक्यार्थங்கள்போலே स्वाङ्गமான प्रधानம் एकबुद्ध्यारूढமாம் ஆகையால் यथाशास्त्र साङ्गप्रधानानुष्ठानம் सकृत् कर्तव्यமாயிற்று.

अनेकव्यापारसाध्यமான धानुष्कனுடைய लक्ष्यवेधार्थமான बाणमोक्षம் क्षणकृत्यமா

---

த்யந்தங்கள் தனிவாக்யம். நம:என்றது தனி; இந்த மூன்று வாக்யார்த்தங்களை யும் அங்கங்குத்தோன்றின ஆநுகூல்ய ஸங்கல்ப ப்ராதிகூல்யவர்ஜநகார்பண் யாத்யங்கங்களையும் சேர்த்து ஒரு விசிஷ்டமான வாக்யார்தமாகவாக்கி க்ரஹிக் கும் போது என்றபடி. 'அல்லாத வாக்யார்த்தங்கள் போலே' இதி. परार्थानुमानமாகிற पञ्चावयव वाक्यप्रयोगத்தில் தனித்தனியே அநேக வாக்யமானாலும் ஒரு விசிஷ்ட வாக்யார்த்த கல்பநை செய்வது போலும், யாகாதி விதிக்கான வாக்யங்களில் ப்ரதாந வாக்யம் வேறாகவும், அதற்குப் பலன் சொல்லும் வாக்யம் வேறாகவும், பற்பல அங்கங்களைச்சொல்லும் வாக்யங்கள்வெவ்வேறாக வுமிருந்தாலும் "இந்த இந்த அங்கங்களோடு சேர்ந்த இந்த ப்ரதாநத்தை இப்பலத்திற்காக இங்கே இப்போது இன்னார் அநுஷ்டிக்க வேண்டுமென்று ஒரு மஹாவாக்யமான ப்ரயோகவிதி கல்பிப்பது போலும் என்றபடி. एकबुद्ध्यारूढமாம். அங்காங்கிகளை யநுஷ்டிக்க வேண்டிய க்ரமத்தை ஏற்படுத்தி அவற்றினிடையில் இதற்கு ஸம்பந்தப்படாத விஷயத்தைக் கலக்காமல் முதலங்கம் தொடங்கி முடிவு வரையில் அநுஸ்யூதமான புத்தியால் எல்லாம் க்ரஹிக்கப்படுவதாலே एकबुद्ध्यारूढமென்கிறது. உபதேசகாலத்தில் அங்காங்கி களை க்ரஹிப்பது. பிறகு மநநம் செய்யும் போது அந்தந்த இடத்தில் அந்தந்த அம்சங்களை விமர்சிப்பது; பிறகு அநுஷ்டாநகாலத்தில் மந்த்ர ப்ரயோகம் செய்தவுடன் இவன் க்ரஹித்தபடி மந்த்ரார்த்தத்தை ஸ்மரிப் பது; பிறகு இந்த அங்காங்கிகளுக்கு க்ரமங்களை யநுஸரித்து அவிச்சிந்ந மாக அநுஸந்திப்பது என்றவாறு அநுஸந்தாநம் பல கால் ஆனாலும், ப்ரப தநம் ஸக்ருத் கர்தவ்யம் எனக் குறையில்லை யென்கிறார் ஆகையால் இதி. இவ் வாறு இசையாமல் முதல் பதார்த்த அநுஸந்தாநத்தில் ஆநுகூல்ய சங்கல் பாதிகள் அநுசந்திப்பதாலே அதே போதும். பிறகு நாராயண சரணௌ சப்தார்த்த விமர்சத்திற்குப்பிறகு மஹாவிச்வாஸாதிகளையும் அங்கு வ்யஞ்ஜித மான भरஸமர்பணத்தையும் அத்துடன் சேர்ந்த ஸ்வரூப फल ஸமர்பணங் களையும், கடைசியாக உத்தம புருஷனில் கார்பண்யத்தையும் அநுஸந்தித்த தாலே எல்லாம் அநுஷ்ட்டிதமாய்விட்டது என்று நினைக்கலாகாதென்றபடி. இப்படி ஸக்ருத்கர்தவ்யமான ஸாங்க ப்ரபத்தியை க்ஷணகால ஸாத்யமாகச் சொல்வதற்குத் தாத்பர்யத்தை த்ருஷ்டாந்த புரஸ்ஸரமாக அருளிச்செய் கிறார். அநேகேதி. धानुष्कன்—வில்லாளி. लक्ष्यवेधம்—குறியடித்தல். बाण- मोक्षம்—அம்பை விடுவது. முண்டகோபநிஷத்தில், "प्रणवो धनुः शरो ह्यात्मा ब्रह्म तल्लक्ष्यमुच्यते । अप्रमत्तेन वेद्धव्यं शरवत् तन्मयो भवेत् ॥" என்ற ச்ருதியில் ஆத்ம ஸமர்ப்பணத்தை बाण ப்ரேரணத்திற்கு ஸமமாகச் சொல்லியிருக்கிறது. இங்கே ப்ரணவம் வில்லாகும். फलभरविशिष्टமான ஆத்ம ஸ்வரூபம் அம்பாகும்.

கிருப்போலே இவ்வாத்மரக்ஷாபரஸமர்ப்பணமிருக்கும்படியென்று ச்ருதிஸித்தம். இப்பரஸமர்ப்பணமே ப்ரபத்திமந்த்ரங்களில்ப்ரதானமாக அநுஸந்தேயமென்னுமிடத்தை "अनेनैव तु मन्त्रेण स्वात्मानं मयि निक्षिपेत् । मयि निक्षिप्तकर्तव्यः कृतकृत्यो भविष्यति ॥" என்று ஸாத்யகிதந்த்ரத்திலே பரஸ்வீகாரம் பண்ணுகிற சரண்யன் தானே

---

ப்ரஹ்மம் குறியாகும். தவறுதபடி கவனத்துடன் அடிக்கவேண்டும். அம்பு குறியொன்றையே குறித்திருப்பது போல் ஆத்மாவை பரப்ரஹ்ம நோக்காக்கி ப்ரயோகிக்க வேண்டும் என்கிறது. இங்கே நாண் கட்டுவது அம்பை எடுப்பது தொடுப்பது இழுப்பது குறிக்கு நேராக்குவது விடுவது என்ற பல வ்யாபாரங்கள் ஒன்றின் பின் ஒன்ருகச் செய்யப்படுவதானுலும் அப்யாஸமுள்ளவனுக்கு வெகுவேகமாய் எல்லாம் ஒரு க்ஷணத்தில் நடப்பதா கவே பிறர் நினைக்கும்படியாகிறது போல், இங்கும் வேறு வ்யாபாரக் கலப்பின்றி தொடர்ச்சியாக இவற்றின் அநுஷ்டாநம் முறைப்படி நடப்ப தால் இடையில் விச்சேதமில்லை; அங்காங்கிகளின் நீடிப்பில்லை; பக்தியோகத் திற்போல் தொடர்ச்சியான ஆவ்ருத்தியில்லை என்பதற்காக க்ஷணகார்ய மென்கிறது என்றபடி.

த்வயத்தில் ஸித்தோபாயம், அவன் குணங்கள், திருமேனி, ப்ரபத்தியின் அங்காங்கிகள், ஃபலம், ஸ்வஸம்பந்த மறுக்கை என்று பல அம்சங்கள் சொல் லப்படா நிற்க ஸாங்கமாக ப்ரபதநம் ப்ரதாந வாக்யார்த்தமென்பது எவ் வாறு என்பதற்கு உத்தரம் அருளிச்செய்கிருர் இப் भरेति, अनेनेति, இங்குச் சொன்ன மந்த்ரம் 'तद्विष्णोः' என்று தொடங்கியதாகும். இங்கே एव तु என்ற சொற்களால் இம்மந்த்ரம் ஃபலமாகிய பரமபதத்தை மட்டும் சொல்வ தானுலும் ஸாங்க ப்ரபத்தியைச் சொல்ல ஸ்பஷ்டமான சப்தமிராவிடினும் ப்ரபத்திக்கு மந்த்ரமாகலாமென்று ஸூசிப்பித்தபடி. இந்த மந்த்ரத்தி னுலேயே தன் ஆத்மாவை என்னிடம் ஸமர்ப்பிக்க வேண்டும்; தான் செய்ய வேண்டியதை என்னிடம் ஸமர்பித்தவன் க்ருதக்ருத்யனுவான் என்றது. இங்கேபூர்வார்த்தத்தில் மந்த்ரார்தங்கள்பலவற்றில் ஆத்மநிக்ஷேபம் ப்ரதாந மென்றது. அந்த ஆத்ம நிக்ஷேபத்தில் அடங்கிய ஸ்வரூப भर फल ஸமர் பணங்களில் भर ஸமர்ப்பணம் ப்ரதாநமென்பது निक्षिप्तकर्तव्यः என்ற பதத் தால் அறிவிக்கப்பட்டது. स्वरूप, भर, ஃபலங்களில் भरம் ஒன்று தானே கர்த்த வ்யம். அதாவது முக்யோபாயம். அதையவனிடம் ந்யாஸம் செய்யவேண் டும். எந்த மந்த்ரத்திலும் பதார்த்தங்கள் எவ்வளவோ இருப்பினும் अनुष्ठेय प्रधान कार्यந்தான் தாத்பர்யார்த்தமாகும். அவ்வாறே இங்கும். இதுவரையில் அங்கியின் அம்சங்களும் ஐந்து அங்கங்களும் இவை மந்த்ரத்தில் அநுஸந் திக்க வேண்டியவை சொல்லியாயின. இவை தவிர ஸாத்துவிக த்யாகம் குருபரம்பரோபஸத்தி, மந்த்ரோச்சாரணம், அநுஷ்டாநத்திற்காக அர்த்தாநு ஸந்தாநம்என்கிற அங்கங்களையும் சேர்த்து ப்ரயோக விதியைக் கல்ப்பிக்க வேண்டுமென்பதைத் தெரிவிப்பதற்காக அவற்றையும் சேர்த்து அருளுகிருர்

தெளியவருளிச்செய்தான். இதில் साङ्गानुष्ठानமாயற்றது कर्तृत्वत्याग ममतात्यागफल-त्याग-फलोपायत्वत्यागपूर्वकமான आनुकूल्यसङ्कल्पाद्यर्थानुसन्धानத்தோடே गुरुपरम्परोच्चारण पूर्वक-द्वयवचनमुखத்தாலே स्वरूप-फलन्यासगर्भமான आत्मरक्षाभरसमर्पणம் பண்ணுகை.

இக் कर्तृत्व-त्यागத்துக்கு निबन्धनம்-தன் कर्तृत्वமும் அவனடியாக வந்ததென்று

---

'இதில் ஸாங்காநுஷ்டாநம்' என்று, இந்தவாக்யம் க்ரமத்தில்மாருட்டமிருப்ப தால் ப்ரயோகவிதி ப்ரதர்சநத்திற்காக வந்ததன்று. இவையும் சேரவேண்டு மென்பதற்காக வந்தது. ஸாத்விக த்யாகத்தில் அடங்கியுள்ள நாலு த்யாகங்களைச் சொல்லுகிருர் कर्तृत्वेत्यादि பதத்தினுல். आनुकूल्य ஸங்கல்ப்பாதி பதத்தினுல் ப்ராதிகூல்யவர்ஜநாதிகளையும் ஸங்க்ரஹிப்பது अर्थानुसन्धानத் தோடே என்பதற்கு இவ்வர்த்தங்களுடைய அநுஷ்டாநத்தோடே என்று பொருள். அதனுல் இவற்றையும் அநுஷ்டிக்க வேண்டுமென்றதாகும். அப்போது குருபரம்பராநு ஸந்தாநாதிகளை மேலே சொல்வது சேருமோ வென்னில். மந்த்ரத்திற்கு ப்ரதாநார்த்தம் भर ஸமர்பணம்; ஆகையால் மந்த் ரோச்சாரணபூர்வகம் भरஸமர்பணமென்று சொல்ல வேண்டியதாயிற்று. அதற்கும் குருபரம்பராநுஸந்தாநம் அங்கமென்பதற்காக அதையும் அத் தோடு சேர்த்ததென்க. இனி அர்த்தாநுஸந்தாநத்தோடே என்ற பதத்திற்கு அர்த்த சப்தஸ்வாரஸ்யத்தாலே ஸமுதாய ஜ்ஞாநபூர்வக ஸக்ருதுக்தி என்ற விடத்திற் போல் அங்காங்கிகளுடையவநுஸந்தாநம் என்கிற ஸ்வரஸார் த்தமே கொள்ளலாம். அது ப்ரயோகாரம்பத்திற்குமுன்னுகும். மறவாமலிருக்க வேண்டுமென்பதற்காக. அது குருபஸத்திக்கு முன்னுகவே யாகலாமென்று அதைச் சொன்னது. இதன் பிறகு குருபரம்பராஸேவநம், மந்த்ரோச்சார ணம், அதன் பிறகு அங்கபஞ்சகாநுஷ்டாநம். அதைச்சொல்லாதது அநு ஸந்தாநத்தைச் சொன்னதாலும் கீழே धानुष्कव्यापारம் போலே அங்காங்கிகள் சேரும்படி தெரிந்திருப்பதாலுமென்க. த்வயவசநமுகத்தாலே—த்வயோச் சாரணபூர்வகமாக. முகபதத்தினுலே இது தவிர வேறு மந்த்ரோச்சாரணமு முண்டு என்று அறிவிக்கப்படுமென்றும் உரைப்பர். இந்த அங்கபஞ்சகத் திற்கு அங்கியாயிருப்பது भरஸமர்ப்பணமே. ஸ்வரூப फल ஸமர்பணங்கள் இவற்றுக்கு அங்கியாகாவிட்டாலும் 'आत्मानं मयि निक्षिपेत्' என்கிற ஆத்ம நிக்ஷேபத்தில் அடக்கப்பட்டிருப்பதால் சேர்த்தே அநுஷ்டிக்கப்படுமென்று தெரிவிப்பதற்காக ஸ்வரூப फल ந்யாஸகர்ப்பமான என்றது. गर्भமான என்ப தால் அவற்றைத் தனக்குள் அடக்கிக்கொண்ட என்றதாம். ஆக இந்த வாக்யத்தில் அநுஷ்டிக்க வேண்டியவையெல்லாம் சொல்லியாயின. ப்ரயோக. க்ரமத்தை வேறிடத்தில் காண்க. இப் ப்ரபத்தியின் அநுஷ்டாநத்திற்கு முன் னுக புருஷகார ப்ரபத்தியுமுண்டு. அதையும் இங்குச் சொன்ன எல்லா அங்க ங்களோடு சேர்த்து அநுஸந்திப்பதாம்.

இங்குச் சொன்ன ஸாத்விக த்யாக அம்சங்களுக்குக் காரணங்களை வெளி யிடுகிருர் இக்கர்த்ருத்வ இத்யாதியால், ப்ரபத்தியை முமுக்ஷு அநுஷ்டிக்கிற

தனக்கு यावदात्मभाविயான भगवदेकपारतन्त्यத்தை அறிகை. ममतात्यागத்துக்கும் फल-त्यागத்துக்கும் निबन्धनம் आत्मात्मीयங்களுடைய स्वरूपानुबन्धि-भगवदेकशेषत्वज्ञानம். फलोपायत्वत्यागத்துக்கு निबन्धनம்-शरण्यप्रसादनமான இவனுடைய अनुष्ठानம் प्रधान-फलத்துக்கு व्यवहितकारणமாகையும், अचेतनமாகையாலே फलप्रदानसङ्कल्पाश्रय மல்லாமையும். ஈச்வரன் फलोपायமாகிறது -सहज-सौहार्दத்தாலே करणकळेबर-प्रदानம் தொடங்கி दुर्योधारणपर्यन्तமாக ஸர்வத்துக்கும் आदिकारणமான தானே प्रसादपूर्वक-सङ्कल्पविशेषविशिष्टனாய்க் கொண்டு अव्यवहितकारणமாகையாலும், उपाया-न्तरशून्यனுக்கு அவ்வோ उपायस्थानத்திலே நிவேசிக்கையாலும். இங்ஙனிருக்

---

படியால் அவனே கர்த்தாவாயிருக்க, கர்த்ருத்வ த்யாகம் எப்படி செய்ய முடியும்? இவனால் செய்யப்படும் செயல் இவனதாகாவிட்டால் இவனுக்கு எதற்காக மோக்ஷம் கொடுப்பது. ஆகக் கர்மாவில் ममताத்யாகமும் தவறு. மோக்ஷத்தில் பரமஸாம்ய மடைகிறபடியால் फलத்யாகமும் தவறு. ஸ்வர்க்கா திகளுக்கு யாகாதிகளைப் போலே प्रपत्त्या वा महामुने ! प्राप्योऽहமென்று ப்ரபத் திக்கு உபாயத்வம் ஸ்பஷ்டமாயிருப்பதால் உபாயத்வ த்யாகமும் உசித மன்று—என்கிற கேள்விகளுக்குப் பரிஹாரமாக நிபந்தநங்கள் கூறப்படு கின்றன, இவன் கர்த்தாவென்பது உண்மை; இதனை அறிவிப்பதாகும் 'தன் கர்த்ருத்வமும்' என்ற உம்மை. ஆனாலும் அவனால் ப்ரேரிக்கப்பட்டுச் செய்வதால் அந்தப் பாரதந்த்ர்யம் தோற்றுவதற்காக கர்த்த்ருவ த்யாகம் சொன்னது. இவன் செய்யும் கர்மாவும் இவன் பெறும் फलமும் இவனதானாலும், இவனே பகவானுக்கு சேஷமானபடியால் இவனுடை யதையெல்லாம் அவனதே என்று பாவிக்க வேண்டியபடியால் தன்னுடைய சேஷித்வத்தை உபேக்ஷிப்பது ந்யாயமாகுமென்று அவனுடைய சேஷ த்வத்துக்காக மமதாத்யாக-கர்த்ருத்வத்யாகாதிகளைச் சொன்னது. भक्तिप्रपत्ति களுக்கு மோக்ஷத்தைக் குறித்து ஒவ்வொரு விதமாய் உபாயத்வமிருந்தாலும் தேவதாநிரபேக்ஷமாக யாகாதிகளே ஸ்வர்க்காதிகளுக்கு உபாயமென்று சிலர் நினைப்பதுபோலன்றி நாம் இவற்றை வ்யாஜமாகச் செய்வோம். இவற்றால் ப்ர ஸந்நனான ஸர்வேச்வரனே நேராக ஸங்கல்பித்துக் காரணமாகிறபடியாலும் இவற்றை யநுஷ்டிப்பித்ததும் அவனேயானபடியாலும் அதற்குத் தக்க கரண கலேபர ஆசார்யஸம்பந்தாதிகளும் அவனாலானபடியாலும் இவை முக்யோபா யங்களல்ல. மேலும், பக்தியைப் போல் உபாயத்வம் ப்ரபத்திக்கில்லை, ப்ரபத்தி யாவது நான் உபாயமநுஷ்டிக்க அசக்தன், நீ உபாயமாக வேண்டுமென்று ப்ரார்த்தனை யாகிறதே. அதால் அவனே உபாயம். இது உபாயமன்று, அவன் உபாயமாகைக்கு பரம்பரயா உபாயமாகலாம். ஆகையால் फलोपायत्व த்யாகம். மோக்ஷசாஸ்த்ரங்கள் இப்படி த்யாகங்களைச் சொல்லியிருப்பதால் ஜீவாதிகளுக்குக் கர்த்ருத்வாதிகளில்லை யென்று தான் சொன்னாலென்ன; பரம்பரயாகூட ப்ரபத்தி உபாயமில்லை யென்று சொன்னால் தான் என்ன இத்யாது கேள்விகளுக்குப் பரிஹாரம் இங்ஙனித்யாதி. धर्मिग्राहकமான ஜீவ

கைக்கு அடி தர்மிக்ராஹகமான சாஸ்த்ரத்தாலே அபாதமான வஸ்துஸ்வபாவமாகையால் இவ்வர்த்தம் யுக்திகளால் சலிப்பிக்கவொண்ணாது.

இஸ் ஷடங்காநுஷ்டாநத்துக்கு நடாதூரம்மாள் அருளிச் செய்யும் சுருக்கு— "அநாதிகாலம் தேவரீருக்கு அநிஷ்டாசரணம் பண்ணுகையாலே ஸம்ஸரித்துப் போந்தேன்; இன்றுமுதல் அநுகூலனாய் வர்த்திக்கக் கடவேன்; ப்ரதிகூலாசரணம் பண்ணக்கடவேனல்லேன்; தேவரீரைப் பெறுகைக்கு என் கையில் ஒரு கைம்முதலில்லை; தேவரீரையே உபாயமாக அறுதியிட்டேன், தேவரீரே உபாயமாக வேணும், அநிஷ்டநிவ்ருத்தியிலாதல் இஷ்டப்ராப்தியிலாதல் எனக்கினி பர

---

ஸ்வரூப - ஈச்வரஸ்வரூப - கர்மஸ்வரூப - ப்ரபத்திஸ்வரூப - பலஸ்வரூபங்களை அறிவிக்கின்றன. கத்யாதிகளில் அங்கபஞ்சகம் சொல்லப்படாமலிருந்தாலும் அவை அங்கியோடு சேர்த்து அநுஸந்திக்கப்பட வேண்டுமென்பதற்கு ஸம்ப்ரதாய ஸ்ரீஸூக்தியையும் ப்ரமாணமாக்குகிறார் 'இஸ்ஸாங்காநுஷ்டாநத்திற்கு' இதி. அநிஷ்டாசரணம் பண்ணுகையாலே= அநுகூலனாயிராமல் ப்ரதிகூலனாயிருந்தபடியாலே. கைம்முதல்= மூலதமான முக்யோபாயாநுஷ்டாநம். அது இல்லை யென்றதால் அகிஞ்சநன் என்றதாயிற்று. உபாயமாக அறுதியிட்டேன்= உபாயமாவாயென்று த்ருடமாக நிச்சயித்தேன். உபாயமாகை யென்பதற்கு நிரபேக்ஷரக்ஷகனாகை யென்று பொருளாகையால் ரக்ஷிஷ்யதீதி விச்வாஸ: என்றது இங்கே அடங்கிற்று. பொதுவாக பகவான் ரக்ஷகன் என்பது பக்தனுக்கும் உண்டு. குரூபாயம் அநுஷ்டியாத போதும் ரக்ஷிப்பான் என்கிற மஹாவிச்வாஸம் இருப்பதை அறிவிப்பதற்கு, உபாயஸ்த்தாநத்தில் இருந்து பர ஸ்வீகாரம் செய்து ரக்ஷிப்பாயென்று விச்வஸிக்கிறேனென்று சொல்லவேண்டும். அதற்காக உபாயமாக என்ற சொல். நாலு அங்கங்கள் சொல்லப்பட்டன. மேலம்சத்தைச் சொல்ல, 'தேவரீர் உபாயமாக வேண்டும்' என்பது. கோப்த்ருத்வ வரண் சொல்லவேண்டிய இடத்தில் உபாயமாக வேணுமென்றது உபாயத்வ ப்ரார்த்தநையில் கோப்த்ருத்வ வரணம் அடங்கியுள்ளதாலாம்; இப்படி சொன்னதால் பரந்யாஸம் வ்யஞ்ஜிதமாகிறது. ஆக கோப்த்ருத்வ வரணமும் பரந்யாஸமும் இவ்வாக்யத்தில் சொல்லப்பட்டன. ப்ரபதநசப்தத்திற்கு இரண்டும்சேர்ந்து அர்த்தமாகையால் சேர்த்தது பொருந்தும். இந்த ஸங்க்ரஹத்தை மனத்தில் கொண்டும் கீழே சுருக்கு என்ற சொல். இப்படி ஸாரஸ்வாதிநியின் கருத்தாகும். ஸாரஸங்க்ரஹத்தில் உபாயத்வ ப்ரார்த்தநையும் செய்யவேண்டும்; அதையே இங்குச் சொன்னது என்று கருத்து ஸ்பஷ்டமாகிறது. அப்போது பர ஸமர்பணத்தை மேல் வாக்யம் சொல்லுமென்கிறார்போலும். உபாயத்வப்ரார்த்தநை அங்கி கோடியில் சேர்ந்தது என்கிறார்; அப்போது இந்த வாக்யமும் மேல் வாக்யமும் அங்கியைச் சொல்வதாகில் கோப்த்ருத்வ வரணமென்ற அங்கத்தைச் சொல்லும் வாக்யம் எது? அதற்குத் தனியாக அநுஷ்டாநமுண்டா, இல்லையா?

முண்டோ?" என்று.

இவ்விடத்தில் आनुकूल्यसङ्कल्पादिகள் उपायपरिकरமாய் सकृत्தாயிருக்கும். மேல் இவன் கோலி(ரி)ன अनुकूलवृत्त्यादिகளோடே போ[ரு]கிறவிடமும் उपायफलமாய் यावदात्मभाविயாயிருக்கும். இவற்றில் प्रातिकूल्यवर्जनமும் அம்மான் அருளிச்செய்தபடியே आनुकूल्यसङ्कल्पம்போலே सङ्कल्परूपமானாலும்

---

இங்கு வேறோர் அபிப்ராயம் சொல்லலாம் गोप्तृत्व வரணமென்பது அந்தந்த இடத்திற்குத் தகுந்தபடி வெவ்வேறாகும். தனக்காக முக்யோபாயத்தை அநுஷ்டித்துப் பலன் பெறுவிக்கும் மஹானைப் பார்த்து, நீ ரக்ஷியென்றால், அங்குப் பலன் பெறுவிப்பது மாத்ரமே ரக்ஷணம். 'நீ भर ஸ்வீகாரம் செய்து ரக்ஷிப்பாயென்று நம்புகிறேன். ஆகையால் ரக்ஷி' என்றால் भर ஸ்வீகாரமும் செய்; பலனையும் பெறுவி என்றதாகும். ஆகையால் பக்தன் செய்யும் गोप्तृत्व வரணத்தைக்காட்டில் ப்ரபந்நனுடைய गोप्तृत्ववरणத்தில் भर ஸ்வீகாரம் அடங்கி யிருக்கிறது. இதை யறிவிப்பதற்காகவே உபாயமாக வேண்டுமென்று அருளினார். ஆகையால் ப்ரமாண வாக்யங்களில் गोप्तृत्व वरणத்தையே அங்கமாகச் சொல்லியிருக்க அதற்கு இது விருத்தமாகுமென்று நினைக்கவேண்டா என்றவாறு—. இந்த வாக்யம் அங்கத்தை மட்டும் சொல்வதானால் 'எனக்கினி பரமுண்டோ' என்கிற மேல் வாக்யமே भरन्यासத்தைச் சொல்லுகிறது என்னவேண்டும். भरन्यासமும் இங்கே சொல்லப்பட்டால் இஷ்ட ப்ராப்தி போல் அநிஷ்ட நிவ்ருத்தியும் தேவரீராலே ஆகிறபடியால் நான் நிர்பரன் என்பதையும், ஸக்ருதநுஷ்டாநமே போதுமாகையால் மேல் ஆவ்ருத்திக்கு ப்ரஸக்தியில்லை யென்பதையும் அறிவிப்பது மேல் வாக்யம் என்று அறிக. ஆக முதல்வாக்யத்தால் தெரிவித்த தன் சோகம் தனக்கில்லாமையைத் தெரிவிப்பது கடை வாக்யமென்னவேணும். ஸ்வரூப ஸமர்ப்பணத்திலே अनादिचौर्यம் அடியற்றதாக வேண்டுமென்று न मम என்று ஸ்வ ஸம்பந்தமறுக்கையைக் கீழே கூறியது போல், இங்கே भरத்துக்கு ஸ்வ ஸம்பந்தம் அறுக்கை முக்யமென்ற கருத்தாலே 'எனக்கினி भरமுண்டோ' என்றவாறு அருளினது என்னலுமாம், அங்கங்கள் ஐந்தின் அநுஷ்டாந க்ரமம் சொல்லியாயிற்று. எல்லாம் सकृत् ஒரு தரமே செய்யவேண்டுமென்று நிரூபிக்கிறார் இவ் இதி. भरஸமர்ப்பணம் பலகால் செய்யமுடியாது. அதற்கங்கமானவையும் அத்தோடுசேர்ந்து அநுஷ்டிக்கப்பட வேண்டுமாகையால் ஒரே தரமென்று சொல்லாமலே விளங்கும், ஆனாலும் மேலே यावज्जीवம் அநுகூல ஆசரணமும் ப்ரதிகூல வர்ஜநமும் வேண்டுமாகையால் அங்கங்களுக்கு யாவஜ்ஜீவம் அநுவ்ருத்தி யுண்டென்கிற சங்கையைப் பரிஹரிக்க இவ்வாறு அருளுகிறது. அநாதிகாலம் அநிஷ்டாசரணம் பண்ணிப் போந்தேன்; இனி அவ்வாறு ஆகேன் என்றால் அங்காநுஷ்டாநத்திற்குக் கடைசிவரையில் ஆவ்ருத்தி தோன்றுமே, सङ्कल्पेति. आनुकूल्यस्य सङ्कल्पः என்று ஸங்கல்பமே அங்கமாக விதிக்கப்பட்டபடியால் ஆசரணம் அங்கமாகாது.

सकृत्कर्तव्यமென்னுமிடம் सुस्पष्टம். "अपायेभ्यो निवृत्तोऽसि" என்கிறபடியே अभिसन्धिविராமமாதல் प्रातिकूल्यस्वरूपनिवृत्तியாதலானும் அதில் प्रथमक्षणம் அங்கமாய் மேலுள்ளது ஃபலமாகக் கடவது. இப்படி விச்வாஸத்திலும் பார்ப்பது. प्रवृत्तिरनुकूलेषु निवृत्तिश्चान्यतः फलम्। प्रारब्धसुकृताच्च स्यात् सङ्कल्पे च प्रपत्तितः॥

---

தத்காலத்தில் அநிஷ்டாசரணம் செய்து கொண்டு ருஜுவான ஸங்கல்ப்பம் செய்யமுடியாதாகையால் தத்காலத்தில் அநுகூலாசரணம் வேண்டியதே யாகும். ப்ராதிகூல்ய வர்ஜநமென்பதும் ப்ரதிகூலாசரணம் பண்ணக்கடவே னல்லேனென்கிற ஸங்கல்ப்பரூபமாக அம்மாள் அருளிச் செய்திருப்பதால் அதுவும் க்ஷணகர்தவ்யமாகிறது. ப்ரதிகூல ஆசரணத்தின் अभावமும் ப்ராதி கூல்ய வர்ஜநமாகலாம். 'अपायेभ्यो निवृत्तोऽसि' என்கிற வாக்யத்தைப் பார்த் தால் (लक्ष्मीतन्त्रम्) மேலே 'पातकेभ्यो भवोदधौ । तथाप्यत्र प्रवृत्तिर्या त्वत्स्मृतेः सापि नश्यतु ॥' என்றிருப்பதால், 'பாபத்திலிருந்து நிவ்ருத்தனாயிருக்கிறேன்; ஆனா லும் அதிலுண்டாகிற ப்ரவ்ருத்தி உன்னுடைய ஸ்மரணத்தினால் ஒழிய வேண்டும்' என்று ப்ரவ்ருத்தியைச் சொல்லியிருப்பதால் पापाचरणाभाव மென்னுமல் பாபாசரணத்தில் நோக்கில்லாமை யென்று சொல்லவேண்டி யிருக்கிறது. இந்த अभावம் நித்யமாய் எப்போதுமிருப்பதானாலும் प्रपत्त्यनु- ष्ठानक्षणावच्छिन्न अभावமே அங்கமாகையால் யாவஜ்ஜீவம் அங்காநுவ்ருத்தி யில்லை. இப்படி விச்வாஸத்திலும் இதி. அந்த க்ஷணத்தில் விச்வாஸ மிருந்து பிறகு அவிச்வாஸமானாலும் மோக்ஷமுண்டென்று இசையவில்லையே. யாவஜ்ஜீவம் ப்ருஹஸ்பதி ப்ரப்ருதிகளாலும் கலக்கவாகாத மஹாவிச்வாஸம் அங்கமாகுமென்கிறார்களே. ஆகையால் கடைசிவரையிலுள்ள விச்வாஸமே அங்கமென்ன வேண்டுமென்று கேள்வியுறும். இதற்குப் பரிஹாரமாவது— விச்வாஸமென்பது ஜ்ஞாநவிசேஷம். धर्मभूतज्ञानத்தில் பல கார்யங்களுக்கான பலவித ஜ்ஞாநங்கள் மேன்மேல் உண்டாகும் போதும், உறக்கம் முதலான கார்யகாலங்களிலும் மஹாவிச்வாஸம் எப்படி உண்டாய்க் கொண்டிருக்கும். ஆகையால் பிறகு சங்கைக்கு அவகாசமிராதபடி दृढसंस्कारம் ஸ்த்திரமா யிருக்கவேண்டும். அந்த ஸம்ஸ்காரத்திற்குக் காரணமான விச்வாஸம் ப்ர பத்த்யநுஷ்டாந காலத்தில் உண்டாகவேண்டும். அதற்குப் பிறகு பலகால் விச்வாஸமுண்டானாலும் அவை அங்கமல்ல. அக்காலத்திலுண்டான விச் வாஸம் த்ருடமானதா என்பது பின்னால் கார்யத்தைக் கொண்டு ஊஹிக்க வேண்டுமென்றபடி. ப்ரார்த்தநையும் ஸமர்ப்பணமும் सकृत् அன்று என்ற சங்கைக்கு இடமிராமையால் அதைச் சொல்லவில்லை.

அநுகூலாசரணமும் ப்ரதிகூலாநாசரணமும் ப்ரபந்நர்களெல்லோருக்கும் பின்னால் ஏகரீதியாகத் தெரியவில்லையே. இதை எப்படி உபாய பலமாகச் சொல் வதென்ன, அருளிச்செய்கிறார் प्रवृत्तिरिति. அநுகூலங்களில் ப்ரவருத்தியும். अन्यतः ப்ரதிகூலங்களினின்று நிவ்ருத்தியும் फलமாம். ஆநுகூல்ய ஸங்கல்ப்பமும் ப்ராதி கூல்ய வர்ஜநஸங்கல்ப்பமும் செய்தவனுக்கு ஸங்கல்பப்படி நடக்கவேண்டு

ஆகையால் இருந்த நாளில் निरपराधकैङ्कर्यத்தையும் प्रारब्धशरीरानन्तरம் மோக்ஷத்தையும் சேரப் ஃபலமாகக் கோலி(ரி)ப் ப்ரபத்தி பண்ணுவார்கள் நிபுணர்.

---

மென்று நோக்கு இருக்குமாகையால் அந்த ஸங்கல்பங்களுக்கு அவை பலனாகலாம். தவிர, ப்ரபத்தியநுஷ்டிக்காதவர்கள் பலர் அநுகூலமே செய்துகொண்டும் ப்ரதிகூலம் செய்யாமலுமே யிருப்பது போல் प्रपन्नனுக்கும் प्रारब्धसुकृताद्— பூர்வஜந்மபுண்யத்தாலும் ஆகலாம், தவிர, சிலர் மோக்ஷார்த்த ப்ரபத்தியநுஷ்டிக்கும் காலத்தில், பின்னே என்ன அநிஷ்டாசரணம் செய்ய நேருமோ என்று அஞ்சி, 'अनुकूलाचरणविरोधियும் प्रतिकूलाचरण हेतुவுமான பாபத்திலிருந்து என்னை நிவ்ருத்தி செய்யவேண்டும்' என்று सङ्कल्पे च = மோக்ஷ பலன் போல் இப்பலனையும் உத்தேசித்து ஸங்கல்பம் செய்தபோது, प्रपत्तितः—அப்படிப்பட்ட ப்ரபத்தியினாலும் அவை ஸித்திக்கும். இதில் ஸங்கல்ப்பம் செய்திருந்தாலும் பிறகு பாபவசத்தால் மாறலாமாகையாலும், பூர்வஜந்ம ஸுக்ருதமிருப்பது நிலையில்லையாகையாலும் மோக்ஷார்த்த ப்ரபத்யநுஷ்டாந காலத்தில் நிரபராத கைங்கர்யத்தையும் மோக்ஷத்தோடு சேர்த்துப் பெற ஸங்கல்பித்து ப்ரபத்தி செய்வாரென்று மூன்றாவது பக்ஷத்தை யாதரித்து அருளுகிறார் ஆகையால் இதி. இருந்த நாளில் = தேஹாவஸாநம் வரையிலானதான் இஷ்டப்பட்ட ப்ராரப்த கர்மாநுபவ நாளில். நிபுணர் இதி. இப்படிச் சேர்த்து ப்ரார்த்தித்து ப்ரபத்தி பண்ணுவதே நிபுணக்ருத்யமானால் இப்போது ஏன் அப்படி செய்யவில்லை யெனில்—நிரபராத கைங்கர்யம் நிரந்தரமாக நடக்காமைக்குக் காரணம் புண்ய ஸம்ஸர்க்கமும் பாபஸம்ஸர்க்கமும். ஒருவன் சிறிதும் துக்காநுபவமில்லாமல் ஸுகாநுபவமே வேண்டுமென்று ப்ரபத்தி பண்ணினால், அவ்வாறு பலன் பெறமுடியுமா? சரீர ப்ரயாஸை இல்லாமல் पाकादि கார்யங்கள் நடத்த விரும்பினால் அவ்வாறு நடக்குமா? இங்கு எதற்கும் துக்கமிச்ரத்வம் ஸ்வாபாவிகமாகையால் அதை விலக்க முடியாது. அதுபோல் ப்ரக்ருதி மண்டலத்தில் ஸர்வபாப நிவ்ருத்தி பண்ண முடியாது. அதனால் அபராத லேசமுமின்றி குறைவற்ற நிரந்தர கைங்கர்யம் வாழ்நாள் முழுமையுமென்பது கேட்கமுடியாததே என்னலாம். ப்ரபல அபராதங்களுக்குக் காரணமான பாபங்களிருந்தால் விலக்கக் கேட்கலாம். இதுவும் வ்ருத்தி க்ருசர்களாய் ப்ரதிக்ரஹாதிகளிலும் ராஜஸேவாதிகளிலும் ப்ரவ்ருத்தியுள்ள அதிகாரிகள் அதை விட்டாலொழிய இவ்வாறு கேட்க இயலார். மேலும். இதையும் மோக்ஷத்தையும் சேர்த்துக்கேட்டு ப்ரபத்தி செய்த பிறகு கைங்கர்யவிச்சேதமும் அபராதமும் நேர்ந்தால் ப்ரபத்தி நிஷ்பத்தியில் ஸம்சயமுண்டாகி மோக்ஷத்திலும் ஸம்சயமுண்டாகி விடும். எனவே ஐஹிக பலத்தை அத்தோடு சேர்ப்பதில்லை. 'मातर्भरति' என்று தொடங்கி 'वेङ्कटेश्वरकवेः स्वेनार्पितोऽयं भरः' என்று தேசிகன் அருளிச் செய்தபடி நிரபராத கைங்கர்யத்துக்காகத் தனி ப்ரபத்தி பண்ணலாம்— கூடியவரையில் நாமே ஸாவதாநமாயிருப்போமென்று துணிந்து அதையும்

**அறவேபரமென்றடைக்கலம் வைத்தனரன்று நம்மைப்**
**பெறவே கருதிப் பெருந்தகவுற்ற பிரானடிக்கீழ்**
**உறவேயிவனுயிர் காக்கின்ற வோருயிருண்மையை நீ**
**மறவேலென நம் மறைமுடி சூடிய மன்னவரே. 19**

---

எம்பெருமானிடம் கேட்காமலே கைங்கர்ய பரராய் அபராதம் நேர்ந்த போது ப்ராயச்சித்தம் செய்து கொள்ளலாமென்று இருப்பர் ஐஹிக பலத்திற்காகப் ப்ரபத்தி செய்யாதவர். அபராதம் செய்து ப்ராயச்சித்தம் பண்ணுத வரையும் ஈச்வரன் விடான் என்ற சாஸ்த்ரார்த்தம் கண்டு ஒரு ப்ரபத்தியோடிருப்பவரே பெரும்பாலும் உலகில். இவ்வதிகாரத்தில் கீழதிகாரத்தில் கூறிய அங்கங்களைப் போல் வேண்டுமான முமுக்ஷு-பரந்யாஸத்தில் சேர்ந்த ஸ்வரூப ஸமர்ப்பண, பரஸமர்ப்பணரூப அம்சங்களையும் அங்கானுஷ்டான க்ரமானுஸந்தானம், குருபரம்பரம், மந்த்ரோச்சாரணம், வாக்யார்த்த பரிசீலனம் என்றவற்றையும் கூறி ஸாங்கப்ரபதன நிரூபணம் செய்தார். இப் ப்ரபத்தியிலே ஆசார்ய நிஷ்ட்டையில் ஆதரம் தோற்றப் பாசுரம் அருளிச்செய்கிறுர் அறவே இதி. வைத்தனர் என்கிற வினைமுற்றுக்கு மன்னவர் எழுவாய். மறை—வேதங்களிலே. வேதார்த்த நிர்வாஹத்தில், முடிசூடிய—அபிஷேகம் பெற்ற, நம் மன்னவர்=அரசர்களான நம் ஆசார்யர்கள், உறவு. ஏ. சேஷசேஷி பாவம் என்கிற உறவினுலே, இவன் உயிர்=ஆசார்ய ஸம்பந்தம் பெறும்படி பிறவி பெற்றவனுடைய ஆத்ம ஸ்வரூபத்தை, காக்கின்ற—ரக்ஷிக்கின்றவனுன. ஓர் உயிர்-ஒப்பற்ற பரமாத்மாவின், உண்மையை-தத்வ ஸ்த்திதியை, நீ மறவேல்—நீ மறக்கலாகாது. என—என்று ஒவ்வொரு சிஷ்யனுக்கும் உபதேசித்து சிக்ஷித்த பிறகு, அன்று—அநாதி காலமாக, நம்மை பெறவே—அகிஞ்சநனுன நம்மையும் பெறவேண்டுமென்று, கருதி—திருவுள்ளம் கொண்டு. பெரு தகவு—பேரருளை உற்ற, பெற்றிருக்கும்; பிரான்—உபகாரகனுடைய, அடிகீழ்—திருவடியின் கீழே. அற ஏ=பரம் நீங்கும்படியே, பரமென்று-இச்சேதநன் உனது பரமாகிறுன் என்று விஜ்ஞாபித்து. அடைக்கலம்—ரக்ஷ்ய வஸ்துவாக, வைத்தனர்—ஸமர்பித்தனர். தம் சிஷ்யரான ஜீவாத்மாக்களின் ரக்ஷணபரம் தம் சிஷ்யர்களுக்கும் தமக்கும் நீங்கும்படி எம்பெருமானிடம் ஸ்வ பரோऽயம் என்று விஜ்ஞாபித்து அவன் திருவடிக்கீழ் சேர்த்தனர். அதற்கு முன் ஒவ்வொரு சிஷ்யனுக்கும், 'முக்யோபாய அநுஷ்டாந சக்தி யிராவிட்டாலும் உறவை ப்ரதாநமாக்கி அகிஞ்சநனையும் காக்கவேண்டுமென்று அநாதிகாலமாகப் பெரும் க்ருபையோடு ப்ரதீக்ஷிக்கின்ற மஹோபகாரகன் அவன்' என்கிற உண்மையை மறந்து ஏதேனும் உபாயங்களிலே இழியாதே என்று தனித்தனியே உபதேசம் செய்தனர். இதெல்லாம் ஆசார்யர்கள் வேதார்த்த நிஷ்கர்ஷம் செய்பவரில் சிறந்தவராயிருந்து ஸம்ஸாரத்தில் தவிக்கும் நம்மைக் காக்க முடிசூடி மஹாகாருணிகரா யிருப்பதால் என்றதாயிற்று.

युग्यस्यन्दनसारथिक्रमवति त्रय्यन्तसन्दर्शिते
तत्त्वानां त्रितये यथार्हविविधव्यापारसन्तानिनि ।
हेतुत्वं त्रिषु कर्तृभाव उभयोः स्वाधीनतैकत्र तत्
स्वामिस्वीकृतयद्भरोऽयमलसस्तत्र स्वयं निर्भरः ॥ २९.

---

அறவே பரமென்பதற்கு. பரம் அற என்று ரக்ஷாபரம் நீங்கும்படி என்று எல்லோரும் செய்த உரை, ஸாரதீபிகையில் அற-நீங்கும்படி, பரமென்று—இந்த ரக்ஷாபரம் உனதே என்று விஜ்ஞாபித்து என்று உரைக்கப்பெற்றது. இப்போது என்று என்ற சொல் வீணுகவில்லை. அற என்றவிடத்திலும் பரமென்ற கர்த்தா தானே ஸித்தம். இனி பரமறும்படி, அடைக்கலமென்று= ரக்ஷ்ய வஸ்துவென்று விஜ்ஞாபித்து, நம்மை அடிக்கீழ் வைத்தனர் என்றும் அந்வயிக்கலாம்; அன்று என்பதற்கு அநாதிகாலமாக என்று பொருள் உரைக்கப்பெற்றது. 'நீ மறவேல் என்று உபதேசித்த போதே' என்றும் உரைக்கலாம். நாலாம் அடியில் மறவேல் என= மறவேல் என்ன= நீ மறக்க வேண்டாமென்று உபதேசிப்பதற்காக மன்னவர்—ஆசார்யரானவர். என்றும் அந்வயிக்கலாம். இங்கு பரம் அற என்றதால் நிர்பரத்வமும், ஏகாரத்தினுல் நிஸ்ஸம்சயத்வமும், 'அடைக்கலம் வைத்தனர்' என்று நிர்பயத்வமும், 'பெருந்தகவுற்ற பிரான் அடிக்கீழ்' என்றதால் ஸுமனாவாயிருப்பதும் குறித்ததாம் என்று திருக்குடந்தை தேசிகன் அருளிச்செய்தபடி.

ஸ்வப்ரவ்ருத்திநிவ்ருத்தியே ப்ரபத்தி யாகையால் 'शरैस्तु सङ्कुलां कृत्वा लङ्कां परबलार्दनः । मां नयेत् यदि काकुत्स्थः' என்று பிராட்டி யிருந்தபடி நாம் மோக்ஷத்திற்காக ஒன்றும் செய்யாமலிருக்க வேண்டுமென்பர் சிலர். ஈச்வரன் சேதநாசேதநங்களுக்கு வ்யாபாரங்களை வகுத்து சாஸ்த்ரங்களில் விதித்தபடி அவனுக்குப் பரதந்த்ரரான நாம் அவன் சொன்னபடி செய்தே பாரதந்த்ர்யத்தை ரக்ஷிக்க வேண்டும். ப்ரபத்தியை விதித்திருப்பதால் அதைச் செய்து அதன் பிறகு அதற்கான வ்யாபாரத்திலிருந்து நிவ்ருத்தி தான் ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி-என்று சேதநாசேதந ஈச்வர தர்மங்களைப் பிரித்து நிரூபிக்கிறுர் युग्येति. युग्य—நுகத்தடியில் பூட்டப்பட்ட ப்ராணி, स्यन्दन—தேர், सारथि—தேர்ப்பாகன் இம் மூன்றினுடைய क्रमवति—முறையையுடையதாய், (முறையிலே) त्रय्यन्तसन्दर्शिते—"போக்தா போக்யம் ப்ரேரிதாரம்" என்ற வேதாந்தத்தில் காண்பிக்கப்பட்ட, यथार्ह—அந்தந்தத் தத்துவத்திற்குத் தகுந்த विविध-பலவித வ்யாபாரத்தொடர்ச்சியையுடைய तत्त्वानां त्रितये-சேதநன் அசேதநம் ஈச்வரன் என்ற மூன்று தத்துவங்களில், त्रिषु—மூன்றிலும் हेतुत्वं—வ்யாபார காரணத்வம் உள்ளது; कर्तृभावः கர்த்ருத்வமானது उभयोः—சேதநர்களிடத்திலும் ஈச்வரனிடத்திலும்; स्वाधीनता—ஸ்வாதந்த்ரயமானது एकत्र-ஈச்வரனிடத்தில் மட்டுமாம், तत्—இப்படி ஜீவனைக் கர்த்தாவாகக் கொண்டிருப்பதால், अयं-இந்த अलसः—ஜ்ஞாந சக்தியற்ற ஜீவன் स्वामि-

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे साङ्गप्रपदनाधिकारो द्वादशः 12.
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

—o—•—

---

स्वीकृतभरः:– எந்த फल விஷயமான தன்னுடைய பாரம் ஸ்வாமியான ஈச்வரனால் ஸ்வீகரிக்கப்படும்படியானனே. तत्र—அந்த भरவிஷயத்திலே स्वयं—தான் निर्भरः—செய்யவேண்டியதில்லாமல் இருப்பவனும். லௌகிக பலனுக்காக ஏற்பட்ட போஜநாதிகளையும் ஸர்வேச்வரனுடைய உகப்புக்கான கைங்கர்யங்களையும் செய்கிறபடி भरத்தை ஸ்வீகரிப்பதற்கு முன். அதற்காக சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்டதைச் செய்யவேண்டும்; வாளாவிருப்பது தகாது; பிராட்டியும், அவனை யாச்ரயித்த பிறகு அவன் ரக்ஷிக்கக் காத்திருப்பதும் தெரிந்த பிறகே शरैस्तु என்ற ச்லோகம் அருளினாள். भोक्ता भोग्यं प्रेरितारं என்ற ச்ருதியில் முதலில் சொல்லப்பட்ட சேதநன் युग्यத்திற்கு ஸமாநம். அசேதநம் தேருக்கு ஸமானம். प्रेरितारம் என்ற ஈச்வரன் தேரோட்டிக்கு ஸமாநம். அம்மூன்றின் முறையிலே இம்மூன்றும் சொல்லப்பட்டன. அவற்றில் அசேதந வ்யாபாரங்கள் நாநாவித பரிணமங்களும் க்ரியைகளும். அவையெல்லாம் ஜீவேச்வரரூப சேதநர்களுக்காகவே, அவை எப்போதும் தொடர்ந்தபடியே யிருக்கும், சேதநனுக்கும் ஸம்ஸாரத்திலும் மோக்ஷத்திலும் பல வ்யாபாரங்களுண்டு. அவைகள் ஜ்ஞாநேச்சா க்ருத்யாதிகள். ப்ரக்ருதி மண்டலத்தில் கர்மோபாதிகமானவை. மோக்ஷத்தில் ஸ்வாபாவிகமானவை, இவற்றுக்கெல்லாம் காரணமான ஈச்வரனுக்கு ஸ்வாதந்த்ர்யம் என்பது விசேஷம். ஜீவனுடைய கர்த்ருத்வாதிகள் तदधीनமாக भर ஸமர்பணத்திலுமுண்டு அந்த விவேகத்தோடு ஆளவந்தார் முதலானோர் அருளியபடி பரந்யாஸம் செய்ய வேண்டுமென்றதாயிற்று.

ஸாங்கப்ரபதநாதிகாரம் முற்றிற்று.

ஸ்ரீமதே நிகமாந்த குரவே நம:

சுபமஸ்து

ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம:

## க்ருதக்ருத்யாதிகாரம். 13

பரதேவதாபாரமார்த்யாதிகாரம் வரையில் தத்த்வ நிரூபணம் செய்து அதன் மேல் கீழ் அதிகாரம் வரையில் ஹிதநிரூபணம் செய்தருளினர். இனி फल நிரூபணத்திற்காகப் பத்து அதிகாரங்கள். ப்ரபத்தி யநுஷ்டித்த பிறகு இவனுடைய மநோவாக்காய வ்யாபாரங்களெல்லாம் பரலோக फलத்திற்காகாமல் பகவானுடைய உகப்புக்கே யாகிறபடியால் எல்லாம் फलத்திலேயே சேரும். அவற்றில் முதலில் ப்ரபந்நனை க்ருதக்ருத்யனென்றும் க்ருதார்த்தனென்றும் சாஸ்த்ரம் கொண்டாடி யிருப்பதால் அந்த அம்சத்தை இவ்வதிகாரத்தில் தெளிவிக்கிறார். वीतशोकனனவன் க்ருதக்ருத்யன் என்று

श्रीः

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

## कृतकृत्याधिकारः

### க்ருதக்ருத்யாதிகாரம் 13.

**समर्थे सर्वज्ञे सहजसुहृदि स्वीकृतभरे यदर्थं कर्तव्यं न पुनरिह यत्किञ्चिदपि नः ।
नियच्छन्तस्तस्मिन् निरुपधिमहानन्दजलधौ कृतार्थीकुर्मः स्वं कृपणमपि कैङ्कर्यधनिनः॥ ३०**

---

நிகமநம் செய்யப்போகிறார். **मा शुचः**-என்றபடி சோகம் தீர்ந்திருக்க வேண்டும், **भरन्यासम्** செய்த பிறகு சோகிக்கலாகாது சோகத்திற்குக் காரணம்—குயுக்திகளாலே கலக்கமுற்று அநுபவித்தே தீரவேண்டுமாகை யால் கர்மாக்களை நிவ்ருத்தி பண்ணவும் மஹாபுருஷார்த்தமான மோக்ஷத் தை யளிக்கவும் ஸமர்த்தனுகான் என்றோ. ஈச்வரன் நம்மை முக்ய உபாயம் செய்ய அதிகாரி என்று நினைத்து ப்ரபத்தியை ஸ்வீகரிக்கமாட்டானென்றோ, தத்காலத்தில் அர்ஜுநனுக்குப் ப்ரீதிக்காக வஞ்சனையாகச் சொன்ன வார்த்தையின் பொருளை வாஸ்தவமாக நினைக்கலாகாதென்றோ. அவன் கொடுக்கும் மோக்ஷமென்னும் மஹாநந்தமானது நாம் செய்யும் ப்ரபத்தி யென்னும் உபாயத்தால் வந்ததால் துக்கம் கலந்ததாயும் அஸ்த்திரமாயு மிருக்கலாமென்றோ ப்ரமிப்பதாம். சோகத்தின் விரிவை **मा शुचः** என்றதன் உரையில் காண்க. அத்துடன், ப்ரபத்தி பண்ண பிறகு யாவஜ்ஜீவம் எவ் வளவோ க்ருத்யங்கள் செய்ய வேண்டியதாயிருக்க க்ருதக்ருத்யனுகக் கூடு மோ என்றும் சங்கையுண்டாகும். இவற்றை நிவ்ருத்தி செய்யப்போகிறார். அதன் ஸங்க்ரஹம் முதல் ச்லோகம். ஈச்வரனுக்கு அஸாமர்த்யமோ ப்ராந்தியோ வஞ்சநாபுத்தியோ, அவனளிக்கும் மஹாநந்தத்திற்கு ஒருவித மான குறையோ ஒன்றுமில்லை என்பதற்காக ச்லோகத்தில் விசேஷணங்கள், ச்லோகார்த்தமாவது—**समर्थे**—எல்லாம் செய்ய ஸமர்த்தனுயும், **सर्वज्ञे**—எல்லாம் நன்கு அறிந்தவனுயும், **सहजसुहृदि**—இயற்கையாக நன்மனமுடையவனுமான பிரான் **स्वीकृतभरे सति**—நமது பரத்தை ஸ்வீகரித்த பிறகு, **नः**—க்ருதக்ருத்ய ரான நமக்கு, **इह**—இந்த வாழ்நாளில், **यदर्थं**—எந்த மோக்ஷபலத்திற்காக **पुनः**— மீண்டும் **कर्तव्यं**—செய்யப்படவேண்டியது **यत्किञ्चिदपि न**—ஏதேனும் ஒன்று கூட இல்லையோ, **तस्मिन्**—அந்தப் பலனுன **निरुपधि महानन्दजलधौ**—ஸ்வாபாவிக பரமாநந்தக் கடலிலேயே **स्वं**—தன்னை **नियच्छन्तः**—அடக்குகின்றவர்களாய் வேறொன்றில் நசை வராதபடி செய்கின்றவர்களாய் **कृपणं अपि स्वं**—தத்ஸமயம் பரமாநந்தம் பெருமையால் ஏழையாயிருந்தாலும் தன்னை **कैङ्कर्यधनिनः**— கைங்கர்யத்தை தநமாக உடையவர்களாய் **कृतार्थीकुर्मः**—புருஷார்த்தம் பெற்றவர்களாக்குவோம். முன்போலன்றி புருஷார்த்தமாகவே எல்லாம் செய்து உபாயத்திற்காக ஒன்றும் செய்யாமல் **कृतकृत्य**தையை ரக்ஷிப்போ மென்றபடி. மோக்ஷத்திற்காக நமது **भर**த்தை பகவான் ஸ்வீகரித்த பிறகு

இவ்வுபாயவிஶேஷநிஷ்டன்- ப்ரபத்திக்கு அநந்தரகாலம் தொடங்கித் தான் இதுக்குக் கோலி(ரி)ன ஃபலத்தைப் பற்றத் தனக்குக் கர்தவ்யாம்ஶத்தில் அந்வய மில்லாமையாலும், கர்தவ்யாம்ஶம் ஸக்ருதநுஷ்டானத்தாலே க்ருதமாகையாலும், ஸத்யஸங்கல்பனை ஃபலப்ரதன் "மா ஶுச:" என்று அருளிச்செய்கையாலும் தனக்குப் பிறந்த பராந்யாஸரூபவதீயைப் பார்த்து நிர்பரனாய். "மாமேகம் ஶரணம் வ்ரஜ" என்கிற படியே ஸித்தோபாயத்வேன ஸ்வீக்ருதனான ஸர்வேச்வரன் "அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்ற ஃபலப்ரதானஸங்கல்பத்தைப் பண்ணுகையாலே, இப்படி விஶ்வஸநீயனுமாய் ஸர்வஜ்ஞனுமாய் உபாயபூதனுமான ஈச்வரனைப் பார்த்துப் ஃபலஸித்தியில் நிஸ்ஸம்ஶயனு

---

அதற்காக நாம் செய்யவேண்டுவது ஒன்றுமில்லை யாகையால் நாம் க்ருத க்ருத்யர். மோக்ஷமென்கிற பரமாநந்தமானது ப்ரபத்தியினுல் உண்டு பண்ணப்படுவதல்ல. அநாதி வினைகளை விலக்க பகவானை பக்தி ஸ்தாநத் திலே நிறுத்துவது ப்ரபத்தி. வினைகள் விலகினுல் ஓர் உபாதி=காரணமின்றி யே ஸ்வபாவமாகவே மஹாநந்தம் பெருகுகிறது. மஹாநந்தப் பெருக் கான தநத்தைக் கொண்டு பகவானை உகப்பிக்க இப்போது முடியாமையால் நாம் ஏழையாயினும், தத்காலத்தில் செய்யக்கூடிய கைங்கர்யமென்கிற தநம் ப்ராப்தமாகையால் பகவானுக்கு உகப்பை உண்டுபண்ண முடியும். ஆக நாம் க்ருதக்ருத்யர் போல் க்ருதார்த்தரும் ஆவோம். இதன் விவரணம் இவ் வுபாயேத்யாதி. இம் முதல் வாக்யம் பெரிய வாக்யமாய் கொண்டாடப் பட்டிருக்குமென்றவிடத்தில் முடிகிறது. இவ்வுபாய விசேஷநிஷ்ட்டனுக்கு நிர்பரனாய் நிஸ்ஸம்சயனுமாய் நிர்ப்பயனுமாய். ஹ்ருஷ்டமனுவாய் முக்ததுல்ய னாய் என்டவை விசேஷணங்கள். இவ்விசேஷணங்களை முறையே உபபாதித்து இதனுல்க்ருதக்ருத்யத்வம்க்ருதார்தத்வமிரண்டும் உண்டென்கிருர். க்ருதக்ருத் யத்வமாவது உபாயபூர்த்தி. க்ருதார்தத்வம்-புருஷார்த்தபூர்த்தி. உபாயபூர்த்தி நிச்சயமிருந்தால் சோகமற்றிருப்பான். அதனுல் வீதசோகனை க்ருதக்ருத் யன் என்கிறது. 'அநந்தர காலம் தொடங்கி' என்பதற்கு—அடுத்த க்ஷணம் தொடங்கி என்கிற பொருளாம். ஆகையால் பிற்காலமெல்லாமே அநந்தரகால மாகையால் தொடங்கி என்பதென் என்கிற சங்கைக்கு இடம் இல்லை. கோரிய பலம்—மோக்ஷம். தனக்கு என்றதாலே ஈச்வரனுக்கு பர ஸ்வீகாரம் முதலான கர்தவ்யமுண்டு என்று அறிவித்தபடி. ஸித்தோபாயத்வேன ஸ்வீக்ருதனை இதி. ஶரணம் வ்ரஜ என்பதற்கு—'அசேதநமான பக்த்யாதிகள் முக்ய உபாய மாகா; அதற்கு முன்னமே யிருந்து அவற்றைச் செய்வித்து முடிவில் ஃபல ப்ரதாந ஸங்கல்ப்பம் செய்கிற என்னையே உபாயமாகக்கொள்' என்ற பொருள் கீதாபாஷ்யத்தில் முதல் யோஜனையில். இது தான் ஸித்தோபாயத்வேந ஸ்வீக்ருதனை என்பதற்குப் பொருளாகும். இது மோக்ஷயிஷ்யாமி என்கிற ஸங்கல் ப்பத்திற்கு ஹேதுவாக இங்குச் சொல்லத்தகும். ஆனுலும் ப்ரபத்தி பரமான யோஜனையில் ஶரணம் வ்ரஜ என்பதற்கு 'ஸாத்யோபாயமாகவும் என்னை ஸ்வீகரி' என்ற பொருள் அவச்யமாகையால் அதற்கிணங்க ஸித்தபதமிரா

மாய், निर्भयனுமாய், கடையற விட்ட अन्यपुरुषार्थங்களையும் காம்பற விட்ட உபாயாந்தரங்களையும் अकिञ्चनன் அயத்நமாக महानिधियைப் பெறுமா போலே தான் பெறப்புகு(போ)கிற परमपुरुषार्थத்தையும் பார்த்து हृष्टमनाவாய்.

---

மல் उपायत्वेन स्वीकृतனை என்றுமிருக்கலாம். அல்லது शरणं व्रज என்கிற படியே என்பதற்கு 'உபாய பூதனுமான' என்றவிடத்தில் அந்வயம் கொள்ளலாம். हृष्टमनाः என்பதை உபபாதிக்கிறார் கடை இதி. கடை அற— வாஸனை போக என்பர், ஸமீபதேசத்தையும் மிதியாதபடி என்று கருத்து உரைப்பதால் வாஸனை என்பதற்கு வேறு புருஷார்த்தங்களின் வாஸனை என்று பொருள். அவற்றின் கந்தம் வீசுமிடம் கடையிடம். அது கூட படாதபடி விடப்பட்டன ஐச்வர்ய கைவல்ய புருஷார்த்தங்கள் என்றதாம். அப்புருஷார்த்தங்களைவிடுவது அதன் உபாயங்களையும் விடுவதேயாகும். ஆகையால் உபாயாந்தரங்களையும் என்பதற்கு பக்த்யாதி மோக்ஷோபாயங்களையும் என்பது பொருள். காம்பு—தொக்கு அதாவது பூ, காய், பழம் இவற்றுக்கு மூலமாய் இவற்றை விழாமல் பிடித்திருக்கும் அம்சம், वृन्तम् என்பர் வடமொழியில். அது—அற விடப்பட்ட. உபாயோபாயங்களோடு விடப்பட்ட என்றபடி. 'अभ्यासेऽप्यसमर्थोऽसि मत्कर्मपरमो भव ।' என்று தொடங்கி கீதையில் சொன்னபடி அதன் கீழான आत्मज्ञानयोग कर्मयोग तत्करणங்களோடு சேர்த்து விடப்பட்ட என்றபடி. ஆபாஸ புருஷார்த்தங்களை யெல்லாம் விட்டோம். மஹாபுருஷார்த்தங்களைப் பெறப்போகிறோம். அதையும் வெகு ஜந்மங்களால் ஸாதிக்கக் கூடிய பக்தி ததுபாயங்களில் இழிந்து காலஹரணம் பண்ணாமே க்ஷணகால ஸாத்யமான ப்ரபத்தியாலே பெற நடந்து கொண்டோமென்று மனத்தில் மிக்க மகிழ்ச்சி.

இனி முக்த துல்யன் என்பதை உபபாதிக்கிறார் தேவர்ஷி இதி, "இவன் க்ருதக்ருத்யனாக ஆகிவிட்டபடியால் மோக்ஷத்திற்கு ஒன்றும் செய்ய வேண்டா. வேறு புருஷார்த்தங்களை விட்டபடியால் அவற்றிற்காக காம்யங்கள் செய்யவேண்டா. அதனால் காம்யங்களான தேவதாந்தர கர்மங்களும் விடபட்டனவாம். காம்யங்கள் வேண்டாத போது அவற்றின் அதிகாரம் பெறுகைக்காக நித்ய நைமித்திக கர்மங்களும் வேண்டா. ஆனாலும் அவை செய்யப்பட வேண்டுமென்னில்— அங்கு தேவதாந்தர வாசக பதங்கள் நிரம்பியிருப்பதால், அவர்களை யாராதித்ததாகும். துல்ய ந்யாயமாய், தேவருணம் பித்ருருணம் முதலானவற்றைப் பரிஹரித்து அவர்களுடைய ப்ரீதியும் ஸம்பாதிக்க வேண்டியதாகும். இதனால் வேறு புருஷார்த்தங்களை இடையில் பெறவாகில் மோக்ஷத்தில் நோக்கு மந்தமாகும். ஆகையால் சாஸ்த்ரீயங்களை யெல்லாம் விட்டு யதேச்சமாய் நிஷித்த வ்யாபாரமின்றி லௌகிக கார்யங்களைக் கைங்கர்யமாகச் செய்வதேயாம்" என்கிற புத்தியை நிவர்த்திப்பதற்காக कैङ्कर्यधनिनः என்று ச்லோகத்தில் கூறியது. இதை இங்கே விரித்து உரைக்கிறார். உத்தர க்ருத்யாதிகாரத்திலும் சாஸ்த்ரீய நியம

देवर्षिभूतात्मनृणां पितॄणां न किङ्करो नायमृणी च राजन् ।
सर्वात्मना यः शरणं शरण्यं नारायणं लोकगुरुं प्रपन्नः ॥"

என்கிற ச்லோகத்தின்படியே प्रजापति, पशुपति என்றாற் போலே பேரிட்டுக் கொண்டிருக்கிற सजातीयரான क्षेत्रज्ञரைப் பற்ற ஒரோர் அவஸரங்களிலே

---

நாதிகாரத்திலும் சொல்லப்பட வேண்டியவற்றை இங்கே சொல்வது க்ருத க்ருத்யனென்று வைதிக வ்யாபாரத்தோடு நிற்காமல் சாஸ்த்ரீய நியமங்களைச் செய்து வந்தால் இப்படி அவச்யம் செய்யவேண்டிய கருத்யங்களிருப்பதால் அவற்றைச் செய்யாத போது மோக்ஷஹாநிக்கு இடம் வருமாகையால் க்ருதக்ருத்யத்வம் எங்ஙனே ஸித்திக்குமென்கிற ஆக்ஷேபத்தைப் பரிஹரிக்கவாம். வைதிக கர்மங்கள் இவனால் செய்யப்படுமவை தேவதாந்தர ஆராதனங்களாகா என்று பரிஹரிக்கிறார் முதலில், देवर्षि என்கிற ச்லோகம் भागवतம் 5—41. यः—எவன் सर्वात्मना—ஸர்வ ப்ரகாரத்தாலும் ப்ராபகனாகவும் ப்ராப்யமாகவும் ஸர்வகர்ம ஸமாராத்யனாகவும் ஸர்வஹித ப்ரவர்த்தகனாகவும் शरण्यं—ரக்ஷணஸமர்த்தனான, लोकगुरुं—எல்லோருக்கும் பிதாவுமான नारायणं- நாராயணனை शरणं प्रपन्नः- சரணமடைந்தானோ, अयम्- இவன் தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும், பூதங்களென்கிற ஆத்மாக்களுக்கும் नृणां—மநுஷ்யர்களுக்கும் पितॄणां—பித்ருக்களுக்கும் न किङ्करः—ஊழியனாகான். भूतपदத்தினாலே மஹாபூதங்களைக் கொள்ளாமல் சில சேதநர்களைக் கொள்ளவேண்டுமென்றறிவிக்க ஆத்மபதம். देवयज्ञம் ऋषियज्ञம் भूतयज्ञம் मनुष्य यज्ञம் पितृयज्ञம் என்பவற்றைச் செய்வதால் இவன் அவர்களுக்குக் கிங்கரனாகி அவர்களின் உகப்புக்காக அவர்களை யாராதிப்பதற்க்காகச் செய்கிறவன் ஆகான். 'जायमानो ह वै त्रिभिः ऋणवा जायते, ब्रह्मचर्येण ऋषिभ्यः, यज्ञेन देवेभ्यः, प्रजया पितृभ्यः' என்கிற வாக்யத்தில் ரிஷிகளின் கடன் தீர்ப்பதற்காக வேதாத்யயநம், தேவருணத்திற்காக யஜ்ஞாநுஷ்டாநம், பித்ருருணத்திற்காக ப்ரஜோத்பாதநம் என்றபடி அவர்கள் கடன் தீர்ப்பதற்காக அவற்றைச் செய்யவேண்டுமென்பதுமில்லை. லோககுருவாய் அவர்களுக்கும் மேலாய் அவர்களுக்கும் அந்தர்யாமியான நாராயணனையே ஸர்வாத்மநா ப்ரபந்நனாகையாலே ஸர்வகார்யத்தாலும் அவனுக்கே ப்ரீதி யுண்டுபண்ண வேண்டுமாகையால் எதையும் அவனுக்காகவே செய்யவேண்டும் அந்தந்த விதிகளில் வேறு தேவதாவாசக பதங்களும் அந்தர்யாமியான அவனைச் சொல்லுவதால் அதே சாஸ்த்ரார்த்தமாகுமென்றவாறு இந்த ச்லோகார்த்தத்தையே விசதமாக உரைக்கிறார் प्रजापति இத்யாதிநா. பிரமனுக்கு ப்ரஜாபதி என்றும், சிவனுக்குப் பசுபதி என்றும் பெயர் இருப்பதால் பசு என்ற சொல் பத்தசேதநரைச் சொல்வதால் அந்த ப்ரஜைகள் ஸ்வாமிகளான அவர்களுக்கு அடிமை செய்யவேண்டாவோ என்று கேட்பவனின் கருத்தாம். இதற்கு விடை—அவர்களும் ப்ராக்ருத சரீரம் பெற்று க்ஷேத்ரஜ்ஞராய் கர்மவச்யராய் ஸமாநராயிருப்பதாலே அவர்களுக்கு நாம் நிலையான

கைக்கூலி போலே சில उपाधिகளடியாக எழுதாமறையிலே ஏறிட்டுக்கிடக்கிற அடிமைதீட்டும், முதல் மாளாதே பொலிசை யிட்டுப் போ(ரு)கிற தனிசு தீட்டும் கிழித்தவனுகையாலே, पञ्चमहायज्ञादिகளான नित्यनैमित्तिकங்களில்

---

அடிமையாக மாட்டோம். சிற்சில ஸமயங்களிலே சிற்சில பலன் பெற வேண்டிய காரணமாக देहि मे ददामि ते 'எனக்குக் கூலியாகச் சில பலன்களைக் கொடு; நான் உனக்கு யாகாதிகளைச் செய்வதென்கிற அடிமைத் தொழில் செய்கிகிறேன்' என்றவாறு நாம் கேட்பது அடிமைச் சீட்டாக வேதங்களிலே குறிக்கப்பட்டதாகும். அது அவர்களிடத்தில் நாம் சிலவற்றைக் கேட்டதால் வந்ததாகும் அதனால் அவர்கள்விஷயத்தில் தாஸ்யம் அநுபாதிகமாகாது. இங்கே சப்தார்த்தமிவ்வாறு—பேரிட்டுக் கொண்டிருக்கிற என்பதால் ப்ரஜாபதி என்றும் போன்ற பெயர்கள் இருப்பினும் அவர்கள் உண்மையான ஸ்வாமிகளாகாரென்றறிவித்தபடி. ஓரோர் அவஸரங்களிலே = தனக்கு சில பலன்கள் வேண்டுமான காலங்களிலே. கைக்கூலி—வேலைக்காக அவ்வவ்போது வாங்கும் பணம். வாங்கின பிறகும் செய்யலாம். கூலி போலே யென்பது—உபாதிகள் என்பதோடு சேரும். உபாதிகளாவன—தேவதைகளைக் கேட்டுப் பெற்ற அம்சங்கள். முன்னே வாங்குகிறபடியால் சீட்டுஎழுதிக் கொடுக்க வேண்டியதாயிருக்கிறது. எழுதா மறைகளிலே = வேதங்களிலே. மறைகள் ச்ருதிகளாகையாலே கேட்டே யறிய வேண்டியவை; எழுதிப் படிக்கக் கூடியவையல்ல. அதனால் எழுதா மறைகள். எழுதப்பட்ட பத்ரம் போல் எழுதாதவை நிலையான ப்ரமாணமாகா என்று இங்கே வ்யங்க்யமாகிறது. அடிமைத் தீட்டு—அடிமை விஷயமான சீட்டு. சக்ரத்திற்குத் தகரம். இதற்கு கிழித்தவன் என்றவிடத்தில் அந்வயம். ப்ரமாண ச்லோகத்தில் न किङ्करः, என்பதால் ப்ரபந்நன் தேவகிங்கரனல்லன் என்றுசொல்லப்பட்டதால்இவன் விஷயத்தில் சீட்டு கிழிக்கப்பட்டதாம். நித்ய நைமித்திக கர்மாக்களிலும் அவர்களின் பேரிருந்தாலும் அவர்களிடம் கடன்பட்டவனுகமாட்டான். ஆகையால் அவற்றைச் செய்வது கடன்பட்டதாலல்ல. 'नायं ऋणी च' என்பது நித்ய நைமித்திகாநுஷ்டாநக் கடனையும் சொல்லும். இதற்கான வாக்யங்கள் தனிசுத் தீட்டு = கடன் பத்திரம். தனிசு = கடன், தீட்டு = சீட்டு. முதல் மாளாதே—கடனை மூலதனத்தில் சிறிதும் கழியாதே; அதற்கு எதிராக மூலதனமே அதிகமாகும் அளவில். பொலிசை இட்டுப் போருகிற = வட்டியை வளர்த்திக்கொண்டிருக்கிற கடன் பத்ரம். அவர்களுக்கு இவன் எவ்வளவு செய்தாலும், வட்டியைக் கழிக்கவே போதாதபடியால் மூலம் மாள்வதற்கு இடமில்லை. அவர்களுக்கு ஒன்றும் செய்யவேண்டாமென்றதால் இச்சீட்டும் கிழிக்கப்பட்டது. ஆனாலும் நித்ய நைமித்திகங்களை விடலாகாதென்று 'ஸர்வாத்மநா' என்கிற உத்தரார்த்த விவரணத்திற்காக மேலே वक्ष्यति. இதரதேவதைகள் ஆராத்யரல்லராகையால் காம்ய கர்மங்களைப்

அவர்கள் பேர் சொல்லும்போது—

"ये यजन्ति पितॄन् देवान् ब्राह्मणान् सहुताशनान्। सर्वभूतान्तरात्मानं विष्णुमेव यजन्ति ते ॥"

इत्यादिகளில் महर्षिகள் அறுதியிட்டபடியே, राजसेवकர் ராஜாவுக்குச் சட்டை மேலே மாலையையும் ஆபரணத்தையும் இட்டாலும் சட்டையில் துவக்கற்று

---

பரமைகாந்தி விட்டுவிடுவதுபோல், நித்ய நைமித்திகங்களையும் விடலாமென்று நினைக்கலாகாது. அவை நித்யங்களும் நைமிகங்களுமாயிருப்பதால் இவனும் செய்தே யாகவேண்டும். 'अहरहस्सन्ध्यामुपासीत' என்றாற் போன்றவை நித்யங்கள். 'उपरागे स्नायात्'. 'सङ्क्रान्तौ स्नायात्' என்றாற் போல் சில ஸமயம் அநியதமாக ஏற்படும் நிமித்தங்களை யிட்டுச் செய்யவேண்டியவை நைமித்திகங்கள். அங்கு உத்தேச்யமாகத் தோன்றும் தேவதைகள் இவனுக்கு ஆராத்யரல்லராகிலும் அவற்றை எம்பெருமானை யுத்தேசித்தே செய்ய வேண்டும். இது முன் ச்லோக உத்தரார்த்தத்தில் கருதப்பட்டதேயானாலும் ஸ்பஷ்டமாகவிராமையால் வேறு ப்ரமாணமெடுத்து விவரிக்கிறார் ये यजन्ति இத்யாதிநா. ச்லோகார்த்தமாவது—யே= எந்தப் பரமைகாந்திகள் பித்ருக்களையும் தேவதைகளையும் ப்ராஹ்மணர்களையும் அக்நியையும் கூறி யாகம் செய்கின்றனரோ, அவர்கள் அந்த பித்ராதிகளுக்கு அந்தர்யாமியாக விஷ்ணுவையே ஆராதிக்கிறார்களென்றது. பரமைகாந்தியல்லாதவர்கள், பரமாத்மாவை யறியாதவர்கள் செய்யும் யாகாதிகள்கூட விஷ்ணுவுக்கு உண்மையில் ஆராதனமாகையால் பரமைகாந்தி என்ற சொல்லை ஏன் சேர்க்க வேண்டுமென்னில்—விஷ்ணுவையும் என்னாமல் विष्णुमेव= விஷ்ணுவையே என்றிருப்பதால் அவை விஷ்ணுமாத்ராராதனமாகை பரமைகாந்தி விஷயத்திலேயே. அப்படியாகில் 'पितॄन् यजन्ति என்று பித்ராதிகளை யாராதிக்கிறாரென்னலாகுமோ வென்னில்—அவ் வாக்யத்திற்கு அவர்களை யுத்தேசித்து யாகம் செய்கிறார்களென்ற பொருளல்ல; பித்ராதி சொற்களைக் கூறி யாகம் செய்கிறார்கள் என்றதே. அச் சொற்களைச் சொல்லியிருக்க விஷ்ணுவுக்கு ஆராதநமாகை எங்ஙனே யென்னில், இதற்காகவே, "அந்தராத்மாநம்" என்றது. பித்ராதி சப்தங்கள் பித்ராதிகளுக்கு அந்தர்யாமியான விஷ்ணுவையும் சொல்லுகின்றனவாகிலும் விசேஷணமாக அவர்களையும் சொல்வதால் அவர்களும் ஆராத்யர்களாக வேண்டாவோ என்னவேண்டா. வவகாரத்தினால் அவர்கள் விலக்கப்பட்டார்களே. அறுதியிட்டபடியே= முடிவு செய்தபடியே, சொற்கள் அவனையும் சொல்லும்போது நிமந்த்ரித ப்ராஹ்மண போஜந ந்யாயத்தாலே தேவதைகள் அவ்வாராதநங்களைப் பெறுவது தானே பொருந்துமென்கிற கேள்வியைப் பரிஹரிக்கிற த்ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார் राजे இ. ராஜஸேவகர்—அரசனிடம் ஊழியம் செய்கின்றவர். அவர்கள் மாலையையும் ஆபரணத்தையும் ராஜாவின் ப்ரீதிக்காகவே இடுகிறார்களானாலும் அவர்கள் இடுவது சட்டையின் மேலேயே. சட்டைக்கு ஓர் அழகு உண்டாக வேண்டுமென்று சட்டையில் மதிப்பு வைத்துச்

ராஜாவின் ப்ரீதியே ப்ரயோஜநமாகத் தெளிந்திருக்குமா போலே(லவும்,) यज्ञा ग्रहाध्यायादिகளிலும் श्रीहस्तिगिरिमाहात्म्यத்திலும், "साक्षादप्यविरोधं जैमिनिः" என்

---

செய்யவில்லை, அதுபோல் பித்ராதி சொற்களைச் சொன்னாலும் அவர்களை யுத்தேசிப்பதில்லை. அசேதநமான சட்டை அதனால் ப்ரீதி யடைவதில்லை. இவர்கள் அளிக்கும் வஸ்துக்களும் பித்ராதிகள் பெறும்படியாவதில்லை. உத்தேசித்த இடத்திற்குத் தானே வஸ்துக்கள் போய்சேரும். இதை யறிவிக்க 'சட்டையில் துவக்கற்று' இத்யாதி. தேவதைகளையும் உத்தேசித்து யாகங்கள் செய்ய வேண்டிய அதிகாரிகளுமுண்டு. அவர்களில் எம்பெருமானை அறியாதவர்களுமுளர். அவனை அந்தராத்மா என்று அறிந்தாலும் தேவதைகளைக் குறித்துச் செய்கின்றவர்களுமுளர். அங்கே தேவதாந்தரயஜநமாகிறபடியால் நிமந்த்ரித ப்ராஹ்மண போஜந ந்யாயம் உண்டு. இங்குள்ள விசேஷமாவது—ப்ராஹ்மணதிகளிடத்தில் பித்ராதிகளை யாவாஹநம் செய்து அவர்கள் புஜிக்காதபடி பித்ராதிகளே இவற்றைக் கொள்ள வேண்டுமென்று ச்ராத்தம் செய்யவாகாது; இங்கு அப்ரத்யக்ஷமான தேவதைகளைச் சொல்லும் சொற்களை மட்டும் சொல்வதால் இவை தேவதாந்தரங்களில் சேரவேண்டுமென்று உத்தேசமே யிராமல் அந்தர்யாமியை மட்டும் உத்தேசித்துச் செய்யலாம். சட்டையில் துவக்கற்று—கஞ்சுகார்த்தமன்றிக்கே. [தெளிந்திருக்குமாப்போலே; போலே என்றபாடமேஉசிதம்;போலவும் என்ற பாடாந்தரம் ஸ்வரஸமன்று.] இதெல்லாம் முன் ச்லோகத்தில் ஏவகாரத்தால் அறிவிக்கப்பட்டிருந்தாலும் दृढமாவதற்காக மற்றும் ப்ரமாணங்களையெடுக்கிறார். यज्ञाग्रहेति, பாரதத்தில் யாகங்களில் முக்யமான பாகத்தை எம்பெருமான் கொள்ளுகிறானென்பதை விரிவாகக்கூறுவதற்கு ஏற்பட்டது யஜ்ஞ—அக்ரஹா—அத்யாயம். ப்ரஹ்ம ருத்ராதி தேவதைகள் தாங்கள் செய்யும் லோகநிர்வாஹத்தைச் செவ்வனே செய்விப்பதற்கு எம்பெருமானை ப்ரார்த்திக்க அவனிடம் சென்றனர். அப்போது வைஷ்ணவயாகமொன்று செய்யும்படியும், அதில் அவரவர் தமக்கு முடிந்தவரையில் தன்னுடைய ஆராதநத்தை நடத்தும்படியும் எம்பெருமான் நியமிக்க அவர்கள் அவ்வாறே அநுஷ்டித்தார்கள். பிறகு எம்பெருமான் அவர்களுக்கு உபதேசித்ததாவது—உங்களில் யார் எவ்வளவு ஆராதனையை நடத்தினரோ அவர்க்கு அதற்குத் தக்கபடி யாகததில் பாகத்தைப் பெறும்படி வேதத்தில் அமைத்துள்ளேன். ப்ரவ்ருத்திதர்மம், நிவ்ருத்திதர்மமென்கிற இரண்டில் மோக்ஷம் தவிர வேறு பலனுக்காகுமவை ப்ரவ்ருத்திதர்மங்கள். அவற்றைச் செய்பவர் உங்களுக்கு ஆராதிப்பவராவர். அவர்கள் அளிக்கும் அம்சங்கள் உங்களுக்குப் புஷ்டிகரமாய் லோகநிர்வாஹத்திற்கு ஆகும். பிரமனும் ருத்ரனும் வரப்ரதாந சக்தியை விசேஷமாகப் பெறுவார்கள். நிவ்ருத்தி தர்மமென்பது முமுக்ஷுக்கள் நிஷ்காமமாகச் செய்யும் செயல். அதனால் நானே ஆராதிக்கப்படுவேன். அது தேவதாந்தரத் துவக்கற்றிருக்கு

இற ஸூத்ரத்திலும் சொல்லுகிறபடியே, தேவர்கள் பித்ருக்கள் என்கிற சட்டைகளோடு துவக்கற அவ்வோ சப்தங்கள் अवयवशक्तिपौष्कल्यங்களாலே

---

மென்றவாறு. ஸ்ரீஹஸ்திகி. ஹஸ்திகிரிமாஹாத்ம்யத்திலுள்ளது—பிரமன் செய்த அச்வமேதயாகத்தில் அக்நிமத்தியில் வீற்றிருந்துகொண்டு எம்பெருமானே எல்லா ஹவிஸ்ஸுக்களையும் உட்கொண்டார். தேவதைகள் பிரமனிடம், 'தேவரீர் எங்கள் பெயரைச் சொல்லி யநுஷ்டிக்கும்போதும் அவ்வவிஸ்ஸுக்கள் எங்களிடம் சேரவில்லையே; ஏன்?' என்று வினவினார்கள். அதற்குப் பிரமன் பணித்ததாவது—நான் ஒரு நாளும் உங்களை யாராதிக்க ப்ரஸக்தியில்லை. மற்றவரிலும் மோக்ஷத்திற்காக அநுஷ்டிப்பவருக்கு நீங்கள் ஆராத்யராகமாட்டீர். உங்களை இடையிட்டு எம்பெருமான் த்ருப்தி யடைவதென்பது காம்யமாகச் செய்பவரின் கர்மாக்களிலேயே. முமுக்ஷுக்கள் செய்யும் கர்மாக்களில் ஹவிஸ்ஸுக்களை அவனே நேராகக் கொள்ளுகிறானென்றவாறு. கீழே 'ये यजन्ति' என்கிற ச்லோகத்தில் அக்ந்யாதி சப்தங்கள் தேவதைகளைச் சொல்லி அந்தர்யாமியான எம்பெருமானைச் சொல்வன வானாலும் அவர்கள் ஆராத்யர்கள் அல்லரென்றார். யஜ்ஞாக்ரஹராத்யாயம், ஹஸ்திகிரி மாஹாத்மயம் இத்யாதிகளிற் சொன்ன யஜ்ஞங்களைச் சேர்ந்த தேவதாந்தரச் சொற்களிலும் அவ்வாறே சில வாகலாம்; தேவதாந்தரங்களை அந்வயிக்கக் கூடிய விசேஷணங்களிருக்குமிடத்தில், அதாவது—अनन्यथासिद्धलिङ्गமுள்ள சொற்களில் தேவதாந்தரங்களைச் சொல்லியே யாகவேண்டுமே. ஆனாலும் எங்கு தேவதாந்தரத்தைச் சொல்லவேண்டிய நிர்பந்தமில்லையோ, அங்கு அக்ந்யாதி பதங்கள் अग्रं नयति என்றாற்போன்ற யோகசக்தியாலே நேராகவே எம்பெருமானைச் சொல்லுமென்பதிலும் அவ் அத்யாயாதிகளுக்கு நோக்கென்க. இவ்வர்த்தத்தில் தேவதாந்தராராத்யத்வ சங்கைக்கு அவகாசமேயில்லை. இதையே, 'சட்டைகளோடுதொடக்கற்ற அவ்வோ சப்தங்கள்' என்னப்போகிறார். முன்னே 'சட்டையில் துவக்கற்று' என்று மாலா—ஆபரணாதி அர்ப்பணம் சட்டைக்கு ஆகாதது போல், சொல் தேவதாந்தரத்தைச் சொன்னாலும் ஹவிஸ்ஸின் அர்ப்பணம் தேவதாந்தரத்திற்கு ஆகாதென்றார், இப்போது சட்டையான தேவதாந்தரங்களோடு சப்தத்திற்கே துவக்கில்லை யென்கிறார். நேராக பகவானையே नारायणादि சப்தங்கள்போலே சொல்லுகின்றன என்றபடி. நேராகச் சொல்லும் என்பதற்கு ப்ரமாணம் ப்ரஹ்மஸூத்ரம் 'साक्षादपि' இதி. अपि என்பதாலே அவச்யமான இடங்களில் தேவதாந்தர த்வாராவாகவும் சொல்லுமென்றதாகும். மற்றவிடங்களில் ஸாக்ஷாத்தாகவே சொல்லுமென்று ஜைமிநியே யருளினார். அவயவ சக்தி பௌஷ்கல்யமாவது—अग्रं नयति என்பதற்கு, 'மேலுக்குக் கொண்டுபோகிறான்' என்று பொருள். இது அக்நிதேவதாவிஷயமானால் அரிசி முதலானவை கொதிக்கும் போது கீழிலிருந்து மேலுக்குக் கொண்டுபோகுமளவிலே சப்தசக்தி நிற்கும். ஈச்வரனைச் சொல்வதானால் ஸம்ஸாரியை மோக்ஷம்

ஈச்வரன்பக்கலிலே नारायणादिशब्दங்கள்போலே நிற்கிற நிலையையும் கண்டு, அவற்றினுடைய उच्चारणादिகளில் श्वेतद्वीपवासिகளான शुद्धयाजिகளுக்குப்போலே தன் परमैकान्तित्वம் குலையாதே நிற்கிற படியை நிரூபித்துத் தன் वर्ण-आश्रम-निमित्त-गुणाधिकारத்துக்கு अनुरूपமாக, அடிமை கொள்ள सङ्कल्पித்திருக்கிற शासिताவான சேஷியினுடைய शास्त्रैक-समाज्ञापरिपालनरूपकैङ्कर्यसुखத்தாலே प्रत्यक्षविदित परमपुरुषाभिप्रायரான முக்தரைப் போலே किञ्चित्करனைக் கொண்டு मुक्ततुल्यனாய் उपायपूर्तियாலே कृतकृत्यனென்றும் पुरुषार्थपूर्तियாலே कृतार्थனென்றும் शास्त्रங்களாலும் तन्निष्ठராலும் கொண்டாடப்பட்டிருக்கும். இவனுடைய இந்தக் कृतकृत्यत्वानुसन्धानத்தை “अतस्त्वं तव तत्त्वतो मज्ज्ञानदर्शनप्राप्तिषु निस्संशयः

---

கொண்டுபோகும். அளவுக்கான வ்யாபாரம் மொத்தத்திலும் சப்தசக்தி செல்லும். நாரயணாதிசப்தங்கள் போலே இதி. அவை ரூடியாகக் கொண்டால் தேவதாந்தரத்தைச் சொல்லவே யாகா. யோகசக்தியைக் கொண்டாலும் தேவதாந்தரங்கள் விசேஷ்யமாகா. நிலையையும் என்ற உம்மையால் அந்தர்யாமிபரமான அர்த்தத்தைச் சொல்வதும் கொள்ளப்படுகிறது. शुद्धयाजीति. தேவதாந்தரத்தைச் சொல்லும் சொற்களை விட்டு எம்பெருமானையே சொல்லக் கூடிய சுத்தமான வாஸுதேவ—நாராயணாதி சப்தங்களைக் கொண்டே ஆராதிப்பவராவார், திருப்பாற்கடலுக்கு அப்புறமுள்ள ச்வேத த்வீபத்திலே வஸிக்கும் பாகவதர்கள், தேவதாந்தரயஜநம் பண்ணுபவர்களுக்கு சுத்தயாஜிகளுடைய நிலை கூடுமோ என்ன—தர்மங்கள் ஒவ்வொரு தசையில் ஒவ்வொரு விதமாயிருக்குமென்பதைப் பல படியாலே நிரூபிக்கிறார் वर्णेति. ஒரே ஜீவனுக்கு, பிறந்த வர்ணத்திற்குத் தக்கவாறு தர்மம் வெவ்வேறாகிறது. ப்ராஹ்மணாதிகளுக்கு உபநயநாதிகள். ப்ரஹ்மசாரி—गृहस्थादि ஆச்ரமத்திற்கு அநுகுணமாக भिक्षाचर्य, अतिथिपूजादिகள்—, उपरागादिनिमित्तத்திற்கு அநுகுணமாக ஸ்நாந . ச்ராத்தாதிகள். குணாதிபேதத்தாலும் தர்மபேதம். ‘जातपुत्रः कृष्णकेशोऽग्नीन् आदधीत’ என்று வயோऽவஸ்தாவிசேஷத்தில் வைதிக அக்நி ஆதாநம். ஸ்த்ரீஸந்நிதாநத்தில் ஔபாஸநாதி. ஸ்ரீவத்ஸகோத்ரத்தில் பஞ்சாவத்தம். இப்படி वेदशाखाभेद-कुलभेदादिகளுக்கீடாக தர்மபேதம் சாஸ்த்ர ஸம்மதம். அதுபோலவே ப்ரபந்ந—அப்ரபந்நभेदத்திற்கு அநுகுணமாக भगवन्मात्रयजनादिகளும் கீழ்க்கூறிய ப்ரமாண பலத்தாலே தகுமென்றபடி. அவ்வாறு செய்தால்தான் கைங்கர்யமாகும். பகவானுடைய ஆஜ்ஞாநுஜ்ஞாதிகளை மீறினால் கைங்கர்யமாகாது. முக்தர்கள் அவன் திருவுள்ளத்தை நேராகக் கண்டு வெவ்வேறு விதமாகக் கைங்கர்யம் செய்கின்றனர். நமக்கு அவனது திருவுள்ளம் காண சாஸ்த்ரமே கண்ணாகும், இப்படி கைங்கர்யமே செய்வதால் முக்த ஸமானனாகிறான். அதிகாராரம்பத்தில் தொடங்கின வாக்யத்தை முடிக்கிறார் ‘கொண்டாடப் பெற்றிருக்கும்’ என்று. ‘अतस्त्वं’ என்கிற கத்யவாக்யம் எம்பெருமான் எம்பெருமானாரைப் பார்த்துச் சொன்னது. ‘मज्ज्ञानदर्शनप्राप्तिषु’ என்விஷயமான அறிவு, ஸாக்ஷாத்காரம்

सुखमास्स्व" என்று शरणागतिगद्यத்திலே निगमित्தருளினார். இதுக்குக் கருத்து-அநாதிகாலம் आज्ञातिलङ्घनமடியாகவுண்டான भगवन्निग्रहத்தாலே ஸம்ஸரித்துப் போந்த நமக்கு भवत्प्रतीक्षையான भगवत्कृपैயடியாக உண்டான सदाचार्यकटाक्ष-विषयीकारத்தாலே வந்த द्वयोच्चारणानूच्चारणத்தாலே प्रपत्त्यनुष्ठानம் பிறந்த பின்பு, शरण्यप्रसादनங்களில் இதுக்கு மேல் ஒன்றில்லாமையாலே निग्रहहेतुக்களையெல்லாம் க்ஷமித்து, தீர்ந்த அடியவர் தம்மைத் திருத்திப் பணி கொள்ளவல்ல सर्वशेषியான श्रियःपति தன் பேறாகத் தானே ரக்ஷிக்குமென்று தேறி निर्भरனாயிருக்கை என்கை. இது "मा शुचः" என்கிற शरण्यवाक्यத்திலும் தீர்ந்த பொருள்.

இவனுக்குப் प्रपत्तिக்கு முன்புற்ற शोकம் अधिकारத்திலே சொருகு(சேரு)கையாலே முன்பு சோகித்திலனாகில் अधिकारिயல்லாமையாலே "कारणाभावात् कार्याभावः" என்கிற ந்யாயத்தாலே उपायनिष्पत्ति உண்டாகாது. उपायस्वीकारம் பண்ணினானாகத் தன்னை நினைத்திருந்த பின்பு शरण्योक्तिயிலே நெகிழ்ச்சி

---

முடிவில் என்னைப் பெறுகை என்றவற்றில், निस्संशयः—நேருமோ, நேராதோ என்கிற ஸம்சயமற்றவனாய். सुखमास्स्व—ப்ரயத்நமின்றி அநாயாஸமாய் வீற்றிரு; 'शान्तिं मां कुरुष्व. 'परभक्तियुक्तं मां कुरुष्व' नित्यकिङ्करो भवानि என்று அபேக்ஷித்த மூன்றும் ஸித்திக்குமென்றபடி. மற்ற ப்ரபந்நர்களுக்கும் भगवद्-नुग्रहத்தாலே மரணகாலத்தில் ஜ்ஞாநதர்சநாதிகள் உண்டாகும். இந்த गद्यவாக்யத்திற்கு ப்ரபத்தியநுஷ்டாநத்திற்குப் பின்பு சோகிக்காமலிருக்க வேண்டுமென்பதிலே நோக்கு. இதை விவரித்து உரைக்கிறார் இதுக்கு இத்யாதியால். द्वयोच्चारण-अनूच्चारणத்தாலே= गुरुमुखமாகப் பெற்ற த்வயத்தை உச்சரிப்பதாலே. ப்ரபத்தி யநுஷ்டாநகாலத்திலே ஓராசார்யர் ஓதுவிக்க ஓத வேண்டுமென்ற நிர்பந்தமிதில்லை ஸ்ரீபாஷ்யகாரர் அநுஷ்டித்த போது அவ்வாறு நடக்கவில்லையே. தீர்ந்த அடியவர் தம்மை= தனக்காகவே அற்றுத் தீர்ந்த அநந்யரான தாஸர்களை, திருத்தி= தேஹஸம்பந்தமின்றி பரிசுத்தராக்கி, பணி கொள்ளவல்ல-கைங்கர்யத்திற்காக ஸ்வீகரிக்க வல்லனான. கீழே கத்யத்தை உதாஹரித்தார்; அதிகாரார்த்தத்தை ரஹஸ்யத்ரயத்தில் காண்பிப்பது வழக்கமாகையால் இங்கே मा शुचः என்றும் அம்சத்தைக் குறிக்கிறார். மோக்ஷத்திற்காக ப்ரபத்தியை விதிக்கவேண்டியது அவச்யமாகும். ப்ரபத்தியை யநுஷ்டித்தவன் பின்னே சோகித்தாலும் பல ஸித்திக்கு ஹாநியில்லையாகையாலே मा शुचः என்று எதற்குச் சொல்லவேண்டும். க்ருதக்ருத்யனாகத் தன்னை அநுஸந்திக்காமல் போனால் தான் என்ன. முதலில் சோகிக்காமலிருந்தே ப்ரபத்தி பண்ணுகிறவனும் உண்டாகையால் माशुचः என்று அவனைப் பார்த்துச் சொல்லக்கூடுமோ என்ன—முன்னே சோகம் வேண்டும்; பின்னே சோகம் கூடாது என்பதை உபபாதிக்கிறார் இவனுக்கு இதி. 'பண்ணினானாகத் தன்னை நினைத்திருந்த இதி. பின்னே சோகிக்கிறவனுக்கு முன்னே உபாயம் பூர்த்தி யில்லாமையால் 'பண்ணின பின்பு' என்று ப்ரயோகிக்கவில்லை. நெகிழ்ச்சியாவது—தளர்ச்சி; மந்த விச்வாஸம்: कार्यैति-

யுடையனாய் ஶோகித்தானாகில், "கார்யாபாவாத் ஸாமக்ர்யபாவ:" என்கிற ந்யாயத்தாலே பூர்ணோபாயனல்லாமையாலே ஃபலம் உபாயபூர்த்திஸாபேக்ஷமாய்க் கொண்டு விலம்பிக்குமென்றறியலாம். முன்பு ப்ரஸக்தஶோகனாய், பின்பு "மா ஶுச:" என்று ப்ரதிஷேதிக்கிறபடியே வீதஶோகனானவன் க்ருதக்ருத்யனென்று அறியலாம்.

**மன்னவர் விண்ணவர் வானோரிறையொன்றும் வான்கருத்தோர்**
**அன்னவர் வேள்வியனைத்து முடித்தனர் அன்புடையார்க்கு**

---

ஏதேனும் ஒரு காரணமிராமற்போனாலும் கார்யமுண்டாகாது அதனால் முன்னே காரணாபாவாத் கார்யாபாவம் என்றார். கார்யமில்லாமையைக் கண்டு 'கார்யமுண்டாகாமையால் முன்னே காரணமில்லை' என்று தெரிகிற தென்பர். அங்கே காரணமே யில்லை என்னத் தகாது; பல காரணங்கள் சேரக் கார்யமுண்டாகிறபடியால் ஏதேனும் ஒரு காரணம் மட்டுமிராமை யாலேயே கார்யம் உண்டாகாமலிருக்கலாம். எல்லாக் காரணமும் சேரவில்லை என்று தான் சொல்லலாம். அதுதான் ஸாமக்ர்யபாவம். அதனால் கார்யா-பாவத்தைக் கண்டு ஊஹிக்கப்படுகிறது ஸாமக்ர்யபாவமென்றார்; காரணா பாவமென்று சொல்லவில்லை. இங்கு சார்யமாவது சோகமில்லாமையும் க்ருதக்ருத்யத்வ புத்தியும். மந்த விச்வாஸனாய் தன்னை க்ருதக்ருத்யனாக நினைக்காமலிருந்தால் இவனுக்கு உபாயம் பூர்த்தியாகவில்லை ஆகையால் இனியே மஹாவிச்வாஸனாகிப் பூர்ணனாக வேண்டுமென்றபடி.

க்ருதக்ருத்யர்களான ப்ரபந்நர்களைப் பலவிதமாகப் புகழ்ந்து கூறுகிறார் மன்னவர் என்கிற பாசுரத்தால், அன்பு உடையார்க்கு—தன்னிடம் பக்தியுள்ளவர்களுக்கு. தர—தான் தரும்படி வரப்—அவர் அபேக்ஷிக்கப்படுவது என்ன—எதுவாகும். என்னும்—என்று சிந்திக்கிற, வரதனென்று திருநாமம் பெற்ற, நம்—நமது குலதெய்வமான, அத்திகிரி திருமால்—ஹஸ்திகிரியில் எழுந்தருளி யிருக்கும் ச்ரிய:பதியால், முன்னம் வருந்தி—ப்ரபந்நர்கள் தன்னை வந்தடைவதற்கு முன்னமே, அநாதிகாலமாகவே, எப்பொழுது வருவார்களோவென்று வருந்தி வழிசெய்து. அடைக்கலம் கொண்ட—தனக்கு ரக்ஷ்யவஸ்துவாக பரமாக உவந்து கொள்ளப்பட்ட, நம் முக்யர்—நமக்கு ஸ்வாமிகளாய் முமுக்ஷுக்களுக்குள்ளே முக்யருமான ப்ரபன்னர், மன்னவர்—மஹாராஜாக்களாவர். எல்லா ப்ரஜைகளாலும் கௌரவிக்கப் படுபவருமாவார், விண்ணவர்-மன்னர்களாலும் ஆராதிக்கப்படும் தேவதைகளுமாவார், வானோர்—பரமபதத்திலிருக்கும் நித்ய ஸூரிகளுக்கு. இறை-ஸ்வாமியான பரவாஸுதேவன், ஒன்றும்—விடாமல் சேர்ந்திருக்கிற வான்—பரமபதத்திலே கருத்தோர்—மனது செலுத்திய= கருத்துடைய பரமைகாந்திகளாவர். அல்லது வானோரிறைஒன்றும்= எப்போதும் விடாமல் விஷயமாயிருக்கும் வான்—பெரிய, தைலதாரையைப் போல் தொடர்ச்சியான கருத்து=த்யாநம்; அதை உடைய பக்தர்களாவர் என்றதாம், அன்னவர்—அன்னம்-ஹம்ஸம். அதுபோல் விவேகசக்தி பெற்ற பரம

என்ன வரந் தரவென்ற நம்மத்திகிரித்திருமால்
முன்னம் வருந்தியடைக்கலங்கொண்ட நம்முக்கியரே. (20)

भगवति हरौ पारं गन्तुं भरन्यसनं कृतं परिमितसुखप्राप्त्यै कृत्यं प्रहीणमकृत्यवत् ।
भवति च वपुर्वृत्तिः पूर्वं कृतैर्नियतक्रमा परमिह विभोराज्ञासेतुर्बुधैरनुपाल्यते ॥

ஹம்ஸருமாவர். அன்னவர் என்பதற்கு—அத்தன்மையை யுடையவர் என்ற பொருள் ப்ரஸித்தம். அப்போது வான் கருத்தோர் என்று भगवदभिमान பாத்ரமான ஸ்வர்கவாஸி ஸநகாதிகளைச் சொல்லி அவர்களுக்குஸமமாய்விரக்த ரான பிக்ஷுக்கள் என்னலாம். வேள்வி அனைத்துப்—எல்லா யாகங்களையும் செய்து முடித்தவரும், பிக்ஷுக்களுக்கும் ஆச்ரயமான ச்ரேஷ்டரான க்ருஹஸ் தருமாவர். ப்ரபந்நரை अनुष्ठितक्रतुशतः—செய்த வேள்வியின் என்று புகழ்ந் திருக்கிறார்கள். அதுபோல் அவர்களை மன்னவர் விண்ணவர் என்றும் துதிக்கலாம். வானோர் என்பதால் நித்யஸூரிகளுக்கு ஸமர் என்றதாம். இறை இத்யாதியால் ஸநகாதிகளுக்கு ஸமர் என்றது. விரக்தி குறைவா யிருந்தாலும்—लोक—पुत्र—वित्तैषணைகளை விட்ட பிக்ஷுக்களுக்கு ஸமமாகவும் சொல்லலாம். உண்மையில் 'सत्कर्मनिरताश्शुद्धाः सांख्ययोगविदस्तथा । नार्हन्ति शरणस्थस्य कलां कोटितमीमपि' என்று பக்தர்களுக்கும் மேலாகப் புகழ்ந்து கூறி யிருப்பதால், இவர்களே முக்யரென்ன வேண்டுமென்றவாறு. என்ன வரம் தரவென்றவிடத்திலே 'தர வரம் என்ன' என்று மாற்றுக. என்று— என்றும், என்ற என்றும் படிக்கின்றனர். என்னும் என்றுமிருக்கலாம்.

ப்ரபந்நன் மோக்ஷார்த்தமாக ப்ரபத்தி செய்திருந்தாலும் தேஹயாத்ரைக் காகக் காம்யங்களைச் செய்யவேண்டியிருப்பதால் தேவதைகளை விட்டு எம் பெருமானையே யாராதிப்பதென்று சொன்னது சேருமோவென்பதற்கு ச்லோகத்தினுல் உத்தரம் அருளிச்செய்கிறார் भगवति இதி. पारं गन्तुं—ஸம் ஸாரத்திற்கு அக்கரையான பரமபதம் பெறுதற்கு भगवति—ஷாட்குண்ய பூர்ணனை, हरौ—நாராயணனிடத்தில் भरन्यसनं—பரந்யாஸமானது कृतम्— செய்யப்பட்டது. ஆகையால் பக்தியோகநிஷ்டனுக்குப் போல் மோக்ஷார் த்தமான கார்யமில்லை परिमितसुखप्राप्त्यै—மோக்ஷஸுகத்திற்குக் குறைவான ஐச்வர்ய கைவல்ய ஸுகம் பெறுதற்கான कृत्यम्—உபாயமானது अकृत्यवत्— ஸுராபாநாதியான அகார்யம் போல் प्रहीणम्—விடப்பட்டது. தேஹா வஸாந பர்யந்தம் தேஹயாத்ரை நடப்பதெவ்வாறெனில், वपुर्वृत्तिः च—அந்த தேஹயாத்ரையும் पूर्वं कृतैः-முன் செய்யப்பட்ட பூர்வ ஜந்மாதி வினைகளாலே नियतक्रमा—'இதன் பின் இது' என்று வ்யவஸ்த்தை செய்யப்பட்டதாய் भवति—ஸித்தமாயிருக்கிறது பூர்வஜந்மாநுகுணமாக எவனெவனுக்கு எந் தெந்த வ்ருத்தி வருமோ அதுவே போதுமென்று விரக்தனாய் அதற்காக இதர தேவதைகள் விஷயமாக சாஸ்த்ரோக்தமான காம்ய விதிகளில் இழியா மல் சாஸ்த்ராவிருத்தமாய் காலோசிதமாய் உச்ச நீசமான சில லௌகிக வ்யாபாரம் மட்டில் இருக்கவேண்டுமென்றபடி. இதைப்போல் நித்ய

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे कृतकृत्याधिकारस्त्रयोदशः 13
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

—o—•—

## स्वनिष्ठाभिज्ञानाधिकारः

### ஸ்வநிஷ்ட்டாபிஜ்ஞாநாதிகாரம் 14

—•—o—

स्वरूपोपायार्थेष्ववितथनिविष्टस्थिरमतेः स्वनिष्ठाभिज्ञानं सुभगमपवर्गादुपनतात् ।
प्रथिम्ना यस्याऽऽदौ प्रभवति विनीतः स्थगयितुं गभीरान् दुष्पूरान् गगनमहतश्छिद्रनिवहान् ॥

---

நைமித்திகங்களை தேவதாந்தர ஸம்பந்தம் நேருமென்று விடலாகாதென்கிறார் परमिति—பரம்-ஆனாலும் इह-இவ்வுலகில் विभोः—ஸர்வேச்வரனுடைய आज्ञासेतुः—ஆஜ்ஞை என்கிற அணையானது बुधैः—விவேகமுள்ள ப்ரபந்நர்களால் अनुपाल्यते—முடிவு வரையில் காக்கப்படுகிறது. இவ்வதிகாரத்தில் க்ருதக்ருத்யதை, க்ருதார்த்தத்தை இவ்விரண்டும் கூறுவதாம். நித்ய கர்மாநுஷ்டாநம் உபாயமாகக் கூடியதாகையால் இது வேண்டாமென்று விடாமல், க்ருதக்ருத்யனாகையாலே உபாயமாகக் கொள்ளாமல் ஸ்வயம் ப்ரயோஜநமாகச் செய்து க்ருதார்த்தனாக வேண்டுமென்று அருளினார். இந்த நித்ய நைமித்திக விஷயம் மேலே உத்தர க்ருத்யாதிகாரத்திலும் சாஸ்த்ரீய நியமநாதிகாரத்திலும் மீண்டும் கூறப்பெறும். க்ருதார்த்ததைக்காகச் செய்வதேயன்றி வேறில்லை;—உபாயம் செய்தாய்விட்டதென்பது இவ்வதிகாரார்த்தம்,

க்ருதக்ருத்யாதிகாரம் முற்றும்.

ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம:

ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநாதிகாரம் 14.

ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநமாவது—தானிருக்கவேண்டும் நிலை தனக்கிருக்கின்றதென்பதற்கு அறிகுறியான அடையாளங்கள். இவ்வதிகார முடிவில் அவ்வோ அடையாளங்களாலே என்று அருளப்போகிறார். இவ்வடையாளத்தைக் கொண்டு தன் நிலையை உணர்ந்தவனுக்கு வேறொன்றால் அச்சமோ வேறோரிடத்தில் ப்ரீதியோ உண்டாகாதென்று முடிவில் அருளப்போகிறார். தன் நிலையாவது என்ன, அதற்கடையாளம் எது, அதை யறிவதால் வரும் அநுகூலம் யாது என்பதை விரித்துரைக்கப் போகிறாராய் ச்லோகத்தில் ஸங்க்ரஹிக்கிறார் स्वरूपेति. स्वरूप--தேஹாதிகளைவிட வேறாய் பரமாத்ம சேஷமான தன் ஆத்ம ஸ்வரூபத்திலும், उपाय—தான் அநுஷ்டித்த ப்ரபத்தியென்கிற உபாயத்திலும், अर्थे—தன் புருஷார்த்தமான மோக்ஷ விஷயத்திலும் अवितथ-மாறுபட்டமிராதபடி निविष्ट-புகுந்துள்ள स्थिर-பிறரால் அசைக்க முடியாத, मतेः—புத்தியை யுடையவனுக்கு, स्वनिष्ठा-இந்த தத்துவஹிதபுருஷார்த்த

இப்படித் தனக்கு निष्ठैयுண்டென்று தான் அறியும்படி எங்ஙனே யென்னில்;

பரராலே परिभवादिகளுண்டாம்போது தன் देहादिகளைப் பற்றப் परिभावகர் சொல்லுகிற குற்றங்கள் தன் ஸ்வரூபத்தில் தட்டாதபடி கண்டு विषादादि களற்றிருக்கையும்.

---

விஷயமான புத்திஸ்த்தைர்யமாகிற தன் நிலையைப் பற்றிய अभिज्ञानम्-அடையாளமுள்ளவனுயிருக்கை उपनतात्—தனக்கு நெருங்கியிருக்கிற अपवर्गात्—மோக்ஷபலத்தைக்காட்டிலும் सुभगम्—சிறந்ததாகும், यस्य—எந்த அடையாளத்தினுடைய प्रथिम्ना—பரப்பினுலே, विनीतः—அடக்கமுற்ற असौ-இந்த ப்ரபந்நன் गभीरान्-ஆழமாயும் दुष्पूरान्—நிறைக்க முடியாதவையும் गगनमहतः-ஆகாயத்தைவிட பெரிதாயுமுள்ள छिद्रनिवहान्-சந்துகளின் (அநர்த்தங்களின்) குவியல்களை स्थगयितुं—மூடுவதற்கு प्रभवति—ஸமர்த்தனுகிறுனே.

ப்ரபந்நன் தன் ஸ்வரூபத்திலும் தான் செய்த உபாயவிஷயத்திலும் தான் பெறப்போகும் பலன்விஷயத்திலும் தனக்குள்ள தெளிவு ஸ்த்திரமாயிருக்கிறதாவென்பதைக் கவனித்துக்கொள்ளவேண்டும். ஒவ்வொரு விஷயத்திலும் தெளிவிருப்பதற்கு அடையாளமுண்டு. அத் தெளிவை அழிக்கும்படி பல தொல்லைகள் ப்ரக்ருதி மண்டலத்தில் அடிக்கடி நேரும். அவற்றிற்கு இடப் கொடுத்தால் அந்தத் தொல்லைகள் வளரும். மறைக்கப்படமாட்டா. ஆகாசம் பெரிதென்பர். வரும் அநர்த்தம் ஒவ்வொன்றும் ஆகாசத்தைவிடப் பெரிதாகும். அவற்றை யெல்லாம் மறைக்கவாம் கீழ்க்கூறிய நிஷ்டைக்கு அறிகுறியாக ப்ரபந்நனிடம் இருக்கவேண்டிய அம்சங்கள்.

இதன் விரிவு இப்படி இத்யாதியால். வசநபூஷண க்ரந்தத்திலும் (384) இது விஷயம் காண்க. முதலில் ஸ்வரூப விஷயத்தில் புத்தி நிலையைக் கெடுக்கும் மோறை வாராமைக்கு அடையாளங்கள் கூறப்படுகின்றன. அதன்பிறகு உபாயவிஷயத்தில்; அதற்குப் பிறகு புருஷார்த்த விஷயத்திலாம். பிறர் ப்ரபந்நனைப் பார்த்து, கறுப்பன் குருடன் என்றவாறு பரிபவித்துப் பேசினுராகில், அப்போது இவனுக்கு (1) வருத்தமற்றிருக்கை, (2) கரைபுரண்ட க்ருபை (3) உபகார ஸ்ம்ருதி, (4) பரிபவிப்பவர்விஷயத்தில் த்வேஷாதிகளற்று நிர்விகார சித்ததை(5) ஸந்தோஷம் என்கிற ஐந்து அம்சங்களில் எது இருந்தாலும் ஸ்வரூபநிஷ்டையில் குறையில்லை யென்று உணரலாம். (1) வருத்தமற்றிருக்கை யென்பது இவர்கள் கறுப்பனென்று தேஹத்தை தூஷித்தார்கள்; குருடனென்று இந்த்ரியத்தை; ஆத்மஸ்வரூபத்திற்கு (எனக்கு) இது தூஷணமாகாதென்ற தெளிவால் வரும் (2) கரைபுரண்ட க்ருபையானது பாபம் செய்தானென்று ஒருவனை வைதால் அவன் பாபம் வைதவனிடம் சேருமே, இப்படி சேதநர்கள் வீணே விரோதத்துடன் த்வேஷித்துக் கீழ்நிலை பெறுகிறுர்களே, நரகமென்கிற நெருப்புக்குக் கட்டையாகின்றனரே என்று அவர்கள்விஷயத்தில் சிந்திப்பதாலுண்டாகும். 3) உபகார ஸ்ம்ருதியானது தாம் செய்த பாபத்தை நினைப்பூட்டி நாம்

"शप्यमानस्य यत् पापं शपन्तमधिगच्छति" என்கிறபடியே परिभवादिகளாலே தன் பாபத்தை வாங்கிக் கொள்ளுகிற மதிகேடரைப் பற்ற,
"बद्धवैराणि भूतानि द्वेषं कुर्वन्ति चेत् ततः । शोच्यान्यहोऽतिमोहेन व्याप्तानीति मनीषिणा ॥"
"आत्मद्रुहममर्यादं मूढमुज्झितसत्पथम् । सुतरामनुकम्पेत नरकार्चिष्मदिन्धनम् ॥"
என்கிறபடியே கரைபுண்ட कृपैயும், "अमर्यादः क्षुद्रः" என்கிற ச்லோகத்தாலும் 'வாடினேன் வாடி" முதலான ஆழ்வார்கள்பாசுரங்களாலும் தனக்கு अनुसन्धेयமாக उदाहरित्த தோஷங்களைப் परिवादादिகளாலே மறவாத

---

பச்சாத்தாபப்படுவதற்கு உதவினர்களென்று நினைப்பதால் வரும். (4) நிர்விகார சித்தத்வமாவது எல்லோரும் கர்மவச்யரானபடியாலே நமது முன் வினைக்கு இணங்க நாம் பாபம் செய்யும்படியும் அவர்கள்வினைக்கிணங்க அவர்கள் நம்மைப் பரிபவிக்கும்படியும் கர்மபலன் அளித்து எம்பெருமான் லீலாரஸம் அநுபவிக்கிறன். அவர்களுடைய ஆத்மஸ்வரூபம் தானாக இதைச் செய்யவில்லையே என்று பரிசீலித்தால் உண்டாகும். (5) ஸந்தோஷமென்பது. பாபம் கழிவதைக் காண்பதால் வரக்கூடியது.

शप्यमानस्येति. ஒருவனால் வையப்படுகிறவன் முன் செய்தது என்ன பாபமோ அது வைகின்றவனைச் சேருமென்றதாம். மதி கேடரை, மதிகெட்டவரை. बद्धेति. விரோதம் வைத்துஜீவர்கள் த்வேஷிக்கிறார்களாகில் விவேகியானவன் அந்தோ! மிக்க மோஹம் மூள நின்றனரே என்று சோகிக்க இருப்பான். आत्मेति. புத்திமானானவன் தன்னை த்ரோஹிப்பவனும் வரம்பு மீறினவனும், மூடனும், நல்லொழுக்கமற்றவனுமானவனைக் கண்டு நரகமாகிற நெருப்புக்குக் கட்டையாகின்றானே என்று மிகவும் கருணையுள்ளவனாக வேண்டும். अमर्यादेति. अमर्यादः—சாஸ்த்ர வரம்பு மீறினவன். क्षुद्रः—அல்பன், இத்யாதியாகப் பல துர்குணங்களைத் தமக்கிருப்பதாகக் கூறி, 'இப்படிப்பட்ட நான் ஸம்ஸார ஸமுத்ரத்தைக் கடந்து எங்ஙனே உனக்குப் பரமபதத்தில் பரிசர்யை செய்வதென்றார் ஆளவந்தார், திருமங்கையாழ்வார் 'வாடினேன்' என்ற பெரியதிருமொழிமுதற்பாட்டிலே தமக்குள்ளனவான தோஷங்களை யெல்லாம் எடுத்துக்கூறி எனக்கும் மந்த்ரம் (திருவஷ்டாக்ஷரம்) கிடைத்ததே என்று வியந்தருளுகிறார். துக்கத்துக்கே இடமான ஸம்ஸாரத்தில் துக்கமயமான வஸ்துக்களையே ஸுகமாக ப்ரமித்து அவை கிடைக்காத போது வாடி வருந்தி முக்யமாக இளமையில் பல ஸ்த்ரீகளோடு கூடி அவர் கலவியைப் பரமபுருஷார்த்தமாகக் கருதி, கூடின வண்ணமிருந்தேன் என்று 'வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால் பெருந்துயர் இடும்பையில் பிறந்து கூடினேன், கூடி இளையவர்தம்மோடு அவர் தரும் கலவியே கருதி கூடினேன்' என்றவாறு, உண்மையில் இவர்களுக்கு இத்தோஷங்களில்லை. இவர்கள் இவ்வாறு கூறியதெல்லாம் இப்பாசுரத்தை யநுஸந்திக்கும் ஒவ்வொருவரும் தனக்கு அநுஸந்தாநத்திற்காகக் கூறியதென்றே நினைக்கவேண்டும். இந்த எண்ணமுள்ளவன் பிறர் தன் மேல்

படி பண்ணினார்களென்கிற उपकारस्मृतिயும், ஆத்மாக்களுக்கெல்லாம் स्वरूपा-नुबन्धियான भगवत्पारतन्त्र्यத்தையும் क्षेत्रज्ञரெல்லாரும் कर्मवश्यராய் நிற்கிற நிலையையும் பார்த்து நமக்கும் நம்மளவில் परिभवादिகள் பண்ணுகிற चेतनருக்கும் உள்ள कर्मानुगुणமாக இன்புறுமிவ் விளையாட்டுடையனான स्वतन्त्रशेषिயாலே प्रेरितராய் அவர்கள் परिभव(वाद)दिகள் பண்ணுகிறார்களென்று அவர்கள் பக்கல் निर्विकारचित्तதையும். प्रारब्धपापविशेषம் சிகையறுகிறதென்கிற ஸந்தோஷமும் நடையாடிற்றாகில் प्रथममध्यमपदங்களிலே शोधितமானபடியே अचिद्वैलक्षण्यத்தையும், सर्वभूतानुकूल्यादिகளுக்கு योग्यமான ज्ञानத்தையும், सर्वतोमुखமான

---

பல குற்றங்களைக் கூறினால் அப்போது இவன், பூர்வர்கள் நமக்காகக் கூறியிருந்தும் நாம் மறந்து அநுஸந்திக்காமல் இருந்தோமே; நல்ல காலம்; இவர்கள் இப்போது நினைப்பூட்டினார்கள் என்று அவர்களிடம் உபகாரபுத்தியோடு முன்னோருடைய பாசுரங்களைக் கொண்டு அநுஸந்தாநம் செய்யவேண்டும். ஒரு ஸமயம் பட்டர் அரங்கனை மங்களாசாஸநம் செய்யும்போது अमर्यादः क्षुद्रः चलमतिः என்றவாறு குற்றங்களை வருந்தி விஜ்ஞாபித்தாராம். அப்போது ஒருவர் மறைவில் நின்று இவரிடம் எதிர்பார்த்த உபகாரத்தைத் தான் பெருமையாலே, இது உண்மை இது உண்மை என்று ஒவ்வொரு குற்றத்திற்கும் சொல்லி வந்தாராம், நம்போன்றவர்களாகில் இதற்கு உடனே சீறி விழுவார்கள். பட்டர் அப்போது இப்படி அவர் சொல்லுவதற்கு உவந்து, 'அரங்கா! நான் சொன்னதற்கு ஸாக்ஷியும் ஏற்பட்டபடியால் நான் குற்றவாளியே' என்று ஊர்ஜிதப்படுத்திக்கொண்டார். அதுபோல் குற்றம் கூறுவர்களிடத்தில் உபகார ஸ்ம்ருதி முக்யம். இன்பு உறும் இவ் விளையாட்டு உடையனான = லீலாரஸ அநுபவத்திற்காக, பரிபவிக்கிறவன் பரிபவிக்கப்படுகின்றவன் என்று இருவரை கல்ப்பிப்பதாகிற லீலையை ஈச்வரன் செய்கிறான். அதனால் அவனுக்கு வைஷம்ய தோஷம் வாராதோ என்னில் வாராது; அதற்கேற்ற கர்மா இல்லாதவரிடத்தில் அது இல்லை. இதை பரிபவிக்கப்படுகிறவன் நினைக்கவேண்டும். இதற்காகவே கர்மாநுகுணமாக என்றது. பாபவிசேஷம் சிகை அறுகிறது = முடியற்றதாகிறது. அழிகிறது என்றபடி. இப்படி பரிபவாதிகள் உண்டாம் போது தனக்கு ஸ்வரூப நிஷ்டை யறியும்போது ஐந்து அடையாளங்களைக் கூறினார். ஸ்வரூப நிஷ்டையில் ஐந்து அம்சங்களைப் பிரித்துக் காட்டி அவற்றில் முறையே இந்த இந்த அம்சத்திற்கு இதுஇது அடையாளம் என்றறிவதற்காக ஐந்து ஸ்வரூப நிஷ்டாம்சங்களை அடைவாகக் கூறுகிறார். முதல் அம்சம் அசித் வைலக்ஷண்யம் = தேஹாதிகளைவிட ஆத்மா வேறாயிருக்கை. இவ்வறிவில், நிஷ்டை உண்டென்பது முதல் அடையாளமான 'விஷாதாதிகளற்றிருக்கை' என்றதிலிருந்து அறியலாம். இரண்டாவது கரைபுரண்ட க்ருபையென்கிற அடையாளம். அது ஜ்ஞாநத்தினால் வருகிறது. ஜ்ஞாநமானது 'आनुकूल्यमिति प्रोक्तं सर्वभूतानुकूलता' என்கிற ஆநுகூல்யாதி நிலைக்குக்

आकिञ्चन्यத்தையும், स्वतः सर्वसमனாய்க் कर्मानुरूपफलप्रदனான स्वतन्त्रशेषिக்கு इच्छाविनियोगार्हமாம்படி अनन्यार्हशेषत्वपारतन्त्र्यங்களையும், "यद्वितं मम देवेश" इत्यादिகளிற் படியே पराधीनहितसिद्धியையுமுடைய தன் ஸ்வரூபத்திலே நிஷ்டை யுண்டென்று அறியலாம்,

सर्वेश्वरனையொழியத் தானும் பிறரும் தனக்குத் தஞ்சமன்று என்கிற बुद्धியும், मृत्युपर्यन्तமான भयहेतुக்களைக் கண்டாலும், "प्रायेणाकृतकृत्यत्वान्मृत्योरुद्विजते जनः । कृतकृत्याः प्रतीक्षन्ते मृत्युं प्रियमिवातिथिम् ॥" என்கிறபடியே இச்சரீராநந்தரம் என்படப்போ(புகு)கிறோம் என்கிற கரைதலற்ற सम्भ्रमतासक्தியாலே

---

காரணமாகும். ஸ்வரூபநிஷ்டையில் இவ்விரண்டு ப்ரதமபதமான ப்ரணவத்தில் மகாரார்த்தசோதநத்தினால் வரும். மூன்றாவதான உபகார ஸ்ம்ருதியால் ஆகிஞ்சந்யத்தில் நிலை நிலைக்கும். நான்காவது நிர்விகார சித்தத்வம். இதனால் சேஷத்வமும் பாரதந்த்ர்யமும் ரக்ஷிக்கப்படுகின்றன. ஐந்தாவது பாபம் கழிகிறது என்ற ஸந்தோஷம். இவ்வடையாளத்தால் ஈச்வரன் நமக்கு ஹிதம் செய்கிறானென்கிற புத்தி நிலைக்கும். இவ்வாகிஞ்சந்யாதிகள் மூன்றும் மத்யமபதமான நமச்சப்தத்தில் தோன்றுமவை, இப்படி யதா ஸங்க்யம் சொல்லலாம். ஸ்வரூபநிஷ்டை முடிந்தது.

உபாயநிஷ்டைக்கு அடையாளம் கூறுகிறார். உபாயநிஷ்டையாவது ப்ரபத்தியை வ்யாஜமாகக்கொண்டு ஸர்வேச்வரனே தனக்குஉபாயம்; இது ஸித்தமாக விருக்கிறதென்கிற தெளிவு. மேலே கூறப்படும் அம்சங்களிருந்தால் இந்நிஷ்டை நிலைக்கும் .அவையாவன ஈச்வரனே உபாயம், தானும் பிறரும் தனக்கு ரக்ஷகரல்லர். தானும் ஆசார்யமூல ப்ரபத்தியும் உபாயங்களாகா என்கிற புத்தி எப்போதும் வேண்டும். ஏதேனும் பயத்துக்குக் காரணம் ஏற்பட்டால்; (பயஹேதுக்களாவன—மரணக் குறிகளான ப்ரபல வ்யாதி துஸ்வப்நாதிகள்) அது மரணபர்யந்தத்துக்கு ஆகிறதென்று அச்சம் கூடாது. அதற்குநேர்மாறாகத் தன்னுடைய அபிமதத்திற்கு= இஷ்டத்திற்கு ஆஸத்தி– நெருக்கம் ஏற்பட்டதென்று ப்ரீதி யடையவேண்டும். இதற்கு ப்ரமாணம் प्रायेण இதி. உலகில் ஜநங்கள் பெரும்பாலும் க்ருதக்ருத்யராகாமலிருக்கிறார்கள். அதனால் மரணத்துக்கு அஞ்சுகிறார்கள். க்ருதக்ருத்யராயிருப்பவர் முக்தி வருவது தெரிந்தால் இஷ்டமான அதிதியை எதிர்பார்க்கும் க்ருஹஸ்தன் போல், 'இதையே எதிர்பார்க்கிறேன்' என்று இருப்பார்கள். இதனால் எப்படியாவது சீக்கிரம் மரணம் வரவேண்டுமென்று அதில் ஆசை வைத்திருப்பார்கள் என்பதல்ல. மரணத்துக்குப் பின்னே எனக்கு என்னவாகுமோ என்று வருத்தப்படாமலிருக்க வேண்டும். ஸ்வர்காதிகளுக்காக யாகாதிகளைச் செய்தவரும் க்ருதக்ருத்யராய் அஞ்சாமலிருக்கலாம். அவர்களைவிட ப்ரபந்நன் தன் பலன் நிச்சயமாகையாலே நிர்பயமாயிருக்க வேண்டும். இப்படி உபாயநிஷ்டைக்கு அறிகுறியாக இரண்டு அம்சங்கள் சொல்லப்பெற்றன. ஈச்வரனே உபாயம், மரணம் அநுகூலம் என்கிற

ப்ரீதனுயிருக்கையும், "गजं वा वीक्ष्य सिंहं वा व्याघ्रं वाऽपि वरानना । नाहारयति संत्रासं

---

இவ்விரண்டு புத்திகள் போல், ஈச்வரன் ரக்ஷிக்கிறுனென்கிற தேற்றமும் (விச்வாஸமும்), இதுவிஷயத்தில் ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியும், இவ்வுபாய பலமான அநிஷ்ட நிவ்ருத்தியும் இஷ்ட ப்ராப்தியும் அவனே செய்கிறுன் என்கிற புத்தியும் ஆகிய மூன்றும் அறிகுறிகள் என்கிருராய், பிராட்டி விஷயமான மூன்று ச்லோகங்களை அடைவாக இம்மூன்றுக்காக உதாஹரிக்கிறுர். முதல் 'गजं वा' இத்யாதி. இது முதலில் வனத்தில் ப்ரவேசித்தபோது இருந்த நிலை; இரண்டாவதில் தனக்கு விபத்து ஏற்பட்டு அசோக வநத்திலிருக்கும்போதும் விபத்தைச் செய்தவனிடத்தில் துணிவான பேச்சு. மூன்ருவதில், வேறு ப்ரகாரமாகத் தனக்கு இஷ்ட ப்ராப்தி வருவது நிச்சயமாயிருக்க அதை உபேக்ஷித்து, இராமனையே பார்த்திருக்கை. ச்லோகார்த்தமாவது—रामस्य—ராமனுடைய बाहू—புஜங்களை संश्रिता—தனக்கு ரக்ஷகமாகக் கொண்ட ஸீதை. யானையையோ சிங்கத்தையோ புலியையோ वीक्ष्यापि—பார்த்தும் वरानना முன்போல் தெளிவான முகமேயுடையளாய் संत्रासम्—அச்சமென்பதை नाहारयति—சிறிதும் கொள்ளுகிறதே யில்லை. இங்கே बाहू रामस्य என்று ரக்ஷகக் குறிப்பும். वरानना என்று தனக்கு அபாயமில்லை யென்று முகமலர்ச்சி மூலமாக விச்வாஸக் குறிப்பும் காண்க. பருத்த உடலுடைய யானை ஓடிவருவதற்குள் அப்பால் ஓடிவிடலாமாகையாலே விரைவில் பாய்ந்து வரும் சிங்கத்தைச் சொன்னது. தனக்கு ஆஹாரம் வேண்டாதபோது வாளாவிருக்கும் சிங்கத்தை விட்டுக் கொலையே தொழிலாகக் கொண்ட புலியை மேலே சொன்னது தெளிந்து பயமற்று இருப்பவருக்கும் சில ஸமயம் அச்சமுண்டாகும். 'மஹாத்மா ராமன்' என்று தெளிந்து அழைத்துச்சென்ற விச்வாமித்ரரும் ஸ்த்ரீயான தாடகையை உயிருடன் விடலாமென்று ராமன் சிந்திப்பதையும் தாடகையின் கர்ஜனையையும் கண்டு 'हुङ्कारेण अभिभर्त्स्य तां', स्वस्ति राघवयोरस्तु जयं चैवाभ्यभाषत' என்று மனம் கலங்கிச் செய்தார். தெளிவுள்ள போதும் ப்ராக்ருதருக்குப் பழைய துர்வாஸனை பலிக்கும். பிராட்டிக்கு துர்வாஸனைக்கு ப்ரஸக்தி யில்லாமையாலே அச்சமுண்டாகக் காரணமிராமையாலே இராத அச்சத்தை ஆஹார்யமாக (ஏறிட்டு)த்தான் கொண்டு வரவேண்டும். அப்படியும் கொணராமல் திடநம்பிக்கையுடன் இருந்தாள் என்று नाहारयति என்பதன் பொருள். இதனுல் ப்ரபந்நன் தன்னுடைய வாழ்நாளில் தனக்கு எந்த ஆபத்து வந்தாலும் ஈச்வரன் ரக்ஷிப்பானென்று தான் ஒரு ப்ரயத்நமின்றி இருக்கவேண்டுமென்று தெரிவித்ததாகக் கொள்ளவேண்டா. ஸீதையை ரக்ஷிப்பதாக ராமன் கூறியழைத்துச் சென்றதால் ஸீதைக்கு ரக்ஷகனைப் பெற்றிருக்கிறேமென்கிற விச்வாஸம் போல், எதற்காக நாம் உபாயாநுஷ்டாநம் செய்திருக்கிறேமோ அது விஷயத்தில் பரஸ்வீகாரம் செய்து ரக்ஷகனுக ஈச்வரன் இருக்கிறுனென்கிற இவ்வளவு விச்வாஸமே சொன்னதாகும். செய்த ப்ரபத்தி எதற்கோ அதற்கு

बाहू रामस्य संश्रिता ॥" என்றும், "असन्देशात्तु रामस्य तपसश्चानुपालनात् । न त्वा कुर्मि दशग्रीव भस्म भस्मार्ह तेजसा ॥" என்றும், "शरैस्तु संकुलां कृत्वा लङ्कां परबलार्दनः । मां नयेत् यदि काकुत्स्थस्तत् तस्य सदृशं भवेत् ॥" என்றும் பிராட்டி நடத்திக்காட்டின

---

அதாகுமே தவிர மற்ற விஷயத்திற்காகாது. ஒருவன் ப்ரபத்தி செய்யும்போது நிர்விக்ந நிரபராத கைங்கர்யத்திற்கும் சேர்த்து ப்ரபத்தி செய்திருந்தால் இதர விஷயத்திலும் ஈச்வரனை நம்பியிருக்கலாம். இதெல்லாம் தான்கோலின ஸகல பலத்திற்கும் இத்யாதியால் மேலே சொல்வதாம். மோக்ஷார்த்தமாக ப்ரபந்நனுக்கு ஸஞ்சிதபாப புண்யமாகிற கஜத்தையும், அனுபவிக்கஇசைந்த ப்ராரப்த பலனாகிற சிங்கத்தையும், தேஹாவஸாநத்திற்குள் பலகொடுமை செய்யும் ஐங்கருவிகளான புலியையும் கண்டு அஞ்சாமல், உபாயம் உபாயமாகவே நிற்குமென்று நிரபேக்ஷ ரக்ஷகனிடத்தில் திடவிச்வாஸம் வேண்டுமென்றதாயிற்று. ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்திக்குச்லோகம் असन्देशादिति. भस्मार्ह दशग्रीव-சாம்பலாக்க வேண்டிய பத்துத்தலையனே रामस्य—என்னைக் காக்கநிற்கும் ராமன் असन्देशात्—நீயே உன்னைக் காத்துக்கொள் என்று ஆஜ்ஞை செய்யாமையாலும். तपसः—ஸ்த்ரீக்கு முக்யமான கற்பென்னும் தவத்தை—अनुपालनाच्च—குறைக்காமல் வளர்க்கவேண்டியது காரணமாகவும். तेजसा—என் தேஜஸைக் கொண்டு त्वा—உன்னை, न भस्म कुर्मि—சாம்பலாக்காமலிருக்கிறேன். நானே ப்ரவர்த்திக்கலாமாகிலும் அவனுக்கு அடைக்கலமாக ஆனபடியால் அவன் மூலமாய் ஆகப் பார்க்கிறேன். இங்கே பெரியபிராட்டியார் பெருமானைப் போல நிக்ரஹசக்தியுடையவளாயிருந்தும் அவளும்பெருமானும் ஸ்த்ரீபுருஷத் தன்மைக்கு இணங்கத்தாமே குணவிபாகம் செய்திருப்பதால் அதற்கு விரோதமாக நிக்ரஹத்தைத் தான் செய்ய இழிகிறதில்லை என்பது இரண்டு மூன்று பாதங்களிலிருந்து தெளியப்பெறும். முன் செய்த ப்ரபத்தியே போதுமாகையால் மீண்டும் ப்ரபந்நன் ப்ரவர்த்திப்பது பிசகு என்றதாயிற்று. மேலே முதுகில் பிராட்டியை ஏற்றிக்கொண்டு பெருமாளிடம் சேர்க்க முயன்ற மாருதியைப் பார்த்துப் பிராட்டி சொல்வது—शरैरिति. काकुत्स्थः—ககுத்ஸ்த வம்சத்தில் தோன்றிய பெருமான் लङ्कां—லங்கையை शरैः—தம் அம்புகளாலே संकुलां—சூழப்பட்டதாக कृत्वा—செய்து परबलार्दनः-எதிரியையும் அவன்சேனையையும் அழிப்பவராய் मां-என்னை यदि नयेत् தாமே அழைத்துச் சென்றால் तत्—அது தான் तस्य—அவருக்கு सदृशं भवेत् ஏற்றதாகும். இந்த ச்லோகக் கருத்தை யருளுகிறார் அதில் அநிஷ்ட நிவ்ருத்தியும் இத்யாதியால். மாருதி! என்னை முதுகில் எடுத்துச்சென்றால் எனக்கு இஷ்டப்ராப்தி உண்டென்றே கொள். ஆனாலும் அநிஷ்ட நிவ்ருத்தியாகாதே, எதிரியையும் எதிரியின் ஸைந்யத்தையும் முற்றும் அழித்தாலல்லது அநிஷ்ட நிவ்ருத்தியுண்டாகாது. அது ஏற்படும் வரையில் இங்கு அசோக வநத்திலேயே யிருந்து, பிறகே நான் இஷ்டத்தைப் பெறவிரும்புகிறேன். இதற்கே நான் பிறந்து அவரை ஆச்ரயித்தது என்று கருத்தாம்.

रक्षकत्वदृढभத்தாலுள்ள தேற்றமும்—தான் भरन्यासம் பண்ணின விஷயத்தில் स्वभरமற்றிருக்கையும், அதில் अनिष्टनिवृत्तियும் इष्टप्राप्तियும் அவன்கையதே யென்றிருக்கையும் உண்டாயிற்றுகில், தான் கோலி(ரி)ன सकलफलத்துக்கும் साधनமாகவற்றுய், சரமச்லோகத்தில் पूर्वार्धத்திலே विहितமாய், द्वयத்தில் पूर्वखण्डத்தில் अनुसन्धेयமாய், திருமந்த்ரத்தில் मध्यमपदத்திலும் விவக்ஷிதமான உபாயத்திலே தனக்கு निष्ठையுண்டென்றறியலாம்.

"उत्पत्तिस्थितिनाशानां स्थितौ चिन्ता कुतस्तव। यथोत्पत्तिर्यथा नाशः स्थितिस्तद्वद्भविष्यति॥",

---

இந்த ச்லோகத்தை, தான் முதுகிலேறி வரமாட்டேன் என்று ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்திக்காகவும் உதாஹரிப்பதுண்டு. அது முன்ச்லோகத்திலேயே ஏற்பட்டபடியால் பூர்வார்த்தஸ்வாரஸ்யத்தை யிட்டு இங்கு வேறு கருத்துக் கூறியது. मां नयेद् यदि काकुत्स्थः என்கிற சொல்லைக் காணும்போது நானே போகலாகாது அவரே யழைத்துச் செல்லவேண்டுமென்றால், ஸ்வப்ரவ்ருத்திநிவ்ருத்தி தோன்றும். இங்கே சொன்ன கருத்தில் இதனால் இஷ்ட ப்ராப்தியைச் சொன்னதாகும். ஒவ்வொரு அதிகாரத்திலும் முக்யார்த்தத்தை மந்த்ரத்தில் அடைத்துக் காண்பிக்கிறபடி முன் ஸ்வரூபநிஷ்டைக்கு ப்ரதம மத்யமபதங்களைக் கூறி இங்கு உபாயநிஷ்டைக்கு மந்த்ரத்திலுள்ள இடங்களைக் குறிக்கிறார் சரமே த்யாதியால். மேலே புருஷார்த்த நிஷ்டைக்கு இடங்களை திருமந்த்ரத்தில் இத்யாதியால் குறிப்பர்.

புருஷார்த்த நிஷ்டைக்கு அறிகுறிகளை யறிவிக்கிறார் उत्पत्तीत्யாதியால். தானாக நேர்ந்ததை விலக்காதே யநுபவிக்கையும். மோக்ஷத்தில் ப்ராப்யமான கைங்கர்யத்தில் ருசியும் மோக்ஷப்ராப்தியிலே த்வரையும் என்ற இம்மூன்றுமுண்டாகில் இவனுக்கு புருஷார்த்தத்தில் த்வரையுண்டு என்னலாம். அப்ரபந்நனயிருந்த ஸமயத்திற் போல் ப்ரபந்நனை பிறகும் அர்த்தகாமங்களுக்காக அலைவதையே ப்ரதாநமாகக் கொண்டு அதற்கான வைதிக லௌகிகங்களான பெரியபெரிய கார்யங்களில் இழிந்தானாகில், மேல்வரும் புருஷார்த்தத்தை மறந்தவனாவான். அதை ஆராய்வதற்கு ஸமயமேது? இங்குள்ள காலம் கைங்கர்யமாகப் போது போக்குவது ஏது? அதனால் பூர்வகர்மாநுகுணமாகத் தனக்கு எந்த வ்ருத்தி நேர்ந்திருக்கிறதோ அதில் த்ருப்தி யடைந்து அதைக் கைங்கர்யமாக நடத்தி அதிக ப்ரயாஸையை விட்டு பரமபுருஷார்த்தத்தில் ருசியை வளர்க்கவேண்டும். எப்போதுமதிலேயே நோக்குள்ளவனுக்கு இங்கு நேரும் ஸுகஸாதநங்களில் தாரதம்ய பரிசீலநத்திற்கு புத்தி போகாது. இதையே சொல்வதாகும் न शब्दशास्त्र......नचापि रम्यावसथ......न भोजनाच्छादन......न लोकचित्त ग्रहणे रतस्य॥ என்றது. ஆகையால், ப்ரயாஸப்பட்டால் வராமற் போனால் என்ன செய்யப்போகிறோம்; கர்மாதீநமாக ஈச்வரன் நடத்துவதே போதுமென்று நினைத்து அலைவதை விடவேண்டும். ப்ரயத்நம் செய்யாத போது நேரும் பலத்தை யுக்தமாகில் விடாமல் கொள்வதே நலமென்று விரித்துரைக்கிறார். उत्पत्तिस्थिति नाशानां—பிறப்பு இருப்பு

"अचेष्टमानमासीनं श्रीः कञ्चिदुपतिष्ठति । कर्मी कर्मानुसृत्यान्यो न प्राश्यमधिगच्छति ॥"
என்கிறபடியே प्रारब्धकर्मविशेषाधीनமாக ஈச்வரன் செய்யும் देहयात्रादिகளில் கரைதலற்று, தான் கரைந்தாலும்
"उत्पतन्नपि चाकाशं विशन्नपि रसातलम् । अटन्नपि महीं कृत्स्नां नादत्तमुपतिष्ठते ॥"
"यत्किञ्चित् वर्तते लोके सर्वं तन्मद्विचेष्टितम् । अन्यो ह्यन्यच्चिन्तयति स्वच्छन्दं विदधाम्यहम् ॥
என்கிறபடியேஈச்வரன் நினைவின்படியல்லதுஒன்றும்நடவாதென்றுप्रतिसन्धानं பண்ணி "अप्रयत्नागताः सेव्या गृहस्थैर्विषयाःसदा । प्रयत्नेनापि कर्तव्यः स्वधर्म इति मे मतिः ॥"
"नाहारं चिन्तयेत् प्राज्ञो धर्ममेवानुचिन्तयेत् । आहारो हि मनुष्याणां जन्मना सह जायते ॥"

---

இறப்பு என்ற மூன்றில் ஏன் உனக்கு இருப்பு விஷயமான சிந்தை? பிறப்பும் இறப்பும் போல் அதுவும் தானே வரும். अचेष्टमानमिति-भा.शा. 339-13 அசையாமல் உட்கார்ந்திருககும் ஒருவனைச் செல்வம் தானே யண்டுகிறது. कर्मी-ஓடி உழைக்கின்ற மற்றொருவன், कर्म अनुसृत्य—முன் செய்த வினைக்கிணங்க प्राश्यं—உணவைக்கூட नाधिगच्छति—அடைகிறனல்லன். கரைதல் = எப்படி நடக்குமென்று சிந்தையும் அலைதலும், ஈச்வராதீநமென்பதற்கு ப்ரமாணம் காட்டுகிறார் उत्पतन्निति. வானத்திற்கு எழுந்தாலும் பாதாளத்தில் புகுந்தாலும் कृत्स्नां—முழுமையுமான महीं-பூமியை अटन् अपि—திரிந்தாலும். अदत्तं—தான் கொடுத்து வைக்காததை नोपतिष्ठते-நெருங்குவதில்லை. இவன் யாருக்காவது தாநம் ஒட்டிருந்தால் அந்த தர்மத்தின் பலனாக ஈச்வரன் ஸங்கல்பிக்க இவனை தநம் உண்டும். கொடுக்காதபோது கிடையாது. அல்லது अदत्तं-ஈச்வரனால் கொடுக்கப்படாததை என்றுபொருள். ஆக ஈச்வரன் நினைவு முக்யம். இதை ஸ்பஷ்டமாக்குகிறார் மேலே. यत्किञ्चित् இதி. உலகத்திலிருக்கும் எத்தகைய செயலும் என்னுடையாம் செயலே. अन्यः- என்னை விடவேறான ஜீவன் अन्यत्—நான் நினைப்பதைத் தவிர வேறொன்றை चिन्तयति-நினைக்கிறான், அவனிஷ்டம் நிறைவேறாது. अहं நான் स्वच्छन्दम् எனக்கு இஷ்டமானதையே विदधामि—செய்கிறேன் என்ற வசநங்களை நினைத்து அலைச்சலை விடவேண்டும், ஆனால் அதிக ஐச்வர்யங்களையும் போகங்களையும் விரும்பாமற் போனாலும் தேஹயாத்ரைக்காக ஏதேனும் செய்ய வேண்டுமே என்ன—அருளுகிறார், अप्रयत्नेति, भा शा. 801-35 पराशरजनकसंवादம். गृहस्थैः- இல்லற வாழ்க்கையிலிருப்பவர்களாலே सदा—எப்போதும். अप्रयत्नागताः विषयाः—ப்ரயத்நமின்றி வருமவை सेव्याः—கொள்ளத் தக்கவை. நமக்கு சக்தியுள்ள போது நாம் ப்ரயாஸப்பட்டு அடைவதே நலமென்னில், ஏன் அநாயாஸமாய் வருவதை விடவேண்டும், இப்பிரயாஸைபடும் ஸமயங்களை ஆஜ்ஞாநுஜ்ஞா கைங்கர்யங்களுக்குப் பயன்படுத்தலாமே என்று கருத்து. स्वधर्मः—தன் தர்மமாயிருப்பது प्रयत्नेनापि—ப்ரயாஸப்பட்டும் कर्तव्यः செய்ய வேண்டியதாகும். இது எனது (பகவானது) அபிப்ராயம். नेति. प्राज्ञः விவேகியானவன். आहारं—உணவை न चिन्तयेत्—சிந்திக்கலாகாது. தர்மத்தையே மேன்மேல் சிந்திக்கவேண்டும். ஏன் எனில்-மனிதர்களுக்கு ஆஹார

என்று पराशरगीतादिகளிலும் "न सन्निपतितं धर्म्यमुपभोगं यदृच्छया । प्रत्याचक्षे न चाप्येनमनुरुन्धे सुदुर्लभम् ॥" என்று अजगरोपाख्यानத்திலும் சொல்லுகிறபடியே शास्त्रविरुद्धமல்லாத விஷயங்கள் தான் ஒரு விரகு செய்யாதிருக்க भगवत्सङ्कल्पத்தாலே தாமே வரக்கண்டு प्रारब्धकर्मफलமான தனிசு தீருகிறதென்று விலக்காதே அநுபவிக்கையும், இப்படிக் कर्मविशेषाधीनமாக வருகிற प्राप्यान्तरलाभालाभங்களில் "तयोरेकतरो राशिर्यद्येनमुपसन्नमेत् । न सुखं प्राप्य संहृष्येन्न दुःखं प्राप्य संज्वरेत् ॥" என்றும் "உளதென்றிறுமாவார்" என்றும்சொல்லுகிறபடியே हर्षशोकங்களற்று स्वरूपानुरूपமான परमप्राप्यकैङ्कर्यத்திலே ருசியும், ஸ்தோத்ரத்திலும் श्रीवैकुण्ठगद्यादिகளிலும் "कदा कदा" என்று வாய்புலற்றப் பண்ணுகிற प्राप्तिயில் त्वरैயும் நடையாடிற்

---

மென்பது இவன் சிந்திக்கவாகாத ஜந்மகாலம் தொடங்கி ஏற்பட்டிருக்கிறது. ப்ரயத்நமின்றி வருவதைப் பெறுவது என்றார்; தர்மத்தை விட்டு அகலாது வருமதை விலக்கக்கூடாதென்கிறார் नेति. धर्म्यं—தர்மத்தினின்று நழுவாது यदृच्छया सन्निपतितं—எதிர்பாராமல் வந்த उपभोगं—போக்யத்தை, न प्रत्याचक्षे—நான் விலக்குவதில்லை. सुदुर्लभं—மிக்க துர்லபமான एनमपि-போக்யமாயிருப்பதையும் न अनुरुन्धे च நான் நாடுவதுமில்லை. उत्तमपुरुषक्रियापदங்கள். (भा-शान्ति 177—24.ப்ரஹ்லாதனுக்கு அஜகர(மலைப்பாம்பு)முனிவர் வார்த்தை,) தனிசு-கடன். வருவதை விலக்குவதில்லையென்றால் அதில் விசேஷ ஆஸ்த்தையால் என்னவேண்டா என்பதற்கு வசநம் तयोरिति. तयोः—ஸுக துக்க ப்ரகாரங்களில். एकतरः राशिः—இரண்டிலொன்றான வகுப்பு. एनं—தன்னை, यदि उपसन्नमेत्—நெருங்குமாகில், அப்போது ஸுகத்தைப்பெற்று அதிக மகிழ்ச்சி கொள்ளலாகாது; துக்கத்தைப் பெற்று அதிக வேதநை கொள்ளலாகாது, भा. शा. 175-5 இரண்டாந்திருவந்தாதி 45 'உளதென்றிறுமாவார் உண்டில்லையென்று தளர்தலதனருகும் சாரார், அளவறிய வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடிதோயும் பாதத்தான் பாதம் பயின்று'. பக்தர்கள் அளவறிய-அபரிச்சிந்நமான வேதங்களையுடையவனும் பரமபதவாஸிகளின் முடிகள் படுமிடமான திருவடிகளை யுடையனுமான திருவேங்கடத்தானின் திருவடிகளை யநுஸந்தித்த பிறகு, உளது என்று= நமக்கு ஐச்வர்யமிருக்கிறதென்று, இறுமாவார்= இறுமாப்புக் கொள்ளமாட்டார்கள். உண்டு இல்லையென்று= உள்ளதுபோய்விட்டதென்று தளர்தலதன்= தளர்ச்சிக்கு,அருகும்-ஸமீபத்திலும் சாரார்—சார்ந்திருக்கமாட்டார்கள். ஐச்வர்யமிருப்பதையும் இராததையும் ஒன்றாகவே நினைப்பார்கள்.அற்று= இராமல். இவ்வளவால் மோக்ஷபலத்தில் ருசி குறைவதற்குக் காரணமான ஐஹிக போக புத்தியிலே நோக்குத் தகாதென்று கூறி, மோக்ஷருசிவேண்டுமென்றார். அந்த ருசிக்குப் பலனாக மோக்ஷம் பெற த்வரையும் வேண்டுமென்கிறார். வாய்புலற்ற=கதற; ஆளவந்தார் ஸ்தோத்ரத்தில் कदा पुनःशङ्खरथाङ्ग कदाहमैकान्तिकनित्यकिङ्करः, என்கிற ச்லோகம்இரண்டு இங்கே கருதப்பெறும். ஸ்ரீவைகுண்டகத்யத்தில்'कदाहं भगवन्तं नारायणं' என்று தொடங்கி कदा என்ற சொல்லோடு கூடின ஐந்து வாக்யங்கள்

ருகில், திருமந்த்ரத்தில் नारायणशब्दத்தில் चतुर्थियாலும், द्वयத்தில் चतुर्थीसमासங்களாலும், चरमश्लोकத்தில் "अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि" என்கிற வாக்யத்தாலும் கடலைக் கையிட்டுக் காட்டுமாப்போலே காட்டப்பட்ட अपरिच्छेद्यமான परमपुरुषार्थத்திலே निष्ठयுண்டென்றறியலாம்.

இப்படி அவ்வோ அடையாளங்களாலே
"अहमात्मा न देहोऽस्मि विष्णुशेषोऽपरिग्रहः । तमेव शरणं प्राप्तस्तत्कैङ्कर्यचिकीर्षया ॥"
என்கிறபடியே मूलमन्त्रादिகளைக்கொண்டு स्वरूपोपायपुरुषार्थங்களில் தன்னுடைய निष्ठையை உணர்ந்து போரும்(கும்) இவ்வதிகாரிக்கு,
"नैषा पश्यति राक्षस्यो नेमान् पुष्पफलद्रुमान् । एकस्थहृदया नूनं राममेवानुपश्यति ॥"

---

இங்கேகருதப்பெறும். காண்பதெப்போது திருவடியைப் பெறுவதெப்போது, திருவடிக்கீழ் புகுவது எப்போது, கைங்கர்யம் செய்வது எப்போது, கைங்கர்யத்தில் ஆஜ்ஞாபிப்பது எப்போது என்று அங்கே கத்யத்தில் கதறினபடி.

இப்படி மூன்று நிஷ்டைகளின் அடையாளங்கள் கூறப்பெற்றன. இவ்வடையாளங்களை யறிவதற்குப் பலன் भीतिहेतुக்களிலும் ப்ரீதி ஹேதுக்களிலும் கண்ணோட்டமில்லாமையென்கிறார் இப்படி இத்யாதியால். அடையாளங்களை யறிவது அடையாளத்தில் ஏதேனும் குறையுண்டாகில் நிஷ்டையைத் திருத்திக் கொள்வதற்காக, அதன் பலன் வேறொன்றில் கண்ணோட்டம் உண்டாகாமை. கீழ்க்கூறிய மூன்று நிஷ்டைகளையும் ஒரு ச்லோகத்தை உதாஹரித்து அறிவிக்கிறார். अहमिति. இந்த ச்லோகத்திற்கு ரஹஸ்ய ஸந்தேசமென்கிற ரஹஸ்யத்தில் அருளிய வ்யாக்யாநம் காண்க, நான் தேஹமாகாமல் ஜ்ஞாநாநந்தமான ஆத்மாவாகிறேன். விஷ்ணுவுக்கு சேஷபூதன். अपरिग्रहः-எனக்கு சேஷமாக ஒன்றையும் ஸ்வதந்த்ரமாக ஒரு கார்யத்தையும் உடையேனல்லேன். விஷ்ணுவையே நம்பி சரணமடைந்தேன் என்று மூன்று நிஷ்டைகளையும் பின்னே அநுஸந்தித்தபடி. இதில் சேஷ: என்றவரையில் ப்ரணவார்த்தம், प्राप्तः—என்றவரையில் நம: பதார்த்தம், மேல் நாராயணாய என்பதன் பொருள்: கீழ்க்கூறியது போல் இங்கும் பிராட்டியின் நிலையை உதாஹரிக்கிறார் नैति. राक्षस्यः என்கிற ப்ரதமாவிபக்தியை த்விதீயாவிபத்தியாகக் கொள்க, एषा-இந்த ஸீதை भीतिहेतुக்களான ராக்ஷஸிகளைக் காண்கிறாளல்லள். इमान्—இந்த पुष्पफलद्रुमान् பூவும் பழமும் நிறைந்து ப்ரீதி ஹேதுக்களான மரங்களிலும் கண்ணோட்டமற்றிருக்கிறாள் ஒருதரம்கூட இவைகளைக் காண்பதில்லை. இவள் எப்போதும் காண்பதாயிருக்கும் வஸ்துவைக் குறிக்கிறார் एकेति. ஒன்றிலேயே நின்ற மனத்துடன் नूनं உண்மையாக राममेव ராமனையே अनुपश्यति (நேரில் காண்பது போலான) தோற்றமுள்ளவளாக இருக்கிறாள். இதுபோல் முன் சொன்ன நிஷ்ட்டையிலிருப்பவன் தனக்கு பயத்திற்குக் காரணமான அக்ருத்யங்களிலே என்ன செய்தோமோவென்று அஞ்சிக் காண்பதைச் செய்யான். ஆனாலும் भागवतापचार भगवदपचार असह्यापचारங்களில் ஏதேனும் நேரும்போது

என்கிறபடியே विरोधियோடே கூடியிருக்கிற தனக்குப் पाक्षिकமாக संभावितமான ब्रह्मविदपचारादिव्यतिरिक्तங்களான ஏதேனுமொரு भीतिहेतुக்களிலும், स्वरूपप्राप्तकैङ्कर्यव्यतिरिक्तங்களான ஏதேனுமொரு प्रीतिहेतुக்களிலும் கண்ணோட்டம் உண்டாகாது; यदृच्छया உண்டானாலும் அவற்றால் भीतियुம்प्रीतियुம்உண்டாகாது.

முக்கிய மந்திரம் காட்டிய மூன்றினிலையுடையார்
தக்கவையன்றித் தகாதவையொன்றுந் தமக்கிசையார்
இக்கருமங்களெமக்குள வென்னுமிலக்கணத்தால்
மிக்கவுணர்த்தியர் மேதினிமேவிய விண்ணவரே. (21)

स्वापोद्बोधव्यतिकरनिभे भोगमोक्षान्तराले कालं कञ्चिज्जगति विधिना केनचित् स्थाप्यमानाः।
तत्त्वोपायप्रभृतिविषये स्वामिदत्तां स्वनिष्ठां शेषां कृत्वा शिरसि कृतिनः शेषमायुर्नयन्ति ॥ ३२

---

அதில் அச்சமும் கண்ணோட்டமும் வேண்டும். ப்ரீதி ஹேதுவான அதாவது ऐहिकसन्तोषहेतुவான ஏதேனும் கார்யம் செய்ய நேர்ந்தாலும் அதை முக்யமாகக் கொள்ளான். ஆனாலும் தனக்கு ப்ராப்தமான கைங்கர்ய ரூபமான ப்ரீதி ஹேதுக்களை கவனத்துடன் செய்யவேண்டும். பாகவதாத்யபசார பாகவதாதி கைங்கர்ய விஷயங்கள் நீங்கலாக மற்றவற்றால் இவனுக்கு அச்சமும் ப்ரீதியும் இராது என்றபடி. அதிகாரார்த்த ஸங்க்ரஹப்பாசுரம்—

முக்கியஇத்யாதி. முக்கிய மந்த்ரங்களில் முக்யமான மந்த்ரம்—மூலமந்த்ரத்தால் அல்லது மந்த்ரங்களால் காட்டிய—அறிவிக்கப்பெற்ற, முக்கியம் மூன்றில்-முக்கியமான தத்த்வ ஹித புருஷார்த்தங்களில் நிலையுடையார்—நிஷ்டையுடையவர்கள் தக்கவையன்றி—தனக்குத் தகுந்த அநுபவ கைங்கர்யங்களில்லாமல் தகாதவை—தமக்குத் தகாத துக்க ராக த்வேஷ கோபாதிகளை. ஒன்றும்—சிறிதும் இசையார்—விரும்பாதவர்களாய். இ கருமங்கள் = பரிபவிப்பவரிடம் இரக்கம் உபகார ஸ்மிருதி முதலான கீழ்க்கூறிய கார்யங்கள் எமக்கு உள-இருக்கின்றன, என்னும் இலக்கணத்தால்—என்று தெரிய வரும் அடையாளங்களால், மிக்க உணர்த்தியர் = भागवतापचारादिनिवृत्ति भागवतकैङ्कर्यादिप्रवृत्तिகளிலே மிகுந்த கவனமுடையவர்களாய் மேதினி-பூமியை, மேவிய-ப்ரீதியால் அடைந்திருக்கிற விண்ணவர்—நித்ய ஸூரிகளாவர்.

இந்த நிஷ்டையைக் கைங்கர்யம் செய்யக் கட்டின பரிவட்டம் போல் நினைக்கவேண்டும். அதாவது- நிஷ்டையுடையவனே கைங்கர்யத்துக்குஅதிகாரியென்க. மேல் அருளப்போகும் உத்தர க்ருத்யத்தோடு இதற்கு ஸம்பந்தம்; இதை அறிவிக்கிறார் स्वापेति என்கிற ச்லோகத்தினால். स्वाप—உறக்கத்திற்கும் उद्बोध—விழிப்புக்கும், व्यतिकरनिभे—உண்டான கலப்புக்கு ஸமானமான भोगमोक्ष अन्तराले-ப்ரபத்திக்கு முன் பெற்ற போகங்களுக்கும் மேலே வரும் மோக்ஷத்திற்கும் நடுவிலே कञ्चित् कालं— தேஹாவஸானம் வரையிலான குறுகிய காலம் முழுமையும் केनचित् विधिना—அர்ச்சாவதார ஸேவாதிபாக்ய வசத்தாலே स्थाप्यमानाः— இங்கே நிறுத்தப்பட்டவர்கள் तत्त्व उपाय.प्रभृतिविषये-தத்த்வ ஹித புருஷார்த்த விஷயத்திலே स्वामिदत्तां-எம்பெருமான் அருளிய स्वनिष्ठां-தனது நிலையை शिरसि-தன் சிரஸில்

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
**श्रीमद्रहस्यत्रयसारे स्वनिष्ठाभिज्ञानाधिकारश्चतुर्दशः 14**
**श्रीमते निगमान्तमहादेशिकाय नमः**

—o—o—

**श्रीमते निगमान्तमहादेशिकाय नमः**

## उत्तरकृत्याधिकारः

## உத்தரக்ருத்யாதிகாரம் 15.

—o—o—

सन्तोषार्थं विमृशति मुहुः सद्भिरध्यात्मविद्यां
नित्यं ब्रूते निशमयति च स्वादु सुव्याहृतानि ।
अङ्गीकुर्वन् अनघललितां वृत्तिमादेहपातात्
दृष्टादृष्टस्वभरविगमे दत्तदृष्टिः प्रपन्नः ॥ ३४.

---

**स्वामिदत्तां**—சேஷியினுல் அளிக்கப்பட்ட **शेषां**-பரிவட்டமாக **कृत्वा**-பாவித்து **कृतिनः**-ஆஜ்ஞாநுஜ்ஞா கைங்கர்யமுள்ளவர்களாய் **शेषं आयुः**-நின்றிருக்கும் ஆயுளை **नयन्ति**-கழிக்கின்றனர். ப்ரபத்திக்கு முன்னே போகார்த்தமாக கார்யம் செய்தவர்கள் அதற்குப் பிறகு பகவதனுபவ கைங்கர்யரூப மோக்ஷம் பெறப்போகிறவர்களாய் ஜ்ஞாநபக்தி கைங்கர்யப் பயிர்ச்சிக்காக இங்கே ஸ்தாபிக்கப்பட்டிருப்பதால் அதற்குத் தத்த்துவஹித புருஷார்த்த நிஷ்டை காரணமா யிருப்பதால் இந்நிஷ்டையாம் பரிவட்டம் சிரஸ்ஸில் அணிந்து அவனுக்கான கார்யங்களையே செய்பவரா யிருக்க வேண்டுமென்றதாயிற்று.

ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநாதிகாரம் முற்றும்.

ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம:

—o—o—

ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம:

**உத்தரக்ருத்யாதிகாரம்**

அதிகாரார்த்த ஸங்க்ரஹமாக முதல் ச்லோகம். **सन्तोषार्थमिति. प्रपन्नः**-ப்ரபத்தியை யநுஷ்டித்தவன் **आदेहपातात्**—தேஹ அவஸாநம் வரையில் **दृष्ट**-ஐஹிக பலத்திற்கான—தேஹயாத்ரைக்கான, **अदृष्ट**—இங்குக் காணப்படாத மோக்ஷத்திற்குமான **स्वभर**—தான் செய்யவேண்டும் கார்யங்களுடைய **विगमे**-தன்னை விட்டு அகன்றமையில் **दत्तदृष्टिः**-கண்ணேட்டமுள்ளவனுய், **अनघललितां**—அபராதம் கலசாது பகவத் ப்ரீத்யர்த்தமாய் போக்யமான **वृत्तिं**—ஆசரண ப்ரகாரத்தை ஆஜ்ஞா கைங்கர்யாதிகளை **अङ्गीकुर्वन्**-ஸ்வீகரித்தவனுய் **अध्यात्म-विद्यां**-உபநிஷத் ஸூத்ரபாஷ்யாதி ரூபமான ஜீவபரமாத்ம வித்யையை **सन्तोषार्थं**-ஸம்சய நிவ்ருத்தியால் வரும் ப்ரீதிக்காகவும், ஸத்துக்களுடைய உகப்புக்காகவும் **सद्भिः**-நல்லவர்களோடு **मुहुः**-அடிக்கடி **विमृशति**-ஆராய்வதாம். **नित्यं**-எப்போதும், அத்யாத்ம வித்யையை ஸந்தோஷார்தம் **ब्रूते** |

ப்ரவசநம் செய்வதாம். सुव्याहृतानि-அருளிச்செயல்களையும் மற்ற ஸ்ரீஸூக்தி களையும் स्वादु-போக்யமாக, அகிஞ்சனை தனக்கு இது கிடைத்ததே என்று ஸந்தோஷத்துடன் निशमयति च—கேட்பதுமாம். உத்தர க்ருத்யமாவது ப்ரபத்திக்குப் பின்னே செய்யவேண்டிய கார்யம். இந்த ப்ரபத்தியால் முக்யோபாயமான பக்தியென்கிற பாரத்தை பகவானிடம் அர்ப்பணம்செய்து விட்டபடியால் அது க்ருத்யமன்று. ஐஹிக போகத்திற்காக அதிகமாக அலைவது மோக்ஷருசிக்கு बाधकமாகையாலே தேஹயாத்ரை கர்மாதிநை யானது போதுமென்று விடப்பட்டதால் அதுவும் க்ருத்யமன்று. நிஷித்த கார்யங்கள் பகவத் ப்ரதிகூலமாகையால் விடப்பட்டன. ஆக उपायापाय-सन्त्यागी मध्यमां वृत्तिमाश्रितः।' என்றபடி ஆஜ்ஞாநுஜ்ஞா கைங்கர்ய வ்ருத்தி யையே இவன் அங்கீகரிப்பதாம். இப்படி நித்ய கர்மாநுஷ்டாநம் செய்து கொண்டே तत्पादभक्तिज्ञानाभ्यां फलमन्यत् कदाचन। न याचेत् என்கிறபடி கைங்கர் யம் போக்யமாகைக்காக ஜ்ஞாநபக்திகளை வ்ருத்தி செய்யவேண்டியது அவச்யமாகையால் வேதாந்த வித்யையை யதிகரிப்பது அவச்யம். அது கடிநமாய் பல ஸந்தேஹங்களுக்கு இடமாயிருப்பதால் தெளிவு வருவதற் காக ज्ञानकरणाभ्यासः तद्विद्यैश्च सह संवादः। तं (संवादम्) शिष्यगुरु सब्रह्मचारिशिष्ट-श्रेयोर्थिभिः अनसूयुभिः अभ्युपेयात्,(4-2-)என்று न्यायदर्शनத்தில் கூறியபடி அடிக்கடி ஸத்துக்களோடு கலந்து விசாரித்துத் தெளியவேண்டும், தெரிந்ததை நெருங் கியவர்களுக்கு நித்யம் ப்ரவசநம் செய்யவேண்டும். 'முன் அகிஞ்சனனாய் ப்ரபத்தி செய்தோம்; இப்போது ஜ்ஞாநதநம் நிறைந்து விட்டது' என்று கர்வப்படாமல் நாம் க்ரஹித்தது ஸமுத்ரத்தில் கோஷ்பதமென்று தன்னு டைய ஆகிஞ்சந்யத்தை ப்ரதிஷ்டிதமாக்கிக் கொண்டு அழகாகச் சொல் லும் பெரியோர்களுடைய மொழிகளையும் ஆதரத்துடன் கேட்கவேண்டும். தன்னுடைய குலகோத்ர வேதாச்ரமாவஸ்தாதிகளுக்கு ஈடாகத் தான் அநுஷ்டிக்க வேண்டியவற்றைத் தெளிய வேண்டுமென்றபடி இங்கே अध्या-त्मविद्याम् என்று ஸம்ஸ்க்ருத வித்யைகளையும் सुव्याहृतानि என்று திவ்ய ப்ர பந்தங்களையும் க்ரஹிப்பதுமுண்டு. க்ரந்தங்களை யெல்லாம் அத்யாத்ம வித்யாபதத்தாலே க்ருஹித்துக்கொண்டு सुव्याहृत என்ற பதத்தினாலே தாத்காலிகமான பெரியோர்களின் உபதேச—உபந்யாஸாதிகளை க்ரஹிப்பது மாம். விமர்சநம் முதலான மூன்று க்ரியைகளிலும் எல்லாம் கர்மாவாகலாம், எல்லாமே விமர்சந ப்ரவசந விசேஷச்ரவண விஷயமாகலாமே. க்ருதக்ருத்யாதி காரத்திலும் இவ்வுத்தர க்ருத்யாதிகாரத்திலும் மேலே சாஸ்த்ரீய நியம நாதிகாரத்திலும். மூன்றுதரம் நித்ய கர்மாவைச் சொல்லவேண்டியதென் என்னில்—கீழே க்ருதக்ருத்யனாகில் நித்ய கர்மாநுஷ்டாநம் வேண்டாவே. அது தேவதாந்தர ஆராதநமாயிருப்பதாலும் தகாது' என்று வினவிய போது பரமாத்மமாத்ர ஆராதநமாகக் கைங்கர்யமாகச் செய்யவேண்டு மென்றார். அங்கு "परमिह विभोः आज्ञासेतुः बुधैरनुपाल्यते" என்று நித்யகர்மா

இப்படி க்ருதக்ருத்யனாய் ஸநிஷ்டையைத் தெளிந்து ஶரீரத்தோடிருந்தகாலம், பழந் திருவிடையாட்டத்திலே சிறிதிடத்தை யடைத்துக் கொண்டிருப்பாரைப்

---

நுஷ்டாநத்தை ப்ரதாநமாக முடித்தார், இந்த அதிகாரத்தில் அவ்வநுஷ்டாநம் உபயவேதாந்த க்ரந்தங்களில் விசேஷபரிசயம் செய்து வந்த ஜ்ஞாநபக்தி பூர்வகமாகவிருக்க வேண்டுமென்கிருர். . சாஸ்த்ரீய நியமநாதிகாரத்தில், 'விசேஷ ஜ்ஞாநமுள்ளவன் முக்தரைப் போலே யதேச்சம் செய்யலாமே, சாஸ்த்ரீயமே என்கிற நிர்பந்தமென்' என்கிற சங்கைப் பரிஹரிக்கிருரென்க.

இப்படி இத்யாதி ஒரு பெரிய வாக்யமாகும். க்ருதஜ்ஞனு யிருக்கவும் ப்ராப்தம் என்கிற விடத்திலே முடியும் அதன் பிறகு இவ்வுத்தர க்ருத்யத்தில் ப்ரதாநமானவை இரண்டு மாநஸங்கள், இரண்டு வாசிகங்கள், இரண்டு காயிகங்கள் என்னப்போகிருர், முதலான மஹாவாக்யத்தில் "உத்தர க்ருத்யம் இருக்கும்படி" என்ற வரையிலானதற்கு. 1 முன்னடி பார்த்து நடக்கவும். 2 அவலம்பித்துக் கொண்டு போரவும். 3 வாஸநைகளை மாற்றி வைக்கவும், 4 உகந்து பண்ணவும், 5 பரத்வ ஸௌலப்யாதிகளுக்கு அநுரூபமான வ்ருத்தியைப் பண்ணவும். 6 ந்யாயார்ஜிதத்ரவ்யங்களாலே நடத்தவும். 7 நினைத்திருக்கவும் 8 அவர் பக்கலிலே க்ருதஜ்ஞனுயிருக்கவும் 9 அவ்விஷயத்திலும் க்ருத ஜ்ஞனுயிருக்கவும் என்கிற ஒன்பதோடு சேர்த்து ப்ராப்தமென்பதோடு அந்வயம் செய்க. இந்த ஒன்பது அம்சங்களும் இருந்தால்தான் ஆஜ்ஞா—அநுஜ்ஞாரூபமான உத்தர க்ருத்யம் நிலைக்குமென்றதாம். ஆக உத்தர க்ருத்யமிருக்கும்படி என்பதற்கு, உத்தர க்ருத்யம் நிலைத்து நிற்பதற்காக என்று பொருளாகிறது. க்ருதக்ருத்யனானவனுக்கு ஸத்ஸஹவாஸமும் விசத ஜ்ஞாந ஸம்பாதநமும் முக்யம் என்பதிலே இவ்வதிகாரத்துக்கு நோக்கு. தொடக்கத்தில் உள்ள இப்படி என்கிற சொல்லுக்கு துவக்குண்டு இருக்கிற என்றவரையிலான சொற்களில் அந்வயம்.

இவ்வதிகாரிக்கு த்ருஷ்டாந்தமாகிறவரைக் காட்டுகிருர். பழம் திரு இத்யாதியால். திருவிடையாட்டம் என்றவிடத்தில் திரு இடையாட்டம் என்றும் திரு விடையாட்டம் என்றும் பிரிவாம். இடையாட்டம் என்பதற்கு இடம்—ஸ்தலம் என்று பொருள். அப்போது. தான் வஸித்திருந்த பெரிய இல்லத்தில் சிறிது அம்சத்தை விட்டு வாஸம்செய்பவர்கள் போல் என்றபொருளாகும். திரு என்பது மேன்மையைக் குறிக்கும், மஹான்களான முன்னேர்கள் வாஸம் பண்ண இடத்தில் மதிப்பு வைத்து ஓரம்சத்தைத் தமக்காகக் கொண்டவர் என்றபடி (அல்லது திரு என்பதால் பகவானைச் சேர்ந்த இடம் என்பதாம். திவ்யதேசங்களில் பகவானுடைய இடங்களிலேயே வாடகைக்கு க்ஷேத்ரவாஸிகள் குடியிருப்பதுண்டு,) விடையாட்டம் என்றபோது விடை= வ்ருஷபம்; ஏர் உழுமிடம் விடையாட்டம். திருவிடையாட்டமாவது பகவத்க்ஷேத்ரம், கோயில்மான்யம் போன்றது. க்ருஷி

போலே, ஒருபடி துவக்கற்று ஒருபடி துவக்குண்டிருக்கிற இவ்வதிகாரிக்கு— முக்தருடைய कैङ्कर्यपरम्पரைபோலே स्वादुतमமாகையாலே स्वयंप्रयोजनமாய், शास्त्र-विभक्तकालविशेष-नियतமாய், उत्तरकैङ्कर्यத்துக்கு अवसरलाभार्थமாகப் पूर्वकैङ्कर्यம் தலைக்கட்டவேண்டும்படி சங்கிலித் துவக்காய், स्वामिसंप्रीतिக்குக் காரணமுமாய் கார்யமுமாய், "வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கி

---

பண்ணுவதற்காக அதைக் கொண்டென்றபடி. பழைய க்ஷேத்ரத்தில் போதுமென்று சில பாகத்தோடு நிற்பர். மற்ற பாகத்தில் துவக்கை விடுவர். இவரை த்ருஷ்டாந்தமாகச் சொன்னது—இவர்களுக்கு இது பகவானுடைய சொத்தே யாகும் நமது அன்று என்று உலகில் விவேகமிருப்பது ஸ்பஷ்டம். அதுபோல் ப்ரபந்நன் சரீரத்தோடு இருந்த காலம், சரீரம் பந்துவர்க்கம் முதலானவற்றில் வேண்டுமளவு கொண்டு தான் செய்யும் பகவத் கைங் கர்யத்துக்கு ஸம்பந்தப்படாத அம்சத்தோடு துவக்கை விடுகிறான். இப்படி யிருக்கும் அதிகாரிக்கு என்றபடி. இந்த அதிகாரிக்கு என்ற சொல்லுக்கு உத்தரக்ருத்யமிருக்கும்படி என்றவிடத்தில் அந்வயம். அதற்கு விசேஷணம். ஸ்வரூபாநுரூபகாலக்ஷேபார்த்தமான என்றது. ஸ்வரூபாநுரூபேத்யா திக்கு ப்ரமாண ப்ரதர்சநம். வாசித்தும் கேட்டும் இத்யாதி. இந்த இடத் தில் அருளிச்செயல்களை முன்னமெடுத்து அதற்குப் பிறகே வடமொழி ப்ரமாணங்களை எடுத்தருள்வது விசேஷம். ச்லோகத்தில் சொன்ன அம்சங் களுக்கு அருளிச்செயல்களில் ஆதாரமில்லை யென்கிற மதியைப் போக்கு வதற்காக இப்படியாம். இந்த உத்தர க்ருத்யத்துக்கே முதலில் ஸ்வயம் ப்ரயோஜநமாய் என்று தொடங்கி, கார்யமுமாய் என்றவரையிலான விசே ஷணங்கள். ஸுகமும் துக்க நிவ்ருத்தியும் தானே ஸ்வயம்ப்ரயோஜந மாகும்; உத்தர க்ருத்யம் ஸ்வயம் ப்ரயோஜநமாகுமோ என்பதற்குப் பரி ஹாரமாம் முக்தருடைய இத்யாதி. காலவிசேஷேதி. ஸந்த்யோபாஸ நாதிகளுக்கு காலம் வ்யவஸ்த்திதமாயிற்றே. அபிகமந உபாதாநாதி பஞ்ச காலங்களையும் கொள்வதால் பாஷ்யகார ஸம்ப்ரதாயஸ்தரான ப்ரபந்நருக்கு ஸ்ரீபாஞ்சராத்ரமும் சேர்வதால் அதிக சாஸ்த்ர ஸம்பந்தமே யாகும். அவஸர லாபார்த்தம் = அவகாசம் பெறுவதற்காக. உபாதாநகால கார்யம் அதிகமிராத நாளில் அபிகமந காலத்தை வளர்த்தலாம்; அது அதிகமாகில் இதைக் குறைக்கலாம். இப்படி எங்கும் கண்டுகொள்வது. சங்கிலித்துவக்காய்— சங்கிலிகளை ஒன்றோடொன்று இணைத்திருப்பது போல் ப்ராதஸ்ஸங்க வாதிகளையும் அபிகமந உபாதாநாதிகளையும் இணைத்திருப்பதால் இடையில் வேறு கார்யம் புகாதென்றபடி. காரணமுமாய் கார்யமுமாய். ஒருநாள் செய்ததைக் கண்டு ஸ்வாமியான பகவான் ப்ரீதி யடைந்து மறுநாள் செய்ய அநுக்ரஹிப்பதால் உத்தர க்ருத்யத்துக்கு காரணத்வமும் கார்யத் வமுமாம். வாசித்தும் இதி. நான்முகன் திருவந்தாதி, 63. தரித்திருந்தேன் என்று பாசுரத் தொடக்கம். "தரித்திருந்தேன் ஆகவே தாராகணப் போர்

னேன் போது'' என்றும், "சீர் கலந்த சொல் நினைந்து போக்காரேல் சூழ் வினையினாழ் துயரை என் நினைந்து போக்குவரிப் போது'' என்றும், "ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலா வடிமை செய்ய வேண்டும் நாம்'' என்

---

விரித்துரைதத வென்னாகத்து உன்னை, தெரித்து எழுதி வாசித்தும் கேட்டும்'' இத்யாதி, தாரா கணப் போராவது நக்ஷத்ரக்கூட்டம் விஷயமான சர்ச்சை. ஜ்யோதிச் சாஸ்த்ர விஷயங்களை விரித்து உரைத்த ஆதிசேஷன் மேல் சயனித்திருக்கும் உன்னைத் தெரித்து—நன்றாக அறிந்து, உன்விஷயமாக க்ரந்தங்கள் எழுதி வாசித்தும், பிறரிடம் கேட்டும், வணங்கியும்—பல ஸேவைகளைச் செய்தும். ஆராதித்தும் போது போக்கினேன். ஆகவே என்னை தரித்திருந்தேன் என்று பொருள். தரித்திருந்தேனாகவே என்பதற்கு நான் தரித்திருப்பதற்காகவே என்றும் பொருளாம், இதில் அதிகார முதல் ச்லோகத்தில் சொன்ன உத்தர க்ருத்யங்கள் அடங்கியுள்ளன. 'ஸ்வரூபாநுரூபகால க்ஷேபார்த்தமாக' என்னப்போவது,போக்கினேன்போது என்றதில் வ்யக்தம். வடமொழி ப்ரமாண வாக்யங்கள் ப்ராயேண பக்தியதிகாரி விஷயமாகுமாகையாலே அங்குக் கூறப்படும் க்ருத்யங்கள் உபாயத்வோபயுக்தங்களாகலாம். க்ருதக்ருத்யன் கால க்ஷேபார்த்தமாகச் செய்வதென்பது ஆழ்வார்கள் அருளிச்செயல்களிலேயே மலிந்திருக்கும். அவர்கள் ப்ரபந்நர்களாகையாலே கால க்ஷேபார்த்தமே என்பது எல்லாவிடத்திலும் கொள்ளவேண்டுமென்று அறிவிப்பதற்காகவே காலக்ஷேபத்தைச் சொல்லும் சொற்கள் கொண்ட பாசுரங்களை முதலில் எடுத்தது, சீர் இத்யாதி, பெரிய திருவந்தாதி. 86. "கார்கலந்த மேனியான் கை கலந்த ஆழியான் பார் கலந்த வல் வயிற்றான் பாம்பணையான் சீர் கலந்த சொல் நினைந்து போக்காரேல் சூழ்வினையின் ஆழ்துயரை என் நினைந்து போக்குவர் இப்போது'' ப்ரபந்நரா யிருப்பவர் மேகத்திற்கொத்த திருமேனியுடையனும் திருக்கையில் சேர்ந்த திருவாழியுடையனும் ப்ரளயத்தில் பூமி முதலானவை யடங்கிய த்ருடமான திருவயிறு உடையனும். சேஷசாயியுமான பிரானின் கல்யாண குணங்களைக் கூறும் ஸ்ரீஸூக்திகளை நினைத்து இந்த தேஹாவஸாநம் வரையிலான போதைப் போக்கவேண்டும். இல்லையேல், தம்மைச் சூழ்ந்திருக்கும் வினைகளின் பலனாக ஆழ்ந்த பல துக்கங்களில் விழுந்தொழிவதாம். அதைப் போக்குவது வேறு எதை நினைத்து ஆகும்? ஆகையால் ஸம்ஸார துக்கங்கள் தட்டாமைக்காகவும், ஸுகமாய் காலம் போக்கவும் பகவந்நாமஸ்துத்யாதிகளையே அநுஸந்திப்பதாம். ஒழிவில் இதி. திருவாய்மொழி 3-3-1. இதன்மேல் அடிகள்; தெழு குரல் அருவித் திருவேங்கடத்து எழில் கொள் சோதி எந்தை தந்தை தந்தைக்கே''. மேலடிகளின் அர்த்தத்தை முதலில் அநுஸந்தித்து முன் அடியின் பொருளைச் சேர்ப்பது. ஆரவாரிக்கின்ற ஓசையை யுடைய அநேக தீர்த்தங்கள் கொண்ட திருவேங்கடமலையில் இருப்பார் மிக்க அழகுகொண்ட ஜ்யோதிஸ்ஸான திருமேனியை

றும், ''பொங்கேழ் புகழ்கள் வாயவாய்ப் புலன்கொள் வடிவென் மனத்ததாய் அங்கேய் மலர்கள் கையவாய் வழிபட்டோட வருளில்'' என்றும், நாடாத

---

யுடைய நம் கூடஸ்த்தனை திருமாலுக்கே, வரும் அநந்த காலமெல்லாம் எங்கும் அவனுடன் கூடியே மிக்க பற்றுடன் குறைவில்லாத கைங்கர்யங்களை நாம் செய்வோமாக; இக் கைங்கர்யங்கள் செய்வதே நமக்குப் போது போக்காகும் பொங்கு இதி திருவாய்மொழி 8-10-4. இதற்கு முன்னடிகள் ''இங்கே திரிந்தேற்கு இழிக்குற்றென். இருமாநிலம் முன் உண்டு உமிழ்ந்த செங்கோலத்த பவளவாய் செந்தாமரைக்கண் என் அம்மான்'', என்பதாகும். விஸ்தாரமாய் அகன்ற பூமி முழுதும் முன்னே ப்ரளயத்தில் உண்டு ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் மீண்டும் படைத்தவனும் சிவந்து அழகான பவளம் போன்ற திருவதரமுடையவனும் செந்தாமரைக் கண்ணனுமான எனது ஸ்வாமியின் மேன்மேல் பொங்கி எழுகின்ற புகழ்ச்சிகள் எனது வாயில் இருக்க, இந்த்ரியங்களைக் கொள்ளை கொள்ளும் அவன் திருமேனி எனது மனத்தில் நிற்க, அங்கு= அத்திருமேனிக்கு ஏய் = பொருந்திய மலர்கள்-புஷ்பங்கள் கையவாய்—பரிக்கப்பட்டு என்கையில் இருக்கவாகி, வழிபட்டு ஓட—பெரியோர்கள் சென்ற வழியே சென்று (செய்தவாறே செய்து கொண்டு) மேன்மேல் விரைவதற்கு அநுக்ரஹம் செய்யப்பெற்றால் இவ்வுலகில் திரிகின்ற எனக்கு இழிக்குற்று—தாழ்வு என்? ஒன்றுமில்லை. மநோவாக்காயங்கள் எம்பெருமான் விஷயமாகி முன்னோர்களைப் போல் கைங்கர்யங்கள் செய்ய அருள் பெற்றால் இவவுலகில் இருப்பது தாழ்வாகாது. இது நெடுமாற்கடிமை திருவாய்மொழியில் உள்ள பாசுரம். பாகவததாஸ்யம் சொல்லும் திருவாய்மொழியில் இப்பாட்டில் பகவதாராதநத்தைச் சொல்வது சேருமோ என்னில்—இப்படி பகவானுக்கு அடிமையாயிருப்பவர்களையே பாகவதர்கள் மதியர் என்று சேர்த்துக் கொள்வார்களென்று கருத்தாம்; அல்லது எம்பெருமானுடைய ஸங்கீர்தனத்யாநங்களோடு பாகவதர்களுக்குத் திருவாராதனத்திற்கு ஸமர்ப்பிக்க வேண்டிய மலர்களை ஸமர்பிக்க அவற்றைக் கையில் கொண்டு பாகவதர்களுக்கு வழிபாடு செய்து பிறகு மிகுந்த சிறுகாலத்தில் ஓட அருளில்= அரைகுறையாக பகவத்கைங்கர்யம் செய்ய அருள் புரிந்தால் அப்போது ஒரு குறைவுமில்லை. பாகவத கைங்கர்யத்தை விட்டால் தான் குற்றமாகுமென்றும் உரைக்கலாம். நமது உரையான ப்ரபந்த ரக்ஷையில் காண்க. நாடாத இதி. 1-4-9. (திருவாய்மொழி) 'நாடாத மலர் நாடி நாள்தோறும் நாரணன்தன் வாடாத மலரடிக் கீழ் வைக்கவே வகுக்கின்று, வீடாடி வீற்றிருத்தல் வினையற்றதென் செய்வதோ ஊடாடு பனிவாடாய் உரைத்து ஈராய் எனது உடலே'' வாடைக்காற்றை இங்கே தூது விடுவதாம்—ஊடு= எனக்கும் பெருமாளுக்கும் நடுவே, ஆடு—ஸஞ்சரிக்கின்ற வாடைக்காற்றே! யாரும் நாடிப் பெறாத சிறந்த புஷ்பங்களைத் தேடிப் பறித்து ப்ரதிதினம் அவை வாடுவதற்குள்ளே நாராயணனுடைய

மலர் நாடி" என்றும், "வடிவிணையில்லா மலர்மகள் மற்ற நிலமகள் பிடிக்கு மெல்லடியைக் கொடுவினையேனும் பிடிக்க" என்றும், "தனக்கே யாக வெனைக் கொள்ளுமீதே" என்றும், "உனக்கே நாமாட்செய்வோம்" என்றும், "பள்ளி

---

வாடாத திருவடிகளில் ஸமர்ப்பிப்பதற்காகவே உன்னைப் போல் எனக்கும் கரணகளேபரங்களை அவன் ஏற்படுத்தியிருக்க, அதை விட்டு வெறுமனே உட்கார்ந்திருத்தல் என்கிற பாக்யஹாநியானது என்ன என்ன தீங்கைச் செய்யுமோ என்று அஞ்சுகிறேன். இதைப் பிரானிடம் உரைத்து அவன் அனுகூலனாகாமல் வெறுமனே யிருந்தால் அப்போது எனது உடலைப் பிளந் தொழிக்கவேண்டும்.பகவத்கைங்கர்யத்துக்கு உபயோகப்படாதஉடலைதேஹா வஸாநம் வரையில் கேட்பது பிசகென்றபடி, வடிவு இதி. திருவாய்மொழி 9-2-10 கொடுவினை என்று பாசுரத்தொடக்கம்; திருப்புளிங்குடி யெம்பெரு மான் விஷயம். பிடிக்க என்பதற்கு மேல், 'நீ ஒருநாள் கூவுதல் வருதல் செய்யாயே' என்று பாசுரமுடிவு, கொடிய கார்யங்கள் செய்யும் ஆயுத ங்களை நியமிக்க வல்லவனே! அமரர்களுக்காக, அஸுரர்களுக்கு விஷமான வனே! என் அமுதே! பயிர்ஸம்ருத்தியுடைய திருப்புளிங்குடி யெம்பெரு மானே! வடிவில்—அழகில் ஈடு இல்லாத அலர்மேல்மங்கையும், அவளுக்கு ஒத்த பூமிப்பிராட்டியும் அன்புடன் ஸாவதாநமாக வருடுகின்ற உனது மென்மை பொருந்திய திருவடிகளை ஆசைப்பட்டும் பெறவாகாதபடி பாபி யான நானும், வருடவாம்படி நீயே என்னை ஒருநாள் நீ உள்ள இடத் திற்குக் கூவிக்கொள்ள வேணும்; அல்லது இவ்விடத்திற்கு எழுந்தருள வேணும் என்று இங்கே கைங்கர்யத்தை ப்ரார்த்தித்தபடி. தனக்கே இதி. திருவாய்மொழி—2-9-4. "எனக்கே ஆட்செய் எக்காலத்துமென்றென்மனக் கே வந்து இடை வீடின்று மன்னி, தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே. எனக்கே கண்ணனை யான் கொள் சிறப்பே" ஸர்வேச்வரன் ஸர்வ ஸுலப னாய் எனக்காகவே= நான் கொள்ளும்படி தோற்றினால் அப்போதும் நான் கொள்வதென்கிற சிறந்த புருஷார்த்தமானது நான் அவனைக் கண்டு ஆநந் திப்பதையே ப்ரதாநமாகக் கொண்டல்ல; அதற்கு நேர்மாறாக சாஸ்த்ரப்படி அவனே என்னைப் பார்த்து 'எனக்கே ஆள் செய் எக்காலத்திலும்' என்று அறிவித்து என் மனத்திலே வந்து சேர்ந்து இடையில் விடாமல் நிலைத் திருந்து தனக்காகவே என்னைக் கொள்ளுவதென்கிற இதே யாகும். இதே எம்மா வீட்டுத் திறமாகும். இதனால் தன் ப்ரயோஜநத்தில் நோக்கின்றி அவனுகப்புக்காகவே என்ற ஸ்வரூபாநுரூபமான அம்சம் தெரிவித்தபடி. உனக்கே இதி, திருப்பாவை 29, நீ எங்களுடைய நோம்புக்கு உதவ வந்தாலும் நீ ஸாக்ஷாத் மந்மத மந்மதனாயிருந்தாலும் உனக்கே நாங்கள் அடிமையாக விருப்போம். அதற்குத் தக்கவாறு மற்ற நம் காமங்கள் மாற்று என்றதாம். இது சிற்றஞ் சிறுகாலே பாசுரம். பள்ளி இதி நாச்சி யார்திருமொழி. 4-1. "தெள்ளியார் பலர் கைதொழுந்தேவனார் வள்ளல்

கொள்ளுமிடத்தடிகொட்டிடக் கொள்ளுமாகில்'' என்றும், "எண்ணக் கண்ட விரல்கள்'' என்றும், ''உண்ணு நாள் பசியாவதொன்றில்லை யோவாதே

---

மாலிருஞ் சோலை மணாளனார் பள்ளிகொள்ளுமிடத்து அடிகொட்டிடக் கொள்ளுமாகில் நீ கூடிடு கூடலே". ஆண்டாள் எம்பெருமானோடு தான் கூட வாய்க்குமா என்று சோழிகள் போன்றவற்றை இரட்டையிரட்டையாகக் கூட்டிப் பார்க்கிறாள், கூடும் சோழி போன்ற வஸ்துவே! நீ தெளிந்த அறிவுடைய பலரால் ஸேவிக்கப்பெற்று தேவதேவனாய் மிக்க ஔதார்ய முடையனாயிருக்கும் திருமாலிருஞ்சோலை மணவாளனான அழகன் தான் சயனித்துக் கொண்டிருக்குமிடத்தில் தன் திருவடிகளை நான் குவித்துப் பிடிக்கும்படி (அடிகொட்டல்-திருவடி பிடித்தல்) என்னை ஸ்வீகரிப்பானாகில், நீ ஒன்றாக நிற்காமல் இரட்டையாகவே கூடி எனக்குத் தெரிவிக்க வேண்டுமென்கிறார். எம்பெருமானைத் தான் மணந்துகொள்ள ஆசைப்படுவது போகாநுபவத்திற்காக அல்ல; அவன் திருவடிகைங்கர்யத்திற்காகவே என்று அறிவித்தபடி. இதுவரையில் பொதுவாகக் கைங்கர்யம் சொல்லப் பட்டது; சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட நித்ய கர்மாநுஷ்டாநங்களைக் கைங்கர்யமாகச் செய்யவேண்டுமென்பதைச் சில பாசுரங்களால் தெரிவிக்கிறார் எண்ண இதி. பெரியா, திரு. 4-4-3. 'வண்ணனன் மணியும்' திருக்கோட்டியூர் விஷயமான பாசுரம். இதில் மந்த்ரஜபம் செய்யாதவன் உண்டு வாழ்வதே தகாதென்கிறார், பெரிய பிராட்டியும் எம்பெருமானும் போன்ற நல்வண்ணமுடைய மணிகளையும் மரகதங்களையும் சேர்த்து அழுத்தி யிருப்பதால் அவற்றின் ஒளி வீசும்படி யிருக்கும் திண்ணைகளால் சூழப்பட்ட திருக்கோட்டியூரில் எழுந்தருளி யிருக்கும் திருமாலின் திருநாமங்களையே எண்ணுவதற்காக அமைக்கப் பெற்றிருக்கும் விரல்களால் ஒரு நொடிப் பொழுதும் எண்ணாமல் உணவைக் கலந்து உண்பதற்கே அவற்றைக் கொண்டு ஊத்தை (துர்கந்தமான) வாய்க்குள் கடளங்களைத் தள்ளுகின்றார்களே; அந்தோ, எதற்கோ இப்பிறவி? இங்கே எண்ணக்கண்ட விரல்களால் என்பதால் असंख्यातात्तु संख्यातं सहस्रगुणमुच्यते என்று எண்ணாமல் ஜபிப்பதைவிட எண்ணி ஜபிப்பதற்கு ஆயிரம் மடங்கு பலன் பெருகுமென்றிருப்பதால் 'कनिष्ठामूलमारभ्य प्रादक्षिण्यक्रमेण तु । अनामिकान्तं विज्ञेयम्' என்றபடி சுண்டுவிரலடியிலிருந்து ப்ரதக்ஷிணமாகப் பத்து எண்ணிக்கை வரும்படி பவித்ர விரல் அடிவரையில் எண்ணிக் கூட்டவேண்டுமென்ற விஷயம் கருதப்பெற்றது, ஜபத்திற்கான விரல்களை உண்பதற்கே கொள்வது வீணென்றார். ஜபம் செய்கிற தமக்கு உண்ணாத நாளிலும் பசியில்லை. முன் சொன்னபடி ஜபம் செய்வதும் ஆராதிப்பதும் இல்லாத போதே பசி என்று நித்ய கர்மாநுஷ்டாநத்தை, சுவைத்து உண்பதற்கு ஸமாநமாக்குகிறார் உண்ணுநாள் இதி. பெரியா. திரு 5-1-6இதன் முதலடி 'கண்ணா! நான்முகனைப் படைத்தானே! காரணா! கரியாய்! அடியேன் நான்' என்ற

நமோ நாரணவென்றெண்ணு நாளும் இருக்கெசுச்சாமவேத நாண் மலர் கொண்டு உன பாதம் நண்ணு நாளவை தத்துறுமாகில் அன்றெனக்கவை பட்டினிநாள்'' என்றும், ''நாக்கு நின்னை யல்லாலறியாது நானதஞ்சுவன் என் வசமன்று'' என்றும், ''வாயவனையல்லது வாழ்த்தாது'' என்றும், ''தோளவனை யல்லால் தொழா'' என்றும், ''நயவேன் பிறர்பொருளை'' என்றும், ''நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்க வேண்டும்'' என்றும்,

---

தாகும். கண்ணு—கரியதிருமேனியனே! எனக்கு உண்ணுத நாளில் பசி யென்பதில்லை, விடாமல் திருவஷ்டாக்ஷரம் எண்ணி ஜபிக்காத நாளே பட்டினி நாளாகும். அதுபோல் ருக்வேத, யஜுர்வேத, ஸாமவேத மந்த்ரங்களோடு மலர்களை உன்பாதத்தில் ஸமர்பிக்கவாகாத நாள் நேருமாகில், அதுவும் பட்டினி நாளாகும். நமக்குத் தெரியாமலே வாக்கு எம்பெருமான் விஷயமாகவே பேசுமளவுக்கு அப்யாஸம் வேண்டுமென்கிறுர் நாக்கு இதி. பெரியா திரு 5-1-1. இது இரண்டாம் அடி. முதலடி. 'வாக்குத் தூய்மையிராமையினுலே மாதவா உன்னை வாய்க்கொள்ள மாட்டேன்''. மாதவனே— என்னுடைய வாக்கில் சுத்தியிராமையினுல் உன்னை வாயினுல் சொல்ல அசக்தனுனேன். ஆனுலும் இந்த நாக்கு உன்னைத் தவிர வேறென்றை அறியாது. நான் வாய்க்கொள்வதற்கு அஞ்சுகின்றேன். ஆயினும் நாக்கு என் வசமில்லை யாகையால் தானே இப்படிப் பேசுகிறதென்றபடி இதனுல் அநந்ய பக்தியும் அற்புதமான கவந சக்தியும் தெரியவரும். நாக்கு நின்னை யல்லால் அறியாதென்றுர். அதுபோல் ஒவ்வொரு அங்கமும் அநந்ய பக்தியுடன் அவன் விஷயமே யென்கிறுர் வாய் இதி. முதல் திரு 11. அவனைத் தவிர வேறென்றை எனது வாய் புகழாது. அதிலேயே 63. தோள்கள் அவனை யல்லது வேறென்றை வணங்கா. அதிலேயே 64. நமக்குத் தெரியாமலே தம் கருவிகள் அவனுக்கே ஆனமையை அருளினுர் துஷ்கர்மங்களையும் செய்யேன் என்கிறுர். இதில், பிறர் பொருளை நயவேன். ஆசைப் படமாட்டேன். நள்ளேன் கீழாரோடு க்ஷுத்ர புருஷார்த்தங்களில் ஈடுபடுபவரோடு நட்புக் கொள்ளமாட்டேன். உயர்ந்தவரோடு அல்லால். உயர்ந்தவர் தவிர மற்றவரோடு உயவேன்—நட்புகொள்ள மாட்டேன் திருமாலை யல்லது தெய்வமென்று ஏத்தமாட்டேன். அப்படி யிருந்தும் வியவேன்—அஹங்காரப்படமாட்டேன். எனக்குப் பாபம் வருவதெவ்வாறு. நிரந்தரம் இதி. திருச்சந்த விருத்தம் 101. 'இரந்து உழைப்பது உண்டு வாழ்வீர் ஏம நீர் நிறத்தமா வரந்தரும் திருக்குறிப்பில் வைத்ததாகில் மன்னு சீர் பரந்த சிந்தை ஒன்றி நின்று நின்ன பாதபங்கயம் நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்கவேண்டுமே' கீழே பக்தி வேண்டுமென்றுர். அது வெறுங்காதலன்று, 'स्नेहपूर्वमनुध्यानम्' என்றபடி तैलधारावदविच्छिन्न स्मृति सन्तति யாயிருக்கவேண்டும். அதற்கென ஸங்கல்பிக்க வேண்டுமென்கிறுர். ஏம நீர் நிறத்தமா-ஹேமம்—ஸுவர்ணம், நீர்-ஸமுத்ரம்இவற்றின் நிறமுடைய

'இருளிரிய', 'ஊனேறுசெல்வத்து', நீணகஞ் சுற்றி'' என்கிற திருமொழிகளிலும்.

---

அம்மா = ஸ்வாமியே! பல்லாண்டு வாழ்க. நான் யாசித்து விண்ணப்பம் செய்வதொன்று உண்டு. ஆச்ரிதர்களுக்கு வரம் தருகின்ற திருவுள்ளத்தில் நிலையான நலன்களை நீ வைத்திருப்பது உண்டாகில், என்னுடைய எங்கும் பரவுகின்ற சிந்தையானது உனது திருவடித்தாமரையில் பதிந்திருந்து, இடைவிடாமல் நினைப்பதே (த்யாநிப்பதே) ஆக = ஆகும்படி நீ ஸங்கல்பிக்க வேண்டும். திருவரங்கத்திலும் திருவேங்கடத்திலும் ஈடுபட்டுக் குலசேகரப் பெருமாள் அருளிச்செய்த இரண்டு திருமொழிகள் முழுமையும் உதாஹரிக்கிறார். ''இருள் இரிய'' என்ற திருமொழி 11 பாட்டு அரங்கன்விஷயம். இன த்துத்தி யணி பணமாயிரங்களார்ந்த அரவரசப் பெருஞ்சோதி அனந்தனென்னும் அணிவிளங்குமுயர்வெள்ளை யணையை மேவித் திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி திரைக்கையாலடி வருடப் பள்ளிகொள்ளும் கருமணியைக் கோமளத்தைக் கண்டுகொண்டென் கண்ணிணகளென்றுகொலோ களிக்கும் நாளே''. இருளெல்லாம் எப்போதும் இராதபடி ஒளி வீசும் ரத்நங்களால் ப்ரகாசிக்கும் சிரஸ்ஸுக்களும் சிறந்த படப்பொறிகளும் அழகிய படங்களும் ஆயிரங்கள் பெற்ற நாகராஜனை அநந்தனென்கிற ஜோதியின் உடலாகிற பல அலங்காரங்களுள்ள வெளுத்த உயர்ந்த படுக்கையில் விருப்பமுற்று, தெளிந்த நீர் உடைய காவிரியால் தன் அலைகளாகிற கைகளால் திருவடி பிடிக்கப்பெற்றுப் பள்ளிகொண்டிருக்கும் மென்மையே வடிவான கரியமாணிக்கத்தை எந்த நாள் என் கண்கள் கண்டு கொண்டு களிக்குமோ. 'மாயோனை மணத்தூணை பற்றி நின்று வாயார வாழ்த்தும் நாள் என்றுகொலோ. அடியிணைக்கீழ் அலர்களிட்டு அடியவரோடு அணுகு நாள் என்றுகொலோ. என தன் கைகள் கொய்மலர் தூய் (தூவி) கூப்பும் நாள் என்று கொலோ. என்றவாறு பலபடியாக அரங்கத்தெம்பெருமான் ஸேவையிலுண்டாம் சுவையை அபேக்ஷித்தார்.

இவரே ஊனேறு செல்வத்து என்கிற திருமொழியில் (4) 11பாட்டில் அழகிய தேஹமும் ஐச்வர்யமும் 'राजात्यप्रभृतिविभवं प्रेक्ष्य पर्यद्दुःखम्, என்றபடி எல்லாம் துக்கமாக நினைத்து வேங்கடத்தில் கோனேரி என்கிற ஸ்வாமி புஷ்கரிணியில் நீர்ப்பறவையாகப் பிறப்பேனே; 'மீனாய் பிறக்கும் விதியுடையேனாவேனே' 'பொன்வட்டில் பிடித்து உடனே புகப்பெறுவேனாவேனே. செம்பகமாய் அல்லது ஏதேனும் தம்பகமாய் (ஸ்தம்பம் மொட்டைக்கட்டைச் செடி) அழகிய குவடு (மலை உச்சி) அல்லது கானாறு (காட்டாறு) ஆவேனே. படியாய்க் கிடந்து உன் பவளவாய்க் கா பேனே என்று திருவேங்கடத்தில் பல பிறவிகளை வேண்டினார் பெரிய திருமொழியில் திருமங்கையாழ்வாரும் 11—7 'நீணகம் சுற்றி' என்கிற திருமொழியில் நீணகம் சுற்றி நெடுவரை நாட்டு ஆழ்கடலை பேணான் கடைந்து அமுதம் கண்டு உகந்த பெம்மானை பூண் ஆர்மார்பனைப் புள்ளூரும் பொன்மலையைக் காணாதார் கண்

"पत्युः प्रजानामैश्वर्यं पशूनां वा न कामये। अहं कदम्बो भूयासं कुन्दो वा यमुनातटे" என்றும்,

என்றும் கண்ணல்ல கண்டாமே' என்று தொடங்கி நீண்ட நாகமான வாஸுகியைச் சுற்றிப் பெரியமலையான மந்தரத்தை நாட்டித் தான் தங்கும் கடலையே கடைந்து அமுதமளிக்கும் கூர்மாவதாரம் போன்ற பல விபவங்களையும் பல அர்ச்சைகளையும் எடுத்து அவதரித்து அருள் புரிகின்ற எம்பெருமான் விஷயமாக ப்ரவர்த்தியாதே, கண், செவி, சித்தம் என்றாற் போன்ற கருவிகள் தம் பேர்களையே இழந்தனவாம்; அவை யிருந்தும் வீண் என்று அருளினார்.

இப்படி ஆழ்வார்களுடைய ஸ்ரீஸூக்திகளால் ப்ரபந்நர்கள் ஏதோ இருந்த வரையில் போதுமென்று நினைக்காமல் ஆஜ்ஞாகைங்கர்யம் அநுஜ்ஞா கைங்கர்யம் இரண்டிலும் ஊற்றம் கொண்டு, என்றும் எல்லாக் கருவிகளாலும் மேன்மேல் கைங்கர்யம் செய்யப் பெரு நோக்குக் கொள்ளவேண்டுமென்று அறிவித்து, இந்த ஸம்ப்ரதாயத்திற்குச் சான்றாக சில ப்ரமாண வசநங்களையும் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தியையும் உதாஹரிக்கிறார். ப்ரமாணவசநம் ப்ரபந்ந விஷயமாகவே யிராவிடினும், ஸ்வயம்புருஷார்த்தமாக = கைங்கர்யமாகச் செய்வதை அறிவிக்குமென்பதில் விவாதமில்லை. ப்ரபந்நரான குலசேகரப்பெருமாள் இந்த ஜந்மத்தில் கைங்கர்யம் செய்வதென்பதோடு நிற்காமல் திருவேங்கடத்தில் பல ஜந்மங்களை விரும்பினாரே அது இத்தேஹாவஸாநத்தில் மோக்ஷம் கேட்டதோடு முரண்படாதோ என்னில்—'जन्मजन्मान्तरेऽपि त्वत्पादाम्भोरुहयुगगता निश्चला भक्तिरस्तु ॥', 'दिवि वा भुवि वा ममास्तु वासः नरके वा नरकान्तक प्रकामम् ।" என்பது போல் ப்ரபத்த்யநுஷ்டாநத்திற்கு முன் தசையில் சொன்னதாகலாம். பிறவிகளை விரும்புகின்றவர்களைப் பார்த்து அப்பிறவிகளை விட்டுத் திருவேங்கடத்தில் பிறவிகளை விரும்புங்கள் என்று உபதேசிப்பதற்காகத் தமக்கும் அதில் அபேக்ஷை யிருப்பதை ஸ்ண்பித்து, மோக்ஷ புருஷார்த்தத்தைவிட இப்பிறவிகள் சிறந்தவை இவை நமக்குக் கிடைக்க பாக்யமில்லை என்று வருந்தியதாகலாம்; அல்லது தேஹாவஸாநத்திலே நாம் மோக்ஷம் கேட்பது பரமபதத்தில் பரவாஸுதேவனுக்குப் பணி செய்வதற்காக அல்ல; அங்குப் போய் தம்மை ஸத்ய ஸங்கல்பனாகப் பெற்றுத் திருவேங்கடம் வந்து எம்பெருமானின் மலையில் ஏதேனுமாவேனே என்றபடி பல உருக்களைக் கொண்டு அவனை உகப்பிக்க வேண்டுமென்று விரும்பினார் என்னலாம்.

पत्युरिति. प्रजानांपत्युः பிரமனுடையவோ पशूनां पत्युः சிவனுடையவோ ऐश्वर्यं—அதிகாரத்தை न कामये—விரும்புகிறேனல்லேன். யமுனையின் கரையில் கடப்பமரமாகவோ குருக்கத்தி யாகவோ பிறப்பேனாக. பக்தி யோக நிஷ்டர் பக்தி பூர்த்தியாவதற்கு முன்னே இப்படி க்ஷேத்ர வாஸத்தை விரும்பினரென்னலாம். ஆனால் தாவரப்பிறவியில் பக்தி யநுஷ்டிக்க வழியில்லை. பக்தியோகம் பூர்த்தி யானவர்க்கு ப்ராரப்த கர்மம் அநுபவித்த பிறகே அந்திமப்ரத்யயம் வருமாகையால் மநு

"कुरुष्व मामनुचरं वैधर्म्यं नेह विद्यते । कृतार्थोऽहं भविष्यामि तव चार्थः प्रकल्पते॥", "अहं सर्वं करिष्यामि जाग्रतः स्वपतश्च ते", "परवानस्मि काकुत्स्थ त्वयि वर्षशतं स्थिते । स्वयं तु

ஷ்யாதி ஜந்மம் பெற்றால் அப்போது செய்யும் கார்யங்கள் உபாயோபயுக்தங்களாய் ஸ்வயம்ப்ரயோஜனகைங்கர்யமாகாவென்று அஞ்சி, மரமாகப் பிறந்தால் அவ்விடத்தில் ஸ்ரீக்ருஷ்ண உத்ஸவாதிகள் செய்கின்ற மஹான்கள் கூடும்போது பகவத்பாகவத உபசாரம் யத்ருச்சையாக நேருமாகையாலே அந்த ஸ்தாவர கார்யம் உபாயோபாயமாகாமல் கைங்கர்யமேயாகலாமென்ற கருத்தால் இப்படி அவர் ப்ரார்த்தித்ததென்னலாம், இது இந்த ஸந்தர்பத்திற்குச் சேரும். இப்ரமாண வசனம் உள்ளவிடம் தேடவேண்டும் कुरुष्वेति. மூன்று ச்லோகங்கள் லக்ஷ்மண வசனம். (1. அயோ 31–24) பெருமாள் பிராட்டியோடு வநம்செல்வதாக முடிவானதைக் கண்டு சரணாகதி செய்து இளையபெருமாள் விஜ்ஞாபிக்கிறாரிதில். தேவலோகம் செல்வதையோ அமரனாகையையோ லோகங்களுக்கு அதிகாரியாவதையோ நான் விரும்பேன், உம்மைவிட எனக்கு அவை ஸுகமாகா. கௌஸல்யா ஸுமித்ராதிகளைக் காப்பதற்காக என்னை இங்கே நிறுத்தலாகாது. என்னை अनुचरम் உம்மைப் பின்தொடர்ந்து வருபவனாகவே கொள்ளவேண்டும். இதனால் பெரியோர்களான கௌஸல்யாதிகளின் கைங்கர்யத்தை இழப்பதால் வைதர்ம்யம் நேரும் என்னலாகாது. பரதன் காத்தாலும் காக்காமற் போனாலும் ஸுமித்ரையோடு ஆயிரத்திற்கு மேலான பரிஜநங்களைக் காக்கப் போதுமான ஐச்வர்யங்களை யுடைய கௌஸல்யாதேவிக்கு என்னால் ஆகவேண்டுவதொன்றுமில்லை. தனியாகக் காட்டுக்குச் செல்லும் உமக்கே பரிஜநம் வேண்டியிருப்பதால் இதுவரையில் பணிவிடையில் இருந்த நான் இப்போது விடுவது தான் வைதர்ம்யமாகும். இதனால் ஸர்வ ஸுகத்தையும் இழப்பதால் எனக்குப் புருஷார்த்த ஹாநியென்று நினைக்கவேண்டா. இப்போது தான் நான் க்ருதார்த்தனாவேன் = புருஷார்த்தம் பெற்றவனாவேன், அல்லது लब्धार्थः என்னாமல் कृतार्थः என்றதால் புருஷார்த்தத்தை = அதாவது ஸ்வாமியான பரமபுருஷனுக்கு உத்தேச்யமானதைச் செய்தவனாவேன். உம்மை உகப்பிப்பதே எனக்கு ப்ரயோஜநம். ஆனால், 'கைகேயியின் வரத்திற்காக நான் செல்வது அவச்யமாகும். உனக்கு இது அவச்யமன்று. எனக்கு வேண்டுவதை நானே செய்துகொள்வேன்' என்னில்—तव चार्थः प्रकल्पते. அப்போது தேவரீர் பிராட்டியை விட்டுச் செல்லலாமே. அவளுடைய सुखोल्लासமாக நடந்துகொள்ள வேண்டியதாகில், அப்போது ஆஹாராதிகளைக் கொண்டு வருவதற்காக அவளைத் தனியே விட்டு அலைந்து அவளுடைய सुखोल्लासத்திற்கு भङ्गம் வரும்படியாகாமல் என்னை யழைத்துச் சென்றால் अहं सर्वं करिष्यामि, தேவரீர் அவளோடு மலையடிவாரங்களில் ஸுகமாய் வஸிக்கலாம். இந்தப் புருஷார்த்தம் உமக்கு ஸித்திக்குமென்றபடி. இதை மேலே ஒன்றரை ச்லோகத்தால் விவரிக்கப் போகிறார் जाग्रतः ते—விழித்துக்கொண்

रुचिरे देशे क्रियतामिति मां वद ॥" என்றும் "कामये वैष्णवत्वं तु सर्वजन्मसु केवलम्" என்றும் "वर्तमानः सदा चैवं पाञ्चकालिकवर्त्मना । स्वार्जितैर्गन्धपुष्पाद्यैः शुभैः शक्त्यनुरूपतः॥ आराधयन् हरिं भक्त्या गमयिष्यामि वासरान् ॥" என்றும்சொல்லுகிறபடியே स्वरूपा-नुरूपकालक्षेपार्थமான उत्तरकृत्यமிருக்கும்படி—

---

டிருக்கிற உங்களுக்கும் स्वपतश्च ते—உறங்கும் உங்களுக்கும் பாதுகாப்பா யிருந்து செய்வேன். परवानिति. (ஆ 15-7 ) ககுத்ஸ்த்த வம்சத்தில் தோன்றி யவரே! தேவரீர் இங்கே நூறு வருஷம் இருப்பினும் உமக்குப் பராதீநமா யிருப்பேன். அழகான இடததில் பர்ணசாலை யமைக்க வேண்டும் ரீதியை தேவரீரே' இவ்வாறுசெய்' என்று நன்குநியமிக்கவேணுமென்றபடி. காட்டுக் கே செல்லலாகாதென்று எதிர்த்த லக்ஷ்மணனுக்கு நூறு ஆண்டுகள் காட்டிவிருப்பதும் ஸம்மதமாயிற்று. இதற்குக் காரணம் எல்லாக்கைங்கர்ய மும் தமக்கே வாய்த்ததென்கிற ஆநந்தமே. ஆனாலும் முன்னமே சித்ர கூடத்தில் பர்ணசாலை கட்டியிருந்தாலும் கடைசியாக நான்கு வருஷம் தங்குவதற்காக இப்போது செய்யும் பர்ணசாலையை நூறு வருஷத்திற் காம்படி செய்யவும் ஸித்தமாயிருக்கிறார். இவ்வாறு கூறியது கைங்கர்யமென் பது திருவுள்ளமறிந்து செய்யாமல் தன் இஷ்டப்படியானால் கைங்கர்யமாகா தென்ற கருத்தினாலாம். எம்பெருமான் திருவுள்ள மறியாத நாம் சாஸ்த்ர மூலம் அவன் திருவுள்ளத்தை அறிவது போல், இவர் எம்பெருமான் ப்ரத்யக்ஷ மாயிருப்பதால் நேரில் அவன் திருவுள்ளத்தை அவனே சொல்ல வேண்டு மென்று ஆசைப்படுகிறார். 'என்ன செய்யவேண்டும், எப்படி செய்யவேண் டும்' என்று தெரிந்து செய்கிறவனே கிங்கரனாவான். மேலே जितन्ते ச்லோ கம்; இதன் பூர்வார்த்தம்—न कामकलुषंचित्तं मम ते पादयोः स्थितम् என்பதாம். பலவித காமங்களாலே கலங்கிய என் மனம் உமது திருவடியில் நிலைபெற வில்லை அத்தகைய காமங்கள் கலசாதபடி எத்தனை ஜந்மம் வருவதானாலும் சுத்தமாய் விஷ்ணுவுக்கு அடிமையாயிருப்பதை விரும்புகிறேனென்றபடி.இப்ர மாணங்களெல்லாம் மேன்மேல் கைங்கர்யத்தில் பேராசையை அறிவிக்கின்றன. நித்ய கைங்கர்ய விஷயமாக வங்கீபுரத்து நம்பியின் காரிகை மேலே एवं— கீழ்கூறியபடி पाञ्चकालिकवर्त्मना—ஸ்ரீபாஞ்சராத்ரத்தில் வகுத்த ஐந்து கால விபாகங்கள் கொண்ட வழியிலே எப்போதும் இருப்பவனாய், சக்திக்குத் தக்கவாறு என்னாலேயே சேகரிக்கப் பெற்ற சுபமான गन्ध புஷ்ப தூப தீப நைவேத்யாதிகளால் பக்தியுடன் எம்பெருமானை ஆராதித்துக் கொண்டு நாட்களைப் போக்குவேன் என்றபடி. स्वरूपानुरूपेति–க்ருதக்ருத்யனாய் அடிமை யாயிருக்கிற தன் ஸ்வரூபத்திற்குத் தக்க. ஸ்வயம் ப்ரயோஜநமா யென்று தொடங்கி கால க்ஷேபார்த்தமாக என்ற வரையில் சொன்ன விசேஷங்கள் கொண்ட உத்தர க்ருத்யம் என்றவளவால் அதிகார ஆரம்ப ச்லோகத்தின் உத்தரார்த்த-அர்த்த ஸங்க்ரஹம் செய்தாராயிற்று. இனி இது இருக்கும் படிக்குப் பூர்வார்த்தத்தில் கருதப் பெற்றவாறு இருக்க ப்ராப்தமென்று

தன் நிஷ்டைக்கு அநுரூபமாகத் தெளியவேண்டும் அர்த்தங்களில் தனக்குத் தெளி யாத நிலங்களை நான் க்ருதக்ருத்யனென்று அநாதரித்திராதே அநுபவபூர்த்தியுண்டாம் போது தெளிவும் ப்ரேமமும் வேண்டுகையாலும்,

"तत्पादभक्तिज्ञानाभ्यां फलमन्यत् कदाचन। न याचेत् पुरुषो विष्णुं याचनान्नश्यति ध्रुवम् ॥"

என்கிறபடியே ஜ்ஞானபக்திகளை அபேக்ஷித்தால் குற்றமில்லாமையாலும் தனக்கு ஶேஷிவிஷயத்திலே சித்தரஞ்ஜனம் பிறக்கைக்காக, "பீதகவாடைப் பிரானார் பிரம குருவாகி வந்து" என்னும்படி நிற்கிற தெளிவுடைய பரமைகாந்திகள் பக்கலிலே", तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया। उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्वदर्शिनः॥"

என்கிற கட்டளையிலே தெளியக்கேட்டு,

"मन्दोऽप्यमन्दतामेति संसर्गेण विपश्चितः। पङ्कच्छिदः फलस्येव निघर्षेणाऽऽविलं पयः"

என்கிறபடியே பரிஶுத்தஜ்ஞானனாய்,

"यस्यानुभवपर्यन्ता बुद्धिस्तत्त्वे प्रतिष्ठिता। तद्दृष्टिगोचराः सर्वे मुच्यन्ते सर्वकिल्बिषैः ॥"

---

விரித்துரைக்கிறார். அதில் ப்ரபந்நனாவதற்கு முன்னே ஆசார்ய மூலமாகத் தான் பெற்ற ஜ்ஞாந ஆசாரங்களோடு நிற்காமல் அந்த ஆசார்யனை அல்லது பல மஹான்களைத் தக்கவாறு ஆச்ரயித்து ஜ்ஞாநாநுஷ்டாநங்களை வ்ருத்தி செய்துகொண்டு அடக்கத்துடன இருப்பதென்கிற முதல் அம்சத் தை நிரூபிக்கிறார் தந்நிஷ்டைக்கு இத்யாதியால். நிஷ்டையாவது—ஸ்வ ரூபோபாய புருஷார்த்தங்களில் தான் பெற்ற நிலை. க்ருத க்ருத்யனான வனுக்கு உள்ளது போதுமென்று த்ருப்தியுண்டாகும்; அது தவறு. அநு பவபூர்த்திக்கு ப்ரயத்நம் வேண்டும். அது ஜ்ஞாந பக்திகள் அதிகமிராமற் போனால் வராது. ஜ்ஞாந பக்திகளை யாசிப்பது தவறென்று நினைக்கலாகாது. ஜ்ஞாநபக்திகளைப் பெற்ற பிறகும் அநுஷ்டாநமார்கங்களைத் தக்க பெரி யோர்களை யண்டித் தெரிந்து கொள்ளவேண்டும் என்பதற்குப் பல வசந ங்களை உதாஹரிக்கிறார் तत्पादेति. எம்பெருமானுடைய திருவடிகளில் பக்தியையும், ஜ்ஞாநத்தையும் யாசிக்கலாம். அவற்றைத் தவிர வேறு பலன் களை விஷ்ணுவை யாசிக்கலாகாது; யாசித்தால் அழிவது திண்ணமென்றபடி. पादभक्ति என்கிற பதஸ்வாரஸ்யத்தால் கைங்கர்யம் யாசிக்கப்படலாம். பீதகவாடை என்கிறதன் பொருளை குருபரம்பராஸாரத்தில் காணலாம். तद्विति. க்ருஷ்ணன் தான் ஆசார்யனாய் இருந்து அர்ஜுநனுக்கு உபதேசித்த பிறகும் பல மஹான்களை யண்டி அறிவு பெறவேண்டுமென்கிறார் கீதையில் 4-34. ஆகையால் ஜ்ஞாநிகளை நன்கு வணங்கி ஒன்றும் அறியாதவன் போல் வினவி சுச்ரூஷை செய்து அறியவேண்டும். ஜ்ஞாநிகளாய் தத்துவ ஸாக்ஷாத்காரம் பெற்றவருமான அவர்கள் நல்ல அறிவை உபதேசிப் பார்கள். கட்டளையிலே இதி. சுச்ரூஷா ப்ரணிபாத பரிப்ரச்ந க்ரமத்திலே யிருந்து. मन्द इति. [मालविकाग्निमित्रनाटकम्—2-7]—தெளிவற்றவனும் பண்டிதர் களுடைய சேர்க்கையினாலே, கலங்கிய ஜலமானது சேற்றை அகற்றும் பழத் தை (தேத்தாங்கொட்டையை निघर्ष इव—தேய்ப்பதினால் போல், தெளிவை

என்கிறபடியே இவ்வர்த்தங்களில் निष्ठैयுடையவர்களுடனே நெருங்கி वर्ति
த்து அவர்கள் अनुष्ठानங்களில் "यावानर्थ उदपाने सर्वतः संप्लुतोदके" என்கிற ப்ர
காரத்திலே தன் वर्ण-आश्रम-जाति-गुणादिகளுக்கு அநுரூபமான कर्तव्यांशத்தை
நிஷ்கர்ஷித்து அநுஷ்ட்டித்து,

1. இவ்வநுஷ்ட்டாநாதிகளையுடையோமென்னும் भावनैயடியாக வரும்
स्वोत्कर्ष.परनिकर्षानुसन्धानங்களாகிற படுகுழிகளைத் தப்பும்படி தான் முன்னடி
பார்த்து நடக்கவும், 2. தனக்கு शरण्यप्रसादविशेषमूलமாக நம்மாழ்வார் நாதமுநி

---

அடைகிறுன். यस्येति. எந்த மஹானுடைய புத்தியானது அநுபவம் வரை
யிலாகி (அநுஷ்டாந பர்யந்தமாகி) தத்த்வத்தில் நிலே பெற்றதோ,
அவருடைய கடாக்ஷத்திற்குப் பாத்திரமாகிறவர்கள் எல்லோரும் பாபமனைத்
தாலும் விடப்படுகிறுர்கள். இந்த ச்லோகத்தை அநுஷ்டாந விஷயத்
திற்கு உதாஹரித்ததால் இங்கு 'அநுபவ' என்ற சொல்லில் நடவடிக்
கையும் கொள்வதாம். தனக்கும் அவர்களுக்கும். வேதம் ஆச்ரமம் முதலான
வற்றில் வேறுபாடு உண்டாகில், தனக்குத் தக்க அம்சங்களையே கொள்ள
வேண்டுமென்பதற்காக यावानिति (கீதை) सर्वतः–எங்கும் संप्लुतोदके நீர் நிரம்பிய
उदपाने—குடிநீர்த்தேக்கத்தில் (குளம்முதலானவற்றில்.) यावान्–अर्थः–எவ்வளவு
கொள்ளப்படுகிறதோ, तावान् सर्वेषु वेदेषु ब्राह्मणस्य विजानतः முமுக்ஷுவான
வேதவித்துக்கு எல்லா வேதங்களிலும் அபேக்ஷிக்கப்படுவது அவ்வளவே.
(ஸ்வல்ப்பமேயாகுமென்றபடி.)குணாதிகளுக்கு= வைஷ்ணவத்வ முமுக்ஷுத்வ
பரமைகாந்தித்வாதிகளுக்கு; ஜ்ஞாநாநுஷ்டாநங்கள் வேண்டுமென்றுர். பக்தி
யும் அர்த்தஸித்தம். வித்யையோடு விநயமும் வேண்டும்; கர்வப்படலாகா
தென்கிறுர் மேலே, स्वोत्कर्षेति. தனக்கு உத்கர்ஷமும். பிறருக்கு நிகர்ஷமும்
இருந்தாலும் அது மனதிற்பட்டாலும் அதை யநுஸந்திக்கலாகாது. அத்
தகைய துர்பாவங்கள் படுகுழிகளாகும்= உள்ளே தள்ளிப் படுத்தும் குழி
களாகும். அவை தப்பும்படி முன்னடி பார்த்து=வராதபடி முன் ஜாக்ரதை
யாயிருந்து; நடப்பவன் முன்னே அடி வைக்கு மிடத்தைப் பார்த்து அடி
வைப்பது போல், தாம் என்ன செய்யப்போகிறேமென்பதை கவனித்துச்
செய்யவேண்டும். அப்போது இத்தகைய அநுஸந்தாநங்கள் உண்டாகா.
நடக்கவும் என்பது முதல் அம்சம், இதற்கு, இன்னும் எட்டு அம்சங்களைச்
சொன்ன பிறகு வரப்போகிற ப்ராப்தம் என்ற சொல்லில் அந்வயம்.

தனக்கு இத்யாதி போரவும் என்றவரையில் இரண்டாவது அம்சம், ஜ்ஞா
நாநுஷ்டாநங்கள் வந்தபடியாலே பக்தியைக்கூட நாங்கள் செய்ய வல்லோ
மென்று துரபிப்ராயம் வாராமைக்காகக் கார்ப்பண்யத்தில் கவனம் வேண்டு
மென்கிறது. இங்குப் பூர்வஜந்ம ஸுக்ருதாதி வசமாகச் சிலருக்கு பகவத்
ஸாக்ஷாத்காராதிகளும்நேரலாம், அப்போதும் பகவந்மூர்த்திஸாக்ஷாத்காரமே;
கர்மயோக.ஜ்ஞாநயோக.ஜீவாத்மாவலோகந.பரமாத்ம ஸ்வரூப ஸாக்ஷாத்
காரங்கள் எங்ஙனே நமக்கென்று தன்னுடைய இளமையைத் தெளிய

களுள்ளிட்டார்க்குப்போலே साक्षात्कारादिகளாகிற फलोद्गमपर्वங்கள் வந்தாலும் "நன்மை தீமைகளொன்றுமறியேன்" என்றும், "அறிவனேலுமிவை யெல்லா மென்னாலடைப்பு நீக்கொண்ணாது" என்றும் நிச்சயித்துப் पराधीनस्वरूपस्थिति-प्रवृत्तियான தன் அதிகாரத்திலே சொருகின आकिञ्चन्यத்தை அழியமாறாதே, "अहमस्म्यपराधानामालयोऽकिञ्चनोऽगतिः" इत्यादिகளை அடியொற்றி நடக்கிற "நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்", "என் நான் செய்கேன்",

---

வேண்டும். ப்ரபந்நர்களுக்குக் கூட பகவத் ஸாக்ஷாத்காரம் வருமோ என்ன; பூர்வாசார்யர்களைக் குறிக்கிறார் நம்மாழ்வார் நாதமுனிகள் இதி. உள்ளிட்டார்க்கு—யோகத்தில் ஸாமர்த்யத்தாலே அவர் வகுப்பில் சேர்ந்தவர்களுக்கு: फलोद्गमपर्वங்கள்.—மோக்ஷத்தில் வரப்போகும் மஹாபலத்திற்கு முளையும் இதழும் போன்ற சில நிலைகள் நன்மை இதி. உபய வேதப்ரவர்த்தகரான பெரியாழ்வாரே (5-1-3) இது நல்லது இது கெட்டது என்று சிறிதும் தனக்குத் தெரியாதென்கிறாரே; நமக்கு ஆகிஞ்சந்யத்தில் என்ன ஸந்தேஹம்? அறிவனேலும் இதி. பெரிய திருவந்தாதி. 3, இவை யன்றே நல்ல இவை யன்றே தீய இவையென்று இவை யறிவனேலும். இவை யெல்லாம் என்னால் அடைப்பு நீக்கொண்ணாது இறையவனே என்னால் செயற்பாலதென்". இவை நல்லவையல்ல இவை தீயவை யல்ல. இவை இவையே என்று நான் அறிந்திருந்தாலும்அவற்றில் நல்லவையெல்லாம் அடைப்பு-ஸ்வீகரிப்பதோ, தீயவை யெல்லாம் நீக்கு= விடுவதோ என்னால் ஒண்ணாது= ஆகாது. ஸர்வேச்வரனே! நான் செய்யக்கூடியது என்ன உண்டு என்று அறிவு இருந்தாலும் ஸ்வாதந்தர்யமில்லை யென்றார். இப்படி ஜ்ஞாந சக்த்யபாவம் சொல்லப்பட்டது.தன்னதிகாரத்திலே சொருகின = அகிஞ்சநனுக்கே ப்ரபத்தியில் அதிகாரமாகையால் ஆகிஞ்சந்யம் அநந்ய கதிகத்வம் என்கிற அதிகாரத்திலே அந்தர்கதமான என்றபடி. அழிய மாறாதே= அழியும்படி ஆகிஞ்சந்யத்தைப் போக்காமல். அடி ஒற்றி நடக்கிற—ஆதாரமாக்கி அநுஸரிக்கிற. இதற்குப் பாட்டுக்களிலும் என்ற விடத்தில் அந்வயம். பாட்டு என்ற சொல்லால் பாட்டில் ஒரம்சத்தையோ முழுப்பாட்டையோ யதாஸம்பவம் கொள்க. திருவாய். 5-7-1. நோற்ற= உன்னைப் பெறச்செய்யப்பட்ட நோன்பு= பாஹ்ய வ்யாபாரம் இலேன்= உடையேனல்லேன். நுண் அறிவு—ஸூக்ஷ்மமான ஆத்ம விஷயகமான ஜ்ஞாந யோகமும் உடையேனல்லேன். ஆகிலும் இனி உன்னைவிட்டு, ஒன்றும் ஆற்ற= சிறிதும் பொறுத்திருக்க,கிற்கின்றிலேன் அசக்தனாவேன். சிரீவரமங்கல நகரப்பனே உனக்கு மிகையல்லேன்= ரக்ஷண விஷயமாகாதவனாகேன்.'என் நான் செய்கேன்' தி 5-8-3 ஆராவமுதன்விஷயம். நான் செய்யக்கூடியது என்ன உண்டு? யாரே களைகண்= என்னை ரக்ஷிப்பவர் யார்? என்னை என் செய்கின்றாய்? ஒன்றும் குறை—அபேக்ஷிக்கப்பட வேண்டியது ஒன்றையும் உன்னால் அல்லாது யாவராலும்—எவராலும் வேண்டேன். 'கன் ஆர் (வேலைப்பாடு நிறைந்த) மதிள்சூழ் குடந்தை கிடந்தாய்

"களைவாய் துன்பங்களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" "புகலொன்றில்லா வடியேன்" "ஆவிக்கோர் பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன்" "கறவைகள் பின் சென்று" "குளித்து மூன்றனலையோம்பும்" "குலங்களாய வீரிரண்டில்" "ஏழையேதலன்" "பற்றேலொன்றுமிலேன்" "தரு துயரந் தடா

---

அடியேன்......உன தாள் பிடித்தே செல்லக் காண். களைவாய் இதி (8).என்னுடைய துன்பங்களை நீ களைந்தாலும் களையாமற்போனாலும். வேறு களைகண் =ரக்ஷகன் இலேன்—எனக்கு இல்லை, (தி-6.10.10 ) புகல்—கதி. ஆவிக்கு இதி (தி-10.10.3) எனது ஆத்மா பிடித்து வளர்வதற்கான கொம்பு உன்னைத் தவிர வேறு அறிகின்றிலேன். கறவைகள் என்றதிலே (திருப்) 'அறிவொன்று மில்லாத ஆய்க்குலத்து' என்னப்பட்டது. "குளித்து மூன்று அனலை ஓம்பும் குறிகொள் அந்தணமே தன்னை ஒளித்திட்டேன் என் கண் இல்லை நின்கணும் பத்தனல்லேன் களிப்பது என்கொண்டு நம்பி! கடல்வண்ணா கதறுகின்றேன் அளித்து எனக்கு அருள் செய்கண்டாய் அரங்கமாநகருளானே" திருமாலை. 25. சாஸ்த்ரப்படி ஸ்நாநம் செய்து மூன்று அனலை=வைதிகாக்நிகளை ஓம்பும் குறி கொள்—உபாஸிப்பதென்கிற லக்ஷணமுடைய ப்ராஹ்மண்யத்தைக் காணாதபடி யாக்கினேன், என் ஆத்ம விஷயமான அவலோகநமும் எனக்கில்லை, உன் விஷயமான பக்தி யோகமுமில்லை. எப்படி நான் ஸந்தோஷப்படுவது? எனக்கு வேறு உபாயமளித்து அருள் செய்யவெண்டும், குலங்கள்=(திருச் 90) சிறந்த குலங்களான நாலு வர்ணங்களில் ஒன்றிலும் நான் பிறக்கவில்லை. நலங்களான நற்கலைகள்=நன்மை யளிக்கும் வேதங்கள் நான்கிலும், நவின்றிலேன்=எனக்கு அப்யாஸத்திற்கு இடமில்லை. புலன்கள் ஐந்தும் வென்றிலேன்-இந்த்ரிய ஜயமில்லை. பொறியிலேன்-அடிமைக்கான அடையாளமில்லை. புநிதா!—பரிசுத்தமாக்குகிறவனே! இலங்கு—ஔதார்ய ப்ரகாசமுடைய நின் பாதமன்றி மற்றோர் பற்று இலேன். எமது ஈசனே, ஏழை—அறிவு முதலாக ஒன்றுமில்லாதவன். ஏதலன்=ப்ரதிகூலன். கீழ்மகன்=நீசப் பிறவியுள்ளவன். இச்சொற்கள் குஹனைப் பற்றியது. இப்படிப்பட்ட குஹன் விஷயத்திலும் இரங்கி அதோடு நிற்காமல் இனி அவனுக்கு இன்னருளும் சுரந்து(கட்டியணைத்து) ஸீதையைதோழியாகவும் உன்தம்பியை அவன்தம்பியாகவும் சொல்லி, 'எனக்குத் தோழனான நீ இங்கே நிலைத்து வாழ வேண்டும்' என்று அருள்புரிந்தாயே என்றுராமனுடைய குணத்தை வர்ணிக்கிறார்.இது அரங்கத்தம்மான் விஷயம் (பெ.தி.5 8.). இங்கே எடுத்த மூன்று சொற்களே நமக்கு வேண்டுவது. ப்ரபந்நன் ஏழை ஏதலன் கீழ்மகன் என்று தன் ஆகிஞ்சந்யத்தை யநுஸந்திக்க வேண்டும்.பற்று இதி பற்றுஎல்ஒன்றுமிலேன், பெ.தி.1,9.9 பற்றுவது—பற்றக்கூடியது உபாயம். உபாயமோ ஒன்றுமில்லை பற்று நசை என்றால் வேறுபலத்தைநோக்குகையாம். ஆக ஆகிஞ்சந்யமோ அநந்யகதிகத்வமோ சொன்னதாம். ஆகிஞ்சந்யமே இங்குக் கொள்ளற்பாலது,

யேல்'' என்கிற பாட்டுக்களிலும், ''ந தர்மநிஷ்டோऽஸ்மி'' என்கிற ச்லோகத்திலும் இவர்கள் அருளிச்செய்த கார்ப்பண்யத்தின் கவடுகளை யெல்லாம் அவலம்பித்துக் கொண்டு போர(க)வும், (3) இப்படித் தனக்கு அநாதிகாலம் பிறந்த அநர்ஹதையையும் அதடியாக இழந்த கைங்கர்யத்தையும் பார்த்து, ''பொய்ந் நின்ற ஞானமும் பொல்லா வொழுக்குமழுக்குடம்பும்'' என்று அலற்றப்பண்ணும் நிர்வேத ப்ராசுர்யத்தாலே அவஸந்நனாகாதே, ''உயிரளிப்பானென்னின்ற யோனியுமாய்ப் பிறந்தாயிமையோர் தலைவா'' என்கிறபடியே எதிர்சூழல் புக்கு நிற்கிற

---

பாபமே செய்து பாவியானேன் மற்று ஒன்று அறியேன். மாயனே மாதவனே கல்தேன் பாய்ந்து ஒழுகும் கமலச்சுனை வேங்கடவா! உனக்கே அற்றுத் தீர்ந்தேன் வந்து அடைந்தேன், அடியேனை ஆட்கொண்டு அருள் என்றார், தரு இதி, பெருமாள் திருமொழி. 5-1. கர்மப்பயனாக நீ தரக்கூடிய துக்கங்களை நீ நீக்காவிடினும் உன் சரணல்லால் சரண் இல்லை யென்றார் இப்பாசுரம் கீழே வந்துள்ளது. ந தர்மநிஷ்டோऽஸ்மி என்கிற ஸ்தோத்ரரத்ந ச்லோகத்தில் கர்மயோகம் ஜ்ஞானயோகம் பக்தியோகமில்லாமையால் ஆகிஞ்சந்யம் சொல்லப்பெற்றது. அவலம்பித்துக் கொண்டு போரவும், அநுஸந்தித்துக் கொண்டேயிருக்கை யென்றபடி. இப்படி நைச்யாநுஸந்தாந மிருந்த போதும் மிக்க நிர்வேதத்துடன் ப்ராப்த கைங்கர்யத்தை விட்டொழியாமல், இப்போதாவது இவ்வளவு நிலைக்கு வந்தோமே யென்று தெளிந்து, சோர்ந்துள்ள கருவிகளை ஸாத்துவிக ஆஹாரத்திலும் ஸத்விஷயத்திலும் ஏவி துர்வாஸனையைப் போக்க வேண்டுமென்று மூன்றாவது அம்சம் சொல்லுகிறார் இப்படி தனக்கு இத்யாதியால். அநர்ஹதை—தகுதி யற்றிருக்கை. அதடியாக—அது மூலமாக பொய் நின்ற—திருவிருத்தம் முதல் பாட்டு. பாட்டின் பொருளை உபகார ஸங்க்ரஹ ரஹஸ்யத்தின் தொடக்கத்தில் இவரே யருளிச் செய்திருக்கிறார். ஸம்ஸார காரணபூதமான ப்ராந்தி ஜ்ஞானமும், துஷ்கர்மங்களும் அசுத்தமான தேஹமும். இதுவரையில் உள்ளது போல் இனி யாம் பெறுதபடி அருள் செய்யவேணுமென்றது. இங்கெடுத்த சொற்கள் மட்டுமே போதும். நிர்வேத ப்ராசுர்யம்=அதிக நிர்வேதமானது. இப்படி அவஸந்நனாகாதே= துக்கப்பட்டுச்சோர்ந்துவிழாமல்.பகவானுடையஉபகார விசேஷங்களை அநுஸந்தித்துத் தேறவேண்டுமென்கிறார் மேலே. உபகார விசேஷங்களைக் காட்டுவது உயிர் இத்யாதி. இத்திருவிருத்தப் பாட்டின் மேல் பாகம் இமையோர் தலைவா—நித்ய ஸூரி நாதனே, உயிர் அளிப்பான்=பத்த ஜீவர்களை அநுக்ரஹிப்பதற்காக,என் நின்ற யோநியுமாய்பிறந்தாய்=மத்ஸ்ய கூர்மாதிகளான எத்தனையோ விதமான அவதாரங்களைச் செய்தவனே! இதனால் அவதார ரஹஸ்யமும் அது மூலமான உபகாரமும் அறிவிக்கப்பெற்றன. எதிர் சூழல்புக்கு நிற்கிற (பல ஜந்மங்களெடுத்து ஓடிக்கொண்டிருக்கிற நம்மைப் பின்னே தொடர்ந்து பிடிக்கமாட்டாமையால்) எதிரிலே வந்து சூழ்ந்து புகுந்து மறுத்து நிற்பதற்காக அவதரிக்கிறான் சரண்யன். வந்து

शरण्यனுடைய, தாய்முலைப்பால் போலே पथ्यतमமுமாய் प्रियतमமுமான उपदेश த்தாலே தெளிந்த अवताररहस्यादिகளாகிற तीर्थங்களை அவகாஹித்துத் தேறி. "उत्तमे चेत् वयसि साधुवृत्तः" என்றும், "दुराचारोऽपि सर्वाशी कृतघ्नो नास्तिकः पुरा। समाश्रयेदादिदेवं श्रद्धया शरणं यदि॥ निर्दोषं विद्धि तं जन्तुं प्रभावात् परमात्मनः॥" என்றும், "यद् ब्रह्मकल्पनियुतानुभवेऽप्यनाश्यं तत्किल्बिषं सृजति जन्तुरिह क्षणार्धे। एवं सदा सकलजन्मसु सापराधं क्षाम्यसि॥हो तदभिसन्धिविराममात्रात्॥" என்றும், "प्रवहत्येव हि जले सेतुः कार्यो विजानता॥". என்றும், "மாளுமோரிடத்திலும் வணக்கொடு மாள்வது வலமே"

---

கீதாதிகளைப் போன்ற உபதேசமும் செய்கிறான். அவை மிகவும் ஹிதமாயும் ப்ரியமாயுமிருக்கின்றவை. அந்த உபதேசங்கள் அறியப்பட்ட போது கீதை நான்காம் அத்யாயத் தொடக்கத்தில் சொன்ன அவதார ரஹஸ்யம், மேலே 15ல் சொன்ன புருஷோத்தமத்வம் முதலான தெளிவான தீர்த்தங்கள் பெறவாகும். (தீர்த்தங்கள்—ஸுகமாய் இழியும் துறைகள்) அவற்றில் அவகாஹநத்தினால் தேர்ச்சி தைர்யம் ஆறுதல் பெறுவதாம். இதனால் ஏற்பட்டது இழந்ததற்கு வருந்தி கிடைத்த நாளையும் கெடுக்காமல் உசித கைங்கர்யத்தை விடாமல் செய்வதாம் இதற்கு உதாஹரணங்கள் उत्तमे இதி. போதாயந ஸூத்ரம். 14—10. 'यत् यौवने चरति विभ्रमेण सत् वा असत् वा यादृशं वा यथा वा। उत्तमे चेत् वयसि साधुवृत्तः तदेवास्य भवति नेतराणि॥'. ஒருவன் ப்ராந்தியினால் அர்த்தகாமங்களுக்கு வச்யனாய் நல்ல காம்யமோ அநுசித காம்யமோ எந்தெந்த விதமாகவோ யௌவநத்தில் செய்கிறானாகிலும் கடைசி வயதான வார்த்தகத்தில் மோக்ஷார்த்தமான ஸாது கார்யம் செய்கிறானாகில் அதுவே பிற்காலத்திற்கு ஆகிறது. மற்றவை ப்ரதானமாக இருப்பதில்லை. दुराचार இதி. ஸாத்துவத ஸம்ஹிதை 23. पुरा—எம்பெருமானை யாச்ரயிப்பதற்கு முன். துராசாரனாய் எதையும் உண்பவனாய் நன்றியற்றவனாய் நாஸ்திகனாயிருந்தாலும் ஸர்வ காரணமாய் ஸ்வாமி யான எம்பெருமானை நம்பிக்கையுடன் சரணமடைந்தானாகில்,அப் பரமாத்மா வின் அநுக்ரஹ ப்ரபாவத்தால் அவனை தோஷமற்றவனாக அறிந்துகொள் என்றது. यदिति. வைகுண்ட ஸ்தவம் 61. பிரமனுடைய லக்ஷமாயுஷ்காலம் அநு பவித்தாலும் அழியாத பாபம் எதுவோ அதை ஜீவன் இங்கு அரைக்ஷணத்தில் செய்கிறான். இப்படி எல்லாப் பிறப்பிலும் எல்லாக் காலத்திலும் அபராதம் செய்கிறவனையும், அத்தகைய அபராதத்தில் நோக்கை விட்ட மாத்திரத்தி லேயே பொறுத்தருளுகிறாய்; ஆச்சர்யமென்றபடி. இந்த வசநங்களால் நன் மை வந்திருப்பது அறிவிக்கப்பட்டது. प्रवहति இதி வங்கிபுரத்துநம்பி காரிகை 21, புத்திமானாயிருப்பவன் வருகிற ஜலத்தைத் தேக்குவதற்கு தானே அணை கட்டவேண்டும். (போய்விட்ட ஜலத்திற்குப் புலம்பி நிற்பதோ?) அதுபோல் மேல் நடக்கும் இந்த்ரிய ப்ரவ்ருத்திகளை அஸத்விஷயத்திற் போகாதபடி, தத்த்வ ஜ்ஞாநத்தைக் கொண்டு கைங்கர்யாதி விஷயத்தில் நிறுத்தவேணும், மாளும் இதி. திருவாய்மொழி 1-3-8. நாளும் நின்று

என்றும் சொல்லுகிற ந்யாயத்தாலே गतத்துக்கு சோகியாதே, गतமான अयोग्य தையைக் கண்டு அகலவும் பாராதே, अपर्यनुयोज्यமாய் अनवधिकமான शरण्यप्रभावத் தாலேஇப்போது பிறந்த योग्यதையைக் கண்டு. வருகிறநீருக்கு அணைகோலுங் கணக்கிலே இவ்வவஸ்த்தைக்கு அநுரூபமான आज्ञानुज्ञानुवर्तनமாகிற कैङ्कर्यानु- भवத்தை இழவாதே, 'முடியானே'யிற்படியே விடாய்த்த கரணங்களை चारित्र-

---

என்று பாசுர ஆரம்பம். ப்ரதிதிநம் நிலைத்து நின்று நம்மை நலிகின்ற கொடிய வினைகளெல்லாம் உடனே மாளும்; ஒரு குறைவுமில்லை; மனத்தைத் திடமாகக் கொண்டு ராகாதி மலங்களை நன்ருகக் கழுவி ப்ரதிதிநமும் நம் ச்ரிய: பதியான ஸ்வாமியினுடைய திவ்யமான திருவடியை வணங்கி இதைப் பெறுவதாம். இவ்வளவு செய்யாதவனும் தான் மாளும்= சாகும் ஸமயத்திலாவது எந்த இடமாயிருந்தாலும் அங்கேயே ஓர் அஞ்சலி செய்து மாள்வதாகில், அது சிறந்த बलமாகும். கதத்திற்கு—கழிந்த நாளுக்கு. கதமான அயோக்யதையைக் கண்டு= முன் இருந்து, தான் செய்த நல்ல கார்யத்தாலே கழிந்து போன. தன் அயோக்யதையை நினைத்து; அபர்யநுயோஜ்யமாய்— கேட்கத் தகாதவையான; அநாதியாய்க் குவிந்த பாபங்களை அவன் ப்ரபாவந்தான் எப்படி போக்குமென்று ஆக்ஷேபத்திற்கு விஷயமாகாத, अनवधिकமான இதி. 'नाम्नस्ते यावती शक्तिः पापनिर्हरणे हरे। श्वपचोऽपि नरः कर्तुं क्षमस्तावन्न किल्बिषम्॥' என்றபடி எவ்வளவு பாபம் சேர்ந்தாலும் தனக்குப் போதுமான ஆஹாரம் கிடைக்கவில்லை யென்று வருந்தும்படி எல்லையற்றதாம் ப்ரபாவம். யோக்யதையைக் கண்டு என்றவரையில் மூன்று ப்ரமாணங்களின் அர்த்த ஸங்க்ரஹம். प्रवहति இத்யாதி ப்ரமாணத்தின் அர்த்தம் வருகிற இத்யாதி. இழவாதே- இழந்து போகாதே. முடியானே இதி. திருவாய்மொழி 3-8-1. "முடியானே—(திவ்ய கிரீடமுடையவனே) மூவுலகம் தொழுது ஏத்தும் சீரடியானே! ஆழ்கடலைக் கடைந்தாய்! புள்ளூர்கொடியானே கொண்டல் வண்ணா. அண்டத்து உம்பரில் நெடியானே (ப்ருஹ்மாண்டத்திற்கு மேலே இருப்பவர்களுக்கும் பெரியவனே) என்று கிடக்கும் என் நெஞ்சமே" என்றது முதற் பாசுரம். இத்திருவாய்மொழியில் கருதிய விசேஷங்களை நமது ப்ரபந்த ரக்ஷையில் காண்க. எம்பெருமான் ப்ரத்யக்ஷ மாகவேண்டுமென்று ஆழ்வார் ஆசைப்பட்டு, அவனைப் பணிந்து அநுபவிக்கும் பாகவதர்களுடைய பாக்யம் தமக்கும் வேண்டுமென்று கொண்டு அவனுடைய கைங்கர்யத்தில் இழிந்து அதிக பரபரப்பினால் எக் கருவி எந்த கார்யத்திற்கு உரியதென்று சிந்திக்காமல், கண்ணாலே கேட்பது காதாலே காண்பது என்றாற் போல் ஒவ்வொரு கருவியாலும் எல்லாக் கார்யத்தையும் செய்ய வாசைப்பட்டு, அது பூர்த்தி யாகாமையாலே சோர்ந்தார். கருவிகளின்றி தாமே நேராக எல்லா கார்யங்களும் செய்யலாமா என்று ஏழாம் பாட்டில் ப்ரவர்த்தித்து அதுவும் முடியாமல் சோர்ந்தார். ஆழ்வாருக்கு, 'எல்லாவற்றாலும் எல்லாக் கார்யமும் செய்யவில்லையே' என்று சோர்வு. அதனால் அகநற்ற

काहारसेवादिகளாலே योग्यங்களாக்கி प्राप्तங்களான अनुभवங்களிலே மூட்டி अयोग्य-विषयान्तरங்களில் பட்டி புக்க வாஸநைகளை மாற்றுவிக்கவும், *(4)* அக்கரையில் अभिमतदेशத்துக்குப் போக ஓடம் பார்த்திருப்பார் நினைத்தபோது விடவொண்ணாத पणबन्धद्यूतத்திலே இழிந்தாலும் द्यूतशास्त्रத்தின்படியே அடி தப்பாதே கருவி வைக்குமா போலே, आज्ञानुज्ञैகளாலே அடிமை கொள்ளுகிற शासिताவினுடைய शासनத்துக்குப் பொருந்தின कालविशेषादिनियतமான कैङ्कर्यத்தை, पित्तपरिहारार्थமாக क्षीरसेवை பண்ணுவாரைப் போலன்றிக்கே अयत्नलभ्यமான औषधத்தாலே अविलम्बितமாக आरोग्यம் பெற்றவர்கள் பால் வார்த்துண்ணுமாப் போலே, உகந்து பண்ணவும்,

---

*கார்யம் அதது செய்வதற்கும் சோர்வு உண்டாயிற்று நம்முடைய கருவிகளோ வென்னில்—துஷ்ட ஆஹாரங்களால் கெட்ட கார்யங்களிலே இழிந்து ஸத்விஷயத்திலே சோர்வதாம். அதற்காக ஆஹாரத்தை நிறுத்தினால் முழு விடாய்ப்பு. இப்படி திருவாய்மொழியில் கூறியபடி விடாய்த்திருப்பதைக் கண்டு கருவிகளைக் கைங்கர்ய யோக்யங்களாக்குவதற்காக ஸாத்விக ஆஹார ஸேவையும் ஸச்சாஸ்த்ர பரிசீலநமும் செய்யவேண்டும். பட்டிபுக்க—களவாகப் புகுந்த. गो என்று இந்த்ரியங்களுக்கும் மாடுகளுக்கும் பெயர். மாடுகள் திருட்டுத் தனமாக மேயத்தகாத விடங்களில் புகுவது போல் இந்த்ரியங்கள் விஷயாந்தரங்களில் புகுந்து வருவதால் வாஸனைகள் பல ஏறியிருப்பது இரண்டுக்கும் ஸாம்யம். அவ் வாஸநைகளை மாற்றவேண்டும். அவை மூலமாகக் கார்யங்கள் வாராதபடி அவற்றுக்கு மாறாகக் கைங்கர்ய வாஸநைகள் ஏற வேண்டுமென்றபடி. [गो= கண்டவிடம் போவது]*

*அக் கைங்கர்யங்களை போக்யமாக உகந்து பண்ணவேண்டுமென்கிற நான்காவது அம்சத்தை மேலே அருளிச் செய்கிறார். ஆஜ்ஞாநுஜ்ஞா கைங்கர்யங்கள் உபாயமாகாவிட்டாலும் சாஸ்த்ர முறையை மீறிச் செய்யலாகாதென்பதற்குத் தக்க உதாஹரணம் அருளிச் செய்கிறார். அக்கரையில் இத்யாதியால். ஸ்ரீபாஞ்சராத்ர ரக்ஷையிலும் 2-வது அதிகாரத்தில் ஸித்தாந்தம் தொடங்கிச் சிறிது தூரத்தில் இவ்வுதாஹரணம் அருளப்பெற்றது. ஓடம் பார்த்திருப்பவரென்பது ஸம்ஸாரம் கடக்க தேஹாவஸாநத்தில் வரும் ஸூக்ஷ்ம சரீரம் எதிர்பார்ப்பதற்கு த்ருஷ்டாந்தம். பணபந்த த்யூதமாவது—பணம் வைத்து ஆடும் சூதாட்டம். பணம் பெறுவதற்காக இதை முடிவு வரையில் ஆடவேண்டும். விஹாரத்யூதமாவது—போது போக்குக்காக ஆடுவது. இதை நினைத்தபோது விட்டெழுந்திருக்கலாம் அடி தப்பாதே—வ்யவஸ்தை மாறாதே. கருவி—பாசக்காய் முதலானவை சாஸநமாவது—சாஸ்த்ரம். மோக்ஷாதிகளுக்கு உபாயமாக ஆஜ்ஞாநுஜ்ஞைகளைச் செய்கிறவர்கள், உடம்பில் பித்தமிருந்து அது போவதற்காக ச்ரமப்பட்டுப் பால் பருகுபவர் போலாவர். ப்ரபத்தியினால் கர்மாவைக் கழித்தவர் ஔஷதத்தால் பித்தம் போக்கி ஆரோக்யம் பெற்றவர் போலாவர். சாந்த*

(5) அப்போது, "नित्यसिद्धे तदाकारे तत्परत्वे च पौष्कर। यस्यास्ति सत्ता (सक्तिः) हृदये तस्यासौ सन्निधिं व्रजेत्" என்றும், "यथा सामुद्रमम्भोऽब्दैः स्पृष्टमेत्युपभोग्यताम्। तथैव हि मनुष्याणां भक्तैः सम्भावितो हरिः॥" என்றும் சொல்லுகிறபடியே ஓர் அதிகாரி விசேஷத்துக்காக सान्निध्यादिகளைப்பண்ணிப் परमैकान्तिயான தன்னை யுகந்து வந்து अर्चावतारம் பண்ணியி(யுமி)ருக்கிற எம்பெருமான்பக்கலிலே "सर्वाति-शायि षाड्गुण्यं संस्थितं मन्त्रबिम्बयोः என்கிற பூர்த்தியையும், "आपीठान्मौलिपर्यन्तं पश्यतः

---

பித்தர்களுக்குத் தனிப்பால் அருந்துவது மட்டுமின்றி பால் வார்த்து உண்பதிலும் உத்ஸாஹம் உண்டாகும். அதுபோல் ப்ரபந்நர்களுக்குக் கைங்கர்யத்தில் ருசி விஞ்ச வேண்டுமென்றதாயிற்று.

இனி ஐந்தாவது அம்சம். செய்யும் போது அர்ச்சாதிகளில் பரத்வ ஸௌலப்யாதிகளை அநுஸந்தித்து அந்தந்த ஸமயத்தில் பகவானுக்கும் தனக்கும் உள்ள ஸம்பந்தத்திற்கு ஈடாகச் செய்யவேண்டுமென்கிறார். அர்ச்சைக்குள்ள விசேஷாகாரங்களில் பூர்த்தி, பாவநதமத்வம், அருமருந்தாகை—ஆச்ரித பாரதந்த்ர்யம், ஆகர்ஷகத்வம் என்பவை இங்கே சொல்லப் படுகின்றன. नित्यसिद्धे—அநாதியாய் அழியாமலிருக்கிற तदाकारे—அந்த எம்பெருமானுடைய பரவாஸுதேவ ரூபத்திலும், तत्परत्वे च அந்த எம்பெருமானுடைய பரத்வத்திலும் यस्य हृदये—எவனுடைய நெஞ்சில் सत्ता-இவை உண்டு என்கிற புத்தியானது अस्ति-இருக்கின்றதோ. பௌஷ்கர-புஷ்கரத்தில் தாமரைப்பூவில் உண்டானபிரமனே तस्य-அவனுக்கு असौ அந்தபகவான் सन्निधिं व्रजेत्-நெருங்கியிருப்பார், तत्परत्वे-என்பதற்கு வ்யூஹ விபவாதிகளுக்கெல்லாம் காரணமான அந்த வாஸுதேவ ரூபத்தின் பரத்வத்தில்என்றும்பொருள் கொள்ளலாம். सत्ता என்கிறவிடத்தில் सक्तिः என்கிற பாடம் ஸம்ஹிதையிலுள்ளது என்றுமுன்பே சொன்னோம், இந்த மூர்த்தியிலிருப்பவன் அர்ச்சையான போது ஸமுத்ர ஜலம் மேகத்தில் சேர்ந்த பிறகு போல் போக்யமாகிறானென்கிறார் यथेति। यथा—எப்படி सामुद्रं अंभः—ஸமுத்ர ஜலமானது अब्दैः=மேகங்களாலே स्पृष्टं—கொள்ளப்பட்டதாய் மதுரமாய் போக்யதையைப் பெறுகிறதோ, அது போல் பக்தர்களாலே ப்ரதிஷ்டை செய்விக்கப் பெற்ற எம்பெருமான் मनुष्याणां—மனிதர்களுக்கு போக்யமாகிறான். ஓர் அதிகாரி விசேஷத்திற்காக, ப்ரஹ்மாதிதேவ ஸித்த, மஹர்ஷி, பக்த மநுஷ்யாதிகளில் சிலருக்காக, सान्निध्यादिகளை, सान्निध्यமாவது அவர்கள் இருக்கும் இடத்திற்கு எழுந்தருளுகை, அர்ச்சாவதாரம் பண்ணுகையாவது ப்ரதிஷ்டாதிகளாலே அர்ச்சையில் அவ்வுருவுக்கிடான மூர்த்தி யெடுத்துச் சேர்ந்திருக்கை, இது அர்ச்சநா நைவேத்ய க்ரஹண அநுக்ரஹாதிகளைச் செய்வதற்காக, ஸர்வேதி, விஷ்வக்ஸேந ஸம்ஹிதை, मन्त्रे वाच्यात्मना नित्यं बिंबे तु कृपया स्थितम् என்று உத்தரார்தம். மந்த்ரத்திலும் அர்ச்சாபிம்பத்திலும் षाड्गुण्यम्—ஆறுகுணங்களும் सर्वातिशायि வ்யூஹாதிகளைவிட உயர்ந்திருக்கும், அது மந்த்ர ஜபம் செய்பவரோ அர்ச்சையில் நிஷ்டையுடையவரோ அந்தந்த ஸமயத்தில் அபேக்ஷிப்பதற்கிணங்க ப்ரகாச

पुरुषोत्तमम् । पातकान्याशु नश्यन्ति किं पुनस्तूपपातकम् ॥" என்கிற पावनतमत्वத்தையும், "सन्दर्शनादकस्माच्च पुंसां संमूढचेतसाम् । कुवासना कुबुद्धिश्च कुतर्कनिचयश्च यः ॥ कुहेतुश्च कुभावश्च नास्तिकत्वं लयं व्रजेत्" என்கிறபடியே प्रत्यक्षादिप्रमाणत्रयத்திலும் हेतुफलभावத்தாலே வரும் மதிமயக்குக்களெல்லாவற்றுக்கும் மருந்தாயிருக்கிற படியையும், "ये यथा मां प्रपद्यन्ते तांस्तथैव भजाम्यहम्" என்றும், "தமருகந்த தெவ்வுருவம்" என்கிற பாட்டிலும் சொல்லுகிறபடியே अवाङ्मनस परिच्छेद्य மான आश्रितपारतन्त्र्यத்தையும், "கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணா"

---

மாவதற்காக மந்த்ரத்தில் பகவத் ஸாந்நித்யமாவது வாச்யவாசக பாவத் தாலே; பிம்பத்தில் ஸாந்நித்யமாவது க்ருபையினால் கொள்ளப்பட்ட மூர்த்தி மூலமாகவாம். பூர்த்தியை = ஷாட்குண்ய பூர்த்தியை. आपीठादिति. சாண் டில்ய ஸ்ம்ருதி. 2-89. आपीठात्—அர்ச்சையில் பாதபீடம் முதல் मौलिपर्यन्तं— சிரஸ்வரையில். पुरुषोत्तमं—புருஷோத்தமனை पश्यतः-கண்டு அநுபவிக்கிறவ னுக்கு மஹாபாதகங்கள் கூட விரைவில் தொலையுமென்கிற पावनतमत्वम्—மிகவும் சுத்தனாக்கும் தன்மை. सन्दर्शनादिति. पौष्कर संहिता 1-31-32—अकस्मात् सन्दर्शनात्— தற்செயலாக தர்சநம் நேர்ந்ததாலேயே संमूढचेतसां पुंसां—விஷய மோஹ முள்ள ஜநங்களுக்கு, கெட்ட வாஸனையும் கெட்ட புத்தியும் குதர்க்கக் குவியலும், கெட்ட அநுமாநமும், கெட்ட எண்ணமும், நாஸ்திக்யமும் அழிவுறும். ப்ரத்யக்ஷாதி ப்ரமாண த்ரயமாவது—ப்ரத்யக்ஷம் अनुमानम् वेदवैदिक- शब्दम् என்கிற மூன்று ப்ரமாணம். हेतुफलभावத்தாலே = குவாஸநாதி மதி மயக்குகளில் ஒன்று காரணமாயும் மற்றொன்று கார்யமாயுமிருப்பதாலே. அர்ச்சைக்கு ஆச்ரித பாரதந்த்ர்யத்தில் ப்ரமாணம் ये இதி. மநுஷ்யாதி அவதாரம் செய்வது மாத்ரமின்றி ये—எவர்கள் यथा—எந்த விதமாக மனத் தில் ஸங்கல்ப்பம் கொண்டு. என்னை அதற்காக ஆச்ரயிக்கிறார்களோ तान्— அவர்களை, तथैव—அப்படியே தர்சநம் செய்யுமாறு உருவெடுத்து அவர்களை அடைகிறேன். இவ்வசநத்தில் அர்ச்சாவதாரமும் அதில் பலத் திருக்கோலம் முதலானவையும் கருதப்பெறும். இதற்கு விவரணமாகும் தமர் என்கிற முதல் திருவந்தாதிப் பாசுரம், 44. 'தமருகந்தது எவ் வுருவம் அவ்வுருவந்தானே தமருகந்தது எப் பேர் மற்று அப்பேர்; தமருகந்து எவ்வண்ணம் சிந்தித்து இமையாது இருப்பரே அவ்வண்ணம் ஆழியான் ஆம்' ஆழியான்—चक्रधारि எம் பெருமான் பக்தர்கள் விரும்பும் உருவத்தையும், பக்தர்கள் வைக்கும் பேரையும் பக்தர்கள் இடைவிடாமல் சிந்தித்திருக்கும் குணவ்யாபாரங்களையும் அவர் களுக்காகத் தான் உடையவனாகிறான். अपरिच्छेद्यமான = அளவிட முடியாத. கண்ட இத்யாதி திருப்பாணாழ்வார் பாசுரம் 10. கொண்டல்வண்ணனைக் கோவலனாய் வெண்ணெயுண்ட வாயன் என் உள்ளம் கவர்ந்தானை, அண்டர் கோன் அணியரங்கன் என் அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே, கொண்டல்—மேகம்; அண்டர்கோன்—நித்யஸூரிநாதன்.

என்கிற आकर्षकत्वத்தையும் அநுஸந்தித்து,
"सतीव प्रियभर्तारं जननीव स्तनन्धयम् । आचार्यं शिष्यवन्मित्रं मित्रवल्लालयेद्धरिम् ॥
स्वामित्वेन सुहृत्त्वेन गुरुत्वेन च सर्वदा । पितृत्वेन तथा भाव्यो मातृत्वेन च माधवः ॥"
"यथा युवानं राजानं यथा च मदहस्तिनम् । यथा प्रियातिथिं योग्यं भगवन्तं तथाऽर्चयेत् ॥"
"यथा च पुत्रं दयितं तथैवोपचरेद्धरिम्" என்கிறபடியே அவ்வோ सम्बन्धवर्गपरत्व-सौलभ्यादिகளுக்கு அநுரூபமான वृत्तियைப் பண்ணவும், (6) அப்போது,

"तदा हि यत् कार्यमुपैति किञ्चित् उपायनं चोपहृतं महार्हम् ।
स पादुकाभ्यां प्रथमं निवेद्य चकार पश्चात् भरतो यथावत् ॥"

என்று திருவடிநிலைகள் விஷயத்தில் ஸ்ரீ பரதாழ்வான் நடத்தின राजसेवक-वृत्तिயை न्यायार्जितद्रव्यங்களாலே நடத்தவும், (7) இவ் வ்ருத்தியை வாழ்க்கைப் பட்ட वधूவின் माङ्गल्यसूत्रादिरक्षणमात्रமாக நினைத்திருக்கவும்.(8) இப்படி भगवदुप-

---

ஒவ்வோரவஸரத்திலே மனத்திற்படும் ஸம்பந்தத்திற்கேற்றாக ஆராதிக்க வேண்டுமென்பதற்கு ப்ரமாணம் सती இதி. சாண்டில்ய ஸம்ருதி 4-37, 38, 31. सती–பதிவ்ரதையானவள் தனக்கு ப்ரியனான பர்த்தாவைப் போல வும்–தாய் சிசுவைப் போலவும், சிஷ்யன் ஆசார்யனைப் போலவும், ஸ்நேஹிதன் ஸ்நேஹிதனைப் போலவும் அன்புபாராட்டி பகவானிடத்தில் நடந்துகொள்வ தாம்.மாதவன் ஸ்வாமியாகவும், ஸ்நேஹிதனாகவும் ஆசார்யனாகவும் பிதாவாக வும் மாதாவாகவும் எப்போதும் ஏதேனுமொரு விதமாக பாவிக்கப்படவேண்டு மென்றும், யுவாவான அரசனை ப்ரஜை போலவும், மதயானையை யானைப் பாகன் போலவும், தகுந்த ப்ரியமான அதிதியை க்ருஹஸ்தன் போலவும் பகவானை யாராதிக்க வேண்டுமென்றும், இஷ்டமான மகனிடத்திற் போல் பகவானிடத்தில் நடந்து கொள்ளவேண்டும். ஸம்பந்தவர்க்கமாவது— भर्तृत्वशिशुत्वादिகள். சில ஸம்பந்தத்தில் பரத்வமும் சில ஸம்பந்தத்தில் ஸௌலப்யமும் தோற்றும்.

ஸம்பாஷணாதிகளுக்கு இடமாகாத அர்ச்சையிலும் விஜ்ஞாபந ஆரா தநாதிகள் தகுமென்பதற்கு பரதாழ்வான் செய்த பாதுகாராதநத்தை த்ருஷ்டாந்தமாக்கி ஆறுவது அம்சம் அருளிச்செய்கிறார் तदेति. तदा–பாதுகை களைக் கொண்டு ராஜ்ய பரிபாலநம் செய்த காலத்தில், यत् किञ्चित्—எந்த கார்யம் செய்ய நேருமோ, உயர்ந்த உபஹாரங்களில் எது அரசர்களால் கொண்டு வரப்படுமோ, அதை பரதாழ்வான் பாதுகைகளுக்கு விஜ்ஞாப னம் செய்தும் ஸமர்ப்பித்தும் பிறகு தக்கவாறு செய்துவந்தார். ராஜ ஸேவகவ்ருத்தியை = அடிமையானவன்ராஜாவினிடம்செய்யவேண்டிய நடத் தையை திருவடி நிலைகள்விஷயத்தில் அவர் செய்தது போல் பரவாஸுதேவ னுக்குச் செய்வதை அவனது அர்ச்சையில் நாம் செய்வதாம்.

ஏழாவது அம்சம்—இப்படி செய்யும் கைங்கர்யங்களை ஸுமங்கலிகள் கூறை திருமங்கல்யம் முதலானவற்றை தரிப்பது போல் பாவிப்பது. அதாவது. மாங்கல்யதாரணாதிகள் மேலே யாவஜ்ஜீவம் செய்யும் பதி

क्रमமாய் भागवतपर्यन्तமாக வருகிற कैङ्कर्यरूप्यपुरुषार्थसिद्धिக்குப் प्रधानकारणம்—
"पापिष्ठः क्षत्रबन्धुश्च पुण्डरीकश्च पुण्यकृत्। आचार्यवत्तया मुक्तौ तस्मादाचार्यवान् भवेत् ॥" என்றும், "எம்மீசர் விண்ணோர் பிரானார் மாசின் மலரடிக்கீழ் எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே" என்றும், "வில்லிபுதுவை நகர்நம்பி விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்ல பரிசு வருவிப்பரேல் அது காண்டுமே" என்றும் சொல்லுகிறபடியே सदाचार्यसम्बन्धமே யென்று விச்வஸித்து, अभिषेकம் பண்ணப்புகு(போ)கிற राजकुमारனுக்கு रात्रियில் விளக்கேற்றி வைக்குமாப் போலே தனக்கு அவர்கள் பண்ணின வெளிச் சிறப்பையும் அதடியாகத்

---

சுச்ரூஷைக்குத்தொடக்கமாவது போல் இங்குச் செய்யும் கைங்கர்யமெல்லாம் பரமபத கைங்கர்யத்திற்குத் தொடக்கமாகும். கூறையுடுப்பதிலும் மாங் கல்யதாரணத்திலும் மணப்பெண்ணுக்கு வரும் உத்ஸாஹமளவுக்கு ப்ர பந்நனுக்கு யாவஜ்ஜீவ கைங்கர்யத்திலே உத்ஸாஹம் வேண்டுமென்றபடி.

இந்நிலைக்குக் காரணமான ஸதாசார்யனிடத்தில் க்ருதஜ்ஞனாயிருக்கை யென்கிற எட்டாவது அம்சத்தை நிரூபிக்கிறார் இப்படி இத்யாதியால். भगवदुपक्रमமாய்=பகவானிடம் தொடங்கி; कैङ्कर्यरूप्य=கைங்கர்யமென்று பேர் பெற்ற.எம்மீசர் இதி.திருவிருத்தம் 54–திருத்துழாயின் மலர்களிலிருந்து பறக் கும் வண்டுகளைக் கண்டு தூது செல்லச் சொல்வது இங்கு. "வீசும் சிறகால் பறத்திர் விண்ணாடு நுங்கட்கு எளிது; பேசும்படி யன்ன பேசியும் போவது. நெய் தொடுவுண்டு ஏசும்படி யன்ன செய்யும் எம் ஈசர் விண்ணோர் பிரானார் மாசில் மலரடிக் கீழ் எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே". நெய் திருடி உண்டு பலர் ஏசும்படியான கார்யங்களைச் செய்கின்றவனாய், எமக்கு ஈசனான நித்ய ஸூரிநாதனின் மாசு இல்=குற்றமற்ற திருவடித்தாமரையின் கீழ் எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே! வீசுகின்ற சிறகால் பறக்கின்றீர்; ஆகையாலே பரமபதம் செல்வது உங்களுக்கு எளிது. அதனால் நீங்கள் என்விஷயமாகப் பேசவேண்டியதை என்னிடம் சொல்லிப்போகலாம் இங் கே ஆசார்யர்களையே வண்டுகளாகக் கருதி உதாஹரித்ததாம். வில்லிபுதுவை. நாச்சியார் திருமொழி 10-10. தாம் ஸ்வதந்த்ரமாகச் செய்தது ஒன்றும் பலிக்காததால் தோழியின் சொல்படி ஆசார்யரும் திருத்தகப்பனருமான பெரியாழ்வாரைப் புரஸ்கரிக்கிறாள் இங்கு. 'நல்ல என் தோழி; நாகணை மிசை நம்பரர் செல்வர் பெரியர், சிறுமானிடவர் நாம் செய்வதென்? (ஆதி சேஷன் மேல் இருக்கும் நமக்கு ஸ்வாமியாய் பரத்வம் செல்வம் மற்றும் பெருமை யெல்லாமுடையவரிடம் மானிட ஜாதியாய் சிறியரான நாம் என்ன செய்யவாகும்? ஸ்ரீவில்லிபுத்தூரில் விஷ்ணுசித்தர் என்கிற நம் தந்தையாரே பவ்யரான ஸர்வேச்வரரை வல்லதொரு வகையால் தாமே வருவிப்பராகில் நாம் காண்போம் என்று ஆசார்ய மூலம் நன்மை அறிவிக்கப்பட்டது. அபி ஷேகம் பண்ணப்புகுகிற=உதித்த பிறகு பட்டாபிஷேகம் பண்ணப்படப் போகிற; ராத்ரியில்=முதனாளிரவில், வெளிச்சிறப்பாவது—தத்துவ ஜ்ஞானம்

தனக்கு வந்த कैङ्कर्यविகளையும் அநுஸந்தித்து அவர்கள் பக்கலிலே कृतज्ञ யிருக்கவும்,(9)இவையெல்லாவற்று(த்து)க்கும்साधारणமான प्रधानकारणமுமாய், मुक्तदशैயில் आत्मानुबन्धियान भगवदनुभवத்தைப் பற்ற, अपर्यनुयोज्यस्वातन्त्र्यமடியாக शङ्कितமாம் विच्छेदத்துக்கும் परिहारமாயிருப்பது–"இருளகற்று மெறிகதிரோன் மண்டலத்தூடேற்றி வைத்தேணி வாங்கி,' என்றும், "போயினல் பின்னை யித்திசைக் கென்றும் பிணை கொடுக்கிலும் போகவொட்டார்" என்றும், "வண்புகழ் நாரணன் திண்கழல்" என்றும், "சன்ம சன்மாந்தரம் காத்து

---

தனக்கு வந்த—தான் செய்யவான.

இனி ஒன்பதாவது அம்சம். ஸர்வகாரணமான ஸர்வேச்வரனிடத்தில் அவனுடைய ஸஹஜகாருண்யத்தில் ஊன்றி க்ருதஜ்ஞனயிருக்கை கூறப் படுகிறது இவை இத்யாதியால். இவையெல்லாத்துக்கும்= ஆசார்ய ஸம்ப ந்தம் முதலான ஸர்வாம்சத்திற்கும் பொதுவானதாய் ப்ரதாநகாரணமுமாய் என்றது, ஸஹஜகாருண்ய மென்பதில் அந்வயிக்கிற 'परिहारமாயிருப்பது' என்ற சொல்லில் சேரும். பற்ற என்பது शङ्कितமென்பதில். अपर्यनुयोज्यस्वातन्त्र्यம்– ஏன் இப்படி செய்தாயென்று ஒருவர் கேட்டு அடக்கவாகாத ஸ்வாதந்த்ர்யம் ஈச்வரனுக்கு உள்ளது அது காரணமாய் வந்த சங்கையாவது–முக்த தசையில் ஆத்மாநுபந்தியான= ஆத்மஸ்வரூபத்தை யநுஸரித்ததாய் எப்போதுமிருக்க வேண்டிய பகவதனுபவ விஷயத்திலும் விச்சேதம் வருமோ என்றவாறும். அந்த சங்காவிஷயத்திற் பரிஹாரமுமாயிருப்பதாம் ப்ரதாநகாரணமான காரு ண்யம். விச்சேதத்துக்கும் பரிஹாரமாய்= அநுபவ பங்கத்திற்குப் பரிஹாரமு மாய். 'न च पुनरावर्तते' என்கிற அபுநராவ்ருத்தியில் பாசுரங்களை யுதாஹரிக் கிறர் இருள் இதி (பெரியா.தி 4.9 3)இருளுடைய என்ற பாட்டு கறுப்பான சோலைகளையுடைய மருதமரங்களையும். கோபித்த குவலயாபீடத்தையும், ப்ர லம்பனையும், கொடிய கேசியையும், சக்ரமுடைய சகடத்தையும் மல்லரையும் பிளந்து அதிலுண்டான ஓசையைக் கேட்டருளினவனுய், இருளைப்போக்கும் ஒளியுள்ள ஸூர்ய மண்டலத்தின் நடுவே மோக்ஷம் போகின்றவரை ஏற்றி மேலிடத்திற் சேர்த்து ஏறினவர் இறங்காதபடி ஏணியை அப்புறப்படுத்தி அருள்செய்து ஆட்கொள்கின்றவனுடைய ஊர் அரங்கமென்றுர். இங்கே ஏணியை வாங்கினதாகச் சொன்னதால் பிறகு எப்போதும் இறக்குவதில்லை யென்று தெரிவித்ததாம்.போயினல் இதி.பெரியா-திரு 4-5-2 சீயினல் என்று பாட்டாரம்பம். வாயினல் நமோநாரணு என்று சொல்லி மத்தகத்தில் கை களைக்கூப்பி வைத்துப் பரமபதம் சென்றுல், பிறகு ஏதாவது ஈடு அங்கே கொடு த்தாலுங்கூடக் கீழ்திக்கான ப்ரக்ருதி மண்டலத்திற்குப் போவென்று சொல்ல இசையாரென்றது. வண் இதி. திருவாய்மொழி 1-2.10 எண் பெருக்கு என்ற பாசுரம். விலக்ஷணமான புகழ்களை யுடைய நாராயணனின் திடமான திருவடி களைச் சேர். இங்கே திடமான என்றதால் விச்சேதமில்லை யென்று தெரிகிறது. சன்ம இதி 3.7.7.பலஜந்மங்கள் காத்திருந்து உபாயாநுஷ்டாநம் செய்த அதி

அடியார்களைக் கொண்டு போய்த் தன்மை பெறுத்தித் தன் தாளிணைக் கீழ்க் கொள்ளுமப்பன்'' என்றும், ''தன் தாளிணைக் கீழ்ச்சேர்த்து அவன் செய்யுஞ்சேமத்தை'' என்றும் சொல்லுகிறபடியே **अपुनरावृत्ति**யிலும், முன்பு ஸம்ஸரிப்பிக்கையிற் போலே, **सत्यसङ्कल्प**னாய் சேஷியான **श्रियःपति**யினுடைய, "பண்டை நாளாலே நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும் கொண்டு நின் கோயில் சீய்த்து'' என்று சொல்லப்பட்ட **सहजकारुण्य**மென்று தெளிந்து அவ்விஷயத்திலும் **कृतज्ञ**னாயிருக்கவும் **प्राप्तम्**.

இவ்வுத்தரக்ருத்யத்தில் **मनोवाक्काय**ங்களென்று சொல்லுகிற கரணங்கள் மூன்றிலும் **परिहरणीय**ங்களிலும் **परिग्राह्य**ங்களிலும் ஸாரமிருக்கும்படி சொல்லுகிறோம்—

**"विषस्य विषयाणां च दूरमत्यन्तमन्तरम् । उपभुक्तं विषं हन्ति विषयाः स्मरणादपि ॥"** என்றும், "ஆவி திகைக்க ஐவர் குமைக்குஞ் சிற்றின்பம் பாவியேனைப்

---

காரிகளைக் கொண்டு பரமபதம் சென்று **தன்மை**= தனது பரமஸாம்யத்தைப் பெறுவித்து. தன் திருவடிகளின் கீழே ஸ்வீகரிக்கும் நிருபாதிக பிதாவை. **தன்னிதி**. திருவாய்மொழி 7-5-10 **வார்த்தை யறிபவர்** என்கிற பாட்டு. எம்பெருமான் வார்த்தைகளை யறிகின்றவர் பெரும் துன்பம் வேரற நீக்கித் தன் திருவடியின் கீழ் சேர்த்து அவன் செய்யும் சேமத்தை (க்ஷேமத்தை= திரும்பாமல் அங்கேயே ஸ்திரமாயிருப்பதை) சாஸ்த்ர யுக்தி மூலம் விசாரித்துச் தெளிவு பெற்ற பிறகு அவனுக்கு ஆளாகாமல், இருப்பரோ. இங்கே க்ஷேமம் என்பதில் நோக்கு. 'அபுநராவ்ருத்தியிலும்' என்கிற உம்மையானது ஸம்ஸரிப்பையும் சேர்ப்பதற்காக. ஜீவர்களை, ஏதேனும் உபாயத்தால் கழிக்காத வரையில் கர்மாநுபவத்திலிருந்து விடுவிப்பதில்லை என்று இங்கே ஸத்ய ஸங்கல்பனாயிருப்பது போல், மோக்ஷம் சென்றவனிடத்தில் கீழே யனுப்புவதில்லை யென்று ஸத்ய ஸங்கல்பனாகிறானென்றபடி; ஸங்கல்பத்திற்குக் காரணமான ஸஹஜகாருண்யத்திற்கு ப்ரமாணம் **பண்டை இதி**. திருவாய்மொழி 9-2-1. ப்ராசீந காலமாக, அதாவது அநாதியாக உனது காருண்யத்தையும் பிராட்டியின் காருண்யத்தையும் பெற்று உனது கோயிலில் **சீய்த்து**= திருவலகு ஸமர்பிப்பது முதலான கைங்கர்யம் செய்து.

**ப்ராப்தமிதி**. ப்ராப்தமென்றதில் இவ்வதிகாரத்தில் ஆரம்பித்த வாக்யத்திற்கு முடிவு. இப்படி ஒன்பது அம்சங்களுமிருந்தால் உத்தர க்ருத்யம் நன்குஇருந்தபடியாம். இங்கு முக்யமாக மநோவாக்காயங்களுக்கு முறையே ஒவ்வொரு நிவ்ருத்திக்ரியையும் ப்ரவ்ருத்திக்ரியையும் எடுத்துக்கூறுகிறார் இவ்வுத்தர க்ருத்யத்தில். **இதி. विषस्येति**. விஷத்திற்கும் விஷயங்களுக்கும் வெகுதூரம் வாசியுண்டு. விஷமானது உட்கொண்டவனை தான் கொல்லும். விஷயங்கள் நினைத்த மாத்ரத்திலே கொல்லும். **ஆவி இதி**. திருவாய்மொழி 6-9-9. மனம் கலங்கும்படி ஐந்து இந்த்ரியங்களும் துக்கங்களைக் கொடுப்பதற்காகச் செய்யும் பல சிற்றின்பங்களைக் காட்டிப் பாவியான என்னை உன்னை யநு

பல நீ காட்டிப்படுப்பாயோ" என்றும் சொல்லுகையாலே परमपुरुषार्थरुचि குலையாமைக்காக மறக்க வேண்டுமவற்றில் प्रधानம் विषयास्वादம்; कृतघ्नதை வாராமைக்காக நினைக்கவேண்டுமவற்றில் प्रधानம், आचार्यன் செய்த प्रथम-कटाक्षம் முதலான உபகாரம். कार्पण्यம் குலையாமைக்காகச் சொல்லாதொழிய வேண்டுமவற்றில் प्रधानம் आत्मोत्कर्षம்; उपायनिष्ठையை மறவாமைக்காக "सदैवं वक्ता" என்கிறபடியே சொல்லவேண்டுமவற்றில் प्रधानம் द्वयம், உகந்து பணி கொள்ள உரியனான எம்பெருமான் திருவுள்ளமழலாமைக்காகக் கரணத்ரய த்தாலும் "செய்யாதன செய்யோம்" என்னுமவற்றில் प्रधानம் ब्रह्मविद-पचारம். पुरुषार्थसागरம் வற்றுதல் வரையிடுதல் செய்யாமைக்காகக் करणत्रय த்தாலும் कर्तव्यங்களில் प्रधानம் भगवत्कैङ्कर्यத்தின் எல்லைநிலமாய் शास्त्रानुज्ञात आचार्यादिभागवतकैङ्कर्यம். स्वयंप्रयोजनமான இவ்வுத்தர க்ருத்யமும் रहस्यत्रयத்தில் फलप्रतिपादकங்களான प्रदेशங்களிலே अनुसन्धेयம்.

---

பலிக்காமல் அழியும்படி செய்யப்பார்க்கிறுயோ. இப்படி நிந்திக்கப்பட்ட விஷயங்களின் ஆஸ்வாதத்தை மறக்கவேண்டும்; இல்லையேல் மோக்ஷ புருஷார்த்தத்தில் ருசி குறையும். இங்கே மறப்பது என்றதாலே, விஷயா ஸ்வாதத்தில் ப்ரவ்ருத்தியையும் விடச்சொன்னதாம், பகவத் பரனுயிருந்தே தற்சமயம் மட்டும் விஷயத்தால் ஆகர்ஷிக்கப்பட்டு இழிவதைவிட பழைய விஷயாஸ்வாதத்தை மறக்காமல் நினைத்து வருவது மிகவும் தவறென்றதாம். விஷயஸ்மரண நிவ்ருத்தி மநோவ்யாபாரம். ஆசார்யன் செய்த உபகார ஸ்மரணம் ப்ரவ்ருத்தி வ்யாபாரம்; அதனுல் க்ருதघ्नதைக்கு நிவ்ருத்தி. வாசிக நிவ்ருத்தியில் ஆத்மோத்கர்ஷ வசந நிவ்ருத்தி ப்ரதாநம்- தனக்கு உத்கர்ஷ மிருந்தாலும் தன்னைத்தான் புகழ்ந்துகொள்வது மிகவும் தவறு. புகழ்ந்தால் கார்ப்பண்யம் குலையும். गद्योक्त த்வய மந்த்ரவசநம் வாசிக ப்ரவ்ருத்தி வ்யா பாரம். அதனுல் ப்ரபத்தி செய்தது மறவாமலிருக்கும். மாநஸவாசிகங்கள் உள்பட ப்ரஹ்மவிदபசார நிவ்ருத்தியாம். திருப்பாவை இரண்டாம் பாசுர த்தில் 'செய்யாதன செய்யோம்' என்பதால் பாகவதர்களிடத்தில் அபசாரப் படலாகாது என்றது. அபசாரப்பட்டால் எம்பெருமான் திருவுள்ளம் அழலும்—ஜ்வலிக்கும்—சீறும். காயிக ப்ரவ்ருத்தி வ்யாபாரமாகும் பகவத் கைங்கர்யத்திலும் மேம்பட்டதான ஆசார்ய கைங்கர்யம். இதை விட்டால் புருஷார்த்தலாபம் என்கிற ஸமுத்ரத்திற்கு வற்றுதல்= நிச்சேஷமாக சோஷி க்கையோ, வரையிடுதல்=படிப்படியாகக் குறைந்து வருகையோ நேரும். இங்கு முடிவில் சொன்ன இம் முக்கரணவ்யாபாரஸாரத்தை विषयास्वादस्मरणं ब्रह्मविदपचारमात्मभूमोक्तिम् । त्यज, भव गुरौ कृतज्ञो भगवत्परकिङ्करो द्वयोक्तिपरः ॥ என்று ஸங்க்ரஹிப்போம். फलप्रतिपादकமான ப்ரதேசம் இரண்டு மந்தரத் திலும் சதுர்த்த்யந்தமும் சரமச்லோகத்தில் மூன்றும் பாதமும்,

பரமபதத்தில் நித்ய ஸூரிகளுக்குப்போலே ப்ரப்ந்நர்களுக்கு இங்குஎல்லா வ்யாபாரங்களும் (நித்ய நைமித்திகங்கள் உள்பட) ஸ்வயம்ப்ரயோஜந கைங்

விண்ணவர் வேண்டி விலக்கின்றி மேவுமடிமையெல்லாம்
மண்ணுலகத்தின் மகிழ்ந்தடைகின்றனர், வண்டுவரைக்
கண்ணனடைக்கலங்கொள்ளக் கடன்கள் கழற்றிய நம்
பண்ணமரும் தமிழ்வேத மறிந்த பகவர்களே. (22)

प्रणयिनमिव प्राप्तं पश्चात् प्रिया स्वसमन्वितं महति मुहुरामृष्टे दृष्ट्वा मनौ मणिदर्पणे
प्रपदनधनाः सन्तः शुद्धैः प्रभुं परिभुञ्जते प्रसृमरमहामोदस्मेरप्रसूनसमैः क्रमैः ॥

---

கர்யமேயாகும். கீழ்க்கூறியபடி தமிழ்வேதங்களில்அது வ்யக்தம். ஆனபடியால் நித்ய நைமித்திகங்களையும், செய்யாமற் போனால் ப்ரத்யவாயமுண்டானாலும் அந்த நோக்கைவிட ஸ்வயம்ப்ரயோஜநமாய் கைங்கர்யம் என்கிற புத்தியோடு செய்வதே தகுமென்று பாசுரத்தினால் ஸங்க்ரஹிக்கிறார் விண்ணவரிதி. வண்துவரை—விலக்ஷணமான த்வாரகையைத் தனக்கு ஸ்தாநமாகச் செய்துகொண்டகண்ணன்-ஸ்ரீக்ருஷ்ணனால், அடைக்கலம்கொள்ள-ரக்ஷ்யவஸ்துவாகக் கொள்ளப்பட்டதால், கடன்கள் கழற்றிய—தேவாதி ருணங்களைத் தீர்த்தவரும், நம்—நமது, பண் அமரும்-ராகங்கள் அமர்ந்திருக்கிற, தமிழ்வேதம்—ஆழ்வார்களின் அருளிச்செயல்களை, அறிந்த—அறிந்தவருமான பகவர்கள்—பாகவதர்கள், விண்ணவர்-பரமபதவாஸிகள் வேண்டி—அபேக்ஷித்து. விலக்கு இன்றி=தடையில்லாமல். மேவும்=ப்ரீதியுடன் செய்யும், அடிமை எல்லாம்= எல்லாவிதமான கைங்கர்யங்களையும். மண்ணுலகத்தில்=இ ப்ரக்ருதி மண்டலத்தில், மகிழ்ந்து=ஸௌஹ்ருத்ஸமாராதநமென்ற ப்ரீதியுடன், அடைகின்றனர்=செய்பவராகின்றனர். மகிழ்ந்து அடைகின்றனர் என்பதால் ப்ரத்யவாயம் வருமென்று பயந்து செய்கிறார்களென்பதில்லை; முக்தர்கள் செய்கிற கைங்கர்யத்துக்குச் சமமாகச் செய்கின்றனரென்றதாம்.

இவர்களுக்கு முக்தர்களுக்குப் போலே ஸாக்ஷாத்காரமிராமற்போனாலும் மந்த்ரத்தால் அறிவது விசதமாயிருப்பதால் இவர்கள் செய்யும் கைங்கர்யம் ப்ரியபர்த்தாவுக்கு பதிவ்ரதை போகார்த்தமாகச் செய்யும் வ்யாபாரங்கள் போல் மிகவும் போக்யமாகுமென்று ச்லோகத்தினால் அருளிச்செய்கிறார் प्रणयिनमिति. सन्तः—ஜீவ பர விவேகமுடையவராய் प्रपदनधनाः—ப்ரபத்தியையே புருஷார்த்த ஸாதநமாகக் கொண்டவர்கள் महति—பெரிதாயும் मुहुः—அடிக்கடி आमृष्टे—தொடைக்கப்பட்டதாயு (பரிசீலநம் செய்யப்பட்டதாயு)மிருக்கிற. मनौ—திருவஷ்டாக்ஷரமந்த்ரமாகிய मणिदर्पणे—மணிமயமான கண்ணாடியில் प्रिया—ப்ரியையான பார்யையானவள் पश्चात् प्राप्तं—தனக்குப் பின்னே வந்திருக்கிற प्रणयिनं इव—அநுராகமுள்ள பர்த்தாவைப் போல प्रभुं—பரமாத்மாவை स्वसमन्वितं—தன்னோடு சேர்ந்திருப்பவனாக दृष्ट्वा-கண்டு शुद्धैः-பரிசுத்தங்களாயும், प्रसृमर—எங்கும் பரவிய महामोद—ஸௌகந்தமுடைய स्मेर-மலர்ந்த प्रसून=புஷ்பங்களுக்கு-समैः-ஈடாயும்=விசேஷ மகிழ்ச்சியுடன்கூடியுமிருக்கிற क्रमैः-முறைப்படியான கைங்கர்யங்களாலே परिभुञ्जते-பூர்ணமாக அநு

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे उत्तरकृत्याधिकारः पञ्चदशः 15
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

—o—o—

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

## पुरुषार्थकाष्ठाधिकारः

### புருஷார்த்தகாஷ்டாதிகாரம் 16

स्वतन्त्रस्वामित्वात् स्वबहुमतिपात्रेषु नियतं श्रियः कान्तो देवः स खलु विनियुङ्क्ते चिदचितौ।
यथालोकाम्नायं यतिपतिमुखैराहितधियां ततो नः कैङ्कर्यं तदभिमतपर्यन्तमभवत् ॥

---

பவிக்கிறார்கள், ஒரு ப்ரியை பெரிய கண்ணாடியைத் துடைத்துத் தன்னைப் பார்க்கச் சென்றவிடத்தில் தன் பின்னே பர்த்தா ப்ரீதியினால் வந்து நின்றதால் தன்னோடே சேர்த்து அவனைக் கண்டு ப்ரீதியுடன் தன் கையிலிருக்கும் புஷ்பச் சண்டுமுதலானவற்றைக் கண்ணாடியில் அவனைப் பார்த்தவண்ணமே பின்புறமாக அவன்மேல் உபசாரமாக எறிந்து அவனுடன்களிக்கின்றதுபோல், ப்ரபந்நனும் திருவஷ்டாக்ஷரமாகிற கண்ணாடியில் 'நான் பகவானுக்கு அடிமையானவன்; நான் பகவான் பொருட்டே' என்று வாக்யார்த்தம் அறியும் போது தன்னையும் தனக்குப் பின்னே எம்பெருமானையும் தெளிந்து அடிமையான கைங்கர்யங்களை அவனை யுத்தேசித்துச் செய்து ஸந்தோஷமடைகிறான் என்றபடி.

உத்தர க்ருத்யாதிகாரம் முற்றும்.

ஸ்ரீமதே நிகமாந்த குரவே நம:

### புருஷார்த்த காஷ்டாதிகாரம். 16

ஸ்வயம்புருஷார்த்தமான பகவத் கைங்கர்யமாக உத்தர க்ருத்யத்தைச் செய்ய வேண்டுமென்றார் கீழ். பாகவத கைங்கர்யம் அதற்கும் மேலானதென்கிறார் இங்கு. 'பகவான் ஸ்வாமியாக ப்ரமாண ஸித்தமாகையாலே பகவத் கைங்கர்யம் யுக்தமானாலும், பாகவத கைங்கர்யம் அவச்யமென்பதே ப்ரமாணிகமாகாமலிருக்க அது சிறந்ததுமாகுமோ? உலகில் எல்லோருக்குமே பகவச்சேஷத்வமிருப்பதால் எல்லோருக்கும் கைங்கர்யம் செய்ய வேண்டுமே என்னவேண்டா; பகவான் ஸ்வாமியாயிருப்பதே இதற்கும்காரணமாயிருக்கிறதென்று லோக-வேத-ஸம்ப்ரதாயங்களைக் கொண்டு நிரூபிக்கப் போகிறாராய் ச்லோகத்தில் ஸங்க்ரஹிக்கிறார் **स्वतन्त्रेति.** **श्रियः**—ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு **कान्तः**—ப்ரியனாய் **देवः**—ஜகத்வ்யாபாரலீலனான **सः**—அந்த நாராயணன் **स्वतन्त्रस्वामित्वात्**—ஒருவருக்கு அதீநமாகாமல் சேதநாசேதந ஸ்வாமியாயிருப்பதால் **चिदचितौ**—சேதநாசேதநங்களை **स्वबहुमतिपात्रेषु**—தன்னுடைய வெகுமதிக்குப் பாத்ரமான சில பாகவதர்கள்விஷயத்தில் **नियतं**—அவச்யமாகவே **विनियुङ्क्ते खलु**—சேஷமாக்குகிறான் அல்லவா. **ततः**—ஆகையினால் **यथा-**

இங்கு भगवत्कैङ्कर्यத்தை भागवतकैङ्कर्यपर्यन्तமாகச் சொல்லுகைக்கு அடி என் என்னில், "परगतातिशयाधानेच्छयोपादेयत्वमेव यस्य स्वरूपम्, स शेषः परः शेषी" என்று वेदार्थसंग्रहத்திலே அருளிச்செய்தபடியே सर्वेश्वरனைப்பற்ற, शेषभूतனை இவன் अतिशयाधानம் பண்ணப் प्राप्तன். அவ்வதிசயந்தான் வஸ்துசக்தியை अनुरोधि

---

लोकाम्नायम्— உலகிலுள்ள ராஜ ந்யாயத்தையும் வேதத்தையும் அநுஸரித்து यतिपतिमुखैः—சேஷத்வ லக்ஷணத்தை நிஷ்கர்ஷித்து அநுஷ்டாநத்துக்குக் கொண்டு வந்த ஸ்ரீபாஷ்யகாரர் முதலான பூர்வர்களாலே आहितधियाम्— உண்டுபண்ணப்பட்ட புத்தியை யுடைய नः— நமக்கு कैङ्कर्य-கைங்கர்யமும் तदभिमतपर्यन्तं-பகவானுக்கு இஷ்டமான பாகவதர்கள் வரையிலாக अभवत्— ஸித்தித்ததாம், சாஸ்த்ர மூலமாக பாகவத சேஷத்வம் வந்தபோது பாகவதகைங்கர்யமும் தானே ஸித்திக்கும். அது மிகச் சிறந்ததே என்பதற்கு லோகவேதங்களும் ப்ரமாணமாகின்றனவென்றபடி. சேதநர்களுக்கும் அசேதநங்களுக்கும் பொதுவான சேஷத்வம் பாஷ்யகாரர் அருளிச்செய்தது परेत्यादि. 'शेषः परार्थत्वात्' என்று ஜைமிநி ஸூத்ரமாம். அங்கே பரார்த்தத்வமாவது பரஉத்தேச்யகத்வம், வேறொன்றுக்காக விருக்கை, இதற்கு விவரணமாகும் இந்த வாக்யம். ஸ்வர்கத்திற்கு யாகம் சேஷம், யாகத்திற்கு ப்ரயாஜாதி தர்மங்கள் சேஷம். ஈச்வரனுக்கு சேதநாசேதநம் சேஷம் என்றவிடங்கள் முழுமையிலும் இதற்கு ஸமந்வயம் காண்க. வஸ்து எதற்கு சேஷமாகிறதோ அதை சேஷி என்கிறது. இங்கே பரசப்தத்தாலே சேஷியைக் கொள்ளவேண்டும். ஸ்வர்கத்தைக் கொண்டால் ஸ்வர்கத்தில் யஜமாநனுக்குத் தக்கவாறு அதிசயத்தை யுண்டு பண்ணுவதற்காக உபாதேயத்வம்= அநுஷ்டிக்கப்படுகை யாகத்துக்கு ஸ்வரூபமாகையால் யாகம் சேஷமாகிறது. இந்த இச்சை யஜமானனிடமுள்ளது. யாகத்தைப் பரசப்தத்தாலே கொண்டால் அதற்கு அதிசயத்தை=விசேஷ சக்தியை உண்டுபண்ண வேண்டுமென்கிற இச்சையினால் ப்ரயாஜாதிகளை அநுஷ்டிக்கிறபடியால் அவை யாகத்திற்கு சேஷமாம். ஈச்வரன், தான் அதிசயம்பெறவேண்டுமென்கிற இச்சையினால் சேதநாசேதநங்களை ஸ்வீகரித்துள்ளான். சேதநாசேதநங்கள் வ்யாபரிப்பது அவன் இச்சையால். இந்த தத்துவம் தெரிந்தே சேஷனயிருக்கக் கூடிய ஜீவன் பரமாத்மாவுக்காகவென்றே எல்லாம் செய்யும்போது இந்த இச்சை அந்த ஜீவனுக்கும் உண்டென்னலாம். கடைசியாக 'परमप्रयोजनभूत परगत अतिशयाधायकत्वं शेषत्वम्' என்று ச்ருதப்ராகாசிகாதிகளில் ஏற்பட்ட நிஷ்கர்ஷமாம். இதனால் சேஷிக்கு அதிசயத்தை யுண்டு பண்ணுவது சேஷம் என்று இவ்வளவே தெரிவதால் சரீரம் ஆத்மாவுக்கு சேஷமாயிருப்பதுபோல் எல்லா சேதநர்களும் ஈச்வரனுக்கு சரீரமாயிருப்பதால் வரும் அதிசயமே போதுமே; புத்திபூர்வகமாக அவன் ப்ரீதிக்காக என்கிற எண்ணத்துடன் ஜீவன் நடந்து கொண்டு சேஷமாகவேண்டுமென்பது என் என்பதற்குப் பரிஹாரமாக அவ்வதிசயந்தான் இத்யாதி. இதிலிருந்தே

த்து வரவேணும். ஆனால் ஜீவனுக்குப் பரனைப் பற்ற ஶக்யமான அதிசயம் எது என்று பார்த்தவிடத்தில் ஶரீரத்வாதிமுகத்தாலே அதிஶயாதானம் பண்ணுகை இவனுக்கும் அசித்துக்கும் பொதுவாயிருந்தது. இவன் சேஷிக்கு விசேஷித்துப் பண்ணும் அதிசயம் சைதந்யமுகத்தாலேயாயிருக்கும்.

அதில் இவன் ஶாஸ்த்ரவிருத்தமாக வர்திக்கும் போது ஶாஸிதாவாய் தண்டதரனான ஈச்வரனுக்கு லீலாரஸ மாத்ரத்தை யுண்டாக்கி அம்முகத்தாலே அதிஶயாதாயகனும்;

ஶாஸ்த்ராநுகுணமாக வர்திக்கும்போது, "ஶுபே த்வஸௌ துஷ்யதி துஷ்க்ருதே து ந துஷ்யதேऽஸௌ பரம: ஶரீரீ" என்கிறபடியே ஈச்வரனுக்கு ஸந்தோஷத்தையுண்டாக்கி அவனுடையஔதார்யாதிகுணங்கள் குமரிராதபடி அம்முகத்தாலே "உதாரா: ஸர்வ ஏவைதே"

---

மேலே ஈச்வராபிப்ராயத்தை ஆராய்ந்து செய்யவேண்டுமென்று தெரிவிக்கப் போவதற்கு பீடிகை. அசேதந வஸ்துவுக்கு உள்ள வ்யாபாரமெல்லாம் புத்தி பூர்வகமல்ல. ஆகையால் அங்கு சேஷத்வம் அவ்வளவாலேயே. ஜீவ வ்யாபாரங்கள் அநேகமாக புத்தி பூர்வகமாகவே யிருப்பதால் அந்த வ்யாபாரங்களும் சேஷத்வத்துக்கு உபயோகியாக வேண்டும். அந்த புத்தியில், அதிசயம் செய்யவேண்டும் என்கிற அம்சம் எல்லாவிடத்திலும் சேராது. நாஸ்திகன் செய்யும்போது, இது ஈச்வரனுக்காக என்று செய்வதில்லையே. ஆஸ்திகர்கள் செய்யும் நிஷித்த வ்யாபாரங்களும் ஈச்வரனுக்காக. வாகா. அநேகமாக லௌகிக வ்யாபாரங்களை ஈச்வரனுக்காக எவரும் நினைப்பதுமில்லை. தேவதாந்தரங்களை உத்தேசித்துச் செய்யும்போதும் ஈச்வரனுக்காக என்று உத்தேசிப்பதில்லை. ஆனாலும் இ வ்யாபாரங்களெல்லாம் ஈச்வரனால் அவனவன்கர்மாவுக்கு அநுகுணமாகத் தன்னால்நேரிலோ தேவதாந்தராதி மூலமாகவோ செய்விக்கப்படுகிறபடியால் அதனால் தனக்கு லீலாரஸத்தை அவன் விரும்பியிருக்கிறபடியால் நாஸ்திகாதிகளும் தங்கள் வ்யாபாரத்தாலே ஈச்வர சேஷர்களாகக் குறையில்லை, இதையருளிச் செய்கிறார் அதில் இத்யாதியால். ஶுபே து. இதி. பா. சா. 199-25. சுபமான கார்யத்தில் அவன் ஸந்தோஷப்படுகிறான். துஷ்க்ருதே து— பாபம் செய்தால் பரமசரீரியாயிருப்பதாலே பாபப்ரவர்த்தகனான அவன் லீலாரஸம் அநுபவிப்பதானாலும் ப்ரீதி யடைகிறதில்லை; நிக்ரஹமே செய்வான். ஸம்ஸாரிகளெல்லாருக்கும் தம் வ்யாபாரத்தாலே ஈச்வரனுக்கு லீலாரஸத்தை யுண்டாக்குவது ஸமாநம். சாஸ்த்ரீயமான கார்யங்கள் செய்யும்போது ஸந்தோஷத்தையும் உண்டுபண்ணுவது சிறப்பாகும், ஸந்தோஷத்துக்குக் காரணம் எந்த தேவதையை யாராதித்தாலும் இவனே ஃபலப்ரதனாகையாலே இவனுடைய ஔதார்ய வாத்ஸல்யாதி குணங்கள் பயன்படுவதேயாம். குமரிராதபடி-குமரிருத்தல்–வீணாகை. குமர் = வீண். ஈடு2.8.1. இதற்கு அதிஶயாதாயகனுமென்றதில் அந்வயம். அதில் ஈச்வரனையே உத்தேசித்து வேறு பலனுக்காகச் செய்தால் 'உதாரா: ஸர்வ ஏவைதே' என்று கொண்டாடுதலும் செய்வான். அப்போது அதிகஸந்தோஷமாம். அம்முகத்தாலே

என்று அவன்தானே கொண்டாடும்படி अतिशयाधायकனும்.

அப்படியே நித்யரும் முக்தரும் ஈச்வராபிப்ராயத்தை ஸாக்ஷாத்கரித்துப் பண்ணுகிற கைங்கர்யங்களாலே प्रहर्षयिष्यामि सनाथजीवितः என்கிறபடியே भोग விசேஷத்தை उत्पादिத்து அம்முகத்தாலே अतिशयाधायकராவர்கள். இப் ப்ரகாரம் शास्त्रमुखத்தாலே ईश्वराभिप्रायத்தை அறிந்து கைங்கர்யம் பண்ணுகிற कृतकृत्यனுக்கும் ஸமாநம். இவற்றில் शास्त्रविरुद्धங்களாலே ஈச்வரனுக்கு लीलारसमात्रத்தை உண்டாக்கும் போது தனக்கு अनर्थपर्यवसितமாயிருக்கும். बद्धदशैயில் शास्त्रத்தாலும் मुक्तदशैயில் प्रत्यक्षத்தாலும் ईश्वराभि-प्रायத்தைக் கண்டு तदनुरूपமாக वर्तिக்கும்போது ஈச்வரனுடைய लीलादिपुरुषार्थத்துடனே आनुषङ्गिकமாகத் தனக்கும் स्वाभिमतपुरुषार्थம் உண்டாம்.

ஆனபின்பு चेतनனை இவன் बुद्धिपूर्वकமாக ஒரு प्रवृत्ति பண்ணும்போது தன் पुरुषार्थமும் आनुषङ्गिकமாகவாகிலும் புகுர(க)வேண்டியதால் அது வரும்போது ईश्वराभिप्राय விசேஷ மடியாக வரவேண்டுகையால் அதுக்காக ईश्वराभिप्रायத்தை ஆராய்ந்தவிடத்தில் भागवतकैङ्कर्यம் அவனுக்கு ஸர்வத்திலும் அபிமதமாயிருந்தது.

இவ்வர்த்தத்தில் "आराधनानां सर्वेषां विष्णोराराधनं परम् । तस्मात् परतरं प्रोक्तं

---

இதி. ஸந்தோஷத்தை யுண்டுபண்ணுவதே अतिशयाधानமென்றபடி. मुमुक्षुவான வைதிகர்கள்விஷயம் சொல்லியாயிற்று. மற்றவர்விஷயம் சொல்லுகிறார் அப்படியே இதி ப்ரக்ருதிமண்டலத்தில் லீலாரஸம் பரமபதத்தில் செய்வது स्वाभाविकமாய் சேஷத்வ பரதந்த்ரத்வஜ்ஞானபூர்த்திமூலகமாவதால் भोगரஸம். இங்கே சிலர்விஷயத்திலே ஹர்ஷம். அங்கே प्रहर्षयिष्यामि என்ற ப்ரஹர்ஷம். முமுக்ஷுக்களாயிருப்பவர்களின் கார்யத்தில் லீலாரஸம் கலந்த भोगரஸம். கர்மமூலமான ப்ராக்ருதசரீரஜாதிக்கிணங்கச் செய்கிறபடியால் லீலாரஸக்கலப்பு. அவர்களிலே உபாயமாக फलமாகச் செய்பவர்கள் என்கிற வாசிக்கிணங்க ப்ரீதி தாரதம்யம் கண்டுகொள்வது.

இப்படி ரஸ–ப்ரீதி விசாரமுகத்தாலே சேஷி உகந்ததைச் செய்வது சேஷலக்ஷணமாகையாலே நாஸ்திக்யத்தை விட்டுச் செய்யவேண்டுமென்று ஏற்பட்டது. இப்படி செய்யாவிடில் அநர்த்தமும் உண்டு என்கிறார் இவற்றில் இதி. கீழ்ச்சொன்ன கார்ய வகைகளில் என்றபடி. நாஸ்திக்யமில்லாதாருக்குப் புருஷார்த்தமுண்டென்றார்; நித்ய முக்தாதிகள் ஈச்வர ப்ரயோஜநத்தையே உத்தேசிப்பதால் தமக்குப் புருஷார்த்தமே வேண்டமாட்டார்களே என்ன, வேண்டாமற்போனாலும் ஆநுஷங்கிகமாகத் தானாக வரும் என்கிறார் ஆநுஷங்கிகமாக இதி. தனக்கு ஆநுஷங்கிகமாகப் புருஷார்த்தம் வரும் கார்யமெல்லாம் ஈச்வரனுக்கு அதிக ப்ரீதிக்குக் காரணமாகையாலே அவற்றை யறிந்து செய்யவேண்டுமென்கிறார் ஆனபின்பு இதி. எந்தக் கர்மாவில் ஈச்வரனுக்கு அதிக ப்ரீதியுண்டு என்பதை யறிய நமக்கு ஈச்வராபிப்ராயத்தை யறிவிப்பது சாஸ்த்ரமே. आराधनानाम्—இதி. பாத்மோத்தரம் 29-81.

तदीयाराधनं परम् । "मम मद्भक्तभक्तेषु प्रीतिरभ्यधिका भवेत् । तस्मान्मद्भक्तभक्ताश्च पूजनीया विशेषतः ॥ "मद्भक्तजनवात्सल्यं पूजायां चानुमोदनम् । मत्कथाश्रवणे भक्तिः स्वरनेत्राङ्गविक्रिया ॥ स्वयमाराधने यत्नो ममार्थे डम्भवर्जनम् । ममा-

---

सर्वेषामाराधनानाम्—எல்லா ஆராதநங்களுக்குள் விஷ்ணுவின் ஆராதநம் சிறந்தது तस्मात्—அந்த விஷ்ணுவின் ஆராதநத்தைக்காட்டிலும் परं—உயர்ந்ததாய் तदीयाराधनं—வைஷ்ணவர்கள்விஷயமான ஆராதநமானது परतरं प्रोक्तम्—எல்லா ஆராதநங்களினும் மிக்க உயர்ந்தது. இங்கே, तदीयाराधनं परं—ததீயாராதநம் மட்டும், तस्मात् परतरं—விஷ்ணு ஆராதநத்தைக்காட்டிலும் மிக உயர்ந்ததென்றால், விஷ்ணுவாராதநத்துக்கும் வைஷ்ணவாராதநத்துக்கும் நடுவில் பரமாக ஓர் ஆராதநமிருப்பதாகத் தோன்றும். அது இல்லையாகையால் அவ்வாறு பொருள் கூறவில்லை. सर्वेषां माराधनानां என்றவிடத்தில் வைஷ்ணவர்களுக்கான ஆராதநத்தையும் சேர்த்தால் மேலே விஷ்ணுவாராதநம் பரம் என்பது சேராது. அதனால் அதைவிட்டு விஷ்ணு ஆராதநம் மற்றும் பல கீழ்ப்பட்ட ஆராதநங்கள் இவற்றுக்குள் என்ற பொருள் கூறவேண்டும். இப்போது பரதரம் என்றவிடத்தில் ஸர்வாராதநத்தைக்காட்டிலும் மிகச் சிறந்ததே யென்றால் 'ஸர்வாராதந' பதத்தாலே விஷ்ணுவாராதநத்தை எடுத்துக் கொள்ளலாகாது. அதனால் இதற்கிணங்க முதலிலேயே माराधनानां सर्वेषां என்று விஷ்ணுவாராதநத்துக்குக் கீழ்ப்பட்ட ஆராதநங்களை மட்டும் க்ரஹிப்பது உசிதமாகலாம். அப்போது நிர்த்தாரண ஷஷ்டியைக் கொண்டு அவற்றிற்குள் என்றபொருள் தகாதாகையால் அதை परं என்பதற்கு अवधिसम र्पकமாகக்கொண்டு योगिनामपि सर्वेषां என்றவிடத்திற் போல விஷ்ணுவாராதநமானது எல்லா ஆராதநங்களைக்காட்டிலும் சிறந்தது. அவற்றைக்காட்டிலும் மிகச் சிறந்தது ததீயாராதநம் என்ற பொருளாகும். मम இதி. பா. ஆச்வ. 116. 23. என்னுடைய பக்தர்களிடத்தில் யார் பக்தரோ அவர்களிடத்தில் என் பக்தரைவிட எனக்கு அதிக ப்ரீதி. அதனால் என் பக்தர்களிடத்தில் பக்தர்கள் என்னையும் என் பக்தர்களையும் பூஜிப்பதைக்காட்டிலும் அதிக பூஜைக்குப் பாத்ரமாகக் கூடியவர்கள். मद्भक्तेति गारुडपुराणम् 219—6. இதில் எட்டுவிதமான பக்தியுள்ளவர்களைக் கொண்டாடுகிறது. அதில் பக்தர்களிடத்தில் அன்பை முதலாகக் கொண்டிருக்கிறது. ச்லோகார்த்தமாவது—என் பக்தர்களிடத்தில் வாத்ஸல்யமும், தோஷத்தை அநாதரிக்குமளவான ஸ்நேஹமும். எனக்கும் அவர்களுக்கும் செய்யும் பூஜையைப் பாராட்டலும், என்னுடைய கதைகளைக் கேட்பதில் ப்ரீதியும், स्वर-नेत्र-अङ्गविक्रिया, குரல் கண் உடல் இவற்றில் (விகாரமும். அதாவது முறையே தழதழைத்த ஸ்வரமும், கண்ணீர்ப்பெருக்கும், மயிர்ச்சிலிர்ப்பும்.) தானும் என்னை யாராதிக்க ப்ரயத்நப்படுவதும், ममार्थे—எனக்காக உத்தேசிப்பதோடு டம்பம், க்யாதி, லாபம் முதலானவற்றையும் விடுகையும், எப்போதும் என்னை

नुस्मरणं नित्यं यश्च मां नोपजीवति ॥ भक्तिरष्टविधा ह्येषा यस्मिन् म्लेच्छेऽपि वर्तते । स विप्रेन्द्रो मुनिः श्रीमान् स यतिः स च पण्डितः ॥ तस्मै देयं ततो ग्राह्यं स च पूज्यो यथा ह्यहम्॥”

“अनन्यदेवताभक्ता ये मद्भक्तजनप्रियाः। मामेव शरणं प्राप्तास्ते मद्भक्ताः प्रकीर्तिताः॥”

“तस्य यज्ञवराहस्य विष्णोरमिततेजसः । प्रणामं येऽपि कुर्वन्ति तेषामपि नमोनमः॥”

“तदाश्रयस्याऽऽश्रयणात् तस्य तस्य च तस्य च। संसेवनान्नरा लोके पूयन्ते सर्वपातकैः॥” इत्यादिप्रमाणங்களை ஆராய்ந்தால் ராஜவுக்கு राजकुमारोपलालनம் போலே भागवत-कैङ्कर्यம் भगवाனுக்கு अभिमतமாயிருக்கையால் शेषभूतனான இவன் செய்யும் किञ्चित्कारங்களில் भागवतकैङ्कर्यம் प्रधानமாயிற்று.

இவ்விடத்தில் तत्त्ववित्துக்குப் प्रमाणसरणिயைப் பார்த்தால் “ये यजन्ति

---

நினைப்பதையும், मां नोपजीवति—என்னை ஒன்றும் யாசிப்பதில்லை इति यत् என்பது யாதொன்றோ இதுவுமான எட்டுவிதமான பக்தியானது ம்லேச்சனுயி ருப்பினும் எவனிடத்தில் இருக்கிறதோ அவன்—ப்ராஹ்மணோத்தமன்; மநந சீலன், ஸம்பத்துள்ளவன், ஸந்யாஸீ, பண்டிதன் என்று எல்லாருமாகக் கொண் டாடப்படுவான். அவனுக்கு தாநமும் செய்யலாம்; அவனிடமும் பெறலாம். என்னைப்போலே அவனும் பூஜிக்கத் தக்கவனுகிறுனென்றது. இந்த தாந ப்ரதி க்ரஹங்கள் கந்யாதாநாதி விஷயமன்றென்பது ஸர்வஸம்மதம். இந்த ச்லோகத்தால் எந்த ஜாதியானுலும் விஷ்ணுபக்தன் பூஜ்யனுவான் என்று அறிவித்தார். விஷ்ணு பக்த லக்ஷணத்தில் மூன்று அம்சங்கள் அடங்கி யிருக்கின்றன வென்பதை யறிவிக்கும் ச்லோகம் மேலே. अनन्येति வேறு தேவதையினிடத்தில் பக்தியில்லாமையும், எனது பக்தர்களிடத்தில் பக்தி யுடன் இருக்கையும், என்னையே சரணமடைந்திருக்கையும் யாருக்கோ அவர் என் பக்தர் என்றுன் பகவான். பா. ஆச்வ 104–91. பொதுவாக பக்தன் பகவத் பக்தர்களுக்குச் செய்யவேண்டியதைச் சொல்லுகிறுர் तस्येति. பா சாந்தி 136–130 அளவற்ற தேஜஸ்ஸை உடையவனுய் யஜ்ஞவராஹனுமா யவதரித்த எம்பெருமானுக்கு ப்ரணாமம் எவர் செய்கின்றனரோ, அவர்களுக்கும் அநேக ப்ரணாமமென்றது. இதனுல் பகவத்ப்ரணாமம் செய்பவ ரெல்லோரும் பகவத்பக்தர்களென்றதாயிற்று. பக்தர்களை யாச்ரயிப்பது பாபங்களையும் போக்குமென்கிறுர் तदिति. எம்பெருமானை யாச்ரயித்தவனை யாச்ரயிப்பதாலும், மேன்மேல் அவனை அவனை அவனை ஆச்ரயிப்பதாலும் ஸகலபாதகங்களிலிருந்தும் உலகில் மனிதர் சுத்தி பெறுவர். இப்படி உபதேசி க்கும் ப்ரமாணங்களிலிருந்து பகவதபிப்ராயம் தெளிவதால் அவ்வபிப்ராய த்திற்கிணங்க பாகவத கைங்கர்யம் செய்ய வேண்டுமென்றதாயிற்று. இதில் லோக த்ருஷ்டாந்தம் ராஜாவுக்கு இத்யாதி. ராஜகுமார னைக் கொண்டாடுவதுர ாஜாவுக்கு மிகவும் இஷ்டமாயிருப்பது போல் இது பகவானுக்கு இஷ்டமாகுமென்றதாயிற்று. ராஜத்ருஷ்டாந்தத்திற்கு இல்லாத ஒருவிசேஷம் அருளிச்செய்கிறுர் இவ்விடத்தில். ராஜகுமார னுக்கும் ராஜாவுக்கும் புத்ரன் பிதா என்கிற ஸம்பந்த மொன்றே

पितॄन् देवान्" என்கிறபடியே ईश्वरन् भागवतशेषனைக் கொண்டும் ஆராத்யனும். स च मम प्रियः என்கிறபடியே परमैकान्तिவிஷயத்தில் प्रीतिपरतन्त्रனான प्रकारिயினுடைய நினைவைப் பார்த்தால் "ज्ञानी त्वात्मैव मे मतम्" என்கிறபடியே भागवतकैङ्कर्यத்தை भगवान् தன் அந்தர்யாமிபக்கலிலே பண்ணினதாக உகக்கும்.

---

உள்ளது ; சரீராத்மபாவமில்லை, இதனால் ராஜா ஸந்தோஷித்தாலும் ராஜாவுக்குச் செய்ததாகவாகாது. எம்பெருமான் பக்தர்களுக்கு அந்தர்யாமியாயிருப்பதால் இவர்களுக்குச் செய்யும் ஆராதநம் எம்பெருமானுடைய ஆராதநமாகும். பகவத்பக்தர் என்கிற ஆகாரத்தை விட்டுப் பொதுவாக பித்ருக்கள் தேவதைகள் அந்தணர்கள் அக்நி என்றுற் போன்றவர்க்குச் செய்யும் ஆராதநமும் அந்தந்த ஜீவனின் அந்தர்யாமிக்குச் செய்ததாகுமென்று ப்ரமாணமிருப்பதால் பக்தர்களுக்குச் செய்வதும் அவ்வாறுகும். ஆனால் பரமைகாந்தீ பித்ராதிகளைத் தான் ஆராதிக்கவில்லையென்றும் அந்தர்யாமியையே ஆராதிப்பதாகவும் நினைப்பது போல், பக்தர்களை யாராதிக்காமல் பகவானைமட்டும் ஆராதிப்பதாக நினைக்கலாகாது. பக்தர்களுக்கென்றே செய்யவேண்டும். உண்மையில் அது பகவானுக்குமாகிறது. பக்தர்களுக்கென்று இவன் நினைக்கவேண்டுமென்பதற்கு ஒரு யுக்தி யருளிச்செய்கிறுர் स चेति. प्रियो हि ज्ञानिनोऽत्यर्थं अहं स च मम प्रियः' (கீதை 7.) ஜ்ஞாநிக்கு இவ்வளவென்று சொல்லமாட்டாதபடி நான் இஷ்டனுகிறேன் ; அதுபோல் அவனும் எனக்கு அவ்வாறு இஷ்டனுகிறுன். நான் அந்தர்யாமியாயிருப்பதால் அவனுக்கு நான் அவ்வளவு இஷ்டமாகிறேன்; அவன் எப்படி எனக்கிஷ்டமாகிறுனென்று வினவவேண்டா; சாஸ்த்ரம் என்னையே அந்தர்யாமியாகச் சொன்னுலும் ஜ்ஞாநியை எனக்கு அந்தர்யாமியாக நான் அபிமானிக்கிறேனென்றுன். இப்படி தன் கொள்கையை யருளிச்செய்வதற்காக 'मे मतं' என்றது. சரீரத்துக்குச் செய்தது ஆத்மாவுக்குச் சேருமென்கிற கணக்கிலே (இப்போது பகவானுடைய எண்ணப்படி அவனுக்குச் செய்தது பக்தர்களுக்குமாகுமென்றெண்ணுமல்) பகவானே அவர்களுக்காகவென்ற போது நாம் பக்தர்களுக்காக என்று உத்தேசிக்காமல் பகவானுக்கு என்று செய்வது தகாதென்றதாம். இப்படி பாகவத ப்ராதாந்யம் இருக்கும் நிலை யென்க. தன் அந்தர்யாமி பக்கலிலே இதி. உண்மையில் பகவானுக்கு அந்தர்யாமி யாரு மில்லையாகிலும், ப்ரீதியினுல் பக்தரைத் தன் அந்தரயாமியாக வைத்துச் சொன்னதாம்,

ராஜாவுக்கு இஷ்டமென்று ராஜகுமாரனுக்கோ மற்றும் சிலருக்கோ சில கார்யம் செய்பவன், அதனுல் ராஜாவுக்குப் போல் அவர்களுக்குச் சேஷனுகமாட்டானே. ஆக. அக் கார்யங்கள் கைங்கர்யமாகாவே ; அதுபோல் பாகவதர்களுக்கு ப்ரீதி யென்றதாலேயே கைங்கர்யமாகுமோ என்ன, கீழே எடுத்த வசநங்களில் ஆராதநம், பூஜை, ப்ரணமம் முதலானவை பக்த விஷயத்தில் ஸ்பஷ்டமாயிருப்பதால் பாகவத சேஷத்வமே இவனுக்கு

இப்படி சேஷிக்கு अभिमतமென்கிறவளவே அன்று. சேஷத்வமாகிற सम्बन्धந்தான் सद्वारकமாகவும் प्राप्तம். அது எங்ஙனே யென்னில்—

**नित्यं श्रिया समेतस्य भक्तैरात्मवतः सदा । सह सद्वारकं च स्याच्छेषित्वं परमात्मनः ॥**

---

உண்டு: அதனுல் எல்லாம் கைங்கர்யமாகலாமென்ற கருத்துடன் பாகவத சேஷத்வத்தை ஸ்த்தாபிக்கிருர் இப்படி இத்யாதியால், பாகவதசேஷத்வம் ஸித்தித்த பிறகு பகவானுக்கு இஷ்டமா, இல்லையா என்ற விசாரத்தை விட்டு சேஷிக்கு சேஷன் உகப்பாக நடந்துகொள்ளவேண்டுமென்றே பாகவத கைங்கர்யத்தில் இழிவது என்றதாயிற்று. सद्वारकமாக. பகவானுக்கு நேராக சேஷன் என்பது மட்டுமின்றி, பகவானுக்கு பாகவதர் வாயிலாகவும் சேஷன் பகவத் சேஷசேஷன் என்றபோது கைங்கர்யமும், பக்தர் வாயிலாக வாம். இதனை உபபாதிக்கிருர் அது எங்ஙனே இதி. இதன் உபபாதநம் மேலே ஸ்வதந்த்ரனுய் இத்யாதி வாக்யத்தாலே யாம் நடுவில்நித்யம் என்கிற காரிகையானது சேஷத்வம் ஸத்வாரகமுண்டென் பதை மேல் உபபாதந்ததிற்காக ஸ்பஷ்டமாக்க ப்ரதிஜ்ஞா ரூபமாய். அந்த ஸ்த்வாரகசேஷித்வமும் பிராட்டிக்கும் பெருமானுக்குமென்பதற்காகவாம்.

இக் காரிகையின் பொருளாவது—परमात्मनः—परो मा अस्येति परमः—தனக்கு மேல் ஒருவனில்லாத ஸர்வசேஷியான பகவானுக்கு நம்மைக் குறித்து சேஷித்வமானது श्रिया समेतस्य—பெரியபிராட்டியோடு சேர்ந்தவனுக்கு, सह—அவளோடு கூடவே நேராகவாம். இருவருக்கும் சேர்ந்து ஒரே சேஷித்வம் எப்போதும் உளது. भक्तैः—பக்தர்களாலே எப்போதும் आत्मवतः—தனக்குஅந்தர்யாமியையுடையவனை அவனுக்குசேஷித்வமானது श्रिया समेतस्य அவளோடுசேர்ந்தே सद्वारकं च स्यात्-பக்தர்கள் வாயிலாகவுமாம், ज्ञानी तु आत्मैव मे मतम् என்று தனக்கு அந்தராத்மாவாக பக்தர்களைச் சொன்னனே; அதன் கருத்து என்னவெனில்—(பரமாத்மாவை யாராதித்தால் அவனுல் ஆத்மாவாக நினைக்கப்பட்ட பாகவதர்களுக்கும் ஆராதனம் ஸித்தித்துவிடுமென்பதல்ல.) சரீரத்தைக்காட்டிலும் ஆத்மா வேறு என்று அறிந்தவன் சரீரத்தை விட்டு ஆத்மாவின் உவப்பை உத்தேசிப்பது போல் பக்தர்களை நான் ஆத்மாவாக, என்னை அவர்களுக்கு சரீரமாக நினைத்திருப்பதால் சரீரமான என்னைவிட அவர்களின் உவப்புக்காக நடந்து கொள்வதே எல்லோருக்கும் தகுமென்பதாம். ஆகையால் பாகவதசேஷத்வமும் பாகவத கைங்கர்யமும் முக்யமாகிறது. இப்படி விவேகிகள் பாகவதரையே உத்தேசித்துக் கைங்கர்யம் செய்தாலும் சாஸ்த்ரப்படி பகவானே அவர்களுக்கு அந்தர்யாமியாயிருப்பதால் சரீரமான அவர்களுடைய ஆராதநம் அவனுடைய ஆராதநத்திலே முடியும். அதனுல் ஸத்வாரகமாக வாயிற்றென்க. பகவானுடைய அநந்யார்ஹ சேஷத்வமானது मकारस्तु तयोर्दासः என்றபடி பிராட்டியைக் குறித்துமிருப்பதால் அவளுடைய சேஷித்வத்தை நிவ்ருத்தி செய்யாது: அதுபோல் பக்தர்களுக்குள்ள ஔபாதிக சேஷித்வத்தையும்

ஸ்வதந்த்ரனாய் ஸ்வச்சந்தலீலனான ராஜா தான் பூண்ட ஆபரணத்தையும் இட்ட மாலையையும் அடியார்களுடையவும் ஆனைகுதிரைகளுடையவும் கழுத்திலே இடுமாப்போலே "அடியார்க்கென்னை யாட்படுத்த விமலன்" என்றும், "नारदोऽहमनुप्राप्तस्त्वद्दर्शनकुतूहलात् । प्रभवो भगवद्भक्ता मादृशां सततं द्विज ॥" என்றும்,

---

நிவர்த்திக்காதென்று பிராட்டியின் ப்ரஸ்தாவத்தினால் அறிவித்ததாம். இதில் பிராட்டியையும் பெருமானையும் ஸமமாகச் சேர்த்து உத்தேசிப்போம். பக்தரை அப்படி ஸமமாக்குவதில்லை யென்றும் அறிவித்ததாம். காரிகையில் பதங்களின் க்ரமத்திற்கிணங்க கீழ்க்கூறியபடியே சப்தார்த்தமாகும் ஆனாலும், இதன் ஸாரமான கருத்தாவது—தேவர்கள் பித்ருக்களுள்பட எல்லோரும் அவனுக்கு சேஷமாயிருந்தாலும் பக்தர்களைத் தனக்கு அந்தராத்மாவாக அவன் கொண்டாடியிருப்பதால் அவர்கள் நமக்கு ஆராத்யராகையால் எம்பெருமானுக்கு எப்போதும் பிராட்டியோடு சேர்த்தி காரணமாக அவளோடு கூடவே அவனுக்குள்ள சேஷித்வமானது மற்ற சேதனரை விட்டு பக்தர்களைபட்டும் கொண்டு ஸத்வாரகமுமாகும். प्रियाय मम-विष्णोश्च என்றதற்கு இணங்க இதர கார்யங்களாற் போல் உத்தேசிக்காமற் போனாலும் அவளுக்குப் போல் அவனுக்கும் உவப்புண்டென்றதாம். இதற்காகவே ஸ்ரீப்ரஸ்தாவமிங்கு.

தனக்கு சேஷமான வஸ்துவைப் பிறருக்கு சேஷமாக்குவதை த்ருஷ்டாந்தத்துடன் அருளிச்செய்கிறார் ஸ்வதந்த்ரனாய் இதி. ராஜா தன் ஆபரணாதிகளை ஆனை குதிரைகளுக்கு சேஷமாக்குவது ஒருவித லீலாரஸானுபவத்திற்காக வாம். இதை யறிவிக்க ஸ்வச்சந்தலீலனான என்றது. கழுத்திலே இடுமா போலே என்பதற்கு ஏவிநியோகார்ஹதையாலே என்றதோடு அந்வயம். ராஜா ஆனையின் கழுத்தில் இடுவது போல் பரமாத்மா பக்தர்கள் விஷயத்திலே நம்மை இடுவதற்கு நமக்கு அர்ஹதை யிருப்பதாலே என்றபடி. லோக த்ருஷ்டாந்தம் போல் ஸம்ப்ரதாய ப்ரமாணமும் உண்டென்று அறிவிக்கிறார் அடியார்க்கு இதி. அமலன் ஆதிபிரான் அடியார்க்கு என்னை ஆட்படுத்த விமலன் = अखिलहेय प्रत्यनीकனாய் जगत्कारणனாய் உபகாரகனானவன் என்னைத் தன்னடியார்களுக்கு ஆட்படுத்தியவனாய் அதனால் விமலனானான். தனது அடிமைகளுக்குப் பிறரையும் ஸ்வாமியாக்குவதோ என்ற அஸூயாதி தோஷமற்றவனானவனென்றபடி. திருப்பாணாழ்வார் லோகஸாரங்கமா முனிவரால் தோளில் கோயிலுக்குக் கொண்டு வரப்பட்ட போது தாம் அவரது இஷ்டப்படி நடக்கவேண்டியதாய்விட்டபடியால் அம் முனிவருக்குத் தன்னை யாளாக நினைத்து 'இதைச் செய்தருளினவன் பரமாத்மா' என்கிறார். மேலே வடமொழிப்ரமாணம் नारदेति. இதிஹாஸ ஸமுச்சயம் 31-54. द्विज—அந்தணரே! உம்மை தர்சநம் செய்ய வேண்டுமென்ற ஆவலால் நான் நாரதன் இங்கே வந்துளேன். मादृशां—மஹான்களின் குணங்களில் ஈடுபட்ட என்னைப் போன்றவர்களுககு பாகவதர்கள் எப்போ

“மற்றுமோர் தெய்வமுள தென்றிருப்பாரோடுற்றிலே னுற்றதும் உன்னடியார்க்கடிமை” என்றும் சொல்லுகிறபடியே अत्यन्तपारतन्त्र्यादिகளடியாக भगवदिष्टविनियोगार्हதையாலே भगवच्छेषत्वம், தான் यावदात्मभाविயான கட்டளையிலே भागवतशेषत्वपर्यन्तமாயிற்று. இங்கு भागवतत्वமடியாக स्वरूपप्रयुक्तமாகவும் “गुणैर्दास्यमुपागतः” என்கிற ந்யாயத்தாலே गुणज्ञानமடியாக स्वेच्छैயாலும் வந்த भागवतशेषत्वம், “भगवद्भक्ताः” “मादृशाम्” என்கிற இரண்டு பதத்தாலும்सूचितம்.

---

தும் प्रभवः—ஸ்வாமிகளாவார். மீண்டும் அருளிச்செயல்ப்ரமாணம் மற்றும் இதி. வேறோர் ஆராத்ய தேவதை இருப்பதென்று நினைத்திருப்பவரோடு நான் சேரமாட்டேன்; நான் கொண்டது உன் தாஸர்களுக்கு அடிமையாயிருப்பதே. இம் மூன்று வசநங்களும் பாகவத சேஷத்வத்தை அறிவிப்பதாம். இங்கே வடமொழிப்ரமாணத்தை இடையிற் சொன்னது எதற்காகவெனில்—முதல்வசனத்தில் ஸ்வரூப க்ருதமான பாகவத தாஸ்யம் கருதப்பட்டது. இரண்டாவதில் ஸ்வரூபக்ருதமாயிருப்பதோடு குணக்ருதமாகிறதென்பது கருதப்பெறும், ஸ்வர்க்கத்தில் இருக்கும் நாரதர் பூமியில் இருக்கும் ப்ராஹ்மணனைக் காண வந்தது ஸ்வரூப க்ருத தாஸ்யத்திற்காகவாகாது, குணவச்யராய் காண வந்தாரென்பதே உசிதம். இதே मादृशां என்ற பதத்தாலும் அறிவிக்கப்பெற்றது. இப்படி இருவித தாஸ்யத்தைச் சொல்லிவிட்டு ப்ரணவத்தில் உகாரத்தாலே இதர தாஸ்யம் தகாதென்றது விரோதியாதோ என்ன, விஷயவ்யவஸ்த்தையை யறிவிப்பது மூன்றாவது வசநம். பகவச்சேஷத்வம் என்கிற பதம் ஆயிற்று என்கிற க்ரியைக்குக் கர்த்தாவாகும். தான் என்பது பகவச்சேஷத்வத்தைச் சொல்லுகிறது. यावदात्मभाविயான கட்டளையிலே என்பதாலே, தான் यावदात्मभाविயாய்–அதாவது பிற்காலத்தில் நித்யமாயிருப்பதாய் தன்னைப் போலே यावदात्मभाविயாயிருக்கக் கூடிய என்ற பொருள் கூறப்படும், இதற்கு பாகவத சேஷத்வ என்றதில் அந்வயம். சிஷ்யனுக்கு ஆசார்யசேஷத்வம் பகவச்சேஷத்வம் போல் நித்யமாயுமிருக்குமென்றபடி. ஸ்வரூப ப்ரயுக்தமாக. சேஷத்வம் ஸ்வரூபமாகையாலே அதை ஸ்வரூப பதத்தாலே சொன்னது. गुणैरिति (ரா. கி. 4-12) சிறிய திருவடியினிடம் இளையபெருமாள் சொல்லுவது. तस्याहं अवरो भ्राता गुणैर्दास्यमुपागतः; तस्य—இந்த ராமபிரானின் நோக்குப்படி நான் அவருக்குத் தம்பியாவேன். அவர் என்னைத் தம்பியென்று நினைத்திருக்கிறாரென்றபடி. உண்மையில் गुणैः அவர் குணங்களுக்கு வசப்பட்டு दास्यं—தாஸனா யிருக்கையை ஸ்வீகரித்துள்ளேன் என்று இங்குப் பொருள் கூறுவர். ஸஹஜமான அர்த்தமும் பொருந்தக் கூடியதே அதாவது—இவருக்கு நான் தம்பியே யென்றதாம் अस्य अवर. என்றால் பராவரதத்துவங்களிலே பரமரான ராமனுக்கு எல்லாமே அவரம், இவர் மட்டுமல்லரென்பர். அதனால் अवरो भ्राता என்றது. மூத்தவனென்று நினையாமைக்காக अवरः என்ற விசேஷணம். अनुजः என்னாமே अवरः என்றதால் என்னைவிட वरभ्राता வேறு இருக்கிறார். தான் அவரன் என்று பரதர் வேறு இருப்பதையும் குறித்ததாம். கூடவந்ததற்குக் காரணத்தைச் சொல்

இப் பாகவத சேஷத்வம் க்ரயம் செல்லும்படியைப் "பேசுவாரடியார்களெந்தம்மை விற்கவும் பெறுவர்களே" என்று கல்பஸூத்ரவ்யாக்யாதாக்களான

---

வது தாஸ்யமுபாகத: என்றது. இது ஸ்வரூப ப்ரயுக்தமன்று. ஆசைப்பட்டு நிர்பந்தித்துக் கேட்டுப்பெற்றதென்பதை யறிவிப்பதற்காக ஸூரி: என்றதாம்.

இந்த சேஷத்வத்திற்குப் பெரியாழ்வார் அருளிச்செய்த விசேஷத்தை யருளிச்செய்கிறார் மேலே, 4-4-10. 'காசின் வாய்' என்கிற பாசுரம். ஒரு காசுக்கு (பவுனுக்கு) ஒரு கைந்நெல் விற்கும் காலத்திலும் வஞ்சனை யிராமல் ப்ரதியாக உபகாரத்தை எதிர்பார்க்காமல் கீழ்மக்கள் வரையில் எல்லோருக்கும் அந்நதாநம் செய்து தேசம் பரவிய புகழ் பெற்ற பரமோதாரர்கள் வாழும் திருக்கோட்டியூரில் மன்னியிருக்கும் கேசவா! புருஷோத்தமா! கிளர்ந்த ஜோதியுடையவனே! வாமனனே! என்று பேசுவார்கள் அடியார்கள் = நாமஸங்கீர்தநம் செய்யும் பக்தர்கள் நம்மை விற்பதற்கும் அதிகாரம் பெற்றிருக்கிறார்கள். க்ஷாமகாலத்தில் நெல்லைக்கூட விற்காத மஹான்கள், பாகவதர்கிணங்கி நம்மை விற்குமளவுக்கு நாம் ஸித்தமாயிருக்கிறோமென்றபடி. விற்பதாவது தமக்கடிமையாயிருப்பவர்களை அடிமைக்கு ஆள் அபேக்ஷிக்கும்வேறொருவருக்கு அடிமையாக்கி அதற்காக அவர்களிடமிருந்து த்ரவ்யம் பெறுகை. அதனால் மறுபடி அத்தை மாற்றிக் கொள்ளமுடியாது. விற்கவும் என்ற உம்மையானது விற்காமல் தாநம் செய்வதையும் குறிக்கும். பெரிய திருமலை நம்பிகள் எம்பாரையும் வங்கிபுரத்து நம்பிகளையும் தமக்கு அடிமையாயிருந்தவர்களை எம்பெருமானாருக்கு தாநம் செய்துவிட்டார் என்று ஸாரப்ரகாசிகாதிகளில் வரைந்திருப்பது காண்க. கல்ப்பஸூத்ரேதி. கல்ப்பஸூத்ரத்தில் அடைவாக யாகஹோமாதிகளுக்கு அடியிலிருந்து கடைவரையிலுள்ள அம்சங்களை விடாமல் கூறுவது போல் பெரியாழ்வார் தம் திருமொழியில் க்ருஷ்ணனுடைய அவதாரம் முதல் கடைசி வரையிலான வ்ருத்தாந்தம் அருளிச்செய்தார் என்று ஸாரப்ரகாசிகையில் உள்ளகருத்து. பட்டநாதரான ஆழ்வார் ஸகல வேதமீமாம்ஸாதிகளில் விசேஷஜ்ஞாநத்தினாலே கல்ப்பஸூத்ரத்திற்கே வ்யாக்யாநம் செய்தவர். அதனால் பூர்வமீம்ஸையில் 'शेषः परार्थत्वात्' என்ற ஸூத்ரத்தில் பாரார்த்யமென்ற சேஷத்வத்வமானது சேதநர்விஷயத்தில் தாஸத்வமும் ஆகும். ஒருவர் தம் அடிமைகளில் பிறருக்கு அடிமை யாக்குவது தர்மசாஸ்த்ராதிகளில் தெரிவதால் இந்த தாஸத்வத்திற்கு விக்ரயமும் தாநமும் கூடுமென்று ஆராய்ந்தே அவ்வாறு அருளிச்செய்திருப்பதால் இது வெறும் ஸ்துதியன்று என்பதையறிவிப்பதற்காகஇந்த விசேஷணமென்னலாம். பகவான் தனக்கடிமையான ஒருவனை வேறொருவருக்கு அடிமையாக்கில் அப்போது ஔபாதிகமாக அந்ய தாஸத்வம் ஏற்படும். இதனால் தன்னைப் பற்ற நிருபாதிக தாஸத்வம் நீங்காது. பித்ராதிகளுக்குப் புத்ராதிகள் தாஸரானாலும் புத்ராதிகளுக்கு பகவத்தாஸத்வம் போகாது. அது நிருபாதிகமாக நித்யமாகையாலே விற்கவும் ஆகாது. பாகவத சேஷ

பெரியாழ்வார் அருளிச்செய்தார். இது मध्यमपदத்துக்குக் तात्पर्यம். இவ் வர்த்தத்கை அநுஸந்தித்தால் இச்சேஷத்வம் सद्वारकமாகவும் अद्वारकமாக வும் நின்ற நிலையிலே சேஷ வ்ருத்தியான கைங்கர்யமும் நிற்கும் ஆகை யால் தன் சக்திக்கு அநுரூபமாக भगवत्कैङ्कर्यத்தினுடைய साध्याकारविवृद्धि

---

த்வம் ஸோபாதிகமாய் விக்ரயார்ஹமாகும். இதை யறிவிக்க இந்த வாக்ய த்தில் இந்த சேஷ த்வமென்று பொதுவாகத் தொடங்காமல் இப்பாகவத சேஷத்வமென்று தொடங்கியது. இப் பொருள் திருவஷ்டாக்ஷரத்தில் கிடைக்குமிடத்தை—இவ்வதிகாரத்துக்கு முக்யமாகையாலே இங்கே குறித் தருளுகிறுர் இது மத்யமபதத்திற்கு இதி. நம: என்ற சொல்லால் தமக்கு ஸ்வாதந்த்ர்யமில்லை யென்று பகவத்பாரதந்த்ரயம் சொல்லப் பட்டதால் இஷ்டப்படி விநியோகிப்பது பாரதந்த்ர்ய கார்யமாகையாலே பாகவத தாஸத்வம் அங்கே கருதப்பெறும். இப்படி சேஷத்வத்தை நிரூ பித்து அதன் கார்யமான கைங்கர்யத்துக்கு நிகமநம் செய்கிறுர் இவ் வர்த்தத்தை இத்யாதியால். சேஷத்வத்தோடு நிற்காமல் கைங்கர்யம் அவச்யமாகில் எத்தனை பாகவதர்களுக்கு எத்தனை கைங்கர்யம் ஒருவன் செய்யமுடியுமென்று சங்கியாமைக்காக தன் சக்திக்குஅநுரூபமாக என் றது. भगवत्कैङ्कर्यத்தினுடைய साध्याकारविवृद्धिயான புருஷார்த்தத்தில் எல்லை நிலத்தை இதி, புருஷார்த்தம் பகவத் கைங்கர்யம் அதன் எல்லைநிலம்= காஷ்டை பாகவத கைங்கர்யம். அது साध्याकारविवृद्धिயாகும். साध्याकारமாவது பகவத் கைங்கர்யம். அதினுடைய वृद्धि என்றபடி. பகவத் கைங்கர்யத்தி னுடைய என்று சொல்லுக்கு கிங்கர க்ருத்யமான அடிமைத் தொழிலேஅர்த்த மானல் அதினுடைய ஸாத்யாகாரம் அதுவே ஆகாதாகையால் அநந்வய மாம். அதற்காக கைங்கர்யத்தினுடைய என்பதற்கு சேஷத்வத்தினுடைய என்று பொருள். किङ्करस्य भावः कैङ्कर्यं—கிங்கரனுடைய தன்மையாவது சேஷ த்வம். அதற்கு பகவத்கைங்கர்யம் साध्यकारமாகும். அதனுடைய वृद्धि भागवत-कैङ्कर्यம். இது வ்யாக்யாந ஸம்மதமான பொருள். கிங்கர பதத்திற்குத்தொழில் செய்கிறவனே பொருளாகையால் கைங்கர்யம் அடிமைத்தொழில் என்கிற ஸ்வரஸார்தத்தையே கொண்டும் நிர்வஹிக்கலாம்—கைங்கர்யத்தினுடைய என்கிற ஷஷ்டிக்கு ஸாத்ய என்கிற சொல்லோடு அந்வயமில்லை. ஆகார என்ற பத்தோடு அந்வயம். இது प्राभाकर ரீதிக்கு ஸூசகமாக தத் ப்ரயோக அநுவாதரூபம். ப்ராபாகரர்கள் यजेत स्वर्गकामः என்றவிடத்தில் யாகத்திற்கு ஸாத்யமாய் பலமாயிருப்பது அபூர்வமே. அப்போது ஸ்வர்க்கமும் பலமாகச் சொல்லப்பட்டிருப்பதால் இரண்டு பலமாகுமே என்று கேட்டு अपूर्वस्यैव साध्याकारविवृद्धिः स्वर्गः என்ருர்கள். अपूर्वस्य என்கிற ஷஷ்டிக்கு साध्यपदத்தில் அந்வயமில்லை. यागसाध्यமான அபூர்வத்துக்கு இருக்கும ஸாத்யாகாரத்தி னுடைய வ்ருத்தியே ஸ்வர்க்கமாகும். வேறன்று, ஆகையால் இரண்டு பலனில்லை யென்பர். அதுபோல் சேஷத்வ ஸ்வரூபத்திற்கு ஸாத்யமான

யான **புருஷார்த்தில்** எல்லைநிலத்தைத் தரிசு தூறு விடாதொழியப் प्राप्तम् இது "भर्तुर्भृत्यगणस्य च" "आप्तो विष्णोरनाप्तश्च द्विधा परिकरः स्मृतः। नित्यो वन्द्यो न

---

பகவத் கைங்கர்யத்திற்கு உள்ள ஸாத்யாகாரத்திற்கு பாகவத கைங்கர்யம் வ்ருத்திரூபம். ஆக பாகவத கைங்கர்யமில்லை யென்ருல் பகவத்கைங்கர்யத்திற்கே லோபமென்றதாம். தரிசு தூறு விடாதொழிய—தரிசாவது விளையாத நிலம் (கரம்பு நிலம்) தூறு—செடியும் செட்டுமாயிருப்பது. க்ராமத்தின் எல்லைநிலமானது தரிசாகவும் தூருகவும் விடப்பட்டால் உள் நிலத்திற்கும் ஆடுமாடுகள் மேய்ந்து அபாயமாம். கிராம எல்லை தெரியாமையால் க்ராமஸ்வரூப நாசமுமாம். அதுபோல் பாகவத கைங்கர்யத்தை விட்டால் பகவத்கைங்கர்யஹாநியானபடியால் அதை தரிசாக விடாதொழிய ப்ராப்தம்=விடாமலிருத்தல் தகுமென்றபடி. இப்படி பகவானைத் தவிர வேருன பாகவதருக்கும் கைங்கர்யம் செய்யலாமென்று இசைந்தால், பதிவ்ரதையான ஸ்த்ரீ பதிக்குப் போல் பிறருக்கும் சுச்ரூஷை செய்தால் பாதிவ்ரத்யஹாநிபோல், பாரமைகாந்த்ய ஸ்வரூபத்திற்கு ஹாநி வாராதோ என்ன அருளிச் செய்கிருர் இது இதி. भर्तुरिति. பௌஷ்கர ஸம்ஹிதை 30— அங்கே இப்போதுள்ள பாடம் भ्रातृ भृत्यगणस्य च என்றதாம். तदाश्रितत्वात् देवानां अन्येषां पूजनात्तु वै॥ न दोषो हि यथा लोके भ्रातृभृत्यगणस्य च। माननात् धर्मपत्नीनां समक्षात् वा परोक्षतः।......भगवत्यविशेषज्ञाः......प्रवृत्ता देवतार्चने॥ व्यामिश्रयाजिनस्ते वै पातित्यपद-संश्रिताः॥ என்று உளது. இதர தேவதைக்கும் பூஜை செய்தால் வ்யாமிச்ரயாஜி (கல்பாகயாகம் செய்பவன்)யாவானே யென்ற கேள்விக்கு இங்கே உத்தரம், பதிவ்ரதையாயிருப்பார் பதியின் எதிரிலோ பரோக்ஷத்திலோ பதிக்குச் சேர்ந்தவர்கள் பதிக்கு ப்ரியமானவர்களென்று பதிகௌரவத்தாலே பதியின் ப்ராதாக்கள் வேலைக்காரர் முதலானவர்களை கௌரவித்தால் எப்படி தோஷமாகாதோ, அது போல் இத் தேவதைகள் எம்பெருமானை யாச்ரயித்தவர்களென்று பாகவதத்வமடியாக ஆராதித்தால் தோஷமில்லை—भर्तुः भृत्यगणस्य च என்கிற பாடமாகில் भर्तुः என்பது த்ருஷ்டாந்தமாகச் சொல்லப் பட்டதென்னவேண்டும், இப்படியே शुद्धतत्परिवारेषु भर्तृभृत्यवत् என்றவிடத்திலும் भ्रातृभृत्यवत् என்ற பாடம் கொள்ளலாம். அல்லது பர்த்தாவினுடைய ப்ருத்ய கணத்துக்குப் போல் என்று எங்கும் பொருள் கொள்ளலாம் ஆகையாலன்றோ வேங்கடாசல மாஹாத்ம்யத்தில் ஸ்ரீநிவாஸ கல்யாணத்திலும், நாச்சியார் திருமொழியில் கோதாவிவாஹ வ்ருத்தாந்தத்திலும் ப்ரஹ்ம ருத்ர துர்க்காதிகளுக்கு விசேஷ ஸத்காரம் வர்ணிக்கப்பட்டிருக்கிறது அத்தகைய விசேஷங்களில் ப்ரத்யக்ஷமாக அவர்கள் வந்திருக்கும்போது அவர்களை கௌரவிப்பது உசிதமென்றதாலே தனியே அவர்களைமட்டும் த்யாநம் செய்து யாகாதிகளைச் செய்ய வேண்டுமென்பது ஸித்திக்காது. இதர வசநங்களையும் அநுஸரித்து நடக்க வேண்டுமென்று வேறு ப்ரமாணமும் கூறுகிருர் आप्त इति. பௌஷ்கர ஸம்ஹிதை. ஆப்தனுவான் விச்வாஸ பாத்ர

ह्यनित्यः कर्मवश्यो मुमुक्षुभिः॥" என்று ஸ்ரீபௌஷ்கராதிகளிற்சொன்ன ந்யாயத்தாலே पतिव्रताधर्मம்போலே யிருக்கிற பரமைகாந்தித்வத்துக்கு மிகவுமுசிதமான पतिचित्तानुवर्तनம். ஆகையால் द्वेषान्तरத்தாலன்றிக்கே अनन्यार्हशेषत्वज्ञानமடியாக வருகையாலே இவ்வந்ய சேஷத்வம் विरुद्धமன்று.

இப் பாகவதசேஷத்வம் स्वाभाविकமோ औपाधिकமோ வென்னில்-कर्मोपाधि

---

மானவன். உண்மையை யறிந்து உண்மையையே சொல்லுகிறவன், உண்மையின் அறிவும் சொல்லும் சேர்ந்தே ஆப்தியாகும். ச்லோகார்த்தமாவது—விஷ்ணுவினுடைய பரிஜநம் ஆப்தனென்றும் அநாப்தனென்றும் இருவிதமாக ஸ்ம்ருதிகளில் கூறப்படும். அவ்விருவரில் नित्यः—எவரிடத்தில் ஆப்தி நித்யமாய் அழியாமலிருக்கிறதோ, சாஸ்த்ரார்த்தத்தை யறிகையும் சொல்லுகையும் மாறுமலிருக்கிறதோ, க்யாதி-லாபாதிகளுக்காக வேறு ஏதேனும் சொல்லுவதில்லையோ, அப்படிப்பட்ட ஆப்தர் वन्द्यः—வணங்கத் தகுந்தவர். இப்படி நித்யமாக ஆப்தராயிருப்பவர் நித்ய ஸூரிகளும் முக்தர்களும் பாகவதோத்தமர்களும் ஆவர். अनित्यः-முன் சொன்னவாறு ஆகாதவர் அநாப்தர்; அதாவது ஜ்ஞாநாதிகளில்லாதவரும், அவை இருந்தும் வேறு காரணமாகப் பொய்சொல்லுகிறவரும் (அதற்குக்காரணம் கர்மவச்யராயிருப்பதே.) முமுக்ஷுக்களாலே வணங்கப்படவாகாதவராவர். 'பேச நின்ற சிவனும் பிரமனும் மற்ற தேவதைகளும், அஜ்ஞாநிகளான மானிடர்கள் தம்மைப் புகழ்ந்துவரும்படி தத்த்வத்தை மறைப்பவருமாகிறபடியால் இங்கு அநித்ய வர்க்கத்திலே சேர்க்கப்பட்டவராவர் भर्तुर्भृत्यगणस्य च என்ற ச்லோகத்தில்பதியினிடத்தில் கௌரவத்தால் ஆப்த அநாப்த ஸர்வபரிஜநஸாதாரணமாகச் சில கார்யம் சில ஸமயம் செய்ய நேர்ந்தாலும் வந்தநாதிகளுக்கு ப்ரஸக்தியில்லை . இது உள்ள போது தான் சேஷத்வம் ஸ்த்திரமாகும்; அது ஆப்த விஷயத்தில்தான் ஆகும் என்று அறிவித்ததாம். ஆனாலும் अनन्यार्हசேஷத்வம் தனக்கென்று அறிந்தவன் அந்யசேஷத்வத்தைச்சிறிதும் பற்றலாகாதே என்கிற கேள்விக்குப் பரிஹாரத்துடன் நிகமநம் செய்கிறார் ஆகையால் இதி. द्वेषान्तरத்தாலன்றிக்கே இதி. பதிவ்ரதைக்கு பதியைத் தவிர வேறிடத்தில் அர்த்தகாமங்களடியாக வரும் சேஷத்வம் பதிசேஷத்வ விருத்தமாகிறுப்போலே தேவதாந்தர பாகவதாதிகளிடத்தில் அர்தகாமங்களடியாக சேஷத்வ முண்டாகில் அதுதான் பகவச்சேஷத்வ விருத்தமாகும். ஆப்த பாகவதத்வமடியாக வரும் சேஷத்வம் அநந்யார்ஹ சேஷத்வ ஜ்ஞாநத்தினலேயே வருகிறபடியால் விருத்தமாகாது. இந்த பாகவத சேஷத்வம் ஔபாதிகமானலும் நித்யமாகவுமிருக்குமென்கிறர் இப் பாகவதேதி. இவ்வுலகில் தத்தத் காலத்தில் வரும் பாகவத சேஷத்வம் நித்யமாகாவிட்டாலும் சிஷ்யனுக்கு ஆசார்ய சேஷத்வம் நித்யமாயிருக்கும். அதாவது பரமபதத்திலும் தொடரும் நித்யஸூரிகளுக்கும் பரஸ்பரதாஸ்யமிருப்பதாலும் இது ஸ்வாபாவிகமென்பர். அது கர்மோபாதிக

கள் அற "नित्याभिवाञ्छितपरस्परनीचभावैः" என்கிறபடியே यावदात्मभाविயாய்க் கொண்டு मुक्तदशैயிலும் அநுவர்த்திப்பதொன்றுகையாலே स्वाभाविकமென்னவுமாம்; भगवत्सम्बन्धज्ञानविशेषनिबन्धनமாகையாலே औपाधिकமென்னவுமாம்.

இப்படியாகில் இருவருக்கும் भागवतत्वமுண்டானுல் ஒருவரைப்பற்ற ஒருவர்க்கு शेषत्वமும், शेषित्वமும் வருகை विरुद्धமன்றோ என்னில்—परस्परोपकार्योपकारकभावादिகளிற் போலே இங்கும் विरोधமில்லை. अधिकारव्यवस्थैயிலே

மன்று; ஸ்வரூபகுண ஜ்ஞாந ப்ரயுக்தம். நித்யஸூரிகளுக்கும் உண்டென்பதற்கு ஸம்ப்ரதாய ஸூக்தி नित्यैरिति. வைகுண்ட ஸ்தவம் 77—முழு ச்லோகமாவது—'कैङ्कर्यनित्यनिरतैः भवदेकभोगैः नित्यैरनुक्षण नवीन रसार्द्रभावैः। नित्याभिवाञ्छितपरस्परनीचभावैः मद्दैवतैः परिजनैस्तव संगसीय॥' என்றதாம். கைங்கர்யத்திலே எப்போதும் ஈடுபட்டு உனது அநுபவமே யுடையராய், ப்ரதிக்ஷணம் புதிய ஆசையினுல் உருகிய மனமுடையராய், எப்போதும் ஒருவருக்கு ஒருவர் சேஷமாயிருப்பதில் நோக்கு உடையவராய் எனக்கு தேவதைகளுமான உமது பரிஜநங்களோடு நான் சேரவேண்டுமென்று பொருள். இந்த சேஷத்வம் நித்யமென்பதற்கு அழிவு இல்லாதது என்று பொருளாம். இதனுல் ஸ்வாபாவிகமென்றுலும் ஔபாதிகமே. ஜீவனுக்கு ஸ்வரூப ப்ராப்தமான பரமஸாம்யாதிகளை ஸ்வாபாவிகமென்கிறோம். அவை பகவத் ஸங்கல்பாதீநமாகையாலே ஔபாதிகமுமாம். அதற்கு மேலாக இந்த பாகவத சேஷத்வம் பரமபதத்திற்கூட பகவத் ஸம்பந்தி-பாகவதர் என்கிற ஜ்ஞாநமூலமாக வருவதால் ஔபாதிகமென்பதில் ஸம்சயமில்லை இனி, குரு சிஷ்யாதி விஷயத்திலே சேஷசேஷிபாவம் கூடுமாகிலும் இதர பாகவத விஷயத்திலே ஒருவருக்கொருவர் உபகாரம் செய்து கொள்வதால் யார் சேஷி, யார் சேஷன்? பரஸ்பர நீசபாவ என்று சொன்னது எப்படி பொருந்தும்? ஒருவனுக்கு சேஷியாயிருந்து சேஷனுயுமிருக்கக் கூடுமோ என்கிற சங்கையைக் கூறிப் பரிஹரிக்கிறுர் இப்படியாகில் இதி. உபகார்ய உபகாரகேதி. बादरि என்பவர் உபகாரகத்வமே சேஷத்வமென்றுர். जैमिनि சேஷமாகாததும் உபகாரகமாகுமென்று அதை விட்டுப் पारार्थ्य சேஷத்வமென்றுர். ஆனுலும் உபகார்யத்வமும் உபகாரகத்வமும் போலே சேஷித்வமும் சேஷத்வமும் பரஸ்பரமாகவுமிருக்கலாம். அந்த ஜைமிநியே फलं च पुरुषार्थत्वात् पुरुषश्च कर्मार्थत्वात् என்றுர். இதனுல் ஃபலத்திற்காக விதிக்கப்பட்ட யாகாதிகள் சேஷமாகிறது போலவும் யாகாதிகளுக்கு அங்கயாகாதிகள் சேஷமாகிறது போலவும் புருஷன் யாகத்திற்குக் கர்த்தாவாக விதிக்கப்பட்டதால் கர்மாவுக்கு சேஷமாகிறுன்; ஃபலம் புருஷனுக்காக ஸாதிக்கப்படுவதால் புருஷனுக்கு சேஷமாகுமென்னப்பட்டது. கர்மாவின் பலம் புருஷனுக்காகிற படியால் கர்மா புருஷனுக்கு சேஷமாகிறது. அதனுலேயே கர்மாவை க்ரத்வர்த்தம் புருஷார்த்தம் என்று பிரித்திருக்கிறுர்கள். ஆக கர்த்தாவாய் சேஷனுன புருஷனே கர்மபலத்தை யநுபவிக்கிறவனுயிருந்துகொண்டு

க்ரியைக்கு சேஷியானவன்தானே கர்த்தவ்யத்திலே இதுக்கு சேஷமாய் நில்லாநின்றான்: அப்படியே அந்யோந்யம் பண்ணும் அதிசயங்களை உப ஜீவியாதே ஒருத்தருக்கொருத்தர் அதிசயாதாநம் பண்ணினால் அதிசயாதாயக-த்வவேஷத்தாலே இருவருக்கும் சேஷத்வ முண்டாய் அதிசயத்துக்கு ஆச்ரய மான வேஷத்தாலே இருவருக்கும் சேஷித்வமுண்டாகக் குறையில்லை.

இப்படி ஈச்வரேச்சையாலே இருவரும் பரஸ்பரம் அதிசயாதாயகராக விநியுக்த ராகையாலே இருவருக்கும் பாகவதசேஷத்வஸம்பந்தம் ப்ராமாணிகம். குணவசீக்ருதனான தன் நினைவாலே பகவத்விஷயத்திலும் பாகவதவிஷயத்திலும் வரும் தாஸ்யம் போகவர்க்கமாய்க்கொண்டு தன்னேற்றமாயிருக்கும். இவ்விடத்தில் ஈச்வரன் ஸ்வாதந்த்ர்ய ஸஹக்ருதையான தன் இச்சையாலே பாகவதசேஷத்வத்தை யுண்டாக்கும்.

---

கர்மாவுக்கு சேஷியுமாகிறானென்று மீமாம்ஸாசாஸ்த்ர ஸித்தமானதால் வெவ்வேறு அவஸ்த்தையைக் கொண்டு பரஸ்பர சேஷசேஷி பாவமும் கூடுமென்று ஸித்தித்தது. வாக்யத்தில் அதிகாரி அவஸ்த்தையிலே என்ற சொல்லுக்குக் கீழே கூறிய அர்த்தித்வ ஸாமர்த்யரூப அதிகார தசையி லென்று பொருளல்ல. அது கர்த்தாவாயிருப்பதற்குக் காரணமான தசை. இங்கு அதிகார: ஃபலஸ்வாம்யம் என்று மீமாம்ஸகர் சொன்னபடி கர்மாநுஷ்டாந த்திற்குப் பிறகு வரக்கூடிய ஃபலபோக்த்ருத்வ தசை அதிகார்யவஸ்த்தையாம். இங்கே பரஸ்பரநீசபாவம் சொன்னதும் பொருந்திற்று. அதனாலேயே 'நீசோ-ச்சயோஸ்ஸ்வபாவோऽயம் நந்த்ருநந்தவ்யதாத்மக:' என்றதை யநுஸரித்து 'வைஷ்ணவோ வைஷ்ணவம் த்ருஷ்ட்வா தண்டவத் ப்ரணமேத் புவி இத்யாதி வசநங்கள் பிறந்தன. உபஜீவியாதே இதி. ஒரு பாகவதனுக்கு அதிசயத்தைப் பண்ணும் மற்றொருவன் அதனால் பின் னால் தனக்கு அவன்மூலம் அதிசயம் ஏற்படுமென்று எதிர்பார்த்துச் செய்வானாகில், அவன் பிறருடைய அதிசயத்தை ப்ரயோஜநமாக நினையா மையால் அங்கே சேஷத்வலக்ஷணத்திற்கு இடமில்லை. தன் ப்ரயோஜந த்தை ப்ரதாநமாக்காமல் செய்யுமிடத்தில் பரஸ்பரம் சேஷத்வமுண்டென்க. இருவரும் பாகவதராயிருந்தால் பாகவதத்வமடியாக ஒருவன் சேஷமாம் போது மற்றொருவர், நானும் சேஷனாக வேண்டியிருக்க சேஷியாவதற்கு ஸம்மதிக்க மாட்டேனென்று அதை நிஷேதிப்பதுதானே ஸ்வரூபம். அப்படியிருக்க, 'சேஷித்வ முண்டாகக் குறையில்லை' என்பது கூடுமோ என்ன அருளிச்செய்கிறார் இப்படி இதி. இவ் வாக்யங்களின் ஸாரார்த்த மாவது—'மத்பக்தபக்தாச்ச பூஜநீயா விசேஷத:।' என்கிற ஈச்வராஜ்ஞையை ரக்ஷிப்ப தற்காகவே சேஷித்வத்தையும் இசைய வேண்டுமென்றதாம். பாகவத சேஷத்வமானது குண ஜ்ஞாந மூலமாக வரும்போது விசேஷ இச்சை யினால் வருவதாய் ஈச்வரனுக்கு போகரஸ வ்ருத்தியைச் செய்து தன்னேற்ற மாகும்—அதாவது சிறக்கும்; கொண்டாடத்தகுந்ததாகும். அப்போது மற்றொரு பாகவதன் ஸ்வேச்சையினாலே சேஷியானால் அது ஸ்வரூபத்திற்குத் தகாது.

இப்படி ஸ்வாமிக்கு इष्टविनियोगार्हராய்க்கொண்டு சேஷிகளாய் நிற்கை தன்னாலே இருவரும் ஸ்வரூபம் பெற்றார்கள். स्वाभीष्टமான भागवतशेषत्वமும் அதின் फलமான भागवतकैङ्कर्यமும் ஸித்திக்கையால் இருவரும் पुरुषार्थकाष्ठै பெற்றார்கள். இருவரையும் இப்படிப் பரஸ்பர சேஷ சேஷிகளாக நிய மித்து ரஸிக்கையாலே ஈச்வரன் தன் ஈச்வரத்வமும் भोक्तृत्वமும் பெற்றான்.

---

இவன் இச்சிக்காமலிருக்க ஈச்வரன் தன்னுடைய ஸ்வாதந்த்ர்யத்தாலே இவனுக்கு சேஷித்வத்தை இச்சித்து உண்டுபண்ணுகிறான். ஆக சேஷத்வ மானது ஜீவன் ஈச்வரன் இருவரிச்சையினால் வரக்கூடியது. பாகவதனுக்கு சேஷித்வம் ஈச்வரேச்சாமாத்ரத்தினால். அதனால் அவன் சேஷியாய் நிற் பது தகாதென்னலாகாது. ஈச்வரனுக்கு சேஷனாய்ப் பரதந்த்ரனாயிருப்பது தனக்கு ஸ்வரூபமாகையால் தான் சேஷியாயிருப்பதைத் தடுத்தால் ஈச்வ ரேச்சைக்கு விரோதம் செய்வதாலே ஸ்வரூபஹாநி செய்து கொண்டதாம்; சேஷித்வத்தை ஸ்வீகரித்தபோது ஸ்வரூபம் பெற்றதாகும். சேஷிகளாய் நிற்கை தன்னாலே இதி. ஒரு பாகவதனுக்கு ஒருவன் ஒரு கார்யத்திலே சேஷனாய் மற்றொரு கார்யத்தில் அவனுக்கு சேஷியாய் இப்படி இருவரும் நிற்கையால் என்று பொருளாம். முன் வாக்யத்தில் இவர்கள் இச்சையை யும் என்றவிடத்தில் இவர்கள் என்ற சொல்லாலே பரஸ்பர சேஷத்வம் பெறும் இவர் என்றே பொருளாகையால் அவ்விருவரையே இங்குக் கொள் வது தகுமே. இப்பதம் स्वाभीष्टமாய் என்ற அடுத்த வாக்யத்திலும் சேரும். அந்தந்த கார்யத்தைக் கொண்டு சேஷத்வமும் கைங்கர்யமும் இருவருக்கு முண்டு ஸ்வரூபக்ருததாஸ்யத்திலும் சாஸ்த்ரவச்யனானவனுக்கு இச்சை யிராமலிருக்க முடியாது. ஆனால் அங்கு भगवदाஜ்ஞாரூப இச்சை ப்ரபல காரணமாகும்; குணக்ருத தாஸ்யத்தில் ஸ்வேச்சைக்கும் ப்ராதாந்யமுண்டு. ஆக இருவித பாகவத சேஷத்வமும் ஸ்வாபீஷ்டமாகலாம். அதன் மூல மான கைங்கர்யமெல்லாமும் புருஷார்த்த காஷ்டையாகலாம். இனி இவ் வாக்யத்திற்கு இவ்வாறும் பொருளாம்—ஒரு பாகவதனுக்கு மற்றொரு பாகவதன் சேஷியானால் சேஷனுக்குக் கைங்கர்யமே புருஷார்த்த காஷ்டை. சேஷியான பாகவதன் தான் அதை இச்சிக்காமல், ஈச்வரேச்சாபங்கம் கூடாதென்றும், ஒரு பாகவதனின் ப்ரார்த்தனைக்கு இணங்காமற் போனால் அந்த பாகவத சேஷத்வம் கெடுமே என்ற அச்சத்தினாலும் சேஷியாகிற படியால்—பாகவத சேஷத்வத்தையும் ஒருபடியும் பெறுகிறபடியால் இதே இவனுக்கு புருஷார்த்த காஷ்டையாம். திருப்பாணாழ்வாரும் கோயிலுக்குத் தாம் எழுந்தருள அஞ்சியிருந்து முநிவாஹநரான போது அம் முநிவருக் குத் தம்மை சேஷமாக நினைத்து 'அடியார்க்கு ஆள்படுத்த விமலன்' என்று அருளினாரே யென்க. நியமித்து ரஸிக்கையாலே இதி. ஒருவருக்குத் தாம் சேஷியாவதற்கு அஞ்சிய பாகவதரை சேஷியாகும்படி நியமித்ததாலே பூர்ண ஈச்வரத்வ ஸித்தி; ரஸிக்கையாலே போக்த்ருத்வஸித்தி. இவர்கள்

இப்ரகாரத்தாலே தங்களுக்கு வந்த சேஷத்வ சேஷித்வாதிகளெல்லாம் ஈச்வரனுடைய **भोक्तृत्व**த்துக்கு சேஷமென்று தெளிகையாலே இருவர்க்கும் கோதற்ற **पुरुषार्थकाष्ठै** உண்டாகிறது.

இப்படி **निश्चितार्थ**ராய் ஸாரவித்துக்களான க்ருதக்ருத்யருக்கு **अपराधरुचि**யும் **अतिशङ्कै**யும் **अन्यदेवतास्पर्श**மும் **आत्माधीनभोग**மும் **आत्मार्थभोग**முமாகிற பழுது இல்லாத பரமைகாந்திகளுடைய **प्रसाद**மே எப்போதும் ஸ்வயம்ப்ரயோஜநமாக **अपेक्षणीय**ம்.

> **வேதமறிந்த பகவர் வியக்க விளங்கிய சீர்**
> **நாதன் வகுத்த வகை பெறுநாமவனல்லடியார்க்கு**
> **ஆதரமிக்க வடிமையிசைந்தழியாமறைநூல்**
> **நீதி நிறுத்த நிலை குலையாவகை நின்றனமே.** (23)

---

புருஷார்த்த காஷ்டை பெற்றவுடன் தாம் பெற்றதை ப்ரதாநமாக நினைத்தால் கோது உண்டு; எனவே கோதற்ற புருஷார்த்தத்திற்கு வழியான தெளிவை யறிவிக்கிறார் **இப்ரகாரத்தாலே** இதி. புருஷார்த்த காஷ்ட்டை என்கிற அதிகாரார்த்தத்தை முடிக்கிறார் **இப்படி** இதி. கைங்கர்யம் எல்லோருக்கும் செய்யமுடியாவிட்டாலும் பழகும் பாகவதரெல்லோருடையவும் அநுக்ரஹம் பெறவேண்டுமென்றபடி. **ஸாரவித்துக்களான**=பூர்வாதிகாரத்தின் முடிவில் பாகவதாபசார நிவ்ருத்தியும் பாகவத கைங்கர்ய ப்ரவ்ருத்தியும் ஸாரம் என்றாற் போன்ற ஸாரத்தை யறிந்தவர்களான. **அதிசங்கையும்**—பாகவதசேஷத்வம் உண்டாகில் அந்யசேஷத்வம் உண்டாய் விடுமென்கிற சங்கையும், ஸர்வாத்மநா தனக்கு சேஷித்வம் ஸ்வரூபவிருத்தமென்கிற சங்கையும். **இவை யெல்லாம் பழுது. இவை இல்லாத** என்பது **பரமைகாந்திகளுக்கு** விசேஷணம்.

அதிகாரார்த்த ஸச்க்ரஹப்பாசுரம். **வேதமிதி.** பாகவதர்களை விசேஷித்து ஆராதிக்க வேண்டுமென்றதால் எந்த ஜாதியிலும் பாகவதர்க்குக் கந்யாதாநாதிகளும் செய்யலாம்; எவருடைய அந்நத்தையும் புசிக்கலாம்; பித்ராதிகளும் புத்ராதிகளான பாகவதர்க்கு ப்ரணாமாதிகளைச் செய்யலாமென்றெல்லாம் சாஸ்த்ர வரம்பை மீறி நடக்காமல் பாகவத சேஷத்வத்தின் பெருமையைக் காக்க வேண்டுமென்று இப்பாட்டின் ஸாரமாகும். **வேதமறிந்த**—வேதங்களை ஓதி அவற்றின் பொருளைத் தெளிவாக அறிந்த **பகவர்**—பாகவதர்கள், **வியக்க**—அநுபவித்து ஆச்சர்யப்படும்படி **விளங்கிய சீர்**—ப்ரகாசிக்கும் கல்யாணகுணங்களையுடைய. **நாதன்**—பகவானாலே **வகுத்த**—'**मद्भक्तभक्ताश्च पूजनीयाः**' இத்யாதிகளால் அறிவிக்கப்பட்ட, **வகை**—பாகவத சேஷத்வ ப்ரகாரத்தை **பெறும் நாம்**—பெற்றிருக்கிற ஆஸ்திகரான நாம், **அவன் நல் அடியார்க்கு**—ஆப்தர்களான அவனுடைய தாஸர்களுக்கு **ஆதரம் மிக்க**—ஸ்வரூப க்ருதமாயும் குண க்ருதமுமான பகவத்தாஸ்யத்தைக்காட்டிலும் அதிக ஆதரத்திற்கு விஷயமான, **அடிமை இசைந்து**—

नाथे नस्तृणमन्यदन्यदपि वा तन्नाभिनालीकिनीनालीकस्पृहणीयसौरभमुचा वाचा न याचामहे ।
शुद्धानां तु लभेमहि स्थिरधियां शुद्धान्तसिद्धान्तिनां मुक्तैश्वर्यदिनप्रभातसमयासत्ति प्रसत्तिं मुहुः ॥

---

கைங்கர்யத்தைச் செய்யவிரும்பி, அப்போதும் அழியா மறை=நித்யமான வேதத்திற்கு ஸம்பந்தப்பட்ட நூல்—தர்ம சாஸ்த்ரங்களாலும், நீதி—மீமாம்ஸையினாலும் நிறுத்த—ஸ்தாபிக்கப்பட்ட நிலை—வர்ணாச்ரம தர்ம வரம்பு குலையாவகை=கெடாதபடி நின்றனம்—அடிமையில் நிலைத்தோமென்றபடி.

உபாயாநுஷ்டாநம் ஆகாதவர்களும் அதன் மூலமான மோக்ஷத்திற்கும் மேலாக வைத்து பாகவத பரிசர்யை செய்தால் அதுவே सिद्धिर्भवति वा नेति என்கிறபடி அவர்கள்மூலமாகவே மோக்ஷத்திற்குமாகுமென்பதையும், உபாயாநுஷ்டாநமானவர்களும் எல்லாப் பலனையும் யாசிக்காமல் விட்டிருந்தாலும் மோக்ஷகாலத்திற்கு முன் முழுமையும் பாகவதாநுக்ரஹத்தை ஸ்வயம்ப்ரயோஜநமாக யாசித்திருக்க வேண்டுமென்பதையும் அறிவிக்கிறார் नाथ இதி ச்லோகத்தால். நாம். नः—நம்முடைய नाथे—நாதனை எம்பெருமானிடத்திற் கூட तृणं—புல்லான ஐஹிக புருஷார்த்தத்தையும் अन्यत्—ஸ்வர்க்க புருஷார்த்தத்தையும் अन्यत्—க்ருதகாக்ருதகத்திற்கு மேம்பட்டதான சதுர்முகாதி புருஷார்த்தத்தையும், अपि=அதற்கு மேலான கைவல்யத்தையும்; वा—மோக்ஷமென்கிற பரமபுருஷார்த்தத்தையும் கூட; तदित्यादि—तत—அந்த நாதனுடைய नाभिनालीकिनी—நாபியாகிற தாமரையோடையின் नालीक—தாமரைப்பூவினாலும் स्पृहणीय—பெற விரும்பப்பெற்ற सौरभ—பாரமைகாந்த்ய பரிமளத்தை मुचा எங்கும் வீசுகின்ற वाचा—சுத்தமான வாக்கினால் न याचामहे=யாசிக்கிறோமல்லோம் மோக்ஷபுருஷார்த்தமும் பாகவத ஸங்கத்திற்கு ஈடாகாதென்றபடி. பாகவத கைங்கர்யத்தை விட்டு ஆர்த்த ப்ரபத்தி செய்வதையும் இசையோமென்றபடி. பாகவதகைங்கர்யம் கிடைக்காதவர்களுக்கு மோக்ஷத்தில் த்வரை. शुद्धानां स्थिरधियां—புருஷார்த்த காஷ்டையிலே ஸ்திரமான புத்தியுடையவரும் மஹாவிச்வாஸாதிகளுடையவரும் शुद्धान्तसिद्धान्तिनां—शुद्धान्त—அந்தப்புரஸ்த்ரீகளுடைய सिद्धान्तத்தை—முடிவை— பாதிவ்ரத்யத்தை— பாரமைகார்த்யத்தையுடைய ஆப்த மஹாபாகவதருடைய, मुक्तेत्यादि. मुक्तैश्वर्य—முக்தர்களின் கைங்கர்ய ஸாம்ராஜ்யமாகிற பலத்திற்கான दिन—பகலுக்கு முன்னான प्रभातसमय—விடியற் காலத்தினுடைய आसत्ति—நெருக்கத்தையுடைய प्रसत्तिं अनुक्रஹத்தையே मुहुः=மேன்மேல் लभेमहि—வேண்டிப் பெறுவோமாக. இந்த ச்லோகம் உபாயாநுஷ்டாநம் செய்யாதவர்கள்விஷயத்தில் மோக்ஷம் வேண்டுமாறலும் நாம் எம்பெருமானிடம் கேட்பதில்லை அதற்கும் மேலான பாகவத கைங்கர்யத்திலே நிற்போம். அவர்களே நமது தேஹாவஸாநத்திற்குப் பிறகு நமது நன்மைக்காக மோக்ஷத்தை வாங்கி யளிப்பாரென்ற கருத்தாம். இது प्रभातसमयासत्ति என்றதாலே அறிவிக்கப்பட்டது க்ருதக்ருத்யர் விஷயமாகில் இனி நாம் வேறு பலன்களைப் போலே மோக்ஷத்தையும்

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे पुरुषार्थकाष्ठाधिकारः षोडशः 16.
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

—o—o—

---

விரும்பவேண்டியதில்லையாகையால் அதை யாசிக்கமாட்டோம் க்ரமமாக வரவேண்டும் தேஹாவஸாநத்துக்கு முன்னே மோக்ஷம் பெறவேண்டுமென்று மறுபடி ஆர்த்தியாலே ப்ரபத்தி செய்துகொள்ளமாட்டோம், அதற்கு மேலான புருஷார்த்தம் இங்கே கிடைக்கிறதே என்ற கருத்தாம். அப்போது प्रभात-समयासत्ति என்பதற்குத் தாத்பர்யம் என்னவெனில்—மோக்ஷம் வரப்போவது நிச்சயம்; இது, 'ஒரு பகலாய் உணர்த்தியேயாம்' என்கிற மோக்ஷப் பகலுக்கு முன்னுன விடியற்காலம். स्वापोद्बोधव्यतिकरनिभे भोगमोक्षान्तराले என்கிற இக் காலத்திற்கு பாகவத ப்ரஸாதமென்கிற மஹாபுருஷார்த்தத்துடனேயே ஆஸத்தி=நெருக்கம் வேண்டும்; அதையே அபேக்ஷிப்போம் என்றதாம், இந்த ப்ரஸாதம் இராவிட்டால் மோக்ஷம் வராது என்று கருத்தல்ல. இதற்கு எதிராக பாகவதாபசாரம் விஞ்சினுல் அஞ்சுவதற்கு இடமுண்டு என்றும் குறித்ததாம்.

திருவாய்மொழியில் நெடுமாற்கடிமையில் 8-10. முடிவில் ஸாக்ஷாத் ஸ்வாமி தமது இருபத்திஞலாயிரப்படியில் இந்த ச்லோகம் நெடுமாற்கடிமைத் திருவாய்மொழியின் பாசுரங்களின் அர்த்த ஸங்க்ரஹரூபம் என்று கூறி அத்திருவாய்மொழிப் படிக்கிணங்க ச்லோகார்த்தம் அருளிச்செய்தருளினுர், அதனை நமது ப்ரபந்த ரக்ஷையில் சுருக்கியபடி இங்கே குறிப்போம், முதற்பாட்டில் கழிக்கப்பெற்ற ஐச்வர்யபுருஷார்த்தம் இங்கே तृणम् என்னப்பெற்றது 2ல் கழித்த கைவல்யம் अन्यत् என்னப்பட்டது 3ல் கழித்த विभवादिமூர்த்தி கைங்கர்யம் மற்றோர் अन्यत् என்ற சொல்லால் சொல்லப்பெற்றது. 5ம் பாட்டில் கழித்த மோக்ஷானந்தம் இங்கே अपि என்னப்பெற்றது. 6ம் பாட்டில் தள்ளிய ஸர்வேச்வரத்வம் वा என்ற சொல்லால் குறிக்கப்பெற்றது. 'முக்தைச்வர்ய திந ப்ரபாதஸமயாஸத்திம்' என்றது 4ம்பாட்டில் சொன்ன பாகவதகைங்கர்யத்திற்கு அபிவிருத்தியளிக்கும் பகவத் கைங்கர்யத்தைக் குறிக்கும். 6ம் பாட்டில் பணித்த 'மொழிபட்டோடும் கவியமுதம்' என்றது 'தந்நாபி—ஸௌரப்யமுசா வாசா' என்று விவரிக்கப்பெற்றது உலகத்திலுள்ள அமுதுக்கு மேலான நறுமணமுள்ள அவன் உந்திக் கமலவமுதத்திலும் மேம்பட்டது கவியமுதமென்று பாட்டின் கருத்தாம். 9ல் கோதிலடியார் என்பதை शुद्धात्मा என்றுர். 2ல் சயமேயடிமை தலைநின்றுரென்ற இந்திரியாதி ஜயபூர்வமான அடிமையை स्थिरधियाम् என்றுர். நீக்கமில்லாவடியார் என்பதன் பொருளாம் शुद्धान्तसिद्धान्तिना மென்றது. प्रसक्तिं मुहुः என்றது அவர்களின் கலவி அபிமானமாம் சதிர் என்பவற்றைக் குறிக்கும். வாய்க்க என்ற சொல்லுக்கு लभेमहि என்ற சொல்லாம்.

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

## शास्त्रीयनियमनाधिकारः

### சாஸ்த்ரீயநியமநாதிகாரம் 17.

ஙுஜு: என்றது ஊழிதோறூழி என்றதன் சுருக்கம், இப்படி இத்திருவாய்மொழியின் பொருளடக்கமாம். இந்த ச்லோகத்தில் சிற்சில பதங்களுக்கு வேறு பொருள் கொள்ளும் உரைகளும் உண்டு இது இத்திருவாய்மொழிக்கிணங்கிய படி, இதில் முதல்பாதத்திற்குப் பலவிதம் பொருள் கொள்ளுவதில். உத்தர ஸாராஸ்லாதிநியில் இருக்கும் விதமும் இருபத்தினலாயிரப்படியிலுள்ளவிதமும் கீழே கூறப்பட்டன. இனி ராமாவது—ராஜாதிகள் கொடுக்கும் ஐச்வர்யம், अन्यत्—தேவதாந்தர முலமான ஐச்வர்யம். अन्यत्—भगवत्மூலமான ஐச்வர்யம். கைவல்யம் स्वीयो- ऽप्यम். अपि-மோக்ஷம். वा—என்பது 'ஏரார் முயல் விட்டுக் காக்கைப் பின் போவதே' என்றவாறுன ஐஹிக விபவாத்யவதாரரூப பகவத் கைங்கர்யம் இத்யாதி.

புருஷார்த்த காஷ்ட்டாதிகாரம் முற்றும்.

ஸ்ரீமதே நிகமாந்த குரவே நம:

### சாஸ்த்ரீய நியமநாதிகாரம் 17,

இவ்வதிகாரத்தில் ப்ரபந்நனுக்கு சாஸ்த்ரீய மார்க்கத்தில் வ்யவஸ்த்தாபநம் செய்யப்படுகிறது. இங்குக் கேள்வியாவது—கீழே க்ருதக்ருத்யாதிகாரத்திலே, 'வேண்டிய உபாயம் செய்தாய்விட்ட படியாலே இனி மோக்ஷோபாயமாக ஒன்றும் செய்யலாகாது. தேவதாந்தர ஸம்பந்தமும் வேறு பலனுக்கு ஆகுமான படியாலே விடத்தகுந்தது, என்று கூறி அவச்யம் செய்ய வேண்டிய நித்ய நைமித்திகங்களையும் தேவதாந்தர ஆராதநமாகவும் மோக்ஷோபாயமாகவும் செய்யாமல் பகவத் கைங்கர்யமாகச் செயய வேண்டுமென்னப்பெற்றது, மேலே ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநாதிகாரததில் ஸ்வரூப உபாய புருஷார்த்தங்களில் நிஷ்டை குலையாமலிருக்க வேண்டுமென்றதால் உபாயமாகக் கர்மாநுஷ்டாநமும் வேறு பலனுக்காகக் கர்மாநுஷ்டாநமும் கூடாதென்பது ஸ்த்திரப்படுத்தப்பட்டது மேலே உத்தர க்ருத்யாதிகாரத்தில் ஸ்ரீபாஷ்ய ப்ரவசநாதி அநுஜ்ஞா கைங்கர்யம் ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்திருப்பதை யநுஸரித்து. ஜ்ஞாந பக்த்யபிவ்ருத்திக்காகவும் விசேஷ கைங்கர்யங்களுக்காகவும் ப்ரவர்த்திக்க வேண்டுமென்று அநுஜ்ஞா கைங்கர்ய விஷயம் விசேஷித்துக் கூறப்பெற்றது. இதை सन्तोषार्थं विमृशति என்று தொடங்கி 'சொல்ல வேண்டுமவற்றில் ப்ரதாநம் த்வயம்' என்ற வரையிலான வாக்யங்களிலிருந்து தெளியலாம் பிறகு புருஷார்த்த காஷ்ட்டையான பாகவத கைங்கர்யம் விவரிக்கப்பெற்றது. இவற்றில் பகவத் பாகவத கைங்கர்யம் அநுஜ்ஞாரூபமானது ஸர்வ ஸம்மதம். ஆஜ்ஞாரூப கைங்கர்யம் ஆவச்யகமாக விருந்தால்தானே கைங்கர்ய ரூபமாகச் செய்ய வேண்டும். உலகில் எல்லோரும் நித்ய கர்மாநுஷ்டாநம் செய்வது காம்ய

मुकुन्दे निक्षिप्य स्वभरमनघो मुक्तवदसौ स्वतन्त्राज्ञासिद्धां स्वयमविदितस्वामिहृदयः ।
परित्यागे सद्यः स्वपरविविधानर्थजननात् अलङ्घ्यामामोक्षादनुसरति शास्त्रीयसरणिम् ॥

---

உபாயத்தில் அதிகாரம் பெறுவதற்காக. பக்தியோக நிஷ்டனுக்கு आमरणं மோக்ஷார்த்த காம்யமான பக்தி செய்யவேண்டியிருப்பதால் நித்ய கர்மாவை விடமுடியாது. ப்ரபந்நனுக்கு உபாயம் பூர்த்தியான பிறகு ஸஞ்சித கர்மாவும் கழிந்து முக்த ஸாம்யமிருப்பதாலே ஆஜ்ஞாரூபகர்மாநுஷ்டாநத்திற்கு ப்ரஸக்தி ஏது? ஸ்ரீபாஷ்ய ப்ரவசநாதி அநுஜ்ஞா கைங்கர்யந்தானே பாஷ்யகாரர் அருளிச்செய்தார், அதனால் சாஸ்த்ரவச்யனல்லாமல் தன்னிஷ்டப்படி கைங்கர்யம் செய்யலாமென்று தெரிகிறதே. ஸம்ருதிகளிலும் श्रुतिः स्मृतिः सदाचारः स्वस्य च प्रियमात्मनः என்று தன்னிஷ்டப்படியும் இருக்கலாமென்று ப்ரபந்நரை மனத்தில் கருதிக் கூறியதாகத் தெரிகிறது. ஆளவந்தாரும், 'कुर्वित् प्रीत्यैव कारितः' என்று இஷ்டப்படி செய்யலாமென்றார் இத்யாதி. இக் கேள்விக்கு ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்த ஸூக்தியிலிருந்தே சாஸ்த்ரத்தைப் பின்பற்றியே நடக்க வேண்டுமென்று விரிவாகக் காட்டி, மற்றும் ப்ரமாண வசநங்களைக் கொண்டும் பரிஹாரம் செய்ய போகிறாராய் ச்லோகத்தினால் ஸங்க்ரஹிக்கிறார் मुकुन्दे இதி. ச்லோகார்த்தமாவது— मुक्तिभूमिं ददाति इति मुकुन्दः. பரம பதத்தையளிக்கும் எம்பெருமானிடத்தில் स्वभरं—निक्षिप्य—மோக்ஷார்த்தமாகத் தான் செய்யவேண்டும் பாரத்தை ந்யாஸம் செய்து ப்ரபந்நனாய், अनघः ஸஞ்சித புண்யபாபங்கள் கழிந்து, मुक्तवत्—முக்தனுக்கு ஸமானமான असौ—இந்த கைங்கர்யாதிகாரி स्वयं—தான் अविदित स्वामिहृदयः—நாம் என்ன செய்வதில் சேஷிக்குத் திருவுள்ளமுள்ளதென்பதை முக்தனைப் போலே காணுதவனு யிருப்பதால் ஸ்வதந்த்ர ஆஜ்ஞா ஸித்தாம்—ஸ்வதந்த்ரனுன அவனுடைய திருவுள்ளத்தை அறிவிக்க அவனுடைய ஆஜ்ஞையாக ஏற்பட்டதும், परित्यागे-நித்ய நைமித்திக கைங்கர்யத்தை விட்டால் सद्यः— அப்போதே (இப்பிறவிக்குள்ளேயே) स्व—தனக்கும் पर-பிறருக்கும் विविध—பலவிதமான अनर्थ—கேடுகள் जननात्—ஏற்படுவதாலே (ஏற்படுவதாகச் சாஸ்த்ரமும் கூறியிருப்பதாலே) अलङ्घ्यां—மீளவாகாததுமான शास्त्रीयसरणि—சாஸ்த்ர மார்க்கத்தை आमोक्षात्—வர்ணாச்ரம தர்மார்ஹமான தன் தேஹத்திலிருந்து விடுபடுமளவு अनुसरति—பின்பற்ற வேண்டியவனுகிறான், அநுஜ்ஞா கைங்கர்யங்களும் சாஸ்த்ர நெறியை விட்டுத் தன் இஷ்டப்படி செய்யலாகாது. ஆஜ்ஞா கைங்கர்யம் சாஸ்த்ரத்தை யநுஸரித்தேயாக வேண்டுமென்றபடி.

मुक्तवत् என்பது இவனுக்கு प्रारब्धभंगம் இருந்தாலும் அநேகமாகக் கர்மம் கழிந்ததால் உள்ள முக்த ஸாம்யத்தைச் சொல்லுகிறது. मुक्तवत् என்பதை स्वयमविदित என்றவிடத்தில் அந்வயித்தால், முக்தன் தானுகவே தன் தர்மபூத

இச் சேஷத்வ ஸம்பந்தமடியாக भगवद्भागवतविषयங்களில் இவன் பண்ணும் கைங்கர்யம் शास्त्रसापेक्षरुचியாலேயோ शास्त्रनिरपेक्षरुचியாலேயோ என்னில்—இருள்தரு மா ஞாலத்துள் இருக்கிற இவனுக்கு சாஸ்த்ரம் கைவிளக்காக வேண்டுகையாலே यथाशास्त्रமாய், சாஸ்த்ரம் விகல்பித்தவற்றில் यथारुचिயாகக் கடவது.

அது எங்ஙனே யென்னில்—எம்பெருமானார் திருநாட்டுக்கு எழுந்தருளுகிறபோது ஸ்ரீபாதத்திலே ஸேவித்திருந்த முதலிகளுடைய ஆர்த்தி

---

ஜ்ஞாநவிகாஸத்தாலே எல்லாம் அறிந்துவருவது போல் இவன் அறியவில்லை யாகையால் சாஸ்த்ர மூலமே யறிய வேண்டுமென்ற வாசியைக் காட்டும். परित्य.गे என்றவிடத்திலும் அந்வயிக்கலாம். முக்தனுக்கு விட்டபடியாலே வர்ணாச்ரமங்கள் இல்லையாதலால் அவனுக்கு சாஸ்த்ர மார்க்கத்யாகமே; அவனைப் போல் இவன் த்யாகம் செய்தால் ப்ரபத்த்யத்யாயாதிகளிலும் ச்ருதிகளிலும் சொல்லியபடி க்ருத்யாகரணாதிகளில் ப்ரத்யவாயம் உண்டாகையாலே தனக்குப் பலவிதமான (குருடு செவிடு முதலிய) கேடுகளும் லோக ஸங்க்ரஹத்திற்காக நடக்க வேண்டியிருக்க அதை விட்டால் பிறர்களுக்கும் கேடுகளும் நேரும்;

சாஸ்தரஸாபேக்ஷருசியாலே இதி. சாஸ்த்ரம் ஈச்வராஜ்ஞை, ஈச்வரன் சேஷீ என்றறிந்த பிறகு சாஸ்த்ரீயத்தை ருசியால்=ப்ரீதியால்செய்யப்போவது நிச்சயம். ஆனாலும் வேறுவிதமாக ருசித்தால் அப்படியும் செய்யலாமே. ஏன் சாஸ்த்ரீயத்தில் இழிந்து பல நிர்பந்தத்திற்கு ஆளாகவேண்டுமென்று பூர்வபக்ஷியின் கருத்து. சுருக்கமாக உத்தரம் அருளுகிறார் இருள் இதி. அஜ்ஞாநத்தையே விளைவிக்கின்ற இப் பெரும் பூமியிலே இருக்கின்றபடியால் அவ் வஜ்ஞாநவிருளைப் போக்க ஒரு விளக்குவேண்டும். அது கைவிளக்கு—கரஸ்த்தமான விளக்கு. ஜீவாத்ம பரமாத்மாக்களையே சாஸ்த்ரமன்றி வேறு வழியால் அறியமுடியாத போது இவன் அவனுக்குச் செய்யவேண்டும் கைங்கர்யம் இப்படிப்பட்டதென்று எங்ஙனே யுக்தியால் ஊஹிக்க முடியும்? ஆகையால் சாஸ்த்ர தீபத்தைக் கொண்டே யறியமுடியும் அதே சாஸ்த்ரம் स्वस्य च प्रियम् என்று தன்னிஷ்டப்படி செய்யலாமென்று சொல்லியிருக்கிறதே என்னில்—அந்தப் பொதுவான வாக்யத்தை ப்ரபந்ந விஷயமாகச் சுருக்குவது தகாது. ப்ரபந்ந விஷயமேயான ஆஜ்ஞா வாக்யத்திற்கு விருத்தமுமாகும். ஆகையால் எங்கு அநேக வழிகள் சொல்லப்பட்டிருக்கிறனவோ, பொதுவாகச் சொல்லப்பட்ட அவற்றில் ஒரு சாஸ்த்ரீய மார்க்கத்தைத் தன்னிஷ்டப்படி கொள்ளலாமென்று அதன் பொருள். இதனை சாஸ்த்ரம் விகல்பித்தவற்றில் यथारुचि என்றருளினர். அதெங்ஙனே என்னில் இதி. எம்பெருமானார் அநுஜ்ஞாகைங்கர்யம் மட்டும் கூறி ஆஜ்ஞாகைங்கர்யத்தை விட்டிருக்க यथाशास्त्रமாகக் கடவதென்பது எங்ஙனே என்று கேள்வியாம். எம்பெருமானார் ஸ்ரீஸூக்தியி

யைக் கண்டருளி இவர்களை அழைத்தருளி, "என்னுடைய வியோகத்தில் தேஹத்யாகம் பண்ணினார் உண்டாகில், ஆளவந்தார் ஸ்ரீபாதமே, என்னோடு அவர்களுக்கு ஸம்பந்தமில்லை" என்றருளிச்செய்ய, இவர்களும் இத்தைக் கேட்டு மிகவும் ஶோகார்த்திராய் "இனி எங்களுக்குச் செய்ய அடுப்பது எது?" என்று விண்ணப்பம் செய்ய, இவர் அருளிச்செய்தருளின வார்த்தை— "ஒருவன் ப்ரபந்நனானால் அவனுடைய ஆத்ம யாத்ரை பகவததீனையாகை யாலே அதில் அவனுக்கு அந்வயமில்லை. உண்டென்றிருந்தானாகில் ஆத்ம ஸமர்ப்பணம் பொய்யாமித்தனை. தேஹயாத்ரை கர்மாதீனை யாகை யாலே அதுக்குக் கரையவேண்டா, கரைந்தானாகில் நாஸ்திகனுமித்தனை;

---

லிருந்து யதாசாஸ்த்ரம் என்பதை ஸ்தாபிப்பதற்காக எம்பெருமானார் அருளிச்செய்த வார்த்தைகளை அருளிச்செய்த ஸமயத்துடன் அநுவாதம் செய்கிறார் எம்பெருமானார் இதி. ஸ்ரீபாதத்திலே—தம் திருவடிகளிலே, முதலிகளுடைய—ஜ்ஞாநிகளுடைய, ஆர்த்தியை—விட்டுப் பிரிந்திருக்க மாட்டாத வ்யஸநத்தை, தேஹத்யாகம்—ஆத்மஹத்தி. பண்ணினாருண் டாகில் என்பதற்கு ஆளவந்தார் ஸ்ரீபாதமே என்பதோடு அந்வயமானால், தேஹத்யாகம் பண்ணியவர்களுக்கு ஸ்ரீபாதம் கிடைக்குமென்று விபரீத மாய் முடிகிறதே. ஸ்ரீபாதமே என்பதற்கு ஸ்ரீபாதத்தில் ஆணை என்கிற அர்த்தம் எப்படி கிடைக்குமென்னில்—பண்ணினார் உண்டாகில் என்பதற்கு 'என்னோடு அவர்களுக்கு ஸம்பந்தமில்லை' என்பதோடு அந்வயம். இப்போது ச்ரீபாதமே என்பது மேலோடு சேர்ந்து ஏகவாக்யமாய் ச்ரீபாதம் ஸாக்ஷி யாக—ச்ரீபாதம் ஆணையாக என்ற பொருள்படும். செய்யவடுப்பது எது. தேஹம் வைத்திருந்து செய்யக்கூடியதென்ன? ஆசார்ய ஸந்நிதானமிராமற் போனாலும் செய்யவேண்டிய நித்ய கர்மாநுஷ்டாநத்திற்கான காலம் போக மற்ற காலம் முழுமையும் ஆசார்யாதீநமாகவே யிருந்து தேஹயாத்ரையும் நடந்து வந்தபடியால் அவ் விசாரமின்றி ஸ்வாமி திருவாய்மலர்ந்தருளிய தைக் கேட்டபடியே உய்ந்து வந்தோம்; இனி நாங்கள் செய்யக்கூடியது என் என்று அவர்களின் கருத்து. இதன் மேல் ஒருவன் இத்யாதி. எம்பெரு மான் அநாதரித்திருக்கும் என்றவரையில் அவர் வார்த்தையாகும். நீங்கள் வருந்துவது எதற்காக. நம்முடைய ஸாந்நித்யம் இல்லையாகில் ஆத்ம யாத் ரையும் தேஹயாத்ரையும் எப்படி நடக்கும் என்று. இது தவறு. ப்ரபந்நனு பிறகு தேஹாவஸாநத்தில் மோக்ஷம் நிச்சயமானபடியால் நம்முடைய ஸாந் நித்யத்தால் ஆத்மயாத்ரைக்கு ஆவதென்ன? தேஹயாத்ராவிஷயமாக ப்ர பந்நன் கவலையே படக்கூடாது. பூர்வகர்மாதீநமாக நடப்பது போது மென்று தானே தேஹாவஸாந பர்யந்தம் இருப்பை யிசைந்து ப்ரபத்தி செய்து கொண்டது. என்து தேஹாவஸாநத்தில் உங்களுக்கு மோக்ஷ த்தை அப்போது கேட்கவில்லையே. கேட்டிருந்தாலும் கவலையில்லை. கரைதல் கவலைப்படுதல். இவ்வளவால் தேஹத்யாகம் செய்வது சாஸ்

ஆகையால் உபயயாத்ரையையுங் கொண்டு இவனுக்குக் கார்யமில்லை.

ஆனால் மநோ, வாக் காயங்களாகிற த்ரிவிதகரணங்களையும் கொண்டு வேண்டிற்றுச் செய்து திரியவமையுமோ என்னில், அது இவனுக்கு ஸ்வரூபமன்று. உபாயாம்சத்தில் அந்வய மில்லாவிட்டாலும், ப்ராப்ய மான கைங்கர்யத்திலே இவற்றை அந்வயிப்பிக்குமத்தனை.

அதில் இவனுக்கு இங்கிருந்த நாள் பண்ணலாம் கைங்கர்யம் அஞ்சு உண்டு: அவையாவன—(1) பாஷ்யத்தை வாசித்து ப்ரவர்த்திப்பித்தல் (2) அதுக்கு யோக்யதையில்லை யாகில் அருளிச் செயலைக் கேட்டு ப்ரவர்த்திப் பித்தல் (3) அதுக்கு யோக்தை யில்லையாகில் உகந்தருளின திவ்ய தேசங் களுக்கு அமுதுபடி சாத்துப்படி திருவிளக்குத் திருமாலைகளை யுண்டாக்குதல்

---

த்ர விருத்தம். ப்ரபந்நன் ஆத்ம யாத்ரைக்காக வேறொன்றைக் கொண் டால் உபாயாந்தர ஸ்வீகாரமாகும். அது சாஸ்த்ர விருத்தம். தேஹயாத் ரையும் பூர்வகர்மாதீநமாயிருப்பது போதாதென்று தேவதாந்தரஉபாஸநாதி களால் அதிக ஐச்வர்யத்திற்கு முயன்றால் அதுவும் ப்ரபந்ந நிஷ்டைக்கு விருத்தமாய் சாஸ்த்ரவிருத்தம். அது தகாதென்று தெரிவித்ததாம். இப்படி மேல்வாக்யங்களிலும் காண்க. வேண்டிற்றுச்செய்து-தனக்குத்தோன்றியபடி யெல்லாம் செய்து திரியவமையுமோ என்னில், திரியலாமாவென்று கேட்கில். ஸ்வரூபமன்று சேஷியின் உகப்புக்காக ஆவது நீங்கலாக வேறு சேஷன் செய்யத்தகாதே. எது அவன் உகப்புக்காமென்று சாஸ்த்ர மூலமே யறிவது தகுமென்று கருத்து. அந்த உவப்பு மோக்ஷபலத்திற்கு உதவுகின்றதா ஸ்வயம் ப்ரயோஜநமா என்னில்—உபாயாம்சத்தில் அந்வயமில்லை; ஸ்வயம் ப்ரயோஜநம்' என்கிறார் உபாயேத்யாதியால். நித்ய கர்மாநுஷ்டாநத்தை விட்டுத் திரிவதை அவர்கள் கேட்கவில்லை. பாஷ்யகாரர் எழுந்தருளியிருக் கும் போது அவர் மூலமாக ஏற்பட்ட நற்போதுபோக்கு வேறு எது மூல மாக நடக்குமென்றே அவர்கள் கேள்வி. நித்யகர்மாநுஷ்டாந விஷயமா யிருந்தால் स्वपर विविधानर्थं जनन तु என்ற தோஷத்தை எம்பெருமானாரே அருளிச்செய்திருப்பர். ஆக அநுஜ்ஞா கைங்கர்யத்தை மட்டும் மேலே குறிக்கிறார். அஞ்சு உண்டு இதில் ஏதேனும் ஒன்று சக்திக்குத் தக்க வாறு கொள்ளலாம். சேர்த்தாலும் விரோதமில்லை. பிள்ளைலோகாசிரியர் குறித்தது=ச்ரீபாஷ்யவிஷயம் திவ்யதேச கைங்கர்யம் பாகவதர்பக்கலில் இருப்பு என்ற மூன்று மட்டும், பாஷ்யத்தை இதி. நாம் இரா விட்டாலும் நமது க்ரந்தமிருக்கிறபடியால் அதை ஓதுவது நம் பேச்சை நேரில் கேட்பதற்கு ஸமானம்; அதில் செய்யும் சர்ச்சை நம்மோடு போதுபோக்குக்கு ஸமாநமென்று திருவுள்ளம். வாசித்து— ஆசார்ய மூலமாக ஓதி. ஓதாமல் ப்ரவர்த்திப்பித்தல் ஸம்ப்ரதாய ரக்ஷண சாஸ்த்ர விருத்தம். வாசித்து என்பதற்கு वाचयित्वा—என்று ப்ரதிபதமா கையால் ப்ரவர்த்திப்பிக்கிற காலத்தில் பங்க்திகளை விடாமல் ஸேவித்து

(4) அதுக்கு யோக்யதை யில்லையாகில் த்வத்தினுடைய அர்த்தாநுஸந்தானம் பண்ணுதல் (5) அதுக்கு யோக்யதை யில்லையாகில், 'என்னுடையவன்' என்று அபிமானிப்பானொரு ஸ்ரீவைஷ்ணவனுடைய அபிமானத்திலே ஒதுங்கி வர்த்தித்தல் செய்யலாம் (?).

இப்படி வர்த்திக்கும் அதிகாரிக்கு முன்னடி பார்த்து வர்த்திக்க வேண்டுவன மூன்று விஷயமுண்டு. அவையாவன—(1) அநுகூலரென்றும்

---

ஸேவிக்கச் செய்து ப்ரவர்த்தநம் செய்ய வேண்டுமென்பதாம். அருளிச்செயலை—நாலாயிரத் திவ்ய ப்ரபந்தத்தை கேட்டு—ஆசார்ய மூலம் அறிந்து வாசிப்பதும் கேட்பதும் கூட கைங்கர்யம். அதன் பிறகு ப்ரவர்த்திப்பித்தல். அருளிச்செயல்விஷயத்திற்கு அதிக ஸம்ஸ்க்ருத வேதவேதாந்த நாநா சாஸ்த்ராதிகளில் ஜ்ஞாநம் அவச்யமில்லை யாகையால் அது ஸுலபமானது. உகந்தருளும் திவ்ய தேசங்களுக்கு = எம்பெருமான் கோயில் கொண்ட இடமெல்லாம் திவ்யதேசமே. அவற்றில் ஆழ்வார்கள் மங்களாசாஸநம் செய்தவை உகந்தருளியவையாகும்; அல்லது எந்தக் கோவில்களில் தேவதைகள்ரிஷிகள் ப்ரார்த்தனைக்கு எம்பெருமான் உகந்து உங்களிஷ்டப்படி ஸாந்நித்யம் செய்கிறேனென்று அருளி மன்னியிருக்கின்றானோ அவை உகந்தருளின திவ்ய தேசங்களாம். அமுதுபடி—நைவேத்ய வகை; சாத்துப்படி சந்தநாதி. இவற்றிற்கும் அநதிகாரியாய் சிலருண்டு. அவர்களுக்குப் போதுபோக்கு த்வயம். அர்த்தாநுஸந்தாநம் என்றதாலே, தனக்கு முடிந்தவரையில் உபயவேதாந்தார்த்தங்களை அதில் அடக்கி அநுஸந்திக்கலாமென்றதாம். அடியோடு ஜ்ஞாநமில்லாதவனுக்கு ஐந்தாவது ஒன்றே. அபிமாநத்தில் ஒதுங்கி. பவ்யனாய் அவ்வபிமாநத்திற்கு விஷயமாகி. வர்த்தித்தல் = இருக்கை. இதன்மேலுள்ள செய்யலாம் என்ற சொல் இல்லாமலிருக்கலாம். கீழே கைங்கர்யங்கள் அவை யாவன என்று தொடங்கி யிருப்பதால் வர்த்தித்தல் என்பதோடு அதற்கு அந்வயம் பூர்த்தியாகிறது. கீழ் தேஹயாத்ரையை ப்ரஸ்தாவம் செய்ததால் 'शरीरयात्राऽपि च ते न प्रसिद्ध्येद् अकर्मणः' என்கிறபடி பகவதாராதந பஞ்சமஹாயஜ்ஞாதி பூர்வகமாக, 'ते तु अघं भुञ्जते पापाः ये पचन्ति आत्मकारणात्' என்றவாறின்றி நடத்தவேண்டி யிருப்பதால் அதற்கு சேஷமாக ஸர்வ நித்ய கர்மாநுஷ்டாநம் இருப்பது சொல்லாமலே விளங்கும்.

இப்படி ஆஜ்ஞா—அநுஜ்ஞா கைங்கர்யத்தில் இழிந்தவன் தேஹ யாத்ரா சேஷமாக ப்ரதிகூல ஸம்ஸர்க்கம் கொண்டாலும் பாஷ்யாதி ப்ரவசந ருசியாலே தகாதவர்களுக்கு ப்ரவசநாதிகள் செய்தாலும் சாஸ்த்ர விரோதம் உண்டாகையாலே அது விஷயமாக மேலே அருளிச்செய்கிறார் இப்படி வர்த்திக்கும் இதி. முன்னடி பார்த்து நடக்கிறவர்கள் மேலே அடி வைப்பதற்கு முன்பே. வைக்குமிடம் எவ்வாறு உளது என்று கண்டு தகுந்தவிடத்தில் வைப்பதுபோல் நாம் யாரிடம் இது செய்கிறோமென்று

(2) ப்ரதிகூலரென்றும் (3) अनुभयரென்றும். அநுகூலராவார்—ஸ்ரீவைஷ்ணவர்கள்; ப்ரதிகூலராவார்—भगवद्द्विட்டுக்கள்; अनुभयராவார்—இவ்விரண்டுமில்லாத ஸம்ஸாரிகள். இதில் அநுகூலரைக் கண்டால் சந்தந குஸுமாதிகள் போலவும். நிலவு தென்றல் போலவும், अभिमत விஷயங்கள் போலவும் உகந்து வர்த்திப்பான். ப்ரதிகூலரைக் கண்டால் सर्पाग्निகளைக் கண்டாற்போலே வெருவி வர்த்திப்பான். अनुभयரைக் கண்டால் काष्ठलोष्टादिகளைக் கண்டாற் போலே तृणवत्करித்து வர்த்திப்பான். இவர்கள் அநுகூலியார்

---

முன்னே கவனித்துச் செய்யவேண்டுமென்றபடி. அந்த இடமே விஷயமென்னப்படுகிறது. விஷயபதம் தேசத்தையும் சொல்லும். அவையான—அந்த இடங்களாவன. 'आनुकूल्यमिति प्रोक्तं सर्वभूतानुकूलता' என்றபடி இவன் ஸர்வ ப்ராணிக்கும் அநுகூலமாக விருக்கவேண்டியிருந்தாலும் ப்ரபந்நன் பிறர்களுடைய குணாகுணங்களை யறிந்து தக்கவாறு நடந்துகொள்ள வேண்டும். உலகில் எல்லோருமே சிலருக்கு அநுகூலராயும் சிலருக்கு ப்ரதிகூலராயுமிருப்பதால் சிலரை அநுகூலரே யாகவும் சிலரை ப்ரதிகூலரே யாகவும் பிரிக்க முடியாது. தனக்கு அநுகூலர் தனக்கு ப்ரதிகூலர் என்று பிரிப்பதானால் அஸத்துக்களிற் கூட சிலர் இவனுக்கு அவ்வாறு ஆகலாமாகையால் தத்ஸஹவாஸமும் செய்ய அநுமதித்ததாகும். ஆகையால் 'सद्भिरेव सहाऽऽसीत सद्भिः कुर्वीत सङ्गमम्। सद्भिर्विवादं मैत्रीञ्च नासद्भिः किञ्चित् आचरेत्॥' என்றபடி ப்ரஹ்மவித்துக்களான ஸத்துக்களை அநுகூலராகக் கொண்டு அப் பதங்களுக்குப் பொருள் கூறுகிறார். அநுகூலராவார் இதி. பகவத்விட்டுக்கள் - பகவத்த்வேஷிகள். சந்தநகுஸுமாதிகள் இதி குஸுமம்—புஷ்பம். காமபோகத்திலிழிந்த ஸ்த்ரீபுருஷர்களுக்கு போகத்தில் ருசியை வ்ருத்திசெய்கின்றவையாம் சந்தநாதிகள். சந்த்ர நிலவும், தென்றல் காற்றும் தாபத்தையும் ச்ரமத்தையும் போக்கும். இவை போகத்திற்கு முன்னும் பின்னுமாகுமவை. அபிமத விஷயங்கள்—பரஸ்பரம் ஸ்த்ரீ புருஷர்களே. பாகவதரைக் கண்டால் அவர்களிடம் ப்ரபந்நன், காமுகன் சந்தநாதிகளிற் போல் ஆதரம் வைக்க வேண்டுமென்றதாயிற்று. ஸர்ப்பாக்நிகளை ஸர்ப்பம் ஒருவரை யழிக்கும். அக்நி பலரை, அல்லது ஸர்ப்ப விஷம் சிலருக்கே மரணத்திற்காகும். அக்நி எவருக்கும் உருவை யழிக்கும். வெருவி—அஞ்சி. இந்த ப்ரதிகூலர்மூலமாக பகவத் பாகவத கைங்கர்யத்திற்கு என்ன விரோதம் வருமோ என்று அஞ்சுவதாம். काष्ठ—கட்டை. लोष्टம்—மண்கட்டி. तृणवत्करித்து—புல்லைப்போலே ஸாதகமும் பாதகமுமாகாதென்று பாவித்து, ஸந்தோஷ பயங்களை விட்டு; இவ்வளவால் ப்ரதிகூலாதிகளுக்கு ப்ரவசநாதிகள் செய்யலாகாதென்று தேறும் அவர்களே பாக்யவசத்தாலே பகவத் த்வேஷத்தை விட்டு தத்தவம் அறிய ருசியுள்ளவரானால் அப்போது உபதேச அதிகாரிகளாகலாம், இராமற் போனாலும். இவன் அவர்களை த்வேஷிக்காமல் அவர்களுக்கு நல்ல தசை

களாகில் ஐயோ என்று இவர்கள் பக்கலிலேக்ருபைபண்ணியிருக்கவும் அடுக்கும்.

இப்படிச் செய்யவொட்டாதொழிகிறது அர்த்தகாமங்களில் ப்ராவண்யம். அர்த்தகாமங்களடியாக ச்ரீவைஷ்ணவர்களை அநாதரித்திருக்குமாகில் ஸார்வபௌமனு யிருப்பானொரு ராஜாவினுடைய புத்திரனை ராஜஸந்நிதியிலே பரிபவித் தால் ராஜா வெறுக்குமாப் போலே எம்பெருமான் திருவுள்ளம் சீறும். அர்த்த காமங்களடியாக ப்ரதிகூலரை ஆதரித்திருக்குமாகில் ராஜா ஸார்வ பௌமனுயிருக்க ராஜமஹிஷி க்ஷுத்ரஜந்துக்கள்பக்கலிலே மடிப்பிச்சை புக்கால் ராஜாவுக்கு அவத்யமாய் அத்தாலே அவளை அவன் வெறுக்குமாப்போலே எம்பெருமான் வெறுத்திருக்கும். அர்த்த காமங்களடியாக அநுகூலரை ஆதரி க்குமாகில் ரத்நத்துக்கும் பாஷாணத்துக்கும் வாசி யறியாதாப்போலே இவ னுக்குப் பிறந்த ஜ்ஞாநம் கார்யகரமாயிற்றில்லை (யாகாதே) யென்று அவ னளவிலே எம்பெருமான் அநாதரித்திருக்கும்.

இப்படி ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்த உத்தரக்ருத்யத்தில்,

---

வரவேண்டுமென்று மனத்தில் தயையோடிருக்க வேண்டுமென்கிறார் இவர் கள் இத்யாதியால். செய்ய வொட்டாதொழிகிறது=கீழ்ச்சொன்னபடி மூவரிடம் முவ்வகையாக நடக்கச் செய்யாமலிருப்பது. அர்த்தகாமங்களில் ப்ராவண்யம்—அவ்விரு புருஷார்த்ததிலும் விசேஷ நோக்கு ப்ராவண்யத் தால் முன் சொன்ன ரீதி மாறினால் என்ன தோஷமென்பதை விவரிக்கிறார் அர்த்தேதி. அர்த்தகாமங்களை விடவேண்டுமென்று சொல்லாமல் அதற்காக வைஷ்ணவர்களை அநாதரிக்கக் கூடாதென்றதால் சாஸ்த்ர விருத்தமான அர்தககாமங்கள் தகாவாகிலும் அவிருத்தமானவை கூடும். ஆனாலும் வைஷ்ணவர்களை யநாதரிதது அவற்றைப் பெற முயல்வது தகாதென்ற தாம். ராஜ ஸந்நிதியிலே இதி. புத்ரனைப் பரிபவிப்பது ராஜஸந்நிதியிலே யாகில் ராஜாவுக்கு அப்போதே அது ப்ரத்யக்ஷமாகிறாப் போல் ஈச்வரன் எங்கும் வ்யாபித்துப் பார்த்த வண்ணமிருப்பதால் எங்கு பாகவதாபசாரப் பட்டாலும் ஈச்வரன் எதிரில் செய்ததாகும். ராஜமஹிஷீ—ராஜாவின் ப்ரதாநபத்நீ. க்ஷுத்ர ஜந்துக்கள்=கீழ்மக்கள். மடிப்பிச்சை புக்கால். யாருக்கும் தெரியாதபடி இருப்பதற்காகவோ பாத்ரமில்லை யென்கிற ஏழ் மையைக் காட்டவோ மடித்துணியில் பிச்சை பெறப் புகுந்தாலென்றபடி. பிச்சைக்குப் போவதே அவத்யம்; அபகீர்த்தியாம். இது மிக்க அவத்யமாம். பாஷாணம்—கல். கார்யகரமாயிற்றில்லையாகாதே—கார்யகரமாயிற்று= கார்யகரமாகை இல்லையன்றோ என்றபடி. சீறும் வெறுத்திருக்கும் என்ற சொற்களால் அதன்மூலம் அநிஷ்டமும் விளையுமெனவும் குறித்ததாம்.

ச்ரீபாஷ்யகாரர்வார்த்தையில் அர்த்தகாமங்கள் அடியாக என்ற வாக்யத்தின் கருத்தை வெளிப்படுத்திக் கொண்டு இங்கு அருளிச்செய்த தெல்லாம் சாஸ்த்ரத்தை ப்ரமாணமாகக் கொண்டே என்று ப்ரபந்நனுக்கு சாஸ்த்ர வச்யதையை ஸ்தாபிப்பதற்காக விவரிக்கிறார் இப்படி இத்யாதி

"कुलटाषण्ढपतितवैरि(स्वैरि)भ्यः काकिणीमपि। उद्यतामपि गृह्णीयान्नापद्यपि कदाचन॥",
"पररन्ध्रेषु जात्यन्धाः परदारेषु पुंसकाः। परिवादेषु ये मूकास्तेऽतीव दयिता मम॥"
इत्यादिகளிற்படியே धर्मविरुद्ध-अर्थकामங்கள் दूरतो निरस्तங்களானபடியாலே धर्माविरुद्धங்களான अर्थकामங்களுபாதியாகவும் अनुकूल-प्रतिकूल-उदासीन விஷயங்களில் தான் நின்ற நிலை குலையலாகாதென்று திருவுள்ளம்.

அதில் அநுகூலரை அநாதரிக்கலாகாதென்னுமிடம், श्रीशाण्डिल्यस्मृतियிலே
"अनादृतसुतं गेही पुरुषं नाभिनन्दति। तथाऽनर्चितमद्भक्तं भगवान् नाभिनन्दति॥"
என்று சொல்லப்பட்டது. प्रतिकूलसंसर्गம் ஆகாதென்னுமிடம், महाभारतத்திலே,
"ये द्विषन्ति महात्मानं न स्मरन्ति च केशवम्। न तेषां पुण्यतीर्थेषु गतिः संसर्गिणामपि॥"
என்று சொல்லப்பட்டது. அப்படியே
"मूढैः पापरतैः क्रूरैर्भगवच्छास्त्रदूषकैः। संबन्धं नाचरेत् भक्तिर्नश्यत्येतैस्तु सङ्गमे॥"

---

யால். 'அர்த்தகாமங்களடியாக' என்றது தர்ம அவிருத்த அர்த்தகாம விஷயம். தர்ம அவிருத்தமே செய்கிறோமென்று கொண்டும் இதர ஸம்ஸாரிகளைப் போலே பாகவத விரோதமும் பாஷண்டியநுஸரணமும் ப்ரபந்நனுக்குத் தகா என்றபடி. தர்மவிருத்த அர்த்தகாமங்களை அபேக்ஷிப்பதே தவறென்பதற்கு ப்ரமாணம் 'कुलटेत्यादि. சாண்டில்ய ஸ்ம்ருதி-3. வ்யபிசாரி ஸ்த்ரீ, நபும்ஸகன், தர்ம ப்ரஷ்டனான பதிதன்; டைவன் இவர்களிடத்தினின்று काकिणीमपि—ஸ்வல்பத்ரவ்யத்தைக்கூட, उद्यतामपि—அவர்களே கொடுக்க முபன்றிருந்தாலும் आपदि अपि कदाचन—எந்த ஆபத்காலத்திலும் न गृह्णीयात्—பெறக் கூடாது वैरि என்ற பதம் விரோதியைச் சொல்லும். இங்கே स्वैरि என்ற பாடமும் உண்டு. ஸ்வேச்சையாகத் திரியும் विटादिகள் ஸ்வைரிகள். परेति. पररन्ध्रेषु—பிறருக்குக் குற்றமுள்ள விடங்களிலே जात्यन्धाः—பிறவிக் குருடராயும், அதாவது அவற்றைக் காணாதவர்போன்றவராயும், परदारेषु—பிறரின் ஸ்த்ரீகளிடத்திலே अपुंसकाः—நபும்ஸகராயும். परिवादेषु—பிறரைப் பழிப்பதில் मूकाः—ஊமையராகவும் ये—எவர் ஆவரோ, ते—அந்த மஹான்கள் मम अतीव दयिताः எனக்கு மிகவும் இஷ்டமானவர்கள். விஷ்ணு தர்மம். 76. दूरतो निरस्तங்கள்—அபேக்ஷிக்கவே கூடாதவைகள். உபாதியாக—காரணமாக. பிறருடைய தோஷத்தைக் காண்பது தூஷிப்பதெல்லாம் அர்த்தகாமங்களடியாகத் தானிருக்குமென்று கருத்து. பலனை நோக்காத போதும் செய்வது தவறே. अनादृतेति (4). உலகில் க்ருஹஸ்தனானவன் தன் மகனை அநாதரிக்கின்ற पुरुषं—வேலைக்காரனை. न अभिनन्दति—கொண்டாடுவதில்லை; அது போல் பகவான் ஆப்த பக்தர்களை அர்ச்சியாதவனைக் கொண்டாட மாட்டான். ये-இதி. (சாந்தி 336.) ஸர்வாந்தர்யாமியாய் ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கும் காரணமான நாராயணனை த்வேஷிப்பவருக்கும், ஸ்நாநாதி காலத்தில் அவனை நினைக்காதவர்களுக்கும் புண்ய தீர்த்தங்களிலே பலனில்லை. அவரோடு கலப்புண்டவருக்குமில்லை. मूढैरिति. அஜ்ஞாநிகளும் பாபத்திலே பற்றுள்ளவரும் க்ரூர ஸ்வபாவமுள்ளவரும்

என்று प्रतिकूलसंसर्गம் भगवत्प्रेमத்தை அழிக்குமென்று சொல்லப்பட்டது, உதாஸீநரை த்ருணவத்கரித்திருக்க வேணுமென்னுமிடம்,
“अद्यप्रभृति हे लोका यूयं यूयं वयं वयम् । अर्थकामपरा यूयं नारायणपरा वयम् ॥
नास्ति सङ्गतिरस्माकं युष्माकं च परस्परम् । वयं तु किङ्करा विष्णोर्यूयमिन्द्रियकिङ्कराः ॥”
इत्यादिகளிலே प्रसिद्धம்.

இப்படி முன்னடி பார்த்து வர்த்திக்கவேணுமென்றருளிச்செய்த அர்த்தம் शास्त्रवेद्यமாகையாலே, शास्त्रीयங்களுக்கு உபலக்ஷணமாக सारोद्धारம் பண்ணி இவரருளிச்செய்த கைங்கர்யங்களும் தான் வேண்டினபடி செய்ய வொண்ணாமையாலே शास्त्रोक्तமான நியமத்தோடே செய்தால் கைங்கர்யமா மென்று सूचतம். “வேண்டிற்றச் செய்து திரியவமையுமோ வென்னில் அது இவனுக்கு ஸ்வரூபமன்று” என்றருளிச்செய்தபடியாலே “अशास्त्र-मासुरं कृत्स्नम्” என்று ஆளவந்தார் அருளிச்செய்தபடியே शास्त्रविरुद्धங்கள் दैवप्रकृतिயான இவன் ஸ்வரூபத்துக்குப் பொருந்தாமையாலும்,
“श्रुतिः स्मृतिर्ममैवाज्ञा यस्तामुल्लङ्घ्य वर्तते । आज्ञाच्छेदी मम द्रोही मद्भक्तोऽपि न वैष्णवः ॥”

---

பாஞ்சராத்ர தூஷகர்களும் சேரத் தகாதவர்கள். சேர்ந்தால் பக்தி டழியும். இப்படி அநுகூல ப்ரதிகூல விஷயத்திலே தவருக நினைப்பவர்களுக்கு பகவானுடைய அப்ரீதியும் பக்திலோபமும் சொல்லப்பட்டது. अद्यप्रभृत इति. हे लोकाः—ஸாதாரண ஜநங்களே! இன்றுமுதல் நீஙகள் நீங்களே, நாங்கள் நாங்களே, நீங்கள் அர்த்தகாமங்களிலே நோக்குள்ளவர்கள், நாங்கள் நாராயணனிடத்தில், உங்களுக்கும் எங்களுக்கும் சேர்க்கையில்லை, நாங்கள் விஷ்ணுவுக்கு அடிமைகள்; நீங்கள் இந்த்ரியங்களுக்கு. ‘முன்னடி பார்த்து’ ‘வேண்டிற்றுச் செய்ய’ எனகிற ச்ரீபாஷ்யகார வாக்யஙகளிலும் சாஸ்த்ர அநுஸரணம் அவச்யமென்று கருதப்பட்டதென்கிருர் இப்படி இதி. शास्त्रवेद्यமாகையாலே என்பதற்கு ஒண்ணாமையாலே என்பதோடும் ஸூசித மென்றதோடும் அந்வயம். கைங்கர்யங்களுமென்றதற்கு கைங்கர்யமா மென்பதோடும் அந்வயம். மதப்ரசார ஸ்ரீவைஷ்ணவ ஸம்ருத்திகளுக்குக் காரணமாகையாலே இவ் வைந்து கைங்கர்யங்களைச் சொன்னலும் மற்ற கைங்கர்யங்களும் ஸம்மதமே. இவற்றைப் போல் மற்றவற்றையும் சாஸ்த்ர முறையிலேயே நடத்தவேண்டும். ஸ்வரூபமன்று. விஷ்ணுசேஷத்வ ஸ்வரூபம் கெடுமென்றபடி. இது ஆஸுரம் என்ற சொல்லாலும் न वैष्णवः என்ற சொல்லாலும் அறிவிக்கப்பெறும். அப்போது இவர்களுக்கு அஸுர கதியே யாகுமென்றபடி. கீதையின் 17வது அத்யாயத்தின்படி சாஸ்த்ர விருத்தமெல்லாம்அஸுரர்க்கானது தைவப்ரக்ருதியான வைஷ்ணவனுக்காகா தென்றதாம். श्रुतिरिति விஷ்ணு தர்மம் 6. வேதமும் ஸ்ம்ருதியும என்னுடைய ஆஜ்ஞையேயாம். அதை மீறி யிருப்பவன் என்னுடைய ஆஜ்ஞையை அழிப்பவன். எனக்கு த்ரோஹி. என்னிடம் பக்தனுனலும் அவன் வைஷ்ணவனல்லனென்றதாம். தன் இஷ்டப்படி செய்வது தகாது, அவன்

என்று அடிமைகொள்ளுகிறவன் அருளிச்செய்தபடியாலும் இவன்சரீரத்தோ டிருந்த காலம் சாஸ்த்ரவச்யனுய் அடிமைசெய்யவேணுமென்று திருவுள்ளம்.
"निजकर्मादि भक्त्यन्तं कुर्यात् प्रीत्यैव कारितः। उपायतां परित्यज्य न्यस्येत् देवे तु तामभीः॥"
என்ற கீதார்த்தஸங்க்ரஹத்தில் "प्रीत्यैव" என்கிற அவதாரணத்தாலே साधनत्वबुद्धियை வ்யவச்சேதித்தாரென்னுமிடம். "उपायतां परित्यज्य" என்று விவரிக்கையாலே வ்யக்தம் சாஸ்த்ரீய கைங்கர்யத்தில் ப்ரீதியினுடைய प्रेरकत्वातिशयம் விவக்ஷிதமானாலும், "निजकर्मादि भक्त्यन्तम्" என்கிற இவற்றின் ஸ்வரூபத்துக்கு சாஸ்த்ரமே ப்ரமாணமென்னுமிடம் निजकर्मशब्दத்தாலே த்யோதிதமாயிற்று.

இச் சாஸ்த்ரீய நியமம்

"अविप्लवाय धर्माणां पालनाय कुलस्य च। संग्रहाय च लोकस्य मर्यादा स्थापनाय च॥

---

இஷ்டப்படியே யென்ற பிறகு இருள் தரு மா ஞாலத்தில அவனிஷ்டம் அறிவது அவனது ச்ருதி ஸ்ம்ருதிகளைக் கொண்டு தானே யென்றபடி.

ஆளவந்தாருடைய ஸூக்தியில் ப்ரபந்நனுக்கு எந்த கைங்கர்யத்தில் ப்ரீதியோ அதைச் செய்யலாமென்று தெரிவதால் சாஸ்த்ரீயமே வேண்டுமென்பதில்லை யென்கிற ஆக்ஷேபத்தைப் பரிஹரிக்கிறார் निजेति. கீதார்த்த ஸங்க்ரஹம் 31. தனது வர்ணாச்ரம தர்மம்முதல் பக்தியோகம் வரையிலானவற்றை கேவலம் ப்ரீதியினால் செய்விக்கப்பட்டவனாய் அநுஷ்டிக்க வேண்டும். அச்சமின்றி அவற்றில் உபாயத்வ புத்தியை விட்டு அந்த உபாயத்வத்தைஎம்பெருமானிடமே பாவிக்கவேண்டுமென்றார். प्रीत्यैव என்கிற ஏவகாரத்தால் ப்ரீதி செய்விக்கிறதே யல்லது சாஸ்த்ரம் செய்விக்கிறதில்லை யென்று சாஸ்த்ர நிஷேதம் செய்வது இல்லை. ஈச்வரனே உபாயமாகையால் ப்ரீதியால் கைங்கர்ய புத்தியால் செய்வது. உபாயமென்கிற புத்தியால் அல்ல என்று உபாயத்வ புத்தி நிஷேதமே ஏவகாரத்தினுலாம். இனி சாஸ்த்ர த்யாகம் இஷ்டமன்றாகில் प्रीत्यैव कारितः என்பது எதற்காக? அதனால் ப்ரீதியே காரணம்; சாஸ்த்ரமன்று என்ற கருத்துக்கொள்ள வேண்டுமென்ன, வேறு கருத்தைக் குறிக்கிறார். கைங்கர்யத்திலே இதி. ப்ரீதி சாஸ்த்ரம் இரண்டும் ப்ரவர்த்தகம். அதில் ப்ரபந்நன் சாஸ்த்ரம் சொல்லிற்றே என்று கொண்டு செய்யத்தொடங்கி ப்ரீதியோடு செய்கிறானென்பதில்லை. ப்ரீதியினால் கைங்கர்யம் செய்யத்தொடங்கி சாஸ்த்ரத்தைக் கொள்ளுகிறான். சாஸ்த்ரத்தை விடுவதானால் निजकर्मादि என்றதே பொருந்தாது. எதையும் செய்யக்கூடுமாகில் எது நிஜகர்ம (தமது கர்ம) என்னப்படும்? எப்படி பக்திசெய்வது இத்யாதியும் சாஸ்த்ரமின்றி யறியமுடியாதென்றபடி.

இப்படி பொதுவான ப்ரமாணங்களைக் கொண்டே ப்ரபந்நனுக்கும் சாஸ்த்ர அநுஸரணம் ஆவச்யகமென்று ஸம்ப்ரதாய ஸ்ரீஸூக்திகளுடன் கூறினார். லக்ஷ்மீதந்த்ரத்தில் ப்ரபத்தியத்யாயத்தில் (17-93-97) ப்ரபந்நனைக் குறித்தே அது சொல்லப்பட்டிருப்பதால் இங்கு விவாதத்திற்கே இடமில்லை யென்கிறார் இச்சாஸ்த்ரீயேதி. अविप्लवायेति. சாஸ்த்ர விஹித

प्रियाय मम विष्णोश्च देवदेवस्य शार्ङ्गिणः । मनीषी वैदिकाचारं मनसाऽपि न लङ्घयेत् ॥"
என்று प्रपन्नाध्यायத்திலே प्रसिद्धम். இது தவிர்ந்தபோது வரும் அநிஷ்டமும்,
"यथा हि वल्लभो राज्ञो नदीं राज्ञा प्रवर्तिताम् । लोकोपयोगिनीं रम्यां बहुसस्यविवर्धिनीम् ॥
लङ्घयन् शूलमारोहेदनपेक्षोऽपि तां प्रति । एवं विलङ्घयन् मर्त्यो मर्यादां वेदनिर्मिताम् ॥
प्रियोऽपि न प्रियोऽसौ मे मदाज्ञाव्यतिवर्तनात् ॥"
என்று அநந்தரம் சொல்லப்பட்டது. இந்த भगवत्प्रीतिக்கு க்ஷமை கொண்டிலனாகில் முக்தனாவதற்கு முன்னே अधिकारानुरूपமாக ஏதேனுமோர் அநிஷ்

---

தர்மங்கள் அழியாமைக்காகவும் குலத்தைக் காப்பதற்காகவும் லோக ஸங்க்ரஹத்திற்காகவும் வர்ணாச்ரம வரம்பை ஸ்த்தாபிப்பதற்காகவும் எனக்கும் தேவதேவனைப் சார்ங்கமென்னும் வில்லையாள்கின்றவனான விஷ்ணுவுக்கும் இஷ்டபூர்த்திக்காகவும் விவேகியான ப்ரபந்நன் வைதிக ஆசாரதத்தை மீற மனத்தால் கூட நினைக்கலாகாது. இந்த ச்லோகங்களில் பல ப்ரயோஜநங்கள் சொல்லப்பட்டாலும் தர்மத்தைத் தவிரும் ப்ரபந்நனுக்கு அநிஷ்டம் குறிக்கப்படவில்லை. அதையும் சொல்வதாகும் यथेत्यादि. यथा-எப்படி राज्ञः-वल्लभः-அரசனுக்கு மிகவும் ப்ரியனான ஒருவன் राज्ञा प्रवर्तितां—அரசனால் ஏற்படுத்தப்பட்டதும் लोकोपयोगिनीं—உலகுக்கு ஸ்நாநபாநாதிகளுக்கு உபயோகப்படுவதும் बहुसस्य विवर्धिनीं—விசேஷமாகப் பயிர் வளத்திற்குக் காரணமும் रम्याम्=அழகியதுமான நதியை तां प्रति अनपेक्षोऽपि தான் அதன் அபேக்ஷையற்றவனானாலும் लङ्घयन्—அழிப்பவனாய் शूलं आरोहेत्—கழுவில் ஏற்றப்படுவானோ, एवम् அப்படியே மனிதன் வேதத்தில் ஏற்படுத்தப்பட்ட வரம்பை மீறினவனாகில் சிக்ஷிக்கப்படுவான். असौ—இப்படி மீறினவன் प्रियोऽपि—ப்ரபத்தியை யநுஷ்டித்ததால் ஒருவகையில் ப்ரியனானாலும் என் ஆஜ்ஞையை மீறினபடியால் எனக்கு ப்ரியனாகமாட்டான். த்ருஷ்டாந்தத்தில் शूलं आरोहेत् என்பதற்கிணங்க தார்ஷ்டாந்திகத்தில் அநிஷ்டத்தைக் கொள்ளவேண்டும். शूल பதமே வயிற்று வலியைச் சொல்வதால் மற்ற வாதைகளுக்கும் உபலக்ஷணமாய் தார்ஷ்டாந்திகத்திற்குமாகலாம். अनपेक्षोऽपि तां प्रति= நதியின் அபேக்ஷையில்லாதவன் என்று த்ருஷ்டாந்தத்திற் சொன்னது दार्ष्टान्तिकத்தில் நித்யகர்மாவானது காம்ய கர்மாதிகாரத்திற்கு யோக்யதையையும் பக்திநிஷ்டனுக்கு பக்தி வ்ருத்தியையும் செய்வதால் ப்ரபந்நன் தனக்கு அவை யில்லையாகையால் இவன் நித்யகர்மாவின் அபேக்ஷையிராதவனாகிலும் என்ற பொருளைக் குறிக்கும். இந்த இத்யாதி இந்த ச்லோகம் எம்பெருமானுக்கு அப்ரீதியை மட்டும் சொல்லுவதானாலும் ப்ரமாணாந்தரத்தில் खञ्जा भवन्ति, काणा भवन्ति என்று பலவித வாதையைச் சொல்லியிருப்பதால் அவை உண்டென்று கொள்ளவேண்டும். देहान्तर மெடுத்து நரகாதிகளை யநுபவிப்பதில்லை; அப்படிப்பட்ட பாபத்திற்கும் ப்ரபந்நனாய் தேஹாவஸாநத்தில் மோக்ஷம் பெறவேண்டியிருப்பதால் இங்குள்ள காலத்திற்குள் லகுதண்டனையேயாம். இது உண்மை நிலை; ஆனா

டத்தை விளைவிக்கும். அது நிற்க सत्त्वप्रकृतियான இவனுக்கு भगवत्प्रीतिக்கு மேற்பட்ட நரகமில்லை. அந்த भगवदप्रीति शमिப்பதும் பின்பு க்ஷமை கொள்ளில். "सुहृदं सर्वभूतानाम्" என்னும்படி निरुपाधिसुहृत्தான ஈச்வரனுடைய அப்ரீதி சமிக்குமளவும் இவனுக்கு अरुन्तुदமாயிருக்கும். இங்ஙன் இராகவனுக்கு ஸ்வாமி விஷயத்தில் ப்ராவண்யமும் கைங்கர்யரூபமான மோக்ஷத்தில் ருசியும் சுங்கிகக அடுக்கும்.

இவ்வாज्ञातिलङ्घनம் "प्रहर्षयिष्यामि" என்று उद्देश्यயான भगवत्प्रीतिக்கு விரோதியானபடியாலே, இச்சாஸ்த்ரீயநியமம் ரஹஸ்யத்ரயத்தில் विरोधिनिवृत्तியை அநுஸந்திக்குமிடங்களிலே அநுஸந்திக்கப் ப்ராப்தம்.

இந்த नियमानुवर्तनம் पूर्णोपायரல்லாத அதிகாரிகளுக்கு उपायपूर्तिविरोधिயை சமப்பித்துக்கொண்டு भगवत्प्रसादनமாயிருக்கும் पूर्णोपायருக்கு अतिलङ्घनहेतुकाप्रीति பிறவாதபடி பண்ணிக்கொண்டு भगवत्प्रीणनமாயிருக்கும்.

---

லும் ஒரு தண்டனையுமில்லை யென்று கொண்டாலும் अप्रीः என்று சொல்லைக் கேட்டவுடனேயே சேஷனாயிருப்பவன் அஞ்சியிருக்க வேண்டும். தனக்கு வரும் நரகாதி துக்கதத்தைவிட பகவானுக்கு வரும் அப்ரீதியைத் தனக்கு அனிஷ்டமாகக் கொள்பவனே சேஷத்வஜ்ஞானம் நன்கு பெற்றவனாவான். மோக்ஷத்தில் ப்ரீதியை மட்டும் பரம உத்தேச்யமாய்க் கொண்டவன் அப்ரீதியைப் பரமதுக்கமாய் நினைக்க வேண்டுமே, மிக்க ஸ்நேஹபாத்ரமானவனுக்கு அப்ரீதி யேற்பட்டால் அது உலகில் எப்படி பனிதனால் நரகதுல்யமாக பாவிக்கப்படுகிறதோ. அதுபோலாம் இங்கும். அப்படி பாவிக்காதவனுக்கு தக்க ஸ்நேஹமில்லை யென்றே தேறும். अरुन्तुदம்–மர்மஸ்தானத்தைப் பிளப்பது.

சாஸ்த்ரீய நியமநம் ஸாதிக்கப்பெற்றது வேறு அதிகாரங்களைப் போல் இவ்வதிகாரத்திற் சொன்ன இதை மந்த்ரத்தில் எங்கே யநுஸந்திப்பது என்பதை யறிவிக்கிறார் இவ் இதி प्रहर्षयिष्यामि இதி. स्तोत्ररत्नं ६०. भवन्तमेव என்கிற ச்லோகம். உனக்கே நிதய கிங்கரனாய் எப்போது உன்னைப் பரமபதத்தில் ஆநந்தப்படுத்திக் கொண்டிருக்கப் போகிறேன் என்றதால் மோக்ஷம் போவது தனக்காகவல்ல. கைங்கர்ய மூலமாகப் பெருமானின் ப்ரீதிக்காக என்று பகவத் ப்ரீதியை உத்தேச்யமாகக் கூறினார். விரோதிநிவ்ருத்தியைக் குறிக்குமிடங்கள் நமச்சப்தங்களும் 'सर्वपापेभ्यो मोक्षयिष्यामि' என்றதும். நிரடராத கைங்கர்யத்தையும் சேர்த்து ப்ரார்த்திப்பதானால் नारायणाय என்ற சதுர்த்தியிலும் இதை யநுஸந்திக்கலாம் நியமநப்படி நடந்தால் வரும் பலனைக்கூறுகிறார் இந்த இதி. பூர்ணோபாயரல்லாதவராவர் உபாய ஜ்ஞாநம் பிறந்து அதை யநுஷ்டிக்காதவரும் மந்தவிச்வாஸத்துடன் உபாயத்தை யநுஷ்டித்து மஹாவிச்வாஸம் பெற இருப்பவரும். அப்ரீதி பிறவாதபடி இதி. அநுஜ்ஞா கைங்கர்யம் ப்ரீதிக்குக் காரணமாகும். செய்யாமற்போனால் அப்ரீதி இல்லை; நித்யகர்மாவோ, அநுஷ்டியாதபோது ப்ரத்யவாயம் அவனுக்கு

"आज्ञानुज्ञाविभागेन द्विधा शास्त्रीयपद्धतिः। निग्रहानुदयायाऽऽद्या परा तत्तत्फलाप्तये॥ 1
अनुज्ञया प्रवृत्तेऽपि क्रमकोपादिसंभवे। आज्ञातिक्रमदोषः स्यान्नियमोऽतो दुरत्ययः॥ 2
प्रत्यवायपरीहारे फलान्तरसमन्विते। तत्र संवलितं प्राहुरधिकारं विचक्षणाः॥ 3

---

அப்ரீதி உண்டாகையால் அது பிறவாமைக்கும் ப்ரீதிக்கும் காரணம்

சாஸ்த்ரீய நியமமென்றது ஆஜ்ஞாகைங்கர்யத்திற்கு மட்டுமல்ல; அநுஜ்ஞா கைங்கர்யமும் விஹார த்யூதத்தில் இழிந்தவனும் த்யூத சாஸ்த்ரத்தின்படியே ஆடவேண்டியிருப்பது போல் அநுஜ்ஞா சாஸ்த்ரத்துக்கு உட்பட்டே செய்யவேண்டியிருப்பதால் அதைத் தொடங்கிய பிறகு அங்கும் சாஸ்த்ரீய நியமம் உண்டென்பதையும் அறிவிப்பாராய் அதிகாரார்த்தத்தைக் காரிகைகளைக் கொண்டு விளக்குகிறார் आज्ञेति. சாஸ்த்ரத்தில் சொன்ன அனுஷ்டான மார்க்கம் ஆஜ்ஞை என்றும் அநுஜ்ஞை என்றும் இரு விதமாகும். आद्या–முதலான ஆஜ்ஞையானது பகவானுடைய நிக்ரஹம் பிறவாமைக்காக; உத்தரவை மீறினால் தண்டனையுண்டு. அதுபோலாகையால் ஆஜ்ஞை; அநுஜ்ஞையாவது–பலத்தில் ஆசை வைத்து உபாயம் தேடுகிறவனுக்குச் செய்த உபதேசம். ஆகையால், परा இரண்டாவதான அநுஜ்ஞையானது அந்தந்தப் பலன் பெறுகைக்காகவாம் अनुज्ञया—அநுஜ்ஞா சாஸ்த்ரத்திற்கு அதீநமாக प्रवृत्ते—ஏற்பட்ட கார்யத்தில் क्रमकोपादिसंभवे क्रम-कोपமாவது முறையின்மை. எதன் பிறகு எதைச் செய்யவேண்டுமோ அததற்கு ஏற்பட்ட முறையைத் தவறினால். ஆதிபதத்தினால் செய்வதற்கான த்ரவ்யம் தேசம், காலம், கர்த்தா, அங்கம் என்பவைகளில் குறையைக் கொள்வது, இப்படி குறை ஏற்பட்டால் ஆஜ்ஞையை மீறினாற் போல் அப்ரீதியுண்டு. अतः— ஆகையினால் அங்கும் சாஸ்த்ரீய நியமம் दुरत्ययः— கடக்கத்தகாதது. அதனால் அநுஜ்ஞா கைங்கர்யத்தில் விசேஷ ப்ரீதிகாரணமென்கிற அதிகாரத்தோடு ப்ரத்யவாயம் (நிக்ரஹம்) வாராமைக்காகவும் என்பதையும் சேரும். இதற்கு உதாஹரணத்தைக் கருதி மேல் காரிகை प्रत्यवायेति। वैश्वानरं द्वादशकपालं निर्वपेत् पुत्रे जाते என்று புத்ரஜநநத்தில் வைச்வாநர இஷ்டி விதிக்கப்பட்டது. இதே जातेष्टि எனப்படும்; இது நைமித்திகம். ஆஹிதாக்நியானவன் இதைச் செய்யாமற் போனால் ப்ரத்யவாயம் உண்டு. ஆனாலும் அநுஷ்டித்தால் पूत तेजस्वी अन्नादी इन्द्रियावी पशुमान् भवति என்று புத்ரனுக்கு பரிசுத்தி முதலாகப் பசு வரையிலாக எல்லாப் பலனும் சேர்ந்து வருமென்றதால் இதுவும் சேர்ந்தே அதிகாரமாகும், இப்படியடையும்படி புத்ரன் இருக்கும்போதே இந்த இஷ்டியை யநுஷ்டிப்பதாம். ஆக ப்ரத்யவாயத்தினுடைய பரிஹாரமானது फलान्तरத்துடன் சேரும்போது மீமாம்ஸகர்கள் அங்கு संवलितं ஒன்றோடு சேர்ந்த மற்றொன்றை யதிகாரமாகச் சொன்னார்களென்றபடி. இங்கு ஒரே வாக்யத்தில் புத்ர ஜநநம் என்கிற நிமித்தமும் புத்ர பலனும் சொல்லப்பட்டிருப்பதால் ஒருதரம் அநுஷ்டித்தாலும் यावज्जीवं अग्निहोत्रं जुहोति, பிழைத்திருக்கிற வரையில் அக்நிஹோத்ரம் செய்யும்படி

नित्यकाम्यस्वरूपैक्ये विनियोगपृथक्त्वतः । फलार्थं क्रियमाणेऽपि नित्यं भवति तन्त्रतः ॥ 4
अनुज्ञामात्रसिद्धेषु कैङ्कर्येषु विचक्षणैः । अकृतौ तत्फललाभो न तु दोष इतीरितम् ॥ 5

நின்றனபன்புடைவானோர் நிலையினிலமளந்தான்
நன்றிது தீயதிதென்று நடத்திய நான்மறைபால்
இன்று நமக்கிரவாதலினிம்மதியின் நிலவே
அன்றியடிக்கடியாரிருடீர்க்கவடியுளதே. (24)

---

நைமித்திக விதி வேறு. அக்நிஹோத்ரம் जुहुयात् स्वर्गकामः என்று ஸ்வர்காதி பலத்திற்காக விதி வேறு இருப்பதால் பலத்தை யபேக்ஷிப்பவன் நித்யத்திற்காக ஒரு ப்ரயோகமும் பலத்திற்காக ஒரு ப்ரயோகமும் செய்ய வேண்டுமென்கிற ஆக்ஷேபத்தைப் பரிஹரிக்கிறார் नित्येति நித்யமான கர்மாவும் காம்யமான கர்மாவும் அக்நிஹோத்ரம் என்றாற்போல் ஒன்றாயிருப்பினும் विनियोगपृथक्त्वतः– நித்யாநுஷ்டாநவிதியைக்காட்டிலும் பலத்திற்காக அநுஷ்டாநவிதி வேறு இருப்பது காரணமாக फलार्थम् அப்பலனுக்காக. क्रियमाणे – செய்யப்படும் அக்கர்மாவில் नित्यं अपि — நித்யமான கர்மாவும், तन्त्रतो भवति தனியாகச் செய்யப்படாமலே அடங்கியிருக்கிறது. अनुज्ञेति ஆலய பகவத்ஸேவாதிகள்போன்ற அநுஜ்ஞா கைங்கர்யங்களில் अकृतौ செய்யாமற் போனால் तत्फल अलाभः அப்பலனை யிழந்ததாம். न तु दोषः— நிக்ரஹமென்பதில்லை इति என்று विचक्षणैः—ஜ்ஞாநிகளாலே ईरितम्—கூறப்பெற்றது.

சாஸ்த்ரமே கைவிளக்கென்றார். அதே சந்த்ரனென்கிறார் நின்றனம் இதி. அன்பு உடை—பகவானிடம் ப்ரீதி யுடைய வானோர்—நித்யஸூரிகளுடைய நிலையில்–அவர்களைப்போல் கைங்கர்யமே செய்வதில், நிலம் அளந்தான்–பூமியை யளந்த த்ரிவிக்ரமனாலே, நன்று இது தீயது இது என்று-இது கெட்டது இது நல்லது என்று நடத்திய—தெளிய ப்ரவசநம் செய்யப்பட்ட, நால் மறையால்—நான்கு வேதங்களால் நின்றனம்—நான் மறையினால் ஏற்பட்ட साधु साधु நிச்சயமாகிற ஜ்ஞாநத்தால் கைங்கர்யம் செய்பவரானோம் என்றபடி, வானோர்களைப் போலேயே மறையின் அபேக்ஷை யின்றியே செய்யலாகாதோவென்ன அருளிச்செய்கிறார் இன்று இதி. பகலில் இருப்பவருக்கு ஸூர்ய வெளிச்சம் இருப்பதால் இந்தச் சந்த்ர நிலவு வேண்டியதில்லை. இன்று—இப்போது இந்த ஸம்ஸார தசையில் நமக்கு—ஸம்ஸாரிகளான எமக்கு— இரவு ஆதலின்—ராத்ரியாகிறபடியால் ஸூர்ய ப்ரகாசத்திற்கு அவகாசமில்லை யாதலால் இம்மதியின் நிலவு. ஏ அன்றி—இந்த வேதமாகிற சந்த்ரனுடைய நிலா அல்லாமல், அல்லது இந்த மறை மூலமான, 'நன்று இது தீயது இது' என்கிற மதியா(அறிவா)கிற இனிய சந்த்ரநிலா அல்லாமல். அடிக்கு அடி ஆர். புநः புநः பரவுகின்ற இருள்-அஜ்ஞாநமான இருளை, தீர்க்க= நீக்க, அடி உளதே= காரணம் ஏதேனும் இருக்கின்றதோ– இல்லையே என்றபடி ஸ்வபுத்தியோ சாஸ்த்ர மூலமல்லாத பரோபதேசமோ தர்க்கங்களோ ஸாதுவான கைங்கர்யத்தை அறிவிக்க வியலா. வேறு வழி

श्रुतिस्मृत्याचारैः स्वमतिगतिभिः शुद्धमनसां सुसङ्कल्पैर्धर्म्यैः कुलचरणदेशादिसमयैः ।
नियोगैर्योग्यानां नियमयितुरादेरभिमतं निमित्तस्वप्नाद्यैरपि निपुणमन्विच्छति बुधः ॥ ३९.

---

யில் சில அம்சம் சரியாகத் தெரிந்தாலும் அவ்வறிவு தீப நக்ஷத்ர மூலமான வெளிச்சத்துக்கு ஸமானம். அப்போது அடிக்கடி இருள் பரவியே நிற்கும். நாம் இரவில் இருப்பதால் இதைக்கொண்டே இருள் நீக்கவேண்டும். நிலமளந்தானுடைய விஸ்தாரமான நிலத்தில் உள்ளவர்களுக்குக் கை விளக்குப் போதாதாகையால் ஸர்வ வ்யாபியான நான்மறைநிலவே வேணும். ஒரு பகலான பரமபதத்தில் போல் விசததம ஜ்ஞாநம் இராமற் போனாலும் மறை மூலமான மதியானது, சந்த்ர நிலவுபோல் ஏறக் குறைய விசதமாய் அறிவிப்பதாகும். இதைவிட விசதமாக அறிய இங்கு வழியில்லை, இது ஸம்ஸாரி நிலையாகையாலே இரவு என்று கருத்து. நிலவு—ஸ்ம்ருதி என்று சொல்லுவதும் உண்டு; அப்போதும் பரிசீலநகாலத்தில் வந்த வேதார்த்த ஜ்ஞாநத்தால் அநுஷ்டாந காலத்தில் வந்த ஸ்மரணமே ஸ்ம்ருதி என்னப்பட்டதென்னலாம்.

பாட்டில் நான்மறையால் என்றது மற்றகாரணங்களுக்கும்உபலக்ஷணமென்றகருத்தாலே. श्रुतिः स्मृतिस्सदाचारः என்கிற வசநத்தையும் மற்றும் சில அநுபவஸித்தமான காரணங்களையும் சேர்த்து அருளிச்செய்கிறார் श्रुति. आदेः— ஜகத்காரணமாய் नियमयितुः—ஜகத்துக்கு நியந்தாவுமான பகவானுடைய अभिमतं—திருவுள்ளத்தை बुधः—விவேகியானவன் श्रुत—स्मृति-आचारैः—வேதங்களாலும் அவை மூலமான ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்களாலும் இவை மூலமான பெரியோர்களின் அநுஷ்டாநங்களாலும், स्वमतिगतिभिः—சுத்தமான தன் மனப்போக்குகளாலும் शुद्धमनसां—சுத்தமான மனமுடையவர்களின் सुसङ्कल्पैः—இப்படியே செய்யவேண்டுமென்ற ஸாதுவான ஸங்கல்பங்களாலும் धर्म्यैः—தர்மத்தினின்று நழுவாத कुल-चरण-देशादि समयैः அந்தந்த குலம் வேதசாகை தேசம் காலம் முதலானவற்றுக்கு உரிய வ்யவஸ்தைகளாலும் योग्यानां—சாஸ்த்ர விசார குசலர்களாய் பக்ஷபாதமில்லாதவர்களான மஹான்களின் नियोगैः—ஆஜ்ஞைகளாலும், निमित्त-स्वप्नाद्यैः—வலக்கண் துடிப்பு சகுனம் முதலான நிமித்தங்களாலும், ஸ்வப்நத்தினாலும், உபச்ருதிகளாலும் अन्विच्छति—கண்டிருப்பான். வேதப்ரமாணம் காணாதபோது ஸ்ம்ருதிகளைக் கொள்வது. அவையும்இல்லையாகில் பெரியோரின் பரம்பராசாரம் ப்ரமாணம். விகல்பமாகச் சொன்னவிடங்களில் ஸ்வபுத்தியைக் கொண்டு சித்தப்படி செய்யலாம். வேறிடத்திலும் 'सतां हि सन्देहपदेषु वस्तुषु प्रमाणं अन्तःकरणप्रवृत्तयः' என்றபடி சுத்த நிலையிலிருக்கும்தன்மனப்போக்கையே காரணமாக்கலாம். பெரியோர்களிருந்தால் அவர்களுடையதாத்காலிகஅநுஷ்டாநமும் ஸங்கேதங்களும் ப்ரமாணம். தான் அநுஷ்டிக்க வேண்டியதை அநுஷ்டிக்கும் பெரியோர்கள் இல்லாவிட்டாலும் வேறு பெரியோர்கள் பரிசீலநம் செய்து நியமித்தபடி செய்யலாம். தான் செய்யத் தொடங்கின போது சகுனம் அநுகூலமாகில்

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे शास्त्रीयनियमनाधिकारः सप्तदशः 17.

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

—०—०—

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

## अपराधपरिहाराधिकारः

## அபராதபரிஹாராதிகாரம் 18.

—०—०—

---

அதே ப்ராமாணிகமென்று கொள்ளலாம். ஸ்வப்நத்தில் காண்பதும் ப்ரமாணமாகும், ஆதிபதத்தால் உபச்ருதியையும் கொள்வது. அதாவது வேறு விஷயத்திற்காகப் பிறர் சொல்லிக்கொண்டு போகும் வார்த்தை தன் கார்யத்தோடு சேர்த்து இணைக்கும்படி அநுகூலமாயிருக்க அதைக் கேட்பது. இவற்றில் எதுவும் அநுஷ்டாநத்திற்கு ப்ரமாணமாகலாம்.

சாஸ்த்ரீய நியமநாதிகாரம் முற்றும்.

ஸ்ரீமதே நிகமாந்த குரவே நம:

அபராதபரிஹாராதிகாரம் 18

கீழே சாஸ்த்ரீய நியமநாதிகாரத்தில் எல்லாம் கைங்கர்யமாகச் செய்யும் ப்ரபந்நன் சாஸ்த்ர விதிநிஷேதங்களுக்கு உட்பட்டுச் செய்யவேண்டுமென்றும், மீறினல் பகவானுக்கு அப்ரீதியும் இவனுக்கு அநிஷ்டாநுபவமும் உண்டென்றும் நிரூபிக்கப்பெற்றது. இதன் மேல்—

இப்படி அபராதம் உண்டென்றால் நரகஹேதுவான அபராதம் செய்தால் அது வரவேண்டியிருப்பதால் தேஹாவஸாநத்தில் மோக்ஷம் வாராமற் போம். அப்போது முன்செய்த ப்ரபத்தி நிஷ்பலமாம். துல்ய ந்யாயத்தாலே வேறு பிறவியிலோ இப்பிறவியிலேயோ அநுபவிக்க வேண்டும் க்லேசத்திற்கான பாபங்கள் நேர்ந்தாலும் ப்ரபத்தி போய்விட்டதென்றெண்ண வேண்டியதாகும். ஆநுகூல்ய ஸங்கல்பத்திற்கு நித்யகர்மாதிகள் அநுஷ்டியாத போது ஹாநியும், ப்ராதிகூல்ய வர்ஜநத்துக்குப் பாபங்கள் செய்தபோது ஹாநியும் வருவதாகக் கொண்டு ப்ரபத்திக்கு ஹாநி சொல்லவாகும். ஆகையால் ப்ரபந்நனுக்கு உத்தராகங்களும் பாபங்களாகா. 'सर्वपापेभ्यो मोक्षयिष्यामि' என்று விசேஷ வசநமிருப்பதால் ஸ்ரீபாஷ்யகாரர் 'क्रियमाणांश्च क्षमस्व' என்று ப்ரார்த்தித்தது போல் ப்ரபத்தி பண்ணும்போது उत्तराघத்திற்கும் சேர்த்து ப்ராயச்சித்தமாகப் பண்ணலாம் ஆகையாலேயே 'न खलु भागवताः यमविषयं गच्छन्ति' என்று யமலோக ப்ராப்தியில்லை யென்றது. इहैव केचित् उपप्लवा भवन्ति என்று சொல்லிற்றே எனில், அது உத்தராக விஷயமன்று. இவன் அங்கீகரித்த ப்ராரப்த சேஷமாகச் சில க்லேசங்களை இங்கு அநுபவிப்பதானாலும் யமதேசம் போவதில்லை யென்று அதன் பொருளாகலாம். ஆகையால் தோஷபோக்ய

स्वच्छस्वादुसदावदातसुभगां दैवादयं देहभृत् मालिन्यप्रशमाय माधवदयामन्दाकिनीं विन्दति।
यद्यप्येवमसावसारविषयस्रोतःप्रसूतैः पुनः पङ्कैरेव कलङ्कय(ये)न्निजतनुं प्राज्ञैर्न संश्लिष्यते॥ 40

---

னான பகவானுக்கு அப்ரீதியுமில்லை யென்னலாம். அப்ரீதி யுண்டானாலும் ப்ரீதிக்காகச் செய்யும் கைங்கர்யத்திலே ப்ரீதிக்கு மேற்பட பலன் எப்படி யில்லையோ, அதுபோல் துஷ்கர்மங்களிலே ப்ரபந்நவிஷயத்திலே அப்ரீதிக்கு மேலாக உபக்லேசங்களுமில்லை யென்னலாம் அப்ரீதி பெறவாமைக்காகவே ப்ரஹ்ம விதபசாரம் கூடாதென்பதுமாமென்றெல்லாம் ஆக்ஷேபம்.

இவ்வாக்ஷேபத்தைப் பரிஹரித்துக்கொண்டு அபராதம் உண்டென்றும், அதனால் ப்ரபத்திக்கு அழிவில்லை யென்றும், உபக்லேசங்கள் உண்டென்றும், பரிஹரிக்க முக்யாமுக்ய ப்ராயச்சித்தங்களும் உண்டென்றும் இவ்வதிகாரத்தில் நிரூபிக்கிறார். இதற்கு ஸங்க்ரஹச்லோகம் स्वच्छेति. देहभृत्— ஸம்ஸாரபந்தமுள்ள अयं—இந்த ப்ரபந்ந ஜீவன் मालिन्यप्रशमाय—அநாதி புண்ய பாபலேபமாகிற அழுக்கைப் போக்க स्वच्छ—நிர்மலமாய் स्वादु—போக்யமாய், सदावदात—எப்போதும் சுத்தியைச் செய்வதாய் सुभगां-சிறந்த குணங்களுள்ளதுமான माधवदयामन्दाकिनीं—ச்ரிய:பதியினுடைய காருண்யமாகிற ஆகாசகங்கையை दैवात्—பாக்யவசத்தாலே, विन्दति. அடைந்திருக்கிறான். என்றும் தெளிவாயும் மதுரமாயும் சுத்த ஸத்துவம் போல் வெளுத்துப் பாபம் போக்குவதும் சிறந்த குணங்களுக்கு இடமுமான கங்கையை அழுக்கைப் போக்க ஒருவன் அடைந்து ஸ்நாநம் செய்து அழுக்கை நீக்கிக் கொள்வது போல், பகவானுடைய குணாந்தரங்கள் போலன்றி ஹேயஸம்பந்தம் சிறிதுமிராமல் நிர்மலமாய், மிகவும் போக்யமாய் இயற்கையிலே துக்கநிவாரணத்தில் விசேஷப் பெருமைபெற்றதுமான அகிஞ்சந ரக்ஷணார்த்தமான சிறந்த தயையை உபாயமாகக் கொண்டு ஸஞ்சித கர்மாவையும் ப்ராரப்த கர்மாவில் சில அம்சங்களையும் போக்கி சுத்தமாகவே யிருக்கிறானென்றபடி.

பூர்வார்த்தத்தில் சொன்னதை அநுவாதம் செய்து திடப்படுத்துகிறார் यद्यप्येवमिति. ப்ரபத்தியினால் ஸஞ்சிதாதி பாபம் போனதே என்று திடப்படுத்தியதால் அபராதியான ப்ரபந்நனுக்கும் ப்ரபத்திக்கு ஹாநியில்லை யென்றதாயிற்று. यद्यपि என்றதால் अथापि என்று சேர்த்துக் கொள்ள வேண்டும். यद्यप्येवम्; अथापि—இப்படிதான்; ஆனாலும், असौ-இந்த ப்ரபந்நன் पुनः—மறுபடியும். असारेत्यादि, ஸாரமற்ற விஷயாநுபவங்களாகிற—தெளிவாயிருக்கவாகாமல் கலக்கத்திற்குக் காரணமான தேசங்களிலே ப்ரவேசிக்குப வெள்ளங்களாலே प्रसूतैः உண்டுபண்ணப்பட்ட पङ्कैः एव—பாபங்களாகிற பல சேற்றால் निजतनुं—தன் ஸ்வரூபமாகிற சரீரத்தை कलङ्कयन्—அழுக்குள்ளதாகச் செய்துகொண்டு இது हेतुगर्भविशेषणम्; அழுக்காக்கிக் கொள்ளுவது காரணமாகவென்றபடி; प्राज्ञैः—அதை யறிந்தவர்களால் न संश्लिष्यते— தொடப்படமாட்டான், சேர்த்துக்கொள்ளப்படமாட்டான்,

இப்படி भगवच्छेषैकस्वभावனாகையாலே शास्त्रनियतकैङ्कर्यैकरसனான இவ்வதிகாரிக்கு, பின்பு अनापत्तில் बुद्धिपूर्वकமான अपराधம் வருகை பற்றின कैङ्कर्यैकनिष्ठक्कு विरुद्धமாகையாலே प्रायेण संभावितமன்று. प्रारब्धकर्मविशेषवशத்தாலே देश - काल - अवस्थावैगुण्यहेतुकமாகவும் प्रामादिकமாகவும் सुषुप्त्याद्यवस्थैகளிலும்

---

முன்னே கங்கையில் ஸ்நாநம் செய்து அழுக்கற்றவனா யிருந்தாலும் பின்னே ஆபாஸமான வெள்ளத்திலே இழிந்து மீண்டும் சரீரத்தில் சேறு கொண்டவனாயிருந்தால் அவனை அவ்வாறு கண்டவர் எப்படி தொட மாட்டார்களோ, அதுபோல் ப்ரபத்தியினால் முன் பாபத்தைப் போக்கின வனாயிருந்தாலும் பின்னே பாபம் சேருமாகில் ப்ராஜ்ஞர் அவனோடு சேர விசையார். பாபம் செய்வது பெரியோர்களுக்கு ஸம்மதமன்றென்றபடி. இங்கே कलङ्कयन्-என்றவிடத்தில் உரைகளில் காணாமற் போனாலும் कलङ्कयेत् என்கிற பாடம் ஓலையில் காண்கிறதென்று ஸ்ரீகோஷ்டீபுரம் ஸ்ரீஸௌம்யநாராயணார்ய ஸ்வாமி அருளினார். அப்போது अथापि என்கிற அத்யாஹாரமில்லை, यद्यप्येवम् என்கிறவிடத்தில் यदि என்பதை மட்டும் कल:ङ्कयेत् என்றதோடு சேர்க்கவேண்டும்; एवमपि என்று பதங்களை மாற்றிக் கொள்ள வேண்டும். ஆக—एवमपि பூர்வார்த்தத்தில் சொன்னபடி யிருந்தாலும் पुनः यदि कल्कयेत्—மீண்டும் தன்னை அழுக்காக்கிக் கொள்வானாகில், ப்ராஜ்ஞஸம்ச்லேஷத்தைப் பெறான் என்று ஒரே வாக்யமாகும் இப்போது.

ப்ரபந்நனுக்கு புத்திபூர்வமான அபராதங்கள் ஏற்பட்டாலும் ப்ராயச்சித்தம்வேண்டா என்கிற பக்ஷத்தை மேலே விரிவாக நிரஸிக்கப் போகிறாராய் நேர்ந்தால் பரிஹாரம் செய்ய வேண்டுமென்பதை ப்ரமாண தர்க்கங்களைக் கொண்டு முன்னே ஸ்த்தாபிக்கிறார், ப்ரபத்திக்குப் பின் வரும் பாபங்களில் ப்ராயச்சித்தம் செய்ய வேண்டிய பாபம் இவை யென்பதையும் விவேசனம் செய்கிறார் இப்படி இத்யாதியால், அபராதமானது கைங்கர்யமாகாது. அற்பத்தில் நசையாலாகிஅப்ரீதிக்குக் காரணமானவற்றை ப்ரீதிக்காகஸாத்துவிகத்யாகத்துடன் செய்யமுடியாது.சேஷத்வஜ்ஞாநபூர்த்தியுடையவனுக்கு அபராதம் வராதேயென்னில்—அது உத்ஸர்க்கம். இதற்கு அபவாதமும் அநுபவஸித்தம். அதற்குக் காரணம் இவன் அங்கீகரித்த ப்ராரப்தத்தில் அடங்கிய பாபகர்ம விசேஷமே. அதனால் வரும் பாபம் இரண்டுவிதம். ப்ராயசித்தமிராமலே, ப்ரபத்தி யென்கிற காரணத்தினாலேயே பொறுக்கப்படுமவையும். ப்ராயச்சித்தம் செய்தால் பொறுக்கப் படுமவையும்; முதல்வகையை முன்னே குறிக்கிறார் ப்ராரப்தேதி. கர்ம விசேஷவசத்தாலே என்பதற்கு வரும் என்கிற சொல்லில் அந்வயம். மேல்வாக்யத்தில் வந்தாலும் என்கிற சொல்லிலும் இதை யநுஸந்திப்பது, தேசவைகுண்யம் = ஸ்நாநாதிகளுக்கு அநுகூலமான जलादिसमृद्धि யில்லாத இடம், कालवैगुण्यம் துர்பிக்ஷாதிகாலம். अवस्थावैगुण्यம் ரோகம் வார்த்தகம் முதலானவை. இந்நிலைகளில் புத்தி பூர்வமாகவே நிஷித்தா

வரும் अपराधलेशங்களுள்ளவை अश्लेषविषयமாய்க் கழிந்து போம். बुद्धिपूर्वक-पापारम्भकपापங்களுக்கு அஞ்சி அவையும் கழியவேண்டுமென்று ப்ரபத்தி பண்ணுதே, "பாம்போடொரு கூரையிலே பயின்றாற் போலே" ப்ரக்ருதி யோடே கூட இருக்கிற இவனுக்கு आत्मगुणपूर्ति யில்லாமையாலே मन्दधैर्य ரான ऋஷிகளுக்குப் போலே बुद्धिपूर्वकமாகவும் சில ஸ்வநிஷ்ட்டா விபரீத ங்கள் வந்தாலும், निसर्गसुहृत्தான ச்ரிய:பதி ரக்ஷகனென்றுமுகனாய் நிற்கை யாலே இவ்விபரீதாநுஷ்ட்டாநங்கள் மின்னொளி மாத்ரமாய், நிலைநிற்கு

---

நுஷ்டாநம் நேரும். அதனால் விவேகிக்கு அநுதாபமிருப்பது ஸஹஜம். ப்ராமாதிகமாவன—(ப்ரமாதம்—அறியாமை) தெரியாமல் செய்யப்படு மவை. இந்த ப்ராமாதிகம் ஜாக்ரத்தசையைப் போல் உறக்கம் ஸ்வ ப்நம் முதலான நிலைமைகளிலுமுண்டு. ஸ்வப்நத்தில் புத்தி பூர்வமாக விருந்தாலும் ப்ராயச்சித்தம் வேண்டா. அச்லேஷ விஷயமாய்='यथा पुष्कर-पलाशे आपो न श्लिष्यन्ते एवम् एवंविदि पापं कर्म न श्लिष्यते. தாமரையில் ஜலம் போல் பாபமானது உபாயநிஷ்டனிடத்தில் லேபிக்காது என்று பக்திக்குச் சொன்னது ப்ரபத்திக்குமாகையால் என்றதாம். இப்படி அச்லேஷ விஷய மானதால் இதைப் போக்க—எம்பெருமானிடம் ப்ரார்த்திப்பது வேண்டா. புத்தி பூர்வமான் பாபத்துக்கு பயப்படுகிறவர் அதுக்குக் காரணமான ப்ராரப்த கர்மாக்கள் கழிவதற்காகவும் மோக்ஷார்த்தமாகப் போல் ப்ரபத்தி செய்யலாம். அப்படி பண்ணினால் பாபம் வராது. இதற்காக ப்ரபத்தி பண்ணுதவருக்கு புத்தி பூர்வபாபம் நேரும். ஆத்ம குணபூர்த்தி யில்லாம லிருந்தால் அதிகமாகவும் நேரும். அதற்குக் காரணம், ப்ரக்ருதியோடு கூடியிருப்பதே—ப்ரக்ருதியைச் சேர்ந்த ரஜஸ்தமோகுண வச்யனாயிருக்கை. பெரியதிருமொழியில் 'தூங்கார் பிறவிக்கள் இன்னம் புகப்பெய்தி வாங்கா யென்று சிந்தித்து நான் அதற்கஞ்சி, பாம்போடு ஒரு கூரையிலே பயின்றாற் போலே, தாங்காது உள்ளம் தள்ளும் என் தாமரைக்கண்ணா' 11-8-3. என்று அருளியபடி ரஜஸ்ஸும் தமஸ்ஸும் நிறைந்த பிறவிகளே புகும் படி செய்து மீட்காமலிருப்பாயென்று ஆழ்வார் சிந்தித்தபடி அவ்வளவு அச்சம் இராமற் போனாலும் தேஹாவஸாநம்வரையில் ரஜஸ்தம:ப்ரசுர மான வஸ்துக்கள் நடுவில் இத்தேஹத்திலிருப்பதால் பாம்பு பழகிவரும் கூரையிலே (வீட்டிலே) பழகுவதாற் போல் என்ன பாபம் நேருமோ என்று துக்கம் பொறுக்கமாட்டாமல் நெஞ்சு தடமாடுகிறதென்ற நிலை விவேகிக்கு உண்டாவதாலே, ஒரு ஸமயம் பாம்பினால் போல் பாபம் நேரும். ப்ரபந்நனுக்கு மேற்பட மஹாவிவேகிகளான ரிஷிகளுக்கே தைர் யக்குறைவினால் இந்த்ரிய பரவசராகிப் பாபம் செய்ய நேரும்போது பிறருக்குக் கேட்க வேண்டுமோ. ஆனாலும் அச்சமுள்ளவனா யிருப்பதால், ஸ்வாபாவிக ஸௌஹார்தத்தோடு விசேஷப்ரீதியையும் பிராட்டியோடு சேர்ந்த ஈச்வரன் இவனிடம் வைத்திருப்பதால் पापाचरणம் நீடிக்கா

மவையன்றிக்கே, அக்காலத்தில் பிறந்த स्वनिष्ठावैपरीत्यமாகிற இழவைக் கடுக அநுஸந்தித்து यथोचितமாக लज्जानुतापங்கள் பிறந்து. "अपायसंप्लवे सद्यः प्रायश्चित्तं समाचरेत् । प्रायश्चित्तिरियं साऽत्र यत् पुनः शरणं व्रजेत् ॥ उपायानामुपायत्वस्वीकारेऽप्येतदेव हि ॥"
"अज्ञानादथवा ज्ञानादपराधेषु सत्स्वपि । प्रायश्चित्तं क्षमस्वेति प्रार्थनैकैव केवलम् ॥",

---

தென்னலாம். மின்னொளி மாத்திரமாய்—மின்னலின் ஒளிக்கே ஸமானமாய், நிலை நிற்குமவை யன்றிக்கே=நீடிக்குமவை யாகா என்றதோடு என்று பொருள். இதற்கு 'ப்ராயச்சித்தாவலம்பநம் உண்டாம்' என்பதோடு அந்வயம். रक्षणोन्मुखமாய் நிற்கை யென்பது நிலை நிற்காமையிலும் ப்ராயச்சித்தாவலம்பநத்திலும் காரணமாகும். स्वनिष्ठावैपरीत्यமாவது. उपायापाय-संत्यागी मध्यमां वृत्तिमास्थित: என்கிற நடுநிலையினின்று நழுவுகை. கடுக= சீக்கிரமாக. பிறந்து—என்பதற்கு பிறந்திருக்க என்று பொருள். மேலே ஸமாந கர்த்ருகமான க்ரியை யில்லாமையாலே எச்சத்திரிபாம் ப்ராயச்சித்தத்திற்கு ப்ரமாணம் அருளிச் செய்கிறார் अपायेति. (ல. த. 17. 93.) நிஷித்தங்களைச் செய்யாமல் காம்யங்களையும் செய்யாமல் கர்மயோகாதிகளில் ஒன்றையும் மோக்ஷோபாயமாகச் செய்யாமல் मध्यमवृत्ति என்கிற ஆஜ்ஞாநுஜ்ஞா கைங்கர்யத்தை மட்டும் ப்ரபந்நன் செய்து வரவேண்டும். अपायसंप्लवे-நிஷித்த கர்மாசரணம் ஏற்பட்டால் सद्य:-உடனே ப்ராயச்சித்தம் செய்வது; அது இப்பாபத்திற்காக மீண்டும் சரணாகதி செய்வதே. उपायानां பக்தியோக நிஷ்டனுக்கு உபாயமாகுமவற்றை उपायत्वस्वीकारेऽपि-ப்ரபந்நன் உபாயமாகக் கொண்டு அநுஷ்டித்தாலும். एतत् एव हि இந்த சரணவரணமே ப்ராயச்சித்தமாகும். இந்த வாக்யம் ப்ரபந்ந விஷயத்திலேயே ஸ்பஷ்டமாக அபராத பரிஹார வழியைச் சொல்லி யிருப்பதால், அது தோஷமாகாதென்பது தவறாகும் அந்தந்த பாபத்திற்குத் தக்கவாறு. வெவ்வேறு ப்ராயச்சித்தம் விதிக்கப்பட்டிருக்கிறது: அதைச் செய்ய சக்தியற்றவன் ப்ரபத்தியைச் செய்யலாம். இது மோக்ஷார்த்தமன்று. பிறகு செய்த பாபத்தின் பரிஹாரத்திற்கே யாகும். ஆகையால் இரண்டு ப்ரபத்தி செய்தானென்பதில்லை. ப்ரபந்நன் கர்மயோகாதிகளை உபாயமாக வநுஷ்டித்தால் ப்ரஹ்மாஸ்த்ரத்திற்கு ஸமமான முன் செய்த ப்ரபத்தியில் விச்வாஸக் குறைவே அதற்குக் காரணமாவதால் ப்ரபத்தி பலனளிக்காது. அதற்காக உபாயமாக ஒன்றை அநுஷ்டித்த தோஷத்தை போக்கப் ப்ரபத்தி செய்தால் முன் ப்ரபத்தியே பூர்ணமாய் பலனளிக்கக் குறை யில்லை.

இங்கு ஸம்ப்ரதாயத்தையும் அறிவிக்கிறார். अज्ञानादिति. வங்கீச்வர காரிகை. அறிவில்லாமையாலோ அறிந்திருந்தேயோ அபராதங்கள் நேர்ந்திருந்தாலும் க்ஷமிக்க வேண்டுமென்று ப்ரார்த்தனை செய்வதாம். புத்திபூர்வபாபத்திற்கே ப்ராயச்சித்தம் செய்ய வேண்டியிருக்க अज्ञानात् என்பது பொருந்துமோ வென்னில்—தெரியாமலிருந்தால் அந்த ப்ராமாதிக பாப

"विदितः स हि धर्मज्ञः शरणागतवत्सलः । तेन मैत्री भवतु ते यदि जीवितुमिच्छसि ॥
प्रसादयस्व त्वं चैनं शरणागतवत्सलम् । मां चास्मै प्रयतो भूत्वा निर्यातयितुमर्हसि ॥"
इत्यादिகளிற் சொல்லுகிறபடியே यथाधिकारं प्रायश्चित्तावलम्बनமுண்டாம். प्रारब्ध-
कर्मविशेषवशத்தாலே कठिनप्रकृतियாய் க்ஷமைகொள்ளுகையும் கைதப்பினபோது
"स्वपुरुषमभिवीक्ष्य पाशहस्तं वदति यमः किल तस्य कर्णमूले ।

---

த்திற்கு ப்ராயச்சித்தம் வேண்டா. தெரிந்தே இது பாபமன்று என்று நினைத்துச் செய்தால் அது புத்திபூர்வமேயானாலும் பாபமென்றறியாமையால் அஜ்ஞாநத்தால் செய்யப்பட்டதாகும். அதற்கு பாபமென்று தெரிந்து செய்ததற்குப் போல் ப்ராயச்சித்தமுண்டு. ஆராதநாதிகளில் இது முன், இது பின் என்கிற க்ரமம் அறியாமல் மாறி புத்தி பூர்வமாகச் செய்தால் அதற்கும் ப்ராயச்சித்தமுண்டு.

विदितः இத்யாதி ரா. ஸு 21—ராவணனுக்கு ஸீதையின் உபதேசம். இது ப்ரபந்ந விஷயமாயிராவிடினும் பாபத்திற்கு ப்ராயச்சித்தம் ப்ரபத்தி என்றறிவிக்கும். सः= அந்த ராமன் धर्मज्ञः—எவன் சரணாகதனானாலும் காக்கவேண்டுமென்ற தர்மம் அறிந்தவராய், சாஸ்த்ரத்திற்காகச் செய்வதென்றேயன்றி, சரணாகதனிடம் வாத்ஸல்யமும் உடையவரென்று विदितो हि—அறியப்பட்டவரன்றோ? ஆகையால் நீ ஜீவிக்க விரும்புகிறாயாகில், உனக்கு அவரோடு ஸ்நேஹம் இருக்கட்டும்; அநுகூலனாயிராமல். சரணாகதி செய்தால் பலிக்காது, ஆகையால் அவரை சரணாகதிசெய்து க்ஷமிக்க வேண்டிக்கொள்; प्रयतो भूत्वा—பரிசுத்தனாகி= ப்ராதிகூல்ய புத்தியைவிட்டு என்னையும் அவரிடம் निर्यातयितुं-மீண்டும் ஸமர்ப்பிக்க அர்ஹனாவாய். ப்ரதிகூலனாகில் சரணாகதிக்குப் பயனில்லை, प्रयतो भूत्वा என்றதால் சரணாகதன் மீண்டும் அபராதம் செய்யலாகாதென்றும் அறிவித்ததாம். பூர்வகர்மவசத்தாலே பாபம் செய்வது போல், அதனாலேயே அநுதாபமும் ப்ராயச்சித்த ப்ரவ்ருத்தியும் சிலர்க்கு இராமற் போகலாமே; அப்போது நரகாதிகளும் அநுபவிக்க வேண்டியதாகும். அப்படி பாபத்தை ஸ்வீகரித்தால் தேஹாவஸாநத்தில் மோக்ஷம் இல்லையாம். அப்படி நரக ப்ராப்தியில்லை என்னில் ப்ரபந்நனுக்கு நரகஹேதுவான பாபமே பாபமாகாத போது மற்றது பாபமாகுமோ என்ன, உத்தரம் அருளிச்செய்கிறார் प्रारब्धेति. கடின ப்ரக்ருதியாய்= கடினஸ்வபாவமுள்ளவனாய்; அநுதாபத்தாலே மனம் உருகாதவனாய்; கைதப்பின போது= விட்டபோது. ப்ரபத்தி பண்ணாதவனுள்பட ஸர்வ வைஷ்ணவனுக்கும் நாமஸங்கீர்த்தநம் நரகம் போகாதபடிக்கு உதவும்; ப்ரபந்ந விஷயமாகவே உள்ள வாக்யத்தையும் உதாஹரிக்கிறார். விஷ்ணுபுராண வாக்யம் இரண்டு (3·7); மேலே வாமந புராணவாக்யம் (94.) यमः किल—பயங்கரனான யமனேயன்றோ. पाशहस्तं—பாபியை இழுத்துவரக் கையில் கயிற்றைக் கொண்ட स्वपुरुषं—தன் படனை अभिवीक्ष्य—நாலு பக்கமுள்பட பார்த்துக்கொண்டு तस्य कर्णमूले அவனுடைய காது ஓரத்

परिहर मधुसूदनप्रपन्नान् प्रभुरहमन्यनृणां न वैष्णवानाम् ॥
"कमलनयन वासुदेव विष्णो धरणिधराच्युत शङ्खचक्रपाणे ।
भव शरणमितीरयन्ति ये वै त्यज भट दूरतरेण तानपापान् ॥".
"देवं शार्ङ्गधरं विष्णुं ये प्रपन्नाः परायणम् । न तेषां यमसालोक्यं न च ते नरकौकसः ॥"
என்று வைஷ்ணவ வாமநாதி புராணங்களில் பாசுரங்களுக்கு மூலமான ஶ்ருதியிற் சொல்லுகிறபடியே यमविषयगमनமின்றிக்கே "வேலிட்டுப் பாய வேண்டுமது முள்ளிட்டுப் பாய்ந்து கழியும்" என்கிற கணக்கிலே காரண

---

தில் பிறருக்குத் தெரியாதபடி சொல்லுகிறான். என்னவெனில்—மதுஸூதநனிடம் ப்ரபத்தி செய்தவர்களை தூரத்திலே நின்று விட்டுவிடு. நான் மற்ற மனிதர்களுக்கே ப்ரபுவாவேன். வைஷ்ணவர்களுக்கு ப்ரபுவாகமாட்டேன். कमलेति. செந்தாமரைக் கண்ணா! வாஸுதேவா! விஷ்ணுவே! பூமியை தரிப்பவனே! அச்சுதனே! சங்க சக்ரங்களைக் கையில் கொண்டவனே! சரணமாக வேண்டுமென்று ये எவர்கள் ईरयन्ति वै—சொல்மட்டு முள்ளவர்களோ. அதனாலேயே अपापान्—பாபம் நீங்கப்பெற்ற அவர்களை, ஏ படனே நீ வெகு தூரத்தில் விட்டுவிடு. देवमिति—தேவனாய் சார்ங்கம் தரித்தவனாய் பரமப்ராப்யனான விஷ்ணுவை யார் ப்ரபந்நர்களோ, அவர்களுக்கு யமலோகம் செல்லுகை யில்லை. எந்த நரகமும் அவர்களுக்குத் தங்குமிடமாகாது. இந்த் ச்ருதிவாக்யங்களுக்கு மூலமான ச்ருதியுமுண்டு. 'न खलु भागवता यमविषयं गच्छन्ति; इहैव तेषां केचित् उपप्लवा जायन्ते । काणा भवन्ति खञ्जा भवन्ति अविधेयपुत्राः भवन्ति' இத்யாதி. பாகவதர்கள் यमविषयं—யமலோகம் யமதேசம் செல்லமாட்டார்கள். நரகத்திற்குக் காரணமான பாபங்களிருந்தாலும் इहैव—இவ்வுலகிலேயே சில கஷ்டங்களே அவற்றுக்குப் பலனாக வரும். ஒரு கண் குருடராவார்கள். ஒரு கால் இல்லாதவராவார். தமக்கு அடங்காத மக்களை யுடையராவார் என்றவாறு. இந்த ச்ருதி—ஸ்ம்ருதிவசநங்கள் ஸர்வ ஸ்ரீவைஷ்ணவ விஷயமானாலும் தேஹாவஸாநத்தில் மோக்ஷத்திற்காக ப்ரபத்தி பண்ணிக்கொண்டவர்களையும் கூட்டிக் கொள்ளும். இவை பூர்வஜந்ம பாபவிஷயமே யன்றி உத்தராகவிஷயமன்றென்பதற்கும் ப்ரமாணமில்லை. பின்னால் அபராதமும் ப்ராயச்சித்தமும் உண்டென்று ஏற்பட்ட பிறகு ப்ராயச்சித்தம் பண்ணாத உத்தராகத்திற்கும் இது சேரும். யமதேசகமநத்தை நிஷேதித்து இங்கு க்லேசங்களைச் சொன்னதால் நரகஹேதுக்களான பாபங்களுக்கே இவை பலனாம். லகுசிக்ஷையுண்டென்று ஏற்பட்ட பிறகு ஒரே பாபத்திற்கு அதிகாரிக்குத் தக்கபடி பலனில் ஏற்றத்தாழ்வு தகுமே. சிந்தயந்தீ என்ற கோபகன்னிகை கண்ணனை யடைய முடியாமல் அவனைச் சிந்திக்கிறவளாய் தான் செய்த பாபங்களுக்கெல்லாம் பலனைக் கண்ணனுடைய விச்லேஷ துக்கத்தாலேயே போக்கினவளாய் மோக்ஷம் சென்றாளென்றது ஸ்ரீபாகவதம். வேலிட்டுப் பாய வேண்டுமது—ஆயுத ப்ரயோகத்தினாலே வதைத்து அழிக்கப்பட வேண்டிய குற்றம்,

[illegible]ன் என்று முதலாக ஓதுகிற இங்குத்தை உபக்லேசமுகத்தாலே சிகை யறுக்கும் விரகுகளை முன்னிட்டு ஸர்வேச்வரன் क्षमा-प्रेम-दया-वात्सल्यங்க ளாலே தணிந்த ப்ராதாபத்தையுடையனாய், மிகவும் தண்டிக்க வேண்டும் அபராதத்துக்கு, ஸேவ்யனான सार्वभौमन், அடையாளக்காரர்—अन्तःपुरपरि-जनம்-கூனர்-குறளர்-குமாரர்கள் விஷயத்தில் अपराधங்களுக்கு ஈடாகவும், अन्तरङ्गत्वादितारतम्यத்துக்கு ஈடாகவும், संबन्ध-आनृशंस्यादिகளாலே ப்ரீதி நடக்கச் செய்தே அவர்கள் தப்பினதுக்கு க்ஷமை கொள்ளுகைக்காகவும், மேலைக்கும்

---

முள்ளிட்டுப் பாய்ந்து. முள்ளினால் குத்தப்பட்டதாலேயே அழிக்கப்பட்டு, கழியும்=போம். இங்குத்தை=இங்கே வரக்கூடிய. சிகையறுக்கும்—சிகை யாவது குடுமி; குடுமி யெடுப்பது மநுஷ்யனை வதைப்பதற்கு ஸமாநம். அது போல் பாபத்தின் ஸாராம்சத்தைத் தொலைக்கின்ற என்றபடி. விரகுகளை—உபாயங்களை, முன்னிட்டு, என்பதற்கு (தூரத்தில்) ஒரு கண்ணழிவாலே என்பதோடு அந்வயம். க்ஷமா=பொறுமை; ப்ரேம=அன்பு வாத்ஸல்யம்—தோஷமிருந்தும் அதைப் பொருட்படுத்தாமை. தணிந்த—குறைந்த. உடையனாய் என்பதற்கு ரக்ஷித்துவிடும் என்பதோடு அந்வயம். மிகவும் இத்யாதி, செய்யுமா போலே என்றவரையில் த்ருஷ்டாந்த வாக்யம். அப ராததிற்கு என்பதற்கு செய்யும் என்றவிடத்தில் அந்வயம். பரிஹாரமாக என்று சேர்த்துக் கொள்வது அடையாளக்காரர்=ராஜா என்பதற்கு அடையாளமான குடை சாமரம் முதலானவற்றை தரித்திருப்பவர்கள். அல்லது இவன் ராஜப்ருத்யன் என்பதற்கு அடையாளமான சில வஸ்துக்களை உடலில் தரிப்பவர். அந்தபுர பரிஜநம்=ராஜஸ்த்ரீகளின் வேலைக்காரர்கள். கூனர்—கூன்=முதுகுவளைவு. குறளர்—குள்ளமாயிருப்பவர்கள். இவ்விருவரும் ராஜஸம்பந்தமில்லாதவர்களும் ஆகலாம். விசேஷப்படியாக அரசனாலே போஷிக்கப்படுகிறவருமாகலாம். அந்தரங்கத்வம்=அரசனுக்கு மிகவும் நெருங்கி இருக்கை; ஆதிபதத்தாலே பஹிரங்கத்வத்தை க்ரஹிப்பது, அந்தரங்கர்களுக்குள்ளே குமாரர் அத்யந்த அந்தரங்கர். அந்தःபுர பரிஜந த்துக்கு அதைவிட குறைவு. கூனர்குறளர் அத்யந்தபஹிரங்கரென்றவாறு தாரதம்யம் காண்பது. ஸம்பந்தங்கள் அடையாளக்காரர் இத்யாதி சொற்களிலிருந்தே தெரியும், आनृशंस्यम्—नृशंसत्वम्- ஹிம்ஸிக்கும் தன்மை. அதற்கு நேர்மாறான தயாகுணம் ஆந்ருசம்ஸ்யம் ஸம்பந்தாதிகளிருந்தும் சிறிதாவது சிக்ஷை செய்யாமல் ராஜா விடுவதில்லை அதுபோல் என்றபடி. ப்ரீதி நடக்கச்செய்தே என்பதற்கு ப்ரீதி யழியாமலிருந்த போதிலும் என்று பொருள். க்ஷமை கொள்ளுகைக்காகவும்=அபராதத்திற்கு சிக்ஷை செய்யமாட்டாரென நினைக்காமல், க்ஷமை கொண்டால் தண்டிக்காமலிருக்க லாமென்று தெரிந்து அவர்கள் நடந்துகொள்ளுவதற்காகவுமென்றபடி. மேலைக்கும் சிக்ஷயாகைக்காகவும், அபராதம செய்தால் தண்டனை யுண்டென்று மேல் அபராதம் செய்யாமலிருக்க வேண்டுமென்று அவர்கள்

சிக்ஷையாகைக்காகவும் முகங்கொடாதேயிருக்தல், சம்மட்டியிட்டடித்தல், தள்ளுவித்தல், வாசலிலே தகைவித்தல், சிறிதுநாள் ஸேவையை விலக்கி விடுதல் செய்யுமாப்போலே காகநயாயத்தாலே ஒரு கண்ணழிவாலே இவ் வாஶ்ரிதரை ரக்ஷித்துவிடும்.

இப்படி ம்ருதுப்ரக்ருதிகளை க்ஷமைகொள்ளப் பண்ணுவித்தல், கடினப்ரக்ருதி களுக்கு ஶிக்ஷாரூபமான தண்டவிஶேஷம் பண்ணுதல் செய்கிறவிடமும் பூர்வப்ரபத்தி-ஃபலமான க்ஷமையின் ப்ரகாரபேதமென்று. ஶிக்ஷகனை சேஷிபக்கலிலே க்ருதஜ்ஞதை நடக்கைக்காக, 'புத்திபூர்வோத்தராகத்தையும் க்ஷமிக்கும்' என்று சிலர் சொன்னார்கள். ப்ராரப்தகர்மத்தில் பாபாம்ஶம்போலே புத்திபூர்வோத்தராகம் ப்ராயஶ்சித்தம் பண்ணுகபோது ஸஃபலமானாலும், பண்ணின ப்ரபத்தி மோக்ஷம் கொடாதொழியுமோவென்று ஶங்கிக்க

---

தெரிந்துகொள்ளுவதற்காகவும். அரசன் செய்யும் சிறு தண்டனையின்ப்ரகார ங்களைச் சொல்லுவது முகமித்யாதி. முகம் கொடாதே யிருத்தல்=நேர் முகமாய் அரசன் காணுமலிருப்பது. சம்மட்டி—குதிரை ஓட்டும் கருவி. தள்ளிவித்தல்=உள்ளிலிருந்து வெளியில் தள்ளுவது. வாசலிலே தகைவித்தல்- உள்ளே விடாமல் வாசலிலேயே நிறுத்திவைத்தல். ஸேவை=ஊழியம். ஒரு கண் அழிவாலே இதி. த்ருஷ்டாந்தமான காகாஸுரனுக்கு இது பொருந்தும். ப்ரக்ருதத்தில் 'காணா பவந்தி; கஞ்ஜா பவந்தி' என்று சொன்ன கண்ணழிவைக் கூறியது மற்றவற்றிற்கும் உபலக்ஷணம். கண்ணழிவாலே என்பதற்கு மேல் அபராதத்தைப் போக்கி என்று சேர்த்துக் கொள்வது. ரக்ஷித்துவிடும்—அவச்யம் ரக்ஷிக்கும்.

இப்படி ப்ராமாணிக பக்ஷத்தை நிரூபித்துவிட்டு புத்தி பூர்வபாப த்தையும் ப்ரபந்நனுக்கு க்ஷமிக்கிறனென்று ஏகதேசிகளில் சிலர் சொன்னது ப்ரமாண விருத்தமாயிருப்பதால் வேறு தாத்பர்யம் அருளிச்செய்கிறார். இப்படி இதி. க்ஷமிக்கிறன் என்று சொன்னதற்கு சிலரை க்ஷமை கொள் ளப்பண்ணுவிக்கிறன்; இல்லையாகில் க்ஷமையினுல் குரு தண்டனை செய்யாம லிருக்கிறன் என்று தாத்பர்யம். இப்படி லகுதண்டத்தைச் செய்தே உத்த ராகத்தைக் கழிக்கிறனுகில் அதற்காக ஸம்ஸார ஸம்பந்தம் நீடிக்க வேண்டி யிருப்பதால் ப்ரபத்தியானது பலனளிக்காமற் போகும் போலுமென்பதைப் பரிஹரிக்கிறார் ப்ராரப்தகர்மத்தில் இதி. ப்ரபத்திக்கு முன் செய்ததாய் அநு பவிக்க அங்கீகரிக்கப்பட்ட ப்ராரப்தகர்மத்தைப் போல் அனுபவிக்க வேண்டிய உத்தராகத்திற்கு ப்ரபத்தி ப்ரபாவத்தாலேயே க்ஷமைகொண்டு லகுதண்டம் செய்யும் போது ப்ரபத்தி எப்படி பலனளிக்காமலிருக்கும்? ஸம்ஸாரஸம்பந்தம் நீடிக்குமே யென்னில்—அநியதாயுஸ்ஸுக்கு நீடிக்க லாம். அப்போதும் தேஹாவஸாநத்தில் வேணுமென்று கேட்டதற்கு ஹாநியில்லை. நியதாயுஸ்ஸாவான் இவனுக்கு இவ்வளவு தான் ஆயுட் காலமென்று வ்யவஸ்த்தை பெற்றவன். அநியதாயுஸ்ஸாவான் ஆயுஷ் காலத்திற்குள் சில கண்டங்களுடையவனய் இந்த கண்டம் தவறினுல்

வொண்ணாது, பெருங்காயம் வைத்த மரங்களுக்கு स्थलादिविशेषங்களாலே வாட்டத்துக்குக் कालतारतम्यமுள்ள மாத்ரம் இங்கும் இவர்கள் ஸம்ஸாரத்தினுடைய निःशेषनिवृत्ति பிறக்கைக்கு विलम्बाविलम्बवैषम्यமே உள்ளது. இத்தேஹாநந்தரம் மோக்ஷம் பெறவேணுமென்று அபேக்ஷித்தாலும் அநியதாயுஸ்ஸுக்களாய் विलम्बाक्षमராயிருப்பார்க்கு आयुर्वृद्धियாலே विलम्बம் வரும் நியதாயுஸ்ஸுக்களுக்கு உள்ள ஆயுஸ்ஸுக்குள்ளே फलित्துவிடும்.

"भवेयं शरणं हि वः" என்ற பின்பும் உண்டான ராக்ஷஸிகளுடைய बुद्धिपूर्वापचारங்கள் "मर्षयामीह दुर्बला" "पापानां वा शुभानां वा वधार्हाणां प्लवङ्गम"

---

மேலும் சில காலமிருக்கலாமென்று அவ்யவஸ்த்தையாக ஆயுள் ஏற்படுத்தப்பட்டவன். பெருங்காயமிதி. பச்சைமரங்கள் வாடவேண்டுமென்று பெருங்காயம் வைப்பதாம். மிகவும் ஈரமான இடமாகில் வாட்டம் விளம்பித்து. இல்லையேல் விரைவில் என்பர். உள்ளமாத்ரம் = உள்ள அளவாக. நியத அநியத ஆயுஸ்என்கிற வாசியறியாமல், எப்படி வைஷம்யமென்றுசங்கிப்பவனுக்கு அந்த பேதத்தை யறிவிக்கிறார் இத்தேஹேதி. விளம்ப அக்ஷமராய் இதி தேஹாவஸாநத்திற்கு மேல் ஸம்ஸாரத்தை விரும்பாமையால் எல்லோரும் விளம்பம் பொறாதவரே. அவரில் சிலர் அநியதாயஸ்ஸுக்கள். அவர்களுக்கு தேஹாந்தர மூலமான விளம்பம் கிடையாதாலும் கெண்டத்தைப் போக்கி இதே தேஹத்தில் ஆயுர்வ்ருத்தியைச் செய்து பாபபலாநுபவத்திற்காக ஈச்வரன் விளம்பம் இசையலாம். இத்தகையவிஷயத்தைக் கொண்டு पापी चिरायुः என்றது. नियतायुस्सुக்களுக்கு = ஆயுர்வ்ருத்தி செய்யவாகாதபடி ஆயுள் நிலையுள்ளவர்களுக்கு. உத்தராகத்திற்கு லகுதண்டம் உண்டென்றால் ஸ்ரீமத்ராமாயண விரோதமென்று சங்கை भवेयमित्यादि. वः—உங்களுக்கு நான் ஆபத்காலத்தில் சரணமாகக் கடவேனென்று பிராட்டி த்ரிஜடாசரணாகதிக்குப் பலனாக நேராக ராக்ஷஸிகளுக்கே அருளிச்செய்த வார்த்தை. मर्षयामि இதி, प्राप्तव्यं तु दशायोगात् मयैतदिति निश्चितम् । दासीनां रावणस्याहं मर्षयामीह दुर्बला ॥ நான் செய்த கர்மாவின் பலாநுபவதசையானபடியாலே எனக்கு இது நேரவேண்டியதென்ற நிச்சயத்தால் பொறுக்கிறேன். அவர்கள் தாங்களாகச் செய்யாமல் ராவணனுக்கு அடிமையாயிருந்துசெய்ததாலும் பொறுக்கிறேன். அவர்களை ஹிம்ஸித்தால் அதைக்கண்டு ஸஹிக்க மநோபலமின்மையாம்குணச் சிறப்பாலும் பொறுக்கிறேன். இதனால் அவர்கள் தாங்களாகச் செய்தாலும் பொறுக்கவேண்டியது தகுமென்றபடி. पापानां இதி. இந்த ஸ்த்ரீகள் நீர் நினைத்தபடி பாபிகளாயிருந்தாலும், நான் நினைத்தபடி நல்லவர்களாயிருந்தாலும், வதத்திற்கு அர்ஹர்களாயிருந்தாலும் கருணை புரிவதே தகும். இது சாஸ்த்ர நம்பிக்கையுள்ள சிஷ்டர்களின் மார்க்கமென்றபடி- இதற்கு முன்னே ராவணனால் ஏவப்பட்டுச் செய்தார்கள்; அவர்களிடம் குற்றமில்லையென்றாள். இப்போது குற்றமிருந்து வதார்ஹர்களானாலும் இரக்கமே கொள்ளவேண்டுமென்கிறாள். ஸ்வபாவத்தில் பாபிகளாயிரு

என்கிறபடியே பிராட்டிக்கு க்ஷமாவிஷயமாயிற்றில்லையோ வென்னில்— அவ்விடத்திலும் அவர்களுக்குத் திருவடி நலியப் புகு(போ)கிறரென்கிற பயம் விளைந்து நலிவுக்கு விலக்கு உண்டானபடியாலே, வாளாலே ஓங்கி விடுமாப் போலே दण्डलेशமும் க்ஷமையும் सिद्धம். ஆகையால் ப்ரபந்நனுக்கு बुद्धि-पूर्वोत्तराघம் लेपியாதென்று விசேஷித்துச் சொல்லுவதொரு ப்ரமாணமின்றிக்கே யிருக்க, இவனுக்குப் பின்பு बुद्धिपूर्वापराधம் பிறந்தாலும் க்ஷமை கொள்ளவேண்டாவென்றும், க்ஷமை கொள்ளாவிடிலும் शिक्षारूपदण्डविशेष மில்லையென்றும், विलम्बाक्षமருக்கு[ம்] परमफलத்துக்கு विलम्बம் வாராதென்றும், प्रारब्धसुकृतविशेषादिகளாலே வரும் இங்குதைக் கைங்கர்யத்துக்கு विच्छेद-

---

ந்தோ நல்லவராயிருந்தோ பரப்ரேரணையால் புத்தி கெட்டு வதார்ஹர்களானாலும் காக்கவேண்டுமென்றபடி. இதற்குக் காரணம் அவர்கள் சரணுகதி செய்திருப்பதே என்று திருவுள்ளத்திலிருந்தாலும் பொதுவாகக் கூற வேண்டுமென்கிற காரணத்தினல் அதைச் சொல்லவில்லை. இனி வதார்ஹர்களான இவர்கள் சரணுகதி செய்யாமல் பாபிகளாகவேயிருந்தாலும் செய்து சுபர்களாயிருந்தாலும் அருளே கார்யமென்றதாம். न कश्चित् नापराध्यति. குற்றமில்லாதவர் யார். எப்படியாவது குற்றத்தை உபேக்ஷிக்க வழி தேடவேண்டும். ஒரு படியும் முடியவில்லையாகில் அப்போதே தண்டனை. கேள்வியைப் பரிஹரிக்கிறர் அவ்விடத்திலும் இத்யாதியால். நலியப் புகுகிறர்—ஹிம்ஸிக்கப் போகிறர். இந்த ஸ்த்ரீகளைச் சித்ரவதை செய்ய விரும்புகிறேனென்று பல ச்லோகங்களாலே இவர் விரிவாகக் கூறியதை அவர்களும் கேட்டனரே: அதனல் அச்சம் ஸித்தம். வாளாலே இதி. வெட்ட என்று சேஷபூரணம். வாள்—கத்தி. வெட்டுவதற்காக ஓங்கிக் கழுத்துவரையில் கொணர்ந்து வெட்டாமல் விட்டால், அதுவரையில் அச்சமிருந்தபடியால் துக்கானுபவமாகிறது. விட்டபடியால் விசேஷ விபத்தில்லை. "சேஷிபக்கலில் க்ருதஜ்ஞதை நடக்கைக்காக" என்று முன் சொன்னதை நிகமிக்கிறர் ஆகையால் இதி. மோக்ஷத்துக்காம் ப்ரபத்தியையே புத்திபூர்வகமான உத்தரபாபத்திற்காகவும் செய்வது ப்ரமாண வசநத்தைக் கொண்டா, ஸ்வேச்சையாய் யுக்தி மாத்ரத்தினலா? ப்ரமாணமில்லை யென்றுர். இங்கு விசேஷித்து என்றதால் सर्वपापेभ्यः என்ற ஸாமாந்யவசநம் போதாது. அது प्रामादिकபாபவிஷயமாகிவிடும்; புத்திபூர்வ உத்தராகத்தையே குறிக்கும் வசநம் வேண்டுமென்றதாம். விளம்பாக்ஷமருக்கும்; விளம்பாக்ஷமருக்கு என்றதே போதும். தேஹாவஸாநத்திற்கு மேலான விளம்பத்தை இசைவதில்லை. ஆயுர்வ்ருத்தியால் வந்த விளம்பம் தோஷமாகாதென்று ஸித்தாந்திபக்ஷம். உம் என்றும் பாடமிருந்தால் விளம்ப க்ஷமருக்கு फल விளம்பம் தகும்; விளம்பாக்ஷமருக்கும் விளம்பம் சொல்வது தகாதென்று சங்கிக்கிறவன் கருத்தை உம்மையால் குறித்ததாம். ஸுக்ருத விசேஷாதி என்கிற ஆதிபதத்தால் மோக்ஷார்த்த ப்ரபத்தி

ஸங்கோசங்கள் வாராவென்றும் சொல்லுகிற பக்ஷங்கள் சரண்யனுடைய குணங் களையும் சரணாகதியினுடைய प्रभावத்தையும் சொல்லுகைக்காகவத்தனை.

இப்படியல்லாத போது प्रपन्नரான பூர்வர்களுடைய अनुष्ठानपरम्परैக்கும், प्रपन्नரைப்பற்றவே प्रायश्चित्तம் விதிக்கிற சாஸ்த்ரத்துக்கும், மோக்ஷம் பெறு கைக்குக் காலம் குறித்து प्रपत्ति பண்ணுதே अनुवृत्तबुद्धिपूर्वापराधருமாய் विलम्ब[ा]क्षमருமாயிருப்பார்க்கு विलम्बம் சொல்லுகிற ப்ரமாணங்களுக்கும் சேராது. "सर्वपापेभ्यो मोक्षयिष्यामि" என்று ஸாமாந்யேந சொல்லச்

---

செய்யும் போதே விசேஷ கைங்கர்யத்திற்கும் அநுக்ரஹிக்கும்படி ப்ரார் த்தித்துக் கொள்வதைக் குறித்ததாம். அப்படிவரும் கைங்கர்யத்தை புத்திபூர்வாபராதம் கூட பாதிக்காதென்றதாம் அவர்கள் பக்ஷம் ஸாதக ப்ரமாணமில்லை யென்றூர்; बाधक ப்ரமாணமாக ஆசாரமும் பல வாக்யங்களும் இருக்கின்றன வென்கிறூர் இப்படி யல்லாத இதி. பூர்வர் களையே யென்றதால் அர்வாசீநாநுஷ்டாநம் साधक ப்ரமாணமாகாதென்று தெரிவித்ததாம். बाधक சாஸ்த்ரமாவன—ப்ரபந்நருக்கு பாபப்ராயச்சித்த விதாயக சாஸ்த்ரமும். உத்தராகத்துக்குப் பலாநுபவத்தைச் சொல்லும் சாஸ்த்ரமும், அபராதாநுபவ மூலமாக விளம்பம் சொல்லும் சாஸ்த்ரமும். ப்ராயச்சித்த சாஸ்த்ரம் 'पुनश्शरणं व्रजेत्' என்பது, விளம்பாக்ஷமராயிருந் தாலும் அநியதாயுஸ்ஸுக்களுக்கு விளம்பம் கீழே கூறப்பட்டது. அவர்கள் தேஹாவஸாநத்தில் என்று காலம் குறித்த ப்ரபந்நர்கள். இப்போது காலத்தைக் குறிக்காமல் ப்ரபத்தி பண்ணி அபராதத்தினுல் விளம்பம் பெறு கிறவரைச் சொல்லுகிறது. இதற்கான சாஸ்த்ரம் நிர்யாணுதிகாரத்தில் 'अपायाविरतः शश्वत् मां चैव शरणं गतः। तनूकृत्याखिलं पापं मामाप्नोति नरः शनैः॥' என்று குறிக்கப்பெறும். காலம் கோலாதே ப்ரபத்தி பண்ணுகிறவர் விளம்பக்ஷமரா, விளம்பாக்ஷமரா வென்னில், இவ்விடத்தில் இரண்டு பாட மும் காண்கிறது. விளம்பக்ஷமரென்பது ஸுகமாய்ப் பொருந்தும், காலம் குறிக்காமற் போனுலும், ப்ராரப்தத்தின் முடிவில் மோக்ஷம் பெறலா மென்று பக்தியிலிழியாமல், ப்ரபத்தி பண்ணபடியாலே இவருக்குப் புநர் ஜந்மம் அநிஷ்டமாகாமற் போனுலும் பக்தனளவுக்கு விளம்பமிஷ்டமில்லை யாகையால் இவரே விளம்பாக்ஷமருமாகலாம். அதனுலேயே நிர்யாணுதி காரத்தில் ப்ரமாணவாக்யத்திலுள்ள शनैः என்கிற சொல்லுக்கு वैराग्यावधि விளம்பமென்று கருத்துக் கூறப்பெற்றது. மற்றதை அங்கே காண்க.

ப்ரபத்தி பண்ணினவனுக்கு உத்தராகம் லேபியாதாகில் இவனும் விளம்பா க்ஷமனுகையாலே பாபபலன் அளிக்கப்படாமலிருக்கவேண்டும்; ப்ராயச் சித்த விதிக்கு வேறு தாத்பர்யம் சொல்லவொண்ணுதென்பதை ஸ்தாபிப் பதற்காக அந்த ப்ராயச்சித்தவிதி सर्वपापेभ्यः என்பதற்கு அபவாதமென் கிறூர் सर्वेति. மோக்ஷார்த்த ப்ரபத்தியே புத்தி பூர்வோத்தர பாபத்திற்கும் நிவர்த்தகமாகில் மற்றொரு ப்ராயச்சித்தவிதி வேண்டாவே. விதித்ததால்

செய்தேயும், "प्रायश्चित्तिरियं सात्र यत् पुनः शरणं व्रजेत्"
என்று விசேஷிக்கையாலே बुद्धिपूर्वोत्तराघத்துக்குப் प्रपत्त्यन्तरम् प्रायश्चित्तமாகப் प्राप्तமாயிற்று. पुनःशरणागतिயை விதிக்கிற வசநத்தை அடியிலே बुद्धिपूर्वोत्त-राघத்துக்கும் பரிஹாரமாகப் प्रपत्ति பண்ணுதார்விஷயத்திலே நியமித்தாலோ என்ன வொண்ணாது: बुद्धिपूर्वोत्तराघத்தையும் பற்ற ப்ரபத்தி பண்ணலாமென்று விசேஷித்துக் कण्ठोक्ति பண்ணுவதொரு வசநம் உண்டாகிலிறே இப்படி நியமிக்கலாவது? இப் ப்ரபத்தி बुद्धिपूर्वोत्तराघத்துக்கும் பரிஹாரமென்று அறிந்தால் இச் செட்டை விடுவாரையும் கிடையாமையாலே

---

ஸர்வசப்தத்திற்கு ஸங்கோசம் தெரிகிறது. வேறு கருத்துக் கூறலாமென்று சங்கித்துப் பரிஹரிக்கிறார் पुनरिति. ப்ரபத்தி प्रारब्ध—अप्रारब्ध सर्वकर्मनिवर्तक மானாலும் தேஹாவஸாநத்திலே மோக்ஷம் கேட்பவனுக்கு அதற்குப் பிறகு அநுபவிக்க வேண்டிய கர்மங்களின் நிவ்ருத்தியே இஷ்டமாகையால் அதை மட்டும் அது நிவர்த்திப்பிக்கிறது. அதுபோல் தேஹாவஸாநத்திற்குள் புத்தி பூர்வோத்தராகத்திற்கும் நிவ்ருத்தியைக் கேட்டால் தான் அதனல் நிவ்ருத்தியாகும். கேட்காதவன் பாபபலத்தை யநுபவிக்க வேண்டியிருப்ப தால் அவனுக்காக ப்ராயச்சித்தத்தை விதித்ததென்னலாமென்று சங்கை· இதன் பரிஹாரத்திற்குக் காரணம் அருளிச்செய்கிறார் बुद्धिपूर्वेति. பின்னல் செய்யும் பாபத்தையும் பொறுப்பதற்காக ப்ரபத்தி செய்யலாமென்கிற விசேஷவசநத்தைக் கொண்டு அவ்வாறு செய்வதா, அல்லது ப்ரபத்திக்கு அதுவிஷயத்திலும் ப்ரபாவமிருக்கிறதென்று நாமாக விமர்சித்தா? ஸ்பஷ்ட வசநமிராமையால் முதற்பக்ஷமில்லை. இரண்டாவது பக்ஷத்தில் ப்ரபத்தி எல்லாம் அளிக்குமாகையாலே ஒருவன் பிற்காலத்திய கைங்கர்யத்தை ப்ரார்த்தனை பண்ணுவதுபோல் பலவிதமான பாபங்களைச் செய்ய சக்தி யையும் ராகத்தையுமளித்து அவற்ருல் வரும் தாற்காலிக இன்பங்களையும் அநுபவிப்பித்து மேலே துக்கங்கள் வராதபடி யருள்புரிய வேண்டுமென் றும் கேட்கலாமென்னலாம். அது ஆநுகூல்ய நிலைக்கு விருத்தமென்னில்— பாபம் பண்ணுவதைத் தடுக்காமல் ருசிவைத்து செய்யப்போகிற பாபத்திற்கு க்ஷமை கொள்ளவேண்டுமென்று கேட்பதும் அதற்கு விருத்தமே. ஆகையா லேயே அதுவிஷயமாக ஸ்பஷ்டவாக்யம் வேண்டும். அதிராமையால் புந:ப்ர பத்திக்கே விதியிருப்பதால் ஸாமாந்ய வாக்யத்திற்கு புத்தி பூர்வோத்தராகம் விஷயமாகாது; அது இதர விஷயமென்றே தெரிகிறது. உத்தராக த்தைச் சேர்க்காமல் மோக்ஷார்த்த ப்ரபத்தி செய்தவர்விஷயத்திலே புந: ப்ரபத்தி வாக்யமென்பதும் தவறு. முதற்ப்ரபத்தியிலேயே உத்தராக த்தையும் கூட்டக்கூடுமாகில் இப்படி லகுவாக இஷ்டஸித்தி வருகிறபோது இதைக்கூட்டாமல் ப்ரபத்தியை யார்தான் செய்வர்? ஆகையால் புந: ப்ர பத்திவாக்யம் வீணுகுமென்கிறார் இ ப்ரபத்தி இதி. செட்டை—செட்டா வது அதிகத்தினலாக வேண்டும் கார்யத்தை அல்பத்தினலேயே நிர்வஹி

पुनःप्रपत्तिवचनं निर्विषयமாம். सामान्यवचनத்தளவைப் பற்றி विशेषवचनத்தை बाधகக்கொண்ணுது. இப்படி विशेषवचनத்தை बाधிக்கில் उपासननिஷ்டனுக்கும் बुद्धिपूर्वोत्तराघத்துக்கும் दोषமில்லையாம். बुद्धिपूर्वोत्तराघத்திலும் परमैकान्तिகளான

---

ப்பது இரண்டு ப்ரபத்தியிராமல் ஒரு ப்ரபத்தியாலேயே யிரண்டையும் ஸாதிப்பது இங்குச் செட்டு. இதை யாரும் விடமாட்டார்கள். புத்தி பூர் வோத்தராகம் வேண்டாமென்பவர் விடலாமே என்னில், அது பலவகை யாயிருப்பதால் ஏதேனும் ஒரு பாபம் இஷ்டமாகவே யிருக்கும். ஆனாலும் அதைச் செய்யாமலிருப்பது அதன் மூலம் வரும் பெருங்கேட்டிலிருந்து அஞ்சி யென்னல் வேண்டும். கேடில்லை யாகில் அதனால் வரும் தாத்காலிக ஸுகத்தை யாரிழப்பார்? இவ்வாக்யத்தில் பரிஹாரமென்ற சொல்லால் ஒரு விஷயமறிவிக்கப்படுகிறது—ப்ராயச்சித்தமானது பாபநிவ்ருத்திக்காக. பாபநிவ்ருத்தி யென்றால் உள்ள பாபத்தைப் போக்குவதேயாம். பாபம் வராதபடி செய்வது என்று பொருளல்ல. அதனால் ப்ரத்யவாய பரிஹார த்திற்காக நித்ய கர்மாநுஷ்டாநமென்பது போல் பாபபரிஹாரத்திற்காக ப்ரபத்தி யென்றால் பாபம் வாராமைக்காக என்றதாம். பாபகார்யம் இவனுக்கு இஷ்டமாகையால் அது வராமைக்காகவென்று சொல்ல லாகாது. பாபம் செய்தால் அது மூலமாக நிக்ரஹம் வாராமைக்காக. என்ன வேண்டும். सर्वपापेभ्यो मोक्षयिष्यामि எங்கிறவிடத்தில் மோக்ஷ சப்தம் ஸ்வரஸமாக பாபநிவ்ருத்தியைச் சொல்லுமல்லது பாபம் வாராமையைச் சொல்லாது. ஆகையால் ஸர்வபதத்தால் உத்தரபாபத்தைக் கொள்ளவியலாது. ப்ராமாதிக உத்தராகத்தைக் கொள்ளவேண்டுமே யென் னில், அதனுடைய அச்லேஷம் வேறு வாக்யத்தால் தானே ஸித்தமென்க. அதை யநுஷ்டிக்கிறவன் உத்தேசிப்பதாகக் கொண்டாலும் அது சொல்ல வொண்ணாதென்கிறார் सामान्येति. आहवनीये जुहोति என்பது ஸாமாந்ய வாக்யம். पदे जुहोति என்பது விசேஷவாக்யம். விசேஷவசநத்தால் பதத்தில்= அடிவைப்பில் செய்யவேண்டும் ஹோமத்தை ஆஹவநீயாக்னியில் செய்வ தில்லை. அப்படி செய்வதற்கு बाधகம் விசேஷவசநம். ஸாமாந்யவசநம் பாதிக்கப்படும். அதுபோல் இங்கு புந: ப்ரபத்தி வசநத்தாலே பூர்வத்தில் சேர்க்கை பாதிக்கப்படுமே யல்லது, புந:ப்ரபத்தி பாதிக்கப்படாது. 'अपाय संप्लवे पुनश्शरणागति யென்று சொன்னதால் பாபம் வந்த பிறகு செய்ய வேண்டுமே யல்லது அச்லேஷத்திற்காக ப்ரபத்தி கூடாதென்றே அறிவித்த தாம். மீறினால் வசநம் அப்ரமாணமே.

இதை யிசைந்தால் மற்றொரு அநிஷ்டத்தையும் அறிவிக்கிறார் இப்படி இதி. பக்தியோக நிஷ்டனுக்கு 'सर्वे पाप्मानः प्रदूयन्ते' पापं कर्म न श्लिष्यते என்று இரண்டும் பலமாகக் கூறப்பட்டிருப்பதால் அங்கும் नाविरतो दुश्चरितात् என்கிற வாக்யத்தை பாதித்து புத்தி பூர்வபாபத்திற்கு அச்லேஷத்தையும் கூட்டவாகும். அது பாஷ்யாதி விருத்தம். பக்தனைவிட ப்ரபந்நனுக்கு

இவர்கள் இருவர்க்கும் यमवश्यतादिகளில்லை யென்னுமிடம்—
"यस्मिन् कस्मिन् कुले जाता यत्रकुत्र निवासिनः । वासुदेवरता नित्यं यमलोकं न यान्ति ते ॥"
इत्यादिवचनबलத்தாலே सिद्धம். ஒரு பாபந்தானே जातिगुणाद्यधिकारभेदத்தாலே गुरुलघुफलभेदवத்தாயிருக்குமென்னுமிடம் सर्वसंप्रतिपन्नம்.

இவ்வர்த்தம் राजपुत्रापराधादिகளிற்போலே लोकमर्यादैயாலும் உபபந்நம்,
न प्राग्वद् बुद्धिपूर्वाघे न चात्यन्तमनु (नि)ग्रहः । लघुर्दण्डः प्रपन्नस्य राजपुत्रापराधवत् ॥

---

யமவச்யத்வாதிகளில்லாமை என்கிற விசேஷம் போலே உத்தர பாபா ச்லேஷமும் ஒரு விசேஷமாகட்டுமே யென்பதைப் பரிஹரிக்கிறார் बुद्धीति. யமவச்யத்வமில்லை யென்பது பக்தனுக்குமென்பதற்கு ப்ரமாணம் यस्मिन् இத்யாதி. எக்குலத்தில் பிறந்தவரும் எத்தேசத்தில் வஸிப்பவரும் வாஸு தேவனையே ப்ராப்யமாக எப்போதும் கொண்டவராகில் யமலோகம்செல்லார். நரகத்திற்கான பாபம் செய்திருந்தாலும் அதன் பரிஹாரத்திற்காக நாம ஸங்கீர்த்தநம் செய்தாராகில் நரகம் போகாரென்றபோது பக்தர்களுக்கு அது ஸித்தம். नित्यं वासुदेवरताः என்கிற சொல்லுக்கிணங்க இங்கே— பரமைகாந்திகளான என்று விசேஷணமாம். இந்த ச்லோகத்தில் वासुदेवरताः என்று பொதுவாகவிருப்பதால் ப்ரபந்நனை மட்டும் கொள்வது தகாது. யமலோகம் செல்லமாட்டார்களென்றதால் அதற்கு ப்ரதியாக இங்கே சில துக்கங்களை யநுபவிப்பரென்று தெரிகிறது. ஒரே விதமான பாபத்திற்குப் பரமைகாந்திவிஷயத்தில் பலன் குறைவு. பிறருக்கு மிகுமென்ற வாசி கூடுமோ; இதைவிட இவர்களுக்குப் பாபபலனே யில்லை என்பதே உசித மாகலாமென்பதைப் பரிஹரிக்கிறார் ஒரு பாபமிதி. ஜாதீதி. ப்ரஹ்மஹத்தி யென்பது ப்ராஹ்மண க்ருதமானால் பன்னிரண்டு வருஷம் செய்யும் வ்ரத விசேஷத்தாலேயே அந்த தோஷம் போகிறது. சூத்ரனுக்கு நாலுமடங்கு அதிகமென்றதால் गुरु लघु भावமும் फलभेदமும் தெரிகிறது. பொய் சொல்லு வது முதலானவை அஹிதாக்நி. அநாஹிதாக்நி யென்கிற குணபேதத்தாலே வாசியுள்ளதாகிறது. ஜ்ஞாந அஜ்ஞாந ப்ரயுக்தமாகவும் வாசி தெரிகிறது, அதுபோல் பரமைகாந்தி அபரமைகாந்தி யென்கிற பேதமும் தகும். லோகந்யாயத்தையும் காண்பிக்கிறார் இவ்வர்த்தமிதி ஆதிபதத்தாலே அந்தப்புர பரிஜநாபராதத்தைக் கொள்வது. இங்கே ராஜபுத்ர அபராத என்பதற்கு மற்றொருவிதமும் உரைசெய்வர். ராஜபுத்ரனே வேட்டையில் கைதப்பிப் போனதால் ராஜபுத்ரனென்று அறியப்படாதபோது அவன் செய்த பாபத்திற்கு ஏற்பட்ட சிக்ஷை அவன் புத்ரனென்று அறியப்பட்ட பிறகு குறைக்கப்படுகிறது. அதுபோல் ப்ரபந்நனான பிறகு யமலோக கமநமிராமல் வேறு சிக்ஷை இதுவிஷயமான இவர் அருளிச்செய்யும் காரிகை नेत्यादि. புத்திபூர்வமான பாபத்தில் ப்ரபந்நனுக்கு प्राग्वत् = அப்ர பந்நனாயிருந்த போதுபோல் न दण्डः— சிக்ஷையில்லை. அத்யந்த அநுக்ர ஹமுமில்லை, (ஸ்வீகாராதிகளால்) ராஜபுத்ரனானவனுடைய அபராதத்திற்குப்

ஆகையால் அதிகாராநுரூபமாக லघुफलமும் வாராமைக்காகப் புनःप्रपदनம் விधि
க்கப்படுகிறது. शिष्टतया व्यपदेश्यரான समर्थருக்கு लोकसंग्रहத்துக்காகவும்

---

போலே பரபந்நனுக்கும் சிக்ஷை லகுவாகும். இக் காரிகையில் सनुग्रहः என்ற
பாடமே உரைகளுக்கு ஸம்மதமானது. நம் பித்ருபாதருடைய ஸ்ரீகோச
த்தில் अनिग्रहः என்று சோதிக்கப்பட்டிருக்கிறது. அபராதப்பட்டவனுக்கு
அதிக அநுக்ரஹத்துக்கு என்ன ப்ரஸக்தி. அதிக நிக்ரஹமுமில்லை; அடி
யோடு அநிக்ரஹமுமில்லை; பின்னே லகுவாமென்று அப்போது பொருள்.
இங்கே 'पुनश्शरणं व्रजेत्' என்று மறுபடியும் சரணாகதி செய்யென்றதாலே
மோக்ஷார்த்தமான சரணாகதியை மீண்டும் செய்யவேண்டும் முன் செய்த
சரணாகதி நஷ்டமென்று தெரிகிறதே. அப்போது இப் பாபத்துக்கு மட்டும்
இது ப்ராயச்சித்தமெப்படியாகும்? மேலும் அப்ரபந்நனுக்கு இந்தபாபத்திற்கு
சரணாகதி ப்ராயச்சித்தமன்றே, வேறு தானே. அதையே இவனும் செய்ய
லாயிருக்க இதை எதற்கு விதிக்க வேண்டுமென்கிற சங்கையைப் பரிஹரிக்க
நினைத்து அருளிச்செய்கிறார் ஆகையால் இதி. புனः என்ற சொல்லானது
மோக்ஷார்த்த சரணாகதி தானென்று அறிவிக்கமாட்டாது. ப்ராயசித்த ப்ர
பத்தி பண்ணுதவனுக்கும் பாபபலமான சிக்ஷையநுபவித்து மோக்ஷப்ராப்தி
ப்ரமாண ஸித்தமாகையால் முன் ப்ரபத்திக்கு அழிவில்லையே இது வேறு
ப்ரபத்தியானாலும் ப்ரபத்தி யென்கிற ஸாமாந்யாகாரத்தைக் கொண்டு புनः-
என்றதாம். अन्यार्थप्रपत्तियாகையாலே असकृत् என்ற தோஷமில்லை யென்று
தெரிவிப்பதற்காகவே புनः என்றது அப்ரபந்நன் செய்யும் ப்ராயசித்தமே
இவனும்செய்யலாமேஎன்னில்அவன்பாபம்குருவாகையாலேगुरुप्रायश्चित्तம். இது
லகுவாகையாலே லகுப்ராயச்சித்தம் தகுமென்கிற ஔசித்யத்தை இவ்வச
நம் காட்டுமென்றபடி. ஆனாலும் ப்ரபத்தி யென்பது எங்குமே முக்யோ
பாயமாகாதே. அது ப்ரார்த்தனைமட்டுமன்றி பரந்யாஸ ரூபமாகையாலேமுக்ய
கார்யம்செய்யமாட்டாதவனுக்கேயன்றோப்ரபத்தி. இப்படியிருக்க சக்தாசக்த
ஸர்வஸாதாரணமாக புந:ப்ரபத்தியை விதிக்கக் கூடுமோவென்ன ஸமாதாநம்
அருளுகிறார். சிஷ்டதயேதி. பாபம் இருவிதமாகும். ரஹஸ்ய பாபமென்
றும் பிறர் சிலர் அறிந்ததென்றும். ரஹஸ்ய பாபத்திற்கு லகுப்ராயச்
சித்தமும். ப்ரஸித்தமான—பிறரறிந்த பாபத்திற்கு குரு ப்ராயச்சித்தமும்
விதிக்கப்பட்டது. ப்ரபந்நன் பண்ண பாபம் ப்ரஸித்தமாகவிருந்தால் அதை
நிமித்தமாகக் கொண்டு நைமித்திகமான गुरु ப்ராயச்சித்தமே செய்ய
வேண்டியிருந்தாலும் அது விளம்ப ஸாத்யமாயிருப்பதாலும் அநேக பாப
ங்கள் சேர்ந்திருக்கிறபடியாலும் அனைத்துக்கும் சேர்ந்து ஒரு ப்ராயச்சித்தம்
அகப்படாததாலே சீக்ரமாக பகவந்நிக்ரஹ நிவ்ருத்திக்காக அகதிகமாக
ப்ரபத்தியையே செய்கிறான். ஆனால் அவன் சிஷ்டனென்று மதிக்கப்பட
இருந்தால் அதாவது இவன் செய்வதைக் கண்டு பிறரும் அப்படியே
செய்ய இழியும்படி ப்ரஸித்தனாயிருந்தால் குருப்ராயச்சித்தமே செய்வது.

दुनिमित्तங்களில் यथाशक्ति प्रसिद्धप्रायश्चित्तமாம். அது தவிருகையும் முன் சொன்ன ஆஜ்ஞா திலங்கனமாம் सेवकக்கு ஸேவை தப்பின போது तादात्विकமான पारितोषिकாதிகளேயும் இழந்து भयानुभवமும உண்டாமாப் போலே आज्ञातिलङ्घनம் இரண்டு படி அநர்த்தம்.

स्वेच्छामात्रத்தாலே बुद्धिपूर्वोत्तराघத்தையும் பற்ற அடியிலே प्रपदनம் பண்ணிறேலோ என்னில்— இது உபாஸநத்தையும் बुद्धिपूर्वोत्तराघத்துக்கும் பரிஹார மாகப் பண்ணிறேலோ, अङ्गप्रपत्तिயும் அதுக்குச் சேரப் பண்ணிறேலோ என்கிற प्रतिबन्दिயாலே निरस्तம். இருவருக்கும் இப்படியாகிடுகவென்கை

---

அது அவனது பாபநிவ்ருத்திச்குப் போல் லோகஸங்க்ரஹ கதிற்கும் ஆகிறது. आनुकूल्यमिति प्रोक्तं सर्वभूतानुकूलता என்றது இதற்குமாம் ப்ர ஸித்த ப்ராயச்சித்தங்களிலும் முக்ய गौणவகைகள் உண்டு. यथाशक्तिயே ஒன்றை யனுஷ்டிப்பதாம். அவன் செய்த பாபம் ரஹஸ்யமாகில் ரஹஸ்ய ப்ராயச்சித்தமோ ப்ரபத்தியோ போதும். அங்கே லோகஸங்க்ரஹத் திற்கு ப்ரஸக்தி யில்லேயே. சிஷ்டனாகச் சொல்லப்படுகினறவன் போக மற்ற பேருக்கும், யாராயினும் அசக்தருக்கும் பொதுவாக இவ்வாக்யம் ப்ரபத்தியையே சொல்லிற்று. சக்தனாய் சிஷ்டனானவனுக்கு ப்ரஸித்த ப்ராயச்சித்தத்தை இது விலக்காதாகையால் அவனுக்கு அது அவச்யமே யென்கிறார் அது தவிருகையும் இதி अथवा செய்த பாபத்திற்கு ப்ராயச் சித்தம் செய்யாமல் சிக்ஷை யனுபவிப்பதற்கும் துணிந்திருக்கை சிஷ்ட னுச்குத் தகாது. அதுவும் ஓர் அபராதமாகும்.

ஆஜ்ஞா திலங்கநத்தில் இருவிதமான நஷ்டங்களைச் சொல்லுகிறார் सेवकக்கு இதி. ராஜஸ்த்ரீகளுச்கு தலை பின்னல் போன்ற அலங்காரம் செய்வதற்கேற்பட்டவள் सेवका அவள் அலங்காரத்திற்காகப் பரி ள த்ரவ்யம் முதலானவற்றை ராஜஸ்த்ரீக்கு உபயோகப்படுத்தும்போது தானும் சிறிது அநுபவிப்பது ஸஹஜம். அவ்வேலையை இழந்தால் அந்த த்ரவ்யாநுபவத்தை இழப்பதும் பயம்போல் ஒரு நஷ்டமாகும், பகவதா ஜ்ஞையை மீறினல், அதைச் செய்தால் வரும் ப்ரீதியை இழப்பதும் மீறினதாலுண்டான அப்ரீதி பெறுவதும் ஆக இருவித நஷ்டமாம்.

இவ்வளவால் புத்திபூர்வோத்தராகத்தை பூர்வப்ரபத்தியிலே சேர்க்க ப்ரமாணமில்லை யென்று நிரூபித்த படி. ப்ரமாணமிராவிடினும் ப்ரபல பாபநிவர்த்தகமான ப்ரபத்தி இதையும் பரிஹரிக்கக் கூடுமென்று தானாகக் கூட்டுவதானல் இதே ந்யாயம் உபாஸநத்திற்கும் வரக்கூடுமாகையாலே பூர்வாசார்ய க்ரந்த விரோதமமென்கிறார். உபாஸநம் ப்ராயச்சித்தமானாலும் ப்ராரப்த நிவர்த்தநசக்தி அதற்கில்லேயே அதனல் ப்ரபத்திக்குச் சொல்வது உபாஸநத்திற்குமென்று ப்ரதிபந்தி(बन्दि) தகாதென்னில். அதற்காக உபாஸ நத்தைவிட்டு அங்கப்ரபத்தியைக் கொண்டு ப்ரதிபந்தியைச் சொன்ன தாம். பக்திக்கு வேண்டிய அநுகூலங்களை ஸாதிப்பதற்கு அங்கப்ரபத்தி

भाष्यादिविरुद्धமாகையாலே अपसिद्धान्तம்; उपस्ति-श्रुतिகளான ब्रह्मनिष्ठர்களுடைய अनुष्ठानத்துக்கும் विरुद्धம். ஆகையாலே விசேஷ வசநமில்லாமையாலே "कृते पापेऽनुतापो वै" इत्यादिகள் கணக்கிலே "நிமித்தம் உண்டானாலல்லது நைமி

---

செய்யும்போது மேலே பண்ணப்போகிற பாபங்களுக்கும் அச்லேஷம் வேண்டுமென்பதையும் சேர்த்து உபாஸகனும் ப்ரபத்தி செய்வதாகு மென்றபடி. प्रतिबन्दियாவது— ஓரிடத்தில் தோஷமிசைந்தால் மற்றோரிடத்திலும் அத்தகைய தோஷம் இசையும்படியாமென்று தோஷாரோபணம். பாஷ்யாதிகளில்தான் உபாஸநத்திற்கு புத்திபூர்வோத்தராக பரிஹாரமும் பலனாக ஏன் கொள்ளவில்லையென்ன, அதற்கு உபநிஷன் மூலமாக ஏற்பட்ட பக்தர்களின் அநுஷ்டாநமும் सर्वान्नानुमत्यधिकरणமும் காரணமென்று அறிவிக்கிறார். उषस्तीति. இவருடைய உபாக்யாநம் சாந்தோக்யத்தில். ப்ரஹ்மவித்தான உஷஸ்தி யானைப்பாகர்கள் வசிக்கும் க்ராமத்தில் அதிவ்ருஷ்டியினாலே ஏற்பட்ட க்ஷாமத்தினால் ஆஹாரமில்லாமல் தவித்து ஒரு யானைப்பாகன் குல்மாஷ(காராமணி) என்னும் தான்யத்தைச் சுண்டி பாத்ரத்தில் வைத்துக் கொண்டு உண்கிறபோது பசியினால் அவனை ஆஹாரம் கேட்க, அவன் தான் வைத்து உண்கிற த்ரவ்யம் தவிர வேறில்லையே யென்று வருந்த, அதிலே சிறிதளிக்கும்படி இவர் கேட்க அப்படியே அதை அவன் அளித்துவிட்டான். இவர் அதில் எடுத்துக்கொண்டு ப்ராணதாரணத்திற்கு வேண்டுமளவு புசித்து மிகுந்ததைப் பத்நியிடம் கொடுத்தார். அவன் தான் அருந்தும் தண்ணீரையும் பாத்ரத்துடன் கொடுக்க, அது வேண்டா, எச்சில் என்றார் இவர். குல்மாஷம் எச்சிலல்லவோவென்று கேட்டான். ப்ராணாபத்தாயிருந்ததால் அதை மட்டும் கொண்டேன்; இனி அவ்வாபத்தில்லையாகையால் இதைக் கொள்வது தகாதென்றார் இவர். ப்ராண ஸம்சயமுண்டாகும் காலம் தவிர வேறு காலத்தில் நிஷித்த போஜநம் கூடாதென்ற சாஸ்த்ரத்திற்கு அஞ்சி இவர் நடந்ததாகிறது. உபாஸநமே புத்திபூர்வ உத்தர பாபத்தையும் பரிஹரிக்குமாகில் இவர் அஞ்சவேண்டாவே. எனவே மோக்ஷோபாயத்திலே உத்தர பாபபரிஹாரத்தைக் கூட்டுவதும் தகாது. இந்த ந்யாயத்தைக் கொண்டு தான் ப்ராயச்சித்த ப்ரபத்தியை விதித்தது. இப்படி புந:ப்ரபத்தி சாஸ்த்ரமே உத்தராக பரிஹாரத்தைச் சேர்ப்பதற்கு बाधक சாஸ்த்ரமுமாகும். மற்றொரு யுக்தியும் கூறிக்கொண்டே இவ்விசாரத்தை முடிக்கிறார் ஆகையாலே இதி; ப்ராயச்சித்தமாவது. 'कृते पापेऽनुतापो वै यस्य पुंसः प्रजायते। प्रायो-नाम तपःप्रोक्तं चित्तं निश्चय उच्यते' இத்யாதி ப்ரமாணத்தால் பாபம் பண்ணினவனுக்கு அநுதாபம் பிறந்தபோது செய்யும் கார்யமாம். அதனால் அதை நைமித்திகமென்பார்கள். நிமித்தம் வராதபோது நைமித்திகம் செய்ய ப்ரஸக்தியில்லை மோக்ஷார்த்த ப்ரபத்தி செய்யும்போது உத்தரகால பாபமில்லையாகையால் அதை நிமித்தமாக்கி பூர்வப்ரபத்தியை ப்ராயச்

த்திகம் ப்ராப்தமன்று" என்கிற न्यायम् बुद्धिपूर्वोत्तराघத்தில் बाधितமாகாது. ஆனபின்பு आगामिषु दुर्पूर्वागत्துக்கு அஞ்சினுகில் அதுக்குக் காரணமான प्रारब्धपापத்துக்குப் प्रपदनरूपप्रायश्चित्तம் பண்ணப் ப்ராப்தம்.

"साध्यभक्तिस्तु सा हन्त्री प्रारब्धस्यापि भूयसी" என்ருர்களிறே.

---

ஸித்தமாக்குவது எங்ஙனே? அதனுலே தான் பாபம் வந்த பிறகு புந: ப்ரபத்தியை விதித்தது. எல்லா நைமித்திகத்துக்குமுள்ள ரீதிதான் புத்தி பூர்வோத்தராக பரிஹாரத்துக்குமாகும். இப்படி. பாபம் செய்ய விரும்பின வனுக்கு பாபபலனைப் பரிஹரிக்க புந: ப்ரபத்தி விதிப்பதானுலும் நிர்விக்ந கைங்கர்யம் உத்தரகாலத்தில் நடக்கும்படி சில ப்ரபந்நர்கள் கேட்டுக் கொள்கிருர்களே, அவர்களுக்கு இப்படி பின்னே பாபம் செய்ய விளைந் தால் எப்படி நிர்விக்நமாக கைங்கர்யம் ஸித்திக்குமென்பதற்கு ஸமாதாநம் சொல்லுகிருர் ஆன பின்பு இதி. பாபம் செய்ய இசைந்திருந்தால் முன் சொன்னபடியே யாம். பாபம் செய்வதற்குக் காரணம் பூர்வஜந்மத்தில் செய்திருக்கும் பாபாரம்பக பாபம். தேஹாவஸாநத்திற்குள்ளே பாபத்தை யுண்டுபண்ணும் அந்த பாபாரம்பக பாபத்தையும், தேஹாவஸாநத்திற்குப் பிறகான ப்ராரப்த கர்மத்தைப் போலே நிவ்ருத்தி செய்யும்படி இவன் மோக்ஷார்த்த ப்ரபத்தியில் கேட்கலாம். அப்போது க்ஷுத்ரபலத்தில் நசை யும் பாபாசரணமும் ஏற்படாமல் நிர்விக்ந கைங்கர்யம் நடத்தலாமென்ற படி. பக்தி யோகத்தால் போக்கவாகாத பாபாரம்பக பாபத்தையும் ப்ர பத்தி போக்குமென்பதற்கு ப்ரமாணம் காட்டுகிருர்—साध्यभक्तिरिति.

ஸாத்ய பக்தியாவது ப்ரபத்தி. அது ஸஞ்சித கர்மாவை மட்டு மன்றி ப்ராரப்த கர்மாவையும் போக்கும். அதனுல் அது भूयसी = பக்தியினும் சிறந்தது. இது தைத்ரீயோபநிஷத்திலே மாநஸமென்கிற பக்தியோகம் வரையில் தவங்களைக் கூறி तस्मात् न्यासमेषां तपसामतिरिक्तमाहुः என்று மேம்பட்டதாக ஓதப்பெற்றது. இது उपायभक्तिः प्रारब्धव्यतिरिक्ताघनाशिनी என்ற பூர்வார்த்தத்தால் தெளிவாகும். ஸாத்ய ப்ரபத்தியென்று இதற்கு எதனுல் பெயரென்னில்—साध्या भक्तिः यस्याः सा என்று பஹு வ்ரீஹியாய் தன்னுல் ஸாத்யமான பக்தியை யுடையது (பக்திக்கு ஸாதகமா யிருப்பது) என்றதாம். இதனுல் அங்க ப்ரபத்தியாய் பக்திக்கு ஸாதகமான ப்ரபத்தியே ப்ரதாநமாக அனுஷ்டிக்கப்பட்டால் भक्तिக்கு மேலாகி ஸஞ்சித த்தையும் ப்ராரப்தத்தையும் போக்குமென்றறிவித்ததாம். அதிகாரிவிபா காதிகாரத்தில் ப்ரபந்நனும் फलभक्तिயிருப்பதாலேயே பக்தனென்று சொல் லப்படலாமென்றருளியதால், ஸாத்ய பக்தி யென்பதற்கு உபாயமாகாமல் फलभूतமான பக்தி என்று பொருள் தேறுவதால் ப்ரபந்நனிடம் பக்தி யிருக்கிறது; அதாவது महनीयविषये प्रीतिः भक्तिः என்கிற உயர்ந்த மதிப்புட னுள்ள அன்பு. இது பக்தியோகத்தில் உபாயகோடியில் சேரும் அதனுல் தான் த்வேஷ மயமான த்யாநத்திற்கு மோக்ஷஸாதநத்வமில்லை. அதனுல்

"जन्मान्तरकृतं पापं व्याधिरूपेण बाधते । तच्छान्तिरौषधैर्दानैर्जपहोमार्चनादिभिः ॥"
इत्यादिகளில் दानजपादिகளிலும் அகப்படப் प्रारब्धपापनाशம் சொல்லப்பட்ட திறே ஆகையால் प्रारब्धपापத்துக்கு அஞ்சி प्रपत्ति பண்ணினனாகில் அப்போது बुद्धिपूर्वपापமும் உதியாது

"दासः सखा वाहनमासनं ध्वजः" इत्यादिகளிற்படியே अत्यन्तभगवदन्तरङ्गர்க்கும்

---

தான் அந்த உபாஸனத்தை பக்தியென்றே வ்யவஹரிப்பது. ப்ரபத்தி உபாயமாம் போது அது வேறொன்றை யபேக்ஷிக்காமையாலே ப்ரீதியென்பது ஸ்வயம் ப்ரயோஜநமேயாகும்; உபாயமாகாதென்ற கருத்துமாம். இனி பக்தியென்பதற்கு பக்தி ஸ்தாநாபந்ந வஸ்து என்று பொருள்; ஈச்வரன் பக்தி ஸ்தாநத்திலாகிறான். ப்ரபத்தியும் பக்தியோடு விகல்பிக்கப்பட்டதால் பக்தி ஸ்தாநத்தில் ஆகிறது. ஆக ஈச்வரன் ஸித்தபக்தி, ப்ரபத்தி ஸாத்யமான பக்தி மென்பதுமாம்.

ப்ராரப்த கர்மாவைப் போக்குவதற்காக ப்ரபத்தியானது பக்தியைவிட சிறந்ததாயிருக்கவேண்டுமென்பதில்லை; சிற்சில ப்ராரப்த்த கர்மாவைப் போக்க ஸாதாரண உபாயங்களும் உண்டென்கிறார் जन्मान्तरेति இந்த ஜந்மத்தில் வரும் வ்யாதியானது முன் ஜந்மத்தில் செய்த பாபத்தினலாகிறது. பாபமே வ்யாதியாய் வந்து பாதிக்கிறது. வியாதியான பிறகு அதைப் போக்குவது ஔஷதத்தாலாகும். அந்த வ்யாதி தொடராமைக்காக அல்லது வ்யாதியே வாராமைக்காக அது மூலமான பாபத்தைப் போக்க வேண்டுமானல் தாநங்கள், ஜபம் ஹோமம், பூஜை, பாராயணம் முதலானவற்றைச் செய்யலாமென்றதால் தாநாதிகள் பாபம் போக்குவது போல் ப்ரபத்தியும் போக்கும். ச்லோகத்தில் ஆதிபதத்தால் ப்ரபத்தியும் கொள்ளப்படும். இன்ன பாபம், இத்தனை பாபம் என்று தெரியாதபோது எவ்வளவு தாநம் ஜபம் ஹோமமென்று சொல்ல முடியாதாகையால். பூர்வ கர்ம நாசகமான முக்யோபாய ஸ்தாநத்திலே ப்ரபத்தியைச் செய்யலாமென்று உட்கருத்து. அஞ்சி = பாபாரம்பக பாபம் பலித்தாலென்ன செய்வதென்ற அச்சத்துடன். சிலர் ப்ரபந்நனுக்கு பூர்வஜந்ம பாபத்தால் வ்யாதி முதலானவை வரலாமாகிலும் பாபம் வாராது. அவன் செய்யும் கார்யம் பாபம் போல் தோன்றினலும் பாபமாகாது என்று நினைப்பார். இது தவறென்பதை ப்ரபந்நனுக்கும் மேம்பட்ட கருத்மானின் வரலாற்றைக் கொண்டு நிரூபிக்கிறார் दास இதி. எம்பெருமானுக்கு கருத்மான் பரம பதத்திலும் தாஸன், தோழன், வாஹநம், வீற்றிருக்கும் ஆஸநம், கொடியென்ற பல விதமாகிக் கைங்கர்யம் செய்கின்றவர். இவர் தன்னைவிட எவ்வளவோ குறைவான சாண்டிலி யென்கிற ஒரு சிறந்த அம்மைவிஷயத்தில் ஸாத்துவிகமாக ஏதோ நினைத்தார். அந்த நினைவு அவரிடத்தில் சிறந்த மதிப்பு வைத்திருந்தபடியால் ஸத்துவகுண மூலமாக வந்ததே; துர்குண மூலமல்ல. அதுவும் ஒரு குற்றமாயிற்று. அந்தக் குற்றமே

सात्त्विकापराधलेशமும் प्रत्यवायकரமென்னுமிடம் शाण्डिलीवृत्तान्तादिகளிலே प्रसिद्धம். ஸர்வேச்வரனைப் போலே ஸூரிகளும் அவதரித்தால் कर्मवश्याभिनयம் பண்ணி लोकहितप्रवर्तनार्थமாக अपचारपरिहारादिகளைச் நடத்திப் போருவர்கள்.

---

பெரிய அநர்த்தத்தை விளைவித்தது. ஆகையால் கீழ்ப்பட்டவரிடமும் எவருக்கும் அபராதமே யாகும். அவ் வரலாற்றின் விவரமாவது—சாண்டிலி யென்கிற ஒரு பாகவத ஸ்த்ரீ கடல்நடுவில் ஓர் த்வீபத்தில் வஸித்திருந்தாள். गालवரென்னும் ரிஷி தம் குருவான விச்வாமித்ரருக்கு குருதக்ஷிணை ஸமர்ப்பிக்க விரும்பி அவரை நிர்பந்தித்ததில் அவர். கோபத்தினால் ஒரு காது கறுப்பான வெள்ளைக்குதிரைகள் எண்ணூறு கொணர்ந்து கொடு என்று கூறியதால்வருணதேவதையினிடம்அவற்றைப்பெறவேண்டுமென்று அதற்காகத் தம் உடன்பிறந்தாளின் மகனான வைநதேயனை தம்மை வருணனிடம் கொண்டுவிடச் சொன்னதால். அவர் गालवரை எடுத்துக் கொண்டு வருணலோகம் செல்லும் போது வழியில் சாண்டிலி யிருக்கும் ஆச்ரமத்தில் தங்கி அவளால் உபசரிக்கப்பட்டு அவளிடம் விசேஷ மதிப்பு வைத்து, இந்த மஹாநுபாவை இந்த த்வீபாந்தரத்தை விட்டு மும்மூர்த்திகள் வஸிக்குமிடம போன்ற புண்ய ஸ்தலத்தில் இருக்கை தகுமென்று நினைத்துக் கொண்டே உறங்கினர். எழுந்ததும் பார்த்தால் தண சிறகு முதலானவை எல்லாம் போய் கேவல மாம்ஸமாய் தாம் இருப்பதைக் கவனித்தார். அதன் மேல் தம்முடைய எண்ணத்தினால் வந்த அநர்ததமிது என்று அறிந்து சாண்டிலியை நமஸ்கரித்து க்ஷமை கொள்ளவேண்டி, அவளநுக்ரஹத்தால் மீண்டும் அழகிய உருக்கொண்டுச் சென்றார் என்றதாம். ஆதிபதத்தினாலே ஸநகாதிகளிடம் அபராதப்பட்டு மூன்று ஆஸுர ஜந்மம் பெறவேண்டியிருந்த விஷ்ணுலோக த்வாரபாலகர்களின் வ்ருத்தாந்தாதிகளைக் கொள்க. பக்தர்களான வைஷ்ணவர்களுக்கு அபராதமுண்டானாலும் நித்ய ஸூரியாய் ஸர்வஜ்ஞனான கருத்மானுக்கு அபராத ப்ரவ்ருத்தியும் சிக்ஷையும் கூடுமோ என்ன அருளிச்செயகிறார் ஸர்வேச்வரனை. இதி. ராமக்ருஷ்ணாத்யவதாரங்களில் அகர்மவச்யனான ஸர்வேச்வரன் அபிநயம் செய்கிறாற் போல் நித்யஸூரிகளும் சில அபிநயம் செய்வர். அது லோகத்தில் ஹிதாஹித விவேகத்திற்காகும். எம்பெருமானுக்கு அந்தரங்கரும் குற்றம் செய்தால் சிக்ஷைக்கு ஆளாவர் என்ற தத்துவத்தை அறிவிப்பதற்காக விந்தைக்கு மகனாய் गालवருக்கு भागिनेयராய் அவதரித்த கருத்மான் இவ்வாறு நடந்துகொண்டார். அவர்களே தோஷபரிஹாரத்திற்காக. ப்ரபத்தி செய்தார்களானால் மற்றவர் எப்படி ப்ராயச்சித்தம் செய்யாமலிருக்கத் தகும்.

பாபாரம்பக பாபமானது எவ்வழியாக பாபத்திற்குக் காரணமாகிறதோ அவ்வழியை விலக்கவேண்டும்; அது துஷ்கரமாகத் தோன்றினால்

ஆகையால் யாவத்ப்ரீதியிழவாமைக்காகவும், அதுக்காகப் புநःப்ராரி யாதல் லகுःதமாதல் ப்ரஸங்கமாமைக்காகவும் மேல், வரும் அபராதங்கள் வேரறுக்கும் விரகு பார்க்கவேணும். அபராதங்கள் எல்லாவற்றுக்கும் அடி அவிவேகம். அதில் ப்ரதானமான அவிவேகம் அசித்ஸ்வபாவமான ஜடத்வவிகாராதி களைச் சுமக்கையும். ஈஶ்வரஸ்வபாவமான ஸ்வநிஷ்டத்வஸ்வாதந்த்ர்யாநந்யார்த்தத்வாதிகளைச் சுமக்கையும் இவ் அவிவேகத்தை அறுக்கைக்குத் தெளிவாளாயிருப்பது ஏற்றச் சுருக்கமறத தன்னளவிலுண்டான தெளிவு.

अविवेकप्रभुत्वादेर्निदानस्य निवर्तनात् । सर्वेषामपचाराणामङ्कुरोऽमूलनं भवेत् ॥

---

பாபாரம்பக பாபத்தையே போக்கவேண்டுமென்றறிவிப்பதற்காக அவ் வழியை விலக்குகிறார் ஆகையால் இதி. பாபமானது அவிவேகம்வாயி லாகவே பாபத்தை யுண்டுபண்ணுகிறது. விவேகமுண்டாகில் பாபம் கார்ய கரமாகாது. ஆக அவிவேகமே வேர்; அதே அடி. அந்த அவிவேகம் இருவிதமென்கிறார் அதில் இதி. அசித்தி. சுமக்கையாவது—தனக்குள்ள தாக ப்ரமித்தல். தேஹாத்ம ப்ரமமுள்ளவன் தேஹத்திலுள்ள ஜடத்வ- விகாரித்வாதிகளைத் தனக்குள்ளதாக ப்ரமிப்பான். தன்னை ஈச்வரனாக ப்ரமி ப்பவன் தனக்கு ஸ்வநிஷ்டத்வாதிகள் உண்டென்று நினைப்பான். ஸ்வநிஷ்டத்வமாவது அநந்யாதாரத்வம். ஸ்வாதந்த்ர்யமாவது அன்யநியமநாநதீனத்வம். அநந்யார்த்- த்வமாவது அந்யனுக்கு சேஷமாகாமை; இதெல்லாம் ஸ்வதந்த்ராத்ம ப்ரமம். இவ் அவிவேகம் ஆத்ம விஷயமான சுத்த விவேகத்தாலே விலகும் தெளி வாள்—தெளிவுற்ற நிர்மலமான கத்தி. ஏற்றச் சுருக்கமற—ஈச்வரதர்ம த்தைக் கொள்வது ஏற்றம். அசேதந தர்மத்தைக் கொள்வது சுருக்கம். தன்னளவில்—ஸ்வரூப விஷயத்தில். பகவச்சேஷனாய் ஜ்ஞாநாநந்த அபஹத பாப்மதவாதி ரூபனாகத் தன்னைத் தெளிய வேண்டுமென்றபடி. இத் தெளிவினால் வரும் பலனைக் காரிகையினால் அறிவிக்கிறார். கீழ்க்கூறிய தெளி வைக் கொண்டு நிதானஸ்ய அபசாரகாரணமான அவிவேகாதிகளை நிவ்ருத்தி செய்தால் அபசாரங்கள் விளையாவென்றபடி. முன் வாக்யத்திலே இரண்டு விதமான அவிவேகம் சொல்லப்பட்டது. தேஹாத்ம ப்ரமமும் ஸ்வதந்த் ராத்மப்ரமமும். அவற்றில் முதல்ப்ரமத்தை அவிவேக பதத்தாலும் இரண் டாவது ப்ரமத்தை ப்ரபுத்வ பதத்தாலும் காரிகையில் பிரித்துக் கூறியதாக உரைப்பர். இரண்டு ப்ரமங்களையும் இங்கும் அவிவேக பதத்தாலேயே கொண்டால் ப்ரபுத்வம் வேறாகலாம். தன்னை ஈச்வரனாக நினைக்காமல் ஸ்வ தந்த்ரனாக மட்டும் நினைப்பது அவிவேகம். ஹிரண்ய கசிபுவைப் போல் தன்னையே ஸர்வேச்வரனாக நினைப்பது ப்ரபுத்வம் அது போல் யாரிடத்தில் அபசாரப்படுகிறானோ, அவரை தனக்கதீநமாகவும் தன்னை அவர் விஷய த்திலே ப்ரபுவாகவும் நினைப்பதும் இங்கே கூறப்படலாம். நிற்க; இங்கே அவிவேக—ப்ரபுத்வாதிகளுக்கு நிதாநமான அதாவது காரணமான பூர்வ ஜந்ம பாபத்தை நிவ்ருத்தி செய்வதாலே என்றும் பொருளுரைப்பர்.

இவையெல்லாவற்றுக்கும் அடி फलप्रदानोन्मुखமாயிருப்பதொரு पूर्वाघமாகையாலே அதினுடைய நிவ்ருத்திக்குமாக அடியிலே ப்ரபத்தி பண்ணுதல். இதுக்கென்று பின்பு ஒரு ப்ரபத்தி பண்ணுதல் செய்தார்க்கு இவையெல்லாம் परिहारங்களாம்.

இப்படி இவனுக்குப் பரிஹரணீயங்களானவற்றில் राजदारापराधம்போலே भागवतापचारம் प्रधानமென்னுமிடத்தை, "एवं मुक्तिफलानियमस्तदवस्थावधृते-स्तदवस्थावधृतेः" என்கிற ஸூத்ரத்திலே பாஷ்யகாரர் அருளிச்செய்தார்.

---

கீழே. 'அபராதங்கள் அனைத்துக்கும் அடி அவிவேகம்' என்கிற வாக்யத்தில் அடியென்ற சொல்லே இங்கு निदानस्य என்னப்பட்டது; ஆக இது கீழ்ச் சொன்னவற்றின் ஸங்க்ரஹம். ஆகையால் ஸமாநாதிகரணமாய் अविवेकप्रभवाद्याகிற நிதாநத்தை யென்றும் உரைப்பர். இப்போது இவையெல்லாத்துக்குமென்பதால் கீழ்க் கூறியவை யெல்லாவற்றையும் கொள்வது பொருந்தும். अर्थकामापचाराः என்பதற்கு அர்த்தகாமங்களடியாக வரும் அபசாரங்களென்று பொருள். கீழதிகாரத்திலே அர்த்தகாமங்களைக் காரணமாக எம்பெருமானார் அருளிச்செய்தாரே. இது மற்ற அபசாரங்களுக்கும் உபலக்ஷணம். फलदानोन्मुखमாய்=பரிஹரிக்கப்படாத போது பலனளிக்கும் தருணம் பெற்றதாய். அடியிலே—மோக்ஷார்த்தமநுஷ்டிக்கும் போதே

இப்படி ப்ரபந்நன் புத்திபூர்வமான ஸர்வபாபத்திற்கும் அஞ்ச வேண்டுமென்றது கூடுமோ. கீழே சாண்டில்ய வ்ருத்தாந்தம் சொன்னது போல் ஸ்ரீபாஷ்யகாரரும் பாகவதாபசாரத்தை தானே அபராதமாகக் கூறியுள்ளார். பக்தியென்கிற உபாயம் நிஷ்பந்நமாகாத பக்தியோக நிஷ்டனுக்கே அது மட்டும் அபராதமானால் ப்ரபத்தியென்கிற உபாயம் பூர்த்தியானவனுக்கு வேறொன்றும் அபராதமாகுமோ என்கிற சங்கையைப் பரிஹரிக்கிறார் இப்படி இதி கீழே நாம் கூறி வந்ததும் பாஷ்யகாரர் அருளிச்செய்ததும் பாகவதாபசாரம் மிகக்கொடியதாமென்கிற காரணத்தினாலாம். एवमित्यादि ஸூத்ரார்த்தமாவது—காம்யமான உபாஸனைகளைப் போலே मुक्तिफल- மோக்ஷத்தைப் பலமாகக் கொண்ட உபாஸனைகளுக்கும் अनियमः—உடனே உண்டாகை யென்கிற வ்யவஸ்த்தை இல்லை तदवस्थावधृतेः=ப்ரதிபந்தகமிருந்தால் தாமதிக்கை, யென்கிற நிலையும் அறியப்பட்டிருக்கிறபடியால் ஸூத்ரத்தில் இச்சொல்லை இருதரம் ப்ரயோகித்தது. அத்யாயத்தின் முடிவைக் காட்டுவதற்காகவாம். கீழே உஷஸ்தி முதலானோரின் வ்ருத்தாந்தத்தால் மற்ற பாபமும் ப்ரதிபந்தகமென்பது தெரியவரும்.

ப்ரதாநமாக பாகவதாபசாரம் கூறப்பெற்றது ஆனாலும் பாகவதர்களெல்லாரையும் எவ்விதத்திலும் ஸமராக நினைப்பதும் அபசாரம் சில பாகவதர்களிடத்தில் ப்ரணாமாதிகளான சிலவற்றை மட்டும் நிஷேதித்திருக்கும். பகவதபராதத்துக்குப் போல் பாகவதாபசாரத்துக்கும் பகவானிமே க்ஷமைகொள்ள முடியாதாகையாலே அந்த பாகவதர் இருக்கும்போது

ஆனபின்பு जाति - गुण - वृत्तादिகளாலே உத்க்ருஷ்டரான पराशर-व्यास-शुक-शौनक-नाथमुनिप्रभृतிகளுக்கும் தனக்கும் भगवत्त्वादिகளும் परमपुरुषार्थलाभமும் துல்யமாயிருந்தாலும் भगवत्परिग्रहமான गोपजातिகளுடையவும், तुलसाचम्पकादिகளுடையவும், गोमृगादिகளுடையவும் வைஷம்யம்போலே भगवत्सम्बन्ध-विशेषप्रयुक्तமான तत्तदुपाधिस्वभावத்தாலே सिद्धங்களான उत्कर्षापकर्षங்களை असूया-प्रादुर्भाव-प्रकरणத்தில் आम्नातமான படியே திரஸ்கரிக்க நினையாதொழியவும், आत्यादुपाधिகளாலே பாகவதர் திறத்தில் 'अनुज्ञापरिहारौ देहसम्बन्धाज्ज्योतिरादिवत्' என்கிற ந்யாயத்தாலே प्रवृत्ति-निवृत्ति விசேஷங்களுக்கு यथाशास्त्रं நியமமுண்

---

அவரிடமே க்ஷமை கொள்ளவேண்டியது முக்யமாகையால் அவ்வபராதம் கொடியதாயிருக்க அதைப் பரிஹரிப்பது முக்யமென்பதை யருளிச்செய்கிறார் ஆனபின்பு இத்யாதியால். இவ்வாக்யத்திற்கு प्राप्तமென்கிற பதத்தோடு முடிவாம். நினையாது ஒழியவும், குறையற்றிருக்கவும், சித்தமென்றிருக்கவும் பொருந்திப் போரவும் என்ற சொற்களும்—ப்ராப்தமென்றதோடு சேரும். ஜாதி குணேதி இதி. இவற்றில் ஒவ்வொன்று இருந்தாலும் உத்கர்ஷமே. சிலரிடம் பலவும் சேரும். பராசராதிகள் ப்ராஹ்மணரான ப்ரபந்நருக்கு ஏகஜாதீயரானாலும் மற்றவரைவிட ஜாதியில் உதக்ருஷ்டரேயாவார் ரிஷித்வாதி ஜாதியைக் கொள்ளில் நம்பினும் உத்க்ருஷ்டராவர். குணங்களாவன—दयाक्षान्तिज्ञानादिகள்; வ்ருத்தம்—ஆசாரம் தவம் முதலானவை பகவத் பரிக்ரஹமான=பகவத் ஸம்பந்தம் பெற்றிருக்கிற गो तुलसी गामयादिகள் உத்க்ருஷ்டம். गोपजाति-कस्तूरी चम्पकादिகள் அவற்றைவிட நிக்ருஷ்டம். असूयेति. इत्या स्वयाह्मणத்தில் நாலு வர்ணத்தாருக்கும் ஏற்பட்ட தர்மங்கள்படி அவர்கள் க்ருதயுகத்தில் நடந்துவந்தாலும் பிறகு அஸூயை ஏற்பட்டதென்றதை விரிவாகச் சொல்லும் பாகமிருப்பது கீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகையில் परिचर्यात्मकं कर्म शूद्रस्यैतत् स्वभावजम् என்கிறவிடத்தில் உதாஹரிக்கப்பட்டிருக்கிறது. அதில் சொன்னபடி க்ஷத்ரியாதிகள் உத்கர்ஷ—அபகர்ஷங்களைத் திரஸ்கரித்தது போல் நாம் பாகவதர்களுக்குள் உள்ள உத்கர்ஷாபகர்ஷங்களைத் திரஸ்கரிக்க நினைக்காமலிருப்பதே நமக்கு உசிதமானது. अनुज्ञेति. எல்லா ஆத்மாக்களும் ज्ञानानन्दादि स्वरूपராய் ஸமராயிருந்தாலும் சிலருக்கு வேத அத்யயநாதிகளில் அநுமதியும், சிலருக்குக் கூடாதென்ற நிஷேதமும் தத்காலத்தில் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கக் கூடிய தேஹ ஸம்பந்தம் காரணமாக வந்ததாம். அக்நி ஒன்றாயிருந்தாலும் மஹான்களுடைய க்ருஹத்தில் அக்னி கொள்ளப்படுகிறது ச்மசாநாதி ப்ரதேச நெருப்பு மறுக்கப்படுகிறது இப்படி சிலருக்கு அத்யயநாதிகளில் ப்ரவ்ருத்தியும் சிலபேருக்கு அதில் தடையும் அவரவர் தேஹம் காரணமாகவிருப்பதற்காக பாகவதர்களை நாம் பாகவதத்வ மூலமாக ஏற்பட்ட உத்கர்ஷத்தைப் பொருட்படுத்தாமல் நிஹீநமாகப் பார்க்ககூடாது. சிலர் துராசரராயிருந்தாலும் अनन्यभाक्—வேறு பலனுக்காக வேறொன்றை ஆச்ரயிக்காதவர் என்னை

டானலும் "साधुरेव स मन्तव्यः" என்றும் "स्मृतः संभाषितो वाऽपि" என்றும், "यः शूद्रं भगवद्भक्तं निषादं श्वपचं तथा । वीक्षते जातिसामान्यात् स याति नरकं नरः॥' என்றும் 'तस्माद्विष्णुप्रसादाय वैष्णवान् परितोषयेत्। प्रसादसुमुखो विष्णुस्तेनैव स्यान्न संशयः॥' என்றும். 'பயிலுஞ் சுடரொளி' 'நெடுமாற்கடிமை'களிலும் விசேஷித்தபடியே ப்ரதிபத்தியில் குறையற்றிருக்கவும்,

இப் ப்ரதிபத்தி மாத்ரத்தாலும் 'तस्येदमिति धीहेतुरप्युपकारी" என்கிற

---

யடைகின்றவராகையால் (கீதை) सः அவரும் साधुरेव நல்லோரேயாவர் मन्तव्यः—கௌரவிக்கக்கூடியவருமாவர். "स्मृतः संभाषितो वापि पूजितो वा द्विजोत्तम। पुनाति भगवद्भक्तः चण्डालोऽपि यदृच्छया॥" (इतिहाससमुच्चயம் 3.-55.) சண்டாளனாகிலும், பகவத்பக்தனாயிருந்தால் திடீரென்று அவனை மனத்தால் நினைத்தாலும் அவனோடு பேசினாலும், அவனை ஸத்கரித்தாலும் பரிசுத்தியுண்டு. பகவத் பக்தனான சூத்ரனையும், வேடனையும், நாயை யுண்கிறவனையும் பகவத்பக்தி யென்கிற குணத்தைப் பாராட்டாமல் ஜாதியைக் கொண்டு எவன் நிக்ருஷ்டமாகப் பார்க்கிறானோ, அவன் நரகம் போவான் என்கிறது. ஆகையாலே விஷ்ணுவினுடைய அநுக்ரஹம் பெறுவதற்காக வைஷ்ணவர்களை உவப்பிக்க வேண்டும். அதனால் தான் விஷ்ணு தெளிந்த முகத்துடன் இருப்பர்; இதில் ஸம்சயமில்லை யென்கிறது அதே इ स-८०,26.

நம்மாழ்வாரும். 3.6 செய்ய தாமரையில் அறியாதார்க்கு அர்ச்சாவதாரம் வரையிலாக எம்பெருமான்விஷயமாக உபதேசம் செய்து அவர்களுக்குச் சேஷியாகி, 3-7 பயிலும் சுடரொளியில் அறிந்த பாகவதர்களைக்குறித்து தமக்கு சேஷத்வத்தையும், பயிலும் திருவுடையார் எவரேனும் அவர் அடியார் அடியார் தம் அடியார் அடியார்தமக்கு அடியார்தம் அடியாரானவர்களைத் தமக்கு ஸ்வாமிகளாகவும் அநுஸந்தித்தார். பயிலும் சுடரொளி யென்பது மேன்மேல் செறிகின்ற காந்தியை யுடைய ஸ்வயம் ப்ரகாசமான என்றதாய் மூர்த்திக்கு விசேஷணம். இதுபோல் 8-9 கருமாணிக்க மலையில் மற்றொருவருக்கு சேஷனாகை நிரூபித்து, 8-10. நெடுமாற்கடிமையில் அவன் பக்தர்களிடத்தில் சேஷவ்ருத்தியான கைங்கர்யமே பரமபுருஷார்த்த மென்றருளினர். மற்ற விவரம் கீழே கூறப்பெற்றது.

ப்ரதிபத்தியாவது ப்ரீதி ரூபாபந்நமான दासत्वबुद्धि. சிலருக்கு ப்ரணாமாதிகள் செய்யவாகாமற் போனாலும்; இ ப்ரதிபத்தியே கைங்கர்யமாகுமென்கிறார் இப் ப்ரதிபத்தி இதி. ப்ரதிபத்தி யென்ற दासत्व புத்தியின் கார்யமான வ்யாபாரந்தானே கைங்கர்யமாகும். ப்ரதிபத்தியே அதுவாமோ என்பதற்கு ஸமாதானமாகும் तस्येदं என்கிற வாக்யம். 'तस्य—அந்த பாகவதனுக்கு சேஷபூதமாகும் इदं-இது' என்கிற धी—ஞானத்திற்கு हेतुरपि காரணமும் உபகாரகமாகும். इदं என்கிற பதத்தினாலே தன்னையும் தன்னைச் சேர்ந்த வஸ்துவையும் சேர்த்துச் சொன்னதாம். சேஷத்வ புத்தி எப்படி கைங்கர்யமாகுமென்கிற கேள்விக்கு, சேஷத்வ புத்திக்குக் காரணமாயிருப்பதே உபகாரக

படியே பரிபூர்ண விஷயத்தில் शेषत्वोचितकिञ्चित्कारமான கைங்கர்யம் ஸித்துமென்றிருக்கவும்,

இந் நிலைகளில் ஒன்று கோணின போது, "सर्वं जिह्मं मृत्युपदमार्जवं ब्रह्मणः

---

மென்றதால் சேஷத்வபுத்தியும் உபகாரகமாய் கைங்கர்யமாகுமென்று ஸமாதாநமாகிறது. கைங்கர்யமாவது சேஷியினுடைய உகப்புக்குக் காரணமாய் உண்டாகிற தர்மம். சேஷத்வ புத்திக்கு ஹேதுவானது என்ன எனில் சேஷத்வமே என்பர். சேஷத்வ புத்திக்கு சேஷத்வம் எப்படி காரணமென்னில். ஜ்ஞாநத்திற்கு விஷயம் காரணமாகுமே என்பர். ப்ரத்யக்ஷ ஜ்ஞாநத்திற்கு தானே விஷயம் காரணம்; பொதுவாக ஜ்ஞாநகாரணமாகுமோ வென்னில், சேஷத்வ ஜ்ஞாநம் ப்ரமையாவதால் ப்ரமையான ஜ்ஞாநத்திற்கு வஸ்து ப்ரயோஜகமாகையாலே சேஷத்வத்தை ஹேது என்கிறதென்னல் வேண்டும். இனி, சேஷத்வமென்பது இவனறியாமற் போனாலும் இருப்பதால் அது எப்படி உபகாரியாகுமென்னில், சேஷியானவன் இந்த சேஷத்வத்தை யறிந்திருப்பதால் அவனுக்கு உகப்பு உண்டாவதால் உபகாரியென்னலாம். அல்லது இவ்வாறு கூறலாம்—தன்னிடமுள்ள பாகவத சேஷத்வ ஜ்ஞாநத்திற்குக் காரணமாயிருப்பது பாகவதரிடத்திலுள்ள பகவத்தாஸத்வருசியையும் அவர்களிடமுள்ள குணவிசேஷங்களையும் தான் அறிந்திருக்கை, இவ்வறிவே பாகவதர்களுக்கு உபகாரியானால் அது மூலமாகத் தன்னை அவர்களுக்கு சேஷனாக நினைப்பதும் உபகாரியாகக் குறையில்லை வேறு வ்யாபாரம் செய்யாமற் போனாலும் ப்ரீதி பூர்வகமான இந்த சேஷத்வ ஜ்ஞாநமே உகப்பை உண்டுபண்ணுவதாய் கிஞ்சித்காரமாயிருப்பதால் கைங்கர்யமாகிறதென்றதாம். பரிபூர்ண விஷயதிலே என்றதால் இவன் சேஷத்வ ஜ்ஞாந மூலமாகச் செய்யக்கூடிய வ்யாபாரத்தை பாகவதர் எதிர்பார்த்திருந்தால் அந்த வ்யாபாரத்தை இவன் செய்யாத போது சேஷத்வ ஜ்ஞாநம் கைங்கர்யமாகாமற் போனாலும், பாகவதர் எதிர்பார்க்காமல் பூர்ணராயிருந்த போது இது கைங்கர்யமாகக் குறையில்லை. பகவச்சேஷத்வ ஜ்ஞாநம் உள்ளவருக்கு இவன் சேஷனாகவேண்டுமென்கிற சாஸ்த்ர மூலமாகத் தன்னை பாகவத சேஷனாக நினைப்பதற்கு பாகவதனிடமுள்ள பகவத் சேஷத்வ ஜ்ஞாநம் காரணமாகையாலே. அந்த ஜ்ஞாநம் இவனுக்கு போக்யமாயிருந்தால் அது உபகாரியாகுமென்று हेतुरपि उपकारी என்றது. வசநபூஷணத்தில் 229-230-231-232–வாக்யங்களில் சொன்ன விஷயங்களை இப் ப்ரதிபத்தியின் வைசத்யத்திற்காக வேண்டுமளவு கொள்வது.

இந்நிலைகளாவன–ஜாதி குணாதிகள் மூலமாக உத்கர்ஷ அபகர்ஷங்களைத் திரஸ்கரிக்க நினையாமையும் तस्मै देयं ततो ग्राह्यं स च पूज्यः என்ற ஸர்வபாகவதர்க்கும் செய்யக்கூடிய தாநாதிகளில் வைஷம்யமில்லாமையும் ப்ரதிபத்தியில் குறையற்றிருக்கையும். सर्वमिति. शान्तिपर्व. 7ய-21. சாஸ்த்ர ஸம்மதமாகாத வக்ரமான सर्वं—எதுவும், (அஹங்காரமமகாராதி) मृत्युपदं—ஸம்ஸாரத்திற்கு இட

पदम्' என்கிறபடியே मृत्युவின் கடைவாயிலே அகப்பட்டாற்போலே நடுங்கி 'कृतापराधस्य हि ते नान्यत्पश्याम्यहं क्षमम्। अन्तरेणाञ्जलिं बद्ध्वा लक्ष्मणस्य प्रसादनात्', என்றும் 'यदि किञ्चिदतिक्रान्तं विश्वासात् प्रणयेन वा। प्रेष्यस्य क्षमितव्यं मे न कश्चिन्नापराध्यति॥ என்றும் 'यच्च शोकाभिभूतस्य श्रुत्वा रामस्य भाषितम्। मया त्वं परुषाण्युक्तस्तच्च त्वं क्षन्तुमर्हसि॥' என்றும் மஹாராஜருடையவும் இளையபெருமாளுடையவும் अन्योन्यप्रसादनप्रकारம் சொல்லுகிற ச்லோகங்களைப் பராமர்சித்து அப்படியே, ஈர்த்தவாய் தெரியாமல் वज्रलेपघटितமானாற்போலே பொருந்திப் போர(க)வும் प्राप्तம்.

---

மாகும். आज्ञा—சாஸ்த்ர ஸம்மத ரீதியிலிருக்கை ப்ரஹ்மத்தைப் பெறக் காரணமாகும். ப்ரஹ்ம சப்தம் போலே ம்ருத்யு சப்தமும் சேதநவாசியாய் யமனைக் கூறலாம். அப்போது யமலோக ப்ராபகமாகுமென்றதாம் ப்ரபந்நனுக்கு யமப்ராப்தியில்லை யாகையால் இங்கே 'ம்ருத்யுவின் கடைவாயிலே அகப்பட்டாற் போலே நடுங்கி' என்றருளினர். கடைவாயிலே—கடைவாய்ப் பல்லிலே என்றபடி இப்படி நடுங்கும்படி பாகவதாபசாரம் ஏற்பட்டால் பாகவதரை அடைக்கலம் புகுந்தே அதைத் தீர்க்க வேண்டுமென்பதற்கு ஸாக்ஷியாக ஸ்ரீராமபக்தர்களிருவருடைய அநுஷ்டாநத்தைக் காட்டுகிறார் कृतेति—ஹநுமான்வாக்யம். அபராதம் செய்திருக்கிற உமக்கு, ப்ரஸந்நராகும்படி லக்ஷ்மணனை அஞ்ஜலி செய்து வேண்டிக்கொள்வது நீங்கலாகா வேறொன்றைத் தக்க தஞ்சமாக நான் காணவில்லை. இவரைவிட்டு ராமனிடம் சென்று வேண்டுவது தகாதென்றபடி. இதை யநுஸரித்து यदीत्यादि, குற்றம் செய்தாலும், ஸ்வாமீ நம்மைக் கைவிடார் என்கிற நம்பிக்கையாலோ ஸ்த்ரீகளிடத்தில் உள்ள அன்பினாலோ ஏதேனும் மீறி நடந்திருநதது உண்டானாலும். அடியேன் किङ्करனென்று பொறுத்தருளவேணும்; குற்றம் செய்யாதவர் யாருமில்லை யென்றதாம். இப்படி மஹாராஜர் தம்மிடம். அடங்கியிருப்பதைக் கண்டு லக்ஷ்மணன் தணிந்து தமக்கு பாகவதாபசாரம் இராமலிருக்க வேண்டுமென்று அதற்கஞ்சிச் சொன்னவார்த்தை यच्चेत्यादि. ஸீதையை விட்டுப் பிரிந்திருப்பதாலான சோகத்தினால் தம் நிலை மாறி ஸர்வ ஸ்வாமியான ராமன் சொன்ன வார்த்தையைக் கேட்டு யான் வந்து சொல்லும்போது அவரிடத்திலுள்ள பக்தியினாலே ஒன்றுக்குப் பலவாகக் கடுஞ்சொற்களைச் சொன்னேன். இதை நீரும் பொறுக்க வேணும். இதை நினைப்பதும் ராமரிடம் சொல்வதும் வேண்டா என்றபடி. இவ்வாறு இருவரும் வேண்டிக்கொண்டு ஒன்று சேர்ந்தார்கள். இது பாகவதாபசாரத்திலே பரஸ்பரம் நடந்து கொள்ளவேண்டிய வகையாம். ஈர்த்தவாய் இதி. மரம் பிளக்கப்பட்டால் பிளந்தவிடமே ஈர்த்த வாய் என்பது. அதை வஜ்ரப்பசையினால் ஒட்டினால் மரம் சேர்ந்தது பிரியாமலேயிருக்கும். அப்படி பாகவதர் குற்றம் செய்து கூடினால் மீண்டும் குற்றம் வாராதபடி இருக்கவேண்டும். கடைவரையில் கூடியே இருப்பதாம்.

புத்திபூர்வாபராதத்தையும்அதற்கான ப்ரபத்தியினாலே பகவான்பொறுக்

ஜ்ஞாநவானனவன் ப்ராதிகூல்யத்திலே புத்திபூர்வகமாகப் ப்ரவ்ருத்தனானாலும் புநः ப்ரபத்யாலே ஸர்வேச்வரன் க்ஷமிக்குமென்னுமிடம்—
ஸ்ரீபதரிகாச்ரமத்திலே க்ரோதாந்தனாய் தர்மாத்மஜனான பகவானோடே எதிரம்பு கோத்த ருத்ரனை ப்ரஹ்மா தெளிவித்து விலக்க,
அவனும், "प्रसादयामास भवो देवं नारायणं प्रभुम्। शरणं च जगामाऽऽद्यं वरेण्यं वरदं हरिम्॥"
என்கிறபடியே ப்ரஸாதநமான சரணாகதியைப் பண்ண,
ततोऽथ वरदो देवो जितक्रोधो जितेन्द्रियः। प्रीतिमान् अभवत् तत्र रुद्रेण च सङ्गतः॥"என்கிற படியே ஸர்வேச்வரன் ப்ரஸந்நனாய் ருத்ரனை அங்கீகரித்தானென்கையாலே ஸித்தம்.

தான் குற்றவாளனாகவுமாம், தான் இப்போது குற்றம் செய்யாதே யிருக்க ஜந்மாந்தரதுஷ்க்ருதத்தாலே யாகவுமாம் சில பாகவதர் தன்னை வெறுக்கில் ஏதேனுமொரு விரகாலே அவர்களை க்ஷமை கொள்ளுகிற முகத்தாலே ஈச்வரனை க்ஷமைகொள்ள வேணுமென்னுமிடம்—
"रूक्षाक्षराणि शृण्वन् वै तथा भागवतेरितान्। प्रणामपूर्वकं क्षान्त्या यो वदेत् वैष्णवो हि सः॥"
என்று ஸ்ரீ வைஷ்ணவ லக்ஷணம் சொல்லுகிற ப்ரமாணத்திலே ப்ரஸித்தம்.

---

கிறாரென்பதை நிரூபிக்கிறார் ஜ்ஞானேதி. க்ரோதாந்தனாய்—கோபத்தால் கண்ணற்றவனாய்=அறிவற்றவனாய், இது ருத்ரனுக்கு விசேஷணம். தர்மாத்மஜனான என்றதால் நரநாராயணர்களிருவரும் தர்மதேவதையின் குமாரர்களாகையாலே அவர்களுக்குச் சிறுதாயாரான தாக்ஷாயணியின் பர்த்தாவான ருத்ரன் தன்னை சிறுதகப்பனாரென்ற முறைகொண்டு தனக்கு விதேயனாக விருக்க வேண்டுமென்று நினைத்தான் போலும். எதிரம்பு கோத்த—எதிர்த்து வில்லில் அம்பு தொடுத்துப்போர் செய்த ப்ரஸாதயாமாஸேதி. भवः-ருத்ரன் தேவனாய் கர்மபலனளிப்பவனுமான பதரீநாராயணனை ப்ரஸந்நராம்படி செய்து கொண்டான். மகனும் சிற்றப்பனும் என்கிற முறையிலே நின்று வேண்டுவது தகாதென நினைத்து ஸர்வேச்வரனாகவும்=பற்றினான். இவன் சரணாகதி செய்தாலும் ஈச்வரன் சேர்ந்தது தெரியவில்லையே என்னில்—அதற்கான ச்லோகம் ततः—இதி. ततः—சரணாகதி செய்ததால் ஜிதேந்த்ரியனான நாராயணன் கோபத்தை வென்று ருத்ரனிடம் ப்ரீதியுடன் சேர்ந்தவரேயானாரென்றபடி. இவன் வரலாற்றை பாணாஸுரப் போரிலும் காண்பது.

குற்றம் செய்யாதபோது குற்றம் செய்ததாக ஒருவர் நினைத்தாலும் க்ஷமை கொள்ளவேண்டும்; பாகவதாபசாரத்திற்கு அந்த பாகவதனிடமே க்ஷமை கொள்ளவேண்டும்; அவ்வளவிலே பகவானும் க்ஷமிப்பவனாகிறானென்பதைத் தெளிவாக்குகிறார் தான் இத்யாதியால். இப்போது ஒன்றும் செய்யாவிட்டாலும் குற்றம் செய்ததாக ஒருவரால் கூறப்படுகைக்குக் காரணமான பூர்வஜந்ம பாபமிருப்பதாலே க்ஷமைகொள்வது அவச்யமென்றதாயிற்று. விரகு—உபாயம். ரூக்ஷேதி. விஷ்ணுபுராணம், உத்தரபாகம், பாகவதர்களாலே சொல்லப்பட்ட கொடிய சொற்களை கேட்டவுடனே பொறுமையுடன் ப்ரணாமம் செய்து எவன் வேண்டுகிறானோ, அவனே வைஷ்ணவன்.

இங்ஙனம் செய்யாத போது.

"ये ब्राह्मणास्तेऽहमसंशयं नृप तेष्वर्चितेष्वर्चितोऽहं यथावत् ।
तेष्वेव तुष्टेष्वहमेव तुष्टो वैरं च तैर्यस्य ममापि वैरम् ॥"
"घ्नन्तं शपन्तं परुषं वदन्तं यो ब्राह्मणं न प्रणमेत् यथाऽहम् ।
स पापकृद् ब्रह्मदवाग्निदग्धो वध्यश्च दण्ड्यश्च न चास्मदीयः ॥"

என்கிறபடியே भगवदभिमानबाह्युமாய் वैणवप्रकृतियாயிருக்கிற தனக்கு ஸ்வரூப மென்னலாம்படி अन्तरङ्गமான भागवतशेषत्वத்தையும், स्वभावமாய் நிற்கிற शमदमादिகளையும் இழந்தானும். இவற்றை இழக்கைதானே இவனுக்கு वधமும் दण्डமும். भगवदभिमानबाह्युதையின் கொடுமையை "அளிய நம் பையலென்ன

---

ये–இதி. விஷ்ணு தர்மம் 52-20. அரசனே! அந்தணர்கள் நானே யாவர். அவர்கள் தக்கவாறு ஆராதிக்கப்பட்ட போது நான் ஆராதிக்கப்பட்டவனுவேன். அவர்கள் உவந்தால் நானும் உவப்பேன், அவர்களோடு எவனுக்கு விரோதமோ எனகரும் அவனோடு விரோதம் அவர்களோடு விரோதம் எவனுக்கோ அவனுக்கு என்னோடு விரோதமென்று சொல்ல வேண்டியிருகக நான் விரோதப்படுகிறேன் என்றது, தான் சிக்ஷகன் என்பதைத் தெரிவிப்பதற்காக. இனி, ममापि वैरम् என்பதற்கு என்விஷயத்தில் விரோதமென்ற பொருளுமாம். घ्नन्तं இத்யாதி. இதிஹாஸ ஸமு. 30–100. यथा अहं—என்னைப்போல், (நான் ப்ருகுபஹர்ஷியிடத்தில் வணங்கி நடந்து கொண்டதுபோல்) எவனொருவன் தன்னை அடிப்பவன், சபிப்பவன், கடுஞ்சொற்களைச் சொல்பவன் எனவான ப்ராஹ்மணனை, வணங்காமலிருக்கிருனே, அவன் பாபம் செய்பவனுய் ப்ராஹ்மணனென்கிற காட்டுத் தீயினுல் எரிக்கப்பட்டவனுய், கொலைக்கும் சிக்ஷைக்கும் அர்ஹனுவான். என்னைச் சேர்ந்தவனுகான். ப்ரபந்நனுக்கு தேஹாவஸானத்திற்கு முன்னே ப்ராரப்தங்களை யனுபவிக்க வேண்டுமே, वधप्रसक्ति யில்லையே என்ன அருளிச்செய்கிருர் स्वरूपमिति. வைஷ்ணவ லக்ஷணமான भागवतशेषत्व-शमदमादिகளை யிழப்பதே वधार्हत्वादिरूपम्. अस्मदीयனல்லன் என்பதற்கு भगवदभिमानத்திற்குப் புறம்பானவனென்று பொருள். இப்படி புறம்பாகை கொடியதென்பதைத் தொண்டரடிப்பொடியாழ்வாரின் பாசுரத்தினுல் விளக்குகிருர். திருமாலை 37. தெளிவிலாகலங்கல் நீர் என்று பாசுரத் தொடக்கம். தந்தையும் தாயுமான அரங்கன் இவன் அளியன்—க்ருபைக்குப் பாத்ரமாகும் நம்பையல்—சிறுவன் என்று அபிமாநிக்கவில்லையே. அம்ம=மிகவும் வருத்தம். கொடிய ஆறு இது கொடுமையான விதம். இங்கு பாகவத சேஷத்வமே இத்யாதி விசேஷணத்தினுல் அறிவிப்பதாவது–இதற்கு முன்பாட்டில் மான்குட்டிக்குப் போன்ற பார்வையையுடைய ஸ்த்ரீகளின் வலையில்பட்டு உழைககின்றேன் என்று வருந்தியவர் அதற்கு மேலாக, 'அம்மவோ கொடியவாறே' என்று இந்த பகவதபிமான பாஹ்யதையைக்கொடியதாகக் கூறுகிறபடியால்தொண்டரடிப்பொடியான தமக்கும்

ரம்மவோ கொடியவாறே” என்று भागवतशेषत्वமே தமக்கு நிரூபகமாக ருசித்த தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்தார்.

இச் ச்லோகங்களில் ब्राह्मणशब्दம் “विष्णुं क्रान्तं वासुदेवं विजानन् विप्रो विप्रत्वं गच्छते तत्त्वदर्शी” என்கிற प्रक्रियையாலே விசேஷ விஷயம். ஸாமாந்ய விஷயமானாலும் भागवत விஷயத்தில் अपराधம் कैमुतिकन्यायத்தாலே ஸித்தம்.

अनुतापादुपरमात् प्रायश्चित्तोन्मुखत्वतः । तत्पूर्णात्त्वापराधाः सर्वे नश्यन्ति पादशः॥

---

ஏதோ பாகவதாபசாரம் நேர்ந்திருப்பதாலேயே இக்கொடுமையென்று वध्यश्च दण्ड्यश्च என்கிறதை நினைத்துக் கூறியதாகலாம். न चास्मदीयः என்ற அபிமான பாஹ்பதையை அளியநப்பையலென்றுரென்றுரே. இதனால் பாகவதனால் வெறுக்கப்பட்டாலும் பகவதபிமானத்துக்குக் குறையில்லையென்கிற புத்தி விலக்கப்பட்டது. विष्णुमिति. क्रान्तम्—உலகளந்தவனான விஷ்ணுவை வாஸுதேவனை பரதேவதையாக அறிந்த ப்ராஹ்மணனே உண்மையைக் கண்டவனாகையாலே ப்ராஹ்மணத் தன்மையைப் பெறுவான். இதனால் அவைஷ்ணவனுக்கு விப்ரத்வமில்லையென்றதாயிற்று. ஆகையால் ப்ராஹ்மணபதம் இங்கு பாகவதனென்கிற பொருளிலேயே தகும். இவ்வாக்யம் அவைஷ்ணவனுக்கு ப்ராஹ்மண த்வஜாதிக்குத் தக்க நிலையில்லையென்கிற கருத்தாலே வந்ததேயாமல்லது பிறருக்கு ஜாதியை நிஷேதிக்காதென்றால், அவைஷ்ணவனும் ப்ராஹ்மணனாகலாம். அப்போது இந்த ப்ராஹ்மண சபதம் பொதுவாகவே யாகலாம் அப்போதும் ப்ராஹ்மண ஜாதிக்கே விரோதம் செய்யக் கூடாதென்றால் புஷ்கலமான ப்ராஹ்மண்யமுடைய பாகவதரோடு விரோதம் கூடாதென்பது கூறாமலே விளங்கும் ஆனால் பாகவத க்ஷத்ரியாதி விரோதம் கூடாதென்பதற்கு வேறு வசனம் கொள்ளவேண்டும் அதற்காகவே ப்ராஹ்மண பதத்தை பாகவதபரமாகக் கூறியது. ப்ராஹ்மண என்கிற சொல்லை ब्रह्म अणति என்ற யோக வ்யுத்பத்தியாலும் பரப்ரஹ்ம ஸம்பந்தப்பட்டவரென்னலாமே.

ப்ராயச்சித்தமென்ற சொல்லுக்கு ‘प्रायो नाम तपः प्रोक्तं चित्तं निश्चय उच्यते’ என்றதால் அநுதாபமும், இனிச் செய்வதில்லையென்கிற திடாத்யவஸாயமும் பொருளாகையால் அவ்வளவாலேயே உத்தராகம் போகலாமே. ஸம்ப்ரதாயத்திலும். ‘आगस्त्वहो मतिरनुशयिनी यदि स्यात् ततो वरद हि दग्से’ என்றும் स्वापराधस्यहो तदभिसन्धि विरामभावात् என்றும் இவ்வளவாலேயே பாபம் போகுமென்றார்களே. லகுசிக்ஷை பெறவேண்டியவனுக்கு இப்படி லகுமார்க்கம் போதுமே என அருளிச்செய்கிறார் अनुतापात् இதி. பச்சாத்தாபத்தினாலும் பிறகு பாபம் செய்யாமையாலும் ப்ராயச்சித்தம் செய்யத் தொடங்குவதாலும் ப்ராயச்சித்த பூர்த்தியினாலும் ஒவ்வொரு பாபத்தின் நாலு பாகங்களும் முறையே கழிக்கப்படும்; அதனால் அநுதாபத்தால் மட்டும் முழுபாபம் போகாது. ‘प्रायश्चित्तिरियं सात्र यत् पुनश्शरणं व्रजेत्’ என்று ஸ்பஷ்டமாகப் ப்ரபத்தி செய்ய விதித்திருப்பதால் அநுதாபம் மட்டும் போதுமென்னலா

पूर्वस्मिन् वा परस्मिन् वा कल्पे निर्विण्णचेतसाम् । निवर्त्यतारतम्येऽपि प्रपत्तिर्न विशिष्यते ॥

காது ஸம்ப்ரதாய ஸூக்திகளுக்கு அநுதாபாதிகளிலுள்ள சக்தியைக் குறிப்பதிலேயே நோக்கு. அநுதாபம் வந்தபோது படிப்படியே எல்லாம் பூர்த்தியாகுமென்பதே கருதப்பெறும். 'पादशः नश्यन्ति'=கால்பாகம் கால்பாக மாக நசிக்கின்றன.

இப்படி எந்த அபராதத்திற்கும் முழு ப்ரபத்தியே ப்ராயச்சித்தமாகில், ஒவ்வொரு பாபத்திற்கும் ஒவ்வொரு ப்ரபத்தியாக அநுஷ்டிப்பதாம். லகுவான பாபத்திற்கே இவ்வளவு ப்ராயச்சித்தமாகில் குருவான பாபத்திற்கு ப்ரபத்தி குருவாயிருக்க வேண்டுமே. இந்த ப்ரபத்தியில் வாசி எத்தகையதென்ன. எல்லாவற்றிற்கும் ஒரே ப்ரபத்தியே போதும், ப்ரபத்தியில் வாசியுமில்லை யென்றருளிச்செய்கிறார் पूर्वस्मिन्' இத்யாதியால் முன் கல்பத்திலே ஒருவன் ஸம்ஸாரத்தில் நிர்வேதம் கொண்டு மோக்ஷத்திற்காக ப்ரபத்தியநுஷ்டிக்கிறான்; அதற்குப் பின்னான கல்பத்தில் மற்றொருவன் அதற்காக அநுஷ்டிக்கிறான். முதலில் அநுஷ்டித்தவனுக்கு அநாதியாய் அந்த கல்பம் வரையில் ஸஞ்சிதமான வினைத்திரள் நிவர்த்யமாகும் = போக்க வேண்டியதாகும். பின்னை அநுஷ்டித்தவனுக்குப் பிற்காலம் வரையில் ஸஞ்சிதமான பாபத்திரள் நிவர்த்யமாகும். இது அதைவிடப் பெரிது தானே. இப்படி தாரதம்ய மிருந்தாலும் நிவர்த்தகமான ப்ரபத்தியில் விசேஷமொன்றுமில்லையே யென்று முதல் ச்லோகத்தின் பொருள் இதனை த்ருஷ்டாந்தமாக்கி ப்ரக்ருதத்தை மேலே கூறுகிறாரென்க ஸாரபோதிநியில் இந்த ச்லோகார்த்தம் கீழ்வருமாறு.—'முன்கல்பத்திலே நிர்வேதமடைந்தவன் ஒருவன். பின் கல்பத்திலே நிர்வேதமடைந்தவன் மற்றொருவன். இவ்விருவரும் ப்ரபத்தி செய்தது இவ்வொரு கல்பத்திலேயே ஆனாலும் முன்னமே நிர்வேதம் வந்தவனுக்கு நிர்வேதத்தாலேயே சில பாபம் போகுமானபடியால் ப்ரபத்தியாலே நிவர்த்திக்க வேண்டிய பாபத்தில் தாரதம்யமுண்டென்றவாறு. நிர்வேதமாவது அநுதாபமாகையால் அதனால் பாபத்தில் கால்பாகமே போகலாம். ப்ரபத்யநுஷ்டானம் போக்குகிற பாபாம்சங்கள் ஏககாலத்தில் ப்ரபத்த்யநுஷ்டித்தவர்களுக்குத் துல்யமாகவேயிருக்கும் என்ற கருத்தால் முன்னோர்கள் அவரவர்களுக்கு நிர்வேத காலத்திலேயே ப்ரபத்யநுஷ்டானத்தையும் கூறினார்கள். இந்த ச்லோகம் दृष्टान्त விஷயம் மட்டுமாகாமல் ப்ரக்ருத விஷயமாகவுமிருப்பது நலம் यथा तथा என்று த்ருஷ்டாந்த விஷயமான சொல் இல்லையே. அநேக பாபங்களுக்கு ஒரே ப்ரபத்தி ப்ராயச்சித்தம் என்பது ப்ரக்ருதத்திலும் சொல்லப்படவேண்டுமே அது இங்கே ஸ்பஷ்டமாகக் கிடைப்பதற்காகச் சிறிது க்லிஷ்டமான யோஜனையும் கூறலாம் அதாவது कल्पे—என்பதற்கு கல்பகாலமென்ற பொருளாய் அதிலே நிர்விண்ணரென்ற கீழே கூறப்பட்டது. முன்னே அநுஷ்டித்தவரும் பின்னே அநுஷ்டித்தவரும் என்றே போது

**एवमेव लघूनां वा गुरूणामपि वाऽऽगसाम् । सकृत् प्रपत्तिरेकैव सद्यः प्रशमकारणम् ॥**

---

மாயிருக்க நீண்ட கல்பகாலபேதம் சொல்லித் தாரதம்யம் காட்டவேண்டிய அவச்யமில்லை. ஆனாலும் , தாரதம்யம் மிக ஸ்பஷ்டமாவதற்காக அவ்வாறு கூறியதென்னல் வேண்டும் இதை விட்டு कृत्रமாவது ப்ரயோகம்–அநுஷ்டாநமென்று கொண்டால் ஓரே ப்ரபத்தியானது (ஓரே விதி வாக்யத்தில் ஏற்பட்ட ஒருவகையான ப்ரபத்தியே) நிர்வேதமடைந்தவர்களுக்குள் ஒருவன் முதலில் செய்த ப்ரயோகத்திலும் அல்லது முதல்வனிடத்திலுள்ள ப்ரயோகத்திலும் பின் அநுஷ்டிக்கப்பட்டதாய் பின்னை புருஷனிடத்திலுள்ள ப்ரயோகத்திலும் பூர்வ ப்ரயோக விஷயமான பாப ஸஞ்சயத்தைக் காட்டிலும் உத்தர ப்ரயோக விஷயமான பாபஸஞ்சயத்திற்கு ஆதிச்ய மிருப்பதாலே தாரதம்ய மிருந்தாலும் ப்ரபத்தியில் ஒரு விசேஷமில்லை. ஆக நடுநடுவே ப்ராயச்சித்த ப்ரபத்தி பண்ணுகிறவனுக்கு நிவர்த்ய பாபம் குறைவு பிறகே பண்ணுகிறவனுக்கு அது அதிகம். இதற்கு த்ருஷ்டாந்தமாக முன்பின் அநுஷ்டிக்கப்படும் மோக்ஷார்த்த ப்ரபத்தியே யாகும். அதுவும் இதற்குப் பொருளாகக் குறையில்லை. இப்படி ஒரு ப்ரபத்தி பல பாபம் போக்குமென்று அறிவித்து லகு குரு பாபங்களுக்கும் ஒரேவிதமான ப்ரபத்தியே யென்கிறார் एवमेव இத்யாதியால். இங்கே பஹுவசநத்தாலும் அநேக பாபங்களுக்கு ஒரே ப்ரபத்தி யென்பதும் அறிவிக்கப்படுகிறது. वा. अपि இரண்டுமிருப்பதால், லகு குருக்கள் சேர்த்தும் பிரித்தும் செய்யலாமென்றதாகிறது सकृत् என்றதாலே ஒருதரம் என்றதாயிற்று ஏக என்பதால் எப்போதும் ப்ரபத்தி ஏகரூபமே, அங்காங்கிகளில் மிகுதி குறைவில்லை யென்றதாம். सद्यः என்பதாலே இதர ப்ராயச்சித்தங்கள் போலே காலவிளம்பமில்லை யென்றபடி. प्रशमமாவது. ப்ரக்ருஷ்டமான சமம்; முழு அழிவு. வாஸனை கூடத் தொடாதபடி அழிக்கவும் ப்ரபத்திக்கு சக்தியுண்டென்றதாம். ஓரே ப்ரபத்தியினால் பல பாபங்களைப் போக்கலாமென்பது மோக்ஷார்த்த ப்ரபத்தியினின்றே விளங்கும். பலவிதமான பக்தியோகத்தில் இத்தகைய பக்தியும் சேருமாகையால் அது முடியாத அகிஞ்சனன் ப்ரபத்தியை யநுஷ்டிக்கலாம். 'अज्ञानात् अथवा ज्ञानात् अपराधेषु सत्स्वपि। प्रायश्चित्तं क्षमस्वेति प्रार्थनैकैव केवलम्, என்கிற வசநம் ஒரு ப்ரார்த்தனையால் பலவித பாபத்தை போக்குவதைச் சொல்லுகிறது. பலவித அசுத்தியுள்ளவன் ஓரே ஸ்நாநத்தினால் அவற்றைப் போக்குவதால் இதற்கும் அந்த ந்யாயம் துல்யம். அதில் குரு லகு எல்லாவற்றிற்கும் ஒரு ஸ்நாநமே பரிஹாரமாகிறது. இப்படி ப்ரஹ்ம கூர்ச்சாதியும் ஒன்றே பலவித தோஷ பரிஹாரமாகக் கண்டுளோம்.

அதிகாரார்த்த ஸங்க்ரஹப்பாசுரம் போலே இப்பாசுரத்திற்கு ஸஞ்சித கர்ம நாசத்திற்காக ப்ரபத்தி செய்தவன் ஆநுகூல்ய ஸங்கல்பாதிகளுள்ளவனாகையால் புத்தி பூர்வபாபத்தைப் பிறகு செய்யான். அப்படி செய்தால்

உளதான வல்வினைக்குள்ளம் வெருவி, உலகளந்த
வளர்தாமரையிணை வன்சரணாக வரித்தவர்தாம்
களைதானென வெழுங்கன்மந்துறப்பர் துறந்திடிலும்
இளைதாநிலை செக வெங்கள் பிரானருட்டேனெழுமே. (25)

---

அதற்கு அவிவேகம் காரணம். எம்பெருமான் அருளால் அதையும் போக்க லாமென்று உரைப்பதுமுண்டு. அன்றி, பாபாரம்பகபாபத்திற்சஞ்சி அடியிலே சேர்த்து ப்ரபத்தி செய்தவன் புத்திபூர்வ பாபம் செய்யமாட்டான். அதற்குக் காரணமான அவிவேகரூப இளையநிலை எம்பெருமானின் அருளால் போயிற்றேஎன்றஉரையுமாம். பொதுவாகப்பாசுரத்தின்பொருளாவது-உலகு அளந்த—லோகங்களை த்ரிவிக்ரமனான போது அளந்த, வளர்—அதற்காக வளர்ந்த, தாமரை இணை = திருவடித்தாமரை இரண்டை, உளதான—தன் னிடம் ஸ்திரமாயிருக்கிற, வல்வினைக்கு-பலிஷ்டமான பாபங்களுக்கு உள்ளம் வெருவி—மனத்தில் அச்சம் கொண்டு, வல் சரண் ஆக—திடமான உபாய மாகும்படி, வரித்தவர்—ப்ரார்த்தித்தவர்கள் (சரணாகதி செய்தவர்கள்) தாம்—தாமாகவே களை தான் என—பகவதநுபவ கைங்கர்யங்களாகிற பயிர் களின் வளர்ச்சிக்குத் தடையான மணிப்புற்களென்னும்படி, எழும்— எழுச்சியுற்ற கன்மப்—கர்மாக்களை, துறப்பர்—ஒழிப்பர். மோக்ஷத்திற்காக மட்டும் ப்ரபத்தி செய்தவரும் ஆநுகூல்யாதி ஸங்கல்பங்களைச் செய்திருப்ப தால் இங்கு வாழ்நாளில் பகவத் கைங்கர்ய விரோதி என்கிற காரணத் தினால் தாங்களே புத்திபூர்வ பாபத்தைச் செய்யமாட்டார். அப்படி செய் தாலும் ப்ராயச்சித்தம் செய்து அதை ஒழிப்பர் அடியிலே புத்தி பூர்வக பாபாரம்பக பாபத்திற்கும் பரிஹாரமாக ப்ரபத்தி செய்தவர் ஸ்வதராம் அந்தப் பாபத்தைச் செய்யாரென்றபடி துறந்திடிலும்-இதற்கு தேன் எழும் என்றவிடத்தில் அந்வயம். அவ் இருவகையாரும் இப் பாபங்களை விடுவ திலும், எங்கள் பிரான்—ப்ரபந்நனுக்கு ஸஞ்சித கர்மநாசத்திற் போலே இப் பாபம் துறப்பதிலும் உபகாரகனான எம்பெருமானின், அருள் தேன், போக்யமான க்ருபையானது, இளைது ஆம் நிலை—இளமையான நிலை—பால்ய நிலை—அவிவேகமென்றபடி. செக—அழியும்படி, துறந்த வனுக்கு மீண்டும் அதில் ப்ரவ்ருத்திக்குக் காரணமான அவிவேகம் அழியுமளவுக்கு, கர்மாவைச் செய்து ப்ராயச்சித்தம் செய்யாமல் துணிந்திருப்பவருக்கும் சிக்ஷையைக் கொடுத்து அது மூலமாக அவிவேக மழியுமளவுக்கு, எழும்—எழுச்சி பெறும். அகிஞ்சநரிடத்திலே தயை புரியும் பிரான் ப்ரபத்திக்கு மோக்ஷமளிப்பதிற் போல் பிறகு பாபம் செய்யாமை க்கும், செய்தவர் தாமே ப்ராயச்சித்தத்திலிழிவதற்கும், இழியாதவரும் லகு சிக்ஷையால் அவிவேகம் நீங்கி யிருக்கைக்கும் அன்பினாலே காரணமாகிறான். இதே அவன் தயைக்குத் தேனுக்குப் போல் போக்யதை, இப்படி பாசுர

प्रारब्धेतरपूर्वपापमखिलं प्रामादिकं चोत्तरं न्यासेन क्षपयन् अनभ्युपगतप्रारब्धखण्डं च नः ।
धीपूर्वोत्तरपाप्मनामजननाज्जातेपि तन्निष्कृतेः कौटिल्ये सतिशिक्षयाप्यनघयन्क्रोडीकरोतिप्रभुः

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे अपराधपरिहाराधिकारोऽष्टादशः ॥ 8.
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

—o—o—

---

த்தை உரைத்ததால் மேல் ச்லோகத்திலுள்ள அர்த்தம் முழுமையும் இங்கே அடங்கிற்றென்று காண்க.

அந்த ச்லோகமாவது—प्रारब्धेत्यादि. ப்ராரப்தகர்மம் தவிர வேறுன முன் செய்த பாபம் முழுமையையும், ப்ரபத்திக்குப் பின்னுல் செய்யப்பட்ட புத்தி பூர்வமாகாத பாபத்தையும், பல ஜந்மங்களில் அனுபவிக்க வேண்டிய ப்ரா ரப்த கர்மாவில் தேஹாவஸாந பர்யந்தம் அநுபவிக்க இசைந்த பாப மென்கிற अभ्युपगतமான பாபம் தவிர மற்ற अनभ्युपगत प्रारब्धங்களையும் நமக்கு ப்ரபத்தியிஞலேயேபோக்குகின்றप्रभुः-பலன் பெறச்செய்யும்பகவான் धीपूर्वोत्तर-पाप्मनां-பின்னே புத்திபூர்வமான பாபங்கள் अजननात्-உண்டாகாமையாலே नः—நம்மை क्रोडीकरोति—கூட்டிக்கொள்ளுகிருன். जातेऽपि [भावे क प्रत्ययம்] जननेऽपि—பாபங்களுண்டான போதும் तन्निष्कृतेः-அதற்கு ப்ராயச்சித்தம் செய்விப்பதாலும் (புநःப்ரபத்யாதிகளில் மூட்டுவதாலும்) कौटिल्ये सति—ப்ராயச்சித்தம் செய்யாதபடி மூர்க்கத்தனமிருந்த போது, शिक्षया अपि—தக்க சிக்ஷை செய்வதாலும் अनघयन्—பாபமற்றவராக்கி क्रोडीकरोति—கூட்டிக் கொள்கிருன். எந்த விதமாகவாவது தேஹாவஸாநத்தில் ப்ரபத்தியினுல் மோக்ஷம் பெறத் தடையிராதபடி உதவுகிருனென்றபடி.

அபராத பரிஹாராதிகாரம் (18) முற்றும்.

ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம:

## ஸ்த்தாநவிசேஷாதிகாரம் 19.

இந்த அதிகாரத்தில் ப்ரபந்நன், ஸித்தோபாய சோதநாதிகாரத் தொடக்கத்தில் அருளியபடி பிறரின் சேர்க்கை बाधकமாகையாலே, நிரபராத கைங்கர்யம் செய்து போதுபோக்குவதற்குத் தக்க ஸ்த்தாநவிசேஷம் (வாழுமிடம்) அறிவிக்கப்படுகிறது.

ப்ரயோஜநாந்தர ருசியில்லாத ப்ரபந்நன் एकान्ती व्यपदेष्टव्यो नैव ग्रामकुलादिभिः என்றபடி ஏகாந்தி நிலைக்கு விரோதியான. ग्रामकुलादि व्यपदेशத்தை விட்டு விஷ்ணு ஸம்பந்தத்தை யிட்டே வ்யபதேசிக்கப்படவேண்டியிருப்பதால்ஸ்ரீசைலபூர்ணர் காஞ்சீபூர்ணர் என்றுற்போன்ற வ்யபதேசம்பெற अयोध्या मथुरा माया काशी काञ्ची ह्यवन्तिका। पुरी द्वारवती चैव सप्तैता मुक्तिदायिकाः—என்கிற தேசங்கள் மோக்ஷஸ்த்தாநங்களாயிருப்பதால் அங்கு தானே வஸிக்க வேண்டும். ஆர்யாவர்த்தாதி தேசமும் ஸர்வவைதிக ஸாதாரணமேயாகும்.

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

## स्थानविशेषाधिकारः

## ஸ்த்தாநவிசேஷாதிகாரம் 19.

—o—o—

यत्रैकाग्र्यं भवति भगवत्पादसेवार्चनादेः यत्रैकान्त्यव्यवसितधियो यस्य कस्यापि लाभः ।
वासस्थानं तदिह कृतिनां भाति वैकुण्ठकल्पं प्रायो देशा मुनिभिरुदिताः प्रायिकौचित्यवन्तः॥

இருந்த நாள் இப்படி स्वयंप्रयोजனமாக निरपराध-அநுகூலவ்ருத்தியிலே ருசியும் த்வரையுமுடையவனாய் 'एकान्ती व्यपदेष्टव्यो नैव ग्रामकुलादिभिः । विष्णुना व्यपदेष्टव्यस्तस्य सर्वं स एव हि என்னும்படியாயிருக்கிற பரமைகாந்திக்கு வ்ருத்திக்கு அநுகுணமாக வாஸ

---

முன் சொன்னவை முமுக்ஷுவுக்கு அஸாதாரணமாம். அவ்விடங்களும் பரமை காந்திநிலைக்கு பாதகமாகுங்காலத்தில் எங்கே வஸிப்பது? யோகக்ஷேமத் திற்கு ஸௌகர்யமில்லாதவிடத்தில் எப்படி வஸிப்பது. என்கிற கேள் விக்கு உத்தரம் அருளிச்செய்கிறார் இங்கு. ச்லோகம் यत्रेति—எந்த் இடத் தில் எம்பெருமானுடைய திருவடியில் ஸேவைக்கும், ஆராதநம் முதலான வற்றுக்கும் ऐकाग्र्यम्—மனதுக்குஒரேநோக்கு-வேறு சிந்தையற்றிழிந்திருக்கை ஏற்படுமோ எந்தவிடத்தில் தேவதாந்தர-ப்ரயோஜநாந்தர ருசியற்று ஏகாந்தி நிலையில் திடவ்யவஸாயமுள்ள ஒரு மஹானையாவது ஸஹவாஸத் திற்குப் பெறவாகுமோ அந்த ஸ்த்தாநமே பகவத்பாகவத ஸம்பந்தமுள்ள தாயிருப்பதால் ப்ரபத்தி செய்த பாக்யசாலிகளுக்கு வாஸஸ்தாநமாய் வைகுண்டத்துக்கு ஸமானமாகத் தோன்றுவதாம். यत्र என்ற சொல் ஒன் றே போதும்; பகவத் ஸேவை, பாகவதஸங்கம் இரண்டில் ஒன்றிருந் தாலும் போதுமென்றறிவிக்க மீண்டும் यत्र என்றது. मुनिभिः-மஹர்ஷிகளாலே प्रायिक-औचित्यवन्तः பல தகுதிகளுள்ளவைகளான प्रायः देशाः—பல தேசங்கள் उदिताः புராணாதிகளில் குறிக்கப்பட்டன. அயோத்யாதி முக்திதேசங்களே வேண்டுமென்பதில்லை. ஔசித்யமிராத போது साकाशीति என்று மேலே சொல்லப்படுகிறபடி அந்த தேசங்களும் விடப்படும்; இதர தேசங்களும் ஸ்வீகரிக்கப்படும். சில வேறுதேசங்களும் அவர்களாலேசொல்லப்பட்டனவே. प्रायः—அநேகமாக प्रायिक—அநேகமான ஔசித்யமுள்ளவையென்று சேர்த்தால் प्रायः என்பது வீணாகும். ஔசித்யங்கள் பலவென்றும் பல தேசங்கள் என்றும் சொல்வதில் புநருக்தியில்லை. प्राय उदिताः= அநேகமாகச் சொல்லப்பட்டன என்றால் சிலவற்றையே விட்டிருக்கிறார்களென்றதாகும். சொன்னவற்றை விட விட்டவையும் அதிகமாகவிருக்கலாம். ताम्रपर्णी नदी यत्र என்று தொடங் கிச் சிற்சில தேசங்களை மட்டும் சொன்னாரே.

एकान्ती இதி. தேவதாந்தர ஸங்கமற்றவர் அவருடைய க்ராமம், குலம், வ்ரு த்தி முதலானவற்றைக் கொண்டு சொல்லத் தக்கவராகார். விஷ்ணுஸம்பந்த த்தை இட்டே சொல்லத்தக்கவர், அவருக்கு விஷ்ணு தானே माता पिता भ्राता

स्थानविशेषम् எதென்னில்— आर्यावर्तादिपुण्य देशங்கள் युगस्वभावத்தாலே இப்போது व्याकुलங்களானபடியாலே चातुर्वर्ण्यधर्मம் प्रतिष्ठितமான இடத்திலே வஸிப்பா னென்கிறதுவே இப்போதைக்கு उपादेयம். அவ்விடங்கள் தம்மிலும் "கருந் தடமுகில்வண்ணனைக் கடைக்கொண்டு கைதொழும் பத்தர்களிருந்த வூரிலிருக்கும் மானிடரெத்தவங்கள் செய்தார்கொலோ" என்கிறபடியே भागवतोत्तरமான देशம் முமுக்ஷுவுக்குப் परिग्राह्यம்.

"कलौ जगत्पतिं विष्णुं सर्वस्रष्टारमीश्वरम् । नार्चयिष्यन्ति मैत्रेय पाषण्डोपहता जनाः ॥" என்னச் செய்தே,

---

என்றபடி ஸர்வபந்துவும் குலமும் கோத்ரமும் க்ராமமும், ப்ராபகமும் ப்ராப் யமுமான எல்லாமாவான். க்ராமகுலாதிகளைக் கொண்டு சொல்லவேண்டா மென்றதால் 'आविद्यः प्राकृतः प्रोक्तः नैद्यो वैष्णव उच्यते। आविद्येन न केनापि वैद्यः किञ्चित् समाचरेत् அவித்யாரூப ப்ரக்ருதி ஸம்பந்தம் ஹேயமாகையால் ப்ராக்ருத ஜந மயமான க்ராமாதி வாஸம் கூடாதென்று தெரிகிறபடியால் எது வாஸ்தாந மாகும்? அங்கே எவ்வித வ்ருத்தியிலிருப்பதென்று கேள்வி, आर्यावर्तेति. आर्यावर्तः पुण्यभूमिः मध्यं विन्ध्यहिमागयोः என்று விந்த்யத்துக்கும் இமயத் திற்கும் இடையிலுள்ள ஆர்யாவர்த்த மென்பதே முதன்முதலில் மன் வாதிகளால் கொள்ளப்பட்டது. சாதுர்வார்ண்ய தர்மம் அங்கேயே ஸ்த்தாபிக்கப்பட்டதாதலின். ஸ்த்தலம் போதாமையால் வேறு தேசங்களும் ஸ்வீகரிக்கப்பட்டன, இப்போதும் அந்த தேசங்களில் வர்ணாச்ரம தர்ம ங்கள் சரியாக நடக்காமையினுல் வேறு தேசமே உபாதேயம்=ஸ்வீகரிக்கத் தக்கதாகும். ஆர்யாவர்த்தாதிகள் அநேக விபவாவதாரஸ்த்தாநமாயிருந்த படியால் भगवद्भागवत संबन्धம் பெற்றிருந்தன. வைஷ்ணவத்வமிராமல் வர்ணா ச்ரம தர்மங்கள் மட்டும் உள்ளவிடத்தில் இருப்பதால் ப்ராக்ருத ஸம்பந்தமே அதிகமாகும். वर्णाश्रमाचारवता पुरुषेण परः पुमान्। विष्णुराराध्यते என்றபடி பகவ தாராதநரூபமாக வர்ணாச்ரம தர்மாநுஷ்டாநம் செய்யக்கூடிய இடமே வைஷ்ணவனுக்கு வாஸார்ஹமாகும். இதையே பெரியாழ்வார் (4-4-7) 'குருந்து ஒன்று' என்கிற பாசுரத்தில் திருகோட்டியூரில் 'கறுத்தும் பெரு த்துமுள்ள மேகத்தின் ஸ்வபாவமுள்ள பிரானை திடாத்யவஸாயத்துடன் ஸேவித்து வரும் பக்தர்கள் வஸிக்கும் திவ்யதேசத்தில் வாஸம் செய்யும் மனிதர்கள் செய்துள்ள தவங்கள் வாக்குக்கெட்டா என்று அருளினர். இதனுல் திருக்கோட்டியூர்போன்ற எல்லா திவ்யதேசங்களும் வாஸ யோக்யமென்று தெரிகிறது. ஆர்யாவர்த்தாதி தேசங்களைப் போலவே தக்ஷிணதேசமும் ப்ரபல வைஷ்ணவ ஸம்பந்தம் பெற்றிருப்பது ஸ்ரீபாகவ தத்திலும் ப்ரஸித்தம். வடதேசத்தில் விஷ்ணுவினுடைய ஆராதநம் கலி யிலே குறையுமென்பதை அந்த தேசத்தில் வஸித்திருந்த பராசர மஹர் ஷியே பேசியுள்ளார் कलौ இதி. வி. பு 6-1-50. மைத்ரேயரே! கலியில் மனிதர்கள் பாஷண்டிகளாலே கெடுக்கப்பட்டு ஜகத்துக்கு ஸ்வாமியும்

"कलौ खलु भविष्यन्ति नारायणपरायणाः । क्वचित् क्वचिन्महाभागा द्रमिडेषु च भूरिशः ॥
ताम्रपर्णी नदी यत्र कृतमाला पयस्विनी । कावेरी च महाभागा प्रतीची च महानदी ॥
ये पिबन्ति जलं तासां मनुजा मनुजेश्वर । प्रायो भक्ता भगवति वासुदेवेऽमलाशयाः ॥"
इत्यादिகளிலே कलियुगத்தில் भागवतர்கள் வஸிக்கும் देशविशेषம் சொல்லுகையாலே இந்த युगத்தில் இப் ப்ரதேசங்களில் भागवतपरिगृहीतமான स्थलங்களே परिग्राह्यங்கள். திருநாராயணீயத்தில்
"एकपादस्थिते धर्मे यत्र क्वचन गामिनि । कथं वस्तव्यमस्माभिर्भगवंस्तत् वदस्व नः ।

---

படைப்பவனும் நியந்தாவுமான விஷ்ணுவை அவ்வாறு அறியாமையால் ஆராதிக்கமாட்டாரென்றாரே. அந்த தேசத்தில் அப்படி யிருந்தாலும் அக் கலியிலேயே தென்தேசத்தில் அதிகமாகவும், வடதேசத்தில் சிற்சில விடங்களிலும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பத்திருக்குமென்று ஸ்ரீபாகவதத்தில் வ்யக்தமாய் பாராசர்யரான வ்யாஸர் அருளினர். कलौ खलु இதி. கலியிலே யன்றோ நாராயணனையே பரமப்ராப்யமாகக் கொண்ட மஹாபாக்யசாலிகள் இங்குச் சிற்சில விடத்திலும், தமிழ்நாடுகளில் வெகுவாகவும் தோன்றுவார்கள். தமிழ்நாட்டில் தலங்களைக் குறிக்கிறார் ताम्रपर्णीति. தாம்ரபர்ணி என்கிற நதியும், க்ருதமாலை யென்கிற வைகையாறும், பாலாறும், महाभागा—மிகச்சிறப்பு வாய்ந்த காவேரியும், प्रतीची—மேற்கு முகமாக ப்ரவஹிக்கும் महानदी—பெரியாறும், यत्र— எங்கெங்கு உளவோ என்று ஆழ்வார்களை மனத்திற் கொண்டே வ்யாஸர் இவ்விடங்களைக் குறித்தருளினரென்க. அவர்களில் நம்மாழ்வார் சிறந்தவராகையால் அவரவதார ஸ்த்தலமான தாம்ரபர்ணி முதலில் குறிக்கப்பெற்றது. வைகையில் கோதாதேவியும் அவர் தந்தையான பெரியாழ்வாரும், பாலாற்றின் கரையில் முதலாழ்வார்களும் திருமழிசையாழ்வாரும், பெரியாற்றில் குலசேகரப்பெருமாளும், காவிரிக்கரையில் மற்ற ஆழ்வார்களும் ஆசார்யர்களுமென ஆராய்ந்து கொள்வது. அத்தீர்த்த மான்மியம் கூறப்படுகிறது येति. மநுஷ்ய ச்ரேஷ்டனே! அந்த நதிகளில் தீர்த்தத்தை எவர்கள் அருந்துகிறார்களோ அவர்கள் நிர்மல மன முடையராய் ஷாட்குண்ய பூர்ணனான வாஸுதேவனிடத்தில் பெரும்பாலும் பக்தர்களாவார். அப்படிப்பட்ட இடங்களான படியாலே அங்கே ஆழ்வார்கள் அவதரித்தனர். அதன்பின் அந்த ஸ்த்தலங்களுக்கு மான்மியம் சொல்லாமலே விளங்குகிறது. அத்தீர்த்தங்கள் உள்ளவரையில் அவை பரமைகாந்திகளுக்கு வாஸத்துக்குத் தகுதியுற்ற தேசங்களாகுமென்று ச்லோகத்தின் கருத்து. இந்த தேசங்களிலும் ஏதேனும் காரணத்தினால் பாகவதர் வஸிக்காமலிருக்கும் போது அவற்றைக் கொள்ளலாகாதென்றறிவிப்பதற்காக இத்தேசங்களில் பாகவதபரிக்ருஹீதமான ஸ்தலங்களே என்று அருளினர். சுத்த ஸ்தலமும் ஆஸ்திக பரிக்ரஹமில்லாத போது விடத்தக்கதென்டதை பாரதத்திலிருந்து நிரூபிக்கிறார், திருநாராயணீயத்தில் இதி. முதலில் நாலு பாதங்களோடிருந்த தர்மமென்

என்று देवर्களும் ऋषिகளும் விண்ணப்பம் செய்ய,
"गुरवो यत्र पूज्यन्ते साधुवृत्ताः शमान्विताः। वस्तव्यं तत्र युष्माभिर्यत्र धर्मो न हीयते॥
यत्र वेदाश्च यज्ञाश्च तपः सत्यं दमस्तथा। हिंसा च धर्मसंयुक्ता प्रचरेयुः सुरोत्तमाः॥
स वै देशो हि वः सेव्यो मा वोऽधर्मः पदा स्पृशेत्"
என்று பகவான் அருளிச்செய்தான். அவ்விடங்கள் தம்மில் உகந்தருளின दिव्यदेशங்களிலே தனக்குக் கைங்கர்யத்துக்கு ஸௌகர்யமுள்ள இடத்திலே निरन्तरवासம் பண்ண उचितம், இத்தை "यावच्छरीरपातमत्रैव श्रीरङ्गे सुखमास्स्व" என்று सर्वोत्तरங்களான भगवत्क्षेत्रங்களுக்குப் प्रदर्शनार्थமாக அருளிச்செய்தார்.

---

கிற வ்ருஷபமானது கலியில் மூன்றுபாதங்கள் போய் ஒரு காலோடிருப்ப தாகி வேறிடமே செல்லுவதான போது. பழைய இடத்தில் நாங்கள் எப்படி வஸிப்பது? எம்பெருமானே! எங்களுக்குச் சொல்லவேண்டுமென்று வேண் டினர். [தர்மத்திற்கு நாலு கால்கள் பலவிடத்தில் பலவிதம் கூறப்பெறும். ஸ்ரீபாகவதத்தில் (1.17-24) तपः शौचं दया सत्यम् என்றும் ஸத்யம் இப்போது உள்ள பாதமென்றும் சொல்லப்பட்டது. தபோஜ்ஞாந யஜ்ஞதானங்கள் பாதங்கள்; தானம் இப்போதுள்ள பாதமென்றது ந்யாயகுஸுமாஞ்ஜலி.] இதற்கு உத்தரம் गुरवः இத்யாதி. ஸதாசாரமுள்ளவராய் சாந்தி குண பூர்ணராய்த் தத்துவ உபதேசகர்களான ஆசார்யர்கள் எங்கே ஆராதிக்கப் படுகிறார்களோ, அங்கே நீங்கள் வஸிப்பதாம். எங்கு தர்மம் குறையாம லிருக்குமோ; வேதங்கள், யஜ்ஞங்கள், தவம், உண்மை, இந்த்ரிய நிக்ரஹம், தர்மரூபமான ஹிம்ஸை (ஹிம்ஸை போல் தோன்றினும் உண்மையில் அஹிம்ஸையான தர்மம்) இவற்றிற்கு ப்ரசாரமிருக்குமோ; அந்த தேசத்தை நீங்கள் அடையவேண்டும். அப்போது உங்களிடம் அதர்மத்தின் கால் படாது. அதர்மம் உங்களை மிதிக்காதென்றார். இவ்வாறு பாகவத பரிக்ரஹ முள்ள ஸ்தலங்களுக்குச் செல்லலாமென்பதை ஸப்ரமாணமாக அருளினார். முதல் ச்லோகத்தில் பகவத்கைங்கர்யம் எல்லோருக்கும் பொதுவாகை யாலே அதை முதலிற் கூறி, ஜ்ஞாநக் குறைவுள்ள ப்ரபந்நர் பாகவதர் வஸிக்குமிடத்தை ஜ்ஞாநத்திற்காக வாதரிக்க வேண்டுமென்று அதையும் பிறகு அருளினார். அப்படி உள்ள தேசங்களில் தனக்கு வாஸஸௌ கர்யம் எங்கு என்பதையும் கவனிக்க வேண்டுமென்கிறார் அவ்விடங்கள் தம்மில் இதி. 'இடங்கள் தம்மில்' என்பதற்கு இடங்களிலே என்றே பொருள் ஸ்ரீரங்கம் ஒன்றையே ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்தாரே யென்ன, அது மற்ற க்ஷேத்ரங்களுக்கும் உபலக்ஷணமென்கிறார் இத்தை இதி. प्रदर्शनार्थமாக= உதாஹரணம் காட்டுவதற்காக. अत्रैव श्रीरङ्गे இதி. வேறு பல இடங்கள் இருந்தாலும் நீர் இருக்குமிடமே தேஹாவஸாநம்வரையில் இடமாகலாமென்பதற்காக अत्रैव என்று கூறுபவராய் அந்த இடம் ஸ்ரீரங்க மானபடியால் श्रीरङ्गे என்று விவரித்தார். இதனால் அவரவர்கள் தங்கும் திவ்ய தேசமே தகும். ஸௌகர்யமில்லையாகில் வேறிடம் செல்லலாமென்று

भगवत्क्षेत्रங்களே விவேகிக்கு வாஸஸ்தானமென்னுமிடத்தை
"यत्र नारायणो देवः परमात्मा सनातनः । तत् पुण्यं तत् परं ब्रह्म तत् तीर्थं तत् तपोवनम् ॥
तत्र देवर्षयः सिद्धाः सर्वे चैव तपोधनाः" என்று आरण्यपर्वத்தில் तीर्थयात्ரையிலும்,
"गोमन्तः पर्वतो राजन् सुमहान् सर्वधातुमान् । वसते भगवान् यत्र श्रीमान् कमल-
लोचनः ॥ मोक्षिभिः संस्तुतो नित्यं प्रभुर्नारायणो हरिः ।"
என்று प्रदेशान्तरத்திலும் மஹர்ஷி அருளிச்செய்தான் ச்ரீவால்மீகிபகவானும்
"सुभगश्चित्रकूटोऽसौ गिरिराजोपमो गिरिः । यस्मिन् वसति काकुत्स्थः कुबेर इव नन्दने"

---

குறிக்கப்பெற்றது. முதலில் சாதுர்வர்ண்ய உத்பத்திஸ்த்தாநமான ஆர்யா வர்த்தத்தைக் கூறினர். பாகவதர்கள் வஸிக்குமிடமும் ஆசார்யர்கள் ஆராதிக்கப்படுமிடமும், விசேஷமாகத் தமிழ்நாடும் வாஸஸ்தாநமாக வர்ணிக்கப் பட்டன. நாலுவர்ணங்களுடைய தர்மம் இராமற் போனாலும் ப்ராஹ்மண—அப்ராஹ்மண தர்மமாவது இருப்பதைக் கொண்டு இவற்றை ஆதரிக்கலாமென்றதாயிற்று.

கீழ்ச்சொன்ன வாக்யத்தால் यदेकायत्यं भवति भगवत्पादसेवार्चनादेः என்ற பகவத்ஸ்த்தலத்திற்கு விசேஷமாகப்ரமாணம்தெரியாமையால் அதைவிளக்கத் தொடங்குகிறார் भगवत्क्षेत्रங்களே இதி. ப்ரபந்நனை பிறகுமோக்ஷ பலனுக்காக அங்கேவஸிப்பதில்லையானாலும்பகவதகைங்கர்யம்மட்டுமன்றிஸர்வஸாதாரண மாக வேறு பலனுமுண்டென்றறிவிக்கிறார். यत्रेति—88-27ல் பூர்வார்த்தம். तत्पुण्यमென்றது 28ல்பூர்வார்த்தம். तत्रदेवर्षय என்றது 30ல் பூர்வார்த்தம். धौम्यर் தர்மபுத்ரருக்குச்சொல்வது-ப்ருகுமஹர்ஷி தவம் புரிந்த भृगुतुङ्गமலைக்குப் பிறகு பதர்யாச்ரமத்தை ப்ரஸ்தாவித்து அது நாராயணாச்ரமம் அதுவே பரப்ரஹ்ம ஸ்வரூபம், பரமசுத்தமானதென்றதோடு. அங்கே தேவரிஷி ஸித்தாதிகள் வஸிக்கிறார்களென்றதால் வாஸஸ்த்தானமென்றதாம். गोमन्त இத்யாதி. ஸஞ்ஜயர் த்ருதராஷ்ட்ரருக்கு பூமி விஸ்தாரம் சொல்லும் போது (பீஷ்ம பர்வம் 12-8) க்ரௌஞ்சத்வீபத்தில் சாதுர்வர்ண்யமுள்ளதான ஒரு மலையைச் சொல்லிவிட்டு வர்ணப்பொடிகளும் ஸுவர்ணாதிகளுமுள்ள கோமந்தமென்கிற மலை செந்தாமரைக் கண்ணனான திருமாலுக்கிடமாய் முமுக்ஷுக்கள் நிறைந்திருப்பதென்றார். இதனால் பகவத்க்ஷேத்ரம் முமுக்ஷுக்களுக்கு வாஸஸ்தாநமென்றதாம். सुभग இதி. சித்ரகூடம் ஏறும்போது பரதனுடைய வார்த்தை. சித்ரகூடமென்னும் இம் மலையானது ஸௌபாக்யம் பெற்று गिरिराजத்துக்கு ஸமானமாகிறதென்றார் गिरिराजமாவது இமயமலையென்பர் சிலர். அப்போது மஹாதபஸ்விகள் வஸிக்கக்கூடிய இமய மலைக்கு ஸமானமான இம் மலை இப்போது அதைவிட ஸௌபாக்யம் பெற்றது ராமன் எழுந்தருளி யிருப்பதாலென்று கருத்தாம். गिरिराजம் திருமலையென்ற பக்ஷத்தில் ராமன் எழுந்தருளியதால் ஸௌபாக்யம் பெற்று திருவேங்கடத்துக்கு ஸமானமாயிற்றென்ற பொருளாம். இந்த மலையில் ஸ்ரீராமன் இந்த்ரனுடைய நந்தனவனத்தில் குபேரன் வஸிப்பது போல்

என்கிற விடத்திலும் भगवदधिष्ठित क्षेत्रத்தினுடைய अभिगम्यத்வத்தை सुभगशब्दத்தாலே ஸூசிக்கப்பட்டது. श्रीमत्स्वयंव्यक्तादिகளிலும் स्वयंव्यक्त सैद्ध-वैष्णवங்களென்கிற க்ஷேத்ர விசேஷங்களையும் அவற்றினெல்லைகளில் ஏற்றச்சுருக்கங்களையும் பிரியச் சொல்லி दुष्टेन्द्रियवशात् चित्तं नृणां यत् क.दु. वैर्युतम् । तदन्तकाले संशुद्धिं याति नारायणालये என்று அவ்வோ க்ஷேத்ரங்களிலெல்லைகளுக்குள்ளே வஸித்தவனுக்கு देहान्यान्तकाल

---

வஸிக்கிறரென்றதால் குபேரன் நந்தநத்திலிருப்பது அரிதாவது போல் பகவத்ஸம்பந்தம் அரிதென்றறிவித்ததாம். भगवद्धिष्ठितम् = பகவான் இருக்கின்ற. இந்த வால்மீகிச்லோகத்தில் சித்ரகூடம் நமக்கு வாஸார்ஹமென்று எங்கே கிடைக்கிறதென்பதற்கு ஸமாதாநம் சுருதி अभिगम्यதை सुभगशப்த த்தாலே யென்றருளினர் ராமன் எழுந்தருளி யிருப்பதாலேற்பட்ட ஸௌ பாக்யமாவது எல்லோருக்கும் வாஸததிற்குத் தக்கதானமையே. இதனால் ராமனால் விடப்பட்டு ஸுபகமாகாத அயோத்தியை விட்டுவிட்டுத் தாமும் இங்கிருக்கத் தகுமென்று தம் விருப்பத்தை யறிவித்தபடி.

விபவமூர்த்தியின் ஸ்த்தாநம் போலே அர்ச்சாமூர்த்திஸ்தாநங்களும் வாஸார்ஹமென்பதை யறிவிக்கிறார். श्रीमत्स्वेति. ஸ்வயம் வ்யக்தமாவது— தானே எம்பெருமான் ஆவிர்பவித்தது அர்ச்சையான இடம். सैद्धமாவது— ஸித்தர்கள் ப்ரதிஷ்டை செய்த இடம். वैष्णवம்— வைஷ்ணவர் ப்ரதிஷ்டை செய்த இடம். ஏற்றச் சுருக்கங்களையும். உத்தரோத்தரத்தைவிட பூர்வபூர்வம் மேன்மையிற் சிறந்தது அதனதன் அகலம் நீளம் என்றாற்போன்ற அளவும்பூர்வ பூர்வத்திற்கு அதிகம்; உத்தரத்திற்குக் குறைவாம். இந்த க்ஷேத்ரவாஸத்திற்கு இங்குண்டாம் பலனை யறிவிக்கிறார். नृणां மனிதர்களுடைய चित्तं—மனமானது துஷ்டமான இந்த்ரியங்களுக்கு வசப்பட்டிருப்பதாலே कलुषैः- कल्मषैः- பாபங்களாலே युतं- சூழப்பட்டதாக எது உளதோ. அதே சித்தமானது अन्तकाले—மரணகாலத்தில் नारायणालये - தேவாலயமுள்ள க்ஷேத்ரத்திலே संशुद्धिं याति—பாபமற்றதாகிறது நாராயணாலயமென்பதற்கு, கோயிலுக்குள் என்ற பொருளல்ல வென்றறிவிக்கிறார் க்ஷேத்ரங்களின் எல்லைக்குள்ளே என்று. ஸ்வயம்வ்யக்தாதி க்ஷேத்ரத்தில் எதற்கு என்ன பரிமாணம் சொல்லப்பட்டிருக்கிறதோ, அதற்குள் என்றபடி. ஆலய ஸாமீப்யம் அதிக மாயிருந்தபோது இப் பலன் அதிகமென்று தானே விளங்கும் இப்படி சித்தசுத்தி யேற்பட்டால் தான் பண்ணிய உத்தரகால பாபங்களுக்கு எம்பெருமானை க்ஷமை கொள்ள ப்ரவ்ருத்தி யுண்டாகும். இப்படி எம்பெரு மானை நினைப்பதால் அந்திம ஸ்ம்ருதியும் அநாயாஸமாய் ஸித்திக்கும். க்ஷேத்ரவாஸம் செய்யாததோடு ப்ராயச்சித்த ப்ரபத்தியுமிராத உத்தராக முள்ள ப்ரபந்நருக்கு மரணகாலத்திற்கு முன்பு பாபாநுசரணமாகப் பல துக்கங்களை யனுபவிக்க நேரும். க்ஷேத்ரவாஸத்தில் அர்ச்சைகளிலீடுபட்ட வர்களுக்கு வாஸகாலம் முழுமையும் நல்லதென்பது ஸ்பஷ்டமே. இப்படி க்ஷேத்ரவாஸத்தால் பாபம் போமென்றிருப்பதால் பகவத் த்ரோஹிகளாக அங்கே வஸிப்பவர்களுக்கும் நன்மை யுண்டோ என்கிற சங்கையைப்

த்திலே வரும் விசேஷமும் சொல்லப்பட்டது. ஆகையால்,
"यत्किञ्चिदपि कुर्वाणो विष्णोरायतने वसेत् । न किञ्चिदपि कुर्वाणो विष्णोरायतने वसेत् ॥"
என்கிறபடியே प्रवृत्ति-निवृत्तिகளாலே வல்ல கைங்கர்யத்தைப் பண்ணிக் கொண்டு भगवद्-भागवत-अभिमान-विषयமான सर्वोत्तरक्षेत्रத்திலே வஸிக்கை उचितम्.
"निगृहीतेन्द्रियग्रामो यत्रयत्र वसेन्नरः । तत्रतत्र कुरुक्षेत्रं नैमिशं पुष्करं तथा ॥" என்று

---

பரிஹரிப்பதையும் கருதி, எப்படி வஸிக்க வேண்டுமென்பதை விளக்குகிறார் ஆகையால் இதி. பகவத் க்ஷேத்ரத்தில் ஏதாவது செய்துகொண்டே வஸிக்க வேண்டும். ஒன்றும் செய்யாமல்வஸிக்கவேண்டும்என்றது (இதிஹா-27.18) ச்லோகப்பொருள். இதுமுரண்படும்பேச்சாகுமென்னில்–நித்யகர்மாநுஷ்டாந மெங்குமிருப்பதால்அது இதற்குவிஷயமன்று.பகவதநுஜ்ஞா கைங்கர்யம்ஏதாவதுசெய்து கொண்டு வஸிப்பது தகும். இது செய்பவருக்கும் செய்ய முடியாதவருக்கும் நிஷித்த கார்யத்தினின்று விலகியிருப்பது முக்யம். இது यत्किञ्चि-दपि என்பதற்குப் பொருள். இதை 'ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளாலே வல்ல கைங்கர்யத்தை' என்று அருளினார். இனி விஹித கார்யத்தைச் செய்வது கர்மமானாலும் நிஷித்த கார்யத்தைச் செய்யாமை என்பது ஒருவித பலனுக்கான புண்யத்திற் சேராதே; ஹிம்ஸை செய்யாமல் ஒருவனிருந்தால் அதற்காகப் புண்யமுண்டோ என்னில்-நிவ்ருத்தியினால் தார்க்கிகரீதியில் ஒரு புண்யமுண்டாவதில்லை யானாலும், நிஷித்தகார்யம் செய்ய ப்ரஸக்தி ஏற்பட்டாலும் செய்யாமல் சுத்தமாயிருப்பவனிடம் ஈச்வரனுக்கு ப்ரீதியுண்டாகலாம், ஸந்தர்ப்பமிருந்தும் விலகுகிறபடியால் நிவ்ருத்தியானது வ்யாபாரமும் ஆகலாம். அதனால் ப்ரவ்ருத்தியைப் போல் நிவ்ருத்தியையும் கைங்கர்யமென்றது. இனி நித்ய கர்மாநுஷ்டானமும் நிஷித்த நிவ்ருத்தியுமுள்ளவனே அநுஜ்ஞாகைங்கர்யத்துக்கு அர்ஹனானபடியால் அவற்றுடன் வஸிப்பவனாய் வல்ல அநுஜ்ஞாகைங்கர்யம் செய்வதென்றும் இந்த ச்லோகத்துக்குப் பொருளாகலாம். பகவத் க்ஷேத்ரமாகில் கைங்கர்ய பரர்களாகப் பலர் சேர்வது ஸித்தமாகையால் भागवताधिष्ठानமும் தானே ஸித்திக்குமென்று भगवद्भागवताभिमान என்றது.

சுத்தனான பாகவதன் வஸிக்குமிடமெல்லாம் திவ்யக்ஷேத்ர ஸமமாகச் சொல்லப்பட்ட பிறகு திவ்ய க்ஷேத்ரத்திலேயே இவன் வஸிக்கத் தகுமென்றதெங்ஙனே என்ன, அவ் வசநத்திற்குக் கருத்துரைக்கிறார் निगृहीतेति. ग्रामமாவது கூட்டம். பதினோர் இந்த்ரியங்களையும் அடக்கிக் கொண்டு, க்ஷேத்ர வாஸமூலமாக என்ன பலனோ அதை அது இராமலே பெற்றிருப்பவன் எங்கு வஸித்தாலும் அதே குருக்ஷேத்ராதி ஸகல க்ஷேத்ர ஸமானமாகுமென்றால், தானிருப்பதாலே இது திவ்ய க்ஷேத்ரமாயிற்றென்று அவன் நினைப்பதாகுமோ? அவனிருப்பது காரணமாக அதை திவ்ய க்ஷேத்ர ஸமமாகக் கொண்டு பிறர் க்ஷேத்ர வாஸபலன் பெறலாம் ப்ரதாநமானவன் தனக்கு திவ்ய க்ஷேத்ர வாஸஸித்திக்காக குருக்ஷேத்ராதிகளிலேயே

சொல்லுகிறவிது नियमமில்லாதபோது ஏதேனுமொரு देशத்திலே வஸித்தாலும் இவன்வாஸத்தாலே அத் தேசமும் प्रशस्तமாமென்கைக்காக. இதுக்கு शाण्डिलीवृत्तान्तம் உதாஹரணமாகக் கண்டுகொள்வது. ஆகையால் ज्ञानसमकालमुक्त्वा कैवल्यं याति गतशोकः । तीर्थे श्वपचगृहे वा नष्टस्मृतिरपि परित्यजन् देहम् என்று शरीरपातத்துக்கு ஒரு தேசவிசேஷநியமமில்லை யென்றதுவும் எப்படிக்கும் फलத்தில் இழவில்லை யென்கைக்காக.

---

இருக்கவேண்டுமென்றே ஏற்படுவதால் அவன் வேறிடத்திலிருப்பது அகதிக தசையிலே யென்றும் ஸித்திக்குமென்றபடி. அப்படி ஸத்க்ஷேத்ரமாக நினையாததால் சாண்டிலியினிடத்தில் கருத்மான் நினைத்தது அபராதமாயிற்றென்பது கீழே கூறப்பட்டது. இப்படியாகில் திவ்யக்ஷேத்ர வாஸம் செய்யமுடியாமல் பூர்ண இந்த்ரிய நிக்ரஹமிராமல் மரணகாலத்தில் தேசாந்தரத்தில் வஸிப்பவனுக்கு மனச் சுத்தியிராமையாலே மோக்ஷமில்லையென்று நினைக்கவாகிறதே, அவர்களுக்கும் மோக்ஷம் ப்ராமாணிகமாகையால், மனச் சுத்தி பெறுமிடத்திலேயே வஸிக்கவேண்டுமென்பது கூடுமோ என்ன வருளிச்செய்கிறார் ஆகையால் இதி. க்ஷேத்ரவாஸம் முக்கிய மென்பதற்கு ப்ரமாணங்கள் பல விருப்பதால் ஜ்ஞாநேத்யாதிவசனம் அகதிக புருஷ விஷயமென்றபடி. ज्ञानसमकाले—தத்துவ ஹித புருஷார்த்த ஜ்ஞாநமுள்ள காலத்திலே उक्त्वा— அட்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தேன்', 'स्थिते मनसि' என்றபடி மந்த்ர ப்ரயோகம் செய்து அல்லது ஸாங்க ப்ரபத்தி ஜ்ஞாநத்தோடு ப்ரபத்தி ப்ரயோகம் செய்து, பிறகு 'नष्टस्मृतिरपि மறந்திருந்தாலும் तीर्थे—சுத்தமான ஸ்தலத்திலோ श्वपचगृहे वा—அசுத்தமான சண்டாளன் (நாய் சமைத்து உண்பவன்) வீட்டிலோ देहं-தேஹத்தை விடுகின்றவன், சோக ப்ரஸக்தியற்றவனாய் कैवल्यं-மோக்ஷத்தை याति—அடைகிறான். இதில் ஜ்ஞாநசக்தியுள்ள காலத்தில் ப்ரபத்தி யநுஷ்டித்தவன் பின்னே எம்பெருமானை நினைக்கக் காரணமான சித்தசுத்தியிராமற் போனாலும் க்ஷேத்ர வாஸத்திற்கு நேர்மாறாக பாபிஷ்ட ஸ்த்தாநத்தில் மரணமடைந்தாலும் மோக்ஷம் சொல்லப்பட்டதால் கீழ்க்கூறிய நியமம்வேண்டாமென்று தெரிகிறது. ஆனாலும் அநேக ப்ரமாண விரோதம் வாராமைக்காகக் கூடுமான வரையில் இதனைப் பரிஹரிக்க வேண்டுமென்றபடி மரண காலத்தில் மறந்தே போனாலும் மோக்ஷமென்கிற பக்ஷத்தை மேலே இசையப் போகிறதில்லை யாகையால் இங்கு नष्टस्मृतिः என்பதற்கு மறவாதபடிக்கான ஸாமக்ரியை சேகரித்துக் கொள்ளாதவனும் என்று பொருள் கொள்வது. ஆகையாலேயே ப்ரபத்தி ப்ரபாவத்தால் கடைசியில் நினைவு தானே வருமென்று அந்த அம்சத்தை விட்டுவிட்டு தேசவிசேஷ நியமமில்லை என்றதை மட்டும் அருளினார்.

இப்படி தேசநியமத்தை ஸ்தாபித்து விட்டு முதல் ச்லோகத்தில் भगवत्-क्षेत्रமும் பாகவத ஸ்தானமும் சொல்லியிருக்கும் க்ரமத்தை யொட்டி பகவத்

ஆராதவருளமுதம் பொதிந்த கோயில்
அம்புயத்தோன் அயோத்திமன்னற்களித்த கோயில்
தோரா(லா)த தனிவீரன் தொழுத கோயில்
துணையான(யரம்வி?) வீடணற்குத் துணையாங் கோயில்
சேராத பயனெல்லாஞ் சேர்க்குங் கோயில்
செழுமறையின் முதலெழுத்துச் சேர்ந்த கோயில்
தீராத வினையனைத்துந் தீர்க்குங் கோயில்
திருவரங்கமெனத் திகழுங் கோயில்தானே.

---

க்ஷேத்ரங்களுக்குள்ளேகோயில் திருமலை பெருமாள்கோயில் என்கிற ப்ரஸித்த க்ரமத்தை யநுஸரித்து ப்ரதானமான மூன்றுக்கு மூன்று பாசுரங்களை யும் பாகவத ஸ்தாநத்திற்காக ஒரு பாசுரத்தையும் அருளுகிறார் ஆராத இத்யாதி. திருவரங்கம் என—ஸ்ரீரங்கமென்று रङ्ग रङ्ग इति ब्रूयात् क्षुतप्रस्खल-नादिषु என்று எல்லோரும் புகழும்படி தி॰ழும் விளங்கும் தேவாலயமே, அருள்—தயையே வடிவுகொண்ட. ஆராத—தேட்டாத—அநுபவிக்க அநுபவிக்க போக்யமான அமுதம்—அம்ருதமான ச்ரீரங்கநாதமூர்த்தி, பொதிந்த கோயில் பூர்ண ஆவிர்பாவமுள்ள இடம். அம்புயத்தோன்—முதவில் ஸத்ய லோகத்தில் இவ்வர்ச்சா மூர்த்தியை ஆராதித்த பிரமன் (அம்புஜம்—தாமரை; அதில் உண்டானவன் அம்புஜத்தோன்) அயோத்தியின் அரசர்கள் ஆராதிக்கும்படி இக்ஷ்வாகு மஹாராஜனுக்கு அளித்த= அர்ப்பணம் செய்த கோயில்—விமாநம். அவர்கள் ஆராதித்து வரும் க்ரமத்தில் அவ் வம்சத்திலே தோன்றிய, தோலாத தனி வீரன்= எங்கும் தோல்வி பெறாத. அநபாயஸாஹஸனுய் அஸஹாயசூரனை ஸ்ரீராமனலே தொழுத-(விபவமான தன்னைவிட அர்ச்சைக்குள்ள மேன்மையைக் கண்டு தோல்வியுற்று)வணங்கப் பட்ட விமாநம். இதுவே பிறகு துணையான—ராக்ஷஸர்போரில் தனக்கு ஸஹாயமாக வந்த தர்மமூர்த்தியான வீடணற்கு——விபீஷணாழ்வானுக்கு ராமனல் அளிக்கப்பெற்று துணை ஆம் கோயில். ராஜ்ய பரிபாலநத் திலே அயோத்தி அரசர்களுக்குத் துணையாயிருந்தது போல் ராக்ஷஸராஜ்ய பரிபாலனத்திலே துணையாயமர்ந்த விமாநம். வீடணற்கு என்கிற சொல் வீபீஷணற்கு என்ற சொல்லின் திரிபு. விபீஷண என்ற சொல்லில் வி என்பதை விட்டு भीषण என்பதை வீடண என்றது. இனி, துணையாம் வீபீடணற்கு என்றும் பாடமிருக்கலாம். ச்ரீரங்கவிமாநம் வந்த வரலாறு சொல்லப்பட்டது; இதன் மஹிமை மேலே. சேராத—வேறிடத்தில் ஜநங் களுக்குச் சேரவாகாத, பயன் எல்லாம்-புருஷார்த்தங்களனைவற்றையும் சேர்க் கும் விமாநம். செழு—செழுமையுள்ள, ஸாங்கோபாங்கமாக வளர்ச்சியுள்ள. மறையின் வேதத்தின் முதலெழுத்து—ஆரம்பத்தில் சொல்லப்படும் எழுத்து ப்ரணவம் அதனல் சேர்ந்த= தன் உருவாகக் கொள்ளப்பெற்றதும் (ப்ரணவா காரமாய்) தனக்குப் பொருளான எம்பெருமானலே அடையப்பட்டதுமான

கண்ணனடியிணை யெமக்குக் காட்டும் வெற்புக்
கடுவினையரிருவினையுங் கடியும் வெற்புத்
திண்ணமிது வீடென்னத் திகழும் வெற்புத்
தெளிந்த பெருந்தீர்த்தங்கள் செறிந்த வெற்புப்

---

விமானம். 'ஆத்யं து த்ர்யக்ஷரं ப்ரஹ்ம த்ரயீ யத்ர ப்ரதிஷ்டிதா என்றபடி வேதத்திற்கு ஆதாரமாய் முதலுமான ப்ரணவம்—விமானமாயிருப்பதும்இதற்கு விசேஷம். இவ்வதிகாரத்திற்கு விஷயமான க்ஷேத்ரவாஸத்திற்கு உண்டான முக்ய மான பலனை முடிவில் கூறுகிறார் தீராத இதி. எவ்வளவு அனுபவித்தும் மாளாத வினை அனைத்தும்=எல்லாப் பாபங்களையும், தீர்க்கும் கோயில்—போக்குகின்ற விமானமாம். ஸத்யலோகம் முதல் திகழ்ந்து பிரமன் பெருமாள்போன்றாராலே ஆராதிக்கப்பட்டு வெகு தீர்க்க காலமாக விளங்கும் கோயிலானபடியால் இதை பாஷ்யகாரரும் கத்யத்தில் அத்ர ஸ்ரீரங்கே என்று அருளினார்.

திருமலையின் பெருமையைத்தெளிவிக்கிறார் கண்ணன்இதி.(கடையடி)வேங்கடம் வெற்பு-திருவேங்கடமலை வேங்கடாசலம்என்று வழங்கும்படிவிளங்கும்-ப்ரஸித்தமாயிருக்கும், வேதம்வெற்பு—வேதத்தினால் அறிவிக்கப்பட்ட வேத மூர்த்தியான மலையானது கண்ணன்-ஸ்ரீநிவாஸரூபியான கீதாசார்யருடைய அடிஇணை-ஒன்றுக்கொன்றே ஸமமான இரு திருவடிகளை எமக்கு-அடியார்களான ஸர்வஜநங்களுக்கும் காட்டும்வெற்பு காண்பிக்கின்ற மலையாகும். அல்லது கண்ணன்—கண்ணனானவன் ச்ரீநிவாஸரூபியாய் தன்திருவடிகளிரண்டையும் நமக்குச் சரணமாகக் காண்பிக்க இடமான மலையென்னலாம்.சரமச்லோக பூர்வார்தத்தின் பொருள் கூறப்பெற்றது. உத்தரார்த்தத்திற் சொன்ன அதன் பலனைக் கூறுகிறார் கடு இதி. கடுவினையர்—பக்தியோகம் செய்து போக்கடிக்கவாகாமையால் கடுமையான கர்மங்களை யுடையவரின், இருவினை உம்—புண்ய பாபங்கள் என்னும் இருவகைப் பாபங்களையும் கடியும் ஒழிக்கின்ற மலை. உத்தரார்த்தத்தில் அநிஷ்ட நிவ்ருத்தி போல் இஷ்ட ப்ராப்தியும் கருதப்பட்டிருப்பதால் அதை யொட்டி அருளுகிறார் திண்ணம் இது-இந்த வேங்கடமானது. திண்ணம்—நிச்சயமாகவே, வீடு-மோக்ஷஸ்தானம் என்ன—என்னும்படி திகழும்—ப்ரத்யக்ஷ வைபவத்தாலும் புராணத்தாலும் விளங்கும் மலையாகும். இங்கு எம்பெருமானை ஸேவிப்பவர்கள் 'ஸத்த்வோந்மேஷாத் வ்யபகதமிதஸ்தாரதம்யாதிபேதை:' (ஹம்ஸ.)என்று அருளிச்செய்தபடி ஸத்துவபூர்ணராய், ப்ரஹ்மாநந்த துல்யாநந்தராய் இருப்பதுமட்டாலே இது வீடு என்றதில்லை உண்மையில் பரமபதத்தில் இருந்த ஒரு க்ரீடாசலமே வராஹப் பெருமாளின் நியமநத்தினால் இப்பூமியில் கொண்டு சேர்க்கப்பட்டு வேங்கடமென்ற பெயரோடு விளங்குவதாலும் இது வீடே. மற்ற ஸ்த்தலங்களில் கிடைக்காத மற்றொரு விசேஷமும் கூறப்படுகிறது. தெளிந்த இதி. இதிலுள்ள மலை யருவிகளும் சுனைகளுமான புண்ய தீர்த்தங்களுக்கு எண்ணிக்கையே

புண்ணியத்தின் புகலிதெனப் புகழும் வெற்புப்
பொன்னுலகிற் போகமெலாம் புணர்க்கும் வெற்பு
விண்ணவரு மண்ணவரும் விரும்பும் வெற்பு
வேங்கடவெற்பென விளங்கும் வேதவெற்பே

---

இல்லை. தெளிந்த—மலையின் மேல் கல்லில் ப்ரவஹிப்பதால் கலக்கத்திற்கு இடமே யாகாமல் தெளிவுற்ற பெருதீர்த்தங்கள்—உருவாலும் மேன்மை யாலும் பெரிய தீர்த்தங்கள் செறிந்த—நெருங்கி மேன்மேலாகுமிடமான மலையாம். 'वेंकारोऽमृतबीजं स्यात् कटमैश्वर्यमुच्यते। अमृतैश्वर्यसङ्घत्वात् वेङ्कटेति विदुर्बुधाः' என்றபடி ஐச்வர்யம் மோக்ஷாநுபவம் இரண்டையுமளிப்பது திருநாமத்தி னின்றே விளங்குமென்று கருதி யருளிச் செய்கிறார். புண்யேதி. இது— இம் மலை புண்யத்தின் புகல்—சேர்ந்தவர்களிடம் எல்லாப் புண்யமும் புகக் காரணமாகும் என்ன—என்னும்படி புகழப்பட்ட மலை. எந்தப் பலனுக்கு எத்தகைய புண்யம் வேண்டுமோ அந்தப் புண்யம் செய்யாமலே அதன் பலனைக் கோரி இம் மலைக்கு வந்த மாத்ரத்திலேயே இம் மலையே அந்தப் புண்யத்தின் ஸ்த்தாநத்தில் நின்று பலனளிக்கிறதென்றபடி. இதில் ஐச்வ ர்யம் கைவல்யம் இரண்டும் கருதப்பெறும். பொன்னுலகில்—'हिरण्मये परे कोशे' என்றபடி சோதியாய் போக்யமாய் விளங்கும் பரமபதத்திலே பெறவிருக்கும் போகமெல்லாம் 'भोगमात्रसाम्यलिङ्गाच्च' என்னப்பட்ட ஆநந்த பரமஸாம்யாதிகளை, புணர்க்கும்—சேர்ப்பிக்கும் மலை. பரமபதத்தை விட இதற்குப் பெருமையை யருளுகிறார் விண்ணவரும் இதி. விண்ணவரும்— பரமபதத்திலிருக்கும் நித்யஸூரிகளும் மண்ணவரும்—ப்ரக்ருதி மண்டலத் திருப்பவரும் விரும்பும் வெற்பு—मायावी परमानन्दं त्यक्त्वा वैकुण्ठमुत्तमम्। स्वामि- पुष्करिणीतीरे रमया सह मोदते" என்றபடி விண்ணவனான பரமாத்மாவே பிராட்டியோடு இங்குப் பெறும் ஆநந்தம் அங்கில்லை என்று வருகிறபோது அவனை விடாத நித்யஸூரிகள் வருவதில் என்ன வியப்பு? மண்ணுலகில்— சிலர் சில ஆலயங்களுக்குச் செல்வார்கள். இங்கு வந்து பலன் பெறாத ப்ரஜை இவ்வுலகிலே கிடையாதென்றபடி. இவ்வளவு பொருளும் वें पापं कटति=दहति इति वेङ्कटः என்ற பொருள் கொண்ட திருநாமத்தினின்றே விளங்குமென்கிறார். வேதத்தில் 'अरायि काणे विकटे गिरिं गच्छ सदान्वे। शिरिं बिठस्य रश्मिभिः तेभिस्त्वा चातयामसि' என்கிற மந்த்ரத்தினால், பண(தன)மிராமற் போனாலும், அங்க வைகல்யமிருந்தாலும், ஸங்கடத்தில் அகப்பட்டாலும் தாநவர்(அஸுரர்)களால்பீடிக்கப்பட்டாலும் திருமலைக்குச் செல்; ச்ரீநிவாஸ னுடைய ஒளிகளால் உன்னைத் திருப்தி செய்து கொள்ளலாமென்று ஓது வதாக வேங்கடாசல மாஹாத்ம்யத்தில் உளதே. மற்ற விரிவும் அங்கே காண்க, இனி வேதாத்மாவாயிருக்கின்ற கருடனே மலையாகவிருப்பதால் கருடாசலமென்று இதற்குப் பெயருண்டு; அதனாலும் வேதவெற்பாகிறது. முன் பாட்டிலே ஓர் அடியால் கோயிலை யுத்தேசித்து கோயில் என்கிற

[illegible]த்துடன் (௧௨)

உத்தமவமர்த்தல மமைத்ததோர்
எழிற்றனுவினுய்த்த (றனுவுயர்த்த) கணையால்
அத்திரவரக்கன் முடி பததுமொரு
கொத்தென வுதிர்த்த திறலோன்
மத்துறு மிகுத்த தயிர்மொய்த்தவெணெய்
வைத்ததுணுமத்தனிடமாம்
அத்திகிரி பத்தர்வினை தொத்தறவறுக்கும் அணி யத் திகிரியே.

---

ஏழு விசேஷணத்தினால் सप्तप्राकार மத்தியில் அதன் இருப்பு அறிவிக்கப் பெறும். இங்கு வேதவெற்பை உத்தேசித்து ஏழுதரம் வெற்பு என்றதால் இங்கு ஏழுமலை யுண்டு என்று அறிவித்ததாம்.

பெருமாள்கோயிலின் பெருமையை மேலே யருளிச்செய்கிறார். முதற் பாட்டில் தோலாத தனி வீரன் என்று ராமனின் ப்ரஸ்தாவம் வந்தது. அயோத்தி எம்மரசே என்று அயோத்தியில் எழுந்தருளி யிருந்த ரங்க நாதனை ராமனாகவும் தொண்டரடிப்பொடி யாழ்வார் அநுஸந்திக்கிறார். மேல் பாட்டில் கண்ணனுடைய ப்ரஸ்தாவம். இருவிபவ மூர்த்திகளும் ஒன்றான விடம் பெருமாள் கோவில் என்கிறார். எங்குள்ளவரும் பெருமாளாகவிருக்க இதற்குப் பெருமாள்கோவில் என்று பெயர் ஏன் எனில், காஞ்சியிலிருக்கும் பல வாலயங்களிலுள்ள மூர்த்தியைவிட இவரே சிறந்தவரென்று இவரை யே பெருமாளென்ற பெயரிட்டு அத்திகிரியையே பெருமாள்கோவில் என்பது. அதற்காகவே இப்பாட்டில் அத்திகிரி பதத்தினாலே அருளினார். இவ் வெம்பெருமானை முதலில் ராஜாதிராஜன் தேவாதிராஜனேபெருமானென்று ராமனென்கிறார்—உத்தமேதி. உத்தம—ஸர்வோத்க்ருஷ்டமான: தனக்குத் தானே ஸத்ருசமான அமர்-போர், தலம்—புரிந்த இடத்தில் (ராமராவண) யுத்த பூமியில், அமைத்தது—அமைக்கப்பட்ட, ஓர்-ஒப்பற்ற, எழில்-ப்ர காசமுடைய, தநு—धनुस्ஸினால் உயர்த்த—உயர எறியப்பட்ட கணையால்— அம்பினால், அத்திரம் அரக்கன்—अस्त्र வித்யையில் ப்ரஸித்தனான ராக்ஷஸனான ராவணனுடைய முடிபத்தும்—பத்துத்தலைகளையும், ஒருகொத்து என்னும் படி அநாயாஸமாக. உதிர்த்த-கீழே விழச்செய்த திறலோன்-ஸாமர்த்ய முள்ள ராமபிரானும். மத்து—கடையும் மத்தினால் உறு—அழுத்தப்பட்ட மிகுத்த—அளவற்ற, தயிர்—தயிரினின்று, மொய்த்த—நெருங்கிக் கிளர்ந்த, வெணெய்—நவநீதமென்ற, வைத்தது—சேமிக்கப்பட்டு வைத்த வஸ்து வை உணும்—தானே உண்கின்ற அத்தன்—பரமாப்தனான க்ருஷ்ண பிரானுமான எம்பெருமானுக்கு இடம் நித்யவாஸஸ்தானமான அத்திகிரி- ஹஸ்தி கிரியானது, பத்தர் வினை-பக்தர்களான பக்தர்களின் பாபங்களை— தொத்து அற-வாஸனையும் ஒழியும்படி அறுக்கும்—ஒழிக்கும், அத் திகிரி= விரோதி நிரஸநத்தில் ப்ரஸித்தமான திருவாழியானது. தனக்கு ஆயுதகார்ய மில்லாமையால் அணியே, அப்பெருமானுக்கு அலங்காரமே யாகும். உத்தம

தேனார்கமலத் திருமகளுநாதன் திகழ்ந்துறையும்
வானாடுகந்தவர் வையத்திருப்பிடம் வன்றருமக்

மாவது எல்லாப் போர்களிலும் சிறந்ததாகையும், அங்கு நடந்த போர்களில் முடிவாய் பரமாவதியாகையும், ஓர் என்றது, இந்த்ரன் அளிக்கப்பெற்று அகஸ்த்ய முநிவர் கொடுத்த வில்லும் ப்ரஹ்மாஸ்த்ரமுமானதாலாம் அத்திர வரக்கன்—ராவணன் அஸ்த்ரத்திலே சூரனாயிருந்ததால் ராமன் அது மூல மாகவே அவனை வதைத்தது அ..திர..அரக்கனென்றுமாம்; வெகு காலமாய் ஸ்திரனான அப்படிப்பட்ட அரக்கனென்றதாம். ஒருகொத்து—பத்துபத் தாகத் தலைகளை வெட்டியதால் கொத்து என்றது. ஒரு கொத்தை உதிர்த் தாற்போல் அநாயாஸமாகச் செய்தார் என்பதற்காகவும் தலைகள் மேன் மேல் வந்து கொண்டிருந்தபோது இனிமேல் வாரா இது ஒரு கொத்தே யுள்ளதென்னும்படி ஹ்ருதயமாகிற மூல ஸ்த்தாநத்தைப் பிளந்ததை யறிவிக்கவும் ஒரு என்றது திறலோன் என்பதும் உணும் என்பதும் அத்தனுக்கு விசேஷணம். ராமன் ஸீதை விச்வஸிக்கும்படி பரமாப்தனாய்—உலகுக்கு ஹிதமாகத் திறலை உபயோகித்தானென்றபடி மத்து உறு என்றதால் தயிர் மிகக்கெட்டியாயிருந்தது அறிவிக்கப்படும். வைத்தது உணும்—வைக்கப்பட்டிருந்ததை இப்படி யுண்டதும் வஞ்சனைக்காக வன்று; ஆப்தனாகையால் அருள்புரிதலுக்கு உண்டானென்றபடி, அத் தன் என்பதற்கு. ஹஸ்த நக்ஷத்திரத்திலே தோன்றிய வரதன் என்றும் பொருளாம். ராவண ஸம்ஹாரத்திற்கு தக்க திறலுடையவன், கம்ஸன் வரையிலான துஷ்டர்களை அழிக்குமளவுக்குத் திறல் பெற இளமையிலே இவ்வளவு வெண்ணெயுண்டது வியப்பே அதனால் உண்டான திருமேனி போக்யதை தேவாதிராஜன் திருமேனியில் நன்கு விளங்குகிறது இன்று.

இம்மூன்று திவ்யதேசங்களையும் அருளியது மற்றவற்றிற்கும் உப லக்ஷணமாகும். பெரிய பகவத் க்ஷேத்ரங்களாகையால் भागवताधिष्ठानமும் பெற்றதாகும். அது இல்லையாகில் பாகவதமாத்ராதிஷ்டாநமுள்ள இடமே சிறந்ததென்கிறார். இதற்கான இந்த தேனார் என்கிற பாசுரமே இவ் வதிகார முக்யார்த்த ஸங்க்ராஹகமுமாகும். பாகவத என்பதால் वासुदेवः सर्वम् என்றபடிப கவானையே ப்ராப்யமாகக் கொண்— பரமைகாந்தி களையே கொள்வது. இப்படிப்பட்ட பரமைகாந்தி சிற்சில ஸமயங்களில் பெரிய க்ஷேத்ரங்களிலும் இராமலிருக்கலாம். பாசுரத்தின் பொருளாவது—தேன் ஆர் மகரந்தம் நிறைந்த கமலம்—தாமரைப்பூவில் வஸிக்கும் திருமகள்—பெரிய பிராட்டியாருக்கு நாதன்—ப்ரியனான பரவாஸுதேவன் திகழ்ந்து உறையும்—ஸர்வோத் க்ருஷ்டனாக விளங்கிக் கொண்டு வாஸம் செய்யும் வான் நாடு—பரமபதமென்கிற மேல் உலகை, உகந்தவர்—பரம ப்ராப்யமாக அபேக்ஷித்திருக்கும் பரமைகாந்திகள் வையத்து—பூமியில் இருப்பிடம்—வஸிக்குமிடமான, தருமம்—நிவ்ருத்தி தர்மங்களுக்குரிய

கானாரிமயமுங் கங்கையுங் காவிரியுங் கடலும்
நானாநகரமு நாகமுங் கூடிய நன்னிலமே. (26)

सा काशीति न चाकशीति भुवि साऽयोध्येति नाध्यास्यते
साऽवन्तीति न कल्मषादवति सा काञ्चीति नोदञ्चति ।
धत्ते सा मधुरेति नोत्तमधुरां नान्याऽपि मान्या पुरी
या वैकुण्ठकथासुधारसभुजां रोचेत नो चेतसे ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
**श्रीमद्रहस्यत्रयसारे स्थानविशेषाधिकार एकोनविंशः॥ 19.**
**श्रीमते निगमान्तमहादेशिकाय नमः**

—o—o—

---

**கான் ஆர்**—காடுகள் நிறைந்த **இமயம் உம்**—இமயமலையும், **கங்கையும்**—கங்கா நதிக்கரையும் **காவிரியும்**—காவேரீதீரமும், **கடலும்**—ச்வேதத்வீபமும் **நாநா நகரம் உம்**—அயோத்யாமதுராதி நகரிகளும் **நாகமும்**—ஸ்ரீவைகுண்டமும் **கூடிய**—ஒன்று சேர்ந்த **நல் நிலம்**—ச்ரேஷ்டமான தேசமாகும். அந்தந்த பகவத் தேசங்கள் மற்ற திவ்ய தேசங்களாகா. பாகவத க்ஷேத்ரம் ஸர்வ க்ஷேத்ர ஸமானமாகையால் இதுவே சிறந்தது. காசி முதலான முக்தி க்ஷேத்ரங்கள் ஏழு ப்ரஸித்தங்களானாலும் வடதேசம் ம்லேச்சர்களின் ப்ரபலமான ஆக்ரமணத்தால் நித்யவாஸ அநர்ஹமாயிருப்பதால் தென்தேசத்தில் முக்யமான மூன்று ஸ்தானங்களைக் கூறி அவற்றில் காஞ்சியானது அந்த ஏழு க்ஷேத்ரங்களிலும் சேர்ந்ததாய் இப்போதும் தக்கதாயிருப்பதால் அதை முடிவில் கூறினார். ஆனாலும் அதுவும் பரமைகாந்திகளுக்கு வாஸத்திற்கு அநர்ஹமாகத் தோற்றும்போது விடத்தக்கதே யென்பதை பாகவதாபிமத ஸ்தல ப்ராதாந்ய ஸ்தாபநத்திற்காக விஸ்பஷ்டமாக அருளிச்செய்கிறார் **सेति**—சுற்றுப்புறமுள்ள பாகங்களைக் கூறி இவற்றின் நடுவிலுள்ள ஒவ்வொரு ப்ரதேசத்தைக் காட்டி **अयोध्या मधुरा, माया,** என்று பெயரிட்டுக் குறிக்கிறோம். அந்தந்த ப்ரதேசமாயிருப்பதே அததன் மேன்மைக்குக் காரணமாகாது. பகவத் சரித்ராநுபவ ரஸிகர்களுக்கு அவ்வநுபவம் வளம் பெறுமிடமே திவ்ய தேசமாகுமென்கிற கருத்தாலே ஒவ்வொரு முக்தி க்ஷேத்ரத்தையும் ஒருஸமயம் உபேக்ஷிக்கவுமாமென்கிறார். ஸ்ரீரங்காதிகளும் ஸ்ரீபாஷ்யகாராதிகளால் பல ஸமயங்களில் பாகவதவாஸாநர்ஹமென்று விடப்பட்டனவே. **सा**-அப்படிப்பட்ட காசியானது **काशी इति**-காசி யென்கிற காரணத்தினாலேயே **भुवि**-பூமியில் **न चाकशीति**-அதிக ப்ரகாசம் பெறாது. **सा**-அந்த அயோத்தியானது **अयोध्या इति** அயோத்யை **என்ற** இடமென்றதாலேயே **न अध्यास्यते**—வஸிக்கப்படவாகாது. **सा**—அந்த உஜ்ஜயிநீ **अवन्ती इति**—அவந்தி யென்கிறதனாலேயே **कल्मषात्**—பாபத்திலிருந்து **न अवति**-காப்பதாகாது. **सा** அந்த காஞ்சியானது **काञ्ची इति**-காஞ்சி யென்பதாலேயே **न उदञ्चति**—மேம்பட்டதாகாது. **सा** - அந்த மதுரையும் **मधुरेति** - மதுரை யென்பதாலேயே

श्रीः

# निर्याणाधिकारः

## நிர்யாணுதிகாரம் 20.

—o—o—

मनसि करणग्रामं प्राणे मनः पुरुषे च तं झटिति घटयन् भूतेष्वेनं परे च तमात्मनि ।

---

**वमधुरं**—உத்தமமென்கிற கௌரவத்தை **न धत्ते**—தரிப்பதில்லை. **अन्याऽपि**—அவற்றைவிட வேருன மாயை த்வாரகை யென்கிற இருவகையான **புரீ**-பட்டணமும் **न मान्या**—மதிக்ககூடியதல்ல. **புரீ** என்ற சொல் **अयोध्या मधुरा** என்ற ச்லோகத்திற் போல் எல்லாவற்றிற்கும் சேரும் மாந்யா=மதிக்கப் படுமதென்றதாலே த்வாரவதிக்கு மிக்க ஏற்றம் கருதப்பெறும், **मान्या** என்ற சொல்லான்து **अन्या न्** என்கிற அக்ஷரத்தை யடையாத போது **माया** எனவாம். இப்படியும் மாயாபுரி குறிக்கப்பெறும், மூன்றுபாதத்திற் சொன்னதற்குக் காரணம் கூறுகிறுர் **धा इति** **या**—எந்த நகரியானது. **वैकुण्ठ**—வைகுண்ட நாதன்விஷயமான **कथा सुधा**—சொல்லமுதத்தின் **रसभुजां**—சுவை யறிவாரின் **चेतसे**—மனத்திற்கு **नो रोचेत**—பிடிப்பாகிறதில்லையோ, வைகுண்ட பதத்திறலே, ப்ராப்யமான பரமபதத்தை ப்ரதாநமாக்கி வரும் பகவத் கதைக்கு முக்யத்வம் குறித்ததாகும். இப்படி பரமைகாந்திகளான ஸத்துக்களின் சங்கத்திற்குத் தக்கதாகாததாகில் ஸுப்ரஸித்தமான முக்திக்ஷேத்ரங்களும் விடப்படுமென்ற போது மற்ற க்ஷேத்ர விஷயத்தில் ஸம்சயம் ஏதென்றபடி. ஆக பகவத் க்ஷேத்ரத்தைவிட ஸத்ஸங்கமுள்ள இடமே ச்ரேஷ்டம்.

ஸ்தாந விசேஷாதிகாரம் முற்றும்.

—o—o—

ஸ்ரீமதே நிகமாந்த குரவே நம:

## நிர்யாணுதிகாரம் 20.

கீழ்க் குறித்த சிறந்த ஸ்தலங்களிலோ அல்லது அகதிகமாக ஏதேனுமொரு இடத்திலோ ஆயுள்முடிவு வரையில் வஸிப்பவனுக்கு தேஹாவஸாநத்தில் தேஹத்திலிருந்து புறப்படும்போது மோக்ஷம் பெறுதற்குத் தக்க நாடியில் பரவேசிப்பதற்கு முன் வேண்டுமவற்றை ஈச்வரன் செய்து வைக்கிறுனென்பது இவ்வதிகாரார்த்தம், அதிகாரார்த்த ஸங்க்ரஹ ச்லோகம் **मनसीति**. இந்த ச்லோகத்திற் சொன்ன அம்சம் மரணமடையும் ப்ரஜைகளெல்லோருககுமே பொதுவானது. **ईश्वरः**—ச்ரிய:பதியானவன். மரணமடையும் தருவாயில் ஜீவனுடைய **करणग्राम**—இந்த்ரியக் குவியலை, பத்து இந்த்ரியங்களையும் **झटिति**—விரைவாக **मनसि**—மனததிலும், **मनः**—இந்த்ரியங்களோடு சேர்ந்த மனத்தை. **प्राणे**—ப்ராணவாயுவிலும், **तं**—அப்படிப் பட்ட ப்ராணனை, **पुरुषे**—மரணமடையும் ஜீவனிடத்திலும் **एनं**—இப்படி

स्वविदविदुषोरित्थं साधारणे सरणैर्मुखैः(खे) नयति परतो नाडीभेदैर्यथोचितमीश्वरः ॥

---

சேர்ந்த ஜீவனை **भूतेषु**—மரணகாலத்தில் **स्थूलदेह**த்தினின்று கடைந்தெடுக்கப்பட்ட ஸூக்ஷ்ம பஞ்சபூதங்களாலான ஸூக்ஷ்ம சரீரத்திலும் **घटयन्**—சேர்ப்பவனாய், இப்படி சேர்ந்து வேறிடம் செல்ல ஸூக்ஷ்ம சரீரத்திற்கு ஆத்மாவாய் ப்ரதாநமாக நின்ற **तं**-அந்த ஜீவனை **परे**-பரதேவதையாய் ஹார்தனான **आत्मनि च**-தன்னிடத்திலும் **घटयन्**-சேர்ப்பவனாய், **इत्थं**—இவ்வாறான உத்க்ராந்தி க்ரமமானது **स्वविदविदुषोः**—**स्व**-ப்ரஹ்மமான **தன்னை** யறிந்தவனுக்கும். அதாவது பக்தி ப்ரபத்தி வித்யாநிஷ்டனுக்கும், அவித்வானாகிற ஸம்ஸாரிக்கும் **साधारणे**— பொதுவாய் நடந்திருக்கும் போது, **परतः**-அதற்குமேல் அந்த ஜீவாத்மாவை **यथोचितं**-அவன் செல்லவேண்டிய ஸ்தாநத்திற்குத் தக்கவாறு **सरणैः**-அந்த ஸ்த்தாநம் சேர்க்கவான வழிக்கு **मुखैः**-வாயிலான **नाडीभेदैः**-வெவ்வேறு நாடி வழியாக **नयति**-கொண்டு போகிறான். மரணமடையுமெல்லோரையும் ப்ராணேந்த்ரியங்களோடு சேர்த்துப் பஞ்சபூதங்களோடும் சேர்த்துத் தன்னிடத்தில் சேர்ப்பது வரை பொதுவாகும், முக்தி யடைகின்றவனும் அத்வைதி நினைப்பது போல் இங்கே முக்தி பெறாமல் அர்ச்சிராதி மார்கத்தாலே வைகுந்தம் போக வேண்டியிருப்பதால் இப்படி பூதேந்த்ரியங்களோடு சேர்ப்பதென்பது அவச்யம் உண்டென்றபடி. இந்த ச்லோகத்தில் **मनसि करणग्राम**மென்று தொடங்கி சொல்லப்பட்ட ஒவ்வோரம்சமும் சாரீரகத்தில் 4-2ல் தனித்தனி அதிகரணத்தாலே விசாரித்து ஸ்த்தாபிக்கபட்டிருப்பது. ஸ்வர்க்கலோகம் போக **धूमादिमार्ग**ம். அந்த மார்க்கமூலம் ஸ்வர்கத்தில் பல லோகம் போகிறவருக்கு அங்சுங்கே வழி வேறுபடும். நரகம் போகிறவர் வழி வேறு. இவ்விரு வழியில்லாமலே ஸம்ஸாரிகளாகப் பிறக்கப் போகிறவருமுண்டென்றது சாரீரகம். அததற்குத் தகுந்தபடி சரீரத்திலுள்ள நாடிகளில் ஒவ்வொன்றை வாயிலாக அவனே வகுத்திருக்கிறான். அதில் புகுந்த போதே போமிடம் தெரியவரும், இது போல் மோக்ஷம் செல்கிறவருக்கும் அர்ச்சிராதி மார்கம் செல்ல ஸுஷும்நா என்கிற மத்யமநாடியில் ப்ரவேசம் செய்து வைப்பான், இந்த மோக்ஷநாடி மட்டும் ப்ரஹ்ம ஸூத்ரத்தில் குறிப்பிடபட்டது, மற்ற நாடி விஷயம் மேல் எடுக்கும் புராணாதிகளில் காண்பது.

உத்தரார்தத்தில் **स्वविदविदुषोः** என்பதற்கு **स्वं वेत्तीति स्ववित्; अथवा स्वस्य वित् स्ववित् स्वं ब्रह्म स्ववित् अविद्वांश्च स्वविदविद्वांसौ तयोः** என்று விக்ரஹம், **स्व** என்று கர்த்தாவான ஈச்வரனைச் சொல்லும்; ஜீவனை **स्वपद**த்தாலே சொல்லி அவனுக்கந்தர்யாமி யென்று சொல்ல வேண்டுமென்பதில்லை. **विदविद्वत्** என்று ஒன்றாகச்சேர்த்துப் பிறகு **स्व** என்பதோடு விக்ரஹம் சொல்வதில் க்லேசமிருக்கிறது. **वित्**பதத்தோடே **स्व**பதத்திற்கு **षष्ठीसमास**ம். **अविद्वत्पद**த்தோடே ஸ்வபதத்திற்கு த்விதியாதத்புருஷமே தகும். சில உரைகளில் **विच्च अविच्च विदविदौ** என்கிற பாடம் காண்கிறது- அப்போது மூலத்திலோ உரையி

இப்படி "𑌲𑍋𑌕𑌵𑌿𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌚𑌰𑌣𑍌 𑌶𑌰𑌣𑌂 𑌤𑍇𑌽𑌵𑍍𑌰𑌜𑌂 𑌵𑌿𑌭𑍋" என்று இவன் கால் பிடிக்க,

---

லோ பாடம் மாறியிருக்க வேண்டும். 𑌚 என்பது சேராமற் போனாலும் 𑌅𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 என்ற பதத்திற்கே வித்யா நிஷ்டனாகாத ஸம்ஸாரி என்று பொருள் கிடைக்கும். இங்கே 𑌸𑌾𑌧𑌾𑌰𑌣𑍇 என்கிற விசேஷணத்திற்கு விசேஷ்யமான பதம் வேண்டியிருப்பதால் 𑌸𑌰𑌣𑍀𑌮𑍁𑌖𑍇 என்று ஸப்தம்யந்தமாக்கி, 'வழிக்கு முகமான நிர்யாணமானது ஸாதாரணமாயிருக்கும்போது' என்று அநேகமாக உரைக்கின்றனர் இவ்வதிகாரத்தில் மேலே வரும் ஸ்ரீஸூக்தியில், "𑌵𑌿𑌦𑍍𑌵𑌦𑌵𑌿𑌦𑍍𑌵𑌤𑍍𑌸𑌾𑌧𑌾𑌰𑌣மான உத்க்ராந்தி க்ரமத்தை நடத்தி" என்றும், "𑌸𑌰𑌣𑍍𑌯𑌨𑍍𑌤𑌰த்திற்கு முகங்களான நாடீ விசேஷங்களில் போகாதபடி அர்ச்சிராதி மார்க்கத்திற்கு முகமான 𑌶𑌤𑌾𑌧𑌿𑌕𑍈யான ப்ரஹ்ம நாடியிலே" என்றுமிருப்பதால் உத்க்ராந்திக்ரமம் விசேஷ்யமென்றும் 𑌸𑌰𑌣𑌿𑌮𑍁𑌖மென்பது நாடிக்குவிசேஷணமென்றும் அறிவித்திருப்பதால் 𑌸𑌰𑌣𑍀𑌮𑍁𑌖𑍈: என்கிற ஸாராஸ்வாதிநிபாடம் பொருந்தும். இது அதிலேயே வ்யக்தம். 𑌤𑌤𑍍𑌰 என்கிற பதத்திலேயே இப்படிப்பட்ட உத்க்ராந்தி க்ரமமென்கிற பொருளைக் கொள்ளவேண்டும்.

கீழே 𑌅𑌪𑌰𑌾𑌧𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑌾𑌧𑌿𑌕𑌾𑌰த்திலே ஆஜ்ஞாநுஜ்ஞாபரனான ப்ரபந்நனுக்கு உபாயாபாயங்களை விட்டு மத்யம வ்ருத்தி யிலிருப்பு அறிவிக்கப்பட்டுள்ளது. அவ்வாறின்றி அபாய ப்ரஸக்தி வந்தாலும் உபாயாந்தர ஸம்பந்தம் வந்தாலும் அதனால் மோக்ஷத்திற்கு விளம்பம் உண்டா இல்லையா என்கிற விஷயமும் அபராத பரிஹாராதிகாரத்திலே சிறிது சொல்லப்பட்டுள்ளது. இந்த உபாயாபாய ப்ரஸக்திகளை தேவதாந்தர ஸ்பர்சம், மற்ற அபராதம், உபாயாந்தர ப்ரஸக்தி என மூன்றாகக் கொண்டு இம் மூன்றுக்கும் காரணத்தையும் கார்யத்தையும் காட்டி விளம்பாவிளம்ப சோதநம் செய்கிறாரிங்கு. 'சில ப்ரமாண வாக்யத்திலே தேஹாவஸானத்திற்குப் பிறகும் விளம்பம் தெரிகின்றதே; அது கூடுமா' என்பதற்கு ஸமாதானத்தை ப்ரதானமாக்கி இதைப் பணிப்பர்; இதற்குப் பீடிகையாம் முதல் வாக்யம். அநுரூபமான வ்ருத்தி என்பதற்கு உபாயாபாய ஸம்பந்தமில்லாத மத்யமவ்ருத்தி பொருள், பெரும்பாலும் உபாயாபாய ஸம்பந்தமிராமலே இருப்பார்கள், ஆனாலும் சிலரிடம் நிலை குலையுமாகையால் இது விஷயம் விசாரிப்பதாம். ஓரிடத்திலே இருக்கும் போது இந்நிலை நிர்யாணத்திற்கு முன்னே வருவதாகையால் இவ் விசாரம் இங்கே வைத்துக் கொள்ளப்பட்டது. இவன் ஸ்வபாவத்தைப் பார்த்தாலும் ஈச்வர ஸ்வபாவத்தைப் பார்த்தாலும் இவனுக்கு நிலை குலைதல் அரிதென்கிறார். இவ் வாக்யத்தில் 𑌲𑍋𑌕𑍇𑌤𑌿 ஜிதந்தேச்லோகம் உன்னுடைய உலகமளந்த திருவடிகளை, ப்ரபுவே; நான் சரணமடைந்தேன். நீயும் விபுவாய் உன் திருவடிகளும் உலகமளந்திருக்கும் போது எங்கே யிருந்து நான் சரணாகதி பண்ணாலும் அங்கே நீயும் உன் திருவடிகளும் எங்குமிருப்பதாமென்று கருத்து, இவன் கையால் திருவடிகளைப் பிடித்தால் அவன் தன்னைப் பிடிக்கும்

"हस्तावलम्बनो ह्येको भक्तिक्रीतो जनार्दनः" என்கிறபடியே இவனைக் கைப்பிடித்து "राजाधिराजः सर्वेषाम्" என்கிறபடியே उभयविभूतिनाथனான ஸர்வேச்வரன் தான் உகந்ததொரு நிலத்திலே வைக்க, अभिषिक्तையான மஹிஷியைப்போலே बहुमतனாய்த் தன் परमैकान्तित्वத்துக்கு அநுரூபமான वृत्तியோடே போகும் இவ்வधिकारि,

இப்படிப்பட்ட अधिकारिகளிலே प्रारब्धदुष्कृतविशेषवैचित्रियாலே வரும் अहङ्कारममकारங்களென்ன, அவை யடியாக வரும் अपचारங்களென்ன; प्रयोजनान्तररुचियென்ன, அதடியாக संभावितமான देवतान्तरस्पर्शமென்ன; बुद्धिदौर्बल्यமென்ன, அதடியாக வரும் उपायान्तरप्रत्याशैயென்ன; இவ் वैपरीत्यம் பிறந்தவர்களுக்கும் இவை பிறவாதே प्रारब्धसुकृतविशेषத்தாலும் पूर्वप्रपत्तिயில் फलसङ्कल्पविशेषத்தாலும் छिद्रமில்லாத கைங்கர்யத்திலே प्रतिष्ठितராய்ப் போந்தவர்களுக்கும் ஸம்ஸாரத்தினின்றும் நிர்யாணத்துக்கு विलम्बाविलम्बங்களிலே நிலையிருக்கும் படி எங்ஙனே என்னில்—

இவ்விடத்தில் இவர்களுக்குச் चार्वाकादिகளுக்குப் போலே நிலைநின்ற

---

கையைப் பிடித்துத் தூக்குகிறான் என்கிறார் हस्तेति. உபாய பக்தியால் விலைக்கு வாங்கப்பட்ட ஈச்வரன் கையைப் பிடிக்கிறவனாகிறான். இது ஸம்ஸாரக்கடலில் மூழ்கித் தூக்கின கையைப் பிடித்துத் தூக்குவதாகும். அப்போது ஈச்வரன் கையும் இவனுக்கு அவலம்பமாய்ப் பிடிப்பாகிறது. கைப்பிடிப்பது = பாணிக்ரஹணம் விவாஹத்திலுமுண்டாகையால் ராஜாதிராஜனால் கைபிடிக்கப்பட்ட ப்ரபந்நன் ராஜமஹிஷிக்கு ஸமாநமென்றார். ராஜமஹிஷி மடிபிச்சையெடுக்கப் புறப்படுவது அரிதாவதுபோல் ப்ரபந்நன் தன்னிலை குலைந்திருப்பது அரிதென்னலாமென்று கருத்து. இவ்வதிகாரி என்ற விடத்தில் வாக்ய முடிவு. அப்படி நிலைகுலைதலுக்குக் காரணம் प्रारब्धदुष्कृतविशेषवैचित्री என்கிறார். वैचित्र्यமாவது விசித்ரமாகை பலவகையாயிருக்கை. அபராதங்களுக்கு அஹங்கார மமகாரங்கள் காரணம். இதர உபாய ஸம்பந்தத்திற்கு ப்ரயோஜநாந்தர ருசி காரணம். அப்போது தேவதாந்தர ஸ்பர்சமும் அநேகமாகச் சேரும். மோக்ஷார்த்தமாக உபாயாந்தரத்தில் மனப்போக்குக்கு புத்தி தௌர்பல்யம் காரணம். சிலருக்கு இந்தக் காரணங்களிருந்தும் கார்யம் தடைபடலாம். இந்தக்கார்யங்கள் ஏற்படாதவர்களுக்கு மோக்ஷபலன் தாமதிக்க ப்ரஸக்தியில்லை. இவைஏற்பட்டவர்களில் சிலருக்கு விளம்பமுண்டு. இதுவிஷயம் அபராத பரிஹாராதிகாரத்தில் ஒருவாறு சொல்லப்பட்டது. அந்த விளம்பத்திற் சில உட்பிரிவைச் சொல்வது இங்கே முக்யம். அதற்கு முன் கீழ்க் கூறியது சிறிது விரிவாக உரைக்கப்படுகிறது. பிறந்தவர்களுக்கும் என்பதற்கு விளம்பம் அவிளம்பம் இரண்டிலும் ஸம்பந்தம். விசேஷத்தாலும் என்கிற பதங்களுக்கு விசேஷத்தாலோ என்று பொருள். சித்ரமிலலாத—அபாய உபாயங்களுக்கு அவகாசமில்லாத.

கீழ்க்கூறிய மூன்று வைபரீத்யங்களையும் தனித்தனியாக அடைவாக விவரிக்கிறார் இவ்விடத்தில் இத்யாதியால். அவஹிதராய் நடப்பார்-கவனத்துடன்

अहङ्कारममकारங்கள் புகா(து). अवहितராய் நடப்பார் இடறுமாப்போலே என்றேனும் ஒருகால் வரும் அஹங்கார மமகாரங்கள் विवेकावधिகளாய்ப் பின்புற்ற தெளிவாலே கழிந்துபோம் அபராதங்கள் பிறந்தால் क्षामणा-वधियாயும் शिक्षावधियாயும் கோரி(வி)ன காலத்துக்குள்ளே अपराधनिस्तारம் பிறக்கும் படி अपराधपरिहाराधिकारத்திலே சொன்னோம்.

மோக்ஷம் பெறுகைக்குக் காலவிசேஷம் குறியாதே प्रपन्नரானாரைப் பற்ற, "अपाया(त्)विरतः शश्वन्मां चैव शरणं गतः । तनूकृत्याखिलं पापं मामाप्नोति नरः शनैः"

---

அடிவைக்குமிடம் பார்த்து நடப்பவர்கள், இடறுமாப் போலே—ஒரு ஸமயம் இடறுவார்கள் என்கிற விதம் போல்; என்றேனும்-என்றைக்காவது; விவேகாவதிகளாய்-தெளிவுண்டாம் வரையில் வருகின்றனவாய்; தெளிவினால் கழியாத போது அபராதங்கள் பிறக்கும். அதற்கு நிஸ்தாரம் = அதிலிருந்து விலகுகை சிலருக்கு க்ஷாமணம் வந்த போது; க்ஷாமணமாவது—ஈச்வரன் க்ஷமிப்பதற்கு அநுகூலமான வ்யாபாரம். க்ஷாபண என்ற பாடம் அசுத்தம். க்ஷாமணமிராத போது சிக்ஷையுண்டாம். எதுவும் கோலின காலத்திற்குள்ளே = தேஹாவாஸநாதி காலத்தில் எதில் மோக்ஷம் கேட்டானோ, அந்தக் காலத்திற்குள்ளே என்றபடி. எல்லா அபராதத்தினின்றும் நிஸ்தாரமுண்டோ, நிக்ஷேபரக்ஷையின் முடிவில் यद्वा महापराधवर्गः प्रपत्तिमपि प्रतिबन्धुं अलम् என அருளினாரே யென்னில், ப்ரபத்தி பெறவாகாதபடி ப்ரஹ்ம விதபசாரம் செய்யுமானாலும், (பக்தியைப் போல் ப்ரபத்தி தீர்ககால ஸாத்யமன்றாகையால்) ப்ரபத்தி நிஷ்பந்நமான பிறகு ப்ரஹ்ம விதபசாரமென்ற உத்தராகம் கோலின காலத்திலே फलம் பெறலைத் தடுக்கவாகா. அநியதாயுஸ்ஸா யிருப்பவனுக்கு அது பலன் விரைவில் வரத்தடையாகலாம். நியதாயுஸ்ஸானவர்க்கு ப்ரபலமான வாதைகளை யுண்டுபண்ணலாமே யல்லது மோக்ஷ விரோதியாகாது. அந்த பாகவதாபசாரமே பாகவதர் மூலமான சாபாதி காரணமாய் அது மூலமாய் தத்வஹித புத்திவைபரீத்யம் விச்வாஸபங்கம் முதலியன நேருமாகில், ஸாங்க ப்ரபத்தி பூர்த்திரூப—உபாய மில்லை யாகையால் பலனில்லை யென்னலாம். இவ்வளவும் கீழே ஸித்தித்திருந்தாலும் அபாய விஷயத்தில் சிலருக்கு தேஹாவஸாநத்தின் பிறகும் விளம்பம் தெரிகிறதே என்று கேள்வி. இதற்கு ஸமாதாநம் மோக்ஷமித்யாதி. உபாய ப்ரஸக்தியுள்ளவனிடமும் இவ்வாறு கேள்வியும் உத்தரமும் மேலே வரும். லக்ஷ்மீதந்த்ரத்தில் 17ல் அபாய விஷயமான விளம்பம் சொல்லும் ச்லோகம் 102; உபாய விஷயமாக விளம்பம் சொல்வது 103. இவ்விரண்டும் தேஹாவஸாநத்திற்குப் பின்னான விளம்ப விஷயமாக ஸ்வரஸமாகத் தெரிகிறது. முதல் ச்லோகத்தில் முதற்பதம் அபாய அவிரத; என் பதாம், अपायात् विरतः, என்றும் பாடம். ச்லோகார்த்தமாவது—नरः—ஸம்ஸாரவிரக்தனாய் முமுக்ஷுவாய், मां शरणं गतः—என்னைச் சரணமாகவும் அடைந்தவன் பிறகு शश्वत्—அடிக்கடி செய்யப்படுகிற अपाय-அபராதங்

என்று சொல்லுகிறது. முமுக்ஷுவாயிழிந்தவனுகையாலே प्रयोजनान्तररुचि நிலைநிற்கவுண்டாகாது. उभयभावनर्க்குப்போலே मोक्षरुचियோடே கூட प्रयोजनान्तररुचि கலந்து வந்தால் இவனுக்கு ஹிதபரனான ஈச்வரன் "याचितोऽपि सदा भक्तैर्नाहितं कारयेद्धरिः", "यस्यानुग्रहमिच्छामि धनं तस्य हराम्यहम्" इत्यादि

---

களினின்று अविरतः—ஓயாதவனாகி பிறகு विरतः–ஓய்ந்தவன் ப்ராயச் சித்தம் செய்யாத போது, अखिलं पापं—செய்த பாபமெல்லாவற்றையும் तनूकृत्य—சரணாகதி ப்ரபாவத்தாலே லகுவாக்கி, லகு சிக்ஷைக்குக் காரண மாக்கி; शनैः— என்றதால் தேஹாவஸாநத்திற்குப் பிறகும் தாமதம் தெரிகின்றது. இதை இசைந்து இது காலவிசேஷம் குறியாதே ப்ரபந்நர் விஷயமென்கிறார், ஆர்த்தியினால் தேஹாவஸாநத்திற்கு முன்பேயோ, அல்லது தானே வரும் தேஹாவஸாந காலத்திலோ மோக்ஷம் வேண்டுமென்று ப்ரபத்தி செய்திருந்தால் அவனுக்கு இப்படி விளம்பம் வாராதென்றபடி. ஆனால் இக் காலத்தில் யாரும் காலம் குறிக்காமல் ப்ரபத்தி செய்வதில்லையே யென்னில்—தேஹாவஸாநமென்று குறிப்பிடாவிட்டால் ஈச்வரன் ஜந்மாந் தரம் கொடுக்க நேரிட்டால் அது நாஸ்திகாதி ஜந்மமானால், பூர்வ ப்ரபத்தி விச்வாஸாதிஹாநியாம். ஆஸ்திக ஜந்மமாயிருந்தாலும் முன்னே ப்ரபத்தி யநுஷ்டித்தது அப்போது தெரியாதாகையால் முமுக்ஷுவாய் உபாயாந்தர த்தில் இழிந்தால் பூர்வப்ரபத்தி கைவிடும். இவ்வாறு அஞ்சிக் காலம் குறித்தே செய்வர். சிலர் கோபிகாதிகளைப் போலே ஜாதிஸ்மரர்களாய் அதாவது பூர்வஜந்மத்தில் நடந்ததை ஸ்மரிக்கக் கூடியவர்களாய் பிறப்பாராகில் முன்னே காலம் குறியாத போது கேடில்லை.

இவ்வளவால் அஹங்காரமமகாரங்கள்மூலமாக அபராதியானவன் விஷயம் நிரூபிக்கப்பட்டது. இரண்டாவதான ப்ரயோஜநாந்தர ருசியுள்ள வன் விஷயம் நிரூபிக்கப்படுகிறது முமுக்ஷுவாய். இத்யாதியால். இந்த ருசி மூலமாக வரும் தேவதாந்தர ஸம்பந்த விஷயம் இத்துடன் மேலே நிரூபிக் கப்படும். தேஹயாத்ரை கர்மாதீநை யென்று த்ருப்தியுள்ளவனுக்கு ப்ர யோஜநாந்தர ருசி வாராது. ருசி வந்தும் லௌகிக கார்யங்களையே செய்கின்றவனுக்கு பலன் தேஹாவஸாநத்திற்குள் ஸித்திக்கிறபடியால் அது தேஹாவஸாநத்தில் மோக்ஷத்திற்கு பாதகமாகாது. முமுக்ஷுவுக்கும் ப்ர யோஜநாந்தர ருசி வருமென்பதற்கு உபயபாவனை யுதாஹரணம். உபயभावन ராவார். ப்ரஹ்ம ருத்ராதிகளென்றது விஷ்ணுபுராணம். ஜகத் வ்யாபாராதி ப்ராக்ருத கார்யத்திலும் மோக்ஷார்த்த பகவத் பக்தியிலும் இழிந்தவராகை யாலே அவர்கள் இருவித சிந்தனை யுள்ளவர்கள். இவன் வேறு ப்ரயோ ஜநத்திற்காக உபாயம் செய்தாலும் ஈச்வரன் பலனளிக்காத போதும் மோக்ஷத்திற்கு விளம்பமில்லை. ஈச்வரன் ப்ரேமையினாலே இவன் கேட்ட தைக் கொடுக்காமலுமிருக்கலாம். இதற்கு ப்ரமாணம் याचित இத்யாதி. உத்தரார்த்தம் बालमग्नौ पतन्तं तु माता किं न निवारयेत् என்றது, பக்தர்களாலே

களிலும் **कुण्डधारोपाख्यानादि**களிலும் சொல்லுகிறபடியே சில ப்ரயோஜநாந்தரங்களைக் கொடாதே கண்ணழித்தும். சிலவற்றிலே **अल्पास्थिरत्व-दुःखमि-**

---

பகவான் எப்போதும் யாசிக்கப்பட்டிருந்தாலும் அஹிதமானதை அளிக்க மாட்டான். நெருப்பில் விழும் சிறுவனைத் தாய் தடுக்காமலிருப்பாளோ, இது ப்ரேமையினால் தானே. **यस्येत्यादि**-அதன் உத்ரார்த்தம் **बान्धवैश्च वियोगेन भृशं भवति दुःखितः.** பகவான் சொல்லுகிறார் எவனுக்கு அநுக்ரஹத்தை விரும்புகிறேனோ, அவனுக்கு உள்ள பணத்தையுமபஹரிக்கிறேன். அதனால் துக்கமடைகிறான் என் அநுக்ரஹ பாத்ரமாயிருப்பவன் பந்துக்களுடைய வியோகம் காரணமாகவும் அதிகம் துக்கமடைவான். இதற்கு மேல் ச்லோகம் **तेन दुःखेन संतप्तः यदि मां न परित्यजेत्। तं प्रसादं करिष्यामि यः सुरैरपि दुर्लभः**'' என்றும். மோக்ஷத்தில் விருப்பம் குறைவாயிருப்பவர்களுக்கு அதை வ்ருத்தி செய்வதிலேயே ஈச்வரனுக்கு நோக்கு இப்படி ப்ரயோஜநாந்தரத்தைக் கொடாமை **कुण्डधारोपाख्यान**த்தில் (**मोक्षधर्म 277**,) உள்ளது. பணத்தை யபேக்ஷித்த ஒரு ப்ராஹ்மணன் யார் மூலமாகவும் பணம் பெறமாட்டாமல் ஒரு தேவதைக்கு வேலைக்காரனாய் தண்ணீர் கொண்டு போகும் குண்டதாரனைக் கண்டு இவனிடத்தில் பக்தி செய்தால் இவன் வாயிலாகக் குபேரதேவதை தநமளிக்குமென்று குண்டதாரனை யாராதித்து வந்தான். (குண்டதாரன் என்ற ஜலதரன் என்பதற்கு மேகதேவதை யென்றும் பொருள் பணிப்பர்.) இரவில் சயனித்துக் கொண்டிருக்கும்போது தேவதைகளுக்கு ஆஜ்ஞை செய்யும் மாணிபத்ரனையும் அவனிடத்தில் விழுந்து நமஸ்கரிக்கும் குண்டதாரனையும் கண்டான். அப்போது குண்டதாரன் சொன்னதாவது இந்த ப்ராஹ்மணன் எனது பக்தன்; இவனுக்கு அநுக்ரஹத்தை விரும்புகிறேன் என்று. அதற்கு மாணிபத்ரன், 'உனக்கு அவன் இஷ்டமானபடியால் அவனும் பணம் வேண்டுகிறபடியால் எண்ணற்ற பணமளிப்பேன்' என்றான். பிறகு குண்டதாரன் மனிதஉடல் அஸ்திரமாகையால் இவனுக்கு பூமி யளித்தாலும் நான் விரும்பேன். தர்மப்ரதாநமாக அவன் நடக்கும்படி வேண்டுகிறேன் என்றான். தர்ம பலமான ராஜ்யாதிகளையும் இவனுக்களிக்க, குண்டதாரன் விரும்பவில்லை. அதனால் தர்மத்திலேயே புத்தி யளிக்கப்பட்டது. காட்டில் தர்மாநுஷ்டாநம் செய்தான பிறகு குண்டதாரன் அங்கே வந்து உன் தவக்கண்ணாலே ராஜ்யம் ஆண்டு திண்டாடும் ஆயிரக்கணக்கான அரசர்களை நரகத்தில் பார் என்றான் அவர்கள் காமக்ரோதாதிகளுக்கு வசப்பட்டதால் பரிபவப்படுவதை ப்ராஹ்மணன் கண்டு எனக்கு நீர் செய்த உபகாரத்திற்கு என்றும் எனது நன்றி என்று புகழ்ந்தான். இதனின்று சில தார்மிக தேவதை பக்தனுக்கு அவன் விரும்பினாலும் தநமளிக்காதென்று தெரிகிறது ஈச்வரன் இப்படி ப்ரயோஜநாந்தரத்தைக் கொடுக்காமை ஒரு வழி. சிலர் முதலில் கேட்டிருந்தாலும் ஐச்வர்யத்திலுள்ள அல்பத்வ-அஸ்திரத்வாதி தோஷங்களை விவேகிக்க சக்தியளித்து அதுமூலம்

अर्थादि-विवेकத்தாலே இவன் தனக்கு अरुचिயை விளைவித்தும். सौभरि-कुचेलादिகளுக்குப் போலே சில भोगங்களைக் கொடுத்துத் தானே அலமந்துவிடப் பண்ணியும் விடுகையாலே மோக்ஷகாலம் குறித்து प्रपत्ति பண்ணினவனுக்கு அக்காலத்துக்குள்ளே प्रयोजनान्तरवैमुख्यம் பிறந்துவிடும். மற்றையவனுக்கும்

---

ஆசையை நிவ்ருத்தி செய்வது இரண்டாவது வழி. காமத்தில் நோக்குள்ள ஸௌபரியை ஐம்பது ராஜகந்யைகளை ஒரே ஸமயத்தில் யோகமஹிமையால் விவாஹம் செய்து கொண்டு போகத்தில் இழியச் செய்து அவரே அலமந்து போகும்படி அதாவது நிர்வேதப்பட்டு விடும்படி செய்தான். பணத்தில் ஆசை வைத்த குசேலரை வாசாமகோசரமான தநமளித்து முடிவில் அவரை அலமந்துவிடப் பண்ணினான் இப்படி அநுபவித்து விரக்தராக்குகை மூன்றாவது வழி. எந்த வழியிலும் தேஹாவஸாநத்தில் மோக்ஷத்திற்கு விரோதமில்லை, காலம் கோராமல் ப்ரபந்நராயிருந்து ப்ரயோஜநாந்தரத்திலே இழிந்திருந்தால் அவர்கள் செய்த ப்ரபலமான உபாயாந்தரங்களுக்குப் பலனை யருளிச்செய்கிறார் மற்றையவனுக்கும் இதி. தேஹாவஸாநத்தில் மோக்ஷம் கேட்டவன் தேஹாந்தரத்திலே அநுபவிக்கும் படியான பலனுக்காகும் உபாயத்தை அநுஷ்டிக்கமாட்டான். அப்படி ப்ரபலமாக फलान्तर இச்சையுள்ளவனுகில் உத்தரேச்சையாலே பூர்வேச்சை பாதிக்கப்படுவதால் ப்ரபத்தி பூர்த்தியில்லை. காலம் குறிக்காதே ப்ரபத்தி செய்தவன் போலே யாவான், இப்படி ப்ரபந்நனுக்கு பக்தியோக நிஷ்டனுக்குப் போலே ஏன் ப்ராரப்தாவஸாநத்திலேயே மோக்ஷமென்னக் கூடாதென்னில்—பக்தியோகத்திற்கு ப்ராரப்த கர்மநிவர்த்தந சக்தியிராமையால் அவ்வளவு விளம்பமானாலும் ப்ரபத்திக்கு அந்த சக்தியுமிருப்பதால் आर्तप्रपत्तिக்குப் போலே ஈச்வரன் தயையினால் அடுத்த க்ஷணத்திலும் மோக்ஷமளிக்கலாம். அப்படி அளிக்காமைக்குக் காரணம் இவனுக்கு இதர பலாநுபத்தில் ஆசையே யாம். அதனால் வைராக்யம் வரும்வரையில் மோக்ஷம் அளிப்பதில்லை. வைராக்யம் தேஹாவஸாநத்திற்குச் சில ஸம்வத்ஸரம் முன்பும் வரலாம். தேஹாந்தரம் வந்த பிறகும் வரலாம். இப்படியானல் 'सर्वां च यां सन्दधे ब्रह्मणेष रमते तस्मिन् उत जीर्णे शयाने। नैनं जहाति अहस्सु पूर्व्येषु என்கிற ச்ருதியில் பரமாத்மாவினிடம் ப்ரபத்தி செய்தவனை அவனுக்கு ஜரையும் (மூப்பும்) ரோகத்தினால் படுக்கையும் ஏற்பட்டால் அவனைப்பெற ஈச்வரன் ருசியுள்ளவனாகிறான் ஸம்ஸாரத்துக்கு அர்ஹமான நாள்களில் அவனுக்கு ஸம்பந்தம் வைப்பதில்லை யென்று சொன்னது விரோதிக்காதோ என்னில்—இது கால நிர்தேசத்துடன் ப்ரபந்நன் விஷயமாகும். அப்படி யல்லாத போது. यो वै स्वां देवतां अति यजते. प्रस्वायै देवतायै च्यवते न परां प्राप्नोति पापीयान् भवति என்று, ஏகாந்தியாயிருக்க வேண்டியவனாகி தனக்கான தேவதையை விட்டு தேவதாந்தரத்தை ஆராதிக்க இழிந்தவனுக்கு இரு தேவதையின் ஸம்பந்தமிராமல் நரகாதி ப்ரயத்தமான பாபம்

"अथोपायप्रलकोऽपि भुक्त्वा भोगान् अनामयान्। अन्तं विरक्तिमासाद्य विशते वैष्णवं पदम् ॥" என்கிறபடியே वैराग्यावधिये विलम्बமாயிருக்கும். देवतान्तरस्पर्शம் உண்டாயிற்றாகிலும ஸர்வேச்வரன் ஏதேனுமொரு நாளிலே श्रुत्युक्तமானபடியே பரமைகாந்திகளோடே சேர்த்து लज्जावधियாகத் திருத்தி இவனுடைய व्यभिचारத்தைத் தீர்க்கும். சிலர்க்கு देवतान्तरस्पर्शம் நிலைநிற்குமாகில் முன்பு उपायस्पर्शமில்லை, மேல் नरकादिகளும் உண்டென்று அறியலாம். இவனுக்கு भगवद्विषयத்தில் कृतांशம் என்றேனுமொரு நாள் उपायनिष्पत्तिயைப் பண்ணிக் कार्यकरமாம்.

மஹாவிச்வாஸம் பூர்ணமாகப் பிறந்து ப்ரபத்தி பண்ணினர்க்கு बुद्धि-दौर्बल्यமும் उपायान्तरप्रत्याशैயும் பிறவா(து). இவை பிறந்தவர்களுக்கு முன்பு

---

வருமென்றதாலும் 'ध्यायतेऽर्चयते योऽन्यं विष्णुलिङ्गमुपाश्रितः। कल्पकोटि शतेनापि गति-स्तस्य न विद्यते' ॥ என்று வைஷ்ணவ லக்ஷணம் பூண்டவன் தேவதாந்தர அர்ச்சனை செய்தால் பல கல்பகோடி காலமானாலும் அவனுக்கு கதியில்லையென்றதாலும் ஜந்மாந்தரத்திலாவது பாபபலனை யநுபவித்தாக வேண்டுமென்று தெரிவதால் ஜந்மாந்தரமும் உண்டு. தேவதாந்தர ஸம்பந்தமின்றி ஜந்மாந்தரத்தில் அநுபவிக்கும் பலனுக்காக உபாயாந்தரங்களைச் செய்தவனும் அதுபோல் ஜக்மாந்தரத்தில் अनामयान्—ரோகாதிகளால் ஒரு குறையுமேற்படாத भोगान् போகங்களையும் அநுபவித்து அதன் முடிவில் பூர்வ ப்ரபத்தி फलத்தினாலே வைராக்யத்தை அடைந்து பரமபதம் செல்கிறான். இப்படி தேவதாந்தர ஸம்பந்தமிராத ப்ரயோஜநப் பற்றுக்குப் பலன் இருப்பது போல் தேவதாந்தர ஸம்பந்தமுள்ளவனுக்கும் விளம்பித்து மோக்ஷமுண்டு. இவனையும் எம்பெருமான் விடுவதில்லை. ப்ரபந்நனுக்கு நித்யகர்மாநுஷ்டாநத்திலும் அந்தர்யாமியின் ஆராதனமே, தேவதாந்தர ஸம்பந்தமில்லை, மோக்ஷோபாயம் நிஷ்பந்நமாயிருப்பதால் வேறு பலனில் நசையுமிராததால்தேவதாந்தர ஸம்பந்தமும் வர்ஜிக்கப்பட்டிருக்கும். அவ்வாறின்றி அந்த ஸம்பந்தத்தில் பாதிவ்ரத்யஹாநியாய் வ்யபிசார தோஷமாம். அப்படியிருந்தாலும் ये तत्र ब्राह्मणाः संमर्शिनः...अलूक्षा धर्मकामाः स्युः என்ற பரமைகாந்திகளோடு ஸம்பந்தத்தை யுண்டுபண்ணி. ப்ராயச்சித்த பூர்வகமாக ஸ்வீகரிப்பதால் ப்ரபத்தி பலிக்கும். நீடித்த தேவதாந்தர ஸம்பந்தமானால் என்னவாமென்பதற்கு உத்தரம் சிலர்க்கு இதி. நரகாதிகளும் இதி. पापीयान् भवति என்று கீழே குறிக்கப்பட்டது. உபாய ஸ்பர்சமில்லை என்பதற்கு यथावத்தாக உபாயஸம்பந்தமில்லை என்று பொருள். ஏதோ நடந்த உபாயபாவனை नेहाभिक्रमनाशोऽस्ति என்கிற ந்யாயமாய் வீணாகாதென்கிறார் இவனுக்கு இதி. அஜ்ஞாத ஸுக்ருதாதிகளுக்கு மேலாக இது எப்பிறவியிலாவது ஒரு ஸமயம் கார்யம் செய்யும்.

இப்படி நிஷித்த ப்ரவ்ருத்தியுள்ளவருக்கும் காம்ய ப்ரவ்ருத்தி யுள்ளவருக்கும் பலன் விசாரிக்கப்பட்டது. மூன்றாவதான புத்திதௌர்பல்ய

பிறந்த விச்வாஸம் मन्दமாயிருக்கும். இவர்களையும் ஸர்வேச்வரன் महा-विश्वासावधियாகத் திருத்திப் पूर्णप्रपत्तिनिष्ठராக்கும்.

இவ் வைபரீத்யங்களுள் ஒன்றும்பிறவாதே நடந்தவர்களுக்கு विलम्बादिशङ्कै யுங் கூட இல்லை. இவர்களுக்கு इच्छावधि विलम्बம். இவர்கள் கோரி(வி)ன எல்லையில் மோக்ஷம் अविनाभूतம்.

இந்நிஷ்டையைப் பெற்ற இவ்வதிகாரி "கடைத்தலையிருந்து வாழுஞ்

---

மூலமான தோஷமுள்ள போது பலனை விசாரிககிறார் மஹாவிச்வாஸமிதி. புத்தி தௌர்பல்யமாவது விச்வாஸக் குறைவு. சாஸ்த்ரார்த்தத்தில் சரியான தெளிவால் ப்ரபத்தி காலத்தில் மஹாவிச்வாஸமுள்ளவனுக்கு அப்போது ஏற்பட்ட ஸம்ஸ்காரம் மரணம் வரும்வரையில் அழியவாகாதபடி திடமாயிருப்பதால் बुद्धिदौर्बल्यं எப்படி வருமென்னில்—மந்த விச்வாஸருக்கு வரலாம். விச்வாஸத்திலே மாந்த்யமாவது ஸம்சய ஸம்பவமென்பதல்ல. புருஷகாராதி விசேஷ பஞ்சகத்தை யறியாமல் முதலில் மூட பக்தியால் வந்த விச்வாஸமாகும் அது. அதன்ஸம்ஸ்காரமிருந்தாலும் புருஷகாராதிகளைத் தெளியாமையால் 'வேறுஏதாவதுசேர்ப்பதா, உபாயாந்தரத்தில் இழியவேண்டுமோஎன்கிறவிசாரத்தில் விருப்பம் வரலாம், விசேஷபஞ்சகத்தை மஹான்கள் மூலமாக அறிவித்து ஈச்வரன் அந்த दौर्बल्यத்தைப் போக்கும், முன் ப்ரபத்தியே பலனளிக்கும். இவ்வதிகாரத்தில் ஆழ்வான்விஷயமாக அருளப்போகிற விடத்தில் எம்பெருமானார்வார்த்தையைக் கேட்டு முதலிகள் தெளிந்து நிர்பரரானார்கள் என்பதிலிருந்தும் ஒருவிதமான சங்கை தீர்ந்து முன் ப்ரபத்தியால் பலன் தெரியவருமே. சிலருக்கு விச்வாஸம் பிற்காலத்தில் குன்றுமாகில் முன்னே மஹாவிச்வாஸமில்லை யாகையாலே ப்ரபத்தி நிஷ்பத்தியில்லை யென்னவேண்டும்.

இப்படி மூன்று விதமான வைபரீத்யங்களையும், அதனால் சிலருக்கே பலனில்லை யென்பதையும் கூறிவிட்டு, முதலில் தொடங்கின முக்யாதிகாரியைக்கொண்டு உபஸம்ஹாரம் செய்கிறார் இவ் விதி. விளம்பாதி என்கிற ஆதி பதத்தினால் ப்ராயச்சித்த க்ரஹணம். விளம்பமில்லை யென்றால் உடனே மோக்ஷமென்று நினைக்கவேண்டா என்கிறார் இவர்களுக்கு இதி. காலம் குறிக்காமல் ப்ரபந்நனுக்கு வைராக்யாவதி விளம்பமென்கிறாப் போலே காலம் குறித்த ப்ரபந்நனுக்கும் தேஹாவஸாநத்திற்குள் சிறிது முன்னோ பின்னோ மோக்ஷம் பெற இச்சை யுண்டானால் அது வரையிலே விளம்பமாகுமோ வென்ன, அஃதில்லை யென்பதற்காக இவர்கள் இதி. ப்ரபத்தியநுஷ்டாநகாலத்தில் குறித்த எல்லைக்கு மாறாய் அவ்வப்போது வரும் தனிஇச்சை கார்யகரமாகாதென்றபடி. இப்படி வைபரீத்யமுள்ளவருக்கும் இல்லாதார்க்கும் வாசியிருந்தாலும் மோக்ஷஹேதுவான ப்ரபத்தியைப் பெற்ற எல்லோரிடமும் மற்றவரைவிட அபிமாநம் அதிகமென்கிறார் இந்நிஷ்ட்டையை இதி. இது பொதுவாக இவர்கள்விஷய

சோம்பரை யுகத்தி'' என்கிறபடியே ச்ரிய:பதியான ஸர்வேச்வரனுக்கு सर्वदा अभिमतனாயிருக்கும்

இவன் திறத்தில் निरुपाधिकसर्वशेषियாய் निरुपाधिकस्वतन्त्रனாய் सत्यसङ्कल्पனு

---

த்தில் சொல்லப் போகும் அம்சத்திற்கு ஸாதகமாகத் தொடங்கும் வாக்யம். இந்த வாக்யத்தில் கடைத்தலை யென்ற திருமாலைப் பாசுரத்தை யெடுத்திருப்பதால் அது ஸர்வ ப்ரபந்ந விஷயமாகையால் இந்நிஷ்டையை யென்பதற்கு வைபரீத்யமிராத நிஷ்டையென்ற பொருளைவிட்டுப்பொதுவாக ப்ரபத்தி நிஷ்டை யென்கிற யோஜநாந்தரம் ஸாராஸ்வாதிநியில் செய்யப் பட்டது. உன் கடைத்தலை யென்பதற்கு உனது கோயில் வாசலிலே என்று பொருளானாலும் ப்ரபத்தி யென்பதிலே முடிவு ஸர்வஸம்மதம். கர்மயோகாதிகளைவிடக் கடையான உபாயம் ப்ரபத்தி. அல்லது கர்மயோகாதிகளிலிழிந்தவரைவிட ப்ரபந்நர் முன்னமே மோக்ஷத்திற்கு வருவதால் இவர்களே முதல்வாசலிலே நிற்பவரென்று கடைத்தலை யென்றதாம். கடையாவது—அந்தம்—முடிவு; கடைத்தலை யிருந்து—व्यवसायத்தில் இருந்து என்றதாய் மஹாவிச்வாஸ பூர்வக ப்ரபத்தி சொன்னதுமாம். உகத்தி—என்பதற்கு உகப்பிக்கிறாய் என்று பொருள். இது வினைமுற்று. இப்போது सर्वदाऽभिमतனாயிருக்கும் என்பதற்கு இவன் கால்பிடிக்க அவன் கைபிடித்து மஹிஷியைப் போலே ஸ்வீகரித்தபடியால் குற்றத்திற்காகச் சிறிது சீற்றமிருந்தாலும் சிக்ஷித்தாவது ரக்ஷிக்க வேண்டுமென்று ப்ரீதி நடமாடுவதால் எப்போதும் அபிமாநமுண்டென்று கருத்து. ஆகையால் ப்ரபத்தி பூர்த்தியானார் எல்லோருக்கும் மேல் சொன்னதெல்லாம உண்டு.

இனி ச்லோகத்தில் சொன்னபடி நிர்யாணத்தை விரித்துரைக்க வேண்டும். ஆனாலும் வைபரீத்யமுள்ளவருக்குப் போலே மற்றவருக்கும் விளம்பம் வேண்டுமென்கிற சங்கையைப் பரிஹரிக்கும் வ்யாஜமாய் சில விசேஷார்த்தங்களை முன்னே தெரிவிக்கிறார். இவன் திறத்தில்= இந்நிஷ்டையைப் பெற்ற அதிகாரி விஷயத்தில். எவ்வாறு சங்கை யென்னில்—அபராத மூலமான விளம்பமிராவிட்டாலும் இசைந்த ப்ராரப்த்தம் நீங்கலாக மற்ற ப்ராரப்த்தத்தையும் ஸஞ்சிதத்தையும் பூரணமாக எம்பெருமான் விலக்குவானாகில் இவனுக்கு ராத்ரி-க்ருஷ்ணபக்ஷ-தக்ஷிணாயநங்களில் தேஹாவஸாநம் நேர்ந்தால் உடனே மோக்ஷம் வாராதே. பக்தன்விஷயம் வேறு. மேலும் அந்திமகாலத்தில் எம்பெருமான்விஷயமாக அந்திம ஸ்ம்ருதி யிராவிட்டால் வேறு வஸ்துவின் ஸ்ம்ருதியினால் வேறிடம் செல்ல வேண்டியதாகுமே. அதனால் அந்திம ஸ்ம்ருதி வரவாகாத அதிகாரிக்கு அது வருவதற்காகச் சிறிதுஸம்ஸாரபந்தமிசைய வேண்டும், பல ப்ரபந்நர்கள் வேறு விஷயம் பேசிக்கொண்டே மரிக்கின்றனர், அவர்களுக்கு அத்தகைய அந்திம ஸ்ம்ருதி வரக்கூடுமோ, வந்திருந்தால் அவர்கள் செயலிலிருந்தே தெரியுமே—என்றவாறும். இதற்காக, 'பக்தன்விஷயத்திலேயுள்ள சாஸ்த்ர

மான ஸர்வேச்வரன் सर्वभयங்களுக்கும் காரணமான निग्रहसङ्कल्पத்தை "तदधिगम उत्तरपूर्वाघयोरश्लेषविनाशौ तद्व्यपदेशात्" என்கிறபடியே सद्वारकप्रपत्तिनिष्ठனுக்கு उपासनप्रारम्भத்திற்போலே प्रपत्तिवाक्योच्चारणத்தில் प्रथमक्षणத்திலே

---

ங்கள் இவனிடத்திலும் ப்ரவர்த்திப்பதால் ராத்ரி முதலான காலங்கள் தடையாகா; அந்திம ஸ்ம்ருதியும் தானே வரும்' 'என்றெல்லாம் உபபாதிக்கிறார் இங்கு. கீழே ஸஞ்சித கர்மநாசம் கூறப்பட்டுள்ளது. அதையும் பக்தியோகநிஷ்ட்டன்விஷயத்தில் போல் பிரித்தறிய வேண்டுமென்கிறார் முதலில், இவன் திறத்தில் என்பதற்கு நிக்ரஹஸங்கல்பத்தை என்றதில் அந்வயம், இவன் விஷயமான நிக்ரஹ ஸங்கல்பமாவது ஸஞ்சித ஸகல கர்ம फलानुभव ஸங்கல்பம். "तदधिगमे' இத்யாதி ப்ரஹ்ம ஸூத்ரம், तदधिगमे—தர்சநஸமாநாகார ஜ்ஞாநம் பெற்றவுடனே பக்தனுக்கு பகவத் ஸங்கல்பத்தால் ப்ராமாதிகமான उत्तराघाश्लेषமும் पूर्वाघनाशமும் ஏற்படுகின்றன. तद्व्यपदेशात्—இதை ப்ரமாணம் சொல்லி யிருப்பதால் என்று அதன் பொருள். तदधिगमे என்பதன் பொருள் உபாஸநாப்ராரம்பத்திலே என்றது. இந்த உபாஸநத்திற்கு ஆயுள்முடிவில் வரும் அந்திம ப்ரத்யயம் வரை ப்ரதிதிநம் ஆவ்ருத்தி யுண்டு. 'இப்படி அதன் பூர்த்தியில் விடுவிப்பேன்' என்று முதலில் ஸங்கல்பம். முடிந்த பிறகு விடுவித்தேனென்று ஸங்கல்பம். அதுபோல் ப்ரபந்நன்விஷயத்திலும் தேஹாவஸாந காலத்தில், 'விடுவித்தேன்' என்று ஸங்கல்ப்பமாம். ஆனால் ப்ரபத்திக்கு ஆவ்ருத்தி கிடையாது. இவனுக்கும் ப்ராரம்பத்தில் ஸங்கல்பம் செய்வதுண்டு. அது எப்போதென்பதை யறிவிக்கிறார் உச்சாரணத்தில் ப்ரதம க்ஷணத்திலே என்று ப்ரபத்தியே உபாயமாகையால் ஜ்ஞாந ஸ்வரூப ஸாங்க ப்ரபத்தி அநுஷ்டாந க்ஷணங்களில் எது ப்ரதம க்ஷணமோ அதில் என்று பொருளுரைப்பர். ப்ரபத்தி வாக்யோச்சாரணமென்று பூர்ண ப்ரபத்தி ப்ரயோகத்தைக் கூறில் तदुच्चारणाधिकरणक्षणமே அதாவது ப்ரபத்தி நிஷ்பத்தி க்ஷணமே ப்ரபந்நனுடைய ஸ்திதிகாலத்தில் ப்ரதம க்ஷணம்; அந்த க்ஷணத்தில் ஸங்கல்ப்பமென்பதுமாம். ப்ரபத்தியினுடைய அங்காங்கி அநுஷ்டாநத்தில் ப்ரபத்தி மந்த்ரோச்சாரணம் முதலாகையால் பூர்ண மந்த்ரோச்சாரணக்ஷணமே ப்ரதமக்ஷணம். ஐந்து அங்கங்களோடு ப்ரபத்யநுஷ்டாநம் அதன் மேல். உபாஸநாரம்பத்திற் போல் மந்த்ரோச்சாரணம் முடிந்தவுடன் அச்லேஷ விநாச ஸங்கல்பம். ஒருவன் மந்த்ரோச்சாரணமான பிறகு ப்ரபத்தி யநுஷ்டிக்க முடியாமற் போனாலும், मन्त्रस्य मुक्तिबीजं परिणतिवशतः कल्पते सत्फलाय என்று ந்யாஸ விம்சதியில் அருளிச்செய்தபடி பின் எப்போதாவது அநுஷ்டிக்கும் ப்ரபத்தியும் கார்யகரமாகுமென்றபடி. ப்ரபத்தி பூர்த்தியானாலும் விடுவித்தேன் என்கிற ஸங்கல்பம் தேஹாவஸாநத்திலேயே. ஹாநோபாயநங்கள் ஒரே ஸமயத்திலல்லவோ. இனி ப்ரபன்னனிடம் சிறப்பாக இவனுக்குப் போல் இவன்பரந்யாஸத்தில்

விலக்கி, இவனையும் இவனுடைய अनुबन्धिகளையும் நித்யஸூரிகள் கோவை யிலே கோத்தாலும் ஆவல் கெடாதே आश्रित-अपराधराशिகளில் உண்டது உருக்காட்டாதே வயிறுதாரியாய் अनुबन्धिகளுடைய बुद्धिपूर्वापराधங்களுக்கும் अनुतापादिகளாலே निस्तारம் பண்ணுவிக்கும்படிக்கு ஈடான अनुग्रहसङ्कल्पத்தைப் பண்ணி, "விண்ணுலகந்தருவானாய் விரைகின்றான்" என்கிறபடியே இவன் இசைந்த विलम्बத்துக்குத் தான் सानुशयனாய்த் त्वरिத்து. "இருள்தருமா ஞாலத்துளினிப் பிறவி யான் வேண்டேன்" என்றும், "மாயஞ் செய்யே

---

ளவர்களை விஷயமாக்கிக் கொண்டானோ அவர்களுக்கும் செய்யும் அநுக்ரஹத்தை யறிவிக்கிறார் இவனையும் இத்யாதியால். அவர்கள்விஷயத்திலும் இந்த ப்ரதமக்ஷண கார்ய ஸம்பந்தமுண்டு. ப்ரபந்நரான பிறகு தேஹந்யாஸம் வரையில் நடுவில் வரும் அபராதங்களை விலக்க முயற்சி செய்வதும் எல்லார்விஷயத்திலும் துல்யம், கோவையில்—கோஷ்டியில், கோத்தாலும்—சேர்த்தாலும், ஆவல் கெடாதே—ஆஸ்த்தை போகாமல். நித்யஸூரி துல்யமாக்கப் போவது போதுமென்று நிற்காமல் உத்தராகங்களுக்கும் நிவ்ருத்தி மார்க்கத்தை அநுக்ரஹிக்கிறானென்றபடி. அநுபந்திகளுக்கும் அவ்வநுக்ரஹம் செய்வதற்குக் காரணம் கூறப்படுகிறது ஆச்ரிதேத்யாதியால், நேராக ஆச்ரிதனான இவனுடைய அபராதங்களில் தான் உண்ட அம்சத்தால் த்ருப்தி யடையாமல், உரு காட்டாதே உண்டிருப்பது தெரியாதபடி வயிறுதாரியாய்=மேன்மேல் உண்ண ஆவலுள்ளவனாயிருப்பதால் அநுபந்திகளுடைய அபராதத்தையும் உண்ணப்பார்க்கிறான்,

இனி அந்திமதசையில் தேஹந்யாஸத்திற்கு முன்னே ப்ரபந்நனுக்கு அவன் உண்டுபண்ணும் நிலைகளை அறிவிக்கிறார் விண் இத்யாதியால். நண்ணினம் என்று பாசுரத்தின் ஆரம்பம். ஸர்வேச்வரன் பரமபதத்தை தரப் போகின்றவனாய் அந்திம தசையில் விரைகிறான். ஆழ்வார் ஆரும்பத்தில் திருவேங்கடமுடையானிடம் ப்ரபத்தி செய்து பிறகு ஏழாம்பத்தின் தொடக்கத்தில் இந்த்ரியங்களின் கொடுமைக்கஞ்சி ஸம்ஸாரத்தில் இருக்கவாகாதென்று த்வரித்தார், இவர் காலம் கோராமல் ப்ரபத்தி செய்து தமக்கு இவ் வைராக்யம் வந்தவுடன் அவன் மோக்ஷமளிப்பானென்று நினைத்தார் போலும். அவனோ, 'ஆயிரத்தில் இவை பத்தும்', 'என்று தொடங்கியதால் அக்கால விளம்பம் இசைந்தவருக்குத் இடையில் மோக்ஷம் எப்படி யளிப்பதென்று திருவாய்மொழியின் முடிவை எதிர்பார்த்தான். இப்போது அது முடிவுறும் ஸமயமாகையால் அவன் விரைவு தெரிவிக்கப்படுகிறது. தருவானாய் என்கிற சொல் இன்னும் சிறிது தாமதமுள்ளதை யறிவிக்கும் இருள் இதி. (10-6-1) அருள் பெறுவார் என்று பாசுரத் தொடக்கம் அஜ்ஞாநத்தைத் தருகின்ற இப்பெரும் பூமியில் பிறவி யெடுப்பதை இனி நான் வேண்டேன் என்று நெஞ்சுக்குச் சொல்லுகிறார். காலம் கோராமல் ப்ரபத்தி செய்தவரில் சிலருக்குப்போல் தமக்கு அது வாராமைக்கு நெஞ்சைத்

லென்னை'' என்றும் சொல்லுகிறபடியே இவனுக்கு இசைவை உண்டாக்கி, "உன் திருமார்வத்து மாலை நங்கை வாசஞ்செய் பூங்குழலாள் திருவாணை நின்னாணை'' என்று இவன்தான் த்வரித்து வளைக்கும்படி பண்ணி, ''சரண மாகுந் தன்தாளடைந்தார்க்கெல்லாம் மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்'' என்கிறபடியே இவன் கோருதலுக்கு ஈடாகப் **ப்ராரப்தசரீரா-வஸானத்திலே பரமபதப்ராப்தி**யுண்டாக்குவதாகக் கோலி,

பொன்னும் இரும்புமான விலங்குகள் போலே **பந்தக**ங்களான **பூர்வோத்தர-புண்யபாப**ங்களையும் **ப்ராரப்தகார்ய**மான கர்மத்தில் இவன் இசைந்த அம்சமொழிய மேலுள்ள கூற்றையும் ''போய பிழையும் புகுதருவானின்றனவுந் தீயினி

---

திருத்துகிறார். தேஹாவஸாநத்தில் மோக்ஷம் முன்னே கேட்டிருந்தால் அப்போதுண்டான வைராக்யம் இன்றும் அநுவர்த்திக்கிற தென்பதற் காக இவ்வாறு சொன்னதென்னல் வேண்டும். மாயமிதி. 10-10-2 என்னை ஏமாற்ற வேண்டா. உனது திருமார்பில் மாலை போல் விளங்கும் கல்யாண குண பூர்ணையாய், வாஸம் செய்—உன் திருமேனிக்கும் வாஸனை யளிக்கின்ற. பூங்குழலாள்–போக்யமான கூந்தலையுமுடையவளான, திரு= பெரியபிராட்டி யின் மேல் ஆணையிடுகிறேன்—நின் ஆணை—உன் மேலும் ஆணை, இவன் தான்—முன்னே விளம்பித்த இந்த ஜீவனே த்வரித்து–விரைந்து வளைக்கும் படி—சூழ்ந்து நிர்பந்திக்கும்படி, நிர்யாணத்திற்கு முன் பக்தனுக்குப் போல் இவனுக்கும் பரமபக்தி நிலையுண்டாகிற தென்றதாயிற்று, தேஹா வஸாநத்தில் மோக்ஷம் கேட்கும் ஸம்ப்ரதாயத்திற்கு ப்ரமாணம் காட்டுகிறார் சரணமாகும் இதி. (தி.9.10 5.) எல்லாமென்றதாலே தேஹாவஸாநத்திலே மோக்ஷம் கேட்பதே பெரும்பாலுமென்றறிவித்தார். கோலி= அமைத்து, அச்லேஷவிநாசங்கள் பாபத்திற்குப்போல் புண்யத்திற்குமாகும். இவ்வளவும் இவனுக்கும் பக்தனுக்கும் ஒத்திருந்தாலும் இவன் அநுபவிக்க விசையாத ஜந் மாந்தர ப்ராரப்தத்தையும் போக்குவது ப்ரபந்நனிடம் விசேஷம். இவற் றில் புண்யம் பொன்விலங்கு போலாகும். விலங்காயிராத போது பொன் எப்படி இஷ்டமாகுமோ, அப்படி காம்யமாய் பந்தகமாய் செய்யாமல் பகவத் ப்ரீதிக்காகச் செய்யும் போது புண்யமும் இஷ்டமாகுமென்பதால் இவ் வொத்துமையாம். ப்ராரப்த கார்யமான கர்மத்தில் இதி. ப்ராரப்த கர்ம என்று வழங்குவதற்கும், ஆரம்பிக்கப்பட்ட தன் கார்யத்தை யுடைய கர்ம என்ற பொருளே யாகும். **அநாரப்தகார்யே ஏவ து பூர்வே** என்று ஸூத்ரகாரர் ப்ரயோகித்தார். இனி ப்ராரப்த கர்ம என்பதற்குப் பலன் கொடுக்க ஆரம் பித்த கர்ம,என்று க்லிஷ்டமாகவும்பொருள்கொள்ளலாம்.கூற்றை-அம்சத்தை, போயபிழையும் இதி. திருப்பாவை 5. போய= போன; முன்னமே செய்யப் பட்ட, பிழையும்—பாபமும், புகுதருவா நின்றனவும். தரு என்பது துணை வினை. பொருளில்லை. புகு ஆ—புகும் நிலைமையில் இருப்பனவும்; கடந் தவை போக மற்றவையுமென்றபடி. தீயில்—அக்நியில் விழுந்த, தூசு

ற்றாசாகும்'' என்கிறபடியே முன்பே இவனோடு துவக்கறுத்துவைக்கை யாலே शरीरपातத்துக்கு நினைப்பிட்ட ஸமயம் வந்தவாறே,
''प्रियेषु स्वेषु सुकृतमप्रियेषु च दुष्कृतम् । विसृज्य ध्यानयोगेन ब्रह्माप्येति सनातनम् ॥''என்றும் ''நம்மன் போலே வீழ்த்தமுக்கும் நாட்டிலுள்ள பாவமெல்லாஞ் சும்மெனாதே கைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தனவே'' என்றும் स्मृतिक्கள் சொன்ன उपनिषदर्थத்தின்படியே இவனுக்கு अनुकूल-प्रतिकूलராயிருந்துள்ள இரண்டு சிற கிலும் இவன்பக்கல் आनुकूल्यप्रातिकूल्यங்களுக்குப் फलமாக அசல்பிளந்தே றிடுகிறதென்னும்படி பண்ணி,

---

ஆகும்= துணி போலாகும்—சாம்பலாகுமென்றபடி ப்ரபத்தியின் க்ஷணத் திலே; விலக்கப் போகிறேனென்று ஸங்கல்பித்தான்; இப்போது விலக்கி னேன் என்று. ஆகையால் முன்பு என்பதற்கு ப்ரபத்திகாலத்தில் என்ற பொருளாம், விலக்கியவற்றை சேர்க்குமிடம் கூறுகிறார் प्रियेषु இதி மநுஸ் ம்ருதி 7-79. பக்தன் स्वेषु-தன்னுடையவரான प्रियेषु—ஸ்நேஹிதர்களிட த்தில் புண்யத்தையும், விரோதிகளிடத்தில் பாபத்தையும் विसृज्य போக விட்டு த்யாநமென்கிற உபாயத்தினாலே ப்ரஹ்மத்தில் अप्येति—லயிக்கிறான். நம்மன் (5-4-3 பெரியாழ்வார் திருமொழி) நம்மன் போலே—யமனைப் போலே வீழ்த்து அமுக்கும்—கீழே தள்ளி அமுத்துகின்ற நாட்டிலுள்ள பாபம்—உலக ப்ரஸித்தமான புண்யபாபங்கள் யாவும் சும் எனாதே—நிச்சப்த மாய் கைவிட்டு ஓடி—விரைவில் ஓடி, தூறுகள்—மோக்ஷபலனுக்கான கார்யம் செய்யாதவரான, வீண்செடிகள் போன்ற ப்ரியர்கள் அப்ரியர் களிடம், பாய்ந்தன—விழுந்துவிட்டன; இனி இங்கே வராவென்றபடி. ஸமர்த்தாக்கள் = 'तस्य प्रिया ज्ञातयः सुकृतमुपयान्त', अप्रिया दुष्कृतम् என்கிற உபநிஷத் தின் அர்த்தத்தை நினைத்து வெளியிட்ட மநுவிஷ்ணுசித்தாதிகள். இரண்டு சிறகிலும்—இருதரத்தாரிலும், வேறொருவன் செய்த புண்ய பாபங்களின் பலனை வேறு சிலர் அனுபவிக்கக் கூடுமோ என்ன, உபநிஷத்தின் கருத் தைக் கூறுகிறார் இவன் பக்கலில் இதி. அநுகூலரிடம் தாம்செய்த அநுகூல வ்ருத்திக்கும் ப்ரதிகூலரிடம் தம்மாலானப்ரதிகூல வ்ருத்திக்கும் பலனையேஅவ ரவர்கள் அனுபவிக்கிறார்கள்; அப்பலன் யாது எவ்வளவு என்பதை யறிவிப் பன இந்த வாக்யங்கள். பக்தன் செய்த புண்யத்திற்கு எவ்வளவு பலமோ அவ்வளவு பலன் அநுகூலரிடமுள்ள ஆநுகூல்யத்திற்கு; இவன் செய்த பாபத்தின் பலனளவு ப்ராதிகூல்யத்திற்கு என்றதாம். அசல் பிளந்து ஏறிடுகிறது—இவனிடத்திலிருந்து பிளந்து வேறிடத்தில் சேர்கிறது. ஏறிடல்—அடைதலுமாம்—ஏறவிடுகிறதுமாம் இங்கே ஏறிட்டு என்னுமல் ஏறிடுகிறது இத்யாதி சொற் ப்ரயோகத்தாலே தானே யடைகிறது என்ற பொருளை, ''கைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தனவே'' என்பதற்கிணங்க ஸாரவிவரிணியின்படி கொள்ளலாம். ஸாரப்ரகாசிகையில் மரத்தோடு மரம் சேர்க்கும் போது ஓரங்களில் செதுக்கிச் சேர்த்தால் ஒன்றோடொன்று

"दिवा च शुक्लपक्षश्च उत्तरायणमेव च। मुमूर्षतां प्रशस्तानि" என்று स्मृतियிலும் ज्योतिश्शास्त्रத்தில் निर्याणप्रकरणத்திலும் फलान्तरप्रसक्तரையும் मोक्षोपायपूर्तियில்லாதாரையும் பற்றச் சொல்லும் கால நியமமின்றிக்கே, "निशि नेति चेन्न: सम्बन्धस्य यावद्देहभावित्वात्" என்றும், "अतश्चायनेऽपि दक्षिणे" என்றும் சொல்லுகிறபடியே मनुष्यपितृ-देवர்களுடைய பகல்களிலேயாதல் ராத்ரிகளிலேயாதல் தான் ஸங்கல்பித்த ஸமயத்திலே अप्रच्युतपूर्वसंस्कारमनोरथனும்படி பண்ணி,

சிறை கிடந்த ராஜகுமாரன்திறத்தில் प्रसन्नனான ராஜா விலங்கை

---

படிந்து சேர்வது போல் சேருகின்றனவென்று உரைக்கப்பட்டது. இப்படி வினைகள் விலகினவர்களுக்கு இரவு முதலான காலங்களும் தடையாகா என்கிறார் दिवेत्यादि. ஆநுசாஸநிகம். 241, 31 मुमूर्षतां-மரணமடைகின்றவர்களுக்கு दिवा—பகலும், சுக்லபக்ஷமும், உத்தராயணமும் ப்ரசஸ்தங்கள். நற்கதிக்குக் காரணமாகின்றன. विपरीतं तु गर्हितम्—இரவு, க்ருஷ்ணபக்ஷம் தக்ஷிணாயநம் என்ற காலங்கள் நிந்திக்கப்படும்; நற்கதிக்கு உதவா என்று சொல்லியிருப்பது மோக்ஷம் நீங்கலாக மற்ற பலன்களுக்காகப் போகின்றவர்கள்விஷயம். மோக்ஷோபாய பூர்த்தி யில்லாதவர்களுக்கும் இவை தடையாகும், இது ப்ரஹ்ம ஸூத்ரத்திலே நிர்ணயிக்கப்பட்டது. निशि இத்யாதிகள் ப்ரஹ்ம ஸூத்ரங்கள். निशि—இரவில் மரித்தவனுக்கு மோக்ஷமில்லை யென்னவேண்டா, கர்ம ஸம்பந்தமானது தேஹம் முடிகின்ற வரையில் தானே யிருக்கும். அது போன பிறகு வேறு ஜந்மம் வரக் காரணமில்லையே. अतश्च—ஆகையாலேயே தக்ஷிணாயநத்திலும் மரணம் தடையாகாது. मनुष्येति—மநுஷ்யருடைய பகல் ஸூர்யோதயத்தினின்று அஸ்தமயம் வரையில். பித்ருக்களுக்கு சுக்லபக்ஷம், தேவர்களுக்கு உத்தராயணம்; ஸூர்ய அஸ்தமயத்தினின்று உதயம் வரையில் மநுஷ்யருக்கு இரவு. பித்ருக்களுக்கு க்ருஷ்ணபக்ஷம் இரவு—தேவர்களுக்கு தக்ஷிணாயநம். அதிகரண ஸாராவளிக்கிணங்க இதே பொருளாம், ஹரிவம்சத்தில் பித்ருக்களுக்குப் பகல் கிருஷ்ணபக்ஷமெனவுளது. பித்ருக்களுக்கு அதே ஆராதந காலமாகையால் அது தகும் போலும், அது ப்ராமாணிகமாகில் இங்குள்ளதையும் ஒருபடி நிர்வஹிக்கலாம் விமர்சிக்க. இந்த நிஷித்த காலங்களில் தடையாகுமென்பது இவனுக்கு மோக்ஷத்தில் ஆசையைக் கெடுப்பதாலென்னவேண்டும். அதில்லை யென்கிறார், अप्रच्युतेति. ப்ரபத்தி பண்ணினது முதல் இவனுக்கு सर्वहितपुरुषार्थங்களிலே வந்த ஸமஸ்காரமும் மஹாவிச்வாஸாதி ஸம்ஸ்காரமும் மோக்ஷம் பெற மநோரதமும் கர்மஸம்பந்தம் விலகின காலத்தில் இவனுக்கு நழுவாமலே யிருக்கும். கத்யத்திலும் मदीययैव दययाऽतिप्रबुद्धः, अप्रच्युतपूर्वसंस्कारमनोरथः என்னப்பட்டது.

இனி இவனுக்கு நிர்யாணத்தை விவரிக்கப் போகிறவராய் ஸம்ஸாரத்தில் வைத்த ஸர்வேச்வரனே ப்ரீதியோடு அழைத்துச் செல்வதற்குத் தக்க த்ருஷ்டாந்தத்தை முன்னே கூறுகிறார் சிறை இத்யாதியால், விலங்கை

வெட்டிச் சிறைக்கூடத்தினின்றும் கொண்டு புறப்படுமாப் போலே प्रशस्ताप्रशस्तनियममறத் तत्कालोपस्थितமாயிருப்பதேசெனுமொரு शरीर-विश्लेषनिमित्तத்தை யுண்டாக்கி, वागादिகளான वाह्येन्द्रियங்கள் பத்தையும் மனஸ்ஸிலே சேர்த்து. இப்படிக் कर्मज्ञानेन्द्रियங்களெல்லாவற்றோடும் கூடின மனஸ்ஸை ப்ராணவாயுவோடே சேர்த்து, இப்படிப் பதினோர் इन्द्रियங்களோடும் கூடின ப்ராணவாயுவை ஜீவனோடே சேர்த்து, प्राणेन्द्रियसंयुक्तனை ஜீவனை निस्थूणक्षोभदर्शीயிலே स्थूलदेहத்தினின்றும் கடந்

---

வெட்டி என்பது. கீழே பொன்னும் இரு''பு'மான என்ற வாக்யத்தால் சொல்லப்பட்டதே யாகும். ராஜாவே கொண்டு புறப்படுகிறது இங்கு முக்யாம்சம் இங்குள்ள புறப்படு மா போலே என்ற சொல் அந்வயிக்கும்படி, 'ஈச்வரன் புறப்பட' என்ற சொல் இல்லாமையால் அச்சொல்லை, 'நிமித்தத்தை யுண்டாக்கி' என்றதோடு சேர்த்து உரைத்தனர். மேலே வெகு தூரத்தில், 'கொண்டு புறப்படும்படி' என்ற சொல் இருந்தாலும் அதோடு இது சேராது, அங்கே புறப்பாடு என்பதற்கு ஜீவனே கர்த்தா; ஈச்வரனல்லன், ஆக உரைகளின்படி இந்த த்ருஷ்டாந்த வாக்யத்தின் கருத்தாவது—குமாரனைக் கொண்டு புறப்படும் ராஜா அதற்கு நல்லதோ கெட்டதோ ஒரு நிமித்தத்தை யுண்டாக்குகிறாப் போலே இவனுக்கும் ஈச்வரன் ஒரு நிமித்தத்தை யுண்டாக்கி என்றதாம். இப்போதும் புறப்படுமாப் போலே உண்டாக்கி என்ற அந்வயம் ஸ்வரஸமாகாது. கீழே இரவு முதலான அசுபகாலத்தில் போனாலும் மோக்ஷமுண்டென்றார். பரீக்ஷித்தைப் பாம்பு கடித்தது போல் துர்மரண நிமித்தம் ஏற்பட்டாலும் மோக்ஷமுண்டென்பதற்காக प्रशस्ताप्रशस्त என்கிற வாக்யம் அவச்யமாயிற்று ஆயினும் சிறை கிடக்கும் ராஜகுமாரனுக்கு புறப்படுவதற்கான அசுபநிமித்தத்தை புத்தி பூர்வகமாக ராஜா உண்டுபண்ணுவது எதற்காக? த்ருஷ்டாந்தத்தில் இது முக்ய விஷயமாகத் தோன்றவில்லை. மேலும் சரீரவிச்லேஷ நிமித்தத்தை என்று பதமுள்ளதே யன்றி, நிமித்தத்தை என்று மட்டும் பதமில்லை. அதனால் த்ருஷ்டாந்தத்தில் இதை யிணைப்பது க்லிஷ்டமாகும். ஆதலால் புறப்படுமாப் போலே என்பதற்கு புறப்படுமாப் போலே யாகி என்று உரை கொண்டு எம்பெருமானே அழைத்துச்செல்வதைச் சொல்வதற்காகவே இதென்னலாம்.

இதன்மேல் वागादिகளான இத்யாதியால் அதிகார ச்லோகார்த்தம் விவரிக்கப்படுகிறது निस्थूणेति. निस्थूणமாவது முதுகில் வம்சமென்று பெயர் பெற்ற ஸ்த்தூலமான எலும்பு. அது முப்பிரியாயிருக்குமென்பர். அதனுடைய क्षोभदर्शीயாவது அதைக் கடையும் ஸமயம் ஸாரப்ரகாசிகையில் निस्थूணமாவது சரீரமென்னப்பட்டது. க்ருஹத்தைத் தாங்குவதற்கு இரு பக்கம் கால்கொண்ட நடுத்தூண் போல் மூன்று எலும்புகள் சரீரத்தைத் தாங்குகிறபடியால் அது निस्थूणமென்னப்படும். மநுஷ்யாதி சரீரத்திற்கு निस्थूणत्वं உண்டாகையால் இப் பத ப்ரயோகம். स्थूणा என்பதற்கு தூண்

யெடுத்த पञ्चभूतसूक्ष्मங்களோடே சேர்த்து, இப்படி इन्द्रिय-प्राण-भूतसूक्ष्म संयुक्तனான ஜீவனை निसर्गसौहार्दமுடைய हार्दனான தன் பக்கலிலே இளைப்பாற்றி, இப்படி स्थूलशरीरத்தினின்றும் विद्वदविद्वत्साधारणமான उत्क्रान्तिதனை நடத்தி.

"अनन्ता रश्मयस्तस्य दीपवद् यः स्थितो हृदि । सितासिताः कद्रुनीलाः कपिलाः पीतलोहिताः ॥ 1
ऊर्ध्वमेकः स्थितस्तेषां यो भित्त्वा सूर्यमण्डलम् । ब्रह्मलोकमतिक्रम्य तेन याति परां गतिम् ॥ 2
यदस्यान्यद् रश्मिशतमूर्ध्वमेव व्यवस्थितम् । तेन देवशरीराणि स धामानि प्रपद्यते ॥ 3
ये नैकरूपाश्चाधस्ताद्रश्मयोऽस्य मृदुप्रभाः । इह कर्मोपभोगाय तैः संसरति सोऽवशः ॥ 4

என்கிறபடியே கள்ளர் கொண்டு போம் வழிகள் போலே आत्मापहारिகள்

---

என்று பொருள். மரணகாலத்தில் ஜீவர்களுக்கு ஸ்தூல சரீரத்தைக் கடந்து சில ஸூக்ஷ்ம பூதங்களை யெடுத்து ஸூக்ஷ்ம சரீரமாக்குகிறான். ஸ்ருஷ்டியின் ஆதிகாலத்திலிருந்து ப்ரளயகாலம் வருமவரையில் ஜீவனுக்கு ஒரு ஸூக்ஷ்ம சரீரமுண்டென்பது ஸாங்க்யர்களின் ஸித்தாந்தம். அவ்வாறின்றி ஒவ்வொரு மரணகாலத்திலும் புதியதாக ஸூக்ஷ்மசரீர நிர்மாணம் என்று நமது ஸித்தாந்தம், ஜீவன் புறப்படுவதற்காக இவற்றை யெல்லாம் ஒன்று சேர்ப்பது அவச்யமானாலும் ஹ்ருதயத்திலே பரதேவதையின் அருகில் ஜீவன் சேர்வது எதற்காக என்பதற்கு உத்தரமாக இளைப்பாற்றி என்றருளினார். அதனால் இவனுக்கு களைப்புத்தீர்வதால், ப்ரயாணத்திற்கு அநுகூலமுண்டாகிறது. स्थूलशरीरத்தினின்றும் இசி भूत ஸூக்ஷ்மத்தில் ப்ரவேசிப்பிக்கும் போதே இவனுக்கு स्थूलशरीर संबन्धம் போயிற்று ஸூக்ஷ்ம சரீரத்திற்கு स्थूलசரீரஸம்பந்தம் ஜீவன் ப்ரஹ்மநாடியைக் கடக்கும் வரையிலிருக்கும்,

सरणेर्मुखे என்று ச்லோகத்தில் சொன்னதை விவரிக்கிறார் अनन्ता இதி. दीपवद्—தீபம் போலே ஹ்ருதயத்தில் எவன் இருக்கிறானோ, அந்த ஜீவனுக்கு தீபத்தினின்றும் ப்ரபைகள் போலே எண்ணற்ற நாடிகள் இருக்கின்றன. அவைகள் வெளுப்பும் கறுப்பும் ஊதாவும், நீலமும், பொன்னிறமும், மஞ்சளும், சிவப்புமாயிருக்கும். (ரக்தத்தின் நிறத்தைக் கொண்டு நாடிகளுக்குகு இந்நிறங்களென்று தஹரவித்யையில் ஓதப்பெற்றது) இந்த நாடிகளில் எது தலைவரையில் மேலோங்கி இருக்கிறதோ அதன் வாயிலாக ஸூர்யமண்டலத்தைப் பிளந்து நான்முகலோகம் சென்று பரமபதம் செல்வான். இந்த நாடி நீங்கலாக வேறு நூறு நாடிகள் மேல் நோக்கி யிருக்கின்றன. அவற்றின் வழியாக தேவர்களின் சரீரத்தையும் தேவலோகத்தையும் பெறுவான். ये-எந்த நாடிகள், अधस्तात्—கீழ் நோக்கியவையாய் नैकरूपाः-பலவகைகளாய் मृदुप्रभाः—ஒளி குறைவாக இவனுக்கு இருக்கின்றனவோ, அவை மூலமாக இவ்வுலகில் தனக்கதீனமாகாமல கர்ம பலாநுபவத்திற்காக ஜீவன் ஸம்ஸரிப்பான் என்றார் யாஜ்ஞவல்க்யர். (4-66-69). இங்குச் சொன்ன மார்க்கங்களில் ப்ரஹ்மநாடி தவிர மற்றவை கள்ளர்வழிகளுக்கு ஸமானமென்கிறார், தாங்கள் கொள்ளையிட்ட கள்ளர்கள்

स्वर्गनरकங்களுக்குப் போம் मार्गान्तरங்களுக்கு मुखங்களான नाडीविशेषங்களில் போகாதபடி வழி விலக்கி, अर्चिरादिमार्गத்துக்கு मुखமான शताधिकैயான ब्रह्म-नाडியிலே ப்ரவேசிப்பித்து, सूर्यकरावलम्बियாய்க் கொண்டு புறப்படும்படி பண்ணும்.

ஆழ்வான் अन्तिमदशैயிலே விடாயிலே நாக்கொட்டி எம்பெருமானார் திருவடிகளைப் பிடிக்க. இவர் அப்போது ஆழ்வான்செவியிலே द्वयத்தை அருளிச்செய்ய, 'இப் பேறு நமக்கு வருகை அரிது; நாமென் செய்யக் கடவோம?'' என்று அப்போது ஸேவித்திருந்த முதலிகள் கலங்க, இவர்களபிப்ராயத்தைத் திருவுள்ளம் பற்றி, ''ஆழ்வான்प्रकृति யறியீர்களோ? இவ்வவஸ்த்தையில் இவருக்கு இது கர்ப்பூரத்தையும் खण्डशर्करையையும் இட்டமாத்ரமன்றோ? நாமிது உபாயத்துக்குப் परिकरமாகச் செய்தோமல்

---

போகும் வழிகள் மற்றவர் போகாத வழியாம், அங்குப் போகிறவர்கள் சிறையில் அடைபடப் போகிறவர்களே யென்று ஸேவகர் அறியுமாப் போலே பகவச்சேஷமான ஆத்மாவைத் தமதாக நினைத்ததால் ஆத்மாபஹாரிகளா யிருக்கும் ஸம்ஸாரிகள் போகும் வழியே யாகும் ஸ்வர்க்க நரக மார்க்கங்கள். அங்கு ப்ரபந்நன் புகுந்தால் இவனை ஸம்ஸாரியாக நினைக்கும்படியாகும். இதற்காக அங்குப் புகாதபடி செய்கிறான். शताधिकैயான = நூற்றொன்றுப. நூறு நாடிகளுக்கு மேலான; ஸூர்ய கராவலம்பியாய் சாந்தோக்ய தஹர வித்யையில், 'ஸூர்ய கிரணங்கள் மேலுலகுக்கும், இவ்வுலகுக்கும் ஸம்பந்தப்பட்ட பெரிய மார்க்கம் போலே பரவியிருப்பதால் நாடிகளுக்கும் வேறு உலகத்திற்கும் ஸம்பந்தப்பட்ட கிரணம் வாயிலாக மேலே செல்லுகிறான்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் ப்ரஹ்ம நாடியிலிருந்து அர்ச்சிராதி மார்க்கம் செல்லுவதற்கு நடுவில் ஸூர்யகிரணமே வழியாகும். அவலம்பியாய்க் கொண்டு என்பதற்கு அவலம்பித்து என்று பொருள். 'புறப்படும்படி பண்ணும்' என்றவிடத்தில், 'கீழே இவன் திறத்தில்' என்றாரம்பித்த வாக்யத்தின் முடிவு. கீழே अप्रच्युतपूर्वसंस्कारमनोरथனும்படி பண்ணி என்று ஈச்வரன் தானாகவே ஸ்மரணம் வரச்செய்கிறான் என்றதை ஓர் ஐதிஹ்யத்தை எடுத்துக் காட்டி வரும் ஆக்ஷேபத்தைப் பரிஹரித்து அதன் கருத்தை உரைத்து விசதமாக்கத் தொடங்குகிறார் ஆழ்வான் இதி. இப்பேறு—இந்த லாபம். அதாவது நமது அந்திமகாலத்தில் ஆசார்யன் நம் செவியில் த்வயத்தை யுபதேசிப்பது. நாம் என் செய்யக் கடவோம் என்று அவர்கள் கலங்கியதால் அக்காலத்தில் த்வயோபதேசமும் அதன் மூலமான ஜ்ஞானமுமே ப்ரபத்திக்குத் துணையாகுமென்று அவர் நினைத்தனர். இவ்வவஸ்த்தையில் = விடாயினால் நாக்கொட்டியிருக்கும்போது. பச்சைக்கர்ப்பூரமும் கற்கண்டும் நாக்கில் பட்டால் ஜலம் பெருகுவது போல் இங்கு த்வயத்தைக் காதில் கேட்டவுடனே ஜலம் ஸ்ரவித்து நாக்கொட்டி

லோம்" என்று அருளிச்செய்ய முதலிகள் தெளிந்து நிர்பரரானார்கள். ஆகையால் "नष्टस्मृतिरपि परित्यजन् देहम्" என்றும், "स्थिते मनसि सुस्वस्थे" என்கிற ஶ்லோகத்வயத்திலும். "துப்புடையாரை யடைவதெல்லாம்" என்கிற பாட்டிலும் சொல்லுகிறபடியே ப்ரபந்நனுக்கு அந்திமஸ்ம்ருத்யாதிகளில் நிர்பந்தமில்லை.

"शरीरपातसमये तु केवलं मदीययैव दययाऽतिप्रबुद्धो मामेवावलोकयन् अप्रच्युतपूर्वसंस्कारमनोरथः" என்று அருளிச் செய்ததும் இவ் வசநங்களுக்கு அவிருத்தமாக ஒரு ப்ரகாரத்தாலே நிர்வாஹ்யம். எங்ஙனேயென்னில்; கத்யத்தில் அருளிச்செய்கிற அந்திமஸ்ம்ருதி இவ்வந்திமஸ்ம்ருதியையும் உபாயபலமாகக் கோரி(வி) ப்ரபந்நரானவர்களுக்கு வரக்கடவதென்று சில ஆசார்யர்கள் நிர்வஹிப்பர்கள்.

---

யிருப்பது நீங்கும். அதற்காக உபதேசித்தோம். ஆழ்வானுடைய ஸ்வபாவத்தைக் கண்டால் த்வயம் போலே கற்பூராதிகள் இஷ்டமாகாவென விளங்கும். அவர் அதிகமாக ஆசார்ய ப்ரவணரானபடியால் நம்முடைய தொனியோடு த்வயம் காதில் விழுந்தால் அவருக்கு போக்யமாகும். எப்போதுமே எம்பெருமானை நினைத்திருக்கும் ப்ரக்ருதியாலே அவருக்கு நாம் நினைப்பூட்ட வேண்டுமென்பதில்லை. ஈச்வரன் மூலமாகக் கடைசியில் ஸம்ஸ்காரம் கெடாமலிருப்பதுண்டானாலும் அதற்கு முன்னமேகூட அந்த நினைவே அவருக்கிருப்பது இஷ்டமாகையால் அதற்காக நாக்கொட்டுவதை நிறுத்த நாம் இது செய்ததென்றபடி. இப்படி தத்காலத்தில் த்வயோபதேசமோ பகவானுடைய ஸ்மரணமோ உபாய கோடியில் சேராதென்பதற்குச் சில வாக்யங்களை ப்ரமாணமாக்குகிறார் ஆகையால் இதி, नष्टेति. இந்த ச்லோகாரம்பம் यानसमकालமெனவாம். ஸ்த்தாந விசேஷாதிகாரத்தின் முடிவில் காண்க. स्थिते இதி. வராஹ சரமச்லோகம். இந்த ச்லோகத்தில் சக்தியுள்ள போது பகவானை நினைக்கச் சொல்லி மேல் ச்லோகத்தில் 'ततस्तं म्रियमाणं तु काष्ठपाषाणसन्निभम्। अहं स्मरामि' என்று இவன் நினைக்காமலிருந்தாலும் நான் அவனை நினைத்து அழைத்துப் போகிறேன் என்றதால் ப்ரபந்நனுக்கு அப்போது நினைவு வேண்டாமென்று தெரிகிறது. துப்பு இதி. பெரியாழ்வார் திருமொழி 4-10-1 ரக்ஷிக்க ஸாமர்த்யமுடையவரை யடைவது சோர்ந்திருக்கும் போது அவர் துணை யாவரென்றே=காப்பாரென்பதற்காகவே, பலவீனமான தசை என்னை நலியும் போது நானுன்னை நினைக்க முடியாது 'அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தேன், என்கிறார் இதில். இதனால் அந்திம காலத்தில் நாம் நினைக்க வேண்டா என்று தெரிகிறது. இப்படி வசநமும் பாஷ்யகாரர் ஐகிஹ்யமுமிருக்க अप्रच्युतपूर्वसंस्कारमनोरथः என்ற அவரது கத்யவாக்யத்தை ஆதாரமாகக் கொண்டு கீழே ஸம்ஸ்காரமிருப்பதாகச் சொன்னது எங்ஙனே சேரும். ஆனால் கத்யத்திற்கு கதி என்ன எனில்—அங்கே परभक्त्यादिகளைக் கேட்டது போல் அந்திம ஸ்ம்ருதியும் தனக்கு வேண்டுமென்று இவன் கேட்டிருந்தால் இவனுக்கு அதை ஸாதித்துக் கொடுப்பானென்றதாகும். எல்லோருக்கும் அந்திம

இப்படியாகில் ஒரு சரீரத்திலும் अन्तिमமான प्रत्ययம் நிர்விஷயமாயிராமை யால் இது भगवद्व्यतिरिक्तविषयத்திலே போமாகில் यं यं वाऽपि स्मरन् भावम्" என் கிற கணக்கிலே विपरीतफलமாம். ஆனபின்பு गद्यத்தில் அருளிச்செய்தபடியே स्वतन्त्रप्रपत्तिनिष्ठனுக்கு भगवद्विषयத்தில் अन्तिमप्रत्ययம் அவச்யம் வரும். "नष्टस्मृति-रपि" इत्यादिகள் श्रीगीतैயில் अष्टमाध्यायத்திலும், "यं योगिनः प्राणवियोगकाले यत्नेन चित्ते विनिवेशयन्ति' इत्यादिகளிலும் स्वयत्नसाध्यமாக விதித்த கட்டளையிலே உபாய மாக अन्तिमस्मृति வேண்டாவென்கின்றன என்று சில आचार्यர்கள் அநுஸந்தி ப்பார்கள். "केवलं मदीययैव दयया" என்றிறே இங்கு அருளிச்செய்தது.

---

ஸ்ம்ருதி வேண்டுமென்பதில்லை. இப்படி ஆழ்வான் என்று தொடங்கி வரக்கடவதென்ற வரையில் சில வாசார்யர்கள் ஐதிஹ்யாதிகளைக் கொண்டு गद्य வாக்ய நிர்வாஹம் செய்ததைக் கூறினர். மற்ற ஆசார்யர்கள் நிர்வாஹ க்ரமத்தை யறிவிப்பதற்காக இந்த நிர்வாஹத்தில் மேலே குறை கூறுகிறார்.

இப்படியாகில் இதி விழித்துக் கொண்டிருப்பவனுக்கு உறக்கத்துக்குப் பூர்வக்ஷணத்தில் வரும் ஜ்ஞாநம் அந்திம ஜ்ஞாநமாகிறுப் போலே பிறந் திருப்பவனுக்கு மரணத்திற்கு முன் முடிவாக வரும் ஜ்ஞாநம் அந்திம ஜ்ஞாநமாகும். அது ஜ்ஞாநமாகையால் ஏதேனுமொன்றை விஷயீகரித்தே வரும். எம்பெருமானை விட்டு வேறு விஷயமானால் கீதையின்படியாம் (8-9). மரணகாலத்தில் எந்த வஸ்துவை நினைக்கிறானோ அவ்வஸ்துதன்மையை யடைகிறான்; அதனால், 'என் தன்மை வேண்டுமாகில் என்னையே அப் போது நினைக்கும்படி வேறொன்றில் நினைவு போகாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும்' என்றானே பகவான். இதனால் கடைசி நினைவு எம்பெருமான் விஷயமாக இருந்தாக வேண்டும். அதனால் கத்யத்தில் கடைசியில் அவன் ஸ்மரணம் வருமென்றருளினர். கீழெடுத்த வாக்யங்களுக்கு நிர்வாஹமும் கத்யத்திலேயே मदीययैव दयया என்றதாலே காட்டப்பட்டது. அதாவது கீதையில் 8வது அத்யாயத்தில் 'आस्थितो योगधारणाम्' என்று யோக மூல மான ஸ்மரணம் வேண்டுமென்றது, மரணகாலத்தில் எவனை யோகிகள் ப்ரயத்னப்பட்டு மனத்தில் வைக்கிறார்களோ, அந்தக் கண்ணனைக் கண்ணால் கண்டுகொண்டே भीष्मர் ப்ராணனை விட்டுப் பலனைப் பெற்றார். 'स तं पुर-स्तात् हरिमीक्षमाणः प्राणान् जहौ प्राप्तफलो हि भीष्मः சாந்திபர்வம் (46-139). இந்த வாக்யத்திலும் யோகிகள் ப்ரயத்ந பூர்வகமாக த்யாநம் செய்ய வேண்டுமென்று முடிவில் அறிவிக்கப்பட்டது. யோகிகளுக்கு அங்குச் சொன்ன கணக்கிலே ப்ரபந்நனுக்கும் தனது ப்ரயத்நத்தாலே அந்திம ஸ்ம்ருதி ஸாதிக்கப்படுவது இல்லை. अहं स्मरामि என்றபடி நானே அந்த ஸமயம் மறவாமலிருந்து வேறு காரணமின்றி தயையினாலேயே அந்திம ஸ்மரணத்தை உண்டு பண்ணுவேன் ஆகையினால் அந்த ஸ்மரணம் வேறு விஷயமாகில் எம்பெருமானைப் பெறத் தடையாகுமே யென்று அஞ்ச வேண்டா. அதனாலேயே ஐதிஹ்யத்தில் எம்பெருமானார் 'உபாயத்துக்குப்

अन्तिमस्मृतियாவது—वागादिகள் உபசாந்தமானல் மநஸ்ஸு உபசாந்த மாவதற்கு முன்பே பிறப்பதொரு ஸ்ம்ருதி. இது அருகிருந்தார்க்குத் தெரி யாது. "दृश्यते हि वागिन्द्रिये उपरतेऽपि मनःप्रवृत्तः" என்கிற भाष्यமும் ஏதேனும் ஒரு லிங்கத்தாலே ஒரு मनःप्रवृत्ति இவனுக்கு உண்டென்று அறிகிறவள

---

பரிகரமாகச் செய்தோமல்லோம்' என்றது. நமது ப்ரயத்நமின்றியே தானே ஸ்மரணம் வரக்கூடியதாகையால் அதற்காக த்வயோபதேசம் வேண்டியதில்லை யென்றபடி.

அந்திம ஜ்ஞாநம் பீஷ்மருக்கு வந்த க்ருஷ்ண ப்ரத்யக்ஷம் போலே வேறு அநுபவரூபமுமாகலாமே அந்திம ஸ்ம்ருதி யென்று ஏன் சொல்லவேண்டும். உறக்கத்திற்போல் மரணத்திலும் சில நாழிகை அஜ்ஞாநமேற்பட்டப்பிறகே ஜ்ஞாநம் வருகிறது ஆகையினுல் அந்திம ஜ்ஞாநமுண்டு. அது ஸ்மரணமே யென்பதற்குக் காரணம என்னவென அருளிச்செய்கிருர் वागादिகள் இதி. இப்படி அந்திம ஸ்ம்ருதி யுண்டாகில் அது இவனுடைய செயலாலே பிறர் காணும்படி யாகுமே; அப்படிக் காணுமையால் பல ப்ரபந்நருக்கு பகவத் விஷயமாக அந்திம ஸ்ம்ருதி கிடையாதென்று முன் செய்துள்ள ஆக்ஷேபத்திற்கும் இது பரிஹாரமாகும். இந்த்ரியங்கள் மனதில் சேர்ந்த பிறகு மனது ப்ராணனிற் சேர்ந்து நிர்வ்யாபாரமாவதற்கு முன்னே வரும் ஜ்ஞாநம் ப்ரத்யக்ஷ ஜ்ஞாநமாகாது. ஒரே ஜ்ஞாநமாகையால் ஸம்ஸ்கார மூலமான ஜ்ஞாநமாகையே தகும். அப்போது வெளி இந்த்ரியங்களுக்கு வ்யாபாரமில்லை யாகையால் அருகிலிருப்பவர் அவன் சேஷ்டாதிகளைக் கொண்டு அதை ஊஹிக்கவாகாது. சிலர் மரணகாலத்தில் நாராயணுதி சப்தங்களைச் சொல்லுகிருர்களே என்னில்—வெளி இந்த்ரியங்கள் வேலை செய்வதற்குக் காரணமான அது அந்திம ஜ்ஞாநமாகாது. அந்திம ஜ்ஞாந த்திற்கு மனது மட்டும் போதுமே. அந்த ஸமயத்தில் அது வேறு விஷய மானல் ஸம்ஸாரமே. அதற்கு முன்னும் அதே விஷயமான ஜ்ஞாநம் तद्भावभावितः என்னும் ந்யாயமாய் அந்திம ஸ்ம்ருதிக்கு உபகாரகமாம த்தனை யென்றபடி,

அருகிலிருந்தார்க்குத் தெரியாதாகில் தெரியுமென்று அருளிய ஸ்ரீபாஷ்ய ஸூக்தி (4-2-1.) விரோதிக்கும் என்பதைப் பரிஹரிக்கிருர் दृश्यते इति. வாக்கு உபசாந்தமான பிறகும் மனத்தின் ப்ரவ்ருத்தி காணப்படுகிறதே யென்று பாஷ்யார்த்தம். இது சேருமாவென்னில்—இந்த ஸூக்தி வந்த தற்குக் காரணத்தை முதலில் கேண்மின்—'वाङ्मनसि दर्शनात् शब्दाच्च' என்றது ஸூத்ரம். மரணகாலத்தில் वाक् मनसि संपद्यते என்கிற வசநத்திற்கு வாகிந் த்ரிய வ்யாபாரம் மனத்தில் லயிக்கிறதென்று பூர்வபக்ஷியின் பொருள். ஸித்தாந்தத்தில் वागिन्द्रियமே வ்யாபாரமின்றி மனத்தில் சேர்ந்து விடுகிற தென்று பொருள். இதன் மேல் கேள்வி—வெளியிந்த்ரியங்களுடைய வ்யா பாரம் மனதிற்கு அதீநமாகையால் அந்த வ்யாபாரம் மனத்தில் லயிக்கிற

வைச் சொல்லுகிறது. தனக்குச் சில व्याध्याद्यवस्थैகளிலே கண்ட படியைச்

---

தென்பது தகும். இந்த்ரியமே சேருகிறதென்றால் அது தன்னைப் போல் இந்த்ரியமாயிருக்கிற மனத்தில் ஏன் சேரவேண்டும்? மனமுள்பட எல்லாம் ப்ராணவாயுவுக்கதீநமாகையால் மனது போலே மற்றவையும் நேராக ப்ராணனிலேயே சேரலாமே. ஆகையால் ஒரே ஸமயத்தில் வாக்குக்கும் மனத்துக்கும் ப்ராணனில் சேர்க்கையாம் என்றவாறு. இதற்கு ஸமாதாநம் இந்த பாஷ்யத்தில். வாக்கு உபசாந்தமான பிறகும் மநோவ்யாபாரம் தெரிகிற படியால் வாக்கு மனதில் சேராமல் இரண்டும் ஒரே ஸமயம் ப்ராணனில் சேருகிறதென்பது தகாதென்று. ஆனாலும் தெரியாதென்று சொன்னதும், தெரிகிறதென்ற பாஷ்யமும் விரோதிக்காதோ வென்னில், அந்த பாஷ்யத்தில் वागिन्द्रिये என்று ஓர் இந்த்ரியத்தை மட்டும் சொல்லியிருப்பதால் சில இந்த்ரியம் சாந்தமாகாமலிருப்பதால் மந:ப்ரவ்ருத்தி தெரியலாம். எல்லா இந்த்ரியங்களும் மனத்தில் சேருவதென்பது மேல் ஸூத்ரத்திலேயே முடிவாகத் தேறும். இங்கே நாம் தெரியாதென்று சொன்னது மற்ற இந்த்ரியங்களும் சாந்தமான ஸமயத்தில். ஆகையால் அதோடு விரோதமில்லை. ஆளவந்தார் திருவாய்மலர்ந்தருளமாட்டாமே, மூன்று விரல்களை மடித்து கொண்டு தம் மன ப்ரவ்ருத்தியை அறிவித்தனரே, ஆனாலும், விரல் மடங்கியது தானே காணப்பட்டது. அவருடைய மநோவ்யாபாரத்தைக் கண்ணால் காணவில்லையே என்னில்—மநோவ்யாபாரம் எப்பொழுதுமே கண்ணால் காணவாகாது அநுமாநத்தால் ஊஹிப்பதையே दृश्यते—என்றருளினர். ஆக வாகிந்த்ரியம் சாந்தமான பிறகு மனோவ்யாபார மிருப்பதால் அதுவும் மனதும் ப்ராணனிலேயே சேரலாமே என்னலாகாதென்று பாஷ்யத்தில் சொன்னது. இனி दृश्यते என்று ப்ரத்யக்ஷத்தையே சொன்னாரென்றும் நிர்வஹிக்கலாமென்கிறார் தனக்கு இதி. வெளியிந்த்ரியங்கள் எல்லாம் நிர்வ்யாபாரமாக விருக்கும் போதும் இது கூடும். व्याध्यादि என்கிற ஆதி பதத்தால் யோக தசையையும் கொள்ளலாம் வ்யாதி விசேஷத்தில் வெளியிந்த்ரியங்களெல்லாம் ஓய்ந்ததால் மனத்தில் சிந்தித்ததை அப்போது வெளியிடமாட்டாமல். வ்யாதி நீங்கிய பிறகு தான் முன் சிந்தித்ததைச் சொல்லுகிறபடியால் அப்போது அவனுக்கு அது ப்ரத்யக்ஷந்தானே. இப்போது மனப்ரவ்ருத்தி யென்பதற்கு மநோவ்யாபார மூலமான धर्मभूतज्ञानावस्थै பொருள்; மனோவ்யாபாரமே யன்று: அவனவன்மநோவ்யாபாரங் கூட அவனவனுக்கு ப்ரத்யக்ஷமன்றோ. ஆக ஸூத்ரத்தில் दर्शनात् என்பது அநுமாநமோ ப்ரத்யக்ஷமோ ஆகலாம். சப்த மூலமான ஜ்ஞாநம் ஸூத்ரத்தில் शब्दात् என்றே சொல்லப்படும். எல்லா இந்த்ரியங்களும் நிர்வ்யாபாரமாயிருக்கும் போது மனதுக்கு வ்யாபாரத்தை இசைய வேண்டாமே யென்று கேட்கலாகாதென்று இவ்வளவால் அறிவித்தபடி. ஆனாலும் மனதிற்கு அப்போது வ்யாபாரமிருந்தே யாகவேண்டுமென்பதென்? சிலருக்கு

சொல்லுகிறதாகவுமாம்.

ஆனபின்பு भगवद्विषयத்தில் अन्तिमस्मृति முகராகிறவர்க்கும் மோக்ஷம் கொடுககிறவற்கும் தெரியுமித்தனே, இதுக்கு अनन्तरம் योगிகளோடும் अयोगिகளோடும் வாசி யற हार्द्दனான பரமாத்மாவின் பக்கலிலே விச்ரமிக்குமளவும் सुषुप्तितुल्यமாயிருக்கும். இவ் अवस्थैயைப் பற்ற "काष्ठपाषाण- सन्निभम्" "नष्टस्मृतिश्च" என்றும், "நினைக்கமாட்டேன்" என்றும் சொல்லுகிறதென்றால், प्रपन्नाधिकारिக்கு விசேஷித்து ஓரதிசயம் சொல்லிற்றாகாது,

இதுக்குமேல் "मत्तः स्मृतिर्ज्ञानमपोहनं च" என்கிற प्राज्ञன் உணர்த்த तत्प्रकाशित-

---

ஸகலேந்த்ரிய வ்யாபார காலத்திலேயே அந்திம ஜ்ஞானமாய் பிறகு மனது நிர்வ்யாபாரமாகவும் இருக்கலாமே யென்னில்—யோகிகள் மரணகாலத்தில் யோகம் செய்து எம்பெருமானை நினைக்கிறபடியாலும், 'यं यं वापि स्मरन् भावं என்று அந்திம ஜ்ஞானத்தை ஸ்ம்ருதியாகச் சொன்னபடியாலும், பீஷ்மருக்கு வந்த வெளிப்ரத்யக்ஷமும் அவருக்கு யோக மூலமாக வரும் அந்திம ஸ்ம்ருதிக்கு அநாயாஸமாக ஸாதகமாயிற்றென்று கொள்ளலாமாகையாலும் ப்ராயிகமாக மனோவ்யாபாரத்தைக் கொள்வதே ந்யாயமாகும் ஏதேனும் அபவாதம் இதற்கிருக்குமென்னில் இப்படியும் ஸ்ம்ருதி யுண்டென்பதே போதும்.

ப்ரக்ருத விஷயத்தை உபஸம்ஹரிக்கிறார் ஆனபின்பு. இதி ப்ரபந்நனுக்கு அந்திம ஸ்ம்ருதி யிருந்தால் அது நமக்குத் தெரியுமே என்று கேட்டது தகாது, அது நமக்குத் தெரிய ந்யாயமில்லை, பாஷ்யகாரர் अप्रच्युत संस्कार என்றது எல்லா ப்ரபந்நருக்கும் சேரலாம் மரணகாலத்தில் ஸ்மரிக்காத ப்ரபந்நனே யில்லை யென்றதாயிற்று. இந்த ஸ்ம்ருதிக்கு அந்திமத்வத்தை ஸ்தாபிப்பதற்காகப் பிறகு சில நாழிகை உறக்கத்திற் போலே ஜ்ஞானத் தொடர்ச்சி யில்லாமையை யறிவிக்கிறார் இதுக்கு என்ற வாக்யத்தால். விச்ரமிக்குமளவும்= இளைப்பாறி யிருக்கிற வரையில், ஸுஷுப்தி துல்யமென்றதாலே உறங்கினவன் மீண்டும் விழித்தாலும் உறக்கத்திற்கு முன்னான ஜ்ஞானத்தை அந்திம ஜ்ஞானமென்றாற் போலே நாடி வாயிலாகப் புறப்படும் போது மீண்டும் பகவத் ஸ்ம்ருதி யிருந்தாலும் முன் ஸ்ம்ருதியை அந்திம ஸ்ம்ருதி யென்பதில் விரோதமில்லை யென்றதாயிற்று. இவ்வளவால் नष्टस्मृतिः இத்யாதி வாக்யத்திற்கு ஸ்மரணமே யில்லை யென்ற பொருளை விட்டு, தன் ப்ரயத்நத்தால் ஸாதிக்கப்படும் நினைவு இல்லை யென்று அறிவித்ததாம். ஏன் இந்த ப்ரயாஸை? நஷ்டஸ்ம்ருதி: என்றது அந்திம ஸ்ம்ருதிக்குப் பிறகு எல்லாம் ஒன்று சேர்ந்து எம்பெருமானிடம் விச்ரமிக்கும் போது நினைவற்றிருக்கிறானென்பதையே சொல்லலாமே யென்று கேட்டு உத்தரம் கூறுகிறார் இவ்வவஸ்த்தை யென்று, இந்த நிலை பக்தனுக்கும் துல்யமாகையால் க்லிஷ்டமாவதால் முன்சொன்ன பொருளே தகுமெனறபடி. मत्त இதி கீதை 15.15. ஜீவனுக்கு நினைவோ அநுபவமோ மறதியோ விவேசந சக்தியோ எல்லாம் என்னால் என்றான் பகவான்,

த்வாரத்தைக்கொண்டு ப்ரஹ்மநாடியிலே ப்ரவேசித்தால் பின்பு காலதத்வமுள்ள தனையும் ஒரு பகலாயுணர்த்தியே யாம்.

நன்னிலமாமது நற்பகலாமது நன்னிமித்த
மென்னலுமாமது யாதானுமாமங்கடியவர்க்கு
மின்னிலைமேனி விடும் பயணத்து விலக்கிலதோர்
நன்னிலையா நடுநாடி வழிக்கு நடை பெறவே. (27)

---

அதனால் ஸூத்ரகாரர் 'तदोकोऽग्र' என்ற ஸூத்ரத்தில் तत्प्रकाशितद्वारः என்று ஹார்தனை எம்பெருமானாலே அநுக்ரஹிக்கப்பட்டு அவனால் அறிவிக்கப் பட்ட வழியை யுடையனாய் என்றருளினார். ஒரு பகலாய். 'सकृद्दिवा हैवास्मै भवति 'सकृद्विभातो ह्येष ब्रह्मलोकः' என்றபடி ஒரே பகலான பரமபதம் செல்பவ னுக்கு வழியிலும் अपि नक्तं अहरेवाभिनिष्पद्यते என்று இரவும் பகலாகுமென்றதால் இருளுக்கே அவகாசமில்லை யென்றபடி. ஜ்ஞாநசூன்யமாயிருக்கைக்கும் இடமில்லை யென்கிறார் உணர்த்தியே ஆம். நாடிப்ரவேசகாலத்தில் வந்த உணர்த்தி மேன்மேல் வளருமே யல்லது குறையாதென்றபடி.

தேச கால நிமித்தகுணதோஷங்கள் இவன்விஷயத்தில் கார்யகரமாகா. ப்ரஹ்மநாடிப்ரவேசமே என்ற அதிகாரார்த்தத்தை ஸங்க்ரஹிக்கிறார் நன்னில மிதி. அடியவர்க்கு—அடிமை செய்யப்போம் முமுக்ஷுக்களுக்கு விலக்கு இலது—தேசகால நிமித்தங்களால் விலக்கப்படாத; இது நாடிக்கு விசே ஷணம். எல்லா முமுக்ஷுக்களுக்கும் பொதுவாகையால் ஒருவருக்கும் விலக்கப்படாத என்றதுமாம். இதனால் ப்ரபந்நருக்கும் இதே வழி யென்ற தாயிற்று. கைவல்ய-வஸுபத ப்ராப்த்யாதியைப் பெற்றுப் பிறகு முக்தி யென்கிற க்ரமமுக்தியிலும் விலக்கப்படாததாம் இது. அப்படி யிருந்தும் பீஷ்மர் உத்தராயண ப்ரதீக்ஷை செய்தது தாம் ஸ்வச்சந்த மரணர் என் பதைக் கொண்டாம். பித்ருலோகத்திலுள்ள தகப்பனார், வந்து நீட்டின கையில் கொடாமே பூமியில் பிண்டம் வைத்த பீஷ்மரைப் பார்த்துப் பெரு மகிழ்ச்சியுடன். உனக்கு மரணம் நீ நினைப்பதற்கு முன்னே வராதென்று அனுக்ரஹித்தாரென ஹரிவம்சத்திலுளது. இப்படிப்பட்ட, ஓர்=ஒப்பற்ற நல் நிலை ஆம்— நன்றாக நிலைத்த, நடு நாடி—மத்யம நாடியான ஸுஷும்நா நாடியோடு ஸம்பந்தப்பட்ட வழிக்கு—அர்ச்சிராதி மார்க்கத்திற்கான நடை பெற—ஸஞ்சாரம் செய்வதற்காக மின் நிலை—மின்னலுடைய ஸ்வ பாவமுடைய=க்ஷணிகமான. மேனி—சரீரத்தை, விடும் பயணத்து—விடுகை மூலமாகப் புறப்படுவதற்கு ஸம்பந்தப்பட்ட, அங்கு—தேசகால நிமித்தங் களிலே. யாதானும் ஆம்—எதுவாயிருக்குமோ அது—அந்த தேசம் நன் நிலம் ஆம்-சுபமே வருகிறபடியால் நல்ல தேசமாகும். அது அந்தக் காலம் நல்பகல் ஆம். அது அந்த நிமித்தமே, (துர்மரணமேயும்) நல் நிமித்தம் என்னல் உம் ஆம்— நல்ல நிமித்தமென்று சொல்லப்படுவதுமாம். இதற்கு மட்டும் என்ன லென்று பதம் சேர்த்தது ஏன் எனில்— காலதேசங்கள் ஸ்ம்ருதி ஸூத்ராதி

दहरकुहरे देवस्तिष्ठन् निषद्वरदीर्घिकानिपतितनिजापत्यादित्सावतीर्णपितृक्रमात् ।
धमनिमिह नस्तस्मिन् काले स एव शताधिकां अकृतकपुरप्रस्थानार्थं प्रवेशयति प्रभुः ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे निर्याणाधिकारो विंशः॥ 2 .
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

—०—०—

களில் ப்ரஸித்தமாயிருப்பதால் அவற்றை இசைந்து துர்மரணாதிகளை நல் நிமித்தமாக இசையாதார்க்கு அதை உறுதிப்படுத்துவதற்காக. 'यदु चैवास्मै शव्यं कुर्वन्ति यदु च न' என்று மோக்ஷம் போகிறவனுக்கு உத்தர க்ரியை செய்யாமற் போனாலும் ப்ரேதத்வாதிகள் இல்லையென்று தெரிவது போல் துர்மரண மூலமாக பிசாசத்வாதிகளும் இல்லையென்று தெளிவதென்றபடி. பயணத்து— பயணம் ப்ரயாணம், கீழே 'ஸூர்யகராவலம்பியாய் புறப்படும்படி' என்று ஸூர்யகிரணம் பிடிப்பது முதலே 'புறப்பாடு' என்றார். அடுத்த அதிகார த்திலும், 'ப்ரஹ்ம நாடியாகிற தலைவாசலால் புறப்பட்டு' என்று தலைவாசல் தாண்டின பிறகு புறப்பாடு என்பர், ஆக ஓர் இடம் செல்லுகிறவ னுக்கு க்ருஹத்தினுடைய ப்ரதாநவாசல் கடந்த பிறகே ப்ரயாணம் போல் ஸூக்ஷ்ம தேஹமுள்ளவன் சரீரக்ருஹத் தலைவாசலான ப்ரஹ்ம நாடி முனையைக் கடந்தபிறகே ப்ரயாணத் தொடக்கமென்று தெரிகிறது. இந்த அதிகாரத்தில் ச்லோகத்திற் சொன்ன உத்க்ராந்திக்ரமமானது ஸம்ஸாரி க்கும் பொதுவாகையால் முமுக்ஷுவுக்கு அஸாதாரணமாகாது. துஷ்டகால தேசகால நிமித்தங்கள் தடையாகாமையும் ப்ரஹ்ம நாடிவாயிலாக வெளி வருவதும் இவனுக்கு அஸாதாரணமாம் அதனால் இதைமட்டும் பாட்டில் பணித்தார். இதற்காகவே எம்பெருமான் ஹார்தனாய் காத்திருக்கிறா னென்று அவனுடைய வாத்ஸல்யத்தை விசதமாக்குகிறார் दहरेति ச்லோகத் தால். देवः—ஸம்ஸாரத்தை நடத்தி வருகிறவனாய் प्रभुः—பரமபதப்ரதாநம் செய்கிறவனான எம்பெருமான் निषद्वर—சேறு நிறைந்த दीर्घिका—வாவியில் निपतित—விழுந்து அழுந்திய निज—தன்னுடையதான अपत्य—குழந்தையை आदित्सा—எடுக்க விரும்பியதாலே अवतीर्ण—சேற்றிலிழிந்த पितृक्रमात्—தகப் பனைப் போலாகி दहरकुहरे—ஸ்வல்பமான ஹ்ருதயாகாசமாம் ஸங்கடமான விடத்தில் तिष्ठन्—பிறந்தது முதல் நின்று எதிர்பார்ப்பவனாய், स एव— அப்படி வ்யாஜத்தை ப்ரதீக்ஷிப்பவனாகவே யிருந்து तस्मिन् काले—நிர்யாண காலத்தில் इह—இந்த சரீரத்தில் शताधिकां—நூற்றிற்கு மேலான धमनिं— நாடியை नः—நம்மை अकृतकपुर—ஒருவரால் செய்யப்படாத ஆதியும் முடிவுமில் லாத வைகுண்ட மாநகருக்கு प्रस्थानार्थं—அர்ச்சிராதி மார்க்கத்தில் பயணம் செய்வதற்காக प्रवेशयति—புகுவிக்கிறான். சேற்றில் விழுந்த குழந்தையை

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

# गतिविशेषाधिकारः

## கதிவிசேஷாதிகாரம் 21.

—○—○—

ज्वलनदिवसज्योत्स्नापक्षोत्तरायणवत्सरान् पवनतपनप्रालेयांशून् क्रमादचिरद्युतिम्।
जलधरपतिं देवाधीशं प्रजापतिमागतस्तरति विरजां दूरे वाचस्ततः परमद्भुतम्॥

---

எடுக்க அதிலிழிந்த தகப்பன் அதை எடுக்க மிக்க ப்ரயாஸை செய்வது போல் ஈச்வரன் அநாதியாய் விழுந்த நம்மை எடுக்க அநாதியாகவே ஒவ்வொரு ஜந்மத்திலும் ஹார்தனாய் அவதரித்து 'சன்ம சன்மாந்தரம் காத்து, தக்க தருணத்தில் தக்கவாறு எடுத்து, புறப்படச் செய்கிறான். குதகமான புரம் சரீரம்; இதை விட்டு அகுதக புரம் பெறுவிக்கிறான். இவ்வளவு தாமதமாவதற்குக் காரணம் நாம் மூழ்கிப் பாதாளம் போய் சேர்ந்ததே என்றதாயிற்று.

நிர்யாணாதிகாரம் முற்றும் 20

ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம:

கதி விசேஷாதிகாரம் 21

ஸூர்யகிரணத்தைப் பிடித்துக் கொண்டு புறப்பட்டவன் எந்த மார்க்கத்தினாலே முக்திஸ்த்தாநம் பெறுகிறானோ, அந்த அர்ச்சிராதி மார்க்கம் இங்கே விரிவாகக் குறிக்கப்படுகிறது. இதே கதிவிசேஷம் = ஸ்வர்காதிகளுக்குப் போகும் மார்க்கத்தைக்காட்டிலும் விலக்ஷணமான மார்க்கம், மார்க்கத்தைச் சொல்வது இங்கு ப்ரதாநமானாலும் அங்கே இவனுக்கு வரும் விசேஷங்களும் இந்த கதி மூலமாக மேலே வரும் விசேஷமும் கூட இங்கே சொல்லப்படுகிறன. அர்ச்சிராதி மார்கமென்பதற்கு அக்நி தொடக்கமான மார்க்கம் என்று பொருள். இங்கே अग्न्यादि பதத்தினாலே நெருப்பு முதலான அசேதந வஸ்து சொல்லப்படுகிறனவா; அவைகள் மார்க்கத்தில் தங்குமிடங்களா, அல்லது அவை மார்க்கத்திலே யிருக்கக்கூடிய அடையாளங்களா என்று விசாரித்து அக்ந்யாதி பதங்களுக்கு அந்தந்த வஸ்துவுக்கு அபிமாநியான தேவதை பொருள். அந்த தேவதைகள் ஆதிவாஹிகர்கள். அதாவது அவரவர்களின் இடம் கடக்க அழைத்துப்போகிறவர்கள். அவர்களழைத்துப் போகும்வழியே அர்ச்சிராதி மார்க்கமென்று ப்ரஹ்மஸூத்ரத்தில் நிர்ணயிக்கப்பட்டது. அப்படி யழைத்துச் செல்லுகிறவர்கள் எத்தனை பேர்கள், யாருக்குப் பின்னால் யார் என்பதை அடைவாக ச்லோகத்தில் ஸங்க்ரஹிக்கிறார் ज्वलनेति. ज्वलन–அக்நிதேவதையையும் दिवस–பகல் தேவதையையும். ज्योत्स्ना पक्ष—(நிலவுள்ள பக்ஷ) சுக்லபக்ஷ தேவதையையும், உத்தராயண தேவதையையும். ஸம்வத்ஸர தேவதையையும், पवन-வாயு, तपन-ஸூர்யன், प्रालेयांशु—பனிக்கிரணனான சந்த்ரன் இவர்களையும், अचिरद्युति—

இப்படி मूर्धन्यनाडियிலே प्रवेशितனை முமுக்ஷுவை स्थूलशरीरமாகிற क्ष-

க்ஷணகால ஒளியான மின்னல் தேவதையான அமானவனையும், जलधरपति- மேகத்திற்கு ஸ்வாமியான வருணனையும், देवाधीशं-தேவேந்த்ரனையும், प्रजापतिं பிரமனையும் क्रमात्—முறையே आगतः—அடைந்தவனாய். विरजां—விரஜா நதியை तरति—தாண்டுகிறான். ततःपरं—அதற்குப் பிறகுப் பெறப்படும் अद्भुतं- ஆச்சர்யமானது वाचः दूरे—வாக்குக்கு எட்டாதது. यतो वाचो निवर्तन्ते என்னப்படவேண்டும்.

இங்கு ஆதிவாஹிகர்கள் பன்னிருவர் சொல்லப்பட்டனர். ते अर्चिषं अभिसंभवन्ति अर्चिषोऽहः अह्नः आपूर्यमाणपक्षं आपूर्यमाणपक्षात् यान् षट् उदङ्ङेति मासान् तान् मासेभ्यः संवत्सरम् என்கிற ச்ருதியில் ஐந்து பேர் அடைவாகவே சொல்லப்பட்டிருக்கின்றனர், ஒரு வாக்யத்தில் 'मासेभ्यो देवलोकं' देवलोकात् आदित्यम्, என்று தேவலோகத்தை மாதத்திற்கு மேல் சொல்லியிருந்தாலும் இந்த தேவலோகம் வாயுவானபடியால் ஸம்வத்ஸரம் வாயு என்கிற இரண்டிற்குள் ஸம்வத்ஸரமானது மாஸத்தைப் போல் காலமாகையால் சிறிய காலாபிமானி தேவதையோடு மேற்கால அபிமானிதேவதையைச் சேர்த்து விட்டு அதன் பிறகு வாயுவையும், स वायुमागच्छति· स आदित्यमागच्छति, स चन्द्रमसं आगच्छति என்கிற க்ரமப்படி ஸூர்ய சந்த்ரர்களையும். चन्द्रमसो विद्युतं-என்றிருப்பதால் வித்யுத் என்றும் வைத்யுதனென்றும் மானஸனென்றும் சொல்லப்பட்ட அமானவனைச் சந்த்ரனுக்குப் பிறகும், அவனைப்போல் மேகத்தில் ஸம்பந்தப்பட்டிருப்பதால்பிறகுவருணனையும். அதன்மேல் स वरुणलोकं आगच्छति स इन्द्रलोकं आगच्छति स प्रजापति लोकं என்றக்ரமத்தினால் இந்த்ரனையும்பிரமனையும் வ்யாஸபகவான் வரிசைப்படுத்தினார். இவர்களில் அமானவனென்பவன் பரமபதத்தினின்று பகவானால் அனுப்பப்பட்டுச் சந்த்ரனுக்குப் பிறகு வந்து சேர்ந்தவனாகையால் தனக்குப் பிறகு வரும் வருண-இந்த்ர-ப்ரஹ்மாக்கள் வழி கொண்டுவிடு மிடங்களிலும் கூடவே தொடர்ந்து சதுர்முகலோகம் தாண்டிய பிறகு தானே ப்ரக்ருதி மண்டலத்தையும் கடக்கவைத்துப் பரமபதம் புகுவித்து. பரமாத்மாவின் திருவடியைப் பெறும்வரையில் ஆதிவாஹிகனாகிறான். மற்றவர்கள் தங்கள் தங்களிடத்திலேயே நின்று விடுவார்கள், இப்படி பரமாத்ம ப்ராப்தி யென்கிற அநுபவம் வரையில் அர்ச்சிராதி புருஷ கார்யமாகையாலே இவ்வதிகாரத்தில் அந்த ப்ராப்தி வரையில் நிரூபணம் செய்கிறார். மேல் அதிகாரத்தில் இவ்வனுபவ விளக்கம்.

இந்த ச்லோகத்திற் சொன்ன அக்ந்யாதிகள் எல்லோரும் ஆதிவாஹிகர்களென்றும், அவர்களில் அமானவன் ப்ரதானனென்றும், முடிவில் அடையப்படுவதாய் अद्भुतமென்றது ஸ்ரீவைகுண்டலோகமென்றும், அங்குள்ளவர்கள் முக்தனை கௌரவித்து அன்புடன் அழைத்துச் செல்வதும் அத்புதமென்றும், दासனுக்கு ஸ்வாமி ஸாயுஜ்யம் தருவதும் அற்புதமென்றும் மேலே விரித்துரைக்கிறார் இப்படி இத்யாதியால். நிரதிசயாநந்தனாயிருக்கும் என்ற

புரத்தினின்றும் ब्रह्मनाडियாகிற தலைவாசலாலே वत्सलனான हार्द्, வார்த்தை சொல்லக் கற்கிற सुखवश्यனான (सुमुखனான) ராஜகுமாரனை ராஜா எடுத்துக்கொண்டு உலாவுமாப்போலே கொண்டு புறப்பட்டு, "மன்னுங்கடுங் கதிரோன் மண்டலத்தினன்னடுவுளன்னதோரில்லியினூடு போய்" என்றும், "தேரார் நிறை

---

விடத்தில் வாக்யம் முடியும். புறப்பட்டு என்றவரையில் பூர்வாதிகார விஷயத்திற்கு அநுவாதம். मूर्धन्यनाडि—தலைவரையில் நீண்டிருக்கும் முன் கூறிய மத்யம நாடி. ப்ரஹ்மபுரமென்று ஸ்த்தூல சரீரத்தை यदिदमस्मिन् ब्रह्मपुरे दहरं पुण्डरीकं वेश्म' என்ற உபநிஷத்வாக்யம் சொல்லும். ஹார்தனான ப்ரஹ்மத்திற்கு இது ஸ்த்தாநமாய் ப்ரஹ்மபுரமாம். ஜீவனுக்கான ஆபாஸசரீரத்தை அவனிடமுள்ள அபிமாநத்தாலே வந்து சேர்ந்து தன் புரமாக்கித் தனக்காக இது அவனுக்களிக்கப்பட்டதென்பதை யறியும்படி செய்து அவன் தேறின பிறகு அஸ்திரமான இப்ரஹ்மபுரத்தை விட்டு अकृतकமான பரமபத ப்ரஹ்மபுரத்திற்கு அழைத்துச் செல்லுகிறான் एतत् सत्यं ब्रह्मपुरम् என்னப்பட்டவன். க்ருஹபதியாயிருப்பவன் வேறிடம் போவதும் வருவதும் க்ருஹத்தின் தலைவாசலாலவதே ப்ரசஸ்தமாகையால் ப்ரஹ்மநாடியாகிற தலைவாசலாலே என்றார். முன்சொன்ன நாடியே ப்ரஹ்ம நாடியாகலாம் அதே முழுமையும் தலைவாசல்=க்ருஹத்தின் ப்ரதாநமான த்வாரம். ப்ரஹ்மத்தை அடைவிப்பதால் ப்ரஹ்ம நாடியாகும். முன் அதிகாரத்தில், 'விலங்கை வெட்டி ராஜகுமாரனை ராஜா சிறையிலிருந்து அழைத்துச் செல்வது போல்' என்றார். இங்கே வார்த்தை சொல்லக் கற்கும் குழந்தையான குமாரனை ராஜா எடுத்து சொல்வது போலென்கிறார். முன்னே இவன் பாபம் செய்தவனானாலும் பொறுத்தோமென்ற எண்ணம் நடுமாடுவது அறிவிக்கப்படும். இப்பொழுது சிறு குழந்தையாக பாவிக்கப்படுவதால் பாபம் செய்தது மறந்துவிட்டதென்றதாம். முகவச்யனான என்கிற பதத்திற்கு முகத்தாலே வசீகரிக்குமவனான என்ற பொருளே ஸர்வஸம்மதம். वशयति—என்னப்படும் வசீகரணம் வசபதார்த்தமாய் அதைச் செய்ய அர்ஹன் வச்யன் என்ற கருத்தாகலாம். वश इच्छायां என்கிற தாதுவில் வச்யன் इच्छाविषयன். முகத்தினாலே इच्छाविषयன். முகம் கண்டவுடனே எல்லோரும் அன்பு வைக்கும்படியான என்னலுமாம். எடுத்தார்கையில் பிள்ளையாய் யாருடைய முகத்தைக் கண்டாலும் வசப்படுகிறவனென்று சொன்னாலும் பொருந்தும். இவ்விடத்தில் सुमुखனான என்றது பாடாந்தரமாகும். அர்ச்சிராதி மார்க்கத்திற்கு देवयानमार्गமென்றும் பேர் உண்டு இந்த மார்க்கத்தில் ஸௌர்யமண்டலம் வாயிலாகச் செல்வதை உபநிஷத்திற் போல் திவ்ய ப்ரபந்தத்திலும் சிறப்பாகக் கூறும் வாக்யத்தை யறிவிக்கிறார் மன்னும் இத்யாதியால். பெரிய திருமடல். மன்னும்—நிலைத்திருக்கிற கடு—கடுமையான கதிரோன்—கிரணங்களுமுடைய ஸௌர்யனின். (கதிர்—கிரணம்,) அவனுடைய மண்டலத்தின் நல் நடுவுள்—சிறந்த மத்யபாகத்தில். அன்னது—அப்படிப்பட்ட, ஓர்—

கதிரோன் மண்டலத்தைக் கீண்டு புக்கு" என்றும், "சண்டமண்டலத்தி னூடு சென்று" என்றும், "இருளகற்றுமெறிகதிரோன் மண்டலத்தூ டேற்றிவைத்தேணி வாங்கி" என்றும் சொல்லுகிற देवयानमार्गத்திலே வழிப்படுத்தி, "அமரரோடுயர்விற் சென்றறுவர் தம் பிறவி யஞ்சிறையே" என்கிறபடியே अर्चिஸ்ஸென்றும், अहஸ்ஸென்றும், पूर्वपक्षமென்றும், उत्तरायणமென்றும், संवत्सरமென்றும், वायुவென்றும், आदित्यனென்றும், चन्द्रனென்றும்,

---

ஒப்பற்ற இல்லி—சந்து. ஊடுபோய்—நடுவே சென்று. உபநிஷத்தில்—स आदित्यमागच्छति. तस्मै स तत्र विजिहीते यथा डम्बरस्य खम्; तेन स ऊर्ध्वमाक्रमते—அவன் ஸூர்யனை யடைகிறான் அவனுக்கு அவன் அங்கே இடம் விடுகிறான். அது டம்பரவாத்யத்தின் உள்ஆகாசத்தின் அளவாகும். அதன் வாயிலாக ஸூர்யனைக் கடந்து மேலே செல்கிறான். என்றதால் அந்த வாத்ய ஆகாசத்தின் அளவைத் தெரிவிப்பதற்காகத் தான் பாட்டில் அன்னது என்ற சொல். ஸூர்யனைப் பிளந்து செல்கிறான் என்பதற்கும் வாத்யத்தைப் பிளந்தால் அறியப்படும் ஆகாசத்தின் அளவைக் குறிப்பதிலே நோக்கு. தேர் இதி. சிறிய திருமடல். நிறைந்த கிரணமுடையவனும் தேரில் பூர்ணனுமான ஸூர்யனின் மண்டலத்தைப் பிளந்து புகுந்து எனறபடி. சண்டமிதி திருச்சந்தவிருத்தம் 67. சண்டமான—உஷ்ணமான ஸூர்யமண்டலத்தின் ஊடு=இடையே சென்று. இருள்—இதி பெரியாழ்வார் திருமொழி. 4.9.3. கருளுடைய என்று பாட்டாரம்பம். இருளை அகற்றுகிற, எறி—ப்ரகாசிக்கும் கிரணங்களையுடைய ஸூர்டனின் மண்டலத்தின் ஊடு-இடை வழியாக பரமபதம் ஏற்றி. ஏற்றுவதற்கு உதவியான ஏணியை வாங்கி=அப்புறப் படுத்தி. ஏணியாவது—ஏறவும் இறங்கவும் கருவியாகும், மீண்டும் இறங்க வேண்டாமென்பதற்காக ஏணியை வாங்கிவிடுகிறான். இங்கு ஏணி ஸூக்ஷ்ம சரீரமென்னலாம் அதன் மூலமாக ப்ரக்ருதி மண்டலம் கடந்து ஏறின பிறகு ஸூக்ஷ்ம சரீரத்தை விலக்கிவிடுகிறானே. அதனால் வாங்கி என்றார். ஸங்கல்ப்பமே ஏணி; ஏறிய பிறகு அதை வாங்குவதாவது மீண்டும் இறங் கும்படி ஸங்கல்பியாமை என்றும் உரைப்பர். வழிப்படுத்தி=சீரிய மார்க்கத்தில் சேர்த்து என்றபடி. கீழ்க்கூறிய பாசுரங்களில் ஸூர்யமண்டலத்தைச் சொன்னது பித்ருயாண விலக்ஷணமாய் தேவயானமென்கிற அர்ச்சிராதி மார்க்கத்தைக் குறிப்பதற்காக என்று கருத்து. உபநிஷத்திலும் तेजसि सूर्ये संपद्यते என்றிப்படி கூறுவது இயல்பு. அமரர் இதி. திருவாய்மொழி 1-3-11. அமரர்களென்று தொடக்கம். இத் திருவாய்மொழிவல்லார் அமரர்களோடு-ஆதிவாஹிகர்களோடு கூடி உயர்வில்—மேலிடத்திற் சென்று தம்முடைய பிறவியாகிற அம்—நல்ல (கொடிய) பலிஷ்டமான சிறைகாராக்ருஹத்தை அறுவர் அறுத்து ஒழிப்பர். இவ்வமரர்களை இன்னாரென்று அறிவிக்கிறார் अर्चिष इத்யாதியால். अमानवेति. चन्द्रमसो विद्युत्—என்று சந்தரனு

**वैद्युत**னென்றும், **अमानवसंज्ञ**னை இவனுக்கு ஸஹகாரிகளான **वरुण-इन्द्र-प्रजापति**களென்றும் சொல்லப்படுகிற வழிநடத்தும் முதலிகளை யிட்டு, "**अहं स्मरामि मद्भक्तं नयामि परमां गतिम्**" என்கிறபடியே தான் **प्रधान**னாய் நடத்தி அவ்வோ எல்லைகளில் **भगवच्छास्त्र**த்திலே பரக்கப் பேசின **भोग**ங்களையும் **अनुभवि**ப்பித்து,

---

க்குப்பிறகு மின்னலுக்குअभिमानिதேவதையான வைத்யுதனைச்சொல்லிतत्पुरुषोऽ
**मानवः स एनान् ब्रह्म गमयति**, என்று அவனையே அமாநவனென்றது மேலே; வேறு
வாக்யத்தில் **पुरुषो मानस एत्य ब्रह्मलोकान् गमयति**' என்று அவனையே மாநஸ
னென்றது. **एत्य** என்று 'அவன் பரமபதத்திலிருந்து வந்து' என்றதாலும்
அவன் ப்ரஹ்மத்தை அடைவிக்கிறானென்றதாலும் இவன் பரமபத
வாஸியாய் முக்தனுக்கு பரப்ரஹ்ம ப்ராப்தி வரையில் கூடவிருப்பவனென்று
தெரிகிறது. ப்ரஹ்மாண்டத்திற்குப் பிறகு போல் முன்னும் அவனே போது
மாயிருக்க, அவன் வந்த பிறகு **वरुण-इन्द्र प्रजापति**கள் எதற்காக என்னில்
அருளுகிறார் **ஸஹகாரிகளான** என்று. வருணாதிகள் முக்தன்போகும்
வழியில் மேலிடங்களுக்கு அதிகாரிகளாயிருப்பதால் தங்கள் எல்லைக்குள்
முழுமையும் தாங்கள் நடத்துவது அவச்யமாகையால் அங்கே ப்ரதாநமான
அமாநவனுக்குத் தங்களைத் துணையாக்கிக் கொள்கிறார்கள், வழிநடத்தும்
முதலிகளை யென்பது ஆதிவாஹிக சப்தார்த்தம். முதலிகள்—அதைப் பற்றி
யெல்லாம் தெரிந்த அதிகாரிகள். ஹார்தன் கூடவிருப்பதால் உண்மையில்
அவனே ப்ரதாநமானவன். அவன் சொல்படி நடப்பதால் ஆதிவாஹிகர்
எல்லோரும் அவனுக்கதீனர். அப் பகவானுக்கு ப்ராதாந்யத்தை யறிவிக்கும்
ச்லோகம் **अहमित्यादि**. 'நான் என் பக்தனை நினைக்கிறேன்; நானே பரமபதத்தை
யடையச் செய்கிறேன்' என்றதால் அவனே முக்யன்; அவனே இவர்
களை ஆதிவாஹிகர்களாக்கித் துணையாக்குகிறான், '**अहं नयामि**' என்கிற
வசநமானது வேறு வசநத்திலேற்பட்ட ஆதிவாஹிகர்களை விலக்காது.
இவனுக்கு பவ்யப்பட்டு அவர்கள் தாங்களே வருவார்களென்றறிவிப்பதாம்.
இந்த வாக்யத்தை இப்படி நிர்வஹித்ததால் ப்ரபந்த பாரிஜாதத்தில்
அம்மாள் அருளியதற்கும் உட்கருத்து இதே யாகும். உபநிஷத்தில் **अमानवादि**
கள் அழைத்துச் செல்வதாக விருந்தாலும் அவர்கள் பரிஜநங்களோடு
கூட்டமாக வருகிறார்களென்றும், உபஹாரங்களை ஸமர்பித்து ஆராதிக்
கிறார்களென்றும் ஸ்பஷ்டமாகாமற் போனாலும், ஸ்ரீபாஞ்சராத்ரத்திலே
அது ஸ்பஷ்டமென்கிறார் **பரக்கப் பேசின** என்று **अथैनममरास्तत्र सह दिव्या-
प्सरोगणैः। सोपहाराः प्रहर्षेण प्रत्युद्गच्छन्त्युपागतम् ॥**' என்று பலராகக் கூடி எதிர்
கொள்வதும், **अर्चिरादिकया गत्या तत्र तत्रार्चितस्सुरैः। अतीत्य लोकान् अभ्येति वैकुण्ठं वीत-
कल्मषः ॥**' என்று நடுநடுவே அவர்களால் ஆராதிக்கப்பட்டு அர்ச்சிராதி
மார்க்கத்தால் லோகங்களைக் கடந்து வைகுண்டமடைகிறான் என்றதால் வழி
யெல்லாம்ஆராதிப்பதும்தெளிவாகும். **அவ்வோஎல்லைகளில்**-அவரவரதிகாரத்
திற்குட்பட்ட இடங்களில். **भोगங்களை**-அநுபவிக்கவேண்டும் வஸ்துக்களை,

"लोकं वैकुण्ठनामानं दिव्यं षाड्गुण्यसंयुतम् । अवैष्णवानामप्राप्यं गुणत्रयविवर्जितम् ॥
नित्यसिद्धैः समाकीर्णं तन्मयैः पाञ्चकालिकैः । सभाप्रासादसंयुक्तं वनैश्चोपवनैः शुभम् ॥
वापीकूपतटाकैश्च वृक्षषण्डैश्च मण्डितम् । अप्राकृतं सुरैर्वन्द्यमयुतार्कसमप्रभम् ॥
प्रकृष्टसत्त्वराशिं तं कदा द्रक्ष्यामि चक्षुषा" என்று நெடுங்காலம் காண ஆசைப் பட்டதொரு देशविशेषத்திலே சென்றவாறே, कर्मफलविशेषभोगार्थமாகவன்றிக்கே

---

கீழ்க்கூறிய ஸூக்ஷ்ம சரீரத்தை யளிப்பது பரமபதம் செல்வதற்கு மட்டு மன்று; இந்த போகங்களை யநுபவிப்பதற்காகவும் என்ன வேண்டும். தேசவிசேஷம் சேருவதற்கு முன் ப்ராக்ருத ஸூக்ஷ்ம சரீரம் விடப்படு மென்கிறார் लोकमित्यादियால். வைகுண்டமெனப்படும் லோகத்தை எப்போது கண்ணால் காண்பேன் என்று காணவாசையை யறிவிப்பது இந்த ஜிதந்தே ஸ்தோத்ரம். दिव्यं—அபராக்ருதமான; षाड्गुण्य संयुतम्=ज्ञानशक्ति बलैश्वर्य वीर्य-तेजस्सுக்களாகிற ஆறு குணங்கள் சேர்ந்த; வைகுண்டலோகம் அசேதந மாகையால் அதற்கு ஆறு குணங்களிராமற் போனாலும் அங்கே எம்பெரு மானிடம் षाड्गुण्यம் பூரணமாக அநுபவத்திற்கு வருகிறபடியால் षाड्गुण्यप्रकाश த்திற்குக் காரணமாகையைப் பற்றி षाड्गुण्यसंयुतமென்றது. அவைஷ்ணவர் களுக்கு அடையக்கூடாதது; ரஜஸ் தமஸ் ஸத்துவமென்கிற முக்குணமிராதது. சுத்தஸத்துவமென்கிற விலக்ஷணகுணமிருந்தாலும்மிச்ரஸதவமில்லாமையால் முக்குணமில்லை யென்க. नित्यसिद्धैः எம்பெருமானோடு கூடவே எப்போதுமிரு ப்பதால் அவர்கள் நித்ய ஸித்தர்களாகிறார்கள். அப்படியே भगवन्मयர்களாவர் அதாவது பகவானுக்கேயான கரணங்களை யுடையவர்களாவர். பாஞ்சகாலிகர் களாவார் ஒவ்வொரு தினத்தையும் ஐந்தாகப் பிரித்து அபிகமந உபாதாந இஜ்யா ஸ்வாத்யாய யோகங்களை விடாமற் செய்கின்றவர். இது ப்ரக்ருதி மண்டலத்தில் பஞ்சராத்ர தீக்ஷை பெற்ற சிலர் செய்வதாம். இதற்கு நித்ய விபூதியில் ப்ரஸக்தியில்லை. ஆகையால் பூமியில் பாஞ்சகாலிகரா யிருந்து. மோக்ஷம் வந்தவர்களென்று இதன் பொருள். இந்த வைகுண்ட மானது பல ஸபைகளையும் மாடமாளிகைகளையும் உடையது. காடுகளாலும் உத்யாநங்களாலும் அழகானது; வாவிகளாலும் கிணறுகளாலும் குளங் களாலும் மரங்களின் வரிசைகளாலும் அலங்கரிக்கப்பட்டது. அப்ராக்ருதம்= ப்ரக்ருதியிலுள்ள லோகம் போலாகாதது. தேவதைகளாலே புகழப்பட்டது பதினாயிரம் ஸூர்யர்களுக்கு ஈடான ஒளியுள்ளது. சிறந்த ஸத்துவக் குவிய லானது. இதை எப்போது நான் காண்பேன் என்றதால் காண்பதற்கு நெடுங்காகவாசை தோற்றுகிறது. ப்ரக்ருதி மண்டலத்தில் ஒவ்வொரு பிறப்புக்கும் முன்னே வரும் ஸூக்ஷ்ம சரீரம் அப்பிறப்பில் ஸ்த்தூல சரீரம் பெறும் வரையில் தொடரும். மோக்ஷம் போகிறவனுடைய ஸ்த்தூலசரீரம் அப்படி கர்மபலாநுபவத்திற்காக வந்ததல்ல; மோக்ஷத்திற்குப் புறப்படுவ தற்கு முன்னமே புண்ய பாபரூப கர்மாக்களெல்லாம் உதறி ஒழித்தானே அப்படியிருக்க ஸூக்ஷ்ம சரீரம் எவ்வாறு வந்ததென்னில்-இவன் செய்த

**विद्यै**யாலே **स्थापित**மாய் **गतिमात्रार्थं अनुवृत्त**மான ஸூக்ஷ்ம சரீரத்தை, ஆறு கடக்கைக்குப் பற்றின தெப்பம் போகவிடுமாப் போலே போகவிடு(வி)த்து, விரஜைக்கு அக்கரைப்படுத்தி, **अप्राकृतशरीर**த்தைக் கொடுத்து, **ऐरंमदीय**

---

மோக்ஷோபாயத்தின் ப்ரபாவத்தாலே இவனைப் பரமபதம் அடைவிப்பதற்காக அந்த ஸூக்ஷ்ம சரீரமுண்டாயிற்று. கடல் கடக்கக் கப்பலேறினல் கடலின் அக் கரையில் கப்பல் விடப்படுவது போல் ஸம்ஸாரமாகிற ப்ரக்ருதி மண்டலத்தில் '**अप्राकृतैरपि रसैर्विरजा**' என்றபடி **अप्राकृत**மான விரஜைக்கு இச் கரையிலேயே ப்ராக்ருத ஸூக்ஷ்ம சரீரம் விடப்படும். இந்த ப்ராக்ருத மூலம் பின்னே அப்ராக்ருத சரீரமாவதற்கு ப்ரஸக்தியில்லையே. அதனல் இங்கே போக விடுத்து என்றார். அதற்குப் பிறகு பரமபத ஸோபாநத்தின்படி **गत्वाऽथो विरजां त्यजति तनुं सूक्ष्मां ततोऽमानवस्पर्शक्षालितवासनाः...गच्छन्ति विष्णोः पदम्** என்று அபியுக்தர் சொன்னபடி அமாநவகரஸ்பர்சம் ஏற்படவே வாஸனைகளாலும் விடப்பட்டு அக்கரையான வைகுண்டம் செல்லுகிறான். வாஸனையும் கழிந்தபடியால் சரீரமிராமலே, **स आगच्छति विरजाम्, तां मनसा अत्येति** என்றபடி ஸங்கல்ப சக்தியினலேயே விரஜையைத் தாண்டுகிறான். இதை **விரஜைக்கு அக்கரைப்படுத்தி** என்றார். அக்கரையாவது ஆற்றுக்கு அப்புறத்திலுள்ள கரை. இங்கே **मनसा** என்ற சொல்லுக்கு ஸங்கல்பத்தாலே என்று பொருள். மனதுள்பட இந்த்ரியங்களும் கீழே விடப்பட்டனவே. இக்கரையில் கீழே கிடக்கும் அந்த சரீரேந்த்ரியங்கள் ப்ரபஞ்சத்தை விட்டு ஸூக்ஷ்ம ப்ரகிருதியின் கடையெல்லையில் விழுந்தவை ப்ரளய காலம் வரும்போது அழியும். ஆனலும் அவை யாருக்கும் உதவா. இவனுக்கு ப்ரக்ருதி ஸம்பந்தமுள்ள வரை சரீரமில்லாத போது ஸங்கல்பிக்க முடியாமலிருந்தது. இப்போது ப்ரக்ருதிஸம்பந்தம் விடப்பட்டபடியால் வித்யாப்ரபாவத்தோடு அந்த சக்தியையும் பெற்றான். சிலர் விரஜா நதியில் ஸ்நாநத்தையும் சொல்லுவர். அப்போதும் சரீரமிராமலே ஸ்நாநமே யாம். ச்ருதியில் **तां मनसा अत्येति** என்றவளவே யுள்ளது. '**सीमान्तसिन्धुप्लुतः**' என்றவிடத்திலும் ப்லவநமாவது நீதல் என்னுமே கடத்தல் என்னலாம். அல்லது தாண்டும் போது தீர்த்தத்தில் ஸம்பந்தப்பட்டே தாண்டுகிறனென்று கொண்டாலும் கொள்க. ஒரு திவலை பட்டால்கூட இவ்வனுவான ஆத்மா நீராடினவன் போலாவான். இந்த சக்தியினலேயே எம்பெருமானிடம் வரையில் செல்லலாமாகிலும் அங்கே எம்பெருமானை ப்ரணமம் செய்யவும் அதற்கு முன்னே அப்ராக்ருத ஸத்காரங்களைப் பெறவும் சரீரம் வேண்டியிருப்பதால் முக்தர்களெல்லோரும் ஆரம்பத்தில் அப்ராக்ருத சரீரம் அடைவது திண்ணமென்றறிவிக்க **अप्राकृत** சரீரத்தைக் கொடுத்து என்றார். இந்த விசேஷங்களெல்லாம் **कौषीतकि ब्राह्मण** பர்யங்க வித்யையில் விரிவாக உள்ளவை, **छान्दोग्यदहर**வித்யையிலும் சில அம்சங்களுண்டு. அவ் விசேஷங்களை யிங்கே அங்குள்ளவாறே அநுவதிக்காமல் அதில் ஒருவிதமாக

மென்கிற ஸரஸ்ஸினளவும் சேர்த்து, सोमसवनமென்கிற अश्वत्थத்தைக் கிட்டுவித்து, माला-अञ्जन-चूर्ण-वासः-फणहस्तैகளான ஐந்நூறு दिव्याप्सरसुக்களை யிட்டு எதிர்கொள்வித்து, ब्रह्मालङ्कारத்தாலே அலங்கரிப்பித்து, ब्रह्मगन्ध-रस-तेजस्सுக்களை ப்ரவேசிப்பித்து, 'குடியடியாரிவர் கோவிந்தன்றனக்கென்று முடியுடைவானவர் முறை முறை எதிர்கொள்ளக் கொடியணி நெடுமதிள் கோபுரங் குறுகு' வித்து, इन्द्र-प्रजापतिகளென்று பேருடைய द्वारगोपரைக் கிட்டுவித்து,

---

(முன் பின்னை) க்ரமத்தை, யாராய்ந்து வரிசைப்படுத்தி அறிவிக்கிறார் ऐरम्मदीय மித்யாதியால். अरम् ण्यम् என்ற இரண்டு அர்ணவங்களுடன் இந்த ஸரஸ்ஸும் இந்த அச்வத்தமும் அபராஜிதை யென்கிற ராஜதானியும் ப்ரபு விமிதமென்கிற ஸ்த்தானமும் சாந்தோக்ய दहर வித்யையிலோதப்பட்டன அந்த अरम् ण्यम् என்கிற ஸமுத்ரங்களையும் பரமபதஸோபாநத்தின்படி ஐரம்மதீயத்திற்கு முன்னே இங்கே சேர்த்துக் கொள்வது. அதற்காகவே இங்கு 'அளவும்'என்றசொல். கௌஷீதகியில் பரப்ரஹ்மத்தினாலே, 'விரஜா நதிக்குமுமுக்ஷு வந்துவிட்டான்; விரைவில் செல்லுங்கள் என்று ஏவப்பெற்று ஐந்நூறு நித்யஸூரிகளான அப்ஸரஸ்ஸுக்கள் வருவது முதலில் சொல்லப்பட்டது. பிறகு தில்யமென்கிற வ்ருக்ஷத்தின் அருகில் அவனுடைய அப்ராக்ருத சரீரத்தில் ப்ரஹ்ம கந்த ப்ரவேசம் சொல்லப்பெற்றது. ஆக அது அலங்கரிக்கும் ஸ்த்தாநமென்று தெரிகிறது, அதனால் அந்த வ்ருக்ஷத்திற்கு முன்னமே அப்ராக்ருத சரீரத்தோடு இந்த ஸரஸ்ஸையும் அச்வத்தத்தையும்சேர்த்திட்டு, அவற்றைக் கடந்தவுடன் அலங்காரத்தை யருளிச்செய்கிறார் मालेति. 'शतं मालाहस्ताः, शतं अञ्जनहस्ताः, शतं चूर्णहस्ताः शतं वासोहस्ताः शतं फणहस्ताः अप्सरसः என்றபடி அவர்கள் அலங்காரத்திற்காகக் கொண்டுவந்த த்ரவ்யங்கள் மாலைகள் மைவகை, கந்தப்பொடி, ஆடைகள், ஆபரணங்கள். அலங்கரித்த பிறகு மேலே தில்யமென்னும் வ்ருக்ஷத்திற்கு அவன் வந்த போது तं ब्रह्मगन्धः प्रविशति, அங்கு அவனிடம் பரமாத்மாவின் திருமேனிமணம் சேருகிறது. सालज्यं संस्थानं என்று சொல்லப்பட்ட (ராஜதானிக்கு வெளியிலுள்ள) சிறுநகரத்தை நெருங்கிய போது तं ब्रह्मरसः प्रविशति யென்றது அந்த ரஸத்தைப் பெற்று அவன் अपराजितं आयतनம்= அதாவது ராஜதானி வருகிறான். அங்கே அவனிடம் ப்ரஹ்மத்தின் திருமேனியொளி சேரும். இதை ஸங்க்ரஹித்தருளினார். ब्रह्मगन्ध रसतेजस्सுக்களை ப்ரவேசிப்பித்து என்று. அதன் மேல் स आगच्छति इन्द्रप्रजापती द्वारगोपौ என்று த்வார பாலகர்களின் அருகே வருவான். அது கோபுர வாயிலாகையால் கோபுரத்தை அதற்கு முன் குறிக்கிறார் குடியடியார் இதி. திருவாய்மொழி 9-10-8. 'இவர்கள் கோவிந்தனுக்கே என்றும் ஸபரிவாரமாகத் தொண்டர்கள்' என்று புகழ்ந்துகொண்டு கிரீடமணிந்த நித்யஸூரிகள் வரிசை க்ரமமாக எதிர்கொண்ட பிறகு கொடிகளை யலங்காரமாக வுடைய நீண்ட மதிட்சுவர்உடைய கோபுரத்தை நெருங்கினர் என்றாரதில், குறுகுவித்து=நெருங்கும்படி செய்து, இந்த்ர

“வைகுந்தம் புகுதலும்” என்று தொடங்கி மேல் மூன்று பாட்டிலும் சொல்லுகிறபடியே अप्राकृतங்களான राजोपचारங்களைப் பண்ணுவித்து, आनन्द-मयமான मण्टपरत्नத்தில் அழகோலக்கத்திலே புகவிட்டு,

“अनयाऽहं वशीभूतः कालमेतं न बुद्धवान्। उत्तमाधममनीचान्तां तामहं कथमावसे ॥
अपेत्याहमिमां हित्वा संश्रयिष्ये निरामयम्। अनेन साम्यं यास्यामि नानयाऽहमचेतसा ॥

---

ப்ரஜாபதிகளென்று பேருடைய என்றதால் ப்ரக்ருதி மண்டலத்திலிருக்கும் இந்த்ரனுக்கும் பிரமனுக்கும் இவை பேரானாலும் இவர்கள் நித்ய ஸூரிகளானபடியாலே வேறென்று அறிவித்ததாம். த்வார கோபரை நெருங்கின பிறகு विभुप्रमितமென்கிற ஆநந்தமயமண்டப ரத்னத்திற்குச் செல்வதும், அங்கே ப்ரஹ்ம யசஸ்ஸு இவனிடம் ப்ரவேசிப்பதும் கௌஷீதகியில் ஓதப்பட்டதாம். அதற்கு முன்னே கோபுரத்தில் புகுந்தவுடன் நடக்கும் ராஜோபசாரங்களை ஆழ்வாரின் மூன்று பாட்டுக்களைக் கொண்டு அறிவிக்கிறார் வைகுந்தம் இதி. உபசாரங்களாவன—ஸ்ரீசடாரியோடு எதிர்கொள்ளல் पूर्णकुंभ प्रदीपप्रदर्शन.पाद्यसमर्पण.प्रशंसनादिகள். வைகுந்தம் = நகரம் புகுதலும்=புகுந்தவுடன் வாசலில் வானவர்—(த்வாரபாலகர்) ‘வைகுந்தம் தமர் எமர் எமதிடம் புகுதுக’ என்று=என்றபோது, அங்குள்ள அமரரும் முனிவரும், ‘மண்ணவர் வைகுந்தம் புகுவது எமது விதியே=பாக்யமே’ என்று வியந்தனர், 9. விதி வகை புகுந்தனரென்று நல்வேதியர் பதியினில் பாங்கினில் பாதங்கள் கழுவினர். (வேதங்களால் புகழப்பட்ட நித்ய ஸூரிகள் தங்களில்லங்களில் பாங்காக முக்தனுடைய பாதங்களைக் கழுவினார்கள்.) அப்போது நிதியும்=ஸ்ரீசடாரியையும், நற்சுண்ணமும் நிறைகுட விளக்கமும் மதிமுகமடந்தையர் ஏந்தினர் வந்து 10, வந்து அவர் எதிர்கொள்ள மாமணிமண்டபத்தில் ப்ரவேசம் 11, இந்த மண்டபத்தையே ப்ரபுவிமிதமென்பதுண்டு. பரமபதஸோபாநத்தில்,‘ஹிரண்மயமான திவ்ய விமாநத்தைக் கிட்டின வளவிலே ப்ரஹ்மயசஸ்ஸு வந்து ப்ரவேசிக்க என்றருளினார், ஆநந்தமயமான திருமாமணி மண்டபத்தை மேலே அங்கே அருளினார். ‘स आगच्छति। तं ब्रह्मयशः प्रविशति’ என்ற यशःप्रवेशம் இவ் விமாநத்தின் அருகில். छान्दोग्यத்தில் ‘प्रजापतेः सभां वेश्म प्रपद्ये என்றபடி ஸபையும் விமாநமும் நெருங்கியிருப்பதால் ஒன்றாக ஓதப்பெற்றது. அந்த ஸபையே இங்கு ‘அழகோலக்கத்திலே’ என்னப்படுகிறது. அழகோலக்கத்திலே= அழகான ஆஸ்தாநத்திலே,அந்த யசஸ்ஸு என்பதைவிரித்துரைப்பதற்காக(11ம்பாட்டில்)அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்தமை என்றருளினார்.

இது ஸாயுஜ்யம் பெற்ற பிறகாகையால் அதை விரித்துரைக்கிறார். अनयेत्यादिயால். சாந்தி பர்வம் 312· இந்த ப்ரக்ருதிக்கு வசப்பட்டு இதனால் நான் கடந்த காலத்தை யறியாதவனானேன், மேலும் இடையிலும் கீழுமான பல இடங்களில் ஜநந மரணங்களைக் கொடுக்கும் இதில் நான் வாஸம் செய்யேன். இப்ரக்ருதியை விட்டு அப்பால் சென்று நிர்தோஷனான பரமாத்மாவை

क्षमं मम सहानेन ह्येकत्वं नानया सह ॥",
"क्रीडन्तं रमया सार्धं लीलाभूमिषु केशवम् । मेघश्यामं विशालाक्षं कदा द्रक्ष्यामि चक्षुषा ॥"
"मेघश्यामं महाबाहुं स्थिरसत्त्वं दृढव्रतम् । कदा द्रक्ष्यामहे रामं जगतः शोकनाशनम् ॥
दृष्ट एव हि नः शोकमपनेष्यति राघवः । तमः सर्वस्य लोकस्य समुद्यन्निव भास्करः ॥"
इत्यादिகளின் கட்டளையிலே இவன் मनोरथित्தபடியே இழந்த இழவெல்லாந் தீர निरतिशयभोग्यனை தன்னைக் காட்டித் 'தன்மை பெறுத்தித் தன் தாளி

---

அடையப்போகிறேன். அவனோடு ஸாம்யம்பெறப்போகிறேன், இந்த அசேதனத்தோடல்ல இவனோடுஒத்துமையே எனக்குத்தகும்; இதோடல்ல. क्रीडन्तमिति. ஜிதந்தே 2-21. இந்த லீலாவிபூதி ப்ரதேசங்களில் பிராட்டியோடுகூட லீலாரஸாநுபவம் பண்ணும் கேசவனை, நீலமேகச்யாமளனை அகன்ற செந்தாமரைக் கண்ணனை எப்போது நான் கண்ணால் காண்பேன். मेघश्याम-मिति. ராமா. அயோ. 83. நீலமேகம்போல் கரியனை திரண்ட புஜம் உடையனை ஸ்திரமான ஸத்துவகுணமுடையனை दृढமான ரக்ஷண ஸங்கல்பமுடையனை உலகின் துயரத்தைத் தீர்ப்பவனுமான ராமனை எப்போது நாம் காண்போம். காணப்பட்ட மட்டிலேயே ராகவன், ஸூர்யன் உதயமாகும் போதே எல்லா வுலகின் இருளையும் போல் நமது சோகத்தைத் தீர்ப்பானே என்றபடி. கட்டளை—கூறியரீதி இழந்த இழவெல்லாம்தீர எம்பெருமானின் அநுபவத்தை இழந்ததாலான நிர்வேதமெல்லாம் தீரும்படி. இவ்விழவின் விவரணம் கடைசிச்லோகத்தில். காண்க தன்னைக்காட்டி இத்யாதியாலே கௌஷீதகியில் तं ब्रह्मयशः प्रविशति என்பது முதல் स आगच्छति विचक्षणां आसन्दीम्, सा प्रज्ञा; प्रज्ञया हि विपश्यति । स आगच्छति अमितौजसं पर्यङ्कम्. तस्मिन् ब्रह्म आस्ते । तं इत्थंवित् पादेनैव आरोहति என்றதெல்லாம் உரைக்கப்பெற்றது. आसन्दिயாவது கட்டில். இங்கே பர்யங்கம் = படுக்கை ஆதிசேஷன். இந்த வாக்யத்தில், முதலில் ப்ரஹ்ம யசஸ்ஸைப் பெறுதலும் பிறகு ப்ரஜ்ஞையை (ஜ்ஞாநவிகாஸத்தை) பெறுதலும் பர்யங்கத்தில் ஏறுதலும் அடைவாகச் கூறப்பட்டன. இங்கு यशः प्रवेशமாவது என்னவெனில்—छान्दोग्यத்தில் सभां वेश्म प्रपद्ये என்று ப்ரஹ்ம ஸ்த்தாநத்தைச் சென்றவுடன் यशोऽहं भवामि இத்யாதியால் ஸர்வாந்தர்யாமியும் என் அந்தர்யாமியும் ஒன்றென்ற அநுபவத்தைச் சொன்னபடியால் அதுவே யாகலாம், இதையே, 'நிரதிசய போக்யனை தன்னைக் காட்டி' என்று இங்குக் குறித்தாரென்னலாம். பர்யங்காரோஹணமும் अपहतपाप्म-त्वादि குணங்களோடு சேர்ந்த स्वरूपाविर्भावமும் न्यायसिद्धाञ्जनத்தில் சேர்த்துச் சொல்லப்பட்டது. உபநிஷத்திலும் கட்டிலின் அருகில் प्रज्ञैயின் ப்ராப்தியைச் சொன்னது (ஸ்வரூபா விர்பாவத்துடன் சேர்ந்த) धर्मभूतज्ञानविकासத்தையாமாகையாலே மேலே பர்யங்காரோஹணம் சொல்லப்பட்டிருப்பதால் அதே தாத்பர்யத்திலிருக்கலாம். இது இங்கு "தன்மை பெறுத்தி" என்று தொடங்கி ஸாயுஜ்யத்தாலே என்ற வளவால் விளக்கப்பட்டது. தன்மை பெறுத்தி = தன் தன்மையை = தன்னோடு ஐக்யத்தை, ब्रह्मैव भवति என்றதை

ணைக் கீழ்க் கொண்டு தன்னோடு समानभोगत्वलक्षणமான सायुज्यத்தாலே இவனுக்கு ஸஜாதீயரான அந்தமில்பேரின்பத்தடியரோடு இருத்தி', இப்படி समस्तप्रतिबन्धक निवृत्तिपूर्वकமாகவும் स्वस्वरूपाविर्भावपूर्वकமாகவும் देशकालावस्था-सङ्कोचமில்லாதபடியாகவும் தன் मनोरथத்துக்கு अनुरूपமாக இவன் मनोरथित्த கைங்கர்யங்களை யெல்லாம் यावदात्मभाविயாகக் கொண்டருளி, "सवयस इव ये नित्यनिर्दोषगन्धा:" என்கிறபடியே தனக்கு अन्योन्यம் ஒருவயஸ்ஸில் தோழன்மாரைப் போலே யிருக்கிற நித்யஸூரிகளோடு இன்று வந்த இவனோடு வாசியறப் புரையறப் பரிமாறி, ஸ்தோத்ரத்திலும் श्रीवैकुण्ठगद्यத்திலும் அருளிச்செய்த

---

பெறுவித்து. இது जीवब्रह्मैक्यமன்றென்ற கருத்தால் 'தன் தாளினிணைக் கீழ்க்கொள்ளுமப்பன்' என்று ஆழ்வார் அருளினர். தாளிணை—திருவடியிரண்டு. அதன் கீழ்க்கொள்வதாவது—பாதபீடமாகவும் திருவடியணையாகவும் ஆக்குவது: கிங்கரனுக்கி என்றபடி. ஆகத் தன்மையாவது सायुज्यம். இதே ஸாயுஜ்யம். ஸாயுஜ்ய சப்தத்தின் அர்த்தம் ஸமாநபோகத்வ பதத்தால் விளக்கப்பட்டது. समान युक् ययोस्तौ ; सयुजोर्भावः सायुज्यम्। युक् என்பதற்கு போக்யமென்று பொருளாம்; இருவருக்கும் போக்யமொன்றுவதோடு भोगமும் समानம் என்றறிவிப்பதற்காக समानभोग என்றது. இந்த ஸாயுஜ்யத்தை இவன் பெற்றது போல் நித்ய ஸூரிகளும் முன்னமே பெற்றிருப்பதால் இது மூலமாக இவனுக்கு அவர்கள் सजातीयர்களானர்கள் அந்த போகமானது எதென்னில், அது அந்தமில் பேரின்பத்து என்பதினின்று விளங்கும். அந்தம் இல்—அளவற்ற= अपरिच्छिन्नமான இன்பமுடையரான. அடியர்-தாஸர்—நித்யஸூரிகள்; அவரோடு இருத்தி—அவர்கோஷ்டியில் சேர்த்து. समस्त प्रतिबन्धक निवृत्तिயாவது—ஸர்வகர்ம நிவ்ருத்தி. ஸூக்ஷ்ம சரீர நிவ்ருத்தி. வாஸநா நிவ்ருத்தி. ப்ரக்ருதிஸம்பந்த நிவ்ருத்தி, धर्मभूतज्ञान विकासம் வந்தவுடன் ज्ञानसङ्कोचरूप-अविद्यानिवृत्ति எல்லாம். இந்தப் பூர்ணனுபவம் வந்தாலும் கைங்கர்யம் பெறாத போது फल पूर्तिயில்லை யாகையால் அது सत्यकामत्व सत्यसङ्कल्पत्व आविर्भावத்தைச் சொன்னதாலேயே தானே ஸித்தமென்று கருதி விவரிக்கிறுர் देशेत्यादिயால். ஆனாலும் சிலருக்கு அதிக கைங்கர்யமும் சிலருக்குக் குறைவாகவுமிருந்தால் ஸமாநபோகத்வமிராதே என்ன, அதற்கு ஹாநியில்லை யென்கிறுர். இவன் மநோரதித்த என்று. பரமாத்மா என்ன விரும்புகிறுனே, அதையே சேஷனை இவனும் விரும்புகிறபடியால் விரும்பின கைங்கர்யமெல்லாம் ஸித்தித்த போது அத்ருப்திக்கு இடமேயில்லை यावदात्मभाविயாக—ஆத்ம ஸ்வரூபம் நித்யமாகையாலே பின்னே எப்போதுமுள்ளதாக. सवयस इव என்பது முன்னமே (अर्थपञ्चके) व्याख्यातம். பரிமாறி—கலந்து, எம்பெருமான் இவனோடு கலப்பதும் அநாதியான நித்யஸூரிகளோடு கலப்பதும் வாசியற்றிருந்தது. புரையற=பேதமிராமல். தனக்கு வரும் அநுபவத்திற்குக் குறைவாக அநுபவமிராதபடி என்றதாம். அல்லது புரை—ஸாத்ருச்யம்; அது இராதபடி. இதற்கு நடு

मनोरथத்தின்படியே ऐकान्तिक-आत्यन्तिक-नित्य-किङ्करனன இவனுகப்பாலே தான் निरतिशय-आनन्दனாயிருக்கும். (கதியில் சில வேறுபாடுகள்).

ब्रह्मादिपदप्राप्तिपूर्वकमोक्षसाधनமான मधुविद्यादिகளிலும்,
सत्त्वं वहति शुद्धात्मा देवं नारायणं हरिम् । प्रभुर्वहति शुद்धात्मा परमात्मानमात्मना ॥'',

---

ஒன்றுமில்லை என்னும்படி. ஸ்தோத்ரத்தில் மநோரதமாவது. कदाऽहमैकान्तिक नित्यकिङ्करः प्रहर्षयिष्यामि सनाथजीवितः என்றது. கத்யத்தில் அது कदाऽहं भगवन्तं नारायणं साक्षात्करवाणि, सङ्ग्रहीष्यामि இத்யாதி. ऐकान्तिक=பரமாத்மா ஒருவனுக்கேயான, आत्यन्तिक=முடிவற்ற; பின் எப்போதுமான இவனுகப்பாலே தான் நிரதிசபாநந்தனுயிருக்கும்=தன் விஷயமான பூர்ணநுபவத்தால் இஷ்டப்பட்ட கைங்கர்யமெல்லாம் செய்து தன்னை உகப்பித்து அதாலே உவந்து சேஷனாய் நிற்கிற ஜீவனுடைய உகப்பைக் கண்டு, பாலுண்டு களித்த கிளியைக் கண்ட அரசனைப் போலே, எம்பெருமான் நிரதிசய ஆநந்தனாயிருனென்றதாம். இப்படி பரஸ்பரம் காண்பதால் பரஸ்பரம் ப்ரீதி வளம் பெறுவர். இவ்வளவும் அர்ச்சிராதி மார்க்கத்தில் வந்த அமானவன் 'स एनान् ब्रह्म गमयति' என்றுசெய்வித்த ब्रह्मप्राप्तिயின் விவரணமாகும். அதனால்இப்படி இவ்வுலகில் ப்ரபந்நருக்கு இக் கதிவிசேஷரூப அதிகாரார்த்தம் விளக்கப்பட்டது.

இனிக் கீழ்க்கூறிய ஆதிவாஹிகர்கள் கொண்ட மார்க்கமே முக்திமார்க்கமென்று சொல்லக்கூடுமோ? வேறு மார்க்கங்கள் பலவிடங்களில் காண்கின்றனவே என்கிற ஆசங்கையைப் பல விடங்களைக் காட்டி அறிவித்து நமக்கு அவ்வாசி அறியவேண்டியது அவச்யமில்லை யென்று பரிஹாரம் செய்கிறார். ब्रह्मादीति. இந்த मधुविद्येயிலுள்ள விசேஷம் அர்த்தபஞ்சகாதிகாரத்தில் தெளிவிக்கப்பட்டது. ஆதிபதத்தால் கைவல்ய ப்ராப்தி பூர்வக மோக்ஷஸாதநமான பஞ்சாக்நி வித்யையைக் கொள்வது. இது போல் ब्रह्मकार्यनिषेवणம் செய்து பிரமனுடைய ஸ்தாநுபவத்தைக் கண்டு உவந்த பிறகு மோக்ஷத்திற்கு ஸாதகமாக மஹாபாரதத்தில் சொன்ன வித்யையும் கொள்வது. இவை மூன்றும் அர்த்த பஞ்சகாதிகாரத்திலேயே வ்யக்தம். இங்கெல்லாம் சொன்ன விசேஷங்கள் முன்சொன்ன அர்ச்சிராதிமார்க்கத்தில் இராமையால் இதற்கான வழிகள் வேறென்று சங்கை. வேறு இடங்களையும் குறிக்கிறார் सत्त्व इति. சாந்தி பர்வ 307. அங்கே, ஸாங்க்யர்கள் கொண்ட முக்தி மார்க்கத்தைச் சொல்லுவதற்காக 23வது ச்லோகம் வரையில் ப்ருதிவீமுதலாகத் தத்துவங்களைபுத்திவரையில்சொல்லி, அந்தபுத்தி தமஸ்ஸிலும் அது ரஜஸ்ஸிலும் அது ஸத்துவத்திலும் அது ஜீவாத்மாவிலும் ஜீவாத்மா நாராயணனிடத்திலும் நாராயணன் மோக்ஷ ஸ்தாநத்திலும் ஸம்பந்தப்பட்டதாக மோக்ஷமார்க்கம் சொல்லும்போது. 'முக்திக்காக ஆகாசத்தில் ப்ரவேசித்தவுடன் ஸூர்யன் கிரணங்கள்வாயிலாகஅவர்களைத் தன்னைச் சுழற்றும் ப்ரவஹமென்ற வாயுவிடம் சேர்க்கிறதும்; வாயு மேல் ஆகாசத்தையும்மேலாகாசம் தமஸ்ஸையும் தமஸ்ஸூ ரஜஸ்ஸையும் அது ஸத்துவத்தையும்

"ये तु दग्धेन्धना लोके पुण्यपापविवर्जिताः । तेषां वै क्षेममध्वानं गच्छतां द्विजसत्तम ॥
सर्वलोकतमोहन्ता आदित्यो द्वारमुच्यते । ज्वालामाली महातेजा येनेदं धार्यते जगत् ॥
आदित्यदग्धसर्वाङ्गा अदृश्याः केनचित् क्वचित् । परमाण्वात्मभूताश्च तं देवं प्रविशन्त्युत ॥
तस्मादपि विनिर्मुक्ता अनिरुद्धतनौ स्थिताः । मनोभूतास्ततो भूयः प्रद्युम्नं प्रविशन्त्युत ॥
प्रद्युम्नाच्च विनिर्मुक्ता जीवं सङ्कर्षणं ततः । विशन्ति विप्रप्रवराः साङ्ख्ययोगाश्च तैः सह ॥
ततस्त्रैगुण्यहीनास्ते परमात्मानमञ्जसा । प्रविशन्ति द्विजश्रेष्ठाः क्षेत्रज्ञं निर्गुणात्मकम् ॥
सर्वावासं वासुदेवं क्षेत्रज्ञं विद्धि तत्त्वतः । समाहितमनस्कास्तु नियताः संयतेन्द्रियाः ।
एकान्तभावोपगता वासुदेवं विशन्ति ते ॥" इत्यादिகளான महाभारतादिवचनங்களிலும்,
"श्वेतद्वीपमितः प्राप्य विश्वरूपधरं हरिम् । ततोऽनिरुद्धमासाद्य श्रीमत्क्षीरोदधौ हरिम् ।
ततः प्रद्युम्नमासाद्य देवं सर्वेश्वरेश्वरम् । ततः सङ्कर्षणं दिव्यं भगवन्तं सनातनम् ॥
अयमप्यपरो मार्गः सदा ब्रह्मसुखैषिणाम् । परमैकान्तसिद्धानां पञ्चकालरतात्मनाम्"
என்றிப்புடைகளிலே जयत्संहितादिகளிலும்,

---

அடைவிப்பதும்கூறப்பெற்றது. அதன் மேல் இது; இதன் பொருள்—ஸத்வ மானதுதான் சுத்தமாயிருந்து நாரயணனையடைவிக்கிறது அந்த நாராயணன் பரமாத்மாவானதன்னைத் தானே யடைவிக்கிறன். அங்கே முக்தராவர் என்ற வாறும். இங்கே ஸூர்யனுக்குப் பிறகு வாயுவையும். ரஜஸ்தத்துவாதி களையும் நாராயணனில் கார்யம் காரணமென்கிற பேதத்தையும் கூறியுளது. இது அர்ச்சிராதியில் இல்லை ये तु இத்யாதி. திருநாராயணீயத்தில் 354ல். இப்போது அங்குள்ள பாடம் ये हि निष्कल्मषाः என்று. எவர்கள் ப்ராரப்த கர்மாவை அநுபவித்தொழித்து ஸஞ்சித பூர்வபாவங்களாலும் விடப்பட்டிருப்பாரோ, ஸ்த்திரமாம் வழியில் செல்லும் அவர்களுக்கு. எல்லா உலகத்தின் அஜ்ஞாநத்தையும் போக்கும் ஸூர்யன் மார்க்கமாகிறன். அவன் ஜ்வாலைகளும் தேசுமுள்ளவன். அவனாலே உலகம் தரிக்கப்படும். ஸூர்யனால் அங்கம் எரிக்கப்பட, யாருக்கும் காணவாகாமல் அணுவாய் [அவனிடம் புகுந்து] அநிருத்தனிடம் சேருவர். அவனிடம் இருந்து மனத்துக்கு அபிமாநியான ப்ரத்யும்நனிடம் புகுந்து வெளியேறி ஜீவாபிமாநியான ஸங்கர்ஷணனிடம் புகுகின்றனர். ஸாங்க்ய நிஷ்டரும் அவர்களோடு அவ்வாறே; முக் குணங்களால் விடப்பட்டு ஸர்வ ஜீவாந்தர்யாமியாய் ஸதுத்வரஜஸ்தமோகுணமற்றவனாய். ஸர்வத்துக்கும் வாஸஸ்த்தாநமுமான ஸர்வக்ஷேத்ரம் அறிந்த வாஸுதேவனை யடைந்து அவனிடம் நிற்கின்றன ரென்றதாம். இந்த பாரத வசனத்தில் ஸூர்யமண்டலம் போன பிறகு வரிசையாக எல்லாவ்யூஹஸ்த்தாநங்களும்சொல்லப்பட்டன. ச்வேதத்வீபம்இத்யாதி ஜயத்ஸம்ஹிதா வசநத்தில்—இங்கிருந்து ச்வேதத்வீபம் சென்று பகவானை யடைந்து அங்கிருந்து திருப்பாற்கடலில் அநிருத்தனை யடைந்து அவனுக்கும் மேலான ப்ரத்யும்நனையும் பிறகு ஸங்கர்ஷணனையும் அடைந்து மேலே பரப்ரஹ்மஸுகம் பெறுவர் பஞ்சகால பராயணர் என்றது; புடை-ரீதி. ச்வேதத்வீபாதிகள் இங்கே அதிகமாக உள்ளவை. பாஞ்சராத்ராதி கரணபாஷ்யத்தில்

"विभवार्चनात् व्यूहं प्राप्य व्यूहार्चनात् परं ब्रह्म वासुदेवाख्यं सूक्ष्मं प्राप्यत इति वदन्ति" என்று श्रीपाञ्चरात्राधिकरणத்திலும் சில अधिकारिविशेषங்களைப் பற்றச் சொல்லுகிற क्रममुक्तिपक्षத்திலும், सत्यलोकादिகளிலிருந்து முக்தராமவர்களுக்குமுள்ள गतिविशेषादिகளிருக்கும் கட்டளைகள் அவ்வோ अधिकारिகளுக்கே ज्ञातव्यங்களாகையால் இங்கு அவை வகுத்துச் சொல்லுகை அபேக்ஷிதமன்று.

---

விபவத்தையர்ச்சிப்பவன் வ்யூஹத்தை யடைகிருன். அங்கே வ்யூஹத்தை யர்ச்சித்து ஸூக்ஷ்மமான பரவாஸுதேவனைப் பெறுவதாமென்று அங்கங்கு உபாயாநுஷ்டானம் சொல்லப்பட்டது. கீழே மதுவித்யாதிகளுமென்று தொடங்கி உள்ள ஸப்தம்யந்த பதங்களெல்லாம் சொல்லுகிற என்றவிடத்தில் சேரும். இவற்றில் சொன்னதெல்லாம் க்ரமமுக்தி, ஆனால் மோக்ஷத்திற்கான உபாயாநுஷ்டாநம் பூலோகத்திலேயே ஆகிறது मधुविद्यादिகளில். கடைசியாகப் பாஞ்சராத்ராதிகரணத்தில் சொன்னவிடத்தில் அங்கங்குச் சென்று உபாயாநுஷ்டாநம் தோன்றுகிறது, இப்படி மோக்ஷம் போகிறவருக்கு, எல்லோருக்கும் பொதுவான அர்ச்சிராதி மார்க்கமில்லை யென்ன முடியுமா? அத்தோடு இந்த மார்க்கங்களையும் சேர்த்தால் எதை எங்குச் சேர்ப்பதென்கிற க்ரமம் தெரியவேண்டும். ப்ரளயகாலத்தில் ஸூர்யாதிகள் எல்லாம் அழிந்த பிறகு, பிரமனும் அவனோடு ஸத்யலோகத்திலிருப்பவரும் மோக்ஷம் போம்போது கீழிருந்து அர்ச்சிராதி மார்க்கத்துக்கு ப்ரஸக்தியில்லை; அங்கு எப்படி மார்க்கவ்யவஸ்தை என்ன அருளுகிருர் सत्येत्यादि. ஆதிபதத்தாலே ஸநகாதிகளுள்ள லோகத்தையும் கொள்வது. गतिविशेषादीति ஸூத்ரகாரர் मधुविद्यादिகளை விசாரித்திருந்தும் அர்ச்சிராதிகதியை श्रुतोपनिषत्कगतियாகப் பொதுவாகச் சொல்லியிருப்பதால் அர்ச்சிராதி மார்க்க மத்தியிலேயே ब्रह्मादिपदத்திற்கும் போகக்கூடுமாகையால் இம்மார்க்கமில்லை யென்ன வேண்டா. பாஞ்சராத்ரத்தில் 'अयमप्यपरो मार्गः' என்றிருப்பதால் வேறு மார்க்கமுமிருக்கலாம். கௌஷீதகிபர்யங்கவித்யையில் ஸ்வர்க்கலோக ப்ராப்தி பூர்வகமாக மோக்ஷப்ராப்தியைச் சொல்லுமிடத்திலும் அர்ச்சிராதி மார்க்கம் ஓதப்பெற்றிருக்கிறது. ப்ரஹ்மாதிகள் முக்தராம்போது அவர்களினிடங்களுக்குக் கீழேயிருக்கும் ஆதிவாஹிக ஸ்த்தாநத்திற்கு அவர் இறங்கவேண்டியதில்லை யாகையால் यथार्हம் அர்ச்சிராதியில் அம்சமிருக்கலாம். பூலோகத்திலிருந்து போகின்றவர்களுக்கு முழு மார்க்கம்; மற்றவருக்கு அவர் ஸமீபத்திலிருக்கும் ஆதிவாஹிக ஸ்த்தாநத்தில் தொடக்கம். க்ரமமுக்தியில் ப்ரக்ருதி மண்டலத்தில் विभव व्यूहार्चारूपமென்ற உபாயாநுஷ்டாநத்தால் மோக்ஷம் போகின்றவர்களுக்கும் இந்த ந்யாயமாகும். விரஜா நதியைக் கடந்த பிறகு அப்ராக்ருத சரீரம் பெற்று आमोद प्रमोद संमोद ரூபலோகங்களில் सालोक्य सारूप्यங்களைப் பெற்று முடிவாகப் பரவாஸுதேவனிடத்தில் सायुज्यம் பெறுதலென்கிற க்ரமமுக்தியில் ப்ரக்ருதி மண்டலத்தில் फल விசேஷமில்லாமையால் இந்த அர்ச்சிராதி மார்க்கமே யிருக்கலாம்.

இக் गत्यनुसंधानादिகள் स्वतन्त्रप्रपत्तिनिष्ठனை இவனுக்கு सद्वारकप्रपत्तिनिष्ठனுக்குப் போலே उपायाङ्गமாக நாள்தோறும் कर्तव्यங்களல்லவாகிலும் இவ் வுபாயத்தில் இழியும்போது अधिकारित्वसिद्धिக்காகப் फलार्थित्वम् अपेक्षितமா கையாலே फलपर्वविशेषानुसन्धानமாய்ப் புகக்கடவன பின்பு, வரப்போகிற

---

க்ரமமுகதியை யபேக்ஷிக்காத நம்போன்றவர்களுக்குப் போதுமானது பரமபத த்தில்பொதுவாக உள்ள இவ்வளவே. ஆமோதாதி ப்ராப்திரூப விசேஷமல்ல என்றறிவிப்பதற்காகவும் இவ்வதிகாரத்தில் பரமபதப்ராப்தி மட்டிலே நிற்காமல் பரப்ரஹ்ம ப்ராப்தி வரையில் गतिविशेषத்தைக் கூறியதாம். இவ்விடத்தில் चयदीनां என்கிற ஸாராவளி—அர்ச்சிராத்யதிகரண ச்லோக த்தை நமது ஸாரார்த்த ரத்ந ப்ரபையுடன் அநுஸந்திப்பதாம். गतिविशेष மென்பதற்கு மார்க்கத்தில் விசேஷமென்று பொருள். ப்ரஹ்மாதிகளுக்கு அர்ச்சிராதி மார்க்கம் தவிர வேறு மார்க்க ப்ரஸக்தியில்லையே. गतिविशेषादि என்கிற ஆதிபதத்தால் அங்கங்கு வரும் फलानुभवप्रकार விசேஷத்தைக் கொள்வது. ந்யாஸ வித்யை யநுஷ்டிப்பவருக்குத் தைத்திரீயத்தின் முடிவில் அர்ச்சிராதி மார்க்கத்தில் செல்லும் போதே உத்தராயணத்தில் செல்லுப வருக்கு ஸூர்ய ஸாயுஜ்யமும், தக்ஷிணாயனத்தில் சந்த்ர ஸாயுஜ்யமும் அதிகமாகச் சொன்னதும் நமக்கு அபேக்ஷிதமன்று, நாம் அங்குள்ள மந்தரத் தைக் கொண்டு பரந்யாஸத்தை அநுஷ்டிப்பதில்லையே கட்டளைகள்= வ்யவஸ்த்தைகள். வகுத்து—பிரித்து—விவரித்து. இப்படி மற்றவர் அறிய வேண்டிய கதிவிசேஷாதிகள் நமக்கு அபேக்ஷிதமன்றென்றதால் இவ்வதி காரத்திற் சொன்ன கதிவிசேஷாதிகளை ப்ரபந்நர் அவச்யம் அறியவேண்டு மென்றதாகிறது. அது, கதிசிந்தநம் பக்திக்குப் போல் இங்கும் அங்கமென்ற காரணத்தினலாகில் ப்ரபத்திக்கு இதராபேக்ஷை சொன்னதாகுமே என்ன— அறிவது சிந்தநமென்ற அங்காநுஷ்டானத்திற்காக வல்லவென்கிறார் இக் கதிஜ் இதனல் இதற்கு கதிவிசேஷாதிகாரமென்றே பெயர் தகுமென்று தெரிகிறது சிந்தநம் அங்கமாகாவிட்டாலும் கதியை இவ்வதிகாரத்தில் சிந்திப்பதால் கதிசிந்தநாதிகாரமென்று பெயரிருக்கலாமே யென்னில், அப்போது எல்லா அதிகாரதிலும் சிந்தநபதம் சேர்க்கலாம். விசேஷபதம் ஆவச்யகம். இதனுலேயே மேலதிகாரத் தொடக்கத்தில் இக்கதிவிசேஷ த்தாலே என்னப்போகிறார் गत्यनुसन्धानादिகள் என்கிற ஆதிபதத்தால் புண்ய பாபங்களுக்கு हानम् उपायनम् இடையிடையே ராஜோபசாரங்கள் अप्राकृत-शरीरप्राप्त्यादि இவற்றின் அநுஸந்தாநத்தைக் கொள்வது. फलपर्वविशेषेति. பொதுவாக மோக்ஷபலம் என்பதைவிட இவ்விரிவுடன் அநுஸந்தித்தால் ருசி யதிகமாமாகையால் உத்கட (பலமான) டரவ்ருத்தி யுண்டாகும். உபாயாநு ஷ்டாநத்திற்குப் பிறகு மிவ்வநுஸந்தாநம் தானே வரும். விவாஹத்திலே அபிருசியுள்ளவன் நிச்சயமான பிறகு விவாஹம் நடக்கும் நாள் வரையில் அது விஷயவிசாரமில்லாமலே வாளாவிருப்பானே? எத்தனையோ மநோரத

கண்ணாலத்துக்கு நாள் எண்ணி யிருக்குமாப்போலே **पूर्वप्रार्थितपुरुषार्थस्मरणमात्र**மாய் இப் புருஷார்த்தம் பெறப் போகிறேமென்கிற **प्रीत्यतिशय**த்தை விளைவித்துக் கொண்டு **स्वयंप्रयोजन**மாயிருக்கும் ஆகையால் இங்கு **समुदायज्ञानमात्र**த்தாலும் இவனுக்கு **अपेक्षितसिद्धि** யுண்டு.

"**समीपं राजसिंहस्य रामस्य विदितात्मनः । सङ्कल्पहयसंयुक्तैर्यान्तीमिव मनोरथैः**" என்னும் படி பிராட்டி இருந்த இருப்பு இவனுடைய **गत्यनुसन्धान**த்துக்கு **निदर्शनम्**.

> **நடைபெறவங்கி பகலொளிநா ளுத்தராயணமாண்டு**
> **இடைவரு காற்றிரவி யிரவின்பதி மின் வருணன்**
> **குடையுடை வானவர்கோமான் பிரசாபதி யென்றிவரால்**
> **இடையிடை போகங்களெய்தி யெழிற்பத மேறுவரே.**

---

ங்களை யடுக்கிக் கொண்டு தானே யிருப்பான். அது விவாஹத்திற்கு அங்கமில்லையே. அதுபோல் இது தானாக அபேக்ஷிக்கப்பட்டதாகும். **ஆகையால்**= இச்சிந்தநம் அங்கமன்றாகையால்—விசேஷ ஜ்ஞாநமிராமலும் ப்ரவ்ருத்தி யுண்டாகையால்; ஸ்ரீமத்ராமாயணத்தில் **अध्यात्मपर**மான யோஜநையில் ஸீதைக்கு ராமப்ராப்தியை ஜீவனுக்கு ப்ரஹ்ம ப்ராப்தியாகச் சொல்லுவதால் அதையே நிதர்சநமாகக் கூறுகிறார் **समीपमिति**. ராமன் **विदितात्मा**— தன்னையும் ஸீதையையும் நன்கு உணர்ந்தவன், தன்னைப் பெற விருக்கும் ஜீவனுடைய நிலை யறிந்த பிரானுகிறான். ஸீதை நேராகப் போகவாகாமற் போனாலும் ஆசையாகிற ரதங்களேறிச் செல்கிறாள். அந்த ரதத்திற்குக் குதிரைகள் ஸங்கல்பங்களே, அவள் எப்படி சிந்திக்காமலிருக்க முடியவில்லையோ அதுபோல் முமுக்ஷுவும் இச்சிந்தனையிலேயே ஆழ்ந்திருப்பானென்றபடி. அபேக்ஷிதஸித்தி= இஷ்டபல ப்ராப்தி.

அதிகார ஸங்க்ரஹப்பாசுரம் **நடை** இதி. நடை பெற—ப்ரஹ்ம நாடியாகிற தலைவாசலாலே புறப்பட்டு நடையைப் பெற்ற பிறகு. **அங்கி**= அக்னி, **பகல்**—அஹஸ்ஸு, ஒளிநாள்—நிலாவுள்ள பக்ஷம். அதன்மேல் உத்தராயணம். பிறகு ஆண்டு—ஸம்வத்ஸரம். **இடைவரும்**—**संवत्सरात् आदित्य**மென்று ஸம்வத்ஸரத்திற்கு மேல் ஸூர்யனைச் சொல்ல வேண்டுமாயினும் **मासेभ्यो देवलोकं देवलोकात् आदित्यम्** என்ற வாக்யத்தை அநுஸரித்து ஸம்வத்ஸர ஆதித்யர்களுக்கு நடுவில் வந்து சேர்ந்த காற்று—வாயு; **இரவி**—ரவி=ஸூர்யன். **இரவின்பதி**—இரவுக்குப் பதியான சந்த்ரன். **மின்**—மின்னல்=வைத்யுத புருஷன்; வருணன், பிறகு **குடை உடை வானவர் கோமான்**—த்ரைலோக்ய ஏகச்சத்ராதிபதியான தேவேந்த்ரன். இவன் த்வாரபாலகனான இந்த்ரனல்லனென்பதற்காக இவ்விசேஷணம். ப்ரஜாபதி—ப்ரஹ்மா. **இவர்கள்** மூலம்—**இடையிடை**—நடுநடுவே ஒவ்வொரு ஆதிவாஹிகரிடத்திலும் **போகங்கள்**—அவர்கள் ஸமர்ப்பித்த உபஹாரங்களை **எய்தி**—பெற்று. **எழில் பதம்**—உஜ்ஜ்வலமான பரமபதம். மோக்ஷம் செல்லுகின்றவர் ஏறுவர்.

पितृपथघटीयन्त्रारोहावरोहपरिश्रमैः निरयपदवीयातायातक्रमैश्च निरन्तरैः ।
अधिगतपरिश्रान्तीन् आज्ञाधरैरतिवाह्य नः सुखयति निजच्छायादायी स्वयं हरिचन्दनः ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे निर्याणाधिकार एकविंशः ॥ 21.
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

—o—o—

கீழே இழந்த இழவெல்லாம் தீர என்ற இழவுகளை விரித்துரைக்கின்றாராய் கதி விசேஷத்தால் பெறும் பலனை ஸங்கரஹிக்கிறார். **पितृपथेति. हरिचन्दनः**—சந்தந வ்ருக்ஷம் போலும், ஹரிசந்தநமென்கிற கல்பவ்ருக்ஷமேயென்னும்படியும் இருக்கும் **हरिः**—எம்பெருமான். **निरन्तरैः**—இடைவிடாமல் தொடர்ந்து வரும் **पितृपथ...परिश्रमैः**—ஸ்வர்கலோகம் போகவான தூமாதி மார்க்கத்தில் இடையில் பித்ருக்கள் சேர்ந்திருப்பதால் **पितृपथ**மென்றும் **पितृयाण**மென்றும் சொல்லப்படும் தூமாதிமார்ம், அதுவாகிற **घटीयन्त्र** ஏற்றத்தில் **आरोह अवरोह**—தண்ணீர் எடுத்துக்கொண்டு சால் ஏறுவதும் இறங்குவதும் போல் கர்மங்களை பரித்துக்கொண்டு ஜீவன் செய்யும் கதாகதங்களாகிற ப்ரமணங்களாலும் **निरयपदवी**-நரகமார்க்கத்தில் செய்யும் **यात आयात क्रमैः**—முறையே வரும் போக்கு வரவுகளாலும் **अधिगतपरिश्रान्तीन्**—அடையப்பட்ட களைப்பை யுடையவர்களாயிருந்த **नः**—உபாயாநுஷ்டாநம் செய்துள்ள நம்மை **आज्ञाधरैः**—தன் ஆஜ்ஞையை சிரஸாவஹித்து அதிவஹநம் செய்கின்ற முதலிகளைக் கொண்டு **अतिवाह्य**—அந்த கதாகத ஸ்த்தாநங்களையெல்லாம் கடக்கவைத்து, **स्वयं**—தனது தயாவாத்ஸல்யாதி மூலமாக **निजच्छायादायी**—தன்னுடைய நிழலைக் கொடுப்பவனாய் **सुखयति**—ஆநந்தப்படுத்துகிறான். தத்த்வ ஜ்ஞாநிக்கு நரகத்துக்கு ஏற்பட்ட கதாகதமும் ஸ்வர்க்க கதாகதமும் ஸமமாகும், அங்குள்ள நிழலும் தாபத்ரயம் கொடுப்பதாலே வெய்யிலே. பரமபதத்தில் தேஜோராசியாயினும் எம்பெருமான் அளிப்பது அவனுடைய நிழல். **'वृक्ष इव स्तब्धो दिवि तिष्ठत्येकः'** என்றபடி அவனே ஸாதுக்களுக்கொரு நிவாஸ வ்ருக்ஷம். **'वासुदेवतरुच्छाया'** என்றபடி அவனிருக்கச் செய்வது அவன் நிழலிலாம். அவனுடையச் சாயை யென்பதற்கு அவனுடைய சாயல் அவனோடு பரமஸாம்யம் என்றும் பொருளாய் பரமஸாதர்ம்யத்தை யளிக்கிறான் என்றதுமாம்.

கதிவிசேஷாதிகாரம் முற்றும். 21

—o—o—

ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம:

## பரிபூர்ண ப்ரஹ்மாநுபவாதிகாரம் 22

மூன் அதிகாரத்தில் அமாநவனென்ற ஆதிவாஹிகன் பரப்ரஹ்ம ப்ராப்தி வரையில் செய்விப்பதால் பரமபதம் சென்ற பிறகு பரப்ரஹ்ம பர்யங்கா

श्रीः

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

# परिपूर्णब्रह्मानुभवाधिकारः

## பரிபூர்ணப்ரஹ்மாநுபவாதிகாரம்.

—o—•—

वितमसि पदे लक्ष्मीकान्तं विचित्रविभूतिकं सचिवगमितः संपद्याऽऽविर्भवत्सहजाकृतिः ।
स्फुटतदपृथक्सिद्धिः सिद्ध्यद्गुणाष्टकतत्फलो भजति परमं साम्यं भोगे निवृत्तिकथोज्झितम् ॥

இக் गतिविशेषத்தாலே சென்றவனுடைய परिपूर्णब्रह्मानुभवமிருக்கும்படி எங்ஙனே யென்னில்—"அனைத்துலகுமுடைய வரவிந்தலோசனனைத் தினைத்

---

ரோஹணம் வரையிலான எல்லா அம்சங்களையும் சொல்லியிருந்தாலும் அவை யெல்லாம் ப்ரஹ்மஸூத்ரம் நாலாவது அத்யாயம் நான்காம் பாதத்தின்படி फलकोटियில் சேர்ந்தபடியாலே फलाधिकारத்தில் ஸூத்ர க்ரமப்படி ஃபலங்கள் வரும் வகையை ஸங்க்ரஹிக்கிறார் ச்லோகத்தில்; முன்னமே சொல்லியிருப்பதால் மணிப்ரவாளத்தில் இவ் விவரம் விடப்படும். वितमसि इति. மோக்ஷம் செல்லுகிறவன் सचिवगमितः—தன்னுடைய தோழன்மார்களான ஆதிவாஹிகர்களாலே அடைவிக்கப்பட்டவனாய் वितमसि पदे—तमसः परस्तात् என்று சொல்லப்பட்ட ரஜஸ்தமோகுணங்களற்ற சுத்த ஸத்வத்தில் विचित्रविभूतिकं—லீலாவிபூதி போகவிபூதி யென்கிற இரு விபூதிகளுக்கும் ஸ்வாமியாய் லீலாவிபூதியைவிட விலக்ஷணமான விபூதியை யுடையனுமான लक्ष्मीकान्तं—ஸ்ரீபதியை संपद्य—'परं ज्योतिरुपसंपद्य' என்றபடி அடைந்து आविर्भवत्सहजाकृतिः—தன்னிடத்தில் எப்போதுமிருந்தும் தோன்றாதிருந்த अपहतपाप्मत्वाद्याकारங்களுடைய தோற்றம் பெற்றவனாய் स्फुट तत् अपृथक्सिद्धिः—எம்பெருமானோடு விட்டுப் பிரியாமையை—அதாவது நித்யமான சேஷத்வ பாரதந்த்ரயங்களை அறிந்தவனாய் ஸ்வாதந்த்ரயாதி भावங்களை விட்டு सिद्ध्यद्गुणाष्टकतत्फलः— ஸத்யஸங்கல்பத்வம் வரையிலான எட்டு ப்ராஹ்ம குணங்களுடையவும் அவ்வெட்டின் फलமான ஸத்ய ஸங்கல்ப அப்ராக்ருத சரீர மூலமான ஸர்வ கைங்கர்யத்தினுடையவும் ஸித்தி யுடையவனாய் भोगे—ஆநந்தாநுபவத்தில் परमं साम्यं—சிறிதும் குறையற்ற ஸாம்யத்தை निवृत्ति कथा उज्झितं புநராவ்ருத்தியின் பேச்சே யில்லாதபடி भजति—பெறுகிறான்.

இந்த ச்லோகத்தில் அடைவாக நாலாம் பாதத்தின் எல்லா அதிகரணங்களின் அர்த்தமும் சுருக்கப்பெற்றன. இவ்வர்த்தங்களெல்லாம் கீழே கூறப்பட்டபடியால் பரிபூர்ணத்வத்தை உபபாதநம் செய்வதற்காக பரம ஸாம்யபதார்த்தத்தை வெளியிடுகிறார் இச்சதி இத்யாதியால். அனைத்து திருவாய்மொழி 6.7-10. நினைக்கிறேனென்ற பாசுரம். அனைத்து உலகும் உடைய—நித்ய அநித்ய ஜட அஜட ஸர்வலோக ஈச்வரனை, அரவிந்த லோசனனை—செந்தாமரைக் கண்ணனை. தினை தனை உம்—தினை யென்கிற

தனையும் விடாள்" इत्यादिகளிற்படியே सर्वदेश-सर्वकाल-सर्वावस्थैகளிலும் सर्वेश्वरனை अनन्तங்களான विग्रह-गुण-विभूति-चेष्टितங்களில் ஒன்றும் குறையாமே निरतिशयभोग्यமாக விஷயீகரித்துக் கொண்டிருக்கும். இவ்வனுபவம் ஈச்வரனுக்கும் இவனுக்கும் अत्यन्ततुल्यமாகையாலே परमसाम्यம் சொல்லுகிறது.

"உணர் முழு நலம்" என்றும், निरस्तातिशयाह्लादसुखभावैकलक्षणा । भेषजं भगवत्प्राप्तिरेकान्ताऽऽत्यन्तिकी मता ॥ என்றும் சொல்லுகிறபடியே भगवत्स्वरूपம் भोग्यமாகப் प्राप्तம்; மற்றுள்ளவை भोग्यமாம்படி எங்ஙனே யென்னில்—

ராஜமஹிஷிக்கு ராஜா भोग्यனானால் அவனுக்கு अभिमतங்களாய் அவனுடைய भोगத்துக்கு உறுப்பான भोगोपकरणभोगस्थानादिகளும் இவளுக்கு அநுகூலமாமாப்போலே இங்கும் भगवत्स्वरूपानुबन्धिகளானவை யெல்லாம் भोग्यமாகக் குறையில்லை.

இப்படி सर्वप्रकारविशिष्टனைக்கொண்டு सर्वेश्वरன் भोग्यனென்னுமிடம்

---

தாந்யத்தின் அளவுகூட; சிறிதளவுமென்றபடி. விடாள்—இந்த நாயகி விடமாட்டாள்; இதற்கு முன்காலம் அநுபவிக்காமலிருந்தாலும் இனி ஒழிவில்காலமெல்லாம் இரு விபூதிகளிலும் சிறு ப்ரதேசம்கூட விடாமல் ஸர்வ விசிஷ்டமாக எம்பெருமானை அநுபவித்த வண்ணமே இருப்பாளென்ற முக்த நிலை இதன் பொருள். பரமஸாம்யமென்றால், எம்பெருமானுக்குள்ள ஸகல ஆகாரங்களும் இவனுக்கு வருமென்ற பொருளல்ல; ஆநந்தாநுபவத்திலேற்பட்ட ஸாம்யமானது பரமமாய்—எம்பெருமானோடு ஏற்றத்தாழ்வின்றி யிருக்குமென்பதே பொருளென்கிறார். இவ்வநுபவம் இதி. ஸர்வேச்வரனை ஸர்வ விசிஷ்டமாய் அநுபவிப்பது போகமென்னக்கூடுமோ அந்த ஸர்வத்தில் अभोग्यமாய் ஹேயமானவையும் சேருமே யென்று சங்கிக்கிறார் உணர் இதி. முழு உணர் முழு நலம்—பரமாத்ம ஸ்வரூபம்—அபரிச்சிந்ந ஜ்ஞாநாநந்த மயமாயிருக்கும். அதனால் அவனுடைய ப்ராப்தி ஸுகமயமாகும். அதைச் சொல்வது निरस्तेत्यादि. வி.பு. 6-5-59 निरस्त अतिशय—உயர்வற உயர்ந்த आह्लाद्—மகிழ்ச்சிக்கு உரிய, सुख भाव—ஆநந்தத்வமே யாகிற लक्षण-ஸ்வரூபத்தை யுடையதாய், एकान्ता ஒன்றையே பரமப்ரயோஜநமாகக் கொண்ட आत्यन्तिकी—பின் எப்போதுமழியாத भगवत्प्राप्तिः—எம்பெருமானின் அநுபவமே भेषजं मता—ஸம்ஸார வ்யாதிக்கு மருந்தாகக் கொள்ளப்பட்டது. அநுபவகார்யமான ஆஹ்லாதத்தைச் சொன்னது அநுபவ பரீவாஹமான கைங்கர்யத்தையும் இதில் சேர்ப்பதற்காக. இவ்வநுபவம் ஆத்யந்திகமா யிருப்பதால் ஸம்ஸார வ்யாதிக்கு இடமே யில்லையென்றபடி. இதில் भगवत्प्राप्तिः என்று எம்பெருமானை தானே போக்யமாகச் சொன்னது; ஹேயமான விபூதியைக் கூட்டினால் விஷம் கலந்த தேன் போல் अभोग्यமாகுமே. மற்றவையும் தேனே; விஷமல்லவென்னில், அது எங்ஙனே என்று கேள்வி. உறுப்பான—கருவியான, ஸாதநமான. இந்த ராஜந்யாயத்தாலே பகவானிடம் எல்லாம் எப்படி போக்யமென்னில், அருளிச்செய்கிறார் இப்படி.

ुतिस्मृत्यादिகளிலே प्रसिद्धம். இவ்வர்த்தத்தை भूमाधिकरणத்திலே साधित्‌
கருளினர். இவற்றில் निरतिशयानुकूल्यத்தாலே परमप्राप्यமாகையாலே भगवत्स्वरूप

---

இதி. भोगोपयोगिகள் மட்டும் முக்தனுக்கு போக்யமாகலாமென்பதில்லை. பகவா
னென்கிற பதத்திற்கு ஜ்ஞாந ஐச்வர்யாதி குணங்களுடன் கூடிய பரமாத்மா
வென்று பொருள். ज्ञानैश्वर्यादिகள் ஸர்வவிஷயம். ஆக सर्वविशिष्ट ज्ञानैश्वर्यादिविशिष्ट
भगवत्प्राप्ति என்றால் அதில் ஸர்வமும் சேரும். ஸர்வமும் भोग्यமே யாகையால்
விஷக்கலப்பில்லை யென்று கருத்து. श्रुतिस्मृतीति सर्वं ह पश्यः पश्यति सर्वमा-
प्नोति सर्वशः என்கிற ச்ருதி, முக்தன் எல்லாவற்றையும் காண்கிறான்; எல்லாம்
போக்யமாக அனுபவிக்கிறானென்கிறது, आनन्दमीमांसैயில் 'युवा स्यात्' என்று
தொடங்கி ப்ருதிவ்யாதி விபூதிவிசிஷ்டாநுபவமே மநுஷ்யாநந்தமென்று
சொல்லி அதை மேன்மேல் பெருக்கினபடியால் एक ब्रह्माण्डविभूतिविशिष्टचतु-
र्मुखனைக்காட்டிலும் अनन्तब्रह्माण्डादि प्राकृत अप्राकृत सर्वविशिष्ट परब्रह्मத்தையே
परमानन्दमयனைக் சொல்லுவதால் ஸர்வமும் போக்யமாகை தெரிகிறது. यद्वै
तत् सुकृतं, 'रसो वै सः, என்கிற வாக்யமும் கார்யமான வஸ்துவையும் ரஸ
த்தில் சேர்க்கிறது. 'सर्वेषु लोकेषु कामचारो भवति' 'कामान्नी कामरूपी अनुसञ्चरन्'
இத்யாதிகளும் காண்க. இப்படி எல்லாம் भोग्यமாயிருப்பதாலே ஸர்வ
விசிஷ்டமான ப்ரஹ்மத்தை நிரதிசய ஸுகமாக்கி இதில் அகப்படாத்
வஸ்து ஒன்றுமில்லை யென்றது भूमविद्यैயிலுள்ள यो वै भूमा तत् सुखं
यत्र नान्यत् पश्यति नान्यत् शृणोति नान्यत् विजानाति-स भूमा என்ற வாக்யம்.
भूमाவாவது பெரிது; எங்கும் பரவியது सर्वविशिष्टமானது; அது ஸுகமென்றால்
ஸர்வமும் ஸுகமென்றும் தேறும். இந்த ச்ருதிவாக்யத்திற்கு, எதைக்
காண்கிறவன் வேறொன்றைக் காண்கிறதில்லையோ அதுவே பெரிய ஸுக
மென்றால், ஸுகமான எம்பெருமானைக் காண்பவன் ஸ்வர்க்காதிகள் அல்ப
ஸுகமாகையாலே உபேக்ஷிக்கிறானென்று பரமாத்ம ஸுகத்திற்கு உத்கர்ஷ
த்தைச் சொல்வதாக அர்த்தம் தோற்றும். அவ்வாறு உரைக்காமல் மோக்ஷ
த்தில்ஸர்வத்தையும் எம்பெருமானில் உள்ளடக்கி ஸர்வவிசிஷ்ட ப்ரஹ்மத்தை
யநுபவிக்கிறபடியால் இதிலடங்காத தொன்றுமில்லை யாகையாலே வேறொ
ன்றைக் காண்பதில்லை யென்று பாஷ்யத்தில் பொருள் கூறியதால் எல்லாம்
போக்ய கோடியில் சேர்ந்திருப்பது ஸ்பஷ்டம், परमात्मनि यो रक्तः विरक्तोऽपरमा-
त्मनि என்றபடி ட்ரச்ருதி மண்டலத்தில் வைராக்யத்தோடிருப்பவனுக்கே
மோக்ஷமாகையால் ப்ரக்ருதியினின்று விடப்பட்டிருக்கையே மோக்ஷமென்று
வேறிடம் செல்லவேண்டியிருப்பதால் த்யாஜ்யமான இதை மோக்ஷத்தில்
அநுபவிப்பது தகுமோ? அப்படியானால் நித்யவிபூதியைப் போலே இதுவும்
பரமபதமே யாகுமே யென்ன—எல்லாம் ப்ராப்யமாகையாலே பதமே. ஆனா
லும், மூன்று பதத்திற்குப் परमत्वம் विशेषणமென்று அதன் கருத்தையுரைக்
கிறார் இவற்றில் இதி. பரமபதத்திற்கு முக்யார்த்தம் பரமாத்ம ஸ்வரூ
பமே. அதற்குப் பரமத்வம் ஏற்படுகிறது வைகுண்டலோகத்திலாகையால்

த்தைப் परमपदமென்கிறது. இப்भगवत्स्वरूपத்தினுடைய परिपूर्णानुभवம் பெறுவது भोग्यतमமாய் सर्वोत्तरமாயிருப்பதொரு स्थानविशेषத்திலே சென்றுலாகையாலே அத்த स्थानविशेषத்தையும் परमपदமென்கிறது. இவ்வनुभवத்துக்கு आश्रयமாய்க் கொண்டு अनुभाव्यமாகையாலே भगवद्विभूतिभूतமாய், ज्ञानानन्दलक्षणமான தன் ஸ்வருபத்தையும் परमपदமென்கிறது. இவை மூன்றுக்கும் மற்றுள்ளவற்றுக்கும் प्राप्यत्वमात्रம் अविशिष्टம்.

இப்படி भगवत्स्वरूपगुणविग्रहादिகளும் शुद्धसत्त्वाश्रयமான नित्यविभूतियும் ஸ்வ ஸ்வருபமும் भोग्यமானாலும் ப்ரதிகூலமாகப் प्रत्यक्षादिप्रमाणसिद्धமாய் முமுக்ஷுவுக்குத் त्याज्यமாக சாஸ்த்ரங்களிற் சொல்லப்பட்ட லீலாவிபூதியில் पदार्थங்கள் முக்தனுக்கு भोग्यமாகக் கூடுமோவென்னில்—அதிலும் குறையில்லை, पित्तोपहतனுக்குப் प्रतिकूलமான பால் பித்தம் சமித்தால் அநுகூலமாமாப் போலவும், सार्वभौमனை பிதாவினுடைய சிறைக்கூடம் சிறை கிடக்கிற ராஜகுமாரனுக்கு அப்போது प्रतिकूलமாய் ராஜா சிறைக்கூடத்தினின்றும் புறப்படவிட்டு உகந்து सुखभोगனாக வைத்தவளவில் சிறைக்கூடமானகோப்புக் குலையாதிருக்கச்செய்தே பிதாவின் विभूतियென்று அநுகூலமாமாப் போலவும். "यस्त्वया सह स स्वर्गो निरयो यस्त्वया विना" என்றும், "न हि मे जीवितेनार्थो नैवार्थैर्न च

---

அதுவும் பரமபதம். அவ்வநுபவம் இவன் தன் சுத்தஸ்வருபம் பெற்றே பெற வேண்டியிருப்பதால் ஸ்வஸ்வருபமும் பூரணமாக அநுபவிக்கப்படுவதால். தன்=ஜீவனின் ஸ்வருபமும் பரமபதம். ப்ரக்ருதி மண்டலம் பரமபதமாகா விட்டாலும் ஆநுகூல்யம் மட்டுமிருப்பதால் பதமாகும். ப்ரதிகூலமாயிருந்ததும் த்யாஜ்யமாகச் சொல்லப்படுவதுமான லீலாவிபூதியே அப்போது அநுகூலமாகலாம். இதற்கு இரண்டு த்ருஷ்டாந்தம் இங்கருளுகிறார் पित्तेति. पित्तोपहतனுக்கு-பித்தரோகத்தால் பீடிக்கப்பட்டவனுக்கு; அப்போது-சிறையில்கிடந்த போது ப்ரதிகூலமாய்=ப்ரதிகூலமாயிருந்து. இதற்கு அநுகூலமாய் என்பதில் அந்வயம். கோப்பு—கட்டுக்கோப்பு—அமைப்பு. சிறைககூடம் உள்ளவிடம் மட்டும் போக்யமாகுமென்பதில்லை. அவ்வமைப்பு அவ்வண்ணமிருந்தாலும் போக்யமாகிறது. அது தனக்கு அதீநமானதால் இஷ்டப்படி பயன்படுமென்றதாலுமாம். தவிர முன்பு பிதாவே ப்ரதிகூலமாயிருந்ததால் அதுவும் ப்ரதிகூலமாயிற்று. அவன் அநுகூலமான பிறகு அவனுடையதென்கிற நோக்கினால் அதுவும் அநுகூலமாகும். இந்த ரீதி ப்ரக்ருதத்திற்கு உபயுக்தமானது. ராஜாவுக்கு விபூதியாயிருந்தே ஒருவன் ராஜகுமாரனுக்கு ப்ரதிகூலனாயிருந்தால் பிதாவின் விபூதி யென்று அநுகூலனாக நினைக்கப்படுவானோ? அதுபோல் ப்ரதிகூலமான ப்ரபஞ்சம் அநுகூலமாக நினைக்கப்படுமோ என்னில்—ப்ரக்ருதி மண்டலத்தில் வஸ்துக்களே பகவத் ஸம்பந்த மிராதபோதே ப்ரதிகூலமாய் ஸம்பந்தமேற்பட்ட பிறகு அநுகூலமாயிருப்பதைப் பலரிடம் காண்பதால் அதுபோல் இங்குமாகும்; ப்ரபஞ்சத்திற்கு ப்ரதிகூலத் தன்மை நித்யமன்றென்கிறார். य इति (रा) यः—

भूषणैः । वसन्त्या राक्षसीमध्ये विना रामं महारथम् ॥" என்றும் "ஏருருமிறையோ' னிலும் சொல்லுகிறபடியே भगवत्संश्लेषமின்றிக்கே தான் நின்ற போது कर्मानुरूपமாகத் தனக்குப் प्रतिकूलமாயும் अल्पानुकूलமாயும் தோற்றின लीला-विभूतियில் पदार्थங்கள் முக்தனாய் निरन्तरभगवदनुभवம் பண்ணுகிறவனுக்கு निरतिशयभोग्यवर्गத்திலே சொருகுகை उपपन्नம். இப்படி बद्धருக்குப் प्रतिकूलமாயும் अल्पानुकूलமாயும், कर्मबन्धமில்லாதார்க்கு अनुकूलस्वभावமாயுமிருக்கை அப் पदार्थங்களுக்கு भगवदिच्छासिद्धம்.

இப்படி स्वेच्छासिद्धமான ஆநுகூல்யத்தையுடைத்தான தன் பாசுரங்கள் எல்லாவற்றோடும் கூடின ஸ்ரீமானான நாராயணன் प्राप्यமென்னுமிடம்

---

எந்த இடமானது, நாதா! त्वया सह-உன்னோடு எனக்கு வாய்க்குமோ, स स्वर्गः-அது எனக்கு மிக்க ஸுகமாம், यः-எந்தவிடம் त्वया विना—உன்னை விட்டோ, सः-அது निरयः—பெருந்துக்கமென்றாள் ஸீதை புறப்படும் போது: அசோக வநத்திற் சொன்னது மேலே न हि இதி. महारथं-போரில் பரிவாரத்தோடு தன்னை ரக்ஷிக்கும் ராமனை விட்டு ராக்ஷஸிகள் நடுவில் வஸிக்கும் எனக்கு जीवितेन अर्थो न—உயிரிருப்பதால் ப்ரயோஜநமில்லை, வேறு வஸ்துக்களாலும் பூஷணங்களாலும் ப்ரயோஜநமில்லை யென்றபடி. இதனால் ஓரே இடம் ஓரேவஸ்து ஓரே பூஷணம் ராமஸம்பந்தமிராமையால் ப்ரதிகூலமாய் ராமஸம்பந்தமுள்ள போது அநுகூலமாவது தெரிகிறது அதுபோல் ஸம்ஸாரியான போது ப்ரதிகூலமான ப்ரபஞ்சம் முக்தனுக்கு அநுகூலமாகும். நம்மாழ்வார் அநுபவத்தையும் கூறுகிறார் ஏருளும் இதி திருவாய்மொழி. 4-8 "ஏருளும் இறையோனும் திசைமுகனும் திருமகளும் கூறாளும் தனி உடம்பன்"—விருடபவாஹனனும் நான்முகனும் பெரியபிராட்டியும் தன் திருமேனியில் பங்கு கொள்ளும்படி ஸர்வபோக்யனான எம்பெருமான் கவராத மணிமாமையால் குறைவிலமே. ஆதரிக்காத தேஹகாந்தியில் எனக்கு அபேக்ஷையில்லை—இப்படி ஒவ்வொரு பாட்டிலும் தனக்கிஷ்டமானவற்றையே எம்பெருமான் ஸம்பந்தமிராமையால் வெறுக்கிறார். ஸம்பந்தம் வந்தபோது எல்லாம் அநுகூலமாகிறது. சொல்லுகிறபடியே என்பதற்கு ப்ரதிகூலமாயுமென்பதோடு அந்வயம். ஸம்ச்லேஷ காலத்தில் அநுகூலமாய்த் தோற்றும்; ஆனால் ப்ரக்ருதி மண்டலத்தில் ஸம்ச்லேஷத்திற்கும் பரமபதத்தில் ஸம்ச்லேஷத்திற்கும் வாசி யிருப்பதால் இங்கே அற்பாநுகூலமாயும் அங்கே பூர்ணாநுகூலமாயுமிருக்கும். சொருகுகை—உள்ளடங்கி யிருத்தல். விருத்தமான ஸ்வபாவங்கள் ஒன்றுக்குக் கூடுமோ என்ன விவரிக்கிறார் இப்படி இதி. ப்ராக்ருத பதார்த்தங்களுக்கும் எம்பெருமானுக்குப் போல் நமக்கு அநுகூலமாயிருக்கையே ஈச்வரேச்சையாலேயான ஸ்வபாவம். அது கர்மத்தினால் மறைக்கப்பட்டு ப்ரதிகூலமாயும், ஸ்வல்பாநுகூலமாயும் தெரிகிறது. தத்த்வத்ரயாதிகாரத்தில் இதெல்லாம் விரிவாக உரைக்கப்பட்டுள்ளது.

மந்த்ரத்தில் இப்பலத்தைக் குறிக்குமிடத்தைக்காட்டுகிறார் இப்படி स्वेति.

திருமந்த்ரத்திலும் த்வயத்திலும் चतुर्थ्यन्तपदங்களிலே अभिप्रेतம் முன்புசொன்ன கைங்கர்யம் இப்படி परिपूर्णानुभवத்தாலே பிறந்த प्रीतिविशेषத்துக்குப் பரீவாஹமென்னுமிடத்தை गद्यத்திலே பலகாலும் அருளிச்செய்தார் मुक्तदशैயில் श्रुतिसिद्धமான जक्षणादिகளும் ज्ञात्यादिसम्पादनங்களுமெல்லாம் पुण्यपापरूपकर्मनिर-पेक्ष-भगवदिच्छानुगुण-स्वेच्छामूलங்களாகையாலே कर्मफलமன்றிக்கே अनुभवपरीवाहமான கேவல கைங்கர்யத்திலே अन्तर्भूतங்கள். ஆகையால் प्राप्तियாயத்தது यथाभिमतकैङ्कर्यपर्यन्त-परिपूर्णब्रह्मानुभव மென்றதாயிற்று இவ்வநுபவமுண்டானால் பின்பு ஒரு காலத்திலும் அழியாதென்னுமிடம், ' प्राप्यते परमं धाम यतो नावर्तते यतिः", "मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम् । नाप्नुवन्ति महात्मानः संसिद्धिं परमां गताः ॥

---

ப்ரகாரங்கள் चिदचित्துக்கள் சதுர்த்திக்கு அர்த்தம் கைங்கர்யமா அநுபவமா என்ன அருளிச்செய்கிறார் முன்பு இதி. நாராயணனுக்காக என்று சதுர்த்தியின் அர்த்தமானால் அவனுகப்பும் அர்த்தமாகிறது. அது பூர்ணநுபவத்தாலும் அதன் பரீவாஹமான கைங்கர்யத்தாலுமாகையால் எல்லாம் குறிக்கப்படும். பகவானுக்கு சேஷமாகாமல் பத்தனின் ப்ராக்ருத கார்யங்கள் போன்ற பல கார்யங்களும் முக்தனுக்குக் கூறப்பெற்றனவே; அவை எப்படி அவ்வநுபவ பரீவாஹமான கைங்கர்யமாகுமென்ன அருளிச்செய்கிறார் முக்த தசையில் இதி. பரமபதத்தில் என்னமல் 'முக்தனை பிறகு' என்றதால் மேல் சொல்லும் வ்யாபாரங்களில் சில ப்ரக்ருதி மண்டலத்திலே பெறக் கூடியவை யென்று அறிவித்ததாம். 'जक्षत् क्रीडन्-रममाणः' स्त्रीभिर्वा यानैर्वा ज्ञाति-भिर्वा என்கிற ச்ருதியில் जक्षणமாவது-சிரிப்பு அல்லது-போஜநம். ஜ்ஞாதிகளோடு க்ரீடையும்கூறப்பட்டிருக்கிறது. கண்ணபிரான்யாதவர்களோடுக்ரீடை செய்தது போல் இவனுக்கு க்ரீடை யென்றால், சிலர் இவனுக்கு ஜ்ஞாதியாகை அவர்கள்குலத்தில் இவன்பிறந்தால் தானே; அவ்வாறு பிறப்புக்கு அங்கு அவகாசமில்லையாகையால் இது அவதாரஸ்த்தலத்திலே யாகும் அப்போதும் இது ப்ராக்ருத போகமாகாது. அவனை மறந்து இதர போக்யத்தில் ருசியால் செய்வது ப்ராக்ருத போகமாகும். ஸர்வவிசிஷ்ட ப்ரஹ்மாநுபவத்திலடக்கி அவனுடைய இச்சாபூர்த்திக்காகச் செய்யும் ज्ञातिஸம்பாதநாதிகள் ப்ராக்ருத போகங்களாகா. இது விஷயத்தில் பகவதிச்சையும் அவனது கர்மமூலமல்ல. ஆனால் ப்ரக்ருதியில் உண்டாகுமவையே. இதை யறிவிப்பதற்காகவே ஜ்ஞாத்யாதி ஸம்பாதநங்களுமென்று பிரித்து அருளிச்செய்தது. ஜ்ஞாத்யாதி என்ற ஆதிபதத்தால் मातापितृसन्तत्यादिகளைக் கொள்வது.

ச்லோகத்தில் निवृत्तिकथोज्झितम् என்று சொன்ன அபுநராவ்ருத்தியை விளக்குகிறார். இவ்வநுபவம் இதி. प्राप्यत इति. (அஹிர் 37) यतिः—உபாயத்தை ஸாதித்தவன் எந்த இடத்திலிருந்து திரும்பானோ அந்தப் பரமபதம் முக்தனாலடையப்படும்; திரும்புவதில்லை. यत्र येन कामकामेन என்று வாக்யாரம்பம். मामिति. கீதை. 8. 15, 16. மஹாத்மாக்களாய் मामुपेत्य—என்னை யடைந்து परमां संसिद्धिं—பரமபுருஷார்த்தத்தைப் பெற்றவர்கள் துக்கங்களுக்கு இருப்

आब्रह्मभुवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन । मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते ॥",
"यदा स केवलीभूतः षड्विंशमनुपश्यति । तदा स सर्वसिद्धत्वात् पुनर्जन्म न विन्दति ॥"
"गत्वा गत्वा निवर्तन्ते चन्द्रसूर्यादयो ग्रहाः । अद्यापि न निवर्तन्ते द्वादशाक्षरचिन्तकाः ॥"
"வாயினால் நமோ நாரணாவென்று மத்தகத்திடைக் கைகளைக் கூப்பிப் போயினாற் பின்னை யித் திசைக்கென்றும் பிணை கொடுக்கிலும் போகவொட்டாரே"

---

பிடமாயும் நிலையற்றதுமான புநர்ஜந்மத்தை அடையார். இதில் துக்கத்திற்கிடமான ஜந்மமில்லை யென்றதால். அவதாரமிருக்கலாமென்று தோன்றுகிறது. அர்ஜுனா! பிரமனின் லோகம்வரையில் எல்லா லோகங்களும் पुनरावर्तिनः—அழிகின்றனவை, (அழிந்தழிந்து உண்டாகின்றனவை): குந்தீ புத்ரனே; என்னை யடைந்தவனுக்குப் புநர்ஜந்ம ப்ராப்தியில்லை. இதில் பரமாத்மாவுக்கு லோகமிருக்கிறது தெரிகிறது. यदेति शान्ति. 323-81. ஜீவன் केवलीभूतः—கீழ் இருபத்தினாலு தத்துவங்களில் ஸம்பந்தமற்றவனாய் இருபத்தியாறுவது தத்துவமான பரமாத்மாவைத் தொடர்ந்து காண்கிறவன் सर्वसिद्धत्वात्=பரமபதத்தில் अपहतपाप्मत्वादिஸர்வாகாரத்தோடு ஸித்தனா யிருப்பதால் மறு பிறவி பெறான். இதில் ஜீவாத்மாவுக்கு ஸ்வரூப ப்ராப்தி சொல்லிற்று. गत्वेति. வி.பு. 1.^,4ʋ. சந்த்ரஸூர்யாதி க்ரஹங்கள் போய் போய் வருகின்றன. த்வாதசாக்ஷர மந்த்ரத்தைக் கொண்டு சிந்தித்தவர்கள் எவ்வளவு காலமாகிலும் திரும்பார். இதில் மந்த்ரமஹிமை சொல்லிற்று, எல்லாம் திரும்பாமைக்கு ப்ரமாணம், ஜீவனுக்குத் திரும்ப மனம் வராது; அது மட்டுமல்ல; இதற்கு மேல் ஈச்வரன் இவனைத் திரும்பவொண்ணாதபடி செய்கிறானென்கிறார் வாயினால் இதி, பெரியா. திரு–4-5-2. சீயினால் என்று பாசுரவாரம்பம், சீ முதலான வாதையினால் சோர்ந்து விழுவதற்கு முன்னே அதாவது சரீரமும் வாக்கும் ஸ்வாதீநமாயிருக்கும் போது திருவஷ்டாக்ஷரத்தை வாயினால் சொல்லி சிரஸ்ஸின்மேல் கைகளைக் குவித்தானாகில், மரணகாலத்தில் பரமபதம் போவான். அப்படி போனால் பிறகு இந்தக் கீழ்திக்குக்கு ஒரு நாளும், இவன் ஏதேனும் ஈடு கொடுத்தாலும் எம்பெருமானும் மற்றவர்களும் இவன் கீழே யிறங்க ஸம்மதிக்கமாட்டார்கள். 'பிணைகொடுக்கிலும்' என்று தான் செய்யும் கைங்கர்யத்திற்கு வேறு ஒருவரை இவன் அமர்த்தினாலும் என்றதால் ஈடு முடியாதென்று தெரிகிறது. இவனே விரும்பமாட்டான். ஈடாகவும் ஒருவரும் அகப்படமாட்டார். பகவத்கைங்கர்யம் தவிர வேறு கார்யத்தி லிருப்பவனை இக் கைங்கர்யத்துக்கு வைத்தால்தானே ஈடாகும். எப்போதும் அவனது கைங்கர்யத்திலேயே எல்லோருமிருப்பதால் அவரில் ஒருவரை ஈடாக்கினால் அவர் செய்து வந்த கைங்கர்யம் நடப்பதெப்படி? ஆகையால் ஈடாக ஆளில்லை. அவனுண்டானாலும் ஈச்வரன் ஸம்மதிப்பதில்லை; மற்ற பேரும் இசையார் என்றபடி. முன்னே ஏணி வாங்கி என்றார்; இப்போது போக ஒட்டாரென்றார், இப்படி போக ஒட்டார் என்னலாகுமோ? न्यायादिலம்.

இத்யாதிகளிலே ப்ரஸித்தம். பகவத்கைங்கர்யாந்தர்கதமான ஸ்வச்சந்தவிஹாரத்தாலே லீலாவிபூதியிலே புகுந்தாலும் இவ்வநுபவத்துக்கு ஸங்கோசாதிகள் பிறவாமையாலே புநராவ்ருத்தியில்லையென்கிறது.

இப்படி பராவதியில்லாத இவ்வநுபவம்பெறுவார்க்கு அந்திமசரீரம் தேவமநுஷ்யாதிகளில் இன்னதென்று தெரியாது. ப்ரஹ்மாதிகளுக்கும் மோக்ஷமுண்டு. அப்படி

---

பாதநமென்று கீழே கூறியபடி கீழிறங்கி வருவதுண்டே என்ன அருளிச்செய்கிறார் பகவதிதி. லீலாவிபூதியில் விஹாரத்திற்காகப் புகுந்தாலும் அந்த விஹாரம் விசிஷ்டப்ரஹ்மாநுபவகார்யமாய். அவனுகப்புக்காவதால்தனக்கு போக்யாந்தராநுபவ-ருசிமூலமாக வருகிறதன்றுகையாலே முக்திக்கு முன் இருந்த தசை போன்ற தசை யென்கிற புநராவ்ருத்தி யில்லை யென்பதே திரும்புவதில்லை யென்பதன் கருத்து.

'இப்படி புநராவ்ருத்தி யில்லாத பூர்ணநுபவம் எல்லோருக்குமென்னலாகுமோ? அங்கே அநுபவதாரதம்யம் உண்டென்று தெரிவதால் அநுபவாரம்பகாலத்தில் தாரதம்யம் போலே அநுபவ முடிவுகாலத்திலும் தாரதம்யமிருக்கலாம். அநுபவ காலத்திலும் அநுபவிக்கிற வஸ்துவில் ஏற்றச்சுருக்கமிருக்கலாம். ஒரே வஸ்துவிலும் அநுபவிக்கும் வகையிலும் தாரதம்யமிருக்கலாம், மாத்வர்களும் முக்தியோக்யர்களை தேவ-ருஷி-பித்ரு-தத்தரமநுஷ்யரூபமாக ஐந்துவிதமாகப் பிரித்து அவர்களுக்கு மோக்ஷத்தில் ஆநந்த தாரதம்யமும் உபாஸநதாரதம்யமும் சொன்னர்கள். ஆப்தர்களும் ஆசாரக் குறைவினுல் ஆநந்தம் குறையுமென்றூர்கள்' என்ற கேள்வியில் பரிஹாரம் தொடங்குகிருர் இப்படி இதி. இவ்விஷய விசாரம் "இவ்வர்த்தம் கண்டு கொள்வது" என்றவரையில் தொடரும், உத்தராவதி பின்எல்லை-முடிவில்லாத. இன்னதென்று தெரியாது இதி. தேவர்கள் ரிஷிகள் போன்றவரும் அப்பிறவியிலேயே உபாஸந பூர்த்தியாநுலும் ப்ராரப்த கர்மாவின் பயனுக உபாஸநம் தொடங்கத் தகாத நீசமனுஷ்ய, ம்ருக.பக்ஷ்யாதிசரீரமெடுத்து ப்ராரப்தத்தை முடித்தும் மோக்ஷம் பெறுகிருர்களாகையால் ஒரு பக்தனுக்குக் கடைசி சரீரத்தின் நிலையைக் கண்டு ஆநந்த தாரதம்யம் சொல்லவொண்ணுது. எல்லா சரீரமும் கர்மாதீநமாய்வருமாகையாலே தேவரிஷி சக்ரவர்த்யாதி நாமங்கள் சரீர ப்ரயுக்தமாவதால் பண்டிதா: ஸமதர்சிந: என்றபடி ஆத்மஸ்வரூபம் துல்யமாயிருப்பதால் எதைக்கொண்டு தாரதம்யத்தை ஸ்தாபிப்பது? தெரியாது என்றதை விவரிக்கிருர் ப்ரஹ்மாதீதி—ப்ரஹ்மா முதற்கொண்டு வ்யாதன் வரையில் மோக்ஷம் தெரிவதால் உபாஸநத்திற்கான சரீரமே அந்திமசரீரம் என்னலாகாதென்றபடி. ப்ரஹ்மாதிகளுக்கும் மோக்ஷமுண்டென்பதில் மற்றொரு கருத்துமாம். விஷ்ணுபுராணத்தில் பக்தர்களை ப்ரஹ்மபாவநர் கர்மபாவநர் உபயபாவநர் என்று பிரித்திருப்பதால் ப்ரஹ்மபாவந

யே "धर्मव्याधादयोऽप्यन्ये पूर्वाभ्यासाज्जुगुप्सिते । वर्णावरत्वे संप्राप्ताः संसिद्धिं श्रमणी यथा ॥" என்று மஹர்ஷிகள் சொன்னார்கள் ஆகையால் முமுக்ஷுதசையில் सोपाधिकங்களான उत्कर्ष-अपकर्षங்களைக் கொண்டு முக்ததசையிலும் अनुभवतारतम्यம் உண்டென்ற आनन्दतीर्थीयர் முக்தருக்கெல்லாம் ஸர்வேச்வரனோடே परमसाम्यம் சொல்லுகிற श्रुत्यादिகளை மறந்தார்கள்.

आचार वैकल्यமுடைய முமுக்ஷுக்களுக்கு आनन्दह्रासமுண்டாமென்று சிலர் சொல்லும் वचनம் आप्तமானாலும் मुक्तனாவதற்கு முன்னேவரும் भगवद्-

---

ரான ஸநகாதிகளைவிட உபயபாவநரான ப்ரஹ்மருத்ராதிகளுக்கு உபாஸநத்தில் குறைவைக் கூறி முக்த ப்ரஹ்மாவின் ஆநந்தம்கூட ஸநகாதிகளின் ஆநந்தத்தைவிடக் குறைவென்று சொல்லவேண்டியதாகும். ஆகையால் அதிகாராதிகளைக்கொண்டு ஆநந்த நிர்ணயம் செய்யலாகாது. இதை யறிவிப்பதற்காகவே, 'மோக்ஷம் உண்டாவது போல் தர்மவ்யாத' என்று ஏகவாக்யமாக்காமல் மோக்ஷமுண்டென்று வாக்யத்தை முடித்து விட்டு அப்படியே என்று மேல் ஆரம்பம் செய்தார். धर्मव्याधेति. விஷ்ணுத. 10-2-29, தர்மவ்யாதாதிகளுடைய வரலாறு ப்ரபாவ வ்யஸ்தாதிகாரத்தில் வரையப்படும். தர்ம்வ்யாதர் போன்ற மற்றவரும். जुगुप्सिते—நீசவர்ணப் பிறவியிலும் पूर्वाभ्यासात्—பக்தியோகம் அநுஷ்டிக்கத் தக்கதான பூர்வ ஜந்மத்தில் செய்த भावनத்தின் தொடர்ச்சியால் श्रमणी-यथा—சபரியைப் போலே, संसिद्धिं—மோக்ஷத்தை संप्राप्ताः—பூர்ணமாகப் பெற்றார்கள். அந்திம சரீரத்தைக் கொண்டு ஆநந்த தாரதம்யத்தைச் சொல்லுவதானால் தர்மவ்யாதாதிகளுக்கு இப்படி மோக்ஷ ப்ரஸக்தியில்லையாம். ஒரு முமுக்ஷுவே தேவ, ரிஷி, சக்ரவர்த்யாதிகளான பல. ஜந்மங்களெடுக்கலாமாகையால் எந்த ஜன்மத்தைக் கொண்டு எவ்வாறு மாத்வர் சொல்லவாகும். ஆகையால்=கர்மாதீந சரீரம் மோக்ஷாநந்த வைஷம்யத்துக்குக் காரணமாகாமையால்; ஔபாதிகங்களான; देवत्व, ऋषित्व चतुर्मुखत्व इन्द्रत्वादिகளான; ஆநந்ததீர்த்தியர்—மாத்வமத ப்ரதாந ப்ரவர்த்தகரான ஆநந்த தீர்த்தரின் மதத்தைச் சார்ந்தவர்கள். ச்ருத்யாதிகளை—இதி, निरञ्जनः परमं साम्यमुपैति. सर्वं ह पश्यः पश्यति सर्वमाप्नोति सर्वशः, स एको ब्रह्मण आनन्दः, श्रोत्रियस्य चाकामहतस्य, இத்யாதி ச்ருதிகள். 'आत्मनो ब्रह्मणो भेदं असन्तं कः करिष्यति'. 'मम साधर्म्यं आगताः' भोगमात्रसाम्यलिङ्गाच्च இத்யாதி ஸ்ம்ருதி ஸூத்ரங்கள் ஆதிபத க்ராஹ்யங்கள். மாத்வரைப்போல் 'मुमुक्षूणां सदाचारवैकल्यं यावदायुषम् । भवेद्यदि, तत् आनन्दे न्यूनतां जनयेत् ध्रुवम्' என்று நம் மதத்தினரே முமுக்ஷுதசையில் ஆசாரக் குறைவிருந்தால் அது ஆனந்தக் குறைவுக்குக் காரணமாகுமென்றாரே. அதனால் மோக்ஷத்தில் ஆநந்த தாரதம்யம் இசைய வேண்டுமே என்ன அருளிச் செய்கிறார் आचारेति, ஆப்தமானாலும்— விச்வஸநீயமானாலும். ப்ராமாணிகமானாலுமென்றபடி, முக்தனாவதற்கு முன்னே இதி. முக்த தசையிலேயே ஆநந்ததாரதம்யம் இதற்குப் பொருளானால் ச்லோகத்தில் मुमुक्षूणां-

नुभवத்தில் सङ्कोचத்தைச் சொல்லிற்றுமத்தனை. பிற்பட मुक्तராவார்க்கும் நாளிழவே போக்கிப் பொருளிழவில்லை. श्रीविष्णुलोकादिகளிலே सालोक्यसारू-प्यादिमात्रம் பெற்றார்க்கு मुक्तव्यपदेशம் अदूरविप्रकर्षத்தாலேயாமத்தனை. இவ்வர்த்தம்

"लोकेषु विष्णोर्निवसन्ति केचित् समीपमृच्छन्ति च केचिदन्ये ।
अन्ये तु रूपं सदृशं भजन्ते सायुज्यमन्ये स तु मोक्ष उक्तः ॥"

என்று நியமிக்கையாலே सिद्धம். இது परमपदத்திலே சென்றால் வரும் सायुज्यமே மோக்ஷமென்கிறது. அதுக்குள்ளே ஸஹஸ்ரத்தில் शतादिகளைப் போலே सालोक्यादिகளெல்லாம் अन्तर्भूतங்களாகையால் அங்கு ஒருவர்க்கும்

---

என்கிற விசேஷணம் எதற்காக? ஆகையால் இப் பதம் மேலே அந்வயிக்கிறது. முமுக்ஷுவாயிருக்கும் போது ஆநந்தக் குறைவு என்றதாம். மூமுக்ஷையாவது—ஸாயுஜ்யம் பெற வாசை. ஸாயுஜ்யம் பெறுவதற்குமுன்னே ஸாலோக்யாதிகளைமட்டும் பெற்றவர்களும் முமுக்ஷுக்களே; ஆநந்த வைஷம்யம் அங்குண்டு என்றதும் இதன் கருத்தாம். முன்னமேமோக்ஷம்பெற்றவர்களுக்கும் பின்னரே மோக்ஷம் பெறுகின்றவர்க்கும் ஆநந்தம் ஒரே விதமாயிருக்கக் கூடுமோ? பின்னே மோக்ஷம் பெறுகின்றவர் அநுபவியாத அநேக அமசங்களை அதற்கு முன் சென்றவர்கள் அநுபவித்திருக்கிறார்களே என்ன அருளிச்செய்கிறார் பிற்பட இதி. பிற்பட—பின்னால். நாள் இழவே போக்கி=விட்டு; இவர்கள் மோக்ஷம் போவதற்கு முன் அவர்களநுபவித்த நாளிலே இவர்களுக்கு அநுபவமிராமலிருந்ததென்பது தவிர; பொருளிழவு இல்லை=இவர்கள் சில பொருள்களை யநுபவிக்கவில்லை யென்பதில்லை. மோக்ஷம் சென்றவுடனே भूतवर्तमान भविष्यत्सर्वविषयानुभवமும் வருகிறபடியால் அவர்களநுபவித்ததை யெல்லாம் இவர்களும் அநுபவித்தவர்களே. சில நாள் இவர்கள் அநுபவிக்காமலிருந்தார்களென்னலாமே யல்லது அநுபவிக்கும் விஷயத்தில் ஏற்றத் தாழ்வில்லாமையால் ஆநந்த தாரதம்யம் சொல்லவாகாது. எல்லாம் நம் ஸ்வாமிக்கு சேஷமானதென்கிற புத்தியினாலேயே எல்லோருக்கும் ஆநந்தமாகையால் அதில் தாரதம்யம் சொல்லவொண்ணாது. இனி முன் சொன்ன ஆப்தவாக்யத்திற்கு அர்த்தம் வேறானாலும், சிலர் ஸாலோக்யத்தை, சிலர் ஸாலோக்ய ஸாரூப்யங்களை, சிலர் सालोक्य सारूप्य सामीप्यங்களை மட்டும் பெறுவதாகச் சொல்லியிருப்பதால் ஆநந்த வைஷம்யம் வேண்டுமே யென்னில்—அவை முக்ய மோக்ஷமல்ல; அது கௌண ப்ரயோகம்: ஸாயுஜ்யந்தான் மோக்ஷம் ஸாயுஜ்யம் பெற்றவர்களுக்கு ஸாலோக்யாதிகள் முன்னேயே ஏற்படும். அதனால் अदूरविप्रकर्षத்தாலே மிக்க விலக்கு இராமையாலே அஃதுடன் நெருக்கத்தால் அந்த ப்ரயோகம். நியமிக்கையாலே-ஸாயுஜ்யம் ஒன்றே (स तु मोक्ष उक्तः) என்றதால் சிலருக்கு देवतानां सार्ष्टितां सलोकतां यन्ति என்றாற் போலே ப்ராக்ருதமான விஷ்ணுலோகத்தில் விஷ்ணுஸாயுஜ்யம் வரக்கூடுமாகிலும் அது ஸர்வஜ்ஞத்வமூலமாய் अपहतपाप्मत्वादियின் ஆவிர்பாவ மூலமான ஸாயுஜ்ய மன்றாகையால் அந்த அல்ப ஸாயுஜ்யம் முக்ய மோக்ஷ

வைஷம்யமில்லை. "मोक्षं सालोक्यसारूप्यं प्रार्थये न कदाचन । इच्छाम्यहं महाबाहो सायुज्यं तव सुव्रत ॥" என்கிறவிடத்திலும் இவ்வர்த்தம் கண்டுகொள்வது.

सायुज्यமாவது—सयुक्கினுடைய भावம், ஸயுக்காவான்—ஒரு भोगத்திலே भोक्ताவாய்க்கொண்டு கூட अन्वयिக்குமவன். இங்கு सप्रकारब्रह्मமாகிற भोग्यத்திலே ब्रह्मமும் முக்தனும் கூட भोक्ताக்களாய் அந்வயிக்கையாலே मुक्तனை सयुक् என்கிறது.

இப்படியாகில் श्रुतियில் सायुज्यशब्दமும் सार्ष्टिताशब्दமும் சேரப் प्रयोगिப்பானேன் என்னில்—

**सायुज्यमुभयोरत्र भोक्त्रन्वयत्वाविशिष्टता । सार्ष्टिता तत्र भोगस्य तारतम्यविहीनता ॥ २० ॥**

---

மாகாதென்றறிவிப்பதற்காக "பரமபதத்திலே சென்றால் வரும்" என்றது. மோக்ஷம் இதி. ஜிதந்தே 36. ஸாலோக்ய ஸாரூப்ய ஸாலோ க்யங்கள் மட்டுமானதை—பூர்ண ஸாயுஜ்யம் கலக்காததை நான் விரும்பவில்லை. அது மோக்ஷமன்றே என்றபடி....ஸாயுஜ்யமென்கிற சொல்லுக்கு, சேரக் கூடிய வஸ்துவை ஸமானமாக உடையவன் सयुक्: அவ்வாறுகை யென்றே பொருளாகையால் ஸாலோக்யாதிகளும் பொருளாகலாமே, ब्रह्मैव भवति என்பதை யநுஸரித்து ऐक्यமே ஸாயுஜ்யமாகலாமே' என்ன ஸாயுஜ்ய சப்தத்தை நிர்வசநம் செய்கிறார் सायुज्यமாவது இதி. ஸாலோக்யஸா ரூப்யாதிகளோடுகூட ஸாயுஜ்யத்தையும் சொல்வதால் ஸாலோக்யமோ ஸாரூப்யமோ ஸாமீப்யமோஸாயுஜ்யமாகாது. युक् என்றுகுணங்களைச்சொல்லி समानगुणकं सयुक् என்று ச்ருத ப்ரகாசிகையில் கூறிய அர்த்தமாம். 'द्वा सुपर्णा सयुजा सखाया' என்றவிடத்தில் பத்தசேதநனுக்கு ப்ரஹ்மத்தோடு ஸமாந भोगம் சொல்லவாகாதாகையால் ப்ரஜாபதிவாக்யத்தை யநுஸரித்து अपहत-पाप्मत्वादिगुणங்கள் ஸமாநமென்று அங்கே கூறினார். இங்கு फलानुभव ப்ரகரண த்தில் ஸாயுஜ்ய சப்தத்திற்கு இதர தேவதாஸாயுஜ்ய விஷயத்தில் உள்ள ஸாயுஜ்ய சப்தத்திற்குப் போல் ஸமாந போக்யகத்வம் என்ற பொருளே சிற க்கும். सह युनक्ति என்று भोक्तृसायुज्यம் சிலர் கூறுவர். ஸாலோக்யஸாரூப்ய பதங்களிற்போலேஇங்கும் सह என்பதைவிட்டு समानयुक्त्वं என்று ஏகரூபமாகக் கூறுவதே தகும், युक् என்ற பதத்தினாலே=उभयविभूतिविशिष्टब्रह्मத்தைக் கொள்வது. युक्पदத்திற்கு அர்த்தம் भोग्यம். அது ஸமாநம்; பகவானுக்கு उभयविभूतिविशिष्टस्वरूपமே भोग्यமாகையால் அது ஸமாநமாகும். அதற்கு போகஸாம்யத்திலே தாத்பர்யம். सार्ष्टिता என்கிற பதத்திற்கு समान प्राप्तिकत्वம் அதாவது समानभोगकत्वம் பொருளாம். सायुज्यं सार्ष्टितां आप्नोति. என்று சேர்ந்து ப்ரயோகிக்குமிடத்தில் புநருக்தி வாராமைக்காக ஸமாந போக்ய கத்வம் மட்டும் ஸாயுஜ்ய பதார்த்தம். समानभोगकत्वं—அதாவது போகத்திலும் தாரதம்யமிராமை என்பதையும் सार्ष्टितापदமில்லாத போது ஸாயுஜ்ய பதார் த்தமாகவே கொள்வதாம். ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாராதி ஜகத் வ்யாபார த்தை ஈரவரனுக்கு மட்டுமே இசைவதால் அதனால் வரும் ஆனந்தம்

முக்தனுக்கு जगद्व्यापारमில்லையே யாகிலும் க்ருஷி பண்ணின பிதாவும் निर्व्यापारரான पुत्रादिகளும் कृषिफलத்தை भुजिக்குமாப்போலே जगद्व्यापारத்தால் வரும் ரஸம் வ்யாபரிக்கிற ஈச்வரனுக்கும் பார்த்திருக்கிற முக்தனுக்கும் துல்யம். ஸூத்ரகாரரும், "जगद्व्यापारवर्ज" என்று தொடங்கி भोगमात्रसाम्य- लिङ्गाच्च என்றருளிச்செய்தார். "सामरस्यं हि सायुज्यं वदन्ति ब्रह्मवादिनः" என்று शाकटायनனும் சொன்னான். शब्दशक्तियின்றிக்கே யிருக்க, भेदश्रुतिகளும் विरोधिக்க, सायुज्यशब्दத்துக்கு ஐக்யம் பொருளாக நினைத்திருப்பார்க்கு, முக்தன் பரம ஸாம்யத்தை யடையுமென்னும் तारक்காமென்றும் சொல்லுகிற श्रुतिகளும் विरोधिக்கும். "मम साधर्म्यमागताः" என்று गीताचार्यனும் அருளிச்செய்தான்.

---

அவனுக்கு மட்டுந்தானே; அப்போது ஆநந்த ஸாம்யம் எங்ஙனே என்ன அருளிச்செய்கிறார் முக்தனுக்கு இதி. ஸமாநவ்யாபாரகத்வம் ஸாயுஜ்ய மென்று சொல்லவில்லையே; ஸமாந भोगत्वமென்று தானே சொன்னோம். க்ருஷி-வாணிஜ்ய-ராஜஸேவாதிகளைக் குடும்பத்தில் ஒருவன் செய்யக் குடும்ப த்தில் எல்லோருக்கும் போகஸாம்யமென்கிறோம்; அதன் பலன் எல்லோரு க்கும் துல்யமாயிருப்பதாதலின். அது போலிங்குமாகும். ஈச்வரன் நான் செய் கிறேன் என்று ஸந்தோஷப்படுவது போல் ஜீவன் நினைக்கவாகவில்லையே யென்னில்-முக்தன், தான் ஜகத்வ்யாபாரம் பண்ணவேணுமென்று நினைத் தால் தானே அது வாராமையால் குறையென்னலாம். ஈச்வரன், தான் செய்ய வேண்டுமென்று விரும்புகிறான்; ஈச்வரனே செய்யவேண்டுமென்று இவன் விரும்புகிறான். ஈச்வர வ்யாபாரத்திலே இருவருக்கும் ஸந்தோஷம் துல்யம் தானே. ஸித்தாந்த ரஹஸ்யம் தெரியாதவர்களுக்கு ஆநந்த ஸாம்யத்தில் சங்கை யுண்டாகலாம். நமது ஸித்தாந்தத்தில் எந்தெந்த வஸ்து எவ்வாறு உளதோ, அந்தந்த வஸ்துவை அவ்வாறே அநுகூலமாக அறியும் போது இந்த அநுகூலமான ஜ்ஞாநமே ஆநந்தம். முக்தனுக்கும் ஈச்வர னுக்கும் ஸர்வஜ்ஞத்வம் துல்யமான பிறகு यथावस्थितानुकूलसर्ववस्तु—अनुभवம் துல்யமாயிருப்பதால் ஆநந்த வைஷம்யமில்லை. இப்படி साहित्यசப்தார்த த்தையும் ஸாயுஜ்யத்திலே சேர்த்துச் சொல்வதை சாகடாயந வாக்யத் திலும் காண்க. सामरस्यமென்கிறவிடத்தில் रसமாவது போகம்—ஆநந்தம். 'श्रोत्रियस्य चाकामहतस्य என்று ச்ருதியும் சொல்லிற்று.

ऐक्यं ஸாயுஜ்யமென்பதற்குஇன்னும் பலவிரோதத்தைக் கூறுகிறார் शब्देति. ஸாயுஜ்ய சப்தத்திற்கு रूढियாலோ योगத்தினாலோ ஐக்யம் பொருளாகாது. லக்ஷணையைக் கொண்டால் அதே தோஷம். पृथगात्मानम्, द्वा सुपर्णा இத்யாதி களான जाग्रत्-स्वप्न-सुषुप्ति-मुक्तिகளான எல்லா தசைகளிலும் பேதம் சொல்லும் ச்ருதிகளும் விரோதிக்கும். परमसाम्यश्रुति கீழே கூறப்பட்டது. कठोपनिष த்தும் 'यथोदकं शुद्धे शुद्धमासिक्तं तादृगेव भवति, एवं मुनेर्विजानतः आत्मा भवति गौतम' என்று சுத்தஜலத்திலே சுத்தஜலம் சேர்ந்தால் அது அதுபோலவே யாகிறாப் போலே என்றது. பாத்ரத்தில் ஜலத்தோடு ஜலம் சேர்ந்தால்

இவ்வர்த்தத்தை "परेण परधर्मी च भवत्येष समेत्य वै। विशुद्धधर्मा शुद्धेन बुद्धेन च स बुद्धिमान्॥ विमुक्तधर्मा मुक्तेन समेत्य भरतर्षभ। वियोगधर्मिणा चैव वियोगात्मा भवत्यपि ॥ विमोक्षिणा विमोक्षी च समेत्येह तथा भवेत्। शुचिकर्मणा शुचिश्चैव भवत्यमितदीप्तिमान् ॥ विमलात्मा च भवति समेत्य विमलात्मना। केवलात्मा तथा चैव केवलेन समेत्य वै ॥ स्वतन्त्रश्च स्वतन्त्रेण स्वतन्त्रत्वमुपाश्नुते। एतावदेतत् कथितं मया ते तथ्यं महाराज यथार्थतत्त्वम्। अमत्सरस्त्वं प्रतिगृह्य चार्थं सनातनं ब्रह्म विशुद्धमाद्यम् ॥" என்று वसिष्ठ-कराल-संवादத்தில் பரக்கப்பேசி இதுவே परमार्थமென்று மஹர்ஷி निगमित्தான். இங்கு முக்தனை ஸ்வதந்த்ரனென்கிறது கர்மவச்யனல்லனென்ற படி. முக்த விஷயமான स्वराट्छब्दத்தை "अकर्मवश्यः" என்று भाष्यकारர் व्याख्यानம் பண்ணியருளினர்.

இப்படி श्रुति-स्मृति-सूत्रங்களிலேஸாம்யம் कण्ठोक्तமாகையால் முக்ததசையில் ஐக்யம் தோற்றினவிடங்களெல்லாம் "रामसुग्रीवयोरैक्यं देव्येवं समजायत"

---

அளவு அதிகமாகிறபடியால் ஐக்யம் சொல்லவாகாது இங்கும் அவ்வாறென்று ஸ்பஷ்டமாகிறது. 'मम साधर्म्यमागताः' என்கிற கீதையில் விவரணம் போன்ற வாக்யங்களை பா. சாந்தி பர்வத்தில், 313, காண்க ஜீவன் பரமாத்மாவோடு समेत्य சேர்ந்து परधर्मी भवति—பரமாத்மாவின் தர்மமுடையவனுகிருனென்று கூறி அந்த தர்மங்களைப் பலவாக மேலே விவரிக்கிறது. परो भवति என்னுமல் परधर्मी भवति என்றதாலே பேதம் ஸ்பஷ்டம். शुद्धेन—அவித்யாதி தோஷமில்லாதவனோடு சேர்ந்து विशुद्धधर्मा விசுத்தி என்கிற தர்மமுடையவனுகிருன். இப்படியே விமுக்ததர்மா என்றவிடத்திலும் விமுக்தியே தர்மம். बुद्धेन–ஸர்வஜ்ஞனோடு. சேர்ந்துमुक्तेन—ஸம்ஸாரபந்தமில்லாதவனோடு; वियोगधर्मिणा—வஸ்துஸம்பந்தமிருந்தும் அது மூலமான அபுருஷார்த்த ஸம்பந்தமிராதவனோடு; विमोक्षिणा–வாஸனையுமில்லாதவனோடு; शुचिकर्मणा—ஹேய புருஷார்த்த காரணமாகாத கர்மாவுடையவனோடு; विमलात्मना ஸத்வாதி குணமற்றவனோடு केवलेन–ப்ராக்ருதமான தேஹமில்லாதவனோடு: स्वतन्त्रेण கர்மவச்யனுகாதவனோடு; மஹாராஜனே! यथार्थतत्त्वம்—வஸ்துவின் உண்மையுள்ளபடி எல்லாம் உனக்குச் சொல்லப்பட்டது. நீ அஸூயாதிகளில்லாமல் இந்த சுத்தமான ஸர்வகாரணமான ப்ரஹ்மத்தை प्रतिगृह्य—ஸ்வீகரித்து. भव–ஸத்தை பெறு உபதேசிப்பவர் வஸிஷ்டர் சுத்தனோடு சேர்ந்தால் சுத்தத்வம் வரலாம்; ஸ்வதந்தரனோடு சேர்ந்தால் ஸ்வதந்த்ரத்வம் வருமோ. பரதந்த்ரனுகிருனே என்ன, ஸ்வதந்த்ர சப்தார்த்தம் பாஷ்யகாரர் அருளியதை யறிவிக்கிருர். ஸ்வதந்த்ரனென்பதற்கு தன்னிச்சைப்படி நடக்கிறவனென்பது பொருள். மோக்ஷத்தில் ஈச்வரேச்சையின்படியே இவனிச்சிக்கிருன் ஸம்ஸாரத்தில் இவனிச்சைப்படி நடக்கக் கர்மம் ப்ரதிபந்தகமாயிருந்தது. கர்மாவின்படி நடக்க வேண்டியதாயிற்று. அதில்லை என்றறிவிக்குமதென்று அகர்மவச்யனென்று வ்யாக்யானம் செய்தார். ब्रह्मैव भवति என்று ஐக்யம் சொல்லியிருக்கிறதே என்பதற்கு உத்தரம் இப்படி இத்யாதி. கீழே ஹநுமார் ராமனுக்கும் ஸுக்ரீ

इत्यादिகளிற்படியே भेदश्रुत्यविरोधेन கண்டுகொள்வது. இங்ஙனல்லாதபோது
यदा तु मन्यतेऽन्योऽहमन्य एष इति द्विजः । तदा स केवलीभूतः षड्विंशमनुपश्यति ।
अन्यश्च राजन् स परस्तथाऽन्यः पञ्चविंशकः । तत्स्थत्वादनुपश्यन्ति ह्येक एवेति साधवः ॥
अन्यश्च राजन् स परस्तथाऽन्यः पञ्चविंशकः । तेनैतं नाभिजानन्ति पञ्चविंशकमच्युतम् ॥
जन्ममृत्युभयाद्भीताः साङ्ख्ययोगाश्च काश्यप । षड्विंशमनुपश्यन्ति शुचयस्तत्परायणाः ॥",

---

வனுக்கும் ஸமாகமத்தை வர்ணித்து முடிவில் रामसुग्रीवयोरैक्यமென்றார், ஐக்யம் ப்ரத்யக்ஷ விருத்தம். அதுபோல் அடியிலிருந்து பேதத்தையே சொல்லிக்கொண்டுவந்து முடிவில் ब्रह्मैव भवति என்றால், அதற்கு ஐக்யம் பொருளாகாதே; ஸமானமான அபிப்ராயமுடையதாயிருக்கையே இங்கு ஐக்யமாகும், नराणां वानराणां च कथमासीत् समागमः என்று வெவ்வேறு இனமான மனிதர்க்கும் குரங்குகளுக்கும் சேர்க்கை எப்படி என்றாள் ஸீதாதேவி. அதை நிரூபித்து ஸமாகமத்துக்கு மேலாக ஐக்யத்தையே ஹநுமான் சொன்னார். देवि-ஸீதாதேவியே! இவர்களுக்கு ஐக்யம் एवं समजायत= இவ்வாறு=கீழே நான் கூறியபடி உண்டாயிற்றென்றார். இந்த ஏவம் என்ற சொல்லால், 'மனிதர்க்கும் குரங்குக்கும் சேர்க்கை எப்படி யென்கிறீரே. மனிதஜாதியான தங்களுக்கும் குரங்கான எனக்கும் இந்த ஸமாகமம் போல் அதுவும் கூடுமே' என்றும் விளக்கினபடி. இப்படி ஸ்பஷ்டமான ஐக்யமென்ற சொல்லுக்கே வேறு பொருள் கொண்டபோது பல பொருள் உள்ளதான ஏவகாரத்திற்கு, ब्रह्मैव भवति என்றவிடத்தில் வேறு பொருள் கொள்வதில் என்ன வியப்பு? இனி உண்மையில் ஜீவனுக்கும் ப்ரஹ்மத்திற்கும் பேதமிருந்தாலும் சாஸ்த்ர बलத்தால் ஐக்யோபாஸநத்தால் மோக்ஷமுண்டென்றாலென்ன வென்னில்—அது தத்துவ ஜ்ஞாநமன்றாகையால் மோக்ஷ காரணமாகாது. அதற்காக ஐக்யமே தத்துவமென்றால், கீழ்க்கூறிய ப்ரமாணங்களோடு முரண்படும். 'வெவ்வேறாக உபாஸித்தால்தான் மோக்ஷம்' என்பதையும்வசநம் கூறுகிறதென்கிறார் இங்ஙன் இத்யாதியால். यदेति,சாந்தி பர்வ.328 77-அந்தணன் எப்போது, பரமாத்மா வேறு, நான் வேறென்று முடிவுசெய்கிறானோ, அப்போது தான்சுத்தனாய் இருபத்தைந்தாம் தத்துவமாகவிருந்து இருபத்தியாறாவது தத்துவத்தைக் காண்கிறான்.'அவனை இருபத்தைந்தாவது தத்துவமாகவே சொல்லுகிறார்களே' என்னில்—அவன் வேறு, ஜீவன் வேறு.ஜீவனுள் அவனிருக்கிறபடியால், ப்ரக்ருதியை விடுவதுபோல் தன் ஸ்வரூபத்தைத் தான் விடாமல் தன்னோடுசேர்த்துபரமாத்மாவை த்யாந ஸாக்ஷாத்காரங்கள் செய்யவேண்டியிருப்பதால் तत्स्थत्वात्-ஜீவனிடத்தில் பரமாத்மாவிருப்பதால் அவனோடுசேர்த்தியால் ஒன்றாகக்காண்கிறார்கள். ஆகையால்விவேகிகள் இருபத்தைந்தாவது தத்துவத்தை अच्युतं எம்பெருமானை नाभिजानन्ति-க்ரஹிப்பதில்லை.காச்யபரே! ஸம்ஸாரத்திலிருந்து அஞ்சி ஸாங்க்யரும், யோகரும் இருபத்தி யாறாவது தத்துவத்தை तत्परायणाः—அவனையே ப்ராப்யமாகக் கொண்டு பக்தியோடு பார்க்கிறார்கள். இப்படி வேறாக உபாஸிப்பதே மோக்ஷ ஸாதனமாகையால் ஐக்யோபாஸநத்திற்கும் இதே பொருளாகவேண்டும். அதை

"उत्तम.पुरुषस्त्वन्य: ', "तत्र य: परमात्मा तु स नित्यो निर्गुण: स्मृत:। स तु नारायणो ज्ञेय:सर्वात्मा पुरुषो हि स: । न लिप्यते कर्मफलै: पद्मपत्रमिवाम्भसा । कर्मात्मा त्वपरो योऽसौ मोक्षबन्धै: स युज्यते" "अय:पिण्डे यथा वह्निर्भिन्नस्तिष्ठत्यभिन्नवत् । तथा विश्वमिदं देवो ह्यावृत्य परितिष्ठति'' इत्यादिप्रमाणसहस्रம் विरोधिக்கும்.

ஆகையால் முக்தனுக்கு ज्ञानभोगादिகளால் வந்த பரமஸாம்யமே உள்ளது.

ஈச்வரனுக்குச் छत्रचामरादिகளைப் போலே லக்ஷணமாகச் சொன்ன जगत्कारणत्व-मोक्षप्रदत्व-सर्वाधारत्व - सर्वनियन्तृत्व - सर्वशेषित्व-सर्वशरीरित्व-सर्ववेदवेद्यत्व-सर्वलोकशरण्यत्व - सर्वमुमुक्षूपास्यत्व-सर्वफलप्रदत्व- सर्वव्याप्तज्ञानानन्दस्वरूपत्व-लक्ष्मीसहायत्वा -

---

அந்தர்யாமியாக உபாஸிப்பதென்கிற அர்த்தமாக விளக்குகிறது आत्मेत्येवोपासीत என்கிற வேதவாக்யம்.

கீதாதிகளைக் கொண்டும் பேதத்தை ஸ்தாபிக்கிறார். उत्तम இதி. (கீதை 15). கீழே பத்தர் முக்தரென்கிற க்ஷராக்ஷர புருஷர்களை எடுத்து அவ் விருவகை ஆத்மாக்களைவிட விலக்ஷணன் பரமாத்மா புருஷோத்தமனென்றார். ஸத்துவாதிகுணத்திற்கு வசமாகக்கூடியவனும் வசமாகக் கூடாதவனும் ஒருவனாகாரென்று சொல்வது மேல்வாக்யம். तत्रेति சாந்தி. ப. 361. அவர்களில் பரமாத்மாவானவன் निर्गुणன் अखिलहेयप्रत्यनीकன் ஸத்துவரஜஸ்தமோகுணங்களுக்கு வசமாகாதபடி ஸ்வதந்த்ரனானவன்; அவன் நாராயணன். எங்கும் வ்யாபித்தவன் தாமரையிலையில் ஜலம் லேபிக்காதது போல் கர்மபலன் அவனிடம் லேபியாது. லேபிக்கும்படி கர்மாவைச் செய்கின்ற ஜீவனே அவனுக்குப் பரதந்த்ரனாய் மோக்ஷத்திற்கும் பந்தத்திற்கும் ஆளாகிறான். बन्धमोक्षैस्स युज्यते என்னாமல் मोक्षबन्धै: स युज्यते என்றது பரதந்த்ரனானபடியாலே முக்தனானவனுக்கும் பந்தயோக்யதை உண்டென்றறிவிப்பதற்காக. எளிதில் காணவாகானாகிலும் ஈச்வரன் வேறிருக்கிறானென்பதற்கு உதாஹரணம் காட்டுகிறார் अय:पिण्डेति. (अयावय?) உண்டையான இரும்பை நெருப்பில் காய்ச்சினால் அது பழுக்கக் காயாதபோது நெருப்புத் தனியாகக் காணப்படாமலிருந்தாலும 'अयो दहति' 'இரும்பு சுடுகிறது' என்று நெருப்பையும் இரும்பையும் ஒன்றாகப் பேசினாலும், உண்மையில் அது வேறாயிருப்பது போல், தேவனும் உலகத்தைச் சூழ்ந்து வேறாகவே யிருக்கிறான். வேறாக அறியாமை நமது தோஷமாகுமென்றபடி. இப்படி முதலில் பரமஸாம்யத்தை ப்ரஸ்தாவித்து, ஆநந்த தாரதம்யமிருக்கிறதே யென்ற கேள்வியைப் பரிஹரித்து அதை ஸாயுஜ்ய சப்தார்த்தமென்று கூறி, ஸாயுஜ்யம் ஐக்யமென்று நினைக்கும் அத்வைதிகளின் பக்ஷத்தை இவ்வளவால் நிரஸித்து பரமஸாம்யரூபார்த்தத்திற்கு உபஸம்ஹாரம் செய்கிறார் ஆகையால் இதி எல்லா தர்மங்களிலும் ஸாம்யம் பரமஸாம்யமென்று கொண்டால் ஏறக்குறைய ஐக்யத்தில் முடியலாம்; அதுவுமில்லை என்று கீழே கூறியதை திடப்படுத்துகிறார் ஈச்வரனுக்கு இத்யாதியால். जगद्व्यापारवर्जமென்கிற ஸூத்ரத்தில் ஜகத்வ்யாபாரபதத்திலே இவ்வளவு தர்மங்களும் கருதப் பெறும். ஜீவர்களுக்கு இவ்வளவு தர்ம மிராமற் போனாலும், ஈச்வரனைப்

दिகள்प्रतिनियतங்கள் முக்தனுக்கு आधेयत्व.विधेयत्व.शेषत्व.अणुत्वादिகள் व्यवस्थितங்கள்.

இப்படியாகில் "न संपदां समाहारे विपदां विनिवर्तने। समर्थो विद्यते कश्चित् तं विना पुरुषोत्तमम्॥" என்கிற நிலையாய் ஸ்வதந்த்ரரல்லாத முக்தருக்கு ஏதேனுமொரு ஹேதுவாலே आवृत्तिशङ्कै வாராதோ? என்னில்; அது வாராது; "सायुज्यं प्रतिपन्ना ये तीव्रभक्तास्तपस्विनः। किङ्करा मम ते नित्यं भवन्ति निरुपद्रवाः॥" என்று தானே அருளிச்செய்தானிறே.

முமுக்ஷுதசையில் केवल-अचித்தையும் केवल-चித்தையும் அநுபவிக்கை

---

போல் முக்தர்களும் இந்த தர்மங்களெல்லாம் ஈச்வரனுக்கே யிருக்க வேண்டுமென்று விரும்புகின்றபடியால் இஷ்ட பூர்த்தியிருப்பதால் ஆநந்தக் குறைவுக்கு இடமில்லை.

இப்படி ஸர்வேச்வரனுக்கு எப்போதும் அதீநமாகவே ஜீவனிருப்பானாகில் இவனுக்கு ஸம்பயோக்யதை உண்டென்று கீழே கூறியதால் பந்தமும் வரலாமே; ஆகப் புநராவ்ருத்தி யில்லை யென்னலாகாதே; அப்போது ஆனந்த ஹானியே என்ற கேள்வியைக் கேட்டுப் பரிஹரிக்கிறார் இப்படியாகில் இதி नेति संपदां—ஸம்பத்துக்களை समाहारे—சேர்ப்பதிலும் विपदां—ஆபத்துக்களை विनिवर्तने—போக்குவதிலும் அப் புருஷோத்தமன் தவிர வேறு ஸமர்த்தனில்லை யென்றதால் அவன் வந்த ஸம்பத்தைப் போக்கி விபத்தையும் விளைவிக்கலாமேயென்று கேள்வியாம். முக்தனான ஜீவன்தானே பந்தத்திற்கு விரும்பிப்போம்படி செய்வானென்று கேள்வியா, இவன் விரும்பாத போதும் அவனே இறக்குவானென்றா? ஒன்றுக்குமிடமில்லை யென்று மேலே விவரிக்கப் போகிறார். அதனால் ஏதேனுமொரு ஹேதுவாலே என்றது. ப்ரஹ்மஸூத்ரத்தில் கடைசியாக अनावृत्तिः शब्दात् என்று முக்தனுக்கு மறுபடி ஸம்ஸாரமில்லை யென்பதற்கு சப்த ப்ரமாணமிருப்பதாலே புநராவ்ருத்திசங்கை தகாதென்றருளினார். அந்த சப்தம் வேதமும் ஸ்ம்ருத்யாதிகளுமாம். न च पुनरावर्तते என்று நேராக அதைச் சொல்லும் வேத சப்தமும், ஈச்வரன் சொல்லும் சப்தமும் போல், புநராவ்ருத்தி சங்கிக்கவாகாதபடி முக்தனுக்கும் ஈச்வரனுக்கும் சில குண விசேஷங்களை அறிவிக்கும் சப்த ப்ரமாணங்களுமாம் அந்த குணவிசேஷங்களைக் கொண்டு, 'மீண்டும் ஸம்ஸாரமில்லை' என்று अर्थापत्तिப்ரமாணத்தினாலே யறிவதாம். இப்படி சப்தபதத்தினால் ஸூத்ரத்திலறிவித்ததை இங்கே விளக்குகிறார் அது வாராது இத்யாதியால். ஸாயுஜ்யம் இத்யாதி. பகவான் சொன்ன வாக்யம். ये—எவர்கள் तीव्रभक्ताः—பக்தியோகம் செய்தவர்களாகியோ, तपस्विनः—சிறந்த தவமாகிய பரந்யாஸத்தை யநுஷ்டித்தவராகியோ सायुज्यं—ஸாலோக்யாதி ஸாம்ய விலக்ஷணமான பரமஸாம்யத்தை யடைந்தார்களோ, ते—அவர்கள் निरुपद्रवाः—ஒருவித வாதையுமின்றி नित्यं எப்போதுமே எனக்குக் கிங்கரர்களாகிறார்கள். இது பரமஸம்ஹிதாவாக்யமென்பர். मम साधर्म्यमागताः என்ற பகவத்வாக்யம் கீழே உதாஹரிக்கப்பட்டது. निरुपद्रवाः என்று இங்கே சொன்ன அம்சத்திற்கு விவரணமாகும் மேல் முமுக்ஷுதசையில்

யாகிற ஐச்வர்ய-கைவல்யங்களில் வைராக்யம் பிறந்தவிது—முக்தனுக்கு सर्वात्मकமாக ஸர்வத்தையும் காண்கையாலே केवलानुभवप्रसङ्गமில்லாமையாலும் அந்தப் पुरुषार्थान्तरங்களினுடைய दोषமெல்லாம் மேல் नित्यप्रत्यक्षितமாகையாலும் प्रतिष्ठितமாயிற்று. ஆகையால் தன்னிச்சை யடியாக आवृत्तिशङ्कै யில்லை.

चिदचिदीश्वरतत्त्वत्रयவிஷயமாகவும் हेयोपादेयविषयமாகவும் முன்பு பிறந்த ஜ்ஞாநம் இப்போது विच्छेद-सङ्कोचங்களில்லாதபடி विकसितமாயிற்று; ஆகையால் தன் अज्ञानமடியாக ஆவ்ருத்தி சங்கிக்கவொண்ணுது.

भगवद्विषयवैलक्षण्यज्ञानத்தாலே முன்பு பிறந்த भक्तिशब्दवाच्यமான प्रीतिरूपापन्न-

---

இத்யாதி எல்லாம். புநராவ்ருத்தியாவது முன் போல் பகவதநுபவத்தை யிழந்து ஸ்வதந்த்ரமாய் தனக்காக ஐச்வர்ய கைவல்யாநுபவத்திலிழிகை. இதற்கு இவனிச்சை காரணமா, ஈச்வரேச்சையா, ஈச்வரேச்சைக்குக் காரணம் முக்தனுக்கு ஈச்வரனிடத்தில் அப்ரீதியா, ஈச்வரனுக்கு இவனிடத்தில் அப்ரீதியா? ஒன்றுமில்லை யென்கிறுர்—केवलानुभवप्रसंगமில்லாமையாலும் என்றவளவால் புநராவ்ருத்தி சப்தார்த்தத்திற்கு ப்ரஸக்தியில்லை யென்று சொல்லிற்று. சேதநாசேதந வஸ்துக்களில் भगवदात्मकत्वज्ञानம் போய் तन्मात्रज्ञानமிருந்தால்தானே புநராவ்ருத்தி என்னலாம். அது வராமைக்கு सर्वं ह पश्यः पश्यति என்றவாறு, सदा पश्यन्ति सूरयः என்ற நித்ய ஸூரிகளோடு பரமஸாம்யத்தாலே सदा सर्वदर्शनமிருப்பது காரணமாகும். பகவத் ஸம்பந்தத்தை விட்டபோது दुःखமாகிறதென்கிற ஜ்ஞாநம் ப்ரத்யக்ஷமாயிருப்பதால் எப்படி இவனுக்கு விட இச்சை வருமென்றதாம், இதுபோல் அஜ்ஞாந மூலமான ஆவ்ருத்தியு மில்லை யென்கிறுர் चिदचित् இத்யாதியால், கீழே கூறிய இச்சையே அஜ்ஞாந மூலமாக வரவேண்டியிருப்பதால் அஜ்ஞாந ப்ரஸக்தி யில்லை யென்று கூறிவிட்டபடியால் மீண்டும் கூறுவதெதற்கென்னில், அஜ்ஞாநம் இச்சைக்குக் காரணமாயிருந்தும் புநராவ்ருத்திக்குக் காரணமாகலாம். அஜ்ஞாநம் பகவானிடத்தில் அப்ரீதிக்குக் காரணமாயிருந்தும் அது மூலமாகப் புநராவ்ருத்திக்குக் காரணமாகலாம். அப்படி அப்ரீதி வாராமைக்குக் காரணம் அஜ்ஞாநமிராமை யென்றறிவிப்பதற்காக **அஜ்ஞாந மடியாக** என்ற இவ் வாக்யம். அஜ்ஞாநமில்லாமையோடு ப்ரீதி ரூபாபந்ந ஜ்ஞாநமே சாச்வதமாயிருப்பதாக சப்தத்திலுலேற்படுகிறபடியாலும் அப்ரீதிக்கிடமில்லையென்றறிவிப்பதற்காக பகவத்விஷயேத்யாதி. இவனுக்கு பகவத்விஷயத்தில் அப்ரீதி வந்தால் அவ்வளவால் புநராவ்ருத்தி எப்படி யென்னில்—स च मम प्रियः என்று இவனது ப்ரீதி யளவுக்கு அவன் ப்ரீதி யென்றதால் இவனுக்கு அப்ரீதியில் அவனுக்கும் அப்ரீதியாய் ஸம்ஸாரியாக்கலாமே. இனி இவனுக்குப் புநராவ்ருத்தியை அவனது ஸ்வாதந்த்ரய மூலமாகவே சங்கிக்கிறபடியால் இவன் ப்ரீதனுயிருந்தாலும் அவன் ஸ்வதந்த்ரனுய்க் கீழே தள்ளலாமே யென்னில், இவனுக்கு அப்ரீதி யில்லையென்றும் இவன் ப்ரீதியளவுக்குக் குறைவிராமல் அவனும் ப்ரீதியோடிருப்பதும் சப்தப்ரமாண ஸித்தமாகையால் சாஸ்த்ர விருத்தமாக ஸ்வாதந்த்ர்யத்தை

